

தருமபுர ஆதீன குருமுதல்வர்
ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

தருமபுர ஆதீன முதற்குரவர்

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

# குருபூஜை விழா மலர்

ஹேவிளம்பி ௵ வைகாசி ௴ ௫ ௳ ஞாயிறு

19—5—1957

வெளியீடு எண் 391

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# நாலாந் திருமுறை

## திருநாவுக்கரசு நாயனார்

அருளிச் செய்த

# தேவாரத் திருப்பதிகங்கள்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்
இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய
சுவாமிகள் அவர்கள்

திருவருளாணையால்

குறிப்புரையுடன் வெளியிடப்பெற்றன.



 1957 [ தருமபுர ஆதீனம்

ஆட்சி மொழியாகவும், பயிற்சி மொழியாகவும் இருக்க வேண்டும் என்று கூறவில்லையா? இதனால் அவர்கள் "ஆங்கிலேயர்கள்" என்று பிற்கால வரலாற்று அறிஞர் யாராவது கூறினால் அது எவ்வளவு நகைப்பிற்குரியதாக இருக்கும்? வடமொழிப் பயிற்சியும், அம்மொழியில் பற்றும் கொண்டவனாக மகேந்திரன் இருந்தான் என்ற காரணமே சரியான காரணமாகும்.

இவ்வேந்தன் காலத்தில்தான் நம் நாவுக்கரசர் வாழ்ந்து வந்தார். இவருடைய பிள்ளைப் பெயர் மருள்நீக்கியார் என்பது. தென்மொழியும், வடமொழியும், நன்கு கற்றவராக இருந்தார். தாம் கற்ற கலைகளின் பயனாய் உலகத்தின் நிலையாமையை நன்கு உணர்ந்து சமணத் துறவியானார். சமண நூல்களை நன்கு கற்று அவற்றில் வித்தகராக விளங்கினார். இவருடைய ஆழ்ந்த புலமையைக் கண்டு இவருக்குத் "தருமசேனர்" என்னும் சிறப்புப் பெயரை அவர்கள் சூட்டி மகிழ்ந்தனர்.

ஆனால் இவருடைய தமக்கையாகிய திலகவதியார் தம் அருமைத் தம்பி "சைவ நெறியைப் பின்பற்றாமல் சமண நெறியில் சென்றுவிட்டானே" என்று வருந்தினார். இரவும் பகலும் இறைவனை நோக்கித் தம் தம்பியை மீண்டும் சைவ நெறிக்குத் திரும்ப அருளுமாறு வேண்டினார். அங்ஙனம் வேண்டும் அவ்வம்மையார் முன், ஆண்டவன் ஒருநாள் கனவில் தோன்றி "நீ உன் மனக் கவலையை ஒழி. நின் இளவலைச் சூலை நோய் மடுத்து ஆட்கொள்வேன்; அவன் முன்னமே என்னை அடையத் தவம் செய்துள்ளான்" என்று கூறி மறைந்தருளினார். அவ்வாறே தருமசேனர் சூலை நோயினால் பீடிக்கப்பெற்றுச் சொல்லொணாத் துன்பப்பட்டார். சமண முனிவர்களின் மந்திரமும், மாயமும் அவர் நோயைச் சற்றும் தணிக்கமுடியவில்லை.

இறுதியில் தம் தமக்கையை வந்தடைந்தார். தம்பிக்குத் திருநீற்றை அளித்து, அவரை உடன் அழைத்துக்கொண்டு

திருவீரட்டானத் திருக்கோயிலின் உள்ளே நுழைந்தார். இங்குத்தான் "கூற்ருயினவாறு விலக்ககிலீர்" என்னும் திருப்பதிகத்தைப் பாடித் தம் சூலே நோயின் துயரை ஆண்டவனிடம் எடுத்துக் கூறி அதனைத் தீர்க்கும்படி வேண்டினர்.

சூலே நோய் பகலவன் முன் பனியெனப் பறந்தது. இவருக்கும் இறைவன் "நாவுக்கரசு" என்னும் அழகிய பெயரை அளித்தார். அதுமுதற்கொண்டு சிவனேப்பாடு வதையே தம் பிறவிப் பயனுய்க் கொண்டார். கோயிலில் உழவாரப்பணி செய்து "என்கடன் பணி செய்துகிடப்பதே" என்று தொண்டின் மூலமாக இறைவனின் உண்மை வடிவத்தினே உணர்ந்தார்.

"சத்தியமே கடவுள், தொண்டின் மூலமே அவனே அடைய முடியும்" என்று நம் காலத்தில் மகாத்மா காந்தி அடிகள் கூறினர். அவருடைய வார்த்தைகளுக்கு இலக்கியமாய்த் திகழ்பவர் நம் அப்பர்.

"மாசில் வீணையும் மாலே மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே"

என்ற தேவாரம் அவருடைய அனுபவத்தின் எதிரொலியே என்பதை நன்கு விளக்கும்.

"நாமார்க்கும் குடி அல்லோம்" என்று முழங்கிய அப்பர், வேந்தனேயும் தம் அகிம்சை முறையின் மூலம் தம்வழிக்குத் திருப்பினர். சம்பந்தரும், அப்பரும் தமிழ்ப் பாடல்களே இறைவனின் பெயரால் தெருவெல்லாம் இசைத் தனர். அவர்களின் பக்திப் பெருக்கால் அந்நாளில் தமிழும் சைவமும் மறு வாழ்வு பெற்றனவென்றே கூறலாம்.

அன்பர் பணியிலே இன்பநிலே கண்டவர் அப்பர். மனிதக் காதலேத் தெய்வக்காதலாக மாற்றிய புண்ணியர்.

அகிம்சையே அவர் ஆயுதம். தொண்டே அவர் கடமை. இவருடைய பாடல்களில் சோலையின் அழகும், வானத்தின் செறிவும், நிறைந்து விளங்குவதைக் காணலாம். இயற்கையின் எழிலோடு இறைவனைப்பாடிப் போற்றியவர். இவரது பாடல்களைப் படிப்பதால் நம்மைச் சூழ்ந்துள்ள அக இருளும், புற இருளும் மறைந்தோடும். உள்ளத்தில் உண்மை ஒளி உண்டாகும்.

தெய்வ மணங் கமழும் இவரது தித்திக்கும் பாடல்களைத் தருமபுர ஆதீனத்தார் வெளியிடுவது மிகவும் பொருத்த முடையது. இவர்களின் வெளியீட்டிலே ஒவ்வொரு பதிகத்திற்கும் அதனுடைய வரலாற்றைச் சுருங்கக் கூறியுள்ளார்கள். பாடலுக்குரிய பொருளையும் எழுதியுள்ளார்கள். பொருள் இன்னும் எளிய நடையிலே இருந்தால் அது எல்லார்க்கும் நன்கு பயன்படும். கற்றவர் படித்தால் கல்லாதவரும் அதைக் கேட்டுத்தெரிந்துகொள்ளும்வகையில் பொருள் இருத்தல் வேண்டும். அதனால் பயனும் அதிகமாகக் கிட்டும் என்று மட்டும் குறிப்பிட விரும்புகிறேன்.

சைவத்தைப் பரப்பும் வகையிலே இவர்கள் ஆற்றியுள்ள அருஞ்செயல்கள் பல. அவற்றினுள்ளே திருமுறை வெளியீடுகளையும் அவர்கள் மேற்கொண்டுள்ளது மிகவும் போற்றத்தக்கதாகும். தமிழ் உலகம், குறிப்பாக, சைவப் பெருமக்கள் இவர்களின் இந் நன்முயற்சியைப் போற்றி வாழ்த்துவர் என்பதிலே ஐயமில்லை. அவர்களின் தமிழ்த் தொண்டும், சைவத் தொண்டும் பன்னெடுங் காலம் வாழ வேண்டும் என்று இறைவனை வேண்டுகிறேன்.

சென்னை,
25—3—58.

எம். பக்தவத்ஸலம்.



தருமபுர ஆதீனம் 25-ஆவது மகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

# நூன்முகம்

திருச்சிற்றம்பலம்

ஒருமருந் தாகி யுள்ளாய் உம்பரோ டுலகுக் கெல்லாம்
பெருமருந் தாகி நின்றாய் பேரமு தின்சு வையாய்க்
கருமருந் தாகி யுள்ளாய் ஆளுமவல் வினைகள் தீர்க்கும்
அருமருந் தால வாயில் அப்பனே அருள்செ யாயே.

திருச்சிற்றம்பலம்

பன்னிரண்டு திருமுறையுள், திருக்கடைக்காப்பென்னும் மூன்றும் திருஞானசம்பந்தருடைய திருமொழியாகும். நாலாவது இத் திருமுறை. ஐந்தாவது திருக்குறுந்தொகை. ஆறாவது திருத்தாண்டகம். இம் மூன்றும் திருநாவுக்கரசர் திருமொழி. ஏழாவது சுந்தரமூர்த்தி நாயனார் அருளியது. எட்டாவது மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம். கோவைத் திருவாசகமும் அதில் அடங்கும். ஒன்பதாவது திருவிசைப்பா. திருப்பல்லாண்டும் அதனீற்றில் உண்டு. பத்தாவது திருமந்திரம். அது திருமூலதேவ நாயனார் அருளியது. பதினொன்றாவது திருமுறை பல பிரபந்தங்களின் தொகுதி. பன்னிரண்டாவது திருத்தொண்டர் புராணம்; சேக்கிழார் நாயனார் அருளியது. அதைப் பெரியபுராணம் என்று வழங்குவர்.

திருமுறைகளைத் 'தோத்திரம்' என்பர். மெய்கண்ட நூல்களைச் 'சாத்திரம்' என்பர். அவற்றைச் சைவர் எல்லாரும் போற்றுவர். திருமுறை' முதலியன பண்டு பனையோலை வடிவில் அமைந்திருந்து இன்று தாள் வடிவிலும் உள்ளன. 'முறை என்பது நிரல் படச் செய்த பொருட் கோவையைக் குறிக்கும். 'கிரமம்' என்ற வடசொற் பொருளைத் தமிழில் 'முறை' என்பது கொடுக்கும். நிரல் படத் தொகுத்த பொருட்கோவை பனுவல்

(புத்தகம், போத்தகம், நூல்) எனப்படும். அதை 'முறை' என்றும் முன்னோர் மொழிந்தனர். ஆசிரியர் தமது நூலை அமைத்த முறையில், கற்போர் உணர்தலும் கற்பிப்போர் உணர்த்தலும் கடன். 'இறையும் ஞானம் இலாத என்புன்கவி முறையின் நூலுணர்ந்தாரும் முனிவரோ' என்ற கம்பர் கூற்றாலும் அது விளங்கும். நூலுணர்ச்சிக்கு அந் நூலாசிரியர் அந் நூலில் அமைத்த முறையும், உரையாசிரியர் அந் நூற்பொருளை உணர்த்தும் முறையும், அந் நூலின் பொருள்கோளாளர் உணரும் முறையும் 'முறை' என்னும் பெயரின் அடியைக் குறிக்கும்.

"இறைநிலம் எழுநுமுன் இளைய பாலகன்
முறைவரை வேன்எனா முயல்வ தொக்குமால்
அறுமுகம் உடையதோர் அமலன் மாக்கதை
சிறியதோர் அறிவினேன் செப்ப நின்றதே"

என்னும் கந்தபுராணத்து அவையடக்கப் பாடலில், 'முறை' என்றது 'பொத்தகம்' என்னும் பொருளைக் குறித்தல் காண்க. பண்டைப் பள்ளிகளில், ஆசிரியர், தம் மாணக்கர் பலரையும் 'முறை' சொல்வித்தல் உண்டு. அம் 'முறை'யே ஓதுவித்தலுக்கும் ஓதலுக்கும் உரித்து. கற்பித்தற்கும் கற்றற்கும் ஓதுவித்தற்கும் ஓதற்கும் முறை பிறழ்ச்சி சிறிதும் கூடாது. இதனையும் கருதிய அன்றோ, 'முறை' என்னும் பெயரைப் பொத்தகத்திற்கு இட்டனர். 'புஸ்தகம்' என்னும் வடசொல்லின் திரிபாகிய புத்தகம் வேறு. பொத்தகம் வேறு. 'பொத்தகம் படிகமாலை குண்டிகை பொருளசால் ஞான வித்தகம் தரித்த செங்கை விமலை' என்ற கம்பர் மொழியை ஈண்டுக் காண்க. பொத்து+அகம். பனையோலையேட்டைப் பொத்திய முறைமை உணர்வார்க்கு அது தமிழ்ச்சொல்லாதல் புலனுகும். இதுகாறும் உணர்த்தியவாற்றால், 'திருமுறை' என்றது 'அருள் நூல்' என்னும் பொருளதாதல் நன்கு விளங்கும். பனுவல், நூல் என்ற பெயரின் காரணங்கள் முன்னோரால் விளக்கப்பட்டன

'அருள் நூல்' என்றது வடிவையும் பொருளையும் குறித்தல் வழக்கில் அறியப்படுகின்றது. 'தோத்திரம்' என்பதும் தோத்திர நூல்களையும் அந் நூல்களில் அமைந்த தோத்திரப் பாடல்களையும், அப் பாடல்களின் உருவாய்த் திகழும் போற்றுக்களையும் உணர்த்தும். 'வீரட்டானத்துறை அம்மானே, நெஞ்சம்

உமக்கே இடமாக வைத்தேன்; நினையாது ஒருபோதும் இருந் தறியேன்; என்னை நலிவதனை நணுகாமல் துரந்து கரந்தும் இடீர்; அஞ்சேலும் என்னீர்' என முன்னிலையிலே அமைந்த போற்றும். 'கைப்போது மலர்தூவிக் காதலித்து வானோர்கள்; முப்போது முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை; அப்போது மலர்தூவி ஐம்புலனும் அகத்தடக்கி; எப்போதும் இனியானை என்மனத்தே வைத்தேனே' என்று கடவுளைப் படர்க்கையிலும் கடவுளைக் குறித்த தனது செயலைத் தன்மையிலும் கூறிய போற்றும் 'தோத்திரம்' என்றே சொல்லப்படும். இந் நாலாந் திருமுறையிலே பலவகைப் போற்றும் இலங்குகின்றன. விரிவஞ்சி ஈண்டு அவற்றைக் குறித்திலேன்.

'மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென் மனத் திடை மன்னியமன்னே' என்றது மணிவாசகம். அத்திறத்தில், தோத்திரமோ சாத்திரமோ கடவுளே அவற்றின் உருக் கொண்டு, அருளப்பெற்றால்தான் அவற்றின் பயன் உயிர்க்கு உண்டாகின்றது. கடவுளும் கடவுளருள் வழிப்பட்ட சான்றோரும் அருளாவகையில் வந்த பிறர் தோத்திரமும் சாத்திரமும் என்றும் எவர்க்கும் பயன்படா. இவ் வுண்மையை நிறுவப் பற்பல நூல்கள் உள்ளன. திருநாவுக்கரசு நாயனார், இத் திருமுறை யிலே 'பண்ணிய சாத்திரப் பேய்கள்' (982) என்றதன் கருத்தை உணர்வோர்க்கு இது தெளிவுறும். 'அல்லும் பகலு மாய் நின்றார் தாமே' எனத் தொடங்கும் திருத்தாண்டகத்தில் 'சொல்லும் பொருளெலாம் ஆனார்தாமே தோத்திரமும் சாத்திர மும் ஆனார்தாமே' என்றருளினார் திருநாவுக்கரசர். அதில், சிவபிரானை அல்லும் பகலும், அந்தியும் சந்தியும், சொல்லும் பொருளும், தோத்திரமும் சாத்திரமும் பாவும் ஆகும் பொது வியல்பு (தடத்தரூபம்) கூறப்பட்டது. அன்பு முதிரச்செய்து அருள பெறுவிப்பது தோத்திரம். அருளை (அறிவை) முற்று வித்து அழியாத இன்ப அன்பு அடைவிப்பது சாத்திரம்.

"ஆறாய் என்பது அனைத்தும் அவ்வகை
தான்ஆ காமையைச் சாற்றிடும் என்க."

சங்கற்பநிராகரணத்தில், உமாபதிதேவ நாயனார் அருளிய இவ்வுண்மையை உணர்க. சிவபெருமானுடைய உண்மையியல்பு (சொரூபலட்சணம்) ஒருகாலத்தில் ஆவதன்று; என்றும் உள்ளது.

ஆவன அனைத்தும் முன்னின்மை (பிராகபாவம்) முதலியவற்றை உடையனவாகும். சிவபிரானார் 'தோத்திரமும் சாத்திரமும் ஆனார்' எனின், அவர் அவ்விரண்டும் ஆவதன்முன் அவையாயில்லை. அவர் அவ்விரண்டுருவும் ஆன பின்னரே அத் தோத்திரமாகவும் சாத்திரமாகவும் அவரைப் போற்றிப் பயன் எய்துதல் உயிர்கட்குக் கூடும். கூடுங்கால், அம் முழுமுதற்பொருள் 'தோத்திரம்' என்னும் சொல்லின் பொருளாய்த் திகழ்கின்றார். அவ்வாறு திகழும் சிவபெருமானைத் தோத்திரங்களாக வழிபடும் ஆற்றல் சிலர்க்கே எய்தும். அத் தோத்திரங்களையுடைய ஏட்டு வழிபாடுதான் பெரும்பாலும் நிகழும். இரண்டுமாக வழிபடுவது சாலச் சிறந்தது. திருமடாலயங்களில் இச் சிறப்பு வழிபாடு நாடோறும் நிகழ்கின்றது. தோத்திரம் சாத்திரம் இரண்டையும் அவ்விருவழியிலும் போற்றுதல் அறிவும் அருளும் பெறுவார்க்கு உரிய கடனாகும்.

ஆதலின், தோத்திர நூல்களையும் சாத்திர நூல்களையும் கிடைக்கும் வழியை வகுத்தல் சிவ நல்வினையுள் மிகச் சிறந்ததாயிற்று. ஆகவே, அவ்விரண்டு திறத்து நூல்களையும் உரிய காலங்களில் வெளியிடும் அறப்பணியை இத் தருமை ஆதீனம் கடைப்பிடித்துச் செய்துவருகின்றது. 25 ஆவது பட்டம் குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள், அத் திருமுறைகளைக் குறிப்புரையுடன் வெளியிட்டு வழங்குவது சாலச் சிறந்தது என்று திருவுளங்கொண்டு, முதல் மூன்று திருமுறைகளையும் அரும் பெருங் குறிப்புரைகளுடன் வெளியிடச்செய்து, உலகர்க்கு அருள்நூற் கொடையாக நல்கியருள்கின்றார்கள். ஒவ்வொன்றும் ஐந்தாயிரம் (5000) படிகள் அச்சிடப்பெற்றன.

இந் நாலாந் திருமுறைக்குக் குறிப்புரை எழுதுக என அடியேனைப் பணித்தருளினார்கள் அவ்வருளைப் பெறப் பல பிறவிகளிற் செய்த தவத்தின் பயன் காரணம் என்று கருதி அளவிலாக் களிப்பெய்தினேன். எய்தினும், அடியேன் அறிவுக்கும் அப்பர் அருளிய அருமுறைப் பொருளுக்கும் எள்ளளவேனும் அணிமை உண்டோ? திருஞானசம்பந்தக்கண்ணுடைய வள்ளலார் அருளிய சிவானந்த மாலை (6) யில்,

" சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும்எம் சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்—முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே ? மாமறைநூல் தான்எங்கே ?
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங் கே ?"

என்று அவ்வருட்சான்றோர் வினவியருளினர். அடியேனும் இக் கருத்திற்கு ஏற்ப,

நாவுக் கரசர் நவின்ற திருவருளின்
பாவுக கரசெங்கே ? பாவியேன்—கூவுக்
கணுகாத பெம்மான் அருள்எங்கே ? எங்கே
நுணுகாத என்அறிவின் நோகக்கு ?

என்று வினவி அமைகின்றேன். அத் திருவெண்பாவிலே, முதற்கண், 'சொற்கோ'வே தோன்றுகின்றார். 'நாவரசு' என்னும் பொருளதே அதுவும் அத் தகு மாண்பு மிக்க அருட் செல்வர் திருப் பாடலின் பொருளை அறியவும் குறிப்பு வரையவும் துணிவுண்டாமோ ? என் புல்லறிவு நல்லறிவாளர்க்குத் தெற் றெனப் புலப்படினும் படுக என்னும் ஒரு துணிவு தோன்றித் தானே எழுதியுள்ளேன் ? அதற்கு அடி (காரணம்) என்ன ? அவ்வடி எங்கள தருமைக் குருமணியின் திருவடியே ஆகும்.

" குருவே சிவம்எனக் கூறினன் நந்தி
குருவே சிவம்என் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே உரைஉணர் வற்றதோர் கோவே "

என்னும் திருமந்திரம் குருவே சிவம் குருவே கோ என்று உணர்த்துவதை அறியாதார் ஆர் ?

" சிவனை வழிபட்டார் எண்ணிலி தேவர்
அவனை வழிபட்டுஇங்கு ஆம்ஆறு ஒன்றுஇல்லை
அவனை வழிபட்டுஅங்கு ஆம்ஆறு காட்டும்
குருவை வழிபடின் கூடலும் ஆமே "

என்னும் திருமந்திரம் தேவர்கள் சிவனை வழிபட்டுப் பெறுத நலத்தைக் குருவை வழிபட்டுப் பெறலாம் நாம் என்கின்றது. எனவே, குருவருள் கிடைக்கப்பெற்றதோன்றே திருவருட் பணி செய்யும் இத் துணிவுக்கு ஏதுவாயிற்று என்பதை மறுக்கத் துணிவார் யாவர் ?

இத் துணிவு குருவருளால் வரப்பெற்றேன் ஆயினும் செருக்கிற்குச் சிறிதும் ஆளாகாதுய்ந்தேன்.

"திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டின் நெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச் சீர்பரவ லுறுகின்றேன் பேருலகில்
ஒருநாவுக் குரைசெய்ய ஒண்ணுமை உணராதேன்."

என்று அருளிய அருண்மொழித்தேவர் அருண்மொழியை அகத்துட்கொண்டே இக் குறிப்பெழுதினேன்.

இந் நாலாந்திருமுறையின் பொருட்குறிப்பெழுதுந் திறத்தில் அடியேன் உற்ற இடர்ப்பாடுகளுக்கு அளவில்லை. 'களவு படாததோர் காலம் காண்பான் கடைக்கணிக்கின்றேன்' (31) என்றதன் பொருள் நன்கு புலப்பட்டிலது. கடைக்கணித்தல் (கடைக்கண்ணால் நோக்கியருளுதல்) சிவன் சீவனுக்குச் செய்யலாம். சீவன் சிவனுக்குச் செய்யலாமோ? அது பேரிடர் விளைத்தது. கடைக்கணிற்கின்றேன் என்றிருந்து பிழைபட்டதோ எனக் கருதினேன். பிழை கணித்தல் நம் அப்பர் பழக்கத்தில் இருந்த ஒன்று என்பது, 'அரிதின் திறக்க.........திருமடத்தில் ஒருபால் அணைந்து பேழ்கணித்து மருவும் உணர்வில் துயில் கொண்டார் வாய்மை திறம்பா வாகீசர்' (பெரியபுராணம். அப்பர். 275) என்றதால் விளங்கும். பிழை (பேழ்) கணித்தலும் கறைக்கணித்தலும் ஒரு பொருளன.

"பிறைக்கணிச்சடை யெம்பெரு மானென்று
கறைககணித்தவர் கண்ட வணக்கத்தாய்
உறக்கணித்துரு காமனத் தார்களைப்
புறக்கணித்திடும் புத்தூர்ப் புனிதரே." (5. 61. 2)

என்ற திருப்பாடலால், அது 'கறைக்கணிக்கின்றேன்' என்றிருந்து பிழைபட்டதோ என்றும் ஐயுற நின்றது. இவ்வாறு குறிப்பெழுதியபின்னர்த் தோன்றியன எண்ணற்றன. அவற்றுள் மறந்தன பல. மறவாதவற்றை அடுத்த திருமுறையிற் பொருத்தமுள்ள இடங்களில் எழுதக் குறித்துவைத்துளேன். அறிஞர் இவ்வுரையில் உள்ள குற்றங்களை அறிவிப்பின், அவற்றை எவ்வாற்றாலும் திருத்தி வெளியிடத் தவறேன்.

இக் நாலாந்திருமுறையை நோக்கி, பாராட்டுரை எழுதித் தந்த, சென்னை மாநிலத்தின் அமைச்சர் உயர்திருவாளர். கனம். M. பக்தவத்சல முதலியார் B.A., B.L., அவர்களுக்குத் தருமைத் திருமடாலயத்தின் சார்பில் நன்றியும் குருவருளும் உரியன.

'அணிந்துரை' அளித்த திருவுடையந்தணர் சம்பந்த சரணலாயர் (கோயம்புத்தூர் C. K. S.) அவர்களுக்கும் அவை உரியனவாகும். 'உரையின்மாட்சி' யையெழுதிய என் மாணக்கர், வித்துவான், திரு. சோ. சிங்காரவேலனார்க்கும், தல வரலாற்றுக் குறிப்புக்களை எழுதிய நண்பர் வித்துவான், திரு. வை. சுந்தரேச வாண்டையார்க்கும், திருப்பயற்றங்குடி வரலாற்றையெழுதியும் வரலாற்றுக் குறிப்புக்களை அச்சுப்பிழை அறநோக்கியும் உதவிய துணைவர், வித்துவான், திரு. வி. சா. குருசாமி தேசிகர்க்கும் என் வாழ்த்துக்கள் உரியன.

சென்ற குருபூசைத் திருநாள் மலராய்த் திகழும் இது குறிப்பும் விளக்கமும் மருவிய உரையுடன் இத் தருமைக் குருமணியின் திருவுள்ளத்துப் பெருங்கருணை வடிவாய், உலகிற்கு வாய்க்கின்றது. என் குடி முழுதாளும் அக் குருநாதரது அருட்பெருக்கே, என் உள்ளிருந்து தூண்டி எழுதுவித்தது. இது விரிவுரை எழுதவல்லாரைத் தூண்டும். பொருள் அறியாமல், பாராயணம் புரிவோர்க்குச் சிறிதேனும் விளக்கம் உண்டாக்கும். திருவாலவாய்ச் சொக்கேசன் திருவருளும், அவனுருவாய்த் திகழும் குருவருளும், மெய்யன்பும், அடிமைத் திறமும், இருமொழிப் பெரும் புலமையும் உடையவரே திருமுறைக்கு உரை யெழுதவல்லார் என்பதை நன்குணர்ந்தும் குருவாணையை மீற அஞ்சியே இவ்வருஞ்செயலில் ஈடுபட லாயிற்று. ஆதலின், உலகம் அடியேன் பிழை பொறுத்துக் கொள்க.

வாழ்க சைவம். வளர்க திருமுறையுணர்ச்சி.

அடியார்க்கு அடியன்.

முத்து. சு. மாணிக்கவாசகன்,

தருமை ஆதீன வித்துவான்.

தருமபுர ஆதீனம்
17—4—1958

உ

குருபாதம்

# திருநாவுக்கரசு நாயனார் எய்திய

# சித்தாந்தமுத்தி

மண்முதலாம் உலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்
புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றேன் எனப்புகன்று
நண்ணரிய சிவானந்த ஞானவடி வேயாகி
அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்டஅர செய்தினார்.

(திருநா - புராணம். 427. சேக்கிழார்சுவாமிகள்)

அரனவன் பாதலம் ஆதி சிவாந்தம்
வரும் அவை சத்திகள் மூன்றாய் வகுத்திட்டு
உரன்உறு சந்நிதி சேட்டிப்ப தொன்றித்
திரன்உறத் தோயாச் சிவாநந்தி யாமே.

(திருமூலர்)

உற்றசிவா நந்தம்இலாப் பூசைஉயிர் இல்லாத
வெற்றுடலம் பால்அற்ற மென்முலையாம் - முற்றும் இசை
நாதம்தான் அற்றயாழ் நற்பொருள்இல் லாதவுரை
வாதம்தான் அற்ற மலர்.

(சிவாநந்தமாலை. 373)

உள்ள மலம்நீங்கி ஓங்கு சிவாநந்த
வெள்ளம் திளைத்ததுவாய் மேவுதலே - கள்ளவிழ்பூங்
கோத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்திற்
சித்தாந்த முத்திஎனத் தேறு.

(முத்திநிச்சயம். 2. குருஞானசம்பந்தர்)

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# சிவபோகசாரம்

என்னை அறிவென்றான் என்அறிவில் ஆனந்தந்
தன்னைச் சிவமென்றான் சந்ததமும் -என்னை உன்னைப்
பாரா மறைத்ததுவே பாசமென்றான் இம்மூன்றும்
ஆராய்ந் தவர்முத்த ராம்.

எங்கும் இருக்கும் அறிவுநீ ஏகமாய்
அங்கங் குணர்த்தும் அறிவுநாம்--போங்கு
மலமறைத்தல் மாயை மயக்கல் விகாரப்
பலமனைத்தும் கன்மமலம் பார்.

தேசு செறிகமலைச் செங்கமலப் பொற்பாதன்
பேசுதமிழ் ஞானப் பிரகாசன்--பாசவினை
வாட்டினான் மீட்டும்நான் வாரா வகைஅருளைக்
காட்டினான் கூட்டினான் காண்.

ஈச னடியில் இருக்கையிலே எங்கெங்கும்
ஈசனடி தேடி இளைத்தேனே—பேசரிய
பொற்பதத்தன் செங்கமலப் பொற்பாதன் றன்னுடைய
நற்பதத்தைக் காணுமுன் நான்.

உன்னாதே பற்று துரையாதே யொன்றி அதில்
நின்னாமம் இல்லை நிகழாதே—பன்னாட்
பரையிறந்து நிற்கும் பயனணைந்தார் நெஞ்சில்
திரையிறந்து நிற்கும் சிவம்.

—ஸ்ரீ குருஞானசம்பந்தர்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

தருமபுர ஆதீனம் 25-ஆவது குருமகாசந்நிதானம்

சீலத்திரு சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய

சுவாமிகள் அவர்கள்

# திருவடி வணக்கம்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

திருவளரும் தருமபுரக் குருமணியுள் ஐயைந்தாய்த்
திகழ்வேள் வானத்
தருவளரும் கோடைச்சுப்ர மண்யதே சிகஞான
சம்பந்தப்பேர்க்
குருவளரும் அருள்வழங்கப் பெற்றுய்யும் தலையன்பு
கொண்டு போற்றி
மருவளரும் மலரிணையே மனங்கனையத் தினமிறைஞ்சி
வாழ்கின் றேனே.

உலகுய்ய வுயிருய்ய வுயர்சைவ நெறியிலுறும்
ஒழுக்கம் உய்ய
இலகுதிரு முறைகளெலாம் உணர்ந்துஞ்செம் பொருளுய்ய
இசையாட் டுய்ய
அலகுதவிர் நலம்புரிசெந் தமிழ்உய்யத் தருந்தருமை
அடிகள் பாதம்
பலகுளிர்பூத் தூய்ப்பணிந்தேன் துயர்தணிந்தேன் சிவோகமெனும்
பயனுற் றேனே.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

தருமைச்சுப் பிரமணிய குருவே வாழ்க
சத்தியஞா னசம்பந்தப் பொருளே வாழ்க
அருமைக் கண் மணிவாழ்க அமலா வாழ்க
அனைத்துயிரும் வாழவாழ்ந் தருள்வோய் வாழ்க
பெருமைக்கெல் லாம் உறையுள் ஆவாய் வாழ்க
பேரின்பக் கதியருளும் பிரானே வாழ்க
ஒருமைக்கு முய வுயிருக் குயிரே வாழ்க
உயர் நாலாந் திருமுறைமெய் யுணர்வே வாழ்க.

அடியார்க்கு அடியன்,

முத்து. சு. மாணிக்கவாசகன்.

உ

சிவமயம்

# பொருளடக்கம்

# படங்களின் அட்டவணை

உ
சிவமயம்

# அணிந்துரை

## * ஸ்ரீமத். சம்பந்த சரணாலய சுவாமிகள்

கோயம்புத்தூர்.

திருக்கயிலாயபரம்பரைத் திருத்தருமபுர ஆதீனம் 25 ஆவது பட்டத்தில் எழுந்தருளி அருளாட்சி புரியும் குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரியசுவாமிகள் அவர்கள் செய்துவரும் சைவப் பெருந் திருத்தொண்டுகள் மிகப் பலவாம். தேவாலய மடாலய பரிபாலனம், தேவார பாடசாலை, சிவாகம பாடசாலை, செந்தமிழ்க் கல்லூரி, ஞானசம்பந்தம் என்னும் மாதாந்த சஞ்சிகை, தேவார அருட்பாசுரங்களின் வெளியீடு முதலியனவாய் அவை எண்ணிறந்து விளங்குவன வாம். அவற்றுள் தலைசிறந்தது தேவாரம் திருமுறைகளை உரையுடன் வெளியிடுதலாகும். சைவத் தெய்வத் திருமுறைகள் பனிரண்டனுள் தேவாரங்கள் முதலேழு திருமுறைகளாக வகுக்கப் பெற்றன. திருஞானசம்பந்த நாயனார் தேவாரங்களாகிய முதன் மூன்று திருமுறைகளை உரையுடன் முன்னமே வெளியிட்டுள்ளார்கள். 4. 5. 6 திருமுறைகளாகத் திருநாவுக்கரசு நாயனார் தேவாரங்கள் வகுக்கப்பெற்றுள்ளன. 4-ம் திருமுறை பண்களும், திருவிருத்தமும், திருநேரிசையும், 5-ம் திருமுறை திருக்குறுந்தொகைகளும், 6-ம் திருமுறை திருத்தாண்டகமும் கொண்டன. 4-ம் திருமுறை இப்போது உரையுடன் வெளியிடப் பெறுகின்றது. திருநாவுக்கரசு நாயனார் தேவாரங்கள் எளிமையாயும் பொருட்பொலிவும் பொருளாழமுமுடையவை. இவற்றுக்குப் பொருள் காணுதல் மிகுந்த சிரமமான காரியம். தேவாரங்களைப் பொருளுடன் வெளியிடுதல் இதுவரை எவரும் செய்யாத வேலை. தருமபுர ஆதீனத்தில் இதனை மேற்கொண்டது சைவ உலகத்திற்கும் தமிழுலகிற்கும் பேருபகாரமான காரியம். திருமுறைகளுக்குப் பொருள் காணுதல் எளிதன்று. இலக்கண இலக்கியப் பயிற்சிமட்டும் போதாது. சைவத்திருமுறைகளிலும்

* கோவை. திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்களே 'சம்பந்த சரணாலயர்' என்னும் இத் தீட்சாநாமம் உடையவர்கள்.

மெய்கண்டசாத்திரங்களிலும் நல்ல பயிற்சிவேண்டும். சித்தாந்த சாத்திரங்களைப் பரம்பரையிலிருந்து பயின்றிருக்கவேண்டும். சிவதீக்கையும் சிவபூசையும் இடைவிடாத சிவசிந்தனையும் வேண்டும் உலக அனுபவமும் வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாய்த் திருவருளில் நம்பிக்கையும் தற்போதமேலிடாமையும் வேண்டும். இத்துணையும் பொருந்தப்பெற்றவர் வித்வான், சித்தாந்த ரத்நாகரம் ஆசிரியர், திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்களாவர். இவ்வெளியீட்டுப் பணியை ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானங்களில் அவர்பால் ஒப்படைத்தது சிறந்த தகுந்த செயலாகும். "இதனை இதனாலிவன் முடிக்குமென்று ஆய்ந்து அதனை அவன்கண் விடல்" என்றார் நாயனார். இவ்வுரை வெறும் குறிப்புரைமட்டுமன்றிப் பல இடங்களில் விரிவுரையாகவே விளங்குகின்றது. திருமுறைகளிலிருந்தே பெரும்பாலும் மேற்கோள்கள் தரப்படுகின்றன. "வேதத்துக்குப் பிரமாணம் வேதமே" என்பர் திரு. க. சதாசிவ செட்டியாரவர்கள். பதிக வரலாறு பெரியபுராணத்தை ஒட்டி எழுதப்பட்டிருக்கிறது. பதிக வரலாறு பதிக விளக்கத்துக்குப் பொருந்துவன செய்வது. தேவையான இடங்களில் இலக்கணக் குறிப்புக்கள் தரப்பட்டுள்ளன. புராண சரிதங்களும் விளக்கப் பட்டுள்ளன. பெரியபுராணச் செய்யுட்கள் ஆங்காங்குத் தரப்பட்டது பேருதவியாகும். சித்தாந்த சாத்திர உண்மைகள் ஆங்காங்கு நன்கு விளக்கப்பட்டுள்ளன. முதன் மூன்று திருமுறை வெளியீடுகளின் அனுபவமும் இதிற் கூடியிருத்தலால் இவ்வெளியீடு அவற்றினும் சிறந்து விளங்குகின்றது. கண்ணைக் கவரும் அழகுடன் விளங்குகின்றது இவ்வெளியீடு. வாழ்க இவ்வெளியீடு. வாழ்க ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானங்களின் திருவடிகள். வாழ்க முத்து. சு. மாணிக்கவாசகனார். வாழ்க திருத் தருமபுர ஆதீனம்.

கோயம்புத்தூர்,
சேக்கிழார் நிலயம்,
29—1—58

அடியேன்,
சம்பந்த சரணாலயன்.
(C. K. S.)

ஓர் திறனாய்வு :

# உரையின் மாட்சி

வித்துவான், சொ. சிங்காரவேலனார்,

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர்.

தமிழ் இலக்கிய வளமும் இலக்கண வளமும் நிறைந்த ஒப்பற்ற மொழி. அயல்நாடுகளும் இவ்வுண்மையை அறிவுறுத்தி வருகின்றன. மொழியியல் ஆராய்ச்சிக்காரர்களும் பழமையும் இனிமையும் வாய்ந்த உயர் தனிச்செம்மொழி யாகும் ஒண்டமிழ் என்று உரைக்கின்றனர். இத்தகைய பெருமை இம் மொழிக்கு எப்படி வந்தது ? தெய்விக ஆற்றலால் இம்மொழி அமிழ்தாயிற்று என நம்பலாம். தெய்விகமே தமிழின் செறிந்த அமிழ்தம். தமிழினிமை அருளினிமை. வடவேங்கடத்தில் நெடுமாலும், தென்குமரியில் குமரித்தாயுமிருந்து அருட்காவல் புரியும் இம்மாநிலத்தின் மொழியிலும் அவ்வருளனுபவம் தேங்கியிருக்கிறது. பொங்கித் ததும்பிப் பயில்வோர் சிந்தை யிலும் பாய்கிறது.

அந்த அருளனுபவம் தேக்கிய - ஆன்மீக வெற்றி அடங்கிய ஞானத்தமிழ்ப் பேட்டகமாகத் திருமுறைகள் திகழ்கின்றன.

அவற்றுள்ளும் திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய திருமுறைப் பாடல்களில் இன்ப அன்பின் முழு நிறைவு அநுபவம் நிறைந்து ஒளி வீசுகிறது ; தண்சுவை வழங்கு கிறது. திருநாவுக்கரசு சுவாமிகளின் திருவருட் கவிதைகளில் தோய்வோர் உலகத் தளையினின்றும் ஒய்வோர் ; ஆன்மீக வாழ்வின் அடிப்படையாகிய குறிக்கோளை ஆய்வோர். அத்தகைய உயிர்ப்பு - அருள் விழிப்பு திருநாவுக்கரசுசுவாமிகளின் அருள் வாக்கில் மலர்கின்றது.

'தொண்டு கிழவர்' என்று வையம் கூறும். மிக்க முதிர்ச்சி யுடைய முதியவரைக் குறிக்கும் தொடர் அப்பர் சுவாமிகளை நோக்க மிகவும் பொருத்தமாக உளது. ஏன் ? தொண்டு புரிந்த கிழவர் இத் தூயோர்தாமே !

கையில் உழவாரப் படையுடன் தமிழ் நாட்டுத் திருக் கோவில்கள் தோறும் மெய்யன்பர் புடைசூழ வழிபட்டார் ;

வழிந்தோழுகும் தமது அநுபவத்தை இனிய வண்டமிழ்ப் பாடல்களாக வரைந்தார். உலகம் வாரி வாரி உண்டது. அருளநுபவச் செல்வரின் ஞான விழிப்பு ஞாலத்தே ஓர் மலர்ச்சியை விளைத்தது. உலகம் உய்ந்தது.

இருபதாம் நூற்றுண்டில் வாழும் நாம் இதய விழிப்பு இன்றி வாழ்கின்றோம். சிலர் கேட்கலாம்; 'செயற்கைக் கோள்களாக்கும் அளவுக்கு மனித உள்ளத்தில் அறிவு விழிப்பு உண்டாயிருக்கிறதே, இதய விழிப்பு இல்லை என்பது பொருந்துதல் எவ்வண்ணம்' என்று. அறிவுவிழிப்பு அக விழிப்பு என்றும் புறவிழிப்பு என்றும் இருவகை உடையது. முன்னது ஆண்டாண்டு புரண்டாலும், வினைப்பயனால் விளைவது. பின்னது எளிதில் வாய்ப்பது. இப் புறவிழிப்பிலேயே இப்புவி இந்நூற்றுண்டில் தக்கவோர் முன்னேற்றம் பெற்றிருக்கிறது. அக விழிப்பு மலரவில்லை விரிந்த அளவில். அக விழிப்பு உண்டாயின் உலகத்தினிடத்து அன்பு உண்டாகும்; காதல் பிறக்கும். எல்லாரும் இன்புறவேண்டும என்ற எண்ண விரிவு ஏற்படும்; நான் உலகத்திலே ஒருவனென்ற உணர்வு பிறக்கும்; இயற்கையில் இயங்கும் திருவருட்சக்திக்கு நானோர் மகவு என்ற நல்லுணர்வு விளையும்.

இவ்விழிப்புக்குத் திருமுறையே துணை புரியும். இத் திருமுறைப்பணியைத் தொடக்கிவைத்துத் தருமையாதீனத்து எங்கள் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானமவர்களின் அருளாணையின் வண்ணம் திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய முதல் திருமுறைக்கு, எனது ஆசிரியரும், ஆதீனப் பல்கலைக் கல்லூரியின் முன்னாள் துணைத்தலைவரும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்து இந்நாள் தமிழ் விரிவுரையாளருமான மகா வித்துவான், திரு. ச. தண்டபாணி தேசிகரவர்கள் உரையெழுதினார்கள். இரண்டாம் திருமுறை எனது ஆசிரியரும் இத்திருமுறை உரையாசிரியரும், முதுபெரும் புலவரும் இத் தருமை ஆதீனப் பல்கலைக் கல்லூரித் தலைவருமான புலவர். திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியாரவர்களால் எழுதப்பெற்றது. மூன்றும் திருமுறை பண்டித திரு. அ. கந்தசாமிப் பிள்ளையவர்களால் உரை யெழுதப் பெற்றுத், திருஞானசம்பந்தர் அருளிய மூன்று திருமுறைகளும் குறிப்புரையுடன் நிறைவுற்றன.

தமிழ்ப் பெருங்குடிமக்களுக்குத் திருமுறைகளை உரையோடு வழங்கிவரும் இத்தகைய பணி புரிந்து, 'உலகத்தார் உள்ளத்துளெல்லாம்' நிலைத்துவிட்ட தருமபுர ஆதீனம் இவ்வரிசையில் திருநாவுக்கரசுசுவாமிகளின் திருமுறைகளை இப்போது வெளியிடத்தொடங்கி, நான்காம் திருமுறையைச் செவ்விய உரையோடு செந்தமிழ் உலகுக்கு இஞ்ஞான்று வழங்குகிறது.

இத் திருக்கை வழக்கம் தருமபுர ஆதீனத்து 25 ஆவது குருமகாசந்நிதானமாக எழுந்தருளியிருப்பவர்களும், அடியவனை ஆட்கொண்ட ஆசாரியப் பெருந்தகையும், சமய 'சமூக' இலக்கியப் பணிகள் புரிவதையே குறிக்கோளாகக் கொண்டு வீற்றிருப்பவர்களுமாகிய சீலத்திரு சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களுடையது என்பது யாவரும் எண்ணி எண்ணி இன்புற வேண்டுவதாகும்.

ஆட்சியேற்ற நான்முதல் அறப்பணி பல புரிந்து வரும் இவ் வருளரசு இக்காலை அநுபவச் செல்வத்தை அறிவுலகுக்கு உரையோடு வழங்க முற்பட்டிருப்பது தமிழ் உலகு புரிந்த தவமே யாகும்.

இரண்டாம் திருமுறைக்கு உரை யெழுதிய முதுபெரும்புலவர் திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்களையே இத் திருமுறைக்கு உரையெழுதத் தேர்ந்ததும் திருவருள் வாய்ப்பே. சித்தாந்த நூல்களிற் சிறந்த புலவரும், திருமுறைப் பயிற்சியிற் சீரியரும், இலக்கண இலக்கியங்களில் வழிவழிவந்த அறிஞருமாகிய திரு. முதலியாரவர்கள் திருநாவுக்கரசுசுவாமிகளின் அநுபவ வாக்குக்கு உரையெழுதத் தகுதி உள்ளவர்கள்.

இவர்களது இச்சீரிய குறிப்புரையின் பலபகுதிகளையும் பயிலும் வாய்ப்பை எனக்கு வழங்கியருளிய குருமகாசந்நிதானம் அவர்கள், இக்குறிப்புரை மாட்சிகளையும் விதந்தெழுதும் வண்ணம் ஆணை பிறப்பித்தது யான் செய்த தவப்பேறே என மதிக்கின்றேன். ஏனெனில், அநுபவப் பயிற்சியில்லாத எனக்கு இது ஓர் அருளிப்பாடே யல்லவா ?

இரண்டாவது திருமுறையையும், அதற்குத் திரு. முதலியாரவர்கள் எழுதிய குறிப்புரையையும் படித்தறிந்து அத் திருமுறைப் பதிப்பிலேயே 'குறிப்புரை மாட்சி' யெழுதும்

பேறும் முன்னர்ப் பெற்றேன். உரையாசிரியரின் பரந்த அறிவை உணரும் பெருவாய்ப்புப் பெற்றது போலவே இத்திருமுறையிலும் உணரலானேன்.

உரையைப் படிக்குங்கால் என் உள்ளத்தே நச்சினார்க்கினியர், பரிமேலழகர், பேராசிரியர் முதலிய தமிழ் உரையாசிரியர்கள் நினைவே மேலோங்கி நின்றது. ஏன்? அதே அழகுநடை; தேர்ந்த சொல்லாட்சி; தெளிவான விளக்கம்: ஏற்ற மேற்கோள்; இனிய சொல்லாராய்ச்சி. திருப்பதிக வரலாற்றைப் படிக்கின்ற போதெல்லாம் பெரிய புராணப் பூங்காவுக்குள் நுழைந்து சேக்கிழாரின் கவி மணத்தை உரை மணமாக நுகரக்கூடிய வாய்ப்புக் கிடைத்தது.

பொருள்காணும் வகையில் நம் உரையாசிரியர் கொண்டுள்ள முறை புதியது. வினாவும் விடையுமாகப் பொருள் விளக்கம் புரிகின்றார். எடுத்துக் காட்டாக முதற் பதிகத்துள் 'கூற்று யினவாறு' என்ற முதற்பாடலுக்கமைந்த உரையைக் காட்டலாகும். சித்தாந்த சாத்திர நுணுக்கங்கள் கூடிய பகுதியாக அவ்வுரைப் பகுதி ஒளிர்கின்றது. அகம்பு புறம்பு என்ற சொல்லாராய்ச்சி இனியது.

வஞ்சம் என்ற சொல் வல்+து+அம் என்ற மூன்றன் மருவிய கூட்டமே என்பதனை நிறுவியுள்ளார். (பக் - 4)

ஏடு - இளேது; சிந்தாமணி (446 - 1552) இளேது - இளது - ஈள்து - எள்து - ஏடு என மருவிற்று' (பக் - 31) என்ற விளக்கம் ஆய்தற்குரியது.

'வண்ணப் பகன்றிலோடாடி வைகி வாரவன கண்டேன்' (26) என்புழிப் பகன்றில் என்ற சொல்லினைப் பற்றிய ஆராய்ச்சியை நிகழ்த்தியுள்ளார்.

'பக+அன்றில், மக+அன்றில் இரண்டும் துணைபிரியா மகன்றில். மகன்று - மகனை (ஆணை) உடையது. துணைபிரியா மகன்றில் என்றதை நோக்கி, பகு+அன்றில் எனப்பிரித்து துணைபிரியா அன்றில் எனலாம். பகன்றில் என்பது மகன்றில் என மருவியுமிருக்கலாம். பிரியாத இயல்புநோக்கிப் பகா அன்றில் என்றிருந்தது பகன்றில் என மருவியதெனலும் கூடும்.' என்ற விளக்கம் ஆய்தற்குரியதே.

'பற்றிக் கயிறறுக்கில்லேன் பாடியும் ஆடா வருவேன்'- என்புழி (29). 'பாசம் என்னும் வடசொற் பொருள்பற்றிக் கயிறு எனப்பட்டது'- என்று விளக்குதல் ஆய்வாளர்க்கு ஓர் புதிய செய்தியாகும். கயிறு என்று கூறுதலைப்பற்றிப் பாசம் என்ற வடசொற் பிறந்திருக்கலாகாதா என்று வினவுவார்க்கு இவ்வுரையாசிரியரின் விடை இது.

'திங்கள் மதிக் கண்ணியானை' (30) என்ற தொடர்க்கு விளக்கம் எழுதுங்கால் ; 'திங்கள் மதி ஒருபொருட் பலபெயர் ; திங்கள் சாந்திரமானம்பற்றிய திங்களை விளைவிப்பது. காரணப் பெயர். மதி பிறை என்னும்பொருட்டு. சந்திரனுக்கு வட மொழியில் மதி என்னும் பெயரில்லை. இரண்டும் தமிழ்ச் சொல்லே'' என்ற விளக்கவுரை நோக்கற்குரியது.

'பப்போதிப் பவணனுய்ப் பறித்ததொரு தலையோடே திரிதர்வேனை' (47) என்ற விடத்துப் பம்பு - பப்பு - பரப்பு - விரிதல். குவிதல் (நிவிர்த்திக்கு இடம்) இல்லாமை' என்று எழுதியிருத்தல் சிந்தித்து உணர்தற்குரியது.

'இறுத்தானை எழில் முளரித் தவிசின்மிசை' என்புழி (51) 'தவிசு - (தவிர்+து) தங்குதலுடையது, இருக்கை. காரணப் பெயர். தவிர்து என்றதன் மரூஉ' என்று எழுதுதல் ஓர் புதிய சிந்தனைக் கிளர்ச்சியாதல் ஓர்க.

'ஓர் ஓதம் ஓதி உலகம் பலிதிரிவான் என்கின்றாளால்' என்புழி (59) 'ஓதுவது - ஒத்து ; ஓதம் ; ஓது - பாடு ; ஓத்து - பாட்டு ; ஓதம் - பாடம் என வரும் சொல்லமைதி உணர்க. பாடம் என்னும் வடசொல் வேறு, இது வேறு. 'பாடம் (பாடு+அம்) கருத்தே சொல்வகை சொற்பொருள்' என்புழி வருவது தமிழ்ச்சொல்லுமாம் ; 'பாடம் படித்தான்' என்புழி நிற்பது வடசொல் என்ற விளக்கம் உணாதற் கினியவோர் பகுதியாகும்.

'இண்டைசேர் சடையானை என்மனத்தே வைத்தேனே' (65) என்றவிடத்து 'இணையடை என்பதன் மரூஉ இண்டை' என்று விளக்கி, சுமையடு என்பது சும்மாடு என மருவியதறிக என்று உவமையும் காட்டியிருத்தல் இனியதாதல் தெரியலாம்.

'சிவனேனும் ஓசையல்லது அறையோ உலகில் திருநின்ற செம்மையுளதே' என்ற பொதுப் பதிகத்து 'ஒலிசெய் என்பது ஓசை என மருவிற்று' என்று விளக்குதல் ஓர் புதிய செய்தி.

'நள் + து = நண்டு; நள்ளி என்றதால் விளங்கும்' என்று 206-ம் பாடற்பகுதியில் எழுதி விளக்குதல் அறியத்தக்கது.

'ஏறனுர் ஏறுதம்பால்' (219) என்ற பாடற் பகுதிக்கு உரை விளக்குகையில், 'நில் + து, நீல் + து = நீறு என்று கூறி, செல் + து, சேல் + து = சேறு, வெல் + து, வேல் + து = வேறு முதலியன போல்வது என்று எடுத்துக்காட்டுதல் இனியவோர் பகுதி.

'செஞ்சடைக் கற்றை முற்றத்து' எனத் தொடங்கும் 218-ம் பாடலில் (மஞ்சு - மை + து - மைத்து, மைந்து, மைஞ்சு, மஞ்சு என ஆகியதை விளக்கியுள்ளார்.

இருள் + பு என்பதன் மருஉவே இரும்பு என்பதும், சுருள் + பு என்பதன் மருஉவே சுரும்பு என்பதும் 239 ம் பாடலில் விளக்கியுள்ள சொல்லாராய்ச்சிச் செய்திகள்.

'நோய்யவர் விழுமியாரும்' என்ற 285-ம் பாடலில், 'இடிந்த + இல் இடிந்தவில்; அதன் மருஉ இடிஞ்சில் என்பது. குற்றிற்சுவர் என்பது குட்டிச்சுவர் என மருவிற்று, குறு + இல் குற்றில். இடுஞ்சில் இடிஞ்சில் என மருவியது' என்ற விளக்கத்தை நன்கு உணர்தல் வேண்டும்

'பள்ளியா நெஞ்சத்துள்ளார் பஞ்சமம் பாடியாடும்' என்புழி (286) ''பஞ்சமம் - பண்சமம் - பஞ்சம சுருதி பற்றியது - ஒருபண்'' என்று விளக்கியிருத்தல் மிக வினியவோர் உரைப் பகுதியாகும்.

'இந்திரனோடு தேவர் இருடிகள்' என்று தொடங்கும் திரு மறைக்காட்டுத் தேவாரத்தின் (324) உரையில் 'துதிக்கல் - துதி + க் + கு + அல்) குகரச் சாரியையும் சந்தியாகிய ககர வொற்றும், தொழிற்பெயர் விகுதியாகிய அல்லும் துதி என்னும் வடசொற் பகுதியுடன் இயைந்து தொழிற்பெயர்ப் பகுபதம்

ஆயிற்று. கதி, மதி, திதி, உதி முதலிய பிற வடசொற்பகுதிக ளுடனும் இவ்வாறு இயைந்து ஆன சொற்கள் உள. பழந்தமிழில் இன்னோரன்னவை இல ' என்ற விளக்கப்பகுதி சிந்தை கவரும் ஒன்றும்.

' பாயன நாடறுக்கும் பத்தர்கள் பணியவம்மின் ' என்ற விடத்து (325). ' பாயன நாடு - பரப்பினுலோத்த நாடு ' (உலகம்) பாயனம் - பாசனம் ; நீர் பாய்த்துகின்ற நாடு எனலுமாம் ' என்று விளக்கியிருத்தல் அறிதற்குரியது.

' மனத்தினுள் மாசு தீர்ப்பார் மாமறைக் காடனுரே ' என்புழி (331) மாசு என்ற சொல் மறு+து, மறுது, மறுசு, மாசு என மருவிய சொல்லென்று விரித்துரைத்திருத்தல் அறிந்து இன்புறத் தக்கது.

' தேரையும் மேல்கடாவித் திண்ணமாத் தெழித்துநோக்கி ' என்றவிடத்து (334) ஆள்+மை, ஆண்மை எனக்காட்டி ஆளின் தன்மை என்று கூறுதலே சிறந்தது என்று குறித்து, ' ஆளும் தன்மையெனின் ஆள் என்பது வினையாகும் ; தமிழில் மை என்பது வடமொழியில் துவம் என்றது போல்வது ; பண் புணர்த்துவது ' என்றெழுதி யிருத்தலும நோக்கி மகிழ்தற் குரியது.

' நாள்முடிக்கின்ற சீரான் நடுங்கியே மீது போகான் ' (334) என்ற விடத்து நாள் முடிக்கின்ற சீரான் - செங்கதிரோன். நாளிறு என்றதன் மரூஉவே ஞாயிறு.......செங்கதிர்த் தோற் றத்தை அடியாகக்கொண்டு கணக்கிடுவதே நாள். நாள் இறுதற்கும் அதுவே அடியாகும். அதனுல் அக்கதிரை நாளிறு என்றனர் செந்தமிழர். அது ஞாயிறு என்று மருவிற்று என்றெழுதியிருத்தல் தமிழ்ச்சொற்களின் ஆழமுடைமையை உரையாசிரியர் உளங்கொண்டுள்ள செய்தியை மேலும் உரைக்கும்.

' ஞாலமும் குழிய நின்று நட்டமதாடுகின்ற மேலவர் ' என்புழி (370) நட்டம் - திருக்கூத்து ; இது தமிழ்ப் பெயர் ; வடசொற் சிதைவு அன்று ; கோட்டம் வட்டம் போல்வது ' என விளக்கியிருத்தல் அனைவரும் உணரவேண்டிய பகுதி யாகும். நிருத்தம் என்ற சொல்தான் நட்டமாயிற்று எனச்

சொல்வோர்க்கு இது தக்க வாய்ப்பூட்டாக அமையுமல்லவா? இவ்வாறே சாடவெடுத்தது (789) என்ற பாடல் உரையிலும் 'நட்டம் வடசொற்சிதைவன்று; தமிழ்ச்சொல்' என்று வற்புறுத்தியுள்ளனர் பின்னரும்.

'இரப்பவர்க்கீய வைத்தார் ஈபவர்க்கருளும் வைத்தார்' என்ற 383ம் பாடல் உரையில், இரத்தல் புரத்தல் இரண்டும் மறுதலைப்பொருளன என்ற செய்தியைப் புறநானூறு முதலிய பழந்தமிழ் இலக்கியச் செய்யுளாட்சி காட்டி ஆயந்துரைத் திருத்தல் சீரியதாகும்.

தருவினை மருவும் கங்கை' என்ற 439ம் பாடற் றொடரில் கொடுக்குஞ் செயல் என்றும், மரங்களை யென்றும் இரு பொருள்கண்டு அச்சொற்றொடராற்றலைத் தெற்றெனப் புலப்படுத்தியுள்ளமை உளம் கொளற்குரியது

'கனகமா வயிர முந்து மாமணிக்கயிலை கண்டும், உனகராய் அரக்கரோடி' என்ற 456ம் பாடற் பகுதியில் உனகன் என்ற சொற்கு உன்னுகின்ற அகத்தையுடையவனும் என்றதோடமையாது இழிந்தவன் என்ற (லெக்சிகன்) பொருளையும் புலப்படுத்தியுள்ளார்.

'மயக்கமாய்த் தெளிவுமாகி' என்ற 473ம் பாடற் பகுதியில் அசைத்தல், அசைக்கல், அசக்கல், அசக்கம், அயக்கம் என முறையே மருவிற்று எனல் அறிதற்குரியது.

'கேழல் வெண்கொம்பு பூண்ட கிளரொளி மார்பினனே' எனத் தொடங்கும் திருக் கோடிகாத் தேவாரத்தின் உரையில் (493) செய்கேன் என்ற சொல்லின் உருவம் காட்டப்பட் டுள்ளது. செய்+கு+என் · செய்கேன். பிற்காலத்தார் ககர வொற்று எதிர்காலம் காட்டிற்று என்றனர். செய்கு+யான் என்பதன் மரூஉ என்பர் சொல்லாராய்ச்சியாளர் என்ற உரைப் பகுதி மிக இனியது.

'குறவிதோள் மணந்த செல்வக் குமரவேள் தாதை' என்புழி (580) 'தாதை - தாதா என்னும் வட சொற்றிரிபு; ஆவீறு ஐயீறுதல் விதி' என்று விளக்கமெழுதி யிருத்தல் உணரத்தக்கவோர் பகுதியாகும்.

'குனித்த புருவமும் கோவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும்' - என்புழி (783) மலராது முன்னிலையான அரும்பைக் குமிழ் எனலுக்குக் கோவிற் புராணச் சான்று காட்டி அரும்பும் நகையைக் குமிழ் சிரிப்பு என்பர்; 'குமிண் சிரிப்பு' என்றதிற் குமிண் என்றது முதனிலையாதல் வேண்டும். அவ்வாறேன்று தமிழில் வேறெங்கும் காணப்படவில்லை என்று அவ்வரிய சொல்லாட்சியை விளக்கியுள்ளமை அறிந்து இன்புறத்தக்கது.

'பொன்னேத்த மேனிமேல் வெண்ணீறணிந்து' என்றவிடத்து (788)ப் பொன்னேத்தமேனி என்ற தொடர்க்கு விளக்குங்கால், 'சிவன் என்பதைச் செம்மேனியன் என்னும் பொருட்டாகிய தமிழ்ச் சொல்லாக்கியருளிய துணரப்படும்' என்றெழுதிய தொடர் சிந்திப்பினும் பேரின்பம் விளைப்பதாகும்.

'பேழ்வாயரவின் அரைக் கமர்ந் தேறி' என்ற பாடல் உரையில் (802) 'பிறழ் என்பது பேழ் என்று மருவிற்று' என்று ஓர் சொல்லின் தொல்லுருவத்தைப் புலப்படுத்தியுள்ளார்.

'புறறினில் வாழும் அரவுக்கும்' எனத் தொடங்கும் பாடல் உரையில், 'கங்கையைச் சிற்றிடையாள் என்றது வடமொழி வழக்கு' எனப் புலப்படுத்தியுள்ளமை இனியது.

'சுணங்கு முகத்துத் துணைமுலைப்பாவை' எனத் தொடங்கும் (900) பாடல் உரையில் வரும் 'வளைக்கரம் கூப்பி நின்று' என்ற தொடர்க்குரிய விளக்கப்பகுதி இனியவோர் சொல்லாராய்ச்சிப் பகுதியாகும். "குவிபு என்றதன் மருஉவே கூப்பு என்பது. குவிபிட்டான், கூப்பிட்டான் என்று மருவியதும் அறிக. கைகுவிதலும் வாய்குவிதலும் பற்றி உண்டான சொல். குவிபு - கூவ்பு - கூம்பு - கூப்பு என்னும் முறையில் மருவிற்று."

"ஈன்றுளுமாய் எனக்கெந்தையுமாய்" என்ற 913ம் பாடற் பகுதிக்கமைந்த உரைப்பகுதி உன்னி உன்னி உவத்தற் குரியது. ஈன்றுள், எந்தை, உடன் தோன்றினர் என்ற மூன்றும் மாதினியார் முதலிய மூவரையுமே குறித்தன என்று தெளிவாக்கியுள்ளார். இப்பாடலுள் 'இமையவர்க்கன்பன்' என்ற தொடர் உமையவட்கன்பன் என்பதை நோக்க (914) இமையவட் கன்பன் என்றிருந்திருக்கலாமோ என்று சிந்தித்திருக்கும் பகுதி மெய்யன்பர் உணர்விற்குரியவோரிடமாம்.

கருதல் என்றதன் மரூஉவே காதல் என்பது என்று உரைத்து, அதற்குப் பத்துப் பாட்டுச் சான்று தந்திருப்பது உணரத்தக்கது. இச்சொல்லாராய்ச்சி தமிழ் உலகுக்கு இவ் வுரையாசிரியர் தந்துள்ள புதியபடைப்புக்களில் ஒன்று எனலாம். இதனை ஒப்புவோரும் உளராகலாம்; ஒவ்வாதோரும் உளரா கலாம். ஆயினும் இஃதோர் புதிய சிந்தனையாதலைத் தமிழ் கூறு நல் உலகு உன்னுதல் தக்கது என்பது என் கருத்தாகும். இச் செய்தியை 64 ம் பாடல் உரையிலும் காண்கின்றோம்.

'அல்லாக்குழி வீழ்ந்து அயர்வுறுவேன்' என்ற 936 ம் பாடற் பகுதியில், பொருந்துவதாகிய சாத்திரக் கருத்தைச் சித்தியார்கொண்டு குறித்திருத்தல் உணரத்தக்கது.

'இலங்கையர் காவலன்' என்ற (953) தொடரில் காவலன் என்பதனை விளக்கியுள்ளனர்.

'கருவுற்றநாள் முதலா' எனத் தொடங்கும் (961) திருவிருத்தமும், அதற்கமைந்த உரையும் அருள் அநுபவம் விளைந்தாலன்றி உணரவியலாத உயர்வுடையன என்று தோன்று கின்றன.

படிமம் என்ற சொல் (988) பிரதிமா என்ற வடசொல்லின் திரிபு என்பர் நம் உரையாசிரியர்.

இன்னோரன்ன பிறவிடங்களிலெல்லாம் தமிழ்ச் சொற்களைத் தமிழ்ச் சொல்லாராய்ச்சி அடிப்படையில் ஆய்ந்து நிறுவும் உறுதிப்பாடு இவ்வுரையாசிரியர்க்கு உள்ளதனை இக்குறிப்புரை உணர்த்துகிறது.

நம் உரையாசிரியரின் தமிழ்ப்பற்று எல்லோராலும் உணரப்பட்டிருந்தாலும், இவ்வுரைநூலின் ஓரிடத்தே அப்பற்று குன்றிலிட்ட விளக்கென அமைந்து ஒளிர்தலைக் கூறாமல் இருத்தலியலாது.

திருநாகைக் காரோணத்திருப்பதிகத்தின் திருக்கடைக் காப்புச் செய்யுள், முதல் இரண்டு வரிகளைப் படிக்குங்கால் நம் நெஞ்செலாம் நிறையும் அருளமுதம் அவ்விருவரிகளில் ததும்பிநிற்றலை அறியலாம்.

" கருந்தடங்கண்ணியும் தானும் கடனாகைக் காரோணத்தான்
இருந்த திருமலையென்றிறைஞ்சாது அன்று எடுக்கலுற்றான் "
(1001)

இதற்கு உரையெழுத முற்பட்ட நம்மாசிரியரின் தூய அறிவு நலம் தமிழ்ப்பற்றுத் தழுவித் தழைக்கலாயிற்று. பலபடக் கூறுவானேன் ? அவ்வுரைப்பகுதியை உங்கள் திருமுன் வைக்கின்றேன். படித்து நீங்களே தீர்ப்பு வழங்கிவிடுங்கள்.

' கருந்தடங்கண்ணி என்னும் அழகிய தூய தமிழ்ப்பெயர், அப்பர் அடிகள் காலத்தின் முன்னரே வழங்கியதென்பதுணர்க. அஃது இப்பொழுது நீலாயதாட்சி என்று வழங்குகின்றது. இவ்வாறு தமிழ்மொழி யிடத்தைக் கவர்ந்து, தாம் நின்று அவற்றை யொழித்த வடமொழிக்கு அளவில்லை. இரு மொழிக்கும் முதற்குரவர் ஆகிய கண்ணுதலார், ஒருமொழியால் மற்றொரு மொழி ஒழியப் படைத்தாரல்லர்.'' (பக்கம் - 729)

இருமொழியும் வளரவேண்டும் ; வாழவேண்டும் என்ற சமநிலை உடைய நம் உரையாசிரியரின் உணர்வையும் மீறித் தமிழ்ப்பற்று வெளிப்படுகிறது என்பதற்கு இஃதும் ஓர் சான்றாகும் அல்லவா ?

இவ்வண்ணமே ' சிவனெனும் நாமம் ' என்ற (1058) பாடல் உரையில் ' சிவன் - செய்யன், தமிழ்ச் சொல்லாகக் கொண்டு பொருள்கூறிய இடம் இது. செம்மேனி எம்மான் என்றது சிவன் என்ற தமிழ்ச்சொல்லின் பொருளாகும் ' என்று எழுதியிருத்தலும் எண்ணி மகிழற்குரியவோரிடமாகும்.

வடமொழிச் சொற்களை விளக்குங்காலும், சில இன்றி யமையாத வேதோபநிடதக் கருத்துக்களை விளக்குங்காலும் தக்க வடமொழி மேற்கோள்கள் வருகின்றன. உரையாசிரி யரின் வடநூலறிவை அவை விளக்கத் துணை புரிகின்றன.

அப்பர்க்கு மனைவாழ்க்கை இருந்ததா இல்லையா என்று ஆராய்கின்ற திறத்தை ' உயர்ந்தேன் மனைவாழ்க்கையும் ' என்ற (7) பாடல் உரையில் பார்க்கின்றோம் ' கருவுற்றிருந்துன் கழலே நினைந்தேன் ' ' ஒரு பற்றிலாமையும் கண்டு இரங்காய் '

என்ற அகச்சான்றுகளால் அவ்வாகீசருக்கு மனையறம் இல்லை யென்னுது உண்டு என்பார்க்கு நரகம் இல்லாது போமோ ?'' என்று எழுதும்போது உரையாசிரியரின் சைவ உறுதி புலனு கிறது அல்லவா ?

பிழைபட்ட பாடங்களைத் தம் உரைப் பகுதியிற் காட்டித் திருந்திய பாடங்களைத் தெளிவாக்குதல் நம் உரையாசிரியரின் நல்லியல்புகளில் ஒன்றாகும். இத்திருமுறையிற் பல்வேறிடங் களில் அத்திருத்தங்களையும், அவற்றுக் கமைந்த செப்பமான உரைப்பகுதிகளையும் காணலாம்.

உரையெழுதுங் காலத்தில் என்னிடத்தேயும், ஏனைய கல்லூரிப் பேராசிரியர்களிடத்தேயும் உசாவி இப்புதிய பாடங் களையும், திருத்தங்களையும் கூறி எம்மையெல்லாம் மகிழ்விப் பார்கள். அவற்றுள் ஓரிரண்டு பாடங்களின் திருத்தங்களை இங்கு உணர்தல் நலம் பயப்பதாகும்.

'' வளர்மதிக் கண்ணியி னானை வார்குழலாளொடும்பாடிக்
களவுபடாததோர் காலம் காண்பான கடைக்கணிற்கின்றேன் ''

என்ற (31) பாடலில் கடைக்கணிக்கின்றேன் என்று இதுகாறும் தவருக இருந்த ஓர் பாடத்தை இவ் வுரையாசிரியா துணிவுடன் கடைக்கணிற்கின்றேன் என்று மாற்றியுள்ளார். கடைக்கண் - கடைவாயிலின்கண் நிற்கின்றேன். கடைக்கணிக்கின்றேன் என்றது எழுதினோராற் பிழைபட்ட பாடம். முற்பாடல் பல வற்றில் வருவேன் என்றார். இதில் வந்துநிற்கின்றேன் என்றார் '' என விளக்கமும் கூறியுள்ளார். இதனை 289-ம் பாடல் உரையோடும் நோக்கி உணர்க.

'' தாடழுவு கையன் தாமரைப்பூஞ் சேவடியன் '' என்ற 196-ம் பாடலில். தாடவுடுக்கையன் என்று பிழைபட்ட பாடத்தைத் திருத்திச் செப்பமாக்கிப் பொருள்விளக்கம் புரிந் துள்ளமையை உணரலாம்.

' ஆவியாய் அவியுமாகி ' - என்ற (320) பாடல் உரையில் ' பாவியாய் ' என்றும் பாடம் உளது. அது பொருத்தமுடைய தன்று என்று விளக்க இதனை வலியுறுத்துவதற்கு 358, 320 பாடல்களை நன்கு கூர்ந்து நோக்கி, ' பாவியார் பாவம் தீர்க்கும் பரமன் ' என்பதே உண்மையான பாடம் என்று ஆய்ந்து நிறுவுகின்றார்கள்.

'மனமெனும் தோணிபற்றி' என்ற (455) பாடலில், 'மதனெனும் பாறைதாக்கி' என்ற தொடரை 'மனனெனும் பாறைதாக்கி' என்று மாற்றியிருத்தலும், மதன் என்பது பிழைபட்ட பாடம் என்று எழுதியிருத்தலும் அறியவேண்டிய பகுதிகள்.

'கைப்போது மலர் தூவிக் காதலித்து வானோர்கள்' என்ற பாடல் உரையில் (64) காதலித்து என்ற சொல்லுக்கு விளக்கம் எழுதுங்கால்: கருதல் என்பது காதல் என மருவிற்று. அப் பெயரடியாகப் பிறிதொரு தொழிற்பெயர் காதலித்தல் என்று உண்டாயிற்று. அதினின்று இவ்வினையெச்சம் அமைந்துள்ளது' என்று வரைகின்றனர். இஃதோர் அரிய செய்தியாகும்.

'புலனடக்காத பூசையாற் பயனின்று' என்ற கருத்துரையை அப்பாடலால் விளக்கிக் காட்டியதும் பயனுள்ள செய்தியாகும்.

'தலையே நீ வணங்காய்' என்ற பதிகத்துப் பாடல்கள் முழுமைக்கும் அமைந்துற்ற உரைப்பகுதிகள் ஆழமுடைமையும், அரும் பொருளமைதியும் கொண்டனவாய் அமைந்துள்ளன. ஒவ்வொரு சொல்லுக்கும் விரிவுரைகண்டு பொருளின்பத்தில் நம்மை ஆழ்த்துகின்ற பெருமை உரையாசிரியர்க்கு வாய்த்தது.

"நெஞ்சே நீ நினையாய் - நிமிர் புன்சடை நின்மலனை
மஞ்சாடும்மலை மங்கை மணாளனை நெஞ்சே நீ நினையாய்"

என்ற 87-ம் பாடலின் உரையில், நிமிர் புன்சடை என்ற தொடர்க்கு உரை எழுதுகின்றார்:

"அவன் நின்மலனாதலைப் புறக்குறியாய் விளக்குவது ஈதென்பார் 'சடை' என்றும், அதனை உடையார்க்கும் அவனை உடையார்க்கும் என்றும் உள்ளது உயர்ச்சியே என்பார் 'நிமிர் சடை' என்றும், அது நிறத்தாலும் விளங்கும் என்பார் 'புன்சடை என்றும் அருளினார்."

'புன்சடை' என்பதற்கு நம் உரையாசிரியர் கொள்ளும் பொருள் இனிய தோன்றும். 'பொன்சடை என்பது புன்சடைஎன மருவிற்று; ஈண்டுப் புன்மை கொள்வார் புல்லரே' என்று எழுதியுள்ளார்.

'கால்களாற் பயனேன்' என்று தொடங்கும் (90) பாடலில் கோகரணம் என்பதற்குப் பொருள் உரைக்குங்கால்;

'தமிழகத்துத் தலப்பெயர்க் காரணம்போல் தள்ளத்தக்க தன்று இது வடமொழி சிறிதுணர்ந்தாரும் பெயர்க்காரணம் காட்டி மெய்ப்பிக்கும் அக்காலத்தில் தமிழில் வழங்கப்பெற்ற ஊர்ப்பெயரெல்லாம் வடமொழிப் பெயராக்கிக் கதை புனைந்து வழங்கும் பொய்க்கிடமாயின' என்றெழுதுதல் உரை ஆசிரியரது உண்மைத் தமிழ்ப்பற்றின் மெய்யுறுதிப்பாட்டை நன்கு அறுதியிடும் ஓர் இடமாகும்.

'இல்லக விளக்கது இருள் கெடுப்பது' என்று தொடங்கும் (111) பாடலுக்கு அமைந்த உரையில் 'நல்லக விளக்கு' எனப்பட்டமைக்குக் காரணம் எழுதும் இடம் உரை ஆசிரியரின் தமிழ்நடை அழகும் ஆற்றலும் வாய்ந்ததென்பதற்குத் தக்க சான்றாகும் :

" உணர்விற்கு விடயமாகக் காணப்படும் பசுபாசங்களோடு ஒப்ப வேறு காணப்படாத பதிப்பொருளாகிய முதல்வனைத் தன் அகத்தின்கண் அஞ்செழுத்து ஓதும் முறையால் காணும் ஆயின், கோலைநட்டுக் கயிற்றினாற் சுற்றிக் கடையவே விறகினின்றும் தோன்றும் தீயைப்போல அம்முதல்வன் அங்குத் தோன்றி, அறிவிற்கு அறிவாய் விளங்கிநிற்குமாகலின் 'நல்லகவிளக்கு' எனப்பட்டது.

" மண்பொருந்தி வாழ்பவர்க்கும் மாதீர்த்த வேதியர்க்கும் " எனத் தொடங்கும் (118) பாடலின் விளக்கவுரையிறுதியில் 'இப்பாடலைச் சிவபூசை முடிவிற் சொல்லிவருதல் சைவரது வழக்கம்' என்று தம்மநுபவத்தையும் உள்ளடக்கி நம்முரையாசிரியர் வரைந்திருத்தல் உணர்க.

" வஞ்சித்தேன் வளைகவர்ந்தான் " என்ற பாடலில்

" அஞ்சிப்போய்க் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி
குஞ்சிப்பூவாய் நின்ற சேவடியாய் கோடியையே "

என்ற வரிகட்கு வினைமுடிபும் தெளிபொருளும் தக்க மேற்கோள்களோடு எழுதியிருத்தல் இன்புறத்தக்கது.

நம் உரையாசிரியரின் உரைநடை சேனுவரையர் நடை போன்றது ; சிவஞானமுனிவர் நடைபோன்றது. எடுத்துக் காட்டு வேண்டுமாயின், இந்நாலாந்திருமுறையின் குறிப்புரைப் பகுதிகளை - குறிப்பாக 132, 133, 134, 135-ம் பக்கத்தி லுள்ளவற்றைப் பயின்று பாருங்கள். எதுகைமோனைகளும் அமைய எழிலோடு அமைந்துள்ளன இப்பகுதிகள்.

" பெருவேளூரெம் பிறப்பிலியைப் பேணுவார்கள் பிரிவரிய
திருவாஞ்சியத தெம்செல்வனைச் சிந்தையுள்ளே வைத்தேனே "

என்ற பாடற் பகுதியில் (150) வாஞ்சியம் என்றதன் பொருள் தோன்றப் பேணுவார்கள் என்ருர் என்று குறிப்பாக அத்தலத்தின் பெயர்க் காரணத்தைப் புலப்படுத்தியுள்ள திறம் பெரிதும் மதிக்கத் தகுந்தது.

தில்லையில் நள்ளிராக் காட்சியும் திருவாரூரில் திருவந்திக் காப்புக் காட்சியும் மிக்க சிறப்புடையன என்ற செய்தியை 172-ம் பாடல் உரையில் திருவாரூர் உலாவைக் கொண்டு விளக்கியிருத்தல் உணரத்தக்கது. பாம்பைப்பற்றிய பல செய்திகளைச் சிந்தாமணி, தசகாரியம், சித்தராரூடச்சிந்து ஆகிய நூல்களின் மேற்கோள்களைக் கொண்டு ' பத்துக் கொலாமவர் பாம்பின்கண் பாம்பின்பல் ' (186) என்ற விடந்தீர்த்த பதிகத்துக் கடைக்காப்புச் செய்யுளில் விளக்கியிருத்தலும் விழுமியது. குஞ்சி இருபாலார் தலைமயிர்க்கும் பொதுப்பெயர் என்ற கருத்தும் குருக்கண்மார், செட்டிமார் என்பன குருக்கள்மகார், செட்டி மகார் என்பனவற்றின் மரூஉவே என்ற கருத்தும் 203-ம் பாடல் உரையில் காட்டப்பட்டுள்ளன.

திருவாரூர்த் திருத்தலத்து ஆதிரைநாட் பெருமையை அருளும் ' முத்து விதானம் ' என்ற பதிகத்தின் பாடல்கள் அனைத்திலும் வினைமுடிவு விளங்கவில்லை. இதற்கு விளக்கம் எழுதப்புகும் உரையாசிரியர் உள்ளத்தே நகைச் சுவை அரும்பு கிறது ; குறுமுறுவல் விளைக்கின்ருர். " இத் திருப்பதிகம் முழுதும் வினைமுடிவு விளங்காதவாறுள்ளது. வினைமுடிவு விளங்காமை உயிர்க்கு இயல்பன்றோ ?" என்று எழுதியுள்ள பகுதியை நினைக்குந்தோறும் கருத்திலே முறுவல் எழுதல் இயல்பேயல்லவா ? (208).

சம்பிரதாயங்களைப் பேணுதலிலும், அவை வழுவாமல் உரை யெழுதுவதிலும் நம் உரையாசிரியர்க்கு உள்ள, உள்ள மிகுதியைப் பழகி யறிந்த நான், அவர்தம் குறிப்புரையைப் படிக்குந்தோறும் ஒவ்வொரு எழுத்திலும் சம்பிரதாயமணம் கமழ்வதை உணரலானேன். எடுத்துக்காட்டாக, இரண்டு இடங்களை ஈண்டுக் குறித்திட விழைகின்றேன்.

"நாகங் கோப்பளித்தகையர் நான்மறையாய பாடி
மேகங் கோப்பளித்ததிங்கள் விரிசடை மேலும்வைத்துப்
பாகங் கோப்பளித்த மாதர் பண்ணுடன் பாடியாட
ஆகங் கோப்பளித் தோளா ரதிகை வீரட்டனாரே"

என்ற திருவதிகைவீரட்டானத்துப் பாடலின் (?46) உரையில் :- "மாதர் பண்ணுடன் பாடியாட" என்பது அம்பிகை பண்ணோடு பாடுதலும் அன்றி ஆடுதலும் செய்தாள் என்று குறித்தலாலும் ஆடுதல் காளியம்மைக்கே உரியதாக்கிக் கூறுதலாலும், சிவகாமவல்லிக்கு ஆட்டம் உண்டென்னல் மரபு அன்று ஆதலாலும், பாடி என்றதைப் பாட என்று செயவெனெச்ச மாகத் திரித்துக் கொள்ளல் நன்று" என்று எழுதியிருக்கும் இடத்தினை ஓர்க. மற்றப்பகுதி வருமாறு :- 'கொண்டதோர் கோலமாகி' - எனத்தோடங்கும் பாடல் (440) உரையில் 'எல்லாத் தலங்களினும் கோயில்கொண்டிருக்கும் முழுமுதல் ஒருவனே. அவனே ஞானானந்த நடனம் புரிபவன். ஐந்தொழிற் கூத்தன். இவ்வுண்மை யறியாதார், திருமுறையில் திருக்கூத்தன் என்றுள்ள இடந்தோறும் மகேசுரமூர்த்தியாகிய நடராசர் என்பர்'

"வரிமுரி பாடி யென்றும் வல்லவாறடைந்து" எனத் தொடங்கும் பாடல் உரையில் (254) சிலப்பதிகாரம், தொல் காப்பியச் செய்யுளியற் பேராசிரியம் முதலியவைகொண்டு வரிப் பாடல், முரிப்பாடல் என்ற இரு தமிழ்ப் பழம் பாடல்களின் பொருளை விளக்கியிருத்தல் சிந்தித் தின்புறத் தக்கது.

பஞ்சமம் என்ற பண், பண் சமம் என்ற இருசொற்களின் இணைப்பே என்று விளக்கிய உரையாசிரியர், காந்தாரம் என்ற பண் அப்பர் சுவாமிகள் வாக்கில் கந்தாரம் என்று ஆளப் பட்டதுபோலவே (கந்தருவம்) கந்திரம் என்றும் ஆளப்பட்டிருக் கலாம் என்று 313 ம் பாடல் உரையில் மொழிந்திருத்தல் ஆய்வுக்குரியதோன்றுகும்.

" கந்திருவங்கள் கேட்டார் கடவூர் வீரட்டனாரே "

என்ற பகுதியிற் குறிக்கப் பெற்றமை காண்க.

திருவிடைமருதூர்ப் பதிகமாகிய திருநேரிசை "காடுடைச் சுடலை நீற்றர்" எனத் தொடங்குகிறது. இரண்டாம் பாடல் " முந்தையார் முந்தியுள்ளார் " என்ற தொடக்கம் உடையது. " சந்தியார் சந்தியுள்ளார் " (345) என்ற தொடர்க்கு நம் உரையாசிரியர் காணும் விளக்கம் நம் கருத்தைக் கதுவுகிறது. ' சந்தியாவந்தனம் புரிபவரது சந்தியாதியானத்திலும் அச் சந்தியிலும் விளங்கும் திருவருளுருவினராயிருப்பவர். சந்தியார்; சந்தியாதியானத்தைச் செய்யும் வேளையாகிய சந்தியையுடையவர்› என்று சரியையாளர், கிரியையாளர். யோகியர், ஞானியர் ஆகிய நால்வகையாரையும் குறித்தது. " சந்தியானைச் சமாதிசெய்வார் தங்கள் புந்தியானை ". (5-44-2)

' விண்ணெனன வருஉம் காயப்பெயர் ' என்ற (தொல்-365) சூத்திரத்தில் வெயிலும் நிலவும் காய்தல் பற்றி விண்ணைக் காயம் என்னும் தமிழ் வழக்குண்மை உணர்க. ஆகாசம் என்னும் வடசொல் முதற்குறையாய்க் காசம் என வாராது. வரின் அது காயம் என மருவலாம். என்று 361 ம் பாடல் உரையில் எழுதியிருத்தல் சிந்தனைக்கு ஓர் விருந்து.

பதசாரம் எழுதுதல் நம் உரையாசிரியரின் தனியியல்பு. ஆசிரியரது உள்ளத்தை அவ்வண்ணமே அறிந்து எழுதும் தனிப் பண்பு இவரது உரைப் பண்பாதலுக்கு ஓர் எடுத்துக் காட்டு 402 ம் திரு நேரிசைக்கு எழுதும் இவர்தம் உரை நடையாகும். அதனை ஈண்டுக் கண்டு கழிபேருவகையாதல் கடனே யல்லவா ? அப்பகுதி :-

" சிவபெருமானுக்குச் சொருபம் சிவஞானமேயாதலின் ' உமையலாதுருவமில்லை ' என்றும். உடைமை உலகம், அடிமை உயிர்கள். இரண்டும் உடைப்பொருள். அவற்றுள் உடைமையை ' உலகலாதுடையதில்லை ' என்றும் அடிமையை ' நமையெல்லாம் உடையர் ஆவர் ' என்றும், அவனுடைமையான உலகம் அவன் அருள்வழி நின்றொழுகும் அடிமைகளாகிய உயிர்கட்கு நன்மையேயன்றித் தீமைபயவாமையின் ' நன்மையே தீமையில்லை ' என்றும், வினைப்பயனாக எய்தும் துன்பங்களைப்

பொறுத்துக்கொண்டு மேலும் வினையேறாது திருவடித்தொண்டு பூண்டார்க்கு அளவிலாது அருள்கொடுப்பது ஆண்டானது கடமையாதலின் 'கமை (பொறுமை) போலாம் உடையராகிக் கழலடிபரவும் தொண்டர்க்கு அமைவு இலா அருள்கொடுப்பர்' என்றும் அருளினார் மொழிவேந்தர்.''

சொற்களின் ஆழத்தில் திருநாவுக்கரசுசுவாமிகளின் அருள் அனுபவத் தோய்வோடு கூடிய கருத்துக்களை அள்ளி வழங்கும் பெருமை நம் உரையாசிரியர்க்கு வாய்த்த அருமையை என்னென்பது !

திருக்கச்சி மேற்றளிப் பதிகத்தின் (43) முதற்பாடல் உரையிலேயே (424) ஆசிரியரின் தமிழ்ப்பற்றும், சிவதலப் பற்றும் ஒளிவிடுகின்றன. 'கறையது கண்டம் கொண்டார் காஞ்சிமாநகர் தன்னுள்ளால்' என்ற மூன்றாவது வரிக்கு அகல உரை எழுதுகின்றார் :- காஞ்சி - காஞ்சி என்னும் மரம் பற்றிய காரணப் பெயர் ; இதனை வட சொல்லாகக் கொண்டு பல பொருள் கூறும் கற்பனை வேறு ; இவ்வுண்மை வேறு. ஆலவாயில், வன்னியூர், குற்றாலம் முதலிய தமிழ்ப் பெயர்களையும் வடமொழி யறிவிற்கேற்ப மொழிபெயர்த்த திறத்தை யறிக. வாயாற் சொல்லாது உளத்திலெண்ணியவற்றைச் சொன்னவாறு அறிவார் என்னும் பொருளதாய்ச் சொன்னவாறறிவார் என்றதை 'உக்தவேதி' என்றால் சொன்னதை அறிதலில் வியப்பென்னை ? மொழி பெயர்ப்பின் குறைகட்கு இதுவும் ஒரு சான்றாகும்

இந்த உரைப்பகுதியை மட்டும் படித்தலே போதும். உரையாசிரியர் தெய்வத் தமிழினிடத்தில் வைத்திருக்கும் பற்றை உணரலாகும். எல்லாப் பற்றை விட்டவர்க்கும் தமிழ்ப் பற்றை விடமுடியாதபோது, மனையற வாழ்க்கை மேற்கொண்டு மாண்புறும் இவ்வுரையாசிரியரை - தந்தையார் இடமிருந்தே தமிழிலக்கண இலக்கியங்களைத் தக்கவண்ணம் கற்ற இவ் வுரையாசிரியரை - பல சித்தாந்த சாத்திரங்களது விளக்க நூல் ஆசிரியரை - பல்லாண்டுகள் மாணுக்கர்களுக்குத் தமிழ் பயிற்றிவரும் இப்போதகாசிரியரைச் செந்தமிழ் பிணித்துக் கொண்டிருத்தலில் வியப்பும் உண்டோ ?

இவ்வாறு, திருமயிலாடுதுறைத்தலத்து எழுந்தருளியுள்ள அஞ்சோல் நாயகி என்ற அருமையான செந்தமிழ்ப் பெயரை, அஞ்சல் நாயகி என்று பிறழ உணர்ந்து, அபயாம்பிகை என மொழி பெயர்த்து விட்டனர் சில மொழியறியா மனிதர். இதனை உரையாடுங்கால் என்னிடம் கூறி இவ்வுரையாசிரியர் உள்ளம் வருந்தியதுண்டு. தமிழ் மொழியிற் பல்லாண்டுகளாகப் பழகி அதனைத் தம்முயிராகப் பேணிவரும் பெருந்தகையாளராதலின், இவ்வுரையாசிரியர் தம்முடைய உரைப் போக்கிலும் அப்பற்றைத் தம்மை யறியாமலே வெளிப்படுத்துவாராயினா எனலாம்.

பிறநூல் தெளிவுரை பகுதிகளில் சில :

(1) " ஏமத்தும் இடையிராவும் ஏகாந்தம் இயம்புவார்க்கு
ஓமத்துள் ஒளியதாகும் ஒற்றியூருடைய கோவே "

என்ற (44) பாடல் உரையில், ஏகாந்தம் - ஒருதலை. பரிமேலழகர் உரையின் வாய்மையை உணரமாட்டாமல் பொருத்தம் இன்றி எழுதியதோருரையைப் பொருளாகக்கொண்டு செல்வம் என்று உரைப்பது பொருந்தாது. இறைவனை இயம்புவார்க்கு ஏகாந்தம் இன்றி அநேகாந்தம் ஒவ்வாது " என்றெழுதியிருத்தல் அறிவிற்கோர் புதுமை.

(2) கம்பராமாயணத்தில் ஓர் பாடலுக்கமைந்த நேரிய பொருளைத் திருவையாற்றுப் பதிகத்துள் ஓர் பாடல் உரையில் (894) விளக்கியுள்ளார் நம் உரையாசிரியர்.

"போலம்புண்டரீகப் புதுமலர் போல்வன்" என்ற தொடரில் புதுமலர் - நாண்மலர் என்று பொருளெழுதியபின் உரையாசியர் இதற்கு ஓர் ஒப்புமைப் பகுதியாகக் கம்பன் பாடலைக் காட்டுகிருர். எப்படி ?

" இராமன் திருமுகச் செவ்விநோக்கில் ஒப்பதே முன்பு பின்பு, அவ்வாசகம் உணரக்கேட்ட அப்பொழுது, அலர்ந்த செந் தாமரையினை வென்றது " - இங்கு முன்பும் பின்பும் தாமரையை ஒப்பது ; வாசகம் கேட்ட அப் பொழுது மாத்திரம் அம்மலரை வென்றது இராமன் திருமுகம் என்ற வாய்மையை உணர்க. முன்பு, பின்பு. அப்பொழுது என்ற முககாலத்தையும், சித்தி ரத்தின் அலர்ந்த செந்தாமரை ஒத்திருக்கும் முகம் அதனை

வென்ற பொழுதைக் கூறும் அரியதோரிடத்தையும் உணராத பிறர் 'கேட்ட அப்பொழுது' என்றது 'அப்பொழுது அலர்ந்த செந்தாமரை' என்றனர்.

முன்பு திருக்குறளில் ஓர் சொல்லாட்சியைச் சமயம் வந்த போது நன்கு விளக்கிய நம் உரையாசிரியர், இவ்விடத்துக் கம்பநாடன் கருத்தோன்றினை விளக்கியுரைத்தமை போற்றத் தக்கது.

(3) இவ்வாறே பெரிய புராணத் திருவிருத்தம் ஒன்றின் உண்மைப் பொருளையும் விளக்குகின்ற பொறுப்பு நம் உரையாசிரியர்க்கு வந்துவிடுகிறது. மரபு காக்கவேண்டுமென்ற மனப்பாங்கின் உரத்தால் இவ்வாறு இடம் கண்ட விடத் தெல்லாம் இனிது விளக்கிச் செல்லல் இவர்தம் மியல்பு.

"சொற்றுணை வேதியன் சோதிவானவன்
பொற்றுணைத் திருந்தடிபொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சிவாயவே" (104)

என்ற பாடல் உரையில் இந்த இயல்பு மிளிர்கின்றது. கடலிற் பாய்ச்சிய மெய்மை

"கல்லினோடெனைப் பூட்டி அமண்கையர்
ஒல்லைநீர்புக நூக்க என் வாக்கினால்
நெல்லுநீள்வயல் நீலக்குடி யரன்
நல்லநாமம் நவிற்றிஉய்ந்தேன் நன்றே"

என்றுள்ள வாய்மையாதல் உணர்க இருவினையாகிய பாசத்தால் மூன்று மலமாகிய கல்லோடு கட்டியிருத்தலின் மாறி மாறி வருகின்ற பிறவிப் பெருங்கடலில் வீழ்கின்ற அறிவிலுயிர்களும் பேரின்பக் கரையேறிட அருளும் அத்தகைய போாற்றல் உடைய திருவைந்தெழுத்து, உணர்வுருவான நாவுக்கரசரை மிகச் சிறிய இவ் வுவர்க்கடலில் ஒரு கல்லின்மேல் ஏந்திக் கரையேற்றிடலை உரைத்தல் வேண்டுமோ? (பெரியபுராணம் - 1394) ஒருகல் முக்கல் என்னும் நயம் அறியாமல், 'இருவினைப்பாசமும்' எனப் பிரித்துப் பொருந்தா உரை யெழுதியிருத்தல் சேக்கிழார் திருவுள்ளத்துக்கு ஏலாது"

என்றஉரைப்பகுதி இதனை உள்ளடக்கி நிற்றல்காண்க. யாண்டும் ஓர் பெரியபுராணப் பாடலில்கூடச் சம்பிரதாயத்துக்கு மாறான பொருள் எழுதுதல் கூடாது என்பது இவ்வுரையாசிரியர் கொள்கை.

'சம்பிரதாய தீபம்' என்ற நூலையே தமிழகத்துக்கு வழங்கிய தருமையாதீனத்தே வாழும் புலவராகிய இவர் சம்பிர தாயங்களைக் காக்கக் கண்ணுங் கருத்துமா யிருத்தல் வியப் பில்லையல்லவா ?

இலக்கணச் சூத்திரங்களை இவ்வுரையாசிரியர் விளக்கிச் செல்லும் இடங்கள் பலப்பல. சித்தாந்த சாத்திரக் கருத்துக் களைத் தம் உரை முழுதும் விரவி மணக்க எழுதியுள்ளார். சமய இலக்கணமும் மொழி இலக்கணமும் இவ்வுரையாசிரியர் எல்லை தேர்ந்தவர் என்பதனை இவ்விடங்களில் அறிகின்றோம். இன்னின்ன இடங்களில்தான் சித்தாந்த சாத்திரக் கருத்துக்கள் சிறந்துள்ளன இவர் தம் உரையில் என்று காட்டுதல் மிகை.

தொட்ட இடமெல்லாம் சாத்திர மணம் வீசுகிறது இத் திருமுறை உரையில். சாத்திரமும் தோத்திரமும் இணைப் புள்ளவையென்ற தத்துவத்துக்கு இலக்கியம் இத்திருமுறைக் குறிப்புரையே என்றும் கூறிவிடலாம்.

அண்ணமலைப் பல்கலைக் கழகத்தினர் வாயிலாகத் திருப்பனந்தாட் காசிமடம் வழங்கிவரும் சாத்திரப் பரிசாகிய ஆயிரம் வெண்பொற்காசுகளையும் பெற்றுச் சிறக்கும் பெருந் தகையாரன்றோ இப்புலவர் திலகர்! அதனுடன் 'மெய்கண்ட சாத்திரம்' முழுமையும் ஆராய்ந்து பல ஏட்டுச் சுவடிகளையும் ஒப்பு நோக்கி நிறுவி ஆதீனச் சார்பில் அதனை வெளியிடும் விழுப்பமும், 'தோத்திரங்களும் சாத்திரங்களும்' எழுதி அச்சிடும் அருமையும் வாய்ந்த நூலாசிரியராதலின் இவர் எழுதும் எழுத்துக்கள் ஒவ்வொன்றிலும் சாத்திரக் கருத்துக்கள் தாமாக வந்து பாய்கின்றன. ஒவ்வோரு கருத்தும் இனிமையும் அருமையும் வாய்க்க வந்து வந்து தோய்கின்றன. இஃது ஒரு தனியழகு.

திருநாவுக்கரசு சுவாமிகளின் அநுபவ இன்பம் தோய்ந்த இவ்வரிய திருமுறைக்கு இத்தகையரோர் முதுபெரும் புலவரே

இத்துணைத் தனியழகோடு உரையெழுதமுடியும் என்ற மெய்ம்மையைத் தமிழகம் இவ்வுரைநூலால் உணரலாகும். திருமுறைக்கு உரைகாண்டல் என்பதே தெளிவுள்ள சிந்தையாலேயே முடியும். அதிலும் அப்பர் சுவாமிகள் பாமொழியில் ஒவ்வோர் சொல்லும் ஆழமுடைய சொல். எழுத்தும் ஆழமிக்க எழுத்து. அசையும் தெய்வீகத்தன்மை சார்ந்த அசை. இவ்வுரைநூலை முற்றப் பயின்றவர்தாமே, இதனை உரையாசிரியர் எழுதுதற்கு எவ்வளவு பெருமுயற்சி எடுத்துக்கொண்டிருக்க வேண்டுமென்பது புலனாகும். பலப்பல பாடல்களுக்கு வினை முடிவு காண்டலே அருமை. பொருள் உணர்தல் அதனினும் அருமை. படிக்கும்போது தோன்றும் பொருள் எழுதும்போது நலமே வெளிவரல் அதனினும் அருமை. இந்த அருமையான சோதனையில் ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமான் திருவருளும், ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் திருவருளும், திருநாவுக்கரசு சுவாமிகளின் திருவடித்துணையும் கொண்டு வெற்றிபெற்றுள்ளார்; உரையாசிரியர் முதுபெரும்புலவர் திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்.

இத்திருமுறைப் பணியில் இவ்வுரையாசிரியர் தூங்காமற் சிந்தனையோடு கழித்த இரவுகள் பலப்பல.

சிந்தனை தோய்ந்த முகத்தோடு, எஞ்ஞான்றும் காட்சியளித்த பகல்களும் பலப்பல. அல்லும் பகலும் அப்பரடிகள் அருளமுதத்தில் தோய்ந்து, சொல்லுக்குச் சொல், தொடர்க்குத் தொடர், பாடலுக்குப் பாடல் ஆழ்ந்து ஆழ்ந்து கருத்து முத்துக்களை எடுத்தெடுத்து இனிய கோவையாக்கி இஞ்ஞான்று சொக்கலிங்கப் பெருமான் திருவடிகளில் அம் முத்துக் கோவையைச் சூட்டுமளவுக்கு இவ்வுரையாசிரியர் பெரும்பேறு பெற்றிருக்கின்றனர்.

இதற்கிடையில் ஆதீன உற்சவங்களிலும், சமயப் பிரசாரக் கூட்டங்களிலும் தாம் இந்நூலிற் கண்டுள்ள அரும் பொருள்களை வெளிப்படுத்தியுள்ளனர் இவ்வுரையாசிரியர். பலகாலும் இப் பேராசிரியர்பால் கேட்டறிந்த நாவரசர் பாவமுதக் கூட்டெல்லாம் இக்காலைத் திரண்டு ஓர் இனிய நூல் வடிவாதலைக் காணுந் தோறும் உலகத் தமிழர் அனைவர் உள்ளமும் விரியும்; அப்பர் அடிகள் திருவடிமலர்களில் குவியும் என்பதில் ஐயம் இல்லை.

நன்றி செலுத்த முற்படும் அன்பர் மனமெல்லாம், இத் திருக்கைவழக்கத்தை இயற்றியருளிய - நல்ல உரையாசிரியர் வாயிலாக நாட்டினுக்கு வழங்கியருளிய எங்கள் குருமுதல் வரும், தருமையாதீனத்து 25ஆவது அருளரசரும் ஆகிய சீலத்திரு சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளவர்கள் திருவடி மலர்களுக்கே நன்றி செலுத்துக. அவர்கள் ஆட்சி ஓங்குக! திருவருள் பணிகள் உலகெங்கும் தேங்குக! இனிவரும் திருமுறைப் பணிகளும் இவ்வண்ணமே இனிது நிறைவெய்துக! என்று தமிழர் நெஞ்சுகள் தமிழ்ச் சொக்கன் தண்ணருளை நோக்கித் துதி பாடுகின்றன. வாழிய வையகம்! வாழிய சைவத் திருமுறைகள்!

உ

குருபாதம்

திருநாவுக்கரசு நாயனார் அருளிய

முதல் (நாலாந்) திருமுறையின் குறிப்புரையுள் எடுத்துக்காட்டிய

# நூல்களின் பெயரும் பக்கமும்



முதல் ஏழு திருமுறையுள்ளும் எடுத்தாண்ட பகுதிகளைக் குறிக்கும் இடங்களில் 1, 2, 3 என்பனபோல எண்கள் குறிக்கப் பட்டிருக்கின்றன. அம் மூன்றெண்களுள், முறையே முதலாவது திருமுறையையும், இரண்டாவது திருப்பதிகத்தையும், மூன்ருவது திருப்பாடலையும் குறிப்பன ஆகும். சுந்தரமூர்த்திசுவாமிகள் திருப்பாட்டிலிருந்தும் இந் நாலாந் திருமுறையிலிருந்தும் எடுத்துக் காட்டியவற்றைத் தொடரெண்ணும் குறிக்கும்.

---

உ

குருபாதம்

# அட்டவணை

## தலமும் பதிகமும் வரலாறும்

| தொட எண் | தலமும் பதிகத் தொடக்கமும் | பதிக எண் | பதிகப் பக்கம் | வரலாற்று எண் |
|---|---|---|---|---|
| 1 | திருவண்ணாமலை | | | |
| | ஓதிமாமலர் | 63 | 427 | |
| 2 | திருவதிகைவீரட்டம் | | | 1 |
| | 1 கூற்றாயின | 1 | 3 | |
| | 2 சுண்ணவெண் | 2 | 21 | |
| | 3 முளைக்கதிர் | 10 | 94 | |
| | 4 இரும்புகோப்பளித்த | 24 | 201 | |
| | 5 வெண்ணிலா | 25 | 206 | |
| | 6 நம்பனே | 26 | 212 | |
| | 7 மடக்கினார் | 27 | 221 | |
| | 8 முன்பெலா | 28 | 227 | |
| | 9 மாசிலொள்வாள் | 104 | 730 | |
| 3 | திருவவளிவணல்லூர் | | | |
| | தோற்றினான் | 59 | 402 | |
| 4 | திருவாப்பாடி | | | 2 |
| | கடலகமேழினோடும் | 48 | 338 | |
| 5 | திருவாரூர் | | | |
| | 1 பாடிளம் | 4 | 36 | |
| | 2 மெய்யெலாம் | 5 | 43 | |
| | 3 சூலப்படை | 19 | 166 | |
| | 4 காண்டலே | 20 | 175 | |
| | 5 முத்துவிதானம் | 21 | 184 | |
| | 6 படுகுழி | 52 | 358 | |
| | 7 குழல்வலங்கொண்ட | 53 | 364 | |
| | 8 குலம்பலம் | 101 | 703 | |
| | 9 வேம்பினைப் | 102 | 713 | |

| தொடர் எண் | தலமும் பதிகத் தொடக்கமும் | பதிக எண் | பதிகப் பக்கம் | வரலாற்று எண் |
|---|---|---|---|---|
| 15 | திருக்கச்சியேகம்பம் | | | |
| | 1 கரவாடும் | 7 | 60 | |
| | 2 நம்பனை | 44 | 319 | |
| | 3 ஓதுவித்தாய் | 99 | 687 | |
| 16 | திருக்கச்சிமேற்றளி | | | 4 |
| | மறையது | 43 | 313 | |
| 17 | திருக்கடவூர்வீரட்டம் | | | |
| | 1 பொள்ளத்த | 31 | 243 | |
| | 2 மருட்டுயர் | 107 | 743 | |
| 18 | திருக்கண்டியூர்வீரட்டம் | | | |
| | வானவர் | 93 | 645 | |
| 19 | திருக்கயிலாயம் | | | |
| | கனகமா | 47 | 334 | |
| 20 | திருக்கழிப்பாலை | | | |
| | 1 வனபவள | 6 | 52 | |
| | 2 நங்கையை | 30 | 237 | |
| | 3 நெய்தற்குருகு | 106 | 740 | |
| 21 | திருக்கழுமலம் (சீகாழி) | | | |
| | 1 பார்கொண்டு | 82 | 566 | |
| | 2 படையார் | 83 | 574 | |
| 22 | திருக்குறுக்கைவீரட்டம் | | | 5 |
| | 1 ஆதியிற்பிரமனுர் | 49 | 344 | |
| | 2 நெடியமால் | 50 | 351 | |
| 23 | திருக்கோணமலைச்சரம் | | | 6 |
| | வரைகிலேன் | 67 | 455 | |
| 24 | திருக்கோடிகா | | | |
| | நெற்றிமேற்கண் | 51 | 353 | |

| தொடர் எண் | தலமும் பதிகத் தொடக்கமும் | பதிக எண் | பதிகப் பக்கம் | உரை வேற்று எண் |
|---|---|---|---|---|
| 36 | திருநாகேச்சுரம் | | | |
| | கச்சைசேர் | 66 | 449 | |
| 37 | திருநாகைக்காரோணம் | | | |
| | 1 மனைவிதாய் | 71 | 478 | |
| | 2 வடிவுடைமலை | 103 | 722 | |
| 38 | திருநெய்த்தானம் | | | |
| | 1 காலனைவீழச் | 37 | 279 | |
| | 2 பாரிடஞ்சாடிய | 89 | 610 | |
| 39 | திருப்பயற்றூர் | | | |
| | உரித்திட்டார் | 32 | 250 | 8 |
| 40 | திருப்பருப்பதம் | | | |
| | கன்றினூர் | 58 | 397 | |
| 41 | திருப்பழனம் | | | |
| | 1 சொன்மாலை | 12 | 109 | |
| | 2 ஆடினாரொருவர் | 36 | 274 | |
| | 3 மேவித்து | 87 | 597 | |
| 42 | திருப்பாதிரிப்புலியூர் | | | |
| | ஈன்றாளுமாய் | 94 | 653 | |
| 43 | திருப்புகலூர் | | | |
| | 1 செய்யர்வெண் | 16 | 144 | |
| | 2 பகைத்திட்டார் | 54 | 372 | |
| | 3 தன்னைச் | 105 | 736 | |
| 44 | திருப்பூந்துருத்தி | | | |
| | மாலினைமால் | 88 | 604 | 9 |
| 45 | திருப்பெருவேளூர் | | | |
| | மறையணிநா | 60 | 407 | |

| தொட ரெண் | தலமும் பதிகத் தொடக்கமும் | பதிக எண் | பதிகப் பக்கம் | வரலாற்று எண் |
|---|---|---|---|---|
| 46 | திருமறைக்காடு | | | |
| | 1 இந்திரனோடு | 33 | 256 | |
| | 2 தேரையுமேல் | 34 | 262 | |
| 47 | திருமாற்பேறு | | | |
| | மாணிக்குயிர் | 108 | 75 | |
| 48 | திருவலம்புரம் | | | |
| | தெண்டிரை | 55 | 378 | |
| 49 | திருவீழிமிழலை | | | |
| | 1 பூதத்தின் | 64 | 434 | |
| | 2 வான்சொட்டச்சொட்ட | 95 | 663 | |
| 50 | திருவேதிகுடி | | | |
| | கையதுகாலெரி | 90 | 616 | |
| | பொதுப்பதிகங்கள் | | | |
| | 1 சிவனெனும் | 8 | 67 | |
| | 2 தலையேநீ | 9 | 77 | |
| | 3 சொற்றுணை (நமச்சிவாயத் திருப்பதிகம்) | 11 | 99 | |
| | 4 பருவரை | 14 | 125 | |
| | 5 பற்றற்றார் | 15 | 136 | |
| | 6 ஒன்றுகொலாம் (விடந்தீர்த்தது) | 18 | 156 | |
| | 7 முத்தினை | 74 | 493 | |
| | 8 தொண்டனேன் | 75 | 500 | |
| | 9 மருளவாம் | 76 | 511 | |
| | 10 கடும்பகல் | 77 | 521 | |
| | 11 வென்றிலேன் | 78 | 530 | |
| | 12 தம்மானம் | 79 | 541 | |
| | 13 எட்டாந்திசைக்கும் | 84 | 575 | |
| | 14 சாம்பலைப்பூசி | 110 | 756 | |
| | 15 விடையும் | 111 | 762 | |
| | 16 வெள்ளிக்குழை | 112 | 770 | |
| | 17 பவளத்தடவரை | 113 | 778 | |

பிற தல வரலாற்றுக் குறிப்புக்களை முதல் மூன்று திருமுறைகளில் **காண்க.**

நான்காவது திருமுறையில் உள்ள

# தலங்களின் வரலாற்றுக் குறிப்பு

எழுதியவர்கள் :

1. வித்துவான், திரு. வை. சுந்தரேச வாண்டையார்
அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ் ஆராய்ச்சிப்புலவர்.
அண்ணாமலைநகர்.

2. வித்துவான், திரு. வி. சா. குருசாமி தேசிகர்
ஆதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர். தருமபுரம்

## 1. திரு அதிகைவீரட்டம்

இருப்பிடம் :- தென்னார்க்காடு மாவட்டம் கடலூர் தாலூகாவில் பண்ணுருட்டி புகைவண்டி நிலயத்திலிருந்து தென்மேற்கே ஒரு மைலில் உள்ளது.

தலச் சிறப்பு :- அப்பர் சுவாமிகளுக்குச் சூலைநோய் தீர்த்து அருள் புரிந்த திருத்தலம். அட்டவீரட்டங்களுள் இது முப்புரமெரித்த சங்கார மூர்த்தியை உடையது. இத்தலத்தில் கருடன், பிரமன். திருமால், பஞ்சபாண்டவர் வழிபட்டுப் பேறு பெற்றுள்ளனர். திருஞானசம்பந்தருக்குத் திருநடனங் காட்டிய திருத் தலம். இறைவன் சுந்தரருக்குச் சித்தவட மடத்தில் திருவடி தீட்சை செய்தருளிய சிறப்புடையது.

இறைவன் :- திருவதிகை வீரட்டானேசுவரர்.

இறைவி :- திரிபுரசுந்தரி.

தீர்த்தம் :- கெடிலம், ஆலகங்கை, சக்கரதீர்த்தம்.

தல விருட்சம் :- சரக்கொன்றை.

* கல்வெட்டு :- இவ்வூர் வீரட்டானமுடையார் கோயிலில் கங்கபல்லவருள் நிருபதுங்கவர்மர், பல்லவர்களில் பரமேசுவரப்போத்தரையர், தெள்ளாறெறிந்த நந்திவர்மர், பிற்காலப் பல்லவர்களில் கோப்பெருஞ்சிங்கதேவர், என்பவர்கள் காலங்களிலும் ; பிற்காலச் சோழமன்னர்களுள், இராசகேசரிவர்மன், மதுரைகொண்ட கோப்பரகேசரிவர்மன், உத்தமசோழன், முதலாம் இராசராசசோழன், முதலாம் இராசேந்திரசோழன், முதற் குலோத்துங்கசோழன், இரண்டாம் குலோத்துங்கசோழன், இரண்டாம் இராசாதிராசன் என்பவர்கள் காலங்களிலும், பாண்டிய மன்னர்களுள் மாறபன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் விக்கிரமபாண்டியதேவர், ஜடாவர்மன் சுந்தரபாண்டியதேவர், திரிபுவன சக்கரவர்த்தி வல்லபதேவர் என்பவர்கள் காலங்களிலும், கேரளவம்சத்தில் இரவிவர்ம மகாராசராகிய குலசேகரதேவர் காலத்திலும், சாளுவவம்சத்தில் மகா மண்டலேசுவரரான நரசிங்கதேவ மகாராயர் காலத்திலும், விசய நகர மன்னர்களுள் (போக்கண்ண உடையார் மகன்) கம்பண்ண உடையார், அச்சுததேவ மகாராயர், ஸ்ரீரங்கதேவ மகாராயர், சதாசிவதேவ மகாராயர் என்பவர்கள் காலங்களிலும், தஞ்சை நாயக்க மன்னருள் சின்னப்ப நாயக்கர் காலத்திலும் செதுக்கப் பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

ஊரின் பெயர் :- நிருபதுங்கப்பல்லவர் காலத்தில் இவ்வூர் அதியரையமங்கலம் என்றும், முதலாம் இராசேந்திரசோழன் காலத்தில் அதிராஜமங்கலம் என்றும், முதற் குலோத்துங்க சோழன் காலத்தில் அதிராசமங்கலியபுரம் என்றும், மணவிற் கூத்தனுன காலிங்கராயனின் திருப்பணிகளைப்பற்றிக் கூறும் பாடல்களில் அதிகை என்றும் குறிக்கப்பெற்றுள்ளது.

---

* See the Annual reports on South Indian Epigraphy for the years 1903. Numbers 28—60.
1921. Numbers 358—419.

South Indian Inscription Vol. VIII Numbers 301—306.
,, ,, Numbers 308—335.

Epigraphia Indica Vol. VIII page 8.

இறைவர் திருப்பெயர் :- இக் கல்வெட்டுக்களில் இறைவர் திருவீரட்டானமகாதேவர், திருவீரட்டானமுடையார், திருவீரட்டானமுடையநாயனர், அதிகைநாயகர் என்னும் திருப்பெயர்களால் வழங்கப்பெற்றுள்ளனர்.

இறைவியார் பாராட்டப்பெறும் விதம் :- இக் கோயில் கல்வெட்டுப் பாடலில் இறைவியார் " அதிகை வீரட்டத்து ஈசன் இடமருங்கில் ஏந்திழை ", " அண்ணல் அதிகையான் ஆகம் பிரியாத பெண்ணின் நல்லாள் " என்னும் தொடர்களால் பாராட்டப்பெற்றுள்ளனர்.

திருக்கோயிலைப் புதுக்கியவர் :- திருவீரட்டானமுடையார் கோயிலை நிருபதுங்கதேவரின் பதின்மூன்ருமாண்டில் புதுப்பித்தவர் முனைப்பாடி ஆமூர்ப்பெருங்குளத்தில் வாழ்ந்துவந்த முனைப்பேரரையர் மகன் முனையகோன் இளவரையர் ஆவர். (S. I. I. Volume VIII Ins. No. 308). இக் கோயிலின் வான்கயிலாயத் திருமாளிகையை ஸ்தூபிபரியந்தம் திருமஞ்சனம் பண்ணிப் புறச் சாருணைத் திருக்கல்லும் சாத்தியருளியவர் கேரள வம்சத்து இரவிவர்ம மகாராஜரான பெருமாள் குலசேகர தேவராவர். இது நிகழ்ந்த காலம் கலியுகம் **4414.** சகம் **1235.** அதாவது கி. பி. **1313** ஆகும். (Epigraphia Indica Volume VIII).

**திருக்காமக்கோட்டத்தைக் கட்டியவர் :- திருக்காமக்கோட்டமென்பது இறைவியார் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலாகும். இக்கோயிலைக் கட்டியவர் முதற் குலோத்துங்கசோழன் விக்கிரமசோழன் இவர்களின் படைத் தலைவராய் இருந்த தொண்டைமண்டலத்து மணவிற்கோட்டத்து மணவில் என்ற ஊரின் தலைவரான கூத்தர் காலிங்கராயர் ஆவர். இவர் இக் கோயிலைக் கட்டிய செய்தி இக் கோயிலில் பொறிக்கப்பெற்றுள்ள**

அருமறைமா தாவி னறக்காமக் கோட்டந்
திருவதிகைக் கேயமையச் செய்து—பெருவிபவங்
கண்டா னெதிர்ந்தா ரவியத்தன் கைவேலைக்
கொண்டானந் தொண்டையர் கோ.

என்னும் வெண்பாவால் விளங்கும்.

திருவதிகை வீரட்டானமுடையார் கோயிலைப் பொன் வேய்ந்தவர் :- இக் கோயிலைப் பொன் வேய்ந்தவர் மேற்குறித்த கூத்தர் காலிங்கராயர் ஆவர். இச் செய்தியை,

தென்னதிகை வீரட்டஞ் செம்பொனல் வேய்ந்திமையோர்
பொன்னுலகை மீளப் புதுக்கிருன்—மன்னுணங்கு
முற்றத்தான் முற்றுநீர் வையம் பொதுக்கடிந்த
கொற்றத்தான் தொண்டையர் கோ.

என்னும் வெண்பா உணர்த்தும்.

மணவில் கூத்தர் வீரட்டானமுடையார்க்குச் செய்த வேறு திருப்பணிகள் :- அதிகை நாயகர்க்கு நூற்றுக்கால் மண்டபத்தை அமைத்தார். மடைப்பள்ளியைச் சிலேயால் சமைத்தார். மண்டபம் மாளிகை, பெரிய திருச்சுற்று இவைகளைக் கட்டினர். யாக மண்டபத்தைச் செய்தார். ஆடல் அமர்ந்தபிரானுக்குக் கோயிலும் அரங்கும் அமைத்தார்.

பிள்ளையார்கோயில் :- வீரட்டானமுடையார் கோயிலில் எழுந்தருளியிருக்கும் பிள்ளையாரின் திருப்பெயர் முத்தநயினர் என்பதாகும். இவரது கோயிலைச் சகம் 1399இல் வெண்ணேய்ப் பெருமாள் என்பவர் பழுதுபார்த்துள்ளனர்.

திருவிழாக்கள் :- இக் கோயிலில் தை மாதத்திலும், வைகாசி மாதத்திலும் விழாக்கள் நடைபெற்று வந்தன. தை மாத விழாவில் தேர் இழுக்கப்படுவது உண்டு. நாற்பது ஆண்டுகள் இக்கோயிலில் தேர் இழுக்கப்படாமல் இருந்தது. அதன் பொருட்டுச் சாளுவ பரம்பரையைச்சேர்ந்த நரசிங்கதேவ மகாராயரது தளவாய் அறம்வளர்த்த நாயனர் சகம் 1400இல் அதாவது கி. பி. 1478இல் திருத்தேர் ஒன்றைச் செய்து வைத்துள்ளனர்.

வைகாசி மாதம் நடைபெறும் விழா வசந்த விழாவாகும். அதன்பொருட்டு, சாளுவப் பரம்பரையைச் சேர்ந்த நரசிங்கதேவ மகாராசர் காலத்தில் திம்மி நாயக்கர் என்பவர் திரிபுவன மாதேவிப் பட்டணத்தைச் சேர்ந்த முதுகுளத்தூரில் வசூலிக்கப் படும் வரிப்பணத்தைக் கொடுத்துள்ளார்.

## திருநாவுக்கரசரைப்பற்றிய செய்திகள்

வாகீசர் திருக்கோயில் :- வாகீசர் என்பது சைவ சமய குரவர் திருநாவுக்கரசராகிய பெருந்தகையார்க்குள்ள வேறு திருப் பெயராகும். இவர்க்கு, இத் திருவதிகை வீரட்டானக் கோயிலில் ஒரு தனிக்கோயில் உண்டு. இக்கோயிலைக் கட்டியவர், மேலே குறிப்பிடப்பட்ட மணவில்கூத்தருன காலிங்கராயரே ஆவார். இச் செய்தி

ஈச னதிகையில்வா கீச னெழுந்தருள
மாசில் பெருங்கோயில் வந்தமைத்தான்—பூசல்
விளைவித்த வேணுடும் வெற்பணைத்துஞ் செந்தீ
வளைவித்தான் தொண்டையார் மன்.

என்னும் வீரட்டானக்கோயில் கல்வெட்டுப் பாடலால் விளங்கும்.

வாகீசர் திருமடம் :- இவ்வூரில் வாகீசர் திருப்பெயரால் மடம் ஒன்றிருந்தது. இதற்குத் திருமுனைப்பாடிக் கீழாமூர் நாட்டுக் கணிச்சப்பாக்கத்து ஊரார், தங்கள் ஊர்த் தலைப்பாடகத் தில் இராசேந்திரப்பேரேரி கீழ்கரைக்குக் கிழக்கும், வடக்கெல்லை இந்நாட்டுப் பணைப்பாக்கத்து எல்லைக்குத் தெற்கும், கிழக்கெல்லை மதனிபாக்கத்தெல்லைக்கு மேற்கும், தெற்கெல்லை உற்றடத்து உறவும் ஆக இந் நான்கு எல்லைக்கு நடுவுட்பட்ட நிலம் குழி இரண்டாயிரத்தைத் திருவீரட்டானமுடையார் வாகீசர் மடத்துக்கு மடப்புறமாக எட்டுக் காசுக்கு விற்றுக் கொடுத்திருந்தனர். இம் மடத்திற்கு மடப்புறமாகப் பணைப்பாக்கத்து ஊராரும் அரைவேலி நிலம் விட்டிருந்தனர். இது நிகழ்ந்தது முதலாம் குலோத்துங்க சோழதேவரின் 44 ஆம் ஆண்டாகும்.

திருநாவுக்கரையதேவர் திருமடம் :- இவ்வூரில் இப்பெய ருள்ள திருமடம் ஒன்றிருந்தது. இதில் உணவு அளித்தற் பொருட்டு அரும்பாக்கம் என்னும் ஊரின் தலைவனுகிய மதுராந் தகதேவன் பொன்னம்பலக்கூத்தன் திருவதிகையில் தனக்குச் சொந்தமாயிருந்த 4800 குழி புன்செய் நிலத்தை முதற் குலோத் துங்கனின் 48 ஆம் ஆண்டில் அளித்துள்ளனா.

திருநாவுக்கரசரது திருப்பெயரைத் தெருவிற்கு இட்டு வழங் கியமை :- இவ்வூரிலுள்ள பிடாரி கோயிலின் வடபால் ஒரு காடு இருந்தது. அதை வெட்டி ஒரு புதிய தெருவை உண்டாக்கி அதற்குத் திருநாவுக்கரசர் திருவீதி என்று பெயர்வைத்துள்ளனர்.

திருவெண்ணெய்நல்லூர் அகோராஷ்டிர நயினர் திருமடம் :- இவ்வூரில இப்பெயருள்ள மடம் ஒன்றும் இருந்தது. இதற்கு மடப்புறமாக அதியமங்கலத்திலிருந்து வேறு பிரிக்கப்பட்ட தென்னம்பட்டில் நிலத்தை வாங்கி அளித்தவர் ஈசுவரநாயக்க ருடைய பிரதிநிதியாகிய காமக்கோக்கிழாரான அறம்வளர்த்த நாயனர் ஆவர். இது நிகழ்ந்தகாலம் சகம் 1400. அதாவது கி. பி. 1478 ஆகும்.

இவ்வூரைத் தன்னகத்துக் கொண்டுள்ள நாடு :- இவ்வூர், முதலாம் இராசேந்திரசோழன் கல்வெட்டில் சயங்கொண்ட சோழமண்டலத்து, திருமுனைப்பாடிநாட்டு அதிராசமங்கல்யபுரம் என்றும்; முதற் குலோத்துங்கசோழன் கல்வெட்டில் கங்கை கொண்ட வளநாட்டுத் திருமுனைப்பாடி ஆமூர்நாட்டு அதிராச மங்கல்யபுரம் என்றும்; இம் மன்னனுடைய 46ஆம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டில், கங்கைகொண்ட சோழவளநாட்டுத் திருமுனைப்பாடிக்கீழாமூர் நாட்டு அதிராசமங்கல்யபுரம் என்றும்; "பூமேவி வளர்பொன் மாது புணர" எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய இரண்டாங் குலோத்துங்க சோழ தேவரின் 13-வது ஆண்டுக் கல்வெட்டில், இராசராச வள நாட்டுத் திருமுனைப்பாடிக்கீழாமூர் நாட்டு அதிராசமங்கல்யபுரம் என்றும்; சகல புவனச் சக்கரவர்த்தி கோப்பெருஞ்சிங்க தேவரின் மூன்றுமாண்டுக் கல்வெட்டில், இராசாதிராச வள நாட்டுத் திருமுனைப்பாடிக்கீழாமூர் நாட்டு அதிராசமங்கல்யபுரம் என்றும் குறிக்கப்பெற்றுள்ளது.

இங்குக் குறித்த திருமுனைப்பாடி நாடுதான், அறந்தரு நாவுக்கரசரையும் ஆலாலசுந்தரரையும் தோற்றுவித்த நாடாகும். இங்குக் குறித்த திருவாமூரே,

"சைவநெறி தலமேழும் பாலிக்குந் தன்மையினுல்
தெய்வநெறிச் சிவம்பெருக்கும் திருவாமூர் திருவாமூர்"

எனச் சேக்கிழார் பெருமானுல் பாராட்டப்பெற்ற, அப்பர் பெருமான் பிறந்த பதியாகும்.

இந்த ஆமூர், மேல்ஆமூர், கீழ்ஆமூர் என்னும் இரண்டு பகுதியினை உடையதாய் இருந்தது. இவற்றுள் கீழாமூரைப் பற்றி இவ்வூர்க் கல்வெட்டுக்கள் "திருமுனைப்பாடிக்கீழாமூர்

நாட்டு" எனக் குறிக்கின்றன. எனவே கீழாமூர் ஒரு நாடாகவும் விளங்கியிருந்தது. கண்ணமங்கலம், மாணிநல்லூர், கோட்டிளம்பாக்கம், தோறுப்பாடி முதலானவை, இக்கீழாமூர் நாட்டில் அடங்கியுள்ள சில ஊர்கள் என இக்கோயில் கல்வெட்டு அறிவிக்கின்றது.

அளிக்கப்பெற்ற நிவந்தங்களில் சில : திருவீரட்டானமுடைய மகாதேவர்க்கு, உச்சியம்போது சந்தியில், சாத்தியருள நாள் ஒன்றிற்குத் திருப்பள்ளித்தாமம் பருக்காகச் சந்திராதித்த வல் செலுத்தும்பொருட்டு, சோழமண்டலத்து, அருமொழித் தேவ வளநாட்டு வாஞ்சியூர் வாஞ்சியூர்க் கிழவன் நாராயணன் ராஜராஜன், பனையூர்நாட்டு, ஆரங்கூர்நாட்டு, காட்டுப் பாக்கத்தில் பதினாறுசாண் கோலால் நூறுகுழி கொண்டது ஒரு மாவாக நிலம் அரையே நான்மாவரை அரைக்காணிக் கீழ்க்கால் நிலத்தை முதலாம் இராசேந்திரசோழ தேவரின் 23-ஆம் ஆட்சி ஆண்டில் வாங்கி அளித்திருந்தான்.

திருவீரட்டானமுடையார், திருச்சிற்றம்பலமுடையார் திருவெழுச்சிக்குப் பெருந்திருவமுதுக்குச் செந்நெலரிசி பதின் கலத்துக்கு நெல் இருபத்தைங்கலமும், பலவர்க்கத்துக் கறியமுது முவாயிரப் பலத்துக்கு நெல் முக்கலமும், மிளகுமுது நாழுழிக்கு நெல் நாற்கலமும், தயிரமுது கலத்துக்கு நெல் கலமும், சர்க்கரையமுது நிறை நாலுக்கு நெல் நாற்கலமும், உப்பமுது தூணிக்கு நெல் கலமும், புளியமுது நிறை ஒன்றுக்கு நெல் கலமும், அடைக்காயமுதுக்குப் பாக்கு ஆயிரத்துக்கும் வெற்றிலைப்பற்று ஐம்பதுக்கும் திரமம் இரண்டுக்கும், நெல் ஆறு கலமும், சாத்தி அருளச் சாந்துக்கும் கற்பூரத்திற்கும் காசு ஒன்றுக்கு நெல் இருபது கலமும், செங்கழுநீர்த் திருப்பள்ளித்தாமம் இரண்டாயிரம் கொள்ளக்காசு அரைக்கு நெல் பதின்கலமும், சீதாரிக்கு நெல் இருகலமும், வழக்கத்துக்குப் பலவர்க்கத்துப் பரிசட்ட உரு எண்பதுக்கு, காசு ஐந்துக்கு நெல் நூற்றுக்கலமும், தானம் பண்ணியருளப் பொன் அரைக் கழஞ்சுக்கு நெல் இருபதின் கலமும், திருக்காப்பு நாலுக்குப் பொன் அரைக்காலுக்கு நெல் இருகலனே தூணிப்பதக்கும் அடிக்கீழிட அரிசி பதக்குக்கு நெல் ஐங்குறுணியும் ஆக இந் நெல் இருநூற்றுக்கலனே இருதூணிக்கும், திருவீரட்டானமுடையார் தேவதானமான கொழுந்தாழ்வார் ஏரிகரைக்குக் கிழக்கும், திருவீரட்டானமுடையான் வாய்க்காலுக்கு வடக்கும்,

குப்பை என்று பேர் கூவப்பட்ட நிலத்துக்கு மேற்கும், சத்திய பாவை என்று பேர் கூவப்பட்ட நிலத்துக்குத் தெற்கும் ஆக இந்நடுவுட்பட்ட ஒரு வேலி கோல்லை நிலத்தை, சோழ மண்டலத்து இராச நாராயண வளநாட்டு விளைநாட்டு அரசூர் சிவப்பிராமணன் பாலாசிரியனை கோழம்ப நாயகன் திருத்திக் கொடுத்துள்ளான்.

திருவீரட்டானமுடையார் திரு அர்த்தசாமத்துத் திருப் பள்ளிக் கட்டில் ஏறி அருளினல் அமுது செய்தருள அமுதுபடி, வெஞ்சனத்துக்குக் காலிங்கராயன் தன் பெயரால் கட்டின காலிங்கராயன் சந்திக்கு உத்திபற்றில் அதியனூர்பால் காரணை என்னும் நிலத்தைத் திரிபுவனச் சக்கரவர்த்தி ஸ்ரீ வல்லபதேவ பாண்டியரின் 33-ஆம் ஆண்டில் கொடுத்துள்ளான்.

இக் கல்வெட்டில் கண்ட தூய தமிழ்ச்சொல் :- இதன் பலிசையால் இரண்டு நந்தா விளக்குக்கு நாள்வாய் உரிநெய் அளந்து கொடுப்போமானோம் திருக்கோயிலுடையார் கையிலே நகரத்தோம். இவ்விளக்கு நந்தில் பன்மாகேஸ்வரர் கடை கூட்டப்பெற்றார் " என்னும் பல்லவ அரசனாகிய நிருபதுங்க வர்மன் காலத்துக் கல்வெட்டுப் பகுதியாலும்; " இதன் பலிசையால் யாண்டு பத்தாவது முதலாக நாள்வாய் நாழிநெய் அளந்துகொடுத்து இரண்டு நந்தாவிளக்கு எரிப்பேனானேன்"— என்னும் தெள்ளாறெறிந்த நந்திபோத்தரையர் காலத்துக் கல்வெட்டுப் பகுதியாலும் நாள்வாய் என்னும் தூய தமிழ்ச் சொல் கிடைத்துள்ளது. இச்சொல் இக்காலத்தில் வழக்கத்தில் அருகியுள்ளது. கல்வெட்டுக்களில் பெரும்பான்மையும் நிசதம் என்ற வடசொல்தான் காணப்படுகிறது. நிசதம் என்பதற்கு நாடோறும் என்பது பொருள். நிசதம் என்பதற்கு முற்காலப் பல்லவர் (The early Pallavas) காலங்களில் நாள்வாய் என்ற தமிழ்ச்சொல் இருந்தது கண்டு மகிழ்தற்கு உரியதாகும்.

முட்டில் (தடைப்படில்) என்ற பொருளில் நந்தில் என்ற சொல் வழங்கியிருப்பதும் நோக்கத்தகும். ( நந்தல் கேடுடனே ஆக்கம்' என்பது நிகண்டு).

" மானம் நந்தலனாகி மனுநெறி
போனதண் குடைவேந்தன் புகழென "

என்னும் கம்ப ராமாயண ஆற்றுப்படல அடிகளில் நந்தலனுகி = கெடாதவனுகி என்ற பொருளில் இருப்பதையும் காணலாம்.

பொதுச் செய்திகள் :- இத் திருவீரட்டானமுடையார் திருக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் சண்டேசுவரா கலியுகச் சண்டேசுவரதேவர் என்றும் திருப்பெயரால் குறிக்கப்பெற் றுள்ளார். இத் திருக்கோயிலில் நாடகசாலை மண்டபம் ஒன்று இருந்ததை வாகன மண்டபத் தூணிலுள்ள உத்தமசோழ தேவரின் பதினுன்காம் ஆண்டுக் கல்வெட்டு அறிவிக்கின்றது. அது பூங்குன்றம் அத்தமன் ஐயாறனுகிய கண்டதோள்கண்டப் பையனுல் கட்டப்பெற்றதாகும். இக்கோயிலுக்குப் பதியி லாரும் தேவரடியாரும் இருந்தனர். இக்கோயில் நூற்றுக்கால் மண்டபத்தில் முதலியார் * நாடற்கரிய கூத்தரும், நாயகரும் ஏறி அருளினுல், முற்பாடு திரை எடுத்தால் பதியிலார் ஆடவும், பிற்பாடு திரை எடுத்தால் தேவரடியார் ஆடவும் கடவதாக, கோமாறபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ விக்கிரம பாண்டியதேவர் திருவாய்மொழிந்தருளி யிருந்ததை அவருடைய ஆரும் ஆண்டுக் கல்வெட்டு உணர்த்துகின்றது.

இக்கோயிலில் நெய் அளக்கும் கருவிக்கு அதிகைநாயகன் நாழி என்றும், வாய்க்கால் ஒன்றுக்குத் திருவீரட்டானமுடையான் வாய்க்கால் என்றும் பெயர்கள் வைக்கப்பெற்றிருந்தன. இக் கோயிலில் முதலாம் இராசேந்திரசோழதேவன் காலத்தில், அரியலூரில் வசித்துவந்த சாதேவன் என்பான் கிரிப்பாடி நாடப்பரை எழுந்தருளுவித்திருந்தான். இக்கோயிலில், படி கொடுத்தருளீச்சுரமுடையாரை எழுந்தருளுவித்தவர், இராசாதி ராசவளநாட்டுத் தியாகவல்லி நல்லபெருமாள் தொண்டமானுர் மகனுர் மலையர்பெருமாள் தொண்டமானுரின் தமையனுர் ஆவர். இச்செய்தி திரிபுவனச் சக்கிரவர்த்தி ஸ்ரீ வல்லபதேவ பாண்டியரின் முப்பத்து மூன்றும் இராச்சிய ஆண்டில் குறிக்கப் பெற்றுள்ள கல்வெட்டால் புலப்படுகின்றது.

இத்திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சாமுண்டி நாச்சியார்க்குத் திருச்சாந்தின்பொருட்டு (Sandal-paste)

---

* 'நாடற்கரியதோர் கூத்தும் நன்குயர் வீரட்டம்' என்னும் திருப்பாடற் பகுதி (18) இத் திருமுறையிற் காண்க. —முத்து. சு.

சம்புவராயன் காலத்தில் மூவாயிரம்குழி நிலம் விடப்பட்டிருந்தது. நரச நாயக்கர் என்பவர் வெள்ளிக்கிழமைதோறும் இந் நாச்சியாரை வழிபடுதற்கு நிவந்தம் அளித்திருந்தார். இறைவர் திருமஞ்சனம் ஆடும் மண்டபத்திற்கு நேடிய நாயக்கன் ஸ்நபந மண்டபம் என்று பெயர் வைக்கப்பட்டிருந்தது. அதன் வாசலில் நாடோறும் ஐம்பது விளக்கு ஏற்றிவைப்பதற்கும் மகா மண்டபத்தில் நூறு விளக்கு ஏற்றிவைப்பதற்கும் நரச நாயக்கர் திருமூர்ப்பற்றிலுள்ள அளங்கல் பாக்கத்தைக் கொடுத்திருந்தார்.

வீரட்டானமுடைய தம்பிரானார்மீது, கலம்பகம் ஒன்றைத் தொண்டைமண்டலத்துக் காலியூர்க் கோட்டத்து உத்தரமேரு ராகிய இராசேந்திர சோழ சதுர்வேதி மங்கலத்து மகிபால குலகாலச்சேரியில் வசித்துவந்த கௌண்டின்னிய கோத்திரத்து உத்தண்ட வேலாயுத பாரதியேன்பார் பாடியிருந்தார். அதன் பொருட்டு அவர்க்கு இரண்டு மா நன்செய் நிலமும், ஒரு மா புன்செய் நிலமும் கொடுக்கப்பட்டிருந்தன. இது பாடிய காலம் சகம் 1458, அதாவது கி. பி. 1536 ஆகும்.

## இக்கோயில் கல்வெட்டுப் பாடல்கள்

பொன்மகர தோரணமும் பூணணியும் பட்டிகையுந்
தென்னதிகை நாயகர்க்குச் செய்தமைத்தான்—மன்னவர்கள்
தன்கடைவாய் நில்லாதார் தாள்வரைவாய் நின்றுணங்க
மின்கடைவேற் காலிங்கர் வேந்து. 1

மின்னிலங்கு பொற்சதுக்க மேகடம்ப மென்றிவற்றைத்
தென்னதிகை நாயகர்க்குச் சேர்த்திஞன்—தென்னவர்தந்
தோனேக்கும் வென்றி துரந்தே சுரநோக்க
வானேக்குங் காலிங்கர் மன். 2

---

1. பட்டிகை - ஓர் ஆபரணம். தாள்வரை - மலையடிவாரம்; பெரிய புராணம் திருமலை 8. கடைவேல் - கடைந்தெடுத்த வேல்.

2. மேகடம்பம் - விதானம் (அ) மேற்கட்டி.

வில்லில் வெயிலணைய வீரட்டர் தந்திருநாள்
நல்லநெயி னைஞ்ஞூற்று நாழியால் - வல்லி
யுடனுடக் கண்டான்றன் ெறன்னவர்க்குக் கண்க
ளிடனுடச் செல்கூத்த னீண்டு. 3

மண்டபமும் மாளிகையும் வாழதிகை வீரட்டர்க்
கெண்டிசையு மேத்த வெடுத்தமைத்தான் - விண்டவர்கள்
நாள்வாங்கச் சேயிழையார் நாணவாங்க நற்றடக்கை
வாள்வாங்குங் காலிங்கர் மன். 4

மன்ெறளிசேர் நூற்றுக்கால் மண்டபத்தை மால்வரையால்
மன்னதிகை நாயகர்க்கு வந்தமைத்தான் - மன்ன
ரிசைகோடா தோட விகல்கொண்டாங் கெட்டுத்
திசைகோடாக் கூத்தன் தெரிந்து. 5

மன்னுதிரு வீரட்டர் கோயில் மடைப்பள்ளி
தன்னைத் தடஞ்சிலையா லேசமைத்தான் — தென்னர்
குடமலைநா டேறிவந்து கொண்டவேற் கூத்தன்
கடமலைமால் யானையான் கண்டு. 6

அதிகை யரனுக் கருவரையாற் செய்தான்
மதுகை நெடுங்குடைக்கீழ் மன்னர் - பதிக
ளுரியதிருச் சுற்று முடன்கவர்ந்த கூத்தன்
பெரியதிருச் சுற்றைப் பெயர்த்து. 7

அருமறைமா தாவி னறக்காமக் கோட்டம்
திருவதிகைக் கேயமையச் செய்து—பெருவிபவங்
கண்டா னெதிர்ந்தா ரவியத்தன் கைவேலைக்
கொண்டானந் தொண்டையார் கோ. 8

---

6. தடஞ்சிலையால் - பெரிய கற்களால். கட மலை மால் யானையான் - மதம் சொரியும் மலைபோன்ற மால்கொண்ட யானைப் படையினன்,

7. மதுகை - வலிமை.

தென்னதிகை வீரட்டஞ் செம்பொருல் வேய்ந்திமையோர்
பொன்னுலகை மீளப் புதுக்கினுன்—மனனுணங்கு
முற்றத்தான் முற்றுநீர் வையம் பொதுக்கடிந்த
கொற்றத்தான் தொண்டையார் கோ. 9

வானத் தருவின் வளஞ்சிறந்த நந்தவனம்
ஞானத தொளியதிகை நாயகர்க்குத்—தானமைத்தான்
மாறுபடுத் தாருடலம் வன்பேய் பகிர்ந்துண்ண
கூறுபடுத் தானகலிங்கர் கோ. 10

எண்ணில் வயல்விளக்கும் பேரேரி யீண்டதிகை
யண்ணல் திருவிளங்க வாங்கமைந்தான்—மண்முழுதுந்
தன்கோன் குடைநிழறகீழ்த் தங்குவித்த வேற்கூத்தன்
எங்கோன் மணவிலா ரேறு. 11

ஐயொருப தாயிரமாம் பூகம் அதிகையிலே
மைவிரவு கண்டர்க்கு வந்தமைத்தான்—வெய்யகலி
போக்கினுன் மண்ணைப் பொதுநீக்கித் தங்கோனுக்
காக்கினுன் தொண்டையர்கோ னுங்கு. 12

அராப்புனையும் நம்மதிகை வீரட்டா னர்க்குக்
குராற்பசுவைஞ் ஞூறு கொடுத்தான்—பொராப்புறஞ்சாய்
கண்டருக்குத் தான்கொடுத்த காலிங்கன் காசினுக்குத்
தண்டருப்போல் நின்றளிப்பான் தான். 13

வாரி வளஞ்சுரக்க வானதிகை நாயகருக்
கேரியு மூரு மிசைந்தமைத்தான்—போரிற்
கொலைநாடு வெஞ்சினவேற் கூத்தன் குறுகார்
மலைநாடு கொண்டபிரான் வந்து. 14

அம்மான் அதிகையிலே யம்பொற் றடமிரண்டும்
செம்மா மலரிலகச் செய்தமைத்தான்—கைம்மாவி
னீட்டநின்ற வெமபரிமாக கண்டருளேன் நீண்டரசர்
காட்டநின்ற வேற்கூத்தன் கண்டு. 15

11. தங்கோன் குடைநிழற்கீழ்த் தங்குவித்த வேற்கூத்தன் - இதனுல் இவன் சேனைத்தலைவன் ஆதல் வேண்டும் ; கருணகரத் தொண்டைமானைப்போல்.

13. தண்டரு - தண்+தரு. கற்பகமரம்.

அருளா கரநல்லூ ராங்கமைந்த வேரி
இருளார் களத்ததிகை யீசன் — அருளாரச்
சென்றமைத்தான் தென்னாடன் சாவேற்றின் றிண்சேருக்கை
யன்றமைத்தான் தொண்டையார்கோ னாங்கு. 16

போதியி னீழற் புனிதற் கிறையிலிசெய்
தாதி யதிகையினொ யாங்கமைத்தான் — மாதர்முலை
நீடுழக்கா னைகதநு கோலனைத் தன்யானைக்
கோடுழக்கான் கூத்தன் குறித்து. 17

மாசயிலத் தம்மைக்கு வாழதிகை வீரட் டத்
தீசன் இடமருங்கில் எந்திழைக்கு — மாசில்
முடிமுதலா முற்றணிகள் சாத்தினான் வேளாண்
குடிமுதலான் தொண்டையர் கோன். 18

ஆற்றற் படைவேந்தர் ஆற்றா தழிந்திட்ட
மாற்றற்ற செம்பொன்னால் வாழதிகை — ஏற்றுக்
கொடியார்க்குக் கோலப் பரிகலமாச் செய்தான்
படியார்க்குஞ் சீர்க்கூத்தன பார்த்து. 19

அண்ணல் அதிகையாற் கையிரண்டு நல்விளக்கு
மண்ணின் வறுமைகெட வந்துதித்துக் — கண்ணகன்ற
ஞாலத் தறஞ்செய் நரலோக வீரன்பொற்
சீலத்தி னாலமைத்தான் சென்று. 20

நீடும் அதிகையோன் நித்தன் பெருங்கூத்தை
யாடும் அரங்கமைத்தான் அன்றினார் — நாடு
பரியெழுப்புந் தூளி பகல்மறைப்பச் சென்றாங்
கெரியெழுப்பும் தொண்டையா ரேறு. 21

16. சாவேறு - எதிரியைச் சாக அடிக்கும் ஏறுபோன்ற வீரன். இச்சொல் மலையாளத்தில் சாவூர் என வழங்குகிறது. (குடந்தைக் கல்லூரியில் 1931இல் Savoor என்பவர் தலைவராக இருந்தனர். ஆனால் இவர் கன்னட தேசத்தவர்.) "சாவேறெலாம் தனி விசும்பேற" என்பது முதற்குலோத்துங்கன் மெய்க்கீர்த்தியின் தொடர்.

21. எரியெழுப்பும் - கொளுத்தும். உழபுலவஞ்சி.

ஈசன் அதிகையில்வா கீச னெழுந்தருள
மாசில் பெருங்கோயில் வந்தமைத்தான்—பூசல்
விளைவித்த வேணுடும் வெற்பனைத்துஞ் சேந்தீ
வளைவித்தான் தொண்டையார் மன். 22

நல்யாக மண்டபத்தைச் செய்தான் நரபதியார்
பல்யானை யோடுணங்கப் பாவலர்க—ளெல்லாம் [கத்
புகுங்குடையான் தொண்டையர்கோன் பொன்மழையோடோக்
தகுங்கொடையான் தானதிகை சார்ந்து. 23

அண் ண லதிகையான் ஆகம் பிரியாத
பெண்ணினலாள் எண்ணான்கு பேரறமும்—எண்ணியவை
நாளுள் செலவமைத்தா னண்ணு வயவேந்தர்
வாளுள் கவர்கூத்தன் வந்து. 24

ஆட லமர்ந்தபிரான் ஆங்கதிகை வீரட்டம்
நீடுவதோர் கோயில் நினைத்தமைத்தான்- *கோடிக்
குறித்தா ருடல்பருந்து கூட்டுண்ணக் காட்டி
மறித்தானந் தொண்டையர் மன். 25

---

24. பெண்ணின் நல்லாள் எண்ணான்கு பேரறமும் எண்ணியவைநாளுள் செலவமைத்தான் - அம்மை செய்த 32 அறங்களைத் தானும் நாடோறும் நடத்த நிவந்தம் வைத்தான்,

25. கோடிக்குறித்தார் - கோடியென்ற கணக்கிற் குறிக்கப் பட்ட அளவிறந்த பகைவர். மறித்தான் - அவர் உயிர்வாழ்வு நீளாதபடி (அ) தடுத்தவனாகிய.

இத்தலத்திற்குப் பதினேட்டுத் தேவாரத் திருப்பதிகங்கள் உள்ளன.

* கோடி 'கோல்கோடி' என்புழிப் போல வினையெச்சப் பொருளது. — முத்து. சு.

குறிப்பு:- இப்பாடல்கள், திருவதிகை வீரட்டானர் திருக்கோயிலில் திரிபுர சங்காரத் திருமேனியின் முன்புள்ள அலங்கார மண்டபத்தில் இரண்டு தூண்களில் செதுக்கப்பட்டுள்ளனவாகும். (See the Annual report on South Indian epigraphy for the year 1921. Number 369.) இவைகள் இதுகாறும் தென் இந்தியக் கல்வெட்டுத் தொகுதிகளில் வெளிவந்தில. ஆனால் திரு. மு. இராகவையங்கார் அவர்கள். தாங்கள் அருமையாகத் தொகுத்த பெருந்தொகை எனும் நூலில் வெளியிட்டுள்ளார்கள். அவர்கள் சம்மதம்பெற்று இங்குக் குறிக்கப்பெற்றுள்ளன. திரு. T. V. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் எழுதிய சோழர் வரலாறு. திருவதிகைத் தலமான்மியம் ஆகிய நூல்களைப்பார்த்து ஒப்புநோக்கப் பெற்றுள்ளது. வை. சு.

## 2. திருஆப்பாடி *

இருக்குமிடம் :- தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணம் தாலுகாவில் திருப்பனந்தாளுக்குத் தென்மேற்கில் ஒரு கல் தொலைவில் மண்ணியாற்றின் தென்கரையில் உள்ளது இத் திருத்தலம்.

தலச்சிறப்பு :- இத்தலத்தின் தனிச்சிறப்பு 'சண்டேசுர நாயனார் வெண்மணலைச் சிவலிங்கமாகப் பிடித்துப பூசித்த வரலாருகும். சேய்ஞலூரில் வாழ்ந்த சண்டேசுர நாயனார இத் தலத்தில் ஆனிரைகளைமேய்த்து ஆத்தியின்கீழ் ஆலமர் செல்வனுக்கு ஆவின்பாலைக்கறந்து அபிஷேகித்து, இறைவனால் தொண்டர்களுக்கு அதிபனுக்கப்பெற்று இறைவன் உண்ட கலமும் உடுப்பனவும் சூடுவனவும் தந்தருளப்பெற்ருர். சண்டீசர் என்ற பதமும் இவர்க்கு இத்தலத்தில்தான் கிடைக்கப் பெற்றது

---

* 'தொறுப்பாடி' என்றும் ஓர் ஊர் இப்பொருளில் உளது. பண்ணேடு பாடல்தன்னைப் பரவுவார் பாங்கர்' (468) 'இன்னிசை தொண்டர்பாட இருந்த ஆப்பாடியார்' (471) 'பண்திறல் கேட்டுகந்தபரமர் ஆப்பாடியார்(475)என்றவற்ருல், இத்தலத்தின் இறைவரது பெயர் 'பாடலுகந்தார்' என்று இருந்து மருவியது போலும். ஆப்பாடி என்றதன் ஆவைநோக்கிப் பாலுகந்த நாதர் என்பதும் பொருத்தமாகத் தோன்றும். அஃது உண்மை ஆகாது. முத்து. சு.

இதனைப் பெரிய புராணத்துள் சண்டேசுர நாயனார் புராணப் பகுதியில் விரிவாகக் காணலாம். தேவாரத் திருப்பதிகங்கள் பலவற்றிலும் இவர்கள் வரலாறு குறிக்கப்பெற்றுள்ளது.

" சண்டியார்க் கருள்கள் செய்த தலைவர் ஆப்பாடி யாரே "

என்று அப்பரடிகள் அருளிச்செய்கின்றார்கள்.

இத்தலத்தைக்குறித்த மற்றொரு வரலாறும் உண்டு. ஆப்பாடியில் இருந்த இடையர்குலத் தோன்றல் ஒருவன் பாலைக் கறந்து குடத்தைத் தன் வீட்டிற்கு எடுத்துச்செல்லும்போது வழியில் நாடோறும் கால் தடுக்கிப் பாற்குடம் கவிழ்ந்து கொண்டுவருதலை அறிந்து அவ்விடத்தைச் சினங்கொண்டு கையிலிருந்த அரிவாளால் வெட்டினான். அவ்விடத்திலிருந்து இரத்தம் பெருகியது. குருதிபடிந்த திருமேனியுடன் சிவலிங்கத் திருவுருவில் இறைவன் வெளிப்பட்டு அருளினார்.

இவ்வதிசயத்தைக் கண்ட இடையன் தன் அறியாமையால் ஏற்பட்ட செயலை எண்ணி மனம் வருந்தினான். அவனது வருத்தந்தணித்து இறைவன் இன்னருள் புரிந்தார் என்பது.

இறைவன் :- பாலுகந்தநாதர்.

இறைவி :- பெரியநாயகியம்மை.

தீர்த்தங்கள் :- மண்ணியாறு, க்ஷீரபுஷ்கரிணி.

தலவிருக்ஷம் :- ஆத்தி.

இத்தலத்திற்கு அப்பர் சுவாமிகள் அருளிய தேவாரத் திருப்பதிகம் ஒன்று உள்ளது.

இத்தலம் முன்பு திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்துக்குச் சொந்தமாயிருந்தது. இப்போழ்து ஒரு கமிட்டியார் இத் திருக் கோயிலைப் பரிபாலித்து வருகின்றார்கள்.

*கல்வெட்டு :- இத்திருக்கோயிலில் பிற்காலச் சோழ மன்னர்களில் இரண்டாம் இராசராசன், மூன்ருங் குலோத்துங்கன் இவர்கள் காலங்களிலும் ; பாண்டியரில் ஜடாவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி சுந்தரபாண்டியதேவர் காலததிலும் ; பிற்காலப் பல்லவ மன்னரில் சகலபுவனச் சக்கரவர்த்தி கோப்பெருஞ் சிங்கதேவர் காலத்திலும் ; விசயநகர பரம்பரையினரில் வீர போக்கண்ண உடையார் மகனுர் அரியப்ப உடையார் காலத் திலும் ; தேவராய மகனுர் மல்லிகார்ச்சுன மகாதேவர் காலத் திலும் செதுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இக்கல்வெட்டுக்களில் இறைவர் திரு ஆப்பாடி உடையார் என்றும், நடராசர், சொக்கக்கூத்தர் என்றும் கூறப்பெற் றுள்ளனர்.

இரண்டாம் இராசராசசோழதேவர் காலத்தில் இக்கோயில் தைப்பூச விழாவிற்கும், மூன்ருங் குலோத்துங்கசோழதேவர் காலத்தில் சொக்கக்க உத்தருக்கும் நிவந்தங்கள் அளிக்கப் பெற்றிருந்தன. இவைகளுள் சொக்கக்க உத்தர்க்கு நிவந்தம் அளித்தவர் மிழலைநாட்டுச் சேய்ஞலூர் உய்யக்கொண்டபிள்ளை ஆவர்.

இவ்வூர் மிழலை நாட்டிற்கு உட்பட்டிருந்தது. அரியப்ப உடையார் காலத்துக் கலவெட்டு ஆகவராமன் பணம் என்னும் ஒரு நாணயத்தின் (a coin) பெயரைக் குறிப்பிடுகின்றது.

* See the Annual report on South Indian epigraphy for the year 1932 Numbers 81—88.

# 3. திரு ஆரூர் அரநெறி

இருக்குமிடம் :- தஞ்சை மாவட்டம் காவிரிக்குத் தென் கரையில் மாயூரத்திலிருந்து தெற்கில் இருக்கிறது. புகை வண்டிச் சந்திப்பு உண்டு. உந்தூர்திகளில் செல்லும் வசதியும் மிகுதியும் உண்டு.

தலச் சிறப்பு :- திருவாரூர் பூங்கோயில் (கமலாயம்) அரநெறி, பரவையுண்மண்டலி என்னும் மூன்று பாடல்பெற்ற கோயில்கள் அமைந்துள்ளன. இவற்றுள் பூங்கோயில் எனப் படுகின்ற பெரிய கோயிலின் இரண்டாம் பிராகாரத்தில் தென் கிழக்குத் திசையில் மேற்கு முகமாயமைந்துள்ள ஆலயம் திரு ஆரூர் அரநெறி யெனப்படும். இங்குத் திருவாருருக்குச் சமீபத்திலுள்ள ஏமப்பேரூரில் வைதிகப் பிராமண குலத்தில் திருவவதாரஞ்செய்த நமிநந்தியடிகள் நாயனார் திருவாரூரை யடைந்து அரநெறியை வணங்கும்போது அந்திப்போதாய்த் திருவிளக்குத் திருப்பணி செய்யவேண்டுமென்னுங் கருத்துத் தோன்றுதலினால் நெய்யின்பொருட்டு அமணர் வீடென்று அறியாது கேட்டு அவர் 'கையில் மழுவுள்ள சிவனுக்கு விளக்கு மிகை' யென்ன இழித்துரைக்கக்கேட்டு வருந்திப் பரமசிவனது அசரீரித் திருவாக்கின்படிக் கமலாலய நீரை முகந்து கொணர்ந்து இரவு முழுதும் திருப்பணிசெய்தும், சோழ ராஜாவினால் பங்குனி உத்திரத் திருநாளைச் சிறப்புறச் செய்வித்தும், வீதிவிடங்கப் பெருமான் திருமணலிக்கெழுந்தருளியபோது சேவித்துத் தம் வீடடைந்து பலரும் தீண்டலின் விழுப்பென்று ஆன்மார்த்த பூசை முதலிய செய்ய ஸ்நாநத்தின்பொருட்டு நீர் கொணர மனைவியாருக்குச் சொல்லிப் புறத்தே இருந்தபோது திரு வருளினால் நித்திரையெய்திக் கனவிலே 'திருவாரூரிலேஉள்ளவர் யாவரும் சிவகண நாதராவர்' என்று உணர்த்தப்பெற்று அஞ்சி விழித்து அதனை மனைவியாருக்கும் உணர்த்திப் பூசை முடித்து வைகறையில் திருவாரூரை யடைந்து யாவரையும் சிவசாரூப்யராகத் தரிசித்தும் நெடுநாட்டிருப்பணி செய்தும் திருவடியடைந்தார். இவரை ஸ்ரீ வாகீசமூர்த்திகள் "தொண் டர்க்கு ஆணி" என்றும், இவரது தொண்டை "நீராற்றிரு விளக்கிட்டமை நீணாடறியு மன்றே" என்றும், "பங்குனி யுத்திரம் பாற்படுத்தான்" என்றும் தமது திருப்பதிகத்திற் சிறப்பித்திருக்கின்றனர்.

இறைவன் :- அகிலேசர்.

இறைவி :- அகிலேசுவரி.

இறைவனுக்கு திரு அரநெறி உடையார் என்ற பெயரும் வழங்கியது என்று இக்கோயிற் கல்வெட்டுக்களின்மூலம் புலனாகிறது.

திருவாரூர் அரநெறிக் கோயிலுக்கு அப்பர்பெருமான் அருளிச்செய்த பதிகங்கள் இரண்டு மட்டும் உள.

தல வரலாற்றுக் குறிப்பு :- திருவாரூர் அரநெறிக் கோயிலைக் கற்றளியால் கட்டியவர் திரு விசைப்பா ஆசிரியர்களுள் ஒருவரான கண்டராதித்த சோழதேவரது மனைவியாராகிய செம்பியன்மாதேவியாராவர். இத் திருக்கோயில் அரநெறியுடையார்க்குத் திருநொந்தா விளக்கு இரண்டினுக்குக் குருகாலன் திரு மூலட்டானத் தொண்டர் மேன்மங்கலத்தில் மூன்று வேலி நிலத்தை முதல் இராசராச தேவரின் ஆட்சி யாண்டு இருபது, நாள் இருநூற்று எழில் கொடுத்துள்ளார் என்றும் முதலாம் இராசாதிராசரின் இருபத்தேழாம் ஆண்டில் அரநெறி உடையார்க்கு அணுக்கியார் பரவை நங்கையார் தீபங்குடி மேல் மங்கலம் கிராமத்தில் வழிபாட்டிற்காக நிலம் கொடுத்திருந்தனர் என்றும் கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன.

* கல்வெட்டு :- இத் திருக்கோயிலில், சோழமன்னர்களின் முதலாம் இராச சோழனாகிய இராசராசகேசரிவர்மன், மதுரைகொண்ட இராசகேசரிவர்மன், இராசேந்திர சோழ தேவன் இவர்கள் காலங்களிலும், விசயநகர வேந்தரில் வீரபூபதி உடையார் காலத்திலும் செதுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

ஈண்டுள்ள கல்வெட்டுக்கள் பெரும்பாலும் சிதைந்துள்ளன. இராசகேசரிவர்மனுடைய இரண்டாமாண்டுக் கல்வெட்டு, உடைய பிராட்டியார் செம்பியன் மாதேவியார் தம் மகனார் உத்தம சோழ தேவரின் மேன்மைகருதி வெள்ளிப்பாத்திரங்கள் அளித்ததையும்,

* See the Annual Report on South Indian Eplgrrphy for the year 1904. Numbers 568–575.

அம்மன்னன் காலத்து ஏழாமாண்டுக் கல்வெட்டு, திரு [அரநெறி ஆள்வார் கோயிலை உடைய பிராட்டியார் செம்பியன்மாதேவியார் கருங்கல்லால் கட்டி, இரு திருமேனிகளை எழுந்தருளிவித்ததோடு நாடோறும் பூசனைக்கும் கோயிலைப் பழுது பார்ப்பதற்கும் ஆக 234 காசுகளைக் கொடுத்ததையும் குறிப்பிடுகின்றன. மதுரை கொண்ட இராசகேசரிவர்மனின் 32-ஆம் ஆண்டுக் கல்வெட்டு விளக்குக்குப் பொன் அளித்ததைப்பற்றிக் குறிப்பிடுகின்றது. இம் மன்னனுடைய கல்வெட்டு பிற்கால எழுத்தால் செதுக்கப் பட்டிருப்பது சிந்திக்கத்தக்கது. வீரபூபதி உடையார் கல்வெட்டு சிதைந்து போன நிலையில் உள்ளது.

## 4. கச்சித் திருமேற்றளி

இருக்குமிடம் : இது செங்கற்பட்டு மாவட்டம் காஞ்சி புரத்தின் மேற்குப் பகுதியாகிய பிள்ளையார்பாளையத்தில் இருக் கின்றது

திருஞான சம்பந்தர்வாழ்ந்திருக்கவும் பாடவும் பெற்றதால் இது பிள்ளையார் பாளையம் எனப் பெயா பெற்றது.

தலச் சிறப்பு .- இங்கே இரண்டு திருக்கோயில்கள் இருக்கின்றன. ஒன்று ஓத உருகீசுவரர்கோயில். இங்கே எழுந்தருளி யிருந்தவர் திருமால். திருஞான சம்பந்தப் பெருமானாரின் திருப்பாடலைக்கேட்டுச் சிவலிங்கமாய் உருகினார். காஞ்சிப்புராணத்தில் இதற்கு ஆதாரம் உண்டு. மற்றொன்று திருமேற்றளி நாதர்கோயில். இவ்விரு திருக்கோயில்களுக்கும் கிழக்கே திருவீதியில் சம்பந்தர்கோயில் இருக்கின்றது. இத் தலத்திற்கு அப்பர் சுவாமிகள் பாடியருளிய திருநேரிசைப் பதிகம் ஒன்று இருக்கின்றது. காஞ்சி மாநகரம் சிறந்த திருத் தலமாகத் திகழ்வதுடன் எண்ணற்ற சிவதலங்கள் பலவற்றைத் தன்னகத்தே கொண்டதாக இலங்குகின்றது. இவற்றுள் கச்சி யேகம்பம், கச்சிமேற்றளி, திருவோணகாந்தன்தளி, திரு அநேகதங்காவதம், திருக்கச்சி நெறிக் காரைக்காடு என்ற

ஐந்து சிவதலங்கள் தேவாரத் திருப்பாடல்கள் பெற்ற திருத் தலங்களாகத் திகழ்கின்றன. இவ்வைந்து திருத்தலங்களுள் ஒன்றாக விளங்குகிறது. திருக்கச்சிமேற்றளி திருக்கச்சி யேகம்பத்திற்குத் தென்மேற்கே ஒரு கல் தொலைவில் அமைந் துள்ள அணி நகராகும். இந்நகரை ஸ்ரீ காஞ்சிமேற்றளி யென்றும் திருமேற்றளி யென்றும் வழங்குவர். திருக்கச்சியின் மேற்றிசையில் அமைந்திருத்தலால் இத்தலம் இப்பெயர்பெற்ற தெனலாம்.

இத்தலத்திற்குச் சம்பந்தர்பதிகம் ஒன்றும் அப்பர்பெருமான் பதிகம் ஒன்றும் ஆக இரண்டு பதிகங்கள் உள.

இறைவன் :- திருமேற்றளிநாதர்.

இறைவி :- திருமேற்றளிநாயகி.

தீர்த்தம் :- விஷ்ணு தீர்த்தம்.

* காஞ்சி, திருமேற்றளி :- இத்திருக்கோயிலில், சம்புவராய மன்னர்களில், சகலபுவனச் சக்கரவர்த்தி இராச நாராயண மல்லிநாதன் சம்புவராயரின் 16-ஆம் ஆட்சி ஆண்டிலும், விசயநகர வேந்தர்களில், மகா மண்டலேசுவரன் சதாசிவ தேவ மகாராயர் (சகம் 1484) காலத்திலும், பல்லவ மன்னர் களில், தந்திவிக்கிரமவர்மன் காலத்திலும் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவைகளில் இறைவரின் திருப் பெயர் திருமேற்றளி உடைய நாயனார் என்றும், இறைவரின் திருக்கோயில் திருமேற்றளித் திருக்கோயில் என்றும் குறிக்கப் பெற்றுள்ளன.

இராசநாராயணமல்லிநாதன் சம்புவராயரின் கல்வெட்டு, எயிற்கோட்டத்துத் தேவதானம் நந்தவன்சுதர்விளாகம் என்னும் ஊரில் இருவேலி நிலத்தைத் திருமேற்றளிஉடைய நாயனார்க்குக் கொடுத்ததையும், சதாசிவ தேவமகாராயர் கல்வெட்டு, தறி (loom) ஒன்றுக்கு ஐந்தரை பணத்தைச் செங்குந்தர்களிட மிருந்து வசூலித்து இறைவனுக்கு நாள் வழிபாட்டிற்கும்

* See the Annual reports on South Indian Epigraphy for the years, 1921. Numbers 86—91.
1923. ,, 101—104, (with the name of the village Pillayapalayam.)

விளக்குக்கும் பயன்படுத்திக்கொள்ளவேண்டுமென்று கொண்ட மய்யராஸையா என்பவர் கட்டளையிட்டதையும், தந்திவிக்கிரம வர்மன் கல்வெட்டு, ஒரு முததரையா திருமேற்றளிக்கோயிலுக்கு அறச் செயல்கள் புரிந்ததையும், கோயிலைச்சார்ந்து திருமடம் ஒன்று இருந்ததையும் குறிப்பிடுகின்றன.

குறிப்பு:- திருமேற்றளி நிலைபெற்றுள்ள ஊராகிய பிள்ளையார் பாளையத்தின் தெருக்களில் உள்ள துண்டுக் கல்வெட்டுக்கள் திருவேகம்பன்தெரு என்று காஞ்சிபுரத்தில் ஒரு தெருவிற்குப் பெயர் வைக்கப்பட்டிருந்ததையும் சந்திரகிரியில் அப்பராச உடையார் என்னும் கவிஞர் ஒருவர் இருந்ததையும், ஏகாம்பரநாதர் கோயிலுக்குப் பழுது பார்ப்பதற்கு இரண்டு ஊர்களின் வரிகளைக் கொடுத்ததையும் உணர்த்துகின்றன.

## 5. திருக் குறுக்கைவீரட்டம்

இருக்குமிடம் :- தஞ்சை மாவட்டம் மாயூரம் தாலூகாவில் மாயூரத்திற்கு வடக்கேயுள்ள நீடூர் புகைவண்டி நிலயத்திலிருந்து வடமேற்கே சுமார் 5 கல் தொலைவில் விளங்குகிறது.

தலச் சிறப்பு :- கடுக்காமரம் தல விருட்சமாதலின் கடுவனம் எனவும், இறைவர் அம்மையாரைப் பிரிந்து யோகஞ் செய்த இடமாதலின் யோகீசபுரம் எனவும் காமனைத் தகித்த இடமாதலின் காமதகனபுரம் எனவும், இலக்குமியினது கம்பத் (நடுக்கத்) தைப் போக்கியதாகலின் கம்பகரபுரம் எனவும், தீர்க்கவாகு முனிவர் இத்தலத்து வந்து இறைவனை அபிடேகித்தற்குக் கங்கா நீரினை விரும்பித தமது கரங்களைநீட்டக் கரங்கள் நீளாது குறுகினமையால் குறுக்கை எனவும் பெயர்கள் வழங்கப் படுகின்றன. குறுக்கை என்னும் ஒருவகைத் தாவரம் பற்றிய காரணப்பெயர் என்று திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள் தெரிவித்தார்கள்.

அட்டவீரட்டத் தலங்களுள் ஒன்று. இத் தலத்துச் சபை காமனங்காநாசனி சபை எனப் பெயர்பெறும். சம்புவிநோத சபை எனவும் வழங்கும். இறைவன் உமையம்மையாரைப் பிரிந்து யோகத்தமர்ந்த பெருமை மிக்கது. குறுங்கை விநாயகர் எழுந்தருளி அன்பர்கட்கு வேண்டும் பேறுகளைக் கொடுத்து அருள் பாலிப்பது

கரும்பு வில்லினையுடைய காமனை எரித்து, இரதி போற்ற நெடுமால் இரப்ப மீட்டும் உயிர் கொடுத்தருளியது. இலக்குமிக் குளதான நடுக்கத்தை நீக்கியது. அசுரர்களை வெற்றிகொள் வதற்காக முருகக் கடவுள் வந்து பூசித்துச் சூலாயுதம் பெறறது. இராகவன் வழிப்பட்டுப் பிதிர்க் கடன் ஆற்றியது. தீர்க்கவாகு முனிவருக்குக் கரம் குறுகச் செய்தது. வாணுசுரனுக்கு அஞ்சிய மகாவிஷ்ணுவுக்கு அபயமளித்தது. திருமுடி கணடேனெனப் பொய் கூறிய பிரமனுக்கு இறைவன் படைப்புத் தொழிலை நீக்கப் பிரமன் அஞ்சி வழிபட்டுப் பூசித்து இழந்த படைப்புத்தொழிலை மீட்டும் பெற்றது. சோழநாடு முழுவதும் நெல் விளையவேண்டு மென்று விரும்பிய சயத்துவசனுக்கு அவன் விருப்பின்படியே அருள்பாலித்தது. அகத்திய முனிவரால் பூசிக்கப் பெறறது. காளியும் துர்க்கையும் காவல் புரிவது. இரதியும் காமனும் வழிபட்டது ஆகிய பல பெருமைகளையுடையது.

காமதகனம் :- உலக காரணர்களாகிய அம்மை அப்பர் இருவரும் யோகத்தமர்வார்களானால் உலகில் எச்செயல்கள்தாம் நடக்கும்? யாவரும் காமநுகர்ச்சியைமறநதனர் துறவியையோத் திருந்தனர். இந்நிலையில் சிங்கமுகன் தாரகன் முதலிய அசுரர் கள் வானநாடுபுக்கு வானவர்களைத் துன்புறுத்தத் தலைப்பட்டனர். பொருள்களைக் கவர்ந்தனர். உலகங்களைத் தம்மடிப்படுத்தினர். இவ்வாறுய இடர்களைப் பொறுக்க முடியாத தேவாதியோர் தம் குருவிடஞ் சென்று "யாங்கள் இவ்வாறு வருந்தக் காரணம் யாது ? மாரன் எங்கொளிந்தான் ; அல்லது இறந்துவிட்டானு ? ஒன்றும் உணரோம்" என்றுர்கள். அது கேட்ட குரு "முன்பு இறைவனை இகழ்ந்தோதுக்கி இயற்றப்பட்ட யாகத்தில் நீங்களும் கலந்துகொண்டீர்கள். அப்பாவங் காரணமாக இத் துன்பததை அனுபவிக்கின்றீர்கள். கடுவனத்தில் யோகத்திலிருக்கும் கண்ணுதல் எழுந்து இமவான் மகளை மணம் புணர்வாறுயின் அறுமுகக் கடவுள் தோன்றுவர். அப்போது அக்கடவுளா உங்கள் துன்பம் ஒழியும்" என்றுர். உடனே தேவர்கள் "அவ்வாறுயின் கண்ணுதல் யோகத்தைக் கலைதது இமவான் மகளை அவாவுறச்செய்வதற்குரிய வழி யாது ? உரைமின்" என்ன, வியாழபகவான் "இரதியோடு காமன் வருக" என எண்ணினன். இருவரும் தோன்றினர்.

இந்திராதியோர் காமனை நோக்கி உபசார மொழிகள் கூறி இறுதியில் "நீ கடுவனஞ் சென்று யோகிருக்கும் இறைவன்

உமையைச் சேரும்படி செய்வாய்'' என்றார்கள். அதனைக் கேட்ட காமன் ''நன்று! நன்று!! உமது யோசனை; என்னை அழிக்க எண்ணினீர்போலும். இறைவனோடு மாறுபாடுகொண்டு அவன்முன் சென்றோர் யாவராயினும் தப்புதல் முடியுமோ? விழித்து நோக்கின் உலகமே அழியும். ஆதலின் நீவிர் அவ் இறைவனை வணங்கித் துதித்து வேண்டியது பெறுவீர்'' என்றான். தேவர்கள் மறுபடியும் ''மாரனே! விஷ்ணு பிருந்தையைச் சாரவதற்கும், பிரமன் திலோத்தமையைச் சார்வதற்கும் காரணம் நீயல்லையோ? உன் பெருமையும் வலியும் சொல்வதற் கடங்கா'' எனப் பலவாறாகப் புகழ்ந்து கூறிப் போகும்படி செய்தனர். காமனும் உடன்பட்டு எழுந்தான். மனைவியாகிய இரதி 'தலைவ! இமையவர்கள் சொற் கேட்டு நீ புறப்படுதல் தகாது; நீங்கு விளைதல் உறுதி என்று தடுத்தாள்.' ''வானவர் வருந்துகின்றனர்; தடுத்தல் தகாது'' எனக் கூறி எழுந்தான் காமன் பிரிவாற்றாத இரதியும் உடனெழுந்தாள். காமன் இத் தலத்து இறைவன் திருமுன் நின்று கரும்பு வில்லை வளைத்து மலர்ப் பாணத்தை எய்தான். இறைவன் நெற்றிக் கண்ணைத் திறந்தார் அஞ்சி நடுங்கிய காமன் தென்புறம் ஓடினான். நெற்றிவழி நெருப்புக் காமனை எரித்துச் சாம்பலாக்கியது. இரதி இதனைக் கண்டு புலம்பி மயங்கி விழுந்தாள். எல்லாம்வல்ல இறைவனை நோக்கி வேண்டினாள். இறைவன் எதிர்தோன்றி 'யாது வேண்டும்'' என்று கேட்டார். இரதி தன் கணவன் உயிர்பெற்று எழவேண்டுமென இரந்தாள். இறைவன் இரதிக்கு மட்டும் உருவமாகவும் ஏனையோர்க்கு அருவமாகவும் தோன்றுவான் எனக் கூறி உயிர் பெற்று எழச் செய்தார். காமன் இரதியுடன் இத் தலத்தில் நீராடி இறைவனையும் இறைவியையும் வழிபட்டான். அதுமுதல் 'உருவில்' 'அநங்கன்' என்பர்.

தீர்க்கவாகு முனிவர் என்பவர் இறைவனைக் காண இத்தலத்திற்கு வந்து தம்முடைய நீண்ட கரங்களால் ஆகாய கங்கையை அள்ளி அபிஷேகிக்கத் தமது கரங்களை மேலே நீட்ட கரங்கள் குறைந்தன. தன் அன்பில் ஏதேனும் சிறு குறை இருக்குமென எண்ணித் தன் தலையைக் கல்லில் மோதிக்கொள்ள இறைவன் காட்சிதந்தார். இம் முனிவர்கை இத் தலத்தில் குறுகியமையால் குறுங்கை எனப்பட்டுக் குறுக்கையாகியது எனப்புராண வரலாறு கூறுகிறது.

மற்றும் சயதுவச்சன் என்ற சோழ அரசனும், இலக்குமி, அகத்தியர் முதலியோரும் இத் தலத்தில் வழிபட்டு முத்தி பெற்றதாகத் தல வரலாறு கூறுகிறது.

இறைவர் :- வீரட்டேசுவரர்.

இறைவி :- ஞானம்பிகை.

தல விட்சம் :- கடுக்காய் மரம்.

தீர்த்தங்கள் :- சூலதீர்த்தம் ; ஞானதீர்த்தம்

தல வரலாற்றுக் குறிப்பு :- சுவாமி கோயில் மகாமண்டபத்திலுள்ள பல கல்வெட்டுக்களில் கல்வெட்டு அதிகாரிகள் 1917 ஆம் ஆண்டில் 215 - 244 எண்ணுள்ள கல்வெட்டுக்களாகப் படி எடுத்துள்ளார்கள். திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச் செய்த திருப்பதிகள் இரண்டு உள்ளன இதற்குத் திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் இயற்றிய தல புராணம் உளது. அது 736 திருவிருத்தங்கள் கொண்டது. 1920 இல் இதன் தல புராணம் தருமை ஆதீனத்தின் உதவியினால் வெளியிடப்பெற்றது.

## 6. திருக் கொண்டீச்சரம்

இருப்பிடம் :- இத் தலம் தஞ்சை மாவட்டம் நன்னிலம் புகைவண்டி நிலயத்திற்கு மேற்கே ஒன்றரை கல் தொலைவில் உளளது. இது வில்வாரணியம் எனவும் வழங்கப்பெறும்.

தலச் சிறப்பு :- இது காமதேனு பூசித்து வழிபட்ட தலமாகும். உமையம்மையார் பசு உருவாய் இறைவனைத் தேடிக் கொண்டுவந்து கொம்பினால் பூமியைக் கிளறிக்கொண்டு வருகையில் இறைவன் தலையில் கொம்பு பட்டு இரத்தம் வரத் தன் பாலையே இட்டுக் காயத்தை ஆற்றியபின் வழிபட்டதாக வரலாறு. இலிங்கத் திருவுருவின் தலையில் இன்றும் கோட்டின் வடு காணப்பெறும். இத் தலத்திற்குத் திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய்த திருப்பதிகங்கள் இரண்டு உள்ளன.

இறைவர் :- பசுபதிநாதர்.

இறைவி :- சாந்தநாயகி.

தீர்த்தங்கள் :- க்ஷீரபுஷ்கரிணி தீர்த்தம். இத் தீர்த்தம் கோயிலைச் சுற்றி அகழிபோல் அமைந்துள்ளது.

* கல்வெட்டு வரலாறு :- இக் கோயிலில் சகம் 1439 இல் ஏற்பட்ட விசயநகர வேந்தராகிய வீரகிருஷ்ணதேவமகாராயர் கல்வெட்டு ஒன்று இருக்கின்றது. அது கிருஷ்ணதேவராயர் உதயகிரிகோட்டையைக் கைப்பற்றியதையும் அக் கோட்டையில் இருந்த திருமலைராகுத்தராயரைச் சிறைப்பிடித்ததையும் குறிக்கின்றது.

## 7. திருச் சத்திமுற்றம்

இருப்பிடம் :- இத் தலம் தஞ்சை மாவட்டம் திருக்குடந்தைக்குத் தென்மேற்கே நாலுகல் தொலைவில் பட்டீச்சரத்திற்கு அருகில் உள்ளது.

இறைவர் :- சிவக்கொழுந்துநாதர்.

இறைவி :- பெரியநாயகி.

இறைவன் திருநாவுக்கரசு சுவாமிகளுக்கு இடபக் குறி சூலக் குறி பொறித்தது இத் தலத்தில்தான்.

சத்தி முற்றம் என்ற பெயர் பிற்காலத்தில் பேச்சு வழக்கில் சத்தி முத்தம் ஆயிற்று. பிறகு அதற்கு ஒரு கதையும் எழுந்தது. சத்தி இறைவனுக்கு முத்தம் கொடுத்ததால் சத்தி முத்தம் ஆயிற்றும். இது முற்றிலும் படைத்ததொரு கதையாகும். சத்தி முற்றப் புலவர் என்ற இவ்வூரைச் சேர்ந்த புலவர். சத்தி முற்றப் புலவர் என்றே அழைக்கப்படுவதிலிருந்தும் திருமுறைகளில் ஏழாம் பாடலில் இக் குறிப்பு சத்தி முற்றம் என்றே பயின்று

* See the Annual report on South Indian Epigraphy for the year 1911. Number 80.

வருவதிலிருந்தும் மேற்கூறிய கதை இத்தகையது என்பதை நனி விளக்கும். இத் தலத்திற்குத் திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய்த திருப்பதிகம் ஒன்று உள்ளது.

* கல்வெட்டு வரலாறு :- இவ்வூரிலுள்ள திருச்சத்திமுற்ற முடையார் திருக்கோயிலில் சோழ மன்னர்களில், திரிபுவனச் சக்கரவர்த்தியாகிய குலோத்துங்கசோழதேவர் " கடல் சூழ்ந்த " என்று தொடக்கமுள்ள மெய்க்கீர்த்தியையுடைய இராசகேசரி வர்மராகிய இராசாதிராசதேவர். மதுரையும் ஈழமும் கருவூரும் பாண்டியன் முடித்தலையுங் கொண்டருளின மூன்றாங் குலோத் துங்க சோழதேவர் இவர்கள் காலங்களிலும் ; விசயநகர பாம் பரையினரில் பிரந்தராயமகாராயர், மகாமண்டலீஸ்வர கோப் பையதேவ மகாராசர், வீரப்பிரதாபதேவராய மகாராயர் இவர்கள் காலங்களிலும் செதுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

கோபுரத்தின் அடிப் பகுதியிலுள்ள கல்வெட்டு அக் கோபுர வாசல் மகாமண்டலீஸ்வர கோப்பையதேவ மகாராசா அவர் களால் கட்டப்பட்டதையும், வீரப்பிரதாபதேவராய மகாராயர் காலத்துக் கல்வெட்டு மகாமண்டலேஸ்வர திருமலையதேவ மகா ராசர் திருநறையூர்ப்பற்று எல்லூரைத் திருச்சத்திவனப்பெருமா ளுக்கு நாள் வழிபாட்டுச் செலவிற்கும், திருவமுதுக்குமாகக் கொடுத்துள்ளதையும், சோழ மன்னர்களின் கல்வெட்டுக்கள் நுந்தா விளக்கு எரிப்பதற்குக் காசு, ஆடு இவைகளை அளித்த தோடு, நிலம் அளித்த செய்தியையும் குறிப்பிடுகின்றன. ஆடு களை அளித்தவன் சயங்கொண்ட சோழமண்டலத்துப் பழைய னூர் நாட்டுப் பழையனூர் அமரகோனாகிய வேதவனம் உடை யான் கருணாகரதேவன் ஆவன். இக் கல்வெட்டுக்களில் இறைவர் திருச்சத்திமுற்றம் உடையார் திருச்சத்திவனப்பெரு மாள் என்னும் திருப்பெயரால் குறிக்கப்பெற்றுள்ளனர். மூன்றாங் குலோத்துங்கசோழதேவருடைய கல்வெட்டு திருச்சத்திமுற்றம் உடையார்க்குச் சொந்தமான நிலங்களின் வரிகளை வசூலிக்கும் விதிகளைப்பற்றிக் குறிப்பிடுகின்றது. மண்டபத்தின் கருங்கல் தூண்களிலுள்ள ஒரு கல்வெட்டு, இலுப்பையூர் உடையபிள்ளை ஆண்டார் என்னும் பெயரைக் குறிப்பிடுகின்றது. மற்றொரு கருங்

* See the Annual Report on South Indian Epigrrphy for the year 1927. Numbers 262—270.

கல் தூணில் உள்ள கல்வெட்டு உபயநாயகப்பிச்சன் என்பவன் திருநீறு அணிபவர்களின் அடிமை என்பதைத் தெரிவிக்கிறது. இங்குள்ள கல்வெட்டுக்கள் திருச்சத்திமுற்றம் குலோத்துங்க சோழவளநாட்டுத் திருநறையூர் நாட்டுக்கு உட்பட்ட ஊர் என் பதைக் குறிப்பிடுகின்றன. " கடல் சூழ்ந்த " என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய இராசகேசரி இராசாதிராசதேவரின் ஐந்தாம் ஆண்டு எண்பத்தெட்டாம் நாளில் செதுக்கப்பட்ட கல் வெட்டு, திருச்சத்திமுற்றம் உடையாரகோயில் இராசராசபுரதநில் இருப்பதை உணர்த்துகின்றது. எனவே அம் மன்னன் காலத்தில் திருச்சத்திமுற்றத்துக்கு இராசராசபுரம் என்னும் வேறு பெயர் வழங்கியிருந்தது புலனாகும்.

## 8. திருப்பயற்றூர்

இருப்பிடம் :- இத் தலம் காவிரியின் தென்கரையில் தஞ்சை மாவட்டத்தில் நன்னிலம் கூற்றத்தில் மாயூரம் — காரைக்குடி புகைவண்டி வழியில் திருவாரூரை அடுத்து வடபால் ஐந்துகல் தொலைவிலுள்ள விற்குடிப் புகைவண்டி நிலயத்தில் இருந்து கிழக்கே நான்கரைகல் தொலைவில் உள்ளது.

தல வரலாறு :- இத் தலத்தே பயிரவ மகரிஷி பெருமானைப் பூசித்திருக்கிறார். முனனொரு காலத்தில் சிவபெருமானிடத்தே பேரன்புகொண்ட வணிகர் ஒருவா மிளகு வாணிகம் செய்து வந்தார் அவர் ஒருகால் கடற்றுறைநோக்கி இத்தலத்தின்வழியே செல்லும்போது சுங்கச்சாவடி அண்மையில இருக்கக்கண்டு தலத்தின் பெருமானையடைந்து, பயற்றுக்கு வரியில்லையாதலால் தம்முடைய மிளகையெல்லாம் பயறாக மாற்றும்படி வேண்டினார். அவர் வேண்டுகோளின்படி மிளகு மூட்டைகள் பயறு மூட்டை களாயின. வணிகரும் மகிழ்ந்து வரியில்லாமல் சென்றார. பின் பயறு மிளகாகியது. வணிகர் மிக்க இலாபம் பெற்றார்.

மேற்கண்ட செவிவழிக் கதையால் இத் தலத்தின் பெயரும் சிறப்பும் விளங்குகின்றது. பஞ்சநதவாணன் எனபவனின் கண் ணோய் நீங்குதற்காக நிலம் கொடுத்த செய்தி இத் தலத்தின்

முதல் கல்வெட்டினுல் அறியப்படுவதால் யாரேனும் கண்ணேய் அடைந்திருப்பின் இத் தலத்தினை அடைந்து கருணுதீர்த்தத்தில் மூழ்கி நேத்திராம்பிகை என வழங்கப்பெறும் காவியங்கண்ணி யையும் திருப்பயற்றுநாதனையும் வழிபடின் கண்நோய் நீங்கப் பெறுவர் என்ற உண்மையும் புலனுகின்றது.

இறைவர் :- திருப்பயற்றுநாதர்

இறைவி :- காவியங்கண்ணி.

தல விருட்சம் :- சிலந்தி மரம்.

தீர்த்தம் :- கருணுதீர்த்தம்.

கல்வெட்டு:- கருவறையின்மேல் புறச்சுவர் அடிப்பகுதியில் உள்ளது. ஸ்வஸ்திஸ்ரீ திருபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீராஜராஜ தேவற்கு யாண்டு 25-ஆவதின் எதிராமாண்டு *கன்னிநாயிற்றுப் பூர்வபட்சத்துப் பஞ்சமியும் புதன்கிழமையும் பெற்ற உரோகிணி நாள் திருப்பயற்றூரில் திருநாமத்துக்காணியாக விற்றுக்கொண்ட பயற்றூருடையான் பஞ்சநதவாணன். ஆன கண் பெற இன மக்களால் போன் ஆழ வீசித் தனம் பெற்று உடைய கோண்ட *புத்த..... திருச்சிற்றம்பல முடையானெழுத்து கண்ணுக விலை கோண்ட கிடங்கு நிலம் அரைமாவுக்கும் அறுநூறுகாசு விலை யாக முரனிழுமாழித்த்.........பியச் சிலவும் எழுதினது இப்படி இவை *புத்தமங்கலமுடையான் திருச்சிற்றம்பலமுடையான் எழுத்து என்றும் இப்படிக்கு....... வாருடையான்...........வீதி விடங்கப்பெருமான் எழுத்தென்றும் மேற்படி இப்படி அறிவேன் பயற்றூருடையான் தில்லைநாயகன் பெரு... . .. எழுத்தென்றும் மேற்படி...... ...யான் பிச்சதேவன் எழுத்தென்றும் மேற்படி இப்படி அறிவேன் புலியூர்க்கிழவன் உன்னுகிட்டார் எழுத்து என்னும் மேற்படி பிரமாணம் எழுதினமைக்கு இவ்வூர் மத்யஸ் தன் பூசங்குடையார் திருவையாறுடையான் சங்க ..... எழுத்து அறுநூறும் கிட்டதுவ.

முதல் கல்வெட்டில் கூறப்பெற்ற செய்திகள் : இத் திருப் பயற்றூரில் பஞ்சநதவாணன் என்பவனுக்கு நோயால் வருந்திய கண் நன்ருகும்படி, அவன் சாதியார் அறுநூறு காசுக்குத் திருச் சிற்றம்பலமுடையானுக்குச் சொந்தமாயுள்ள கிடங்கு நிலம்

*இதனுல், கௌரமானம் தமிழகத்திலிருந்த உண்மைபுலனுகும்.
' திங்கள் ' சாந்திரமானம் குறித்தது. — முத்து. சு.

அரைமா வாங்கிச் சிவபெருமானுக்கு உரிய நிலமாக விட்டுள் ளனர்.

குறிப்பு :- கல்வெட்டின் தொடக்கத்தில் ஸ்வஸ்தி என்று இருப்பது மங்களம் உண்டாகுக என்ற பொருளைத் தருகிறது. திரிபுவனச் சக்கரவர்த்தி என்பது சேர, சோழ, பாண்டிய நாடு களுக்குத் தலைவன் என்ற பொருளைத் தருகிறது. இதில் குறிக் கப்பெற்ற சோழ அரசன் இரண்டாம் இராசராசன் அல்லது மூன்றும் இராசராசனுக இருக்கவேண்டும். இரண்டாம் இராச ராசன் என்பவன் தில்லை அம்பலத்திற்குப் பொன் வேய்ந்த இரண்டாம் குலோத்துங்கனுடைய மகன் ஆவன். இந்த இராச ராசன் கி. பி. 1146 இல் சிங்காதனமேறினுன். மூவருலா என்ற வற்றுள் ஒட்டக்கூத்தர் இவனை இரண்டாவது உலாவின் பாட்டுடைத் தலைவனுக வைத்துப் பாடியுள்ளார். மூன்றும் இராச ராசனுயின் இவன் காலம் 12 ஆம் நூற்றுண்டின் கடைப்பகுதி யாக இருக்கவேண்டும். எனவே இக் கல்வெட்டுக்கள் சுமார் 750 ஆண்டுகட்கு முற்பட்டனவாகக் கருதப்படுகின்றன.

## 9. திருப்பூந்துருத்தி

இருப்பிடம் :- இத் தலம் தஞ்சை மாவட்டத்தில் திருக் கண்டியூருக்கு மேற்கே இரண்டு கல் தொலைவிலுள்ளது. சோழ மன்னன் துருத்தியை வைத்துப் பூசிக்கச் செய்ததனுல் திருப்பூந் துருத்தி என்று பெயர் வந்ததென்று கூறுவர். ஆற்றிடைக் குறையில் உள்ள பகுதியைத் துருத்தி என வழங்குவது உண்டு இது சப்தஸ்தான தலங்களில் ஒன்று.

இறைவர் :- புஷ்பவனநாதர்.

இறைவி :- அழகார்ந்தநாயகி ; சுந்தரநாயகி.

இங்குத் திருஞானசம்பந்தப்பெருமான் இறைவனை வழிபடு வான் வேண்டி இவ்வாலய நந்திகள் விலகியனவாகக் கூறுவர். இத் தலம் தேவேந்திரன், காசிப முனிவர், சோழன் முதலானோர் பூசித்த பெருமையுடையாகும்

இது திருநாவுக்கரசு பெருந்தகையார் திங்களும் ஞாயிறும் தோயும் திருமடம் ஒன்று அமைத்துக்கொண்டு எழுந்தருளி

யிருந்து பல்வகைத்தாண்டகங்களையும் திருவங்கமாலையுள்ளிட்ட பல பதிகங்களையும் அருளிய பெருந் தலமாகும். இந் தலத்தில் இவ்வாறு அப்பர்பெருமான் இருந்தபோது பாண்டிநாட்டிற்குச் சென்று வல்லமணரை வாதில் வென்று தென்னவன் கூன் நிமிர்த்தருளித் திருநீற்றின் ஒளி பரப்பித் திரும்பி வந்து திருப் பூந்துருத்தியை அடைந்தார். அதுபோது அவருடைய முத்துச் சிவிகையினை ஒருவரும் அறியாது தாங்குவாருடன் தாங்கிவந்து சம்பந்தர், எங்குற்றார் அப்பரெனக் கேட்டபோது ' அடியேன் உம்மடிகள் தாங்கி வரும் பேறு பெற்றிங்குற்றேன் ' என்று அப்பர் பெருமான் கூறியதும் ஞானசம்பந்தர் சிவிகையினின்றும் இறங்கி இருவரும் வணங்கி அளவளாவில் சில காலம் தங்கி யிருந்த திருத் தலமாகும். இதற்குத் திருப்பதிகங்கள் மூன்று உள்ளன.



குறிப்பு :- முதன் மூன்று திருமுறைப் பதிப்புக்களிலும் உள்ள தலங்கள் அல்லாத சிற்சிலவற்றின் வரலாற்றுக் குறிப்பே இவ் வெளியீட்டில் உள. திருவதிகைக்கு மட்டும் முதற்றிரு முறையில் வெளியிடப்படாத செய்திகள் இதிற் சேர்க்கப்பட்டன.

உ
வாகீச குருபாதம் துணை

## நாலாந் திருமுறையில் உள்ள

# பண்களும் பதிகத் தொகையும்

| | பண் | திருப்பதிகம் | திருப்பதிகத் தொகை |
|---|---|---|---|
| 1 | கொல்லி | | |
| | திருப்பதிகம் (முதலாவது) | 1 | 93 |
| | திருநேரிசை | 22—79 | |
| | திருவிருத்தம் | 80-113 | |
| 2 | காந்தாரம் | 2—7 | 6 |
| 3 | பியந்தைக்காந்தாரம் | 8 | 1 |
| 4 | சாதாரி | 9 | 1 |
| 5 | காந்தாரபஞ்சமம் | 10—11 | 2 |
| 6 | பழந்தக்கராகம் | 12—13 | 2 |
| 7 | பழம்பஞ்சுரம் | 14—15 | 2 |
| 8 | இந்தளம் | 16—18 | 3 |
| 9 | சீகாமரம் | 19—20 | 2 |
| 10 | குறிஞ்சி | 21 | 1 |
| | | திருப்பதிகங்கள் | 113 |

குறிப்பு :- திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம் என்பன யாப்பியல் பற்றிய பெயர்கள். பண்ணல்ல. திரு என்னும் அடைமொழியோடு பண்களை வழங்குவதில்லை. திருமுறை கண்ட புராணத்தின்படி பண்கள் வேறு கூறுவர்.

உ
சிவமயம்

## நாலாந் திருமுறையில் உள்ள

# திருப்பதிக வரலாறுகளுட் சிறந்தவை

| | சிறப்பு | பாட்டெண் | பதிகஎண் |
|---|---|---|---|
| 1 | சூலை நோய் நீக்கியது | 1— 10 | 1 |
| 2 | கொல்ல வந்த களிறு கும்பிட்டு மீண்டது | 11— 20 | 2 |
| 3 | திருவையாற்றிற் கயிலைக்காட்சி பெற்றது | 21— 31 | 3 |
| 4 | பழமொழி | 42— 51 | 5 |
| 5 | சிவனெனும் ஓசை | 72— 81 | 8 |
| 6 | திருவங்கமாலை | 82— 93 | 9 |
| 7 | ஆழிமிசைக் கல்மிதப்பில் அமர்ந்தது (நமசிவாயத் திருப்பதிகம்) | 104—113 | 11 |
| 8 | தசபுராணம் | 134—144 | 14 |
| 9 | பாவநாசத் திருப்பதிகம் | 145—155 | 15 |
| 10 | நஞ்சு தீர்த்த திருப்பதிகம் | 177—186 | 18 |
| 11 | திருவாரூர்த் திருவாதிரைச் சிறப்பு | 208—217 | 21 |
| 12 | திருவாவடுதுறையில் ஆளுடைய பிள்ளையார்க்கு ஆயிரம் பொன் அருளியதை உணர்த்தியது | 538 | 56 |
| 13 | மன்றுளாரது 'என்று வந்தாய்' என்னும் திருக்குறிப்பு | 781 | 81 |
| 14 | தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் உண்மை | 976—985 | 101 |
| 15 | திருவாரூர்ப் பங்குனியுத்தரச் சிறப்பு | 987 | 102 |
| 16 | நம்பிநந்தியடிகள் திருத்தொண்டின் பெருமை | 987 | ,, |
| | ,, | 989 | ,, |
| | ,, | 991 | ,, |

# திருநாவுக்கரசு நாயனார்

எழுதியவர்

தருமபுர ஆதீனப் புலவர்,
பல்கலைக்கல்லூரி பிரின்ஸிபால், சித்தாந்த சிரோமணி,
சித்தாந்த ரதநாகரம், மதுரகவி, முதுபெரும்புலவர்.

**வித்துவான், திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்**

திருமுனைப்பாடி நாட்டுத் திருவாமூரில் சைவ வேளாளர் குலத்தில், குறுக்கையர் குடியில் தோன்றியவர். புகழனார்க்கும் மாதினியார்க்கும் திலகவதியார்க்கும் பின் வந்தவர். ‘மருள் நீக்கியார்’ என்ற பெயரினர். கலை பலவும் நிரம்பக் கற்றவர். இருவரும் பெற்றோரை இழந்தனர்.

திலகவதியாரை மணக்க இசைந்த கலிப்பகையார் சோழ மன்னன் படைத் தலைவர். அவர் சென்று வடநாட்டு மன்னரோடு நெடுநாள் போர் புரிந்து துறக்கம் உற்றார். அதை அறிந்த திலகவதியார் தாமும் இறக்கத் துணிந்தபோது, மருள்நீக்கியார் விழுந்து வணங்கி, ‘அன்னையும் அத்தனும் அகன்ற பின்னையும் நான் உம்மை வணங்கப் பெறுதலினால் உயிர் தரித்தேன். இனி என்னைத் தனியாகக் கைவிட்டு ஏகுவீர் எனில், யானும் உமக்கு முனனம் உயிர் நீப்பன்’ என்று மொழிந்து இடருள் முழுகினார். திலகவதியாரும் ‘தம்பியார் உளராக வேண்டும் என வைத்த தயா’, இறப்பை விலக்க, உயிர் தாங்கி, அம் பொன் மணி நூல் தாங்காது, அனைத்துயிர்க்கும் அருள் தாங்கி, மனைத்தவம் புரிந்திருந்தார். சிவபெருமான் திருவடிக்கண் அன்பு பூண்டு, திருவருள் நெறி ஒழுகி வாழ்ந்தார்.

மருள்நீக்கியார் சமண சமய நூல்களைக் கற்றார். அச் சமயத்தைச் சார்ந்தார். சமணர்க்குத் தலைவராய்த் தருமசேனர் எனப் புகழ் பெற்று விளங்கினார்.

திருவதிகையில் திருத்தொண்டு புரிந்துறையும்திலகவதியார், தம் தம்பியார் பர சமயமான படுகுழியில் வீழ்ந்து கெடுவதை

ஆற்ருராய். திருவீரட்டானேசுவரரை நாள்தோறும் வேண்டி, அக் குழியினின்றும் சைவ சமயப் பேரின்பக் கரையில் ஏற்றி யருளப் போற்றினர். 'சூலை நோய் தந்து ஆட்கொள்வோம் கவலாதே' என்று கனவில் அருளினர் அதிகைப்பிரானர். அவ்வாறே அவர்க்குச் சூலை நோய் உண்டாயிற்று. மந்திரம் முதலியவற்ருல் நீக்க முயன்றனர். நோய் மேன்மேல் மிகுந்ததே அன்றிக் குறைந்திலது. மிக வருந்தித் தமக்கையார்க்குச் சொல்லி அழைத்துவர ஆள்விட்டார். அவர் அங்கு வாரேம் என்ருர். மருள்நீக்கியாரே தமக்கையார்பால் ஏவலன் துணைக் கொண்டு வந்தார்; கண்டார்; வணங்கினர்.

திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்பப், பெருவாழ்வு வந்ததெனப் பெருந்தகையார்பணிந்து ஏற்று உருஆர அணிந்து. உற்ற இடத்து உய்யும் நெறி தரும் அவர், முன் செல்லப் பின சென்று, திருவீரட்டானத்திறைவர் பெருங்கோயிலைத் தொழுது வலங்கொண்டு இறைஞ்சி நிலமிசை விழுந்தார் தம்பிரான் திருவருளால் தமிழ்மாலைகள் சார்த்தும் உணர்வுற்ருர். குருவருள் கிடைக்கப்பெற்ருர்.

'கூற்ருயினவாறு விலக்ககிலீர்' எனத் தொடங்கும் திருப் பதிகம் பாடினர். சூலை அகன்றது திருவருள் பெறத் துணையா யிருந்த சூலைக்குச் செய்யும் நன்றியை நாடினர். சிவபிரான், செந்தமிழின் சொல் வளப் பதிகத் தொடை பாடியதற்குத் திருவுளம் மகிழ்ந்ததால், 'நாவுக்கரசு' என்னும் பெயர் வழங்குக என்று வானிலே உடலிலியொலியாக ஒரு வாய்மை எழுந்தது. அந்நாள் முதல், முப்பொறித் தூய்மையொடும் திருப்பணி செய்பவராய், சிவ சின்னம் பூண்டு, தியானம் ஞானம் திருவாசகம் உழவாரம் எல்லாம் கொண்டு கசிந்துருகி வழிபட்டு இன்புற்றிருந்தார்.

சமணர் துன்புறுத்த முயன்று, நீற்றறையில் இட்டனர். 'ஈசன் அடியார்க்கு ஈண்டு வருந்துயர் உளவோ'? 'வீங்கிள வேனிற் பொழுது; தைவருதண் தென்றல்; தண்கழுநீர்க் குளம்போன்று; மொய் ஒளி வெண்ணிலவு அலர்ந்து; மாசில் வீணை யொலியினதாகி; ஈசன் எந்தை இணையடி நீழல் அருளாகிக் குளிர்ந்தது அந்நீற்றறை. மாசிலாமதியும் மங்கை யாம் கங்கைப் புனலும் மன்னி வளர் சென்னியன்எனப் பேச இனியானை வணங்கி இனிதிருந்தார் நாவரசர். ஏழுநாள் கழித்து,

பல்லவனும் சமணர் பல்லவரும் நீற்றறையைத் திறந்து பார்த்தனர். வியந்தனர். இன்ப வெள்ளத்தில் முழுகி அம்பலவாணர் மலர்த்தாளமுதுண்டு தெளிந்து உவந்திருந்த நாவரசரைத் தீய நஞ்சு கலந்த பாலடிசில் உண்ணப் பண்ணினர். எந் நஞ்சும் அமுது ஆம் எங்கள் நாதன் அடியார்க்கு, இந் நஞ்சும் அமுதாயிற்று. ஆனது அற்புதமோ? ஆளுடைய அரசரை மிதிக்க யானையை ஏவினர். அது பாகனையும் சமணரையும் சுண்ணம் ஆக்கி, நம் அண்ணலை வணங்கிப் போயிற்று. மந்தரகிரி போலும் அது மன்னனையும் வருத்திற்று.

கற்றூணைப் பூட்டிக் கடலிற் பாய்ச்சினர் சமணர். சொற்றுணை வேதியன் பொற்றுணைத் திருந்தடி தொழுது நீலக்குடியரன் நல்ல நமச்சிவாய நாமத்தை நவிற்றி நன்றே உய்ந்தார் நாவரசர். மும்மலமான கல்லில் இருவினையான கயிற்றால் ஆர்த்துப் பவக்கடலிற் பாய்ச்சப்படும் மாக்களை முத்திக் கரையில் ஏற்றியருளும் அத் திருவைந்தெழுத்து, நாவரசை இவ்வுவர்க் கடலின் ஆழாது ஒரு கல் மேல் ஏற்றுதல் வியப்போ? திருப்பாதிரிப்புலியூரை அடுத்த கரையேறவிட்டகுப்பமே அவ்வுண்மையைத் தேற்றிநிற்கும் சான்றாகும் அத் 'தோன்றாத் துணை' யைத் தொழுது உண்மையை உணர்வார் உணர்க.

சொல்வேந்தர் திருவதிகையிற்சென்று வழிபட்டு வாழ்ந்திருந்தார். பல்லவ மன்னன் பல்லவமும் நீங்கி நல்லவனாகி, நாயனாரை வணங்கித் தூயனும் சைவனும் ஆனான் சமணருடைய மடம் கோயில் முதலியவற்றைச் சிவாலயம் ஆக்கினான்.

"பாடலி புத்திரத்தில் அமண் பள்ளியோடு பாழிகளும்
கூடஇடித்துக் கொணர்ந்து குணபரவீச் சரம்எடுத்தான்".

நாவரசர் சிவதலம் பலவற்றை அடைந்து வழிபட்டுப் பாடினார் சமண்சார்பு தீர நினைந்து வேண்டித் திருத்தூங்கானை மாடத்தில் 'வடிவேறு திரிசூலக் குறி' 'இடபம்' ஆகிய இலச்சினை திருத்தோளிற் பொறிக்கப்பெற்றார். தில்லைச்சிதம்பரத்தை வணங்கி எல்லையில்லா இன்புற்றார். திருக்காழியில் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரை வணங்கி, 'அப்பர்' எனப் பெயர் உற்றார். ஆனந்தவுருவானார். அளவில்லாச் சிவதலங்களை வழிபட்டுத் திருச்சத்திமுற்றத்தில் திருவடி சூட்ட வேண்டினார். திருநல்லூரில் நனைந்தனைய திருவடி தலைமேல் வைத்தருளப் பெற்று நம்மையும் வாழ்வித்தார். திங்களூரில் தம்மை

மறவாது தம் திருவடியையே என்றும் அன்பால் செப்பும் ஊதியம் கைக்கொண்ட அப்பூதியடிகளாரின் பிள்ளையான மூத்த திருநாவுக்கரசு, நச்சராத் தீண்டி இறக்க. திருவருளைத் துணைக்கொண்டு, உயிர்ப்பித்தருளினார்.

திருவாரூர் முதலிய தலங்களைப் போற்றினார். திருஞான சம்பந்தர் முருக நாயனார் முதலோரோடும் திருப்புகலூர் முதலிய வற்றை வழிபட்டார். திருவீழிமிழலையிற் படிக்காசு பெற்றுப் பஞ்சம தீர்த்து மக்களை வாழ்வித்தார். திருமறைக்காட்டில விண்ணோர் பூசித்துச் சார்த்திய திருக்கதவுதிறக்கப், பண்ணினேர் மொழியாளுமைபங்கரைப் பாடினார். சோணாடு, நடுநாடு, தொண்டைநாடு முதலியவற்றில உள்ள பல சிவதலங்களைப் பணிந்தார். திருக்கயிலையை வணங்கப் பெருமுயற்சிகொண்டு பேரிடரப்பட்டார். பந்தணவும் மெல்விரலாள் பங்கன திங்களணி செஞ்சடையன் அந்தணன ஆகிப் போந்து, உரையாடி, பழுதிலாத் திருமேனியாக்கி, அழுதுருகிநிற்கும் ஐயரை ஐயாற்றிற் சென்று பொய்கையிற் கயிலையைக் காண்க என்று ஏவி. அவ்வாறே காட்டக் கண்டு களித்துப் பாடினார். அங்கு அது திருக்கோயிலாகி இன்றும் இலங்குகின்றது.

திருப்பூந்துருத்தியிற் சென்று வழிபட்டுத் தங்கியிருந்தார். காழிவேந்தர் பூழிவேந்தனை வாழ்வித்து மீண்டு அங்குற்றநாளில், சிவிகை தாங்கிப் புவியில் ஓங்கினார். அவ்வூர்த் திருமடத்தில் வாழ்ந்தனா இருவரும் சிலகாலம்.

பாவேந்தர் பாண்டிநாடடைந்தார். திருவாலவாய், திருவிராமேச்சுரம முதலியவற்றை வழிபட்டார். சோணாட்டை மீண்டும் உற்றார். திருப்புகலூரிலே வழிபாடு செய்துகொண்டிருந்தபோது, உழவாரப்படையால் செதுக்கும் இடங்களில், பொற்குவையும் நவமணிக்குவையும் தோனற அவற்றை ஓடும் கல்லுமாக மதித்து வீசியெறிந்தார் குறைவிலாதநிறைவினார். வானர மகளிர் வந்து வானரச் செயல் பல புரிந்தனர். வாகீசர் மயங்காத மனத்தீசருமாய் விளங்கினார். மயக்கவலியின்றித் தியக்கம் எய்தி மீண்டனர் அம் மகளிர். திருப்புகலூரிலே இடையறாது வழிபட்டு மன்னிய அன்புறுபத்தி வடிவான வாகீசர் பல பாடி, சிவானந்தஞானவடிவேயாகி, அண்ணலார் சேவடிக் கீழ் அமர்ந்துள்ளார். அந்நாள் சித்திரைச் சதயத் திருநாள்.

திருநாவுக்கரசு நாயனார் திருவடி வாழ்க !

உ

சிவமயம்

## நாலாந் திருமுறையிற் குறித்த நாயன்மார் முதலோர்

## திருப்பெயரும் திருப்பாடலும்



---

குறிப்பு :- 990 ஆவது திருப்பாடலில் அரிவாட்டாயரைக் குறித்ததன்று. கோடலி அரிவாள் ஆகாது.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

# திருநாவுக்கரசு நாயனார்

அருளிச் செய்த

# தேவாரத் திருப்பதிகங்கள்

## முதற்றிருமுறை

### 1. திருவதிகை வீரட்டானம்

#### திருப்பதிக வரலாறு

நீரார் கெடில வட நீள் கரையின் நீடுபெருஞ் சீரார் திருவதிகை வீரட்டானஞ் சேர்ந்து நாதன்தாள் நண்ணுவாராய்த் தூய சிவ நன்னெறியே சென்று. பேராத பாசப் பிணிப்பு ஒழிய ஆராத அன்பு பெற்று விளங்கிய திலகவதியார். அச் செம்பவளக் குன்றை - சுட ரொளியைத் தொழுது. என்னை ஆண்டருளினீர் ஆகில், அடியேன் பின் வந்தவனை. ஈண்டு வினைப் பரசமயக் குழி நின்றும் எடுத்தாள வேண்டும் எனப் பல முறையும் விண்ணப்பம் செய்தார். பவ வினை தீர்ப்பவர்அதைத் திருவுள்ளம் பற்றினார்; தபோதனியாரது கனவின் கண் போந்தார்: " நீ உன் மனக் கவலையை ஒழி. என்னை அடைய முன்னமே முனியாகித் தவமுயன்றான் உன் உடன் பிறந்தான்; அன்னவனைச் சூலைமடுத்து ஆள்வன் " என அருளினார்.

அவ்வாறே மருணீக்கியாரைச் சூலைநோய் வழியாய் நின்று தடுத்துக் கொணர்ந்த திருவருள், செய்தவமாதவரது திருமடத்தைச் சேர்த்தது.

அக்கையார் அடியில் விழுந்து இறைஞ்சினர் தம்பியார். பெருமானருளை நினைந்து எழுந்திரீர் என மொழிந்தார் திலகவதியார். மருணீக்கியார் எழுந்து தொழுதார். இஃது அதிகைப்பிரான் அருளே. அப் பற்றறுத்த பரமனடி பணிந்து பணி செய்வீர் எனப் பணித்தார். அவர் அருளை எதிர் ஏற்றுக்கொண்டு இறைஞ்சினர் மருணீக்கியார். திலகவதியார் சிவபெருமான் திருவருளை நினைந்து திருநீற்றைத் திருவைந்தெழுத்தோதிக் கொடுத்துத் திருவீரட்டம் சென்று உள்ளே புகக் குறித்தார். அத் திருவாளன் திருநீற்றினை அப் பெருந்தகையார் பெருவாழ்வு வந்தது எனப் பணிந்து ஏற்று அங்கு உருவார வணங்க வந்தார்.

உற்ற விடத்து உய்யும்நெறி தர முன்பு தோன்றிய திலகவதியார் முன்னே செல்லப் பின்னே சென்றார் பிற்றோன்றலார்.

திருப்பள்ளியெழுச்சி வேளை. திருநீறணிந்த அவர் அகத்திருளும் மாறிற்று. உலகில் இரவில் நிறைந்த புறத்திருளும் போயிற்று.

ஆண்டிற் சிறுமையும் அடிமையிற் பெருமையுமுடைய அம்மையார் திருத்தொண்டிற்குரியவற்றோடு தம்பியாரைக் கொண்டு திருவதிகை மாநகருள் புகுந்தார். இருவரும் தொழுதனர்; வலங் கொண்டிறைஞ்சினர்; நிலமிசை விழுந்து வணங்கினர்.

தம்பிரான் திருவருளால் மருணீக்கியார் உரைத்தமிழ் மாலைகள் சார்த்தும் உணர்வு பெற்றார்; அதனை உணர்ந்தார்; உரைத்தார். அவற்றுள் முதலாவது "கூற்றாயினவாறு விலக்ககிலீர்" என நீடிய இக்கோதில் திருப்பதிகம்.



திலகவதியார் — (திருவதிகை)

பண்　　　　கொல்லி

திருச்சிற்றம்பலம்

கூற்ருயின வாறு விலக்ககிலீர்
　　கொடுமைபல செய்தன நான் அறியேன்
ஏற்ருய்அடிக் கேஇர வும்பகலும்
　　பிரியாது வணங்குவன் எப்பொழுதும்
தோற்ருதென் வயிற்றின் அகம்படியே
　　குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றேன்அடி யேன்அதி கைக்கெடில
　　வீரட்டா னத்துறை யம்மானே.　　1

---

பொருள்

1. திருக்கெடிலம் என்னும் ஆற்றிற்கு வடபால் விளங்கும் திருவதிகை உள்ள திருவீரட்டானம் எனப் பெயரிய மாநகராகிய திருக்கோயிலுள் எழுந்தருளிய சிவபெருமானே, அடியேனுக்கு மருளும் பிணி மாயை ஒரு கூற்று ஆயினவாறு வந்து வருத்தும் சூலை நோயை விலக்கமாட்டீர். (இந்நோயை அடைதற்கு அடியாகக்) கொடுமை பல செய்தன (உளவோ எனின், அவற்றை) நான் அறியேன். விடையானே. இரவும் பகலும் எப்பொழுதும் பிரியாமல் (நின்) அடி (மலர்)க்கே வணங்குவன். என் வயிற்றின் உள்ளடியில் தன்னைத் தோற்ருமல் குடரோடு துடக்குண்டு என்னை முடக்கியிடலால், அடியேன் ஆற்ருமல் வருந்துகின்றேன். இவ் வருத்தம் அகற்றி அடியேனை ஆட்கொண்டருள்வாய்.

திருவதிகை மாநகர்க் கடவுளை மருணீக்கியார் (திருநாவுக்கரசு நாயனுர்) முதன் முதலில் நோக்கியபொழுதில் தம்மை அறியாதே திருவாயினின்றும் போந்த மொழியாவது, தம் உள்ளத்திற் பொருளாக இருந்த துன்பத்தை நீக்கிக்கொள்ளல் வேண்டும் என்பது. அஃது அல்லாமல் வேருென்ருயிருத்தல் பொருந்தாது. அதனுல் தொடக்கத்திலே ‘ கூற்று ஆயினவாறு விலக்ககிலீர் ’ என்று வெளியாயிற்று.

அது கேட்ட முழுமுதற் பொருள், ‘ இக்கூற்று ஆகி வந்த நோயினை அடைந்து வருந்துமாறு பல கொடுமைகளைச் செய்தனை. அக்கொடுமைகளை அடியாகக் கொண்டே இவ்வருத்தம் உண்டாயிற்று ’ என்று குறித்தது.

அதுகேட்ட நாயனர், 'அவற்றை நான் அறியச் செய்திலேன். என்னை அறியாமல் செய்த கொடுமைகள் பல இருக்கலாம். இருப்பினும் நான் அக்கொடுமைக்கோ அவற்றின் பயனுக்கோ கொள் கலம் ஆகும் பெற்றியேன் அல்லேன். இரவிலும் பகலிலும் எப்பொழுதும் பிரியாமல் (இடை விடாமல்) விடையேறி திருவடிக்கே வணங்கும் பணி செய்து கிடப்பேன். திருவடிக்கு அடிமை பூண்ட என்னையும் அவ்வினை வருத்துதல் முறையோ ? ஏற்றுய்க்கு இஃது ஏலாது (அறத்தின் வடிவமே ஊர்தியாம் ஏறு)' என்றார்.

" 'அபுத்தி பூர்வ வினை' ஆயினும் பயன் கோடாமல் அகலாது. இது புத்தி பூர்வ வினையின் பயனே அன்றி அன்ன தாகாது " என்றது மெய்ப்பொருள்.

"அச்சோ! கெடிலத்தின் வடபால் விளங்கும் திருவதிகையில் வீரட்டானத்தில் எழுந்தருளிய அம்மானே ! சூலை நோய் தன்னைப் புலப்படுத்தாமல் என் வயிற்றின் உள்ளடியிலே குடலோடு துடக்குற்று, முடக்கியிடுதலால் உண்டாக்கும் வருத்தத்தினைப் பொறுக்கும் வலியில்லேன். அறிந்து செய்த வினையின் பயனுயினும் அறியாது செய்த வினையின் பயனுயினும், இத் துயரம் தீர்த்து அடியேனைக் காத்தருள்வாய் என்றார் நாயனர்.

## விளக்கம்

வேற்றுச் (சமண்) சமயத்தில் இருந்த காலம் முழுதும் பரசிவனைத் தொழாதாராகியும், இரவும் பகலும் எப்பொழுதும் பிரியாது வணங்குவன் என்றது எவ்வாறு பொருந்தும் எனின், கூறுதும். இது திருநாவுக்கரசு நாயனுருக்கு மட்டும் அன்று. புது நெறியிற் புக்க யாவர்க்கும் தொன்னெறியிற் பற்று நீங்காது; புது நெறியில் ஒரு துணிவுண்டாகாது; பழநெறியிலிருந்தால் இப் பிறவியிலேயே வீடு பெறலாம் என்ற எண்ணம் அகலாது. இஃது உள்ளத்தியற்கை. சைவ சித்தாந்தச் செந்நெறிப்படியும் பரசிவனை மறவாமை வாய்மை யாகின்றது. எவ்வாறு ?

" யாதோர் தேவர் எனப்படுவார்க்கெல்லாம்
மாதேவன் அல்லால் தேவர் மற்று இல்லையே. "

என்று (5—100—9) அவர் திருவாய் மலர்ந்தருளியதாலும் " யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வம் ஆகி ஆங்கே

மாதொரு பாகனுர் தாம் வருவர்'' என்று அருணந்தி தேவநாயனுர் அருளிய திருவாக்காலும், இராப் பகல் எல்லாம் சிவபிரானை மறவாத சீர்த்தி நாயனுருக்கு உண்டு என்பது உறுதியாயிற்று.

'' வாழ்த்த வாயும் நினைக்க மடநேஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன் நெடுங் காலமே.''

என்று அருளினுர் பின்னர். சலம் பூவோடு தூபம் மறந்தறியேன் என்று அருளினுர் முன்னர். இது முரணுவதே? இதுவும் பலர் விஞவுவதே. 'பூக் கைக் கோண்டு அரன் போன்னடி போற்றி லார்......கழிவரே ', ' நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே புக்கு நிற்கும்......புண்ணியன், போக்க மிக்கவர் பூவும் நீரும் கண்டு நக்கு நிற்பன் அவர் தம்மை நாணியே' என்றவற்றையும் 'பல் மலர் தூவித் தோளைக் குளிரத் தொழுவேன்' என்பது முதலிய வற்றையும் ஒருங்குவைத்து நோக்குவார்க்குச் செவ்வன் இறை (நேர்விடை) தோன்றும்.

திருவதிகை வீரட்டானத் திறைவர் விஞ:- ஏன் இங்கு வந்தாய் ? என்பால் தீர்தற்கு உன்பால் உள்ள குறை என்ன ?

மருணீக்கியார்:- அதிகைக் கெடில வீரட்டானத் திறைவரே, இச்சூலை நோய் எனக்குக் கூற்று ஆன வகையை விலக்கமாட்டீர்?

இறைவர்:- ''அவர் அவர் வினைவழி அவர் அவர் அநுபவம்'' உன்னை இச்சூலை நோய் பற்றி வருத்த நீ செய்த வினைகள்தாம் காரணம். வினைப்பயனை வினை செய்தவர் அநுபவித்துத்தான் ஆதல் வேண்டும். பயன் அநுபவிக்காமல் இருக்கும் நெறியில் இறைபணி நின்று வினைசெய்திருப்பாய் ஆயின், உன்னை அவ் வினை வருத்தாது. நீ செய்த பல கோடுமைகள் யாவை ? அறிவையோ ?

மருணீக்கியார்:- கொடுஞ்செயல்களாகச் செய்தன பல வற்றை அறியேன்நான். (அபுத்தி பூர்வ பாவ கன்மம் என்றவாறு)

இறைவர்:- அபுத்தி பூர்வ புண்ணிய கன்மங்களைச் செய்து வரின், அத்தகைய பாவ கன்மம் விலகும். அது செய்து வருகின்ருயோ ?

மருணீக்கியார்:- ஏற்ருய் ! (எருதின் மேல் ஏறிவரும் பெருமானே ! பசுபதீ ! இரவிலும் பகலிலும் எப்பொழுதும் பிரியாமல் அடிக்கே வணங்குவன். வணங்கி வந்தும் அபுத்தி பூர்வ பாவ கன்மம் விலகி யொழியாமல் வருத்துகின்றதே !

இறைவர்:- விலகும் வரையில் வலியைப் பொறுத்துக் கொண்டு தான் இருத்தல் வேண்டும். எவ்வாறு எங்கே உன்னை அது வருத்துகின்றது ?

மருணீக்கியார்:- எனக்கும் தோற்ருமல் என் வயிற்றின் உள்ளடியில் குடலோடு துடக்குற்று என்னை முடக்கியிடுகின்றது. அதனுல் அடியேன் வலியைப் பொறுக்க மாட்டாமல் வருந்துகின்றேன்.

இறைவர்:- நீ வருந்திஞல், நான் யாது செய்வது ?

மருணீக்கியார்:- கெடில நதிக்கரையில் திருவதிகையின் மாநகரில் (பெருங்கோயிலில்) எழுந்தருளிய அம்மானே ! ஆண்டீர் நீயிர். அடியேன் யான். அதனுல் அடியேனைக் காத்தல் ஆண்டீர்க்குக் கடனுகும்.

எச்சம்

கூற்று என்பது உடம்பும் உயிரும் வெவ்வேறு கூருகச் செய்யுங்காரணம் பற்றிய பெயர். சூலை நோய் உடம்பினின்று உயிரை நீக்கும் அளவு வருத்துவதால் கூற்றெனப்பட்டது. சூலை கூற்று அன்று. கூற்ருயிற்று. அதனுல் 'ஆயினவாறு' என்ருர்.

கைலையை எடுத்தபோது நெருக்குண்ட இராவணன் அத்துன்பத்தின் நீங்கத் தக்க வழியைக் (கடவுள் இன்னிசையில் சாமகானத்தில் விருப்பன் என்று சொல்லிக்) காட்டிய பழம் பிறவி நிகழ்ச்சியே இச் சூலைக்கு ஏது என்பதை உணர்த்தக் ' கூற்று ஆயினவாறு ' என்றருளிஞர் என்பது சிலர் கருத்து. கோவை சிவக்கவிமணி சைவத் திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் B. A. அவர்களும் அதைக் குறித்திருக்கின்ருர்கள். கோதாவரிக் கரையில் சமணமே உயர்ந்தது என்று சொற்போர் புரிந்த வரலாறும் அவர்களால் குறிக்கப்பட்டுளது. (பெரிய. அப்பர் புராணம் 70 உரை. பதிகக் குறிப்பு நோக்குக.)

கொடுமை பல செய்தன - கொடுஞ் செயல்களாகச் செய்தன பல. நான் அறியேன் - அறிந்து செய்தேன் அல்லேன். அறியாமற் செய்தனவா யிருக்கும். அபுத்தி பூர்வ பாவ கன்மம் என்றபடி.

கொடுமை - கொடுஞ் செயல். பண்பாகுபெயர். செய்தன - வினையாலணையும் பெயர்.

ஏற்றாய் - (ஏறு - விடை) விடையை யுடையாய்; விளியேற்ற வினைப்பெயராயும் முன்னிலை வினைப்பெயராயும் கொண்டுரைத்தாருமுளர். இராப் பகல் இடைவிடாது செய்யும் வணக்கமே பிறவிப் பிணிக்கு மருந்து. "மனத் தகத்தோர் பாடல் ஆடல் பேணி இராப் பகலும் நினைத்தெழுவார் இடர் களைவாய் நெடுங்களம் மேயவனே!" "இரவோடு பகலதாம் எம்மான் உன்னைப் பரவுதல் ஒழிகிலேன் வழியடியேன்" (1. 52. 2; 3. 3. 8) "எல்லியும் பகலும் உள்ளே ஏகாந்தம் ஆக; ஏத்தும்" (நாலாந்திருமுறை 406)என வருதல் உணர்க.

அடிக்கே இரவும் பகலும் எப்பொழுதும் பிரியாது வணங்குவன். அடிக்கே-என்பதில் உள்ளவாறு, அப்பர் அருளிய மூன்று திருமுறையுள்ளும் பற்பல இடத்திற் காணலாம். 'சிவனடியே சிந்திக்கப்பெற்றேன் நானே' என்பது பல திருப்பாக்களின் முடிவாயுள்ளது. 'விசயமங்கை ஆண்டவன் அடியே காண்டலே கருத்தாகி யிருப்பன்' 'நல்லுருவிற் சிவனடியே அடைவேன்' 'சிவபெருமான் திருவடியே சேரப்பெற்றேன்' 'திருவாரூர் மணவாளா நின்னடியே மறவேன்' உன்னை அல்லால் யாதும் நினைவிலேன்' என்று அண்ணாமலையாகிய தீச்சான்றாகச் சொல்லியருளினார். "எம்பெருமான் திருவடியே எண்ணின் அல்லால் கண்ணிலேன் மற்று ஓர் களைகண் இல்லேன் கழலடியே கை தொழுது காணின் அல்லால்.. ...உணர மாட்டேன் புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே' என்பவற்றால் திருவடிக்கே யன்றி மற்று எதற்கும் தம் வணக்கத்தை உரித்தாக்காத உறுதியுடையவர் வாகீசப் பெருந்தகையார். ஆறுவது திருமுறையின் இம் முதல் திருப்பாட்டில் 'அடிக்கே' என்றருளினார். ஈற்றுப் பதிகத்தின் ஈற்றடியில் எல்லாம் 'அடிக்கே' என்பது அமைந்தவாறு அறிக. 'ஒற்றை யேறுடையான் அடியே அலால் பற்று ஒன்று இல்லிகள் மேற்

படைபோகலே' என்பதில், 'சிவனடியே சிந்திக்கும் திருப் பெருகு சிவஞானம்' உடையவர்க்கு இறப்பு இன்மை உணர்த்திய வாறும் உணர்க. இதனை உணர்வார் அனைவரும் தம் தம் முப் பொறிகளையும் சிவபிரான் திருவடிக்கே உரியனவாம் வகையிற் செலுத்தும் அருள் வாழ்வு நடத்துவதே வையத்துள் வாழ்ந்தும் அருள் வானத்தில் வாழ்ந்து பெறும் பேரின்பத்தை அடைவிக்கும்.

'ஏயிலானை என் இச்சை அகம்படிக் கோயிலானை' (5. 91. 1) ஈற்றுத் திருக்குறுந்தொகையுள் 4, 8, 9 ஆம் திருப் பாடல்களை நோக்கின், திருநாவுக்கரசர் திருவுள்ளக் கிடக்கை இனிது புலனாகும். சிவபத்தர்க்குளதாகும் பேரின்பம் விண்டு பத்தர்க்குண்டாகாது என்று அறுதியிட்டுக் கூறியதுணர்க.

அகம்படியே :— அகம்பு×புறம்பு. அகம், புறம் என்பன வற்றின் ஈற்றில், புகாரம் இயைந்து வழங்குதல் இன்றும் அறிய லாம். புகாரத்தோடு சேர்ந்தவை அகன், புறன் என்றலும் ஆம். அகம்பு + அடிமை + தொழில் = அகம்படிமைத்தொழில். திருக் கோயிலின் உட்டுறை வினைஞர் அகம்படியர் ஆவர். திருநாளைப் போவாரை, "நாளைப் போவாராம் செயலுடைப் புறத் திருத் தொண்டர் திறத்தினை மொழிவாம்" 'திருவாயிற்புறம் நின்று ஆடு தலும் பாடுதலும் ஆய் நிகழ்வார்.' 'தம் பெருமான் இடம் கொண்ட கோயில் புறம் வலம் கொண்டு பணிந்தெழுந்து' 'மதிற் புறத்தின் ஆராத பெருங்காதல்......வளர்ந்தோங்க உள்ளுருகிக் கைதொழுதே........ திருவெல்லை வலங்கொண்டு செல்கின்றார்'. "மதிற்புறத்துப் பிறை யுரிஞ்சுந் திருவாயில் முன்னாகப்...... நெருப்பமைத்தகுழி" என்பவற்றால், புறம்படிமை விளங்கும். 'நடமாடுங் கழல் உன்னி அழல் புக்கார்........எரியின் கண்........ மாய........ உருஒழித்துப் புண்ணிய மாமுனிவடி வாய் ........வெண்ணூல் விளங்க வேணிமுடி கொண்டெழுந் தார்', 'வானவர்கள் மலர்மாரிகள் பொழிந்தார்.' 'தில்லைவாழந் தணர்கள் கைதொழுதார்.' 'தொண்டர்களும் பணிந்து மனம் களி பயின்றார்.' திருநாளைப் போவாராம் மறைமுனிவர் தில்லை வாழந்தணரும் உடன் செல்லச் சென்று........கோபுரத்தைத் தொழுது உள்புகுந்தார்........ 'உலகு உய்ய நடமாடும் எல்லை யினைத் தலைப்பட்டார்' என்பவற்றால் அகம்படிமை விளங்கும்.

ஒருவர் திறத்திலேயே அகம்படிமை புறம்படிமை இரண்டும் விளங்குதலைத் திருத்தொண்டர் புராணத்தில் காண்க

நெஞ்சம்உமக் கேயிட மாகவைத்தேன்
    நினையாதொரு போதும் இருந்தறியேன்
வஞ்சம்இது வொப்பது கண்டறியேன்
    வயிற்றோடு துடக்கி முடக்கியிட
நஞ்சாகி வந் தென்னை நலிவதனை
    நணுகாமல் துரந்து கரந்தும்இடீர்
அஞ்சேலும் என்னீர் அதிகைக் கெடில
    வீரட்டா னத்துறை அம்மானே.  2

---

2. திருக்கெடிலநதிக்கரையிலே திருவதிகையிலே திருவீரட்டானத்திலே எழுந்தருளியிருக்கும் ஆண்டவரே. அடியேனது நெஞ்சம் தேவரீர்க்கே உறைவிடம் ஆகப் பண்படுத்தி வைத்துள்ளேன். ஒரு பொழுதிலும் உம்மை நினையாமல் இருந்தறியேன். இச் சூலை நோய் போல்வதொரு கொடுநோயை அடியேன் அநுபவித்தறியேன். அஃது அடியேனது வயிற்றிறோடு துடக்குண்டு முடக்கியிடும்படி நஞ்சாய் வந்து அடியேனை வருத்துகின்றது. அச்சூலை நோயை இனியும் என்னைக் குறுகாத வாறு துரத்துவதும் மறைப்பதும் தேவரீர் செய்திடீர். அஞ்சேலும் (பயம் கொள்ளாமல் இரும்) என்று அபயம் அளித்திலீர்.

வஞ்சம் இது ஒப்பது கண்டறியேன் என்பது:- சூலை நோயைக் குறித்ததாகக் கொள்ளாமல் இறைவனுக்கே நெஞ்சத்தையும் அதன் நினைவையும் உரிமையாக்கியதைக் குறித்ததாகக் கொண்டுரைத்தலும் பொருந்தும்.

அப்பொருளில் வஞ்சம் என்பதற்குப் பொய் என்றல் பொருந்தும். நெஞ்சம் இடமாக நினைக்கும் செயல் என் அநுபவத்தில் பொய் போல்வதன்று. மெய்யே என்றவாறும். வல்+து+அம்=வஞ்சம். மரூஉ. அது (தண்+து+அம்=) தஞ்சம் என்ற மரூஉப்போல்வது.

நஞ்சு ஆகி - நஞ்சினியல்புடையதாகி. ஆகி - போன்று எனலும் ஆம்; 'ஆள்வாரிலி மாடு ஆவேனோ' என்புழிப்போல. 'அஞ்சேலும்':—'அஞ்சேல்' என்னும் முன்னிலை யொருமை ஏவல் வினையின் ஈற்றில் முன்னிலைப் பன்மையேவற்கு உரிய

பணிந்தாரன பாவங்கள் பாற்றவல்லீர்
படுவெண்டலை யிற்பலி கொண்டுழல்வீர்
துணிந்தேஉமக் காட்செய்து வாழலுற்றாற்
சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்
பிணிந்தார்பொடி கொண்டுமெய் பூசவல்லீர்
பெற்றம்ஏற்றுகந் தீர்சுற்றும் வெண்டலைகொண்
டணிந்தீர்அடி கேள்அதி கைக்கெடில
வீரட்டா னத்துறை அம்மானே. 3

'உம்' விகுதி சேர்த்து அஞ்சேலும் என்றதுணர்க. அஞ்சேல் மின், செய்யல்மின் என்பனவும் அன்ன. வாரும் தாரும் செய்யும் உண்ணும் என்பன உடம்பாடு. வாரேலும், தாரேலும், செய்யேலும், உண்ணேலும் என்பன எதிர்மறை. இவ்வாறு ஆட்சியில் இல்லை. 'கொள்ளேலும்' (1, 55, 10, 2, 119, 10) கொள்ளேலும் (1. 135. 10) எனத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருவாக்கில் வந்தமை கண்டுகொள்க. இஃது அரியதோர் ஆட்சி. என்னீர் - என்று சொல்லீர். வார்த்தையிது ஒப்பது கேட்டறியேன் (பா - 5) என்பது போல்வதே, வஞ்சம் இது ஒப்பது கண்டறியேன் என்பது.

3. பிணி முதலியவற்றால் இறந்தவருடைய உடற் சாம்பலாகிய பொடியைக்கொண்டு திருமேனியிலே பூசவல்லீரே, விடையேறி ஊர்தலை விரும்பினீரே, தலையைச் சுற்றிலும் வெண்டலைமாலை கொண்டு அணிந்தீரே, அடிகளே, திருவதிகைக் கெடிலாதி வடபால் விளங்கும் திருவீரட்டானத்தில் எழுந்தருளியுள்ள அரிய கடவுளே, தேவரீர் நும்மைப் பணிந்தவருடைய தீவினைகளைக் கெடுக்க வல்லீர் ஆயினும், இறந்து பட்டவரது வெண்டலையிலே பிச்சையேற்றுத் திரிவீர். நும் வலிமையை நோக்கி ஆளாகலாம் என்று விருப்பம் எழுகின்றது. நீர் பலி கொண்டுழல்வதை நோக்கி இவர்க்கோ ஆளாவது? இவர்க்கு ஆளாவதில் நமக்குப் பயன் உண்டாமோ? ஆகாதோ? என்று ஐயம் தோன்றுகின்றது.

'பணிந்தாருடைய பாவங்களைப் பாற்ற வல்லவராதலின் இவர்க்கு ஆளானால் நம் சூலையைத் தொலைத்தருள்வார்' என்று

முன்னம்அடி யேன்அறி யாமையினுன்
முனிந்தென்னை நலிந்து முடக்கியிடப்
பின்னைஅடி யேன்உமக் காளும் பட்டேன்
சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்
தன்னைஅடைந் தார்வினை தீர்ப்பதன்றோ
தலையாயவர் தங்கடன் ஆவதுதான்
அன்னநடை யார்அதி கைக்கெடில
வீரட்டா னத்துறை அம்மானே. 4

துணிந்து உமக்கே ஆட்செய்து வாழலுற்றேன். அத்துணிவுடன் ஆட்செய்து வாழலுற்றால் என்னைச் சுடுகின்றதாகிய சூலை நோயைத் தவிர்த்தருள்வீர்.

பணிந்தார்+அன்+அ=பணிந்தாரன. வினையாலணையும் பெயர். அன் சாரியையும் ஆறன் வேற்றுமைப் பன்மையுருபும் ஏற்று அவருடைமையாகிய பாவங்கள் என்னும் பன்மைப் பெயர் கொண்டு நின்றது. படுவெண்தலை=பட்டதலை; வெள்தலை. படுதல் - உடம்பினின்று வேறுபடுதல்; தலையின் இயல்பிலிருந்து கெடுதல். துணிவு - தெளிவு. ‘ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்’ குறள். (353) ‘உமக்கு ஆட்செய்து வாழலுற்றால்’ (பாடல் 7). பொடி-இறந்தவரது வெந்த உடம்பின் சாம்பற்பொடி. ‘சடையும் பிறையும் சாம்பற்பூச்சும் கீளுடையும் கொண்ட உருவம்.’ (திருஞான. 239) பெற்றம் - விடை.

ஏற்று:- பேச்சு, பாட்டு, கீற்று, கூற்று முதலியன போன்ற பெயர். பின்னீரடியிலும் கொண்டவாறு முதலடியிலும் விளி யாகக் கொள்ளல் கூடும். சுற்றும் - தலையைச் சுற்றிலும். ‘தலை மாலை தலைக்கணிந்து’ (82) ‘தலைக்குத் தலை மாலை அணிந்தது என்னே’ (7256). அடிகள் என்பது விளியில் அடிகேள் என்று யிற்று. அருமகன்:- அருமான், அர்மான், அம்மான் என மருவிற்று. பெருமகன்:- பெருமான், பேர்மான், பெம்மான் என மருவியவாறும் உணர்க.

4. முன்னம் அடியேன் என்பது ஒரு தனி வாக்கியம். அறியாமை:- சமண் சமயம் புக்க செயலுக்குப் பண்பாகு பெயர். முனிதல் - ஆண்டவன் வினை. நலிதலும் முடக்கியிடலும் சூலையின் வினை. பின்னையும் என்று உம்மை விரித்துரைக்க.

காத்தாள்பவர் காவல் இகழ்ந்தமையால்
கரைநின்றவர் கண்டுகொள் என்றுசொல்லி
நீத்தாய கயம்புக நூக்கியிட
நிலைக்கொள்ளும் வழித்துறை யொன்றறியேன்
வார்த்தையிது வொப்பது கேட்டறியேன்
வயிற்றோடு துடக்கி முடக்கியிட
ஆர்த்தார்புனல் ஆர்அதி கைக்கெடில
வீரட்டா னத்துறை அம்மானே. 5

சமண் சார்தற்கு முன்னமும் அடியேன். அதை ஒதுக்கிய பின்னையும் அடியேன். இடையில் அறியாமையின் விளைவும் அவ் விளைவின் பயனும் ஆம். அவை முறையே சூலையும் அதன் நலிவும் முடக்கிடலும் ஆகும். மூன்றுவதடியில் தன்னை என்றும், தலையாயவர் என்றும் உள்ளது ஒருமை பன்மை மயக்கம் ஆயினும், எதுகை நோக்கியதாகும். என்னை இச் சூலைநோய் பற்றியதன் முன்னும், எனது அறியாமையால் என்னை வெறுத்து இந்நோயால் வருத்தி முடக்கியிடுதலால் பின்னும், அடியேன் குற்றம் அகன்றதும் அன்றி உமக்கு ஆளும்பட்டேன். சமண் சமயம் புகுமுன்னும் அடியேன்; அதை அகன்ற பின்னும் அடியேன்; இடையில் அறியாமையின் விளைவாய் இந்நோயாகிய பயனை எய்தினேன் என்றதுணர்க.

அன்ன நடையுடைய மகளிர் மல்கும் திருவதிகைக் கெடில வீரட்டானத்தில் எழுந்தருளிய அம்மானே (நான்) உமக்கு இப்போதுதான் அடிமையானேன் அல்லேன். சமண் சமயம் சார்தற்கு முன்னேயே அடியேனுயிருந்தேன். அறியாமையின் விளைவாக அமண் சமயம் புக்கதால் என்னை வெறுத்து, எனக்கு இச்சூலை நோயைக் கொடுத்தாய். அது வருத்தி முடக்கியிடுகின்றது. அதனால் அச்சமயத்தை விட்ட பின்னேயும் உமக்கு ஆளும் பட்டேன். ஆட்பட்டேனையும் சூலை சுடுகின்றது. அதனைத் தீர்த்தருள்வீர். தலைவரானவர் கடன் தம்மை அடைந்தவர் வினையைப் போக்குவது அன்றோ? நான் நின் அடியேன். நீ என்னை ஆண்டாய் என்றால் உன்னை அடைந்த என் வினையைத் தீர்ப்பது அன்றோ தலைவனுன உன் கடனுவது?

5. புனல்ஆர் அதிகைக்கெடில வீரட்டானத்துறைஅம்மானே:- நீர் நிறைந்த திருவதிகைக் கெடில வீரட்டானத்தில் உறையும் அம்மானே!

கயத்தைக் காத்து ஆளுவோரது காவலைப் பொருட்படுத்தாமையால், அதன் கரையில் நின்றவர் இக் கயத்தின் நீராழத்தளவு அறிய வினுவிய என்னை நோக்கி நீயே இறங்கிக் கண்டுகொள் என்று சொல்லி (நிலைக்க முடியாதவாறு), இறங்கு துறையில் நீத்துக்கு உரியதாகும் நீர்நிலையில் புகுமாறு நூக்கியிட்டதால், (நீந்தமாட்டாதவனுகி) நிலைக்கொள்ளும் ஒரு வழித்துறையை அறியேனுனேன். இதைப் போல்வதொரு வார்த்தை கேட்டறிந்திலேன்.

காத்தல் - குளத்து நீரைக் கெடுப்பாரைத் தடுத்தல். ஆள்பவர் - காவற்காரர். தம்மைப் பேணுவாரும் ஆவர். இகழ்தல் - பொருட்படுத்தாமை. நீத்து-நீந்து என்னும் முதனிலை திரிந்த தொழிற் பெயர். அடங்கு - அடக்கு, இறங்கு - இறக்கு என்பனவும் அன்ன. முடக்கியிட ஆர்த்தார் (பொருத்திஞர்) என்று இயைக்க. ஆர்த்தவரது அதிகை வீரட்டானம் என்க. கயம் - நீர்நிலை. இயற்கைப் பள்ளம்; ஒருவர், இருவர், பலர் வெட்டுவித்ததன்று. நூக்கியிட:—

" கல்லினேடு எனைப் பூட்டி அமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்கஎன் வாக்கினுல்
நெல்லு நீள்வயல் நீலக்குடி அரன்
நல்ல நாமம் நவிற்றி உய்ந்தேன். "

(நீலக்குடி—திருக்குறுந்தொகைப் பாடல் 7)

என்பது நூக்குமாறு நன்கு புலப்படும்.

சைவ சமயம் விட்டுச் சமண் சமயம் புக்கதனை உளங்கொண்டு பாடியது. இது பிறிது மொழிதலாகும். காத்தாள்பவர் திலகவதியார் முதலோர், காவல் அவரது அறிவுறூஉ. இகழ்தல்- அவற்றைப் பொருட்படுத்தாது வேற்றுச் சமய நூல்களை ஆராய்ந்தறிதல். கரை நின்றவர் பிற சமயத்தார். கண்டு கோள் என்று சொல்லல் சமண் சமயத்துண்மைகளை உணர்ந்து கோள் என்று மயக்குதல். நீத்தாய கயம்புக நூக்கல் சமண் சமயம் புகச்செய்தல். நிலைக்கொள்ளும் வழித்துறை யொன்று அறியாமை வெளிப்படை. அறிந்தால் மீண்டும் சைவத்திற் புகார் அல்லரோ ? 'வார்த்தை இது ஒப்பது கண்டு அறியேன்' என்பது சைவத்தின் உயர்வு குறித்ததாக்கோடலும் பொருந்தும்.

சலம்பூவொடு தூபம் மறந்தறியேன்
தமிழோடிசை பாடல் மறந்தறியேன்
நலந்தீங்கிலும் உன்னை மறந்தறியேன்
உன்னாமம் என்னாவில் மறந்தறியேன்
உலந்தார்தலை யிற்பலி கொண்டுழல்வாய்
உடலுள்ளுறு சூலை தவிர்த்தருளாய்
அலந்தேன்அடி யேன்அதி கைக்கெடில
வீரட்டா னத்துறை அம்மானே. 6

6. திருவதிகைக் கெடில வீரட்டானத்துறை அம்மானே! நீரும் மலரும் புகையும் (பிறவும்) கொண்டு நின்னை வழி படுவதை மறந்தறியேன். தமிழ் மொழியில் அமைந்த நின் புகழோடு இசை பாடுதலை மறந்தறியேன். நன்கிலும் தீங்கிலும் உன்னை மறந்தறியேன். உன் திருப்பெயரை என் (புல்லிய) நாவில் வைத்துச் சொல்லுதலை மறந்தறியேன். இறந்த நான் முகனார் தலையிலே பிச்சை யேற்றுக்கொண்டு திரிபவனே! (அடியேன்) உடலின் உள்ளே மிக்கு வருத்தும் சூலை நோயைத் தீர்த்தருள்வாய். அடியேன் வருந்துகின்றேன்.

சலம் - ஜலம். 'பூவொடுதூபம்' 'தமிழோடிசை' என்பன முறையே அருச்சனையிலும் தோத்திரத்திலும் உள்ளனவாய் உடனிகழ்வன ஆதலின், முதலடிக்கண் வந்த மூன்றனுருபு உடனிகழ்ச்சிப் பொருளவாயின. இருவினையும் பற்றி விளையும் இன்பத் துன்பங்களை நலம் (நன்கு) தீங்கு என்றருளினார். 'உன்', 'என்' என்பவற்றின்கண் முறையே இறைமையாகிய மேலுக்கும் அடிமையாகிய கீழுக்கும் உள்ள வரம்பு ஒலித்தல் காண்க.

" மேலுக்கு நீவரம்பாயினை.............கீழுக்கு நான் வரம் பாயினேன்." (சிவஞான பாலைய—கலம்பகம் 90) உலந்தார் - இறந்தவர்; வாழ்நாள் கடந்தவர். 'உக்கார் தலைபிடித்து உண் பலிக்கு ஊர்தோறும் புக்கார்' (159). 'மாண்டார் தம் என்பும்' (164) என்றதில் உள்ள வரலாறு வேறு.

உடல் வயிற்றைக் குறித்ததுமாம். அலந்தேன் - ஈண்டு நிகழ்வு உணர்த்திற்று. மறந்திருந்த குற்றமும் அதற்குக் காரணமும் பழம் பிறவிகளின் நிகழ்ச்சி. அதனை

உயர்ந்தேன்மனை வாழ்க்கையும் ஒண்பொருளும்
　　ஒருவர்தலை காவல் இலாமையினால்
வயந்தேஉமக் காட்சேய்து வாழலுற்றால்
　　வலிக்கின்றது சூலை தவிர்த்தருளீர்
பயந்தேயென் வயிற்றின் அகம்படியே
　　பறித்துப்புரட் டிஅறுத் தீர்த்திடநான்
அயர்ந்தேன்அடி யேன்அதி கைக்கெடில
　　வீரட்டா னத்துறை அம்மானே.　　7

"ஏழை மாரிடம் நின்று இருகைக்கோடுஉண்
கோழை மாரோடும் கூடிய குற்றமாம்
கூழை பாய் வயற் கோழம் பத்தானடி
ஏழையேன் முன் மறந்து *அங்கு இருந்ததே."

என்னும் திருக்குறுந்தொகையால் அறியலாம்.

7. என்னைத் தலைமையராய்க் காவல்புரிவார் நும்மையல்லாது வேறு ஒருவரும் இல்லாமையால், மனையிலிருந்து வாழும் வாழ்க்கையினும் அதற்கு வேண்டியதாய் நன்னெறியில் வாழும் பொருளினும் நீங்கினேன்; முற்செய் தவச் சிறப்பால் விளங்கினேனாகி நுமக்கே ஆளாகித் தொண்டு செய்து வாழ்தல் உற்றேன். உற்ற என்னைத் துன்புறுத்துகின்றதாகிய சூலை நோயைத் தீர்த்தருளாதிருக்கின்றீர். என் வயிற்றின் உள்ளடியில் குடலைப் பறித்துப் புரட்டி அறுத்து இழுத்திடலால் அடியேன் அஞ்சி அயர்ந்தேன்.

உயர்தல் - ஈண்டு நீக்கத்தைக் குறித்து நின்றது. 'உக்கத்து மேலும் நடுவுயர்ந்து' 'தலைக்கு மேலும் நடு இல்லையாய்' (கலித்தொகை 94) 'நடுவுயர்ந்து என்றது நோன்புயர்ந்தது என்றாற்போல நின்றது'. 'உயருமன் பழி' - 'தாம் செய்த பழி மிகவும் போம்' 'உயர்தல்-நோன்புயர்தல் போல நீக்கத்தின் கண் நின்றது'. (கலித்தொகை 129) என்புழி ஆசிரியர் நச்சினார்க்கினியர் எழுதியுள்ள உரையை ஈண்டு நோக்குக. பிங்கலந்தை 1760 பார்க்க. வயந்து - வளர்ந்து; வயமாக்கி. விளங்கி எனின் வயங்கி எனல் வேண்டும். வயக்கம் - விளக்கம். 'வெண்ணிற வயக்கம் மாண்டது' (தணிகைப். நாட்டுப். 15) பழக்கமும் ஆம்.

* அங்கு - அ(ம் முன்னை)ப் பிறவிகளில்.

இலாமையினால் உயர்ந்தேன் என்க. வயங்கு என்றதோடியைத்தும் பொருள் கொள்ளலாம். ஆயினும் அடுத்த திருப்பாட்டை நோக்கின், அது பொருந்தாமை காண்க.

தலை என்பது சினையாகுபெயராய்த் தலைவர் என்னும் பொருட்டாய் ஒரு தலைவர் என நின்று, தலைவர் ஒருவர் காவல் இல்லாமையினால் உயர்ந்தேன் என்று இயைத்துக் கொள்ளலாயிற்று. ஆசிரியர்க்கு மனைவாழ்க்கையும் பொருளும் இல்லாமையும், 'புல்லோடும் கல்லோடும் பொன்னோடும் மணியோடும் சொல்லோடும் வேறுபாடிலா நிலைமை துணிந்திருந்த நல்லோர்' ஆய் உள்ளமையும்; பொன்னும் மணியும் உழவாரத்தினில் ஏந்தி எறிந்தமையும், அரம்பையர்கள் புரிந்தவற்றால் நிலை திரியாத சித்தத்தினை அத்தனார் திருவடிக்கீழ் நிலைவகலா அன்புருகு மெய்த்தன்மை யுணர்வொடு நிறுத்திச் செய்பணியின் தலை நின்றமையும் அறிவார்க்கு உயர்ந்தமை (நீங்கினமை) உடன்பாடாம். 262, 265 500, 502, 505, 523, 654, 657, 677, 762 ஆகிய பாக்களின் உள்ளவாறு உண்டு என்பார்க்கு உடன்பாடன்று. 'கருவுற்றிருந்துன் கழலே நினைந்தேன் (4-96-5) " கருவுற்ற நாள் முதலாக வுன்பாதமே காண்பதற்கு உருகிற்று என் உள்ளமும் நானும் கிடந்து அலந்து எய்த்தொழிந்தேன் திருவொற்றியூரா! திருவாலவாயா! திருவாரூரா ஒரு பற்றுஇலாமையுங் கண்டிரங்காய் கச்சியே கம்பனே." (4—99—6); 'கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் கருத்துடையேன்' (4—94—6); 'கருவுற்ற காலத்தே என்னை ஆண்டு கழற்போது தந்தளித்த கள்வர்' (6 8 99) என்ற ஈசர் வாக்கால் அவ் வாகீசர்க்கு மனை அறம் இல்லை என்றது உண்டென்பார்க்கு நரகம் இல்லாது போமோ? 'அப் பற்றல்லது மற்றடிநாயினேன் எப் பற்றும் இலன் எந்தை பிரானிரே' (5-96-9) என்ற அப்பர்க்கு மனை வாழ்க்கைப்பற்று இருந்ததாகக் கோடல் பொருந்துமோ?

அவர்க்குப் பற்று இருந்ததாகக் கொள்ளினும், நம்மனோர்க்குள்ள அளவினது அன்று அது. ஏகனுகி இறைபணிநிற்கும் உண்மை நிலையினரிடத்தும் அஞ்ஞான கன்மப்பிரவேசம் உண்டு என்று அருள் நூல்கள் உணர்த்துகின்றன. அக்கன்மப் பிரவேசம் உளதாகாவாறு தடுக்கும் வழி அவனருளால் அல்லது ஒன்றையும் செய்யாமை. அஃதாவது (ஏகனுகி) இறைபணி வழுவாது நிற்றலாகும். அத்தகையோர்க்கும் அஞ்ஞான கன்மப்பிரவேசம்

உண்டாகலாம் எனின், அதனை நம்மனோர்க்குஉள்ள பற்றினளவை நிகர்த்ததாகக் கொள்ளலாமோ? ஏகனுதலும் இறைபணி நிற்றலும் எங்கே? நாம் எங்கே? அத்தகைய சிற்றளவு பற்றுக்கே அப்பர் வருந்துகின்றார் எனக் கொண்டுரைத்தல் தக்கது. அப்பொழுது ‘உயர்ந்தேன்’ என்பது மிகுதிப்பொருட்டாகும்.

சிவனது இச்சையே தனது இச்சை; சிவனது அறிவே தனது அறிவு; சிவனது செயலே தனது செயல். தனக்கென இச்சையும் ஞானமும் கிரியையும் உரியனவாய் இல்லை என்று சிவனுடைய இச்சாஞானக்கிரியை நிகழ்ச்சிகட்குத் தான் ஒரு கருவியாக நின்று ஒழுகுவதே இறைபணி நிற்றலாகும். பசுகரணம் சிவ கரணமாதல் இன்னதே.

திருக்களிற்றுப்படியார்க்குள்ள பழைய உரைகளுள் ஒன்று (சிதம்பரம், சைவத்திரு. முத்து. வைத்தியலிங்கச் செட்டியார் அவர்கள் பதிப்பு. பக்கம். 64).

“சிவன்முதலே அன்றி முதல் இல்லை என்றும்
சிவனுடையது என்அறிவது என்றும்—சிவனவனது
என்செயலது ஆகின்றது என்றும் இவையிற்றைத்
தன்செயலாக் கொள்ளாமை தான்.” (64)

என்னும் திருவெண்பாவிற்கு உரிய உரையின் முதற்கண், ‘முதல் என்பது இச்சை ஞானம் கிரியை மூன்றில் முதலிற் கூறியது இச்சையின் மேற்று’ ‘சிவனுடைய இச்சையே அன்றி நமக்கு இச்சையில்லை’ என்று உணர்த்துகின்றது. ஆங்கு, அறிவும் செயலும் கூறப்படுதலின், ‘முதல்’ என்றது இச்சை என்னும் பொருளதேயாகும். இதனை அறியாதார் வேறு கூறுவது பொருந்தாது.

அதனால், ‘முதல்’ என்றது இச்சையையே. அடுத்த இரண்டும் சிவனது ஞானம் சிவனது கிரியை என ஆறனுருபிற் கூறியதால், ‘சிவன் முதல்’ என்றதும் ஆறன்றொகையாகும். எழுவாய்த் தொடராகாது. பசுகரணங்கள் சிவகரணமாகத் துன்னிய சாக்கிரமதனில் துரியாதீதம் தோன்ற முயன்று சுவாநுபூதிகமான சிவாநுபவம் உடையவர்க்கு அம்மூன்றும் சிவனுடையனவாக நிகழ்வனவே ஆகும். ஆகாவேல், சிவகரணம் அல்ல; பசு கரணமே அவை. அவரும் சிவாநுபவத்தரல்லர்.

வலித்தேன்மனை வாழ்க்கை மகிழ்ந்தடியேன்
வஞ்சம்மனம் ஒன்றும் இலாமையினால்
சலித்தால்ஒரு வர்துணை யாருமில்லைச்
சங்கவ்வெண் குழைக் காதுடை யெம்பெருமான்
கலித்தேயென் வயிற்றின் அகம்படியே
கலக்கிமலக் கிட்டுக் கவர்ந்துதின்ன
அலுத்தேன்அடி யேன்அதி கைக்கெடில
வீரட்டா னத்துறை அம்மானே. 8

திருக்களிற்றுப் படியாரில் 63-ஆவது திருவெண்பாவில், கூட்டில் வாட்சார்த்தி நில்லாதார் வீட்டிலே சென்று வினை யொழிந்து நின்றாலும் நாட்டிலே நின்று நல்வினைகள் செய்தாலும் பயனொன்றும் இல்லை என்று கூறி. அடுத்த திருப்பாட்டிலே கூட்டிலே வாட்சார்த்தி நிற்குமாறு விளக்கப்பட்டது. அஃது இறைபணி நிற்றலாகும்.

'ஆன்மாவினது இச்சா ஞானக் கிரியை ஆகிய பசுகரணங்கள் சிவனது கரணமாகிய இச்சா ஞானக் கிரியை முழுதும் ஆவதே ஆன்ம தரிசனம்' (தருமையாதீனத்து வெளியீடாகிய சிவாநந்தபோதசாரத்தின் உரை) ஆன்ம தரிசனமும் சிவரூபமும் ஒருங்கு நிகழ்வன. "சடசித்துக்கள் முழுவதும் சுகப்பிரபையே தனக்கு வடிவாக உடைய சிவம் கலத்தலால் சிவமயம் எனப் பிரபஞ்சத்தைக் காண்பது சிவரூபம் ஆம்". (ஷெ உரை).

இவற்றால், 'முதல்' என்றது இச்சையை ஆதல் இனிது விளங்கும் 'நாயகன் எல்லா ஞானத் தொழில் முதல் நண்ணலாலே காயமோ மாயை அன்று காண்பது சத்திதன்னால்' (சித்தியார், சுபக்கம். சூ. 1 - 41) எனவும், 'இறைவனானவன் ஞானம் எல்லாம் எல்லா முதன்மை அநுக்கிரகம் எல்லாம் இயல்புடையான்' (ஷெ. சூ. 8:-17) எனவும் வரும் இடங்களிலும் முதல் என இச்சையைக் குறித்தது காண்க. நெறிப்பட நிறைந்த ஞானத் தொழிலுடை நிலைமையன் ஆகிய நின்மலன் நினைந்த மேனி நிறுத்தும் முதன்மையன் என்பதில் ஐயம் ஏது? பராசத்தியின் முதல் வேறுபாடு இச்சையாதலினாலும் ஞானம் கிரியைகட்கு (இச்சையாதி) முன்னது ஆதலினாலும் 'முதல்' எனப்பட்டது.

8. அடியேன் மனை வாழ்க்கையை மகிழ்ந்து வலித்தேன். காரணம் யாது? மனவஞ்சம் ஒரு சிறிதும் இல்லாமையினால்.

பொன்போல மிளிர்வதோர் மேனியினீர்
　　புரிபுன்சடை யீர்மெலி யும்பிறையீர்
துன்பேகவ லைபிணி யென்றிவற்றை
　　நணுகாமல் துரந்து கரந்தும்இடர்
என்போலிகள் உம்மை யினித்தெளியார்
　　அடியார் படுவ திதுவேயாகில்
அன்பேஅமை யும்அதி கைக்கெடில
　　வீரட்டா னத்துறை அம்மானே. 9

---

துணையாருமில்லை - துணையாவார் யாருமில்லை. என்வயிற்றின் உள்ளடியிலே செருக்கி வளர்ந்து துன்புறுத்திப் பிறழச் செய்து (சிந்தா. 1067 - 1613) பறித்துத் தின்ன அடியேன் சோர்ந்தேன். ஒருவர் என்பது ஒருவா என்றிருந்ததோ ?

9. பொன்னைப் போல ஒளி செய்வதொரு திருமேனி யுடையீர் ! முறுக்குண்ட பொற்சடையீர் ! கலையிற் குறையும் பிறையுடையீர் ! துன்பமும் கவலையும் பிணியும் நணுகாமல் துரந்தும் இடர். கரந்தும் இடர். என்னைப்போல்வார்கள் இனி உம்மைத் தெளிய உணரமாட்டார்கள். அடியார் படுவது இதுவே ஆகில் அன்பே அமையும். வீரஸ்தாநம் - வீரட்டானம். மூலஸ்தாநம் - மூலட்டானம் என்பது போல்வது.

மிளிர்தல் - விளங்குதல். புன்சடை - பொன்போலும் செஞ்சடை. புன்மை (அற்பம்) எனல் சிவாபராதம். மெலிதல் - கலையிற் குறைதல். பிறை - பிறத்தலாகிய ஏதுப்பற்றிய பெயர். பிணித்தல் - கட்டுதல். கட்டில் - பிணிப்பினையுடைய இல்வாழ்க்கை (சிந்தாமணி 1981). 'துன்பத்தால் தொடக்கினேன்' (சிந்தாமணி 579) என்ற இடத்து, துன்பமும் அதனுலுறும் பிணிப்பும் வேறுதல் நன்கு விளங்கும். யாது செய்வல் என்ற கவலை (சிந்தாமணி 302). அமைதி - நிறைவு (சிந்தா. 78). என்போலிகள் - போல்வான், போல்வாள், போல்வது மூன்றும் போலிகள் எனப்படும். போல்வன எனலும் பால்பகா அஃறிணைப் பெயராய் அடக்கப்படும். போல்வார் எனல் பொருந்தாது. கள் ஈறு சேர்ந்து பலர்பாலைக் குறிக்கலாயிற்று. ஆகவே தெளியார் என்னும் பயனிலை கொண்டது.

போர்த்தாயங்கோ ரானையின் ஈருரிதோல்
புறங்கா டரங்காநட மாடவல்லாய்
ஆர்த்தான்அரக் கன்றனை மால்வரைக்கீழ்
அடர்த்திட்டருள் செய்த அதுகருதாய்
வேர்த்தும் புரண்டும் விழுந்தும் எழுந்தால்
என்வேதனை யான விலக்கியிடாய்
ஆர்த்தார்புனல் சூழ்அதி கைக்கெடில
வீரட்டா னத்துறை அம்மானே. 10

திருச்சிற்றம்பலம்

10. ஆர்த்து ஆர் புனல் சூழ் அதிகை - ஒலித்து நிறையும் நீர் சூழ்ந்த திருவதிகை. அங்குத் (தக்கயாகத்தில்) துன்பம் விளைப்பதில் ஒப்பிலாத யானையின் ஈர்மை பொருந்திய உரித்த தோலைப் போர்த்தாய்! புறங்காடே அரங்கமாகத் திருக்கூத்து ஆடவல்லாய். வீரமுழக்கத்தோடு கயிலைமால்வரையைத் தூக்க முயன்ற அரக்கனை இராவணனை அம்மலையின் கீழ் அகப்பட்டு நசுக்குறச் செய்து, அவனது சாமகானத்தைக் கேட்டுத் திருவுளம் இரங்கித் திருவருள் அளித்த அதனை ஈண்டு எண்ணுகிலாய். (எண்ணுவையேல்) வேர்த்தும் புரண்டும் விழுந்தும் எழுந்தும் மற்று யாது நிகழ்ந்தாலும் என் துன்பங்களானவற்றை விலக்கிடு வாய். எண்ணுமையால் விலக்கி யிடுகிலாய். எழுந்தாலும் என்க. உம்மை தொக்கது.

## திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை

புலனொ டாடித் திரிமனத்தவர் பொறிசெய் காமத் துரிசடக்கிய
புனித நேசத் தொடுத மக்கையர் புணர்வி னுலுற்றுரைசெ யக்குடர்
சுலவு சூலைப் பிணிகெ டுத்தொளிர் சுடுவெணீறிட் டமண கற்றிய
துணிவி னுன்முப் புரமெ ரித்தவர் சுழலி லேபட் டிடுத வத்தின
ருலகின் மாயப் பிறவி யைத்தரு முணர்வி லாவப் பெரும யக்கினை
யொழிய வாய்மைக் கவிதை யிற்பல வுபரி பாகப்பொருள்ப ரப்பிய
வலகின் ஞானக் கடலி டைப்படு மமிர்த யோகச் சிவவொ ளிப்புக
வடிய ரேமுக் கருளி னைச்செயு மரைய தேவத் திருவ டிக்களே. 1

## 2. திருவதிகை வீரட்டானம்

### பதிக வரலாறு

பசுபதியார் அடியார்க்கு நஞ்சும் அமுதாயிற்று. அவ்வற்புதத்தைக் கண்டனர் அமணர். அஞ்சினர்; ஓடினர்; காவலனை மேவினர். ' நஞ்சு கலந்து ஊட்டிடவும் எஞ்சுதல் இலன். நமது சமயத்து நஞ்சுதீர் மந்திரவலிமையே அதற்குத் துணையாயிற்று. அவன் துஞ்சிலனேல், எம் உயிரும் நின்முறையும் துஞ்சுவது திடம்' என்றுரைத்தனர். மதிகெட்ட மன்னவனும் அக் கதிகேட்டார் பேச்சைக்கேட்டான். 'அவனைக் கடியும் திறம் எவ்வாறு ?' இது மன்னன் வினா? 'நின்கொற்ற வயக்களிற்றெதிரே விடுவதுதான் இனி செய்யத் தக்கது.' இது அமணர் விடை. காபாலி அடியவராம் வாகீசத் திருவடிமேல் கோபாதி ரூபமான கொலைக் களிற்றைவிடச் சொன்ஞன். பூபாலர் செயலை மேற்கொண்ட புலைத்தொழிலோன், கூற்றினும் மிக்கதாய்க் களிற்று வடிவில் வரும் மதவேற்பு ஊழிமுடிவில் எழும் தீயைப்போல் சினந்து விரைந்து ஓடிப்போந்தது. போந்தால் என்ன ? அப்பரோ அஞ்சுவார் ? அப்பர் உள்ளத்துள் அப்பர் பொற்கழல் இருக்கின்ற தெளிவு, மதகரியை அஞ்சும் மயக்கம் தோன்ருதவாறு தடுத்துப் பாடுவித்தது. அதுவே மண்ணுலகு உய்ய எடுத்து மகிழ்வுடனே பாடியருளிய இத்திருப்பதிகம். இதில், வெஞ்சுடர் மூவிலைச் சூல வீரட்டம் அடியோம் நாம் அஞ்சுவது இல்லை என்று அறைந்திருப்பது காண்க.

பண் காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

சுண்ணவெண் சந்தனச் சாந்துஞ் சுடர்த்திங்கட் சூளா
வண்ண உரிவை யுடையும் வளரும் பவள நிறமும் [மணியும்
அண்ண லரண்முர ணேறும் அகலம் வளாய அரவும்
திண்ணன் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவதி யாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 11

11. சுண்ணம் - பொடி. சுடர் - வெண்சுடர். சூளாமணி - சூடாமணி; உச்சியில் அணிசெயும் அரதனம். வண்ணம் - அழகு; நிறம். உரிவை - தோல். அண்ணல் - தலைமை; பெருமை. அரண் - காவல். அறம்போலக் காவல் பிறிதோன்

பூண்டதோர் கேழ லெயிறும் பொன்றிக ழாமை புரள
நீண்டதிண் டோள்வலஞ் சூழ்ந்து நிலாக்கதிர் போலவெண்
ணூலும்
காண்டகு புள்ளின் சிறகுங் கலந்த கட்டங்கக் கொடியும்
ஈண்டு கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவதி யாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 12

ஒத்த வடத்திள நாக முருத்திர பட்ட மிரண்டும்
முத்து வடக்கண் டிகையு முளைத்தெழு மூவிலை வேலும்
சித்த வடமு மதிகைச் சேணுயர் வீரட்டஞ் சூழ்ந்து
தத்துங் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவதி யாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 13

றில்லை. அறவிடை (தருமவிடபம்) என்னும் பெயர் இங்கு நினைக்கற்பாலது. ஏறு - விடை. அகலம் - மார்பு. அரவு - பாம்பு. திண்+நல்+கெடிலம். திண்மையும் நன்மையும் கெடில யாற்றுக்குரியன. தமர் - அடியவர். யாது என்பதே ஒருமை யுணர்த்தலின் ஒன்றும் என்பது ஒரு சிறிதும் என்னும் பொருட் டாயிற்று. ‘ நற்பைங்கண் மிளிர் அரவாரமும் பூண்பீர் ’ (167).

12. கேழல் - பன்றி. எயிறு - பல். கொம்பு. ‘ ஏனமுளைக் கொம்பு ’ (1. 1. 2) பொன் திகழ் ஆமை - பொன்போல விளங்கும் ஆமை. ‘முற்றல் ஆமை’ (ஷை). நீட்சியும் திண்மையும் தோளின் அடை. வெண்ணூல் வலம் சூழ்தல். வெண்மைக்கு நிலாவொளி ஒப்பு. புள்ளின் சிறகு - கொக்கிறகு. ‘ கொக்கின் இறகர் ’ (1. 71. 7) போல் அ - போலும் அந்த (நூல்). கட்டங்கம்-மழு. மழுக்கொடியும் உண்டு போலும்,

13. நாகம் - பாம்பு. முத்துவடம் என்றதால் அக்காலத் துள்ள கண்டிகையியல்பு விளங்கும். முத்துவடக் கண்டிகை:- ‘ கவர்தலை அரவொடு கண்டியும் பூண்பர் ’. (1. 78. 7) ‘ கண்டியிற்பட்ட கழுத்துடையீர் ’ (928) ‘ மேல் இலங்கு கண்டிகை பூண்டு ’ (1047). இலைக்குரிய அடை முளைத்தெழு என்பது. சித்தவடம் - அதிகைக்கு அருகில் ஒரு சைவ மடம் உள்ள ஊர். சேண் உயர் வீரட்டம் - திருவதிகைவீரட்டத்தின் விண்ணளவும் ஓங்கிய மாநகர்ச்சிறப்புணர்த்திற்று. வீரஸ்தாநம்- வீரட்டானம், வீரட்டம். உருத்திரபட்டம் - (பெரிய மாணக் கஞ்சாற. 23. பார்க்க) தோட்பட்டிகை.

மடமான் மறிபொற் கலையு மழுப்பாம் பொருகையில் வீணை
குடமால் வரையதின் டோளுங் குனிசிலைக் கூத்தின் [பயில்வும்
இடமால் தழுவிய பாக மிருநில னேற்ற சுவடும்
தடமார் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவதி யாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 14

பலபல காமத்த ராகிப் பதைத்தெழு வார்மனத் துள்ளே
கலமலக் கிட்டுத் திரியுங் கணபதி யென்னுங் களிறும்
வலமேந் திரண்டு சுடரும் வான்கயி லாய மலையும்
நலமார் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவதி யாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 15

---

14. மடமான் - இளமான். மறி - கன்று. கலை - ஆண். கலைமான் கன்று ஒரு கையில் உண்டு. மடமான் மறியும் பொற் கலையும் மழுவும் பாம்பும் வீணையும் என்றதாகக் கொள்ளின் பொற்கலை அழகிய ஆடையாம். மான்றோலுடையைச் சிவபிரா னுடையன். ஒரு கையில் வீணை. 'வேயுறு தோளிபங்கன் .........மிக நல்ல வீணை தடவி.........திங்கள் கங்கை......... அணிந்து உளமே புகுந்த' இறைவர் (2. 85. 1) குடமால் வரை - மேற்றிசைப் பெருமலை.வரைய தோள் - மலையை ஒத்த தோள். குனிசிலை - வளைந்த வில். சிலைக்கூத்து - வில்போல் வளைந்து குதிக்குங்கூத்து. குதித்து என்பதன் மரூஉவே 'கூத்து' என்பது. தவளைப்பாய்த்து என்பது போலக் குதித்து என்பதும் துவ்விகுதி பெற்ற தொழிற் பெயர். பயில்வு - பயிற்சி. 'பயில்விக் கயிலைப் பரம்பரனே' (திருவாசகம் 138) என்றதும் ஈண்டு நோக்கத் தக்கது. இடம் - இடப்பால். மால் - திருமால். இருநிலம் - பெரிய மண்ணுலகு. ஏற்ற - தாங்கிய. சுவடு - அடையாளத் தழும்பு. உலகேந்திய திருமால் வரலாறு உணர்க.

15. பலபல காமத்தர் - 'ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப கோடியும் அல்ல பல' 'எண்பது கோடி நினைந்து எண்ணுவன'—எனத் திருக்குறளிலும், மூதுரையிலும் உரைத்த வாறு காண்க. எண்ணியவாறே எண்ணங்களை இடையூறு நீக்கி ஈடேற்றும் கணபதியை வழிபட்டுக் கேட்கும் வரங்களைப் பலபல காமம் என்றருளினர். கலமலக்கிடுதல் - கலந்து பிறழச்

கரந்தன கொள்ளி விளக்குங் கறங்கு துடியின் முழக்கும்
பரந்த பதிகணைச் சுணமும் பயின்றறி யாதன பாட்டும்
அரங்கிடை நூலறி வாளர் அறியப் படாததோர் கூத்தும்
நிரந்த கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 16

செய்தல். நினைத்த பொருள்களை எல்லாம் நல்க. அவை ஒன்றோடு ஒன்று கலந்து, பெற்ற முறைமையில் அன்றிப் பிறழ்ந்து பயன் கொடுக்கின்றமை பற்றிக் கலந்து பிறழ்தலாம்.

மலக்கிடுதல் - மலங்கச் செய்தல். மலங்க - கெட; சுழல; பிறழ. (சிந்தாமணி) கல என்னும் முதனிலை ஈண்டு எச்சப் பொருட்டாய் நின்றது. (இலக்கணக் கொத்துரை) கலக்கி மலக்கிட்டு, பதி - பா. 8 பார்க்க. கணபதி யென்னும் களிறும் உடையார்— 'தனது அடி வழிபடு மவர்இடர் கடி கணபதிவர அருளினன்' (1. 123 5). வெம் பந்து இரண்டு சுடர் - இருளை ஒழிக்கும் வலிமை தாங்கிய செய்யதும் வெளியதுமான இருகதிர். ஞாயிறும் திங்களும் கண்ணாக உடையார். வான் கயிலாய மலை - சிவலோகம். தூய்மை வெண்மை குறித்தது. நலம் - முழுகுவார் தம் கழுவாயில்லாத தீவினைகளையும் தீர்க்கும் நன்மை.

16. காரண கேவலத்திலும்காரிய கேவலத்திலும் உயிர்க்கு உயிராய் நின்று முதல்வன் செய்யும் அருளுதவி குறித்தது இது. திருவருள் விளக்கம் உயிரறியாவாறு மறைந்து நின்று (சிவ போதத்தார்க்கு) ஒளிர்கின்றது பற்றிக் 'கரந்தன கொள்ளி விளக்கு என்றருளினார்'. அத் திருவருளைக் கொள்ளி எனலை 'உற்கை தரும் பொற்கை யுடையவர் போல் உண்மைப் பின் நிற்கை அருளார் நிலை' (திருவருட்பயன் 68) என்பதாலும் அறியலாம். 'இருள் அடாதுஉள்ளுயிர்க்கு உயிராய்த்தெளிக்கும் அறிவு திகழ்ந்துளது'. (கொடிக்கவி 1).

'கண்ணொளி விளக்களித்து ....கருத்தோன்றன்றே'(சிவப் பிரகாசம் 59) 'குன்றா விளக்காய்நிறைந்த விரிசுடரான் '(நெஞ்சு விடு தூது 35) 'அச்சம் அறச் சென்று விளக்கை எழத்தூண்டிச் செஞ்சுடரில்ஒன்றி ஒருவிளக்கின்உள்ளொளியாய்ப்' 'பெருவிளக் கின் பேரொளியின் உள்ளே பிரசம் மருவும் மலர்போல் கதித்து

கோலவரி வேங்கை யதளுங் குவவோ டிலங்குபோற் றோடும்
விலைபெறு சங்கக் குழையும் விலையில் கபாலக் கலனும்
மலைமகள் கைக்கொண்ட மார்பும் மணியார்ந் திலங்கு மி டறும்
உலவு கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவதி யாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 17

அங்கு அருவின் உருக்கொள்ளா அருள் (ஷை. 94—7) என்பவற்றால் திருவருளை விளக்கெனல் அறியப்படும். பதினெண் கணம் - 'அப்பிறை பதினெண் கணனும் ஏத்தவும் படுமே'- புறம்:- கடவுள் வாழ்த்துரை பார்க்க. பாட்டு - சாமகீதம். வேதப் பாடல் எனலுமாம். 'தோடுக்குங் கடவுட் பழம் பாடற்றொடை' 'காலத்தோடு கற்பனை கடந்த கருவூலத்துப் பழம் பாடல்'. (அங்கயற்கண்ணியம்மை பிள்ளைத் தமிழ்).

பயின்று அறியாத - இராவணன் முதலிய சிலர் பயின்றறிந்தன, பலர் பயிலாத அரிய பாட்டு. "பாடல் பயின்ற பல்பூதம்" (18) என்றதுமாம். அரங்கு - கூத்தாடும் இடம். சகளம், அகளம், சகளாகளம் என்னும் வெவ்வேறு நிலைக்கும் உரிய மூவிடமும் அரங்காகும். அவ் வரங்கும் அங்கு ஆடும் கூத்தும் மதி நுட்பத்தால் குருவின் உபதேசம் பெற்றவர்க்கே விளங்கும். எத்துணை நூலறிவுடையார் ஆயினும், ஏனையோர்க்கு எள்ளளவும் விளங்கா. நூலறிவு மட்டும் கொண்டு திருக்கூத்தை உணர முயல்வதும் அவ்வறிவு பெறுமல் அதற்கு விளக்கம் செய்வதும் இக்காலத்தில் மிக்குள்ளன. மதிநுட்பம் நூலோடுடையாரும் குருவின் உபதேசம் பெறுராயின், அவரால் அக்கூத்தும் அது நிகழும் அரங்கும் அறியப்படாமையை உணர்த்தினர் ஆசிரியர். இதில் (18இல்) நாடற்கு அரியதோர் கூத்து என்றதும் உணர்க. நிரந்த - நிரல்பட்ட. 'நிறைகிரி முழுவதும் நிரந்த நீள்முகில்' (சேதுபுராணம். கந்தமா. 22) பரத்தலுமாம் (சிந்தாமணி).

17. அதள் - தோல். குவவு - திரட்சி. தோளுக்கு ஆகுபெயர். குலவு என்று பிழை பட்டது. 'குன்றென வுயரிய குவவுத் தோளினன்' (கம்பர்—பாலகாண். எழுச்சிப். 6) காதில் அசையும் தோடு தோளிற்படுவது நூல்களிற் பயின்றது. போற்றோடு - (பொன்+தோடு) 'தோடுடைய செவியன்'. சங்கக் குழை - சங்கினுல் ஆக்கப்பட்ட குழை. அதற்கு விலைமதிப்பு

ஆடல் புரிந்த நிலையும் அரையி லசைத்த அரவும்
பாடல் பயின்றபல் பூதம் பல்லா யிரங்கொள் கருவி
நாடற் கரியதோர் கூத்தும் நன்குயர் வீரட்டஞ் சூழ்ந்து
ஓடுங் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 18

சூழு மரவத் துகிலுந் துகில்கிழி கோவணக் கீளும்
யாழின் மொழியவ ளஞ்ச அஞ்சா தருவரை போன்ற
வேழ முரித்த நிலையும் விரிபொழில் வீரட்டஞ் சூழ்ந்து
தாழுங் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 19

உண்டு. அவர் ஏந்திய பிரம கபால பாத்திரத்துக்கு விலை மதிப்பு இல்லை. மலை மகள் கைக்கொண்ட மார்பு. 'கொழும் பவளச் செங்கனிவாய்க் காமக்கோட்டி கொங்கையினை யமர் பொருது கோலங் கொண்ட தழும்புளவே வரைமார்பில் வெண்ணூ லுண்டே' (6. 4—10) மணி .. மிடறு - 'மணிகொள் கண்டர்' (1. 28. 4). காரணி மணி திகழ் மிடறு (1. 41. 1). 'கருமணி நிகர் களம்' (1. 124. 3).

18. ஆடல் புரிந்த நிலை - திருக்கூத்தாடிய நிலை. அரை - (நடு) இடை. அரவு - பாம்பு. பாடல் - பாட்டு (16) நோக்குக. 'நாடற்கு அரியது ஓர் கூத்தும்' 'அரங்கிடை நூலறிவாளர் அறியப்படாததோர் கூத்தும்' (16) அக்கூத்தினை நாடற்குப் பல்லாயிரங் கருவி இருப்பினும் அக்கூத்து நாடற் கரியதே. கோயிலைக் கண்டோர் வீரட்டத்தின் நன்குயர்வை அறிவர். ஓடும் கெடிலப் புனல் - வீரட்டத்தைச் சூழ்ந்து ஓடும் புனல்.

19. அரவத்துகில் - ஒலியல். துகில்கிழி - கோவணக்கீள்; கிழிப்பது கிழி. கீழ் - கீள், மரூஉ. குபினம் - அழுக்கு. குபின சம்பந்தம் கௌபீனம்; கோவணம் மரூஉ. யாழின் மொழியவள் - யாழொலி போலும் இனிய மொழியையுடைய உமையம்மையார். வேழம் உரித்தவர் அஞ்சிலர். உரிக்கும் கால் அங்கு இருந்தவர் அஞ்சினர். அஞ்சாமைச் சிறப்புணர்த்த அருவரை போன்ற வேழம். 'கைம்மலை' 'கைவரை' 'நடை

நரம்பெழு கைகள் பிடித்து நங்கை நடுங்க மலையை
உரங்களெல் லாங்கொண் டெடுத்தா னென்பது மொன்று மலற
வரங்கள் கொடுத்தருள் செய்வான் வளர்பொழில் வீரட்டஞ்
நிரம்பு கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம் [சூழ்ந்து
அஞ்சுவதி யாதொன் றுமில்லை அஞ்ச வருவது மில்லை. 20

திருச்சிற்றம்பலம்

மலை ' ' நடைக்குன்றம் ' ' வருங்குன்றம் '. வீரட்டம் சூழ்ந்து தாழும் புனல்.

20. நரம்பு எழு கைகள் :- ' என்பு எழுந்து இயங்கும் யாக்கையர் ' (திருமுருகு. 130.) ' நரம்பு எழுந்துலறிய நிரம்பா மென்றோள் ' (புறம். 278.) என்புழிப்போலக் கொண்டு, நரம்புகள் எழுந்து தோன்றும் கைகள். இது சிவனுக்குப் பொருந்து மேற்கொள்க. ' பண்ணார்ந்த வீணை பயின்ற விரலவன் ' ' இடங் கைவீணை ஏந்தி ' 'பண்ணமர் வீணையினன்' 'மிக நல்ல வீணை தடவி ' ' நுண்ணூற் சிரந்தை யிரட்டும் விரலன் ' (பதிற்றுப் பத்துக் கடவுள் வாழ்த்து) ' கைஃயதோர் சிரந்தையான் ' (1.61.3) என்பவற்றை உட்கொண்டு, இசை நரம்பு எனலும் பொருந்தும். பிடித்தது அச்சத்தால். ' மலையான் மகள் அஞ்சவ்வரை எடுத்தவ் வலியரக்கன் ' (93) நங்கை - உமாதேவியார். என்கை (எங்கை) தன்கை (தங்கை) நுன்கை (நுங்கை) என்பன போல நன்கை என்பது நங்கையென்றாயிற்று. மண்கை (- மங்கை) போல நண்கை (நங்கை) யும் ஆம். உரம் - வலிமை. உரங்கள் எனப் பன்மையாகக் கூறுதலால் மார்பு எனல் பொருந்தாது. வாய்களும் அலறின. வரங்கள் :- பெயர், வாழ்நாள், கோலவாள் முதலியன.

---

திருநாவுக் கரசடி யவர்நாடற் கதிநிதி
தெளிதேனைத் தினியசொன் மடவாரூர்ப் பசிமுதல்
வருவானத் தரிவையர் நடமாடிச் சிலசில
வசியாகச் சொலுமவை துகளாகக் கருதிமெய்
யுருஞானத் திரண்மன முருகாநேக் கழுதுகண்
ணுழவாரப் படைகையி லுடையான்வைத் தனதமிழ்
குருவாகக் கொடுசிவ னடிசூடத் திரிபவர்
குறுகார்புக் கிடர்படு குடர்யோனிக் குழியிலே. 2

## 3. திருவையாறு

### திருப்பதிக வரலாறு

கயிலைமலை காணக் காதலித்த கலைவாய்மைக் காவலனாகிய தமிழாளியார் கால் தேயக், கை சிதைய, மார்பு நைய, என்பு முரிய, ஊன் கெடப் பழுவம் புரண்டு புரண்டு சென்று, அங்கம் எங்கும் அரைந்திடப், புறத்து உறுப்பழிந்தபின் அகத்து முயற்சியும் தப்புறச், செயலற்று அந்நெறியில் தங்கினார். மன்னுதீந்தமிழ் புவியின் மேற் பின்னையும் வழுத்த வேண்டிக் கயிலையை அணைவதற்கு அருளாத பன்னகம்புனை பரமர் ஓர் முனிவராம்படி தோன்றி மொழி வேந்தர் குறிப்பைக்கேட்டு 'மானுடப் பான்மையோர் அடைவதற்கு எளிதோ கயிலைமால்வரை? மீள்வதே உமக்குக் கடன்' என்றார். ஆளும் நாயகன் இருக்கை கண்டல்லால் மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன் என்றார் மீளா ஆளாய அப்பர். மாதவர் விசும்பிற் கரந்தார். ஓங்கும் நாவினுக்கு அரசனே எழுந்திரு என்றார். சொல் தவறாத அரசர் எழுந்து ஒளி திகழ்வாராய், அண்ணலே! அமுதே! திருக்கயிலையில் இருந்த நின்கோலத்தை நான் தொழ அருள்புரி என்றார். அம்முறைமை திருவையாற்றிற் காண் என்றார் இறைவர். திருப்பாடல் பல பாடித் திருவைந்தெழுத்தோதி முழுகினார் அங்கிருந்த ஒரு திருக்குளத்தில். திருவையாற்றுத் திருக்குளத்தில் தோன்றிவந்தெழுந்தார் சொல்லரசர். இரு கண்ணீரிலும் குளித்தார். நிற்பவும் சரிப்பவும் துணையோடும் பொலியக் கண்டார். அவற்றில் சத்தியும் சிவமும் ஆம் சரிதையைப் பணிந்தார். தேவர் முதல் யாவரும் சூழ மலையாளுடன் வீற்றிருந்த வள்ளலாரைக் கண்டார் வாகீசர். கண்ட ஆனந்தக் கடலைக் கண்களால் முகந்து கொண்டார்; உருகினார்; ஆடினார்; பாடினார்; அழுதார். அவர்க்கு அங்கு நிகழ்ந்தனவற்றைச் சொல்லவல்லார் யார்? அருள் செய்து எதிர்நின்றது ஐயாற்றில் உள்ள அழியாத் தேன். உண்டு களித்தார் உரைவேந்தர்; பல பாடினார். அவற்றுள் ஒன்று கோதறு தண்டமிழ்ச் சொல்லாகிய இத் திருப்பதிகம்.

பண்　　காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளோடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடு படாமல் ஐயா றடைகின்ற போது
காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 21

21. மாதர்ப்பிறை - அழகுடைய பிறை. பிறைக்கு அழகு முழுமுதற் பொருளின் தலைமேல் வாழ்தலும், வளராத் தேயாச் சிறப்பும், பாம்பினை அஞ்சாமையுமாம். 'அப்பிறை பதினெண் கணனும் ஏத்தவும் படுமே' (புறநானூறு கடவுள் வாழ்த்து). என்னும் அதன் சிறப்புணர்க. பிறைக்கண்ணி - பிறையாகிய கண்ணி. தலை மாலை. கண்ணி - தலையில் அணிவது; ஒரு பக்கம் காம்பு மட்டும் சேர்க்கும் பூந்தொடை. போதொடு நீர் - வழிபாட்டிற்குரிய பூவும் புனலும். புகுவார் - அடியவர். யாதும் என்பது ஆதும் என்றுதலுண்டு 'சென்று ஆதுவேண்டிற்று ஒன்று ஈவான்' (6-20-9) 'நிலமிகு கீழும் மேலும் நிகர் ஆதும் இல்லை என நின்ற நீதியான்' (2-84-8) என அரசும் கன்றும் அருளிய வற்றுலும் அறிக. நம்மாழ்வார் திருவாய் மொழியிலும் 'ஆதும் இல்லை' 'ஆதும் ஓர் பற்றிலாத பாவனை' எனல் காண்க. 'யாதேசெய்தும்யாம் அலோம் நீஎன்னில் 'ஆதே' 'ஏயும் அளவில் பெருமையான்' (திருக்குறுந்தொகை) என்பதில் அதுவே என்னும் பொருட்டு ஆதலின் அதுவேறு.சுவடுபடாமை:- 'பங்கயம் புரைதாள் பரட்டளவும் பசைத் தசை தேயவும் கைகளும் மணிபந்து அசைந்துறவே கரைந்து சிதைந்தருகவும்' 'மார்பமும் தசை நைந்து சிந்தி வரிந்த என்பு முரிந்திடவும்'; 'உடம்பு அடங்கவும் ஊன் கெடவும்', சேர்வரும் பழுவம் புரண்டு புரண்டு செல்லவும்' (பெரிய. அப்பர். 357-360) உறுப்பழியவும் நின்ற சுவடு தோன்றுமல், தீங்கு நீங்கிய யாக்கை கொண்டு எழுந்து ஒளி திகழ்வாராய்ச் செல்லும் தூய்மை தோன்றல். பிடி - பெண் யானை. களிறு - ஆண் யானை;

போழிளங் கண்ணியி னானைப் பூந்துகி லாளொடும் பாடி
வாழியம் போற்றியென் றேத்தி வட்டமிட் டாடா வருவேன்
ஆழி வலவனின் றேத்தும் ஐயா றடைகின்ற போது
கோழி பெடையொடுங் கூடிக் குளிர்ந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 22

எரிப்பிறைக் கண்ணியி னானை யேந்திழை யாளொடும் பாடி
முரித்த விலயங்க ளிட்டு முகமலர்ந் தாடா வருவேன்
அரித்தொழு கும்வெள் ளருவி ஐயா றடைகின்ற போது
வரிக்குயில் பெடையொ டாடி வைகி வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 23

களிப்புடையது என்னும் காரணப்பொருட்டு. பிடியும் களிறும் சத்தியும் சிவமும் ஆகக் கண்டதால் திருப்பாதம் சிவானந்தம் ஆகிய முன் கண்டறியாதனவற்றைக் கண்டேன் என்று தம் பேரின்ப நுகர்ச்சியைப் புலப்படுத்தினார். பின் உள்ள எல்லாவற்றினும் பிறையும் பெருமாட்டியும் முதலடியிற் கூறப்பெற்றிருத்தல் அறிக. காட்சியருளிய பிறை சூடி (சந்திரசேகரர்) கோயில், அகச்சுற்றின்கண் தென்மேற்கு மூலையில் உளது.

22. போழ் இளங் கண்ணியினானை - இளம் பிறையாகிய தலைமாலையினை அணிந்தவனை. பூந்துகிலாள் - இடப்பால் உள்ள நாய்ச்சியார். வாழி போற்றி என்று ஏத்தியும் வட்டம் இட்டு ஆடியும் வருவேன். ஆழிவலவன் - திருமால். ஆழி - சக்கிரம். வலவன் - வலக் கையில் ஏந்தியவன். பெடை என்றதால் கோழி சேவலைக்குறித்தது. கோழிப்பது கோழி. பா. 24 காண்க.

23. எரி - நிலவு. ஏந்து இழையாள் - அம்பிகை. இலயம் - கூத்துக்கு ஒத்த தாளலயம். முகமலர்ச்சி அகத்துவகையைக் குறித்தது. அருவி - ஆற்றிற்கு அடை. குயிலுக்கு முற்கூறியவாறுரைக்க.

பிறையிளங் கண்ணியி னானைப் பெய்வளை யாளோடும் பாடித்
துறையிளம் பன்மலர் தூவித் தோளைக் குளிரத் தொழுவேன்
அறையிளம் பூங்குயி லாலும் ஐயா றடைகின்ற போது
சிறையிளம் பேடையோ டாடிச் சேவல் வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 24

ஏடு மதிக்கண்ணி யானை யேந்திழை யாளோடும் பாடிக்
காடொடு நாடு மலையுங் கைதொழு தாடா வருவேன்
ஆட லமர்ந்துறை கின்ற ஐயா றடைகின்ற போது
பேடை மயிலோடுங் கூடிப் பிணைந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 25

24. பெய்வளையாள் - முற்பாக்களிற் போலக் கூறிக்கொள்க. பெய்வளை - செயப்படுபொருளில் வந்த வினைத்தொகை. துறை - ' மதுத்திவலை சிந்து பூந்துறை ' (3. 92. 8) தோளைத் தொழுவேன், குளிரத் தொழுவேன். அறை குயில் - பாடும் குயில். ஆலும் - ஒலிக்கும். ஆலல் என்பது அகலல் என்பதன் மரூஉ. மயிலுக்குத் தோகையும் குயிலுக்கு வாயும் அகலுதல் கோள்க. திருமுறை 3. 52. 1. இல் யாம் எழுதிய உரையைக் காண்க.

25. ஏடு - இளைது. சிந்தாமணி (44?, 1552 பார்க்க). இளைது - இளது - ஈள்து - எள்து - ஏடு என மருவிற்று. இன்றேல், நச்சினார்க்கினியர் ' ஏட்டைப்பட்டு ' என்பதற்கு ' இளைத்து ' என்றுரையார். காடு, நாடு, மலை எல்லாம் சிவமயம். ' மண்ணாகி விண்ணாகி மலையுமாகி ' (6—94. 2). ' ஆடல் அமர்ந்து உறைகின்ற ஐயாறு ' ' பாடல் வீணை முழவம் குழல் மொந்தை பண்ணாகவே ஆடுமாறு வல்லானும் ஐயாறுடைய ஐயனே ' (2. 6. 1) எனக் காழிவேந்தர் அருளியதும் உணர்க. ஐந்தொழிற் கூத்து எங்கும் நிறைந்த சிவமூர்த்திக்கே உரியது. தில்லை முதலிய இடங்களிலே தான் திருக்கூத்துண்டு என்பது சாத்திரம் உணரார் கூற்று. மயில் - ஆண். பிணைந்து - இணைந்து; பின்னி.

தண்மதிக் கண்ணியி னானைத் தையனல் லாளொடும் பாடி
உண்மெலி சிந்தைய னாகி யுணரா வுருகா வருவேன்
அண்ண லமர்ந்துறை கின்ற ஐயா றடைகின்ற போது
வண்ணப் பகன்றிலோ டாடி வைகி வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 26

கடிமதிக் கண்ணியி னானைக் காரிகை யாளொடும் பாடி
வடிவொடு வண்ண மிரண்டும் வாய்வேண் டுவசொல்லி வாழ்வேன்
அடியிணை ஆர்க்குங் கழலான் ஐயா றடைகின்ற போது
இடிகுர லன்னதோ ரேன மிசைந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 27

26. தண்மை - குளிர்மை. மதி - பிறை, நிறைமதி அன்று. தையல் நல்லாள் - நாய்ச்சியார். உள்மெலி சிந்தையன் - உள்ளம் குழைந்த திருவடி நினைவினன். உணரா - உணர்ந்து; உருகா - உருகி; செய்யா என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். அண்ணல் - தலைவன். அமர்ந்து - விரும்பி. உறைகின்ற - எழுந்தருளியிருக்கின்ற. வண்ணம் - அழகு; நிறமும் ஆம். நீருறை மகன்றில் (குறுந்தொகை 57) துணைபிரி மகன்றில் (சிந்தாமணி 302) என்றதோ வேறோ தெரியவில்லை. 'பகரத்தாரா அன்னம் பகன்றில் பாதம் பணிந்தேத்தத் தகரப் புன்னை தாழைப்பொழில் சேர் சண்பை நகராரே' எனத் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் (1. 66. 3) அருளியதிலும் 'பகன்றில்' என்றே காணப்படுகின்றது. இதில் அதன் பெருமை புலனாகின்றது. பக+அன்றில், மக+அன்றில் இரண்டும் துணை பிரியா மகன்றில். மகன்று-மகவை (ஆணை)யுடையது. துணைபிரியா மகன்றில் என்றதை நோக்கி, பகு+அன்றில் எனப் பிரித்து, துணை பிரி அன்றில் எனலாம். பகன்றில் என்பது மகன்றில் என மருவியுமிருக்கலாம். பிரியாத இயல்பு நோக்கி, பகா அன்றில் என்றிருந்தது பகன்றில் என மருவியதெனலும் கூடும். யாது பகன்றிலோடு ஆடி வைகி வருவது?

27. கடி - விளக்கம். காரிகையாள் - நாய்ச்சியார். வடிவு - கண்ணுக்குத்தோன்றுவது. உருவுதோன்றாது; அதுகருத்துக்குத் தோன்றுவது. (தொல்காப்பியம் பொருள். 244.) வண்ணம் :-



திருவையாற்றில் அப்பர் வந்தெழுந்த வாவி தென்கயிலாயம்

விரும்பு மதிக்கண்ணி யானை மெல்லிய லாளொடும் பாடிப்
பெரும்புலர் காலை யெழுந்து பெறுமலர் கொய்யா வருவேன்
அருங்கலம் பொன்மணி யுந்தும் ஐயா றடைகின்ற போது
கருங்கலை பேடையொ டாடிக் கலந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 28

முற்பிறைக் கண்ணியி னானை மொய்குழ லாளொடும் பாடிப்
பற்றிக் கயிறறுக் கில்லேன் பாடியும் ஆடா வருவேன்
அற்றருள் பெற்றுநின் றாரோ டையா றடைகின்ற போது
நற்றுணைப் பேடையொ டாடி நாரை வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 29

முற்பாட்டின்குறிப்பில் அறிக. வேண்டுவ வாய்சொல்லி-வேண்டு வனவற்றை வாயாற் சொல்லி. வேண்டுவது உள்ளம். சொல்வது வாய் (நா). ‘மெய் வாய் கண் மூக்குச் செவி’ என்புழி வரும் வாய் சுவையுணர்ச்சிக்குரியது. சொல்வதற்குரியது நாவே. இரண்டும் வாய் என வழங்கப்படும். அடியிணையில் கழலை ஆர்த்தல். வீரக் கழலை வலக்காலில் மட்டும் கட்டுதல் தொன்மையது. இடிகுரல் அன்னது - இடியோசை போலும் ஓசையது. இடிகுரல் - ஆறன்றுரைகை.

28. பெரும்புலர்காலை:- 307. கொய்யா-கொய்து. செய்யா என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். அருங்கலம் - பண்புத்தொகை. (யாப்பருங்கலம்). அரிய பூண். விலைமதிப் பருமை, பெறலருமை முதலியன கொள்க. கலமும் பொன்னும் மணியும் உந்தும் ஆறு. கலை - ஆண் முசு. கருங்குரங்கு.

29. முற்பிறை-தலைநாட் பிறை. மொய்-அடர்ந்த. பற்றிக் கயிறறுக்கில்லேன். கயிறு - பாசம். உன் திருவடியைப்பற்றி உலகினோடுள்ள பாசத்தை அறுக்கமாட்டேன். ‘பற்றுக பற்றற்றான் பற்றினை’ என்றது பற்றிப், பற்றி என்றார். அப் பற்றைப் பற்றுக (இப்) பற்று விடற்கு’ என்றது பற்றிக் கயிறு அறுக்கில்லேன் என்றார். பாசம் என்னும் வடசொற் பொருள்.

திங்கள் மதிக்கண்ணி யானைத் தேமொழி யாளொடும் பாடி
எங்கருள் நல்குங்கொ லெந்தை யெனக்கினி யென்று
அங்கிள மங்கைய ராடும் ஐயா றடைகின்ற போது [வருவேன்
பைங்கிளி பேடையோ டாடிப் பறந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 30

வளர்மதிக் கண்ணியி னானை வார்குழ லாளொடும் பாடிக்
களவு படாததோர் காலங் காண்பான் கடைக்கணிற் கின்றேன்
அளவு படாததோ ரன்போ டையா றடைகின்ற போது
இளமண நாகு தழுவி யேறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.31

திருச்சிற்றம்பலம்

குறித்துக் கயிறு எனப்பட்டது. (திருக்குறள் 350) ' சுற்றிய சுற்றத் தொடர்வறுப்பான் தொல்புகழே பற்றி இப்பாசத்தைப் பற்றற நாம் பற்றுவான் பற்றியபே ரானந்தம் பாடுதும் காண் அம்மானாய் ' (திருவாசகம் 194). அற்று - ஒரு பற்று மில்லா தொழிந்து. 'அற்றவர்க்கு அற்ற சிவன் (3. 120. 2). அற்று என்பதற்கு விளங்கி எனலும் உண்டு. பொருள் புலப்படவில்லை என்புழி அறவில்லை என்று உலகிற் பலர் வழங்குகின்றனர். நற்றுணையாகிய பேடை. நாரைக்குப் பேடை துணை. துணைக்கு நன்மை அடை.

30. திங்கள் மதி - ஒரு பொருட் பல பெயர். திங்கள் சாந்திர மானம் பற்றிய திங்களை விளைவிப்பது. காரணப் பெயர். மதி பிறை என்னும் பொருட்டு. சந்திரனுக்கு வடமொழியில் மதி என்னும் பெயரில்லை. இரண்டும் தமிழ்ச் சொல்லே. தேன் மொழி - தேமொழி. இனி எனக்கு எந்தை எங்கு அருள் நல்கும் கொல் என்று கொள்க. அங்கு - அக்கோயிலின் வழியில்.

31. வளர்மதி - வளர்பிறை. ' நிறைநீர நீரவர் கேண்மை பிறை மதிப் பின்னீர பேதையார் நட்பு ' (திருக்குறள் 782). வார்தல் - நீளமாய் வளர்தல். களவு படாததோர் காலம் காண்பான் - களவை அடையாததொரு காலத்தைக் காணும் பொருட்டு.

காண்பான் - வினையெச்சம் (நன்னூல். 343). காட்சி - தரிசநம் என்பர் வடநூலார். கடைக்கண் (- கடைவாயிலின்கண்) நிற்கின்றேன். கடைக்கணிக்கின்றேன் என்றது எழுதினோரால் பிழைபட்ட பாடம். முற்பாடல் பலவற்றில் வருவேன் என்றார். இதில் வந்து நிற்கின்றேன் என்றார்.

'ஞாலமே விசும்பே இவை வந்து போம்காலம்' களவு படுங்காலம். 'பரம்பரனைப் பணியாதே பாழுக் கிறைத்த எத்தனையோ காலம்' களவுபட்டன. 'கால வரையறையைக் கடந்து காலத்தினையும் தோற்றித் தொழிற்படுத்தும் கால காலனாகிய முதல்வனாற் செய்யப்படும் காரியத்திற்குக் காலம் வேண்டா' (சிவஞானபாடியம். சூ. 2. அதி. 2. காலதத்துவம்). அதனால் அவனது அழியாத இன்ப நிலையைப் பெற்றவர்க்குரியது களவு படாததோர் காலம் என்று உபசரிக்கப்பட்டது. அதைக் காண்பதற்காக இறைவன் கோயிற் கடைவாயிலின்கண் நிற்கின்றேன் என்றார். இடையறவு படாது நெடுங்காலம் காண எனலுமாம்.

அளவு படாததோரன்புக்கும் அவ்வாறு உரைத்துக்கோள்க. திருவடிக்கன்பு அளவுபடாதது. ஏனையனைத்தும் அளவுபடுவனவேயாகும். நாகு - பேடை. ஏறு - ஆண் (எருது).

குழிந்து சுழிபெறுநா பியின்கோண் மயிர்நிரையார்
　　குரும்பை முலையிடையே செலுந்த கைநன் மடவா
ரழிந்த போசியதிலே கிடந்தி ரவுபகனீ
　　யளைந்தயரு மதுநீ யறிந்தி லைகோன்மனமே
கழிந்த கழிகிடுநா ளிணங்கி தயநேகவே
　　கசிந்தி தயமெழுநா றரும்ப திகநிதியே
பொழிந்த ருளுதிருநா வினேங்க ளரசினையே
　　புரிந்து நினையிதுவே மருந்து பிறிதிலையே　　3

இலைமா டேன்றிலர் பரியா ரிந்திர
　　னேயோத் துறுகுறை வற்றாலும்
நிலையா தீச்செல்வ மெனவே கருதுவர்
　　நீள்சன் மக்கட லிடையிற்புக்
கலையார் சென்றர னெறியா குங்கரை
　　யண்ணப் பெறுவர்கள் வண்ணத்தின்
சிலைமா டந்திகழ் புகழா மூருறை
　　திருநா வுக்கர சென்போரே.　　4

# 4. திருவாரூர்

## திருப்பதிக வரலாறு

திருநாவுக்கரசு நாயனார் திருவாரூரிலே தேவாசிரியன்முன் இறைஞ்சித் திருமாளிகை வாயிலுட் புகுந்து மாமணிப்புற்றுகந் தாரைநேர் கண்டுகொண்டார்; தொழுதார்; விழுந்தார்; புளகாங்கித ரானார்; எழுந்தார்; அன்புகூர்ந்தார்; கண்கள் தண்துளிமாரி பொழியத் திருமூலட்டானரைப் போற்றினார்; துதித்தார்; உருகினார்; மணிக்கோயிலை வலம் வந்து இறைஞ்சி அன்பு பூண்ட மனத்தோடு வாயிற்புறத்துச் சேர்ந்தார்; திருப்பதிகம் பாடினார்; அதில் சமண் சார்ந்த தீங்கு நினைந்து கவன்றார்; 'மார்பாரப் பொழி கண்ணீர் மழைவாருந் திருவடிவும் மதுரவாக்கில் சேர்வு ஆகும் திருவாயின் தீந்தமிழின் மாலைகளும் செம்பொற்றாளே சார்வான திருமனமும் உழவாரத் தனிப்படையும் தாமும் ஆகிப் பார்வாழத் திருவீதிப் பணி செய்து பணிந்து ஏத்திப் பரவிச் செல்வார்' ஆனார். அப்பொழுது நீடுபுகழ்த் திருவாரூர் நிலவுமணிப் புற்றிடங்கொண்ட நிருத்தரை அன்போடு காலங்களில் அணைந்து கும்பிட்டுப் பாடியருளிய கோதில்வாய்மைத் திருப்பதிகம் பலவற்றுள் ஒன்று இது.

பண் காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

பாடிளம் பூதத்தி னானும் பவளச்சேவ் வாய்வண்ணத் தானும்
கூடிள மென்முலை யாளைக் கூடிய கோலத்தி னானும்
ஓடிள வெண்பிறை யானும் ஒளிதிகழ் சூலத்தி னானும்
ஆடிளம் பாம்பசைத் தானு மாரூ ரமர்ந்தவம் மானே. 32

32. பவளச்சேவ்வாய்-பவளம்போலும் செய்ய வாய் (அழகுடையவன்.( கூடு - கூடிய. 'இடையீர் போகா இளமுலையாள்' (1. 54. 2). 'கூடிய' என்பது இடப்பால் வைத்திருத்தலைக் குறித்து நின்ற முதல்வினை. கூடிய கோலம் - காரணப் பெயரெச்சம்; உண்ட இளைப்பு என்பது போல. ஓடு பிறை - வானில் ஓடும் பிறை. இளம் பிறை, பாலேந்து வெண் பிறை, தவளேந்து. ஆடு பாம்பு; இளம் பாம்பு. 'முற்றலாமை இளநாகம்' (1. 1. 2). அசைத்தான் - கட்டியவன். அமர்ந்த -

நரியைக் குதிரைசெய் வானும் நரகரைத் தேவுசெய் வானும்
விரதங்கொண் டாடவல் லானும் விச்சின்றி நாறுசெய் வானும்
முரசதிர்ந் தானைமுன் னோட முன்பணிந் தன்பர்க ளேத்த
அரவரைச் சாத்திநின் றானு மாரூ ரமர்ந்தவம் மானே. 33

விரும்பி எழுந்தருளிய. அம்மான் - அருமைக் கடவுள். அருமகன், பெருமகன். அருமான், பெருமான். அர்மான், பெர்மான். அம்மான் - பெம்மான். மரூஉ. மகன் - தேவன். மகள் - தேவி. திருமகள், நாமகள், மலைமகள், கலைமகள். அம்மானே பூதத்தினன், வண்ணத்தான், கோலத்தினன், பிறையான், சூலத்தினன், அடைந்தான் என்க. ஆறு உம்மைகளையும் இயைத்து அம்மானே என முடித்தலும் ஏற்றதே. பிறை - பிறத்தலுடையது. பாம்பு :- பாண்பு என்பதன் மரூஉ. கால்பு, வீண்பு, நோன்பு, போதுள்பு முதலியவற்றின்மரூஉப்போல்வது.

33. (நரியைக் குதிரை) செய்வான் முதலிய ஐந்து வினைப் பெயரும் இயைந்து அம்மானே எனக்கொண்டு முடிந்தன. நரியைக் குதிரையாக்கிய வரலாறு மாணிக்கவாசகர் பொருட்டு நிகழ்ந்தது. மூவர்க்கும் முந்தியவர் மாணிக்கவாசகர் என்பதற்கு இஃது ஒரு சான்று. 'நரியைக் குதிரைப் பரியாக்கி' திருவாசகம் (647). தேவர், மானுடர், நரகர் என்னும் முத்திறத்தவருள் இடையராய மானுடர் தத்தம் வினைக்குத்தகத் தலையராய தேவராயும் கடையராய நரகராயும் பிறப்பர். தேவர் நரகராதல் அற்புதம் அன்று. நரகர் நேரே தேவராதலே அற்புதமாகும். விரதம் - நியமம் ; தவம். இறைவன் கொண்டாட வல்லன். அல்லனேல் நியமம் தவம் முதலிய விரதங்களை எவரும் மேற்கொள்ளார். அவற்றைக் கொண்டாடுவது எவர்க்கும் எளிது. அவற்றின் அளவிற்குத் தக்க பயனைக் கொடுத்தல் அரிதினும் அரிது. அவ்வருஞ் செயல் செய்ய வல்லான் எங்கும் நிறைந்த திருவாரூரன். மனு வேந்தனது சத்திய விரதமும், அதைக் கொண்டாடி அருளிய வன்மையும், அவை முதலிய பலவும் இங்கு நினைக்கத்தக்கன. 'விச்சின்றி நாறு செய்வான்' விச்சதின்றியே விளைவு செய்குவாய்' (திருவாசகம்) (விச்சு, விச்சது - வித்து). 'பிரபஞ்சம் அநாதியாகலின்' அம் முதற் கோடி நம்மனோரான் அறிய வாராமையினானும் ஒடுங்கியின் மீள

நீறுமெய் பூசவல் லானு நினைப்பவர் நெஞ்சத்து ளானும்
ஏறுகந் தேறவல் லானும் எரிபுரை மேனியி னானும்
நாறு கரந்தையி னானு நான்மறைக் கண்டத்தி னானும்
ஆறு சடைக்கரந் தானு மாரூ ரமர்ந்தவம் மானே. 34

உளதாமாறே ஈண்டு அவாய் நிலையான் உணர்ந்த நின்றது ஆகலானும் அதுவே (புனருற்பவமே) கூறினார்' (சிவ. போ. சூ. 2.) இதையே 'விச்சதின்றியே விளைவு செய்குவாய்' (திருவாசகம் திருச்சதகம். 96) என்றது. "வித்தின்றி விளைவாய் எனப் பொருள்பட்டுத் திருமேனி கொள்ளும் முறைமை உணர்த்தியதூஉம் ஆம். 'விச்சின்றி நாறு செய் வானும்' என்பதற்கும் இவ்வாறு உரைத்துக் கொள்க." (சிவஞானபாடியம்). முரசு - தியாக முரசு. ஆனை - தியாகராசர்க்குரியதும் முரசைத் தாங்கியதும் ஆகிய ஆனை. அரவு - பாம்பு. சாத்தி - சார்த்தி.

34. திருநீறு ஆக்களால் உயிர்கட்குக் கிடைக்கின்றது. முழுமுதல்வன் பூசும் திருநீறு, சருவசங்கார காலத்துச் சருவ லோக சுடலைப்பொடி, அதனை ஆற்றி அணிந்துகொள்ளும்வன்மை அவனுக்கே உளது. அதனால், 'நீறு மெய் பூச வல்லான்' என்றருளினார். மெய் - திருமேனி சத்தியமும் ஆம். நினைப்பவர் நெஞ்சத்துளான் - 'நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்' (5. 2. 1). 'காலையும் மாலையும் கைதொழுவார் மனம் ஆலயம் ஆரூர் அறநெறியார்க்கே' (173) எனப் பின்வருதலை நோக்குக. ஏறு உகந்து ஏறவல்லான் - விடை ஏறுதல் பற்றிய சாத்திரக் கருத்தும் அத்திறத்துள்ள விடையின் மேல் வரும் வன்மையும் சிவபத்தர்க்கே விளங்குவன. எரி புரை மேனி - தீவண்ண மேனி. நாறு கரந்தை - மணம் வீசும் சிவகரந்தை. 'கரந்தை யான்' அதனை அணிதலுடைமையால் 'கரந்தையினான்' என்றது. நால்மறைக் கண்டன்:- 'சாமகண்டா' என்பது முதலிய தனிப் பெயர்களையும் அவற்றின் பொருளையும் உணர்க. ஆறு - சடையில் கரந்த கங்கை.

கோம்புநல் வேனி லவனைக் குழைய முறுவல்செய் தானும்
செம்புனல் கொண் டெயின் மூன்றுந் தீயெழக் கண்சிவந்
தானும்
வம்புநற் கொன்றையி னானும் வாட்கண்ணி வாட்டம தெய்த
அம்பர வீருரி யானு மாரூ ரமர்ந்தவம் மானே. 35

ஊழி யளக்கவல் லானு முகப்பவ ருச்சியுள் ளானும்
தாழிளஞ் செஞ்சடை யானுந் தண்ணமர் திண்கொடி யானும்
தோழியர் தூதிடை யாடத் தொழுதடி யார்கள் வணங்க
ஆழி வளைக்கையி னானு மாரூ ரமர்ந்தவம் மானே. 36

35. வேனிலவன் - மன்மதன். அவனுக்கு வேனிற்காலம் உகந்தது. குழைய - எரிந்து சாம்ப. முறுவல் - புன்னகை. திரிபுரத்தை விழித்தெரித்ததும் மன்மதனை நகைத்தெரித்ததும் கற்ப விகற்பம் பற்றியவை ஆதலின், விரோதம் இன்று. வம்பு - மணம். அம்பரம் - ஆடை. திகம்பரம். ஈர் உரி - ஈரிய (ஈரம் உடைய) தோல். (உரியம்பரம் - தோலாடை).

36. ஊழிமுதற் சிந்தாத நன்மணியாகிய அரனைப் பல்லூழி காலம் பயின்று அர்ச்சிப்பது அடியார்க்கே உண்டாயின், அருச்சனையை ஏற்று அருளும் ஆண்டவனுக்கு ஊழியெல்லை ஏது ? எல்லா வூழியும் அவனால் அளக்கப்படுவன. ‘ ஊழி முதல்வனாய் நின்ற ஒருவன் ’ - திருவாசகம். ‘ ஊழி முதல்வனாய் நின்றாய் நீயே. ’ ‘ ஊழி வண்ணமும் ஆவர் ’ ‘ ஊழியார் ஊழிதோறும் உலகினுக்கு ஒருவர் ’ என்று பிறண்டும் இவ்வாசிரியர் அருளிய துணர்க. ‘ உகப்பவர் உச்சி உள்ளான் ’:- ‘ கருதிக் கசிவார் உச்சியன் ’ (7:-997) ‘ உரைப்பார் உரையுகந்துள்க வல்லார் தங்கள் உச்சியாய் ’ (7:-936) தாழ்சடை, இளஞ்சடை, செஞ் சடை என, மூவடையும் சடையென்னும் ஒரு பெயரைத் தழுவின. தண் - குளிர்ச்சி. கொடி - விடைக்கொடி. ‘ செங்கண் விடைக் கொடி ’ (37). தோழியர் தூது சொல்வது குறித்தது. ஆழி வளைக்கையினான்:- தியாகேசரை விடாத கையைக் குறித்ததும் ஆம். திருமாலாகி, அம்மாலுக்குரிய புவனத்தில் உலகுயிர் தனைக் காப்பவன் (பா. 37 பார்க்க).

ஊர்திரை வேலையு ளானு முலகிறந் தொண்பொரு ளானும்
சீர்தரு பாடலு ளானுஞ் செங்கண் விடைக்கொடி யானும்
வார்தரு பூங்குழ லாளை மருவி யுடனுறைவைத் தவனும்
ஆர்திரை நாளுகந் தானு மாரு ரமர்ந்தவம் மானே. 37

37. ஊர்திரை வேலையுள்ளான் - பரவும் அலைகளையுடைய (பாற்) கடலில் துயிலும் திருமாலாயிருப்பவன். 'ஆழிவளைக்கையி னன்' (36) உலகு இறந்த ஒண்பொருளான்: 'அப்பாலைக் கப்பாலைக் கப்பாலானை' (6. 26. 4) 'அப்பால்' மூன்றும் முறையே சுத்தாவத்தைச் சுழுத்தி முதலிய மூன்றும் ஆம். 'எல்லா வுலகிற்கும் அப்புறத்தார்' (திருக்களிறு. 1). அண்டத்துக்கு அப்புறத்தார் (6. 26. 5) 'அப்பாலைக்கு அப்பால்' (திருவாசகம். 185) 'உலகினுக்கு அப்புறம்' (ஷை 228). 'ஒண்பொருள் - சிவமே பெறுந்திரு'. 'ஒண் பொருள் காழ்ப்ப இயற்றியார்' (குறள்) என்புழிப் படும்பொருள் அழிவது, 'சென்றடையாததிரு' ஆதலின், இதுவே ஒண்பொருளாகும். இறந்த:- பெயரெச்சத்து அகரம் தொகுத்தல். இறந்து என்று வினையெச்சமாகவே கொள்ளின், பொருளான் என்னும் குறிப்பு வினைப்பெயரின் விரியும் வினைமுதனிலையொடு இயைக்க. சீர்தருபாடல் உள்ளான் - சாமகானம பாடுதலுள்ள வன். வேதப்பாடல்களில் உள்ளவன். 'தொடுக்குங் கடவுட்பழம் பாடல்' 'காலத்தொடு கற்பனை கடந்த கருவூலத்துப் பழம் பாடல்' விடைக்குச் செங்கண் விசேடலட்சணம். 'ஆர்திரை' என்பதன் மரூஉவே ஆதிரை. 'ஆர்திரையான் ஆர்திரையான் என்றேன் றயர்வுறுமீ பூர்திரைநீர் வேலி யுலகு' என்னும் (முத்தொள்ளாயிரச் செய்யுட்களின் கடவுள் வாழ்த்து) இடத்தில் எதுகையமைப்பினை நோக்கியுணர்க. இங்கு 'ஆர்திரை' என்றே ஆசிரியர் அருளினர் என்பதற்குச் சான்று வேறு வேண்டா. 'முத்து விதானம் எனத் தொடங்கும் திருப்பதிகம் (208 - 217) திருவாதிரைச் சிறப்புணர்த்தற்கே எழுந்தது. 'திருவாதிரைத் திருப்பதிகம்' என்றே அதனைக் குறிப்ப.

தொழற்கங்கை துன்னிநின் றூர்க்குத் தோன்றி யருளவல்
லானும்
கழற்கங்கை பன்மலர் கொண்டு காதல் கனற்றநின் றானும்
குழற்கங்கை யாளையுள் வைத்துக் கோலச் சடைக்கரந் தானும்
அழற்கங்கை யேந்தவல் லானு மாரூ ரமர்ந்தவம் மானே. 38

ஆயிரந் தாமரை போலும் ஆயிரஞ் சேவடி யானும்
ஆயிரம் பொன்வரை போலும் ஆயிரந் தோளுடை யானும்
ஆயிரம் ஞாயிறு போலும் ஆயிரம் நீண்முடி யானும்
ஆயிரம் பேருகந் தானு மாரூ ரமர்ந்தவம் மானே. 39

38. தொழற்கு - தொழுதலுக்கு. அங்கை - அழகியகை, உள்ளங்கை. துன்னி - பொருந்தி. துன்னி என்னும் செய்தெனெச்சம் சினைவினை. அது 'நின்றூர்' என்னும் முதல்வினையுடன் முடிந்தது. இலக்கியத்தில் இவ்வாறு பயின்றுவருதலையுணர்ந்தும், இலக்கண விதியின்றென்று கொண்டு, செயவெனெச்சமாகத்திரித்துப் பொருளுரைத்தல் உரையாசிரியர் வழக்கு. அருகிய வழக்கன்மையின் அது பொருந்தாது. சில இடத்தில் வேண்டுமேற் கொள்ளலாம். 'தொழுவார்க்கே அருளுவது சிவபெருமான்' (பெரியபுராணம் 1981) என்பதனோடிதனிடை வேறுபாடு தேற்றேகாரம் ஒன்றே. அங்கையில் பல மலர் (சிவபிரான்) கழற்குக்கொண்டு காதல் கனன்று சுடர்விட்டு விளங்க நின்றான். குழல்-கூந்தல், கங்கையாள். உள்-உள்ளம். சடையுளுமாம். கரந்தான்-மறைத்தான். பிறவினை. 'அங்கை அழற்கு ஏந்தவல்லான்'. அழற்கு - அழலை; தீயை. உருபு மயக்கம். அழலும் கம்மும் எனலும் ஆம். கம் - பிரம கபாலம்.

39. தாமரை போலும் சேவடி. பொன்வரை போலும் தோள். ஞாயிறு போலும் நீள்முடி. ஆயிரம் :- பன்மை குறித்து நின்றது. 'பேராயிரம் பரவி வானோர் ஏத்தும் பெம்மான்'.

வீடரங் காநிறுப் பாரும் விசும்பினை வேதி தொடர
ஓடரங் காகவைத் தாரும் ஓங்கியோ ரூழியுள் ளாரும்
காடரங் காமகிழ்ந் தாருங் காரிகை யார்கண் மனத்துள்
ஆடரங் கத்திடை யாரு மாரூ ரமர்ந்தவம் மானே. 40

பையஞ் சுடர்விடு நாகப் பள்ளிகொள் வானுள்ளத் தானும்
கையஞ்சு நான்குடை யானைக் கால்விர லாலடர்த் தானும்
பொய்யஞ்சிவாய்மைகள் பேசிப் புகழ்புரிந்தார்க்கருள்செய்யும்
ஐயஞ்சி னப்புறத் தானு மாரூ ரமர்ந்தவம் மானே. 41

திருச்சிற்றம்பலம்

40. வீடு அரங்கு ஆ நிறுப்பான் - முத்தியை ஞானந்தக் கூத்து ஆடும் அரங்கமாக நிறுத்துமவன். விசும்பு - விண். வானம். வேதி - வேதம் ஓதும் நான்முகன். தொடர - அன்னப் புள்ளுருவாக முடி தேட. ஓடு அரங்கு - தேடி ஓடுகின்ற வெளியிடம். வேதி விசும்பினைத் தொடராமையைக் கையிலுள்ள பிரமகபாலம் வெளிப்படுத்துகின்றது என்றலுமாம்.

41. பை - நச்சுப்பை. அம் சுடர் - அழகிய மாணிக்கச் சுடர். நாகப்பள்ளி கொள்வான் - பாம்பணையான் (திருமால்). திருமால் தன் உள்ளத்தில் வீதிவிடங்கப்பெருமானை உடைமை திருவாரூர்ப் புராணத்தாலும் தியாகேசத் திருமேனியாலும் அறியப்படும். 'பையஞ் சுடர்விடு நாகப் பள்ளி கொள்வான் உள்ளத்தான்' என்ற உண்மையை உணர்த்தும் ஓவியம் அது. கை அஞ்சு நான்கு - இருபது கை. உடையான் - இராவணன். 'கால் விரலால்' என்றது, இருபதுகையானை ஒருகால் விரல் முனையால் அடர்த்தல் சிவபிரானுக்கு மிக எளிதென்றதாம். திருவருள் பெற விரும்பி முயல்வார்க்குப் பொய்யை அஞ்சுதலும், வாய்மைகளே பேசுதலும், இறைவன் பொருள் சேர் புகழே புரிதலும் இன்றியமையாதன. ஐயஞ்சின் அப்புறத் தானும், பொய்யஞ்சிவாய்மைகள் பேசிப் புகழ்புரிந்தார்க்கருள் செய்ய இப்புறத்தானாகி அருள் செய்வான் என்றபடி. ஐயைஞ்சு - (5×5=25) நிலமுதல் 25 தததுவம். சிவதருமோத்தரம். 10. சிவஞானயோகவியல் 32. உரை. பார்க்க. சங்கற்பநிராகரணம் சங்கிராந்தவாதி. (அடி. 40) 'அரணம் ஐயைந்தின் அப்புறத்து' திருக்களிற்றுப்படியார். 1. பார்க்க.

# 5. திருவாரூர்

## திருப்பதிக வரலாறு

சொல்லின் அரசர், திருவாரூரில் திருத்தொண்டர்களுடன், திருநெடுந்தேவாசிரியன்முன் வந்து இறைஞ்சித், திருமாளிகை வாயில்களுட் புகுந்து, புற்றுகந்தாரைக் கண்டுகொண்டார். தொழுதார்; விழுந்தார்; புளகம் உற்றார்; எழுந்தார். அன்பு கூர்ந்தது; கண்களில் இடையருப் பேரன்பு மழை பொழிந்தது. திரு மூலட்டானர் கழலைப் போற்றிப் பல திருப்பதிகங்கள் பாடியருளினர் பாவேந்தர். அவற்றுள் ஒன்று, எய்த அரிய கையறவால் அருள் செய்த இத் திருப்பதிகம்.

பண் பழமொழி காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான்
தாள்தொ ழாதே
உய்யலா மென்றெண்ணி யுறிதூக்கி யுழிதந்தென்
னுள்ளம் விட்டுக்
கொய்யுலா மலர்ச்சோலை குயில்கூவ மயிலாலு
மாரு ரரைக்
கையினாற் றொழா தொழிந்து கனியிருக்கக் காய்கவர்ந்த
கள்வ னேனே. 42

42. சண்ணித்தல்-பூசுதல். பொருந்தல். உழிதந்து:-திரிந்து (உழிதரல்) 'உழிதருகாலும்' உழிதருகால்' (திருவாசகம். 12) உள்ளம் விட்டு - மனத்தைப் பறிகொடுத்து. மயில் ஆலும் - மூன்றுவது திருமுறைக் குறிப்புரையில் 'வீடலால வாயிலாய்' என்பதன் விரிவுரையாக யாம் எழுதியுள்ளதைக் காண்க.(தருமை யாதீன வெளியீடு.) 'ஆமாத்தூர் சண்ணிப்பானை'

'மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான் தாள் தொழாதே என் உள்ளம் விட்டு, 'ஆரூரரைக் கையினல் தொழா தொழிந்து' என்னும் பகுதியால் கனியைக் கவராமை போல்வது உணர்த்தப்பட்டது. 'உய்யலாமென்றெண்ணி உறிதூக்கி

என்பிருத்தி நரம்புதோல் புகப்பெய்திட் டென்னையோ
ருருவ மாக்கி
இன்பிருத்தி முன்பிருந்த வினைதீர்த்திட் டென்னுள்ளங்
கோயி லாக்கி
அன்பிருத்தி யடியேனைக் கூழாட்கொண் டருள்செய்த
வாரூ ரர்தம்
முன்பிருக்கும் விதியின்றி முயல்விட்டுக் காக்கைப்பின்
போன வாறே. 43

உழிதந்து' என்பதால் காய்கவர்தல் போல்வது குறிக்கப் பட்டது. விட்டு ஒழிந்து (கள்வனேன்) ஆனேன் என்று ஆக்கம் வருவித்து இயைக்க.

உடையான் இசையக் காய்கவர்தல் இயலாமையின், அவன் அறியாவாறு கவர்ந்தமையால், 'கள்வன்' என்றார். சமண சமயம் புக்கது காய்போல்வது. அது சிவசம்மதம் பெற்ற புகல் அன்று.

43. என்பு:-(எல்+பு) வல்+பு, வன்பு.மெல்+பு=மென்பு. எலும்பை இருத்தி, நரம்புகளைத் தோலினுட்புகப் பெய்திட்டு, என்னை ஓர் உருவம் ஆக்கி, இன்பம் இருத்தி, முன் இருந்த வினை (களைத்) தீர்த்திட்டு என் உள்ளம் கோயிலாக்கி, அன்பு இருத்தி, 'சிந்தைப் பாழறை பள்ளியறை யாக்கி' (கழுமல மும்மணிக்கோவை. 4.) அடியேனைக் கூழாட்கொண்டு அருள் செய்த ஆரூரருடைய திருமுன் இருக்கும் விதியிலேன். முன்பு இருக்கும் விதியில்லை என்றதால் பின்பு இருக்கும் விதியுளது எனல் பெறப்பட்டது. எதன் பின்பு? சமண சமயக் கோள்கை யின் நீங்கிவந்ததன் பின்பு.

கூழ் - உணவு. (பைங்கூழ்). உணவுக்கு ஆட்படுதல் கூழாட்படுதல். ஆட்கொள்ளல்; கூழாட்கொள்ளல். அதன் தன்மைக்குக் 'கூழைமை' என்று பெயர். 'தில்லை அம்பலத்துக் கூத்தனுக்கு ஆட்பட்டிருப்பதன்றோ நம் தம் கூழைமையே' (784). ஈண்டுக் கூழ் அருளுணவின் மேலது. குழையும் இயலபும் ஆம். 'குழை' முதல் நீட்சி 'கூழை'.

பெருகுவித்தேன்பாவத்தைப்பண்டேலாங்குண்டர்கள்தஞ்
சொல்லே கேட்டு
உருகுவித்தேன் னுள்ளத்தி னுள்ளிருந்த கள்ளத்தைத்
தள்ளிப் போக்கி
அருகுவித்துப் பிணிகாட்டி யாட்கொண்டு பிணிதீர்த்த
வாரூ ரர்தம்
அருகிருக்கும் விதியின்றி அறமிருக்க மறம்விலைக்குக்
கொண்ட வாறே. 44

குண்டனாய்த் தலைபறித்துக் குவிமுலையார் நகைநாணு
துழிதர் வேனைப்
பண்டமாப் படுத்தேன்னைப் பாறலையிற் றெளித்துத்தன்
பாதங் காட்டித்

குழைந்து நடக்கை (திவ். பெரியாழ்வார். 3. 2. 5) முயலின் பின் போதல் எளிது. காக்கையின் பின் போதல் பறத்தல் ஆகிய இயல்பில்லாத உயிர்க்கு அரிது; இல்லை என்றவாறு. முயல் சைவ சமயத்துக்கு உவமை. காக்கை - சமண் சமயத்துக்கொப்பு. அருள் வழிச் செல்லாது மருள் வழிச் செலவுக்கு உவமையுமாம்.

44. (என் பாவத்தைப்) பெருகுவித்து - பெருகச் செய்து, (வளர்த்தல்). பண்டு - மீண்டு சைவநெறி புக்கதற்கு முற்காலம். குண்டர்கள் தம் சொல் - சமணர் அறவுரைப் போலி. உருகுவித்து - உருக்கி. உள்ளம் - உயிர். உள் இருந்த கள்ளம்:- சிவபெருமானிலைமை குறித்தது. தள்ளிப்போக்கி அருகுவித்து:- சிவநெறி நிலைமையும் சமணநெறி மறவாமையும் குறித்தது. பிணி - சூலைநோய். பிணி - மும்மலப் பிணி. ஆரூரது அருகிருத்தலுக்கு ஒப்பு அறம் கொள்ளல். அருகனது அருகிருந்ததற்கு ஒப்பு மறம் கொள்ளல். விலைக்குக் கொள்ளத் தக்க அறத்தை வறிதே விட்டு, விலையின்றிக் கிடைப்பினும் வெறுத்தற்குரிய மறத்தை விலைக்குக் கொண்ட பேதைமையை ஏற்றிக்கொண்டுரைத்தவாறுணர்க.

45. குண்டன்:- உடலின் தோற்றம் பற்றிய பெயர். தலை பறித்தல் :- தலை மயிரைப் பிடுங்கியெறிதல். இடவாகுபெயர்.

தொண்டெலா மிசைபாடத் தூமுறுவ லருள்செய்யு
மாரூ ரரைப்
பண்டெலா மறியாதே பனிநீராற் பாவைசெயப்
பாவித் தேனே. 45

துன்னாகத் தேனாகித் துர்ச்சனவர் சொற்கேட்டுத்
துவர்வாய்க் கொண்டு
என்னாகத் திரிதந்தீங் கிருகையேற் றிடவுண்ட
ஏழை யேனான்
பொன்னாகத் தடியேனைப் புகப்பெய்து பொருட்படுத்த
வாரூ ரரை
என்னாகத் திருத்தாதே யேதன்போர்க் காதனனா
யகப்பட் டேனே. 46

குவி - குவிந்த. நகை - வெள்ளி நகைத்தல். உழிதர் வேணி (பா. 47) - திரிதர்வேணி. 'செம்மை நலம் அறியாத சிதடரொடும் திரிவேனை' (திருவாசகம். 658). பண்டம் - (என்னையும்) ஒரு 'பொன்னாகத்து அடியேனைப் புகப்பெய்து பொருட்படுத்த ஆரூரர்' (46) 'நம்மையும் ஒரு பொருளாக்கி' (௸). பால் தலையில் தெளித்தல்:- பஞ்சகவ்வியத்தால் தூய்மையாக்கல்; அபிடேகம் முதலியவற்றோடு கூடிய சிவதீக்கையுமாம். தன் பாதம் காட்டல்:- சிவஞானோபதேசம். தொண்டு - தொண்டர்கள். எலாம் - எல்லாரும். இசை - இசைப்பாக்கள் (தோத்திரங்கள்) (541). தூமுறுவல் - தூய புன்னகை. 'கொம்புநல் வேனி லவனைக் குழைய முறுவல் செய்' (35) தது வேறு இது வேறு எனத் 'தூமுறுவல்' என்று அருளினார். பனி நீராற் பாவை செயப் பாவித்தல்:- பனி நீரால் பொம்மைசெய்யக் கருதுவது போற் சிவநெறியல்லாத (சமண முதலிய) பிற நெறிகளால் வீடு பெறக் கருதுதல். 'பரவை' என்றுள்ள பாடம் பொருந்துமேற்கொள்க.

46. துன்னாகத்தேன் - (துர்+மதி = துன்மதி. துர்+நாகம் துன்னாகம் दुर्नाग:) கொடிய பாம்பை ஒத்தேன். துர்ச்சனவர் - (துர்+ஜனம் दुर्जना:) தீயோர். துட்ட சனங்கள். துவர் வாய்க் கொள்ளல் - துவரேறிய பல்லினராயிருந்தனர் அக்காலச் சமண தருமத்தர். அதற்குக் காரணம் துவர்ப்புடைய காயை

பப்போதிப் பவணனுய்ப் பறித்ததோரு தலையோடே
திரிதர் வேனே
ஒப்போட வோதுவித்தேன் னுள்ளத்தி னுள்ளிருந்தங்
குறுதி காட்டி
அப்போதைக் கப்போது மடியவர்கட் காரமுதா
மாரூ ரரை
எப்போதும் நினையாதே யிருட்ட றையின் மலடுகறந்
தேய்த்த வாறே. 47

வாய்க்கோள்ளல். 'பாசிப்பல் மாசுமெய்யர்' (387) என் ஆக - என்பாட்டுக்கு. 'குறிக்கோளிலாது கேட்டேன்' (657) 'தலக்கமே செய்து வாழ்ந்து தக்கவாறு ஒன்றும் இன்றி விலக்குவா ரிலாமையாலே விளக்கத்திற் கோழி போன்றேன்'. (308) என்பவற்றிற் போல ஈங்கும் கோள்க. திரிதந்து:- 'திரிதரு' என்னும் துணைவினையுடன் கூடிய முதனிலையிற் பிறந்த வினையெச்சம். திரிதரல்:- தோழிற்பெயர். இரு கையிலும் ஏற்று உண்ட. இட உண்ட. ஏழையேன் - அறிவிலேன். 'நுண்ணுணர்வின்மை வறுமை' (நாலடியார். ) போன் ஆகத்து - போன் போலும் ஒளியுடைய சேவ்வுடலினுள். அடியேனைப் பேய்து, புகப்பேய்து. போருட்படுத்த:- 'பண்டமாப் படுத்து' (45). என் ஆகத்து இருத்தாதே - என் உடலினுள் வீற்றிருந்தருளச் செய்யாமலே, 'வினைபடும் உடல் நீ புகுந்து நின்றமையால் விழுமிய விமானம் ஆயினதே' (திருவிசைப்பா. 117.) ஏதன் போர்க்கு ஆதன் அகப்பட்டது போலானேன்.

47. பப்பு ஓதி - பிரவிருத்தியை வளர்க்கும் நூல்களைச் சோல்லி. 'பப்பற வீட்டிருந்துணரும் நின் அடியார்' (திருவாசகம், திருப்பள்ளி, 6.) பம்பு-பப்பு பரப்பு, விரிதல். குவிதல் (நிவிர்த்திக்கு இடம்)இல்லாமை. பவணன்-பவணந்தி. 'நாகலோக வாசி' அல்லர் . 'கனகநந்தியும் புட்பநந்தியும் பவணநந்தியும் குமணமாசுனகநந்தியும் குனகநந்தியும் திவணநந்தியும் மோழி கோளா அநகநந்தியர்' (3-39-6). சைனன் என்றதாம். (பா 45) ஒப்பு - நிகர். ஓடல் ஈண்டு இன்மை குறித்து நின்றது. ஓடல் - நின்ற இடம் வறிதாக விரைந்து ஏகல். ஒப்போடவோது வித்தல்;- 'உவமையிலாக் கலைஞானம்' உபதேசித்தல். ஓது

கதியொன்று மறியாதே கண்ணழலத் தலைபறித்துக்
கையி லுண்டு
பதியொன்று நெடுவீதிப் பலர்காண நகைநாணா
துழிதர் வேற்கு
மதிதந்த வாரூரில் வார்தேனை வாய்மடுத்துப்
பருகி யுய்யும்
விதியின்றி மதியிலியேன் விளக்கிருக்க மின்மினித்தீக்
காய்ந்த வாறே. 48

வீத்தற்கு ஒப்பு ஓடல் உரித்தேனும் ஓதப்பட்ட ஞானத்திற்கும் கொள்ளப்படும். உள்ளத்தின் உள் இருந்து :- ‘உள்ளத்தின் உள்ளே நின்ற கருவே’ (6-47-1).

உறுதிகாட்டல் :- சிவகதியை உணர்த்துதல். ‘உழைத்தால் உறுதி உண்டோ தான்’ (திருவாசகம். 494). ‘ஊடுவது உன்னோடு உவப்பதும் உன்னை உணர்த்துவது உனக்கு எனக்கு உறுதி’ (ஷை 448) பெறுதி, அறுதி, புகுதி, தகுதி என்பன போலும் பெயர்ச்சொல் இது.

அப்போதைக்கு அப்போதும் - நினையும் அவ்வப் பொழுதும். பொழுது - போழ்து - போது. பொழுதை - போதை. மரூஉ. ‘அப்போதைக்கு அஞ்சல் என்னும் அரூரன்’ (திருக்குறுந் 1) ‘அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன்’

“நின்னையெப்போதும் நினையவொட்டாய் நீ நினையப் புகில்
பின்னை அப்போதே மறப்பித்துப் பேர்த்து ஒன்று நாடுவித்தி
உன்னை எப்போதும் மறந்திட்டு உனக்கு இனிதா இருக்கும்
என்னை ஒப்பார் உளரோ ? சொல்லு வாழி இறையவனே.”(1053)

ஒருபோது, இருபோது, முப்போது, நாற்போது என்று வழிபடுகாலம் சிவாகம விதிப்படி நான்கு. எப்போதும் (சதாகாலமும்) வழிபாடு செய்யும் ஞானியர் அல்லார்க்கு இவ் விதி. அதனால் இவ்வாறு கூறினார். ‘எப்போதும் நினையாதே’ :- ஞானியர் செயல் வாயாமைக்கு வருந்தியது. கைப் போது மலர்.......... .... . வைத்தேனே (64) இருட்டறையில் மலட்டாவைக் கறந்து இளைத்தல் போல்வது.

48. கதி - ஊர்த்துவ கதி. செல்கதி எனலுமாம். ஒன்றும் - யாதும். அழல - எரிய, வெம்மை எழ. பதி - ஊர், ஊரில் உள்ள

பூவையாய்த் தலைபறித்துப் போறியற்ற சமண்ணீசர்
　　சொல்லே கேட்டுக்
காவிசேர் கண்மடவார்க் கண்டோடிக் கதவடைக்குங்
　　கள்வ னேன்றன்
ஆவியைப் போகாமே தவிர்த்தென்னை யாட்கொண்ட
　　வாரூ ரரைப்
பாவியே னறியாதே பாழூரிற் பயிக்கம்புக்
　　கெய்த்த வாறே. 49

பெருந்தெரு. மதி - சிவஞானம். திருவாரூரிற் புற்றிடங் கொண்டாராகிய தேனை வாயில் மடுத்துக் குடித்துப், பிறவித் துயரினின்றும் உய்தி பெறுதற்கு நல்லூழ் இன்றி, அறிவிலி யாகிய யான், விளக்கு இருக்கவும் அது கொண்டு தீ வளர்த்துக் குளிர்காயும் அறிவின்றி, மின்மினியால் தீக்காய்தற்கு முயன்ற வாற்றை ஒத்த வினையை மேற்கொண்டேன். உழிதர்வேற்கு மதி தந்த ஆரூர்த் தேன் என்க. உய்யும் விதி :- காரியப் பெயரெச்சம். மதியிலியேன் காய்ந்தவாறு என்றியையுமாயின், மதியிலியேன் செயல் காய்ந்தவாறாகும் என்க. மதியிலேன் என்றதும் மதியிலியேன் என்றதும் ஒன்றாகா. ‘மதியிலி’ என்பது படர்க்கை. அதனோடு தன்மையுணர்த்தும் ஈற்றுநிலை (விகுதி) சேர்ந்து ‘மதியிலியேன்’ என்றாயிற்று.

49. போறி - அறிவு. ஐம்பொறிவாயிலாக வரும் புலன் களுள் ஒழுங்குடையதே போறி என்பர். சமண் + நீசர் = சமணீசர். சமணராகிய நீசர். காவி கண்ணுக்கு உவமம். மடவார்க்கண்டு:- மடவாரைக் கண்டு. உயர்திணைக்கண் தொக்கு நின்றது இரண்ட னுருபு வல்லொற்று மிகாதேல் எழுவாய்த்தொடராய்விடும். மட வாரைக் கண்டு ஓடிக் கதவை அடைக்கும் கள்வன் என்றதால், சமணசமயத்துறவிகள், மகளிரைக் காணார். கண்டால் ஓடிக் கதவை அடைத்துக்கொள்வர். புறத்தே மகளிரைக் கண்டு ஓடிக் கதவை அடைத்துக்கொண்டு, கருத்தை அடைக்காது அகத்தே அவரால் எய்தும் சிற்றின்பத்தை விழைவோர், ‘கள்வர்’. அம்முறைமையால், தம்மைக் ‘கள்வனேன்’ என்றருளினார். ஆவி :- ஆவித்தலால்வந்த காரணப்பெயர்; உயிர்த்தலால் உயி ரென்றாயதுபோல்வது. பாழாய்ப்போன ஊரில் பிச்சை புகுந்து

ஒட்டாத வாளவுணர் புரமூன்று மோரம்பின்
வாயின் வீழக்
கட்டானைக் காமனையுங் காலனையுங் கண்ணினொடு
காலின் வீழ
அட்டானை யாரூரி லம்மானை யார்வச்செற்
றக்கு ரோதம்
தட்டானைச் சாராதே தவமிருக்க அவஞ்செய்து
தருக்கி னேனே. 50

இளைத்தால்தான், 'பிச்சை' எடுக்கத் துணியும் எண்ணம் மிகக் கோடியது எனல் விளங்கும். பயிக்கம் - பிச்சை. 'பிச்சை புகுதல்' என்னும் வழக்குணர்க. 'பலியும் படிகமும் பாகமும் பயிக்கமும் பிண்டமும் சரியையும் ஐயமும் பிச்சை' (பிங்கலந்தை. 2123). 'போற்றிய பயிக்கம் பாகம் பொருந்திய பலியே பிண்டம் சாற்றிய பிடிதம் ஐயம் சரிதை எழ் பிச்சையின் பேர்' (சூடாமணி நிகண்டு. 9 :- 11).

50. ஒட்டாத - வேறுபட்ட 'ஒட்டாத பாவித் தொழும்பர்' (திருவாசகம் 221) நண்பால் ஒட்டுதல். வாள் - கொடுமை. (முப்புரத்தியல்பு. 1037). 'அம்பின் வாயின்' என்றதில் உள்ள இன் இரண்டும் முறையே சாரியையும் எழனுருபும் ஆகும். அம்பினது வாய் என்றுரைக்க. கட்டான் - களைந்தான். காமனைக் கண்ணின் வீழவும், காலனைக் காலின் வீழவும் அட்டான். அடுதல் - கொல்லல். 'ஆர்வம்' என்றதால் காமம், மோகம், உலோபம் மூன்றும் கொள்ளப்பட்டன. 'செற்றம்' என்றதால் மதமும் மாற்சரியமும் அடங்கும். அடங்கவே ஆறும் கூறப் பட்டன. தட்டான் - தட்டுப்படாதவன். ஆறு குற்றங்கட்கும் அப்பாற்பட்டவன். குற்றமிலி என்றவாறு. தட்டாதவன் - தவறுதவன். அக்குற்றங்களைச் சார்ந்து தவறுவன உயிர்கள். அத்தவறு சாராதவன் இறைவன் எனலுமாம். அவனைச் சாராமலே கழிந்தமைக்கு இரங்கியவாறு. தவம் என்பதன் மறுதலை அவம் ஆதல் பல நூலினும் காணப்படும். 'தவமே புரிந்திலன் தண்மலர் இட்டு முட்டாது இறைஞ்சேன் அவமே பிறந்த அருவினையேன்' (திருவாசகம். 9) "வான்பாவிய உலகத்தவர் தவமே செய அவமே, ஊன்பாவிய உடலைச்சுமந்து

மறுத்தானோர் வல்லரக்க னீரைந்து முடியினொடு
தோளுந் தாளும்
இறுத்தானையெழின்முளரித்தவிசின்மிசையிருந்தான்றன்
தலையி லொன்றை
அறுத்தானை யாரூரி லம்மானை யாலால
முண்டு கண்டம்
கறுத்தானைக் கருதாதே கரும்பிருக்க இரும்புகடித்
தெய்த்த வாறே. 51

திருச்சிற்றம்பலம்

அடவிமரம் ஆனேன்'' (ஷை. 515). 'தவப் பெருவாயிடைப் பருகித் தளர்வோடும் அவப்பெருந்தாபம் நீங்காது அசைந்தன' (ஷை. 3-81-2). தருக்குதல். இஃது உடல்பற்றியதாதல் 'முன் கைத் தருக்கைக் கரும்பின் கட்டிக் கடிகையினால் எறி உழவர்' (1. 5. 7) என்னும் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திரு வாக்கால் அறியப்படும்.

51. மறுத்தான் - திருக்கைலையை எடுக்க எண்ணுவதே தீவினை என்றதை மறுத்து எடுப்பேன் எனச் சொல்லிச் செய்தும் அடங்கியவன். அறுத்த அறத்தின் நீங்கி, மறுத்த (பிறன் மனையை நாடிய) மறத்தைச் செய்தவன் எனலுமாம். இறுத்தல் - முரித்தல். எழில் - எழுச்சி. முளரி - (முள்+அரி) தாமரை மலர். தவிசு - (தவிர்+து) தங்குதலுடையது, இருக்கை. காரணப்பெயர். தவிர்து என்றதன் மருஉ. இருந்தான் - ஐந்தலையனுயிருந்தவன் (படைப்பவன்). கண்டம் - கழுத்து. கறுத்தல் - கருநிறம் அடைதல். கருமை:- பண்பு. கறுத்தல்:- தொழில். வெகுளியால் கண் கறுப்பும் சிவப்பும் அடைதலின், 'கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள' என்று கூறிய தொல் காப்பியர், 'நிறத்துரு வுணர்த்தற்கும் உரிய வாகும்' என்றமை உணர்க. இஃதறியாதார் கருத்தான் என்றெழுதுகின்றனர். சிவத் யாநம் அல்லாதன எல்லாம் அவத்யாநமே என்பார், 'கரும் பிருகக இரும்பு கடித்து எய்த்தவாறே' என்றருளினார். எய்த்தல் - இளைத்தல்.

## 6. திருக்கழிப்பாலை

### திருப்பதிக வரலாறு

சொன்னம் பிரகாசிக்கும் தில்லைச் சிற்றம்பலத்திலே 'அன்னம் பாலிக்கும்' என்றும் திருக்குறுந்தொகைகள் பாடித் திருவுழவாரம் கொண்டு, பெருந்து எழுகாதலோடும் பெருந் திருத்தொண்டு செய்து, திருமேனி கண்ணீர் வெண்ணீற்றுவண்டல் ஆடப் பணிகள் செய்து விளங்கும் நாளில், திருவேட்களத்துச் சேவுயர் கொடியுடையாரை வணங்கிப் பாடிய நாவுக்கரசர் காவியங்கண்டர் மேவிய திருக்கழிப்பாலையை மண்ணோர் வாழ விண்ணோர் விளங்க நண்ணினார். அங்கு வீற்றிருந்தருளும் மணவாள நம்பிகழலைப் போற்றிப் பாடிய வண்டமிழ்த் திருப்பதிகம் இது.

பண் காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

வனபவள வாய்திறந்து வானவர்க்குந்
தானவனே யென்கின் றாளாற்
சினபவளத் திண்டோள்மேற் சேர்ந்திலங்கு
வெண்ணீற்ற னென்கின் றாளால்
அனபவள மேகலையொ டப்பாலைக்
கப்பாலா னென்கின் றாளாற்
கனபவளஞ் சிந்துங் கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 52

52. இது செவிலி கூறுவதாகக் கொள்ளற்பாலது. கன பவளம்சிந்தும் கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் வாய்திறந்து, தானவனே வெண்ணீற்றன், அப்பாலான் என்கின்றாள் என்று முடிக்க. மேலும் இவ்வாறே கொள்க. கழிப்பாலையிற் சேர்வான் என்று ஏழனுருபு விரிக்க; சேர்தற்கு இடம் ஆதலின். இரண்டன் றொகையாயின் வலி மிகாது. வனபவள வாய் - அழகிய பவளம் போன்ற செவ்வாய் வானவர்க்கும் தானவன் - தேவர்களுக்கும் அருள்பவன். ஏகாரம் அசை. 'தாநம்' என்னும் வடசொல்லடியாகப் பிறந்த வினை(க்குறிப்பு)ப் பெயர். தேவர்களுள் ஒருவனாகக் கருதப்பெறாது தானாக(த்தனித்து)ப் போற்றப்

வண்டுலவு கொன்றை வளர்புன்
சடையானே யென்கின் றாளால்
விண்டலர்ந்து நாறுவதோர் வெள்ளெருக்க
நாண்மலருண் டென்கின் றாளால்
உண்டயலே தோன்றுவதோ ருத்தரியப்
பட்டுடைய னென்கின் றாளாற்
கண்டயலே தோன்றுங் கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 53

பெறுவோன் எனலுமாம். ‘நம்மவரவரே மூவர் என்றே எம்பிரானோடும் எண்ணி விண்ஆண்டு மண்மேல் தேவர் என்றே இறுமாந்து என்ன பாவம் திரித(ர்)வரே’ (திருவாசகம்.). வானவர்க்குப் பகைவராகிய தானவரை ஈண்டுக் கருதற்க. சினபவளத் திண் தோள்மேல் சேர்ந்து இலங்கு வெள்நீற்றன் - கோபச் செம்மையுடைய பவளம் போன்ற திண்ணியனவாகிய தோள்களின்மேற் பொருந்தி விளங்கும் திருவெண்ணீற்றையுடையன். ‘சிவனவன் திரள் தோள்மேல் நீறுநின்றது கண்டனை’ (திருவாசகம்.) சினம் கோபத்தால் ஆகும் செம்மைக்கு ஆகுபெயர். சிவப்பு நிறத் துருவுமுணர்த்தும் என்றார் தொல்காப்பியர். திருநீற்றுச் சின்னமெனலுமாம். அனபவள மேகலை - அன்னம் போன்றவள்; பவள நிறமுடைய மேகலையுடுத்தவள்; பாதியுறு மாது; உவமத்தொகைநிலைக் களத்துப் பிறந்த அன்மொழி. அப்பாலைக்கு-சுத்தாவத்தைகளுள் துரியத்துக்கு. அப்பாலான்-துரியாதீதத்தில் உள்ளவன். கனபவளம் :- பவளத்தின் சீர் (கனம்) உணர்த்திற்று. கழிப்பாலையிற் பவளம் சிந்தும்.

53. ‘வண்டு உலவு கொன்றை வளர்புன் சடையானே’ என்றது, மரத்திலுள்ளபோது கொன்றையில் வண்டு மொய்க்கும். சடையில் ஏறிய பின்னரோ அணுகவும் அஞ்சி அகலவும் மாட்டாமல் உலவுகின்றமை தோற்ற. புன்சடை - பொன்னார் சடை. புன்மை பொன்மையைக் குறித்தல் உண்டு. கங்கையைத் தடுத்த சடை வன்மைக்குப் புன்மை கூறலாமோ? ‘புல்லிய சடை’ என்பாருமுளர். விண்டு - விள்ளுதல் உற்று. அலர்ந்து - விரிந்து. நாறுவது - மணப்பது. ஓர் வெள் எருக்க மலர் :- ‘வெள்ளெருக்கஞ் சடைமுடியான்’ (கம்பர்) என்னப் பெறும்

பிறந்திளைய திங்களெம் பெம்மான்
முடிமேல தென்கின் றாளால்
நிறங்கிளருங் குங்குமத்தின் மேனி
யவனிறமே யென்கின் றாளால்
மறங்கிளர்வேற் கண்ணாள் மணிசேர்
மிடற்றவனே யென்கின் றாளாற்
கறங்கோத மல்குங் கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 54

ஒப்பில்லாத வெளிய எருக்கம்பூ. நாள் மலர் - காலையிற் பூத்த பூ. உண்டு - உளது ஆகி என ஆக்கம் விரித்துத் தோன்றுவது என்பதனோடு இயைக்க. உத்தரீயம் - மேற்புனையும் ஆடை. கீழ் உடுப்பது வேறு. பட்டுடுக்கும் பழக்கம் நெடுங்காலத்தது. கண்டலயலே என்னும் பாடத்தில் ஒரு லகாரம் தொக்கதாயிற்று. 'களிவண்டார் கரும் பொழில்சூழ் கண்டல் வேலிக் கழிப்பாலை' 'கயல் பாயும் கண்டல் சூழ்வுண்ட வேலிக் கழிப்பாலை' (திருத் தாண்டகம். 3, 8) 'கைதல் மடல் புல்கு கழிப்பாலை' (1013) கண்டல் - கழிமுள்ளி; நீர்முள்ளி; கண்டு என்னும் பாடமும் கண்டல் என்னும் பொருள் பயக்கும். (சுந்தரர். 234).

54. பிறந்து இளைய திங்கள் :- 'பிறை' என்னும் காரணப் பெயரைப் புலப்படுத்துகின்றது. இளைய திங்கள் :- பண்படியாகத் தோன்றிய பெயரெச்சம். பிறந்து என்னும் எச்சம் 'இளைய' என்பதன்கண் விரியும் வினைக் குறிப்பைக்கொண்டது. இளந்திங்கள் என்புழி இளையதாகிய திங்கள் என்று விரியும்; ஐம்பாலறியும் பண்பு தொகுமொழியாதலின். அப்பொருட்டே 'இளைய திங்கள்' என்பதூஉம். எனவே, அங்கு விரியும் வினையே பிறந்து என்பதற்கு முடிபாயிற்று. பிறந்த எனக் கொண்டு பெயரெச்சத்து அகரம் தொக்கதெனலும் கூடும். எம் பெம்மான் முடிமேலது திங்கள்; அவன் நிறமே நிறம் கிளரும் குங்குமத்தின் மேனி; மறம் கிளர் வேற்கண்ணாள் கண்டாள் என்றியைக்க. அன்றி, அன்னையைக் குறித்ததாகக்கொண்டு, அவளது கண் மணியை ஒத்த திருநீலகண்டனே என்கின்றதும் பொருந்தும். கறங்கு ஓதம் - சுழலும் அலையொலி. ஓதுங் காரணம் பற்றியது ஓதம். ('ஓரோதம்' 59.) மல்குதல் -

இரும்பார்ந்த சூலத்த னேந்தியோர்
　　வெண்மழுவ னென்கின் றளாற்
சுரும்பார் மலர்க்கொன்றைச் சுண்ணவெண்
　　ணீற்றவனே யென்கின் றளாற்
பெரும்பால னாகியோர் பிஞ்ஞக
　　வேடத்த னென்கின் றளாற்
கரும்பானல் பூக்குங் கழிப்பாலைச்
　　சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 55

பழியிலான் புகழுடையன் பானீற்ற
　　னானேற்ற னென்கின் றளால்
விழியுலாம் பெருந்தடங்கண் ணிரண்டல்ல
　　மூன்றுளவே யென்கின் றளாற்

மலிதல். காதல்பற்றிய சொல்லாதலின், முறையும் காரணமும் அமைந்தில.

55. இரும்புருவச் சூலம். ஏந்திய ஓர் வெண்மழு. சுரும்பு-வண்டு. சுருள்பு என்பதன் மரூஉ. விரியுங்காறும் மலரைச் சுற்றிக்கொண்டிருத்தலாகிய காரணம்பற்றிய பெயர். இருள்பு - இரும்பு. இருள்போல்வது. அருள்பு-அரும்பு. அருள்தோற்றுவது. அருள்பெறத் துணைப்பொருளாயிருப்பது. " அருப்போடு மலர் பறித்து, இட்டு உண்ணு ஊர் ஊர் அல்ல அடவிகாடே " என்று பின்னர் ஆசிரியர் அருளியதுணர்க. கருள்பு - கரும்பு. கருமை பற்றியது. ' செங்கரும்பு ' என்றதால் உணர்க. சுண்ணம் - பொடி (61). வெண்ணீற்றுச் சுண்ணம். ' சுண்ணவெண் சந்தனச் சாந்தும் ' (11) பெரும்பாலன் ஆகித் தாருகவனத்து மகளிர் முன்நின்ற கோலம். விருத்த குமார பாலரான திருக்கோலமுமாம். ஆகி என்பது வேடத்தன் என்பதில் விரியும் வினைக்குறிப்புக் கொண்டது. பிஞ்ஞகவேடத்தன் - தலைமுடியணி வேடத்தையுடையவன். கரும்பானல் - கருங்குவளை. சூலத்தன், மழுவன், கொன்றை(யன்), நீற்றன், வேடத்தன் என்கின்றாள்.

56. பழியின்மையும் புகழுண்மையும் ஓரிடத்திலிருப்பன. பழியும் புகழும் வெவ்வேறிடத்தன. மெய்ப்புகழ் பழியிலானிடத்தில்தான் இருக்கும். புகழிலானிடத்தில் பழி உண்மையும்

கழியுலாம் வருகங்கை தோய்ந்த
சடையவனே யென்கின் றாளாற்
கழியுலாஞ் சூழ்ந்த கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 56

பண்ணார்ந்த வீணை பயின்ற
விரலவனே யென்கின் றாளால்
எண்ணார் புரமெரித்த வெந்தை
பெருமானே யென்கின் றாளாற்
பண்ணார் முழவதிரப் பாடலோ
டாடலனே யென்கின் றாளாற்
கண்ணார் புனற்சோலைக் கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 57

கூடும் ; இன்மையும் கூடும். உலகில் இரண்டும் இன்றிப் பலர் இருத்தல் கண்கூடு. பால்நீற்றன் :- 'பவளம்போல் மேனியிற் பால் வெண்ணீறு' (783). ஆன் ஏற்றன் :- 'ஏறூர்தி'. விழி - (விழித்தல் உடையது). கருவிழி. உலாம் - உலாவும். பெருந் தடங்கண் - பெரியனவும் அகன்றனவும் ஆன கண்கள். முச் சுடரும் பெருமையும் அகற்சியும் உடையன. ஆதலின் 'பெருந் தடங்கண்' எனப்பட்டன. இரண்டு அல்ல' என்றலின், இரண்டிறந்த பன்மையாம். ஆயினும் இரண்டனை இறந்து பலவாதல் தொடராமை நோக்கி, 'மூன்றுளவே' என்றார். 'இரண்டல்ல' 'மூன்றுள' என்பவற்றுள் ஒன்று சொல்ல மற்றது தோன்றும். இரண்டுங் கூறியது மிகைபடக் கூறல் அன்றோ எனின் 'கண்ணிரண்டே யாவர்க்கும்' ஆதலின், என்றும் எவர்க்கும் முக்கண் உண்டெனக் கேட்டிராதவாறு உணர்த்தி வியந்ததாம். கழியுலாம் கங்கை. வருகங்கை. கங்கை தோய்ந்த சடை. 'கழிப்பாலை' என்னும் பெயரது காரணத்தைத் தோற்றிற்று அடை. உலாம் சூழ்ந்த என்னும் எச்சத்தைத் தனித்தனி சேர்த்துக்கொள்க. 'உலாம்' என்பது இயக்கம் என்னும் பொருளதாகிய பெயருமாம்போலும். (பா. 60. 'கழியுலாம்').

57. பண் ஆர்ந்த வீணை :- பண்(ணும் திறமும்) நிறைந்து ஒலித்தற்கு இடமான கருவியாய் 'வீணை' என்னும் பெயருடை

முதிருஞ் சடைமுடிமேன் மூழ்கு
    மிளநாக மென்கின் றாளால்
அதுகண் டதனருகே தோன்று
    மிளமதிய மென்கின் றாளாற்
சதுர்வெண் பளிக்குக் குழைகாதின்
    மின்னிடுமே யென்கின் றாளாற்
கதிர்முத்தஞ் சிந்துங் கழிப்பாலைச்
    சேர்வானைக் கண்டாள் கோல்லோ. 58

ஓரோத மோதி யுலகம்
    பலிதிரிவா னென்கின் றாளால்
நீரோத மேற நிமிர்புன்
    சடையானே யென்கின் றாளாற்
பாரோத மேனிப் பவள
    மவனிறமே யென்கின் றாளாற்
காரோத மல்குங் கழிப்பாலைச்
    சேர்வானைக் கண்டாள் கோல்லோ. 59

யது. 'பண்ணும் முழவு' என்புழியும் இவ்வாறுணர்க. பயின்ற - பல்காற்பழகிய. எண்ணுர் - நினையாதார் (பகைவர்). எந்தை பெருமான் - எம்மைத் தந்தவனைத் தந்த பெருமகன். பாட்டன் என்றபடி. பாடலோடு ஆடலன் - பாடலும் ஆடலும் உடையவன். கண்ணுக்கு ஆர்ந்த பூஞ்சோலைகளையுடைய கழிப்பாலை. விரலவனே, பெருமானே, ஆடலனே என்கின்றுள்.

58. முதிர்சடை இளநாகம் :- முரண். அது - அப் பாம்பு. முதுநாகம் அன்மையின் அருகே தோன்றிற்று முற்றுமுளமதியம் ஆதலின் நாகத்தருகே தோன்றிற்று எனலுமாம். வெண்குழை. பளிக்குக்குழை. காதிற்குழை மின்னிடும். சதுர் - மேம்பாடு. பளிங்கு+குழை=பளிக்குக் குழை.'' கதிர் முத்தம் (கடலலை கள்) 'சிந்தும் கழிப்பாலை'. முழுகுதல் பல்சடையுளேனும் மேலுள்ள கங்கையுளேனும் கூடும்.

59. ஓர் ஓதம் - ஓர்ந்துகொள்ளத்தகும் மறைகளை. வினைத் தொகை. ஓதுவது ஓத்து ; ஓதம். (54. பார்க்க.) ஓது - பாடு;

வானுலாந் திங்கள் வளர்புன்
சடையானே யென்கின் றாளால்
ஊனுலாம் வெண்டலைகொண் டூரூர்
பலிதிரிவா னென்கின் றாளாற்
றேனுலாங் கொன்றை திளைக்குந்
திருமார்ப னென்கின் றாளாற்
கானுலாஞ் சூழ்ந்த கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 60

அடர்ப்பரிய விராவணனை யருவரைக்கீ
ழடர்த்தவனே யென்கின் றாளாற்
சுடர்ப்பெரிய திருமேனிச் சுண்ணவெண்
ணீற்றவனே யென்கின் றாளால்

ஒத்து - பாட்டு; ஓதம் - பாடம். எனவருஞ்சொல்லமைதி உணர்க. பாடம் என்னும் வடசொல்வேறு இதுவேறு. 'பாடம் (பாடு + அம்) கருத்தே சொல்வகை சொற்பொருள்' என்புழி வருவது தமிழ்ச் சொல்லுமாம். 'பாடம் படித்தான்' என்புழி நிற்பது வடசொல். நீர் ஓதம் - கங்கை. கங்கை நீரோதமுமாம். பார் ஓதம் - உலகு சூழ் கடல். ஓதப் பவளம் - கடலிலுள்ள பவளம். மேனிப் பவளம் - நிறமுடைய பவளம். அவன் நிறமே பவள மேனி எனலுமாம். கார் ஓதம் - கருங் கடல்.

60. வான் உலாம் திங்கள் :- 'வான் ஊர் மதியம்' (நாலடி) 'உலாவும்'.- செய்யும் என்னும் எச்சத்தில் உயிர் மெய் ஏகிற்று. (பா. 56 பார்க்க) ஊன் உலாம் வெள்தலை - பிரமகபாலம். மார்பில் திளைக்கும் வண்ணம் அணிந்த கொன்றை மாலை பெறல் தலைவியின் குறிப்பு. 'கான் உலாம்'. 'கழியுலாம்' (56) இரண்டும் நோக்கின், உலாம் என்பதைப் பெயராகக் கொள்ளல் பொருந்துமாறுணர்க.

61. அடர்ப்பு அரிய - கொன்று வெல்லுதற்கு எவராலும் மாட்டாத. இராவணனது திறல் உணர்த்தியவாறு. அருவரை - எடுத்தற்கு எளிதல்லாத கைலாயம். சுடர்த்திருமேனி, பெரிய திருமேனி - 'பார்க்கும் இடம் எங்கும் ஒரு நீக்கம்அற நிறை

மடற்பெரிய வாலின்கீ ழறநால்வர்க்
கன்றுரைத்தா னென்கின் ருளாற்
கடற்கருவி சூழ்ந்த கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கோல்லோ. 61

திருச்சிற்றம்பலம்

கின்ற பரிபூரணனந்த 'மய ரூபம் பவளம் போலும் அம் மேனியிற் பால் போலும் வெண்ணீற்றை அணிந்தவனே. மடல் - இலை. பெரிய ஆல் - சுத்த மாயையாகிய கல்லால். அறம் - 'சிவதன்மம்' 'அறங்கொண்ட சிவதன்மம் உரைத்த பிரான்' (2. 43. 6). இருவர், நால்வர்:-அகத்தியர் முதலியவரும், சநகர் முதலியோரும் என்றிருதிறத்தர். இருவர்:- திருமால், நான்முகன். 'அணிபெறு வடமர நிழலினின் அமர்வோடும் அடியிணை இருவர்கள், பணிதர அறநெறி மறையோடும் அருளிய பரன்' (1. 20. 5). ஒருவர் :- திருநந்திதேவர்க்குரைத்ததும் உணர்த்துவர். 'ஆல்வருக்கந் தனிலுயர்ந்த வடநிழற்கே தென்முகங் கோண் டறவோர் ஆய நால்வருக்குள் இருவருக்கும் ஒருவருக்கும் நவின்றருளி நவிலொணத நூல்வருக்கம் ஒருவருக்கு நுவலாமல் நுவன்றுன்'. (திருக்குற்றுலப் புராணம் கடவுள் வாழ்த்து. 7)

என்பட்டிக் கட்டிய விந்தப்பைக் குரம்பையை
யிங்கிட்டுச் சுட்டபி னேங்குத்தைக் குச்சேலுமிது
முன்பிட்டுச் சுட்டிவ ருந்திக்கேத் திக்கென
மோய்ம்புற்றுக் கற்றறி வின்றிக்கெட் டுச்சில
வன்பட்டிப் பிட்டர்க டுன்புற்றுப் புத்தியை
வஞ்சித்துக் கத்தி விழுந்தேச்சுத் தட்டுவ
ரன்பர்க்குப் பற்றிலர் சென்றர்ச்சிக் கின்றில
ரந்தக்குக் கிக்கிரை சிந்தித்தப் பித்தரே. 5

## 7. திருக்கச்சியேகம்பம்

### திருப்பதிக வரலாறு

ஞாலம் உய்யத் திருவதிகை நம்பர் தம் பேரருளினாற் சூலைமடுத்து முன் ஆண்ட தொண்டர் வரப்பெற்றோம் என்று காஞ்சிவாணர் முகமெல்லாம் காலை மலரும் கமலம்போற் சாலமலர்ந்து களி சிறப்பத் தழைத்த மனங்களோடு தாங்குவாராய், மாடவீதி மணி வாயில் காவணங்களில், தோரணம், கதலி, கமுகு, நிறை பொற்குடம், தீபம், மாலை சூழ நிரைத்துக் கொடி எடுத்துக் காஞ்சியை அழகுறுத்தினார்கள். சிவலோகப் பொலிவழகு மிக்க திருநாவுக்கரசரை எதிர்கொண்டனர்; இறைஞ்சினர்; அப்பரும் அடியாரை இறைஞ்சினார். மணிமதிற் காஞ்சிநகர் மறுகூடுபோந்து, கம்பர் செம்பொற்கோயில் சாருகின்றார். திருவாயிலையும் செல்வத் திருமுன்றிலையும் அணைந்து பணிந்தார்; கருவார் கச்சித்திருவேகம்பர் கனக மணி மாளிகை சூழ்ந்து வருவாராய், செம்பொன்மலை வல்லி தழுவக் குழைந்த மணிமேனிப் பெருவாழ்வினை முன்கண்டு இறைஞ்சிப் பேரன்பு பெருகிக், கண்ணருவி சொரிந்து, புளகம் புறம்பும் அன்பு அகம்பும் அலைப்ப, நயனம் பயன்பெற்றுத் திளைப்பத் திருவேகம்பரை மனத்தில் வரவைத்துப் பாடிய பரவாய சொன் மாலைத் திருப்பதிகம் இது.

பண் காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை
அரவாடச் சடைதாழ வங்கையினி லனலேந்தி
இரவாடும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே. 62

62. கரவு ஆடும் வல்நெஞ்சர்க்கு அரியானை - (தனக்குச்) சிறிதும் இடம் இல்லாதவாறு மறைத்தலும் மறத்தலும் செய்து உலகப் பொருளில் ஓடி ஆடும் வலிய நெஞ்சுடையவர்க்கு, உணர, உரைக்க, உள்ள தொண்டுசெய்து பணிய எளியனல்லாத திருவேகம்பனை. ‘ கரவிலா மனத்தார்க்குக் கைதொழுவார்கட்கு .........ஆடி இன்னருள் செய்யும் எந்தை ’ (560). வலிய நெஞ்சிற் கரவு ஆடுகின்றது என்றாராயினும், நெஞ்சியல்புணர

தேனோக்குங் கிளிமழலை யுமைகேள்வன் செழும்பவளம்
தானோக்குந் திருமேனி தழலுருவாஞ் சங்கரனை
வானோக்கும் வளர்மதிசேர் சடையானை வானோர்க்கும்
ஏனோர்க்கும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே　　63

இவ்வாறுரைக்கலாம். ஏகம்பன் ஆடத்தக்க நெஞ்சினுள் ஆடத் தகாத கரவு ஆடுகின்றது எனலுமாம். (கருளன் - கள்ளன்' கருள் - கரவு. உழுதல் - உழவு. வருதல் - வரவு, தருதல் - தரவு. உறுதல் - உறவு. அறுதல் - அரவு. நடுதல் - நடவு. 'கள்ளரோ புகுந்தீர் என்னக் கலந்துதான் நோக்கி நக்கு, வெள்ளரோம் என்று நின்றார் விளங்கிளம் பிறையனாரே' என்னும் அருண்மொழியில் (734). கள்ளர், வெள்ளர் என்பவற்றின் தொல்லுருவம் ஆய்ந்துணர்க. கருளர், வெருளர் என்பவற்றின் மரூஉவேயாம்). கரவார் - சதா சிவசிந்தனையாளர். விரவு - கலப்பு. விரவாடல் - கலப்பைஆளுதல். வித்தகன் - ஞான சொரூபன். சதுர்ப்பாட்டினனுமாம். அரவு - பாம்பு. அங்கை - உள்ளங்கை. இரவு - கேவலாவத்தையில். 'நள்ளிருளில் நட்டம் பயின்று ஆடும் நாதனே' (திருவாசகம். 1).

63. தேன் நோக்கும் கிளிமழலையுமை - இத்தகைய இனிமை வாய்க்குமாறு யாதென்று தேன் நோக்கும் பெருமை வாய்ந்த 'குதலைமொழி மழலைக்கிளி' போலும் உமையம்மையார். கேள்வன் - கணவன். இன்பத் துன்பங்களைக் கேட்டற்குரியவன் என்னும் காரணம்பற்றிக், கேள், கேள்வன், கேளிர் என்றனர். 'ஏந்தெழில் மிக்கான் இளையான் இசை வல்லான், காந்தையர் கண்கவர் நோக்கத்தான் வாய்ந்த நயனுடை இன்சொல்லான் கேள் எனினும் மாதர்க்கு அயலார்மேல் ஆகும் மனம்' (நீதிநெறிவிளக்கம். 81). 'தன்னுடைக் கேள்வன் மகன் தகப்பன்' (திருவாசகம். 207). 'தன் கேளிர் துன்பம் துடைத் தூன்றுந்தூண்' (குறள். 615). செழும்பவளம் திருமேனியை நோக்குமாம்; தனக்கு அதன் நிறத்தின் நலம் வாய்ப்பது என்று என்று. அத்திருமேனி தழலின் உருவாம் வண்ணம் உடைய சங்கரன். தழலின்உருவென்றதுகொண்டுவெம்மைகருதாதிருக்கச் 'சங்கரன்' (இன்பம் செய்பவன்) என்றருளினார். 'வானோக்கும்' என்பது சடையும் அடையும். வானோர் - திருவடி நிழலடைந்

கைப்போது மலர்தூவிக் காதலித்து வானோர்கள்
முப்போது முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை
அப்போது மலர்தூவி யைம்புலனு மகத்தடக்கி
எப்போது மினியானை யென்மனத்தே வைத்தேனே. 64

தவர். ஏனோர் - அடைய முயல்பவர். விண்ணோர் மண்ணோர் முதலியோர் எனல் சிறவாது. பெருமான் - பெருமகன். கோமகன்-கோமான். சேரன்மகன் சேரமான். மலையன்மகன் - மலையமான். (ஒருமை). குருக்கள் மகார் - குருக்கள்மார். செட்டி மகார் - செட்டிமார். மகவர் - மகாஅர். கிழவர் - கிழாஅர். சிறுவர் - சிறாஅர். 'கல்விபோன் பன்றியும் வல்லாளன் சிறாஅன்' (புறம். 336; 325, 334, 382). ஆலூர் மூலங்கிழார் (பன்மை) என்பவற்றை நோக்குக.

64. கைப் போது மலர் தூவி - கையால் (அரும்பும்) போதும் மலரும் தூவிட்டு. 'அரும்போடு மலர்பறித்து இட்டு உண்ணூரும்........காடே'. காதலித்து :- கருதல் என்பது காதல் என மருவிற்று. அப்பொருளடியாகப் பிறிதொரு தொழிற் பெயர் காதலித்தல் என்றுண்டாயிற்று. அதினின்று இவ்வினை யெச்சம் அமைந்தது. 'முயற்சித்து' என்றதுபோலும் குற்ற முடையதன்று. 'கருதியது முடித்தல்' (சிறுபாண். நச்சர்.) முப்போதும் :- காலை மாலை பகல். நள்ளிரவோடு நாற்போது ஞானியர் சந்தி செய் காலம். 'எப்போதும்' என்றது சீவன் முத்தர்க்கு. முடி :- தலையும் தலையிலணிந்த மணிமுடியும். வானோர்கள் :- நிலமிசை நீடுவாழ்வாரும் துறக்கத்தில் வாழ் வாரும். எப்போதும் இனியானை (ச் சிவாகமங்களில் விதித்த காலங்களாகிய) அப்போது மலர்தூவி ஐம்புலனும் அகத்து அடக்கி என்மனத்தே வைத்தேன். அப்போது மலர் - அவ் வேளையிற் பூத்த பூவுமாம். பழம் பூவாகாமை சிவாகம விதியிற் காண்க. முதலடியிற் குறித்த அப்போதும் மலரும் எனலுமாம். அடக்கியது அகத்து. வைத்தது மனத்து. அகம் - உள் என்னும் துணையாம். மனம் அந்தக்கரணத்தொன்று. அதனைக் கூறியது கூறலன்று. புலனடக்காத பூசையாற் பயனின்று.

அண்டமா யாதியா யருமறையோ டைம்பூதப்
பிண்டமா யுலகுக்கோர் பெய்பொருளாம் பிஞ்ஞகனைத்
தொண்டர்தா மலர்தூவிச் சொன்மாலை புனைகின்ற
இண்டைசேர் சடையானை யென்மனத்தே வைத்தேனே. 65

ஆறேறு சடையானை யாயிரம்பே ரம்மானைப்
பாறேறு படுதலையிற் பலிகொள்ளும் பரம்பரனை
நீறேறு திருமேனி நின்மலனை நெடுந்தூவி
ஏறேறும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே. 66

65. அண்டமாயும் அவற்றின் ஆதியாயும் அருமறையாயும் ஐம்பெரும் பூதப் பிண்டமாயும் உலகுக்கு ஒரு பெய்பொருளாயும் உள்ளவன். பிஞ்ஞகன் - தலைக்கோலத்தான். துவண்டு அடிமை செய்பவர் தொண்டர். துவளாதார் தொண்டர் என்னும் பெயர்ப் பொருளுக்கு ஏலார். மலரும் ஆம். அலரும் ஆம். 'சொன்மாலை' :- 'கீர்த்தனுவளி' என்பர் வடசொல்லார். 'சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள்' (114) 'உரைமாலை எல்லாம் உடைய அடி' (6. 6. 7) 'நாயேன் குழைத்த சொன் மாலை கொண்டருள் போற்றி' (திருவாசகம். 4) புனைகின்ற சடை. சேர்சடை. தூவிச்சொல்லும் மாலையுமாம். புனைவதுசடை. சேர்வது இண்டை. இண்டை :- 'இணையடை' என்பதன் மரூஉ. சுமையடு என்பது சும்மாடு என மருவியதறிக. இண்டை சேர் சடையிற் புனைகின்றமையாற் சொன்மாலை யுயர்ச்சி விளங்கும். பூத்தூவுதலும் போற்றுரைத்தலும் இன்றியமையாதன.

66. ஆறு - கங்கையாறு. 'எண்ணுயிரம் கோடி பேரார் போலும்' 'ஆயிரம் பேருகந்தானும் ஆரூரமர்ந்த அம்மான்' 'பேராயிரம் பரவி வானோர் ஏத்தும் பெம்மான்'. பேர்: - பெயர் என்பதன் மரூஉ. பாறு - உலர்தல், வற்றுதல். தலை-பிரம கபாலம். பலி - பிச்சை. பரம்பரன்-விண்ஆளும் தேவர்க்கும் மேலாயவேதியன். நீறு-வினைவளம் நீறுசெய்வது (திருக்கோவை 117). தூவி - வால். 'வாலுடை விடையாய் உன்றன் மலரடி மறப்பிலேனே' (617). ஏறு - விடை. 'ஏறேறும் பெருமான்' என்றதால், ஏறும் காரணம்பற்றியும் ஏறெனப் பெயர் ஆயிற்று எனலும் கூடும்.

தேசனைத் தேசங்கள் தொழநின்ற திருமாலால்
பூசனைப் பூசனைக ளுகப்பானைப் பூவின்கண்
வாசனை மலைநிலநீர் தீவளியா காசமாம்
ஈசனை யெம்மானை யென்மனத்தே வைத்தேனே. 67

நல்லானை நல்லான நான்மறையோ டாறங்கம்
வல்லானை வல்லார்கள் மனத்துறையு மைந்தனைச்
சொல்லானைச் சொல்லார்ந்த பொருளானைத் துகளேதும்
இல்லானை யெம்மானை யென்மனத்தே வைத்தேனே. 68

67. தேசன் - ஒளியுருவானவன். 'மெய்ச் சுடருக்கெல்லாம் ஒளிவந்த பூங்கழல்' (திருவாசகம். நீத்தல். 15). 'அருக்கனிற் சோதியமைத்தோன்' (ஷை. திருவண்டப்பகுதி). தேசங்கள் - திருமால் ஆட்சிக்குட்பட்ட புவனங்கள். பூசனை :- பூசிக்கப்பெறுவோனை. வினைக்குறிப்பாலணையும் பெயர்; செயற்பாட்டுப் பொருளில் நின்றது. பூசனைகள் - வழிபாடுகள். உகப்பான் - விரும்புவோன். பூவின்கண் வாசனை - 'பூவினில் வாசம் புனலிற் பொற்புப் புதுவிரைச் சாந்தினினேற்றத்தோடு, நாவினிற் பாடல் நள்ளாறுடைய நம்பெருமான்' (68 சம்பந்தர்). 'பூவாகிப் பூவுக்கோர் நாற்றம் ஆகி' (7170). 'பூவில் வாசத்தை (7914 சுந்தரர்). மலை நிலத்திலடங்குமேனும், தனியே சொல்லும் வழக்குப் பயிற்சி நோக்கி அதன் சிறப்புணர்க. 'ஏழுலகு மாயினான்காண்' 'ஏழ்கடலும் சூழ்மலையும் ஆயினான்காண்' (6328) 'மலையானை மாமேரு மன்னினானை' (6442). 'மலையானை வருமலையன் றுரித்தான்' (7118). 'மண்ணாகி விண்ணாகி மலையும் ஆகி' (7163). ஐம்பெரும் பூதங்களும் கூறப்பட்டன. இனம்பற்றி ஏனைய மூன்றும் (இருசுடரும் இயமானனும்) கொள்க. 'இருநிலனாய்த்.. அட்டமூர்த்தி' (7163).

68. நல்லானை - சிவனை. ஸ்ரீ-மங்களம். நலம். 'குறைவிலா மங்கலகுணத்தன்' (காஞ்சிப்புராணம்) நல்லான-நலத்தன ஆகிய, ஈண்டு நல் என்னும் முதனிலை நன்மையன என்னும் பொருட்டு. (130) நான்மறை :- எழுத்ததிகாரத்துப் பாயிரத்தின் உரைக்கண் நச்சினார்க்கினியர் எழுதியவற்றைக் காண்க. வல்லானை - அறிவிற்கறிவாய் நின்றுணர்த்த வல்லவனை.

விரித்தானை நால்வர்க்கு வெவ்வேறு வேதங்கள்
புரித்தானைப் பதஞ்சந்திப் பொருளுருவாம் புண்ணியனைத்
தரித்தானைக் கங்கைநீர் தாழ்சடைமேன் மதின்மூன்றும்
எரித்தானை யெம்மானை யென்மனத்தே வைத்தேனே. 69

ஆகம்பத் தரவணையா னயனறிதற் கரியானைப்
பாகம்பெண் ணுண்பாக மாய்நின்ற பசுபதியை
மாகம்ப மறையோது மிறையானை மதிற்கச்சி
யேகம்ப மேயானை யென்மனத்தே வைத்தேனே. 70

வல்லார்கள் - அங்ஙனம் உணரவல்லவர்களுடைய. மைந்தனை - வலிமையுடையவனை. சொல்லானை - சொல்லுருவாகிய தனது ஆற்றலாய்த் தோன்றுவானை. பொருளானை - பொருளுருவாகிய தன்னை. துகள் ஏதும் இல்லானை - இயல்பாகவே துகளின் நீங்கிய உணர்வினவனை. ' துகள் அறு போதம் ' பசுத்துவம் நீங்கிய ஆன்மாக்களுக்கு உளதாவது(ஆகந்துகம்). துகளின்மை பதியின் இயல்பு (சகசம், சுவபாவிகம்). எம் மகனை - எம் இறைவனை. ' எம்மான் ' மரூஉ.

69. நால்வர் (அகத்தியர் முதலோர், சநகாதியர்)க்கு வெவ்வேறு வேதங்கள் விரித்தவனை. ' வெவ்வேறு ' என்பது வேதங்கட்கும், விரித்தற்கும் பொது புரிதல் - விரும்பச் செய்தல். பிரித்தல் என்பதன் மரூஉவாயின் பதங்களைப் பிரித்தல் என்றுகும். சந்தி-புணர்ச்சி. பதப்பொருளும், தொடர்ப் பொருளும் கொள்க. சொல்லுருவாதலும் பொருளுருவாதலும் மேல் உள்ள திருப்பாடலிலும் உணர்த்தப்பட்டன. புண்ணியன்:- ' புண்ணியனைப் பூசித்த புண்ணியத்திஞலே ' (சித்தியார்.) ' புண்ணியம் (-சிவபூசை) செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு ' (திருமந்திரம்). தாழ் (- தொங்கிய) சடைமேல் கங்கைநீர் தரித்தானை (- தாங்கியவனை). திரிபுரம் எரித்தவனை.

70. ஆகம் - உடம்பு. பத்து ஆகம் - பத்துடம்பு. தசாவதாரம். அரவணையான் - பாம்பணை மேல் அறிதுயில் புரிபவன். அயன் - திருமால். அறிதற்கு அரியான் – மண் அகழ்ந்தும் விண் பறந்தும் காண்டற்கு எளியனாகாதவன்.

அடுத்தானை யுரித்தானை யருச்சுனற்குப் பாசுபதம்
கொடுத்தானைக் குலவரையே சிலையாகக் கூரம்பு
தொடுத்தானைப் புரமெரியச் சுனைமல்கு கயிலாயம்
எடுத்தானைத் தடுத்தானை யென்மனத்தே வைத்தேனே. 71

திருச்சிற்றம்பலம்

பெண் பாகமும் ஆண் பாகமும் ஆகி, பசுக்களுக்கு அம்மை யப்பனாய் நின்ற முழுமுதல்வன். மா பெரிய. கம்பம்-நடுக்கத்தை விளக்கும். மறை ஓதும் இறையானை - வேதங்களை உயிர்கள் உய்யும் பொருளாய் ஓதியருளிய கடவுளை. கச்சித் திருமதில் உயரியது. ஏகம்பம் - ஒரு மா நிழல்.

71. அடுத்த ஆனை உரித்தானை - தக்க யாகத்தில் தன்னை அடுத்த யானையை உரித்துப் போர்த்த தோலாடையனை. ஆனையை அடுத்து உரித்தான் என மாற்றினும் பொருந்தும். அருச்சுனனுக்குப் பாசுபதாத்திரம் அருளிய வரலாறு பிரசித்தம். குலவரை - மேருமலை. சிலை - சிலை என்னும் மரத்தாற் செய்யப் பெற்ற வில்லுக்குப் பெயராயிற்று. அதுவே மேருவாலானதற்கும் ஆயிற்று. கூர் அம்பு :- பண்புத்தொகை. கூர்த்த அம்பெனின் வினைத்தொகையாம். புரம் எரிய அம்பு தொடுத்தான். கயிலாய மலைக்குச் சுனை சாதியடை. வடகைலையில் அதற்கேற்ற சுனை யிருத்தலின் உரியதும் ஆகும். எடுத்தானை-எடுத்த இராவணனை. தடுத்தானை - தடுத்து அறிவுறுத்தி ஆட்கொண்ட சிவபிரானை.

பித்தாசு பதையாத கொத்தைநிலை யுளதேவு
பெட்டியாரை செய்துசோறு கட்டியுழல் சமண்வாயர்
கைத்தாசு பதையாத சித்தமொடு சிவபூசை
கற்றமதி யினஞ்ஞை யித்தாசு புகழ்ஞால
முத்திபெறு திருவாள னேற்றுணையின் மிதவாமல்
கற்றுணையில் வருமாதி ..... .... ......
பத்தாசு வசைதீர வைத்ததன தமிழ்மாலை
பற்பலவு மவையோத நற்பதிக நிதிதானே.

# 8. பொது

## திருப்பதிக வரலாறு

போய்கைசூழ் பூம்புகலூர்ப் புனிதர் மலர்த்தாள் வணங்கி, நையும் மனப்பரிவினோடு, நாள்தோறும் திருமுன்றிற் கைகலந்த திருத்தொண்டு செய்து, பெருங்காதலுடன் வைகும் நாளில், எண்ணிறந்த வண்டமிழ் மாலைகள் சார்த்தினர் அப்பர். அவற்றுள் ' ஒன்று நேர்படநின்று அறைகூவும் ' இத் திருப்பதிகம்.

பண் சிவனெனுமோசை (பியந்தைக்) காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

சிவனெனுமோசையல்ல தறையோவுலகிற்
றிருநின்றசெம்மை யுளதே
அவனுமோரையமுண்ணி யதளாடையாவ
ததன்மேலோராட லரவம்
கவணளவுள்ளவுண்கு கரிகாடுகோயில்
கலனாவதோடு கருதில்
அவனதுபெற்றிகண்டு மவனீர்மைகண்டு
மகநேர்வர்தேவ ரவரே. 72

---

72. உலகில் சிவன் எனும் ஓசை அல்லது திருநின்ற செம்மை உளதோ ? அறையோ. ' நேர்பட நின்று அறை கூவும் திருப்பதிகம் ' என்று சேக்கிழார்பெருமான் அருளியதால், ' வஞ்சினம் கூறுவோ ' (சிந்தாமணி. 2514) எனல் பொருத்தம். சித்தியார் சூ. 8 :- 14 ' உத்தரம் '. அது ஈண்டுப் பொருந்தாது. (திருமந். 884. 2988) கையறைதலும் வரையறையும்பற்றி ' அறையோ ' என்று ஆணைக்கு வழங்கலாயிற்று. சிவநாமமே முழக்கத்திற்கு உரியது. செம்மையானது. ஏனைய அன்ன அல்ல. ஓசை, அறை முதலியன ஒலிப்பொருளாம். ஒலிசெய் என்பது ஓசை என மருவிற்று. நன்செய் - நஞ்சை. புன்செய் - புஞ்செய். தண்செய் - தஞ்சை. ' ஓசை யொலியெலாம் ஆனாய் நீயே ' என்பதற்குப் ஐயாற்றிற் சென்றுணர்பாற்று. உலகில் திருநின்ற செம்மை உளதே - சிவமேபெறும் திருவானது நிலைபெறக் காரண

விரிகதிர்ஞாயிறல்லர் மதியல்லர்வேத
விதியல்லர்விண்ணு நிலனும்
திரிதருவாயுவல்லர் செறுதீயுமல்லர்
தெளிநீருமல்லர் தெரியில்
அரிதருகண்ணணியாளை யொருபாகமாக
வருள்காரணத்தில் வருவார்
எரியாரவாரமார்ப ரிமையாருமல்ல
ரிமைப்பாருமல்ல ரிவரே. 73

மான செம்மை (வேறு) உளதோ? 'உலகில்':- எல்லாவுலகிலும். உளதே என்பது தேற்றம் உணர்த்தியதுமாம். அவனும்- அச்சிவனும். ஓர் ஐயம் உண்ணி - பிச்சைபுக்குண்ணும் ஒருவன். ஆடை ஆவது, அதள் (- தோல்). அதன்மேல் - அத்தோலாடைமேல். ஓர் ஆடல் அரவம் - ஆடுதலை ஒழியாத ஒரு பாம்பு. கவண் அளவு உள்ள (உண்கு) - கவணதுகல் முதலியவற்றினளவுடைய உட்கொள்ளும் உணவு. சிறிதளவு என்றவாறு. கவளம் கவண் என மருவிற்று எனின், அது சிறிதன்று. 'குன்றுமுது குன்றுடையான் இலாத வெண்ணே கோவணத்தான் நன்றாக இத்தனை பிச்சையுண்டோ சொல் நறுநுதலாய் என்றான்' (பிட்சாடன நவமணிமாலை. 2.) என்பதில் உணர்த்திய பிச்சையுணவினளவு சிறிதாதல் அறிக. பழிப்பதுபோலப் புகழ்தலாய்ப் பிச்சையுணவைக் குறிக்கின்ற ஈண்டுச் சிறுமையே கொள்ளற்பாலது. கோயில் கரி(ந்த)காடு. (உண்) கலன் ஆவது ஓடு; (பிரமகபாலம்). கருதில் அவனும் ஓர் ஐயம் உண்ணி......ஓடு என்றியைக்க. பெற்றி - பெறறிருக்கும் பேறு. நீர்மை எனப் பின் வருதலின், பெற்றியைத் தன்மை எனல் பொருந்தாது. தேவர் கண்டும் தம் அகத்தில் அச் சிவனைத் தேர்வர் என்றவாறு.

73. அரிதரு கண்ணணியாளை - செவ்வரிபடர்தரும் கண் உடையவளை. கண்ணணி - கண்ணள். இகரவிகுதிக்கு மேலும் 'ஆள்' விகுதி சேர்ந்து 'கண்ணணியாள்' என்று நின்றமை அறிக. கண்ணணியாள் என்று இறந்தகால வினையாலணையும் பெயராகக் கொள்ளல் பொருந்தாது; 'அரிதரு' என்னும் அடைக்குக் கண்ணுறுப்புஉரியதாதலின். ஒருபாகம் - இடப்

தேய்பொடிவெள்ளைபூசி யதன்மேலோர்திங்கள்
　　திலகம்பதித்த நுதலர்
காய்கதிர்வேலைநீல வொளிமாமிடற்றர்
　　கரிகாடர்காலோர் கழலர்
வேயுடனுடுதோளி யவள்விம்மவெய்ய
　　மழுவீசிவேழ வுரிபோர்த்
தேயிவராடுமாறு மிவள்காணுமாறு
　　மிதுதானிவர்க்கோ ரியல்பே　　74

பால். அருள் காரணம் - உயிர்கட்கு இம்மை மறுமை வீடு பேறு எய்த அருளுங்காரணம். எரிஅரவு ஆரம் மார்பர் - எரி (தீப்)போலும் நச்சுப் பாம்பினை (மாலை) ஆக அணிந்த மார்பினை உடையவர். ஞாயிறும் மதியும் (திங்களும்) வேதவிதியும் (பிரமனும் வேதத்தில் விதித்தவையும் விலக்கியவையும்) விண்ணும் நிலமும், வாயுவும் (காற்றும்) தீயும், இமையாரும், இமைப்பாரும் அல்லர். சிவபெருமான் ஞாயிறு முதலியவாகித் தோன்றியும் அவற்றின் வேருயும் இருத்தல் உணர்த்தப்பட்டது. எல்லாமாய் அல்லதுமாய் உடனுமாய் இருக்கும்நிலை. ‘ ஒருவனே எல்லாம் ஆகி அல்லனுய் உடனும் ஆவன் ’ (சித்தியார்.)

74. தேய்பொடி - ‘ நுண்டுகள் ’. பொடி வெள்ளை - வெள்ளைப்பொடி, ‘ வெண்ணீறு ’ பொடிபூசி என்க. அதன் மேல், பூசியதன்மேல் எனலும் ஆம். திங்கள் திலகம் பதித்த நுதலர் :- ‘ பிறை நுதல் வண்ணம் ஆகின்று ’ (புறநானூறு கடவுள் வாழ்த்து). நுதல் - சென்னி. திங்கள் போலும் வடிவு உடைய திலகம் பதித்த நெற்றியர் எனக்கொண்டு, பொடிபூசி யதன்மேல் என்பதற்கு இயையப், பொருளுரைத்தலும் ஆம். காய் கதிர் வேலை - வெஞ்சுடர் (ஞாயிறு) தோன்றும் கீழ்கடல். வேலை (கடல்) நீலவொளி போலும் ஒளியையுடைய மிடறு (கழுத்து). மாமிடற்றர் - திருநீலகண்டர். கரி காடர் - கரிந்த (சுடு) காட்டில் ஆடுபவர். கால் ஒர் கழலர் - ஒரு கழலணிந்த வலக் காலினர். வேய் - மூங்கிலின் இரு கணுக்கிடை. தோட்கு ஒப்பு அஃதே. தோளியவள் விம்ம (வேழவுரி) போர்த்து என்க. வெய்யமழு :- மழுவின் வெம்மை. ‘ ஏ ’ இவர் ஆடும் ஆறும் இவள் காணும் ஆறும் இதுதான் இவர்க்கு ஓர் இயல்பே? போர்த்தே எனலுமாம்.

வளர்பொறியாமைபுல்கி வளர்கோதைவைகி
வடிதோலுநூலும் வளரக்
கிளர்பொறிநாகமொன்று மிளிர்கின்றமார்பர்
கிளர்காடுநாடு மகிழ்வர்
நளிர்பொறிமஞ்ஞையன்ன தளிர்போன்றுசாய
லவடோன்றுவாய்மை பெருகிக்
குளிர்பொறிவண்டுபாடு குழலாளொருத்தி
யுளள்போல்குலாவி யுடனே. 75

75. வளர் பொறி - வளர்ந்த பொறிகளை. பொறி (புள்ளி) களையுடைய ஆமை. உட்சுருக்கி வெளிநீட்டல் பற்றி 'வளர் பொறி' என்றலுமாம். புல்கி :- 'முற்றல் ஆமை இளநாக மோடு ஏனமுளைக் கொம்பவை பூண்டு' (1-1-2) வளர் கோதை வைகி மிளிர்கின்ற மார்பர் :- 'பலைமகள் கைக்கொண்ட மார்பும்' (17). 'மார்பிற் பெண்மகிழ்ந்த பிரமாபுர மேவிய பெம்மான்' (1-1-4). தோலும் நூலும் வளர மிளிர்கின்ற மார்பர் :- 'தோலோடு நூலிழை சேர்ந்த மார்பர்' (1-6-3). தோல் - புலி, யானை, மான், சிங்கத்துரியுள் யாதுஞ் சொல்லலாம் இங்கு நூலொடு கூடிய மான்றோல் மிக்க பொருத்தம் உடைத்து. புலி யுரித் தோலுடையன். (859) 'வேழத்துரிபோர்த்துடன்' (193) 'கலைமல்கு தோல் உடுத்து' (1. 6. 10) 'சிறுமான் உரியாடை' (192) 'மானைத் தோல் ஒன்றையுடுத்துப் புலித் தோல் பியற்கும் இட்டு, யானைத் தோல் போர்ப்பது' (7. 18. 4). 'சிங்கமும் நீள் புலியும் செழுமால் கரியோடு அலறப் பொங்கிய போர்புரிந்து பிளந்து ஈருரி போர்த்தது' (7-99-6). நூல் - புரிநூல். 'மின்னு பொன்புரி நூலினர்' (2-78-5). 'பொடி புல்குமார் பினில் புரிபுல்குநூல்' (1-111-7) 'ஒன்பதுபோல் அவர் மார்பினில் நூலிழை' (185). நாகம் மிளிர்கின்ற மார்பர் :- 'மண் மகிழ்ந்த அரவம்... மலிந்த...மார்பு' (1-1-4) 'பொறி யரவம் மார்பாரப் பூண்டான்' (6-22-9). காடும் நாடும் மகிழ் வர் :- காட்டிலும் நாட்டிலும் மகிழ்வர் (ஆடுவர்). நளிர் - செறி. பொறி :- முதுகிற் பொறி. மஞ்ஞை - மயில். மஞ்ஞை யன்ன சாயல். தளிர்போன்று சாயல். 'சாயலவள்' குழலின் அடை போது. சாயலவள் குழலாள் ஒருத்தி என்க. வண்டு கட்கு வாயின் தன்மை (இசை) தோன்றலும் பெருகலும் பொறி

உறைவதுகாடுபோலு முரிதோலுடுப்பர்
விடையூர்வதோடு கலனு
இறையிவர்வாழும்வண்ண மிதுவேலுமீச
ரோருபாலிசைந்த தொருபால்
பிறைநுதல்பேதைமாத ருமையென்னுநங்கை
பிறழ்பாடநின்று பிணைவான்
அறைகழல்வண்டுபாடு மடிநீழலாணை
கடவாதமர ருலகே 76

கணிவளர்வேங்கையோடு கடிதிங்கள்கண்ணி
கழல்கால்சிலம்ப வழகார்
அணிகிளராரவெள்ளை தவழ்சுண்ணவண்ண
வியலாரோருவ ரிருவர்
மணிகிளர்மஞ்ஞையால மழையாடுசோலை
மலையான்மகட்கு மிறைவர்
அணிகிளரன்னவண்ண மவள்வண்ணவண்ண
மவர்வண்ணவண்ண மழலே. 77

குளிர்தலும் பாடுதலும் உள்ளமை உணர்க. ‘ தோன்று வாய்மை பெருகி ’ என்றது அம்மையப்பராகி என்றும் உள்ளதை உணர்த் திற்று எனலும் ஆம். குழலாள் கங்கையும் ஆம்.

76. உறைவது காடு. உடுப்பது தோல். ஊர்வது விடை. உண்கலன் ஓடு. இவ்விறைவர் வாழும் வண்ணம் இது எனில், ஒருபால் ஈசர். ஒருபால் உமை நங்கை. பிறழ்பு - பிறழ்ந்து. ஆடநின்று. ‘ அறைகழல் ஒலி ’ வண்டு பாடும் ஒலிக்கு ஒப்பு என்பாரும் உளர், அடிநிழல் ஆணையை அமரர் உலகு கடவாது உமை. பிறழ் - சொல். ஆடற்கேற்ற சொல்லைப் பாட நின்று பிணைவான் என்றும் உரைக்கலாம். ‘ தளிரிளவளர் என உமை பாடத் தாளம் இட..... ஆடும் அடிகள் ’ (2. 111. 1). ‘ வாருறு மென்முலை மங்கை பாட நடம் ஆடி ’ (3. 11. 6) ‘ தேவி பாட நடம் ஆடி ’ (ஷை. 7). பிறழ் - (ஆடற்குப் பாடல்) விளக்கம்.

77. கணிவளர் வேங்கை :- வளர்கின்ற கணிவேங்கை மரம். கணி - சோதிடன். கணியைப்போல வேங்கையும் மணம்புரி காலத்தைக் கருதுவிப்பதால் ‘ கணிவளர் வேங்கை ’

என்று அருளினார். கணி என்பது வேங்கைக்குரிய பெயராதலின், கணியாகிய வளர்வேங்கை - வளர்கின்ற கணிவேங்கை எனலுமாம். 'ஒள்ளிணர்க் கணியின் கொம்பர்' (கந்தபுராணம் வள்ளி. 12). 'வண்ணவண்ணத் தெம்பெருமான் வர்த்த மானீச்சரத்தாரே' (2. 12. 4).

சிவபிரான் முடிமேல் 'எருக்கு அலர்ந்தவன்னி கொன்றை மத்தமும்' (2. 101. 2). 'வன்னி கொன்றை மதமத்தம் எருக்கோடு கூவிளம்' (2. 7. 1) அன்றி வேங்கையும் உண்டு என்று இதனால் அறியலாம். வேங்கையோடு திங்கள் கண்ணி அழகார் என்றும் கழல் காலிற்சிலம்பு அழகார் என்றும் இயைத் துணர்க. அணி - அழகு. ஆரம் - சந்தனம். ஆரச்சுண்ணம் - சந்தனக்குழம்பு. வெள்ளை தவழ்சுண்ணவண்ணம். ஆரத்தை மாலை எனக்கொண்டு ஆரவண்ணவியல்:- வெள்ளைதவழ் சுண்ணவண்ணவியல் எனலுமாம். 'விலையிலா ஆரம்சேர் மார்பர்' (6. 82. 8) ஆதலின் 'அணிகிளர் ஆரவண்ண வியலார்' என்றார். வெள்ளைதவழ் சுண்ணம் - திருவெண்ணீறு எனில் 'நீறணி.. வண்ணர்'(7. ) என்பதோடு வேறுபடும். அதன் வண்ண வியலுடையார் (5. 28. பதிகம் பார்க்க). ஒருவர் - (பா. 79 பார்க்க). அநேகமாய உலகங்கட்கும் அநேகராய ஆன்மாக்களுக்கும் பதியாகிய ஏகர் 'ஒன்றே பதி' (சிவஞான போதம் சூ. 2. வெண்பா ). 'ஒருத்தனார் உலகங்கட்கு' (5. 1. 7). 'கருவனே கருவாய்த் தெளிவார்க்கெலாம் ஒருவனே' (5.13. 5). 'ஒருவனாகி நின்றான் இவ்வுலகெலாம்' (5 97.11). இருவர்- அம்மையப்பராகிய இருவர். 'ஒருவராய் இரு மூவருமாயவன்' (5. 20. 1). மணி-நீலமணி (போலக் கிளர்ந்த) மஞ்ஞை-மயில். ஆல - தோகையை அகல விரித்து ஆட. மழை - மேகம். மழை ஆடும் சோலையை உடைய (இமய)மலை. மலையான்-இமவான். மகள் - பார்வதி தேவியார். உம்மை - எச்சப் பொருட்டு; வீடு பேறலில் இறந்ததும் எதிரதும் ஆகிய உயிர்களைக் குறித்து நிற்றலின். அவள் வண்ணவண்ணம் அணிகிளர் அன்ன வண்ணம் என்றும் அவர் வண்ணவண்ணம் அழல் (வண்ணம்) என்றும் வகுத்துக்கொள்க. பார்வதி தேவியாரது வண்ணம் அன்னத்தின் வண்ணம். அவர் 'தீவண்ணர்' 'தீவண்ணர்திறம்' (6. 95. 6). வண்ணம் - நிறத்தியல். 'இயற்கையழகு' என்றலும் உண்டு. (பரிபாடல்.) வண்ணத்தின் வகை எனலும் ஆம்.

நகைவளர்கொன்றைதுன்று நகுவெண்டலையர்
நளிர்கங்கைதங்கு முடியர்
மிகைவளர்வேதகீத முறையோடும்வல்ல
கறைகொண்மணிசெய் மிடறர்
முகைவளர்கோதைமாதர் முனிபாடுமாறு
மெரியாடுமாறு மிவர்கைப்
பகைவளர்நாகம்வீசி மதியங்குமாறு
மிதுபோலுமீச ரியல்பே. 78

78. நகை-விளக்கம். கொன்றை மிகப் பூத்தலாலும் இயல்பான நிறத்தாலும் தொலைவிலுள்ளார்க்கும் நன்கு விளங்கும். துன்று வெண்டலை என்க. கொன்றையும் வெண்டலையும் சடைமேல் உள்ளமையால் ஒன்றனை ஒன்று துன்றும். நகுதலை. வெள்+தலை. தலையர் - தலைமாலையர். கைத்தலை கொன்றை துன்றுமாறில்லை. தலையர் முடியர் என்பவற்றுள் முன்னது அணி. பின்னது சினை. 'அரவும் அலைபுனலும் இளமதியும் நகுதலையும் விரவுஞ்சடை' (1. 13. 2). 'பைங்கட்டலைக்குச் சுடலைக் களரி' (831). வேதகாரணர் ஆதலின், வேதகீதம் வல்ல மிடறர். மிகை - சிறப்பு. மிடறு - திருக்கழுத்து. கறை - நஞ்சின் கறுப்பு. மணி - நீலமணி. நிறத்திற்கு ஆகுபெயர். செய்மிடறு-வினைத்தொகை. முகைவளர் கோதை-மொட்டுக்கள் வளரும் மாலையை (அணிந்த). மாதர்-உமை. (2.111.1). முனி-மங்கலம்; சங்காரகால முனிவு 'அரிஅயன்தலை வெட்டி வட்டாடினார்' (5. 85. 2)க்கு முனிவில்லையாமோ ? 'சண்டதாண்டவம்' முதலிய சிலவற்றில் முனிவுண்டு. கைவளர் நாகம். பகைவளர் நாகம். 'பகை' நாகத்தியல்புணர்த்திற்று. தலைமதியோடு பகை எனலுமாம். வீசுமது என்றிருந்தது போலும். 'வீசி' எதைத் தழுவுவது? பாடுமாறும் ஆடுமாறும் இயங்குமாறும் ஆகிய இது (- இவ்வாறு) போலும் ஈசரியல்பு என்க. வீசி மதி அங்கு மாறும் எனின் முன்னிரண்டோடும் ஒட்டாமை உணர்க. 'முனிபாடு - கோபம்.மாறும் - தணியும்' எனில் எரிஆடு மாறும் மதி அங்கு மாறும் என்பன தழுவா. 'வழிபாடு .... ஒழிபாடு' (2-84-3) போல 'முனிபாடு' என்னும் சொல்லமைதி உண்டேனும் ஈண்டுப் பொருந்தாது. பா. 74இல் ஆடுமாறும் காணுமாறும் என்றதுபோற்கொள்ளலே ஏற்றது. மதிஅல்குமாறே ?

ஒளிவளர்கங்கைதங்கு மொளிமாலையன்ற
    னுடல்வெந்துவிய சுடர்நீ
றணிகிளராரவெள்ளை தவழ்சுண்ணவண்ணர்
    தமியாரொருவ ரிருவர்
களிகிளர்வேடமுண்டோர் கடமாவுரித்த
    வுடைதோல்தொடுத்த கலனார்
அணிகிளரன்னதொல்லை யவள்பாகமாக
    வெழில்வேத மோதுமவரே. 79

79. ஒளிவளர் கங்கை தங்கும் ஒளி :- கங்கையொளியும், அது (சடையில்) தங்கும் (ஒளியும்) சடையொளியும். தங்கு மொளி மாலையனைச் சாராது. விய்யச் சுடர்நீறு அணி என்று வினையெச்சத்தின் முன் வலிமிகல் வேண்டும். இது சந்தம் நோக்கிய இயல்பு. விய்ய அணி. சுடர் நீறு :- காண இனியது நீறு' 'கவினைத் தருவது நீறு' 'கவினைத் தருவது நீறு' 'பராவணமாவது நீறு' 'உருவளர் பவளமேனி ஒளிநீறணிந்து' (2-85-3). பண்டையே 'மெய்ச்சுடருக்கெல்லாம் ஒளிவந்த பூங்கழல்' (திருவாசகம்). ஆரவெள்ளை தவழ் சுண்ணவண்ணர் - சந்தனச் சுண்ணம் பூசிய வண்ணத்தவர். 'வெண் சாந்து' என்னும் வழக்குண்டு. ஆரச்சுண்ணம் வெள்ளை ஆரச் சுண்ணம். வெள்ளை தவழ் ஆரச்சுண்ணம். சுண்ணவண்ணம், வண்ணர். நீறணிவண்ணர். தமியார் - தனி முதல்வர். அம்மையப்பராகுங்கால் 'எமியேம்' எனற்குரியார். ஒருவர் - ஒப்பற்றவர், முக்கியர், வேறு(க வீற்றிருப்ப)வர். 'ஏகபெருந் தகையாய பெம்மான்' (1-4-4). இருவர் - அம்மையப்பர். திருமாலும் பிரமனுமாயும் இருப்பவர். 'இருவர் அறியாத ஒருவன்' அவ்விருவராயும் உயிர்கட்கு உலகைப் படைத்தும் காத்தும் அருள்கின்றான். 'ஒருவராய் இருமூவரும் ஆனவன்' (5. 20 1). 'ஒருடம்பினை யிருருவாகவே உன்பொருட்டிற மீருருவாகவே' (3. 114. 10). 'களி - மகிழ்ச்சி. வேடம் - வீர பத்திர ரூபம். உண்டு - உளதாகிக்கொண்டு. கடமா - மதயானை. தோலுடை என மாறுக. தொல்லையவள் - அநாதி சத்தி.

மலைமடமங்கையோடும் வடகங்கைநங்கை
மணவாளராகி மகிழ்வர்
தலைகலனாகவுண்டு தனியேதிரிந்து
தவவாணராகி முயல்வர்
விலையிலிசாந்தமென்று வெறிநீறுபூசி
விளையாடும்வேட விகிர்தர்
அலைகடல்வெள்ளமுற்று மலறக்கடைந்த
வழனஞ்சமுண்ட வவரே. 80

புதுவிரிபொன்செயோலை யொருகாதோர்காது
சுரிசங்கநின்று புரள
விதிவிதிவேதகீத மொருபாடுமோத
மொருபாடுமெல்ல நகுமால்

80. மலைமட மங்கைக்கும் வடகங்கை நங்கைக்கும் மணவாளர். ‘மடமாதர் இருவர் ஆதரிப்பார்......அடையாளம்’ (2-106-6). கலன் - உண்கலம். தலை - பிரமகபாலம். வெண்டலை. தனியே திரிந்து தவவாணராகி முயல்வர் :- ‘தான் தனியன்’ ஆயினும், அடியார் முதலோர் செய்யும் தவத்தில் வாழ்பவராகி, அவர்க்கு அருளும் முயற்சியுடையர். விலையிலி சாந்தம் என்று நீறுபூசுதல் :- ‘சாந்தம் ஈது என்று எம்பெருமான் அணிந்த நீறு’ (1-52-7). ‘சாந்தம் வெண்ணீறெனப்பூசி வெள்ளம் சடைவைத்தவர்’ (2. 120. 1). விலையிலியாகிய சாந்தம் என்க. வெறி - மணம். வெறிவேர் (வெற்றிவேர், வெட்டிவேர்). விளையாடல் - இன்பம் விளைக்கும் ஆட்டம். வேடவிகிர்தர்:- ‘பலபல வேடமாகும் பரன்’. பாற்கடல் கடைந்த வரலாறு. நஞ்சுண்ட சீர்த்தி.

81. புதுவிரிஓலை - புதுமை யொளியைப் பரப்பும் தோடு. குழைக்காதர். மாதியலும் பாதியற்கு ஒருபால் தோடும் ஒரு பால் குழையும் உள்ளமை உணர்த்திற்று. ‘தோடுடைய செவியன்’ (1-1-1). ‘காதிலங் குழையன்’ (1. 2. 2). ‘தோடுடையான் குழையுடையான்’ (1-61-8). ‘சங்கோர்டு இலங்கத் தோடு பெய்து காதில் ஓர் தாழ்குழையன்’ (1-63-4).

மதுவிரிகொன்றைதுன்று சடைபாகமாதர்
குழல்பாகமாக வருவர்
இதுவிவர்வண்ணவண்ண மிவள்வண்ணவண்ண
மெழில்வண்ணவண்ண மியல்பே. 81

திருச்சிற்றம்பலம்

என்புழி விழிப்போடு பொருள்கொள்ளல் வேண்டும். 'வெண் பளிங்கின் குழைக்காதர்' (2-33-7). 'சதுர் வெண்பளிங்குக் குழை' (58) 'காதில் வெண்குழை தோடு கலந்து தோன்றும்' (6-18-1). மது - தேன். துன்றுசடை. மாதர் பாகம் ஆக (குழல் பாகம் ஆக) என்க. மாதர் - கங்கை. குழல் - உமை நங்கை. ஆகுபெயர். குழல் பாகம் திருமேனிப்பகுதி. மாதர் பாகம் சடை. 'செப்பிளமுலை நன்மங்கை யொருபாகமாக விடையேறு செல்வன்' (2394). இவர் - சிவபெருமானார். இவள் - சிவாநந்தவல்லி. வண்ணவண்ணம் :- பா. 77 பார்க்க. எழில் - எழுச்சி. விதி - பிரமன்; செய்வன தவிர்வன. விதிக்கு விதித்த வேதம்.

பதிகமே ழெழுநூறு பகருமா கவியோகி
பரசுநா வரசான பரமகா ரணவீச
னதிகைமா நகர்மேவி யருளினு லமண்மூட
ரவர்செய்வா தைகடரு மனகன்வார் கழல்சூடி
னிதியரா குவர்சீர்மை யுடையரா குவர்வாய்மை
நெறியரா குவர்பாவம் வெறியரா குவர்சால
மதியரா குவரீச னடியரா குவர்வான
முடையரா குவர்பாரின் மனிதரா னவர்தாமே. 7

தாமரைநகு மகவிதழ் தகுவண சாய்பெறுசிறு தளிரிணை யணையன
சார்தருமடி யவரிடர் தடிவன தாயினுநல கருணையை யுடையன
தூமதியினையொருபதுகோடுசெய்தசோதியின்மிகுகதிரிணையுடையன
தூயனதவமுனிவர்கடொழுவனதோமறுகுணநிலையனதலையின
வோமரசினை மறைகளின் முடிவுக ளோலிடுபரி சொடுதொடர் வரியன
வோவறு முணர் வொடுசிவ வொளியனை யூறியகசி வொடுகவி
ழாமரசுய ரகநெகு மவருள ஞாரசகங் கையினர னருளவ[செய்தபுக
ஞமரசுகோ ளரசேனை வழிமுழு தாளரசுத னடியிணை மலர்களே.

## 9. பொது

### திருப்பதிக வரலாறு

திருப்பூந்துருத்தியில் அமர்ந்த செஞ்சடையானுகிய போய் யிலியைக் கண்டு, அவன் திருவடிக்கீழ் இருப்போம் என்று இருந்து, பேரின்பம் நுகர்ந்து, திருத்தொண்டு புரிந்து, தம்பிரானுர் அருள் பெற்றுத் திங்களும் ஞாயிறும் தோயும் திருமடம் ஒன்று செய்து பல்வுகைத் தாண்டகமும், தனித் திருத்தாண்டகமும் சிவதலங் களின் அடைவு திருத்தாணடகமும் பிறவும் பாடிய பின்னர், நம்மனோர் செல்கதியைக் காட்டிடப் போற்றி யியம்பிய திருப்பதிகம் இத் திருவங்கமாலே.

பண் திருவங்கமாலே சாதாரி

திருச்சிற்றம்பலம்

தலேயே நீவணங்காய் - தலே
மாலே தலேக்கணிந்து
தலேயா லேபலி தேருந் தலேவனேத்
தலேயே நீவணங்காய். 82

82. தலேயே நீ வணங்கு; தலேக்குத் தலேமாலேயை அணிந்து தலேயிலே பலிதேரும் தலேவனேத் தலேயே நீ வணங்கு. வணக்கம் தலேவனுக்கே உரியது. மகாநாராயணுேபநிடதம் சிவ பிரானுக்கே எவ்வுயிர்களின் வணக்கமும் உரியது என்கின்றது. பலிதேர்வோன் எனினும் தலேவனே. ஏனேயோர் தேரும்பலி தத்தம் வறுமையைக் குறித்து. (தாம் உய்யும் பொருட்டு). இறைவன் பலிதேர்வது உயிர்கள் உய்யும் பொருட்டு. பிறர் பலி தேர உதவுங் கருவி, அவர் வறுமை நிலேக்கேற்ற (பிச்சைப்) பாத்திரம். சிவபிரானுக்கோ பிரமகபாலம் பிச்சைப் பாத்திரம் ஆதலின், அவனது தலேமை புலனுகும். அது மட்டுமோ? தலேயில் அணிந்த மாலே, நூறு கோடி பிரமர்களும் ஆறு கோடி நாராயணரும் ஏறு கங்கை மணலெண்ணின் அளவுடைய இந்திரரும் ஆகிய முத்திறத்தர் தலேகளேக் கோத்தவை. 'தலேக்குத் தலேமாலே அணிந்த தென்னே' (7. 4. 1). இத் தலேமை சிவனடியார்க்கன்றி, 'செத்துச் செத்துப் பிறப்பதே

கண்காள் காண்மின்களோ - கடல்
நஞ்சுண்ட கண்டன்றன்னை
எண்டோள் வீசிநின் றுடும்பி ரான்றன்னைக்
கண்காள் காண்மின்களோ. 83

தேவென்று பத்திசெய் மனப் பாறைகட்கு ஏறுமோ ?' ஏறின், அவர்க்கு மாதேவன் அலால் தேவர் மற்று இல்லையே. அத் தலைவனுக்கே வணக்கம் உரியது. அதனால், தலையே நீ வணங்கு. அவனை நேரே வணங்காமல், வேறு எங்கு வணங்கினும், அங்குத் தாபரமோ சங்கமமோ அவனது உருவாய் நிற்கும். அத் தாபர சங்கமங்கள் என்ற இரண்டு உருவில் நின்று நீ செய்யும் வணக்கத்தை (பூசையை)க் கொண்டு அருளை வைப்பவன் மாபரனே. 'யாவரும் சென்று ஏத்தும் ஆமாத்தூரம்மான் அத் தேவர் தலைவணங்கும் தேவர்க்கும் தேவனே' (2. 44. 6). 'கானப்பேர் தலையினால் வணங்குவார் நாளும் நாள் உயர்வதோர் நன்மையைப் பெறுவரே' (3.26.8). 'தலையினால் வணங்குவார் தவம் உடையார்களே' (ஷை. 9). இத் திருமுறைக் கருத்தே கொண்டு, 'எண்குணத்தான் தாளை வணங்காத் தலை கோளில் பொறியிற் குணம் இலவே' என்றார் பொய்யாமொழியார். ஆசிரியரது திருத்தலை, ஏனையோர் தலையும் பெருவிரல் இறை ஊன்றலும் பொறுது பற்கழல அங்காந்து அலறி வீழ்ந்த வரைபொரு தோளரக்கன் தலையும் போலாது இருவரும் ஒருவனுய அவ்வள்ளல் திருவடி சுமந்துகொண்டு திரியும் (696, 735) பெருமையதாதலின், 'தலையே' என்று அதன் பயிற்சி தோன்ற விளித்தார். ஏனைக் கண், செவி முதலிய வற்றிற்கும் இவ்வாறு பொருந்துவன கொள்க. இருமுறை கூறியதன் கருத்து :- வணங்கிப் பயின்ற தலை முதலிய உறுப்புக்களை யுடையராயினும், தமக்குத் தாமே தூண்டிக்கொள்ளும் வகையில் ஒருமுறைக்கு இருமுறை தம் வாயால் ஏவிக்கொண்டு, தம் உடலின் பயனைத் தம் தலைவன் வழிபாட்டுத் திறத்தில் நிலைபெறுவித்துக்கொள்வாரானார் தாண்டகச்சதுரர். 'தலைசுமந்து இருகை நாற்றித் தரணிக்கே பொறையதாகி நிலையிலா' (670)ப் பொய்வாழ்வு வேண்டா. மெய்வாழ்வு வேண்டின், 'தலையே நீ வணங்காய்' என்று ஏவுகின்றார்.

83. காட்சியின் பயன், காணும் வினைமுதல்வனுக்குத் தீர்த்தற்கு அரியதொரு துயரின் நீக்கம். உயிர்கள் அடிமைகள்.

செவிகாள் கேண்மின்களோ - சிவன்
எம்மிறை செம்பவள
எரிபோல் மேனிப்பி ரான்திற மெப்போதும்
செவிகாள் கேண்மின்களோ. 84

அவை உடையவனைக் காண்டலின் பயன் தம் பிறவி நீக்கம். அப்பெருந் துன்பம் போக்கவல்லான் பிறவியில்லாதவனுதல் வேண்டும். 'பிறவா யாக்கைப் பெரியோன்' இறவாமை திண்ணம். அது நஞ்சுண்டுஞ் சாவாமையால் உறுதியாயிற்று. ஆகவே, 'கண்காள், கடல் நஞ்சுண்ட கண்டன்றன்னைக் காண் மின்கள்' என்றருளினார். ஆட்டம் எனப்படுவன பற்பல உள. அவையெல்லாம் பிறப்பு, நிலைப்பு, இறப்பு, ஒளிப்பு, அளிப்பு என்னும் ஐந்தனுள் அடங்கும். 'ஐந்து நலமிகு தொழில்க ளோடும் நாடகம் நடிப்பன் நாதன்' (சித்தியார். 5:- 7) 'பஞ்ச கிருத்திய தாண்டவம்' என்றலும் உணர்க. உயிர்களுடைய பிறப் பிறப் பாட்டம் ஒழிய உடையவனது அருளாட்டத்தை என்றும் மறவாது காண்டல் வேண்டுதலின், 'எண் தோள் வீசி நின்று ஆடும் பிரான்றன்னைக் கண்காள் காண்மின்கள்' என்றருளினார். 'குனித்த புருவம் முதலிய ஐந்தும் திருவாய் பவளத் திருமேனி இரண்டும் ஆகியஏழும் காணப்பெற்றவர்க்குப் பிறப்பில்லை என்ப துறுதியாதலின், மன்றுடற் காட்சி அன்றுடம் பெற்று உவக்க, நீங்கும் பிறவியும் நீங்காதிருக்கவேண்டும் என்று வெளியிட் டருளினார். 'சிற்றம்பலத்தரன் ஆடல்கண்டாற் பீழையுடைக் கண்களால் பின்னைப்பேய்த் தொண்டர் காண்பதென்னே' (770) ஆடல் அன்றிக் கண்கோண்டு காண்பது யாதும் இல்லை.

84. செவிகாள்! சிவனும், எம் இறையும், செம்பவள மும் எரியும் போன்ற மேனிப் பிரானும் ஆகிய முழுமுதல்வன் திறத்தை எப்போதும் கேண்மின்கள். குறைவிலா மங்கல குணத்தன் திறம் கேட்டலே முழுப்பயன் ஆகிய துன்ப நீக்கமும் இன்பப் பேறும் விளைக்கும் என்பார் சிவன் என்றும், இவ்வடிமை யின் செவிகள் ஆண்டவன் திறமே கேட்கற்பாலன என்பார் 'எம் இறை' என்றும், கண்ணுக்குப் பிடிக்காதவர் திறத்தைக் காது கேளாது; கண் களிக்கக் காணத்திகழ்வார் திறத்தையே காதுகள்கேட்கவிரும்பும் ஆதலின், 'செம்பவளம்போல்,எரிபோல்

முக்கே நீமுரலாய் - முது
காடுறை முக்கணனே
வாக்கே நோக்கிய மங்கைம ணாளனே
முக்கே நீமுரலாய். 85

மேனி' என்றும், உயிர்க்குயிராய் நின்று என்றும் பிரியாதவனது திறத்தைக்கேட்டலே உயிர்க்கு உய்தி தருமென்பார், 'பிரான்' என்றும், சிவாகமத்திறம், சைவத்திறம், முப்பொருட்டிறம், ஈசன் திறம் முதலிய எல்லாம் அடங்கத் ' திறம் ' என்றும், 'பாசிபடு குட்டத்திற் கல்லினை விட்டேறியப் படும் பொழுதின் நீங்கி அது விடும்பொழுதிற் பரக்கும்; ஆசுபடும் மலம் மாயை அருங்கன்மம் அனைத்தும் அரனடியை உணரும்போது அகலும்; (உணர்தலை விட்ட) பின் அணுகும் '; அதனால், ' நேசமொடும் திருவடிக் கீழ் நீங்காதே தூங்கும் நினைவுடையோர் நிலை அதுவே யாகி நின்றிடுவர்; ஆசையொடும் அங்கும் இங்கும் ஆகி அலமருவோர் (அறுத்தற்கு) அரும் பாசம் அறுக்கும் வகை' இடைவிடாதும் இரண்டாட்டாதும் ஈசன் திறமே பேணுதல் என்பார் ' எப்போதும் ' என்றும், கற்றலிற் கேட்டலே நன்று என்பார் (முன்னும் பின்னும்) கேண்மின்கள் ! என்றும் பணித்தருளினார். ஆளாகாதும், ஆளானாரை அடைந்துய்யாதும், மீளா ஆட்செய்து மெய்ம்மையுள் நில்லாதும் வாளா மாய்ந்து மண்ணாகிக் கழியும் தொழும்பர் செவி தோளாத சுரை (5. 90. 3). ' இளையகாலம் எல்லாம் எம்மானை அடைகிலாத் துளையிலாச் செவி(த் தொண்டர்)' (5. 66. 3) எனப் பழிக்கப்படாமை வேண்டி, செவிகாள் பிரான் திறம்எப்போதும் கேண்மின்கள் என்றருளினார்.

85. முரலாய் - முரல்வாய். (முக்கால் ஒலிப்பாய்) ' சூழ்த்து மதுகரம் முரலும் தாரோய் ' (திருவாசகம்). முதுகாடு :- பழங்காடு. சுடுகாடு. அதற்கு முதுமை, தன்கண்வரும் பிணங்களின் முதுகைத் தான் பார்த்து, தன் முதுகைப் பிறிதொன்று பாராதவாறு நெடுங்காலம்நிற்றல். (புறம்.356). வாக்கே நோக்கிய மங்கை-வாக்கு (வாசகம்) மங்கை. வாச்சியம்-மங்கைமணாளன்.

वागर्थाविव संपृक्तौ वागर्थप्रतिपत्तये ।
जगतः पितरौ वन्दे पार्वतीपरमेश्वरौ ॥ (रघुवंशे - १ - १)

சொல் :- மங்கையுமை. பொருள் :- மணாளசிவம் முரலுதல் - மூக்கின்றொழில். உயிர்ப்புக்கால் (பிராணவாயு) மூக்கின் வழி வெளிப்படுவது. அதனியக்கம் இன்றேல், உடலின் நீங்கும் உயிர். உடல் முதுகாட்டிற் கிடத்தியெரிக்கப்படும். அங்கு உறையும் முக்கண்ணனை உடலோடிருக்கும்போதே முரன்றுகொண்டிருப்பின், அவனருளால், இறவாது வீடு பெற்று இன்புறலாம் என்பார் ' முதுகாடுறை முக்கண்ணனை மூக்கே நீ முரலாய் ' என்றார். மூக்குவழி யியங்கும் மூச்சு, உலகில் இரவியும் திங்களும் எரியும் இன்றேல் நின்றொழியும். அம் மூன்றனையும் இயக்கியும் உருவெனவும் கண்ணெனவும் கொண்டும் உயிர்கட்கருளும் இறைவனை முரல்வாய் என்பார் ' முக்கணனை ' என்றார். இறைவனைக் குறித்ததாகலின், வாக்கால் உரைத்தபடி விளங்கிக்கொள்ளும் நிலைமை மூக்கால் முரன்றாலும் அவனுக்கு இனிது விளங்குவது இயல்பும் எளிமையும் ஆம் என்பார், ' வாக்கே நோக்கிய மங்கை மணாளனை மூக்கே நீமுரலாய் ' என்றார். சொல்லும் பொருளும் ஆனான் அம்மையப்பனே எனலும் அதனால் விளக்கலாயிற்று. ' சிவ சிவ ' என்னும் வாக்கே அவன் ஆன்மாக்களிடத்திலிருந்து நோக்கியிருக்கின்றான். அவன் அத் திருவைந்தெழுத்து நினைவோடு, வாயால் உரையாது மூக்கால் முரல்கினும், அவனது நோக்கம் அதுவாதலின், மங்கைமணாளனும் தனது மங்கலகுண நிறைவாகிய சிவாநந்தாநுபவத்தை வழங்குவதில் ஒருபோதும் தவறான் என்பார், ' மங்கைமணாளனை முரலாய் ' என்றார். மணாளன் நோக்குவது வாக்கின் பொருளையுடைய மூக்கின் முரற்சி. மங்கை நோக்குவது, அம்முரற்சியாயமைந்த வாக்கு என்பாராய் 'மூக்குவாய் செவிகண்ணுடலாகி.........காக்கும் நாயகன் கச்சியேகம்பனே ' என்புழி மூக்கினை முற்கூறினார். அதன் கருத்துணர்க. வாக்கே நோக்கிய மங்கைமணாளன், உயிர்ப்பாய்ப் புறம் போந்தும் அகம்புக்கும் உயிரினுள்ளே நிற்பான். அவ் வீசனுக்கு அவ்வுயிர்ப்பியங்கும் வாசலாதல் தோன்ற 'மூக்கே' என்றார். ' மூக்கினால் முரன்றோதி அக்குண்டிகை தூக்கினார் குலம் ' (5. 58. 1) ' ஞமணஞாஞண ஞாண ஞோணமென் றோதி ' (4-33-9) வீண்காலம் போக்குமவர் போலாது முக்கணனை முரல்வாய் என்றார். நோக்கம் பிறிதோன்றன்கண் இன்றி வாக்கின்கண்ணதேயாதலின், மூக்கின் முரற்சியும் வாக்கின் வரும் விளக்கத்தை விளைவிக்கும் என்பார் மூக்கே நீ முரலாய் என்றார் எனலுமாம்.

வாயே வாழ்த்துகண்டாய் - மத
யானை யுரிபோர்த்துப்
பேய்வாழ் காட்டகத் தாடும்பி ரான்றன்னை
வாயே வாழ்த்துகண்டாய். 86

86. 'வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும் தாழ்த்தச் சென்னியும் தந்த' அத் தலைவனையே (5-90-7). 'வாழ்த்த வாயினை வைத்தார்' (295) என்றுணர்ந்து வாழ்த்திப் பயின்ற தமது பெருமை தோன்ற 'வாயே' என விளித்தார். இருந் தமிழே படித்தும் இறைவனுக்கு ஆளாகும் பேற்றினை உறாத ஆயிரம் சமணர் வாய் அவர்களை அழித்தற்குப் பயன்பட்டன. (5-58-9) அவ் வெவ்வாய் போல்வது அன்று தம் செவ்வாய் என்பது தோன்ற விளித்ததுமாம். வாழ்த்துவதன் பயன் தமக்கு வாழ்ச்சியெய்துதல். வாழ்த்தப்பெறுவோனால் வாழ்த்துவோற்கு வாழ்ச்சியுறுதேல் அவ் வாழ்த்துப் பயனிலாததாம். 'வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான் மனம்நின்பால் தாழ்த்துவதும் தாம் உயர்ந்து தம்மையெல்லாம் தொழவேண்டிச் சூழ்த்து மதுகரமுரலும் தாரோயை நாயடியேன் பாழ்த்த பிறப்பறுத்திடுவான் யானும் உன்னைப் பரவுவனே' என்பதால், மணிவாசகரும், சிற்றின்ப வாழ்வுறுதலும் பிறப்பறுத்துப் பேரின்பவாழ்வுறுதலும் ஆகிய இரண்டும் வாழ்த்துப்பயன் என்று அருளியவாறு உணர்க. அப்பயன்களுள் யாது வேண்டினும் அது கொடுக்க வல்லான் சிவபிரானே யாவன். பிற ரெல்லாரும் அழிவுறாத மெய்யினரல்லர். தான் ஒருவனே அழியாத மெய்ப்பொருள் என்று தன்னை அறியாத உயிரெல்லாம் உணர்ந்து தன்னையே வாழ்த்தி வாழ, †மதயானையுரி போர்த்தும் மாளாதும் (நஞ்சுண்டும் சாவாதும்) நிலையாக விளங்குகின்றவன் என்பார் 'மதயானையுரி போர்த்து' என்றார். வாழ்த்தி வாழாதவர் உடலுக்கு இடமான காட்டிலே வாழும் பேய் அஞ்ச ஆடும் பிரானை வாழ்த்துவதே அக் காடு போகாதவாறு வீடுபேறு நல்கும் என்பார் 'பேய்வாழ் காட்டகத்தாடும் பிரான்' என்றார். வாழ் :- தன்வினை. வாழ்த்து :- பிறவினை. வாழ்த்துவோர்க்கே வாழ்வுண்டு என்னும் உண்மையை உணர்ந்த மக்கள், தம்முள் இருக்கும் இறைவனை வாழ்த்தும் வழக்கம் உடைமை அநாதியாக நிலவுகின்றது.

† சிந்தாமணி 2787. 'வேள்வி' உரை.

நெஞ்சே நீநினையாய் - நிமிர்
புன்சடை நின்மலனை
மஞ்சா டும்மலை மங்கைம ணாளனை
நெஞ்சே நீநினையாய். 87

நாத்திகரும் இதை அறியாது செய்துவருகின்றனர். அமண் கையர் எனைக் கல்லினோடு பூட்டி நீர்புக ஒல்லை நூக்க, நெல்லு நீள்வயல் நீலக்குடியரன் நல்ல நாமம் என்வாக்கினால் நவிற்றி உய்ந்தேன் நன்றே. ' நாள்தோறும் நல்குவான் நலன் ' என்புழிப் போல் இங்குப் பிரிக்க. நன்றே ஆகிய அனுபவம் காட்டித் தெளிவிப்பாராய், 'வாயே வாழ்த்து' என்று விளித்து ஏவியருளினார். 'நாக்கொண்டு பரவும் அடியார்வினைபோக்கவல்ல புரிசடைப் புண்ணியன் ' ' நாக்கைக்கொண்டு அரன்நாமம் நவில்கிலார் நாக்கைக்கே இரையாகிக் கழிவர் ' என்பார் வாயே வாழ்த்து என்றார்.

87. பிஞ்ஞகன் பேர் மறப்பன்கொலோ என்று கிடந்து மறுகிடும் உள்ளம் என்பார் ' நெஞ்சே ' என்று விளித்து ' நீ நினையாய் ' என வினாக்குறிப்புணரக் கூறினும், ' விச்சையும் வேட்கையும் நிச்சல் நீறணிவாரை நினைப்பதே ' (5. 92. 8) ' வந்தவரவும் செலவும் ஆகி மாறாது என் உள்ளத்து இருந்தார் ' (6. 16. 9) அவரை ' நினையாது ஒருபோதும் இருந்தறியேன் ' ' கவலைக்கடல் வெள்ளத் தேனுக்கு விளைந்த தெள்ளத்தேறித் தெளிந்து தித்திப்பதோர் உள்ளத்தேறல் ' (5. 91. 9) 'உள்ளமே தகளி ' (4-75-4) ' நெஞ்சத்துள் விளக்கு ' (4-29-2) 'சிந்தையுட் சிவம்' (287-321) (5. 48. 5) 'நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவர் ' (5-2-1) ' என் உள்ளத்துள்ளே ஒளித்து வைத்த சிறையான் ' (6-66-7) ' கைதொழுவார் மனம் ஆலயம் (173) ' நெஞ்சினால் நினைந்தேன் நினைவெய்தலும் வஞ்ச ஆறுகள் வற்றின' (5. 44-4) 'துன்பமெலாம் அறநீங்கிச் சுபத்தராய்.........ஏத்திநின்று இன்பராய் நினைந்து என்றும் இடையறுஅன்பர் ஆம்அவர்க்கு அன்பர் ' என்ற அநுபவஞான சொரூபராதலின், தம் நெஞ்சம் செய்த மா தவத்தைத் தாமே வியந்து ' நெஞ்சமே எந்த மாதவம் செய்தனை ' (5. 7. 2) ' என்ன மாதவம் செய்தனை ' (5. 77. 2) எனப் போற்றும் பெருமை தோன்றவும் ' நெஞ்சே ' என்று விளித்தார். ' நெஞ்சுள்

நின்று நினைப்பிக்கும் நீதி 'யாகிய, உடையான் ஏவல் வழி ஒழுகுவதே நின்கடன். நினக்கு வித்து ஆனவனை (6. 95. 7) முளைத்தோற்றமான நீ பின்னை மறத்தல் பிழை. உன்னைத் தூய்மை செய்து நினைக்குமா நினைப்பியாதே கழித்தாறுயினும், (337) நினைவாயேல் அவ்வஞ்சக்கள்வன் நின்னுள் மன்னு வான் (66. 2. 4) என்பார், 'நீ நினையாய்' என்றுர். பற்றுள்ள வரை நினைந்தாற் பற்றருது; பிறவிப் பெருங்கடலில் விழுந்து கரையேருக் கழிபேரிடர் கழியாது; பற்றற்றுன் தாளிணையைப் பற்றறப் பற்றுவதே நினைப்பின் முடிந்த பயன் என்பார் 'நின்மலனை' என்றுர். அவன் நின்மலனுதலைப் புறக்குறியாய் விளக்குவது ஈதென்பார் 'சடை' என்றும், அதனைஉடையார்க்கும் அவனை அடைவார்க்கும் என்றும் உள்ளது உயர்ச்சியே என்பார் 'நிமிர்சடை' என்றும், அது நிறத்தாலும் விளங்கும் என்பார் 'புன்சடை' என்றும் அருளினுர். 'பொன்சடை' என்பது 'புன்சடை' என மருவிற்று. ஈண்டுப் புன்மை கொள்வார் புல்லரே. நினைந்து. நினைப்பு நிறைவெய்தப்பெற்ற ஆட்சி (அநுபவம்) உடைய சாட்சி வேண்டுமேல், பனிமலையில் தனிமகளாய்த் தவம் புரிந்து, தவனை உமா தவனுக்கிய மங்கையைக் கண்டுணர்க என்பார் 'மலைமங்கை மணுளனை' என்றுர். வேறு எப்பொருளை நினைப்பினும் வெப்பமே மேவும்; தட்பம் சாராது; அம்மையப்பனையே நினைத்தாற்றுன் பிறவிக் கோடையையும் தீர்க்கும்; பேரின்பக் குளிர்ச்சியையு முண்டாக்கும் என்பார் 'மஞ்சாடும் மலைமங்கை மணுளனை நெஞ்சே நீ நினையாய்' என்றுர். மலைமங்கை தன் நினைப்பால் தனது தாட்சாயணி என்ற பெயர் நீங்கினுற்போல், நின் நினைப்பால் நினது சீவன் என்ற பெயர் நீங்குவாய்; அவள் அவனை அடைந்த வாறும் அடைந்து இடையருதின்புறுவாய் என்பார் '(மலைமங்கை மணுளனை) நீ நினையாய்' என்றருளினுர். நினைக்க முயலும் முன்னரே பத்திவெள்ளம் பரந்தது (5. 44. 6) என்பார் 'நினையாய்' என விரைவித்தார். 'சிந்தையால் நினைவார்களைச் சிக்கெனப் பந்துவாக்கி உயக்கொளும் காண்' (5. 71. 7) என்பார், விரைவுக் குறிப்புணர, 'நெஞ்சே நீ நினையாய்' என்று அருளினுர். செல்வப்பாவைக்கு வேந்தனுர் வஞ்ச நெஞ்சத் தவர்க்கு வழிகொடார் (என்னைப் போலும்) நைஞ்ச நெஞ்சர்க்கு அருளுவார் (5. 68. 7) 'நாறுசாந்தணி நன்முலை மென்மொழி மாறிலா மலைமங்கையோர் பாகமாகக் கூறனுரை நினைந்து

கைகாள் கூப்பித்தொழீர் - கடி
மாமலர் தூவிநின்று
பைவாய்ப் பாம்பரை யார்த்த பரமனைக்
கைகாள் கூப்பித்தொழீர். 88

ஊறுவார்க்கு ஊனம் ஒன்றும் இல்லை' (5. 70. 8) போக்க மிக்கவர் பூவும் நீரும் கண்டு நாணி நக்கு நிற்பாராயினும், நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே புக்குநிற்பன் பொன்னார் சடைப் புண்ணியன் என்பார், 'மலைமங்கை மணாளனை நெஞ்சே நீ நினையாய்' என்றார். நின்னை நினையவொட்டான்; நீ நினைத்தால் மறப்பித்துப் பேர்த்து ஒன்று நாடுவிப்பான்; அவனை மறந்து அவனுக்கு இனியனாகயுள்ள உனக்கு நிகர் ஒருவரும் இலர் என்பார் 'நீ' என்றார்.

88. 'தொழுது தூமலர் தூவித் துதித்து நின்று அழுது காமுற்று அரற்றுகின்றாரைக் கீழ்க்கணக்கில் எழுதும் (5. 21. 8) மெய்ம்மையை அறிந்து, சலம் பூவொடு தூபம் மறந்தறியாராய் வழிபட்டு வந்து, நகமேலாம்தேயக் கையால் நாண்மலர் தொழுது தூவி, முகமேலாம் கண்ணீர்வார முன்பணிந்து ஏத்தும் தொண்டர் அகமலாற் கோயில் இல்லை (401) அம்போது எனக் கொள்ளும் (401) எம்போலிகள் பறித்து இட்ட இலையும் முகையும் எல்லாம் என்று உணர்ந்து தெளிந்த நம் கைகளுக்குத் தாம் கூப்புவித்தல் வேண்டாதே அவையே கூம்பும் என்பார் அப் பயிற்சி மிகுதி தோன்றக், 'கைகாள்' என்றார். குவிதலும் தொழுகையும் தம் கைகளுக்குச் சிவபிரான்கண்ணவேயன்றிப் பிறாண்டில்லை என்பார் 'கூப்பித் தொழீர்' என்றார். புள்போல 'யோசனைபோய்ப் பூக்கொணர்ந்து ஒருநாளும் ஒழியாமே பூசனை செய்தினிதிருந்த' பேரன்பின் வழிபாட்டை மேற்கொண்டு பயின்ற நுமக்குப் பிறிதொரு செயலும் வேண்டா. எங்கேனும் போய், ஏற்றமலர் ஏற்றுவந்துதூவு என்பார் 'கடிமலர் தூவி நின்று' என்றார். சிவாகமவிதியிற் கடிந்த மலர்களைக் கடிந்து விதித்த மணமலர்களை எடுத்துவருதல் வேண்டும் என்பார், 'கடிமாமலர்' என்றார். மலர் தூவிப் பரவினும் மனம் புறம்போய்ப் பாசப் படுகுழியில் வீழ்ந்து பாழாகாதவாறு, அதன் இயக்கத்திற்கு வாயிலான ஐம்பொறிகளையும் அவற்றின் வழிவரும் புலன்

ஆக்கை யாற்பயனென் - அரன்
கோயில் வலம்வந்து
பூக்கையா லட்டிப் போற்றியென் ணுதஇவ்
ஆக்கை யாற்பயனென். 89

களையும் அடக்கி வழிபடல் வேண்டும்; அவ்வடக்கத்தை எய்தற் பொருட்டு, அவை அடங்காரையும் அடக்க வல்லரல்லாரையும் வணங்கிற் பயனில்லை; அவற்றை அடக்கும் ஆற்றலை இயல்பாக உடைய சிவபிரானையே தொழு என்பார், 'பைவாய்ப் பாம்பரை ஆர்த்த பரமனைத் தொழீர்' என்றார். ஐம்பொறிகளையும் அடக்காதவனாதலின், பாம்பணை மேல் தூங்குமவனான் மாலோன்; அவற்றை அடக்கும் ஆற்றலை, உடலிற் பாம்பினை அணிந்தும் தலைமேல் ஐந்தலைப் பாம்பு ஏந்தியும் தோற்றினான் நீற்றினை நிறையப்பூசிய நின்மல சிவன்; நீர் கைகூப்பித் தொழலால் அவனுக்கு ஒரு பயனும் இல்லை; அவன் 'கரைந்து கைதொழுவாரையும் காதலன் வரைந்து வைதொழுவாரையும் வாடலன்' நும்குவித்தலும் தொழலும் நுமக்கே பயன் விளைவிப்பன என்பார் 'கைகாள் கூப்பித்தொழீர்' என்று மீண்டும் தூண்டினார். ஐம்புலனும் அகத்தடக்கி எப்போதும் இனியானை மனத்தே வைத்து 'நாண்மலர்தூவி யழுதிரேல் வஞ்சம் தீர்த் திடும்' (5. 82. 6) 'புரமூன்றெய்த செருவனைத் தொழத் தீவினை தீரும்' 'ஐயனைத் தொழுவார்க்கு அல்லல் இல்லை' (ஷ. 5) (5. 83-9). 'பூக்கைக்கொண்டு அரன் பொன்னடி போற்றிலார் காக்கைக்கே இரையாகிக் கழிவர்' என்பார் தூவிநின்று கூப்பித் தொழீர்' என்றார். 'கழலடியே கைதொழுது காணினல்லால் மற்றோர் களைகண் இல்லீர்' என்பார் 'தொழீர்' என்றார்.

89. தில்லையம்பலத்துக் கூத்தனுக்கு ஆட்பட்டிருப்ப தன்றோ நம்தமக்கு வாய்த்த உடம்பின் பயன்? கொடுமாநுட மேனும் இறைவன் கழலேத்தியிருக்கில் ஒரு குறைவும் இல்லோம்' (5. 39. 5) குனித்தபுருவம் முதலியவற்றைக் காணப்பெறாத மனித்தவுடல் அநித்தவுடலே, உடையானிடத்தில் நிலாவாத நெஞ்சத்தை யுடைய புலாலுடம்பு நிற்பது ஒத்து நிலையிலாதது. இந் நிலையிலா ஆக்கை நிற்கும்போதே இதனால் ஆகும் பயனை விரைந்து பெற்றுக்கொள்வதே அறிவுடைமைக்கு

உகந்தது. அங்ஙனம் பெறுதார்க்கு ஒரு பயனும் இல்லை என்பார், ‘ ஆக்கையால் பயன் என் ’ என்றார். ஊனாலும் உயிராலும் உள்ள பயன்கொளநினைந்து வாளுறு போதி சடையார் மலரடி வணங்குந் தமக்குத் துணையாய் நின்றமை தோன்ற ‘ ஆக்கை ’ என்றருளினார். ஆக்கை பெற்றது மீண்டும் அதனை ஆக்கை ஒழித்தற்கே. அது நிகழ, உயிரைச் சாரும் கட்டினை ஒழித்து வீடுநல்குவது முழுமுதற் பொருளே என்பார் ‘ அரன் ’ என்றார். [கோயில் (கோ+இல்). வருமொழி முதலிகரவுயிர் யகரமெய்யை அடுத்தது. உடம்படுமெய்க்குப் பண்டு வரையறை இல்லை. இ+அன்=இவன். ஐ+அர்=ஐவர். நீயிர், ஆயா, மியாயிக. ‘ ஆயிரண்டும் ’ என்புழி ஆயஇரண்டும் என்றலும் உண்டு. ‘ ஆயிருமுதலின் ’ என்பதற்கு இளம்பூரணர் ஆகிய இரண்டு காரணத்தால் என்று எழுதியதுணர்க. அதனை உடம்படுமெய் எனல் நியதம் அன்று ] அரனே கோ ஏனையோர் அடிமையே அன்றிக் கோவாகார் என்பார் ‘ அரன் கோயில் ’ என்றிணைத் தார. ஆக்கை அற நோக்குற்றார்க்கு ஆக்கை முதலிய ஐந் தொழிலுட்படாதும் ஐம்மலத்துள் அழுந்தாதும் அகலவேண்டு தலின், ஐந்து முதலிய சுற்றுஉறச் சிவாகம விதிப்படி அமைந்த திருக்கோயில்களை வலம் புரிந்து சிவதரிசனம் செய்தல் வேண்டு மென்பார். ‘ கோயில் வலம் வந்து ’ என்றார். ‘திருக்கோயி லில்லாத திருவிலூர்’ ‘ பாங்கினொடு பலதளிகள் இல்லாவூர் ’ களில் எடுத்த உடலாய், ‘ஒருகாலும் திருக்கோயில் சூழா’தேல், அவ்யாக்கை பெயர்த்தும் பெயர்த்தும் போக்குவரவு புரியும் உயிர்க்குச் சுமை என்பார் ‘ வலம் வந்து போற்றி என்னாத இவ் வாக்கை ’ என்றார். ‘ பூக் கைக் கொண்டரன் பொன்னடி போற்றி லார்’ ‘ உண்பதன்முன் அருப்பொடு மலர் பறித்து இட்டு உண்ணார்’ ‘நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார்’ நெஞ்சம் தன்னுள் (- அடைந்தார்க்கு இன்பங்கள் தரும் தன்னுள்) நிலா வாததும் நிற்பது ஒத்து நிலையிலாததுமாகிய புலாலுடம்பிலும் புகுந்து நின்ற அக் கற்பகத்தைத் தலையாரக் கையாரக் கும்பிட்டு வாயார நாவாரப்பாடிச் சித்தமாரநினைந்து போற்றிஅலறுநிற்றலைச் செய்யாதார் யாவர்க்கும். அவ்வுடம்பால் ஒரு பயனும் இல்லை என்பார் ‘ பூக் கையாலட்டிப் போற்றியென்னாத இவ்வாக்கையாற் பயன் என் ’ என்றார். வழிபாடில்லையேற் பயனிலாத யாக்கை யேன்பது கண்கூடாம் என்பார் ‘இவ்வாக்கை’ எனச் சுட்டிக் கூறினார். இரை தேடி அலமந்து கழியச்செய்து காக்கைக்கே

கால்க ளாற்பயனென் - கறைக்
கண்ட னுறைகோயில்
கோலக் கோபுரக் கோகர ணஞ்சூழாக்
கால்க ளாற்பயனென் 90

இரையாகும் ஆக்கை என்பார் 'பயன் என்' என்றார். ஆக்கைக்கே இரைதேடி அலமந்து காக்கைக்கே இரையாகிக் கழிவது எவ்வாற்றானும் அதனுள் வாழும் உயிர்க்குப் பயனின்று என்பார் 'ஆக்கையாற் பயன் என்' என வினவினார். ஆயிரம் ஆரணம் ஓதினும் பொறியிலார்க்குக் கோயில் முதலியவற்றின் உண்மையை அறிய மனம் புகாது; பொறியுடையார்க்குப் புகுமாயினும், பூக் கைக்கொண்டு அரன்'பொன்னடி போற்றிக் கருத்திற் கழலடி நாட்டி, நாண்மலர் தூவி வலஞ்செயில் வாட்டம் தீர்த்திடும் என்பார் 'அரன் கோயில் வலம்வந்து பூக் கையால் அட்டிப் போற்றி யென்னாத இவ்வாக்கையாற் பயன் என்' என்றார். 'கடலின் நஞ்சமுதுண்டவர் கைவிட்டால் உடலினார் கிடந்து ஊர்முனி பண்டம்' ஆவார். அப்பிண்டம் சுடலை சேர்வது சேய்த்தன்று. மிக நணித்து. போகும் எனச் சொல்லுமுன் செல்லும் சொற்பிரமாணமே. வாயும் நெஞ்சும் சென்னியும் முறையே வாழ்த்த நினைக்கத் தாழ்த்தத் தந்த அத்தலைவனை நன்றி மறவாது, சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே நெடுங்காலம் வீழ்த்தல் தீவினைப்பயனாகும்; ஆதலின், 'இவ்வாக்கையாற் பயன் என்' என்று வெறுத்தமை தோற்றினார். வெவ்வேறு பயன் கருதி முன்னுரைத்த பகுதி பின்னுங் கொள்ளப்பட்டமையால் கூறியது கூறல் அன்று.

90. பல கால்களாகி விரிந்து செல்லும் காவிரி முதலியனவும் திருக்கோயில்களைச் சூழ்ந்து செல்லும் சிவநல்வினையை எய்துகின்றன. இவ்வுடம்பின் கால்கள், திருக்கோயில் சூழாக் கால்களாய் அவ்வாய்க்கால்களிலும் இழிந்தன என்பார் 'கால்களாற் பயன் என்' என்றார். ஒருகாலும் தீவண்ணர் திருக்கோயில் சூழாவாகில் அளியற்றவராய்ப் பெருநோய்கள் மிக நலியப் பெயர்த்தும் செத்துப் பிறப்பதற்கே தொழிலாகி இறக்கும்கால் என்பார் 'கறைக்கண்டன் உறைகோயில் கோலக் கோகரணம் சூழாக் கால்களாற் பயன் என்' என்று வினவினார்

உற்று ராருளரோ - வுயிர்
கொண்டு போம்போழுது
குற்று லத்துறை கூத்தனல் லானமக்
குற்று ராருளரோ. 91

திருக்கோயில் வலம் வரும் மெய்யன்பரை நஞ்சு தீண்டாக் காரணம் தோன்றக், ' கறைக் கண்டன் கோயில் ' என்றார். ' ஒட்டை மாடத்தில் ஒன்பது வாசலும் காட்டில் வேவதன் முன்னம், கழலடி நாட்டி நாண்மலர்தூவி வலஞ்செயில் வாட்டம் தீர்த்திடும் ' என்பார் அங்ஙனம் கூறினார் எனினும் பொருந்தும். ஆக்கையின் பிரிவாய தலை, கண், செவி, மூக்கு, வாய், நெஞ்சு, கை எல்லாம் முற்கூறிவிட்டமையால் எஞ்சிய கால்களை ஈண்டுக் கூறினார். பிற்கூறற்பாலதாய ஆக்கையை முற்கூறியதென்னை எனின், கால்கள் ஆக்கையின் ஒரு பிரிவேயாயினும், அவ்வுறுப்பால் ஏனைய உறுப்புக்கள் (ஆக்கை) தாங்கப்படுதலின், முற்கூறினார். அக் கால்களிலிருந்தும் கூற்றால் உயிர் நீங்கும் போது உய்ந்து போக்கில்லை, என்பார் 'கால்களாற் பயன் என்' என்று அடுத்துள்ளதன் தொடர்பு தோற்றினார். கோபுரம் - தலைவன் ஊர். கோலம் - அழகு. கோகரணம் வடநாட்டுத் தலம். கோ - பசு. கர்ணம் - காது. மாலைக்கடன் முடிக்க, தரையில் வைத்தலை வெறுத்து, என்செய்வது என்று ஆழ்ந்த இராவணனது கையிலிருந்த சிவலிங்கத்தைச் சிறுன்போல் எதிர்வந்த பிள்ளையார் ஏற்று, குறித்தவாறு அவன் விரைந்து மீளாமையால், நிலத்தில் வைத்திட்டார். வந்து எடுக்க முயன்றான் இராவணன். அவன் வலியெல்லாம் அங்குப் பலியாயின. மகாபலி லிங்கம் கீழமுத்திற்று. மேலே ஆவின் காதளவே தெரிந்தது. அதனால், ' கோகரணம் ' என்று பெயர் ஆயிற்று என்பர். தமிழகத்துத் தலப்பெயர்க் காரணம்போலத் தள்ளத்தக்கதன்று இது. வடமொழி சிறிதுணர்ந்தாரும் பெயர்க் காரணம் காட்டி மெய்ப்பிக்கும் அக்காலத்தில், தமிழில் வழங்கப் பெற்ற ஊர்ப்பெயரெல்லாம், வடமொழிப் பெயராக்கிக் கதை புனைந்து வழங்கும் பொய்க்கிடமாயின.

91. உறுதல் - நன்றும் தீதும் எய்துதல். அதன் முதனிலை நீண்டு ' ஊறு ' என்றாகி, தீயதனைக் குறித்தல் வழக்கு, ' இடையூறு ' எனல் வெளிப்படை. உற்றார் என்பதோ (தீயோரை

உணர்த்தாது) நல்லோரையே உணர்த்தும். உயிர்க்கு நற்றுணை ஆவாரே உற்றார். உயிர்த்துணையின் பயன் உடம்பின் நீங்கும் பொழுது உறுதேல், அவ் வுற்றாரால் உயிர்க்கு நன்று ஒன்றும் இன்று. அத் தகையோர் யாரையும் இல்லாதவராய், எல்லாத் தொடர்பும் அற்று, தாமும் பிறிதொன்றும் பற்றிடல் இன்றி, தன்னையே துணையாகக் கொண்டவர்க்கு உற்ற நற்றுணையாவான் சிவனெனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி யெம்மான் அன்றி வேறு இல்லை என்பார் ' உற்றார் ஆர் உளரோ ? என்று வினவினார். உடல், பொருள், இடம், ஏவல் முதலியவற்றை உடையதா யிருக்கும்பொழுதும் துணைவேண்டும் உயிர்க்கு, அவற்றைவிட்டு நீங்கும்வண்ணம், உடலையும் தன்னையும் கூறு படுத்தித் தன்னைக் கொண்டேகும் காலனை அக்காலத்தில் தடுத்துக் காக்கும் துணை இன்றியமையாதது என்பார் ' உயிர்கொண்டு போம்பொழுதுஉற்றார்ஆர் ' என்றார். ' வைத்த மாடும் மடந்தை நல்லார்களும் ஒத்தொவ்வாத உற்றார்களும் என் செய்வார் ' உடலின் நீங்கினாலும் தன்னுள்ளே நீங்காதிருக்கும் மெய்த்துணை ஐந்தொழில் புரிந்து ஆட்டி ஆடும் முழுமுதல் என்பார் ' கூத்தன் அல்லால் உற்றார் ஆர் உளரோ ? என்றார். எங்கும் நிறைந்த பொருள் உடற்குள் இருக்கும் உயிர்க்குள்ளும் அகலாதுஇருந்து, அதனை அவ்வப்பொழுது துன்பத்தினின்றும் தடுத்தாட்கொண்டு வருகின்றது முடிவான துன்பமாகிய இறப்பினின்றும் காத்து அருள்வது. நெட்டாலத்து நிழற்கீழிருந்து அறம் புகன்றது பேருணர்வினார்க்கு. சிற்றுணர்வினார்க்குக் குற்றாலத்துறை கின்றது என்பார் ' குற்றாலத்துறை கூத்தன் ' என்றார். கூத்தனே என்று அறுதியிட்டுணர்த்துவார், ' கூத்தன் அல்லால் ஆர் உளரோ ' என்றார். பதிபசுபாசம் என்னும் முப்பொருளுள் பதியின் துணை பசுக்கட்கே என்பார் ' நமக்கு ' என்றார். ஏனைய சமயத்தார், சிவன் முதலே அன்றி முதல் இல்லை ' என்பதுணரா மையின், அம்முதலே முதல் எனக்கொள்ளும் சைவர்க்கு அவன் சரணங்களே, மரணம் பிறப்பென்றிவையிரண்டின் மயக்கறுக்க வல்லன என்பது தெள்ளிது என்பார் ' நமக்கு உற்றார் ஆர் உளரோ ' என்றார் எனலும் பொருந்தும். ' கடலி னஞ்சமுதுண்டவர் கைவிட்டால் உடலினார் கிடந்து ஊர் முனிபண்டமே ' ஆதலால், 'உயிர் கொண்டுபோம்பொழுது உற்றார் ஆர் உளரோ' என்றாரேனும் 'எண்ணிநாளும் எரியயிற் கூற்றுவன் துண்ணென் தோன்றில் துரக்கும் வழிகண்டேன், திண்ணன் சேறைச் திருச்

இறுமாந் திருப்பன்கோலோ - ஈசன்
பல்கணத் தெண்ணப்பட்டுச்
சிறுமா னேந்திதன் சேவடிக் கீழ்ச்சென்றங்
இறுமாந் திருப்பன்கோலோ. 92

சேந்நெறியுறை அண்ணலார் உளர் அஞ்சுவது என்னுக்கே' மண்ணின்மேல் பிறக்குமாறும் இறக்குமாறும் காட்டினும், தன்னை மறக்குமாறிலாது உறுதுணையாதல் அறிந்து போற்றும் உயிர்கட்கு அவனே துறக்குமாறு சொல்லப்படாத உற்றான் ஆவான். பிறர் எவரும் உற்றார் அல்லர் என்பார் 'ஆர்' என்று ஒரு பொருளெனக் கருதாமை தோன்ற வினாவினார். 'என்றும் வாழ்வுகந்தே இறுமாக்கும் நீர் பொன்றும்போது; நுமக்கு அறிவொண்ணுமே' என்பார் 'உயிர் கொண்டுபோம்பொழுது' என்றார். அப்பொழுது சங்கரா என வரல் அரிது. இப்பொழுதே சொல்லிச் சொல்லிப் பழகு. சொல்லத்தக்க வலிமைதர வேண்டு. (யான்) 'சாம் அன்று, நின் நாமம் பரவி நமச்சிவாய என்னும் அஞ்செழுத்தும் உரைக்கத் தருதிகண்டாய் எங்கள் சங்கரனே' (995) 'உன்னை நினைந்தே கழியும் என் ஆவி' (1052) என்னைத் தென்திசைக்கே உந்திடும்போது மறக்கினும் என்னைக் குறிக்கொள்மின்' (934) 927, 929, 931 பார்க்க. 'நின்றன் நாமம் உரையா உயிர்போகப் பெறுவேனாகில் உறுநோய்...... உற்றால் என்னே' (261:-3) 'உறவனாய் நிறைந்துள்ளம் குளிர்ப்பவன் இறைவனாகி நின்று எண்ணில் நிறைந்தான். அவன்' அன்றி உற்றார் இலர் என்பார் 'உளரோ' எனத் தேற்றப் பொருட்டாய ஒகாரம் கொடுத்துரைத்தாரும் ஆவார். 'உறவாவார் உருத்திர பல்கணத்தோர்கள்' 'அப்பன், அம்மை, ஐயன், மாமன், மாமி முதலியவராக' 'உற்றவன் காண்' 'உறவெல்லாம் ஆவான் தான்காண்' 'உற்றாராய் உறவாகி உயிர்க்கெலாம் பெற்றாராய்ப் பிரானார்' 'உற்றார் இலாதார்க்கு உறுதுணையாவன' (895) 'உற்றானை உடல் தனக்கோர் உயிரானானை' 'உற்றிருந்த உணர்வெலாம் ஆனாய்நீயே உற்றவர்க்கோர் சுற்றமாய் நின்றாய் நீயே' 'குற்றாலத் தெங்கூத்தனை' (151) உறவு கோல்நட்டு.........முறுக வாங்கிக் கடைய முன்நிற்கும்'.

92. இறுதல் - ஒடிதல். உயிர் உடலின் நீங்குதலையும் இறுதல் என்பர். நீங்கும்பொழுது உயிர் பேரொலி செய்தலும்

தேடிக் கண்டுகொண்டேன் - திரு
மாலொடு நான்முகனும்
தேடித் தேடொணாத் தேவனை யென்னுளே
தேடிக் கண்டுகொண்டேன். ௯௩

திருச்சிற்றம்பலம்

உண்டு. போர் முதலியவற்றில் இறப்போர் செய்யும் ஆர்ப்பு 'இறும்ஆர்ப்பு' எனப்படும். அதன் மரூஉவே 'இறுமாப்பு'. அது கருத்திற்குரியதாயிற்று. இங்கு இன்பச் செருக்குணர்த்தி நின்றது. சிற்றின்பத்தினும் செருக்கு மிகுமாயின், பேரின்பத்திற் செருக்குறல் பொருந்துமன்றோ? பொன்றும் வாழ்வுகந்தே என்றும் இறுமாக்கும் (5. 72. 6) உயிர், என்றும் பொன்றாப் பேரின்ப வாழ்வுற்றால் இறுமாப்புறாதிராதென்பார். 'இறுமாந் திருப்பன் கொலோ' என்றார். 'உறவாவார் உருத்திரபல்கணத்தி னோர்கள்' என்பார் 'ஈசன் பல்கணத்து எண்ணப்பட்டு இருப்பன்' என்றார். 'என்றும் நாம் யாவர்க்கும் இடைவோம் அல்லோம் எமக்கு எதிரா ஆரும் இல்லை. சிறுதெய்வம் சேர்வோம் அல்லோம். முப்பத்துமூவர் தேவர்களும் மிக்கோரும் சிறந்து வாழ்த்தும் சிவபெருமான் திருவடியே சேரப்பெற்றோம். ஒன்றினும் குறையுடையோம் அல்லோம். எண்குணத்துளோம். ஆதலின் ஏமாப்போம்' 'நாம் ஆர்க்கும் குடியல்லோம் யாதும் அஞ்சோம்' என்பார் 'சிறுமானேந்திதன் சேவடிக்கீழ்ச் சென்று அங்கு இறுமாந்திருப்பன் கொலோ' என்றார். 'கோல்' இரண்டும் அசைநிலை. 'அங்கு' சில பதிப்பில் இல்லை.

௯௩. அண்ணாமலையான் திருந்தடி ஏத்தத் தேடிச் சென்று காணாதார்போல்வேன் அல்லேன் என்பார் 'தேடிக் கண்டு கொண்டேன்' என்றார். தேடுவார் பிரமன் திருமால். அவரும் அவன் ஆடுபாதம் அறிகிலார்; யான் அறிந்தேன் என்பார் 'கண்டு கொண்டேன்' என்றார். மாலும் அயனும் தேடியும் தேட ஒன்றாத தேவன், யான்தேட ஒன்றினான் என்பார் 'திருமாலொடு நான்முக னும் தேடித் தேடொணாத்தேவன்' என்றார். அவர் தத்தம்உள்ளே தேடாமல் வெளியே தேடிக் காணாராயினர், யான் 'என் உள்ளே தேடிக் கண்டுகொண்டேன்' என்னும்படி அத் தேவாதிதேவன் 'என் உள்ளத்துள்ளே விள்ளாதிருந்தான்' என்பார் 'தேவனை

என் உள்ளே தேடிக் கண்டுகொண்டேன் ' என்றார். 'பாடுவார் பணிவார் பல்லாண்டிசை கூறு பத்தர்கள் சித்தத்துள் புக்குத் தேடிக் கண்டுகொண்டேன் ' (207) என்று தேடிய இடமும் கண்டுகொண்ட இடமும் தெளிக. கண்டு விட்டார் பலர். விடாது கொண்டார் சிலர். அச்சிலருள் யானும் அடங்குவேன் என்பார் 'கொண்டேன் ' என்றார். 'வித்தும் அதன் அங்குரமும் போன்றிருக்கும் மெய்ஞ்ஞானம் வித்தும் அதன் அங்குரமும் மெய்யுணரில் வித்ததனிற் காணுமையால் அதனைக் கைவிடுவர் கண்டவர்கள் பேணுமையால் அற்றார் பேறு. ' (திருக்களிற்றுப் படியார். 57) 'பிறையுடை வார்சடையானைப் பேணவல்லார் பெரியாரே ' (2-68-4) தேடிக் காணுமைக்கு ஏது விளங்க 'மால் ' என்றும் ஒருமுகமன்றிப் பல முகத்தால் பலதலை யுணர் வாய் ஒருதலை யுணர்வுறுதொழிந்தது என்பது தோன்ற 'நான் முகன் ' என்றும் இடத்திற்கேற்ற பெயர் குறித்த தறிக. 'மன்னுவது என் நெஞ்சில் மால் அயன்காண்கிலார் ' (திருவாச கம். 341) 'ஓட்டற்று நின்ற உணர்வு பதிமுட்டித் தேட்டற்று நின்ற இடம் சிவமாம் நாட்டற்று நாடும் பொருள் அனைத்தும் நாணுவிதமாகத் தேடும் இடம் அன்று சிவம் ' (ஷை. 29) பேசாதே 'எண்ணுென்றும் வண்ணம் இருக்கின்ற யோகிகள் பால் உள்நின்றும் போகான் உளன். ' (ஷை. 28) 'தேடிக் காணுைத் தேவன் ' என்றிருந்ததோ? (5. 98. பதிகம் பார்க்க)

---

அடிநாயைச் சிவிகைத் தவிசேறித் திரிவித்
    தரியாவப் பசுதைச் சிறியோரிற் செறியுங்
கோடியேனுக் கருளைத்திரு நாவுக்கரசைக்
    குணமேருத் தனைவிட் டேனையாமோட் டகல்விற
பிடியாரப்பெறுதற் கரிதாகச் சொலுமப்
    பிணநூலைப் பெருகப் பொருளாகக் கருதுஞ்
செடியாகத் துறிகைச் சமண்முடர்க் கிழவுற்
    றதுதேவர்க் கரிதச்சிவ லோகக் கதியே.          9

# 10. திருவதிகைவீரட்டானம்

## திருப்பதிக வரலாறு

இன்றமிழ்க்கு மன்னனுன வாகீசத்திருமுனி இங்குத் திருப்பணி செய்கின்ற நாளில் அத் தேரிவரிய பெருந்தகையார் பாடியருளிய செந்தமிழ்ப்பாட்டுப் பலவற்றுள் ஒன்று இத்திருப்பதிகம்.

திருக்கெடிலவாணர்

பண் காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

முளைக்கதி ரிளம்பிறை மூழ்க வெள்ளநீர்
வளைத்தெழு சடையினர் மழலை வீணையர்
திளைத்ததோர் மான்மறிக் கையர் செய்யபோன்
கிளைத்துழித் தோன்றிடுங் கெடில வாணரே. 94

ஏறின ரேறினை யேழை தன்னெரு
கூறினர் கூறினர் வேத மங்கமும்
ஆறின ராறிடு சடையர் பக்கமும்
கீறின வுடையினர் கெடில வாணரே. 95

94. கெடிலவாணர் - கெடில ஆற்றங்கரைக்கண் உள்ள திருவதிகை வீரட்டானத்துறைபவர்; சிவபிரானுர். முளைக்கதிர் இளம்பிறை-முளைபிறை. கதிர்ப்பிறை. இளம்பிறை. பிறத்தலுடையது பிறை. முளைத்தலுடையது முளை. பிறத்தல் மறைந்தமை நோக்கியது. முளைத்தல் வெளிப்பட்டுத் தோன்றும் இடம் நோக்கியது. ‘வெள்ளி முளைத்தது’ என்னும் வழக்கு நோக்குக. கதிர் - நிலா. இளமை :- ஒரு கலையுடைமை தோன்றியது. பிறை மூழ்க நீர்வெள்ளம் வளைத்து எழும் சடை. மான்மறி திளைத்த தோருகை. கிளைத்தல் - மண்ணைத் தோண்டுதல். உழி - இடம். செய்யபோன் - செம்போன். வாணர் சடையினர், வீணையர், கையர் என்று இயைக்க. மழலைவீணை :- ‘மிக நல்ல வீணை’. (4 112. 7. 6. 35. 2) நல்வீணை.

95. ஏறினை - விடையை. ஏழை - பேதை; உமாதேவி. ‘ஏழை பங்காளன்’ ‘எருதேறி ஏழையுடனே...என் உளமே

விடந்திகழ் கெழுதரு மிடற்றர் வெள்ளைநீ
றுடம்பழ கெழுதுவர் முழுதும் வெண்ணிலாப்
படர்ந்தழ கெழுதரு சடையிற் பாய்புனல்
கிடந்தழ கெழுதிய கெடில வாணரே. 96

விழுமணி யயிலெயிற் றம்பு வெய்யதோர்
கோழுமணி நெடுவரை கோளுவிக் கோட்டினார்
செழுமணி மிடற்றினர் செய்ய வெய்யதோர்
கெழுமணி யரவினர் கெடில வாணரே. 97

புகுந்த அதனால் நல்ல'. கூறினர் - பங்கினார். வேதமும் அங்கமும் கூறினார். கூறினர் - வகுத்தார். 'அங்கமும் ஆறினர்' என ஆறங்கமும் கூறியதால் 'நால் வேதமும்' என்றுரைத்துக்கொள்க. ஆறு இடுசடையர் - கங்கையை அடக்கி யிட்ட சடையினார். பக்கமும் கீறின உடையினர் - பக்கத்திலும் கிழிந்த உடை கொண்டவர்.

96. விடம் - பாற்கடலின் எழுந்த நஞ்சு. (விஷம்). திகழ் மிடறு. கெழுதருமிடறு கெழுதரல் - விளக்கம் செய்தல். மிடற்றர் - திருநீலகண்டர். வெள்ளை நீறு உடம்பு அழகு எழுதுவர் :- திருவெண்ணீற்றால் திருமேனியைச் சிவப்பொலிவு எழ எழுதுவர். வெள்நிலாப் படர்ந்து அழகு எழுதருசடை - வெள்ளை நிலாவொளிப் பிறையணிந்து படர்ந்து, அழகு இத் தன்மையது என்று எழுதுதற்கு அரிய சடை. சடையினழகு எழுத அரியது. வெண்ணிலாச் சடை. படர்ந்து எழுதருசடை. நிலாப்படர்ந்து எனினும் பொருந்தும். புனல் - கங்கை. அழகு எழுதிய கெடிலவாணர். வாழ்நர் என்பதன் மரூஉ 'வாணர்'. வீழ்நர் (வீணர்).

97. மணி - நாகரத்நம். அயில் - கூர்மை. எயிறு - பல். கோளுவி - கோளுத்தி; கோள்ளச் செய்து. கோட்டினார் - செழும்மணி மிடற்றினார் - செழித்த நீலமணி போலும் திருக் கழுத்துடையார். செய்ய அரவு. வெய்யதோர் அரவு.

குழுவினர் தொழுதெழு மடியர் மேல்வினை
தழுவின கழுவுவர் பவள மேனியர்
மழுவினர் மான்மறிக் கையர் மங்கையைக்
கெழுவின யோகினர் கெடில வாணரே. 98

அங்கையி லனலெரி யேந்தி யாறெனும்
மங்கையைச் சடையிடை மணப்பர் மால்வரை
நங்கையைப் பாகமும் நயப்பர் தென்றிசைக்
கெங்கைய தெனப்படுங் கெடில வாணரே. 99

கழிந்தவர் தலைகல னேந்திக் காடுறைந்
திழிந்தவ ரொருவரேன் றெள்க வாழ்பவர்
வழிந்திழி மதுகர மிழற்ற மந்திகள்
கிழிந்ததே னுகர்தருங் கெடில வாணரே. 100

98. குழுவினர் - கூட்டத்தினர். அடியர் மேல் தழுவின (பழ) வினைகளைக் கழுவித் தூய்மையாக்குவர். பவளம் போலும் திருமேனியர். 'பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்'. மேல்வினை ஆகாமியமும் ஆம். மழுவும் மானும் ஏந்திய மழுவினர். மான்மறி - மான் கன்று. மங்கையைக் கெழுவின யோகினர் - யோகத்திற்கும் மங்கையைக் கெழுவியதற்கும் நெடுவாசி உண்டேனும், யோகியா யிருந்து உயிர்க்கு யோகமுத்தியை உதவுதலும், போகியாயிருந்து போகத்தைப் புரிதலும் வல்ல முழுமுதல்வர் என்றது இது.

99. அங்கை - அழகிய கை. உள்ளங்கை எனல் பொருந்தாது. அனல் எரி - வெம்மை வீசுந் தீ. கையில் அனல் தலையிற் புனல். கங்கை தலைமேல் மணக்கும். மால்வரை நங்கை - பெரிய பனிமலையிற் றோன்றிய உமை. பாகம் - இடப்பால். 'தென்திசைக் கெங்கையது எனப்படும் கெடிலம்' என்றதால், கெடில நதியின் சிறப்புணர்க. கங்கை, கெங்கை.

100. கழிந்தவர் தலை கலன் - மாய்ந்த மலரவர் தலையாகிய பிச்சைப் பாத்திரம்; பிரமகபாலம். நூறு கோடி பிரமர்களும் ஆறு கோடி நாராயணர்களும் ஏறுகங்கை மணலினும் எண்ணில்லாத இந்திரர்களும் ஆகிய முத்திறத்தரும் அழிவோர். யானே

கிடந்தபாம் பருகுகண் டரிவை பேதுறக்
கிடந்தபாம் பவளையோர் மயிலேன் றையுறக்
கிடந்தநீர்ச் சடைமிசைப் பிறையு மேங்கவே
கிடந்துதா னகுதலைக் கெடில வாணரே. 101

வெறியுறு விரிசடை புரள வீசியோர்
பொறியுறு புலியுரி யரைய தாகவும்
நெறியுறு குழலுமை பாக மாகவும்
கிறிபட வுழிதர்வர் கெடில வாணரே. 102

ஈறிலாதவன் எனத் தோற்றும் பொருட்டு, பிரம விட்டுணு தலைகளைக் கோத்த மாலைக்கலனும் ஆம். காடு - சுடுகாடு. உறைந்து - தங்கி. 'இழிந்தவர் ஒருவர்' என்று இகழ்ந்து பேச வாழ்பவர். மது வழிந்து இழியும். அம்மதுவைச் செய்வது பற்றி வண்டுகட்கு 'மதுகரம்' என்று பெயர் ஆயிற்று. வண்டுகள் மிழற்ற (- பாட). மந்தி (- பெண் குரங்கு)கள். கிழிந்த தேன் :- கூட்டின் கிழிவு தேனுக்காயிற்று. கூடுகிழிந்து ஒழுகுந் தேன் என்றவாறு. நுகர்தல் மந்திவினை. வழிந்திழிதேன் என்றும் இயைக்கலாம்.

101. சிவபிரான் திருமேனியிலே பாதி கொண்டுள்ள அரிவை (உமையம்மை)யார் அத்திருமேனியிற்கிடந்த பாம்பைத் தம் அருகே கண்டு பேதுற்றார். தலைமேற் கிடந்த பாம்பு அம்மையாரை ஒரு மயில் என்று கருதி ஐயுற்றது. அப்பாம்பைக் கண்டு பிறையும் ஏங்கிற்று. அரிவை பேதுறச் சடைமிசைக் கிடந்த பாம்பு. பாம்பு அவளை மயில் என்று ஐயுறச் சடை மிசைக் கிடந்த பிறை. பிறை ஏங்கக் கிடந்து நகு(கின்ற) தலை. தலையையுடைய கெடிலவாணர். இவ்வாறு கொள்ளாக்கால் முடிபு விளங்காது.

102. வெறி - மணம். சடை புரள வீசி உழிதர்வர் என்று இயைக்க. உழிதரல் - ஆடல். 'உழிதருகால் அத்த' (திருவாசகம்). பொறி - புள்ளி. உரி - தோல். அரையது - இடுப்பிலுள்ளது. கிறி :- பொய். (எள்ளும்நிலை). (படிறு - பொய்). 'கிறிபேசிப்படிறுடித் திரிவீர்' நெறி - குழலின் நெறிப்பு.

பூண்டதே ரரக்கனைப் பொருவின் மால்வரைத்
தூண்டுதோ ளவைபட வடர்த்த தாளினார்
ஈண்டுநீர்க் கமலவாய் மேதி பாய்தரக்
கீண்டுதேன் சொரிதருங் கெடில வாணரே. 103

திருச்சிற்றம்பலம்

103. பூண்ட - பூண்களை யுடைய பொருஇல் மால்வரை - ஒப்புயர்வில்லாத பெரிய திருக்கைலை. தூண்டு - எடுத்த. ஈண்டு - கூடிமிக்க. மேதிபாய்தர நீர்க் கமலவாய் கீண்டு தேன் சொரிதரும் கெடிலம்.

சிவசம் பத்திடைத் தவஞ்செய்து திரியும் பத்தியிற் சிறந்தவர்
திலகன் கற்றசிட் டன்வெந்தோளிர் திகழும் பைம்பொடித் தவண்
கவசம் புக்குவைத் தரன்கழல் கருதுஞ் சித்தனிற் கவன்றிய [டணி
கரணங் கட்டுதற் கடுத்துள களகம் புக்காற் கவந்திய
ணவசம் புத்தியிற் கசிந்துகோ டழுகண் டத்துவைத் தளித்தன்
னனகன் குற்றமற் றபண்டித னரசெங் கட்கோர்பற்றுவந்தறு
பவசங் கைப்பதைப் பரஞ்சுடர் படினன் றித்தனைத் தொடர்ந்தவர்
பசுபந் தத்தினைப் பரிந்தடு பரிசொன் றப்பணிக்கு நன்றுமே.

நன்றுமாதரநாவினுக்கரைசடிநளினம்வைத்துயினல்லா
லொன்றுமாவதுகண்டிலமுபாயமற்றுள்ளனவேண்டோமா
லென்றுமாதியுமந்தமுமில்லதோரிகபரத்திடைப்பட்டுப்
பொன்றுவார்புகுஞ்சுழலிற்புகேம்புகிற்பொறியிலேம்புலனோடே.

## 11. பொது

### நமச்சிவாயத் திருப்பதிகம்

### திருப்பதிக வரலாறு

'நீடிய வேலைகலக்கும் நெடுமந்தரகிரி போல ஓடி உழறி மிதித்துப் பிளந்து நாடிப் பலரையும் கொன்று நகரம் கலங்கி மறுக ஆகுலம் ஆக்கிய யானை, ஆண்ட அரசை வணங்கி அஞ்சி மீண்டு, ஏவியவரையே கொன்று சென்றது. அது கண்ட அமணர் ஆராய்ந்து, கல்லோடு கட்டிக் கடலிற் பாய்ச்ச முடிவுசெய்து, அரசன் இசைவு பெற்று, அவ்வாறே கடலருகில் ஏகினர். நாவுக் கரசரும் திருநின்ற செம்மையுள்ளம் சிறப்பச் சென்றார். மன்னவன் சொன்னபடி முடித்து அப்பதகர் மீண்டனர். உறைப்புடைய மெய்த்தொண்டர், எந்தையை ஏத்துவன் என்று சிவனஞ்செழுத்தும் துதித்துப் பாடியது இந் நற்றமிழ்ப்பாமாலைத் திருப்பதிகம்'.

பண் காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே. 104

104. சொல் துணை வேதியன் - சொல்லளவான வேத முதல்வன். வேதம் (வாசகம்) சொல்வடிவாகத் தான் அச்சொல் லின் (வாச்சியப்) பொருள் வடிவானவன் என்க. சோதி-பரஞ் சோதி. வானவன்-அழியாத வீட்டுலகினன். பொன்துணை திருந்து அடி - பொன்னடி, துணையடி, திருந்தடி எனப் பொலிவும் இணையும் செம்மையும் கொள்க. அடி பொருந்தக் கைதொழ லாவது உள்ளத்தை அடியும் அடியை உள்ளமும் பற்றக் கொண்டு, கை குவித்து வணங்குதல். கையொன்று செய்யக் கருத்தொன்று எண்ணலாகாது. கல்துணைப் பூட்டி - கல்லைத் துணையாகப் பூணச்செய்து. கல்லோடு கட்டி என்றபடி. கடலிற் பாய்ச்சினும் கை அடிதொழ நற்றுணையாவது திருவைந் தெழுத்து. கடலிற் பாய்ச்சிய மெய்ம்மை, 'கல்லினோடெனைப் பூட்டி அமண்கையர், ஒல்லை நீர்புக நூக்க என் வாக்கினால்,

பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கல மரனஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலங் கோட்ட மில்லது
நாவினுக் கருங்கல நமச்சி வாயவே. 105

நெல்லு நீள்வயல் நீலக்குடியரன், நல்ல நாமம் நவிற்றி உய்ந்தேன் நன்றே ' என்றுள்ள வாய்மையால் உண்மையாதல் உணர்க. இருவினையாகிய பாசத்தால், மூன்று மலமாகிய கல்லோடு கட்டியிருத்தலின், மாறி மாறி வருகின்ற பிறவிப் பெருங்கடலில் வீழ்கின்ற அறிவிலுயிர்களும் பேரின்பக் கரை ஏறிட அருளும் அத்தகைய பேராற்றல் உடைய திருவைந் தெழுத்து, உணர்வுருவான நாவுக்கரசரை மிகச் சிறிய இவ் வுவர்க் கடலில் ஒரு கல்லின்மேல் ஏந்திக் கரையேற்றிடலை உரைத்தல் வேண்டுமோ? ' இருவினைப் பாசம் மும்மலக்கல் ஆர்த்தலின் வருபவக் கடலில்வீழ் மாக்கள் ஏறிட அருளும்மெய் யஞ்செழுத்து அரசை இக்கடல் ஒருகல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ ' (பெரியபுராணம். 1394). திருவைந்தெழுத்து இருவினைக் கயிற்றால் மலங்களாகிய மூன்று கல்லோடு கட்டி வீழ்த்தப்பெற்ற அஞ்ஞானியரைப் பவசாகரத்தினின்று முத்திக் கரையிலேற்றும் ஆற்றல் வாய்ந்தது. அப் பிறவிப் பெருங் கடலிலே மூன்று கல்மேல் ஏறிய அஞ்ஞானத்தரையும் முத்திக் கரை ஏற்ற வல்ல மெய்யெழுத்து, மெய்ஞ்ஞானத்தரசை இச் சிறு கடலிலே ஒரு கல்லின் மேல் ஏற்றியிடலைச் சொல்லாதே அறியலாம். ஒரு கல் முக் கல் என்னும் நயம் அறியாமல், ' இருவினைப் பாசமும் ' எனப் பிரித்துப் பொருந்தா உரை யெழுதியிருத்தல் சேக்கிழார் திருவுள்ளத்துக்கு ஏலாது. ' நற்றுணை ' என்பதற்கு ' நற்றுள் ' என்றதற்குப் பரிமேலழகர் உரைத்ததுரைத்துக்கொள்க (7. 35. 8. பேரூர்ப். 809).

105. அருங்கலம் (108) விலைமதிப்பரிய ஆபரணம். பூக் களுக்குத் தாமரையும், ஆக்களுக்கு அரன் ஆடும் ஐந்தும், (பஞ்சகவ்வியமும்) கோக்களுக்குக் கோட்டமில்லாமையாகிய செப்பமும், நாக்களுக்குத் திருவைந்தெழுத்தும் பெறற்கரிய பூணுகும். ஆகவே, பூக்களுள் தாமரையும், ஆக்களுள் அரன்

விண்ணுற வடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகிலவை யொன்று மில்லையாம்
பண்ணிய வுலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே. 106

ஆடும் அஞ்சினையும் அளிக்கும் ஆவும், கோக்களுள் கோட்ட மில்லாத செங்கோல் வேந்தும் போல நாக்களுள் நமச்சிவாய என்னும் நாவே நன்று என்றவாறும். தாமரை பிற மலர்கட்கும், அரன் ஆடும் ஐந்தும் ஆவிற்கும், வளைவிலியாம் பெருமை மன்னற்கும் அருங்கலமாதல் போல, நாக்கிற்கு நமச்சிவாய மந்திரமே அருங்கலம் என்றலும் பொருந்தும். கோட்டம் - வளைவு, சலம். ' வளைவிலியாய் எல்லார்க்கும் அருள் செய்வானை ......திருவாலவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேனுனே (திருத்தாண்டகம்.) பின்னர்ச் ' சலமிலன் ' என்றலும் உணர்க.

106. 'விண் உற அடுக்கிய விறகு' என்றதால், அடுக்கிய அவ்விறகின் மிகுதியையும், ' வெவ்வழல் உண்ணிய (விறகு அடுக்கிற்) புகில் அவை (- அவ்விறகுகள்) ஒன்றும் இல்லையாம் என்றதால், தீச்சிறிதாயினும் எல்லா விறகுகளையும் எரித் தொழிக்கும் பெருவன்மையுடைமையையும் உணர்த்தி உவமம் ஆக்கினார். பலவுலகிற் பலபிறவிற் பண்ணிப்பண்ணிப் பயின்ற பாவங்களை யெல்லாம் பொருந்தி நின்று அவை அற்றொழிய ஒழிக்கவல்லது திருவைந்தெழுத்து. இது பொருள் (உவமேயம்). விண்ணுற அடுக்கிய விறகு போல்வது பண்ணிய உலகினிற் பயின்ற பாவம். அவ்விறகின் வெவ்வழல் உண்ணிய புகில் அவை ஒன்றும் இல்லையாதல் போல்வது திருவைந்தெழுத்து அப் பாவத்தை நண்ணி நின்று அறுக்கப் பாவம் முற்றும் அற்றொழிதல். விறகு × பாவம். அழல் × அஞ்செழுத்து. உண்ணிய புகில் :- சிவஞானபோதக் காப்புரையில் " அருளிய என்பது செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். ' உண்ணிய புகில் ' என்றாற்போல " என்றுள்ளதுணர்க. பண்ணியவுலகு - செய்வினைக்குத்தக அமைத்த புவனம். ' புண்ணிய சாத்திரப் பேய்கள் ' என்புழிப்போல மாயாகாரியம் என்றதாம்.

இடுக்கண்பட் டிருக்கினு மிரந்தி யாரையும்
விடுக்கிற் பிரானென்று வினவுவோ மல்லோம்
அடுக்கற்கீழ்க் கிடக்கினு மருளி னுமுற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சி வாயவே. 107

வெந்தநீ றருங்கலம் விரதி கட்கெலாம்
அந்தணர்க் கருங்கல மருமறை யாறங்கம்
திங்களுக் கருங்கலந் திகழு நீண்முடி
நங்களுக் கருங்கல நமச்சி வாயவே. 108

107. அடுக்கல் - மலை. இராவணனைப்போல ஒரு மலைக் கீழ் அகப்பட்டுத் துன்புற்றுக் கிடந்தாலும், நாம் அடைந்த இறப்பச்சத்தாலான மெய்ந்நடுக்கத்தைக் கெடுத்துக் காப்பது திருவஞ்செழுத்து. 'அந் நமச்சிவாயம் சொல்ல வல்லோம் நாவால்' அதனால், 'அஞ்சுவது யாதொன்றும் இல்லை' 'இடுக்கண் பட்டு இருக்கினும், சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சுடைமையின் நீங்கி யாரையும் இரந்து என் துன்பத்தை விடுக்கின் நீ பிரானே என்று கூறி நீக்கு எனக் கேட்போம் அல்லோம். அண்டர் வாழ்வும் அமரர் இருக்கையும் கண்டு வீற்றிருக்கும் கருத்து ஒன்றும் இலோம். நாம் உற்ற நடுக்கத்தை அருளின் கெடுப்பது. திருவைந்தெழுத்து.

108. விரதிகள் - விரதத்தை மேற்கொண்டவர்கள். "விரதங்களாவன இன்ன அறம் செய்வல் எனவும் இன்ன மறம் (பாவம்) ஒழிவல் எனவும் தம் ஆற்றலுக்கு ஏற்ப வரைந்து கொள்வன." (திருக்குறள், துறவறவியலின் தொடக்கம், பரிமேலழகருரை) அவ்விரதங்கள், வினைமாசு தீர்ந்து அகக் கருவிகள் தூயன ஆதற்பொருளனவாய்க் காக்கப்படுவன. விரதங்களால் உள்ளம் முதலிய உட்கருவிகள் தூயன ஆயவழி உணர்வு தோன்றும். அவ்வுணர்வு மெய்யுணர்வு. அவ்வுணர் வால் உணரப்பெற்றது மெய்ப்பொருள். அப்பொருளை மறவாது நினைப்பூட்டுவது திருவெண்ணீறு. அதனால், விரதிகட்கெல்லாம் திருவெண்ணீறு அருங்கலம் ஆயிற்று. திருநீறணிந்த விரதி களைக் கண்ட நல்வினை, யாவர்க்கும் மெய்ப்பொருளை நினைப் பிக்கும் அருட்பொருள் ஆதலின், அதனினும் அருங்கலம்

சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கலால்
நலமில ஞூடோறு நல்கு வானலன்
குலமில ராகிலுங் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே. 109

பிறிதில்லை. 'பராவணம் ஆவது நீறு' ஆதலின், அதுவே வண்ணம் நிறைந்த அருங்கலம். அந்தணர்க்கு அருமறைகளும் ஆறங்கங்களும் அருங்கலம். பிறைக்கு இறைவன் திருமுடி அருங்கலம். முடிக்குப் பிறை கலம் என்னுமை அறிக. சைவர் எல்லோரையும் உளப்படுத்தி நங்களுக்கு நமச்சிவாய மந்திரம் அருங்கலம் என்றருளியது உளங்கொளத் தக்கது. 'சைவ பூடணம்' எனப்படும் திருநீறும் கண்டிகையும் புறத்தருங்கலம். திருவைந்தெழுத்து நாவினுக்கும் அகத்தினுக்கும் உயிர்க்கும் உணர்விற்கும் உரிய அகத்தருங்கலம் (105).

109. சலம் - கோட்டம். 'சலங்கெடுத்து நலங் கொடுக்கும் நம்பி' (6-20-6). (குறள் 660) என்புழித் 'தீயவினைகள்' என்றும் 'சலம் பற்றி' (956) என்புழி 'வஞ்சனை' என்றும் உரைத்தார் பரிமேலழகர். முன்னதன் விளக்கத்தில், முன் ஆக்கம்போல் தோன்றிப் பின் அழிவே பயத்தலால் அவை (அத் தீயவினைகளில்) சலம் எனப்பட்டன என்றும் உரைத்தார். வெளியே காணப்படுதற்கு வேறுக உள்ளே இருப்பது சலம் என்பர் வடமொழிப் புலவர். சிவஞானபாடியத்தில், 'சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன் ஆதல்' என்னும் திருவெண்பா உரைக்கண், தம்பால் அடைக்கலம் எனச் சார்ந்தாரைக் காப்பது உத்தமராயினூர்க்குக் கடன்மையாகலான், முதல்வன் தன்னைச் சார்ந்தவரையே பாதுகாப்போன் ஆகியும் அதுபற்றிக் கோட்டம் உடையன் அல்லனுய்த் தன்னைச் சார்ந்து தன்னடிப் பணியின் நிற்கவல்ல அடியார் தானேயாய் நிற்குமாறு நிறுவீ, அவர்க்கு வரும் ஆகாமிய வினையைக் கெடுத்து, அது செய்ய வல்லரல்லாத பிறர்க்கு வரும் ஆகாமிய வினையை அவர்க்குக் கொடுப்பன் என்றும், "சாராதாரை ஒழித்துச் சார்ந்தாரையே பாதுகாப்பது நடுவுநிலை அன்று என்பாரை நோக்கி அவ்வாறு கொள்ளினும் அஃது ஆண்டைக்குத் தலைமைக் குணம் ஆவது அன்றி இழுக்கு அன்மையான் அமையும் என்பார், சார்ந்தாரைக்

காத்தல் தலைவர் கடன் எனப் பழமொழி எடுத்துக் காட்டி, உண்மையான் நோக்கவல்லார்க்கு அது நடுவு நிலைமையே கோட்டம் அன்று என அறிவுறுத்துவார், சார்ந்தடியார் தாம் தானுகச் செய்து பிறர் தங்கள் வினை தான் கொடுத்தல் என வேறுபடுத்துக் காட்டினுர். சார்ந்தடியார் தாம் தானுகச் செய்து பிறர் தங்கள் வினை தான் கொடுத்தல் உண்டு என்பதூஉம் அது நடுவுநிலைமையே கோட்டம் அன்று என்பதூஉம் ஏனைச்சமயத் தார்க்கும் உடன்பாடாகலின், அஃது ஈண்டைக்கு உவமை ஆயிற்று'' என்றும் உரைத்தருளினமை உணர்க. 'சலமிலனுய்' எனத்தொடங்கும் சிவஞானசித்தியையும் அதனுரையையும் ஈண்டு உணர்க. சங்கரன் - 'சுகத்தைப்பண்ணுகின்றவன்' (சிலப்பதி காரம். நாடுகாண்காதை :- 186. அடியார்க்கு நல்லாருரை) சம் - சுகம், இன்பம். கரன் - செய்பவன். சார்ந்தவர்க்கு அலால் நலம் இலன் - ஞானத்தால் தனை அடைந்தவர்க்கே அவர்தம் இருவினை யும் நீக்கிப் பேரின்ப நலம் அருள்வோன். சலம் என்பதன் விளக்கத்தில் ஈதும் அடங்கும். 'தயாமூல தன்மம் என்னும் தத்துவத்தின்வழி நின்று தாழ்ந்தோர்க்கெல்லாம் கொடுக்கும் நலம்' (6-20-6) சார்ந்தோர்க்கே உண்டு. நாள்தோறும் நல்குவான் நலன் :- 'இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை' 'என்றும் இன்பம் பெருகும் இயல்பு.' (12. முடிவு). 'நெல்லு நீள்வயல் நீலக்குடி யரன்நல்ல நாமம் நவிற்றியுய்ந்தேன் நன்றே' என்புழியும் ஈண்டுப் பிரிப்பதுபோற் பிரித்துப் பொருள்கொள்ளல் வேண்டும். குலம் இலர் ஆகிலும் :- 'ஆவுரித்துத் தின்றுஉழ லும் புலையரேனும்' என்றபடி. குலத்துக்கு :- தொண்டர்குழாத் த்துக்கு. 'குலங்கள் என்செய்வ குற்றங்கள் என்செய்வ' (5-77-8) 'ஏகம்பம் மேவினுரைத் தலையினுல் வணங்க வல்லார் தலைவர்க்குத் தலைவர்' 'புனிதனைப் போற்றுவார் மனிதரிற் றலையான மனிதரே' 'தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் உண்டு கொலோ' 'குலவராக குலம் இலரும் ஆக குணம் புகழுங் கால் உலகினல்லகதி பெறுவரேனும்......அடிகள் பாதம் நினைவார்களே' (2-115-6) 'பெருங் குலத்தவரோடு பிதற்றுதல் பெருமையே' (7-72-11) என்ற குலமே சைவ குலம்; சிவத்தொண்டக்குலம். ''நலம் இலராக, நலமது உண்டாக, நாடவர் நாடறிகின்ற குலம் இலராக, குலமது உண்டாக,'' அவற்றைப் பொருட்படுத்தாமல் அவரது தவத்தையே பொருட் படுத்தி அத் தவம் பணி குலச்சிறை குணமே அடியார் திறத்தில்

வீடினு ருலகினில் விழுமிய தொண்டர்கள்
கூடினு ரந்நெறி கூடச் சென்றலும்
ஓடினே னோடிச்சென் றுருவங் காண்டலும்
நாடினே னுடிற்று நமச்சி வாயவே. 110

அனைவர்க்கும் வேண்டும். அதற்கு ஏற்பதோர் நலம் ' சங்கரன் ' என்னும் பெயர்க்கண் முதற்சொல்லின் பொருளாம். சங்கரன் தரும் நலனெல்லாம் அவனது திருவைந்தெழுத்து நல்கும். ' கொல்வாரேனும் ' (3324) ' நரகம் ஏழ்புக நாடினர் ஆயினும் ' (3326) என்று அருளிய ஆளுடையபிள்ளையார் திருப்பாடல் களையும் இங்குக் கருதுக.

110. வீடினுர் உலகினில்-உலகப்பற்றினை விடுதலுற்ருர். உலகு - கட்டு. வீடினுர் - விடுதலைச் செய்தார். உலகினில் விடுதலே வீடுபெறும் நெறி. விட்டவர் விழுமியோர். விட்டது உலகினை. பெற்றது பேரின்பத்தை. விள்ளற்பாலதனை விண்டு அதனுல் வருந்துன்பத்தினீங்குதல் வீடு. கொள்ளற்பாலதனைக் கொண்டு அதனுல் வரும் இன்பத்தைப் பெறுதல் பேறு. (சிவஞானபாடியம். சூ. 9) அது பெற உலகப் பற்றை விட்டுச்சென்ற நெறியே ' அந்நெறி ' எனச் சுட்டப்பட்டது. சிவநெறி சருவலோக பிரசித்தமாதலின் அதனை ' அந்நெறி ' எனல் வழக்கம் (112. பார்க்க.) ' முழுமுதலை அந்நெறியை அமரர் தொழும் நாயகனை ' (17. 51 81). அதைக் கூடினுர் விழுமிய தொண்டர்கள். கூடிச் சென்றவுடனே, யானும் ஓடினேன். ஓடிச்சென்று உருவம் கண்டேன். கண்டவுடன் நாடினேன் நமச்சிவாய மந்திரத்தை. நாடிய என்னை அதுவும் நாடிற்று. உருவம் காண்டல்:- திருவைந்தெழுத்துள் ஒவ்வொன் றும் ஒவ்வொரு பொருளைக் குறித்தலின், அதனதன் உருவம் தெரிந்து கணித்தல் வேண்டும். ' உருவாய்த் தெரிந்துன்றன் நாமம் பயின்றேன் ' (918) பயின்ற நாமம் ' சிவாயநம என்று நீறணிந்தேன் ' என்பதிற் காண்க. நாடிற்று :- சிவகதி தரக் கருதிற்று.(112) முன்னெறி(சிவன்),அம்முக்கண்ணன்றன்நெறி, அந்நெறியே சரணுதல் திண்ணம் அடைந்தவர் எல்லார்க்கும் நன்னெறி என்று பின் உள்ளதும் (112) உணர்க. ' வீடினுர் உலகினில் ' என்றதற்கு உலகில் இறந்தார் என்றுரைத்து.

இல்லக விளக்கது விருள்கெ டுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே. 111

'செத்தாரே கெட்டார் காணங்கள்' (திருக்களிற்றுப்படியார். 47) என்னுங் கருத்துணர்த்தியதாகக் கொள்ளலும் பொருந்தும்.

111. இல்-வீடு. உயிர்க்குத்துச்சில் உடல் ஆதலின் 'இல்' என்றார். அக விளக்கு - உள்ளே விளங்கி விளக்கும் விளக்கு. அகமாகிய இல்லின் விளக்குமாம். புறத்திருளைப் போக்கும் விளக்கேபோல் அகத்திருளை அழிப்பது. சொல்லின் அகத்தும் நின்று விளக்குவது. சோதி உள்ளது. ஏனைய சோதிகளுக்கு அச்சோதி முன் இல்லாது பின் வந்ததாம். திருவைந்தெழுத்தின் சோதி முக்காலத்தும் உள்ளது. உயிர்கள் எண்ணில்லாதன. அவற்றின் அகமெல்லாம் விளக்கும் ஒளியாதலின் 'பல்லக விளக்கு' ஆயிற்று. பலரும் - எல்லாச் சமயத்தாரும். காண் பது - தம்மையறியாமலே காண நிற்பது. அழியாதது. யகாரம், நகாரம், மகாரம் மூன்றில் மற்றெல்லாச் சமயங்களும் அடங்கி விடுகின்றன. வகாரம் சிகாரம் இரண்டும் சைவத்திற்கே உரிய தனிச் சிறப்புடையன. நல்லக விளக்கு :- ஞானரூபத்தினுள்ளே விளங்கும் விளக்கு. ஞானம் நிறைந்த அகமே நல்லகம். 'ஆன்மாப் பாசம் ஒருவி ஞானக் கண்ணினிற் பதியைச் சிந்தை நாடுக' என விதித்த விதியின்படியே ஓதும் திறத்திற்குரியது முத்தி பஞ்சாக்கரம். அஞ்செழுத்து ஓதும் முறையால் ஒரு குறியின் வைத்து அன்றி முதல்வனைக் காண்டல் செல்லாது.' (சிவஞானபோதம். சூ. 9. அதி. 3. பேருரை பார்க்க.) சுட்டறிவு இறந்து ஞானத்தான் ஞேயத்தைக் கண்டு எங்கும் தானாக நிட்டை கூடிய வழியும், தோன்றுதோட்டுவரும் ஏகதேசப் பழக்கம் பற்றிப் புறத்தே விடயத்திற் சென்று பற்றுவதாகிய தன் அறிவை அங்ஙனம் செல்லாது மடக்கி, அகத்தே ஒரு குறியின் கண் நிறுத்தி, நிட்டைகூடிநிற்கும் முறைமையை அஞ்செழுத்து ஓதும் முறைமையில் வைத்துக் கண்டு சிந்திக்கச் சிந்திக்கச் சிவதரிசனத்தை விளக்குவதால் 'விளக்கு' எனப்பட்டது. வாதனைவயத்தால், புறத்திற்சென்று பற்றும் ஏகதேச அறிவைப்

முன்னெறி யாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறி யேசர ணாதல் திண்ணமே
அந்நெறி யேசென்றங் கடைந்த வர்க்கெலாம்
நன்னெறி யாவது நமச்சி வாயவே　　112

பற்றறத் துடைத்துப் பூரண நிலையிற் கொண்டு செல்வதால், அது வாசனையை நீக்குதற்குரிய சிறந்த சாதனமாம். (மேற்படி பேருரை). உணர்விற்கு விடயமாகக் காணப்படும் பசுபாசங் களோடு ஒப்ப வேறு காணப்படாத பதிப்பொருளாகிய முதல் வனைத் தன் அகத்தின்கண் அஞ்செழுத்து ஓதும் முறையால் காணும் ஆயின், கோலை நட்டுக் கயிற்றினாற் சுற்றிக் கடையவே விறகினின்றும் தோன்றும் தீயைப்போல அம் முதல்வன் அங்குத் தோன்றி, அறிவிற்கு அறிவாய் விளங்கிநிற்கும் ஆதலின், ' நல்லக விளக்கு ' எனப்பட்டது.

112. முன்னெறியாகிய முதல்வன் என்றும் முன்னெறி யாகிய முக்கண்ணன்நெறி என்றும் இயைக்கலாம். முதல்வனை ' முன்னிலை ' ' முன்னெறி ' என்றும் முன்னோர் குறித்தனர். ' நெறியே நின்மலனே ' (7. 24. 9) என்று அழைக்கப்பெறும் முதல்வனை ' முன்னெறி ' என்றலில் வியப்பென்னை ? முக கணன்றன் நெறியே சரணும். அது சரணுதல் திண்ணம். உயிர்கட்கு வீடுபேறு உண்டாக வேண்டின், முன்னெறியாகிய முதல்வன்றன் நெறியே சரணுதல் திண்ணம். அந்நெறியே சென்று அங்கு அடைந்தவர் எல்லார்க்கும் நமச்சிவாயவே நன்னெறியாவது. ' நன்மையெனப்படுவன எல்லாவற்றுள்ளும் சிறந்த நன்மை எனப்படுவது வீடுபேறு என்ப. அதனைத் தலைப்படுதற்கு ஏதுவாய்ச் சிறந்த நெறியாகலின், ஞானம் ' நன்னெறி ' எனப்பட்டது. (மாபாடியம். சூ. 8) ஞானம் வேறு நமச்சிவாயம் வேறு ஆயினும், ஞானம் விளங்கி ஞேயம் காட்சிப் பட்ட இடத்தும் பயிற்சி வயத்தான் முன்னாத் தான் நோக்கிய பாசத்தை நோக்கும் நோக்கமாகிய வாசனையை நீக்குதற்குரிய சாதகம் ஆகிய திருவைந்தெழுத்தும் ஞானத்திற்கு ஒப்பாதலின் 'நன்னெறி' யாயிற்று (மாபாடியம். சூ. 9). ' காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார்தமை நன்னெறிக்கு உய்ப்பது ' ஆதலின், அதுவே ' நன்னெறி 'யாவது என்றுரரேனலுமாம்.

மாப்பிணை தழுவிய மாதோர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்
தேத்தவல் லார்தமக் கிடுக்க ணில்லையே. 113

திருச்சிற்றம்பலம்

113. மாதியலும் பாதி - முதல்வனுடைய இடப்பாகம். அப் பாகத்துக் கையில் உள்ளது மான்பிணை. மாதோரு பாகமே மானேந்திய பாகம் ஆதலின், 'தழுவிய' என்னும் எச்சம் 'மாதோர் பாகத்தன்' என்ற பெயர் கொண்டது. 'மான்பிணை தழுவிய மாது' எனக் கருதி உவமம் ஆக்கலும் கூடும். பூப் பிணை - மலர்மாலை. நாப்பிணை தழுவிய நமச்சிவாயப்பத்து - நாவைப் பிணைந்து தழுவிய நமச்சிவாயப் பதிகம். பத்தும் ஏத்த வல்லார்க்கு இடுக்கண் இல்லை. மேல் (108) முன்னீரடியும், பின்னீரடியும் வெவ்வேறெதுகையானவாறு, இதன் ஈற்றடி வேற்றெதுகைத்தாயினும், இரண்டனுள்ளும் இனவெதுகை அமைந்திருத்தல் காண்க. (79இல் உள்ள எதுகையை உணர்க). இடுக்கண் - (இடுங்கு கண்) துன்புற்றபோது கண் இடுங்குதல் துன்பக் குறி. 'இடுங்கு கண்' என்பதன் மரூஉவே இடுக்கண்.

## திருநாவுக்கரசு நாயனார் புராணம்

திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டி னெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச் சீர்பரவ லுறுகின்றேன் பேருலகி
லொருநாவுக் குரைசெய்ய வொண்ணுமை யுணராதேன். 1

தொன்மைமுறை வருமண்ணின் றுகளன்றித் துகளில்லா
நன்மைநிலை யொழுக்கத்து நலஞ்சிறந்த குடிமல்கிச்
சென்னிமதி புனையவளர் மணிமாடச் செழும்பதிகள்
மன்னிநிறைந் துளதுதிரு முனைப்பாடி வளநாடு. 2

## 12. திருப்பழனம்

### திருப்பதிக வரலாறு

திருநாவுக்கரசர் திங்களூர் சென்று, முன் காணுதிருந்தும் கலந்த அப்பூதியடிகளது பெருங்கேண்மையை உணர்ந்து, விருந்து கோள இசைந்தார். திருநாவுக்கரசு என்னும் தமது திருப்பெயரைப் பூண்ட செல்வன் உற்ற நஞ்சு நீக்கினுர். அனைவரது துயரும் நீக்கினுர். வருந்தும் அவர் மனைப் புகுந்தார். விருந்தமுது செய்தருளி விருப்புடன் மேவியிருந்த நாளில், செப்பருஞ்சீர் அப்பூதி பின் செல்லத், திருப்பழனப்பதி புகுந்து, பெருங்காதலோடும் பெருமான் கழல் சார்ந்து வணங்கிப் போற்றிசைத்து, திங்கட் கண்ணிச் செஞ்சடையார் திருவடிக்கீழ் அடைமாலைச் சீலம் உடைய அப்பூதியடிகளை நடைமாணச் சிறப்பித்து, நன்மைபுரி தீந்தமிழின் பாடியருளிய தொடைமாலைத் திருப்பதிகம் இச் சொன்மாலை.

பண் பழந்தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள் சொல்லீரே
பன்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழனத்தான்
முன்மாலை நகுதிங்கண் முகிழ்விளங்கு முடிச்சென்னிப்
பொன்மாலை மார்பனென் புதுநலமுண் டிகழ்வானே. **114**

114. தலைவி தன் கலவி நல னுகர்தலை வெறுன் தலைவன் எனல். குயிலைத் தூதுவிடுதல். சொல்மாலை - சொல் வரிசை. சொல்லிய வரிசையில் தவருது கூவுதல் குயிலுக்கு இயல்பு. அத் தவருமைக்கு ஏது பயிற்சி பயிற்சி ஈண்டு உளத்திற்கும் உடற்கும் உரியதன்று. உரை (நா)ப் பயிற்சியாகிய நவிற்சியின் மேற்று. 'மறை நவில் அந்தணர்' (புறம். கடவுள் வாழ்த்து) என்பதன் குறிப்புணர்க. வரி வண்டுகளின் பல வரிசையை மாலை என்ருர். வண்டு மிழற்றும் பழனம்; இடப் பெயர் கொண்ட எச்சம். மாலை நகு திங்கள். முகிழ் - முதன்முதலிற் பிறை, மேற்கில் மாலையிலேதான் காணப்படும். முடி - கங்கைச் சடை முடி. சென்னி அம் முடியுடையது. சென்னி - தலை. பொன் மாலை மார்பன்; பழனத்திறைவன். புது நலம் :- கன்னிமை

கண்டகங்காண் முண்டகங்காள் கைதைகா ணேய்தல்காள்
பண்டரங்க வேடத்தான் பாட்டோவாப் பழனத்தான்
வண்டுலாந் தடமூழ்கி மற்றவனேன் றளிர்வண்ணம்
கோண்டநா ளானறிவான் குறிக்கோள்ளா தோழிவாளே.115

கழியும் பொழுதையது. ஓகாரம் எதிர்மறைப் பொருட்டு தூது செல்வார்க்கு அழகு இன்றியமையாததன்று. சொல்லினிமையே வேண்டுவது. அதனுல், நிறம் பற்றிய அழகு இன்மை கருதாது, சோன்மாலை பயில்கின்ற குயிலினங்களைச் சொல்லுமாறு வேண் டினுள். குரு அருளும் மெய்யுணர்வில் நோக்கம் வைத்துச் சிடன் வணங்குதல் போன்று, குயின்மொழியில் உளங்கொண்டாள்.

115. கண்டகம் - நீர்முள்ளி. முண்டகம் - கடல்முள்ளி. ‘முண்டகக் கோதை யொண்டொடி மகளிர்’ (புறம். 24). கடுஞ்சூல் முண்டகம் - முதற்சூலையுடைய கழிமுள்ளி (சிறுபாண் 148). ‘மணிப்பூ முண்டகத்து மணல்மலி கானல்’ (மதுரைக். 96. 7.) ‘அணிமலர் முண்டகத் தாய்பூங் கோதை’ (நற்றிணை. 125) ‘முண்டகக் கோதை நனைய......நின்றேன்.’ (ஐங்குறு நூறு. 121) கைதை - தாழை. பண்டரங்க வேடத்தான் :- பண்டரங்கம் என்னும் கூத்துக்குத் தக்க கோலத்தைக் கோண் டவன். (கலித்தோகை கடவுள் வாழ்த்து.) பாட்டு ஓவாப் பழனத்தான் :- பழனத்தின் சிறப்பு. அடியார் பலர் பாட்டும் புள்ளோலி முதலிய பாட்டும் ஓவாமையும் பழனத்தான் சிறப் பாயின், சாமகானமும் ஆம். தடம் - நீர் நிலை. வண்டுலாவ லால் மலர்த் தடம் என்றுயிற்று. தளிர் வண்ணம் போலும் வண்ணத்தைக் கோண்ட நாள் கோண்டான் அறிவான். அதைக் குறிக்கோள்ளா திரான். கேளாதவற்றைக் கேட்பன போலக் கோண்டு கூறியது இது. ‘ஒட்டிய உறுப்புடையதுபோல் உணர்வுடையதுபோல் . .... . சோல்லாமரபினவற்றோடு கெழீஇச் செய்யா மரபின் தோழிற்படுத் தடக்கி’ (தோல். போருளியல். 2) என வருதலின்பாற்பட்டது. ‘வாராமரபின.........என்னுமரபின’ என்னும் எச்சவியற் சூத்திரம் ஈண்டுப் போருந்தாது. புனல் விளையாட்டின் நிகழ்ச்சி நினைந்து கூறியது.

மனைக்காஞ்சி யிளங்குருகே மறந்தாயோ மதமுகத்த
பனைக்கைம்மா வுரிபோர்த்தான் பலர்பாடும் பழனத்தான்
நினைக்கின்ற நினைப்பெல்லா முரையாயோ நிகழ்வண்டே
சுனைக்குவளை மலர்க்கண்ணாள் சொற்றூதாய்ச் சோர்வாளோ.

புதியையா யினியையாம் பூந்தென்றல் புறங்காடு
பதியாவ திதுவென்று பலர்பாடும் பழனத்தான்
மதியாதார் வேள்விதனை மதித்திட்ட மதிகங்கை
விதியாள னென்னுயிர்மேல் விளையாடல் விடுத்தானே. 117

116. மனைக் காஞ்சி - தோட்டத்தில் வளர்த்த காஞ்சி மரம். 'காஞ்சி' (நகர்) என்பது இம்மரத்தாற் பெற்ற பெயரே. குருகே மறந்தாயோ? வண்டே உரையாயோ? ஆற்றாமை அடுக்கிய தூது விடுக்கிய தூண்டிற்று. மதமுகத்த - மதம் பொழியும் முகத்தையுடைய. பனைக்கை - பனைபோலும் திரண்டுருண்ட பருங்கை. மா - யானை. உரி - தோல். பலர் - அடியர் பலர் பாடும் பழனத்தான் :- முற்பாட்டின் குறிப்பு உணர்க. நினைக்கின்ற நினைப்பெல்லாம் :- தலைவி நினைக்கின்ற எல்லா நினைப்பும் நிகழ் - விளக்கம். சுனைக்குவளை மலர்க்கண்- சுனையிற் பூத்த குவளை மலர் போலுங் கண். 'சுனை' அடையால், கண்ணின் குளிர்ச்சி புலப்படும். தனக்குத் தூதாய்ச் சென்றவள் அவன்பாற்கொண்ட காதலாற் சோர்வாளோ என்று ஐயுற்றவாறும் சொற்சோர்வுபடுவாளோ என்றவாறும் ஆம். 'குருகு' - நெய்தல் நிலத்துப் புள். (கலி. 121. இ. வை. அ. ஐயர் பதிப்பு. பக்கம். 763-4 பார்க்க) 'கருங்கால் வெண்குருகு'. வண்டிருந்த குவளையைக் குவளைக்கண்ணி என்றதாகக்கொண்டு பொருள் கூறலும் பொருந்தும்.

117. புதியைஆய் இனியைஆம் பூந்தென்றல் :- தென்றல் ஆண்டுதோறும் போதரினும், வியர்த்தலால் ஆகும் வருத்தம் போக்கும் பொழுதெல்லாம், வருந்தும் உள்ளத்திற்கு புதுமையாய்த் தோன்றும். மென்காற்றுதலின் இன்காற்று என்பதில் ஐயம் இன்று. பூந்தென்றலாதலின், மணம் வீசுதலாலும் இனிமை உண்டாக்கும். 'கோயில் சுடுகாடு'. 'கள்ளி முதுகாட்டில் ஆடிகண்டாய்'. மதியாதார் - தக்கனும் அவன்

மண்பொருந்தி வாழ்பவர்க்கும் மாதீர்த்த வேதியர்க்கும்
விண்பொருந்து தேவர்க்கும் வீடுபேறாய் நின்றானைப்
பண்பொருந்த விசைபாடும் பழனஞ்சேர் அப்பனையென்
கண்பொருந்தும் போதத்துங் கைவிடநான் கடவேனே. 118

வேள்வியில் உதவியாய் இருந்தவரும் மதித்திட்ட - ஒரு பொருளாகக் கொண்டு வீரபத்திரத் திருக்கோலம் கொண்டு அழித்த. மதிகங்கை - மதிலையயும் கங்கையையும். விதியாளன் - தலைமேற் சூடி ஆள்பவன். 'விதி' ஈண்டுத் தலைக்கு ஆகு பெயர். 'தலைவிதி' என்னும் வழக்குணர்க. விதி (ஊழ்வினை) எனக் கொண்டு நியமநெறியாளன் எனப் பொருந்தக் கூறலுமாம். திருமுறையில் இறைவனை 'விதி' எனக் கூறுதல் பயின்ற ஆட்சி. 'விதியோப்பான்' (5. 3. 6) 'நல்வினையும் தீவினையும் ஆயினான்' (6. 11. 2) 'விதியாய் விளைவாய் விளைவின் பயனாகி' (1. 30. 1) 'விதியானை' (2 16. 2) 'விதியுமாம் விளைவாம்' (3. 48. 2) உயிர்மேல் விளையாடல் :- காதலின்ப விளையாடலும் உயிர்க்கே உரியது. அந்தக்கரண முதலியவற்றின் நுகர்ச்சியன்று. பேரின்ப விளையாடல் கருவி கரணங்கடந்த நிலையில் உயிர்க்குத் தனியாட்சியாயுரியது (6. 90. 4. பார்க்க).

118. மண்ணவர்க்கும், மிக்க தூய்மையுடைய மறையவர்க்கும், விண்ணவர்க்கும் துன்பவீடும் இன்பப்பேறுமாகி (110) நிலவும் முதல்வனை ; பண்ணோடு பொருந்த இசை பாடும் திருப்பழனத்தில் எழுந்தருளிய அப்பனை, யான் இறக்கும் பொழுதிலும் கைவிடக் கடவேனல்லேன். கண்பொருந்தல் :- இறப்பினை உணர்த்தி நின்ற மங்கல வழக்கு. 'போதத்து' என்பது, பாவலர் சிலராட்சியில், இரண்டு நிகழ்ச்சி ஒரு பொழுதில் ஒருங்கு நிகழ்தலைக் குறிக்கின்றுழி நிற்கின்றது. ஈண்டும் கண்பொருந்தலும் (உயிர் நீக்கமும்) வழிபாட்டைக் கைவிடலும் ஒருசேர நிகழ்வன. அத்தகைய நிலையிலும் அப்பனைக்கைவிடாத அப்பர் நம் அப்பர் என்றுணர்க. "வேயுயர்கானில் தானும் தம்பியும் மிதிலைப் பொன்னும் போயினன் என்றான் என்ற பொழ்தத்தே ஆவி போனான்" என்ற கம்பர் கருத்தை (அயோத். தைலமாட். 60) ஒட்டி அச்சொற் பொருளை நோக்குக. பொழுதடுத்து என்பதன் மரூஉவே பொழ்தத்து, போதத்து என்பன. 'மண் பொருந்தி' எனத் தொடங்கும் திருப்பாடலைச் சிவபூசை முடிவிற் சொல்லிவருதல் சைவரது வழக்கம்.

போங்கோத மால்கடலிற் புறம்புறம்போ யிரைதேரும்
சேங்கால்வேண் மடநாராய் சேயற்படுவ தறியேனுன்
அங்கோல வளைகவர்ந்தா னணிபோழில்சூழ் பழனத்தான்
தங்கோல நறுங்கோன்றைத் தாரருளா தோழிவாளே. 119

துணையார முயங்கிப்போய்த் துறைசேரும் மடநாராய்
பணையார வாரத்தான் பாட்டோவாப் பழனத்தான்
கணையார விருவிசும்பிற் கடியரணம் போடிசெய்த
இணையார மார்பனேன் னேழினலமுண் டிகழ்வாளே. 120

119. போங்குகின்ற ஓசையை உடைய பெரிய கடலில், பின்னே சென்று இரையைத் தேர்கின்ற செய்ய காலுடைய வெள்ளிள நாரையே, இனிச் செயற்படுவது யாது என்று நான் அறியமாட்டாதேன் ஆனேன். அழகிய சோலை சூழ்ந்த திருப் பழனத்து முதல்வன் என் அழகிய திரண்ட வளைகளைக் கவர்ந் தான். தன் அழகிய நறிய கொன்றை மாலையை அருளாமலிருப் பானோ? (அருள்வான்). புறம் புறம் (6.26.7) 'புறம் புறந்திரிந்த செல்வமே' (திருவாசகம்) 'பின்பினே திரிந்து' (600) எனப் பிறண்டும் வருதல் அறிக. 'தங்கோல......கோன்றைத்தார்' என்பதில், 'தன்' என்னும் ஒருமை எதுகை நோக்கித் திரிந்தது. 'நாமார்க்குங் குடியல்லோம்' என்பதில், 'தாம் ஆர்க்கும் குடியல்லாத் தன்மையான சங்கரன்' என்றுழிச் சங்கரன் என்னும் ஒருமையும் தாம் என்னும் பன்மையும் மயக்கமல்ல. 'தான்' என்பதே ஆண்டு எதுகை நோக்கித் திரிந்த தேன்க. ஒழிவானோ - நிற்பானோ? 'ஒழிதல்' - நிற்றல். 'ஆறன் மருங்கிற் குற்றியலுகரம் ஈறுமெய் ஒழியக் கெடுதல் வேண்டும்' (தொல். 469).

120. நாராய். இணையாரமார்பன் என் எழில் நலம் உண்டு இகழ்வானோ? இகழான் என்றவாறு. துணைப் பறவையை உள்ளம் நிறைவுறக் கூடிச் சென்று துறையை அடையும் இளநாரையே, பெரிய ஆரவாரத்தோடு பாட்டு ஓவாமல் இசைக் கும் திருப்பழனத்திறைவன்; பெருவானிற் காவற் கோட்டை யாகிய மூன்றூரைக் கணைகளுக்கு ஒழிவு நிரம்ப அவற்றைத் தொழிற்படுத்தாது (சிரித்தோ விழித்தோ) பொடியாக்கியவன்.

கூவைவாய் மணிவரன்றிக் கொழித்தோடுங் காவிரிப்பூம்
பாவைவாய் முத்திலங்கப் பாய்ந்தாடும் பழனத்தான்
கோவைவாய் மலைமகள்கோன் கொல்லேற்றின் கொடியாடு
பூவைகாண் மழலைகாள் போகாத பொழுதுளதே. [டைப்

புள்ளிமான் பொறியரவம் புள்ளுயர்த்தான் மணிநாகப்
பள்ளியான் றொழுதேத்த விருக்கின்ற பழனத்தான்
உள்ளுவார் வினைதீர்க்கு மென்றுரைப்ப ருலகெல்லாம்
கள்ளியே னுனிவர்க்கென் கனவளையுங் கடவேனோ 122

இணைந்த ஆரம். 'இணைந்த மலராற் செய்த கோதையுமாம்.' (கலித்.) ஆரம் (மாலை) பூண்ட மார்பன். (நீர்த்துறை) சேர்தல் இரை தேர்தற் பொருட்டு. பணை - பருமை. ஈண்டு மிகுதிப் பொருட்டு. வயலுமாம். ஆரவாரத்தான் - 'ஆன்' ஒடுவுருபின் பொருட்டு; ஆரவாரத்தினன் என்றும் பொருத்தலாம். கணையை ஆளாமையால், ஆர்தல் (தொழிற்படாது) பொருந்துதல் என்னும் பொருளதாயிற்று. இணை ஆரம்; கணை உண்ண எனலுமாம்.

**121.** கூவை - திரள். மணி - முத்து முதலிய பலவும் **ஆம்.** வரன்றி - வாரி. காவிரியாகிய பூம்பாவை. வாய் முத்து என்றது இருபொருளது. திருப்பழனம் காவிரிப்பாய்ச்சலுடையது. கோவைவாய் :- உவமத்தொகை. 'கோவ்வைச் செவ் வாய் இக் கொடியிடை' (திருக்கோவையார்) மலைமகள் - பார்வதி தேவியார். கொல்லேறு ; சாதியடை. ஏற்றின் கொடி (இடபத்து வசம்). கொடியாடைமேலிருக்கும் பூவை. 'மழலை' ஆகுபெய ராய்ப் பூவையையே குறித்தது. போகாதபொழுது உளது :- பிரிவாற்றாமையாற் பொழுது நீட்டித்தற்குறிப்பு. பொழுதுபோதல் என்னும் உலக வழக்கிற்கு மாறாகப் போகாதபொழுதும் உளதோ என்றுளுமாம். 'போதுபோய்ப் புலர்ந்ததன்றே' (736) பூவை - நாகணவாய். மழலை ஆகுபெயர். கூவை :- புறம், 29. 275. மதுரைக். 142. மலைபடு. 137. 422. சிலப். காட்சிக். 42. தமிழ்ச்சொல்லகராதி. 920.

**122.** பழனத்தான் உள்குவார் உள்கிற்றெல்லாம் உடன் இருந்து அறிந்து, அவர் வினைகளைத் தீர்த்து இன்பம் விளைப்பான் என்று உலகோரனைவரும் சொல்கின்றனர். கள்ளியேனுன

வஞ்சித்தேன் வளைகவர்ந்தான் வாரானே யாயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம் பரந்தார்க்கும் பழனத்தான்
அஞ்சிப்போய்க் கலிமெலிய வழலோம்பு மப்பூதி
குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே. 123

திருச்சிற்றம்பலம்

நான் வினை தீரப் பெருமையே அன்றி, இத் தலைவனுக்கு என் கனத்த வளையும் (இழக்கக்) கடவேனோ? புள்உயர்த்தான் - அன்னப் பறவையை எழுதிய கொடியெடுத்த நான்முகன். மணிநாகப் பள்ளியான் - மாணிக்கத்தையுடைய பாம்பணைமேல் துயிலும் திருமால். அந்நால்வரும் தொழுது ஏத்த இருக்கின்ற பழனத்தான்? புள்ளிமானையும் பொறியரவத்தையும் தொழுது ஏத்த? பொறி - படப்புள்ளி. அரவம் - பாம்பு. புள்ளிமானும் பொறியரவமும் இருக்கின்ற பழனமோ? மான்விடுதூதோ? மானும் அரவும் (கொண்டு) இருக்கின்றவனென்றும் கொள்ளலாம். பிரிவாற்றுமையால் வளையும் சுமையாயிற்று. 'வளை கவர்ந்தான்' என்று முன்னும் (119) பின்னும் (123) கூறியதால், இழக்கக்கட வேனோ என்றதாகக் கொள்க.

123. என்வளைகளை வஞ்சித்துக் கவர்ந்த பழனத்தான் வாராமல் என்னை இடர்ப்படுத்துவானே ஆனாலும், சேவடியாய்! கோடு இயை என்று இயைக்க சேவடியாய் என்றது கூடற்றெய்வத்தை, எல்லாத் தெய்வங்களும் சிவனடி வணங்குவனவே ஆதலின், அதனை அவ்வாறு விளித்தாள். பஞ்சின் மெல்லடியும் சிறகும் உடைய அன்னப்புள் பரந்து ஒலி செய்யும் பழனம். திருப்பழனத் திறைவன் சேவடி. அப்பூதியடிகளது குஞ்சி (தலைமுடி)ப் பூவாய் நின்ற சேவடி. கலி அஞ்சிப் போய் மெலிய அழல் ஓம்பும் அப்பூதி :- சிவபூசையின் ஓர் அங்கமான சிவாக்கினி காரியத்தை நாடோறும் வழாது புரிந்து, நாட்டில் வறுமை இல்லாதவாறு செய்த செம்மையர் என்பது குறித்தது. அகத்திணைத் துறைகளுள், கூடலிழைத்தல் என்று ஒன்றுண்டு. "கூடலிழைத்தல் என்பது தலைமகள், இம்மணற்குன்றின்கண் நீத்து அகன்ற வள்ளலை உள்ளத்தை நெகிழ்த்து இவ்விடத்தே தரவல்லையோ எனக் கூடற்றெய்வத்தை வாழ்த்திக் கூட்லிழைத்து வருந்தாநிற்றல்" (திருக்கோவையார் உரை. 186.)

'ஆழிதிருத்தும் புலியூர் உடையான் அருளின்அளித்து
ஆழிதிருத்தும் மணற்குன்றின் நீத்துஅகன்றார் வருகஎன்று
ஆழிதிருத்திச் சுழிக்கணக்கு ஓதிநையாமல் ஐய
ஆழிதிருத்தித் தரக்கிற்றி யோஉள்ளம் வள்ளலையே.'

'ஐய என்றது கூடற்றெய்வத்தை' (மேற்படி உரை). கூட லிழைத்தல் :- பெரியதோரு வட்டமாகக் கோடு கீறி, அதன் உள்ளே சிறு சுழிகளை அளவிடாது சுழித்து, அவற்றை இரட் டைப்பட எண்ணி, ஒற்றைப்படாதுளதோ என்று நோக்கல்; மிஞ்சாதேல், தலைவன் விரைவில் வந்தணைவான் என்பது மரபு. பிரிந்து வருந்தும் தலைவிக்குரியது இப் பண்டைய வழக்கு. " கூடலாவது வட்டமாகக் கோட்டைக் கீறி அதுக்குள்ளே சுழி சுழியாகச் சுற்றுஞ் சுழித்து இவ்விரண்டு சுழியாகக் கூட்டினால் இரட்டைப்பட்டால் கூடுகை, ஒற்றைப்பட்டால் கூடாமை என்று சங்கேதம் " (நாச்சியார் திருமொழி. பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்து அரும்பதம்). இவ்வாறு அன்றிக், கண்ணை மூடிக்கொண்டு கீறிய கோடு, எழுவாய் இறுவாயிரண்டும் கூடி யிருப்பின், வந்து கூடுவன், விலகின் வாரான் என்பதுமுண்டு. இத் துறைக்கு எடுத்துக்காட்டுக்கள் பற்பல உள. அவற்றுள் இங்கு உணரத்தக்கவை :-

'பாட லாக்கிடும் பண்ணொடு பெண்ணிவள்
கூட லாக்கிடும் குன்றின் மணற்கொடு
கோடல் பூத்தலர் கோழம்பத் துள்மகிழ்ந்
தாடுங் கூத்தனுக் கன்புபட் டாளன்றே.' (5. 64. 4)

'நீடு நெஞ்சுள் நினைந்துகண் ணீர்மல்கும்
ஓடு மாலினோ டோண்கொடி மாதராள்
மாட நீள்மரு கற்பெரு மான்வரில்
கூடு நீஎன்று கூட லிழைக்குமே.' (5. 88. 8)

'இசையும்தன் கோலத்தை யான்காண வேண்டி
வசையில்சீர்க் காளத்தி மன்னன்—அசைவின்றிக்
காட்டுமேற் காட்டிக் கலந்தென்னைத் தன்னோடுங்
கூட்டுமேற் கூடலே கூடு.'

(கைலைபாதி காளத்திபாதி. 90). கூடற்சுழியில் வழுநேரின் வாரான் என்று தோன்றிற்று. தோன்றவே, 'வாரானே ஆயிடினும் கோடு இயை சேவடியாய்' எனக் கூடற்றெய்வத்தை

வேண்டினாள். (நான்முகன் திருவந்தாதி 39. திருவிருத்தம் 34; கம்பர். உண்டாட். 33. விபீடணப். 28; அகநா. 351; கலி. நெய்தல். 25. உரை; ஐந்திணை ஐம்பது. 43; சீவக. 1037-38; கலிங்கத். 51; நைடதம். கைக். 6; சீகாழிக்கோவை. 308; அம்பிகாபதி. 322; குலோத்துங்க. 258; மாறன். 286 என்னும் இடங்களிலும் இத்துறைக் கருத்துண்டு) 'சேவடியாய் கோடு இயை' என்பதற்கு, 'சேவடியை அடைந்த அநுபவம் உடையவனே, மலையை அடைவாய்' என்றுரைத்து, இருள் வரின் தலைவன் வருவான்; பிறை விரைவில் மேற்கு மலைக்கண் இயைந்து மறையின், இருள் பரவும் எனக் கருதியும், பிறையே மறையாயேல், மீண்டும் சிவனடிக்கீழே தேய்ப்புறுவாய் என்று அச்சுறுத்தியும் நின்றதாகக்கோள்ளலும் ஆகும். 'தக்கன்றன் வேள்வியினில் சந்திரனைத் தேய்த்தருளி'யதால், அவனைச் சேவடியாய்' என்று விளித்தாள். அடியார்க்கு முடிப்பூ. அல்லார்க்குத் தேய்ப்பு. முடிமேற் கிடக்கற்பாலை நீ. அடிக்கீழ்த் தேய்ப்புண்டாய். இனி, இனிதே உற எண்ணுவையேல், மலைக்கோடு இயைவாய் என்றுருளுமாம். 'மணிநிற மையிருள் அகல நிலாவிரிபு கோடு கூடுமதியம் இயலுற்றுருங்கு' என்புழி (பதிற். 31 :- 11-2)க் கோள்ளும் போருள் வேறு. அதற்குள்ள பழைய குறிப்புரையை யுணர்ந்துரைத்தல் போருந்தும். மதி கோட்டின்கண் நிலவும், பிறை கோடுகூடின் இருளும் பரவும்.

புனப்பண்ணை மணியினொடும் புறவினறும் புதுமலரின்
கனப்பேண்ணி றிரைசுமந்து கரைமருங்கு பெரும்பகட்டேர்
இனப்பண்ணை யுழும்பண்ணை யெறிந்துலவி யெவ்வுலகும்
வனப்பேண்ண வரும்பேண்ணை மாநதிபாய் வளம்பெருகும். 3

காலெல்லாந் தகட்டுவரால் ; கரும்பெல்லாங் கண்போழிதேன் ;
பாலெல்லாங் கதிர்ச்சாலி ; பரப்பெல்லாங் குலைக்கமுகு ;
சாலெல்லாந் தரளநிரை ; தடமெல்லாஞ் செங்கழுநீர் ;
மேலெல்லா மகிற்றூபம் விருந்தெல்லாந் திருந்துமனை. 4

கடைஞர்மிடை வயற்குறைத்த கரும்புகுறை போழிகோழுஞ்சா
றிடைதோடுத்த தேன்கிழிய விழிந்தோழுகு நீத்தமுடன்
புடைபரந்து ஞிமிறேலிப்பப் புதுப்புனல்போன் மடையுடைப்ப
உடைமடையக் கரும்படுகட் டியினடைப்ப வூர்கள்தோறும் 5

## 13. திருவையாறு

### திருப்பதிக வரலாறு

ஆளும் நாயகன் கயிலையில் இருக்கை கண்டு அல்லால் மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன் என மறுத்தருளியபோது, 'கயிலையிலிருந்த அம்முறைமையில் நம்மைத் திருவையாற்றில் நீ காண்' எனப் பணித்தருளினார் விண்ணிலே எழுந்தருளிய வேதநாயகனார். அந்த ஏற்றினார் அருளைத் தலைமிசைக்கொண்டு போற்றிப் பாடி, அஞ்செழுத்தோதி, அணிகுளத்தில் முழுகி, ஐயாற்றில் ஒருவாவியில் உலகெலாம் வியப்ப எழுந்தார். திருவருட் பெருமையும் தம் பெறலரும் பேறும் எண்ணிப் பாடியது இத் திருப்பதிகம். இதிற் கைலைநாயகன் முன்னிலை. ஐயாறர் படர்க்கை.

பண் பழந்தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

விடகிலே னடிநாயேன் வேண்டியக்கா லியாதொன்றும்
இடகிலே னமணர்கள்த மறவுரைகேட் டலமந்தேன்
தொடர்கின்றே னுன்னுடைய தூமலர்ச்சே வடிகாண்பான்
அடைகின்றே னையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. 124

**124.** ஐயாறர்க்கு-திருவையாற்றப்பனார்திருவடிக்கு. அடி நாயேன், விடகிலேன் - விடமாட்டேன். பொருட்பற்றை விடகிலேன். பிறர் யாதேனும் வேண்டியபோது யாதும் ஒரு சிறிதும் இடமாட்டேன். அமணரது (தருமோபதேசம்) அற வுரையைக் கேட்டுத் தெளிவில்லாத கருத்தினனாய்க் கலங்கினேன். உன்னுடைய தூய தாமரை மலர் போன்ற செய்ய திருவடியைக் கண்டு வழிபடத் தொடர்ந்து அடைகின்றேன். இம் மீளாஅடிமையாகின்ற நான் உமக்கே ஆளாய் (விட்டதால்)இனிப் பிறவிப் பெருந் துன்பத்தினின்றும் உய்தி பெற்றேன். 'ஐயாறர்' என்பதிலே உள்ள ரகரமெய் ஒற்று, பலரறி சொல்லிற்குரியதன்று. ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவி (உயர் சொல்) ஆதலின், ஐயாறனாகிய நினக்கு ஆளாய் உய்ந்தேன் என்று முன்னிலைக் கேற்பவுரைக்கலுமாம். ஈற்றுப் பாடலிரண்டும், 'ஐயாறர்' என்பது சிவபிரானையே குறித்தலின், முன்னைய எட்டுப் பாடலிலும், 'ஐயாறர்' என்பது அடியார் முதலியோரைக் குறித்தலும் கூடும் என்பது பொருந்தாது.

செம்பவளத் திருவுருவர் திகழ்சோதி குழைக்காதர்
கொம்பமருங் கொடிமருங்குற் கோல்வளையா ளொருபாகர்
வம்பவிழு மலர்க்கொன்றை வளர்சடைமேல் வைத்துகந்த
அம்பவள வையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. 125

நணியானே சேயானே நம்பானே செம்பொன்னின்
துணியானே தோலானே சுண்ணவெண் ணீற்றானே
மணியானே வானவர்க்கு மருந்தாகிப் பிணிதீர்க்கும்
அணியானே யையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. 126

125. செம்பவளம் இயைபின்மை நீக்கிய அடை. ‘ செம் பவளத் திரள் போல்வான் ’ (2332). ‘ பவளம் போல் மேனியிற் பால் வெண்ணீறு. ’ ‘ எரிபவள வண்ணன்காண் ’ (2198) திகழ் சோதி - விண்மீன் போல விட்டு விட்டொளிரும் ஒளியை உடைய (குழை) ‘ குழைக்காதர் ’ - ‘ குழைத்திகழ் காதினன் ’ (1020) ‘ குழையார் திருத்தோடு காதிற் கண்டேன் ’ (2857) ‘ குழைகோள் காதினர் ’ (1450) (கொம்பமருங்) கொடி மருங் குலுக்கு (- இடைக்கு) ஒப்பு. கோல் வளையாள் - அழகிய வளையலை அணிந்த அம்மையார். வம்பு - மணம். அம்-அழகிய. பவள ஐயாறர்:- ஆற்றிற்குப் பவளம் அடையாதலும் ஐயாறர்க்கு ஒப்பாதலும் பொருந்தும். ‘ சோதிக்குழை ’ எனலும் பாடம்.

126. நணியானே - அருகிலிருப்பவன். சேயன் - சேய்மை யில் (தொலைவில்) இருப்பவன். அணியன் சேயன். நண்ணற் கெளியவன் அரியவன் என்னும் இருதிறமும் உடையவன் என்றவாறு. ‘ காண்டற்கு அரிய கடவுள் கண்டாய் கருது வார்க்கு ஆற்ற எளியான் கண்டாய் ’ (2319) ‘ நணுகாதார் ’ ‘ நண்ணூர் ’ முதலியவற்றின் முதனிலையை உணர்ந்து, நணியான் ’ என்பதற்கு உரைத்துக்கொள்க. ‘ அடியார்க்கும் அண்டத்தார்க்கும் அணியவன்காண் சேயவன்காண் ’ (2573) ‘ வஞ்சனையால் அஞ்செழுத்தும் வழுத்துவார்க்குச் சேயானை ’ (2589) ‘ மெய்த்தவன்காண் மெய்த் தவத்தின் நிற்பார்க் கெல்லாம். ’ விருப்பிலா இருப்புமன வினையர்க்கு என்றும் பொய்த்தவன்காண் ’ (2614) ‘ மெய்யர் மெய்ந்நின்றவர்க்கு, அல்லாதவர்க்கு என்றும் பொய்யர் ’ (56) ‘ அஞ்சடக்கும்

ஊழித்தீ யாய்நின்று யுள்குவா ருள்ளத்தாய்
வாழித்தீ யாய்நின்றாய் வாழ்த்துவார் வாயானே
பாழித்தீ யாய்நின்றாய் படர்சடைமேற் பனிமதியம்
ஆழித்தீ யையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. 127

அடியவர்கட்கு அணியார்' (2623) 'அன்பாகி நின்றார்க்கு அணியாய் போற்றி' (2650) 'சேயவன்காண் நினையார்க்கு; சித்தம் ஆரத் திருவடியே உள்கி நினைந்தெழுவார் உள்ளம் ஏயவன்காண்.' (2730) 'பழித்தவன்காண் அடையாரை, அடைவார் தங்கள் பற்றவன்காண்.' (2732) 'மெய்யானைத் தன்பக்கல் விரும்புவார்க்கு, விரும்பாத அரும்பாவியவர்க்கு என்றும் பொய்யானை' (2756) 'துரிசறத் தொண்டு பட்டார்க்கு எளியானை, யாவர்க்கும் அரியான் தன்னை' (2756) 'பத்தர் பத்திக்குளேவானை அல்லாதார்க்குளேயாதானை' (2760) என்பவற்றால், ஈண்டுப் பொருள்கொள்ளும் ஆறு நன்கு விளங்கும். செம்பொன்னின் துணியானே - பீதாம்பரத்தவனே. (துணி, கிழி, ஆடை, அறுவை, வேட்டி முதலிய பலவும் ஒரு பொருட் பெயர்கள்.) பிணி தீர்க்கும் அணியானே :- ஆணவப் பிணி அகற்றி ஆட்கொள்ள உயிர்கட்கு உள்ளுயிராய்ப் பொருந்தியவனே. 'உள்ளுயிர்க் குயிராய்த் தெளிக்கும் அறிவு திகழ்ந்துளது.........திரிமலத்தே குளிக்கும் உயிர் அருள் கூடும்படி கோடி கட்டினனே.' (கொடிப் பாட்டு. 1) 'ஆரேனும் அடியவர் கட்கு அணியான்றன்னை' (2043) சுண்ணம்-பொடி. வானவர்-வீட்டுலகை நாடியவர். (2566) மருந்து - சிவஞானம் சிவானந்த அமிர்தமுமாம். பிணி - மும்மல நோய்ப் பிணி. நோதலால் நோய். பிணித்தலாற் பிணி. 'அணியான' எனலும் பாடம்.

127. ஊழித் தீயாய் நின்றாய் :- பிரளய காலாக்கினியாயிருந்து உலகங்களை அழிக்கும் அத்துணைப் பரியாய் ஆயினும், உள்கிநினைந்து எழுவார் உள்ளத்தில் உறையும் அத்துணை நுண்ணியனும் ஆனாய். 'பெரியதிற் பெருமையும் சிறியதிற் சிறுமையும் உரியது நினக்கே உண்மை பெரியோய் எனக்கு இன்று' (இருபா இருபஃது. 6) 'பரியர் நுண்ணியர்' (5. 27. 5) 'அணுவை, யார்க்கும் தெரியாத தத்துவனை... .....பெரியானை' (6.1.1) 'சிறியையாய்ப் பெரியையாய் நின்ற நாளோ' (6.24.6)

' அணுத்தரும் தன்மையில் ஐயோன் (நுண்ணியன்) காண்க. இணைப்பரும் பெருமையில் ஈசன் காண்க ' ' அண்டப் பகுதியின் .......விரிந்தன......அணுப்புரையச் சிறிய ஆகப் பெரியோன். (திருவாசகம். 3). " அண்டமோரணுவாம் பெருமை கொண்டு அணு ஓர் அண்டமாம் சிறுமை கொண்டு அடியேன் உண்ட ஊண் உனக்கு ஆம் வகை எனது உள்ளம் உள் கலந்து எழு பரஞ்சோதீ ! " (திருவிசைப்பா. 138) தீயாய் நின்றாய் எனினும் வாழ்த்துவார் வாயாகுகிக் குளிர்விக்கின்றாய். தீவண்ணனாயினும் செஞ்சடைமேல் வெண்மதியம் சூடினை. மகாசங்கார காலத்திலே 'ஊழிமுதல்வனாய்' நின்ற ஒருவன் அன்றி, ஏனைய கடவுளர் எல்லோரும் அவ்வொருவனிடத்தில்தான் ஒடுங்குதல்வேண்டும். அப்பொழுது, எல்லா வுலகங்களையும் அழிப்பது (ப்ரளயாக்நி) ஊழித்தீ. அத்தீயாய்ப் புறத்தே நின்றாலும் உள்குவார் உள்ளத்திலே (அகத்தே)யும் நிற்கும் ஈரியல்பும் வல்லான். இது புறத்தீ. வாழித்தீ என்பது உடம்பகத்துள் இருந்து உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத முத்தீ. உடலில் என்றும் முத்தீ உள்ளன.

प्राणाग्नय एवैतस्मिन् पुरे जाग्रति । गार्हपत्यो ह वा एषोऽपानो व्यानोऽन्वाहार्यपचनो यद्गार्हपत्यात्प्रणीयते प्रणयनादाहवनीयः प्राणः ॥

பிரச்நோபநிஷத். 4 :- 3. அபாநன் காருகபத்தியம். பிராணன் ஆகவனீயம். வியாநன் தாக்கிணாக்கினி. அவற்றால்தான் உடல் வாழ்க்கை உயிர்க்குள்ளதாகின்றது. உடம்பில் உயிர் இனிது வாழ்வதாயின், வாழவைத்தருளுங் கடவுளை வாழ்த்தும் அவ் வாழ்த்தும் வாயிலே அக்கடவுள் சொல்லுருவாய் நின்று வாழ்த்துவித்து வாழ்த்துவான். ' வாயானை மனத்தானை மனத்துள் நின்ற கருத்தானை '. உடம்பில் ஆகவநீயம், காருக பத்தியம், தாக்கிணாக்கினி என்னும் முத்தீ இருந்து உயிர்க்கு வாழ்வளிப்பதால் ' வாழித்தீ ' என்றார். அழிப்பது ஊழித்தீ. காப்பது வாழித்தீ. படைப்பது பாழித்தீ. பாழி - பெருமை. மாலும் அயனும் அஞ்சப் பெருகியதீ. ' நீண்ட மாலும் அயனும் வெருவ நீண்ட நெருப்பு ' (திருவாசகம். 440) ஆழியினி (கடலினி)ன்றெழும் நெருப்புருண்டை போல்வதாலும், ஒளி யுடைமையாலும், காதலர் பிரிவாற்றாமைத் துன்பத்தை வளர்க்குந்தீ எனலாலும் பிறை மதியம் ' ஆழித்தீ ' எனப்பட்டது. மதியமாகிய ஆழித்தீயைப் படர்சடைமேல் (உடைய) ஐயாறர் என்க. மதியமும் (செங்கதிராகிய) ஆழித்தீயும் என்றுமாம்.

சடையானே சடையிடையே தவழுந்தண் மதியானே
விடையானே விடையேறிப் புரமெரித்த வித்தகனே
உடையானே யுடைதலைகொண் டூருருண் பலிக்குழலும்
அடையானே யையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. 128

நீரானே தீயானே நெதியானே கதியானே
ஊரானே யுலகானே யுடலானே யுயிரானே
பேரானே பிறைசூடி பிணிதீர்க்கும் பெருமானேஎன்
றாராத வையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே 129

கண்ணானாய் மணியானாய் கருத்தானா யருத்தானாய்
எண்ணானா யெழுத்தானா யெழுத்தினுக்கோ ரியல்பானாய்
விண்ணானாய் விண்ணிடையே புரமெரித்த வேதியனே
அண்ணானை வையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. 130

எட்டுருவ (அட்டமூர்த்த)த்தில் இருசுடரும் அடங்குதல் காண்க. 'திங்களாய் ஞாயிறாகி' 'ஞாயிறும் தண்மதியும் ஆகி' 'பால் மதியோடாதியாய்.

128. சடையான்; சடைமேல் தவழும் குளிர்வெண் டிங்களான்; விடை (யின் மேல் வருவது) உடையான். விடை யேறித் திரிபுரம் எரித்த ஞான சொரூபன் 'முப்புரமாவது மும்மல காரியம்' என்பது தமிழ்ச் சிவாகமம் ஆகிய திருமந்திரம். உடையானே - சுவாமீ! ஊர் ஊர் - ஊர்தோறும். உண்பலிக்கு ஊர் ஊர் (ஊர்தோறும்) உழலும். அடையான் - எவ்வுயிர்க்கும் தானே சரணியன். உழலும் பொருட்டு அடையத்தக்கவனல்லன் எனலும் ஆம். 'அடை' முதனிலைத் தொழிற் பெயர்.

129. நீரும், நெருப்பும், நிதியும், செலவும் ஊரும், உலகும். உடலும், உயிரும் ஆயிருப்பவன். 'பிறைசூடி' என நெடிலாகக் கொள்க. 'பித்தாபிறைசூடி எனப்பெரிதாந் திருப்பதிகம்'(பெரிய). பிணி - மும்மலப்பிணி, ஊனுடற்பிணியுமாம். ஆராத ஐயாறர் - ஆர்வம் அடங்கப்பெறாது மேல்மேல் வளர்த்துவரும் நிலையில் என்னை ஆட்கொண்டருளும் ஐயாறப்பர்.

130. கண்ணும் மணியும் புறப்பார்வைக்குரியன. கருத்தும் அருத்தும் அகநோக்கத்திற்குரியன. அருத்து - நுகர்ச்சி.

மின்னானை யுருமானாய் வேதத்தின் பொருளானாய்
பொன்னானாய் மணியானாய் பொருகடல்வாய் முத்தானாய்
நின்னானை ரிருவர்க்குங் காண்பரிய நிமிர்சோதி
அன்னானே யையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. 131

அருந்து - அருத்து பொருந்து - பொருத்து. திருந்து - திருத்து. இவை அம் ஈறு உற்று அருத்தம், பொருத்தம், திருத்தம் என்றாகும். ‘அருத்தம்’ என்ற வடசொல் வேறு. எண்ணும் எழுத்தும் எழுத்தியல்பும் ஆனாய் என்பன, நாதம். விந்து, விந்து காரியங்களின் இயல்பு உணர்த்தியன. ‘எண்ணென்ப ஏனை எழுத்தென்ப’ என்ற குறட்பொருளும் ஆம். விண் - வெளி. முப்புரம் எரித்த மறையவன் சிவபிரான். அண்ணான் அவ் வையாறர்க்கு. யாவர்க்கும் அண்ணாதவன். ‘அண்ணலாகா அண்ணல்நீழல் ஆரழல் போலுருவம்’ (1. 49. 9.) ‘உடம் பெல்லாம் கண்ணாய் அண்ணா வெள்ளம்தான் பாயாதால்’ (திருவாசகம்.) அண் ஆன - அண்ணுதல் ஆகிய எனலும் அப்பரை நோக்கிற் பொருந்தும். அண் - அண்மை. அணிமையி லுள்ள ஐயாறர்க்கு.

131. மின்னும் அம்மின்னுருவும் ஆனாய். ‘மின்னுருவை விண்ணகத்தில் ஒன்றாய்’ (திருத்தாண்டகம்). ‘மின்னானை மின்னிடைச் சேர் உருமினானை வெண்முகிலாயெழுந்து மழை பொழிவான்றன்னை’ ‘அளவில் சோதி மின்னவன்காண் உருமவன்காண்’ ‘கடிய உருவமொடு மின்னே போற்றி’ என்ற தாண்டகப் பகுதிகளை நோக்கின், ‘உருவானாய்’ என்றது பிழை எனல் புலப்படும். வேதப் பொருள் :- வாசகம் வேதம். வாச்சியம் சிவபிரான். பொன் மணி முத்து ஆனாய் :- ‘இப் பொன்நீ இம்மணிநீ இம்முத்துந்நீ இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே.’ ‘பொன்னானாய் மணியானாய் நின்னானார் :- ‘யான் கடவுள்’ எனத் தனித்தனி நியானார். காண்பு-காண்டல். அரிய சோதி. நிமிர் சோதி. ‘காண்பினிய செழுஞ்சுடர்’ ‘நின்னாவார் பிறரன்றி நீயே ஆனாய்’ சோதிஅன்னான் - அனலுருவாகிய அவ்வளப்பரிய தன்மையன். ஒத்தவனுமாம்.

முத்திசையும் புனற்பொன்னி மொய்பவளங் கொழித்துந்தப்
பத்தர்பலர் நீர்மூழ்கிப் பலகாலும் பணிந்தேத்த
எத்திசையும் வானவர்க ளெம்பெருமா னெனவிறைஞ்சும்
அத்திசையா மையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. 132

கருவரைசூழ் கடலிலங்கைக் கோமானைக் கருத்தழியத்
திருவிரலா லுதைகரணஞ் செய்துகந்த சிவமூர்த்தி
பெருவரைசூழ் வையகத்தார் பேர்நந்தி யென்றேத்தும்
அருவரைசூ ழையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. 133

திருச்சிற்றம்பலம்

132. முத்து இசையும் புனல் பொன்னி மொய்பவளம் கொழித்து :- காவிரி முத்துக்களையும் பவளங்களையும் கொழித்து வருஞ் சிறப்புணர்த்திற்று. பத்தர் :- 'பத்துடையடியவர்' என்றதால், திருவடிப்பற்று (பத்து. மரூஉ) உடையவர். பத்தர் எனலுமாம். பலகால் :- காலை, மாலை, நடுப்பகல், நள்ளிரவு, ஒருபோது, இருபோது, முப்போதும், நாற்போதும், எப்போதும் எனத் திருமுறைகளிற் பயின்றவாறறிக. எத்திசையும் எம் பெருமான் என்று போற்றி வழிபடும் வானவர்கட்கு அத்திசையில் நின்று அருளும் ஐயாறர்க்கு ஆளாய் உய்ந்தேன். அத்திசையே யாகும் ஐயாறர் எனலும் ஆகும்.

133. கருவரை - பெரியமலை. கோமான் - கோமகன். கருத்து 'யானே எல்லாம் செய்ய வல்லேன்' என்னும் செருக்கு. திருவிரல் - திருக்காற் பெருவிரல். உதைகரணம் - உதைத்த லாகிய செயல். உகந்த - உயர்ந்த. சிவமூர்த்தி :- 'சிவனுய மூர்த்தி' (135). பெருவரைசூழ் வையகத்தார் :- பனிமலை முதலிய பெரிய மலைகள் சூழ இடைப்பட்டு நிலவும் மண்ணக மாகிய பரதகண்டத்துச் சிவனடியார்கள் நந்தி என்று பேரிட்டு ஏத்தும் ஐயாறர். அருவரை :- அளவிடற்கு அரிய மூங்கிற் காடு முதலியவை. ஐயாற்றைச் சூழ்ந்து மலைகள் உளவோ ?

# 14 பொது

## திருப்பதிக வரலாறு

திருநாவுக்கரசு நாயனர், பொய்கை சூழ்ந்த பூம்புகலூர்ப் புனிதரது மலரடியை வணங்கி, உருகும் உள்ளன்போடு நாள் தோறும் திருக்கோயிலின் முன்றிலில் உழவாரத் திருப்பணி செய்து பெருங்காதலுடன் வாழ்கின்ற காலத்தில் அளவில்லாத வண்டமிழ் மாலைகள் சூட்டி வழிபட்டார். அவற்றுள் ஒன்று இத் 'தசபுராணத்து அடைவு' எனப்படும் திருப்பதிகம். தசபுராணம் ;- 1. சைவ புராணம் 2. பவிடியபுராணம் 3. மார்க்கண்டேயபுராணம் 4. இலிங்கபுராணம் 5. கந்தபுராணம் 6. வராகபுராணம் 7. வாமனபுராணம் 8. மற்சபுராணம் 9. கூர்மபுராணம் 10. பிரமாண்டபுராணம் என்பன இப்பத்தும் சிவமகாபுராணங்கள். இப்பதிகத்துள் அப்பத்துப் புராணங்களுள் ஒவ்வொன்றன் கருத்தை உணர்த்தியதாகக் கோள்ள லாகாது. சிவபுராணங்களினுள்ள பதினொரு திருவிளையாடல்களை ஒவ்வொரு பாடலில் உணர்த்திய தாகக்கோள்ளல் வேண்டும். (சதமணிக்கோவை:-புராணம். 6. 18)

தசபுராணம்

பண் பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

பருவரை யொன்றுசுற்றி யரவங்கைவிட்ட
விமையோரிரிந்து பயமாய்த்
திருநெடு மானிறத்தை யடுவான்விசும்பு
சுடுவானெழுந்து விசைபோய்ப்
பெருகிட மற்றிதற்கோர் பிதிகாரமொன்றை
யருளாய்பிரானே யெனலும்
அருள்கொடு மாவிடத்தை யெரியாமலுண்ட
வவனண்டரண்ட ரரசே. 134

**134.** பருவரை - மந்தரமலை, மேரு எனலுமுண்டு. அரவம் - ' வாசுகி ' என்னும் பாம்பு. கை விட்ட இமையோர் :- நஞ்சு எழுதல் கண்டு அஞ்சிக் கடைதலைக் கைவிட்டு இரிந் தோடிய விண்ணவர். பிரானே இதற்கு ஒரு பிரதிகாரம்

நிரவேரலி வெள்ளமண்டி நெடுவண்டமூட
நிலநின்றுதம்ப மதுவாப்
படிமொரு தெய்வமெய்த விதுவொப்பதில்லை
யிருபாலுநின்று பணியப்
பிரமனு மாலுமேலை முடியோடுபாத
மறியாமைநின்ற பெரியோன்
பரமுத லாயதேவர் சிவனாயமூர்த்தி
யவனாநமக்கோர் சரணே. 135

(பிதிகாரம், கழுவாய்) அருள் செய்வாய் என்று வேண்டினர். அவர் வேண்டியவாறு நல்கியருள இறைவன் திருவுள்ளத்திற் பேரிரக்கம் கொண்டான். கொண்டு, 'கண்டாரைக் கொல்லும் நஞ்சு (2477) உண்டால் என்ன ஆகும் என்று கருதாமல் அதனை உண்டும் நின்றான். உண்ணற்கரிய நஞ்சை உண்ட தால், ஒரு தோழம் தேவர் எரியாமை விண்ணிற் பொலிய லாயினர் (1-74 7). திருநெடுமால் திருமேனியை ஒழித்தற் பொருட்டும், விண்ணைச் சுடும் பொருட்டும், எழுந்து விசையோடு சென்று பெருகிய அந்நஞ்சு, தன்னைக் கண்டு அஞ்சி ஓடிய இமையோர் முதலோரை எரிக்குமேயன்றித் திருநீலகண்டனை எரிக்குமோ? பிறரை எரியாமல் அந் நஞ்சினை உண்ட அவனே தேவதேவேசன். அண்டர் - தேவர். அண்டரண்டர் - தேவ தேவர். அண்டரண்டரரசு - தேவதேவேசன். சுற்றிக் கைவிட்ட இமையோர் இரிந்து ஆய், அடுவான் சுடுவான் எழுந்துபோய்ப் பெருகிட அருளாய் எனலும், கொடு, உண்ட அவனே அரசு என்க. ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. சரண் - புகல். வேலற்கரிய செயலாற்றி வென்ற திறம் தோன்ற வெற்றிக்கொடி தூக்கினன் என்ன; 'உண்ணற்கரிய நஞ்சை உண்டு ஒரு தோழம் தேவர் விண்ணிற் பொலிய அமுதம் அளித்த விடைசேர் கொடி யண்ணல்' என்று அருளினார் ஆளுடைய பிள்ளையார். (காஞ்சிப். மணிகண்டேசுரப். நோக்குக). 6. 55. 9. திருவாசகம். 34. 219.

135. பெரியோன் சிவனாய பரமுதலாய மூர்த்தி. தேவர் சிவன். மூர்த்தி என்க. நிரவொலி - நிரந்த (- பரவிய) ஓசை. ஓங்காரநாதம். 'நிரந்த பாய்மா - மாப்பரந்தன' (சிந்தாமணி. 1859). வெள்ளம் - பெருக்கு. மண்டி - மேற்சென்று. நெடு அண்டம் மூட - நீண்ட அண்டங்களை உட்படுத்த. தம்பமது

நிலம் நின்று அப் பரம் ஒரு தெய்வம் எய்த - தூண் நிலத்தே நின்று அதிலே அப் பரம்பொருளாகிய ஒப்பற்ற தெய்வம் அடைய; பிரமனும் மாலும் இது ஒப்பது இல்லை (என்று) இருபாலும் நின்று பணிய, அவ்விருவரும் முறையே மேலை முடியோடு பாதம் அறியாமை (அழற்றூணாக) நின்ற பெரியோன் பரமுதலாய தேவன் சிவனு(கி)ய மூர்த்தி. ' தேவர் ' :-ஐயாறர் (124)க்கு உரைத்தாங்கு உரைத்துக்கொள்க. நமக்கு ஒருபுகலாம் அவன் ஆ(கு)ம். ஒரு கற்பத்திலே, பாற்கடலிற்றுயின்ற திருமாலுக்கும் அவனை மகனே என்றெழுப்பிய நான்முகனுக்கும் அதனாற் சொற்போர் விளைந்தது. அங்குச் சிவதாணு தோன்றிற்று. அதன் அடிமுடி தேடியறியவல்லேன் என்றிருவரும் செருக்குற்று, மாற்பன்றிஅடியையும் பிரமக்கழுகு முடியையும் தேடலாயின; திகைத்தன. ஐந்து திருமுகத்துடன் ஓங்காரநாத வெள்ளம் அண்டமெல்லாம் பரவ, மூவர்கோனாய் நின்ற முதல்வன், அத்தாணுலிங்கத்திலே காட்சி தந்து, அவர்க்குத், தானே பரம் என்று காட்ட, அவர் இது ஒப்பது இல்லை என்று தெளிந்து வழிபட்டனர். (வாமன புராணம்; சிவ மகாபுராணம் முதலத்தியாயம் பார்க்க). ' பூவார் பொற்றவிசின் மிசையிருந்தவனும் பூந்துழாய் புனைந்த மாலும் கழுகுருக் கொண்ட உண்மை விளங்கும் (2. 32. 9. பக். 143 இரண்டாவது திருமுறையின் எம் குறிப்பை நோக்குக). ஓவாது கழுகு ஏனமாய் உயர்ந்து ஆழ்ந்து உறநாடி உண்மைகாணுத்தேவாரும் திருவுருவன் ' (1. 131. 9) ' ஏனம் கழுகானவர் உன்னை முன் என்கொல் வானம் தலம் மண்டியும் கண்டிலாவாறே ' (2. 37. 9) ' பருத்துருவதாகி விண் அடைந்தவன் ஓர் பன்றிப் பெருத்துருவதாய் உலகிடந்தவன் ' (2. 32. 9) ' புண்டரிகத்துள் இருந்த புத்தேள் கழுகுருவாய், அண்டரண்டம் ஊடுருவ ஆங்கோடிப், பண்டோருநாள், காணான் இழியக் கனக முடி கவித்துக் கோணாது நின்ற குறிபோற்றி' (11. நக்கீரர், போற்றித் திருக்கலி வெண்பா.) என்பவற்றால் அயன்

" பிரமனரி என்றிருவரும் தம்பேதைமையால்
பரமம் யாம்பரம் என்றவர்கள் பதைப்பொடுங்க
அரனார் அழலுருவாய் அங்கே அளவிறந்து
பரமாகிநின்றவா தோணோக்கம் ஆடாமோ. "

(திருவாசகம் 324) மகாவிட்டுணுவும் பிரமதேவனும் சிவஞான வுண்மையாகிய திருவடியே எல்லாத் தேவர்கட்கும் உயிர்ப்

காலமு நாள்களூழி படையாமுனேக
வுருவாகிமூவ ருருவில்
சாலவு மாகிமிக்க சமயங்களாறி
னுருவாகிநின்ற தழலோன்
ஞாலமு மேலைவிண்ணோ டுலகேழுமுண்டு
குறளாயொராலி னிலைமேல்
பாலனு மாயவற்கோர் பரமாயமூர்த்தி
யவனாநமக்கோர் சரணே. 136

---

பிரேரக மகாதேவன் எனத் தெரியாது... ...தாமே பரப்பிரமம் என வாதம் கூறி அமரிட்டனர். (தாண்டவராய சுவாமி உரை).

136. நாள் (அசுவினி முதலியவை) முதல் ஊழி முடியப் பாகுபட்ட காலத்தையும் படைத்தற்குமுன்பு ஒன்றாய் நின்றவன்; மூவர் உருவிலும் அவர் உயிர்க்குயிராய் அமைந்தவன்; 'அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய்' விளங்கி நிற்பவன். 'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்சோதி' வடிவானவன்; மண்ணும் மேலை விண்ணும் அடங்கிய ஏழு உலகும் உண்டு குறளாய் ஓர் ஆலிலைமேலே பாலனாய்ப் பள்ளிகொண்ட திருமாலுக்குப் பரமாயதொருமூர்த்தி. அவன் நமக்குப் புகல் ஆவான். தழலோன் பரமாய மூர்த்தி என்க. 'காலங்கள் ஊழியாய் நின்றாய் நீயே' 'காற்றாகிக் கார்முகி லாய்க் காலம் மூன்றாய்' 'கூறும் நாளாம் கோள்ளும் கிழமை யாம் கோளேதானும்' 'கொண்ட சமயத்தோர் தேவனாகி' 'வானோர் தங்கட்கு எல்லாம் காலனும்' 'ஆறாய் என்பது அனைத்தும் அவ்வவை தானாகாமையைச் சாற்றிடும் என்க' (சங்கற்பநிராகரணம் நிமித்தகா. பரி. நிரா. 80-81) என்றவாறு ஆகாத முன்னைய நிலைமை ஒன்று உண்டு. அவ்வொன்றே 'ஏக வுரு' எனப்பெற்றது "முன்னம் இருமூன்று சமயங்க ளவை ஆகிப் பின்னை அருள் செய்த பிறையாளன்" (2. 29. 5) "ஆறு சமயங்கட்கு ஒரு தலைவன்" (1. 131. 1.) "அறிவி னான் மிக்க அறுவகைச் சமயம் அவ்வவர்க்கு அங்கே ஆரருள் புரிந்து' (7 :- 568). 'அவசங்கரா சலம்கொண்டு' (திருப் புகலூரந்தாதி) 95.

நீடுயர் விண்ணுமண்ணு நெடுவேலைகுன்றொ
டுலகேழுமெங்கு நலியச்
சூடிய கையராகி யிமையோர்கணங்கள்
துதியோதிநின்று தொழலும்
ஓடிய தாரகன்ற னுடலம்பிளந்தும்
ஒழியாதகோப மொழிய
ஆடிய மாநடத்தெ மனலாடிபாத
மவையாநமக்கோர் சரணே. 137

நிலைவலி யின்றியெங்கு நிலனோடுவிண்ணு
நிதனஞ்செய்தோடு புரமூன்
றலைநலி வஞ்சியோடி யரியோடுதேவ
ரரணம்புகத்த னருளால்
கோலைநலி வாளிமூள வரவங்கைநாணு
மனல்பாயநீறு புரமா
மலைசிலை கையிலோல்க வளைவித்தவள்ள
லவனாநமக்கோர் சரணே. 138

137. நெடிதுயர்ந்த விண்ணும் மண்ணும் நெடிய கடல் மலைகளோடு. ஏழுலகு முழுதும் வருந்த வருத்திய தாரகன் கொடுமைகளுக்கு ஆற்றாமல், தேவர் கூட்டத்தினர், தலைமேற் குவித்து வணங்கித் தூவும் பொருட்டு மலர்களைக் கொண்டு சிவனடி சூடிய கைகளை உடையவராகிப் புகழ் பாடி நின்று தொழுதனர். தொழுததும், இனி நமக்கு முடிவுண்டாவது உறுதி ('தொழுவார்க்கே அருளுவது சிவபெருமான்' பெரிய. 1981) எனத் தெரிந்து ஓடிய தாரகாசுரனது உடலைப் பிளந்தும் ஒழியாத சீற்றம் ஒழிதற்கு ஏதுவாகிய மகாதாண்டவத்தை ஆடிய் தீயாடியின் திருவடிகளே நமக்கு ஒரு புகலாகும். சிவபிரானுக் குரிய இது மற்சபுராணத்திலுள்ளது. கந்தபுராணத்தினது முருகப்பிரானுக்குரியது. சூடுகழல். 139. சித்தாந்தம் தொ. 8 ப. 6 பக்கம் 121 - 2.

138. நிலைக்கும் வலிமை இல்லாமல், மண்ணோடு விண்ணெங்கும் அழிவு செய்தோடும் முப்புரம் அலைக்கும் வருத்தத்தை

நீலநன் மேனிசெங்கண் வளைவெள்ளெயிற்ற
    னெரிகேச னேடிவருநாள்
காலைநன் மாலைகொண்டு வழிபாடுசெய்யு
    மளவின்கண்வந்து குறுகிப்
பாலனை யோடவோடப் பயமெய்துவித்த
    வுயிர்வவ்வுபாசம் விடுமக்
காலனை வீடுசெய்த கழல்போலுமண்டர்
    தொழுதோதுசூடு கழலே 139

அஞ்சித் திருமால் முதலிய தேவர் யாவரும் காவலானதோரிடத் திற் புக்கொளிய, தன் இரக்கத்தால், கொலைத் தொழிலால் வருத்தும் மால்களை கூரேரிகொள்ளவும் கையில் உள்ள வாசுகி நாணின் அனல் பாயவும் மேரு மலை (யாகிய) வில் கையில் தளரவும் வளையச்செய்த அருட்கொடையாளனாகிய அவன் நமக்கு ஒரு புகலாவான் ; இது முப்புரம் எரித்த மாண்புணர்த்திற்று. " அப்பணி செஞ்சடை ஆதிபுராதனன், முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள், முப்புரமாவது மும்மல காரியம், அப்புரம் எய்தமை ஆர் அறிவாரே. " (திருமந்திரம். 343) நிதநம் - அழிவு. நிதனம் - திரிபு.

अन्तो नाशो द्वयोर्मृत्युर्मरणं निधनोऽस्त्रियाम्

(அமரம் - க்ஷத் - சு. 116)

स्वधर्मे निधनं श्रेयः परधर्मो भयावहः

(கீதை - 3 35)

139 காலன் கரியமேனியன். செங்கண்ணன். வளைந்த வெள்ளைக் கோரைப் பல்லினன். தீயைப்போலும் குஞ்சியன். 2. 18. 9. மார்க்கண்டேய முனிவரைத் தேடிவருகின்றான். அந் நாளிலேயும், வழக்கம்போல், காலையில் நல்ல (மணமலர்) மாலை (முதலிய பூசைக்குரிய பொருள்களைக்) கொண்டு வழிபாடு ஒழிபாடு இன்றிச் செய்து கொண்டிருக்கின்றார் அம்முனிவர். அவ்வளவில் அக்காலன் வந்தணுகினான். காலனார் அப் பாலனாரை அச்சுறுத்தி, அவ்விடத்தின் நீக்கி ஓட்ட, உயிரைக் கவரும் கயிறு வீசினான். அவனைக் காலால் வீசினான் கடவுள்

உயர்தவ மிக்கதக்க னுயர்வேள்விதன்னி
 லவியுண்ணவந்த விமையோர்
பயமுறு மெச்சனங்கி மதியோனுமுற்ற
 படிகண்டுநின்று பயமாய்
அயனோடு மாலுமெங்க ளறியாமையாதி
 கமியென்றிறைஞ்சி யகலச்
சயமுறு தன்மைகண்ட தழல்வண்ணனெந்தை
 கழல்கண்டுகோள்கை கடனே. 140

---

அக்கடவுளின் கழற்காலே வானோர் வாழ்த்திவணங்கித் தலைமேற் சூடும் மலர்க்கழல். காலக் கடவுள் வாழ்த்தாகப் பதிற்றுப்பத்தின் காப்பெனப்படுவது ஒன்றுண்டு. அஃது ஈண்டு நோக்கற்பாலது. 1. "எரியெள்ளுவன்ன நிறத்தன்; 2. விரியிணர்க் கொன்றையம் பைந்தார் அகலத்தன்; 3. பொன்னூர் எயில் எரியூட்டிய வில்லன்; 4. பயில் இருட்காடு அமர்ந்து ஆடிய ஆடலன்; 5. நீடிப்புறம்புதை தாழ்ந்த சடையன்; 6. குறங்கு அறைந்து வெண்மணி ஆர்க்கும் விழவினன்; 7. நுண்ணூற் சிரந்தை இரட்டும் விரலன்; 8. இரண்டு உருவாய் ஈர்அணிபெற்ற எழில் தகையன்; 9. ஏரும் இளம் பிறை சேர்ந்த நுதலன்; 10. களங்கனிமாறு ஏற்கும் பண்பின் மறுமிடற்றன்; 11. தேறிய சூலம் பிடித்த சுடர்ப்படைக் காலக்கடவுட்கு உயர்கமா வலனே." இது சாவா நலம்பெற விரும்புவார்க்கு உள்ளற்பாடல் (தியான சுலோகம்) ஆகும்.

140. உயர்ந்த தவத்தில் மிக்க தக்கனது வேள்வியில் அவியுணவுகொள்ளவந்த வானவரும் அச்சம் மிக்குற்ற வேள்விக் கோவும் அக்கினியும் சந்திரனும் அடைந்த நிலை நோக்கி அஞ்சி நின்று பிரமனும் விண்டுவும் 'எங்கள் அறியாமை முதலிய குற்றங்களைப் பொறுத்தருள்வாய்' என்று வணங்கி நீங்க, வெற்றியுற்ற தன்மையைக் கண்ட தீ வண்ணன் (920) ஆகிய என் அப்பனுடைய திருவடியைக் கண்டு கொள்வதே (பிறவாதிருக்க விரும்பும் உயிர்களின்) கடனாகும். அங்கி - தீ; (அக்நீ). கமி - க்ஷமி, பொறு. சயம் - ஜயம். கண்டுகொள்ளல். 'உடையாய் என்னைக் கண்டுகொள்ளே' (திருவாசகம் - 5). 'கண்டுகோள் என்று காட்டிய........சேவடி' (ஷை. 581)

நலமலி மங்கைநங்கை விளையாடியோடி
நயனத்தலங்கள் கரமா
உலகினை யேழுமுற்று மிருண்மூடமூட
விருளோடநேற்றி யொருகண்
அலர்தர வஞ்சிமற்றை நயனங்கைவிட்டு
மடவாளிறைஞ்ச மதிபோல்
அலர்தரு சோதிபோல வலர்வித்தமுக்க
ணவனுநமக்கோர் சரணே. 141

'கண்டுகோள் என்று உன் மெய்க்கழலடி காட்டிப் பிரியேன் என்றென்றருளிய அருள்' (ஷை. 598). 'வண்டார் குழலியைக் கண்டுகோள் என்றது (திருக்கோவைக்கோளு 212) இது தக்கன் வேள்வி யழித்ததுணர்த்திற்று. இதனைத் திருவாசகம் :- 189, 212, 259, 278, 289 ஆம் பாடல்களிலும் திருவுந்தியாரிலும் காண்க. 6. 53. 4; 6. 88. 2; 6. 6.

141. நலம் - சிவம். அழகுமாம். மங்கை-சிவமஞ்ஞட்டி. நங்கை - தெய்வநாயகி. நயனம் - கண். தலம் - இடம். அலர் தரல் - விரிதல். மடவாள் - மடப்பம் உடையவள். மதி - பூரண சந்திரன். அலர்தரு சோதி - உதயசூரியன். அலர்வித்த - ஒளிரச்செய்த. முக்கண் அவன் ஏ நமக்கு ஓர் சரண் ஆம் - முச்சுடரையும் முக்கணுக உடைய அம்முழு முதல்வனே அடிமைகளாகிய நமக்குத் தனிப்புகலாவான். இருள் உலகினை மூடக் கரம் நயனத்தை மூட என்க. திருக்கண் புதைத்ததன் பயன் :- புவனமூன்றும் தவப்பயன் முற்ற, மண்ணைப் புகழ் மணக்க, தென்பால் முன்பால் வெல்ல, தமிழ்நாடு அமிழ்தாக, தொண்டைநாடு செழிக்க, காஞ்சியே கவின் வளம்சால, ஆறு சமயமும் வீறுபெற, உலகெங்கும் வைதிக சைவமே உயர்ந் தோங்கி நிற்க, எங்கணும் சிவ வழிபாடே ஒப்புயர்வில்லதென்று உலகம் உணர்ந்து தெளிந்துய்ய, அறமோங்க, மறம் நீங்க. உயிர் வளர, முப்பாலுள் முதலிருபாலும் எப்பாலும் தழைப்ப எப்பால் உலகத்தோளி யாவையும், அப்பாலைக்கு அப்பாலானது தப்பா வழியின் ஒளிச்சால்பே என யாவரும் காண, அப்பார் சடையார் அடித்தொண்டர் அகம் களிப்ப, காதல் கைம்மிக்க

கழைபடு காடுதென்றல் குயில்கூவவஞ்சு
　　கணையோனணைந்து புகலும்
மழைவடி வண்ணனெண்ணி மகவோனைவிட்ட
　　மலரானதோட்ட மதனன்
எழில்பொடி வேந்துவீழ விமையோர்கணங்க
　　ளெரியென்றிறைஞ்சி யகலத்
தழல்படு நெற்றியோற்றை நயனஞ்சிவந்த
　　தழல்வண்ணனெந்தை சரணே. 142

குறிப்பின் விம்மிப் பணைந்து வீங்கிஎழுந்த கொம்மைப் பொம்மற் பிராட்டி, செம்மற்பிறை வேணியனார் வெரிந்புறத்து எய்தி, வல்லே திருக்கண் புதைத்தாள். நாயகன்கண் நாயகி நயப்பால் புதைப்ப, எங்கும் பாய் இருளாகி மூடப்பெற்றது. நெற்றிக்கண் சுடரொளி கொடுத்தது. அஞ்சிய நாயகி அகற்றினள் கைம்மலர். அல்கின ஒளிகள், அஃகியது இருள். மறைத்து நீக்கிய சிறு பொழுது உலகுக்கெல்லாம் சென்றன எண்ணில் ஊழி.

142 இதிற்கூறும் மன்மதனை எரித்த வரலாருவது :- கங்கைச் சடையன் மலைமங்கையின் கொங்கையுற நின் செங்கை மலர்க்கணை எய்துக! ஏக! என்று ஏவினன் மலரவன். உடனே அக்கூற்றழல் காதுவழிப்போய் அகத்தை எரித்தது. செவி பொத்திச் சிவ சிவ என்றேதி உய்ந்தான். பல பிறவித் தீமையும் ஒருங்குற்ற அக்கடுஞ்சொல் கேட்டு, வாட்டிய மலர் போல் அழகழிந்து, “ இவ்வாழ்க்கை யெல்லாம் சிவ சத்தியால் வந்த ஆக்கம்; என் செயலாவது யாதொன்றும் இல்லை; அதனால் என் வீறு ஏறேறியிடம் ஏருது என்றான். ‘ உலகைத் தோற்ற உமையைத் தோற்றி ஒருபால், தானாக இருத்திய தற்பரனை நானா மயல் செய்வது? நன்று நன்று; புங்கவனுக்கு மாறு கொண்டு போரேன் ’ என்றான். வெகுண்ட வேதன் வெஞ் சூளிடுவேன் என்றான். நின் சூளின் துன்பத்தினும் காளகண்டன் முன்பு கணைகள் ஏவி மாள்வதே சிறந்தது ; அது பின் வாழ் விக்கும் என்றான் வேள். விதியின் செய்கையை யார் கடக்கவல் லார்? கயிலையை அணுகினான். நறுமலர்வாளி ஐந்தும் நாதன் மேற் செல்லவிட்டான். வேளைப் பார்த்தான் விமலன். சுட்டது புறத்தையும் தூய நெற்றிக்கண். இரதி இரங்கி இரப்ப வேளை

தடமல ராயிரங்கள் குறைவொன்றதாக
நிறைவென்றுதன்க ணதனால்
உடன்வழி பாடுசெய்த திருமாலையெந்தை
பெருமானுகந்து மிகவும்
சுடரடி யான்முயன்று சுழல்வித்தரக்க
னிதயம்பிளந்த கொடுமை
அடல்வலி யாழியாழி யவனுக்களித்த
வவனாநமக்கோர் சரணே. 143

அருளினான். கழை - கரும்பு மழைவடி வண்ணன் - திருமால். மகவோனை - இந்திரன். மதனன் - மன்மதன். 'எண்ணிவேள் மதனை ஏவ எரிவிழித்து இமவான் பெற்ற பெண்ணினைப் புணர்ந்து உயிர்க்குப் பேரின்பம் அளித்தது' இது. (சித்தியார் 73)

143. திருமால் சக்கிரம் பெற்ற வரலாறு :- ஆழிபெற ஆயிரம் பூவால் அருச்சனை புரிந்தான் அன்புடைமையால் ஆழியான். பத்தியின் விளைவு காண்பான் பரம்பொருள் ஆயிரத்துள் ஒரு தாமரை மலரை மறைத்தான் நினைப்பால். பவனெனும் நாமம் முதலான ஆயிரமும் எடுத்தேத்தி அருச்சிக்கின்றபோது, ஒருபோது ஒரு பெயர்க்குப் பற்றாமை உணர்ந்து, கழிவிரக்கம் உற்று, ஓர்ந்து, உணர்ந்து, தன் கண்ணை இடந்து, பவளக குன்றர் சுவணபாதத்திற் சார்த்திக் களிகூர்ந்தான். மெய்யைக் கொடுத்தேனும் விரதத்தை மெய்ப்படுத்தும் மெய்யர் கொள்கைக்குப் பொய்யாத சான்றானான். இறையவன் காட்சி அருளப்பெற்றான். வணக்கம் பலவும் முறைமை வழாது புரிந்தான். திருமாற்பேறு என ஊரை நிகழ்த்திச் சுதரிசனம் என்னும் ஆழியை அருளி வாழி என்று தீண்டச்சிவந்து வாட்டம் தவிர்த்த விருபாக்கன் பதுமாக்கனை விடுத்தருளினான். தடம் - குளம். உகந்து - விரும்பி. முயன்று சுழல்வித்துப் பிளந்த கொடுமை ஆழி என்க. அது சுதரிசனம் என்னும் பெயருடைய சக்கிரம். சுடர் அடியால் - சிவபிரானுடைய ஒளிமிக்க சேவடியால். அடியால் சக்கிரமாகச் சுழல்வித்து. அடல்வலி-கொல்லும் வன்மை; வினைத்தொகை. ஆழியவன்-பாற்கடலான். அரக்கன்-சலந்தரன்.

கடுகிய தேர்செலாது கயிலாயமீது
கருதேலுன்வீர மொழிநீ
முடுகுவ தன்றுதன்ம மெனநின்றுபாகன்
மொழிவானைநன்று முனியா
விடுவிடு வென்றுசென்று விரைவுற்றரக்கன்
வரையுற்றெடுக்க முடிதோள்
நெடுநெடு விற்றுவீழ விரலுற்றபாத
நினைவுற்றதென்றன் மனனே. 144

திருச்சிற்றம்பலம்

144. இலங்கைக் கோமான் பாகனைப் பார்த்துத் திருக் கயிலையை நோக்கித் தேரோட்டு என்று ஏவினான். அவன் ‘ கடுந்தேராயினும் கயிலாயமீது விடுந்தேர் அன்று, விட்டாலும் செல்லாது. உன் வீரம் வீரபத்திரனிடத்தில் வேண்டா. வீரத்தை விட்டொழி. என்னை முடுகுவது அறன் அன்று ’ என்று மொழிந்தான். அவனை மிகச் சினந்து ‘விடுவிடு’ என்று முடுகினான். அவனும் முடுக்கினான் தேரை. சென்றான் இராவணன். விரைவுற்றான் வரையுற்றான் ; எடுக்க முயன்றான். முடியும் தோளும் நெடுநெடு என இற்றுவிழுந்தன. அவ்வாறு நிகழ ஊன்றிய பெருவிரலைக் கொண்ட திருவடிகளை என் உள்ளம் எண்ணலுற்றது. ‘ மூர்த்திதன்மலை ’ எனத் தொடங்கும் (323) திருநேரிசையை ஈண்டுணர்தல் வேண்டும். ‘ தர்மம் ’ தன்மம் என்றுதலும் தமிழ்மரபே. ‘ நல்ல சிவதன்மத்தால் நல்ல சிவயோகத்தால் நல்ல சிவஞானத்தால் நான் அழியும் ’ (திருக் களிற்றுப்படியார். 15) முனியா - முனிந்து. செய்யா என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம் விரலின் ஆற்றல் தோன்றக் கூறினார்.

நாமார்க்குங் குடியல்லோ மென்றெடுத்து நான்மறையின்
கோமானை நதியினுடன் குளிர்மதிவாழ் சடையானைத்
தேமாலைச் செந்தமிழின் செழுந்திருத்தாண் டகம்பாடி
யாமாறு நீரழைக்கு மடைவிலமென் றருள்செய்தார். 93

## 15. பொது

### திருப்பதிக வரலாறு

யாதேனும் ஒரு தலத்திற்கும் உரியவாகாது பொதுவாயிருக்குந் திருப்பதிகங்களைக் குறிக்க இட்ட காரணப் பெயர்கள் அவ்வப் பதிகத்தின் முதலையோ முடிவையோ பொருளையோ பற்றியவாய்த் திகழ்கின்றன. 'சிவனெனு மோசை' (8) என்பது அப் பதிகத்தின் முதற்கண் உள்ள தொடர்பற்றியது. 'தசபுராணம்' (14) என்பது பொருள் பற்றியது. இது (15) முடிவின்கண் உள்ள தொடர் பற்றியது. திருப்புகலூரில் திருத்தொண்டு புரிந்து வழிபட்டு வாழ்ந்தருளுங் காலத்தில் மொழிந்து சார்த்தி யருளிய வண்டமிழ் மாலைகளுள் ஒன்று. இப் 'பார்' பரவும் பாவநாசப் பதிகம் (பெரிய புராணம். 1680)

### பாவநாசத் திருப்பதிகம்

பண் பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

பற்றற்றார்சேர் பழம்பதியைப் பாசூர்நிலாய பவளத்தைச்
சிற்றம்பலத்தெந் திகழ்கனியைத் தீண்டற்கரிய திருவுருவை
வெற்றியூரில் விரிசுடரை விமலர்கோனைத் திரைசூழ்ந்த
ஒற்றியூரெ முத்தமனை யுள்ளத்துள்ளே வைத்தேனே 145

145. பாசப்பற்று நீங்கிச் சிவப்பற்று உடையவர் அடைந்து வழிபடும் பழையவாகிய தலங்களாகித் திகழும் சிவ பெருமானை. திருப்புன வாயிலுக்குப் 'பழம்பதி' என்றும் அத் தலத்து மூர்த்திக்குப் 'பழம்பதிநாதர்' என்றும் பெயர் வழங்கு தலின் அதனைக் கொள்ளல் பொருந்தும். பாசூர் :- பசுபதியூர் என்றதன் மரூஉ. அம்பிகை பசுபதி நாயகி. பாசூரில் எழுந் தருளிய சிவமூர்த்தி தீண்டாத் திருமேனியாதலின், தீவண்ணத் தைக் குறிக்கப் பவளத்தை என்றார். 'திருச்சிற்றம்பலத்துக் கனி' (149) என்பது தொல்வழக்கு 'ஈசன் எனுங் கனி சாலவும் இனிது' (5. 91. 7) 'நமச்சிவாயப் பழம்' 'நமச் சிவாயக் கனி' (திருமந்திரம்). தீண்டாத் திருமேனி உள்ள

ஆனைக்காவி லணங்கினை யாரூர்நிலாய வம்மானைக்
கானப்பேரூர்க் கட்டியைக் கானூர்முளைத்த கரும்பினை
வானப்பேரார் வந்தேத்தும் வாய்மூர்வாழும் வலம்புரியை
மானக்கயிலை மழகளிற்றை மதியைச்சுடரை மறவேனே. 146

திருக்கூடவம் திருவூறல் முதலிய தலங்களைக் குறித்தும் 'தீண்டற் கரிய திருவுருவை' எனலாம். வெற்றியூர் என்றது கஞ்சனூர், காட்டுப்பள்ளி, புகலூர், வன்னியூர்ப் பக்கத்தது ஒன்று போலும். "உஞ்சேனை மாகாளம்........ வெற்றியூரும் கஞ்சனூர் கஞ்சாறு பஞ்சாக்கையும் கயிலாய நாதனையே காணலாமே" (6. 70. 8) என்று பிறண்டும் உள்ளது உணர்க. விமலர்-மலம் நீங்கியவர். கோன் - (கோமகன்) தலைவன். திரை - கடல் (ஆகுபெயர்). திருவொற்றியூர் கடற்கரைக்கண் உள்ளது. உத்தமன் :- (படம் பக்கநாதர்) எழுத்தறியும் பெருமாள். 'படம்பக்கம் கொட்டும் கடலொற்றியூர்' (2. 39. 7) 'திருக்கடவூர் உறை உத்தமன்' என்றதிற் போல, உத்தமன் என்பது அத்தலத்து மூர்த்தியின் திருப்பெயராம்.

146. திருவானைக்காவில் எழுந்தருளிய அகிலாண்ட நாயகியாயிருப்பவனை. அன்புடையார்க்கெல்லாம் ஒரு நெறியாய் இருந்து அன்னமிட்டுக் காக்கத் திருவாரூரில் புகழ்பெற்ற அம் மகனை. திருக்கானப்பேரூரிலே கருப்பங்கட்டி போல இனிமை செய்பவனை. திருக்கானூரில் தான்றோன்றியான (முக்கட்) கரும்பினை "கரும்பினிற் கட்டிபோல்வார் கடவூர் வீரட்டனாரே" வானப் பேரார் - வானத்தினின்றும் பேராதவராகிய தேவர்கள். பேர்ந்து வந்து ஏத்தும் திருவாய்மூர் வாழும் வலம்புரிச் சங்கு போல் உயர்வும் தூய்மையும் உடையவனை. அங்குச் சங்கு ஒலிக்கும் வழக்கம் பற்றிய குறிப்பு இது. மற்றைய விடங்கத் தலம் எல்லாவற்றிலும் சங்கோலிச் சிறப்பு உண்டே னும், திருவாய்மூரில் அதன் தனிப் பெருமையைக் கண்டு கூறியதாகத் தோன்றுகின்றது. அங்கு அக்காலத்தில் ஊதியவர் திறம் ஆசிரியர் திருவுள்ளத்தைக் குழைவித்திருக்க லாம். மானக்கயிலை - பெருமையையுடைய கயிலைமலை. மலையிற் களிறு வாழ்கின்ற பொருத்தம். மதி - (திங்கள்), சுடர் - (ஞாயிறு, தீ) இரண்டற்கும் உண்மையால் அம்மூன்றுமாகக்

மதியங்கண்ணி ஞாயிற்றை மயக்கந்தீர்க்கு மருந்தினை
அதிகைமூதூ ரரசினை யையாறமர்ந்த வையனை
விதியைப்புகழை வானோர்கள் வேண்டித்தேடும் விளக்கினை
நேதியைஞானக் கொழுந்தினை நினைந்தேற்குள்ள நிறைந்ததே.

கொள்ளப்பெற்றான் சிவபிரான். 147. முற்பாடலில் 'உள்ளத்துள் வைத்தேன்' என்றும், இதில் 'மறவேன்' என்றும் மேல் உள்ளம் நிறைந்தது முதலியவாகக் குறித்தும் நின்ற பேரின்பத் தாக்கம் உணரற்பாலது.

147. மதியம் கண்ணி - (6. 59. 2, 5) திங்களைத் தலை மாலையாகவுடைய. 'பால்புரை பசுங்கதிர்க் குழவித் திங்களைக் குறுங்கண்ணியாகவுடைய அழலவிர் சோதி அருமறைக் கடவுள்' (இறை. களவியல். சூ. 1 உரை). ஞாயிற்றை - செங்கதிரவனை. பிறவிக்கு அடியான மும்மலக்கலக்கத்தைப் போக்கும் சிவஞான மான மருந்தாய் உள்ளவனை. 'மருளியலும் சிந்தையார்க்கு மருந்து' (6. 33. 7). திருவதிகையான தொல்லூரில் உள்ள மாநகரை ஆளும் சிவபிரானை; திருவையாற்றில் எழுந்தருளிய முதல்வனை; விதியை ஊழாக, வேத விதியாக உள்ளவனை; புகழை - எல்லாப் புகழும் தன்பால் வந்துசேரும் மெய்ப் பொருளை, 'பொருள்சேர் புகழ்'. அழியும் இன்பத்தில் அதற்கு உரிய வினையுலக்கும் வரையில் திளைக்கும் விண்ணோர்க்கு, அழியா இன்ப நாட்டமுற்றால் அதைப் பெற விரும்பித் தேடும் மெய்ஞ்ஞான தீபத்தை. மெய்ஞ்ஞான விளக்கானை' (6. 33. 3) 'ஞானச் சுடர்விளக்காய் நின்றாய் நீயே' (6. 38. 7). வான் - பேரின்ப வீடு. 'தொண்டாகிப் பணிவார்க்குத் தொல்வான் ஈயவல்லான் காண்' (?62. 1) என்றதால் மெய்யுணரும் சிவ யோகிகள் உள்ளே விரும்பித் தேடும் பிராசாத மார்க்கத்தை; விளக்கும் தீபத்தை எனலும் சிறக்கும். 'ஒளிசேர் நெறி' 'ஒளிநெறி காட்டினை' 'நிதி' - 'நேதி' என மருவிற்று' 'ஞானக் கொழுந்து (திருமந்திரக் காப்பு) சிவக் கொழுந்து என்ற தொடர் இரண்டும் முறையே துரியம், துரியாதீதம், ஆகிய நிலைகளின் தொடக்கத்தில் நிகழும் அநுபவத்தைக் குறித்துத் தோன்றியவை. உள்ளம் நிறைந்தது :- 'நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்'. நிறையாதேல் இறைவர்க்கே இடமாகாது

புறம்பயத்தெம் முத்தினைப் புகலூரிலங்கு பொன்னினை
உறந்தையோங்கு சிராப்பள்ளி யுலகம்விளக்குஞாயிற்றைக்
கறங்குமருவிக் கழுக்குன்றிற் காண்பார்காணுங் கண்ணானை
அறஞ்சூழதிகை வீரட்டத் தரிமானேற்றை யடைந்தேனே.

கோலக்காவிற்குருமணியைக்குடமூக்குறையும்விடமுணியை
ஆலங்காட்டி லந்தேனை யமரர்சென்னி யாய்மலரைப் [னைச்
பாலிற்றிகழும் பைங்கனியைப் பராய்த்துறையெம் பசும்பொன்
சூலத்தானைத் துணையிலியைத் தோளைக்குளிரத்தொழுதேனே.

ஏனையவற்றிற்கும் இடமாகும். ' சத்தி முற்றத்து உறையும் சிவக்கொழுந்தே ' ' புவிக் கெழிலாம் சிவக் கொழுந்தை ' (6. 37. 4). ' விண்ணுளார் தொழுதேத்தும் விளக்கு ' (5 57.2)

148. திருப்புறம்பயத்திலே முத்தும் ; திருப்புகலூரிலே பொன்னும் (பெரிய - 1681 - 82); ஊரெனப்படும் உறையூரிலே உலகாண்ட சோழர்குல முதலாய் விளங்கி உலகை விளக்கிடும் ஞாயிற்றை உடம்பாகக் கொண்டுலவும் உயிரும் ; திருக்கழுக் குன்றத்திலே காண்பவர் காண்கின்ற கண்ணுக்குள் கண்ணா யிருந்து தன்னைக்காட்டும் அருளும்; திருவதிகையிலே வீரத்தைக் காட்டிய சிங்கத்தின் திறனும் ஆசிரியர் அனுபவமாகக் கண்டு உணர்ந்தவர் போலும் ! ' அருக்கனாவான் அரனுரு அல்லனோ ' ' தேய நாதன் சிராப்பள்ளி மேவிய நாயனாரென நம்வினை நாசமே '. ஞாயிறு :- சூரியகுலத்தாட்சி உறந்தையில்.

149. திருக்கோலக்காவிலே சடையும், பிறையும், சாம்பற் பூச்சும், கீளுடையும் கொண்ட குருமணி உருவத்தைக் குறித்தது காண்க. திருக்குடமூக்கிலே நஞ்சுண்ட கண்ட னென்றது போலத் திருக்குடந்தைக் கீழ்க்கோட்டத்திலும் ' கடல் நஞ்சம் உண்டிருண்ட கண்டர் போலும் ' என்றருளினார். காட்டிலே தேன் உண்மை இயல்பு. தேவர் தலைமேல் அழகிய பூவாய் விளங்குவது திருவடி. ' வாசமலரெலாம் ஆனாய் நீயே ' என்றதால் அம்மலரென்றே சொல்லலாம். ' பால் வெண்ணீறு ' பூசிய பவளம் போலும் மேனியனுதலின் பாலில் திகழும் பசிய பழத்தை என்றார். பால்போலும் இனிய சுவையுடைய பழத்தை

மருகலுறைமா ணிக்கத்தை வலஞ்சுழியின் மாலையைக்
கருகாவூரிற் கற்பகத்தைக் காண்டற்கரிய கதிரொளியைப்
பெருவேளூரெம் பிறப்பிலியைப் பேணுவார்கள் பிரிவரிய
திருவாஞ்சியத்தெஞ்செல்வனைச்சிந்தையுள்ளேவைத்தேனே.

எனலுமாம். 'பாற்றுறைப் பயின்றாட வல்லான்' (6. 19. 3) சிற்றம்பலத் தேம் திகழ் கனியை (145) திருப்பராய்த்துறைப் பசும்பொன்; செல்வமல்கிய செல்வர்; பராய்த்துறைச் செல்வர்; என்று கன்றும்; திருப்பராய்த்துறை மேவிய செல்வர் 'பராய்த் துறைச் சோதியான்' என்று பதிகமுழுதும் அரசும் பாடியவற்றால், 'பொன்' என்றதன் பொருத்தம் உணர்க. சூலத்தானதலின். அவனுக்குத் துணைவேண்டா. சூலத்தானுக்கு ஒப்பு(ம் உயர்வும்) இல்லை. தோளைத் தொழுதல்; குளிரத் தொழுதல் (பா. 153 பார்க்க).

150. திருமருகற் பெருமான் திருப்பெயர் மாணிக்க வண்ணர். திருமருகல் நகரின்கண் .....மாணிக்கவண்ணர் கழல் வணங்கிப் போற்றி........ இருந்தார் பெரும்புகலிப் பிள்ளையார். (பெரிய திருஞான. 472). 'மருகல்வாய்ச் சோதி மணிகண்டன்' (6. 22. 5) திருவலஞ்சுழியில் (மாலை) என்றது ஞானசம்பந்தன் சொன்ன கருத்தின் தமிழ் மாலை; 'வாய் நவிற்றிய தமிழ்மாலை' பூண்டமையாற் போலும்! கருகாவூரில் கற்பகத்தை :- நிற்ப தோத்து நிலையிலாப் புலாலுடம்பே புகுந்து நின்ற கற்பகம் ஆதலின், வான் தருவின் மேலாயதென்க. காண்டற்கரிய கதிரொளி :- தீண்டற்கரிய திருவுருவே யன்றிக் காண்டற்கரிய கதிரொளியும் ஆயின், அதனால் வரும் பயன் யாதுமில்லை என்னுவாறு, 'பெருவேளூர் எம் பிறப்பிலியை' என்று குறித்துப் பிறப்பிலி உயிராய் இருந்து எமக்கும் எம்போல்வார்க்கும் பிறவி யறுக்கும் பிரிவரிய செல்வன் என்றார். 'வாஞ்சியம்' என்றதன் பொருள் தோன்றப் பேணுவார்கள் என்றார். சிந்தையுள்ளே வைத்தல்:- இடையறாப் பேரன்புடன் சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சினராதல்.

எழிலாரிராச சிங்கத்தை யிராமேச்சுரத்தே மேழிலேற்றைக்
குழலார்கோதை வரைமார்பிற் குற்றாலத்தெங் கூத்தனை
நிழலார்சோலை நெடுங்களத்து நிலாயநித்த மணாளனை
அழலார்வண்ணத் தம்மானை யன்பிலணைத்து வைத்தேனே.

மாலைத்தோன்றும் வளர்மதியை மறைக்காட்டுறையு மணாளனை
ஆலைக்கரும்பி னின்சாற்றை யண்ணாமலையெம் மண்ணலைச்
சோலைத்துருத்தி நகர்மேய சுடரிற்றிகழுந் துளக்கிலியை
மேலைவானோர் பெருமானை விருப்பால்விழுங்கி யிட்டேனே.

சோற்றுத்துறையெஞ் சோதியைத் துருத்திமேய தூமணியை
ஆற்றிற்பழனத் தம்மானை யாலவாயெம் மருமணியை
நீற்றிற்பொலிந்த நிமிர்திண்டோ ணெய்த்தானத்தெந் நிலாச்
[சுடரைத்
தோற்றக்கடலையடலேற்றைத்தோளைக்குளிரத் தொழுதேனே.

151. எழில் - அழகு, எழுச்சி. இராசசிங்கம் :- அரிமா னேறு. இராமேச்சுரத்து ஏறு :- இராவணனை வென்ற இராமனுக்கு விளைத்தருளிய விறல் குறித்தது. குழலார் கோதை :- 'குழல்வாய் மொழியம்மை' அம்பிகை திருப்பெயர். கூத்தன்:- சித்திரசபைத் திருக்கூத்தன். (51) நிலாய :- நிலாவிய, என்றும் பிரசித்தியுற்ற. மணாளன் - சிவமணாளன். நித்திய மணாளன். 'அழல் வண்ணன்' - தீவண்ணன். அன்பு இல் - அன்பே கோயிலாக. ஒரு தலம். 'விருப்பால்' 6. 44. 6; 6. 81. 4.

152. 'மாலை மதியம்' மறைக்காட்டுறையும் மணாளன் :- தூண்டு சுடர்......மணாளன் தானே' (திருத்தாண்டகம்). ஆலைக் கரும்பின் சாற்றை :- 'கரும்பினிற் கட்டி போல்வார்'. அண்ணாமலை எம் அண்ணல்:- அண்ணாமலை என்றதன் காரணம் யாது ? துருத்தியில் இன்றும் சோலைவளம் பெரிது. சுடரின் :- சுடரினும் (ஞாயிற்றினும்) அசைவற நின்ற பேராற்றலை. துளக்கு - அசைவு. வானோர் பெருமானை விருப்பினால் விழுங்கி யிட்டேன். சிவபிரானை விழுங்கியிடுதல்:- திருமந்திரம். 2592.

153. சோற்றுத் துறைச் சோதி :- பெருமானது முடி மேலுள்ளபிறை, (பதிகம் 85) மிகப் பாராட்டப்படுதலின். துருத்தி

புத்தூருறையும் புனிதனைப் பூவணத்தெம் போரேற்றை
வித்தாய்மிழலை முளைத்தானை வேள்விக்குடியெம் வேதியனைப்
பொய்த்தார்புரமூன் றெரித்தானைப் போதியின்மேய புராணனை
வைத்தேனென்றன் மனத்துள்ளே மாத்தூர்மேய மருந்தையே.

மேயதூமணி :- முற்கூறிய துருத்தி திருத்துருத்தி. இது திருப்பூந்துருத்தி. 'யார்க்கும் அறிவரிய செந்தீயை வாட்டும் செம்பொன்' (850). பழனத்தம்மான் :- அது சாலப் பொருத்த முடையதேனும், ஆற்றிற் பழனத்து என்றது காவிரிப் பாய்ச்ச லுடைய வயல் வளம் குறித்து நின்ற பெயர்க்குக் காரணமாம். வாயில் புகுவார் என்றதும் ஆலவாய் தமிழ் ஆதல் காட்டும். ஆலவாய்.........அருமணி :- திருவாலவாய் என்பது ஆலமரம் பற்றிய காரணப் பெயர். 'கடுவாயர் தமைநீக்கி' எனத் தொடங்குந் திருத்தாண்டகத்தில் அண்ணல் வாயில், நெடு வாயில், நெய்தல் வாயில், முல்லை வாயில், ஞாயில் வாயில், மடுவார் தென்மதுரைநகா ஆலவாயில் புனவாயில், குடவாயில், குணவாயில் என்பனவற்றை நோக்கின் அது வடமொழிப் பெயரன்மை புலனாகும். மணியை :- மாணிக்கம் விற்ற மாணிக் கத்தை. திருநீற்றினால் விளங்கிய தோள். நிலாச் சுடர். நெய் யொளி அதனொளி போன்றது. தோற்றக் கடலை கடல்போலும் தோற்றத்தையுடைய சிவானந்தனை. பிறவிப் பெருங் கடலை. அடல் - அழிக்கும். தோளைக் குளிரவைத்து இறைஞ்சுதல்.

154. புத்தூர்ப் புனிதன் :- 'அறிவரிய நுண்பொருள்கள் ஆயினான் காண்' என்று பின்வருவதுணர்க. திருப்பூவணத்தும் எம்போரையேற்றை :- பற்றுர் தம்மேல் சேறுக வரைவில்லால் எரித்தல்தோன்றும் பூவணத்தெம் புனிதனார்க்கே' மிழலை முளைத்த வித்து :- 'வித்தினின் முளையர் வீழிமிழலையுள் விகிர்த னாரே' (627) இளமைத் திருமணக் கோலத்தர் :- கலியாண சுந்தரர். (716) மணிமிழலை மணாளர் (223-10) வேள்விக்கு வேதமுதலாதல் 'வேத வேள்வி' என்றதனால் விளங்கும். பொய்த்தார் - பொய்ந்நெறியொழுகியவர். புராணர் - தொல் லோர்; மாத்தூர் மருந்து :- 'உன்னும் உளது ஐயம் இலது உணர்வாய் ஓவாது, மன்னு பவம் தீர்க்கும் மருந்து' (திருவருட் பயன் 10) மாத்தூர் :- ஆமாத்தூர் என்பதன் முதற் குறையாம்.

முந்தித்தானே முளைத்தானை மூரிவெள்ளே றூர்ந்தானை
அந்திச்செவ்வான் படியானை யரக்கனுற்ற லழித்தானைச்
சிந்தைவெள்ளப் புனலாட்டிச் செஞ்சொன்மாலை யடிச்சேர்த்தி
எந்தைபெம்மா னென்னெம்மா னென்பார்பாவ நாசமே. 155

திருச்சிற்றம்பலம்

155. 'முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி' மூரி - முதிரி என்பதன் மரூஉ. படி - ஒப்பு. பிரதிமை அரக்கன் - இராவணன். ஆற்றல் திருக்கைலையைத் தூக்கு மளவு பெருகிய வலிமை. சிந்தை வெள்ளப் புனலாட்டில் 'நேயமே நெய்யும் பாலா நிறைய நீர் அமைய ஆட்டி' (739), 'தம் அன்பாம் மஞ்சனநீர் தாம் ஆட்டி' (திருக்களிற்றுப்படியார்), 'இறவாத ஆனந்தம் எனும் திருமஞ்சனம் ஆட்டி' (பெரிய புராணம்) என்பாரது பாவம் நாசமே. அடிச்சேர்த்தி - திருவடியிற் சேரச் சூட்டி, பெம்மான், எம்மான் என்பன மரூஉ. பாவம் நாசம் - தீவினை தீரும்.

வெய்யநீற் றறையதுதான் வீங்கிளவே னிற்பருவந்
தைவருதண் டென்றலணை தண்கழுநீர்த் தடம்போன்று
மொய்யொளிவெண் ணிலவலர்ந்து முரன்றயா ழொலியினதாய்
ஐயர்திரு வடிநீழ லருளாகிக் குளிர்ந்ததே.

அண்ண லருந்தவ வேந்த ராணைதம் மேல்வரக் கண்டு
விண்ணவர் தம்பெரு மானை விடையுகந் தேறும் பிரானைச்
சுண்ணவெண் சந்தனச் சாந்து தொடுத்த திருப்பதி கத்தை
மண்ணுல குய்ய வெடுத்து மகிழ்வுட னேபாடு கின்றார்.

சொற்றுணை வேதிய னென்னுந் தூமொழி
நற்றமிழ் மாலையா நமச்சி வாயவென்
றற்றமுன் காக்குமஞ் செழுத்தை யன்போடு
பற்றிய வுணர்வினாற் பதிகம் பாடினார்.

## 16. திருப்புகலூர்

### திருப்பதிக வரலாறு

திருப்புகலூரிலே திருத்தொண்டுசெய்துறையும்நாளில் அருளிய வற்றுள் ஒன்று இத் திருப்பதிகம்.

பண் இந்தளம்

திருச்சிற்றம்பலம்

செய்யர் வெண்ணூலர் கருமான் மறிதுள்ளும்
கையர் கனைகழல் கட்டிய காலினர்
மெய்யர் மெய்ந்நின் றவர்க்கல்லா தவர்க்கென்றும்
பொய்யர் புகலூர்ப் புரிசடை யாரே 156

மேகநல் லூர்தியர் மின்போல் மிளிர்சடைப்
பாக மதிநுத லாளையோர் பாகத்தர்
நாக வளையினர் நாக வுடையினர்
போகர் புகலூர்ப் புரிசடை யாரே. 157

156. திருப்புகலூர்ச்சடையனார் செவ்வண்ணர் ; வெள்ளை நிறத்துப் பூணூலணிந்த மார்பர் ; திருக்கையிலே துள்ளுகின்ற கரிய மான் கன்றினை ஏந்தியவர் ; ஒலிக்கின்ற வீரக் கழலைக் கட்டிய திருவடியுடையவர். மெய்ந்நெறி நின்று ஒழுகும் அடியவர்க்கு மெய்யர் ; அத் தலைமையரல்லாதவர்க்கு என்றும் பொய்யர். 'மெய்யானைத் தன்பக்கல் விரும்புவார்க்கு ; விரும்பாத அரும்பாவியவர்கட்கு என்றும் பொய்யானை........ச் சேராதார் நன்னெறிக்கட் சேராதாரே.' (6. 66. 5) 'அன்பர்க்கு மெய்யானை அல்லாதார்க்கு அல்லாத வேதியனை ஐயாறமர்ந் தானைப் பாடுதுங்காண் அம்மானாய்' (திருவாசகம். 13.) 'சேய வன்காண் நினையார்க்கு ; சித்தம் ஆரத் திருவடியே உள்கி நினைந் தெழுவாருள்ளம் ஏயவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சியேகம்பன்காண் அவனென் எண்ணத்தானே' (6 64.4) பா. 158. பார்க்க.

157. திருப்புகலூர்ச் சடைமுடியார் 'புயல்வணற்கு அருளிப் பொன்னெடுஞ் சிவிகையா வூர்ந்த மேகநாயகன்,'

பெருந்தாழ் சடைமுடி மேற்பிறை சூடிக்
கருந்தாழ் குழலியுந் தாமுங் கலந்து
திருந்தா மனமுடை யார்திறத் தென்றும்
பொருந்தார் புகலூர்ப் புரிசடை யாரே. 158

அக்கா ரணிவட மாகத்தர் நாகத்தர்
நக்கா ரிளமதிக் கண்ணியர் நாடோறும்
உக்கார் தலைபிடித் துண்பலிக் கூர்தோறும்
புக்கார் புகலூர்ப் புரிசடை யாரே. 159

(திருவிசைப்பா 46). மேகவண்ணனை விடையாகக்கொண்டு ஊர்தல் உடையவர் (திருவாசகம். 269). மின்னலைப் போலத் திகழும் சடைக் கண் உள்ள மதியின் பாகம் ஆகிய பிறையைப் போலும் நெற்றியையுடைய மங்கையை ஒரு பாகத்திலுடையவர். நாகம் - பாம்பு, யானை. சர்ப்பகங்கணம் யானைத்தோலுடை இரண்டும் சிவபிரானுக்கு உள. பாம்பினைக் கங்கணமும் கச்சும் ஆக உடையவருமாம். போகர் - ' போகியாயிருந் துயிர்க்குப் போகத்தைப் புரிதல் ' உடையவர். மேகம் என்றதால் மால்விடையே கொள்ளப்படும். அறவிடையும் மழ (உயிர்) விடையும் ஈண்டுப் பொருந்தா. வளை - கங்கணம். உடை :- கச்சுடை.

158. திருப்புகலூர்க்கடவுள், நாலுகின்ற பெரிய சடையின் முடி மேல் பிறையை அணிந்து, தொங்கிய கருங் கூந்தலாளாகிய அம்பிகையும் தாமும் கூடித் (திருந்தியமனம் உடையவர் திறத்தில் இடைவிடாது பொருந்தியிருப்பாராய்த்) திருந்தாத மனமுடையவர் திறத்தில் எப்பொழுதும் பொருந்துவரல்லர், புகலூர் அம்பிகை ' கருந்தாழ்குழலி '. ' திருந்தா அமணர்தம் தீநெறிப் பட்டுத் திகைத்து, முத்திதரும் தாளிணைக்கே சரணம் புகுந்தேன். வரையெடுத்த பொருந்தா அரக்கன் உடல் நெரித்தாய் ' என்று (922) பின் வருவதும், திருந்தாமை பொருந்தாமைகட்கு ஒரு விளக்கம் ஆக்கும். ' சிந்தனையைத் திருத்தி ஆண்ட சிவலோகா ' (திருவாசகம்) ' திருந்துதொண்டர்கள் ' (3206).

159. திருப்புகலூர்ச்சடைப்பெருமான், அக்கு (- உருத்திராக்கம்) நிறைந்த அழகிய மாலையைப் பூண்ட மார்பர். பாம்பு

ஆர்த்தா ருயிரடு மந்தகன் றன்னுடல்
பேர்த்தார் பிறைநுதற் பெண்ணினல் லாளுட்கக்
கூர்த்தார் மருப்பிற் கொலைக்களிற் றீருரி
போர்த்தார் புகலூர்ப் புரிசடை யாரே. 160

தூமன் சுறவந் துதைந்த கொடியுடைக்
காமன் கணைவலங் காய்ந்தமுக் கண்ணினர்
சேம நெறியினர் சீரை யுடையவர்
பூமன் புகலூர்ப் புரிசடை யாரே. 161

அணிந்தவர். விளக்கம் உடைய இளம் பிறையைத் தலையிற் கண்ணியாகச் சூடியவர். 'மாதர்ப் பிறைக் கண்ணியான்'. நாள் தோறும் பிரம கபாலத்தினைக் கைப்பிடித்து, உண்ணும் பலி வேண்டி, ஊர்தோறும் புகுந்தவர். (8) 'உலந்தார் தலைகலன் ஒன்று ஏந்தி வானோருலகம் பலிதிரிவாய்' (6. 47. 8) 'பல் லார்ந்த வெண்டலை கையில் ஏந்திப் பசுவேறி ஊரூரன் பலி கொள்வானே' (6. 47. 9) 'உலந்தார் வெண்டலை உண்கல னாகவே வலந்தான்' (5. 54. 12). பா. 9. பார்க்க.

160. திருப்புகலூரில் எழுந்தருளிய சடையுடையவர், பெருமுழக்கம் இட்டு உடல்களின் அரிய உயிர்களை நீக்கும் அந்தகனது உடலையும் உயிரையும் கூறாக்கினார். பிறைநுதலையுடைய பெண்ணினல்லாள் அச்சம் உறும்படி, யானையை உரித்துப் போர்வையாகக் கொண்டார். கூர்த்து ஆர் மருப்பு - கூர்மை யுடையதாய்ப் பொருந்திய கொம்பு, கொலை செய்யும் களிறு (- ஆண் யானை). ஈர் உரி - ஈர்ந்து உரித்த தோல், உரி :- முதனிலைத் தொழிலாகு பெயர் 'பெண்ணினல்லாளொடும் பெருந்தகை இருந்ததே' ஈர் - ஈரிய, குளிர்ந்த எனலுமாம். ஆருயிரை ஆர்த்து அடும் அந்தகனும் ஆம். ஆர்த்தல் சடையா ரதுமாம்.

161. தூ - வலி, மன் - பொருந்திய, சுறவம் - சுறுமீன், சுறுக்கொடி - மீனக்கொடி. அதையுடைய காமன் கருவேள் (மன்மதன்). அவன் எய்த அம்பின் வன்மையைக் காய்ந்த நெற்றிக்கண்ணோடு இரு சுடரையும் இரு கண்ணாக உடையவர். 'சுறவக் கொடி கொண்டவன் நீறதுவாய் உற நெற்றி விழித்த எம் உத்தமனே' (2. 23. 4) சேமம் - நன்மை. சேமநெறி - நன்னெறி. 'எம்பிரான் அன்பர் என்றே நன்னெறி காத்த சேதி

உதைத்தார் மறலி யுருளவோர் காலால்
சிதைத்தார் திகழ்தக்கன் செய்தநல் வேள்வி
பதைத்தார் சிரங்கரங் கொண்டுவெய் யோன்கண்
புதைத்தார் புகலூர்ப் புரிசடை யாரே. 162

கரிந்தார் தலையர் கடிமதின் மூன்றும்
தெரிந்தார் கணைகள் செழுந்தழ லுண்ண
விரிந்தார் சடைமேல் விரிபுனற் கங்கை
புரிந்தார் புகலூர்ப் புரிசடை யாரே. 163

நாதனார்' (பெரியபுராணம்) என்றதால், 'காத்தற்குரிய நெறி' எனலுமாம். சீரையுடை - மரவுரியாடை. 'சீரை உடையவர்' என்பதற்குச் சீர் கொண்டவர் எனலுமாம். 'சீருடையார்...... பெரும்புலியூர் பிரியார்' (2. 67. 9). 1. 'முருகன் முப் போதும்செய் முடிமேல் வாசமாமலர் உடையார் வர்த்தமானீச் சரத்தாரே' (2. 92. 5) என்று பிள்ளையார் போற்றிய முருக நாயனார் பூமாலை கட்டி வழிபட்ட திருத்தலம் ஆதலின் பூ(மாலை) மன் (னிய) சடையார் ஆனார். 2. பூமன்புகலூர் - பூக்கள் மன்னிய திருப்புகலூர். (சோலை பொய்கை நிலம் முதலிய வளம் எல்லாம் குறித்தவாறு). 3. பூ - பூமி. மன் - நிலைபெற்று. பூலோகத்துக்குத் துன்பம் நேர்ந்துழிப் புகலாம் ஊர். 4. பூமன் - மலரவன் என்று கொண்டு அவன் காணாத சடையோடு பொருந் தக் கூறலும் கூடும். 'தூமென் மலர்க்கணை' (995) பார்க்க.

162. திருப்புகலூர்ச் சடைப்பிரானார், காலன் உருள ஒரு காலால் உதைத்தார்; தக்கன் செய்த நல்ல வேள்வியை (- யாகத்தை) அழித்தார்; பதை பதைத்து ஓட முயன்ற மலரவன் தலையையும் வெய்யதீக்கையையும் கொண்டார்; வெய்யோன் கண்ணையும் அவித்தார். 'எச்சன்..... பகன் கண் கொண்டார்; . ...வியாத்திரன் தலையும் வேறுக் கொண்டார்; விறல் அங்கி கரம் கொண்டார்;......தக்கன்றன் வேள்வியெல்லாம்......அழித் துக்கொண்டு அருளும் செய்தார்' (6. 96. 9). (திருவாசகம் திருவுந்தியார். 7. 12. 13. 16.) சில பதிப்பில் இதுவும் அடுத் ததும் முன்பின்னாயுள்ளன.

163. சடையார் கரிந்தவர் தலையை உடையர்; மூன்றுகடி மதிலும் செழுந்தழல் உண்ணக் கணைகள் தெரிந்தார். 'சண்ட

ஈண்டா ரழலி னிருவருங் கைதொழ
நீண்டார் நெடுந்தடு மாற்ற நிலையஞ்ச
மாண்டார்த மென்பு மலர்க்கொன்றை மாலையும்
பூண்டார் புகலூர்ப் புரிசடை யாரே. 164

கறுத்தார் மணிகண்டங் கால்விர லூன்றி
இறுத்தா ரிலங்கையர் கோன்முடி பத்தும்
அறுத்தார் புலனைந்து மாயிழை பாகம்
பொறுத்தார் புகலூர்ப் புரிசடை யாரே. 165

திருச்சிற்றம்பலம்

மேல் விரிபுனற் கங்கை விரிந்தார். ' 'புனற்கங்கை' 'செழு நீர்ப் புனற் கங்கை' என்றது எஞ்ஞான்றும் நீருடைமை குறித்து. விரிந்தது கங்கையாயினும், விரிவித்தார் செயலாதலின் விரிந்தார் என்றார்.

164. ஈண்டு ஆர் அழலின் நீண்டார்; ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதியாய் எங்கும் நிறைந்தார். கைதொழ நீண்டார். நெடுந்தடுமாற்ற நிலையை (யாவரும்) அஞ்ச நீண்டார். கண்டபோதெல்லாம் நெடுங்காலத்துக்கு முன் நிகழ்ந்த தடுமாற்ற நிலையை எண்ணி அஞ்சும்படி, மாண்டார் எலும்பையும் பூண்டார். மாலையையும் பூண்டார். 'இருவர்களுடல் பொறையொடு திரிஎழிலுருவுடையவன்' (1. 22. 7) "பெருங் கடன் முடிப் பிரளயங் கொண்டு பிரமனும் போய் இருங்கடன் முடி இறக்கும்; இறந்தான் களேபரமும் கருங்கடல் வண்ணன் களேபரமும் கொண்டு கங்காளராய் வருங்கடன் மீளநின்றெம் இறை நல்வீணை வாசிக்குமே" (4. 112. 7) 'சிரமாலை சூடி நின்றுதவந்தான் இருக்கும் சரக்கறையோ என்தனி நெஞ்சமே', 'தலைமாலை தலைக்கணிந்து......தேரும் தலைவன்'.

165. மணி - நீலமணி (போலும்). கண்டம் - 'திருநீல கண்டம்'. கறுத்தார் - நஞ்சு உண்டமையால் கறுத்தார். கறுப்பு நிறத்துரு உணர்த்திற்று. (தொல். உரி. 77.) இலங்கையர் கோன் (இராவணன்) பத்து முடியும் ஒரு கால் விரலை ஊன்றி இறச்செய்தார். புலனைந்தும் அறுத்தார் :- யோக முத்தி உதவும் யோகியானார். ஆயிழை பாகம் பொறுத்தார் :- உயிர்க்குப் போகத்தைப் புரியப் போகியானார். அறுத்தார்......பொறுத்தார் :- பொருள் முரண்.

## 17. திருவாரூர் அரநெறி

### திருப்பதிக வரலாறு

நீடுபுகழ்த் திருவாரூர் நிலவு மணிப் புற்றிடம் கோள் நிருத்தரை அன்போடு காலங்களில் அணைந்து கும்பிட்டுப் பல பதிகங்கள் பாடி ஆர்வம் பெருக நைந்து மனம் கரைந்து உருகி நயந்து சென்ற நாவரசர், தேன் மருவுங் கொன்றையார் திருவாரூர் அரனெறியில் திகழும் தன்மையான திறமும் போற்றி, அணிவீதிப் பணி செய்து அமரும் நாளில் பாடியருளியது இத் திருப்பதிகம்.

பண் — இந்தளம்

திருச்சிற்றம்பலம்

எத்தீ புகினு மெமக்கொரு தீதிலை
தெத்தே எனமுரன் றெம்மு ளுழிதர்வர்
முத்தீ யனையதோர் மூவிலை வேல்பிடித்
தத்தீ நிறத்தா ரரநெறி யாரே. 166

வீரமும் பூண்பர் விசயனொ டாயதோர்
தாரமும் பூண்பர் தமக்கன்பு பட்டவர்
பாரமும் பூண்பர்நற் பைங்கண் மிளிரர
வாரமும் பூண்ப ரரநெறி யாரே. 167

166. ' அரநெறி ' என்றிருப்பதால், ' அறநெறி ' என்றோ ' அரனெறி ' என்றோ இருந்து பிழைத்ததாதல் வேண்டும். இது பொருத்தம் இல்லாதது. அரனெறியார் அத் தீநிறத்தார். அவர் முத்தீப் போல்வதொரு மூவிலை வேலைப் பிடித்து, எம் உள்ளே தெத்தே என்ன முரன்று திருக்கூத்தாடுகின்றார். அதனால், எமக்கு எத் தீ புகினும் தீது இல்லை. (4. 94. 2) ' விடையான் விரும்பி என் உள்ளத்து இருந்தான் இனி நமக்கு இங்கு அவலம் அடையா ; அருவினை சாரா ; நமனை அஞ்சோம் ' (ஷ. 3.) தெத்தே எனல் அநுகரணவோசை. ' எத்திசை ' என்றல் பொருந்தாது. ' முததீ மூவிலை வேல் ' ' அத்தீநிறத்தார் அற நெறியார் ' ஆதலின் எத தீ புகினும் எமக்கு ஒரு தீதும் இல்லை என்பதே பொருந்தும்.

167. அரனெறியார் நல்ல பசிய கண் மிளிரும் பாம்பு மாலையைப் பூண்பர். விசய (அருச்சுன) னொடு போர் செய்ய

தஞ்ச வண்ணத்தர் சடையினர் தாமுமோர்
வஞ்ச வண்ணத்தர் வண்டார்குழ லாளொடும்
துஞ்ச வண்ணத்தர் துஞ்சாதகண் ணார்தொழும்
அஞ்ச வண்ணத்த ரரநெறி யாரே. 168

வேண்டி அம்மையுடன் சென்றாராதலின் தாரமும் பூண்பர். (7. 66. 4) தாரம் - கிழத்தி ; உமையம்மையார். தமக்கு அன்பு பட்டவர் - திருவடிப் பற்றுள்ளவர். பற்று :- (அன்பு) பத்து என மருவி வழங்கும். அரவு ஆரம் - பாம்பு மாலை. 'சர்ப்பா பரணம்'.

168. தஞ்சவண்ணத்தர் - (தம்மைச் சரண் என்று அடைந்தவர்க்குத்) தஞ்சமாகும் இயல்பினர். (தண் + து + அம்) தஞ்சம். எளிமையராயிருப்பவர். 'தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே' (தொல். இடை. 18). வஞ்சம் (வல் + து + அம்). தஞ்சமும் வஞ்சமும் மறுதலைச் சொற்கள்.

[1] தஞ்சமும் [2] தருமமும் [3] தகவு மேஅவர்
[1] நெஞ்சமும் [2] கருமமும் [3] உரையு மேல்நெடு
[1] வஞ்சமும் [2] பாவமும் [3] பொய்யும் வல்லநாம்
உய்ஞ்சுமோ அதற்கொரு குறைஉண் டாகுமோ ?

இதில் (கம்பர். யுத்த. கும்ப. 85.) தஞ்சம்×வஞ்சம்; தருமம்× பாவம்; தகவு × பொய் ஆகிய மூவேறு வகையும் முறையே இராமராதி இராவணாதிகட்கு நெஞ்சமும் கருமமும் உரையுமா தலைக் குறித்தல் காண்க. வண்டு ஆர் குழல். குழலாள் - புவநேசுவரி. துஞ்ச - துயில. துஞ்சாத கண்ணர் - துயிலாத கண்ணையுடையர். (730). 'விழித்தகண் குருடாய்த் திரிவீரர்' (திருவிளையாடல்) 'விழித்துறங்கும் தொண்டர்' 'மெய்யுணர்ச் சிக்கண் விழிப்பத் தூங்குவார்' (குமரகுருபரர் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ். 75. நீதிநெறிவிளக்கம். 102) 'துஞ்சாக்கண்ண வடபுலத்தரசு' (புறம். 31) அஞ்சவண்ணத்தர் - அம்சமந்திர ஜபயோகம் புரியும் வண்ணத்தர் அஜபாயோகம். திருவாரூரில் நிகழ்த்தும் இறைவன் திருக்கூத்து. 'அஜபாநடனம்' எனப் படும். 5. 28. 1 - 10 பார்க்க.

விழித்தனர் காமனை வீழ்தர விண்ணின்
றிழித்தனர் கங்கையை யேத்தினர் பாவம்
கழித்தனர் கல்சூழ் கடியரண் மூன்றும்
அழித்தன ராரூ ரரநெறி யாரே. 169

துற்றவர் வெண்டலை யிற்சுருள் கோவணம்
தற்றவர் தம்வினை யானவே லாமற
அற்றவ ராரூ ரரநெறி கைதொழ
உற்றவர் தாமொளி பெற்றனர் தாமே. 170

கூடர வத்தர் குரற்கிண் கிணியடி
நீடர வத்தர்முன் மாலை யிடை யிருள்
பாடர வத்தர் பணமஞ்சு பைவிரித்
தாடர வத்த ரரநெறி யாரே. 171

---

169. காமனை - மன்மதனை. வீழ்தர - வீழ. உயிர்கள் விரும்ப ; போகம் உற. விழித்தனர் - நெற்றி விழி திறந்தார். யோகத்தில் இருந்து விழித்தார். கங்கையை வானிலிருந்து கீழ் இழியச் செய்தனர். ஏத்தி வழிபட்டவரது தீவினைகளைக் கழியச் செய்தார். திரிபுரம் எரித்து அழித்தார்.

170. வெண்டலையில் - பிரமகபாலத்திலே, துற்றவர் - பிச்சை வாங்கி உண்டவர். சுருள் கோவணம் :- வினைத் தொகை. தற்றவர் - இறுக்கிக் கட்டியவர். தற்றல் - இறுக வுடுத்தல். 'குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம் மடிதற்றுத் தான்முந் துறும்' (குறள். 1023). தம் வினையான எல்லாம் அற அற்றவர் :- இயல்பாகவே வினையின் நீங்கி விளங்கிய துறவாளர். 'அற்றவர்க்கு அற்ற சிவன்' 'அற்ற வர்க்கு அற்றவன்' (இருபா இருபஃது. 20.) கைதொழவுற்ற அடியவர்தம் வினை எனக் கொண்டுரைத்தல் நன்று. தொழ உற்றவரே சிவப்பிரகாசம் பெற்றவராவர். உருர் பெருர் என்க. (172. பார்க்க) உற்றவர் வினை எல்லாம் அற அற்றவர் (- அறு வித்தவர்) என்க. ஒளி - 'உள்ளொளி' உரைமாண்ட உள் ளொளி (திருவாசகம். 326).

171. அரனெறியார் எழுவாய். 'அரவத்தர்' என்னும் நான்கும் பயனிலைகள். கூடும் சிலம்பினர். திருவடியிலே குரலை (ஒலியை) யுடைய கிண்கிணியால் நீடும் பேரொலியினர்,

கூடவல் லார்குறிப் பில்லுமை யாளொடும்
பாடவல் லார்பயின் றந்தியுஞ் சந்தியும்
ஆடவல் லார்திரு வாரூ ரரநெறி
நாடவல் லார்வினை வீட வல்லாரே. 172

முன்மாலையிடையிருளிலேபாடும் பேரொலியினர். பை - படம். அஞ்சுபணம் - ஐந்தலை ; பணம் - பாம்பின் படம். ஈண்டுத் தலையின் மேற்று ; பை என வேறுள்ளதால். அரவத்தர் - பாம்பினையுடையவர். பணம் உடையது பணி. குணம் உடையது குணி. கரம் உடையது கரி (- யானை). இவ்வாறு தமிழில் அமையா. பிணம் - பிணி, மணம் - மணி எனல் இல்லை. பண்பு பண்பி உறுப்பு உறுப்பி என்னும் முறைமை வேறு.

172. உமையாளொடும் குறிப்பிற் கூடவல்லார். குறித்தல் - இடைவிடாது நினைத்தல். (நினைந்தவர் உள்ளத்தில்) உமையாளொடும் கூடவல்லார் - அம்மையப்பராயெழுந்தருளிப் பேரின்பம் நல்கவல்லார் எனலும் பொருந்தும். அந்தியும் சந்தியும் பாடவல்லார் :- அந்தி சந்தி ஆதல் ' 6. 5. 9. 6. 78. 5. ' அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி முந்தியெழும் பழைய வல்வினை மூடாமுன் சிந்தை பராமரியாத் தென்றிருவாரூர் புக்கெந்தை பிரானுரை என்று கொல் எய்துவதே. ' (7. 83. 1) என்பதில், அந்தி நண்பகல் சந்தி என்பன கொள்க இரவும் பகல் சேர்வதும் பகலும் இரவும் சந்திப்பதும் அந்தி சந்தி. இரவு பகல் அந்தத்தில் விளங்குவது அந்தி. காலையந்தி மாலையந்தி முச்சந்தி என்று வழங்குவதாற் சந்தியின் திரிபென்றே கொள்க. ' அந்தி திரிந்து அடியாரும் நீரும் அகந்தோறும் சந்திகள் தோறும் பலிக்குச் செல்வது தக்கதே ' (7. 43. 8) ' முட்டாத முச்சந்தி மூவாயிரர்க்கு மூர்த்தி என்னப்பட்டான் ' (7. 90. 7) அரனெறி கைதொழ உற்றவரே ஒளி பெற்றனர் என்றவாறே ஈண்டும் அரனெறி நாடவல்லாரே வினை வீடவல்லார் என்றதுணர்க. தில்லையில் நள்ளிராக் காட்சியும் திருவாரூரில் திருவந்திக் காப்புக் காட்சியும் மிக்க சிறப்புடையன. (திருவாரூருலா. 203-4, 368-377)

பாலை நகுபனி வெண்மதி பைங்கொன்றை
மாலையுங் கண்ணியு மாவன சேவடி
காலையு மாலையுங் கைதொழு வார்மனம்
ஆலைய மாரு ரரநெறி யார்க்கே. 173

முடிவண்ணம் வானமின் வண்ணந்தம் மார்பின்
பொடிவண்ணந் தம்புக ழூர்தியின் வண்ணம்
படிவண்ணம் பாற்கடல் வண்ணஞ்செய் ஞாயி
றடிவண்ண மாரு ரரநெறி யார்க்கே. 174

173. அரனெறியார்க்கு, பாலைச் சிரிக்கும் வெண் பிறை கண்ணியாகும். பைங்கொன்றை மாலையாகும். அவர்தம் சேவடியைக் காலையும் மாலையும் கைதொழுவாரது மனம் ஆலய மாகும். ' நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன் ' (5. 2. 1.) ' கோயிலா என்சிந்தை கொண்டாய் போற்றி ' அடியவர் திருமேனி, திருவுள்ளம் எல்லாம் கோயிலாகக் குறித்தல் உண்டு. ' காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக, வாய்மையே தூய்மையாக மனமணியிலிங்கமாக நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டிப், பூசனை ஈசனார்க்குப் போற்றுஅவிக் காட்டினோமே ' (738) ' உள்ளம் பெருங்கோயில் ஊன் உடம்பு ஆலயம் ' என்ற திருமந்திரம் உடலையும் உள்ளத்தையும் முறையே கோயிலும் மூலட்டானமுமாகக் குறித்தலை உணர்க. ' ஓங்குடலம் திருக்கோயில் உள்ளிடம் உள்ளிடமாம் ' (ஞான பூசாவிதி) என்றதும் அதுவே. ' மறவாமையாலமைத்த மனக் கோயில் ' (சேக்கிழார்). ' நின்ற வினைக்கொடுமை நீங்க இரு பொழுதும் துன்று மலரிட்டுச் சூழும் வலம் செய்து தென்றல் மணம் கமழும் தென்திருவாரூர் புக்கு என்றன் மனம் குளிர என்று கொல் எய்துவதே. ' (7. 83. 2) என்றருளியதும் காண்க. ' ஆலையம் ' எதுகை நோக்கிய போலி.

174. திருவாரூர் அரநெறியார்க்குத் திருமுடிவண்ணம் மேகத்தின் மின்னல்வண்ணம். அவர்தம் திருவெண்ணீற்று வண்ணம் அவர்தம் புகழும் ' நரைவெள்ளேறு ' (வெள்விடை யூர்தியு)ம் உற்றவண்ணம். அவரது திருமேனிவண்ணம் பாற் கடல் வண்ணம். அவரது திருவடிவண்ணம் செஞ்ஞாயிற்று

போன்னவில் புன்சடை யானடி யின்னிழல்
இன்னருள் சூடியெள் காதுமி ராப்பகல்
மன்னவர் கின்னரர் வானவர் தாந்தொழும்
அன்னவ ராரு ரரநெறி யாரே. 175

வண்ணம். புகழூர்தீ :- உம்மைத்தொகை. இரண்டனுருபும் பயனும் உடன்றொக்க தொடருமாம். (பெரியபுராணம் திருமலைச் சிறப்பு. 2. 12. பார்க்க.) காஞ்சிப். நாட்டுப். 10. வன்மீக. 3. தணிகைப். 24. 126. 689. 2892. அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ். 30. 82. என்றவற்றிலும் செந்தலை வரலாற்றிலும் புகழ் வெண்மை நிறத்தது என்றதைக் காண்க. 'படிஎழுதலாகாத மங்கையோடுமேவன்' என்பதில், மங்கை வடிவைப் படி எழுதலரிதென்ற லுணர்க.

175. அன்னவர் (- அத்தன்மையர்.) அரனெறியார் 'அவன்' 'அன்னவன்' இரண்டும் ஒரு பொருளன அல்ல. 'அவன்' என்பது ஆடூஉவை மட்டும் சுட்டும். 'அன்னவன்' என்பது அத் தன்மையன் எனல் குறிக்கும். போன் நவில் புன்சடையான் :- பொன்போலும் சடை. மென்மையுடைய சடை. புன்மை (- அற்பம்) எனலாகாது என்று மேலும் குறித்தாம். ஈண்டுப் 'பொன்' என்று வேறுள்ளமையால், புன்மை மென்மை குறித்து நின்றது. திருவாரூரில் பூவேந்தரும் கின்னரரும் தேவேந்திரன் முதலியோரும் இரவும் பகலும் வந்து வழிபடுதலை வெருது, சிவனடி நிழலாம் இனிய அருளைச் சூடித் தொழுகின்றனர். அத்தகு பெருமையுடையவர் அரனெறியார். அருள் சூடல் :- திருவருட் சூழலுள் இருத்தல். சூழ் + து + அல் = சுற்றல். சூழ் + து + அல் = சூடல். சூழ்த்தல் பிறவினை. முழ் + து = முற்று. முழ் + து + இ = முடி. (தமிழ்ச்சொல் லமைபு. பக். 25, 48.) எள்காது - இகழாமல். இரவும் பகலும் இடையீடின்றி அரசரும் கின்னரரும் தேவரும் தொழும் பேற்றியினையுடையவர் திருவாரூர் அரனெறியார் என்ற சிறப்பு உணர்க.

பொருண்மன் னனைப்பற்றிப் புட்பகங்கொண்ட
மருண்மன் னனையேற்றி வாளுட னீந்து
கருண்மன்னு கண்டங் கறுக்கநஞ் சுண்ட
அருண்மன்ன ராரூ ரரநெறி யாரே. 176

திருச்சிற்றம்பலம்

176. பொருள்மன்னன் - குபேரன். புட்பகம் - புட்பக விமானம் ; இராவணன் திக்குவிசயம் புரிந்து குபேரனிடத்தில் இருந்து பறித்தது. மருள்மன்னன் - காமத்தால் தனது திறலும் புகழும் அறிவும் ஆற்றலும் கெட மயங்கிய வேந்தன் ; இராவணன். எற்றி - திருவடிப் பெருவிரலால் ஊன்றி இறுத்து. வாள், நாள், பெயர் கொடுத்து. கருள் - கருமை. கருணையின் கடைக்குறை எனின் பொருந்துமோ ? ' அருள்மன்னர் ' என்று மேல்வருதலாலும் பொருந்தாது. கண்டம் (- கழுத்து). கறுக்க உண்ட நஞ்சு, ஆரூரது அருட்பெருக்கை உணர்த்துங் குறி. ' வானவரும் இந்திரனும் மாலோடயனும் செத்துப்போன விடம் புல்முளைத்துப் போகாதோ ? தான் அமுதாய், அத்தர் அருணேசர் அன்பாக நஞ்சுதனைப் புத்தியுடன் உண்ணுத போது. ' என்பது, குகைநமச்சிவாயர் அருளிய பாடல்.

ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாகி யெனவெடுத்துத்
தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி யோங்கட் கென்று
வான்றாழ் புனற்கங்கை வாழ்சடை யானைமற் றெவ்வுயிர்க்குஞ்
சான்றா மொருவனைத் தண்டமிழ் மாலைகள் சார்த்தினரே.

உம்பர்தங் கோனை யுடைய பிரானையுள் புக்கிறைஞ்சி
நம்புறு மன்பி னயப்புறு காதலி னாற்றிளைத்தே
யெம்பெரு மான்றனை யேழையே னான்பண் டிகழ்ந்ததென்று
தம்பரி வாற்றிருத் தாண்டகச் செந்தமிழ் சாற்றிவாழ்ந்தார்.

அரியயனுக் கரியானை யடியவருக் கெளியானை
விரிபுனல்சூழ் திருவதிகை வீரட்டா னத்தமுதைத்
தெரிவரிய பெருந்தகைமைத் திருநாவுக் கரசுமனம்
பிரிவுறுசெந் தமிழ்ப்பாட்டுப் பலபாடிப் பணிசெயுநாள்.

## 18. பொது

### திருப்பதிக வரலாறு

மெய்ப்பொருள் தேர்ந்த நாவரசர், திங்களூர் மேவி, அப்பூதியடிகள் திருமனையை நண்ணி, அவர் மனைவி மக்கள் சுற்றமெல்லாம் தொழப் பெற்றார். முன்பு கண்டவரல்லரேனும் கலந்த பெருங் கேண்மையாரான அப்பூதியடிகள் குறையிரக்க, அமுது செயத் திருவுளம் இசைந்தார். திருவமுது அமைத்த பின்னர், திருநாவுக்கரசு என்னும் பெருநாமம் பூண்ட (மூத்த) பிள்ளை கதலிக் குருத்து அரிந்துவர, 'நல்ல தாய் தந்தை ஏவ நான் இதுசெய்யப் பெற்றேன்' என்று மகிழ்ந்து விரைந்து எய்திக் குருத்து அரியப் புக்கார். ஒரு நாகம் தீங்கு இழைத்தது. குறிக்கோள் தூண்டக் குருத்தை அரிந்து கொண்டு வந்து கொடுத்து மயங்கி வீழ்ந்தார். இரு முது குரவர் எதையும் நினையாமல், தூயவர் அமுது செயத் தொடங்கார் என்று, தம் புதல்வன் உடலை மறைத்து, தடுமாற்றம் இலராய் வந்து வணங்கி, அமுது செயவேண்டும் என வேண்டியிரந்தனர். நாவரசர் திருவுள்ளத்தே ஒரு தடுமாற்றம் நம்பர் திருவருளால் தோன்றிற்று. அறிந்தார். அந் நவையைத் தீர்க்க நாடினார். அதனை மறைத்தது குறித்து, அளவற்ற கருணை அடைந்தார். கொன்றைச்சடையார் கோயிலின் முன் கொணர்வித்தார். எல்லாம் உடையானது சீர் பாடினார். நஞ்சு நகர்ந்தது. பிள்ளை பிழைத்தது. அந் நஞ்சு தவிர்த்தருளிய பாடலே இத் திருப்பதிகம்.

பண் — இந்தளம்

விடந்தீர்த்த திருப்பதிகம்

திருச்சிற்றம்பலம்

ஒன்றுகோ லாமவர் சிந்தை யுயர்வரை
ஒன்றுகோ லாமுய ரும்மதி சூடுவர்
ஒன்றுகோ லாமிடு வெண்டலை கையது
ஒன்றுகோ லாமவ ரூர்வது தானே. 177

177. அவர் - சிவபிரானார். சிந்தை உயர்வரை - உள்ளம் உயர்கின்ற எல்லையில் உள்ள திருக்கயிலை மலை. சிந்தையுயர் வரை (எல்லை) ஒன்று என்பது சுத்தாத்துவிதத்தை உணர்த்துவ தாகக் கொள்ளல் நன்று. பிறத்தலும் இறத்தலும் தேய்தலும்

இரண்டுகோ லாமிமை யோர்தொழு பாதம்
இரண்டுகோ லாமிலங் குங்குழை பெண்ணாண்
இரண்டுகோ லாமுரு வஞ்சிறு மான்மழு
இரண்டுகோ லாமவ ரெய்தின தாமே. 178

வளர்தலும் இன்றி, சென்னியில் வாழ்கின்ற பேற்றால் உயரும் பிறை அணிவர். எல்லாரும் தற்போதத்தைப் பலியாக இடுதற்குரிய பிச்சைப் பாத்திரமாகப் பிரம கபாலம் திருக்கையின்கண் உளது. ஊர்வது - ஊர்ந்து செல்லும் விடை. ஒன்று வரை. ஒன்று சூடுவர். ஒன்று கையது. ஒன்று ஊர்வது என்க. 'ஒன்று போலும் உகந்தவர் ஏறிற்று' (5. 24. 8.) 'ஒன்று வெண் பிறைக் கண்ணியோர் கோவணம்' (5. 89. 1-10) என்பன முதலிய திருக்குறுந்தொகைகளை இப் பதிகத்தோடு ஒருங்கு நோக்குக.

178. இமையோர் - துவாதசாந்தப் பெருவெளியில் கண்ணிமைத்துக் காணாராய்த் விழித்துறங்குந் தொண்டர். அவரே வானோர். 'கண்ணிமைத்துக் காண்பார்தம் கண் என்னகண்ணே' (சிலப்பதிகாரம்). குழை எனவே தோடும் கொள்ளப்படும். பெண்ணும் ஆணும் ஆகிய உருவம் இரண்டும் 'சத்தியும் சிவமும் ஆய தன்மை இவ்வுலகம் எல்லாம் ஒத்து ஒவ்வா ஆணும் பெண்ணும் உணர் குணகுணியுமாகி வைத்தனன்' (சித்தியார். 89) அம்மையப்பர் திருக்கோலம். 'இருபெண் ஆண்' (1. 11. 2), 'இரண்டினர் உருவம்' (1. 79. 3) 'மாதியலும் பாதியன்'. உருவம் :- 1. சொரூபம். 2. தடத்தம் எனக் கொண்டுரைத்தலுமாம். 1. அருவம் 2. உருவம் 3. அருவுருவம் 4. அருளுருவம் ஆகிய நான்கனுள்ளே முதல் மூன்றும் தடத்தம். நான்காவது சொருபம். 'பதிபரமே அதுதான்......அருவுரு இன்றி........உயிர்க்குணர்வாகி........ ஆனந்தவுருவாய் அன்றிச் சேலவரிதாய்......திகழ்வது. தற்சிவம் (சிவப். 13) 'சிவன் அருவுருவும் அல்லன்.' 'கரசரணாதி சாங்கம்......உபாங்கம் எல்லாம் ...அருள்' 'காயமோ மாயையன்று காண்பது சத்தி தன்னால்' (சித்தியார்) 'அருவும் உருவும் அறிஞர்க்கு அறிவாம் உருவும் உடையான் உளன்' (திருவருட்பயன். 5). மான் மழு இரண்டும் எய்தின. இரண்டு பாதம். இரண்டு குழை. இரண்டு உருவம். இரண்டு எய்தின.

மூன்றுகோ லாமவர் கண்ணுத லாவன
மூன்றுகோ லாமவர் சூலத்தின் மொய்யிலை
மூன்றுகோ லாங்கணை கையது வின்னாண்
மூன்றுகோ லாம்புர மெய்தன தாமே. 179

நாலுகோ லாமவர் தம்முக மாவன
நாலுகோ லாஞ்சன னம்முதற் றோற்றமும்
நாலுகோ லாமவ ரூர்தியின் பாதங்கள்
நாலுகோ லாமறை பாடின தாமே. 180

179. கண்ணுதல் :- (நுதற்கண்) நெற்றிக்கண். 'திரி சூலம்' என்னும் பெயர்கொண்டே மூன்று என்பது புலனும். கையின்கண் உள்ள வில், நாண், அம்பு மூன்றும் கொள்க. அக் கணையை எய்தது முப்புரம். 'திரிபுரம்'. கணையின் முக்கூறு ஈர்க்கு (காற்று), உடல் (திருமால்). கூர் (தீ) எனலும் உண்டு. சொல்லமைதிக்கேற்றதன்று அது.

180. நாலு கோல் ஆம் அவர்தம் முகம் ஆவன :- 'ஆதி நான்முகத் தண்டவாண.....நின்முயிலை நெடுவேல் பாடுதும்' (சிவபெருமான் திருமும்மணிக்கோவை. 28). திருப்பெருந் துறைப் புராணம் (சதாசிவமூர்த்தம். பா. 7) பார்க்க. கர்த்திரு சாதாக்கியத்திற்கு நான்முகம்; "கர்த்திரு சாதாக்கியப் பெயர் ஞானம் என்றதன் எழிற்பெயர் ஆதலினாலும், ஞானசத்தி இலகுதலாலும், ஊனம் இல் மறைகள் உரைத்திடும் அதுதான், சுத்தம் ஆதலின் தூய் பளிங்கொளியாய், இத் தகு திவ்விய லிங்கமும் ஆய் அதன், மத்தியில் நாலு முகத்தொடு மன்னி, நலமிகு பன்னிரு நயனம் உடைத்தாய், வலதுகை சூலம் மழு வாள் அபயம், இடதுகை நாகம் இலங்கிய பாசம், படுமணி வரதம் எனும் படை ஏந்தி, ஒடிவில் இலக்கணம் உடன் இருப் பதுவே." (சதாசிவரூபம். 12 :- 20 - 31). 'கர்த்திருசா தாக்கியம் இலிங்க வடிவாய், நாலு முகம் பன்னிரு கண் படிக வொளி எட்டுக் கைகளில் வலம் இடங்களில். சூலம், மழு வாள், அபயம், நாகம், பாசம், மணி, வரதம் ஆக இருக்கும்' (திருவாசக வியாக்கியானம். பக்கம். 218). 'தற்புருட மந்திரத் தின் நான்கு கலைகளும் நான்கு முகம். அகோரத்தின் எட்டுக்

அஞ்சுகோ லாமவ ராடர வின்படம்
அஞ்சுகோ லாமவர் வேல்புல ஞவன
அஞ்சுகோ லாமவர் காயப்பட் டான்கணை
அஞ்சுகோ லாமவ ராடின தாமே. 181

கலைகளும் தோள்கள்.' (சிவார்ச்சனுசந்திரிகை. பக்கம். 101) சனனம் - பிறப்பு. 1. அண்டசம். 2. சுவேதசம். 3. உற்பிசம். 4. சராயுசம். ஊர்தி - விடை. 'உணர்வு என்னும் ஊர்வது உடையாய் போற்றி' (அப்பர்) 'இருள்கெட அருளிய இன்பவூர்தி' (திருவாசகம்) என்பதன் நாலு பாதம் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. நாலு அவர்தம் உகம் (.- 'ஒரு உகம்போல் ஏழ் உகமாய் நின்ற நாளோ') எனப் பிரிக்கலாமேனும், காலாதீதனுக்கு உகம் இன்மையாலும், ஏழுகமாய் நின்றது உயிர்கட்கு ஆதலாலும், 'சதாசிவனே நின்பாதம் போற்றி போற்றி' என்று பிருண்டும் சாதாக்கியத்தைக் குறித்தலாலும் அது கோள்ளற்பாற்றன்று.

181. அவர் ஆடு அரவின் படம் அஞ்சு :- ஆடரவு - ஆடும் பாம்பு. அவர் அரவு - அவர் பூண்ட பாம்பு அவர் ஆடும் அரவு எனல் சைவத்திற்கேலாது. அவர் பிடித்தாடும் அரவு எனலாம். 'கடுத்தாடும் கரதலத்தில் தமருகமும் எரி அகலும் கரிய பாம்பும் பிடித்து ஆடி புலியூர்ச் சிற்றம்பலத்தெம் பெருமான்' (8137) அவா வேல் புலன் ஐந்து :- 'போறிவா யிலைந் தவித்தான்.' இறைவற்குப் புலன் இருந்து நீங்கியதன்று. இயல்பில் இன்மை என்க. அவரால் அடியவர் வேல்லும் புலனை ஐந்து எனலும் நன்று. 'வஞ்சக் கள்வர் ஐவரையும் என்மேல் தர அறுத்தாய்' (6. 99. 3) என்று ஆசிரியர் அருளியதுணர்க. "விடுக்ககிற்றிலேன் வேட்கையும் சினமும்; வேண்டில் ஐம் புலன் என்வசம் அல்ல" (7. 60. 7) என்ற சுந்தரப்பெருமாள் திருவுள்ளப்படி, என்வசம் அல்லாத புலன்களை நின்வசப் படுத்தி வேல்லும் ஆற்றல் நின் அருட்கே உண்டு என்றவாறும். அவர் காய மன்மதன் பட்டான். பட்டவன் மலர்க்கணை அஞ்சு. காய்தல் - தீவிழியால் எரித்தல். ஆடின - அபிடேகம் செய்யப் பட்டன. அஞ்சு - ஆனைந்து; பால், தயிர், நேய். 'ஆடினாய் நறுநேய் யோடு பால்தயிர்.' 'ஆவினுக்கு அரன் அஞ்சு ஆடுதல்

ஆறுகோ லாமவ ரங்கம் படைத்தன
ஆறுகோ லாமவர் தம்மக னார்முகம்
ஆறுகோ லாமவர் தார்மிசை வண்டின்கால்
ஆறுகோ லாஞ்சுவை யாக்கின தாமே. 182

---

(105) திருவண்ணாமலைக் கல்வெட்டில் ஆனிரும் அதன் சாண மும் முறையே உழக்களவும் ஆழாக்களவும் கொண்ட வழக்கு உளது. அது பஞ்சகௌவியத்துக்கென்பர்.

182. அங்கம்:- 'நன்றாய்ந்த......ஈரிரண்டின் ஆறுணர்ந்த ஒரு முதுநூல்' (புறம். 166). 1 சிக்ஷை. 2. கற்பசூத்திரம். 3. வியாகரணம். 4. நிருத்தம். 5 சந்தோவிசிதி. 6. சோதிடம் என்ற ஆறும் வேதாங்கம். அவற்றுள் 1. வேதங்களை எடுத்தல் படுத்தல் முதலிய இசை வேறுபாட்டால் உச்சரிக்குமாறு உணர்த்துவது சிக்ஷை. 2. வேதங்களிற் கூறும் கருமங்களை அநுட்டிக்கும் முறைமை உணர்த்துவது கற்பசூத்திரம். 3. வேதங்களின் எழுத்துச் சொற்பொருளியல்பு உணர்த்துவது வியாகரணம். 4. வேதங்களின் சொற்பொருள் உணர்விப்பது நிருத்தம். 5. வேத மந்திரங்களிற் காயத்திரி முதலிய சந்தங் களின் பெயரும் அவற்றிற்கு எழுத்து இணைத்து என்றலும் உணர்த்துவது சந்தோவிசிதி. 6 வேதத்திற் சொல்லப்படும் கருமங்கள் செய்தற்குரிய கால விசேடங்களை உணர்த்துவது சோதிடம். இங்கனம் ஆகலின், இவை ஆறும் வேதத்திற்கு அங்கம் எனப்பட்டன. புராணம், நியாயம் நூல், மீமாஞ்சை, மிருதி என்னும் நான்கும் வேதத்திற்கு உபாயம். 1. பரமசிவன் உலகத்தைப் படைக்குமாறு முதலாயின கூறும் வேதவாக்கியப் பொருள்களை வலியுறுத்து விரித்துணர்த்துவது புராணம். இதிகாசமும் ஈண்டு அடங்கும். 2. வேதப்பொருளை நிச்சயித் தற்கு அநுகூலமான பிரமாணம் முதலியவற்றை உணர்த்துவது நியாயநூல். 3. வேதப்பொருளின் தாற்பரியம் உணர்தற்கு அநுகூலமான நியாயங்களை ஆராய்ச்சிசெய்து உணர்த்துவது மீமாஞ்சை. அது பூருவ மீமாஞ்சை உத்தர மீமாஞ்சை என்று இருவகைப்படும். அவற்றுள் முன்னையது மீமாஞ்சை எனவும் வேதம் எனவும், பின்னையது வேதாந்தம் எனவும் வழங்கப்படும் 4. அவ்வவ்வருணங் (குடி) கட்கும் ஆசிரமங்களு (நிலை) க்கும்

ஏழுகோ லாமவ ரூழி படைத்தன
ஏழுகோ லாமவர் கண்ட விருங்கடல்
ஏழுகோ லாமவ ராளு முலகங்கள்
ஏழுகோ லாமிசை யாக்கின தாமே. 183

உரிய தருமங்களை உணர்த்துவது மிருதிநூல். உபவேதம் நான்கு உள. 1. எல்லாம் அநுட்டித்தற்குச் சாதனமான யாக்கையை நோயின்றி நிலைபெறச் செய்யுமாறுணர்த்துவது ஆயுள் வேதம். 2. பகைவரால் நலிவின்றி உலகம் காத்தற்கு வேண்டப்படும் படைக்கலம் பயிலும் வகையை உணர்த்துவது வில் வேதம். 3. எல்லாக் கடவுளர்க்கும் உவகை வரச் செய்யும் இசை முதலியவற்றை உணர்விப்பது காந்தருவ வேதம். 4. இம்மைக்கும் மறுமைக்கும் ஏதுவாகிய பொருள்களை ஈட்டும் உபாயம் உணர்விப்பது அருத்த நூல். அங்கங்களை அறிவார் இவற்றையும் அறிதல் நன்று என்று இங்குணர்த்தலாயிற்று. 'அறுமுகப் பெருமான்.' 'அறுகால் வண்டு.' 'அறுசுவை'.

183. ஊழி :- 'ஊழியும் மடங்கலும் உகமுடி வாகும்' (பிங்கலந்தை. 307). ஊழி படைத்தன ஏழு - ஊழிதோறும் படைத்தவை ஏழு பிறப்பு. 'மூவேழ் சுற்றம் முரணுறு நரகிடை ஆழாமே அருள் அரசே போற்றி' (திருவாசகம்) என்பதற்கேற்பப் பொருள் கோள்ளலும் ஆம். 'அளவிலாப் பல்லூழி கண்டு நின்ற தீர்த்தன்' (6. 19. 11) 'ஊழிமுதல்வனாய் நின்றாய் நீயே' (6. 38. 5). பா. 127. பார்க்க. அவர் கண்ட கடல் ஏழு :- 1. உப்பு. 2. தேன். 3. கருப்பஞ்சாறு. 4. தயிர். 5. நெய். 6. பால். 7. நீர். 'உப்புத் தேன் இக்கு வெண்டயிர் நெய்பால் அப்புக் கடல் ஏழ் ஆகும் என்ப' (பிங்கலந்தை. 585). ஏழுலகங்கள் :- மேலேழுலகம் :- 1. பூ. 2. புவம். 3. சுவர்க்கம். 4. மா. 5. தவம். 6. பிரமம். 7. சிவலோகம். கீழேழுலகம் :- 1. அதலம். 2. விதலம். 3. சுதலம். 4. நிதலம். 5. தராதலம். 6. ரசாதலம். 7. பாதலம். ஏழிசை :- 'குரலே துத்தம் கைக்கிளை உழையே, இளியே விளரி தாரம் என்றிவை, ஏழும் யாழின் இசைகெழு நரம்பே' (பிங்கலந்தை. 1402.) 'ஆறேழன்றுமானார்' (6. 16. 6).

எட்டுக்கோ லாமவை யீறில் பெருங்குணம்
எட்டுக்கோ லாமவர் சூடு மினமலர்
எட்டுக்கோ லாமவர் தோளிணை யாவன
எட்டுக்கோ லாந்திசை யாக்கின தாமே. 184

184. எட்டுக் குணம் :- (குறள். 9. உரை பார்க்க). 1. பிறவின்மை. 2. இறவின்மை. 3. பற்றின்மை. 4. பெயரின்மை. 5. உவமை இன்மை. 6. ஒருவினையின்மை. 7. குறைவிலறிவுடைமை. 8. குடிமுதல் (கோத்திரம்) இன்மை என்பது பழந்தமிழர் 'நன்றாய்ந்த நீள் நிமிர்சடை முதுமுதல்வன்' (புறம். 166) உடைய பண்பேட்டும் வழங்கினர். 1. முற்றறிவு (சருவஞ்ஞத்துவம்). 2. வரம்பிலின்பம் (திருப்தி, பூர்த்தி). 3. இயற்கையுணர்வு (அநாதிபோதம், நிராமயான்மா). 4. தன்வயம் (சுதந்திரம், சுவதந்திரதை). 5. குறைவிலாற்றல் (அலுப்தசக்தி, பேராருளுடைமை). 6. வரம்பிலாற்றல் (அநந்தசக்தி, அளவிலாற்றல்). 7. தூய உடம்பு (விசுத்ததேகம்). 8. இயல்பாகவே பாசங்களில்லாமை (அநாதி முத்தத் தன்மை) என்றலும் உண்டு. எட்டு மலர் :- (அட்டபுட்பம் 5-54. 1-10 முழுதும் பார்க்க) 'எட்டுக் கொண்டார்தமைத் தொட்டுக் கொண்டே நின்றார், விட்டார் உலகம் என்று உநதீபற. வீடே வீடாகுமென்றுந்தீபற.' (24) கிரியைக்குரிய எண் மலர் வேறு. ஞானத்திற்குரிய எண் மலர் வேறு. ஞானபூசைக்குரியன :- 1. கொல்லாமை, 2. ஐம்பொறியடக்கல், 3. பொறுமை. 4. இரக்கம், 5. அறிவு. 6 மெய், 7. தவம், 8. அன்பு என்பன. (சிவஞானபாடியம். சூ. 9. அதி. 3.) 'நலஞ்சிறந்தார் மனத்தகத்து மலர்க ளேட்டும்' (புகையேட்டும்). காலை, உச்சி, மாலை நள்ளிரவு, புலரி முதலிய எல்லாக் காலங்கட்கும் வகுத்த எண் மலர் வகையைப் புட்பவிதி பா. 16. 17. 18. 19 இல் அறிக. எட்டுத் தோளிணை :- 'எண்டோளினன் முக்கண்ணினன்' (7. 71. 9.) 'எண்டோள் வீசிநின் றாடும் பிரான்' 'படையிலங்கு கரம் எட்டுடையான்' 'அட்டமாம் புயம் ஆரூரரே' 'கரம் நான்கும் முக்கண்ணும் உடையாய் போற்றி' என்றது வேற்றுருவம் குறித்து. எட்டுத் திசை :- 'ஈறாய்.....எட்டுத் திசைதானாய்... ..வீழிம்மிழலையே' (109)

ஒன்பது போலவர் வாசல் வகுத்தன
ஒன்பது போலவர் மார்பினி னூலிழை
ஒன்பது போலவர் கோலக் குழற்சடை
ஒன்பது போலவர் பாரிடந் தானே. 185

185. ஒன்பது வாசல் :- "என்பிறைற் கழிநிரைத்திறைச்சி மண்சுவ ரேறிந்திது நம்மில்லம், புன்புலால் நாறுதோல் போர்த்துப்போல்லாமையான் முகடுகோண்டு, முன்பேலா மோன்பது வாய்தலார் குரம்பையின் மூழ்கிடாதே, அன்பனூருர் தோழுதுய் யலாம் மையல்கோண் டஞ்சல்நேஞ்சே" (நவத்வாரம்) (2.79.8) "புழுப்பேய்த பண்டிதன்னைப் புறமோரு தோலான்மூடி, ஒழுக்கரு வோன்பதுவா யோற்றுமை யோன்றுமில்லை, சழக்குடை யிதனுள்ளைவர் சங்கடம் பலவுஞ்சேய்ய, அழிப்பனுய் வாழமாட்டேண் ஆரூர்மூ லட்டனீரே" (499). 'ஒண்ணுளே ஒன்பதுவாசல்வைத் தாய் ஒக்க அடைக்கும் போது உணர மாட்டேன்' (6. 99. 1.) 'வருந்தும் உயிர் ஒன்பான் வாயில் உடம்பில் போருந்துதல் தானே புதுமை?' (நன்னேறி. 12) ஒன்பது மார்பினில் நூல் இழை :- 'ஒன்பது கோண்ட மூன்றுபுரி நுண்ஞாண்' (திருமுருகாற்றுப்படை. 183) கோலம் - அழகு. குழற்சடை :- 'குழற்சடை யேங்கோன்' (6. 31. 5.) 'குழற்சிகை'. முடி, கோண்டை, குழல், பனிச்சை, சுருள் என்னும் ஐம்பாலுள் ஒன்றேனும், ஈண்டுப் போதுவாய்ச் சடைமேல் நின்றது. குழல் ஆண் பேண் தலைமயிர்க்குப் போது. (பிங்கலந்தை. 1066) கோண்டை நீக்கித் தோங்கல் கோள்ளலும் உண்டு. (ஷை 1070) பாரிடம் - பார் இடம், பூமி. ஒன்பது பாரிடம் - நவகண்டம். 'நவகண்ட பூமிப் பரப்பை வலமாக வந்தும்' (தாயுமானவர்; 'பத்திநேறி நிலைநின்றும்'). 'பல்சடைப் பனிகால்கதிர் வேண்டிங்கள் சூடினுய்' 'பத்து நூறவன் பல்சடை' (5. 89. 10) என்பவற்றூற் சடைப் பன்மையை அறியலாம். 'அலையுடையார் சடையேட்டுஞ் சுழல அருநடஞ்சேய் நிலையுடையார்' (7. 19. 7) என்றது கோண்டு, வானைச் சேர்த்து, ஒன்பான் திசை நோக்கிய சடை ஒன்பது எனத் துணிவில்லை. நிலனை நோக்கியதேனலாகாது. 'ஒன்பது வாயிற் குடில்' (திருவாசகம். 1.)

பத்துக்கோ லாமவர் பாம்பின்கண் பாம்பின்பல்
பத்துக்கோ லாமெயி றுங்நெரிந் துக்கன
பத்துக்கோ லாமவர் காயப்பட் டான்றலை
பத்துக்கோ லாமடி யார்செய்கை தானே. 186

திருச்சிற்றம்பலம்

186. 'விடந் தீர்த்த திருப்பதிகம்' என்னும் வாய்மை இதனால் விளங்குகின்றது. 'அவர் பாம்பு' என்றதால் அவர் அணியும் பாம்பு ஐந்தலையுடையது என்பதும், தலைக்கிரண்டாகப் பத்துக் கண் உடையது என்பதும், தட்டம் அதட்டம் என்னும் இரண்டும் அவ்வைந்தலைக்கண்ணும் உள்ளமையால் பத்துப் பல் உடையது என்பதும் புலப்படும். 'எயிறுகளுக்கு மேலாம் தட்டம் அதட்டம் என்கின்ற எயிறுகள்' என்றதால் இவ்வுண்மை அறியலாயிற்று. 'அவர் அரவின் படம் அஞ்சு' (181) 'தோட்டூரே துத்தி ஐந்தலை நாகத்தை ஆட்டீரே' (1. 54. 4) 'கடுவொடுங் கெயிற்றுத் துத்திக் கட்செவிப் பகுவாய்ப் பாந்தள்' (தசகாரியம். 12). 'கடுவோடொடுங்கிய தூம்புடை வாலெயிற் றழலென வுயிர்க்கும் அஞ்சுவரு கடுந்திறற் பாம்பு' (திருமுருகு 148-50) என்றதனுரையும், 'துளையெயிற்றுரகக்கச்சு' (சிலப். வேட்டுவ, 59) என்றதற்கு அடியார்க்கு நல்லார் எழுதிய உரையும் காண்க. பாம்பின் பல்லில் நஞ்சொழுகுந்துளையுடைமை உணரப்படும்.

"பொழிந்துநஞ் சுகுத்தல் அச்சம் இரைபெரு வெகுளி போகம்
கழிந்துமீ தாடல் காலம் பிழைப்பென எட்டின் ஆகும்
பிழிந்துயிர் உண்ணும் தட்டம் அதட்டமாம் பிளிற்றின் உம்பர்
ஒழிந்தெயி றூனம் செய்யும் கோள் என மற்றும் சொன்னான்"

(சிந்தாமணி. பதுமையார். 121) என்பதன உரையில், நச்சினார்க்கினியர், 'எயிறுகளுக்கு மேலாம் தட்டம் அதட்டம் என்கின்ற எயிறுகளில் உண்டான நஞ்சைக் கடித்த வாயிலே காலும் ஆயின், பிழிந்து உயிர் உண்ணும். அவற்றை ஒழிந்த எயிறுகளில் உண்டான நஞ்சைக் கடித்த வாயிலே காலும் ஆயின், வருத்தம் செய்யும்' என்றுரைத்தார். அவ்வீரெயிறும் ஐந்தலைக்கும் தனித்தனி இருத்தலால், பத்துப் பல் என்க. ஏனைய

பற்கள் எண்ணத்தக்கன அல்ல. பாம்பிற்குரிய நால்வேறு பற்களின் பெயர், காளி, காளாத்திரி, யமன், யமதூதி எனப்படும். ' கடுவமரும் நால் எயிற்றுக்கும் பெயர் சொல்வேன் காளி காளாத்திரி யமன் யமதூதனும் ' (சித்தராரூடச்சிந்து). இது புகழுடல் எய்திய உ. வே. சாமிநாதையர் பதிப்பிலுள்ளது. தக்க யாகப் பரணி. 155. உரை. வைத்திய சார சங்கிரகம். பக்கம். 530-31. பார்க்க. நேரிந்து உக்க பத்து எயிறும் இராவண னுடையன. அக்கைலாயபதி காயப் பட்டவனாகிய இலங்காதி பதியின் தலை பத்து, ' காயப்பட்டான் ' (5). அடியார் செய்கை பத்து :- தசகாரியம். தத்துவரூபம், தத்துவதரிசனம். தத்துவ சுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் (ஆன்மலாபம்). இவற்றி னியல்பு, சிவஞானபோதம். சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம், உண்மைநெறிவிளக்கம், பண்டாரசாத்திரம் முதலியவற்றால் அறியலாம். அநுபவஞானம் குருபதேசத்தால்தான் எய்தும். ' திருவருள் வினவல் திருந்திடும் ' ( சங்கற்பநிராகரணத்தின் முடிவில் ) என்றாரே அன்றி நிட்டை எய்தலாம் என்று ரல்லர். வினவல் - கேள்வி ; சிரவணம்.

திருவதிகைப் பதிமருங்கு திருவெண்ணெய் நல்லூரும்
அருளுதிரு வாமாத்தூர் திருக்கோவ லூர்முதலா
மருவுதிருப் பதிபிறவும் வணங்கிவளத் தமிழ்பாடிப்
பெருகுவிருப் புடன்விடையார் மகிழ்பெண்ணை கடமணைந்தார்.

பொன்னார்ந்த திருவடிக்கென் விண்ணப்ப மென்றெடுத்து
முன்னாகி யெப்பொருட்கு முடிவாகி நின்றானைத்
தன்னாகத் துமைபாகங் கொண்டானைச் சங்கரனை
நன்னாமத் திருவிருத்த நலஞ்சிறக்கப் பாடுதலும்.

தூங்கானை மாடத்துச் சுடர்க்கொழுந்தி னடிபரவிப்
பாங்காகத் திருத்தொண்டு செய்துபயின் றமருநாட்
பூங்கான மணங்கமழும் பொருவிறிரு வரத்துறையுந்
தேங்காவின் முகிலுறங்குந் திருமுதுகுன் றமும்பணிந்து.

# 19. திருவாரூர்

## திருப்பதிக வரலாறு

திருவாரூர்ப்புற்றிடங்கொண்ட நிருத்தரை அன்போடு கும்பிட்டு வாழுங் காலங்களிற் பாடிய பலவற்றுள் ஒன்று இத் திருப்பதிகம்.

பண் சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

சூலப் படையானைச் சூழாக வீழருவிக்
கோலத்தோட் குங்குமஞ்சேர் குன்றெட் டுடையானைப்
பாலோத்த மென்மொழியாள் பங்கனைப் பாங்காய
ஆலத்தின் கீழானை நான்கண்ட தாரூரே. 187

பக்கமே பாரிடங்கள் சூழப் படுதலையில்
புக்கவூர்ப் பிச்சையேற் றுண்டு பொலிவுடைத்தாய்க்
கொக்கிறகின் றூவல் கொடியெடுத்த கோவணத்தோ
டக்கணிந்த வம்மானை நான்கண்ட தாரூரே. 188

187. சூலப்படையும் தோளெட்டும் பாலோத்த மொழியுமை பாகமும் ஆலின்கீழிருக்கையும் உடைய சிவபெருமானை நான் கண்டது திருவாரூரிலே என்க. ஏழனுருபு ஈற்றிற்றொக்கது. தோட்குன்று :- உருவகம். தோள்களாகிய மலைகள். கோலம் - அழகு. வடிவம். தோள்களிற் சூழ்ந்து ஒழுகும் குங்குமமும் குன்றிற் சூழ்ந்து வீழும் அருவியும் கோலத்தால் ஒத்துள்ளன. 'பால்போலும் இன்சொல்' மென்மொழி - 'மிருதுவசநம்'' ஆலத்தின் கீழானை - ஆலமரத்தின் கீழிருந்து அறம் உரைத்த குருமணியை. பாங்கு :- பால்+கு. பக்கம். (நால்+கு=நான்கு) 'கல்லாலின் கீழறங்கள் சொல்லினன்காண்'.

188. பாரிடங்கள் - பூதங்கள். படுதலை - பிரமகபாலம். 'கொக்கின் தூவலும் கூவிளங் கண்ணியும் மிக்க வெண்டலை மாலை விரிசடை நக்கன்' (5. 55. 4) 'கொக்கிறகு சென்னி யுடையான் கண்டாய்' 'கொக்கிறகர் குளிர்மதிச் சென்னியர். 'ஆர்ப்பர் போலும் ஆவடுதுறையனாரே' (543) 'அக்கு

சேய வுலகமுஞ் செல்சார்வு மானானை
மாயப்போர் வல்லானை மாலைதாழ் மார்பானை
வேயொத்த தோளியர்த மென்முலைமேற் றண்சாந்தின்
ஆயத் திடையானை நான்கண்ட தாரூரே. 189

ஓட்டினைச்சேய் அரைகரம் கொண்டார்' (காஞ்சிப். 6). அக்கு :- பாசிமணி, சங்குமணி என்பர். 'துன்னஞ்சேர் கோவணத்தாய்'.

189. சேயவுலகம் - எல்லாவுலசிற்கும் அப்பாலான வீட்டுலகம் ; பேரின்பவுலகு. பா. 37. குறிப்புரை காண்க. 'எல்லாவுலகமும் ஆனாய்நீயே' என்றதன் கருத்துமாம். செல் சார்வும் ஆனான் ; 'தாயாகித் தந்தையாய்ச் சார்வும் ஆகி' (6. 94. 5). செல்சார்வுடையார்க்கு (- 'தமக்குச் செல்சார்வாகிய கொழுநரையுடையார்க்கு') இனிய ...... ...மாலை (ஐந்திணை யைம்பது. 6.) கற்புறு மகளிர்க்குக் கணவனே செல்சார்வானாற் போல உயிர்க்குக் கடவுளே செல்சார்வாதலைக் 'கற்புறு சிந்தை மாதர்' எனத் தொடங்கும் தாயுமானவர் பாடலாலும் அறிக. 'அரன் கழல் செலுமே' 'செம்மலர் நோன்றாள் சேரல்' (சிவ. போ. சூ. 11. 12.) என்பவற்றால், உயிர்ச்செலவிற்கும் உயிர்ச் சார்விற்கும் பரமேசுரனன்றி வேறின்மையால், "ஆனந்தவுரு வாய் அன்றிச் செலவரிதாய்ச் செல்கதியாய்.. .. .. திகழ்வது தற்சிவம்" என்றது சிவப்பிரகாசம். மாயப்போர் - மும்மல காரியமாகிய திரிபுரப்போர் ; 'திரிபுரம் அழித்தல் மும்மலந் தீர்த்தல்' 'திரிபுர மும்மலதகனம்' 'போரார்புரம் பாடி - திரி புரத்தைப் பொடியாகச் செய்ததைத் துதித்து' (திருவாசகம் ; தாண்டவராய சுவாமிகள் வியாக்கியானம். பக்கம். 672 - 84). மாலை :- கொன்றைமாலை முதலியன. 'காமர் வண்ணமார்பிற் றாரும் கொன்றை' (புறம்) 'விலையிலா ஆரம்சேர் மார்பர்' (6. 82. 8). வேய் - மூங்கில். 'வேயுறுதோளி' 'வேய்த் தோளி' (சம்பந்தர்) சாந்தின் ஆயம் - சந்தனத்திரட்சி. 'சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி' 'அருமணித்தடம் பூண்முலை யரம் பையர்' தொகை ஆரூரில் வழிபடுவோர் தொகையுள் ஒன்று. (200. 215. பார்க்க). 'நறப்படு பூமலர் தூபம் தீபம் நல்ல நறுஞ் சாந்தம் கொண்டு ஏத்தி நாளும் வானோர் சிறப்போடு பூசிக்கும் திருவாரூர்' (தாண்டகம்). தியாகராசரைக் கண்டது

ஏறேற்ற மாவேறி யெண்கணமும் பின்படர
மாறேற்றார் வல்லரணஞ் சீறி மயானத்தில்
நீறேற்ற மேனியராய் நீள்சடைமே னீர்ததும்ப
ஆறேற்ற வந்தணனை நான்கண்ட தாரூரே. 190

ஆரூரில். ஆரூர்க்கு எழுந்தருளுமுன் அவர் வீற்றிருந்தருளிய இடம் விண்ணே: தேவேந்திரன் வழிபட்ட திருக்கோயில். விண்ணில் அவனால் வழிபடப்பெற்று, அப்போகிக்குப் போகியாயிருந்து போகத்தைப் புரிந்தருளினார். அதனால் அவரும் அவன் திறத்திலே போகமூர்த்தியாய்த் திகழ்ந்தார். அவனது போகத்துள் ஒன்று தோளியர் முலைச்சாந்தின் ஆயத்திடையாளுதல். அவன் வழிபடு கடவுளாகி அவனுள் இருந்து போகம் காட்டியும் அவனாயிருந்து கண்டும் நின்ற காரணத்தால், இவ்வாறு கூறலாயிற்று. 'பெற்ற சிற்றின்பமே பேரின்பம் ஆக' (திருவுந்தியார். 33) (சிவ. போ. சூ. 5. 11. சிவ. சித்தி. 5. 11. 9. விடயத்தின்கண்ணும் உயிரின்கண்ணும் படும் இரு வேறு நிகழ்ச்சியிலும் அரனடியை அகலாத உண்மை). பரமுத்தியிலும் உயிர்கள் சிவானந்தாநுபூதியை விடயிக்கச்செய்தும் உடனின்றறிந்தும் வருதலால் முதல்வனை, 'நசையுநர்க்கு ஆர்த்து மிசை பேராளன்' (திருமுருகு. 270) என்றார். நக்கீரதேவ நாயனார். ஆர்த்தல் - ஆரச்செய்தல். மிசைதல் - நுகர்தல், ஈண்டு உணர்தலின் மேற்று. ஆர்த்து மிசைதல். ஆர்த்தல் - காட்டும் உபகாரம் (சூ. 5). மிசைதல் - காணும்உபகாரம் (சூ. 11) இதற்கு நச்சினார்க்கினியர் முதலோர் வேறுரைத்தனர். இந்திரன் வழிபட விண்ணிலிருந்த தியாகராசரை மண்ணில் ஆரூரில் கண்டு போற்றிய அப்பர், அவரது விண்ணிலையையும் அரசபோகத்தையும் குறித்தருளினார்.

190. ஏறு - விடை. ஏற்றம் - உயர்வு. ஏற்றமாக ஏறு ஏறி. ஏற்றம் ஆதல் ஏற்றிற்கே. பசுபதிக்கு ஏற்றம் இயல்பு. பசுக்கட்கு ஏற்றம் ஆக்கம். எண்கணம் :- பா. 200. காண்க. 'அமரர்கணம் புடைசூழ இருந்த நாளோ' 1. அருளிப்பாடியார். 2. உரிமையிற்றொழுவார். 3. உருத்திரபல்கணத்தார். 4. விரிசடை விரதிகள். 5. அந்தணர். 6. சைவர் 7. பாசுபதர். 8. காபாலிகள். ஆகிய எண்திறத்தார் தொகை. முற்பாட்டிலே

தாங்கோல வெள்ளெலும்பு பூண்டுதம் மேறேறிப்
பாங்கான வூர்க்கெல்லாஞ் செல்லும் பரமனூர்
தேங்காவி நாறுந் திருவாரூர்த் தொன்னகரில்
பூங்கோயி லுண்மகிழ்ந்து போகா திருந்தாரே. 191

அரம்பையர் தோகை குறிக்கப்பட்டதால், அருளிப்பாடியர் முதலிய எண்கணத்தார் இதிற் குறிக்கப்பெற்றனர். 'எண் கணம் இறைஞ்சும் கோளிலிப்பெருங்கோயிலுளானைக் கோலக் காவினிற் கண்டுகொண்டேன்' (7. 62. 8). 'எண்கணத் தேவர்கள்' (திருமந்திரம். 1881). 1. நந்தி. 2. மகாகாளர். 3. விநாயகர். 4. இடபதேவர். 5. பிருங்கி. 6. சுப்பிரமணியர். 7. உமாதேவி. 8. சண்டேசுவரர். சுத்தவித்தியாதத்துவத்தில் வாழும் நந்தி முதலிய கணநாதர் எண்மர் (சிவப். 21. திருவிளங் கம் உரை. சதாசிவரூபம். 131). "திருக்கயிலை வீற்றிருந்த சிவபெருமான் திருக்கணத்தார் பெருக்கியசீர்த் திருவாரூர்ப் பிறந் தார்கள் ஆதலினால்" (பெரியபுராணம்) அத்தலத்தில் எல்லாரும் எண்கணத்துள் ஒரு கணத்தாராவர். திரிபுரத்து அசுரர் ; வித்தி யுன்மாலி, தாருகாட்சன், கமலாட்சன். மாறு ஏலாது அருள் பெற்றோர் :- விரத்தன், பரமயோகன், குணபரன். (உபதேச காண்டம். விசயச். 2. 269. 70) சுதர்மன், சுநீதி, சுபுத்தி எனலும் உண்டு. 'மூவார் புரங்கள் எரித்த அன்று மூவர்க்கு அருள் செய்தார்' (1-69-1) 3. 78. 5. 7. 55. 8. பார்க்க. ஆறு - கங்கை.

191. கோலம் - அழகு, வடிவு. ஏறு - விடை. பாங்கு - பக்கம். தேம் காவி - தேனுள்ள கருங்குவளை. 'கோலம் ஆர் பானல் காவி குவலயம் மணத்தை மொண்டு காலத் தேன் உலவு கின்ற கருங்குவளைக்கு நாமம்' (சூடாமணி நிகண்டு) 'அரத்தம் உற்பலம், எருமணம், கல்லாரம், செங்கழுநீர் செங்குவளை' (பிங்கலந்தை). திருவாரூர்க்கோயிலைப் 'பூங்கோயில்' என்பர். 'பூதம் யாவையினுள்ளலர் போதென வேத மூலம் வெளிப்படுமே தினிக் காதல் மங்கை யிதய கமலமா மாதொர் பாகன் ஆரூர் மலர்ந்தது' (பெரிய. திருமலைச். 33) 'மலர் மகட்கு வண்டா மரைபோல் மலர்ந்து அலகில் சீர்த்திரு வாரூர் விளங்கும்' (ஷை. மநுநீதி. 12.) 'பொன்றயங்கு மதில் ஆரூர்ப் பூங்கோயில் அமர்ந்த பிரான்' (ஷை. 49). 'புற்றிடங்கொண்டவர் ஆதிதேவர்

எம்பட்டம் பட்ட முடையானை யேர்மதியின்
நும்பட்டஞ் சேர்ந்த நுதலாளை யாந்தீவாய்ச்
செம்பட் டுடுத்துச் சிறுமா னுரியாடை
அம்பட் டசைத்தானை நான்கண்ட தாரூரே. 192

அமர்ந்தபூங் கோயில்' (திருக்கூட்டச். 1). 'பூவெனப்படுவது பொறிவாழ்பூவே' ஆதலின், தாமரைப்பூப்போலும் வடிவுடைய மையாற் 'பூங்கோயில்' என்பது பெயர் ஆயிற்று. அதனை வழக்கத்தின்வழாது கமலாலயம் என்றனர். வன்னியூரை அக்நிபுரம் என்றதுபோற் பூங்கோயிலைப் பிருதிவ்யாலயம் என்றுதது தமிழ்த்தாயின் நல்வினைப்பயன்.

192. எம் பட்டம் பட்டம் உடையானை :- சித்து அசித்து சிதசித்து என்பன பட்டம். புருடதத்துவத்திற்குரிய சிதசித்து என்பதில் உள்ள சித்து ஆண்டவனுக்குரியது. சித்தியார். சூ. 2:- 69. கொண்டுடையவனை ; பட்டம் - ஆளும் உரிமை. 'பட்டம் சூ. 2:- திரு. 69. எமது பட்டத்தைத் தனது பட்டமாகக்கொண் டுடையவனை.' பட்டம் எண்மரும் பார்தொழ எய்தினர்' (சிந்தா. இலக்கணை. 197). யாம் இவ்வுடற்கண் இருந்து ஆளும் உரிமை யொடு விளங்கினேம். தியாகேசன் எம் உரிமையைத் தன்னுரிமை யாகப்பற்றிக்கொண்டான். பெத்தத்தில் உடலாட்சி உயிரினது. முத்தியில் அது கடவுளது. ஏகனாகி இறைபணிநிற்கின்ற அநுப வம் உற்றார்க்கே இவ்வுண்மையுணர்தல்கூடும். 'கனல்சேர் இரும் பென்ன ஆள்தானும் - தானும் கனலைச் சேர்ந்த இரும்பு போலத் தன் சுதந்திரத்தை விட்டு அம் முதல்வனுக்கு அடிமையாம்' 'நான் என ஒன்று இல் என்று தானே எனும் அவரைத் தன் அடி வைத்து இல் என்று தானும் இறை - யான் என்று ஒரு முதல் காணப்படுமாறு இல்லை என்று அறிந்து தானே முழுவதும் எனக் காண்பவரை அவ்வாறே வேறு காணப்படுமாறு இல்லை என்று தனது திருவடி வியாபகத்துள் அடங்கிநிற்கச்செய்து தானே முழுவதுமாய்க் காணப்பட்டும் நிற்பன்' (சிவஞானபாடியம். சூ. 9. 10.) தன் இச்சா ஞானக் கிரியைகளின் தொழிற்பாட்டுக்கு முதல்வனது இச்சா ஞானக் கிரியைகளை இன்றி அமையாத ஆன்மா, அவ்வியைபுபற்றி நிகழ்வன எல்லாம் முதல்வனது இச்சா ஞானக் கிரியைகளது நிகழ்ச்சியே எனக் கண்டு அவனது

போழொத்த வெண்மதியஞ் சூடிப் பொலிந்திலங்கு
வேழத் துரிபோர்த்தான் வெள்வளையா டான்வெருவ
ஊழித்தீ யன்னானை யோங்கொலிமாப் பூண்டதோர்
ஆழித்தேர் வித்தகனை நான்கண்ட தாரூரே. 193

வியாபகத்துக்குள்ளாக அடங்கிநிற்கும் நிலை இது. ‘நாமும் அரனுடைமை’. (போதம் சூ. 10. வெண்பா.) இந் நாயனார் திருவாரூரில் இவ்வநுபவத்தைத் தன்மையில் வைத்து இவ்வாறு உணர்த்தியதேயன்றிப் படர்க்கையில் வைத்தும், ‘உயிராவணம் இருந்து உற்றுநோக்கி உள்ளக்கிழியின் உருவெழுதி உயிர் ஆவணம் செய்திட்டு உன்கைத் தந்தால் உணரப்படுவாரோடு ஒட்டிவாழ்தி....நின் அருட்கண்ணால் நோக்காதார் அல்லாதாரே’ ‘முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள், பின்னை மூர்த்தியவன் இருக்கும் வண்ணம் கேட்டாள், பெயர்த்தும் அவனுடைய ஆரூர் கேட்டாள். அவனுக்கே பிச்சி ஆனாள்’ என்ற அளவில் நின்றிலள்; ‘அன்றே அன்னையையும் அத்தனையும் நீத்தாள்; அகல் இடத்தார் ஆசாரத்தை அகன்றாள்; தன்னை மறந்தாள்; தன் நாமம் கெட்டாள்; தலைவன்தாளே தலைப்பட்டாள்.’ அவ்வுண்மை நிலையை அவள்போல. அம்மையப்பர்தம்மில் தலைப்பட்டார் பாலே தலைப்பட்டுத் தலைப்படுதலை உணர்ந்து தம்மில் நிலைப் படலாம்; பேதம் நீக்கி, நிலை ஆக்கி அத்தலை தலைப்படலாம். (திருக்களிறு. 2. பார்க்க.) ஏர் - அழகு, எழுச்சி. ‘நும்’ சாரியையோ? (நன்னூல். 244. தொல். எழுத்து. சூ......நச்சினார்க் கினியம்.) ‘நும்பட்டம்’ ஆறன்றுருகையாகக்கொள்ளல் பொருந் தாது. நுண்பட்டம் என்பதன் திரிபோ? பட்டம் - நெற்றிப் பட்டம். (3. 112. 2; 5. 30. 3; 5. 87. 1) மதிபோலும் பட்டம். இன் உவமவுருபு. செம்பட்டும் சிறிய மானுரியாடையாகிய அழகிய பட்டும் அசைத்தான். அசைத்தல் - கட்டுதல், உடுத்தல். ‘எம்’ என்றதால் ‘தன்’ என்பதும் ‘ஆக’ என்பதும் வருவித் துரைக்கற்பாலன. பட்டு:- 6. 2. 11; 59-7.

**193.** போழ் - பிளவு. ‘பிறைப்பிளவு’. ‘போழுமதியம் புனக்கொன்றை புனல்சேர் சென்னிப் புண்ணியா’ (7. 77. 8). போழ் ஒத்த - பிளந்தாற்போன்ற என்னும் பொருட்டு. வேழத் துரி - யானைத் தோல். ஊழித் தீ அன்னானை - ஊழிக்காலத்துத்

வஞ்சனையா ரார்பாடுஞ் சாராத மைந்தனைத்
துஞ்சிருளி லாட லுகந்தானைத் தன்றொண்டர்
நெஞ்சிருள் கூரும் பொழுது நிலாப்பாரித்
தஞ்சுடராய் நின்றானை நான்கண்ட தாரூரே. 194

தீயைப் போன்றவனே. 'அளவிலாப் பல்லூழி கண்டு நின்ற தீர்த்தனே' 'ஊழி முதல்வனாய் நின்றாய் நீயே', 'ஊழித்தீயாய் நின்றாய்' 'ஊழி தோறு முலகினுக் கொருவர்' 'ஊழியளக்க வல்லான்' 'ஊழிவண்ணமுமாவர்' 'ஊழியுமாய் உலகேழாகி' என முன்னும் பின்னும் உள்ளதுணர்க. ஓங்கு மா - உயரிய குதிரைகள். ஆழித்தேர் :- தியாகராசரது திருத்தேரைக்குறிப்பது. (திருவாரூருலா. 96-98) ஒருரும் ஒழியாது உலகெங்கும் எடுத் தேத்தும் ஆரூர்த்தேர் மிக்க பெருமையுடையது. 'தேரூரும் நெடுவீதி பற்றிநின்று திருமாலும் நான்முகனும் தேர்ந்தும் காணாது ஆரூரா ஆரூரா என்கின்றார்கள்.' (6. 25. 9).

194. ஆர் பாடும் - எவர் திறத்தும், 'பார்பாடும் பாதாளர் பாடும் விண்ணோர் தம்பாடும் ஆர்பாடும் சாராவகை அருளி ஆண்டுகொண்ட நேர் பாடல்பாடி நினைப்பரிய தனிப்பெரியோன் சீர் பாடல் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ' (திருவாசகம், 247). மைந்தன் :- மழ - மழ் + து = மழ்ந்து = மய்ந்து மைந்து, என்றதன் திரிபு. (தமிழ்ச்சொல்லமைபு. பக்கம். 55). வீரசோழியம்.. ......பார்க்க. 'துஞ்சிருளில் ஆடல் உகந்தாய் போற்றி' 'நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதன்' 'கூரிருட் கூத்தொடு குனிப்போன் காண்க'. தன் தொண்டர் நெஞ்சு இருள் கூரும் பொழுது நிலாப்பாரித்து அம் சுடராய் நின்றான் :- 'சொற்றெரியாப் பொருள் சோதிக்கு அப்பால் நின்ற சோதிதான் மற்று அறியா அடியார்கள்தம் சிந்தையுள் மன்னுமே'. (3.9.10) 'இடர்கெடுத்து......என் உள் இருட்பிழம்பு அற, எறிந்து எழுந்த சுடர்மணி விளக்கின் உள்ளொளி விளங்கும் தூயநற் சோதியுட் சோதீ' (திருவிசைப்பா. 2) 'இருள்கெட அருளும் இறைவா போற்றி' 'திணிந்ததோர் இருளில் தெளிந்த தூவெளியே'. (திருவாசகம். 389) 'இருள் திணிந்து எழுந்திட்டதோர் வல் வினைச் சிறுகுடில் இது' (435) "இருளாய வுள்ளத்தின் இருளை நீக்கி இடர்பாவம் கெடுத்து ஏழையேனை உய்யத் தெருளாத

காரமுது கொன்றை கடிநாறு தண்ணென்ன
நீரமுது கோதையோ டாடிய நீண்மார்பன்
பேரமுத முண்டார்க ளுய்யப் பெருங்கடனஞ்
சாரமுதா வுண்டானை நான்கண்ட தாரூரே. 195

* தாடழுவு கையன் றுமரைப்பூஞ் சேவடியன்
கோடலா வேடத்தன் கொண்டதோர் வீணையினான்
ஆடரவக் கிண்கிணிக்கா லன்னானோர் சேடனை
ஆடுந்தீக் கூத்தனை நான்கண்ட தாரூரே. 196

சிந்தைதனைத் தெருட்டித் தன்போற் சிவலோக நெறியறியச் சிந்தைதந்த அருளான் '' (6. 54. 4) என்ற அநுபவவாக்கியம் இப் பாடற்பகுதி. 4. 92. 4 பார்க்க. ' ஒன்று மிகினும் ஒளிகவரா தேல் உள்ளம் என்றும் அகலாதிருள் ' (திருவருட்பயன். 29) நம்பிநந்தியடிகளுடைய வரலாற்று நினைவுமாம். (4. 102. 9).

195. கார் அமுது கொன்றை :- ' கண்ணிகார் நறுங் கொன்றை ' (புறம்) ' கார்விரி கொன்றை ' (அகம்) என்றவற்றால், கொன்றை கார்காலத்து மலர்வது எனல் விளங்கும். அதன் மலர்ச்சிக்குக் காரே அமுது. நீரமுது கோதை - கங்கா தேவி. பேரமுதம் - பாற்கடலினின்று கடைந்து எடுத்த அமுதம். பெருங்கடல் நஞ்சு அமுதா உண்டான் :- ' விண்ணோர் அமுதுண்டும் சாவ ஒருவரும் உண்ணா நஞ்சம் உண்டு இருந்து அருள்செய்குவாய் ' என்று இளங்கோவடிகள் வெற்றித் திருவின்மேலேற்றிக் கூறியதுணர்க. ஆர்தற்குரியதல்லாத நஞ்சு ஆரமுதாயிற்று. வினைத் தொகை. பண்புத் தொகையுமாம். அமுதம் உண்டது உய்தியின் பின்னர்த்து. நஞ்சினால் மாய்ந்தனரேல் அமுதுண்ணுவரோ?

196. தாடழுவுகையன் (தாள் தழுவு கையன்) என்றது தாடவுடுக்கையன் என்று பிழைபட்ட பாடம் ஆயிற்று. தாள்தோய் தடக்கை (- ஆஜாநுபாஹு) புறம். 14. 59. 90. 4. வெ. 205. தாட என்றுகொண்டு அடிக்க என்றுரைப்பர். அவ்வாறொரு வினையெச்சம் தமிழில் இல்லை. தாடநம் என்னும் வடசொல்லின்

* ' தாடவுடுக்கையன் ' என்றிருப்பது பொருந்தாது.

மஞ்சாடு குன்றடர வூன்றி மணிவிரலால்
துஞ்சாப்போர் வாளரக்கன் றோளோரியக் கண்குருதிச்
செஞ்சாந் தணிவித்துத் தன்மார்பிற் பால்வெண்ணீற்
றஞ்சாந் தணிந்தானை நான்கண்ட தாரூரே. 197

திருச்சிற்றம்பலம்

சிதைவெனலும் செவ்விதன்று. 'கவிழமலை தரளக்கடகக்கை' (1.45-9) என்றதில் தளர எனக் கடகம் தளரலானது பிழை. திருமுறையில் எழுதினோர் முதலோரால் பிழைகள் பலஉள. கோடல்ஆ - கோள்ளலாகா, அரவேடம் - சிவவேடம், சிவ. போ. சூ. 12. ஆடரவமும் கிண்கிணியும், கிண்கிணிக்காழலகர் (திருவாரூருலா. 59-60. 151. 217-9). 'ஆறுசடைக்கணிவர் ........கோடால வேடத்தர் - இடைமருது மேவிய இடங்கோண்டாரே' என்றதிலும் 'கோடலர'; கோடலா என்றிருந்து பிழைபட்டிருக்கலாம்.

197. மஞ்சு - கருமுகில் (மைது, மய்து, மய்ந்து, மய்ஞ்சு, மஞ்சு), குன்று - திருக்கயிலை, துஞ்சாப்போர் - துயிலாது செய்யும் போர். மாறுப்போர் எனலுமாம், 'துஞ்சாமுழவு' (சிலப்) துஞ்சாக்கம்பலை (பெரும்பாண் 260) குருதிச்செஞ்சாந்து இராவணன் அணியச் செய்து தான் அஞ்சாந்து அணிந்தான். செம்மை × வெண்மை, மார்பினிறு :- 'நீறுசேர் செழுமார்பினாய்' (202).

இத்தன் மையர்பல முறையுந் தொழுதெழ
"வென்றெய் தினை "யென மன்றுடும்
அத்தன் றிருவருள் பொழியுங் கருணையி
னருள்பெற் றிடவரு மானந்த
மெய்த்தன் மையினில் விருத்தத் திருமொழி
பாடிப் பின்னையு மேன்மேலுஞ்
சித்தம் பெருகிய பரிவா லின்புறு
திருநே ரிசைமொழி பகர்கின்றார்.

## 20. திருவாரூர்

### திருப்பதிக வரலாறு

புற்றிடங்கொண்டான் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் என்று, அற்றவுணர்வோடும் ஆரூர்த்திருவீதியுள் அணைந்து, திருத்தொண்டர் கூட்டத்துடன் தோரணவாயிலை நண்ணி, திருநெடுந் தேவாசிரியன்முன் வந்து இறைஞ்சி, திருமாளிகை வாயில்களிற் புகுந்து, மாமணிப்புற்றுகந்தாரை நேர்கண்டுகொண்ட திருநாவுக்கரசு நாயனுர், தொழுது விழுந்து புளகம் உற்று, அன்பு கூரக் கண்மாரிபொழியத் திருமூலட்டானரைப் புண்டரிகக்கழல் போற்றித் திருத்தாண்டகம் புனைந்து, அத் தூண்டா விளக்கு அன்ன சோதிமுன் நின்று துதித்து உருகிப் பாடியருளிய கலைப்பதிகம் இத்திருப்பதிகம்.

பண் சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

காண்டலே கருத்தாய் நினைந்திருந்தேன்
மனம்புகுந்தாய் கழலடி
பூண்டுகொண் டொழிந்தேன்
புறம்போயினு லறையோ
ஈண்டுமாடங்க ணீண்டமா ளிகைமேலெழுகொடி
வானி ளம்மதி
தீண்டிவந் துலவுந்
திருவாரூ ரம்மானே. 198

198. நெருங்கிய மாடங்களின் நீண்ட மாளிகைமேல் எழுந்தோங்கிய கொடிகள் வானில் ஊரும் இளம் பிறையைத் தீண்டிவந்து உலவும் உயர்வுடைய திருவாரூரில் எழுந்தருளிப் புற்றிடங்கொண்ட கடவுளே உன்னைக் காணவேண்டும் என்னும் ஒன்றே குறிக்கோளாய்க் கருதியிருந்தேன், அது நிறைவேறியது என்பது திண்ணமாக என், உள்ளத்திற் புகுந்து நின்ருய். உன் கழலடியை என் அகத்திற்கு அருங்கலமாக்கிக்கொண்டு நின்றேன் இனிப் புறத்திற் போகலோட்டேன் (204, 206) யானும் போகலாகாது; நீயும் போயினுல் நின்மேல் ஆணை. காண்டல் - காட்சி, ஏகாரம் பிரிநிலை. கருத்து - குறிக்கோள். 'ஆண்டவன் அடியே நினைந்து ஆசையால் காண்டலே கருத்தாகி

கடம்படந்நட மாடி யேழ்களை கண்ணினக்கோரு
காதல் செய்தடி
ஒடுங்கி வந்தடைந்தே
னொழிப்பாய் பிழைப்பவெல்லாம்
முடங்கிறன் முது நீர்மலங்கிள வாளைசெங்கயல்
சேல்வ ரால்களி
றடைந்த தண்கழனி
யணியாரு ரம்மானே. 199

யிருப்பனே' (5. 71. 8.) மனம்புகுந்தாய்:- 'நுனையே நினைந் திருந்தேன். வந்தாய், போய் அறியாய் மனமே புகுந்து நின்ற சிந்தாய்' (7. 21. 1.) 'என்மனமே ஒன்றிப் புக்கனன் போந்த சுவடு இல்லையே' (782) 'சிந்தை புக்கிருந்து போகாத புனிதன்' (6. 79. 2.) 'போய்யாது என் உயிருட்புக்கு இருந்தாய் இன்னம் போந்தறியாய்' (7. 28. 5) 'போகாது என்சிந்தை புகுந்தாய் போற்றி' (6. 55. 26) 'சிவன் எனும் ஓசை அல்லது அறையோ உலகில் திருநின்ற செம்மை உளதே' பா. 72. குறிப்பு நோக்குக. 'சிவம் அல்லது இல்லை அறையோ சிவமாம் தவம் அல்லது இல்லை தலைப்படுவார்க்கு' (திருமந்திரம் 1534.) நோக்குக. 'செம்மையுள் நிற்பராகிற் சிவகதி விளையும் அன்றே' (737) 'நிவஞ்சகத்து அகன்ற செம்மை ஈசன்' (760) செய்ய மலர்கள் இடமிகு செம்மையுள் நிற்பரே' (5. 86.17) 'திருநின்ற செம்மையே செம்மையாக்கோண்ட திருநாவுக்கரையன்றன் அடியார்க்கும் அடியேன்'. (திருத்தோண்டத் தோகை.)

199. இரல், மலங்கு, வாளை, சேங்கயல் (× கருங்கயல்)' சேல், வரால், களிறு (சுறு) என்னும் பெயரிய மீனினம் சேர்ந்த தண் செய்கள் அணிசெய்யும் திருவாரூர்ப்பெருமானே, முழா ஒலிக்கத் திருக்கூத்தாடினாய், எனக்கும் ஏனைய அடியார்க்கும் துன்பங்களைக் களைகணாய்நின்று தவிர்க்கும் நினக்குத் தனியன்பு செய்து, போற்கழலுள் ஒடுங்கிவந்து அடைந்தேன். யான் பிழை யாகச்சேய்த எல்லாவற்றையும் போறுத்தோழிப்பாய். 'ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம் நடுங்குவதில்லை நமனும் அங்கு இல்லை' (திருமந்திரம். 1624.) கடம் படம் - பிண்டத்தும் அண்டத்தும். கடம் (பஞ்சமுக வாத்தியம்) ஒலிக்க ; பிறவி தீர எனலும் ஆம். களைகண் - களையும் இடமானவன்.

அருமணித்தடம் பூண்முலை யரம்பையரோ
　　டருளிப் பாடியர்
உரிமையிற் றொழுவா
　　ருருத்திர பல்கணத்தார்
விரிசடைவிரதிக ளந்தணர் சைவர்பாசுபதர்
　　கபாலிகள்
தெருவினிற் பொலியுந்
　　திருவாரூ ரம்மானே　　200

200. அருமை :- விலைமதித்தற்கருமை. 1. அருளிப் பாடியர் (பெரிய சேரமான் 134. வெள்ளானைச் 33 ) கோயிற்புரா இரணியவன்மச் - 51 - 2) 2. உரிமையிற்றொழுவார்:- ஆதி சைவர் ; சிவனுக்கே உரிமையான உருத்திர கணிகையருமாம் (கோயிற்புரா திருவிழாச் 27 - உரை) 3. உருத்திர பல்கணத் தார் :- (சிவகணத்தார். அபிதானசிந்தாமணி. பக். 652) 'உறவாவார் உருத்திர பல்கணத்தினோர்கள்'. இக்கணத்தைக் காளாமுகர் எனல் அறியார் கூற்று. 4. விரிசடை விரதிகள் :- துறவிகள்; மாவிரதிகள். (சித்தாந்தப்பிரகாசிகை; சிவஞான பாடியம்) வித்தகக் கோலவெண்டலைமாலை விரதிகள் (208) பாசுபதர் கூறிய இயல்புடைய ஆன்மாக்கள் சாத்திர முறைத் தீக்கைபெற்று எலும்புமாலை அணிதல் முதலிய சரியைகளின் வழுவாதொழுகி முத்திபெறும் என்னும் அகப்புறச் சமயத்தார் முத்தர்க்கு எல்லாக் குணங்களும் உற்பத்தியாம் என்பர். உற்பத்தி சமவாதி. (ஞானாவரண விளக்க மாபாடியம். பக். 189-9). 5. அந்தணர் :- ஆதிசைவர் முதலோர் 6. சைவர் :- ஞானா. வி. மா. பக். 224. 7. பாசுபதம் :- மாயை, கன்மம் என்னும் இரண்டும் இசைந்து ஆணவம் இல்லை என மறுத்து, இறைவன் தன் குணங்களைச் சாத்திர முறைப்படி பெற்ற தீக்கையால் ஞானம் பற்றியவனிடத்தில், பற்றுவித்துத் தன் அதிகாரத்தின் ஒழிவு பெற்றிருப்பன் என்னும் அகப்புறச் சமயத் தார். சங்கிராந்த சமவாதி. (ஞானா. வி. மா. பக். 189-224). 8. கபாலிகள் :- மாவிரதர் போலவே ஆன்ம வியல்பு கொண் டவர். பச்சைக்கொடி ஒன்று கைக்கொண்டு நாடோறும் மனிதத் தலையோட்டில் பிச்சையேற்றுண்பவர். முத்தராய்ச் சிவன் ஆவே சித்தலால் எல்லாக் குணங்களும் பெற்றுச் சிவசமம் ஆவர்

பூங்கழறொழுதும் பரவியும் புண்ணியாபுனிதாவுன்
போற்கழல்
ஈங்கிருக்கப் பெற்றே
னென்னகுறை யுடையேன்
ஓங்குதேங்கிலை யார்கமுகிள வாழைமாவோடு
மாது ளம்பல
தீங்கனி சிதறுந்
திருவாரூ ரம்மானே. 201

என்னும் கோள்கையர்; அகப்புறச் சமயத்தவர். ஆவேச சமவாதி (ஞாஞ. வி. மா. பக். 184-6). தெருவினிற் போலிதல்:- வழிபடற்போருட்டுத் தலத்தில் வாழ்ந்து திருக்கோயிலுக்குச் செல்லுதலும் மீளுதலும் நிகழ்த்துவதால் ஆன காட்சியும் பெருமான் திருவுலாக்கண்டு மகிழ்ந்து வரும் தோற்றமும் ஆம். இதில் விளித்து நின்றதன்றி வேண்டியது யாதும் இன்று. முன்ன திற் பிழைத்தவை போறுக்க வேண்டியதுணர்க. 203 பார்க்க.

201. மேலோங்கி வளர்ந்த தென்குகளும் இலை நிறைந்த கமுகங்களும் இளவாழைகளும் மாக்களும் மாதுளங்களும் பலாக் களும் தத்தம் இனிய கனிகளைச் சிதறுகின்ற (வளம் மிக்க) திருவாரூர். ‘ தெங்கம் பழம்போல் திரண்டுருண்ட ’ என்றதால், தென்னையினுடையதையும் கனி எனல் கூடும் ; கமுகம் பழம் என்னும் வழக்கம் இன்று ; கனி என்றது எவ்வாறு போருந்தும் எனில் கூறுதும். கனிந்தது கனி. பழுத்தது பழம். முற்றியது முற்றல். இம் மூன்றும் ஒன்றல்ல. முற்றிய பாக்கு, பிஞ்சுப் பாக்கு எனல் உண்டு. முற்றுதல் கனிதல் எல்லாம் போது. வாழை முதலியவற்றோடு சேர்த்துக் கூறலால், அப் போதுச் சோல்லால் உணர்த்தலாயிற்று. பல - பலா. ‘ தீங்கனி ’ என்றது எல்லாம் இனிமையுடைமை குறித்து, தோழுதும் பரவி யும் (வழிபட்டமையால்) உன் கழல் ஈங்கு (- என் உள்ளத்தில்) இருக்கப்பெற்றேன். என்ன குறை உடையேன். ஒரு குறையும் இல்லேன். தோழல் மெய்யின் தோழில். பரவல் வாயின் வினை. இருக்கப்பெறல் - உள்ளத்தின் நிகழ்ச்சி. தோழுது பரவிய பூங் கழலே, புண்ணியத்தாலும் புனிதத்தாலும் உள்ளேயும் போன் னேன ஒளிரும் கழல் என்க. வழிபடுவோர்க்கு இன்றியமையாத்

நீறுசேர்செழு மார்பினுய்நிரம் பாமதியோடு
நீள்ச டையிடை
ஆறுபாய வைத்தா
யடியே யடைந்தொழிந்தேன்
ஏறிவண்டொடு தும்பியஞ்சிற கூன்றவிண்ட
மலரிதழ்வழி
தேறல்பாய்ந் தொழுகுந்
திருவாரூ ரம்மானே. 202

அளித்துவந்தடி கைதொழுமவர் மேல்வினைகெடு
மென்றி வையகம்
களித்துவந் துடனே
கலந்தாடக் காதலராய்க்

புண்ணியமும் புனிதமும் அவர்க்கு அவ்வேளையில் அருளும் இறைவன் வடிவமும் ஆகும். ஓங்கு தெங்கு .- வினைத்தொகை. நிகழ்வுபற்றியது. பலகனி எனல் சிறவாது. 'தெங்கு . ...பல' எழுவாய், 'சிதறும்' பயனிலை. 'கனி' செயப்படுபொருள்.

202. வண்டும் தும்பியும் ஏறிச் சிறகுகளை ஊன்றலால் மலர்ந்த பூக்களின் இதழ்வழியாக வழியும் தேன் பாய்ந்து ஒழுகு (ஓடு)கின்ற திருவாரூர், நீறு......மார்பு :- 'மார்பிற்பால் வெண்ணீற்று அஞ்சாந்து அணிந்தான்' (197). மார்பின் செழுமைக்கு நீறு சேர்தல் ஓர் ஏது, நிரம்பாமதி :- 'குறைமதி' `ஆம் குறை மதியே தாங்கி என்று உலகம் அறைகுறை அற நிறைமதியும் தாங்கிய முடியோடு ஓங்கிய சோணசைலனே கைலை நாயகனே' (சோணசைலமாலை 3.) ஆறு சடையிடைப் பாய வைத்தாய் :- விரைந்து பாய்ந்த ஆற்றின் மிகையை அச்சடைமுனையில் அடக்கிய ஆற்றல் குறித்தது. (நன்னெறி.21.) 'அடியே அடைந் தொழிந்தேன்' - திருவடியே சேர்ந்து நின்றேன். வண்டு, தும்பி. சுரும்பு, தேன் என வண்டினம் நான்கு உள. 'அடியே' என்றதில் ஏகாரம் பிரிநிலை, தேற்றப் பொருட்டுமாம். (4. 1. 1).

203. அளித்து - அன்பின் முதிரப்பெற்று. அன்பு அளிந்தது அளி. 'தலையளி'. உவந்து ; தொழுமவர் மேல்வினை :-

குளித்துமூழ்கியுந் தூவியுங்குடைந் தாடுகோதையர்
குஞ்சி யுட்புகத்
தெளிக்குந் தீர்த்தமருத்
திருவாரூ ரம்மானே. 203

திரியுமூவெயி றீயெழச்சிலை வாங்கிநின்றவ
னேயென் சிந்தையுள்
பிரியுமா றெங்ஙனே
பிழைத்தேயும் போகலொட்டேன்

(209) 'ஆரூரரைத் தூரத்தே தொழுவார்வினை தூளியே' தொழும் அடியாரது மேலை (சஞ்சிதம், ஆகாமியம் என்னும் இரண்டு) வினைகள். பிராரத்தம் உடலூழாய்க் கழியும். (சிவ. போதம். சூ. அதி. மாபாடியம்) காலத்தின் முன் பின் இரண்டும் மேல் எனப்படும். இவ்வையகம், வினைகேடும் என்று வந்து. வையகம்வந்து, ஆடுவது வினைகெடுமென்று. காதல ரா்ய்க் கோதையராடுவது அவ்வையகம் கலந்து ஆடக்கண்டு. கலந்து ஆடக் காதல் உற்றவராகிக் குளித்தும் மூழ்கியும் தூவி யும் குடைந்து ஆடும் கோதையர் எனலும் ஆம். ஆயின், வையகம் களித்துவர என்று செயவெனெச்சமாக்கி முடிக்க. குளித்தல் முதலியவற்றின் வேறுபாடுணர்க. 'குஞ்சி' இருபா லார் தலைமயிர்க்கும் பொதுப்பெயர். 'குஞ்சி அழகும்.... கல்வி அழகே அழகு' (நாலடியார்.) புகத் தெளிக்கும் தீர்த்தம் அருத சிறப்புடையது திருவாரூர். தீர்த்தம் - தூய (சிவபுண்ணிய) நீர். 'தொழுமவர் என்பதுபோலும் தொடரின் மரூஉவே செல்லு மார் (செல்லுமவர்) முதலியன. செல்லுமோர் என்பதும் அதன் மரூஉவே, குருக்கண்மார், செட்டிமார் என்பவற்றின்கண் உள்ளது மகார் மார் என்று மருவியது. மருவியக்கால் இரண்டும் ஒன்றுபோலாம். விழுதல் விழைதல் இரண்டும் மருவியபின் 'வீழ்தல்' என்று ஒன்றுதல்போல்வது அது. என்ற இவை என்று கொண்டு பொருந்தக் கூறலும் ஆம்.

204. திரியும் மூவெயில்:- 'திரியும் மூன்றுபுரமும்' (2. 122. 4.) 'திரியுமூவெயில்' (5. 25. 11.) 'திரியும் மும்மதில்' (5. 36. 10.) 'திரியுமுப்புரம்' (7. 61. 3; 67. 9.)

பெரிய செந்நெற் பிரம்புரி கேந்த சாலிதிப்பிய
　　மென்றி வையகத்
தரியுந் தண்கழனி
　　யணியாரூ ரம்மானே. 204

பிறத்தலும்பிறந் தாற்பிணிப்பட வாய்ந்தசைந் துட
　　லம்பு குந்துநின்
றிறக்குமா றுளதே
　　யிழித்தேன் பிறப்பினை நான்
அறத்தையேபுரிந்த மனத்தனு யார்வச்செற்றக்
　　குரோத நீக்கியுன்
திறத்தனு யொழிந்தேன்
　　றிருவாரூ ரம்மானே. 205

'திரியும்புரம்' (7. 79. 8.) 'திரிவன மும்மதில்' (7. 23. 8.) 'திரிதருபுரம்' (3. 23. 9.) சிலை - மேருவை வில்லாக, வாங்கி - வளைத்து. சிந்தையுள் பிரியுமாறு இயலாமைக்கு. மூவெயில் எரித்தவாற்றால் மும்மலந்தீர்த்துச் சிவஞானங்காட்டிச் சிவங்காட்டிய உண்மையே ஏதுவாயிற்று. பிழைத்தேயும் - தப்பியும்கூட. செந்நெல், பிரம்புரி, கேந்தசாலி, திப்பியம் என்ற இவை தன்னகத்து அரியும் தண்கழனியை அணிந்த திருவாரூர் அம்மானே. நெல்வகை. 'போகலொட்டேன்', 206.

205. திருவாரூர் அம்மானே, இறந்தால் பிறத்தலும் பிறந்தால் இறத்தலும் உண்டு. பிறந்தால் உடலிற் புகுந்து நின்று, பிணிகள் தோன்ற நுணுகித் தளர்ந்து இறக்குமாறு உளதே! பிறப்பை இழித்து வெறுத்தேன். நான் அறத்தையே விரும்பிய உள்ளத்தனுகி, காமக்குரோத லோபமோக மதமாற் சரியம் என்னும் அறுபகையும் போக்கி, உன் அடிமைத்திறம் உடையேனுய் நின்றேன். ஆதலின், என்னைப் பிறக்கலொட்டாது சிவலோகத்திருத்துவது ஆண்ட நின் கடன். 'பிறந்தால் இறக்குமாறுளது' என்றதால், (இறந்தால்) பிறத்தலும் எனக் கொண்டுரைத்தல் ஆயிற்று. ஆய்தல் - நுணுகுதல். 'ஒய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய் ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம். (தொல். உரி 34.) ஏகாரம் தேற்றம். ஆர்வம்

முளைத்தவெண்பிறை மொய்சடையுடை யாயெப்போது
னெஞ்சிடங் கொள்ள [மேன்
வளைத்துக் கொண்டிருந்தேன்
வலிசெய்து போகலொட்டேன்
அளைப்பிரிந்த வலவன்போய்ப்புகுதந்தகாலமுங்
கண்டு தன்பெடை
திளைக்குந் தண்கழனித்
திருவாரூ ரம்மானே. 206

நாடினர்கம லம்மலரய னோடிரணிய
னாகங் கீண்டவன்
நாடிக் காணமாட்டாத்
தழலாய நம்பானைப்

(காமம்) செற்றம் - (மாற்சரியம்) குரோதம் (சினம்) 'பொங்கு மதமானமே ஆர்வச்செற்றக் குரோதமே யுலோபமே' (6. 27. 6) திறம்:- ஈண்டு அடிமைத்திறம். 'செய்வன எல்லாம் அவன் அருளின் வழி நின்று செய்யும் செயலாய்க் கண்டு கொண் டிருப்பர்... ..அவ்விறைபணியாகிய அடிமைத்திறம் உடையார்' (சிவஞானபோத மாபாடியம் சூ. 10. அதி. 2)

206. அளை - சேற்றில் உள்ள நண்டுவளை. அலவன் - ஈண்டு நண்டின் ஆண். நள் + து = நண்டு, நள்ளி என்றதால் விளங்கும். பெடை - நண்டின் பெண். 'முளைத்த வெண்பிறை' என்றது சிவபிரான் சடையை அடைந்தது முதல் முளையாமையும் அழியாமையும் தோற்றிற்று. மொய்சடை:- 'பல்சடைப் பனிகால் கதிர் வெண்டிங்கள் சூடினாய்; மொய் பெருமையுமாம். எப்போதும் கொள்ள. நெஞ்சிடம் உன்னைக் கொள்ள. நீ நெஞ்சிடத்தைக்கொள்ள வளைத்துக் கொண்டிருந்தேன்:- 'வளைத்து நின்று ஐவர் கள்வர் வந்து எனை' (769). வலி செய்தல்:- வன்மையோடு தடுத்தல். பற்றி ஈர்த்துக் கொண்டிருத்தல். 'போகலொட்டேன்':- 204.

207. கமலம்மலர் (-தாமரைப்பூ) சந்தம் நோக்கி மிக்கது. இரணியாசுரன் மார்பைக் கிழித்தவன் திருமால். அயனும்

பாடுவார்பணி வார்பல்லாண்டிசை கூறுபத்தர்கள்
சித்தத் துள்புக்குத்
தேடிக் கண்டுகொண்டேன்
திருவாரூ ரம்மானே. 207

திருச்சிற்றம்பலம்

மாலும் நாடினர். நாடிக்காண வல்லரல்லராம்படி. தீப்பிழம் புருவாய் நின்ற நம்பானாகிய நின்னைத் தேடிக்கண்டுகொண்டேன். காணமாட்டா அருமை மாலயனிருவர்க்கும், கண்டுகொண்ட எளிமை தமக்கும் உற்றவாறு தோற்றிய நயம் உணர்க. புறத்தே பேரொளிப் பிழம்பாய் வெளிப்பட்டுக் காட்சி தந்தும் காண மாட்டா ராயினர். பத்தர்களது (அகத்தே) சித்தத்துள் ஒளிந்துகொண்டிருந்தும் கண்டுகொண்டேன் நான் என்றருளினர். 'என் சித்தத்துள்' எனல் ஈண்டுப் பொருந்தாது. 93. பார்க்க. எவரேனும் .... ஈசன் திறமே பேணிக் கவராதே தொழும் அடியார் நெஞ்சின் உள்ளே கன்றுப்பூர் நடுதறியைக் காண லாமே.' (6. 61. 1-3-9). பா. 209 இல் குறித்தவாறு நம் பானைப் பாடுவாரும் பணிவாரும் ஆகிய பத்தர்கள் முத்திறத் தாருமாவர். வாழ்த்திசை பாடும் மெய்யன்பர்கள். வாய்த்து இசைப்பது வாழ்த்திசை. பல்லாண்டு பல்லாண்டு வாழ்க என்று இசைப்பது பல்லாண்டிசைத்தல்; பல்லாண்டிசை கூறுதல்; பல்லாண்டு கூறுதல். 'பல்லாண்டு கூறுதும்'.

பத்தனாய்ப் பாட மாட்டேன் என்றுமுன் னேடுத்துப் பண்ணால்
அத்தாவுன் னுடல் காண்பா னடியனேன் வந்த வாறென்
றித்திறம் போற்றி நின்றே யின்றமிழ் மாலை பாடிக்
கைத்திருத் தொண்டு செய்யுங் காதலிற் பணிந்து போந்தார்

அருட்பெரு மகிழ்ச்சி பொங்க வன்னம்பா லிங்கு மென்னுந்
திருக்குறுந் தொகைகள் பாடித் திருவுழ வாரங் கொண்டு
பெருத்தெழு காத லோடும் பெருந்திருத் தொண்டு செய்து
விருப்புறு மேனி கண்ணீர் வெண்ணீற்று வண்ட லாட.

## 21. திருவாரூர்

### திருப்பதிக வரலாறு

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருப்புகலூரில், முருக நாயனார் திருமடத்தில் மேவியிருந்தருளிய காலை, திருநாவுக்கரசு நாயனார் திருவாரூர் மணிப்புற்றில் வாழும் மாமணியைக் கும்பிட்டு நீடுதிருப்புகலூர் நோக்கி மீண்டருளினார். அது கேட்டருளிய ஆளுடைய பிள்ளையார் ஆளுடைய அரசரை எதிர்கொள்ளும் விருப்புடன் பெருந்தொண்டர் குழாத்துடன் எழுந்து எதிரேசென்று அவ்வாகீசர் வரும் நெறியிற் சேர்ந்தருளினார். திரண்ட பெருந் திருநீற்றுத் தொண்டர் குழாம் இரண்டும் சேர்ந்தன. அப்போதில் இரண்டு நிலாக் கடல்கள் ஒன்றாகி அணைந்தனபோல் இசைந்தன. இருவரும் எதிரெதிர் வணங்கினர். அப்பரே நீர் வரும் நாளில் திருவாரூர் நிகழ்பெருமை வகுத்து உரைப்பீர் என்றருளிய பிள்ளையார்க்குத் திருவடித்தொழுத வாய்மையராகிய நாவரசர் இத்தகைமைத்து என்று எங்ஙனம் மொழிகேன் என்று, சித்தம் நிலாவும் திருவாரூர் மார்கழித் திருவாதிரைத் திருநாளின் மகிழ் செல்வத்தை அருள்செய்த மொழிமாலை இத்திருப்பதிகம். (புராணம். 235)

திருவாதிரைத் திருப்பதிகம்

பண் குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

முத்துவிதான மணிப்பொற்கவரி முறையாலே
பத்தர்களோடு பாவையர்சூழப் பலிப்பின்னே
வித்தகக்கோல வெண்டலைமாலை விரதிகள்
அத்தனாரூ ராதிரைநாளா லதுவண்ணம். 208

208. முத்துவிதானம் - (210) முத்துக்களின் கோவையாலான மேற்கட்டி. அதுவும் மணிப்பொற்கவரியும் திருவாரூரிற் சிறப்புற்றவை. பத்தர்கள் - பத்திமிக்க ஆடவர். சிவ சிந்தனை சிறிதும் இல்லாத மாக்களை விலக்கிப் பத்தர்கள் என்றதுணர்க. பாவையர் - அத்தகைய பத்திமிக்க பெண்டிர் அவருள் முதியர் திருவீதி வலம்வர வலியற்றவராதலின் பாவையர் என்றார் (214) 'விரிசடைவிரதிகள்' (200). மார்கழித் திருவாதிரைநாள் பங்குனி உத்திரத் திருநாள் இரண்டுமே

நணியார் சேயார் நல்லார் தீயார் நாடோறும்
பிணிதான் றீரு மென்று பிறங்கிக் கிடப்பாரும்
மணியே பொன்னே மைந்தா மணாளா வென்பார்கட்
கணியா ணுரு ராதிரை நாளா லதுவண்ணம். 209

---

தியாகராசப்பெருமானுடைய திருவடிக்காட்சி எய்தும் நாள். 'கனகத்யாகேசன் பருதிவெருவுருவம் பார்த்தாள் (பேதை), அருகுபோய் வேதச்சிரத்திருந்து விண்டுவும் கண்டறியாப் பாதத்தழகு எனவும் பாராதே, மாதவர்க்கும் தேவர்க்கும் ஆட்டைக்கு (-ஆண்டோன்றற்கு) இருதினம் சேவிப்போர் யாவர்க்கும் நாட்டம் அதில் என்னுதே, பூவைமீர்! பந்தித்த ஆடரவக் கிண்கிணி என்பாவைக்கு ஆம் வந்தித்து வாங்க வருக என்ருள்.' (திருவாரூருலா. 210-2). இத்திருப்பதிகம் முழுதும் வினைமுடிபு விளங்காதவாறுள்ளது. வினைமுடிபு விளங்காமை உயிாக்கியல்பன்றே? கோலத்தினல் - ஒருவனுக்கு இறுதிவந்த எல்லைக்கண். நாளால் - நாளின்கண். (குறள் 102). வேற்றுமை மயக்கம். ஆதிரை நாள் வண்ணம் அதுவோ? அது ஆதிரைநாள் வண்ணமோ? ஆதிரைநாளின் மகிழ் செல்வம் அத் தன்மைத்து.

209. திருவாரூர்க்கு அருகிலுள்ளார் நணியார். தொலைவினர் சேயார். திருவாரூரிலும் அணிமையிலும் சேய்மையிலும் உள்ளவராய் வந்து வழிபடுவோர் நல்லார். வழிபடாதார் தீயார். வணங்காதார் நணியாராயும் சேயார் என்றும் நல்லாராயும் தீயார் என்றும் உரைத்தாரும் உளர். 'பிணி.. ...தீரும் என்று...... கிடப்பார்':- 203. பிறங்கி - பெருகி, புற்றிடங்கொண்டதால் 'மணியே' என்ருர். 'ஆரூர் மணிப்புற்றில் அமர்ந்து வாழும் நீண்ட சுடர்மாமணி' (அப்பர் புராணம். 232). அடிக்கு ஆயிரம் பொன் அளிப்பவர் ஆதலின், 'பொன்னே' என்ருர். 'கனகத்தியாகேசர்' 'செம்பொற்றியாகர்' 'செம்பொற் சிங்காசனுதிபதி' 'பொன்பரப்பிய திருவீதி' முதலிய திருப்பெயர்களையும், 'கனகம் ஓர் அடிக்கு ஆயிரம் நல்கும் எம் கடவுள் அனக நாயகன்' (திருவாரூர்ப் புராணம் திருநகரச். 47.) 'அடி ஒன்றுக்கு உய்யும்படி பசும்பொன் ஓர் ஆயிரம் முகந்து பெய்யும் தியாகப் பெருமானே' (திருவாரூருலா. 173-4) என்பவற்றையும். 'பொன்னின் மேனிச்சிவன்' 'பொன்னுருவைத் தென்னுரூர் மன்னுகுன்றை' பொன்னேபோல் திருமேனியுடையான்றன்னை'

வீதிகடோறும் வெண்கொடியோடு விதானங்கள்
சோதிகள்விட்டுச் சுடர்மாமணிக ளொளிதோன்றச்
சாதிகளாய பவளமுமுத்துத் தாமங்கள்
ஆதியாரூ ராதிரைநாளா லதுவண்ணம். 210

குணங்கள்பேசிக் கூடிப்பாடித் தொண்டர்கள்
பிணங்கித்தம்மிற் பித்தரைப்போலப் பிதற்றுவார்
வணங்கிநின்று வானவர்வந்து வைகலும்
அணங்கனூரு ராதிரை நாளா லதுவண்ணம். 211

'செம்பொனே மரகதமே மணியே போற்றி' 'செம்பொனை நன் மணியைத் தென்றிருவாரூர்புக்கு, என்பொனை என்மணியை என்று கோல்எய்துவதே' 'திருவாரூர்ச் செம்பொனே' என்று அப்பர் சுந்தரர் அருளியவற்றையும் எண்ணுக. கிண்கிணிக் காலழகுடையன் இளைஞனுதலின், மைந்தா என்றார். (மழ + து. மழ்து) மழ்ந்து, மய்ந்து, மைந்து + அன் = மைந்தன்) 'மண வாளராகி மகிழ்வர்' 'கலியாணபுரம்' 'கலியாணசுந்தரர்' 'திருவாரூர் மணவாளர்' என்னும் சிறப்புடைமையால் மணாளா' என்றார், இம்மூன்று பெயரும் சொல்லி அழைத்தால் வரும் மணியும் பொன்னும் போக வாழ்வும் ஆகிய இம்மைப்பயன் குறித்து, அணியான் என்றார். நணியாரும் சேயாரும் நல்லாரும் தீயாரும் நாள்தோறும் பிணிதீரும் என்று பிறங்கிக் கிடப்பார். மணியே......என்பார். கிடப்பாரும் என்பாருமாகிய அவர்கட்கு அணியான். அது ஆதிரைநாள் வண்ணம்.

210. வெண்கொடியோடு விதானங்களும் சோதிகள் விட்டுச் சுடர்கின்ற மாமணிகளும் ஆகிய அவற்றின், ஒளி தோன்றவும் சாதிப்பவளத்தாலும் சாதிமுத்துக்களாலும் ஆகிய மாலைகள் (நாலவும்) ஆதியாரூர்த் திருவாதிரைத் திருநாள் (விளங்கிற்று). விதானங்கள், 208. சோதிகளை விட்டுச் சுடர்தல் மாமணிகளின் வினை. தாமம் - மாலை, ஆதி - சிவபிரான்; முதல், விதானங்கள்; மணிகள்; தாமங்கள் என்று தனித்தனி யாக முடித்து, ஆதிரைநாளில் அது வண்ணம் எனலாம், 'விதானமும் வெண்கொடியும் இல்லாவூர் ஊரல்ல ... காடே' (6. 95. 5).

211. தொண்டர்கள் (சிவபிரானுடைய) குணங்களைப் பேசியும் கூடிப்பாடியும் தம்மிலே பிணக்கம் உற்றுப் பித்தர்

நிலவெண்சங்கும் பறையும்மார்ப்ப நிற்கில்லாப்
பலருமிட்ட கல்லவடங்கள் பரந்தெங்கும்
கலவமஞ்ஞை காரென்றெண்ணிக் களித்துவந்
தலமராரூ ராதிரைநாளா லதுவண்ணம். 212

விம்மாவெருவா விழியாத்தெழியா வெருட்டுவார்
தம்மாண்பிலராய்த் தரியார் தலையான் முட்டுவார்
எம்மானீச னெந்தையெ னப்ப னென்பார்கட்
கம்மானாரூ ராதிரைநாளா லதுவண்ணம். 213

.........................................................................

களைப் போலப் பிதற்றுதலும் செய்வர், வானவர் வைகலும் வந்து வணங்கி நின்று (வரம்பெறுவர்). அணங்கன் - தெய்வத்தன்மை யுடையவன். மாதியலும் பாதியனுமாம். 'அணங்கு புத்தேள் ஏற்றதூர் கடவுள் தேவே'. 'காரிகை அணங்கு' (சூடாமணி நிகண்டு) அணங்கு+அன். பிணங்கி - கருத்து வேறுபாடுடைய வராய். 'பிணங்கிடுவர் விடுநீ' (சித்தியார்).

212. நில - நிலாப்போலும், பறை - வாத்தியப்போது, ஆர்ப்ப - ஒலிக்க. நிற்கில்லா - விட்டு நிற்றலாற்றாத, கல்ல வடங்கள்:- காலிற் சதங்கை முதலிய வடம் கட்டிக்கொண்டு நில்லாமல் தொடர்ந்து தாளவொற்றுக்குப் பொருந்தமிதித்துச் செய்யும் இன்னோசை; அடியர் பலர் கூடி நிகழ்த்துவது என்று கருதப்பெறுகின்றது. 'பலரும் இட்ட கல்லவடங்கள்' என்ற தாலும், 'சங்கும் பறையும் ஆர்ப்ப இட்ட' (வை) என்றதாலும், அவ்வொலி எங்கும் பரந்து, கலாபமயில்கள் கார் (- மேகம்) என்று (1. 130. 1) எண்ணிக் களித்துவந்து அலமருகின்ற ஆரூர் என்றதாலும் அது பொருந்தும். 'அடியார் கல்ல வடப் பரிசு' (7. 84. 5) [திருப்பெருந்துறை (யடைந்த படலம் 17)ப் புராணம். 17. ஒருவகை வாத்தியம். ஷை குறிப்புரை] அலமரு+ ஆரூர்=அலமராரூர். மெய்த்தனு + என்று = மெய்த்தனென்று. (5. 76. 5) மஞ்ஞை - மயில். கலவம் - தோகை. கார் - மேகம். அலமரல் - சுழலல். அலம் வரல் என்பதன் மரூஉ. 'விருப் போடு வெண்சங்கம் ஊதாவூரும் ... ஊரல்ல .... காடே' (6. 95. 5) 'ஏழில் இயம்ப இயம்பும் வெண்சங்கு எங்கும்' (திருவாசகம்).

213. விம்மா - விம்மி, பொருமி. வெருவா - வெருவி. விழியா - விழித்து. தெழியா - தெழித்து. வெருட்டுவார் -

சேந்துவர்வாயார் செல்வனசேவடி சிந்திப்பார்
மைந்தர்களோடு மங்கையர்கூடி மயங்குவார்
இந்திரனாதி வானவர்சித்த ரெடுத்தேத்தும்
அந்திரனாரூ ராதிரைநாளா லதுவண்ணம். 214

முடிகள்வணங்கி மூவாதார்கண் முன்செல்ல
வடிகோள் வேய்த்தோள் வானரமங்கையர் பின்செல்லப்
பொடிகள்பூசிப் பாடும்தொண்டர் புடைசூழ
அடிகளாரூ ராதிரைநாளா லதுவண்ணம். 215

வெருளச்செய்வார் மாண்பு - (மாண்+பு) மாட்சி. நற்பண்பும் நற்செயலும் மாண்பு எனப்படும். தரியார் - தாங்கார். பொரூர் என்றபடி. எம்மான் - எம் கடவுள். மகன் என்பதன் திரிபு மான் என்பது. 'மக்கள்' பன்மை. 'எம் பெருமக்கள்' 'தந்தம் பெருமைக்கு அளவாகிய சார்பில் நிற்கும் எந்தம் பெருமக்களை யாவர் தடுக்க வல்லார்' (மூர்த்தி நாயனார் புராணம். 15). ஈசன் - உடையான். எந்தை - எம்வழி முதல். என் அப்பன் - என்னைப் பெற்றவன். 'வெள்ளங் காட்டி வெருட்டிட அஞ்சி வெருவி ஓடித் தழுவ வெளிப்பட்ட கள்ளக் கம்பன்' (சுந்தரர்) என்றதில், அஞ்சலும் வெருவலும் ஒன்றன்மை உணர்க. தெழித்தல் - அதட்டுதல்; வெகுளுதல். அஞ்சுதலின் காரியம் வெருவுதல். அச்சம் உள்ள நிகழ்ச்சி. வெருவுதல் உடற்செயல். இது மெய்யன்பர் நிலையை உணர்த்திற்று.

214. சேந்துவர் - செம்பவளம். துவர் வாய் - உவமத் தொகை. செல்வன சேவடி :- ஆறனுருபு, பன்மை ; 'பன்மை (சுட்டிய சினை நிலை)க் கிளவி' (தொல். கிளவி. 62). மைந்தர் - இளைஞர். மங்கையர் - மணமகளிர். மயங்குதல் பருவத்தினியல்பு. இந்திரன் ஆதி வானவர் :- தேவர்கோன் முதலிய விண்ணோர். சித்தர் - சித்துக்களில் வல்லோர். எடுத்தல் என்பதன் மரூஉ ஏத்தல். ஆயினும் எடுத்தேத்தல் என்னும் வழக்குளது. பொருந்தவுரைத்துக்கொள்க. கையெடுத்துக் கும்பிட்டு வாயாற் பொருள்சேர் புகழ் பாடல் எடுத்தேத்தல். அந்திரன் - 'தனியன்' 'தான் தனியன்' (திருவாசகம்).

215. முடிகள் - தலைகள். மூவாதார்கள் - மூத்துச் சாவாதவர்கள் (அமரர்கள்). வடி - அழகு ; வடிவு. வேய்த்தோள்

துன்பநும்மைத் தொழாதநாள்க ளென்பாரும்
இன்பநும்மை யேத்துநாள்க ளென்பாரும்
நும்பினெம்மை நுழையப்பணியே யென்பாரும்
அன்பனூரு ராதிரைநாளா லதுவண்ணம். 216

பாரூர்பௌவத் தானைபத்தர் பணிந்தேத்தச்
சீரூர்பாட லாடலறாத செம்மாப்பார்ந்
தோரூரொழியா துலகமெங்கு மெடுத்தேத்தும்
ஆரூரன்ற னாதிரைநாளா லதுவண்ணம். 217

திருச்சிற்றம்பலம்

---

வானர மங்கையர் :- பா. 189, 200. குறிப்பு. பொடிகள் - திரு நீறுகள். பன்மை மிகுதிக் குறிப்பு. 'சிவாய நம என்று நீறணிந் தேன்' சிவத்யாநம் நீறணியாது செய்தலாகாது. மூவாதார் (அமரர்) முன் செல்ல, வானரமங்கையர் பின் செல்ல, தொண்டர் புடைசூழ, அடிகள் ஆதிரைநாளின் வண்ணம் அது. 'மூவான் இளகான் முழுவுலகோடு மண்விண்ணு மற்றும் ஆவான்' (4. 84. 2).

216. 'அன்பே சிவம்' அன்புருவான சிவபிரானது ஆரூர் ஆதிரைநாளில், நும்மைத் தொழாத நாள்கள் எல்லாம் துன்ப நாள்கள் என்பார் பலர். நும்மை ஏத்தும் நாள்கள் இன்பநாள்கள் என்பார் பலர். எம்மை நும்பின் நுழையப் பணித்தருள்வாய் என்று, (திரண்டமக்களிடையே, உலாக்கொண்டருளும் பெருமான் திருவருளின் பின்னர்ச், சென்று இன்புறும் பேற்றை விரும்பி) வேண்டுவார் பலர். அது அத் திருநாள் வண்ணம். (888) ஒப்பு நோக்குக. 5. 42. 5. 5. 31. 3. 5. 7. 4.

217. பார் - நிலம். ஊர் பௌவம் - ஊருங் கடல். பௌவத்தான் :- 'கனைகடலைக் குலவரையைக் கலந்துநின்ற பெரியானை .... பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' 'பாரவன் காண் விசும்பவன்காண் பவ்வந் தான்காண்' 'பாராகிப் பௌவம் ஏழ் ஆனான் கண்டாய்' (திருத்தாண்டகம்.) பத்தர் :- (208). சீர் - சிவபிரானுடையன. 'பொருள்சேர் புகழ்.' பாடல் ஆடல் அறாத செம்மாப்பு. (செம்மை + யாப்பு) ஆர்ந்து - நிறைந்து. 'ஒருரும் ஒழியாமல் உலகம் எங்கும் எடுத்தேத்தும் ஆரூரன்றன் ஆதிரை' என்று அதன் சிறப்பு முற்றும் சுருங்கச் சொல்லி விளங்க வைத்த அருட்டிறம் போற்றற்பாலது.

# 22 கோயில்

## திருப்பதிக வரலாறு

திருக்கழிப்பாலையை மண்ணோர் வாழ நண்ணி, மணவாளநம்பி கழல் பாடி, மீண்டும், நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டருளும் அம்பலத்து நிருத்தனுரைத் தினைத்தனைப் பொழுதும் மறந்துய்வனோ எனப் பாடித், தில்லையைச் சார்ந்து, அடியவருக்கு எளியானை அரியானை என்று எடுத்துப் பெரிய திருத்தாண்டகச் செந்தமிழ்பாடி, எவ்வுலகும் விளங்கிய பொன்னம்பலத்து மேவி ஆடல் புரியா நின்ற வரைப் பின்னும் அதிசயமாம்படி பாடிய அஞ்சொல்வளத் தமிழ் மாலை இத் திருப்பதிகம்.

பண் கொல்லி

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

செஞ்சடைக் கற்றைமுற்றத் திளநிலா வெறிக்குஞ்சென்னி
நஞ்சடை கண்டனாரைக் காணலா நறவநாறு
மஞ்சடை சோலைத்தில்லை மல்குசிற் றம்பலத்தே
துஞ்சடை யிருள்கிழியத் துளங்கெரி யாடுமாறே. 218

---

**218.** தில்லைச்சிற்றம்பலத்தே நஞ்சடைகண்டனாரை எரி யாடுமாறு காணலாம். செஞ்சடைக் கற்றையே இளநிலா வீசும் முற்றம். அக் கற்றைக்கு இடம் சென்னி. அதை உடையவர் கண்டனார். அக் கண்டம் நஞ்சு அடைந்தது. நறவம் - தேன். நாறுதல் - நறுமணம் வீசுதல். மஞ்சு - (மை + து = மைத்து. மைந்து, மைஞ்சு, மஞ்சு.) கருமுகில் மஞ்சடைதலால் சோலை யின் உயர்ச்சி விளங்கும். தில்லை வளம் குறிக்கப்பட்டது. சிறுமை அம்பலம் = சிற்றம்பலம். (சித் + அம்பரம்). துஞ்சு + அடை + இருள் = துஞ்சுதல் உற்ற இருள். இருள் துஞ்சுதல்:- 'துஞ்சிருள் காலைமாலை தொடர்ச்சியை மறந்திராதே அஞ்செழுத் தோது' (683). கிழிதல் :- பிளந்து மறைதல். இருள் - ஆண வம். துளங்கு எரி - விளங்கிய தீ; ஈண்டு ஞானக்கினி. 'இடம்படு ஞானத்தீ' (729). சிற்றம்பலத்தில் நெருப்பு உளதோ? மேல்வரும் ஐந்திலும் காணலாம் என்பதைக் கொண்டு கூட்டுக.

ஏறனு ரேறுதம்பா லிளநிலா வெறிக்குஞ்சென்னி
ஆறனு ராறுசூடி யாயிழை யாளோர்பாக
நாறுபூஞ் சோலைத்தில்லை நவின்றசிற் றம்பலத்தே
நீறுமெய் பூசிநின்று நீண்டெரி யாடுமாறே. 219

சடையனுர் சாந்தநீற்றர் தனிநிலா வெறிக்குஞ் சென்னி
யுடையனு ருடைதலையி லுண்பதும் பிச்சையேற்றுக்
கடிகொள்பூந் தில்லைதன்னுட் கருதுசிற் றம்பலத்தே
அடிகழ லார்க்கநின்று வனலெரி யாடுமாறே. 220

பையரா வசைத்தவல்குற் பனிநிலா வெறிக்குஞ்சென்னி
மையரிக் கண்ணியாளு மாலுமோர் பாகமாகிச்
செய்யரி தில்லைதன்னுட் டிகழ்ந்தசிற் றம்பலத்தே
கையெரி வீசிநின்று கனலெரி யாடுமாறே. 221

219. ஏறு ஏறனுர் - விடையேறுதலுடையவர். ஆறனுர் - கங்கையாற்றினுர். ஆறு சூடி நீறு பூசி நின்று ஆடுமாறு (காண லாம்) என்க. காணலாம் என்பது முன்னையதினின்றும் கொள்ளப் பட்டது. ஆயிழையாள் ஓர் பாகம் (உடையவராய்) என்றிசைத் துக் கொள்க. நவின்ற - புகழப்பெற்ற. நீண்ட எரி. நீண்டு ஆடுமாறு எனலுமாம். நில் + து, நீல் + து = நீறு. செல் + து, சேல் + து = சேறு. வெல் + து, வேல் + து = வேறு முதலியன போல்வது. நிற்றலுடையது; அழியாதது. மெய் - திருமேனி. இங்கு இதுமட்டும் மெய்யேயாயுளது. ஏனையோர் மெய்யெல்லாம் பொய்யே.

220. சாந்த நீற்றர் :- ' சாந்தம் ஈது என்று எம்பெருமான் அணிந்த நீறுகொண்டார் இடர்களையாய் நெடுங்கள மேயவனே '. உடையன் : வினைக் குறிப்புப் பெயர். ஆர் :- ' இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி ' காரணப் பெயர்க்கும் உரித்தாயிற்று. தலை - பிரம கபாலம் உண்பது பிச்சை ஏற்று. எட்டில் உம்மை இல்லை. கடி - மணம். கழல் அடிக்கண் ஆர் (- ஒலி) க்க.

221. பை - படம். அரவு அல்குற்கு ஒப்பு. அல்குல் - கங்கை. பெயரெச்சத் தொடரீற்று நின்ற அன்மொழித்தொகை

ஓதினார் வேதம்வாயா லொளிநிலா வெறிக்குஞ்சென்னி
பூதனார் பூதஞ்சூழப் புலியுரி யதளனார்தா
நாதனார் தில்லைதன்னு ணவின்றசிற் றம்பலத்தே
காதில்வெண் குழைகள் தாழக் கனலெரி யாடுமாறே. 222

ஒருடம் பிருவராகி யொளிநிலா வெறிக்குஞ்சென்னிப்
பாரிடம் பாணிசெய்யப் பயின்றவெம் பரமமூர்த்தி
காரிடந் தில்லைதன்னுட் கருதுசிற் றம்பலத்தே
பேரிடம் பெருகநின்று பிறங்கெரி யாடுமாறே. 223

அசைத்த அல்குலாள் என விரியும். அசைத்த அல்குலையுடையாள் எனப் பொருள்படும். 'பாயினமேகலை' (திருக்கோவையார். 282) என்பதும் அது. அதனை ஆகுபெயர் என்றார் அதனுரையாசிரியர். தமிழிலக்கணக் கடலாய்ப் புகழுருவெய்திய அரசஞ் சண்முகனார் அன்மொழித்தொகையென நிறுவினார். செந்தமிழ். தொகுதி. 1. பக்கம். 404, 408, 466 பார்க்க. மையரிக்கண்ணியாள்:- பாதிகொண்டமாதுமையாள். மாலும் ஓர் பாகம் ஆகி:- 'இடமால் தழுவிய பாகம்' (14) 'அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே'. செய்யரிதில்லை :- வயல் வளம் உணர்த்திற்று. செய் - தண்செய். நன்செய் அரி - நெல்லரிகின்ற. கையெரி வீசிக் கனலெரியாடல் வண்ணம் காணலாம் தில்லைச் சிற்றம் பலத்தே என்க. இடப்பாற் கையில் ஏந்திய தீ 'கையெரி' எனப்பட்டது. 'அரிதில்லை' வினைத்தொகை.

222. வாயால் வேதம் ஓதினார் :- 'மறையுங் கோப்பளித்த நாவர்' (242) 'வேதங்கள் நான்கும் அங்கம் (ஆறும்) பண்ணினார்' (347). சென்னியையுடைய பூதனார். பூதன் - பூதகணம் சூழ ஆடுமாறு காணலாம். அதள் - தோல். வெண் குழைகள் - சங்க குண்டலம். குழை காதில். தாழ்தல் அக் காதின்கீழ். காதில் உள்ள குழை தாழ எனலுமாம்.

223 ஒருடம்பு :- அர்த்தநாரீச்சுர வடிவம். இருவர் :- மாதும் தாமும் (மகிழ்வர்மாற் பேறரே). பாரிடம் - பூதகணம். பாணி - தாளம். பயின்ற - திருக்கூத்தாடிய. கார் இடம் தில்லை - கரிய முகிலுக்குத் தங்கும் இடமாகிய தில்லை (வனம்) பேர் இடம் பெருக :- அகண்டமாய் வளர.



தில்லைச் சிதம்பரம் (சிவகங்கை)

முதற்றனிச் சடையைமூழ்க முகிழ்நிலா வெறிக்குஞ்சென்னி
மதக்களிற் றுரிவைபோர்த்த மைந்தரைக் காணலாகு
மதர்த்துவண் டறையுஞ்சோலை மல்குசிற் றம்பலத்தே
கதத்ததோ ரரவமாடக் கனலெரி யாடுமாறே. 224

மறையனூர் மழுவொன்றேந்தி மணிநிலா வெறிக்குஞ்சென்னி
இறைவனு ரெம்பிரானு ரேத்துவா ரிடர்களைப்பார்
சிறைகொணீர்த் தில்லைதன்னுட் டிகழ்ந்தசிற் றம்பலத்தே
அறைகழ லார்க்கநின்று வனலெரி யாடுமாறே. 225

விருத்தனுய்ப் பாலனுகி விரிநிலா வெறிக்குஞ்சென்னி
நிருத்தனூர் நிருத்தஞ்செய்ய நீண்டபுன் சடைகடாழக்
கருத்தனூர் தில்லைதன்னுட் கருதுசிற் றம்பலத்தே
அருத்தமா மேனிதன்னே டனலெரி யாடுமாறே. 226

224. முதன்மையும் தனிமையும் சடைக்குச் சிறப்பு. சென்னியையுடைய மைந்தர். சடையை மூழ்க நிலா எறிக்கும் இடம் சென்னி. மதத்தை ஆண் யானையின் தோலைப் போர்த்த மைந்தரை எரியாடுமாறு காணலாகும். வண்டுமதர்த்து அறையும் சோலை. சோலைமல்கு சிற்றம்பலம். கதம் - கோபம் கதத்தது ஆகிய ஓர் அரவம் (- பாம்பு) ஆடக் கனன்ற எரியில் ஆடுமாறு காணலாகும். 'மதத்து' எனின்மதத்தையுடைய என்க.ன்.

225. மறையனூரும், ஒரு மழுவேந்தியும், இறைவனூரும் ஏத்துவார்களின் இடர்களைத் தீர்ப்பாரும் ஆகிய சிவபிரானூர், தில்லைச்சிற்றம்பலத்திலே கழல் ஆர் ( - ஒலி) க்க நின்று அனலுகின்ற எரியில் ஆடுமாறு (காணலாகும்). சிறை - நீரைத் தடுத்துள்ள மடை. தில்லையின் நீர்வளம் குறித்தது. அறைகழல் :- வினைத்தொகை. சேரமான்பெருமாள் நாயனூர் கேட்ட கழலார்ப்பு.

226. விருத்தன் (- முதியன்.) பாலன் (- இளையன்). இரண்டற்கும் இடையிற் குமாரன் (- காளை, யௌவநம்) குறிக்காமலே புலப்படும். 'விருத்தனூர் இளையார்' (5. 1. 1.) பாலன் விருத்தனுதற்கு முன் உள்ளது அது. விருத்தகுமாரபாலரான திருவிளையாடலைக் கருதுக. 'விருத்தனுகிப் பாலனுகி வேதம் ஓர் நா

பாலனாய் விருத்தனாகிப் பனிநிலா வெறிக்குஞ்சென்னிக்
காலனைக் காலாற்காய்ந்த கடவுளார் விடையொன்றேறி
ஞாலமாந் தில்லைதன்னு ளவின்றசிற் றம்பலத்தே
நீலஞ்சேர் கண்டனார்தா நீண்டெரி யாடுமாறே. 227

மதியிலா வரக்கனோடி மாமலையெடுக்க நோக்கி
நெதியன்றோ ணெரியவூன்றி நீடிரும் பொழில்கள்சூழ்ந்த
மதியந்தோய் தில்லைதன்னுண் மல்குசிற் றம்பலத்தே
அதிசயம் போலநின்று வனலெரி யாடுமாறே. 228

திருச்சிற்றம்பலம்

குணர்ந்து' உயிர்கள் பாலகுமார விருத்தராகும். கடவுளோ விருத்தகுமாரபாலராகிக் காட்டினார். எறிக்கும் - வீசும். நிருத்தனார் - கூத்தர். நிருத்தம் - கூத்து. கருத்தனார் - வினை முதல்வர்; கருத்திலிருப்பவர். அருத்தமாமேனி - சிவகாமி அம்மையார். அருத்தம் - பாதி. அனல்எரி - அனலும் எரி; வினைத்தொகை.

227. பாலனாய் விருத்தனாகி :- 226 குறிப்புரையை நோக்குக. நீண்டஎரி என்பதிற் பெயரெச்சத்தகரம் தொகுத்தல். காலனைக் காலால் உதைத்தான். காய்தல் காரணம். உதைத்தல் காரியம். காரணவாகுபெயர். ஞாலம் ஆம் தில்லை :- ' பாரோரும் விண்ணோரும் பணியநட்டம் பயில்கின்ற பரஞ்சுடரைப் ........ பெரும்பற்றப் புலியூரானை '. நீலம் - நீல விடம். ஆகுபெயர்.

228. மதி - அறிவு. மலையெடுக்கலுற்றதே மதியில்லாமை காட்டிற்று. நெதியன் - செல்வன். மதியம் தோய்தில்லை :- சந்திரமண்டலத்தினை அளாவிய தில்லைவனம். ' செல்வநெடு மாடம் சென்று சேண் ஓங்கிச் செல்வமதி தோயச் செல்வம் உயர்கின்ற செல்வர் வாழ் தில்லைச் சிற்றம் பலமேய செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே ' என்றதில், தில்லைமாடங் களின் உயர்ச்சி கூறிற்று. ' அதிசயம் போலநின்று அனல்எரி ஆடும் ஆறு ':- ' சிறிய பொதுவின் மறுவின்றி விளங்கி ஏவரும் காண ஆடுதி. ' ஆயினும், காண்பதற்கு அரிய நின் கழலும் கண்டிலாத நின் கதிர் நெடுமுடியும் கொண்டு ஆடுவது அதிசயம் விளைக்கும். (கோயில் நான்மணிமாலை. 12).

# 23. கோயில்

## திருப்பதிக வரலாறு

தில்லைத் திருநகர்க் குடதிசை மணிவாயிற்புறம் உற்றார் திருநாவின் மன்னர். எதிர்கொண்ட அடியரோடும் சென்றார். வாயிலின் வழி புக்கார். சிவமே நிலவிய திருவீதியை வாயுவும் வருணனும் தூய்மை செய்தவை போதா என்று, அடியார் திருவலகிட்டனர்; குளிர்புனல்விட்டனர். அத் திருவீதியைப் பணிந்து, ஏழ் நிலைக் கோபுரத்தைத் தொழுது உள்புகுந்தார். திருமாளிகையை வலம் வந்தார். அளவிலாத ஆர்வத்தராய் அன்பு நிறை கடலானார். உடல் முழுதும் புளகம் உற்றார். திருமலி பொற்கோபுரத்துள் புகுந்தார். நஞ்சுண்ட நாயனார் நடமாடும் பொன் மன்றினைக் கண்ணெதிர் உற்றார். சென்றடையாத திருவுடன் நிகழும் ஒளி நிறை அம்பலம் நினைவுற நேரே கூடும்படி வரும் அன்பால் இன்பு உறு குணமும் பெறவரும் நிலைகூட ஆடும் கழல்புரி அமுதத் திருநடம் ஆராவகை தொழுது ஆர்கின்றார். தலைமேல் அஞ்சலிசெய் கையும், ஒழியாதே மழை பொழியுங்கண்ணும், பரிவின் உருகுங்கரணமும், நிலமிசை விழுமெய்யும் திருநடம் கும்பிடலில் அளவிலாது பெருகும் ஆர்வத்தைப் பிறர்க்குணர்த்தின. பல முறை தொழுதார் பாவேந்தர். " என்று எய்தினை " என்றது மன்றுடும் மன்னன் திருவருட்கருணை. ஆநந்தம் பாடலாக வெளிவந்தது. ஒன்றியிருந்து நினைந்து திருக்குறிப்புணர்ந்து பாடியருளிய இன்றமிழ் மாலை இத் திருப்பதிகம்.

பண் கொல்லி

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

பத்தனாய்ப் பாடமாட்டேன் பரமனே பரமயோகீ
எத்திறற் பத்திசெய்கே னென்னைநீ யிகழவேண்டா
முத்தனே முதல்வாதில்லை யம்பலத் தாடுகின்ற
அத்தாவுன் றாடல்காண்பா னடியனேன் வந்தவாறே. 229

**229.** பத்தன் ஆய்-பத்திஉடையவனாகி. பரமன்-முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருள். பரமயோகம் - சிவாநந்தப் பேறு. ஆன்மயோகம், ஞானயோகம், சிவயோகம் (சிவப்பேறு) என்னும் மூவகையோகத்துள், தன்னுயிர்தானறப் பெறல் ஆன்மயோகம். அவனருளே கண்ணாகப் பெற்று அருளாதல் ஞானயோகம். அச்சிவஞானத்தால் சிவனைப்பெறுதல்

கருத்தனாய்ப் பாடமாட்டேன் காம்பன தோளிபங்கா
ஒருத்தரா லறியவொண்ணாத் திருவுரு வுடையசோதீ
திருத்தமாந் தில்லைதன்னுட் டிகழ்ந்தசிற் றம்பலத்தே
நிருத்தநான் காணவேண்டி நேர்பட வந்தவாறே. 230

கேட்டிலேன் கிளைபிரியேன் கேட்குமா கேட்டியாகில்
நாட்டினே னின்றன்பாத நடுப்பட நெஞ்சினுள்ளே
மாட்டினீர் வாளைபாயு மல்குசிற் றம்பலத்தே
கூட்டமாங் குவிமுலையாள் கூடநீ யாடுமாறே. 231

சிவயோகம். (யோகம் மூன்றும் :- சிவ. போதம். சூ. 3, 7, 8. சிவயோகம் சூ. 10. சிவானந்தப்பேறு. சூ. 11. ஆன்மயோகம் சூ. 3, ..) எஃது - எந்து. அஃது முதலிய சுட்டுப் பெயரும் பஃது என்பதும் இவ்வாறு மருவி வழங்குகின்றன. செய்+கு+என். முத்தன் - அநாதி முத்தன். முதல்வன் - பரத்துவக் கடவுள். அத்தன் - மலத்துன்பினின்றும் நீக்கி உயிர்க்குழவிகளையாள ஆடல் முயற்சியுடைய அப்பன். காண்பான் வந்தவாறு (ஆகும்) என்று ஆக்கம் வருவித்து முடிக்க. அடியனேன் வந்தவாறு ஆடல் காண்பான் என்றும் ஆம். ஆய் - போன்று எனலுமாம்.

230. கருத்தன் ஆய் - கருத்துடையேனாகி. (பாடுங்கால், அப்பாட்டின் பொருளிற் கருத்து ஊன்றி நிற்க, உரையும் செயலும் ஒத்த பாவனையுள்ளேனாகி). 'கையொன்று செய்ய நாவொன்று பாடக் கருத்து ஒன்று எண்ண' நிகழும் வழிபாட்டாற் பயனில்லை என்றவாறு. காம்பு - மூங்கில். அன - ஒத்த. தோளி - சிவகாமவல்லி. பங்கா - பங்குடையாய். ஒருத்தராலும் அறிய ஒன்றாத. திருவுரு - ஞானருபம். பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனுக்கு அப் பதிஞானமே ருபம். ஒருத்தராலும் அறிய ஒன்றாத திருவுருவும் அதுவே. தேகமான அதுவே தன்னையும் தேகியான சிவனையும் காட்டும். 'அருளுரு உயிருக்கு என்றே ஆக்கினன் அசிந்தன்' (சித்தியார்). திருத்தம் - தூய்மைமிக்கது. நிருத்தம் - திருக்கூத்து. நேர்பட - நேர்ப்பட்டதால்; நேர்படற்பொருட்டு எனின், காணவேண்டி என்றது மிகையாகும்.

231. மாடு - பொன். மாட்டின் - பொன்னைப்போல. நீரில் வாளை பாய்கின்ற தோற்றம் பொன்னொளித் தோற்றமும் ஒக்கும்

சிந்தையைத் திகைப்பியாதே செறிவுடை யடிமைசெய்ய
எந்தைநீ யருளிச்செய்யா யாதுநான் செய்வதென்னே
செந்தியார் வேள்வியோவாத் தில்லைச்சிற் றம்பலத்தே
அந்தியும் பகலுமாட அடியிணை யலசுங்கொல்லோ 232

என்றபடி. மாடு - பக்கம்; இடம். நீர்மாட்டின் - நீர்ப்பக்கத்தில், நீரிடங்களில் எனலுமாம். உருபு முன்னும் உருபேற்ற பெயர் பின்னும் நிற்றல் உண்டு. மட்டில்லாத (மட்டு இல்) என்று கொண்டு முதல் நீட்சி எனல் தக்கதன்று. கூட்டம் ஆம் - கூடிக் களிப்பதற்குரியவள் ஆகும். முன்னம் கேட்டில்லேன். (அடியார்) கிளையைப் பிரியேன். (நினைக்குமாறு நினைப்பித்தும் பாடுமாறு பாடுவித்தும்) கேட்குமாறு கேட்பித்தருளியும் உதவு வாய் ஆகில் (என்) நெஞ்சின் உள்ளே நடுப்பட நின்றன் பாத மலர்களை நாட்டினேன் ஆவேன். (கேட்பித்தருளாயாகில் நாட்ட வல்லேனல்லேன் என்றபடி) 'நினைக்குமா நினைப்பியாதே '(237) என்புழிப்போலக் கேட்குமா கேட்டல். அது மறை. இது விதி. (சிவஞானபோதச் சிற்றுரை. சூ. 11. முதல்வன் உடன் நின்றறி தல் பற்றிய விளக்கம்) 'தொண்டனேன் நினையுமா நினையே' 'விரும்புமா விரும்பே' 'தொடருமா தொடரே' 'நுகருமா நுகரே'.

232. எந்தை! சிந்தையைத் திகைப்பித்தல் செய்யாதே அடிமை செய்ய யாதும் நீ அருளிச் செய்யாய். என்னே நான் செய்வது? செந்தீயார் - செய்ய வேள்வித் தீ வளர்க்கும் அந்தணர். அவர் செய்யும் வேள்வி ஓவாது நடக்கும் இடம் தில்லைச்சிற்றம்பலம். ஓவாமை பண்டு. அந்தி :- காலையந்தி (மாலைச்சந்தி). பகல் - உச்சிப்பகல். இடைவிடாது ஆடலால் திருவடியிணை சோர்வுறுமோ? அலசல் - சோம்பல். ஈண்டுச் சோர்தலின் மேற்று. செறிவுடையடிமை :- ஆண்டானோடு செறிவிலா அடிமையும் உண்டு. செறிவு - அன்பு நிறைவாலான உள்ளத்தியைபு. 'சீலம் நோன்பு செறிவு அறிவு' (திருவாசகம்) என்பவற்றுள் ஒன்றான செறிவு யோகமும் ஆம். தீயார் :- தியார். முதற்குறுக்கம்.

கண்டவா திரிந்துநாளுங் கருத்தினு னின்றன்பாதங்
கொண்டிருந் தாடிப்பாடிக் கூடுவன் குறிப்பினாலே
வண்டுபண் பாடுஞ்சோலை மல்குசிற் றம்பலத்தே
எண்டிசை யோருமேத்த விறைவநீ யாடுமாறே. 233

பார்த்திருந் தடியனேனுன் பரவுவன் பாடியாடி
மூர்த்தியே னென்பனுன்னை மூவரின் முதல்வனென்பன்
ஏத்துவா ரிடர்களீர்ப்பாய் தில்லைச்சிற் றம்பலத்துக்
கூத்தாவுன் கூத்துக்காண்பான் கூடநான் வந்தவாறே. 234

233. வண்டுகள் பண்களைப் பாடும் சோலை மல்கிய திருச் சிற்றம்பலத்தே, எட்டுத் திசையிலுள்ள யாவரும் ஏத்த, இறைவ நீ ஆடும் வண்ணத்தைக் கூடுவன். கண்டவாறு திரிந்து நாள் தோறும் கருத்தோடு நின் திருவடியை உளங்கொண்டு ஆடிப் பாடிக் கூடுவன். நின் திருவருட் குறிப்பினுற் கூடுவன். 'அண்ணல் பாதம் கொண்டு அவன் குறிப்பினாலே தாபரத்தைக் கூப்பினான். அவன் தாதை கண்டு பாய்வான் கால் அறஎறியக் கண்டு சண்டியார்க்கு அருள்கள் செய்த தலைவர் ஆப்பாடியாரே' (469). கண்டவா - அநுபவத்திற் கண்டவாறு. கருத்தில் நான் எனலுமாம். திரிந்தது ஞான நிலைக்குப் பொருந்தியவண்ணம். நீ ஆடுமாறு எண்டிசையோரும் ஏத்த எனலும் கூடும். 236 இல் உள்ளவாறு, 'கருத்தினுன்' என்பது, கருத்தையே உயர்திணை ஆண்பாலாகக் கூறினர் ஆகக்கொண்டு, கருத்தினுன் கண்டவாறு திரிந்து கொண்டு இருந்து ஆடிப் பாடிக் கூடுவன் எனலும் பொருந்தும்.

234. தில்லைச் சிற்றம்பலத்துக் கூத்தா உன் திருக்கூத்தைக் காண்பான் கூட நான் வந்தவாறு. அடியேனேன் நான் பார்த்திருந்து பரவுவன். பாடி ஆடி மூர்த்தியே என்று அழைப்பேன். 'உன்னை' இடைநிலை விளக்கு. மூவருள் அன்று. மூவரினும் முதல்வன். (திருவாசகம். 8.) 'மூவர் உருத் தனதா மூலமுதற் கரு' (7. 84. 7) 'மூவர் கோனாய் நின்ற முதல்வன்' (திருவாசகம். 34) 'மூவர் அறியாச் சிந்துரச் சேவடியான்' (ஷெ) 'முந்திய முதல்நடு இறுதியும் ஆனாய் மூவரும் அறிகிலர் யாவர்மற்று அறிவார்' (ஷெ) 'ஏத்துவார் இடர்கள் தீர்ப்பாய் :-

போய்யினைத் தவிரவிட்டுப் புறமலா வடிமைசெய்ய
ஐயநீ யருளிச்செய்யா யாதியே யாதிமூர்த்தீ
வையகந் தன்னின்மிக்க மல்குசிற் றம்பலத்தே
பையநுன் னுடல்காண்பான் பரமநான் வந்தவாறே. 235

மனத்தினார் திகைத்துநாளு மாண்பலா நெறிகண்மேலே
கனைப்பரா லென்செய்கேனோ கறையணி கண்டத்தானே
தினைத்தனை வேதங்குன்றாத் தில்லைச்சிற் றம்பலத்தே
அனைத்துநின் னிலயங்காண்பா னடியனேன் வந்தவாறே.236

---

225, 242, 247. 'ஏத்துதல் ஈண்டு அருள்வழி நிற்றல் மேற்று'. (சிவஞானபோதமாபாடியம். சூ. 11. அதி. 2) என்பதும் ஈண்டுச் சிவாநந்தாநுபூதியாரைக் குறித்துக் கோள்ளற்பாலதாகும்.

235. வையகம் தன்னில் மிக்க - உலகிலே மேன்மையுற்ற. ' ஞாலமாந்தில்லை ' (227) கோயில் எல்லாவற்றிற்கும் கோயில் ஆதலின், மிக்கதாயிற்று. பைய - மெல்ல. ' நுன் ' நின் என்ற தன் திரிபு. (நீன், நின் - நுன் - உன் எனத் திரிந்தது. ' நீன் ' என்னும் வழக்கு இன்றும் உளது. யான், நீன், தான், யாம், நீம், தாம் என்பவை பண்டைய ஆட்சி. போய் - அநித்தியம். தவிர - (நீங்க; ஆண்டாண்டுத்) தங்க. விட்டு - விண்டோழியப்பண்ணி. புறம் அல்லா அடிமை :- அகத்தடிமை. மெய்யடிமை. ' பசு பாசங்களின் இயல்புகளை உள்ளவாறு உணர்ந்து, செய்வன எல்லாம் அவன் அருளின்வழி நின்று செய்யும் செயலாகக் கண்டு கோண்டிருக்கும் ' இறைபணியாகிய அடிமைத் திறம் (மாபாடியம்) புறம் அலா அடிமைத்திறம் ஆகும். செய்யாய் - செய்வாய். ஆதியே - முதல்வனே. ஆதி மூர்த்தி - ஆதி சத்தியாகிய மூர்த்தி (யையுடையவனே; மூர்த்தி) மானே.

236. மனத்தையே ' மனத்தினார் ' என்றார். மனத்தினார் கனைப்பர் - நெருங்குவர். மாண்பு அல்லா நெறிகள் :- பிறவி தரும் வழிகள். கறை - நஞ்சின் கறுப்பு. தினைத்தனை - தினையளவும். தனை - அளவு. தினை சிறுமைக்குக் காட்டும் ஓர் அளவை (குறள். 104. பரிமே. உரை) வேதம் குன்றாமை :- செந்தீயார் வேள்வி ஓவாமை. 232. ' நரியனார் ' ' தென்றலார்

நெஞ்சினைத் தூய்மைசெய்து நினைக்குமா நினைப்பியாதே
வஞ்சமே செய்தியாலோ வானவர் தலைவனே நீ
மஞ்சடை சோலைத்தில்லை மல்குசிற் றம்பலத்தே
அஞ்சலாள் காணநின்று வழகநீ யாடுமாறே. 237

மண்ணுண்ட மாலவனு மலர்மிசை மன்னினானும்
விண்ணுண்ட திருவுருவம் விரும்பினார் காணமாட்டார்
திண்ணுண்ட திருவேமிக்க தில்லைச்சிற் றம்பலத்தே
பண்ணுண்ட பாடலோடும் பரமநீ யாடுமாறே. 238

திருச்சிற்றம்பலம்

என்பனபோல்வது, 'மனத்தினார்'. அனைத்தும் - எல்லாம். நின் நிலயம் - உனது திருவருளகம். எல்லாம் நினது நிலயம்; உறையுள். நின் இலயம் எனப் பிரித்து நின்கண் ஒடுக்கம் கூத்து எனலும் பொருந்தும். 'அனைத்து வேடம் ஆம் அம்பலக் கூத்தனைத் தினைத்தனைப் பொழுதும் மறந்துய்வனோ'.

237. நெஞ்சினைத் தூய்மை செய்தல் :- துகளறுபோதம் உறுதற்குத் துணையாக்கல். 'நினைக்குமா நினைப்பியாதே' :- 231. வஞ்சம் - (வல் + து = அம்) வன்பு. வானவர் - பேரின்ப வீடுற்றோர்; வானவர் தலைவனாகிய இந்திரனல்லன்; ஆயின், தேவர் ஆவர். மஞ்சு - கார்மேகம். அஞ்சொலாள் :- திருக்கூத்திற்கு ஏற்பத் துளிரிளவளரொளி பாடிய சிவகாமவல்லி. அஞ்சொலாள் காண நின்றாடுமாறு :- அண்டத்தும் உணர்க.

238. மண் - நிலவுலகு. மாலவன் - மாயன். மலர் :- 'பூவினுக்கு அருங்கலம் பொங்கு தாமரை' விண் உண்ட திருவுருவம் :- 'பாரும் திசையும் படரொளியாலே நிறைந்த' பேருருவம். (போற்றிப்பஃறொடை :- 1-5. பார்க்க) காண விரும்பினார் காணமாட்டாராயினார். அவ்வாறாக விண்ணுண்ட திருவுருவம் தோன்றிற்று. திண் உண்ட திரு :- 'சென்றடையாத திரு' 'சென்றடையாச் செல்வம்'. பண் உண்ட பாடல் :- நாடோறும் வீடுதோறும் பண் பாடல் உளது.



திருநாவுக்கரசு சுவாமிகள் — (திருவதிகை)

# 24. திருவதிகைவீரட்டானம்

## திருப்பதிக வரலாறு

திருவதிகைவீரட்டானத்தமுதைத் தொழுது பணிசெய்துகொண் டிருந்த காலத்திற் பாடியருளிய செந்தமிழ்ப் பாட்டுக்களுள் ஒன்று இத் திருப்பதிகம். (பெரிய. அப்பர். 144)

கொப்பளித்த திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

இரும்புகொப் பளித்தயானை யீருரி போர்த்தவீசன்
கரும்புகொப் பளித்தவின்சொற் காரிகை பாகமாகச்
சுரும்புகொப் பளித்தகங்கைத் துவலைநீர் சடையிலேற்ற
அரும்புகொப் பளித்தசென்னி யதிகைவீ ரட்டனாரே. 239

கொம்புகொப் பளித்ததிங்கட் கோணல்வெண் பிறையுஞ்சூடி
வம்புகொப் பளித்தகொன்றை வளர்சடை மேலும்வைத்துச்
செம்புகொப் பளித்தமூன்று மதிலுடன் சுருங்கவாங்கி
அம்புகொப் பளிக்கவெய்தா ரதிகைவீ ரட்டனாரே. 240

.................................................................

239. இரும்பு (இருள்+பு என்பதன் மரூஉ) கொப்பளித் தாற் போன்ற மிகக் கரிய யானை (ஆணவம்). கரும்பு சொற்கு உவமை. சுரும்பு - (சுருள்+பு என்பதன் மரூஉ) வண்டு இனத்துள் ஒன்று. துவலை - துளி. ‘ கொப்பளித்தல் ’ இத் திருப்பதிகத்திற் பல பாடலிலும் சொற்பொருட்பின் வருநிலையுற் றுளது. பொருத்தமாகப் பொருள்கூறிக்கொள்க. (காஞ்சிப் புராணம் இரண்டாவது காண்டம். இருபத்தெண்டளிப். 89. பார்க்க.)

240. கொம்பு - ஊதும் கொம்பு. வாத்தியம். வெண் டிங்கட் பிறைக் கோணலுக்குக் கொம்பின் கோணல் ஒப்பு. வம்பு - மணம். வள்+பு=வம்பு. செம்பு மதில் மூன்றும் :- முப்புரம். அம்பு - திருமாலான கணை.

விடையுங்கோப் பளித்தபாதம் விண்ணவர் பரவியேத்தச்
சடையுங்கோப் பளித்ததிங்கட் சாந்தம்வெண் ணீறுபூசி
உடையுங்கோப் பளித்தநாக முள்குவா ருள்ளத்தென்றும்
அடையுங்கோப் பளித்தசீரா ரதிகைவீ ரட்டனாரே. 241

கறையுங்கோப் பளித்தகண்டர் காமவே ளுருவமங்க
இறையுங்கோப் பளித்தகண்ணா ரேத்துவா ரிடர்கடீர்ப்பார்
மறையுங்கோப் பளித்தநாவர் வண்டுண்டு பாடுங்கொன்றை
அறையுங்கோப் பளித்தசென்னி யதிகைவீ ரட்டனாரே. 242

நீறுகோப் பளித்த மார்பர் நிழறிகழ் மழுவொன்றேந்திக்
கூறுகோப் பளித்தகோதைக் கோல்வளை மாதோர்பாகம்
ஏறுகோப் பளித்தபாத மிமையவர் பரவியேத்த
ஆறுகோப் பளித்தசென்னி யதிகைவீ ரட்டனாரே. 243

241. சிவபிரான் திருப்பாதம் விடைமேல் அடைதல் குறித்தது. 'ஏறுகோப்பளித்த பாதம்.' 243. சடைமேல் திங்கள். திருவெண்ணீற்றைச் சாந்தமாகப் பூசி, 'சாந்தம் ஈது என்று எம்பெருமான் அணிந்த நீறு' (சம்பந்தர்) உடை......... நாகம் :- அரவக் கச்சு. உள்குவார் - நினைப்பவர். உள்ளத்து என்றும் அடைவார் :- 'நினைப்பவர் மனம் கோயிலாக் கொண் டவன்.' அடையும் - சேரும்; முழுதும். அடைதலையும் எனலு மாம். அடை :- முதனிலைத் தொழிற்பெயர்.

242. கறை - நஞ்சின் கறுப்பு. கண்டர் - 'திருநீல கண்டர்'. காமவேள் - காமனாகிய வேள். வேள் - விரும்பப் பெறுவோன். கருவேள் (மன்மதன்). மங்க - அழிய. செவ்வேள் (முருகன்). வேள் உருவம் மங்கத் தீயைச் சிறிது கோப்பளித்த நெற்றிக்கண்ணார். இறை - சிறிது. ஏத்துவார் இடர்கள் தீர்ப் பார் :- 225. 247. மறை - வேதம். நாவர் - நாவினையுடை யவர். கொன்றையில் தேனை உண்டு வண்டு பாடும் ஒலியைத் தோற்றும் இடமாகிய சென்னி (- தலை).

243. நீறு பூசிய திருமார்பு, அதனைக் கோப்பளித்தது போலத் திகழ்கின்றது. நிழல் - ஒளி. மழு - தீய்க்கும் படை.

வணங்குகோப் பளித்தபாதம் வானவர் பரவியேத்தப்
பிணங்குகோப் பளித்தசென்னிச் சடையுடைப் பெருமை
யண்ணல்
சுணங்குகோப் பளித்தகொங்கைச் சுரிகுழல் பாகமாக
அணங்குகோப் பளித்தமேனி யதிகைவீ ரட்டனாரே. 244

சூலங்கோப் பளித்தகையர் சுடர்விடு மழுவாள்வீசி
நூலுங்கோப் பளித்தமார்பி னுண்பொறி யரவஞ் சேர்த்தி
மாலுங்கோப் பளித்தபாகர் வண்டுபண் பாடுங்கொன்றை
ஆலங்கோப் பளித்தகண்டத் ததிகைவீ ரட்டனாரே. 245

கூறு - கூந்தலின் ஐம்பால். கோதை - கூந்தல். கோல்வளை - அழகிய வளையல். மாது - உமாதேவியார். 248. 'விடையும் கோப்பளித்த பாதம்' 241. 'இமையவர் பரவி ஏத்த' 241. 244. ஆறு - கங்கை. 247.

244. எல்லாவுயிர்களும், (எல்லாமக்களும், எல்லாத்தேவர் களும்) செய்யும் வணக்கமெல்லாம் சிவபெருமான் திருவடிக்கே உரியன என்று வணக்கம் சொல்லும் மந்திரங்களான அதர்வசி ரசு, உருத்திராத்தியாயம், தேவவிரதம் முதலியன உணர்த்து கின்றன. 'ஸ்தோமம்வோ அத்யருத்ராய' 'யஸ்மை நமஸ் தஸ்மை த்வாஜுஷ்டம்நியுநஜ்மி' स्तोमं वो अद्य रुद्राय।, यस्मै नमस्तस्मै त्वा जुष्टं नियुनज्मि। என்பன முதலிய மந்திரங்களால், வணக்கங்களெல்லாம் சிவபிரானையே சாரும் என்பது பெறப் படும். 'மொழிந்திடும் எல்லா வணக்கமும் எல்லா மொழிகளும் உன்னையே சாரும்' (சிவதத்துவவிவேகம். 33). சடை ஒன்றோ டொன்று இணங்குதல் இன்மையே பிணங்குதல் உடைமை. சுணங்கு - தேமல். அணங்கு-அழகு. சுரிகுழல் - சுரிகுழலாள். வினைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

245. சூலம் ஏந்திய கையினர். சுடரினை விடுகின்ற மழு வாள். நூல் - முப்புரி நூல். நுண் பொறி - சிறிய படப் புள்ளி கள். மால்......பாகர் :- 'இடம் மால் தழுவிய பாகம்' (14). 'மையரிக் கண்ணியாளும் மாலும் ஓர் பாகம் ஆகி' (221). 'வண்டு பண் பாடுங் கொன்றை' (242). ஆலம் - நஞ்சு.

நாகங்கோப் பளித்தகையர் நான்மறை யாயபாடி
மேகங்கோப் பளித்ததிங்கள் விரிசடை மேலும்வைத்துப்
பாகங்கோப் பளித்தமாதர் பண்ணுடன் பாடியாட
ஆகங்கோப் பளித்ததோளா ரதிகைவீ ரட்டனாரே. 246

பரவுகோப் பளித்தபாடல் பண்ணுடன் பத்தரேத்த
விரவுகோப் பளித்தகங்கை விரிசடை மேவவைத்து
இரவுகோப் பளித்தகண்ட ரேத்துவா ரிடர்கடீர்ப்பார்
அரவுகோப் பளித்தகைய ரதிகைவீ ரட்டனாரே. 247

---

246 நாககங்கணர் ஆதலின், நாகங்கோப்பளித்தகையர் எனலாயிற்று. 'அரவு கோப்பளித்த கையர்' (247.) நான் மறை ஆய - நான்கு வேதங்களானவற்றை. பாடி வைத்துப் பாடி ஆடக் கோப்பளித்த தோளார் என்று முடிக்க. திங்கள் மேகத்தின் மறைந்து வெளிப்படல் கருதி, மேகங் கோப்பளித்த திங்கள் என்றருளினர். திங்களை விரிசடைமேல் வைத்து. அம்பிகை பண்ணுடன் பாடி ஆட. பாகம் - இடப்பால். ஆகம் - மார்பு. உடலுமாம். 'மாதர் பண்ணுடன் பாடி ஆட' என்பது அம்பிகை பண்ணோடு பாடுதலும் அன்றி ஆடுதலும் செய்தார் என்று குறித்தாலும், ஆடுதல் காளியம்மைக்கே உரியதாக்கிக் கூறுதலாலும், சிவகாமவல்லிக்கு ஆட்டம் உண்டென்னல் மரபன்றுதலாலும், பாடி என்றதைப் பாட என்று செயவெனச்ச மாகத் திரித்துக்கொள்ளல் நன்று.

247. பரவு - வாழ்த்து. 'பரவுவார் இமையோர்கள் பாடுவன நால்வேதம்' 'பாழ்த்த பிறப்பறுத்திடுவான் யானும் உன்னைப் பரவுவனே' (திருவாசகம்) பத்தர் - தொண்டர். பண்ணுடன் ஏத்தக் கங்கையைச் சடைமேல் வைத்து, தீர்ப்பார் என்று முடிக்க. நஞ்சுண்ட கறுப்பு, இரவைக் கோப்பளித்தது போலிருந்தது. இரவு கோப்பளித்தது போன்ற இருட் கண்டமும் ஆம். 'ஏத்துவார் இடர்கள் தீர்ப்பார்.' 234, 242. அரவு கோப்பளித்த கையர் :- 'நாகங் கோப்பளித்த கையர்.' 246. பரவு........பாடப் பண்ணுடன் ஏத்த என்றதால், 'வேதத்தின் கீதம்பாடும் பண்ணவனைப் பண்ணில்வரு பயனை'ப் பண்ணோடு கூட்டிப் பாடுதலே திருவருட் பரிசளிக்க வல்லது எனல் விளங்கும்.

தோண்டைகோப் பளித்தசெவ்வாய்த் துடியிடைப்
பரவையல்குற்
கோண்டைகோப் பளித்தகோதைக் கோல்வளை பாகமாக
வண்டுகோப் பளித்ததீந்தேன் வரிக்கயல் பருகிமாந்தக்
கேண்டைகோப் பளித்ததெண்ணீர்க் கெடிலவீ ரட்டனாரே.

திருச்சிற்றம்பலம்

248. தோண்டை - தொண்டையங்கனி. செவ்வாய்க்கு உவமை. துடியிடை - உடுக்கை நடுப்போலும் இடை. பரவை - கடல். 254 பார்க்க. கோண்டை :- ஐம்பாலுள் ஒன்று. கோதை - கூந்தல். கூறு கோப்பளித்த கோதை (243) என்றதும் ஐம்பாற் கூந்தலை உணர்த்தியதாகும். கோள்வளைபாகம் :- 'கோல்வளை மாதோர் பாகம்' 243. வண்டு.........கெடிலம் :- கெடில வளம் உணர்த்திற்று. கயல் தேனைப் பருகி மாந்த நீர் கேண்டையைக் கோப்பளித்தது. தேனை வண்டு கோப்பளித்தது.

மேவிய பணிகள் செய்து விளங்குநாள் வேட்க ளத்துச்
சேவுயர் கொடியார் தம்மைச் சென்றுமுன் வணங்கிப் பாடிக்
காவியங் கண்டர் மன்னுந் திருக்கழிப் பாலை தன்னில்
நாவினுக் கரசர் சென்று நண்ணினார் மண்ணோர் வாழ.

சினவிடையே றுகைத்தேறு மணவாள நம்பிகழல் சென்று தாழ்ந்து
வனபவள வாய்திறந்து வானவர்க்குந் தானவனே! யென்கின்றாளென்
றனையதிருப் பதிகமுட னன்புறுவண் டமிழ்பாடி யங்கு வைகி
நினைவரியார் தமைப்போற்றி நீடுதிருப் புலியூரை நினைந்து மீள்வார்.

மனைப்படப்பிற் கடற்கொழுந்து வளைசோரியுங் கழிப்பாலை
மருங்கு நீங்கி
நனைச்சினைமென் குளிர்ஞாழற் பொழிலூடு வழிக்கொண்டு
நண்ணும் போதில்
நினைப்பவர்தம் மனங்கோயில் கொண்டருளு மம்பலத்து
நிருத்த னுரைத்
தினைத்தனையாம் பொழுதுமறந் துய்வனோ வெனப்பாடித்
தில்லை சார்ந்தார்.

# 25. திருவதிகைவீரட்டானம்

## திருப்பதிக வரலாறு

விரிபுனல்சூழ் திருவதிகைவீரட்டானத்து அமுதைத் தெரிவரிய பெருந்தகைமைத் திருநாவுக்கரசு நாயனார், பணி செய்யும் நாளில் பாடிய செந்தமிழ்ப் பாட்டுக்கள் பலவற்றுள் ஒன்றாகும் இத் திருப் பதிகம்.

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

வெண்ணிலா மதியந்தன்னை விரிசடை மேவவைத்து
உண்ணிலாப் புகுந்துநின்றங் குணர்வினுக் குணரக்கூறி
விண்ணிலார் மீயச்சூரார் வேண்டுவார் *வேண்டிலார்க்கே
அண்ணியார் பெரிதுஞ்சேயா ரதிகைவீ ரட்டனாரே. 249

249. வேள் நிலா மதியம் - வெள்ளொளி வீசும் பிறை. உள் நிலாப் புகுந்து - உள்ளத்தே நிலாவ நுழைந்து. 'தன்னுள் நிலாவாத நெஞ்சம்' உடைய 'நிற்பதோத்து நிலையிலாப் புலா லுடம்பே புகுந்து நின்ற கற்பகமே.' (திருத்தாண்டகம்) உணர் வினுக்கு - சித்தாகிய ஆன்மாவிற்கு. ஆன்மஞானத்துக்கும் ஆம். உணர்தல் :- ஒருங்கியுணர்தல் ; ஒன்றியிருந்து நினைந் துணர்தல். 'தாம் திருத்தி மனத்தை ஒருக்காத் தொண்டர்' (6. 93. 1) கூறல் - உணர்வித்துணர்தல். 'காணுங் கண் ணுக்குக் காட்டும் உளம்போல் காண உள்ளத்தைக் கண்டு காட்டல்' (சிவ. போ. சூ. 10) விண்ணில் ஆர் மீயச்சூர் - வேண்டுவார்க்கு அண்ணியார். வேண்டிலார்க்கே பெரிதும் சேயார். வேண்டுவார்க்கே பெரிதுஞ் சேயார் எனல் பொருந் தாது. வேண்டுவார்க்கே அணியர் எனின், வேண்டுவார்க்குப் பெரிதுஞ்சேயார் என்றல் அமையாது.

* 'வேண்டுவார்க்கே'. பா. பே.

பாடினார் மறைகணான்கும் பாயிருள் புகுந்தென்னுள்ளம்
கூடினார் கூடலால வாயிலார் நல்லகொன்றை
சூடினார் சூடன்மேவிச் சூழ்சுடர் சுடலைவெண்ணீ
றாடினா ராடன்மேவி யதிகைவீ ரட்டனாரே. 250

ஊனையே கழிக்கவேண்டி லுணர்மின்க ளுள்ளத்துள்ளே
தேனைய மலர்கள் கொண்டு சிந்தையுட் சிந்திக்கின்ற
ஏனைய பலவுமாகி யிமையவ ரேத்தநின்று
ஆனையி னுரிவை போர்த்தா ரதிகைவீ ரட்டனாரே. 251

250. மறைகள் நான்கும் பாடினார் :- 'மறையும் கோப் பளித்த நாவர்'. (242) பாய் இருள் - பரவிய இருள். என் உள்ளத்தில் இருக்கும் இவர் அவ்வுள்ளம் இருக்கும் இருளிற் புகுந்தவராவர். 'இருள் அடராது உள்ளுயிர்க்கு உயிராய்த் தெளிக்கும் அறிவு திகழ்ந்துளதேனும், திரிமலத்தே குளிக்கும் உயிர் அருள் கூடும்படி கொடிகட்டினனே' (கொடிக்கவி. 1) கூடல் :- நான்மாடக்கூடல். நான்மாடங்கள் :- கன்னி, கரிய மால், காளி, ஆலவாய். ஆலவாயில் :- ஆலமரத்தினிடம். 'கடுவாயர்தமை நீக்கி என்னை ஆட்கொள் கண்ணுதலோன் நண்ணுமிடம் அண்ணல்வாயில், நெடுவாயில் நிறைவயல்சூழ் நெய்தல்வாயில் நிகழ்முல்லை வாயிலொடு ஞாழல்வாயில் மடுவார் தென்மதுரைநகர் ஆலவாயில் மறிகடல்சூழ் புனவாயில் மாடம் நீடு, குடவாயில் குறைவாயில் ஆன எல்லாம் புகுவாரைக் கொடு வினைகள் கூடா அன்றே' (6. 71. 7) என்னுந் திருத்தாண்ட கத்தால், ஆலவாயிலையும் ஏனைய வாயில்களையும் ஒருங்குற்று நோக்குமவர்க்கு, ஆலவாய்க் கதை ஓர் ஆராய்ச்சியிலாக் கட்டு என்று நன்குவிளங்கும். நல்ல கொன்றை :- 'வம்பருவரி வண்டு மணம் நாற மலரும் மதுமலர் நற்கொன்றை'. 'கொய்யாடு கூவிளங் கொன்றைமாலை கொண்டு அடியேன் நான் இட்டுக் கூறிநின்று பொய்யாத சேவடிக்கே போதுகின்றேன்' (6. 99. 8) சூடல் - அணிதல். ஆடினார் - முழுகினார். மேவி வீரட்டத்து உள்ளார். புகுந்த என் உள்ளம் கூடினார்.

251. ஊனை - உடம்பெடுத்தலாகிய பிறவித் துன்பத்தை. 'ஊன்' உடம்பு, பிறவி, துன்பம் மூன்றற்கும் முறையே ஆகிய மும்மடியாகுபெயர். 'வேண்டில் உள்ளத்துள்ளே உணர்மின் கள்' என்றது சுவாநுபவ வாக்கியம் ஆகிய ஞானோபதேசம்.

துருத்தியாங் குரம்பைதன்னிற் றொண்ணூற்றங் கறுவர் [நின்று
விருத்திதான் றருகவென்று வேதனை பலவுஞ் செய்ய
வருத்தியால் வல்லவாறு வந்துவந் தடையநின்ற
அருத்தியார்க் கன்பர்போலு மதிகைவீ ரட்டனாரே. 252

பத்தியா லேத்திநின்று பணிபவர் நெஞ்சத்துள்ளார்
துத்தியைந் தலையநாகஞ் சூழ்சடை முடிமேல்வைத்து
உத்தர மலையர்பாவை யுமையவ ளடுங்கவன்று
அத்தியி னுரிவைபோர்த்தா ரதிகைவீ ரட்டனாரே. 253

'என்னுளே தேடிக் கண்டு கொண்டேன்' (93) 'பத்தர்கள் சித்தத்துள் புக்குத் தேடிக் கண்டு கொண்டேன்' (207) உள்ளத் திருக்குறுந்தொகை. (5. 98. முழுதும்). தேன் - வண்டுகள். நைய - வருந்த. 'தேனை' என்றமையால் தேனையுடைய என்று உரைத்தல் பொருந்தாது. சிந்திக்கின்ற எல்லாமாய் அல்லனுமாய் இருந்திடுவோன். உரிவு - தோல். புரிவு எரிவு, விரிவு, பரிவு, செறிவு, அறிவு, முறிவு என இகரவீற்று முதனிலைகள் வுகரம் பெற்று நிற்றல் காண்க. உரி+ஐ=உரியை. உரிவு+ஐ=உரிவை. இஃது இரண்டனுருபன்று.

252. துருத்தி - இடைகலை பிங்கலை நாடி இரண்டாலும் மூச்சுவிடுதல்பற்றி ஊதுலைத் துருத்தி போல்வது இத் தோற்றுருத்தி. 'பூந்துருத்தி பூந்துருத்தி என்பீராகில் பொல்லாப் புலாற்றுருத்தி போக்கலாமே' (6. 93. 1) 'சோற்றுத் துறுத்தி' (கோயிற்றிருவகவல். 2 :- 17) 'காற்றுத் துறுத்தி'. 'சோறிடுந் தோற்பை' என்றதால் துருத்தி எனல் மரூஉ. 'தங்கள் துருத்திக்கு அறுசுவை போடுகின்றார். 'ஊன் பொதிந்த பீற்றற்றுருத்தி' (திருவேகம்பமாலை. 16. 27) தாயுமானவர் சச்சிதாநந்தசிவம் 2 குரம்பை குடில். 'இருகாற் குரம்பை இதுநானுடையது' (4. 113. 2) தொண்ணூற்றறுவர் - தொண்ணூற்றாறு தத்துவங்கள். விருத்தி - வாழ்வு. வேதனை - துன்பம். வருத்தி - வரச்செய்தி. வருத்தி - வருத்துவாய். அருத்தி - அன்பு. அருத்தியார் - அன்பர்.

253 பத்தி - தொண்டு. அன்பு என்னும் பொருட்டாயிற்று. பணிபவர் - பணிதலைப் புரிபவர். துத்தி - படப் பொறி. தலைய - தலைகளையுடைய. சூழ் சடை - தலையைச் சூழ்ந்தசடை. சடையின்

வரிமுரி பாடியேன்றும் வல்லவா றடைந்துநேஞ்சே
கரியுரி மூடவல்ல கடவுளேக் காலத்தாலே
சுரிபுரி விரிகுழலா டுடியிடைப் பரவையல்குல்
அரிவையோர் பாகர்போலு மதிகைவீ ரட்டனுரே. 254

முடிமேல் நாகத்தை வைத்து. உத்தரம் - வடக்கு. இமாசல குமாரி உமாதேவி. அத்தி - யானே. ஆணவத்தைப் போக்கிய தத்துவத்தை விளக்குவது யானேயுரித்த வரலாறு.

254. ' வரிப்பாடலாவது :- பண்ணும் திறமும் செயலும் பாணியும் ஒரு நெறியன்றி மயங்கச் சொல்லப்பட்ட வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், அள்ளல், பட்டடை என இசையோர் வகுத்த எட்டனியல்பும் ஆறனியல்பும் பெற்றுத் தன் முதலும் இறுதியும் கெட்டு இயல்பும் முடமும் ஆக முடிந்து கருதப்பட்ட சந்தியும் சார்த்தும் பெற்றும் பெருதும் வரும். அதுதான் தெய்வஞ் சுட்டியும் மக்களேப் பழிச்சியும் வரும்.' (சிலப். கானல்வரி. 1 :- 12-20. அரும்பதவுரை) தோல். செய். 153. பேராசிரியர். முரி :- ' எடுத்த இயலும் இசையும் தம்மில் முரித்துப் பாடுதல் முரியெனப்படுமே ' கானல் வரி :- முரிவரி. (14-16) அரும்பதவுரை. ' இசைநூலாரும் இத் தரவு முதலாயினவற்றை, முகம் நிலே கொச்சகம் முரி என வேண்டுப. கூத்தநூலார் கொச்சகம் உள்வழி அதனே நிலே என அடக்கி முகம் நிலே முரி என மூன்ருகவேண்டுப. அவரும் இக் கருத்திற்கு ஏற்ப முகத்திற்படும் தரவினே முகம் எனவும் இடைநிற்பனவற்றை இடைநிலே எனவும் இறுதிக்கண் முரிந்து மாறுஞ் சுரிதகத்தினே முரி எனவும் கூறினுர் என்பது ' (தோல். செய். 132. பேராசிரியர் உரை) சிலப். கடலாடு. 35. அடியார் .. உரை. வரி முரி பாடி என்றும் வல்லவாறு அடைந்தும் (-அடைந் தோம்) என்று கோள்க. இதனுல், அப்பமூர்த்திகளது பாவன்மை யும் புலமையும் ஒப்புயர்வில்லாத உயர்ச்சிய ஆதல் புலப்படும். கரியுரி மூடவல்ல கடவுள் :- ' யானேயின் பசுந்தோல் பிறர் உடம்பிற் பட்டாற் கோல்லும் என்றுணர்க ' .... வாரணத்துரி போலே தப்பாமற் கோல்லும் வலே என்றும் ஆம் ' (சிந்தாமணி. 2787. உரை) என்றதால், யானேத் தோலேத் தன்மேல் மூடவல்ல வன் சிவபேருமான் ஒருவனே ஆதலின் ' கரியுரி மூடவல்ல கடவுள் ' என்ருர். கரத்தையுடையது கரி. பணத்தையுடையது

நீதியா னினைசெய்நெஞ்சே நிமலனை நித்தமாகப்
பாதியா முமைதன்னோடும் பாகமாய் நின்றவெந்தை
சோதியாய்ச் சுடர்விளக்காய்ச் சுண்ணவெண் ணீறதாடி
ஆதியு மீறுமானா ரதிகைவீ ரட்டனாரே. 255

எல்லியும் பகலுமெல்லாந் துஞ்சுவேற் கொருவர்வந்து
புல்லிய மனத்துக்கோயில் புக்கனர் காமனென்னும்
வில்லியங் கணையினானை வேந்துக நோக்கியிட்டார்
அல்லியம் பழனவேலி யதிகைவீ ரட்டனாரே. 256

பணி என்பது போல்வது. சுரி - சுரிந்த. புரி - முறுக்குண்ட 396 பார்க்க. 'துடியிடைப் பரவையல்குல்' 248. 269. இடையையும் அல்குலையும் உடைய அரிவை (உமாதேவி)யார் அன்மொழித்தொகை ; அல்குலாள் என விரியும்.

255. நிமலனை - இயல்பாகவே தளையில்லாத சிவனை. நித்தம் - நித்தியம். எப்போதும். நீதியால் - (சிவாகம) விதிப்படி. நினைசெய் - நினைத்தலைச் செய். நெஞ்சறிவுறூஉ இது. பாதி - திருமேனியின் செம்பாதி உமையம்மைக்குரியது. பாதியாம் உமையோடும் பாகமாய் நின்ற எந்தை :- உமைபாதியாவார். எந்தை பாகமாவார். பாதியானது உமையும் பாகமாய் நின்றது எந்தையும் என்றுணர்த்தியதுணர்க. சோதி - பேரொளி. சுடர் விளக்கு :- வினைத்தொகை. எக்காலத்துக்கும் உரியது. திரு வெண்ணீற்றுச் சுண்ணம். ஆதி - முதல். ஈறு - முடிவு. 'ஆனார்' என்றதால், ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதியே இயல்பு.

256. எல்லி - இரவு. துஞ்சுவேற்கு - (துயிலும் எனக்கு) துயில்வேனுக்கு. புல்லிய - புன்மையதாகிய. மனத்துக் கோயில் - மனக்கோயிலுள். சாரியை பிரித்துக்கூட்டி மனக்கோயிலத்து என்க. 'விண்ணத்து' என்பதுபோற்கொள்க. ஒருவர் மனக் கோயிலுள் வந்துபுக்கனர். வில்லி - (கரும்பு) வில்லுடையன், ஐங்கணையினான் - ஐந்து மலரம்புகளைக் கொண்டவன். காமன் என்னும் பெயரினன். வேந்துஉக - தீய்ந்து சிந்த. நோக்கி யிட்டார் - தீவிழியாற் பார்த்திட்டார். அல்லி - செவ்வல்லியும், வெள்ளல்லியும். பழனம் - வயல்.

ஒன்றவே யுணர்திராகி லோங்காரத் தொருவனாகும்
வென்றவைம் புலன்கடம்மை விலக்குதற் குரியீரெல்லாம்
நன்றவ னாரணனு நான்முக னடிக்காண்குற்
றன்றவர்க் கரியர்போலு மதிகைவீ ரட்டனாரே. 257

தடக்கையா லெடுத்துவைத்துத் தடவரை குலுங்கவார்த்துக்
கிடக்கையா லிடர்களோங்கக் கிளர்மணி முடிகள்சாய
முடக்கினார் திருவிரலான் முருகமர் கோதைபாகத்
தடக்கினா ரென்னையாளு மதிகைவீ ரட்டனாரே. 258

திருச்சிற்றம்பலம்

257. ஐம்புலன்களையும் வென்று அவற்றை விலக்கி, அவற்றால் வரும் துன்பங்களின் நீங்குதற்கு உரியீர் எல்லீரும் ஓங்காரத் தியானம் புரிந்து, ஒன்றியிருந்து நினைந்துணர்திர் (266) ஆகில், அவ்வோங்காரத்துள் ஒருவன் உமக்கு நேர்படுவான். வென்ற ஐம்புலன்கள் தம்மை விலக்குதற்குரியீர் :- ஐம்புலன்களை வென்றதோடு நில்லாது விலக்குதலும் வேண்டும் என்றபடி. ‘ வென்றவைம்புலன் ’ என்றுள்ளதால், அவ்வைம் புலனை வென்று விலக்குதற்குரியீர் எனலும் கூடும். ‘ வென்ற வைம்புலனால் மிக்கீர் ’ (சேக்கிழார்). நன்றவன் - சிவன். நாரணன் - நாராயணன் என்பதன் திரிபு. காண்கு - காண்டல். உற்ற அன்று :- பெயரெச்சத்து அகரம் தொகுத்தல்.

258. தடக்கை - அகலமுடைய கை; வளைந்த கை. தடவரை - அகன்ற மலை. தட - வளைவு. அகலம் உரிச்சொல். ஆர்த்து - இரைந்து. கிடக்கை - கிடத்தல். ஓங்க - மிக. கிளர்மணி - விளங்கும் அரதனம். முருகு - மணம். கோதை :- அன்மொழித் தொகை. கோதையாளைப் பாகத்தில் அடக்கினார். தம்மை ஆள்வதற்குக் கருணைவடிவான கோதையை அடக்குதல் ஏதுவாதலையுணர்த்தினார்.

அரியானை யென்றெடுத்தே யடியவருக் கெளியானை யவர்தஞ் சிந்தை
பிரியாத பெரியதிருத் தாண்டகச்செந் தமிழ்பாடிப் பிறங்கு சோதி
விரியாநின் றெவ்வுலகும் விளங்கியபொன் னம்பலத்து மேவி யாடல்
புரியாநின் றவர்தம்மைப் பணிந்துதமி ழாற்பின்னும் பாடல் செய்வார்.

# 26 திருவதிகைவீரட்டானம்

## திருப்பதிக வரலாறு

திருவதிகை வீரட்டானத்து அமுதை. தெரிவரிய பெருந் தகைமைத் திருநாவுக்கரசுநாயனார் வழிபட்டுக் கொண்டிருந்த காலத்தில் அருளிய செந்தமிழ்ப் பாட்டுகளுள் இத் திருப்பதிகமும் ஒன்று. (பெரியபுராணம். அப்பர். 144)

### திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

நம்பனே யெங்கள்கோவே நாதனே யாதிமூர்த்தி
பங்கனே பரமயோகீ யென்றேன்றே பரவிநாளும்
செம்போனே பவளக்குன்றே திகழ்மலர்ப் பாதங்காண்பான்
அன்பனே யலந்துபோனே னதிகைவீ ரட்டனீரே. 259

---

259. நம்பனே - விருப்பத்திற்குரியவனே. எவ்வுயிர் களாலும் விரும்பத்தக்கவனே. கோவே - தலைவனே. நாதனே - இயவுளே. ஆதிமூர்த்தி பங்கனே - 'முதலுருப்பாதி மாதராவது முணரார்' (சித்தியார் சூ. 1 :- 49). ஆதிமூர்த்தியாகிய மாதினை இடப்பங்கில் உடையவனே. 'ஆதிக்கண்ணான்' என்று (6. 20. 1) பின் குறிப்பதால், ஆதிமூர்த்தி பிரமன் என்று கொண்டு, அவனைப் பங்கஞ் செய்தவன் எனலாம் ஆயினும் 'ஆதிமாலயன் அவர்காண பரியார்' 'ஆதியான் அரிஅயன் என்று அறிய வொண்ணா அமரர் தொழுங்கழலான்' (6. 88. 2) என்றவற்றை நோக்கின் அது பொருந்தாது. பரமயோகீ :- 229. குறிப்பு நோக்குக. என்று என்று :- பன்மை குறித்த அடுக்கு. ஏகாரம் பிறவாறு பரவாமை குறித்த பிரிநிலை. நாளும் பரவி (- வாழ்த்தி). செம்பொன்னும் பவளக்குன்றும் திரிமேனிப் பொலிவு குறித்தன. அன்பனே:- 'அன்பே சிவம்'. அலத்தல் - துயருறல். வறுமைப் படல். 'அற்றார்க்கும் அலந்தார்க்கும் அருள்செய்வான்' (6. 1. 2) திருப்பதிகம் 31 இல் வீரட்டனீரே என்றும் வீரட்டனாரே என்றும் உள்ளன.

போய்யினுன் மிடைந்தபோர்வை புரைபுரை யழுகிவீழ
மெய்யனுய் வாழமாட்டேன் வேண்டிற்றுென் றைவர்வேண்
செய்யதா மரைகளன்ன சேவடி யிரண்டுங்காண்பான்  [டார்
ஐயநா னலந்துபோனே னதிகைவீ ரட்டனீரே.  260

நீதியால் வாழமாட்டே னித்தலுந் தூயேனல்லேன்
ஓதியு முணரமாட்டே னுன்னேயுள் வைக்கமாட்டேன்
சோதியே சுடரேயுன்றன் றூமலர்ப் பாதங்காண்பான்
ஆதியே யலந்துபோனே னதிகைவீ ரட்டனீரே.  261

---

260. பொய்யினுல் மிடைந்த போர்வை :- மிடைதல் - நெருங்குதல். (அது முடைதல் எனத் திரிந்து வழங்குகின்றது. இகரம் உகரமாதல் இயல்பு. பிள்ளை - புள்ளை. பிட்டு - புட்டு, முதலிய பலவுள). உடலின் இழிவு இதனுல் உணர்த்தப்பட்டது. ‘ பொசியினுல் மிடைந்து புழுப் பொதிந்த போர்வைப் பொல்லாத புலாலுடம்பை நிலாசும் என்று பசியில் மீதூரப் பட்டே ஈட்டிப் பலர்க்கு உதவலது ஒழிந்து பவளவாயார் வசியினுலகப்பட்டு வீழா முன்னம் வானவர்கோன் திருநாமம் அஞ்சும் சொல்லிக் கசிவினுல் தொழும் அடியார் நெஞ்சின் உள்ளே கன்ருப்பூர் நடுதறியைக் காணலாமே. ’ (6. 61. 6) ‘ பொய்விரா மேனி தன்னைப் பொருளெனக் காலம் போக்கி மெய்விரா மனத்தனல் லேன். ’ புரைபுரை :- ‘ ஆவியோடாக்கை புரைபுரை கனியப் புகுந்து நின்றுருக்கிப் பொய்யிருள் கடிந்த மெய்ச்சுடரே ’ (திரு வாசகம். 388). வேண்டிற்று ஒன்று - (யான்) விரும்பியதொன் றனை. ஐவர். 750. பதிகம் 52-67 ஐம்பொறிகள். (276) கோயில் நான்மணிமாலை. 12 :- 28-34. ஓரவோட்டார் ஒன்றை உன்ன வோட்டார் மலர் இட்டு உனதாள் சேரவோட்டார் ஐவர். செய்வது என் யான் சென்று ? (கந்தரலங்காரம்) ‘ பொய் மாயப் பெருங் கடலில் ’. திருத்தாண்டகம். 2, 4, 9 பார்க்க. செந்தாமரை ஒத்த சேவடி. பொய் :- ‘ முக்காலத்தும் புலனுகாமை ; நிகழ் காலத்து விளங்கி ஏனைக் காலத்து விளங்காமை ’ இவ்வாறன்றி அழிபொருள் பொய்ப்பொருள் என வேறில்லை. (சிவஞான பாடியம். சூ. 2. அதி. 2.)

261. நீதியால் - செய்வன செய்து தவிர்வன தவிர்ந்து வாழ்க என அறநூல் அறுத்தவாற்ருல். ‘ செய்வதும் தவிர்வதும்

தெருளுமா தெருளமாட்டேன் றீவினைச் சுற்றமென்னும்
பொருளுளே யழுந்திநாளும் போவதோர் நெறியுங்காணேன்
இருளுமா மணிகண்டாநின் னிணையடி யிரண்டுங்காண்பான்
அருளுமா றருளவேண்டு மதிகைவீ ரட்டனீரே. 262

பெறுவதும் உறுவதும் உய்வதும் அறியேன்' (சங்கர நமச்சிவாயப் புலவர் தனிப்பாடல் நன்னூலுரை) நித்தலும் - நாள்தோறும். தூயேன் - சிவபூசை முதலியவற்றால் சிவமானேன். ஓதியும் - ஓதுவிக்க ஓதியும். உள் - உள்ளத்தே. தூ - தூய்மையுடைய. பற்றுக்கோடாகிய. 'சோதியே சுடரே' என்பது முதலிய பற்பல தொடர்கள் பொருள்கள் திருவாசகத்தை நினைப்பூட்டும் வண்ணம் திருநாவுக்கரசர் அருளியவற்றுள் திகழ்கின்றன. மாணிக்கவாசகர் இவர்க்குமுன் விளங்கியவர் என்பதற்கு ஈதும் ஒரு சான்றாகும்.

262. தெருளல்×மருளல்; தெருட்சி×மருட்சி; தியக்கம்×மயக்கம்; (473) தெருள்வு×மருள்வு. தெருளல் - தேளிதல். தெருளும் ஆ - தெளியும் ஆறு. மாட்டேன் - வலிமையில்லேன். தீவினைச் சுற்றம் - தீவினையின் பயனாகச் சூழ்வன. 'இடும்பை என்னும் பாசனத்து அழுந்துகின்றேன்' (267) போவது ஓர் நெறி - உயிர் செல்லும் மெய்ந்நெறி. 'ஞானகதி' 'ஞானமலது கதி கூடுமோ?' (தாயுமானவர்) 'ஞானநெறி அடைந்து அடைவர் சிவனை' (சித்தியார். சூ. 8:- 25). இருளும் மாமணி கண்டா - நஞ்சினாற் கறுத்த நீலமணிபோலும் திருக்கழுத்து உடையவனே. இணையடி :- 'ஞானசத்தி கிரியாசத்தி என்னும் இரண்டு திருவடித் தாமரைகள்' (சி. போ. சிற்றுரை மங்கல வாழ்த்து) 'திரோதானசத்தியும் கிரியாசத்தியும் இரண்டு திருவடிகள்' (ஞானபூசாவிதி) 'வீடுபேறு' 'பாச வீடும் சிவப்பேறும்,' 'முதல்வனது திருவடியாகிய சிவானந்தத்தை அநுபவித்தல்' 'முதல்வன் திருவடியாகிய சிவானந்தாநுபூதி' (சிவஞானபாடியம். சூ. 10 :- அதி. 1. சூ. 11). அருளும் ஆறு :- தீக்கை, சிவாகமபடனம், சரியை முதலியன உணர்த்தும் நூல்களின் நானெறியாராய்ச்சிக் கேள்வி, அவ்வொழுக்கம் உள்ளத் தூய்மை, நிலைநிலையாப் பொருளுணர்ச்சி, பிறப்பச்சம், வீடுபேற்று அவாப் பெருக்கம் என்னும் எட்டும் உடையோர்க்கு நூலா

அஞ்சினு லியற்றப்பட்ட வாக்கைபெற் றதனுள்வாழும்
அஞ்சினு லடர்க்கப்பட்டிங் குழிதரு மாதனேனை
அஞ்சினு லுய்க்கும்வண்ணங் காட்டினுய்க் கச்சந்தீர்ந்தேன்
அஞ்சினற் பொலிந்தசென்னி யதிகைவீ ரட்டனீரே. 263

னும், அவருட் பக்குவமிக்கார்க்கு உபதேசத்தானும், அவருள்ளும் சகலர்க்குப் படர்க்கையிலும் பிரளயாகலர்க்கு முன்னிலையிலும், விஞ்ஞாகலர்க்குத் (உள்நின்று) தன்மையிலும் அருளும் வண்ணம்.

263. அஞ்சு - ஐம்பெரும் பூதம். 'ஐம்பெரும் பூதத்தான் ஆய தூலவுடம்பு' 'சூக்கும தேகத்தின் காரியம் ஆதல் பற்றியே தூலதேகம் ஐம்பெரும் பூதமயம் எனப்பட்டது' (சிவஞானபாடியம். சூ. 2. அதி. 3). ஆக்கை :- இஃது யாக்கை என்பதன் மருஉ. 'யாப்பு' ஆப்பென மருவிற்றிலது எழு வகைத் தாதுக்களாற் கட்டப்பட்டது என்னும் பொருட்டு, 'பல்வகைத் தாதுவின் உயிர்க்கு உடல்' (நன்னூல். 268) 'சிதலது நீர்வாய்ச் சிறுதுகளாற் பெரும்புற்றுருவமைந்த பெற்றியதென்ன ஐம்புலப் பேருருவைந்தும் ஐந்தணுவால் இம்பரிற் சமைவது யாவரும் அறிதலின்' (ஷை. சங்கர நமச் சிவாயருரை. 58). 'பா. தாழிசை, துறை. விருத்தங்களால் யாக்கப்பட்ட அறம் பொருள் இன்பம் வீடு என்னும் அவற்றின் மெய்ம்மை யறிந்து, விழுப்பம் எய்தி, இம்மை மறுமை வழுவாமல் நிகழ்வார் ஆதலின், இருமைக்கும் உறுதிபயப்பது யாப்பு எனக் கொள்க' (யாப்பருங்கலக்காரிகை. 1. உரை). 'ஆக்கப்பட்ட அறம் பொருள் இன்பம் வீடு' என்று பதிப்பித்திருப்பது பிழை. 'யாக்கப்படுவது யாப்பு' என்னும் உண்மை அதனுற் பெறப் படாது. அஞ்சு :- 'ஐம்புலவேடரின் அயர்ந்தனை வளர்ந்து' (சிவஞானபோதம். சூ. 8). 'உன்னுருவிற் சுவையொளியூ றோசைநாற்றத் துறுப்பினது குறிப்பாகும் ஐவீர் நுங்கள் மன் னுருவத் தியற்கைகளால் வைப்பீர்க்கு.........யானேல்......... சிவக்கொழுந்தை.........த்தலைப்படுவேன் துலைப்படுவான் தருக் கேன்மின்னே' (6. 27. 4). 'பஞ்சேந்திரிய முகரிகாள்......... நும்மால் ஆட்டுணேன் ஓட்டந்தீங்கலையேன்மின்னே' (ஷை. 9.) என்றலுமாம். அஞ்சினுல் உய்க்கும் வண்ணம் காட்டினுய்:-

உறுகயி றூசல்போல வொன்றுவிட் டொன்றுபற்றி
மறுகயிறூசல்போல வந்துவந் துலவுநெஞ்சம்
பெறுகயி றூசல்போலப் பிறைபுல்கு சடையாய்பாதத்
தறுகயி றூசலானே னதிகைவீ ரட்டனீரே. 264

'அஞ்செழுத்துமே அம்மையப்பர் தமைக் காட்டுதலால்......... கேள்' (திருக்களிறு. 25). 'நாடரிய அஞ்செழுத்தின் உள்ளீடு அறிவித்தான் அஞ்செழுத்தை நெஞ்சழுத்தி நேயமயலாக்கி அஞ்செழுத்தை உச்சரிக்கும் கேண்மை உணர்த்தி அதில் உச்சரிப்பு வைச்சிருக்கும் அந்த வழிகாட்டி' (நெஞ்சுவிடுதூது. 93 - 5). உய்க்கும் :- 'சத்தசத்தைச் சாரா தசத்தறியா தங்கணிவை உய்த்த சதசத்தாம் உயிர்' (திருவருட்பயன். 17) அஞ்சிறைற் போலிந்த சென்னி :- 'ஆவினுக்கு அருங்கலம் அரன் அஞ்சு ஆடுதல்' (105). 'அஞ்சுகோலாம் அவர் ஆடினதாமே' (181). 'தெளிஆன் அஞ்சு ஆடும் முடியானும் ஐயாறுடை ஐயனே' (2. 6. 5).

264. நெஞ்சம் ஒன்று விட்டு ஒன்று பற்றும். பற்றியதை விட்டு வரும். சென்று பற்றுதலும் பற்றியதை விட்டு மீண்டு வருதலும் நெஞ்சிற்கியல்பு. ஒன்று விட்டு ஒன்று பற்றி வந்து வந்துலவும் நெஞ்சத்திற்குக் கயிறூசல் ஒப்பு. கயிற்றைமட்டும் ஊசலாகக் கொண்டு ஆடுதல் இன்றும் உண்டு. அதன் வளர்ச்சி யான பல்வேறூசலை இங்குக் கொள்ளல் பொருந்தாது. தொங்கிய நிலையின் நில்லாது, அசைந்து, நின்ற இடத்தை விட்டு முன்னும் பின்னும் ஒவ்வோரிடத்தைப் பற்றுகின்ற செயல் எல்லாவூசற்கும் பொதுவாயினும், இதிற் கயிறூசலைக் குறிப்பதால், அதற்குரிய தாகக் கொள்க. முதன்முறையாக, தன்னிலையை விட்டுச் சென்று பிறிதோரிடத்தைப் பற்றுவது 'உறுகயிறூசல்'. பற்றிய அவ் விடத்தை விட்டு மீண்டு தொங்கிய நிலைப் பக்கம் வருவது மறு கயிறூசல். அந்நிலையை விட்டு மற்றொரு பக்கம் சென்று பற்று வதும் அதை விட்டு மீள்வதும் அவ்விரண்டூசலாகவே கொள்ளல் தகும். தகவே சென்று பற்றல், விட்டு மீண்டு வரல், இவ்விரண் டற்கும் இடையில் உலவல் ஆகிய முத்தொழில்கள் ஊசற்குள் ளன. நெஞ்சம் பெறு சடையாய். கயிறூசல் போலப் பிறை புல்கு சடையாய், நெஞ்சம் ஆகிய ஊசல் ஆடிய அடியேன்,

அவ்வூசல் அற்று, நின்பாதம் ஆகிய நிலத்தை அடைந்தேன். கயிறூசல் அற்றவனுனேன் என்று கோள்க. 'ஊசல் கயிறு அற்ருல் தாய் தரையே ஆம்' என்னும் சிவஞானபோத வாக்கியத்திற் குறித்தது :- ஊசலேக் கட்டிய கயிறு அற்ருல், ஊசல் விழும். விழுந்த ஊசற்குத் தரை நிலேக்களம் ஆகும். கயிறு போல்வது பாசம். கயிற்ருற் கட்டப்பட்ட ஊசல் போல்வது பாசபந்தமுடைய பசு. கயிறற்ற ஊசல் போல்வது பாசம் அற்ற ஆன்மா. கயிறற்ற ஊசற்கு நிலேக்களமான தரைபோல்வது, பாசம் அற்ற ஆன்மாவிற்கு நிலேக்களமான திருவடி. அதனுல், சிவஞானபோதத்திற் குறித்தது கயிற்றூசல். (கயிற்ருற் கட்டப்பட்ட ஊசல்). இத் திருமுறையிற் குறித்தது கயிறூசல் (கயிருகிய ஊசல் ; தாம்பு. 'ஒருவன் ஏறியிருந்து ஆடா நின்ற ஊசல் கயிறு அற்றதாயின், அவனுக்கு உற்றுழி உதவும் தாய்போல் ஆண்டுத் தாரகம் ஆவது நிலனே அன்றிப் பிறிது இல்லே.' (ஷி. உரை) என்றதால் கயிறு வேறு அற்ற ஊசல் வேறு ஆதல் விளங்கும். 'தாப்பிசை (தாம்பு + இசை) - ஊசல் (தாம்பு) போல் இடைநின்று இருமருங்குஞ் செல்லும் சொல்' (நன்னூல். சூ. 411) என்றதில், இடைநிற்றலும் இருமருங்குஞ் செல்லுதலும் வருதலும் ஊசலுடைமை புலப்படுத்தியதுணர்க. 'தழைக் கயிற்றூசல்' 'தாழை நெடு வீழுசல்' 'தாழை வீழுசல்' 'தாழை வீழ் கயிற்றூசல்' (பெருங்கதை; கலித்தொகை. 131; அகம். 20) 'மணிக் கயிற்றூசல்' 'பொன்னூசல்' (பெருங்கதை. திருவாசகம். 327) என்பன வேறு 'வல்லவாறு வந்து வந்து அடைய நின்ற அருத்தியார்' (252) என்புழிப்போல்வது 'வந்து வந்துலவும் நெஞ்சம்' என்க. 'அறு கயிறூசலானேன்.' என்பது 'ஆன முதலில் அதிகம் செலவானுன்' என்பது போல்வது. உறு, மறு, அறு என்னும் அடைமொழிகளே நோக்கிப் பொருள் கொள்ளல் இன்றியமையாதது. அவை பொருளற்ற அடையல்ல. 'ஆசைவன் பாசம் எய்தி அங்குற்றேன் இங்குற்றேனுய் ஊசலாட்டுண்டுவாளா உழந்துநான் உழிதராமே .....ஈசனே உன்றன்பாதம் ஏத்துமாறு அருள் எம்மானே' (743) 'உமையாளொரு பாகனே அருத்தியாற் சேன்று கண்டிட வேண்டுமென்று ஒருத்தியார் உளம் ஊசலது ஆடுமே' (5. 40. 5) 'பாசங் கழன்ருற் பசுவுக்கிடம் பதியாம் ஊசல் வடம் கழன்றது ஒவ்வாதே—நேசித்த பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் பாட்டுமக்கோ மற்றைச் சமயமேங்குமாம்.' (ஒழிவிலோடுக்கம்.

கழித்திலேன் காமவெங்நோய் காதன்மை யென்னும்பாசம்
ஒழித்திலே னூன்கண்ணேக்கி யுணர்வெனு மிமைதிறந்து
விழித்திலேன் வெளிறுதோன்ற வினையெனுஞ் சரக்குக்
கொண்டேன்
அழித்திலே னயர்த்துப்போனே னதிகைவீ ரட்டனீரே. 265

விரத்தி விளக்கம். 4) நெஞ்சத்திற்குப் பொருட்சார்பிற் சென்று பற்றலும், அதை விட்டு மீண்டு உயிர்ச்சார்பில் வந்துலவலும் உண்டு (736). 'ஊசல் ஒத்த உளம்' (பிரபுலிங்கலீலை ஆரோகணகதி. 10) 'ஊசல் செய் மனம்' (ஷ. இட்டலிங்ககதி. 23) 'மட்டூர் குழல் மங்கையர் மையல் வலைப் பட்டுசல் படும் பரிசு என்று ஒழிவேன்' (கந்தரநுபூதி). 'எம்முடைய வலைப்பட்டோர் இவ்வாறே அலைவர் என மம்மர் உலகினைத் தெளிக்கும் மாண்பு' (கச்சியப்ப முனிவர் அருளிய காஞ்சிப் புராணம் நகரேற்றுப் - 127) மடவாராட்டும் மணித்தொட்டிற்குக் கூறினும், அவராடும் ஊசற்கும் அது பொருந்தும். கயிறூசல் பலவற்றில் மாறி மாறி ஆடியதாகக் கொண்டுரைத்தலே, 'உறுகயிறூசல்' 'மறுகயிறூசல்' என்றதற்குத் தகும். இன்றேல், 'மறுகயிறூசல்' என்றது புலப்படாது. 'ஊசலாட்டும் இவ்வுடலுயிர்' (8 :- 574)

265. காமம் ஆகிய கொடிய நோயைக் கழித்தேனில்லை. அதற்கு அடியாகிய ஆசாபாசத்தை ஒழித்தேனில்லை. பொருட்பற்றுளதேல், அதனால் எய்தும் நோயும் உடனுறும் அன்றோ? நோயை ஒழிக்க, அதற்கு அடியான பற்றை ஒழித்தல்வேண்டும். 'பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்; பிறவார் உறுவது பெரும் பேரின்பம்; பற்றின் வருவது முன்னது; பின்னது அற்றோர் உறுவது' (மணிமேகலை). தணிகைப்புராணம் நந்தியுபதேசப். 110 பார்க்க. காமவெங்நோய் கழிந்திடாமைக்கும் காதன்மை என்னும் பாசம் ஒழித்திடாமைக்கும் காரணம் ஊன் கண்ணேக்கமும் உணர்வு எனும் இமை திறந்து விழித்திடாமையும். 'ஊனக்கண் பாசம் உணராப் பதியை ஞானக் கண்ணினிற் சிந்தைநாடி உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவ' (சி. போ. சூ. 9) முயலாது, வேம்பு தின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்கும் அஞ்ஞானம் தோன்றக் கன்மச் சரக்கை இவ் உடற்கலத்தில் (ஏற்றுக்) கொண்டேன். சிவஞானபோதம்

மன்றத்துப் புன்னைபோல மரம்படு துயரமெய்தி
ஒன்றினு லுணரமாட்டே னுன்னையுள் வைக்கமாட்டேன்
கன்றிய காலன்வந்து கருக்குழி விழுப்பதற்கே
அன்றினு னலமந்திட்டே னதிகைவீ ரட்டனீரே. 266

74 ஆவது வெண்பாவுரைக்கண் மாமாடியம் உணர்த்துவதை ஈண்டுணர்க. ஆசிரியர் தகுதிக்குத் தக்கநிலையில் அப் பாசம் தாக்குதலே அறியாது, தகாதன கூறுவர். ‘ கழித்திலேன்...... . நோக்கி ’ என்றது மாயாமலவாசனையும், ‘ உணர்வேனும்........ விழித்திலேன் ’ என்றது ஆணவமலவாசனையும் ’ ‘ வினை...... கோண்டேன் என்றது கன்மமலவாசனையும் நீங்காமை குறித்தன. ‘ அழித்திலேன் ’ என்றது அம் மூன்றும் மேய்ஞ்ஞானிக்கு ஆகாமை குறித்தது. ‘ அயர்த்துப்போனேன் ’ என்றது ‘ மறப் பித்து மலங்களின் வீழ்க்கும் சிறப்பிலார் (அமணர்) திறத்துச் சேர்வை ’க் குறித்தது. தணிகைக். களவு. 156.

266. மன்றத்துப்புன்னை - ஊர்ப் போதுவில் வளர்ந்த புன்னை மரத்தை. மரம்படுதுயரம் - அப்புன்னையும் பிறவும் ஆகிய மரங்கள் அடைகின்ற துயரம். சிலப்பதிகாரம். ‘ குற்றம் நீங்கிய யாழ் ’ (கானல்வரி. 1 :- 4) ‘ ஆதவ வாத பய சாயை என்பன ’; என்னை ? சிந்தாமணியிலும் ‘ நோய் நான்கு நீங்கி ’ (720) என்றார். ‘ நான்காவன வெயிலும் காற்றும் நீரும் நிழலும் மிகுதல் ’ (நச். உரை). துன்பம் :- காரணம்; பிராரத்தவினை. துயரம் - காரியம் ; வினைப்பயன். ‘ துயரமே ஏற்றமாகத் துன்பக்கோலதனைப்பற்றி, (504). பா. 253, 254 பாட்டுக் குறிப்புடன் உணர்க. ஒன்றினால் - ‘ ஒன்றவே உணர்திராகில் ஓங்காரத் தோருவன் ஆகும் ’ (257). ஓர் உபாயத்தாலும். ஒன்றியிருந்து நினைத்தலால், ‘ ஒன்றுங்குறி ’ (திருக்களிறு. 10). யால். ஓர் உபாயத்தாலும் என்புழி உம்மை தோக்கதாகக் கோள்க. உன்னை உள்வைக்கமாட்டேன் :- ‘ அவனே தானே ஆகிய அந்நேறி ஏகனாகி இறைபணி நிற்க ’மாட்டேன். கன்றிய- சினந்த. கருக்குழி - கரு(ப்பை)ஆகிய குழி. விழுப்பது - விழச் செய்வது. ‘ வெம்மை நமன்தமர் மிக்குவிரவி விழுப்பதன்முன் இம்மை உன்தாள் என் நேஞ்சத்து எழுதிவை ’ (938). காலன் வந்து அன்றினான் (- பகைத்தான்).

பிணிவிடா வாக்கைபெற்றேன் பெற்றமோன் றேறுவானே
பணிவிடா விடும்பையென்னும் பாசனத் தழுந்துகின்றேன்
துணிவிலேன் றூயனல்லேன் றூமலர்ப் பாதங்காண்பான்
அணியனு யறியமாட்டே னதிகைவீ ரட்டனீரே. 267

திருவினாள் கொழுநனுருந் திசைமுக முடையகோவும்
இருவரு மெழுந்தும்வீழ்ந்து மிணையடி காணமாட்டா
ஒருவனே யெம்பிரானே யுன்றிருப் பாதங்காண்பான்
அருவனே யருளவேண்டு மதிகைவீ ரட்டனீரே. 268

திருச்சிற்றம்பலம்

267. பிணிவிடா ஆக்கை - பிணியானவை விடாத உடலை. பெற்றம் - விடை. பணி - கருமம். இடும்பை - இருள்சேர் இருவினையாலும் எய்தும் துன்பம். (தணிகைப்புராணம். நந்தியுபதேசம். 110 - 116). 'வந்த இருவினைக்கும் மாமருந்து' (திருவள்ளுவமாலை). பாசனம் - சுற்றம். 'தீவினைச் சுற்றம் என்னும் பொருளுளே அழுந்தி நாளும் போவதோர் நெறியுங் காணேன்' (262). பண்ணணிவிடாத இடும்பை எனலுமாம். 'வினைப்பற்று'. உழவாரத்திருப்பணி (செய்தலு)க்கு விடாத இடும்பை எனலும் பொருந்தும். பாம்பைப்போற் பற்றிவிடாத எனலுமாம். துணிவு - தெளிவு. தூயன் - கட்டு நீங்கினேன். 'தூமலர்ப் பாதங்காண்பான்' (261). அணியன் ஆய் - அணிமையில் உள்ளேன் ஆகி (126-2650). அறியமாட்டேன் - 'உணரமாட்டேன்' (266).

268. திரு - செல்வம். திருவினாள் - செல்வி. கொழுநன் - கொளுநன், 'கொண்டவன்' 'கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி' (திரிகடுகம். 96). திசை - நான்கு என்னும் குறிப்பு. திசைக்கொன்றாக முகம் நான்குடைய கோ. எழுந்தும் - அன்னப் புள்ளுருவாய் வானோக்கி எழுந்து பறந்தும். வீழ்ந்தும் - பன்றியுருவாய் நிலத்தை அகழ்ந்துகொண்டே சென்று விழுந்தும். இணை - இரண்டு. மாட்டாமை இருவரது. ஒருவன் - 'தான்தனியன்' (திருவாசகம். 257). 'ஒப்பில் ஒருத்தனே' (ஷை. 65). 'ஒருவனே' (ஷை. 72). 'அருவனே' (சித்தியார். 58, 75).

## 27 திருவதிகைவீரட்டானம்

### திருப்பதிக வரலாறு

திருவதிகை வீரட்டானத்தில் அமுதம் உட்கொண்டு வெளித் தொண்டுபுரிந்து வாழ்ந்திருந்த காலத்தில் பாடியருளியவற்றுள் ஒன்று இச் செந்தமிழ்ப் பாட்டு. (பெரியபுராணம். 144).

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

மடக்கினூர் புலியின்றேலே மாமணி நாகங்கச்சா
முடக்கினூர் முகிழ்வெண்டிங்கள் மொய்சடைக் கற்றை தன்மேல்
தொடக்கினூர் தொண்டைச்செவ்வாய்த் துடியிடைப் பரவையல்குல்
அடக்கினூர் கெடிலவேலி யதிகைவீ ரட்டனூரே. 269

269. புலித்தோலே உடுத்தார் :- 'புலியதளே யுடையாடை போற்றினூனே' (6. 50. 1). 'துணி புலித்தோலினே யாடை யுடையாக் கொண்டார்' (6. 96. 7). மாமணிநாகம் கச்சா முடக்கினூர் :- 'நாகங்கொப்பளித்தகையர்' (246). சடைமேல் திங்கள் தொடக்குண்ணச் செய்தார். தொண்டை - கொவ்வைப் பழம். ஆதொண்டங்கனி என்றலும் உண்டு. தொண்டைச்...... அடக்கினூர் :- உவமைத்தொகை மூன்றும் ஒரு சொல் நீர்மை யுற்று நின்ற நிலேக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகை. 'பெருந்தோட் சிறுநுசுப்பிற் பேரமர்க்கட்பேதை' 'பெருந்தோட் பல் யாகசாலே முதுகுடுமிப் பெருவழுதி' என்பன காட்டி மூவகையாகக் கொள்ளலாம் என்ற சேனுவரையருரையை நோக்குக. (தொல். சொல். 26) துடியிடைப் பரவையல்குல் :- 248; 254. அடக்குதல் :- இடப்பாற்கொண்டிருத்தல். கெடில நதியே வேலி.

சூடினார் கங்கையாளைச் சூடிய துழனிகேட்டங்
கூடினா ணங்கையாளு மூடலை யொழிக்கவேண்டிப்
பாடினார் சாமவேதம் பாடிய பாணியாலே
ஆடினார் கெடிலவேலி யதிகைவீ ரட்டனாரே. 270

கொம்பினார் குழைத்தவேனற் கோமகன் கோலநீர்மை
நம்பினார் காணலாகா வகையதோர் நடலைசெய்தார்
வெம்பினார் மதில்கண்மூன்றும் வில்லிடை யெரித்துவீழ்த்த
அம்பினார் கெடிலவேலி யதிகைவீ ரட்டனாரே. 271

270. திருவதிகை வீரட்டானேசுவரர் தம் தலைமேற் கங்கா நாயகியைச் சூடினார். அச்சூட்டொலி கேட்டதோ இல்லையோ இடப்பங்கின் நாயகி ஊடினாள். அவ்வூடலைத் தீர்க்கலுற்றுச் சாமவேத கீதம்பாடினார். பாடிய பாணிக்குத் தக ஆடினார். (அப் பாடலும் ஆடலும் திரிபுரசுந்தரியார் திருவுள்ளம் அவ் வூடலின் திரிபுற்றதோ உற்றிலதோ யாரறிவார் ?) உலகுயிர்கள் கூடியுவத்தல் கொண்டு ஊடிய தகன்றதாகத் துணியலாம். போகியாயிருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதலும் இமவான் பெற்ற பெண்ணிணைப் புணர்ந்து உயிர்க்குப் பேரின்பம் அளித் தலும் உடையன் அம்முதல்வன். இவ்வுலக மெல்லாம் சக்தியும் சிவமும் ஆயதன்மை. இவ்வாழ்க்கையெல்லாம் அவளால் வந்த ஆக்கம் (சித்தியார்). ' எம்பெருமான் ஒருவாது உமைமாதோடு இருத்தலினால் உறுகாதலின் ஆணொடு பெண்கள் பிணைந்து இருநீர்ப்புவியாதிய எவ்வுலகும் இன்புற்று உயிர் ஈண்டியது. (தணிகைப். நாரதனருள்பெறு. 70).

271. வெம்பினார் - சினவெப்பம் உற்ற திரிபுரத்தசுரர். வில் - மேருவில். வீழ்த்த - விழச்செய்த. அம்பினார் :- ' கடி மதில்கள் மூன்றினையும் பொடியா எய்த் அம்பனே ' (6. 44. 5) ' மாருதமால் எரி மூன்றும் வாய் அம்பீர்க்காம் சரத்தான் ' (6. 50. 9). அதிகை வீரட்டனார் நடலை செய்தார் என்று (முன்பின்னாக) இயைத்துப் பொருள்கொள்க. ' கொம்பினார் ' ' நம்பினார் ' இரண்டும் இரதியைக் குறித்தன என்று கொள்வாரும் உளர். கொம்பு :- ஊதும் இசைக் கருவியுமாம். கொம்பு கொம்பினார் எனப்பட்டது; தென்றல் தென்றலார் என்பதுபோல.

மறிபடக் கிடந்தகையர் வளரிள மங்கை பாகம்
சேறிபடக் கிடந்தசெக்கர்ச் செழுமதிக் கொழுந்துசூடிப்
பொறிபடக் கிடந்தநாகம் புகையுமிழ்ந் தழலவீக்கிக்
கிறிபட நடப்பர்போலுங் கெடிலவீ ரட்டனாரே. 272

கொம்புகள் தளிர்த்த வேனிற்காலம். குழைத்தல் - தளிர்த்தல். சூடாமணி நிகண்டு 4 :- 47. கொம்பினார் - பூங்கொம்பு போன்ற மகளிர். கொம்பினார் குழை ( - இளகு)தலைச் செய்த கோமகன். வேனற்கோ - வேனிற்றலைவன். கோமகன் - கோவாகிய மகன், கொம்பினாற் குழைத்தான் - கொம்பு நல்வேனிலவனைக் குழைய முறுவல் செய்தான் சிவன். ' வேனில் வேள் '. கோலம் - அழகு. நீர்மை - இயல்பு, தன்மை. நம்பினார் - விரும்பி விடுத்த மாலயன் முதலோர். (மன்மதனைக்) காணலாகாத வகையதோர் நடலை செய்தது - தீவிழியால் எரித்தது. நடலை - துன்பம். ' நரகத்தில் இடர்ப்படோம் நடலையில்லோம் ' (6. 98. 1). காமத் தார்க்கு எட்டாதவர் முதல்வர். பற்று அறுதவராற் காண லாகாதவர் முதல்வர் என்றும் பொருத்தலாம். ' வானவர்க்கும் காண்பரிதாகி நின்றதுள்ளல் ' (419) ' காண்டற்கரிய கடவுள் ' ' கருதுவார்க்கு ஆற்ற எளியான் '.

272. மறி - மான் கன்று. அம்பிகையின் இளமை என்றும் குன்றாது வளர்வது. ' எழுபெரும் புவனம் முழுதொருங்குதவும் இறைவி என்று மறை கையெடுத்தார்க்கவும் இடைநுடங்குமட நடையிளங் குமரிஎன இருந்த கனகள்வி ' (முத்துக்குமாரசாமிப் பிள்ளைத்தமிழ். 4) ' அலைப்பாய் புனற்றெண் கடல் வைப்பும் அகிலாண்டமும்பன் முறையீன்றும் அழகுமுதிர முதிராஎன் அம்மை அமுதுசூற் கொண்ட முலைப்பால் நாறுஞ் செங்கனிவாய் முத்தம் தருக முத்தமே ' (ஷை. 45). ' உலகமோரேழும் பல முறை பயந்தும் முதிரா இளமுலை முற்றிழை மடந்தை ' (காசிக் கலம்பகம். 38). ' விருத்தாம்பிகை ' என்றது ஒரு வரலாறு பற்றியது. சேறி - செறிவு. செக்கர் - செவ்வானம். மதிக் கொழுந்து - பிறை. பொறி - புள்ளி. கிறி - பொய். நடத்தம் சொரூபத்தை நோக்கப் பொய்யாகும்.

நரிவரால் கவ்வச்சென்று நற்றசை யிழந்ததோத்த
தெரிவரான் மால்கொள்சிந்தை தீர்ப்பதோர் சிந்தைசெய்வார்
வரிவரா லுகளுந்தெண்ணீர்க் கழனிசூழ் பழனவேலி
அரிவரால் வயல்கள்சூழ்ந்த வதிகைவீ ரட்டனாரே. 273

புள்ளலைத் துண்டவோட்டி லுண்டுபோய்ப் பலாசங்கொம்பின்
சுள்ளலைச் சுடலைவெண்ணீ றணிந்தவர் மணிவெள்ளேற்றுத்
துள்ளலைப் பாகன்றன்னைத் தொடர்ந்திங்கே கிடக்கின்றேனை
அள்ளலைக் கடப்பித்தாளு மதிகைவீ ரட்டனாரே. 274

273. நரி நீரைக்கடப்புழிக்கண்ட வராலைக் கவ்வச்சென்று, தன் வாயிலிருந்த நல்ல தசையை (ஊனை) இழந்ததைப் போன்ற வற்றைத் தெரிவர் (- ஆராய்ந்துணர்வோர்). தெரிவாருடைய சிந்தை. மால் கோள் சிந்தை தீர்ப்பது - மயக்கம் கொண்ட சிந்தனையைப் போக்குவதொரு சிந்தை செய்வார் வீரட்டனார். சிவபெருமான் உயிர்க்குள் இருந்து அருள்கின்றதை உணர்த் திற்று. ' அகத்துறு நோய்க்கு உள்ளினர் அன்றி அதனைச் சகத்தவரும் காண்பரோதான் ' (திருவருட்பயன்) ' குருவான் ஞானநிட்டை அடைந்து நாதன்தாள் அடைவர் ', ' ஆரியனும் ஆசான் வந்து அருளால் தோன்ற அடிஞானம் ஆன்மாவில் தோன்றும்; தோன்றத் தூரியனும் சிவன் தோன்றும். ' ' எரி பெருக்குவர் அவ்வெரி யீசன துருவருக்கம தாவ துணர்கிலார் அரியயற் கரியானை அயர்த்துப்போய் நரிவிருத்தமதாகுவர் நாடரே. ' (5. 100. 7) ஒத்தறெரிவர் - (ஒத்தல்தெரிவர்) என் றிருந்து. எழுதினோராலே லகரம் நகரலுற்றதாகக் கொண் டுரைத்தல் பொருந்தும். வரால் கவ்வல் :- பாசப்பற்று. நற் றசை :- உள்ளுயிர்க்குயிராய்த் திகழும் சிவம். இழந்தது ஒத் தலைத் தெரிவாரது சிந்தை, மால் கோள் சிந்தை. அதைத் தீர்ப் பதோர் சிந்தை செய்வார் வீரட்டனார். அரிவரால் - அரிபவரால். அரிபவர்களோடு என்க. ஆல் உருபு உடனிகழ்ச்சிப் பொருட்டு. அது ' தூங்குகையா னோங்கு நடைய ' என்புழிப்போல்வது.

274. கழுகு முதலிய புட்கள் அலைத்து உண்ட ஓடு. பிரம கபாலம். தன் பசியை நீக்கிக்கொள்ள அன்னப் பறவையை அலைத்து அதன்மேல் ஏறிச் செலுத்தி உண்ட வாய் கொண்ட தலைப் பகுதியாகிய கபாலம் என வலிந்துரைத்தாருமுளர்.

நீறிட்ட நுதலர்வேலை நீலஞ்சேர் கண்டர்மாதர்
கூறிட்ட மெய்யராகிக் கூறினு ராறுநான்கும்
கீறிட்ட திங்கள்சூடிக் கிளர்தரு சடையினுள்ளால்
ஆறிட்டு முடிப்பர்போலு மதிகைவீ ரட்டனாரே. 275

காணிலார் கருத்தில்வாரார் திருத்தலார் பொருத்தலாகார்
ஏணிலா ரிறப்புமில்லார் பிறப்பிலார் துறக்கலாகார்
நாணிலா ரைவரோடு மிட்டெனை விரவிவைத்தார்
ஆணலார் பெண்ணுமல்லா ரதிகைவீ ரட்டனாரே. 276

..........................................................................

ஓட்டில் உண்டவர் வீரட்டனார். பலாசம் - முள் முருக்கமரம். சுள்ளல் - சுள்ளி. மணி ஏறு. வெள்ளேறு. ஏற்றுத்துள்ளல். மணி, அழகும் ஏற்றின் கழுத்திற் கட்டிய மணியும் ஆம். 'நரை வெள்ளே றொன்றுடையான்' ஏற்றின்மேல் துள்ளி ஏறும் பெரு மானைத் துள்ளல் என்றார். 'உட்புண்டரீகத்திருந்த வள்ளலை வானவர்க்கும் காண்பரிதாகி நின்ற துள்ளலைத் துருத்தியானைத் தொண்டனேன் கண்டவாறே' (419) என்று பின்னரும் இறை வனைத் 'துள்ளல்' என்றதுணர்க. துள்ளி ஏறுவது பற்றித் துள்ளல். செலுத்துதல் பற்றிப் பாகன். பாகன்றன்னை :- 'வீரட்டனார்' ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவி நோக்கிய ஒருமை. அள்ளல் :- அளறு. (நரகம்.) 'அள்ளலைக் கடக்க வேண்டில் அரனையே நினைமின் நீர்கள்' (419) 'அள்ளற் பரப்பின் இனைவோரும்.........இமையாரும்.........மானிடாதி...... உயிரும்' 'அள்ளல் அழுந்தும் பாதகத்தோர்' (தணிகை. அகத்தியனருள். 296. 334) 'ஊன் உண்ண அண்ணுத்தல் செய்யாது அளறு' (குறள்).

275. திருநீறு இட்ட நெற்றியர். பாற்கடலினது நீலநிற நஞ்சடைந்த கண்டத்தர். மாதியலும் பாதியர். அங்கம் ஆறும் அருமறை நான்கும் கூறியவர். கீறியிட்டாற் போன்ற பிறையைச் சூடிக் கிளறும் சடைக்குள்ளே கங்கையாற்றையிட்டு (அச்சடையை) முடிப்பர். பூவைக் கொண்டையுள் வைத்து முடிப்பதுபோல அத்துணை எளிய செயல் என்றபடி.

276. காணிலார் - காண்டல் இல்லாதவர். காட்சிக்கு அரியர். 'நோக்கரிய நோக்கு' கருத்தில் வாரார் - கருத்திற்கு

தீர்த்தமா மலையைநோக்கிச் செருவலி யரக்கன்சென்று
பேர்த்தலும் பேதையஞ்சப் பெருவிர லதனையூன்றிச்
சீர்த்தமா முடிகள்பத்துஞ் சிதறுவித் தவனையன்று
ஆர்த்தவா யலறவைத்தா ரதிகைவீ ரட்டனுரே. 277

திருச்சிற்றம்பலம்

எட்டாதவர். 'மாற்றம் மனம்கழிய நின்ற மறையோன்' (திருவாசகம்). 'சுருதியே .. . . .. யார் காண்பார்' (தாயுமானவர். ஆசையெனும். 18). திருத்தலார் - திருத்துவதற்கு இயலாதவர். பொருத்தல் ஆகார் - பொருந்தச் செய்தற்கும் ஒல்லாதவர். ஏண் இலார் - இந்நிலை என எந்நிலையும் இல்லாதவர். 'இவ் வண்ணத்தன் இவன் இறைவன் என்று எழுதிக்காட்டொணுதே' 'இங்ஙன் இருந்தது என்று எவ்வண்ணம் சொல்லுகேன்' (திருவுந்தியார். 3) ஏண் - நிலை. 'உற்ற ஆக்கையின் உறு பொருள் நறுமலர் எழுதரு நாற்றம்போல் பற்றலாவதோர் நிலை யிலாப் பரம்பொருள்'. திருவாசகம் (கந்த. மார்க்கண்டேயப். 65). இறப்பும் பிறப்பும் இலார் :- என்றும் (இழவார்) உள்ளார். 'போக்கும் வரவும் புணர்வும் இலாப் புண்ணியன்' (திருவாச கம்). துறக்கல் ஆகார் - உயிர்க்குயிராயிருத்தலால் விட்டு ஒழிக்கப்படார். 'ஆணல்லை' (6. 45. 9). நாண் - நாணம். ஐவர் - 260, 672, 750.

277. தீர்த்தம் - திருவருள் உருவமுடைய தூய நீர். மலை - கயிலை. செரு - போர். பேதை - உமாதேவியார். சீர்த்த - கனத்த. சிதறுவித்தல் - சிதறச்செய்தல். ஆர்த்த - கதறிய. ஒவ்வொரு தலைக்கும் ஒவ்வொன்றுகப் பொருத்திய. அலற - கதற, அழ. ஆரவாரஞ்செய்ய.

அப்பொழுதே யம்பலத்து ளாடுகின்ற கழல்வணங்கி
யருள்முன் பெற்றுப்
பொய்ப்பிறவிப் பிணியோட்டுந் திருவீதி புரண்டுவலங்
கொண்டு போந்தே
யெப்புவனங் களுநிறைந்த திருப்பதியி னெல்லையினை
யிறைஞ்சி யேத்திச்
செப்பரிய பெருமையினுர் திருநாறை யூர்பணிந்து
பாடிச் செல்வார்,

## 28 திருவதிகைவீரட்டானம்

### திருப்பதிக வரலாறு

தெரிவரிய பெருந்தகைமைத் திருநாவுக்கரசு நாயனுர் திருவதிகை வீரட்டானத்து அமுதைப் பல செந்தமிழ்ப் பாட்டுப் பரிவுறு சிறப்பிற் பாடிப் பணிசெய்தருளினுர். அவற்றுள் ஒன்று இத் திருப்பதிகம். (பெரிய. 144)

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

முன்பெலா மிளையகால மூர்த்தியை நினையாதோடிக்
கண்கண விருமிநாளுங் கருத்தழிந் தருத்தமின்றிப்
பின்பக லுணங்கலட்டும் பேதைமார் போன்றேனுள்ளம்
அன்பனுய் வாழமாட்டே னதிகைவீ ரட்டனீரே. 278

278. முன்பு - இளமையில். இளைய காலமாகிய முன்பெலாம். இது முதுமையிற்பாடியது. எண்பத்தோன்ருண்டிருந்த உண்மைக்கு ஈதொரு சான்று. 'விளைக்கின்ற வினையை நோக்கி வெண்மயிர் விரவி மேலும் முளைக்கின்ற வினையைப் போக முயல்கிலேன்' (761) எனப் பின்னுள்ளதும் உணர்க. அப்பர் திருவுருவத்தை அருளநுபவம் மிக்க முதுமையைத் தோற்றும் வண்ணம் அமைப்பதே பொருத்தம். மூர்த்தி :- திரிமூர்த்திக்கும் மேலான சிவமூர்த்தி. ஓடி - பெண்மயலில் விரைந்து. கண்கண - கணீல் கணீல் என்று. இருமி - இருமல் செய்து. நாளும் - அவ்விளமை கழியும் அளவும். கருத்து அழிந்து - கருதற்பாலதாய சிவசிந்தனையே இல்லாது. அருத்தம்- பொருளே. முன் பகலிற் சமைக்காத குற்றத்தோடு. உணங்கல் (- வற்றல்) அட்டுங் குற்றத்தையும் செய்யும் அறிவிலாப் பெண்டிரை ஒத்தேன். கருத்தழிந்து மூர்த்தியை நினையாத குற்றத்தோடு, இளமைக் குறும்புகளைச் செய்யும் குற்றத்தையும் புரிந்தேன். அன்புருவான உள்ளத்தேனுகி வாழும் ஆற்றல் இல்லேன்.

கறைப்பெருங் கண்டத்தானே காய்கதிர் நமனையஞ்சி
நிறைப்பெருங் கடலுங்கண்டே னீள்வரை யுச்சிகண்டேன்
பிறைப்பெருஞ் சென்னியானே பிஞ்ஞகா விவையனைத்தும்
அறுப்பதோ ருபாயங்காணே னதிகைவீ ரட்டனீரே, 279

நாதனு ரேன்னநாளு நடுங்கின ராகித்தங்கள்
ஏதங்க ளறியமாட்டா ரிணையடி தொழுதோமென்பார்
ஆதனு னவனேன்றெள்கி யதிகைவீ ரட்டனேநின்
பாதநான் பரவாதுய்க்கும் பழவினைப் பரிசிலேனே. 280

279. கறை - நஞ்சின் கறுப்பு. 'நாளென ஒன்று போற் காட்டி உயிரீரும் வாள்'. காய்தல் கதிர்த்த நமன்; சினம் மிக்கவன் என்றுமாம். 'பரவையிடை மூழ்கியும்.............. மலைநுழைவு புக்கியும்.........வீறு சித்திசெய்தும் ஞானம் அலது கதி கூடுமோ' (தாயுமானவர். 36) என்றதாகக் கொண்டு, இறவாது பேரின்ப வீட்டில் அழியாத வாழ்வுறக் கடலாட்டும் மலைக்குகைத் தவமும் மேற்கொண்டேன். இறப்பினை அஞ்சி விருத்திராசுரனைப் போலக் கடற்குள் ஒளிந்திடினும் மலை உச்சியிலேறிடினும் இறவாமை பிறவாது என்றலும் கூடும். பிறையைச் சூடிய பெருந்தலையன். பிஞ்ஞகா - கோலக் குழற் சடையாய். இவை அனைத்தும் அறுப்பதோர் உபாயம் :- பிறப் பிறப்பச்சம் முதலிய துன்பம் எல்லாம் போக்கும் வழி.

280. திருவதிகை வீரட்டானேசுவரரே, கற்றல் கேட்ட லுடைய பெரியோர்களை நோக்கி 'நீங்கள் எங்கள் நாதனுர்' என்று சொல்லக் கேட்டலும் எப்பொழுதும் நடுங்குவர். தம்மைத் தலைவர் என்று எண்ணுதல் முதலிய குற்றங்களைச் செய்து அறிந்தவரே அல்லர். தாம் அடிமையர் என்பதை மறவாமல் இணையடி தொழுதோம் என்றே சொல்லுவர். அவர் நிலை அது. என் நிலையோ இது :- ஆதன் (அறிவிலி) நான் அவன் என்று எள்கித் தேவரீர் பாதங்களைப் பரவாது காலம்போக்கும் பண்டைத் தீவினைப் பரிசிலையுடையேன். ஏதங்கள் - ஈண்டுப் பழவினையும் எதிர்வினையும். 'தங்கள் மேலை ஏதங்கள் தீரநின்றுர்' (348) தங்களைத் தலைவரேன்னக் கேட்டலும் நடுங்கும் பேற்றியராய் யானெனதேன்னும் செருக்கற்று, வினையேருவகை ஏகனுகி இறைபணி நின்று, இடைவிடாது திருவடியிணையை மறவாது

சுடலைசேர் சுண்ணமெய்யர் சுரும்புண விரிந்தகொன்றைப்
படலைசே ரலங்கன்மார்பர் பழனஞ்சேர் கழனித்தெங்கின்
மடலைநீர் கிழியவோடி யதனிடை மணிகள்சிந்தும்
கெடிலவீ ரட்டமேய கிளர்சடை முடியனாரே. 281

மந்திர முள்ளதாக மறிகட லெழுநெய்யாக
இந்திரன் வேள்வித்தீயி லெழுந்ததோர் கொழுந்தின்வண்ணம்
சிந்திர மாகநோக்கித் தெருட்டுவார் தெருட்டவந்து
கந்திர முரலுஞ்சோலைக் கானலங் கெடிலத்தாரே. 282

தொழுதோம் என்பார் தலைவராகுந் தகுதியுடையோர் அனைவரும். நான் ஆதன் (- அறிவிலி). நானே நாதன் என்று எண்ணி இகழ்ந்து, நாதனாகிய நின் இணையடியை வாழ்த்தி வணங்காது கெடுகின்றேன். இவ்வாறு செலுத்துகின்றது என் பழவினைப் பரிசு. நான் அப்பழவினைப் பரிசிலை யுடையேனாதலின் உன் இணையடியைப் பரவுகிலேன். பழவினைப் பரிசிலை (ஏதங்களை) அறியா (இல்லா)தவராய் எல்லாம் சிவன் என்ன நின்று உன் இணையடிகளையே தொழும் சிவபுண்ணிய சீலர் ஆதலின், பிறர் (அடியர்) எல்லாரும் அப்பேறலரும் பேற்றினராயுளர்.

281. சுடலைசேர் சுண்ணம் - சுடலைப் பொடி. மெய்யர் - திருமேனியுடையவர். சுரும்பு - வண்டு. படலை - கொத்து. அலங்கல் - அசைதல். பழனம் - நன்செய். கழனி - விளைவு உடைய பகுதி. தெங்கின் மடலைக் கெடிலநதி நீர் ஓடிக் கிழிக்க அதனிடையிருந்த மணிகள் சிந்தும் வளம் உடைய திருவீரட்டானம். மேய - மேவிய; விரும்பித் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள. கிளர்தல் - விளங்குதல்.

282. இந்திரன் வேள்வியாகப், பாற்கடலைக் கடைந்ததைக் குறித்தருளினார். அவன் மகபதி அல்லனோ ? அவன் செய்யும் அனைத்தும் மகமே போலும். அம் மகத்துக்கு மந்திரமும் கடலும் பிறவும் உபகரணங்கள். அவ்வேள்வித் தீயில் எழுந்த கொழுந்து நஞ்சு. அதன் வண்ணம் வெண்மை. சிந்திரம் - சிந்தூரம் ; செய்யது. சித்திரம் என்பது எதுகை நோக்கி மெலித்ததுமாம். தெருட்டுவார் - அறிவுறுத்துவார். தெருட்ட - அறிவுறுத்த. தெருட்ட வந்து கெடிலத்தார் என்க. வந்து

மைஞ்ஞல மனையகண் ணாள் பங்கன்மா மலையையோடி
மெய்ஞ்ஞரம் புதிரம்பில்க விசைதணிந் தரக்கன்வீழ்ந்து
கைஞ்ஞரம் பெழுவிக்கொண்டு காதலா லினிதுசொன்ன
கிஞ்ஞரங் கேட்டுகந்தார் கெடிலவீ ரட்டனாரே. 283

திருச்சிற்றம்பலம்

என்பது வினைக்குறிப்புக் கொண்டது. தம் பரத்துவத்தை உணர்த்துவதே தெருட்டல் எனப்பட்டது. (7. 64. 10). தணிகை. களவு. 304 பார்க்க. கந்தரம் - மேகம். எதுகை நோக்கித் திரித்தது. முரல - ஒலிக்க. (மழையொலி, இடியொலி). வேள்விக்குரிய மந்திரம் அக் கடலில் இட்டுள்ளதாகிய மந்தர மலையே ஆக நெய் அதில் எழுவதேயாக இந்திரன் செய்த (கடல் கடைதலாகிய) வேள்வியின் தீயில் எழுந்ததொரு கொழுந்து நஞ்சு எனலும் பொருந்தும்.

283. மைந்நலம், மெய்ந்நரம்பு, கைந்நரம்பு என்பவற்றின் போலி. 581. 774 பார்க்க. இதிலும் ஈற்றடியிற் ' கிஞ்ஞரம் ' என்றிருந்ததேயாகும். 739 போல ஈற்றடி எதுகை வேறுபட் டிருத்தலும் இசைதற் குரித்தே ஆயினும், ' மைஞ்ஞலம் பருகிய கருங்கண் மாமணிப் பைஞ்ஞலம் பருகிய பரும வல்குலார் மெய்ஞ்ஞலம் விஞ்சையர் விரவ மேலெலாங் கிஞ்ஞர மிதுனங்கள் கிளர்ந்து தோன்றுமே '. (சூளாமணி. துறவு. 60). என்று பாடியவாறு பாடியிருத்தலும் மறுக்கப்படாதது. மெய்ந் நரம்பு - உடலின் நரம்புகள். உதிரம் - குருதி. பில்க - சிந்த. விசை - எடுத்த வேகம். கைநரம்பு - யாழ். எழுவி - இசை யெழுப்பி. காதல் - பத்தி. கின்னரம் :- ' விஞ்சையர் கிந்நரம் பயில் பாடல் ' (கந்த. திருக்கைலாயப். 9). கின்னர யாழ் என்றலும் உண்டு.

---

பெரியபெரு மாட்டியுடன் றோணி மீது
பேணிவீற் றிருந்தருளும் பிரான்முன் னின்று
பரிவுறுசெந் தமிழ்மாலை பத்தி யோடும்
பார்கொண்டு மூடியெனும் பதிகம் போற்றி
யரியவகை புறம்போந்து பிள்ளை யார்தந்
திருமடத்தி லெழுந்தருளி யமுது செய்து
மருவியநண் புறுகேண்மை யற்றை நாள்போல்
வளர்ந்தோங்க வுடன்பலநாள் வைகு நாளில்.

## 29 திருச்செம்பொன்பள்ளி

### திருப்பதிக வரலாறு

திருநாவுக்கரசு நாயனார் திருநனிபள்ளி முதலான தலங்களை வழிபட்டுத் திருச்செம்பொன்பள்ளியை அடைந்து பரவிப் பாடியது இத் திருப்பதிகம். (புராணம். 190).

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

ஊனினு ளுயிரைவாட்டி யுணர்வினார்க் கெளியராகி
வானினுள் வானவர்க்கு மறியலா காதவஞ்சர்
நானெனிற் றானேயென்னு ஞானத்தார் பத்தர்நெஞ்சுள்
தேனுமின் னமுதுமானார் திருச்செம்பொன் பள்ளியாரே. 284

284. ஊன் - உடம்பு. வாட்டி - வாடச்செய்து. தவம் விரதம் முதலியவற்றால் வாட்டுதல். மனம் முதலிய அந்தக் கரணங்கள் ஐம்பொறிவழி போகாது நின்று வினை மாசு தீர்ந்து தூயவாதற் பொருட்டுக் காக்கப்படும் விரதங்களால் உண்டி சுருக்கலும் கோடைக்கண் வெயினிலை நிற்றலும் மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றலும் முதலிய தவச் செயல்கள் ஊனின் உள்ளுயிரை வாட்டுவன. வாட்டிஞற்றான் ஒன்றியிருந்து உணரும் நிலை எய்தும். அவ்வுணர்வினார்க்கே திருச்செம்பொன் பள்ளியார் எளியர். வானிலேயுள்ள வானவர்க்கும் பேதமாக வைத்துணரலாகாத வன்புடையவர். சீவபோதம் முனைத்தால் சிவபோதம் வேறு முதலாயிருக்கும் என்றுணர்ந்து சிவபோதத் தினராயிருக்கும் சிவஞானத்தார், சிவபத்தர் உள்ளத்துள் இனிய தேனும் இனிய அமுதும் போல் இனிப்பவர். எளிதிலுறும் தேன் அரிதிற் கடைந்தெடுக்கும் அமுது என்று கொண்டு அவ்விரு வர்க்கும் நிரல் நிறையாக்கிக் கூறுதலும் ஏற்கும்.

நோய்யவர் விழுமியாரு நூலினுண் ணெறியைக்காட்டும்
மெய்யவர் பொய்யுமில்லா ருடலெனு மிடிஞ்சிறன்னில்
நெய்யமர் திரியுமாகி நெஞ்சத்துள் விளக்குமாகிச்
செய்யவர் கரியகண்டர் திருச்செம்பொன் பள்ளியாரே. 285

வெள்ளியர் கரியர்செய்யர் விண்ணவ ரவர்கணெஞ்சுள்
ஒள்ளிய ருழியூழி யுலகம தேத்தநின்ற
பள்ளியர் நெஞ்சத்துள்ளார் பஞ்சமம் பாடியாடும்
தெள்ளியார் கள்ளந்தீர்ப்பார் திருச்செம்பொன் பள்ளியாரே.

---

285. நோய்மையுடையவர். நோய்மை X திண்மை. விழுமியார் - சீர்மை (நன்மை) உடையவர். 'விழுமியார்கள் நின் கழல் பாடலால வாயிலாய்' (திருமுறை. 3) நூல் - வேதாகமங்கள். நுண்ணெறி - நுண்பொருள் வழி. பொருளின் நுட்பம் நூலின்மேல் ஏற்றப்பட்டது. மெய்யர் - குருவாகுந் திருமேனி கொண்டருள்பவர். நூலின் நுண்ணெறியைக் காட்டும் மெய் குருவின் திருமேனியேயாகும். 'ஆரணம் ஆகமங்கள் அருளினால் உருவுகொண்டு காரணன் அருளான் ஆகில் கதிப்பவர் இல்லை' (சித்தியார்). பொய் :- பசுஞானம், பாசஞானம், பாசம். பொய்யும் இல்லார் :- 'மெய்ப்பொருள்.' இடிஞ்சில் - விளக்குத்தகளி. 'நெய்விட்டிலாத இடிஞ்சில்' (திருமந்திரம் 503) உடல் எனும் இடிஞ்சிலில் நெய் அமர் திரியாயும் மதிப்பவர் மனமண விளக்காயும் ஒளிர்கின்ற செவ்வண்ணத்தர். இடிந்த+இல்=இடிந்தவில். அதன் மரூஉ 'இடிஞ்சில்' என்பது. குற்றிற்சுவர் என்றது 'குட்டிச்சுவர்' என மருவிற்று. குறு+இல்=குற்றில். 'இடுஞ்சில்' (நெய் இடும் ஓட்டாஞ்சில்லி) 'இடிஞ்சில்' என மருவியது. இரண்டும் வெவ்வேறு.

286. வெள்ளியர் - வெண்ணிறத்தர். கரியர் - கருநிறத்தர். செய்யர் - செந்நிறத்தர். (கற்குடி. 2) விண்ணவர்கள் நெஞ்சில் ஒளிர்பவர். ஒண்மை - ஒளி. ஊழி ஊழி உலகமது ஏத்தநின்ற பள்ளியர் :- ஊழிதோறும் உலகம் தொழநின்ற பாற்கடற் பள்ளியில் அறிதுயில் புரியும் திருமாலினுடைய (நெஞ்சில் உள்ளவர்). பஞ்சமம் (- பண்சமம். பஞ்சம சுருதி பற்றியது) ஒரு பண். தெள்ளியார் - ஞானிகளது. கள்ளம் - உள்ளிருள். (கருவுளம் - கர்வுளம் - கருளம் - கர்ளம் - கள்ளம்) வெள்உளம் வெள்ளம்.

தந்தையுந் தாயுமாகித் தானவன் ஞானமூர்த்தி
முந்திய தேவர்கூடி முறைமுறை யிருக்குச்சொல்லி
எந்தைநீ சரணமென்றங் கிமையவர் பரவியேத்தச்
சிந்தையுட் சிவமதானார் திருச்செம்பொன் பள்ளியாரே.　287

ஆறுடைச் சடையர்போலு மன்பருக் கன்பர்போலும்
கூறுடை மெய்யர்போலுங் கோளர வரையர்போலும்
நீறுடை யழகர்போலு நெய்தலே கமழுநீர்மைச்
சேறுடைக் கமலவேலித் திருச்செம்பொன் பள்ளியாரே.　288

ஞாலமு மறியவேண்டி னன்றெனா வாழலுற்றீர்
காலமுங் கழியலான கள்ளத்தை யொழியகில்லீர்
கோலமும் வேண்டாவார்வச் செற்றங்கள் குரோதநீக்கில்
சீலமுந் நோன்புமாவார் திருச்செம்பொன் பள்ளியாரே.　289

'கள்ளரோ புகுந்தீர் என்னக் கலந்துதான் நோக்கிநக்கு வெள்ளரோம் என்று நக்கார் விளங்கிளம் பிறையனாரே' (734).

287. தந்தையும் தாயும் தானம் புரிபவன். 52. குறிப்பு (6. 46. 7) ஞானமூர்த்தி:- நற்பதத்தார் நற்பதமே ஞானமூர்த்தி' என்றதால், பதமுத்திகளின் மேலாய பரமுத்தியில் விளங்கும் பரசொரூபம் ஞானமயம்; துரியம். அஃது அருணிலை. அதுவே ஆனந்த மூர்த்தியாய்த் துரியாதீதமாகும். இருக்கு - நான் மறையுள் ஒன்று. பொதுவாய் வேதமெனலுமுண்டு. எந்தை! நீயே சரணம் என்று பரவி ஏத்தும் இமையவர் சிந்தையுள்ளே சிவமானவர்.

288. கங்கைச்சடையினர். கசிந்த தொண்டர்க்கு அன்பே சிவமாய் அருள்பவர். மாதியலும் பாதியர். வலிய அரவக் கச்சுடையவர். திருவெண்ணீற்றழகர். நெய்தற் பூக்கள் மணம் கமழும் தன்மையை உற்ற சேறுடைய தாமரை வேலியைக் கொண்ட திருச்செம்பொன்பள்ளி.

289. உலகத்தார்க்கு ஈது ஓர் உபதேசம் ஞாலம் - உலகம். நாலம் (தொங்குவது) என்பதன் மரூஉ. ஈர்ப்பாற்றலால் ஒவ்வோருலகும் வானில் உலவுதலை உணர்வோர்க்கு இப்பெயர்ப் பொருத்தம் விளங்கும். நன்று-நல்லது. பெரிது என்றும் ஆம். காலமும் கழியலான கள்ளத்தை ஒழியகில்லீர் :- 'களவு

புரிகாலே நேசஞ்செய்ய விருந்தபுண் டரீகத்தாரும்
எரிகாலே மூன்றுமாகி யிமையவர் தொழநின்ருரும்
தெரிகாலே மூன்றுசந்தி தியானித்து வணங்கநின்று
திரிகாலங் கண்டவெந்தை திருச்செம்பொன் பள்ளியாரே.

படாததோர் காலம் காண்பான் கறைக்கணிக்கின்றேன்' (31). 'பிறக்கணிச்சடை யெம்பெருமான் என்று கறைக்கணித்தவர் கண்ட வணக்கத்தாய் உறக்கணித்துருகாமனத்தார்களைப் புறக் கணித்திடும் புத்தூர்ப் புனிதரே' (561. 2). கறை - குற்றம். கணித்தல் - கணக்கிடுதல். 'பிழை கணித்தல்' 'பேழ் கணித்து' (பெரிய. அப்பர்). 'பிற்பால் நின்று பேழ்கணித் தால்' (திருவாசகம்). 'பேழ்கணிக்க' (சுந்தரர்). 'திசை நோக்கிப் பேழ்கணித்து' (திருவிசைப்பா). 'பேகணியா நின்றேன்' (திருவாய் மொழியுரை. 9. 4. 4) பேகணிப்பு. (ஷை. 9. 6. 6) 'பேகணித்து நின்றநிலை' (திருவிருத்தம் 99. உரை) 'பேழ்கணித்து இரங்குகின்ற' (கம்பர். கிட்கிந்தா. அநுமப். 12) அப்பர் பேழ்கணித்ததைச் சேக்கிழார் அறிவித்தருளினுர். அதனைக் 'கறைக்கணித்தவர்' (5. 61. 2) என்பது மெய்ப்பிக் கின்றது. பிழைகணிப்பார்க்கே காலம் களவுபடாது. வீண்காலப் போக்கே களவுபடல். பிழைகணியார்க்குத் தம்மையறியாதே கள வுபடும். இத் திருமுறையில் 31 ஆவது பாட்டில் 'கடைக்கணிக் கின்றேன்' என்றது 'கறைக்கணிக்கின்றேன்' என்றிருந்து பிழைபட்டதென்றும் தோன்றுகின்றது. ஆண்டவனைக் கடைக் கணிக்கின்றேன் என்று அடியார் சொல்லுவரோ? 'நம் களவு அறுத்து நின்று ஆண்டமை கசிந்துணர்ந்திருந்தேயும் உளகறுத் துனை நினைந்துளம் பெருங்களம் செய்ததும் இலை நெஞ்சே' (திருவாசகம். 39) என்றதால், களவறுதல் வேண்டுமென்பது விளங்கும். அக்களவு பலவற்றுள் காலக்களவும் ஒன்று. வீண் பொழுதுபோக்கு ஒழித்துச் சிவவழிபாடாற்றிப் பிறவி தீர்ந்து பேரின்புறுதல் வேண்டுமென்பது இரண்டாவதடியின் கருத்து. ஆர்வச்செற்றங்கள் குரோதம் நீக்கில், திருச்செம்பொன்பள்ளியர் சீலமும் ஆவார் நோன்பும் ஆவார். அவற்றை நீக்கவே அமையும். நீக்கற் பொருட்டு (எக்) கோலமும் வேண்டா. சீலம் - ஒழுக்கம். நோன்பு - தவவிரதங்கள். 390. பார்க்க.

290. புரிகாலே - விரும்புகின்ற காலத்தே. நேசம் - அன்பு. புண்டரீகத்தார் - உள்ளத் தாமரையிலுள்ளவர். (1) எரி

காருடைக் கொன்றைமாலை கதிர்மதி யரவினோடும்
நீருடைச் சடையுள்வைத்த நீதியார் நீதியுள்ளார்
பாரொடு விண்ணுமண்ணும் பதினெட்டுக் கணங்களேத்தச்
சீரொடு பாடலாளர் திருச்சேம்பொன் பள்ளியாரே. 291

ஓவாத மறைவல்லானு மோதநீர் வண்ணன்காணு
மூவாத பிறப்பிலாரு முனிகளா னார்களேத்தும்
பூவான மூன்றுமுந்நூற் றறுபது மாகுமெந்தை
தேவாதி தேவரென்றுந் திருச்சேம்பொன் பள்ளியாரே. 292

(தீ), (2) காலே (காற்று), (3) விண் (4) மண் (5) நீர் என்னும் ஐந்தும் ஆகி. ‘இருநிலனாய்த் தீயாகி நீரும் ஆகி இயமானனாய் எறியுங்காற்றும் ஆகி.........ஆகாசமாய் ........ நின்றவாறே’ (6. 94. 1). தேரிகாலே தியானித்து - ஆராய்கின்ற திருவடிகளையே நினைந்து வணங்கி. ஆயுங்கால் எனல் சிறவாது. ‘நுண்ணறிவால் வழிபாடுசெய்யுங் காலுடையான்’ (1 - 5. 4). முச்சந்தி :- ‘முட்டாத முச்சந்தி மூவாயிரவர்’ (7. 90. 7) ‘முப்போதும் முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வன்’ (64) சந்தி மூன்றிலும் தாபரம் நிறுத்திச் சகளிசெய்து இறைஞ்சு அகத்தியர்’ (7. 65. 5). திரிகாலம் - இறப்பு நிகழ்வு எதிர்வு.

291. கார் உடைக் கொன்றை :- ‘கண்ணிகார் நறுங் கொன்றை’ (புறம்). நீர் (கங்கையை) உடைய சடையுள் திங்களைப் பாம்பொடு வைத்த நீதியார். திங்களைப் பாம்பு விழுங்குமென்று அறிந்தும் உடன்வைத்தது நீதியன்று என்பது கவி மரபு பற்றிய கருத்து. ஓரணி குறித்துநின்றது. நீதியுள்ளவர். மண் விண் பாதலம் மூன்றும் பதினெண்கணங்களும் ஏத்தச் சீரொடு கூடிய பாடலாளர். (கலித்தொகை: கடவுள் வாழ்த்து) ‘ஏழிசையாய் இசைப்பயனாய்’.

292. ஓவாத - நீங்காத (அழியாத). ஓதம் - கடற்றிரை. மூவாத பிறப்பிலார் :- மூத்திறத்தலும் பிறத்தலும் இல்லாதவர். முனிகள் ஏத்தும் எந்தையாகிய தேவாதிதேவர் எக்காலத்தும் திருச்சேம்பொன்பள்ளியிலுள்ளார். முனிகள் திருச்சேம்பொன் பள்ளியில் தேவாதிதேவரை ஆயிரத்தெண்பது மலர்கள்

அங்கங்க ளாறுநான்கு மந்தணர்க் கருளிச்செய்து
சங்கங்கள் பாடவாடுஞ் சங்கரன் மலையெடுத்தான்
அங்கங்க ளுதிர்ந்துசோர வலறிட வடர்த்துநின்றும்
செங்கண்வெள் ளேறதேறுந் திருச்செம்பொன் பள்ளியாரே.

திருச்சிற்றம்பலம்

கொண்டு தூவி வழிபட்டனர். எந்தையும் அவ் ' வாசமலரெலாம் ஆனு ’ன். மூன்று முந்நூற்றறுபதும் பூ ஆனமையும் அம் மலர் ஆயிரத்தெண்பதும் தேவாதிதேவர் ஆனமையும் இதில் உணர்த்தப்பட்டன. (360×3=1080) ; 108×10=1080) முந்நூற்றறுபதுநாளும் மூன்று வேளையும் பூவானமையெல்லாம் ஆகும் எந்தை எனல் சிறவாது.

293. அங்கங்கள் என்றது கொண்டு அங்கியாகிய வேதங் களைக் கருதவைத்தார் நம் அப்பர். அங்கம் ஆறு. அங்கி நான்கு. அவற்றை அந்தணர்க்கு அருளிச் செய்தார். இறைவர் சங்கங்கள் (- பூதகணங்கள் முதலிய பலவும்) பாடச் சங்கரன் ஆடுவான். திருக்கயிலையை எடுத்த இராவணன், பெருமான் அடர்த்ததால் உறுப்புக்கள் உதிர்ந்து சோர அலறினன். செங் கண் வெள்ளேறு :- ' செங்கண் மால்விடை '.

ஆண்டவர செழுந்தருளக் கோலக் காவை
யவரோடுஞ் சென்றிறைஞ்சி யன்பு கொண்டு
மீண்டருளி ஞரவரும் விடைகொண் டிப்பால்
வேதநா யகர்விரும்பும் பதிக ளான
நீண்டகருப் பறியலூர் புன்கூர் நீடூர்
நீடுதிருக் குறுக்கைதிரு நின்றி யூருங்
காண்டகைய நனிபள்ளி முதலா நண்ணிக்
கண்ணுதலார் கழறொழுது கலந்து செல்வார்.

## 30 திருக்கழிப்பாலை

### திருப்பதிக வரலாறு

நாவினுக்கரசர், காவியங்கண்டர் மன்னும் கழிப்பாலையை நண்ணி, மண்ணோர் வாழ, மணவாளநம்பி கழலை வணங்கி, வன பவள வாய் திறந்து வானவர்க்குந் தானவனே என்கின்ருள் என்று தொடங்கும் திருப்பதிகத்துடன் பாடியருளிய அன்புறு வண்டமிழ் இத் திருப்பதிகம், (அப்பர் புராணம். 173),

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

நங்கையைப் பாகம்வைத்தார் ஞானத்தை நவிலவைத்தார்
அங்கையி லனலும்வைத்தா ரானையி னுரிவைவைத்தார்
தங்கையின் யாழும்வைத்தார் தாமரை மலரும்வைத்தார்
கங்கையைச் சடையுள்வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்பனுரே.

294. நங்கை - உமாதேவியார். பாகம் - இடப்பால். ஞானத்தை - சிவஞானத்தை. நவில - நாவாற் சொல்லியடிப் பட்டுப் பயில ; உபதேசிக்க. 300. அங்கை - அகங்கை. அழகிய கையுமாம். அனல் - தீ. உரி - தோல். தம் கையின் யாழும் வைத்தார் ' பண்ணேடு யாழ் வீணை பயின்ருய் போற்றி ' 329. (6. 57. 7.) :- 6. 35. 2. 4. 112. 7. தாமரை மலரும் வைத்தார் என்பது 'அந்தணனுகி ஆண்டுகொண்டருளி இந்திர ஞாலங்காட்டிய இயல்பு' (திருவாசகம். 2:-42-3). ' அந்தணனுய் அறைகூவி வீடருளும் அங்கருணை வார்கழலே ' (ஷை. 175) அந்தணன் (182) ' மறைபயில் அந்தணனுய் ஆண்டுகொண்ட திருவான தேவற்கே ' (228) ' உருநாம் அறிய ஓர் அந்தணனுய் ஆண்டுகொண்டான் ' (235) ' அந்தண னுகிவந்திங்கே அழகிய சேவடி காட்டி ' (357) 'அந்தணனுவதும் காட்டிவந்தாண்டாய்' (திருவாசகம். 373) என்றவாறு அந்தணனுதல் உண்மையின், அவர்க்குரிய அடையாளப் பூவாகிய தாமரையைக் கொண்டிருத் தல் உணர்த்திற்று. (பிங்கலந்தை. 730). ' அல்லியந் தாமரைத் தார் ஆரூரன் ' (7-22-10).

விண்ணினை விரும்பவைத்தார் வேள்வியை வேட்கவைத்தார்
பண்ணினைப் பாடவைத்தார் பத்தர்கள் பயிலவைத்தார்
மண்ணினைத் தாவநீண்ட மாலினுக் கருளும்வைத்தார்
கண்ணினை நெற்றிவைத்தார் கழிப்பாலைச் சேர்ப்பனாரே. 295

வாமனை வணங்கவைத்தார் வாயினை வாழ்த்தவைத்தார்
சோமனைச் சடைமேல்வைத்தார் சோதியுட் சோதிவைத்தார்
ஆமனெய் யாடவைத்தா ரன்பெனும் பாசம்வைத்தார்
காமனைக் காய்ந்தகண்ணார் கழிப்பாலைச் சேர்ப்பனாரே. 296

---

295. விண் - வீடு. துறக்கமும் பதமுத்திகளுக்கு இடமான யாவும் ஆம். ஒவ்வொன்றையும் விரும்பும் இயல்பு வெவ்வேறு பக்குவமுடைய உயிர்கட்குண்டு. வேள்வி - ஐவேள்வி. ' அங்கம் ஆறேடும் அருமறைகள் ஐவேள்வி ' (2. 42. 4) ஆறங்கம் ஐவேள்வி. 3. 12. 6. ' ஐவேள்வி ஆறங்கம் ஆனார் போலும் அடியேனை ஆளுடைய அடிகள்தாமே ' (2620.) 1. கன்மம். 2. தபம். 3. சேபம். 4. தியானம். 5. ஞானம். சித்தியார். சூ. 8 :- 23. சிவதருமோத்தரம். ' கடவுள் பிரமம் பூத மானிடம் தென்புலத்தார் என் றைவகை வேள்வி ' (பிங்கலந்தை. 395) எனல் பொருந்துமேற்கோள்க. தம்மைப் பாடப் பண் வைத்தார். வேட்க - வழிபட. பத்தர் - தொண்டர். பயிலல் - திருவடி வழிபாட்டிற் பயிற்சியுறல். மண்......நீண்ட மால் :- மாவலியிடத்தில் மூவடி மண் இரந்து மூவுலகும் அளந்த வரலாறு. ' மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பா வகை முடியத் தாவிய சேவடி ' (சிலப்பதிகாரம்). அருள் :- மூவுலகும் அளக்கும் ஆற்றல். நெற்றியிற் கண்ணினை வைத்தார் என்க.

296. வாமனை - தம் சத்தியாகிய வகாரத்தை. ' சிவ ' என்னும் இரண்டனுள், சிகாரம் மணாளன். வகாரம் மணாட்டி. யகாரம் (ஆன்மாக்கள்) சிகாரத்தை அடைய வகாரமே அருள்வதால், அதனை வணங்கினால் அன்றிச் சிவத்தை அடைதல் இயலாது. ' அவனருளே கண்ணாகக் காண். ' ' அருட்கண்ணால் நோக்காதார் அல்லாதார் '. ' வாசி அருளியவை வாழ்விக்கும் ' (திருவருட்பயன். 88). ' நெய்த்தானம் என்னும் செறிபொழிற் கோயில்மேய வாமனை நினைந்த நெஞ்சம் வாழ்வுற

அரியன வங்கம்வேத மந்தணர்க் கருளும்வைத்தார்
பெரியன புரங்கண்மூன்றும் பேரழ லுண்ணவைத்தார்
பரியதீ வண்ணராகிப் பவளம்போ னிறத்தைவைத்தார்
கரியதோர் கண்டம்வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்பனாரே. 297

கூரிருள் கிழியநின்ற கொடுமழுக் கையில்வைத்தார்
பேரிருள் கழியமல்கு பிறைபுனற் சடையில்வைத்தார்
ஆரிரு ளண்டம்வைத்தா ரறுவகைச் சமயம்வைத்தார்
காரிருள் கண்டம்வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்பனாரே. 298

நினைந்தவாறே.' (365) என்றதால், வாமதேவராகிய தம்மை வணங்க நம்மை (ஆன்மாக்களை) வைத்தார் எனலும் பொருந்தும். சோமன் - சந்திரன். சோதியுட் சோதி :- 'சுடர்ச் சோதியுட் சோதி' (5. 93. 7) 'சுடர்மணி விளக்கினுள் ளொளிவிளங்குந் தூயநற்சோதியுட்சோதி' (திருவிசைப்பா. 2); 'உள்ளொளி பெருக்கி' திருவாசகம். ஆ - பசு. மன் - மன்னும். நெய் :- பால், தயிர், நெய். மன்னெய் :- வினைத்தொகை 'பாலுநெய் முதலா மிக்க பசுவிலைந் தாடுவானே' 617. 'அன்பு என்னும் தொடர்' (திருவிளையாடல்). பாசம் - தொடர். காமன் - மன்மதன். வாமனன் என்பதன் திரிபாகக்கொண்டு திருமால் என்றாரும் உளர். 'அரியலால் தேவியில்லை'. யாம் கொண்ட பொருளில் அஃதும் அடங்கும்.

297. அரியன - உணர்ந்தோதற்கு எளியன அல்லாதன வாகிய (வேதமும் அங்கமும்). அந்தணர்க்கு வேதாங்கங் களுடன் அருளும் வைத்தார். பெரும்புர மூன்றும் பேரழல் உண்ண வைத்தார். பருமையுடைய தீயின்வண்ணர். பவளம் போலும் மேனியர். திருநீலகண்டர்.

298. மழுவொளியால் இருள் நீங்கும். தீயுடைய மழு. பிறையால் பேரிருள் கழியும். கூர் - மிக்க. கூரிருள் - அகத் திருள். பேரிருள் - புறத்திருள். கார் இருள் :- நஞ்சினால் ஆகிய கருமை நிறம். மாயைக்குள் எல்லா அண்டங்களும் இருத்தலின், அதனை ஆரிருள் (- நிறைந்த இருள்) என்றார். அறுவகைச் சமயம் :- 136, 329, 448, 969, 972, 5. 89, 6. 6, 50. 7. 6, 65, 7. 6. 68. 5,

உட்டங்கு சிந்தைவைத்தா ருள்குவார்க் குள்ளம்வைத்தார்
விட்டங்கு வேள்விவைத்தார் வெந்துயர் தீரவைத்தார்
நட்டங்கு நடமும் வைத்தார் ஞானமு நாவில்வைத்தார்
கட்டங்கந் தோண்மேல்வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்பனாரே.

ஊனப்பே ரொழியவைத்தா ரோதியே யுணரவைத்தார்
ஞானப்பேர் நவிலவைத்தார் ஞானமு நடுவும்வைத்தார்
வானப்பே ராறுவைத்தார் வைகுந்தற் காழிவைத்தார்
கானப்பேர் காதல்வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்பனாரே. 300

299. உள் தங்கு சிந்தை :- உள்ளத்திற் பொருந்திய சிந்தனை. உள்குவார் - இடைவிடாது நினைப்பவர். விண் + தங்கு = விட்டங்கு. 'ணகார விறுதி வல்லெழுத்தியையின் டகாரம் ஆகும் வேற்றுமைப் பொருட்கே' (தொல்காப்பியம். எழுத்து. 302) விண்ணில் தங்குதற்கு ஏதுவான வேள்வி. வெந்துயர் - பிறவித் துயரம் முதலிய. நள் தங்கு நடம் - 'நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதன்'. ஞாலமும் - ஞாலத் துயிர்களும். நவில - பயில; புகழ் பேச. கட்டங்கம் - மழு.

300. ஊனப்பேர் - ஊனுடற் சார்பான பெயர். ஓதியே உணர :- இறைவனை உணர ஓதல் அடிப்படையானது. ஓதல் ஓதுவித்தல், கேட்பித்தல், கேட்டல், நினைத்தல், தெளிதல், நிற்றல் என்பவற்றுள் முதலாவது ஓதல். 'ஞானநூல் தனை ஓதல் ஓதுவித்தல் நற்பொருளைக் கேட்பித்தல் தான் கேட்டல் நன்று ஈனம் இலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும் இறைவன் அடி அடைவிக்கும் எழில் ஞானபூசை' (சித்தியார். சுபக்கம். 275) என்றதால், ஞான பூசைக்கு ஓதலே தொடக்கமாகும். உணரல் - ஞானம். 'கேட்டல் முதலிய நான்கும் ஞானம். 'கேட்டலுடன் சிந்தித்தல் தெளிதல் நிட்டை கிளத்தல் என ஈரிரண்டாம் கிளக்கில் ஞானம்' (ஷை. 276) என்றதால் ஞானத் திற்குக் கேட்டல் தொடக்கம் ஆதல் அறியப்படும். ஞானப் பேர் நவில - ஞான (தேக)த்துக்குரிய பெயர் பயில. கடவுள் நினைப்பூட்டும் பேர் ஞானப் பேர். உலகப் பொருட் பேர் ஊனப் பேர் என்று கொண்டு அவற்றை முறையே நவிலவும் ஒழியவும் வைத்தார் எனலுமாம். ஞானமும் நடுவும் வைத்தார் :- (231)

கொங்கினு மரும்புவைத்தார் கூற்றங்கள் கெடுக்கவைத்தார்
சங்கினுண் முத்தம்வைத்தார் சாம்பரும் பூசவைத்தார்
அங்கமும் வேதம்வைத்தா ராலமு முண்டுவைத்தார்
கங்குலும் பகலும்வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்பனாரே. 301

சதுர்முகன் றானுமாலுந் தம்மிலே யிகலக்கண்டு
எதிர்முக மின்றிநின்ற வெரியுரு வதனைவைத்தார்
பிதிர்முகன் காலன்றன்னைக் காறனிற் பிதிரவைத்தார்
கதிர்முகஞ் சடையில்வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்பனாரே.

'நடுவுண்ர் பெருமையர்' (3. 84. 6) ஞானம் - திருவடி. நடு - நெஞ்சு நடு. 'திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக்கரையன்றன் அடியார்க்கும் அடியேன்' (திருத் தொண்டத் தொகை) 'திருநின்ற செம்மை' (72) என்றவற்றால் 'நடு' செம்மையுமாம். இவற்றால், ஆளுடைய நம்பிகள் 'சொல்லியவே சொல்லி ஏத்து'ம் பெற்றியுடையவர்கள் ஆதல் புலனாகும். வானப் பேராறு - கங்கை. வைகுந்தற்கு - திருமாலுக்கு. ஆழி - சக்கிராயுதம் கானப்பேர் :- 'காவார்ந்த பொழிற்சோலைக் கானப்பேர்' (6. 99. 7) என்று ஈற்றுத் திருப் பதிகத்துள், கழுக்குன்றத்துச்சி நினைவுடன்வைத்துத் தம் காதல் மிகுதி காட்டுவாரானார்.

301. கொங்கு - மகரந்தம். மணம். கெடுக்கக் கூற்றங்களை வைத்தார். சாம்பல் - திருநீறு. 'சாம்பற்பூச்சு' (1. 23. 1). வேதமும் அங்கமும். ஆலம் - நஞ்சு உம்மை கொடுமை மிகுதியுணர நின்றது. உண்ணத் தகாத நஞ்சினையும் உண்டு, தம்மை அது கொல்ல வல்லாதபடி, உள்ளும் இறங்காமல், வெளியிலும் ஏறாமல் கழுத்துள் நிறுத்திவைத்தார். இரவும் பகலும் படைத்தார்.

302. சதுர்முகன் - நான்முகன். தம்மிலே - தாம் இருவருள்ளே. இகல - மாறுபட. எதிர்முகம் - கண்கூடு. எரிஉரு - 'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்சோதி' வடிவம். பிதிர்முகன் - பிதிர்ந்த முகத்தினன். காலன் - எமனை. கால் - திருவடி. கதிர்முகம் - பிறை. 6. 56. 10. பார்க்க.

மாலினு ணங்கையஞ்ச மதிலிலங் கைக்குமன்னன்
வேலினுன் வெகுண்டெடுக்கக் காண்டலும் வேதநாவன்
நூலினு னேக்கிநக்கு நொடிப்பதோ ரளவில்வீழக்
காலினு லூன்றியிட்டார் கழிப்பாலைச் சேர்ப்பனுரே. 303

திருச்சிற்றம்பலம்

303. மாலினுள் - வேட்கை யுடைய உமை. ' மால் கொடுத்து ஆவிவைத்தார் ' 327. என்புழிப்படும் பொருளுமாம். ' மாலினை மால் உறநின்றுன் ' (843). மன்னனுகிய வேலினுன். வெகுண்டு - சினந்து. வேதநாவன் :- மறையுங் கோப்பளித்த நாவர் ' (242). நூலினுன் - வேதாகம முதலியவற்றை அருளினவன். அவற்றுல் அறிவிக்கலானவன். நக்கு - நகைத்து. நொடிப்பது - கைந்நொடிக்குமளவு. கால் :- காலின் பெருவிரற்கு ஆகுபெயர். ' வேதநாவன் ' ' நூலினுன் ' என்பன இரண்டும் இராவணனைக் குறித்தன எனக்கொண்டு, ' சாமவேத கானம் பாடியவன், நூல்களையுணர்ந்தவன், பூணுநூலணிந் தவன் என்றுரைத்தல் பொருத்தம் உடைத்து.

மேவுபுனற் பொன்னியிரு கரையுஞ் சார்ந்து
விடையுயர்த்தார் திருச்செம்பொன் பள்ளி பாடிக்
காவுயரு மயிலாடு துறைநீள் பொன்னிக்
கரைத்துருத்தி வேள்விகுடி யெதிர்கொள் பாடி
பாவுறுசெந் தமிழ்மாலை பாடிப் போற்றிப்
பரமர்திருப் பதிபலவும் பணிந்து போந்தே
யாவுறுமஞ் சாடுவார் கோடி காவி
லணைந்துபணிந் தாவடுதண் டுறையைச் சார்ந்தார்.

ஆவடுதண் டுறையாரை யடைந்துய்ந் தேனென்
றளவிறிருத் தாண்டகமுன் னருளிச் செய்து
மேவுதிருக் குறுந்தொகைநே ரிசையுஞ் சந்த
விருத்தங்க ளானவையும் வேறு வேறு
பாவலர்செந் தமிழ்த்தொடையாற் பள்ளித் தாமம்
பலசார்த்தி மிக்கெழுந்த பரிவி னேடும்
பூவலயத் தவர்பரவப் பலநாட் டங்கிப்
புரிவுறுகைத் திருத்தொண்டு போற்றிச் செய்வார்,

# 31. திருக்கடவூர்வீரட்டம்

## திருப்பதிக வரலாறு

திருப்புகலூரைத் தொழுது அகன்றுவரும் ஒரு நீர்மை மனத்தையுடைய ஆளுடையபிள்ளையாருடன் ஆளுடைய அரசர் (திருநீலநக்கர், சிறுத்தொண்டர், முருகனுர் முதலிய நாயன்மார்கள் விடைகொண்டபின்) திருவம்பர் வணங்கினர். பின்னர்ச் செங்குமுத மலர் வாவித் திருக்கடவூர் அணைந்தருளி, பொங்கியவெங்கூற்றினை அடர்த்த பொன்னடிகளைத் தொழுதேத்தினர். குங்குலியக்கலய நாயனுர் திருமடத்திலே, சிவனடியாருடன் திருவமுது செய்து, இனிது வாழ்ந்திருந்தார்கள். அந்நாட்களில் பாடியருளியவற்றுள் ஒன்று இத் திருப்பதிகம்.

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

பொள்ளத்த காயமாயப் பொருளினைப் போகமாதர்
வெள்ளத்தைக் கழிக்கவேண்டில் விரும்புமின் விளக்குத்
தூபம்
உள்ளத்த திரியொன்றேற்றி யுணருமா றுணரவல்லார்
கள்ளத்தைக் கழிப்பர்போலுங் கடவூர்வீ ரட்டனுரே. 304

304. பொள்ளத்த - துளைகளையுடைய. 'பொள்ளல்' என்பதன் அடியாக, 'பொள்ளத்த' என்ற பெயரெச்சம் அமையாது. பொள்ளம் - துளை. காயம் - உடல். மாயப் பொருள் - பொய்ப் பொருள். போகமாதர் - போகத்திற்குத் துணையாகிய மகளிர். வெள்ளம் - மிகுதி. 'போக' என்று வினையெச்சமாகக் கொண்டு, 'புலன்களைப் போகநீக்கி' (322) 'பங்கத்தைப் போகமாற்றி' (733) 'மடவாரோடும் பொருந்து அணைமேல் வரும் பயனைப் போகமாற்றி' (6. 5. 1) என்புழிப்போல உரைத்தலுமாம். விளக்குத் தூபம் :- உம்மைத் தொகை. 'தூப தீபம்'. உள்ளத்த திரி - உள்ளமாகிய தகளியின்கண் உள்ள உயிராகிய திரி. உடம்பெனு மனையகத்துள் உள்ளமே தகளியாக மடம்படும் உணர்நெய்யட்டி உயிர் எனும் திரி மயக்கி இடம்படு ஞானத் தீயால் எரிகொள இருந்து நோக்கில், கடம்பமர் காளை தாதை கழலடி காணலாமே' (729) என்பதில் ஞான விளக்கிற்

மண்ணிடைக் குரம்பைதன்னை மதித்துநீர் மையலெய்தில்
விண்ணிடைத் தருமராசன் வேண்டினால் விலக்குவாரார்
பண்ணிடைச் சுவைகள்பாடி யாடிடும் பத்தர்க்கென்றும்
கண்ணிடை மணியர்போலுங் கடவூர்வீ ரட்டனாரே. 305

பொருத்திய குரம்பைதன்னுட் பொய்நடை செலுத்துகின்றீர்
ஒருத்தனை யுணரமாட்டீ ருள்ளத்திற் கொடுமைநீக்கீர்
வருத்தின களிறுதன்னை வருத்துமா வருத்தவல்லார்
கருத்தினி லிருப்பர்போலுங் கடவூர்வீ ரட்டனாரே. 306

சூரியன (3929) அனைத்தும் உணருமாறுணர்த்தலும் காண்க. கள்ளம் :- 444. கொடுமை. 306. 'நறப்படு பூ மலர் தூபம் தீபம் நல்ல நறுஞ்சாந்தம் கொண்டேத்தி நாளும் வானோர் சிறப்போடு பூசிக்கும் திருவாரூர்' (6. 30. 5).

305. மண்ணிடை - (இந்) நிலவுலகில், குரம்பை - கூடு; இங்கு உடற்கூடு. 'பிணி மேய்ந்திருந்த இருகாற் குரம்பை இது நான் உடையது' (1061). 'மண்ணாய மாயக்குரம்பை' (6. 12. 5). மதித்து - பொருளாகக் கருதியுணர்ந்து. மையல் - மயக்கம்; செருக்கு. தருமராசன் :- 'எமதருமன்' (477). விலக்குவார் ஆர் - உடலையும் உயிரையும் கூறுபடுத்தல் வேண்டா என்று தடுத்துக் காப்பவர் எவர்? திருக்கடவூர் வீரட்டானர் அன்றி வேறு ஒருவரும் இலர். பத்தர்க்குப் பாட்டும் ஆட்டும் பண்ணின்பமும் உரிமையாதலை உணர்க. 'கண்மணி போலும் :-' அண்மையும் எளிமையும் இன்றியமையாமையும் ஒப்புயர்வில்லாத வண்மையும் பிறவும் குறித்த உவமம். 'கண்ணே கண்ணிற் கருமணியே மணியாடுபாவாய் காவாய் அருவாய வல்வினைநோய் அடையா வண்ணம்'. 'அணியாய்த் திருநீறணிவார்கள் கண்ணின் மணியே........பணியத் தோடும் போது மூர்ச்சை துயர் அகல நீற்றை இடும்போதகல்வாய் இதேன்'? (சன்மார்க்க சித்தியார். 6) 'முகத்தே இருகண்...... சிவாய அருட்குருவே' (நிட்டை விளக்கம். 23) 'உலகவுயிர்க் கெல்லாம் ஒரு கண்ணே' (இருபா இருபஃது. 20).

306. பொருத்திய - உயிரைத் தன்னுட் பொருந்தச்செய்த. குரம்பை (- குடில்) 252, 305, 414 'முப்பதும் முப்பத்தாறும்

பெரும்புலர் காலைமூழ்கிப் பித்தர்க்குப் பத்தராகி
அரும்போடு மலர்கள்கொண்டாங் கார்வத்தை யுள்ளேவைத்து
விரும்பிநல் விளக்குத்தூபம் விதியினு லிடவல்லார்க்குக்
கரும்பினிற் கட்டிபோல்வார் கடவூர்வீ ரட்டனாரே. 307

தலக்கமே செய்துவாழ்ந்து தக்கவா றொன்றுமின்றி
விலக்குவா ரிலாமையாலே விளக்கத்திற் கோழிபோன்றேன்
மலக்குவார் மனத்தினுள்ளே காலனார் தமர்கள்வந்து
கலக்கநான் கலங்குகின்றேன் கடவூர்வீ ரட்டனீரே. 308

---

முப்பதும் இடுகுரம்பை' (520). போய்நடை:- மலநடை. அருள் நடை செலுத்தல் வேண்டும் என்றவாறு. ஒருத்தன் - 'ஏகன்' 'ஒன்றலாவோன்று' 'ஈறலாவோன்று'. வருத்தின களிறு :- ஐம்புலக் களிறு. 'தொண்டர் அஞ்சு களிறும் அடக்கி ...... வழிபாடு செய்யும் இடம்'. வருத்தும் ஆ - வருத்தஞ் செய்யும் ஆறு. அக் களிற்றை வருத்தும் வன்மை சிவனடியார்க்குள்ளது. வல்லார் - பொறிவாயிலைந்தவித்த ஞானநெறியார். 'புலன் அடக்கித் தம்முதற்கட் புக்குறுவர் போதார் தலனடக்கும் ஆமைதக' (திருவருட்பயன். 94).

307. பெரும்புலர்காலை :- 28. இரவின் நான்காவது கூறு. பித்தன் - தம் திருவடிக்கே பித்துண்டாக்குமவன். 'பித்துப் பத்தரினத்தாய்' விளைப்பவரும் ஆம். பத்தர் - தொண்டர். பித்தரென்பதும் பாடம். அரும்போடு.......கொண்டு :- 'அருப் போடு மலர் பறித்து இட்டு உண்ணூரும் ....... ஊரல்ல அடவி காடே' (6. 95. 5). ஆர்வம் - பெறக்கருதிய பொருள்மேற் செய்யும் பற்று. 'விரும்பிநல் விளக்குத் தூபம்' :- 304. (காஞ்சிப். சிவபுண்ணியப். 65). விதி - வேதாகம விதி. இட வல்லார் - இடுதற்குப் பொருள் வலிமை, துணை வலிமை, மன வலிமை முதலிய பலவும் உடையவர். கரும்பினிற் கட்டி :- கருப்பங் கட்டி. கரும்பினது இனிய கட்டி. 'திருப்புத்தூரனைச் சிந்தை செயச் செயக் கருப்புச் சாற்றினும் அண்ணிக்கும் காண்மினே' (5. 61. 5). 6. 66. 9. 5. 93. 7. பார்க்க.

308. தலக்கம் - இலச்சை; நாணம்; வெட்கம். 'தலக் கற்றுச் சொல்லும்படியான ஆற்றுமை' (திருவாய்மொழி. ஈடு.

பழியுடை யாக்கைதன்னிற் பாழுக்கே நீரிறைத்து
வழியிடை வாழமாட்டேன் மாயமுந் தெளியகில்லேன்
அழிவுடைத் தாயவாழ்க்கை யைவரா லலைக்கப்பட்டுக்
கழியிடைத் தோணிபோன்றேன் கடவூர்வீ ரட்டனீரே. 309

---

10. 10). தலக்கமே - வெட்கப்படத்தக்க இழி செயல்களையே; ஆகுபெயர். ' தக்கவாறு ஒன்றும் இன்றி ' என்றமையாற் செய்து வாழ்ந்தவாறு தகாதவாறு என்பது புலனாயிற்று. அது 'தலக்கமே செய்து வாழ்ந்தது ' ஆகும். தகாததாதலின் விலக்குதல் வேண்டிற்று. விலக்குவாரிலர். ' விளக்கத்திற்கோழிபோன்றேன் ' என்று இறந்தகாலத்தாற் குறித்தார். ' செய்து வாழ்ந்து என்றதும் அக்காலத்தே. தக்கவாறு ஒன்றும் இன்று என்று தீர்த்துரைத்தார். தகாதவாறு செய்தலை விலக்குவாரிலர் என்று தெளிவித்தார். இவற்றை நோக்கின், கோழியை விட்டிலாகக் கொண்டுரைத்தல் பொருந்தாதெனல் புலப்படும். கோழிக்கு விட்டில் என்ற பொருளில்லை. செஞ்சுடர் விளக்கத்திற் கூவுங் கோழியை விலக்குவார் உளரோ ' கோழி தானே கூவித் தானே அடங்கும். அவ்வாறே தாம் தகாதவாறு செய்தலை விலக்குவாரின்மையால் தாமே செய்து தாமே தவிரற்பாலராயிருந்ததை அறிவித்து, கலக்க வந்த காலனார் தமர்களை விலக்கி மார்க்கண்டேயரைக் காத்ததுபோல, அத் தகாத செயலின் விலக்கித் தம்மையும் காத்தருள வேண்டினார். மலங்கல். மலக்கல். மலக்கம். ' ஒன்பது வாயிற்குடிலை மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய ' (திருவாசகம். 1). ' மலக்கிட்டு ' (4 - 1 - 8). மலக்குவார் - கலக்குவார். (திருவிருத்தம். 57; திருவாய்மொழி. 6. 4. 9). ' கலக்குகின்றேன் ' எனல் பொருந்தாது. 'வீரட்டனீரே' என்று முன்னிலையாக 26 ஆவது திருப்பதிகத்திற் கூறியதுபோல இது முதலிய நான்கனிற்றிலும் உளது.

309. பழியுடையாக்கை :- பொய்யுடல், புலாலுடல், அழியுடல், சோற்றுத் துருத்தி, புழுக்கூடு, வீறிலிநடைக்கூடம் என்பன முதலியவாகப் பழிக்கப்படும் உடம்பு. பட்டினத்தார் அருளிய அகவற்பாக்களை இங்கு நோக்குக. பாழுக்கே - பாழான நிலத்துக்கே. விளைபயனில்லாதது பாழ் எனப்பட்டது. ' ஏழைத் தொழும்பனேன் எத்தனையோ காலமெல்லாம் பாழுக்கிறைத்தேன் பரம்பரனைப் பணியாதே ' (திருவாசகம். 325). ' பாழுக்கே

மாயத்தை யறியமாட்டேன் மையல்கொண் மனத்தனாகிப்
பேயோத்துக் கூகையானேன் பிஞ்ஞகா பிறப்பொன்றில்லீ
நேயத்தா னினையமாட்டே னீதனேன் நீசனேனுன்
காயத்தைக் கழிக்கமாட்டேன் கடவூர்வீ ரட்டனீரே. 310

பற்றிலா வாழ்க்கைவாழ்ந்து பாழுக்கே நீரிறைத்தேன்
உற்றலாற் கயவர்தேறு ரேன்னுங்கட் டுரையோடோத்தேன்
எற்றுளே னென்செய்கேனு னிடும்பையால் ஞானமேதும்
கற்றிலேன் களைகண்காணேன் கடவூர்வீ ரட்டனீரே. 311

---

நீர் இறைத்தேன்' (331, 504). வழியிடை - வேதாகமங்களில் விதித்த வழியில்; அருள் நெறியில்; 'நிலைநிலையாப் பொரு ளுணர்ந்து பற்றிகந்து கரணம் ஒரு நேறியே செல்லப் புலனெறி நீத்து அருள் வழிபோய்ப் போதமாந் தன்வலியைப் போத்தி நின்ற மலவலி விட்டு அகல அரா உமிழ்ந்த மதிபோல் விளங்கி மாறியாடுந் தலைவனடி நிழல் பிரியாப் பேரின்பக்கதி அடைந் தான்.' (திருவிளையாடல்). மாயம் - மயக்கம். தெளிவுக்கு மறு தலை அது. வாழ்க்கை நிலையில்லாதது. அழிவு :- காரியத்துவம் நீங்கிக் காரணத்துவம் உறுதல். ஐவர் :- 'காயந்தன்னுள் ஐவர் நின்று ஒன்றலொட்டார் மாயமே என்றஞ்சுகின்றேன்' (1. 50. 7) 'அஞ்சினல் அடர்க்கப்பட்டிங்குழிதரும் ஆதனேன்' (263). 'கழியிடைத் தோணி போன்றேன்' :- கரையேறுமலும் கடலிடை யாடாமலும் இருக்குந் தோணிபோல உடலிடை இனிது நில்லாமலும் உன் திருவருள் வெள்ளத்தில் முழுகாமலும் உள்ளேன்.

310. மாயத்தை அறியமாட்டேன் - பொய்ப் பொருளைப் பொய்ப் பொருள் என்று(ம் மெய்ப் பொருளை மெய்ப் பொருள் என்றும்) அறியவலியில்லேன். மையல் - மயக்கம். பேய் ஒத்தல் அலைந்து திரிதலால். கூகையாதல் தெளிவின்றிக் கலங்குதலால். கூகை :- கூவுதலுடையது என்னும் காரணப் பொருளது. கோட்டான். பிஞ்ஞகன் :- தலைமுடியழகினன். 'பிறவா யாக்கைப் பெரியோன்' (சிலப்பதிகாரம்). நேயம் - அன்பு. 'நீதனேன்' (521. 523) என்று பாடம் இருந்ததோ? நீதனே (6. 47. 4) என்றல் பொருந்தாது. காயம் - உடல்.

311. பற்று - சிவனடிப் பற்று. பற்றிலா வாழ்க்கை - பாசப் பொருட்டொடர்பும் பசுத்துவமும் உடையதாய் இன்பத்

சேலினே ரனையகண்ணார் திறம்விட்டுச் சிவனுக்கன்பாய்ப்
பாலுநற் றயிர்நெய்யோடு பலபல வாட்டியென்றும்
மாலினைத் தவிரநின்ற மார்க்கண்டற் காகவன்று
காலனை யுதைப்பர்போலுங் கடவூர்வீ ரட்டனாரே. 312

துன்பங்களை நுகர்ந்து செல்லும் உயிர் வாழ்க்கை. பாழுக்கே நீர் இறைத்தேன் :- பா. 308. குறிப்பு நோக்குக. உற்றலாற் கயவர் தேறார் - பட்டல்லாமல் கீழோர் தெளியார். உற்ற போதல் லால் உறுதியை உணரேன்' (7. 14. 3). பட்டறி, கெட்டறி, ப்த்தேட்டு இறுத்தறி என்பது பழமொழி. கட்டுரை - உறுதி ப்யக்குஞ் சொல்; பழமொழி; சொற்றொடராக அநுபவத்தினைக் கட்டியுரைப்பது. எற்று - எத்தன்மையது. இடும்பை - 'இடும் பைக்கு இடும்பை' 'இடும்பைக்கு இடும்பை படுப்பர்'(குறள்). ஞானம் - ஞான நூல்கள். ஆகுபெயர். ஏதும் - ஒன்றும் (சிறிதும்). பற்றிலா வாழ்க்கை வாழ்ந்து பாழுக்கேநீர் இறைத் தேன் :- கடவுள் திருவடிப் பற்று இல்லாத பாசப் பற்றுடைய துன்ப வாழ்க்கையே கொண்டு, மீண்டும் மீண்டும் உடல் எடுக்கும் ப்பாழ்த்த பிறவிக்கே வழிதேடினேன். அதனால் ஒரு பயனும் இல்லை. நெல் முதலியவற்றிற்கு நீர் இறைத்துப் பயன் பெறுமல், பாழ் நிலத்திற்குப் பாய்ச்சிப் பயனொன்றும் அடையாமையை ஒத்தது அது. குறிப்பு. 309. பார்க்க.

312. சேலின் நேர் அனைய - சேல் மீனை நிகர் ஒத்த. கண்ணார் திறம் - கண்ணையுடைய மகளிர் காமத் திறம். சிவனுக்கு அன்பு - 'சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சு.' 'அன்பலாற் பொருளும் இல்லை.' பால் தயிர் நெய் :- 'நெய்யும் பாலும் தயிரும் கொண்டு நித்தல் பூசனை செய்யலுற்றார்'. அவற்றோடு பல பல என்றது அபிடேகத்துக்குரிய பிற பொருள் களை. மால் - மயக்கம். தவிர - நீங்க. நின்ற - சிவபூசையை விடாது செய்து நிலைபெற்ற. அன்று - மார்க்கண்டேயரது பதினாறுவதாண்டு நிறைவில். 'கட்டிலங்கு பாசத்தால் வீசவந்த காலன்றன் காலம் அறுப்பார் .....வெண்ணி .....விகிர்தனாரே' (6. 59. 7.)

திருக்கடவூர்



காலசங்காரக் கடவுள்

முந்துரு விருவரோடு மூவரு மாயினரும்
இந்திர னோடுதேவ ரிருடிக ளின்பஞ்செய்ய
வந்திரு பதுகடோளா லேடுத்தவன் வலியைவாட்டிக்
கந்திரு வங்கள் கேட்டார் கடவூர்வீ ரட்டனாரே. 313

திருச்சிற்றம்பலம்

313 முந்து உரு இருவர் :- படைத்தல் காத்தல் செய்யும் உருவத்தையுடைய அயன் அரி. மூவர் - உருத்திரன், மகேசன், சதாசிவன், வீரட்டனாரே இருவரோடு மூவரும் ஆயினரும் கந்திருவங்கள் கேட்டாருமாவர். ஆயினரும் கேட்டாரும் வீரட்டனாரே என்றியைத்தலும் பொருந்தும். கேட்டார் என்பதோடும் உம்மை கூட்டுக. இந்திரனும் தேவர்களும் இருடிகளும் சிவ பிரானை வழிபட்டு இன்பத்தை விளைக்க, இராவணன் வந்து மலையை எடுத்து அம்பிகை நடுங்குதலாகிய துன்பஞ் செய்தது அடாதது. அதனால், அவன் வலியை வாட்டினார். வாடியவன் வாட்டந் தீர்க்கப் பாடிய இசைகளைக் கேட்டு இரங்கி அருள் செய்தார். கந்திருவங்களைக் கந்திரம் என்றார் முன்னர். காந்தாரத்தைக் கந்தாரம் என்றதுபோலக் கந்திரம் என்றார் எனலும் கூடும். பா. 324. பார்க்க. ‘ இருபதுகள்தோள் ’ என்பதில் விகுதி பிரித்துக் கூட்டித் தோள்கள் என்க.

எறிபுனல்பொன் மணிசிதறுந் திரைநீர்ப் பொன்னி
　யிடைமருதைச் சென்றெய்தி யன்பி னோடு
மறிவிரவு கரத்தாரை வணங்கி வைகி
　வண்டமிழ்ப்பா மாலைபல மகிழச் சார்த்திப்
பொறியரவம் புனைந்தாரைத் திருநாகேச் சுரத்துப்
　போற்றியருந் தமிழ்மாலை புனைந்து போந்து
செறிவிரைநன் மலர்ச்சோலைப் பழையா றெய்தித்
　திருச்சத்தி முற்றத்தைச் சென்று சேர்ந்தார்.

கோவாய் முடுகி யென்றெடுத்துக் கூற்றம் வந்து குமைப்பதன்முன்
பூவாரடிக ளென்றலைமேற் பொறித்து வைப்பா யெனப்புகன்று
நாவார் பதிகம் பாடுதலும் நாதன் றானு நல்லூரில்
வாவா வென்றே யருள்செய்ய வணங்கி மகிழ்ந்து வாகீசர்.

# 32 திருப்பயற்றூர்

## திருப்பதிக வரலாறு

திருவாரூரில் இருந்து சிவபெருமானை வழிபட்ட காலத்தில், திருவிற்குடி திருப்பயற்றூர் முதலியவற்றை அடைந்து போற்றிப் பாடியவற்றுள் ஒன்று இத் திருப்பதிகம்.

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

உரித்திட்டா ரானையின்றோ லுதிரவா றொழுகியோட
விரித்திட்டா ருமையாளஞ்சி விரல்விதிர்த் தலக்கணோக்கித்
தரித்திட்டார் சிறிதுபோது தரிக்கில ராகித்தாமுஞ்
சிரித்திட்டா ரெயிறுதோன்றத் திருப்பயற் றூரனாரே. 314

உவந்திட்டங் குமையோர்பாகம் வைத்தவ ரூழியூழி
பவந்திட்ட பரமனார்தா மலைசிலை நாகமேற்றிக்
கவர்ந்திட்ட புரங்கண்மூன்றுங் கனலெரி யாகச்சீறிச்
சிவந்திட்ட கண்ணர்போலுந் திருப்பயற் றூரனாரே. 315

314. உதிரம் - இரத்தம். ஆறாய் ஒழுகி ஓடும்படி ஆனையைத் தோலுரித்தார். உரித்த தோலைத் தன் திருமேனிமேல் விரித்துப் போர்த்திட்டார். அவ்வுரித்தலையும் போர்த்தலையும் கண்ட அம்பிகை அஞ்சி நடுங்கிய கலக்கத்தை நோக்கினார் சிவனார். அத்தோலைச் சிறிதுநேரம் பொறுத்திட்டார். பொறுக்கும் ஆற்றல் இல்லாதவராகத் தோற்றினார். அதனால் அம்பிகைக்கு அலக்கல் (அசைவு) மிகுதலைத் தீர்க்க, தம் பற்கள் தோன்றத் தாமும் சிரித்திட்டார். யானையை உரித்த கோலத்தினை நோக்கி ‘எயிறு’ என்றார். பயறு, உளுந்து, வரகு, தினை முதலியவற்றாலும் ஊர்ப்பெயர்கள் உண்மை இப் பயற்றூர், உளுந்தூர், வரகூர், திருத்தினைநகர் முதலியவற்றால் அறிக. ‘அலக்கணோக்கி’ என்னும் பாடத்திற்கு விதிர்த்த அலக்கண் என்று பெயரெச்சத்தொடராகக் கொண்டுரைக்க.

315. ஒரு பாகத்தில் உமையம்மையாரை வைத்து உவந்தவர்; உவந்து வைத்திட்டவர்; உவந்து இட்டுவைத்தவர். ஊழி

நங்களுக் கருளதென்று நான்மறை யோதுவார்கள்
தங்களுக் கருளுமெங்க டத்துவன் றழலன்றன்னை
எங்களுக் கருள்செயென்ன நின்றவ னுகமஞ்சுந்
திங்களுக் கருளிச்செய்தார் திருப்பயற் றூரனாரே.　　316

பார்த்தனுக் கருளும்வைத்தார் பாம்பரை யாடவைத்தார்
சாத்தனை மகனாவைத்தார் சாமுண்டி சாமவேதம்
கூத்தோடும் பாடவைத்தார் கோளரா மதியநல்ல
தீர்த்தமுஞ் சடையில்வைத்தார் திருப்பயற் றூரனாரே　　317

ஊழி - ஊழிதோறும். பவம் என்னும் வடசொல்லடியாகப் பவந்து என்னும் ஒரு வினையெச்சத்தைத் தோற்றி, அதனோடு இட்ட என்னும் பெயரெச்சத்தைச் சேர்த்துப் 'பவந்திட்ட' என்றதாகக் கொண்டு 'தோன்றிய' என்றுரைத்தனர் பிறர். மலைச்சிலை - மேரு மலையாகிய வில். நாகம் - வாசுகி என்னும் பாம்பாகிய கணை. அக் கணையில் மூன்றனுள் ஒரு கூறு வாசுகிக்குரிய தேனும், இவ்வாறுகுறித்தல் மரபு. கவர்ந்திடுதல் - தாம் சென்று பற்றுதல்; முப்புரத்தின் வினை. கனல் எரி (கனலும் எரி) :- வினைத்தொகை. சீறிச் சிவந்திட்ட கண்ணர் :- 'கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள' 'நிறத்துருவுணர்த்தற்கும் உரிய என்ப' (தொல்காப்பியம். உரியியல்). 'பவந்தநாதர்' (6. 13. 4).

316. நமக்கு அருள் கிடைக்கும் என்னும் உறுதியுடன் நான்மறைகளை ஓதும் அந்தணர்களுக்கு அவ்வாறே அருள் புரியும் தத்துவன்; தழல்வண்ணன். ஆகுபெயர். எங்களுக்கு அருள்செய் என்று எல்லாவுயிர்களும் வேண்டித்தொழ அழியாது என்றும் நின்ற முழு முதல்வன். நாகத்தை அஞ்சுகின்ற திங்கள். இது கவி மரபு. நாகம் - சாயாகிரகம் ஆகிய இராகு கேது. நின்ற வல் நாகம் எனல் பொருந்தாது.

317. பார்த்தன் - அருச்சுனன். அரை - திருவரையில் 'அரக்கு அசைத்தார்'. ஆட - அசைய. 'உரகக்கச்சு' (சிலப் பதிகாரம். வேட். 59). சாத்தன் - ஐயனார். சாமுண்டி - காளி. கூத்தோடும் சாமவேதம் பாடியது. காளியோடு திருக்கூத்தாடிய

மூவகை மூவர்போலு முற்றுமா நெற்றிக்கண்ணர்
நாவகை நாவர்போலு நான்மறை ஞானமெல்லாம்
ஆவகை யாவர்போலு மாதிரை நாளர்போலும்
தேவர்க டேவர்போலும் திருப்பயற் றூரனாரே. 318

போது. கோள் - வலிமை. அரா - அரவு; பாம்பு. மதியம் - திங்கள். தீர்த்தம் - கங்கை.

318. அருவம் நாலு; அருவுருவம் ஒன்று; உருவம் நாலு என்னும் மூவகையாய் இலயபோக அதிகாரமாய் நின்ற மூவர். மூவகை :- ஆண் பெண் அலி என்னும் மூன்று வகை. மூவர் - ஆணர், பெண்ணர், அலியர். முற்றும் ஆம் நெற்றிக் கண்ணர் - முழுதும் ஆகும் நெற்றிக் கண்ணினர். அது ஞானக் கண்ணாய் அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியோடு நிறைந்த அருளாதலின் முற்றுமாதல் (பரைவியாபகம்) 'முத்தி நன்னெறி முப்பதும்' உணர்ந்தார்க்கே விளங்கும். துகளறு போதம், சிவாநந்தபோதசாரம் (தருமையாதீன வெளியீடு ஆகிய சாத்திரங்களும் தோத்திரங்களும் என்றதில் விளக்கப்பட்டு உள்ளன) காண்க. நாவகை :- 'மெய் வாய் கண் மூக்குச் செவி' என்பவற்றுள் 'வாய்' சுவையுணர் பொறியைக் குறிக்கும். 'வாக்குப்பாதம் பாணிபாயுரு உபத்தம்' என்பவற்றுள் 'வாக்கு' வாயை உணர்த்தாது, அதனின் வேறாய நாவொலியைக் குறிக்கும். அது சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என நான்கு வகைப்படும். அவற்றை 'நாவகை' என்றும், அந் நாவகையைத் தோற்றியருளியது சிவபிரானது நாவேயாதலின், அவரை 'நாவர்' என்றும் அருளினார். நான்மறைகளும் சிவஞானத்தை யுணர்த்தும் சிவாகமங்களும் பிறவும் சிவபெருமான் திருவுருவாதலின், 'நான்மறை ஞானம் எல்லாம் ஆ(ம்)வகை ஆவர்' என்றருளினார். 'திருவாதிரைநாள்' சிவபிரானது என்பது வெளிப்படை. தேவதேவர். ஆவகை - காரண மாயையினின்று மாயாகாரியங்களும் காரண (ஆணவ) மலத்தினின்று அதன் காரியங்களும் மூலகன்மத்தினின்று காரிய கன்மங்களும் ஆகும் வகையில், அவ்வக் காரணத்தினின்று காரியப் பொருள்களைத் தனது சங்கற்ப சிருட்டிமாத்திரத்தில் தோற்ற லயபோகாதிகார அவத்தையாய் நான்மறைஞானமெல்லா மாவர்.

ஞாயிருய் நமனுமாகி வருணனுய்ச் சோமனுகித்
தீயரு நிருதிவாயுத் திப்பிய சாந்தனுகிப்
பேயருக் காட்டிலாடும் பிஞ்ஞக னெந்தைபெம்மான்
தீயருக் கையர்போலுந் திருப்பயற் றூரனுரே. 319

ஆவியா யவியுமாகி யருக்கமாய்ப் பெருக்கமாகிப்
பாவியர் பாவந்தீர்க்கும் பரமனுய்ப் பிரமனுகிக்
காவியங் கண்ணளாகிக் கடல்வண்ண மாகிநின்ற
தேவியைப் பாகம்வைத்தார் திருப்பயற் றூரனுரே. 320

319. ஞாயிறு (- செங்கதிரோன்.) நமன் (- இயமன்) ; வருணன் ; சோமன் (- வெண்கதிரோன்.) தீ ; நிருருதி ; வாயு ' சாந்தன் என்னும் எண்மருள் இருசுடரல்லாப் பிறர் திக்குப் பாலகர். சாந்தன் குபேரனையும் குறிக்கும் ஈசானனையும் குறிக்கும். திப்பியசாந்தன் என்றதால் இந்திரனையும் குறித்ததாக்கி எண்மரையும் கோள்ளலாம். பேய் அருக் காட்டில் ஆடும் பிஞ்ஞகன் :- 86 பார்க்க. தீ அருக் கையர் - ' செங்கையில் அனல் ஏந்தி ; யவர்.

320. ஆவி - (வேள்வித் தீயின்) புகை. அவி - வேள்வி வழியாக விண்ணோர்க்கு அளிக்கும் தூயவுணவு. அருக்கம்✕ பேருக்கம். அருகுவது அருக்கம். பெருகுவது பெருக்கம் ; முரண். அணுவாய் மகத்தாய் நிற்கும் போருளியல்பு. அருக்கம் பெருக்கம் எனப்பட்டது. ' சிறியையாய்ப் பேரியையாய் நின்ற நாளோ ' (2422) பாவியர் - பாவத்தைத் தேடிக்கோண்டவரது:- 'பாவியாய்' என்றும் பாடம்உளது. அது போருத்தமுடையதன்று. பரமன் - ' முன்னைப் பழம் போருட்கும் முன்னைப் பழம் போருள் ' பிரமன் ஆகி :- பிரமம் என்பதற்கு வேதம் தத்துவம் தவம் பிராமணன் நான்முகன் என்னும் ஐந்தும் போருளாயினும், ஈண்டு மெய்ப்போருள் (உண்மை தத்துவம்) என்னும் போருட்டு. ' वेदस्तत्त्वं तपो ब्रह्म ब्रह्मा विप्रः प्रजापतिः ' (அமரம். நாநா.) ' காவியங்கண்ணள் ' :- திருப்பயற்றூர்நாய்ச்சியார் திருப்பேயர். ' கடல் வண்ணம் ஆகிநின்ற தேவி ' ஆகி ஆகி நின்ற தேவி என்க. பாகம் - திருமேனிப்பகுதி.

தந்தையாய்த் தாயுமாகித் தரணியாய்த் தரணியுள்ளார்க்
கெந்தையு மென்னநின்ற வேழுல குடனுமாகி
எந்தையெம் பிரானேயென்றென் றுள்குவா ருள்ளத்தென்றும்
சிந்தையுஞ் சிவமுமாவார் திருப்பயற் றூரனாரே. 321

புலன்களைப் போகநீக்கிப் புந்தியை யொருங்கவைத்து
இலங்களைப் போகநின்று விரண்டையு நீக்கியொன்றாய்
மலங்களை மாற்றவல்லார் மனத்தினுட் போகமாகிச்
சினங்களைக் களைவர்போலுந் திருப்பயற் றூரனாரே. 322

321. 'தாயாகித் தந்தையாய்ச் சார்வும் ஆகி ...... நின்ற வாறே.' தந்தையும் தாயும் ஆகி :- 'அம்மையப்பர்' தரணியாய் :- 'மண்ணாகி விண்ணாகி மலையுமாகி........ எழுஞ் சுடராய் எம் அடிகள் நின்றவாறே' 'இருநிலனாய்த் தீயாகி ..... அடிகள் நின்றவாறே' தரணியுள்ளோர்க்கு எந்தையும் என்ன நின்ற :- 'ஈன்றாளுமாய் எனக்கு எந்தையுமாய் உடன் தோன்றினராய் மூன்றாய் உலகம் படைத்துகந்தான்' 'எந்தையார் திருநாமம் நமச்சிவாய' ஏழுலகுடனும் ஆகி :- 'எண்டிசையும் கீழும் மேலும் இரு விசும்பும் இரு நிலமும் ஆகித் தோன்றும் கண்ணவன்.' 'நடமாடி ஏழுலகுந் திரிவான் கண்டாய்' 'எல்லா வுலகமும் ஆனாய் நீயே' 'ஏழ்கடலும் ஏழுலகுமாயி னான்காண்.' உள்குவார் - நினைப்பவர். சிந்தையும் சிவமும் ஆவார் :- சிந்தை சிந்திக்கப்பெறும் சிவம் இரண்டும் அபேத மாதல், ஏகனாகி இறைபணி நிற்பார் அநுபவத்திற் கூடுவது.

322. புலன்களை - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய புலன் ஐந்தினையும். 'புலனைந்தும் பொறிகலங்கி'. போக நீக்கி - செல்லத் தொலைத்து. 'பங்கத்தைப் போகமாற்றி' (733). 'மடவாரோடும் பொருந்து அணைமேல் வரும் பயனைப் போகமாற்றி' (6. 5. 1). புந்தி - அறிவு; சிந்தை. ஒருங்க - ஒருவழிப்பட; (பற்றியவை கெட). இலங்களை - மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களை. போக - கடக்க. இரண்டையும் - நான் என்பதும் தான் என்பதும் ஆகிய இரண்டனையும். ஒன்றாய் - 'அவனே தானே ஆகிய அந்நெறி ஏகனாகி'. மலங்களை - 'யான் எனது என்னும் செருக்கினையும் மாயை கன்மங்களையும்.

மூர்த்திதன் மலையின்மீது போகாதா முனிந்துநோக்கிப்
பார்த்துத்தான் பூமிமேலாற் பாய்ந்துடன் மலையைப்பற்றி
ஆர்த்திட்டான் முடிகள்பத்து மடர்த்துநல் லரிவையஞ்சத்
தேத்தேத்தா வென்னக்கேட்டார் திருப்பயற் றூரனாரே. 323

திருச்சிற்றம்பலம்

வல்லார் மனம் :- ஆறன்றுரைகை. போகம் - சிவாநந்தாநுபவம். **சினங்கள்** :- சினம் விளைக்கும் பிறவித் துன்பவிளைவுகள்.

**323.** மூர்த்தி - 'சிவமூர்த்தி'. மலை - திருக்கயிலை. போகாதா - போகாதாக. முனிந்து - வெறுத்து. நோக்கி - உள்ளே எண்ணி. பார்த்து - வெளியே கண்டு. ஆர்த்தல் - ஆரவாரஞ்செய்தல். அடர்த்தல் - நெருக்குதல் ; வருத்துதல். நல்லரிவை :- உமாதேவியார். 'தேத்தேத்தா' இசை குறித்த அநுகரணம்.

நனைந்தனைய திருவடியென் றலைமேல்வைத் தாரென்று
புனைந்ததிருத் தாண்டகத்தாற் போற்றிசைத்துப் புனிதரருள்
நினைந்துருகி விழுந்தெழுந்து நிறைந்துமலர்ந் தொழியாத
தனம்பெரிதும் பெற்றுவந்த வறியோன்போல் மனந்தழைத்தார்

நாவுக்கு மன்னர்திரு நல்லூரி னம்பர்பால்
மேவுற்ற திருப்பணிகண் மேவுறநா ளுஞ்செய்து
பாவுற்ற தமிழ்மாலை பலபாடிப் பணிந்தேத்தித்
தேவுற்ற திருத்தொண்டு செய்தொழுகிச் செல்லுநாள்.

கருகாவூர் முதலாகக் கண்ணுதலோ னமர்ந்தருளுந்
திருவாவூர் திருப்பாலைத் துறை பிறவுஞ் சென்றிறைஞ்சிப்
பெருகார்வத் திருத்தொண்டு செய்துபெருந் திருநல்லூர்
ஒருகாலும் பிரியாதே யுள்ளுருகிப் பணிகின்றார்.

அன்றவர்கண் மறைத்ததனுக் களவிறந்த கருணையராய்க்
கொன்றைநறுஞ் சடையார்தங் கோயிலின்முன் கொணர்வித்தே
யொன்றுகொலா மெனப்பதிக மெடுத்துடையான் சீர்பாடப்
பின்றைவிடம் போய்நீங்கிப் பிள்ளையுணர்ந் தெழுந்திருந்தான்,

## 33 திருமறைக்காடு

### திருப்பதிக வரலாறு

ஞானத் தலைவனார் தமிழ்நாட்டிற் போக, விடைகொண்டிருந்த வாகீசர், பூணும் அன்பால் மறைக்காட்டிற் புனிதரைப் போற்றிசைத் தவற்றுள் ஒன்று இத் திருப்பதிகம். (புராணம். 290)

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

இந்திர னோடுதேவ ரிருடிக ளேத்துகின்ற
சுந்தர மானார்போலுந் துதிக்கலாஞ் சோதிபோலும்
சந்திர னோடுகங்கை யரவையுஞ் சடையுள்வைத்து
மந்திர மானார்போலு மாமறைக் காடனாரே. 324

தேயன நாடராகித் தேவர்க டேவர்போலும்
பாயன நாடறுக்கும் பத்தர்கள் பணியவம்மின்
காயன நாடுகண்டாங் கதனுளார் காளகண்டர்
மாயன நாடர்போலு மாமறைக் காடனாரே. 325

**324.** இந்திரனும் தேவரும் இருடிகளும் ஏத்துகின்ற. சுந்தரம். புகழ்தற்குரிய மெய்யொளி. திங்களையும் கங்கையாற்றையும் பாம்பினையும் சடையுள் வைத்து மந்திரம் ஆனவர். மந்திரம் :- நினைப்பவனைக் காப்பது. மாமறை - திருமறை. திருமறைக்காட்டில் எழுந்தருளிய சிவமூர்த்தியின் அழகு இந்திரன் முதலோர் ஏத்திய சிறப்பைக் குறிக்கும் வண்ணம் இருத்தலை இன்றும் உணரலாம் சென்று கண்டு. மறைக்காடு' ஆதலின், அம் மறையின் மந்திரம் ஆன உண்மை குறிக்கப் பட்டது. துதிக்கல் :- (துதி+க்+கு+அல்). குகரச்சாரியையும் சந்தியாகிய ககரவோற்றும் தொழிற்பெயர் விகுதியாகிய அல்லும் துதி என்னும் வடசொற் பகுதியுடன் இயைந்து தொழிற்பெயர்ப் பகுபதம் ஆயிற்று. கதி, மதி, திதி, உதி முதலிய பிற வடசொற் பகுதிகளுடனும் இவ்வாறு இயைந்து ஆன சொற்கள் உள. பழந் தமிழில் இன்னோரன்னவை இல. நாதம் :- நாதித்து (திருவேங்கைக் கலம்பகம். 56) என்றாரும் உளர்.

**325.** தேயனநாடர் :- கொடைக்குரிய நாடு (பேரின்பவீடு) டையவர் ; தியாகிக்கப்படும் பொருளினுடைய உயரிய நாட்டில்

அறுமையிவ் வுலகுதன்னை யாமெனக் கருதிநின்று
வேறுமையின் மனைகள்வாழ்ந்து வினைகளா னலிவுறாதே
சிறுமதி யரவுகொன்றை திகழ்தரு சடையுள்வைத்து
மறுமையு மிம்மையாவார் மாமறைக் காடனாரே. 326

.......

உறைபவர். தேயன் - தியாகிக்கப்படும் பொருள். தே - திசை. தேயன - திசைகளிலுள்ளன (வாகிய நாடுகளையுடையவர்) எனலுமாம். ஆகி என்னும் எச்சம் தேவர் என்னும் வினைக்குறிப்பைத் தழுவிற்று. பாயன நாடு - பரப்பினாலொத்த நாடு; (உலகம்) அஃது 'அறுக்கும்' என்றதால், ஈண்டு நாட்டுப் பற்று என்னும் பொருட்டு, உலகப் பற்றுக்களை அறுக்கும் சிவத்தொண்டர்காள், மறைக்காடனாரைப் பணிய வம்மின். பாயனம் (பாசனம்) :- நீர்பாய்த்துகின்ற நாடு எனலும் ஆம். பாயனம் வடசொல். (See Apte dictionary Page. 612) பாசனம் :- 267. காயன நாடு கண்டம் கதனுளார் :- நாடுகளையும் கண்டங்களையும் காய்ந்தாலன்ன கோபம் உள்ளவர். நாடு கண்டம் - நாடும் கண்டமும். புரமெரித்த வரலாறு முதலியன. காளகண்டர் - நஞ்சுண்ட திருநீலகண்டர். காயனம் (- ஒலி இசைப்போர்) நாடுகின்ற கண்டம் எனல் பொருந்தாது; 'கதனுளார்' 'காளகண்டர்' எனப் பின் உள்ளமையால். மாயன நாடர் :- கரியோனது நாடுதலையுடையவர். மாயன் - கரியன் (திருமால்). 'மாயோன் மேய காடுறையுலகம்' (தொல்காப்பியம்) என்றது கொண்டு, மாமறைக்காடனார் அம் மாயோன்றன் நாடாகிய காட்டிலுள்ளார் எனல் பொருந்துமேற்கொள்க.

326. அறுமை - அறும் இயல்பு; நிலையின்மை பண்பு. இவ்வுலகு நிலையில்லாதது (அழியுந்தன்மையது). இதனை அழியாது நிலைபெறும் இயல்புடையது என்று எண்ணி நின்று, வீணிலே இல்வாழ்க்கை நடாத்தி, வினைத் தொடர்புகளால் வருத்தமுறாதே. சிவனை வழிபடு. பிறையையும் பாம்பினையும் கொன்றை மாலையினையும் பூவையும் மின்னுகின்ற செஞ்சடையுள் வைத்து, இம்மையும் ஆவார்; மறுமையும் ஆவார். 'இம்மை மறுமை வீடு' என்னும் மூன்றனுள், வீடொழிய மற்றிரண்டும் எழுமையைக் குறித்தவை. எழுமையுள் இம்மை ஒன்று கழிய நின்றவை அறுமையாகும். அவ் அறுமைக்குத் துணையாவது உலகு. அது குறித்து 'அறுமையிவ்வுலகு' என்றார் எனலுமாம். வேறுமை :- வறுமையின் முதலுயிர் அகரம் எகரமாயது.

கால்கொடுத் திருகையேற்றிக் கழிநிரைத் திறைச்சிமேய்ந்து
தோல்படுத் துதிரநீராற் சுவரெடுத் திரண்டுவாசல்
ஏல்வுடைத் தாவமைத்தங் கேழுசா லேகம்பண்ணி
மால்கொடுத் தாவிவைத்தார் மாமறைக் காடனாரே. 327

விண்ணினார் விண்ணின்மிக்கார் வேதங்கள் விரும்பியோதப்
பண்ணினார் கின்னரங்கள் பத்தர்கள் பாடியாடக்
கண்ணினார் கண்ணினுள்ளே சோதியாய் நின்றவெந்தை
மண்ணினார் வலங்கொண்டேத்து மாமறைக் காடனாரே. 328

பயன் இலாததும் ஆம். ‘ அறுமை.........இருமை ’ (கல்லாடம். 11, 18).

327. 1. கால்கொடுத்தல், 2. கையேற்றல், 3. கழி நிரைத்தல், 4. வேய்தல், 5. சுவர் எடுத்தல், 6. வாசல் அமைத்தல், 7. சாலேகம்பண்ணல் (435) ஆகிய செயல்கள் வீடு கட்டுதற்கண் நிகழ்வன. அவ்வாறே இவ்யாக்கையாகிய வீடு கட்டுதற்கண்ணும் அச் செயல்கள் நிகழ்கின்றன. இருகால் கொடுத்தும் இருபாலும் இருகை ஏற்றியும் என்புகளாகிய கழி களை நிரைத்தும், இறைச்சியாகிய கூரை வேய்ந்தும், உதிரமாகிய நீரால் தோல் படுத்துச் சுவர் எடுத்தும் பொருத்தம் உடையதாக இரண்டு வாசலை அமைத்தும், அச் சுவர்களில் ஏழு பலகணி களை வைத்தும் ஒரு வீடு கட்டி, அதில் ஆவியை வாழவைத்து, அதற்கு வேண்டிய செல்வமாக மால் (மயக்கம், காற்று, வேட்கை) கொடுத்தார் மாமறைக்காடனார். உலகை நோக்கி மயக்கம் ; உடலை நோக்கிக் காற்று ; உயிரை நோக்கி வேட்கை ; கொடுத்த மறைக்காடனார் அருளை நோக்கி (மால் -) அன்பு. ‘ மாலும் காட்டி வழிகாட்டி வாராவுலக நெறி ஏறக் கோலம் காட்டி ஆண்டானைக் கோடியேன் என்றோ கூடுவதே. ’ (திருவாச கம். 643) சாலேகம் :- ‘ கோய் தளிர்த் தண்டலைக் கூத்தப் பெருஞ்சேந்தன், வைகலும் ஏறும் வயக்களிறே - கைதொழுவல். காலேக வண்ணனைக் கண்ணாரக் காண எம் சாலேகம் சார நட ’ (முத்தொள்ளாயிரம். நன்னூல். 397. சங்கரநமச்சிவாயருரை.)

328. விண்ணிலுள்ளார். விண்ணினும் மேற்பட்ட நிலைய வர். வேதங்களை விரும்பி ஓதப் பண்ணியவர். பத்தர் (-

அங்கையு ளனலும்வைத்தா ரறுவகைச் சமயம்வைத்தார்
தங்கையில் வீணைவைத்தார் தம்மடி பரவவைத்தார்
திங்களைக் கங்கையோடு திகழ்தரு சடையுள்வைத்தார்
மங்கையைப் பாகம்வைத்தார் மாமறைக் காடனாரே. 329

கீதராய்க் கீதங்கேட்டுக் கின்னரந் தன்னைவைத்தார்
வேதராய் வேதமோதி விளங்கிய சோதிவைத்தார்
ஏதராய் நட்டமாடி யிட்டமாய்க் கங்கையோடு
மாதையோர் பாகம்வைத்தார் மாமறைக் காடனாரே. 330

.........................................................................................................

தொண்டர்)கள் கின்னரங்களைப் பாடி ஆடப் பண்ணினவர். வேதங்களை விரும்பி ஓதக் கின்னரங்களைப் பண்ணினார் எனலுமாம். கின்னரங்கள் :- 'கின்னரங் கேட்டுகந்தார்' (283.) இசையின் குணம் அகுணம் இரண்டும் அறிவதொரு பறவை; கின்னரர்கள். ஆடக் கண்ணினார் எனின், ஆடத் திருவுளங் கொண்டார். கண்ணல் - கருதல். கண்ணினுள்ளே சோதியாய் நிற்றல் :- 'கண்ணே கண்ணிற் கருமணியே மணியாடுபாவாய் காவாய்.' மண்ணினார் - மண்ணுலகில் வாழ்பவர். வலம் கொண்டு - வலமாகச்சுற்றி வழிபட்டு. (427) 'விண்ணினார்...... கண்ணின்' :- 347.

329. அங்கை - அழகியகை. அகங்கை. அனல் - தீ அறுவகைச்சமயம் :- 'ஒத்தாறு சமயங்கட்கு ஒரு தலைவன்' (1. 131. 1). 'இருமூன்று சமயங்களவையாகிப் பின்னை அருள் செய்த பிறையாளன்.' (2. 29. 5) 'சமயமவை ஆறினுக்கும் தலைவன்' (6. 65. 7) 'அறுவகைச்சமயம் அவ்வவர்க்கு அங்கே ஆரருள்புரிந்து' (7. 55. 9) தம் கையில் வீணை வைத்தார் :- 294. குறிப்பினைப் பார்க்க. தம் அடி பரவ - தம் திருவடி ஞானத்தை வாழ்த்த. திகழ்தரல் - விட்டுவிட்டொளிர்தல். திங்கள், கங்கை, மங்கை :- அங்கை :- பா. 374. பார்க்க.

330. கீதர் - பாட்டுடையர்; பாடுமவர். கீதம் - பாட்டு. கின்னரம் - இசை; 283, 328, 382. வேதர் - வேத முதல்வர். வேதம் ஓதி விளங்கிய சோதியாவது சிவஞானப்ரகாசம். ஏதர் - காரணர். ஏது - காரணம். நட்டம் - திருக்கூத்து. இட்டம் -

கனத்தினுர் வலியுடைய கடிமதி லரணமூன்றும்
சினத்தினுட் சினமாய்நின்று தீயெழச் செற்ருர்போலும்
தனத்தினைத் தவிர்ந்துநின்று தம்மடி பரவுவார்க்கு
மனத்தினுண் மாசுதீர்ப்பார் மாமறைக் காடனுரே. 331

---

விருப்பம் (இஷ்டம்). இட்டமாய் வைத்தார். இட்டமாய் ஆடி வைத்தார் என்றியைத்தல் சிறவாது. கீதரானது 'ஏழிசையாய்' நின்ற நிலை. கீதங்கேட்டது :- தும்புரு, நாரதர் அசுவதரர் கம்பளதரர் பாடிய இசை இராவணன் சாமகீதம், நால்வர் தமிழ் முதலியவற்றைக் கேட்டல். கின்னரம் வைத்தல் :- ஏழிசை யமைதியையும் அதன் வளர்ச்சியையும் அதனுல் எய்தும் இன்பத் தையும் தோற்றி நிலைபெறச் செய்தல். 'வேதனைமிகு வீணையில் மேவிய கீதனை' (5. 61. 4),

331. கனத்தினுர் - துன்பம் விளைப்பதிற் பெரியர். அரணம் - காவற்கோட்டை. (திரிபுரம்). 'சினத்தின் உட்சினம் ஆய் நின்று தீ எழச் செற்ருர்' என்றதால், முப்புர தகனத்திற்கு ஏதுவின் இன்றியமையாமை புலப்படும். படவே மும்மலத்தை யும் நீக்குவதில் எல்லாரும் அந் நிலையை எய்துதல் வேண்டும் என்பதாம். 'தனம்' ஈண்டுப் பொருட்பற்று. தவிர்ந்து - நீங்கி. தம் அடி:- மறைக் காடனுர் திருவடி. பரவுவார் - வாழ்த்துவார். 'பரவுவார் இமையோர்கள்'. மனத்தின் உள் மாசு :- மனத்தின் அகத்துக் குற்றம். உள் ஏழனுருபுமாம். மனத்தின் அகத்துக் குற்றம் மனத்தின் புறத்துக் குற்றம் என்று இரண்டுமுண்டு, முன்னது அதன் உள் நிகழ்வது. பின்னது அதன் வெளியில் அம் மனத்தால் நிகழ்வது. 'உள் மாசுகழுவுவது நீறு என்றே உபநிடதம் உரைக்கும்' (திருவிளையாடல்). 'திருக்குறும் அழுக்காறு அவாவோடு வெகுளி செற்றம் ஆகிய மன அழுக்கைத் தியான மென்புனலால்; பொய்புறங் கூறல் தீச் சொல் என்கின்ற வாய் அழுக்கை அருட்கிளர் நினது துதி எனும் புனலால்; அவத்தொழில் என்னும் மெய் அழுக்கை அருச்சனை என்னும் புனலினுல் கழுவா அசுத்தனேன் உய்யும் நாள் உளதோ? ......ஈசனே மாசிலாமணியே' என்ற (சிவப் பிரகாசர் = நெடுங்கழிநெடில் 6) பாடலில் அவ் விரண்டும் அறிக. (மறு+து = மறுது, மறுசு, மாசு, மருஉ.

தேசனைத் தேசன்றன்னைத் தேவர்கள் போற்றிசைப்பார்
வாசனை செய்துநின்று வைகலும் வணங்குமின்கள்
காசினைக் கனலையென்றுங் கருத்தினில் வைத்தவர்க்கு
மாசினைத் தீர்ப்பர்போலு மாமறைக் காடனாரே. 332

பிணியுடை யாக்கைதன்னைப் பிறப்பறுத் துய்யவேண்டில்
பணியுடைத் தொழில்கள்பூண்டு பத்தர்கள் பற்றினாலே
துணிவுடை யரக்கனோடி யெடுத்தலுந் தோகையஞ்ச
மணிமுடிப் பத்திறுத்தார் மாமறைக் காடனாரே. 333

திருச்சிற்றம்பலம்

---

332. தேசன் - ஒளிவடிவினன்; தேசு - ஒளி, திசையினன், தேஎம் - திசை, தே+அம்=தேயம், தேசம். காலதேச வர்த்தமானம் என்றாற்போல வடசொல்லுமாம். வாசனை செய்தல்:- நறும்புகை, நறுமலர், நறுநீர் முதலியன கொண்டு வழிபடல். வைகலும் - காலைமாலை இரண்டனிலும். வைகு - இரவு. 'நெய்யுமிழ் சுடரிற் கால் பொரச் சில்கி வைகுறு மீனிற்றோன்றும்' அகம். 17) 'வை குறு மீனிற் பையத் தோன்றும்' (பெரும்பாண். 318). வைகறை - இரவு அறும் வேளை. காசு - பொன். 'தேனைப்பாலைத் திகழொளியை' 6. 1. 1). கருத்தினில் வைத்தல்:- 'நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்' என்றதிற் செயப்படுபொருள் நெஞ்சம். இதில் மறைக்காடனார் கருத்திற் போலக் காட்டில் மறைந்தவர். மாசு - மும்மலக்குற்றம்.

333. பிணியுடையாக்கை:- துன்பத்திற்கே கொள்கலம் என்னும் இவ்வுடல், துன்பம் விளைக்கும் பலவற்றுள் ஒன்றாய பிணியையுடையது என்று அறிவரேல், யாக்கையெடுத்தலாகிய பிறவியை அறுக்க முயல்வர். அதனை அறுத்து உய்ய வேண்டில், பக்தர்களுக்குப் பற்றுவைத்துச் செய்யும் அடிமைத் திறத்தால் அறுத்துய்யலாம் என்று வருவித்து வினை முடிவு செய்க. இத் திருப்பாடலில் விளங்காத சொல் ஒன்றுமின்றேனினும், முன்னீரடிக்குப் பொருட்பொருத்தமும் அதனோடு பின்னீரடிப் பொருட்டொடர்பும் புலப்பட்டில. பற்றினாலேதான் உய்யலாம் என்று முற்று வினை வருவித்துரைக்க. மணிமுடிப்பத்தும். பத்து:- தலைகட்கு ஆகுபெயர்.

# 34 திருமறைக்காடு

## திருப்பதிக வரலாறு

திருமறைக்காட்டிலிருந்து பாடியருளியவற்றுள் ஒன்று இத் திருப்பதிகம்.

### திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

தேரையு மேல்கடாவித் திண்ணமாத் தெழித்துநோக்கி
ஆரையு மேலுணரா வாண்மையான் மிக்கான்றன்னைப்
பாரையும் விண்ணுமஞ்சப் பரந்ததோள் முடியடர்த்துக்
காரிகை யஞ்சலென்பார் கலிமறைக் காடனாரே. 334

334. கடாவி-செலுத்தி, திண்ணமா-உறுதியாக, வலியாக. தெழித்து - அதட்டி, சினந்து. 'தெளித்து' என்பது ஏட்டிற் கண்டது, யாரையும்-மண்ணோர் விண்ணோர் முனிவர் முதலிய எவரையும் மேல் உணராமை - தனக்கு மேலானவர் என்று மதியாமை. ஆண்மை - அம்மதியாமைகட்கு ஏதுவான வலிமை; வீரம், ஆண்மை (ஆள்+மை) ஆள் (ஆண்) ;+ஆள்+தூஉ= ஆடூஉ. பேள்+தூ உ=பெண்டு உ. மகள்+தூ உ=மகடு உ என்பவற்றை நோக்கி, ஆளின் தன்மை ஆண்மை. எனல் சிறந்தது. ஆளுந்தன்மை எனின், 'ஆள்' என்பது வினையாகும். தமிழில் மை என்பது வடமொழியில் 'துவம்' என்றதுபோல்வது, பண்புணர்த்துவது. தத்துவம் - அதனியல்பு. பாரையும்-மண்ணையும்; இடவாகு பெயரால் மண்ணில் வாழ்வோரைக் குறிக்கும். ஐயுருபினை விண்ணுக்கும் ஏற்றியுரைக்க. தோள்முடி உம்மைத்தொகை. காரிகை - உமாதேவியார். முற்பதிகத்துள் மாமறைக் காடனார் என்று ஓரடையும் இப்பதிகத்துள் ஏழு வேறடையும் கொடுத்தவாறறிக. அம் 'மா' என்றதன் விளக்கம்போலும்.

முக்கிமுன் வெகுண்டெடுத்த முடியுடை யரக்கர்கோனை
நக்கிருந் தூன்றிச்சென்னி நாண்மதி வைத்தவெந்தை
அக்கர வாமைபூண்ட வழகனூர் கருத்தினாலே
தெக்குநீர்த் திரைகண்மோதுந் திருமறைக் காடனாரே. 335

மிகப்பெருத் துலாவமிக்கா னக்கோரு தேர்கடாவி
அகப்படுத் தென்றுதானு மாண்மையான் மிக்கரக்கன்
உகைத்தெடுத் தான்மலையை யூன்றலு மவனையாங்கே
நகைப்படுத் தருளினானூர் நான்மறைக் காடுதானே. 336

335. முக்கி :- முற்கி என்பதன் மரூஉ. வெகுண்டு - சினந்து நக்கு - நகைத்து. ஊன்றி - (கால் விரலால்) ஊன்றி (340) ஊன்றிக்காடனூர் என்க. ஊன்றிவைத்த எந்தை எனின், 'சென்னி' இராவணனது; நாண்மதி வைத்தது :- பிறை போலுங் கீற்றைத் திருக்காற் பெருவிரலால் ஆக்கியது. அரக்கர்கோனை ஊன்றிச் சென்னியில் மதியைவைத்த எந்தை எனின், நக்கிருந்து ஊன்றியதும் மதிவைத்ததும் முன் பின் நிகழ்ச்சி எனவும் இராவணன் தலையில் விரலும் தன் தலையில் மதியும் சிவன் வைத்தான் எனவும் வேண்டும். அவ்வாறுரைத்தல் பொருந்தாது. அக்கு - எலும்பு உருத்திராக்கமும் ஆம் எனினும் அஃது அரவு ஆமையுடன் கூறற்பாற்றன்று. அழகனூர் காடனூர் என்றும் கருத்தினாலே காடனூர் என்றும் இயைக்க.

336. பெருத்து. மிகப் பெருத்து. உலாவமிக்கான். நக்கு :- 335. கடாவி :- 334. அகப்படுத்து - உட்படச்செய். பாகனை ஏவியது. அரக்கன் (இராவணன்) தானும் ஆண்மையான் மிக்கு மலையை உகைத்து எடுத்தான். தன்தேர்ப் பாகனை அகப்படுத்து என்றதோடு தானும் எடுத்தான் என்க. அவனை ஆங்கே (அவ்விடத்து அப்பொழுதே) ஊன்றலும் நகைப்படுத்தருளினான் சிவபிரான். அருளினவன் ஊர் திருமறைக்காடு. தான் ஏ :- ஆசை.

அந்தரந் தேர்கடாவி யாரிவ னென்றுசொல்லி
உந்திஞன் மாமலையை யூன்றலு மொள்ளரக்கன்
பந்தமாந் தலைகள்பத்தும் வாய்கள்விட் டலறிவீழச்
சிந்தனை செய்துவிட்டார் திருமறைக் காடனுரே. 337

தடுக்கவுந் தாங்கவொண்ணுத் தன்வலி யுடையனுகிக்
கடுக்கவோர் தேர்கடாவிக் கையிரு பதுகளாலும்
எடுப்பனு னென்னபண்ட மென்றெடுத் தானையேங்க
அடுக்கவே வல்லனூரா மணிமறைக் காடுதானே. 338

நாண்முடிக் கின்றசீரா னடுங்கியே மீதுபோகான்
கோள்பிடித் தார்த்தகையான் கோடியன்மா வலியனென்று
நீண்முடிச் சடையர்சேரு நீள்வரை யெடுக்கலுற்றுன்
தோண்முடி நெரியவைத்தார் தொன்மறைக் காடனுரே. 339

---

337. அந்தரம் - ஆகாயம். 'ஆர் இவன்?' என்பது இராவணன் மதியாது விஞவியது. ஒண்மை :- உறங்கும் ஆயினும், கறங்கு வேண்டிரை வையகங் காக்கும் மன்னவனேளி எனச் சிறப்பித்துச் சொல்லப்படுவது. பந்தம் - கட்டு; பத்துத் தலைக்கட்டு, பத்து வாய்கள், வாய்கள் விட்டு அலறிவீழச் சிந்தனை செய்துவிட்டார். விட்டவர் காடனுர் என்க. 'பத்திலங்கு வாயாலும் பாடல் கேட்டுப் பரிந்து அவனுக்கு இராவணன் என்று ஈந்த நாமதத்துவன்' (6. 79. 10) 'பத்து வாய் இரட்டிக் கைகள் உடையவன்' 340.

338. தடுக்கவும் தாங்கவும் ஒன்ருத வலி இராவணனது. ஒண்ணு - 'ஒன்ரு' என்பதன் மரூஉ. கடுக்க - விரைய. கையிருபதுகள் :- 'இருபதுகள் தோளால் எடுத்தவன் வலியை வாட்டிக் கந்திருவங்கள் கேட்டார் கடவூர் வீரட்டானுரே.' 'நான் எடுப்பன்' 'என்ன பண்டம்?' என்பன இராவணன் கூற்று. 'என்ன பண்டம்?' என்றது அவன் சிவனது திருக் கயிலைப் பெருமலையை ஒரு பொருளாக மதியாமை குறித்தது. என்று எடுத்தான் - என்று சொல்லி மதியாது தூக்கியவன்; ஏங்க - ஏக்கம் உற. அடுக்க - மாய்க்க. அணி மறைக்கும் உரித்து; காட்டிற்கும் உரித்து.

339. நாள் முடிக்கின்ற சீரான் - செங்கதிரோன். நாளிறு என்றதன் மரூஉவே ஞாயிறு. நாளன்று என்றது ஞான்று என

பத்துவா யிரட்டிக்கைக ளுடையன்மா வலியனென்று
போத்திவாய் தீமைசெய்த போருவலி யரக்கர்கோனைக்
கத்திவாய் கதறவன்று கால்விர லூன்றியிட்டார்
முத்துவாய் திரைகண்மோது முதுமறைக் காடனாரே. 340

---

மருவியதும் ஈண்டுக் கருதுக. 'மகரஞாயிற்று ரேவதி ஞான்று' என்ற கல்வெட்டுத் தொடரால் அது விளங்கும். 'நாளன்று போகிப் புள்ளிடை தட்ப' என்னும் புறப்பாட்டின் அடியால், நாளன்று என்பது தொல்வழக்காதல் புலப்படும். அவ்வழக்கு ஞான்று என்றாதலில் வியப்பில்லை. செங்கதிர்த் தோற்றத்தை அடியாகக் கொண்டு கணக்கிடுவதே நாள். நாள் இறுதற்கும் அதுவே அடியாகும். அதனால், அக் கதிரை நாளிறு என்றனர் செந்தமிழர். அது ஞாயிறு என்று மருவிற்று. உறு - ஊறு. (இடையூறு) இறு - ஈறு. நாளீறு - நாளிறு - ஞாளிறு - ஞாயிறு. நடுக்கமும் போகாமையும் ஞாயிற்றின் தொழில்கள். மீது - இலங்கையின் மேலிடம். மேல் மிகல் என்பதன் மரூஉ. மிகு+து=மீது (மரூஉ). இருசுடர் மீது ஓடா இலங்கை என்று (6. 39. 10) ஆசிரியரே பின்னர்க் குறித்தருளியதால், வெண் கதிரும் இலங்கைக்கு நேரே விண்ணிற் செல்லாதபடி தடுத்தவன் இராவணன் என்பது வெளியாம். மண் விண் பாதலம் ஆகிய திரிலோகத்துக்கும் (இலங்கையினளவு) அதிபதி யாதலின், இருசுடராட்சிக்கு இடங்கொடாது தன்னிடத்தைப் போதுவறப் புரிந்தான். கோள்பிடித்து ஆர்த்த கையான் :- 'சனியும் வெள்ளியும் திங்களும் ஞாயிறும் முனிவனாய் முடி பத்துடையான்' (5. 21, 10). கொடியன் - கொடுமை செய்பவன். மாவலியன் - பெருவலிமையுடையவன். என்று (- என்று தன்னை வியந்து தருக்கி) எடுக்கலுற்றான் நீள்வரையை, உற்றான் தோள்முடி - உற்றவன் தோள்களும் முடிகளும். தோண்முடி :- உம்மைத் தொகை.

340. பத்துவாய் உடையான். இரட்டிக் கைகள் :- அப் பத்து இரட்டி (இருபது ஆகிய கைகளை உடையன்). மாவலியன்:- 339, என்று வாய்போத்தி:- மேற்பாட்டில் உரைத்தாங்கு உரைத்துக் கொள்க. வாய்போத்தல் :- ஓசைபடாது தீ வினை யாற்றல் குறித்தது. போருவலி:- (ஏதுப் பெயர்கொண்ட) வினைத் தொகை. போத்தியவாய் கத்திக்கதற ஊன்றியிட்டார்.

பக்கமே விட்டகையான் பாங்கிலா மதியனுகிப்
புக்கனன் மாமலைக்கீழ்ப் போதுமா றறியமாட்டான்
மிக்கமா மதிகள்கெட்டு வீரமு மிழந்தவாறே
நக்கன பூதமெல்லா நான்மறைக் காடனுரே. 341

நாணஞ்சு கையனுகி நன்முடி பத்தினேடு
பாணஞ்சு முன்னிழந்து பாங்கிலா மதியனுகி
நீணஞ்சு தானுணரா நின்றெடுத் தானையன்று
ஏணஞ்சு கைகள்செய்தா ரேழின்மறைக் காடனுரே. 342

முத்துவாய் திரைகள்:- முத்துக்கள் வாய்ந்த அலைகள்; (முத்துப் போலும் வெண்ணிறம் வாய்ந்த அலைகள்.) மோதும் - முழுத்தும்.

341. பக்கமே - பக்கத்தில். ஏகாரம் ஏழனுருபின் பொருட்டு. ' பக்கமே பாரிடங்கள் சூழ ' (188) என்புழியும் இது பெறப்படும். விட்ட - (கிளைக்க) விட்ட. பாங்கு இலாமதியன் - முறைமையில்லாத அறிவினன். (பால்+கு=பாங்கு. நால்+கு=நான்கு, நாங்கு) போதும் ஆறு - பின்னர்ப் புகுதும் வண்ணம் ', மேல்வரும் கதியை என்றபடி. ' மிக்கமா மதிகள் கெட்டு ' என்றதால், அவனுடைய மதிகளின் மிக்க பெருக்கம் விளங்கும். வீரமும் இழந்தவாறே பூதமெல்லாம் நக்கன. ஆறே - வண்ணத்திலே. ஈண்டும் ஏகாரம் அப்பொருட்டு. நகுதல் - சிரித்தல்.

342. நாணஞ்சு (நாலஞ்சு) கையன். நாண் - வில்லின் நாண். நஞ்சு - நைந்த எனலும் ஆம். அஞ்சுமுன் பாண் இழந்து - திருக்கயிலையை ஊன்ற வலிகெட்டு, உடல் கெட்டு, உயிர் போய்விடுமோ என்று அஞ்சுதல் முன்பு சாமகீதம் பாடுதலை இழந்து. அஃதாவது அஞ்சிய பின்னரே பாடினன். பாடியெடுத்திருந்தாற் கேடுருன் என்றவாறு, அது செய்யும் பாங்கில்லாமதியன் என்க. நீணஞ்சு :- நீள்+நஞ்சு=நீண்ட நைந்து, நீடிய உருக்கம். நீண் அஞ்சு - நீள நினைத்தற்குரிய தூய திருவைந்தெழுத்தினை, நீளுதல் - ' நீணுதல் ' (1. 1.) ஏண் - வலிமை. இத் திருப்பாடலின் எதுகைத் தொடர்கள்

கங்கைநீர் சடையுள்வைக்கக் காண்டலு மங்கையூடத்
தென்கையான் றேர்கடாவிச் சென்றெடுத் தான்மலையை
முன்கைமா நரம்புவெட்டி முன்னிருக் கிசைகள்பாட
அங்கைவா ளருளினனூ ரணிமறைக் காடுதானே, 343

திருச்சிற்றம்பலம்

விளங்காப் பொருள. நாள் - அறும் நாளில். நஞ்சு (நந்து) கையன் மீண்டும் வளருங்கையன். நந்தல் - வளர்தல். முடிகளையும் பாணங்களையும் இழந்த வரலாறு குறித்ததுமாம். நாண் - நாணம். அஞ்சு - அஞ்சி அகலுதற்கு ஏதுவான கையன் - தீயொழுக்கத்தினன் எனலும் 'நாலஞ்சுகை' என்றதன் திரிபுமாம். அஞ்சிய பின் பாடிய பாண் (சாமகானம்), விரலூன்றப் பெற்று அஞ்சு முன் பாடுதலை இழந்து. பாடி எடுத்திருப்பனேல், நெருக்குண்ணான். பாண்அஞ்சும் - ஐந்து நாதமும் ஆம். (சூடாமணி நிகண்டு, 12 :- 43) நீள்+நஞ்சு :- இறைவன் நஞ்சுண்டும் சாவாத ஒருவன் என்பதை உணராமல், மலையெடுத்த கைகளைத் திண்மை நைந்த கைகளாக்கினார். ஏண் - திண்மை. நஞ்சு - நந்து (போலி). நஞ்சுகை - வினைத்தொகை. விரலால் அழுத்தக் கைகள் நசுக்குண்ட வரலாறுணர்க.

343. கங்காதேவியைச் சடையுள் மறைத்து வைத்தும் உமாதேவி கண்டுவிட்டாள். கண்டவுடன் ஊடல் கொண்டாள். தென்கையான் - தென்னிலங்கை மன்னன், அழகிய கையால் எனலுமாம். தேர்கடாவிச்சென்று மலையை எடுத்தான். மா நரம்பு :- யாழ். இருக்கு இசை :- 'சாமகானம்'. கைவாள் அருளினான் :- 'கொடுத்தனன் கொற்றவாளொடு நாமம்' (5. 87. 10).

புடைமாலை மதிக்கண்ணிப் புரிசடையார் பொற்கழற்கீழ்
அடைமாலைச் சீலமுடை யப்பூதி யடிகடமை
நடைமாணச் சிறப்பித்து நன்மைபுரி தீந்தமிழின்
றொடைமாலைத் திருப்பதிகச் சொன்மாலை பாடினார்.

# 35 திருவிடைமருதூர்

## திருப்பதிக வரலாறு

திருவாவடுதுறை முதல்வரை அடைந்துய்ந்து பல திருத்தாண்டகம், திருக்குறுந்தொகை, திருநேரிசை, சந்தவிருத்தங்கள் முதலிய வெவ்வேறு செந்தமிழ்த் தொடையாற் பல திருப்பள்ளித் தாமம் சார்த்தி, மிக்கு எழுந்த பரிவினோடும் மண்ணோர் வாழ்த்தப் பன்னாள் தங்கித், திருத்தொண்டு போற்றிச் செய்து, சென்று திருவிடைமருதூரை எய்தி, அன்பினோடு மகாலிங்கப் பெருமானை வணங்கி வைகி மகிழச் சார்த்திய பல வண்டமிழ்ப் பாமாலைகளுள் ஒன்று இத் திருப்பதிகம்,

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

காடுடைச் சுடலைநீற்றர் கையில்வெண் டலையர்தையல்
பாடுடைப் பூதஞ்சூழப் பரமனார் மருதவைப்பில்
தோடுடைக் கைதையோடு சூழ்கிடங் கதனைச்சூழ்ந்த
ஏடுடைக் கமலவேலி யிடைமரு திடங்கொண்டாரே. **344**

முந்தையார் முந்தியுள்ளார் மூவர்க்கு முதல்வரானார்
சந்தியார் சந்தியுள்ளார் தவநெறி தரித்துநின்றார்
சிந்தையார் சிந்தையுள்ளார் சிவநெறி யனைத்துமானார்
எந்தையா ரெம்பிரானா ரிடைமரு திடங்கொண்டாரே. **345**

**344.** காடுடைச் சுடலை நீற்றர் :- 'காடுடைய சுடலைப் பொடி' பூசியவர். தையல் - உமாதேவியாரை. பாடு - பக்கத்தில் (உடைப் பரமனார்). மருதூர் :- மருதவைப்பு, தோடு - இதழ், கைதை - தாழை, கிடங்கு - அகழி, ஏடு - இதழ், கமலவேலி - தாமரை வேலி, மருதை இடமாகக்கொண்டார்.

**345.** முந்தையார் முந்தியுள்ளார் -'முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப் பழம்பொருள்' ஆகி என்றும் இருப்பவர். மூவர்க்கும் முதல்வர் ஆனார் - அயன், அரி, அரன் என்னும் மூவர்க்கும் முதற்பொருளானவர். 'முன்னானை மூவர்க்கும்' (திருவாசகம் 193) சந்தியார் சந்தியுள்ளார் - சந்தியாவந்தனம் புரிபவரது சந்தியாதியாநத்திலும் அச்சந்தியிலும் விளங்குந் திருவருளுரு

காருடைக் கொன்றைமாலை கதிர்மணி யரவினோடு
நீருடைச் சடையுள்வைத்த நீதியார் நீதியாய
போருடை விடையொன்றேற வல்லவர் பொன்னித்தென்பால்
ஏருடைக் கமலமோங்கு மிடைமரு திடங்கொண்டாரே. 346

விண்ணினார் விண்ணின்மிக்கார் வேதங்க ளாறங்கம்
பண்ணினார் பண்ணின்மிக்க பாடலார் பாவந்தீர்க்குங்
கண்ணினார் கண்ணின்மிக்க நுதலினார் காமற்காய்ந்த
எண்ணினா ரெண்ணின்மிக்க விடைமரு திடங்கொண்டாரே.

வினராயிருப்பவர். சந்தியார் :- சந்தியாதியாகத்தைச் செய்யும் வேளையாகிய சந்தியையுடையவர் என்று சரியையாளர், கிரியையாளர், யோகியர், ஞானியர் ஆகிய நால்வகையரையும் குறித்தது. 'சந்தியானைச் சமாதி செய்வார் தங்கள் புந்தியானை' (5. 44. 2) தவநெறியைத் தாங்கி நின்றவர். சிந்தையார் சிந்தையுள்ளார் - 'சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன் முந்திப்பொழிய' அவரது சிந்தையிலுள்ளவர். சிவநெறி அனைத்தும் ஆனார் - சிவநெறியெல்லாமாய் விளங்குகின்றவர். 'மேல்நெறி யெலாம் புலம் ஆக்கிய எந்தை' (திருவாசகம்). எந்தையார் - என்னைத் தந்தவர், பன்மையாயும் உரைக்கலாம். எம்பிரானார் - எம் பிரியத்துக்குரியர். 'பிரியன்' என்பதன் மரூஉ 'பிரான்' என்பது (செந்தன் செந்தமிழ்). (பா. 348) இடங்கொண்டாரே உள்ளார், ஆனார், உள்ளார், நின்றார், உள்ளார் ஆனார் எந்தையார் பிரானார் என்று கொள்க.

346 கார்.. மாலை :- 'கண்ணிகார் நறுங்கொன்றை' கதிர்மணி - மாணிக்கம். மாலையைப் பாம்பினோடு சடையுள் வைத்த நீதியார். கங்கை நீர் உடைச்சடை. நீதி ஆய விடை:- அறவிடை, (தருமருப ரிடபம்) போர் உடை விடை:- சாதியடை. 'விடையொன்று ஏறவல்லார்' பா. 35. பொன்னி - காவிரியாறு. நீர் பொன்னிறத்தது. நீருட் பொன்னோடு மணல் உடையது. திருவிடைமருதூர் காவிரிக்குத் தென்பால் ஓங்குவது. ஏர்- அழகு எழுச்சி. கமலம் - தாமரை. பா. 344. 353.

347. விண்ணையுடையவர். விண்ணினும் மேலிடத்தவர். நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் படைத்தவர்.

வேதங்க ணான்குங்கொண்டு விண்ணவர் பரவியேத்தப்
பூதங்கள் பாடியாட லுடையவன் புனிதனெந்தை
பாதங்கள் பரவிநின்ற பத்தர்க டங்கண்மேலை
ஏதங்க டீரநின்ரு ரிடைமரு திடங்கொண்டாரே 348

(354) பண்ணில் மிக்க பாடலை யுடையவர்; சாமகீதர், அடியர் பாவங்களைப் போக்கும் கருத்துடையவர். கண் - கருத்து. சூரிய சந்திர நேத்திரங்களைக் குறித்துக் கண் எனலும் பொருந்தும். கண்...நுதலினுர்:- நுதல் - நெற்றி, நெற்றித் தீவிழியர். நுதலல் - கருதல். நுதல்விழி - ஞான நாட்டம், காமற்காய்ந்த எண்ணினுர் - மன்மதனை எரித்த யோகியார். எண்ணம்-யோகம். 'உளன் எங்கும் இவன் இங்கும் உளன் என்பார்க்கும் விருப்பாய வடிவாகி இந்தனத்தின் எரிபோல் மந்திரத்தில் வந்து உதித்து மிகும்' (சித்தியார் சூ. 12. பா. 4) எண்ணின் மிக்க - மதிப்பிற் சிறந்த; அடியவர் எண்ணத்தில் மேம்பட்ட.

348. விண்ணிலுள்ளவர்கள் (இம் மண்ணில் வந்து) நான்கு வேதங்களையுங்கொண்டு வாழ்த்தி வழிபடப் பூதங்கள் பாடி ஆடலை உடையவன். புனிதன் - தூயன். 'எண்ணுன் சிவன்' (சிவஞான போதவெண்பா உரை) - 'தூயதன்மையன் என்னும் பொருட்டாய் அசத்தை எண்ணுமைக்குரிய இயைபுணர நின்றது'. இதனுற் சிவசத்தத்திற்குப் புனிதமென்னும் பொருளுண்மை புலப்படும். சோமசம்புபத்ததி, சிவதத்துவ விவேகம் இரண்டனுள்ளும் அப்பொருள் கூறப்பட்டமை சிவஞான போதவுரையுட் சிவஞான முனிவர் எழுதியதால் அறியலாம். எந்தை, நுந்தை, தந்தை என முறையே முன்னிலை படர்க்கைகட்கு உள்ளவாறு தன்மைக்குள்ளது இது. என்+து+ஐ= எந்தை எனதுஐ - எனது முதல் என்னும் பொருட்டு, என்னப்பன், என்பிரான்' (பா. 345), நுன் + து + ஐ = நுந்தை, தன்+து+ஐ=தந்தை. மூன்றும் மரூஉச் சொல். திருப்பாதங்களை வாழ்த்திப் பிறவியற்று நிலைத்த தொண்டர்களுடைய மேலை ஏதங்கள் தீர்ந்துவிடத் திருவிடைமருதூரிடத்தைக் கொண்டு நின்றுர். உடையவன் புனிதன் என்னும் ஒருமையை நோக்கின், நின்றுர் கொண்டார் என்பவற்றில் உள்ள ஆரீறு, 'ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவி'க்குரியதாதல் புலப்படும். 126;

பொறியர வரையிலார்த்துப் பூதங்கள் பலவுஞ்சூழ
முறிதரு வன்னிகொன்றை முதிர்சடை மூழ்கவைத்து
மறிதரு கங்கைதங்க வைத்தவ ரெத்திசையும்
எறிதரு புனல்கொள்வேலி யிடைமரு திடங்கொண்டாரே.

படரொளி சடையினுள்ளாற் பாய்புன லரவினோடு
சுடரொளி மதியம்வைத்துத் தூவொளி தோன்றுமெந்தை
அடரொளி விடையொன்றேற வல்லவ ரன்பர் தங்கள்
இடரவை கெடவு நின்று ரிடைமரு திடங்கொண்டாரே 350

357 முதலியவற்றிலும் இவ்வாறே கொள்க. ஆண்டு முன்னிலை படர்க்கை மயக்கமும் தோன்றும். மேலைஏதங்கள் :- (4. 10. 5; 4. 90. 3; 5. 5. 4; 5. 5. 8; 5. 14. 5; 5. 7. 11; 5. 64. 7; 5. 59. 6; 5. 97. 23)

349. பொறி - படப்புள்ளிகள். அரவு (பாம்பு) அரை (இடை)யில் ஆர்த்து (- கட்டி). பல பூதங்களும் சூழ. முறி - தளிர். வன்னியும் கொன்றையும் சடையுள் மூழ்க வைத்து. மறிதரல் - கீழ்மேலாதலைத் தருதல். வீழ்தரல். ஆர்த்துச் சூழ வைத்துத் தங்க வைத்தவர் என்றியைக்க. எறிதருபுனல் :- 'அலைபுனல் ஆவடுதுறை'. இடைமருதிடத்தின் நீர்வளம் உணர்த்தியது. எறிதரல் - வீசுதல். எற்றல். புனல் எத்திசையும் எறிதல்; புனல் கொள்வேலி எத்திசையும் உடைமையுமாம்.

350. படர் சடை. ஒளி படர் சடை. பாய் புனல் :- கங்கையின் வேகம் குறித்து நின்றது. அரவு மதியத்தோடும் சடையினுள்ளால் அடங்கிய புனல் என்றதுணர்க. சுடர் ஒளி - சுடரும் ஒளி. ஒளிமதியம் - ஒளியையுடைய பிறை. தூவொளி - தூய ஞானப்பிரகாசம்; சிவப்பிரகாசம். ஒளியாகத் தோன்றும் எந்தை. அடர் ஒளி விடை - அடர்ந்த வெள்ளொளியையுடைய எருது (ஊர்தி). பா. 346. 'சோதியேற்றினர்' (361) அன்பர் தங்கள் இடரவை கெடவும் என்றதில், உம்மை எதிரது தழீஇயதாய், இன்பம் ஆகவும் என்னும் பொருள்கொள்ள நின்றது; இடரவை கெடவும் இன்பவை ஆகவும் நின்றார் ...... கொண்டார்

கமழ்தரு சடையினுள்ளாற் கடும்புன லாவினேடு
தவழ்தரு மதியம்வைத்துத் தன்னடி பலருமேத்த
மழுவது வலங்கையேந்தி மாதோரு பாகமாகி
எழில்தரு போழில்கள்சூழ்ந்த விடைமரு திடங்கோண்டாரே

போன்றிகழ் கோன்றைமாலே புதுப்புனல் வன்னிமத்தம்
மின்றிகழ் சடையில்வைத்து மேதகத் தோன்றுகின்ற
அன்றவ ரளக்கலாகா வனலேரி யாகிநீண்டார்
இன்றுட னுலகமேத்த விடைமரு திடங்கோண்டாரே 352

351. கமழ்தரு சடை :- கோன்றைமலர் மணம்(முதலியன) வீசுகின்ற சடை. கடும்புனல் :- மேல் 350) உரைத்தாங்கு உரைத்துக் கோள்க. தவழ்தருமதியம் :- வான் தவழ் மதியம்'. தன் அடி - தன் திருவடி. மழுவது (மழு+அது). ஈண்டு அது சுட்டுப் பெயரன்று; பகுதிப் போருள் விகுதி. வலங்கை வலப் பக்கத்துக்கையில். மாதோருபாகம் : 'அர்த்த நாரீசுவரன்', எழில் - அழகு, எழுச்சி.

352. போன்திகழ் - போன்னிறம் விளங்கும். புதுப் புனல் :- கங்கை வேள்ளம். வன்னிமத்தம் - வன்னியும் ஊமத்த மும், பா. 349. மின் - மின்னேளி, மேதக - மேன்மை தகும் படி, தோன்றுகின்ற என்னும் பெயரேச்சம் நீண்டார் என்னும் வினேப்பேயர் கோண்டுமுடிந்தது. 364. அவர் - மாலும் அயனும், அன்று - மேலே முடியோடு பாதம் அறியாமை நின்று நேடுந் தடுமாற்றம் அடைந்த காலத்தில், அளக்கல் ஆகாஅனல் எரி - அளத்தற்கு ஆகாத அனன்ற தீ. இன்று - இங்நாளில், உடன் - அவ்விருவருடன். உலகம் - உலகத்தாரும் (ஏத்தக் கோண் டார்). 'அன்று அவர்க்கு அளப்பரிய பாழியார்' (358). பாழியார் பாவந்தீர்க்கும் பராபார் என்பதை நோக்கின், திருப் பதிகம். 32 இல், ஏழாவது திருப்பாடலில் பாவியாய்ப் பாவந் தீர்ப்பார் என்ற பாடம் பிழையுடையது என்று தேளியலாம். 'பாவியர் பாவம் தீர்க்கும் பரமன்' என்பதே உண்மைப்பாடம் என்று சிறிதும் ஐயமின்றித் துணியலாம். பா. 320. 358. இரண்டும் ஒருங்குவைத்து நோக்கி உணர்க.

மலையுடன் விரவிநின்று மதியிலா வரக்கனூக்கத்
தலையுட னடர்த்துமீண்டே தலைவனு வருள்கணல்கிச்
சிலையுடை மலையைவாங்கித் திரிபுர மூன்றுமெய்தார்
இலையுடைக் கமலவேலி யிடைமரு திடங்கொண்டாரே　353

திருச்சிற்றம்பலம்

353. மலை - திருக்கயிலை. விரவி - கலந்து. மதியிலா அரக்கன் :- 'பாங்கிலாமதியன்' 342. தலையுடன் (கைகளையும்) அடர்த்து. மீண்டே - மீண்டும், தலைவன் ஆ - தலைவன் ஆக, அருள்கள் :- வாள், நாள், பெயர் முதலியவை, நல்கி - கொடுத்து, நல்கல் கொடைக்கே உரிய சொல். நல்க ஊர்தல் என்பதன் மருஉவாகிய நல்கூர்தல் என்றதாலும் அது புலப்படும். சிலை - உடை மலை - தான் சிலையாக உடைய மேருமலையை, சிலை கல்லும் ஆம். வாங்கி - வளைத்து, திரிபுரம் (மூன்றும்) - திரியும் புரம், வினைத்தொகை. 'திரியும் மும்மதிள்' 'திரியும் மூவெயில் 'திரியுமுப்புரம் செற்றதும்' 204. குறிப்பு அறிக. 'இலையுடைக் கமலவேலி' :- 344.

எழும்பணியு மிளம்பிறையு மணிந்தவரை யெம்மருங்குந்
தொழும்பணிமேற் கொண்டருளித் திருச்சோற்றுத் துறைமுதலாத்
தழும்புறுகேண் மையினண்ணித் தானங்கள் பலபாடிச்
செழும்பழனத் திறைகோயிற் றிருத்தொண்டு செய்திருந்தார்.

நல்லூரி னம்பரருள் பெற்றுப்போய்ப் பழையாறை
பல்லூர்வெண் டலைக்கரத்தார் பயிலுமிடம் பலபணிந்து
சொல்லூர்வண் டமிழ்பாடி வலஞ்சுழியைத் தொழுதேத்தி
யல்லூர்வெண் பிறையணிந்தார் திருக்குடமூக் கணைந்திறைஞ்சி.

நாலூர்தென் றிருச்சேறை குடவாயி னறையூர்சேர்
பாலூரு மின்மொழியாள் பாகனூர் கழல்பரவி
மேலூர்தி விடைக்கொடியார் மேவுமிடம் பலபாடிச்
சேலூர்தண் பணைசூழ்ந்த தென்றிருவாஞ் சியமணைந்தார்.

# 36 திருப்பழனம்

## திருப்பதிக வரலாறு

திங்களூரினின்றும் திருமறையோர்களுடன் திருப்பழனம் சேர்ந்து தங்கு பெருங்காதலோடும் தம் பெருமான் கழல் சார்ந்து, பொங்கிய அன்புற வணங்கி நின்று போற்றிசைத்த தீந்தமிழ்த் தொடைமாலைகளுள் ஒன்று இத் திருப்பதிகம்.

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

ஆடினா ரொருவர்போலு மலர்கமழ் குழலினாளைக்
கூடினா ரொருவர்போலுங் குளிர்புனல் வளைந்ததிங்கள்
சூடினா ரொருவர்போலுந் தூயநன் மறைகணான்கும்
பாடினா ரொருவர்போலும் பழனத்தெம் பரமனாரே 354

போவதோர் நெறியுமானார் புரிசடைப் புனிதனார்நான்
வேவதோர் வினையிற்பட்டு வெம்மைதான் விடவுங்கில்லேன்
கூவல்தா னவர்கள்கேளார் குணமிலா வைவர்செய்யும்
பாவமே தூரநின்றார் பழனத்தெம் பரமனாரே 355

354. திருப்பழனத்திலே திருக்கோயில் கொண்டெழுந்தருளிய எம்முதல்வனார் திருக்கூத்தாடியவரும், அலர்கள் மணம் வீசும் கூந்தலையுடைய மங்கையைக் கூடியவரும், தண் (கங்கை வெண்) ணீரையும் வளைந்த பிறையையும் சூடியவரும், தூயனவும் நல்லனவும் ஆகிய நான்கு வேதங்களையும் பாடியவரும் ஆன ஒருவர் போலும். தூய்மை - பொருட்குற்றம் இல்லாமை. நன்மை - சொற்குற்றம் ஓசைக்கேடு முதலிய தீமையில்லாமை. ‘ வேதங்கள் நான்கும் ..பண்ணினார். ’ (354).

355. பரமனார் ஆனார் ; புநிதனார் ; நின்றார். போவது :- உயிரின் கதி. நெறி :- அக் கதிக்கு உரிய வழி. புரி (சடை) - புரித்த; முறுக்குண்ட சடையையுடைய தூயனார் வேவது - உள்ளம் வெம்மையுறுவது. வினையிற் படுதல் - வினைத்துடக் குறுதல். வெம்மை - வெய்ய துயரம், கில்லேன் - மாட்டேன்,

கண்டராய் முண்டராகிக் கையிலோர் கபாலமேந்தித்
தொண்டர்கள் பாடியாடித் தொழுகழற் பரமனூர்தாம்
விண்டவர் புரங்களெய்த வேதியர் வேதநாவர்
பண்டையேன் வினைகடீர்ப்பார் பழனத்தெம் பரமனூரே 356

நீரவன் றீயினோடு நிழலவ னெழிலதாய
பாரவன் விண்ணின்மிக்க பரமவன் பரமயோகி
ஆரவ னண்டமிக்க திசையினோ டொளிகளாகிப்
பாரகத் தமிழ்தமானூர் பழனத்தெம் பரமனூரே 357

கூவல் - கூவுதல். அவர்கள் :- ஐவர். செய்யுளாதலின் சுட்டு முன் வந்தது. இயற்பெயர் வழியவாம் சுட்டுப்பெயரை 'முற் படக் கிளத்தல் செய்யுளில் உரித்தே' (தொல். சொல். 39); திருப்பதிகம் 54 பார்க்க. ஐவரை அடக்கிச் செய்வது புண்ணி யம், அவர்க்கு அடங்கிச் செய்யும் யாவும் பாவமே. அவை தீர நின்றார் பரமனூர்.

356. கண்டர் - வீரர். 'தெவ்வர்புரம் எரிகண்டா' (கோயிற் புராணம் நடராசச் சருக்கம் 26) முண்டர் - மழித் தலையர், மிண்டரென்பதன் மரூஉ அன்று. ஏந்தி என்னும் வினையெச்சம் 'கழற் பரமனூர்' என்னும் தொகைக்கண் விரியும் உடைய என்னும் வினைக்குறிப்போடு முடியும். தொண்டர்கள் பாடியும் ஆடியும் தொழுங் கழலையுடைய பரமனூர். பரமனூர்தாம் வேதியர். வேதநாவர்; தீர்ப்பார்; பழனத்தெம் பரமனூர் என்று கொள்க. விண்டவர் - பகைவர்; திரிபுரத்தசுரர். பிறப்பால் வேதியர் பலரும் வேதநாவர் ஆகார். வேதநாவர் பலரும் வேதியர் ஆகார். வேதி யரும் வேதநாவரும் ஆதல் அரிது. பரமனூர் அறவாழியந்தணர். 'மறையுங் கோப்பளித்தவராவர்' (242). பண்டைவினை :- சஞ்சிதம், பிராரத்தம். தொழுகழல் :- தொழப்படுங் கழலடி. செயப்படு பொருளில் நின்ற வினைத் தொகை. 'அறு கயிறு' செய் பொருள் வினைத்தொகை. மறைகள் நிறைநாவர் (1. 71. 5)

357. நீரும் நெருப்பும் ஒளியும் அழகியதான பாரும் (மண் ணுலகும்) விண்ணுலகின் மிகுந்த மேன்மையும் உடையவன்; மேலான சிவயோகி; ஆரவன் - எங்கும் நிறைந்தவன். அண் டங்களும் மிக்க திசைகளும் முச்சுடர்களும் ஆகி மண்ணுலகத்

ஊழியா ரூழிதோறு முலகினுக் கோருவராகிப்
பாழியார் பாவந்தீர்க்கும் பராபரர் பரமதாய
ஆழியா னன்னத்தானு மன்றவர்க் களப்பரிய
பாழியார் பரவியேத்தும் பழனத்தெம் பரமனுரே 358

ஆலின்கீ ழறங்களேல்லா மன்றவர்க் கருளிச்செய்து
நூலின்கீ ழவர்கட்கேல்லா நுண்போரு ளாகிநின்று
காலின்கீழ்க் காலன்றன்னைக் கடுகத்தான் பாய்ந்து பின்னும்
பாலின்கீழ் நேய்யுமானுர் பழனத்தெம் பரமனுரே 359

துயிர்களுக்குக் கிடைத்த விண்ணமுதமானுர். ஈண்டும் ஒருமை பன்மை மயக்கமன்று. 348 பார்க்க.

358. ஊழி முதல்வர், 'ஊழிமுதல்வனுய் நின்றவோருவன்' (திருவாசகம் 162) உலகினுக்கு ஒருவர்;- 'எல்லா வுலகமும் ஆனுய் நீயே' பாழியார் - பாழாதலையுற்றவர். பாவம் -அப்பாழாக்கிய பாவங்களை. (320) பராபரர் - 'முன்னைப் பழம் போருட்கும் முன்னைப் பழம் போருள்' (ஷை 163) பரம் அது - முதற் போருளை; பரத்துவத்தை, ஆய - ஆராய, ஆழியான் - சக்கிரத்தவன்; பாற்கடலான். 'ஆழியான் அன்புடைமை ஆம் ஆறும் இவ்வாறே?' (ஷை 162) திருமால். அன்னத்தான் - அன்னப் புள்ளூர்தியான்; நான்முகன். 'அன்றவர்க்கு அளப்பரிய பாழியார்' (ஷை 352) பாழி :- அகலம். வலி, நகரம், பேருமை, வீடு, பாழ் என்பவற்றுள் எதுவும் போருந்தும்.

359. ஆலின் கீழ் அறங்கள் எல்லாம் அவர்க்கு அன்று அருளிச்செய்து. அவர் - சாமுசித்தர்; சனகாதியர்; அகத்தியர்; புலத்தியர்; திருநந்திதேவர். ஆல் - கல்லால், கீழ் என்றது கல்லால் நிழலை, நூலின் கீழவர்கள் - மார்க்கர்கண்ட நூலோதி வீடு காதலிப்பவர் ஆகிய வைநயிகர். நுண் போருள். 'அருளால் உணர்வார்க்கு அகலாத செம்மைப் போருள்.' (வினு வேண்பா 13). (361) 'காலனைக் காலாற் காய்ந்த கடவுள்' (227). கடுக - விரைய, 'பாலின்கீழ் நேய்யும்' (623). பாலிற் படு நேய்போல் மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்' (5. 90. 10).

ஆதித்த னங்கிசோம னயனோடு மால்புதனும்
போதித்து நின்றுலகிற் போற்றிசைத் தாரிவர்கள்
சோதித்தா ரேழுலகுஞ் சோதியுட் சோதியாகிப்
பாதிப்பெண் ணுருவமானார் பழனத்தெம் பரமனாரே　360

காற்றனாற் காலற்காய்ந்து காருரி போர்த்தவீசர்
தோற்றனார் கடலுணஞ்சைத் தோடுடைக் காதர்சோதி
ஏற்றினா ரிளவெண்டிங்க ளிரும்பொழில் சூழ்ந்தகாயம்
பாற்றினார் வினைகளெல்லாம் பழனத்தெம் பரமனாரே　361

---

360. ஆதித்தன் சூரியன், அங்கி - அக்கினி, சோமன் - சந்திரன், அயன் - பிரமன், மால் - விட்டுணு. புதன் - பண்டிதன், புலவன், சூரியனை அடுத்துலவுமவன் புதன். இவர்கள் உலகோர்க்குப் போதித்து நின்று சிவபிரானைப் போற்று இசைத்து வாழ்பவர்கள். ஏழுலகும் தேடினார்கள், இவர்களுக்கு எட்டாத வண்ணம் சோதியுட் சோதியாகி மாதியலும் பாதியரானார் பரமனார்.

361. கால்தனல் - காலால். காலனைக் காய்ந்து காலனை என்னற்கியலாத இடத்து, செயப்படுபொருண்மைபடப் பாவலர் செய்துகொண்ட தொகை 'காலற்காய்ந்து' என்பது போல்வன. கார்உரி - கரிய யானைத்தோல். ஈசர் - உடையவர். பாற்கடலுள் நஞ்சைத் தோற்றுதலும், அதனை உண்டு சாவாது நின்று, அதன் வலி தொலைவித்தலும் உடையவர். இது தோற்றினார் என்று இருந்ததோ? தோற்று - தோற்றுதல்; தோற்றல், தோடு உடைக் காதர் :- 'தோடுடைய செவியன்'. 'குழையும் சுருள் தோடும்'. 'விண்ணென வருஉம் காயப்பெயர்' (தொல் காப்பியம், 305) என்றதில், வெயிலும் நிலவும் காய்தல் பற்றி விண்ணைக் காயம் என்னும் தமிழ் வழக்குண்மையுணர்க. ஆகாசம் என்னும் வடசொல் முதற் குறையாய்க் காசம் என வாராது. வரின், அது காயம்என மருவலாம். இளவெண்டிங்கள் சோதி ஏற்றினார் என்றும் இரும்பொழில் சூழ்ந்த காயம் இள வெண்டிங்கள் சோதி ஏற்றினார் என்றும் மாற்றி உரைக்கலாம். பெரியவுலகமெல்லாம் சூழ்ந்த ஆகாயத்தில் இளவெண்டிங்கள் சோதியை ஏற்றினார். 'சோதி ஏற்றினார் :-' 'அடரொளி விடையோன்றேற வல்லவர், (350). வினைகள் எல்லாவற்றையும் நீக்கினார். பாற்றுதல் - நீக்குதல், ஓட்டுதல்.

கண்ணனும் பிரமனோடு காண்கில ராகிவந்தே
எண்ணியுந் துதித்துமேத்த வெரியுரு வாகிநின்று
வண்ணநன் மலர்கடூவி வாழ்த்துவார் வாழ்த்தியேத்தப்
பண்ணுலாம் பாடல்கேட்டார் பழனத்தெம் பரமனாரே 362

குடையுடை யரக்கன்சென்று குளிர்கயி லாயவெற்பின்
இடைமட வரலையஞ்ச வெடுத்தலு மிறைவனோக்கி
விடையுடை விகிர்தன்றானும் விரலினா லூன்றிமீண்டும்
படைகொடை யடிகள்போலும் பழனத்தெம் பரமனாரே. 363

திருச்சிற்றம்பலம்

362. கண்ணன் - ஈண்டுத் திருமால், பிரமன் - மலரவன். (பா. 326. பார்க்க.) காண்கிலர் - அடிமுடி தேடி அறிகிலர். எண்ணியும் - மனத்தால் (அகத்தே) நினைந்தும். துதித்தும் - வாயால் (புறத்தே) புகழ்ந்து பாடியும். ஏத்த - எடுத்தோத. எரியுரு - ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதிவடிவம். வண்ணம் - நிறம்; அழகு. நன்மலர்கள் - மணமிக்க பூக்கள். தூவி வாழ்த்துவார் - பூசனை புரிந்து போற்றுமவர். பண்ணுலா வும் பாடல்களால் வாழ்த்தி ஏத்தக்கேட்டு அருள்கள் செய்தார் பரமனார்.

363. குடை அரசர்க்குரிய கொற்றக்குடை. குளிர் கயிலாய வெற்பு :- பேரின்பக் குளிர்ச்சி. மலைக்குக் குளிர்ச்சி சாதியடை. வெற்பினிடை .- மலை யிடையில், எடுத்த வேளையில் மடவரலை - உமாதேவியாரை, மடவரலை நோக்கி, அரக்கனை நோக்கி எனின், 'அஞ்ச' - அஞ்சுவித்து. பிறவினைப் பொருட்டாம். விடை - எருது, விகிர்தன் - சிவன்; பசுபாசங்களின் வேறுபட்டவன். படை - வாள். கொடை - நல்கலையுடைய. அடிகள் - கடவுள்.

பெருவாச மலர்ச்சோலைப் பெருவேளூர் பணிந்தேத்தி
முருகாரு மலர்க்கொன்றை முதல்வனார் பதிபிறவுந்
திருவாரும் விளமருடன் சென்றிறைஞ்சி வாகீசர்
மருவாரு ரேரித்தவர்தந் திருவாரூர் வந்தடைந்தார்.

# 37 திருநெய்த்தானம்

## திருப்பதிக வரலாறு

திருவையாறமர்ந்த தேனையுண்ட பேரின்பத்தோடு திருநெய்த்தானத்தைப் பணிந்து பாடியருளிய திருப்பதிகங்களுள் ஒன்று இத்திருப்பதிகம்.

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

காலனை வீழச்செற்ற கழலடி யிரண்டும்வந்தென்
மேலவா யிருக்கப்பெற்றேன் மேதகத் தோன்றுகின்ற
கோலநெய்த் தானமென்னுங் குளிர்பொழிற் கோயின்மேய
நீலம்வைத் தனையகண்ட நினைக்குமா நினைக்கின்றேனே. 364

காமனை யன்றுகண்ணாற் கனலெரி யாகநோக்கித்
தூமமுந் தீபங்காட்டித் தொழுமவர்க் கருள்கள்செய்து
சேமநெய்த் தானமென்னுஞ் செறிபொழிற் கோயின்மேய
வாமனை நினைந்தநெஞ்சம் வாழ்வுற நினைந்தவாறே. 365

364. காலனை வீழச் செற்ற கழலடி :- காலின் கீழ்க் காலன் றன்னைக் கடுகத்தான் பாய்ந்து 'காற்றனூர் காலற் காய்ந்து.' (359 ; 361) காலனைச் செற்ற கழலடி யிரண்டும் என் மேலனவாகி யிருக்கப்பெற்றேன் மேதகத் தோன்றுகின்ற 352. கோலம் - அழகு, குளிர் பொழிற் கோயில் - குளிர்ந்த சோலைக்குள் இருக்கும் திருக்கோயில். மேய - மேவிய ; விரும்பி எழுந்தருளிய. நீலம் வைத்த அனைய கண்ட - நீல நிறத்தை வைத்தாற் போன்ற நஞ்சுண்டு உட்புகாது நிறுத்திக் காட்டுஞ் சீகண்டனே. நினைக்குமா - தற்போதம் அற்று நின் போதத்தால் நினைக்குமாறு.

365. காமனை - மன்மதனை. அன்று சிவபிரான் யோகிருந்த காலத்தில், கண்ணுல் நெற்றி (த்தீ)க் கண்ணால், கனல் எரி - கனலும் எரி, தூமம் - புகை, தீபம் - திருவிளக்கு, காட்டி :- தூப

பிறைதரு சடையின்மேலே பெய்புனற் கங்கைதன்னை
உறைதர வைத்தவெங்க ளுத்தம னூழியாய
நிறைதரு பொழில்கள்சூழ நின்றநெய்த் தானமென்று
குறைதரு மடியவர்க்குக் குழகனைக் கூடலாமே. 366

வடிதரு மழுவொன்றேந்தி வார்சடை மதியம்வைத்துப்
பொடிதரு மேனிமேலே புரிதரு நூலர்போலும்
நெடிதரு பொழில்கள்சூழ நின்றநெய்த் தானமேவி
அடிதரு கழல்களார்ப்ப வாடுமெம் மண்ணலாரே. 367

தீபங்களை, பூசிக்கப் பெறும் பரமேசுவர சந்நிதியிற் சிவாகம விதிப்படி அசைத்துக் காணச்செய்து. தொழுமவர் :- வழி படும் அடியார். சேமம் - காவல். வாமன் - சிவபிரான்.

366 பிற - பிறை ; பிறத்தலுடையது. பிறைதருசடை - பிறையைத் தரப்பெற்ற சடை. பிறை இடப்பொருள் (தானி). சடை இடம் (தானம்). உறைதரல் - தங்குதல். உறு - உறை. நிறு - நிறை. குறு - குறை. என முதனிலை ஐஉறல் உணர்க' குறைதரும் அடியவர் - குறையிரந்து வேண்டிக்கொள்ளும் திரு வடித் தொண்டர். ' நாளும் மிகும் பணிசெய்து குறைந்தடையும் நன்னாளில் ' (பெரிய அப்பர் 45) ' இல்வாழ்வு பெறத்தரு சூலை யினுக்கு எதிர்செய் குறை என் கொல் எனத்தொழுதார் ' (ஷை 73) என்புழிப்படும் நன்றியுமாம். சிவ. போ. மாபாடியம். சூ. 12 வெண்பா (' தன்னை அறிவித்து ') உரையில் உள்ளதுணர்க

367. வடிதரு மழு - வடித்துக் கூரியதாக்கிய மழுப்படை. வார் (சடை) - வார்ந்த சடை ; நீள் சடையுமாம். பொடி தரு மேனி - ' பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறு '. புரிதரு நூலார் - ஒன்பான் கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண் ' அணிந் தவர். நெடி - சிள்வண்டு, பொழில்களின் அடை, அடிதரு கழல் - திருவடியிற் பூட்டிய வீரக் கழல், ஆர்ப்ப - ஒலிக்க. அண்ணலார் - சிவனார்க்கு இடுகுறிப் பெயர். ' ஆடல் மேவிய அண்ணலார் ' (பெரிய ஏயர்கோன் 98).

காடிட மாகநின்று கனலேரி கையிலேந்திப்
பாடிய பூதஞ்சூழப் பண்ணுடன் பலவுஞ்சோல்லி
ஆடிய கழலர்சீரா ரந்தணேய்த் தானமேன்றும்
கூடிய குழகனுரைக் கூடுமா றறிகிலேனே. 368

வானவர் வணங்கியேத்தி வைகலு மலர்கடுவத்
தானவர்க் கருள்கள்செய்யுஞ் சங்கரன் சேங்கணேற்றன்
தேனமர் போழில்கள்சூழத் திகழுநேய்த் தானமேய
கூனிள மதியினுனைக் கூடுமா றறிகிலேனே. 369

368. காடு இடம் ஆக நின்று ஆடிய கழலர். கனல் எரி ஏந்தி ஆடிய; பாடிய பூதம் சூழ ஆடிய; பண்ணுடன் பலவும் சோல்லி ஆடிய. சீரார் - சீருடையார். சீர் ஆர் நேய்த்தானம் எனலும் போருந்தும். அம் - அழகு, தண் - குளிர்ச்சி, என்றும் கூடிய - எப்போழுதும் வீற்றிருந்தருளும். குழகனுர் - அழகனுர், இளமையர். 'குழகராய் இள மடந்தையர்க்கு உருகுவோர்' (பாரத. சூதுபோர். 66) என்றலாற் காளையர் என்னும் போருட்டு மாம். கூடும் ஆறு - சிவயோக நேறி.

369. வானவர் - விண்ணுேர். பேரின்ப வீட்டினர். வைகலும் - நாள்தோறும். வைகுறு :- விடியற்போழுதில் வழிபடல் வேண்டு மேன்பது குறித்து நின்றது, வழிபாட்டிற்குரிய சிறந்த போழுது அதுவேயாகும். சிவாகம விதியிற்காண்க. மலர்கள் தூவி வழிபட்டவர்க்குச் சங்கரன் சேய்வன எல்லேயுட்படாதன ஆதலின் 'அருள்கள்' என்று பன்மையிற் கூறலாயிற்று. தான் - சங்கரனேக் குறித்து நின்ற படர்க்கை யோருமைப் பேயர். அசையுமாம் 'தான் அலாது உலகம் இல்லே' (394) 'தாம் ஆர்க்கும் குடியல்லாத் தன்மையான சங்கரன்' (6. 98) 'தங் கோல நறுங்கோன்றைத் தார் அருளாது ஒழிவானே' (119) என்னும் இடத்தில் 'தான்' 'தன்' இரண்டும் எதுகை நோக்கிய திரிபாதல் உணர்க. சங்கரன் - நலன் நல்குவான். 'சேங்கண் ஏற்றன்' 'சேங்கண் மால்விடை' யினன். தேன் அமர் - தேன் போருந்திய; வண்டுகள் விரும்புகின்ற. கூன் இளமதியம் வளேந்த பிறை.

காலதிர் கழல்களார்ப்பக் கனலேரி கையில்வீசி
ஞாலமுங் குழியநின்று நட்டம தாடுகின்ற
மேலவர் முகடுதோய விரிசடை திசைகள்பாய
மாலோரு பாகமாக மகிழ்ந்தநேய்த் தானனாரே. 370

பந்தித்த சடையின்மேலே பாய்புன லதனைவைத்து
அந்திப்போ தனலுமாடி யடிகளை யாறுபுக்கார்
வந்திப்பார் வணங்கிநின்று வாழ்த்துவார் வாயினுள்ளார்
சிந்திப்பார் சிந்தையுள்ளார் திருந்துநேய்த் தானனாரே. 371

370. கால் அது :- அது சுட்டுப் பெயர் அன்று. முதனிலைப் பொருளே தனக்கும் உரியதாக நிற்பது. ஞாலம் - மண்ணுலகம். ஈண்டு ஆடநின்ற நிலம் குறித்தது. குழிய - குழியடைய, பள்ளமுற நட்டம் - திருக்கூத்து. இது தமிழ்ப் பெயர். வடசோற் சிதைவு அன்று. கோட்டம் (கோள்+து+அம்) வட்டம் (வள்+து+அம்) போல்வது. மேலவர் - விண்ணவர் மால் ஒரு பாகம் :- 'இடமால் தழுவிய பாகம்' (14). 'மாலுங் கோப்பளித்த பாகர்' (245) 'மறிகடல் வண்ணன் பாகா' (606) 'பாகம் மாலுடையர் போலும்' (646). 'திருமாலோர் பாகன்' (750) அரியலாற்றேவி யில்லை ஐயன் ஐயாறனார்க்கே' 398.

371. பந்தித்த - கட்டிய. புனலது :- 'காலது' (370) என்பதற்கு உரைத்த துணர்க. அந்திப்போது - மாலைவேளை. அனலும் - தீயிலும். அடிகள் - கடவுள். வந்திப்பார் - வந்தனை புரிபவர் (வாயின் உள்ளார்). வணங்கி நின்று வாழ்த்துவாருடைய வாயின் உள்ளார். சிந்திப்பாருடைய சிந்தையினுள்ளார். சிந்தித்தல் நினைப்பு. வாழ்த்துதல் உரையொலி. வந்தித்தல் மெய்த்தொழில் என முப்பொறிக்கும் உரியன உணர்த்தப்பட்டன; மூன்றும் ஒருவழிப் படாதது வழிபாடன்று. (சிவஞான சித்தியார். சூ க.) 'திருந்து' என்பது நேய்த்தானத்திற்கு அடை. நேய்த்தானனார்க்கு அன்று. திருந்திய இடம்.

சோதியாய்ச் சுடருமானார் சுண்ணவெண் சாந்துபூசி
ஓதிவா யுலகமேத்த வுகந்துதா மருள்கள்செய்வார்
ஆதியா யந்தமானார் யாவரு மிறைஞ்சியேத்த
நீதியாய் நியமமாகி நின்றநேய்த் தானனாரே. 372

இலையுடைப் படைகையேந்து மிலங்கையர் மன்னன்றன்னைத்
தலையுட னடர்த்துமீண்டே தானவற் கருள்கள்செய்து
சிலையுடன் கணையைச்சேர்த்துத் திரிபுர மெரியச்செற்ற
நிலையுடை யடிகள்போலு நின்றநேய்த் தானனாரே. 373

திருச்சிற்றம்பலம்

372. சோதி - ஒளி. சுடர் - முச்சுடர், முச்சுடர்க்கண்ணும் நின்று ஒளிரும் முதற் பொருளே சோதி, அச்சோதிக்கும் இடம் முச்சுடர். 'அருக்கனுவான் அரனுரு' (5. ஈற்றுத் திருப்பதிகம் 8). 'நிலம் நீர் நெருப்புயிர் நீள்விசும்பு. நிலாப் பகலோன் புலனாய மைந்தனோடு எண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்' (திருவாசகம்). என்பனவற்றால், சுடருளும் புணர்ந்துநின்றவன் முதல்வன். புணரும் இடம் சுடர் எனல் இனிது விளங்கும். 'சுண்ணவெண் சாந்து' 'சுண்ணவெண் சந்தனச்சாந்தும்'(11) 'சுண்ண வெண்பொடி' (5. 10. 9). 'சுண்ணத்தர் சுடுநீறுகந் தாடலர்' (5. 87. 7). உலகம் - உயர்ந்தோர், உலகம் வாய் ஓதி ஏத்த என்றும் தாம் உகந்து அருள்கள் செய்தார் என்றும் கொள்க. ஓதி - ஓதத்தை யுடையது; கடல். வாய் - இடம்; ஓதிவாயுலகம் - கடலிடைப்பட்ட உலகம் எனலும் ஆம். ஆதியும் (முதலும்) அந்தமும் (முடிவும்) ஆனார். யாவரும் எச் சமயத்தவரும். நீதி - நன்னெறி; நியாயம்; முறைமை. நியமம் - நிச்சயம். தவம் முதலிய பத்துமாம். (சைவ வினாவிடை 29) 'நீதியானை நியம நெறிகளை ஓதியானை' (5. 94. 6) என்றதால் இது விளங்கும்.

373. இலையுடைப்படை :- 'ஒளிறு இலை எஃகு' - 'விளங்கிய இலையையுடைய வேல்'. (புறம். 26) 'திருந்திலை நெடுவேல்' - 'திருந்தின இலையையுடைய நெடியவேல்' (ஷை 180) 'நச்சிலைவேல்' - 'நஞ்சு தோய்த்த அலகையுடைய வேல்' (சிந்தாமணி. 2209). அவற்கு - அ(வ் விலங்கையர் தலை) வனுக்கு. தான் (அருள்கள்) செய்து. சிலை - மேருவில். கணை - மால்கணை. நிலை - அழியாத நிலைமை.

# 38 திருவையாறு

## திருப்பதிக வரலாறு

பனிவரைப் பொய்கையில் மூழ்கித் திருவையாற்றில் ஓர் வாவி மீது தோன்றி வந்து, உலகெலாம் வியப்ப எழுந்து கரையில் ஏறித் திருவருட் பெருமையையுணர்ந்து, கண்ணீர் வாவியிற் படிந்தெழும் படியராய் எல்லாம் சிவமயமாம் இன்ப நிலையில் சிவ தரிசனம் புரிந்து, அந்த ஆனந்தக் கடலைக் கண்ணுலும் முகந்துகொண்டு வணங்கிப் பாடியருளிய பலவற்றுள் ஒன்று இத் திருப்பதிகம்,

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

கங்கையைச் சடையுள்வைத்தார் கதிர்பொறி யரவும்வைத்தார்
திங்களைத் திகழவைத்தார் திசைதிசை தொழவும்வைத்தார்
மங்கையைப் பாகம்வைத்தார் மான்மறி மழுவும்வைத்தார்
அங்கையு ளனலும்வைத்தா ரையனை யாறனுரே. 274

பொடிதனைப் பூசவைத்தார் பொங்குவெண் ணூலும்வைத்தார்
கடியதோர் நாகம்வைத்தார் காலனைக் காலவைத்தார்
வடிவுடை மங்கைதன்னை மார்பிலோர் பாகம்வைத்தார்
அடியிணை தொழவும்வைத்தா ரையனை யாறனுரே. 375

374. சடையுள் கங்கையும் பாம்பும் திங்களும் திகழ வைத்தார். எல்லாத் திசையிலும் (எல்லாவுயிர்களும்) தொழ வைத்தார். மங்கையை இடப்பால் வைத்தார். மான் கன்றும் மழுப்படையும் தீயும் திருக்கையில் வைத்தார். ‘மான் மறியும் மாமழுவும் அனலும் ஏந்துங் கையானே’ 6. 62. 7. ஐயன் ஐயாறனுர் :- ஒருமையும் பன்மையும் மயங்கின அல்ல. இது வழக்கினுகிய உயர் சொற் கிளவி; ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவி.

375. திரு வெண்ணீற்றைப் பூசிப் பாசந்தீர வீடுபெற உயிர்களிடத்துக்கொண்ட பேரருளால் சிவாகமங்களில் விதி வகுத்தார். பூசப் பொடியை வைத்தாருமாம். பொங்குவெண்

உடைதரு கீளும்வைத்தா ருலகங்க ளனைத்தும்வைத்தார்
படைதரு மழுவும்வைத்தார் பாய்புலித் தோலும்வைத்தார்
விடைதரு கொடியும்வைத்தார் வெண்புரி நூலும்வைத்தார்
அடைதர வருளும்வைத்தா ரையனை யாறனாரே. 376

தொண்டர்க டொழவும்வைத்தார் தூமதி சடையில்வைத்தார்
இண்டையைத் திகழவைத்தா ரெமக்கென்று மின்பம்வைத்
வண்டுசேர் குழலினாளை மருவியோர் பாகம்வைத்தார் [தார்
அண்டவா னவர்களேத்து மையனை யாறனாரே. 377

னூல் - பொங்குகின்ற வெள்ளைப் பூணுநூல். கடும்பாம்பு. காலனை (உயிர்) கக்க வைத்தார். 'வடிவுடை மங்கை' **திருத்** தலத்துநாயகி, மார்பில் ஓர் பாகம் வைத்தார் :- 'மலைமகள் **கைக்** கொண்ட மார்பு' (17) முதலிய பிற இடத்தும் 'மார்பு' **என்ற** துணர்க. அடியிணை - திருவடித்துணை (இரண்டு) '**பாதங்கள்** பரவ வைத்தார்' (382).

376. உடைதருகீழ் :- கிழி - கீழ் - கீள், மரூஉ. '**சடை**யும் பிறையும் சாம்பற்பூச்சும் கீளுடையுங் கொண்டவுருவம்' (திருக்கோலக்கா). உலகங்கள் அனைத்தும் வைத்தார் :- (379) 'எல்லாவுலகமும் ஆனாய்நீயே' 'இறையவன்காண் ஏழுலகும் ஆயினான் காண்', படை தருமழு - எதிர்த்தோரைப் படுத்தலைத் தரும்மழு. தடுத்தல் - தடை ; கொடுத்தல் - கொடை ; படுத்தல் - படை. விடைதரு கொடி - எருதுரு எழுதிய கொடி. வெண் ணூல், புரிநூல். அடைதர - அடைய.

377. பத்தர்கள் பணியவைத்தார் (382) தொழவும் என்ற உம்மையாற் பிறவழிபாடுகளும் கொள்ளப்படும். தூமதி :- வெண்டிங்கள். இண்டை :- சிவலிங்கத்திற்கு இன்றியமையாத தொரு மாலை. இலையும் பூவும் இடையிட்டுத் தொடுக்கும் வகையது. 'இண்டைகட்டி வழிபாடு செய்யுமிடம்......கேதாரம் (சம்பந்தர்). 'முருகார் நறுமலர் இண்டைதழுவி வண்டே முரலும் பெருகு ஆறு அடை சடைக்கற்றையினாய்' (1061). 'இந்திரன் வனத்து மல்லிகை மலரின் இண்டை சார்த்தியதென நிறைந்த சந்திரன் முடிமேல் வந்துறுஞ் சோணசைலனே கைலைநாயகனே'

வானவர் வணங்கவைத்தார் வல்வினை மாயவைத்தார்
கானிடை நடமும்வைத்தார் காமனைக் கனலாவைத்தார்
ஆனிடை யைந்தும்வைத்தா ராட்டுவார்க் கருளும்வைத்தார்
ஆனையி னுரிவைவைத்தா ரையனை யாறனாரே. 378

சங்கணி குழையும்வைத்தார் சாம்பர்மெய் பூசவைத்தார்
வேங்கதி ரேரியவைத்தார் விரிபோழி லனைத்தும்வைத்தார்
கங்குலும் பகலும்வைத்தார் கடுவினை களையவைத்தார்
அங்கம தோதவைத்தா ரையனை யாறனாரே. 379

(57). எமக்கு இன்பம் என்றும் வைத்தார் :- 'இன்பமே எந் நாளும் துன்பம் இல்லை' அண்டவானவர்கள் - அண்டங்களில் வாழும் வானோர்கள்.

378. வானவர்கள் :- தேவர்; பேரின்பம் எய்தியவர். வல்வினை :- ஆகாமியம்; சஞ்சிதம்; பிராரத்தம். மாய - மறைய; அழிய. கான் - சுடுகாடு. நடம் - திருக்கூத்து. காமன் - கருவேள். கனல் ஆ - தீ (யந்து சாம்பர்) ஆக. ஆனிடை யைந்து :- ஆவினிடத்துக்கொள்ளப்படும் பால், தயிர், நெய். 'ஆடினாய் நறுநெய்யோடு பால் தயிர்'. ஆட்டுவார்க்கு - திருவபி டேகம் புரியும் அன்பர்க்கு. அருள் - வேண்டுவார். வேண்டுவ - ஈவன. உரிவை - தோல்.

379. சங்கு அணி குழை - சங்கறுத்துச்செய்த அழகிய குழை, சாம்பர் :- சாம்பற்பூச்சு. வேங்கதிர் - சூரியன். எரிய - காய; வெயில் செய்ய. விரிபொழில் அனைத்தும் வைத்தார் :- 376 கங்குலும் பகலும் வைத்தார் :-'வேங்கதிர் எரியவைத்தார்' என்றது ஏது. இது பயன். கடுவினை களையவைத்தது உயிர்கட்கு. அங்கமது :- வேதாங்கம் ஆறு ஆயினும், அங்கம் என ஒன்றுதல் பற்றி அங்கமவை என்றிலர். குரு முகத்துணரற்பாலன என்பார். 'ஓதவைத்தார்' என்றார். இது மும்மலம் நீக்கும் அருள் வழி யைத் தெளிவிக்கின்றது.

பத்தர்கட் கருளும்வைத்தார் பாய்விடை யேறவைத்தார்
சித்தத்தை யோன்றவைத்தார் சிவமதே நினையவைத்தார்
முத்தியை முற்றவைத்தார் முறைமுறை நெறிகள்வைத்தார்
அத்தியி னுரிவைவைத்தா ரையனை யாறனூரே. 380

ஏறுகந் தேறவைத்தா ரிடைமரு திடமும்வைத்தார்
நாறுபூங் கொன்றைவைத்தார் நாகமு மரையில்வைத்தார்
கூறுமை பாகம்வைத்தார் கோல்புலித் தோலும்வைத்தார்
ஆறுமோர் சடையில்வைத்தா ரையனை யாறனூரே. 381

380. பத்தர்கட்கு அருளும் வைத்தார் :- ' ஆட்டுவார்க்கு அருளும் வைத்தார்.' (378), ' சித்தத்தை ஒன்றவைத்தார் ' :- ' சிந்தையுள் ஒன்றிநின்று ' (473) 'ஒன்றியிருந்து நினைமின்கள்' ' சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்.' சிவமதே நினையவைத்தார் :- 'சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சு' (காஞ்சிப் புராணம்), நெஞ்சம் உமக்கே இடமாகவைத்தேன். முத்தி - பாசவீடும் சிவப்பேறும். முற்ற - இன்ப நிறை வெய்த. விடுதலும் பெறுதலும் முற்ற. " பெற்ற சிற்றின்பமே பேரின்ப மாய் அங்கே முற்றவரும் பரிசுந்தீபற முளையாது மாயை என்றுந் தீபற." (33) முறை முறை நெறிகள் வைத்தார் :- ' புறச்சமய நெறி நின்றலும் '....... சிவனடியைச் சேர்வர்'. (சித்தியார் 263) அத்தி - யானை. உரிவை (378). ' சித்தரை ' எனல் சிறந்தது.

381. ஏறு உகந்து ஏறவைத்தார் :- (34), இடைமருது - திருவிடை மருதூர். இடம் - திருக்கோயில். நாறு பூ - மணம் நாறும் பூ. நாகம் - பாம்பு, அரை - இடை, கூறு - இடப்பால், உமை - உமாதேவியார், ஆறும் - கங்கையையும். நாகமும் என்ற தால் அக்கும், புலித்தோலும் என்றதால் யானைத்தோலும், மான் றோலும், ஆறும் என்றதால் இளம்பிறை முதலியனவும் கொள்ள வைத்தார் அப்பர். ' மருதிடமும் ' என்றது வேறுள்ள சிவதலங் களையும் வைத்ததைக் குறித்த உம்மை, தலைமருதும் புடை மருதும் குறித்த உம்மையுமாம்.

பூதங்கள் பலவும்வைத்தார் போங்குவே'ண் ணீறும்வைத்தார்
கீதங்கள் பாடவைத்தார் கின்னரந் தன்னைவைத்தார்
பாதங்கள் பரவவைத்தார் பத்தர்கள் பணியவைத்தார்
ஆதியு மந்தம்வைத்தா ரையனை யாறனாரே. 382

இரப்பவர்க் கீயவைத்தா ரீபவர்க் கருளும்வைத்தார்
கரப்பவர் தங்கட்கெல்லாங் கடுநர கங்கள்வைத்தார்
பரப்புநீர்க் கங்கைதன்னைப் படர்சடைப் பாகம்வைத்தார்
அரக்கனுக் கருளும்வைத்தா ரையனை யாறனாரே. 383

திருச்சிற்றம்பலம்

382. பூதங்கள் பலவும் :- 'பூதப் படையான்'. போங்கு வேண்ணீறு :- திருநீற்றின் வெண்மை போங்குதல் குறித்தது. போல்+கு=போங்கு, (மருஉ). போலிவு, திருநீற்றுப் போலிவு, மிகுதிப் போருட்டாதற்கும் இதுவே காரணம். கீதங்கள் - பாட்டுக்கள். சாமகீதம் முதலியன. கின்னரம் - பாடல், இசை. 283. 328. 330. 375. 377.

383. இரத்தல் புரத்தல் இரண்டும் மறுதலைப் போருளன. 'இரவலர் புரவலை நீயும் அல்லை. (162). புரவலர்க்கு இரவலர் இல்லையும் அல்லர். இரவலர் உண்மையும் காண் இனி. இரவலர்க்கு ஈவோர் உண்மையும் காண் இனி.' 'நாளும் புரவலர் புன்கண் நோக்காது இரவலர்க்கு அருகாது ஈயும் வண்மை உரை சால் நெடுந்தகை.' புறநானூறு, 162, 329) 'புரவுக் கடன்' (ஷ. 149) போல இரவுக் கடன் என வேண்டாமையாலும் மறுதலை என்பது புலனாகும். புரப்பவர் இரப்பவர்க்கு ஈயவைத்தல், ஈயப் பல போருள்களை வைத்தல், ஈய இரக்கம் வைத்தல் முதலிய பலவும் ஈண்டுக் கருதுக. ஈபவர்க்கு - இரப்பவர்க்கு ஈந்து புரப்பவர்க்கு. அருள் :- 'வல்லாராயினும் வல்லுநராயினும் வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி' வழங்குதற்கு ஏதுவான அருள். (புறம். 27). 'எத்துணை யாயினும் ஈத்தல் நன்று என மறுமை நோக்கின்றோ அன்றே பிறர் வறுமை நோக்கின்று அவன் கைவண்மையே' (ஷ. 147) என்ற நோக்கு(கருத்து)டையார்க்கு எழுமையும் உதவும் அருள். கரப்பவர் - ஈயாது மறைப்பவர். கரப்பவர்க்குக் கடுநரகங்கள் வைத்தார் என்றது நோக்கின், ஈபவர்க்கு வைத்த அருள் இறைவன் திருவருளே ஆகும்; ஈவோர் நெஞ்சிரக்கம் அன்று எனல் இனிது விளங்கும்.

## 39 திருவையாறு

### திருப்பதிக வரலாறு

திருநாவுக்கரசர் திருவையாற்றில் அமர்ந்து அண்டர் பிரானைப் பாடியவற்றுள் ஒன்று இத் திருப்பதிகம்.

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

குண்டனாய்ச் சமணரோடே கூடிநான் கொண்டமாலைத்
துண்டனே சுடர்கொள்சோதீ தூநெறி யாகிநின்ற
அண்டனே யமரரேறே திருவையா றமர்ந்ததேனே
தொண்டனேன்றொழுதுன்பாதஞ்சொல்லிநான் றிரிகின்றேனே

பீலிகை யிடுக்கிநாளும் பெரியதோர் தவமென்றெண்ணி
வாலிய தறிகள்போல மதியிலார் பட்டதென்னே
வாலியார் வணங்கியேத்துந் திருவையா றமர்ந்ததேனோ
டாலியா வெழுந்தநெஞ்ச மழகிதா வெழுந்தவாறே. 385

384. குண்டன் - மூர்க்கன். நான் சமணரோடே நான் குண்டனாய்க் கூடிக்கொண்ட மாலைத் துண்டனே என்க. மாலை - மயக்கத்தை, துண்டனே - துணித்தவனே. சுடர்கொள் சோதி - முச்சுடரும் கொண்ட ஒளியே. ‘மெய்ச்சுடருக் கெல்லாம் ஒளி வந்த பூங்கழல் உத்தரகோச மங்கைக் கரசே’ (திருவாசகம். 119) ‘அருக்கனாவான் அரனுரு அல்லனோ’ ‘சோதியாய்ச் சுடருமானார்’ ‘ஞாயிறாய்......சோமனாகித் தீ...ஆகி. ‘திசையி னோடு ஒளிகள் ஆகி’. தூநெறியாகிநின்ற அண்டன் :- ‘முன்னெறியாகிய முதல்வன்’ (112). அண்டத்திற்குச் செல்லும் தூநெறியாகி நின்றவன். ‘அண்டவாணன்’. சிவனருள் வெளியே ஈண்டு அண்டம் எனப்பட்டது. அமரர் ஏறு :- தேவர்கோ அறியாத தேவ தேவே’, ‘தேன்’ என்றதன் கருத்து திருவையாற்றில் ஒரு பேட்டகத்துள் எழுந்தருளிய சிவலிங்கப்பெருமானுக்குத் தேனூட்டு நிகழும்போழுது கண்டு உணர்ந்து கொள்ளத் தக்கது.

385. பீலி - மயிற்பீலி, ‘பெரியதோரு தவம்’ என்று எண்ணுவதும் மதியின்மையே. வாலிய தறிகள் - வெள்ளைத்

தட்டிடு சமணரோடே தருக்கிநான் றவமேன்றெண்ணி
ஒட்டிடு மனத்தினீரே யும்மையான் செய்வதென்னே
மோட்டிடு கமலப்பொய்கைத் திருவையா றமர்ந்ததேனோ
டோட்டிடு முள்ளத்தீரே யும்மைநா னுகந்திட்டேனே. 386

தடிகள். வாலியம் பாலப் பருவத்தைக் குறித்ததாகக்கொண்டு, முழுமக்கள் (மதியிலார்) என்றதற்கேற்ப வுரைத்தலும்கூடும். வாலியார் :- திரு வடகுரங்காடுதுறைத் திருப் பதிகத்திலே, 'கோலமாமலரோடு தூபமும் சாந்தமும் கொண்டு போற்றி வாலியார் வழிபடப் பொருந்தினர் திருந்து மாங்கனிகள் உந்தி ஆலுமா காவிரி வடகரை அடை குரங்காடுதுறை நீலமாமணிமிடற் றடிகளை நினைய வல்வினைகள் வீடே' என்றும் 'நீலமாமணி நிறத் தரக்கனை இருபது கரத்தொடு ஒல்க வாலினாற் கட்டிய வாலியார் வழிபட மன்னுங் கோயில்' என்றும் திருஞானசம்பந்தர் அருளிய துணர்க. ஆலித்தல் - களித்தல். 'ஆலிக்கும் அந்தணர் வாழ்கின்ற சிற்றம்பலம்' (திருப்பல்லாண்டு) ஆலியா - ஆலித்து.

386. தட்டு இடு சமணர் :- 'தட்டை யிடுக்கத் தலையைப் பறிப்பார்' (1. 69. 10) 'தாறிடு பெண்ணைத் தட்டுடையார்' (1. 101. 10). 'தட்டிடுக்கி உறி தூக்கி' (2. 119. 10). 'தடுக்கால் உடல் மறைப்பார்' (1. 13. 10), 'தடுக்குடை கையர்' (1. 7. 10) என்பவற்றால், சமணர் பெண்ணை (பனை) த் தட்டு; தடுக்கு உடையவர் என்பது வெளிப்படும். தருக்கி - செருக்குற்று. இதில் 'மனத்தினீரே' - 'உள்ளத்தீரே' என்பன, முறையே சமணம் சைவம் இரண்டனுள்ளும் நாயனர் தாம் உற்ற நிலைமையைக் குறித்த விளியாகும். நான் சமணரோடே தருக் -கித் தவம் என்று எண்ணி ஒட்டினேன். மனமும் அதை ஒட் டிற்று. திருவையாறமர்ந்த தேனோடு ஒட்டினேன். உள்ளமும் ஒட்டிற்று. 'ஒட்டிட்ட பண்பு' உள்ளாத மனம் அது உள்ளிய உள்ளம் இது. அதனை உகந்திட்டிலர். இதனை உகந்திட்டார். 388-ஆவது திருப்பாடலிலும் இவ்வாறே மதியிலா நெஞ்சம் அருந்தவம் புரிந்த நெஞ்சம் என்று பகுத்துணர்த்துவதறிக. மோட்டு இடு கமலம் பொய்கை - அரும்புகளிடு செந்தாமரைக் குளம்.

பாசிப்பன் மாசுமெய்யர் பலமிலாச் சமணரோடு
நேசத்தா லிருந்தநெஞ்சை நீக்குமா றறியமாட்டேன்
தேசத்தார் பரவியேத்துந் திருவையா றமர்ந்ததேனை
வாசத்தால் வணங்கவல்லார் வல்வினை மாயுமன்றே. 387

கடுப்பொடி யட்டிமெய்யிற் கருதியோர் தவமென்றெண்ணி
வடுக்களோ டிசைந்தநெஞ்சே மதியிலி பட்டதென்னே
மடுக்களில் வாளைபாயுந் திருவையா றமர்ந்ததேனை
அடுத்துநின் றுன்னுநெஞ்சே யருந்தவஞ் செய்தவாறே. 388

துறவியென் றவமதோரேன் சொல்லிய செலவுசெய்து
உறவினு லமணரோடு முணர்விலே னுணர்வொன்றின்றி
நறவமார் பொழில்கள்சூழ்ந்த திருவையா றமர்ந்ததேனை
மறவிலா நெஞ்சமேநன் மதியுனக் கடைந்தவாறே. 389

387. பாசிப்பல் - வெண்மை நீங்கிப் பசுமை உற்ற பற்கள். மாசு மெய் - அழுக்குடல், பலம் - வன்மை. விரதத்தால் இளைத்தல். 'அநந்த விரதம்' என்றும் ஒன்றுண்டு. நேசம் - பற்று நே - அன்பு. நே+அம் - நேயம், நேசம். தேசத்தார் - உலகோர். வாசத்தால் வணங்க வல்லார் :- திருவையாற்றில் வாசம் புரிந்து வழிபட வல்லவர்; வாசனையுடைய மலர், புகை முதலியவற்றால் வழிபட்டிறைஞ்ச வல்லவர். சிவபுண்ணியமே பசுவினை இரண்டும் மாய்க்கும்.

388. கடுப்பொடியட்டி மெய்யில் .- 'முசுகடுப் பொடியார்' (1. 43. 10) 'கடுப்பொடி யுடற் கவசர்' (3. 74. 10). மெய்யிற் கடுப்பொடி அட்டி என்று மாற்றிக்கொள்க. வடுக்கள் - குற்றங்கள். மதியிலி - அறிவிலி. பட்டது - அடைந்தது. அருந்தவம் - திருவையாறமர்ந்த தேனை அடுத்து நின்று உன்னும் பயனை அளித்தது. 'உன்னும் உளது ஐயம் இலது உணர்வாய் ஓவாது மன்னுபவந்தீர்க்கும் மருந்து' (திருவருட் பயன் 10)

389. துறவி என்று அவம் அது ஓரேன் :- முற்றத் துறந்தோர் என்று நம்பி, சமணருடைய அவச் செயலை ஓராது தவச்

பல்லுரைச் சமணரோடே பலபல காலமெல்லாம்
சொல்லிய செலவுசெய்தேன் சோர்வனு னினைந்தபோது
மல்லிகை மலருஞ்சோலைத் திருவையா றமர்ந்ததேனை
எல்லியும் பகலுமெல்லா நினைந்தபோ தினியவாறே. 390

செயலாகத் திரிபுபட ஓர்ந்தேன். அது சுட்டன்று. அவம் என்னுஞ் சொல்லின் பொருளே தனக்குரித்தாக நின்றது. பகுதிப் பொருள் விகுதி என்பர்; சுட்டுதலின்மையால், இது உது இரண்டும் அங்கனம் நிற்றலில்லை. குருந்தமதுவ் 392. சொல்லிய செலவு (390) பலபல காலமெல்லாம் சொல்லிய செலவு செய்தேன். சமணர் சொல்லியவற்றிலே செல்லுதல். சமணால் சொல்லியவும் ஆம். உணர்தல் ஒன்றும் இன்றி உணர்விலேன் ஆனேன் என ஆக்கம் வருவித்துரைக்க. நறவம் - தேன். மறவு - மறத்தல். நன்மதி - நல்லுணர்வு. சிவஞானம். அடைந்தவாறு என்னே என்க.

390. பல்லுரைச்சமணர்:- 'அநேககாந்த வாதம்' கூறும் ஆருகதர். 'உடம்பு எடுத்தற்குமுன் சீவன் உண்டோ இல்லையோ என்று வினயவழி, 1. உண்டாம். 2. இல்லையாம். 3. உண்டும் இல்லையும் ஆம். 4. சொல்லொணததாம். 5. உண்டுமாம் சொல்லொணததும்ஆம். 7. உண்டும் இல்லையும் ஆம் சொல்லொணததும் ஆம் என எழுவகையான் இறுத்தல். வினயவையெல்லாம் இவ்வாறே இறுக்கப்படும். ஆம் என்பது ஈண்டுச் சற்று என்னும் பொருட்டாயதோர் இடைச்சொல். சொல்லொணதது என்பது உளதும் இலதும் அல்லாதது என்னும் பொருட்டு என்பது. எனவே 1. உள்ளதும் 2. இல்லதும் 3. உளதிலதும் 4. இரண்டும் அல்லதும் என நான்கு பக்கமாய், இரண்டும் அல்லது என்னும் பொருட்டாகிய சொல்லொணதது (என்பதனெடு) 5. உள்ளதும் 6. இல்லதும். 7. உளதிலதும் என்னும் மூன்றும் கூட்ட ஏழுபக்கம் ஆயின எனக் காண்க". (சிவஞான போதமா பாடியம். அவையடக்கம் :- புறப்புறச் சமயம்; ஆருகதம் என்னும் மதத்தின் விளக்கம்) பல் (ஏழு) வகையாயுரைத்தலாற் பல்லுரைச் சமணர் ஆயினர். பலபல காலமெல்லாம் சொல்லிய செலவுசெய்தேன். (389), நினைத்த போது சோர்வன் நான். 'களவுபடாததோர் காலம் காண்

மண்ணுளார் விண்ணுளாரும் வணங்குவார் பாவம்போக
எண்ணிலாச் சமணரோடே யிசைந்தனே யேழைநெஞ்சே
தேண்ணிலாவெறிக்குஞ்சென்னித்திருவையாறமர்ந்ததேனைக்
கண்ணினாற் காணப்பெற்றுக் கருதிற்றே முடிந்தவாறே. 391

குருந்தம தோசித்தமாலும் குலமலர் மேவினானும்
திருந்துநற் றிருவடியுந் திருமுடி காணமாட்டார்
அருந்தவ முனிவரேத்துந் திருவையா றமர்ந்ததேனைப்
போருத்திநின் றுன்னுநெஞ்சே போய்வினை மாயுமன்றே. 392

பான் கறைக் கணிக்கின்றேன்' என்றது இது குறித்தே போலும். எல்லி - இரவு, இராப்பகலா நினைத்தாற் காலங்களவு படாதன்றோ ?

391. ஏழை நெஞ்சே, தெண்ணிலா எறிக்கும் சென்னித் திருவையாறமர்ந்த தேனைக்கண்ணினாற் காணப்பெற்றுக் கருதிற்றே முடிந்தவாறே. மண்ணுளாரும் விண்ணுளாரும் (தம்தம்) பாவம்போக 'அத்தேனை' வணங்குவார். (இந் நலத்தை அன்றே அடையாமல்) எண்ணிலாச் சமணரோடே இசைந்தனே. இத்திருப்பதிக முழுவதும் திருவையாற்றிலே சிவாநந்தத்தேனை நுகரும் பேரின்பத்தை முன்னரே அடையவோட்டாது செய்த சமண சமயச்சார்வை நினைந்து, எற்றேன்றிரங்கிக் கூறிய வாறறிக. எண்ணியமை - அளவில்லாமை, ஆராய்ச்சியின்மை எண்ணத்தின்படி செயலில் நில்லாமை. எறிக்கும் - வீசும். சென்னியிற் பிறைவீசும் சிவாநந்தத்தேன் வாயாலுண்ணத்தக்க தன்று. கண் (கருத்து) காணத்தக்கது. கருதியது வீடுபேறு.

392. குருந்தமது - குருந்த மரத்தை, 'அவமது' (389) என்றதன் குறிப்புணர்க. ஒசித்த - ஒடித்த. இது மால் குருந்த மரம் ஒடித்த வரலாற்றுக் குறிப்பு. குலமலர் - தாமரை, 'பூவினுக் கருங்கலம் பொங்குதாமரை,' 'பூவிற்குத் தாமரையே' 'பூவெனப்படுவது பொறிவாழ் பூவே' எனப்படும் மேன்மை குலமாகும். மேவினான் பிரமன், திருந்து நற்றிருவடி :- ஆன்மாக்கள் தம்மைத் திருத்திக்கொண்டே சென்றெய்தும் இயல்பிற் கேற்பத் திருவடி திருந்த விளங்கும். 'திருந்து தொண்டர்கள்

செப்புமின் மிகச்செல்வன்றன்னது திறமேலாம்' (3 38. 7.) 'அருளாற் சிந்தனையைத் திருத்தி ஆண்டசிவலோகா' (திருவாசகம் 491) என்னும் உண்மையால், திருந்திய அருளே திருந்தாச் சிந்தையைத் திருத்தவல்லதாதல் விளங்கும். திருத்தல் - இச்சா ஞானக்கிரியை ஆகிய மூன்றனையும் தன் கரணமாக்கிப் பசுகரணமாகத் தொழிற்படாது செய்தல், திருவடியும் திருமுடியும் அருளுருவத் திருமேனி குறித்தவை. அருவம், அருவுருவம், உருவம் மூன்றனையுங்கடந்த நிலையில், 'பரை உயிரில் யான் எனது அற நின்றது அடியாம். பார்ப்பிடம் எங்கும் சிவமாய்த் தோன்றலது முகமாம். உரையிறந்த சுகமதுவே முடியாகும்' (உண்மைநெறி விளக்கம் 4) என்று தெளிக. நிரல் நிறையாகக் கொண்டு, மால் திருவடிகாணமாட்டான். மலர்மேவினுன் திருமுடி காணமாட்டான் என்றுரைக்க. அருந்தவ முனிவர் :- அப்பமூர்த்திகள் திருக்கண்ணுற் காணப்பெற்ற அக்காலத்து மாதவர்கள். 'ஏத்தும்' என்று நிகழ்காலத்தாற் கூறிய துணர்க. பொருந்தி நின்றுன்னுதல் - ஒன்றியிருந்து நினைத்தல். பொய்வினை:- மூலகன்மத்தின் காரியமாய்த் தோன்றியழியும் ஆகாமியம் சஞ்சிதம் பிராரத்தம் என்பன. வினை ஈட்டப்படுங்கால் மந்திரம் முதலிய அத்துவாக்களிடமாக முறையானே மனம் வாக்குக் காயம் என்னும் மூன்றுன் ஈட்டப்பட்டுத் தூலகன்மமாய் ஆகாமியம் எனப் பெயர் பெறும். பின்னர்ப் பக்குவம் ஆங்காறும் சூக்குமகன்மமாய்ப் புத்திதத்துவத்தினிடமாக மாயையிற்கிடந்து, சாதி ஆயுப் போகம் என்னும் மூன்றற்கும் ஏதுவாகி, முறையே சனகம் தாரகம் போக்கியம் என மூவகைத்தாய், அபூர்வம், சஞ்சிதம், புண்ணிய பாவம் என்னும் பரியாயப் பெயர்பெறும். அது பின்னர்ப் பயன்படுங்கால் ஆதிதைவிகம், ஆத்தியான்மிகம், ஆதிபௌதிகம் என்னும் முத்திறத்தாற் பலதிறப்பட்டுப் பிராரத்தம் எனப்பெறும் என்றுணர்க. (சிவஞானமாபாடியம். சூ 2. அதி. 2). 'வேருகப் பார்த்திருப்பதன்றியே பாழான கன்மத்தை நீத்திருக்கலாமோ நிலத்து' (91) 'முன்னை வினைக்கு ஈடா முதல்வன் அருள் நமைக் கொண்டு என்ன வினை செய்ய இயற்றுமோ? இன்னவினை செய்வோம் தவிர்வோம் திரிவோம் இருப்போம் இங்கு உய்வோம் எனும் வகை ஏது?' (87) 'எடுத்த உடற்கேய்ந்த கன்மம் எப்போதும் ஊட்டும்' (77) மன வாக்குக் காயம் மன்னியசைப்பானும் அனமாதிபோகம் அளிப்பானும் நனவாதி கூட்டிவிடுவானும் முத்தி கூட்டிடுவானும் பிறப்பில்

அறிவிலா வரக்கனோடி யருவரை யெடுக்கலுற்று
முறுகினான் முறுகக்கண்டு மூதறி வாளனோக்கி
நிறுவினான் சிறுவிரலா னேரிந்துபோய் நிலத்தில்வீழ
அறிவினா லருள்கள்செய்தான் றிருவையா றமர்ந்ததேனே.

திருச்சிற்றம்பலம்

ஆட்டிவிடுவானும் அரன் ' (86) என்று தருமைக் குருமுதல்வர் அருளிய சிவபோகசாரம் ஈண்டுணரத்தக்கது.

393. அரக்கன் ஓடி எடுக்கல் உற்று முறுகினான் முறுகக் கண்டு மூதறிவாளன் நோக்கிச் சிறுவிரலால்நிறுவினான். நேரிந்து போய் நிலத்தில் வீழச் சிறு விரலால் நிறுவினான். அறிவினால் அருள்கள் செய்தான். அவன் யார் எனில் அவனே திருவையா றமர்ந்ததேன் ஆவான் என்க. மலையெடுத்தது அறிவின்மை யால். சாமகானம் பாடி அருள்கள் பெற்றது அறிவினால். அறிவு என்பது இறைவனது கருணை என்னும் சத்தியைக் குறித்ததாகக் கொண்டு, இரக்கத்தால் எனலும் பொருந்தும். மூதறிவாளன், எழுவாய், காண்டல் நோக்கல் நிறுவல் செய்தல் நான்கும் அவன் வினைகள். அறிவின்மை, எடுக்கலுறுதல், முறுகல், நேரிதல், போதல், வீழ்தல், அரக்கனுடையன. அறிவு இருவரதுமாம். வீழ்ந்ததால், பாடி உருக்கும் அறிவு தோன்றப்பெற்றான். வீழக் கண்டதால் இறைவன் இரங்கி அருளினான். ' அறிவிலி அரக் கன் ' என்றதால், மூதறிவாளனை நோக்கி என இரண்டனுருபு விரித்தல் பொருந்தாது. தன் குற்றமும் அதற்குத் தீர்வும் அறிந் ததே ஆண்டு அறிவாம்.

பற்றேன் றிலாவரும் பாதக ராகு மமணர்தம்பால்
உற்ற பிணியொழிந் துய்யப்போந்தேன் பெறலாவதொன்றே? [மென்
புற்றிடங் கொண்டான்றன் றொண்டர்க்குத் தொண்டராம் புண்ணிய
றற்ற வுணர்வொடு மாரூர்த் திருவிதி யுள்ளணைந்தார்.

காண்ட லேகருத் தாய்நினைந் தென்னும் கலைப்பதிகந்
தூண்டா விளக்கன்ன சோதிமுன் னின்று துதித்துருகி
யீண்டு மணிக்கோயில் சூழவலஞ்செய் திறைஞ்சியன்பு
பூண்ட மனத்தோடு நீடிரு வாயிற் புறத்தணைந்தார்.

# 40 திருவையாறு

## திருப்பதிக வரலாறு

நாவுக்கரசர் திருவையாறு அமர்ந்து திருத் தொண்டு செய்து வணங்கிப் பாடியவற்றுள் ஒனறு இத்திருப்பதிகம் (பெரிய. 385).

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

தானலா துலகமில்லை சகமலா தடிமையில்லை
கானலா தாடலில்லை கருதுவார் தங்களுக்கு
வானலா தருளுமில்லை வார்குழன் மங்கையோடும்
ஆனலா தூர்வதில்லை யையனை யாறனார்க்கே. 394

394. தான் அலால் உலகம் இல்லை :- (1) ' அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது. ' (2) எல்லா வுலகமும் ஆனாய் நீயே ' (3) ' நின்ற நின் தன்மை நினைப்பற நினைந்தேன் நீ அலாற் பிறிது மற்றின்மை '. (4) ' ஒன்றும் நீ அல்லை அன்று ஒன்று இல்லை '. **சகம்** - தோன்றியழிவது ; உலகம் ; காரியம். மாயை காரணம் ' சகன் என்றது நிலவுலகத்தை '. ' சகக் கடவுள் ' ' சகத்தின் கண் உளனாகிய குரவன் ' (சி போ. சூ. 8. அதி. 2. வெண்பா. 2) அவை உடைமை ஆளாம் நாம் ' (சிவ. போ. சூ. 2. அதி. 4, வெ. 1) ' பாய ஆருயிர் முழுவதும் பசுபதி அடிமை ; ஆய எவ் வகைப் பொருள்களும் அவனுடைப் பொருள்கள் ' (தணிகைப் புராணம்). ' உடைப்பொருள் அடிமையும் உடைமையும் என இருவகைப்படும். அவற்றுள் உயிர்வருக்கமெல்லாம் இறைவனுக்கு அடிமை யெனவும் மாயை கன்மங்களும் அவற்றின் காரியங்களும் உடைமை எனவும் உணர்ந்துகொள்க.' (சிவ போ. அவையடக்கம்), ' படிகம்போலச் சார்ந்ததன் வண்ணமாய் நிற்கும் ஆன்மா மலமுழுவதும் நீங்கித் தன்னறிவு வியாபகமாய் விளங்கிய வழியும் தன்னாற் சாரப்பட்ட சிவத்தை மாத்திரம் அறிதலன்றி மற்றொன்றனை அறிதல் செல்லாதென்பதூஉம், இது பற்றியன்றே சிவனுக்கு அடிமை எனப்பட்டது என்பதூஉம், இன்னோரன்னவை பிறவும் அறிந்துகொள்க.' (ஷை. சூ. 6, அதி. 2. மாபாடியம்) என்பவற்றால், 'சகம்' இடவாகுபெயராய் உயிர்களை

ஆலலா லிருக்கையில்லை யருந்தவ முனிவர்க்கன்று
நூலலா னொடிவதில்லை நுண்பொரு ளாய்ந்துகொண்டு
மாலுநான் முகனுங்கூடி மலரடி வணங்கவேலை
ஆலலா லமுதமில்லை யையனை யாறனார்க்கே. 395

நரிபுரி சுடலைதன்னி னடமலா னவிற்றலில்லை
சுரிபுரி குழலியோடுந் துணையலா லிருக்கையில்லை
தெரிபுரி சிந்தையார்க்குத் தெளிவலா லருளுமில்லை
அரிபுரி மலர்கொடேத்து மையனை யாறனார்க்கே. 396

உணர்த்திற்று என்றும் அவையே அடிமைகள் என்றும் உணர்க. 401. கான் அலாது ஆடல் இல்லை ; 396. 'கள்ளி முதுகாட்டில் ஆடிகண்டாய்'. வான் - சிவஞானமுத்திநிலை, வார்குழல் மங்கை:- 'அரியலாற்றேவியில்லை' 398. ஆன் - ஆனேறு.

395. ஆல் - கல்லால் நிழல். நூல் - வேதாகமப் பொருள். நொடிவது - உபதேசித்தருள்வது. நொடிமையினர் - உபதேசிக் குந்தன்மையுடையார். 'உள்வேர்போல நொடிமையினர் திறம் கொள்வீர் அல்குல் ஓர் கோவணம் (1. 54. 3.) சிவபெருமான் கல்லால் நிழலில் வீற்றிருந்து சின்முத்திரைக்கையாற் சொல்லாது சொன்ன கையின் நிலைமை நொடிமை எனப்பட்டது. நொடிமை என்பது கைந்நொடித்தற்குரிய விரலிரண்டும் உபதேசத்தின் கண்ணும்சேர்வதுபற்றியகாரணப்பெயர். நுண் பொருள் ஆய்ந்து கொண்டு நூல் அல்லால் நொடிவதில்லை, மாலும் நான்முகனும் வணங்க, வேலை ஆல் (பாற்கடல் நஞ்சு) அல்லால் அமுதம் இல்லை. வணங்க என்னும் எச்சத்தை முடிக்க, வணங்க உண்ட அமுதம் ஆல் அல்லால் இல்லை என்க. ஆல் - ஆல காலவிடம். 'ஆலானைந்தாடல் உகப்பார் போலும்' (6, 21, 7) ஆலும் ஆனைந்தாடலும்.

396. நரிபுரி சுடலை - நரிகள் விரும்புகின்ற சுடுகாடு. ஈண்டுச்சுடலையில் நவிற்றல் நடம் அல்லால் இல்லை என்றும், ஆண்டு (394) ஆடல் (செய்யும் இடம்) கான் அல்லாது இல்லை என்றும் கூறிய வேறுபாடுணர்க. கானில் அல்லாது ஆடல் இல்லை என்று ஆண்டுரைத்தல் பொருந்தாமை பிறவற்றை

தொண்டலாற் றுணையுமில்லை தோலலா துடையுமில்லை
கண்டலா தருளுமில்லை கலந்தபின் பிரிவதில்லை
பண்டைநான் மறைகள்காணாப் பரிசின னென்றென்றெண்ணி
அண்டவா னவர்களேத்து மையனை யாறனார்க்கே. 397

நோக்கியுணர்க. நவிலல் நவிற்றல் என்னும் இரண்டற்கும் உள்ள வேறுபாடுணர்க. 'சம்பந்தன்வாய் நவிற்றிய தமிழ்மாலை' (2, 106, 11). சுரிபுரி குழலி - சுரிந்து புரிந்த கூந்தலாள். புரி - முறுக்குண்ட. துணை - வாழ்க்கைத்துணை. குழலியாகிய துணையோடல்லால் இருக்கை இல்லை. தெரி - தெரிதல்; ஆராய்ச்சி. முதனிலைத் தொழிற்பெயர். புரி - புரி(செய்)கின்ற. சிந்தையார்க்கு - சிந்தித்தலுடையவர்க்கு, கேட்டல், சிந்தித்தல், தெளிதல் நிற்றல் என்னும் அறிவுத்தொழில் நான்கனுள், இரண்டாவதன் பயன் மூன்றாவதே; ஆதலின், தெரிபுரிசிந்தையார்க்குத் தெளிவு அல்லால் அருளும் இல்லை எனலாயிற்று. சிந்தையுட்டேறல் (தெளிவு) 408. அரி - அழகு, திருமால்.

397. 1. தொண்டு அல்லால் துணையும் இல்லை. 2. சுரிபுரி குழலியோடுந் துணையல்லால் இருக்கையில்லை. 3. தான் அல்லால் துணையும் இல்லை. 4. அரவம் பைம்பூண் தோள் அலால் துணையும் இல்லை என்பவற்றால் 'துணை' யின் பொருள்வேறுபாடு புலப்படும். தோல் - புலித்தோல், மான்றோல், சிங்கத்தோல், யானைத்தோல்; 'சிங்கமும் நீள் புலியும்செழுமால் கரியோடு அலறப்போங்கிய போர் புரிந்து பிளந்து ஈருரிபோர்த்த தென்னே' (7. 99. 6) 'மானைத்தோல் ஒன்றை உடுத்துப் புலித்தோல் பியற்குமிட்டு யானைத்தோல் போர்ப்பது' (7. 18. 4.). கண்டு அல்லாது அருளும் இல்லை. அநுமான அளவையான்நாடி, அநுபூதியிற்கண்டு பெறற்பாலது அருள். (சிவஞான போதப்பாயிரவுரை) 'வாக்குமன விருத்திகளைக்கடந்து அதீதமாய், வேறற நின்றுணரும் அநுபவ ஞானமாத்திரையின் விளங்கிக் கோசரிப்பது. 'காண்டலே கருத்தாய் நினைந்திருந்தேன் மனம் புகுந்தாய் கழலடி பூண்டுகொண்டொழிந்தேன்' (198.) காண்டலே கருத்தாகியிருப்பனே' (5. 71. 8.) கலந்தபின் பிரிவதில்லை :- 'கலந்தார்மனங் கவருங்காதலானே' 'உள்ளம் உள்கலந்து ஏத்தவல்லார்க்கலால் கள்ளம் உள்ளவழிக் கசிவான் அலன்'

எரியலா லுருவமில்லை யேறலா லேறலில்லை
கரியலாற் போர்வையில்லை காண்டகு சோதியார்க்குப்
பிரிவிலா வமரர்கூடிப் பெருந்தகைப் பிரானென்றேத்தும்
அரியலாற் றேவியில்லை யையனை யாறனார்க்கே. 398

என்பலாற் கலனுமில்லை யெருதலா லூர்வதில்லை
புன்புலா னாறுகாட்டிற் பொடியலாற் சாந்துமில்லை
துன்பிலாத் தொண்டர்கூடித் தொழுதழு தாடிப்பாடும்
அன்பலாற் பொருளுமில்லை யையனை யாறனார்க்கே. 399

(5. 82. 4.) அண்டவானவர்கள், பண்டைமறைகள் நான்கும் காணாப்பரிசினன் என்று பன்முறை சொல்லி ஏத்தும் ஐயன். அண்டங்களில் உள்ள வானவர்கள்.

398. எரி - தீ, 'தீ வண்ணன்'. ஏறு - விடை, ஏறல் என்றதாற் பெயர்க் காரணம் அதுவாதலும் பெறப்படும். 'எருதலாலூர்வதில்லை' 399. 'ஆனலாதூர்வதில்லை' 394. கரி - யானைத் தோல், கரத்தையுடையது கரி, காண்தகு. சோதி - காணத்தக்க மெய்யொளி. பிரிவு இல்லா அமரர் - நீக்கம் இல்லாத் தேவர்கள். பெருந்தகைப் பிரான் :- 'மகாதேவன்' அமரர்க்குப் பெருந்தகைப் பிரான் அரி. ஐயாறனார்க்கு அவ்வரி தேவி. ஏத்தும் வினை அமரரது ; ஏத்தப் பெறுதல் அரியின் வினை. அப் பெருந்தகைப் பிரானாகிய அரியே ஐயாறனார்கருத் தேவி. திருவையாற்றிலுள்ள அம்பிகையை நோக்கினார்க்கு அரியே தேவி எனல் இனிது விளங்கும். அரிக்குரியன தேவியின் திருமேனியில் அமைந்துள்ளன. 'அறம் வளர்த்தாள்' திருவுருவம்ஆக விளங்குகின்றது. திருவிளநகர்த் தேவியும் அரியே.

399. என்பு - எலும்பு, கலன் - பூண். அணி, பணி, எருதலால் ஊர்வதில்லை :- 394, 398. புன் புலால் நாறு காட்டிற் பொடி அலால் சாந்தும் இல்லை :- காடுடைய சுடலைப் பொடி பூசி' - 'சாந்தம் ஈது என்று எம்பெருமான் அணிந்த நீறு'. துன்பு இலாத் தொண்டர் :- 'இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை...சேவடியிணையே குறுகினோம்' தொழுது அழுது ஆடிப் பாடும் அன்பல்லாற் பொருளும் இல்லை :- நாடி நம்தமராயின தொண்டர்காள், ஆடுமின், அழுமின், தொழுமின், அடிபாடுமின்,

கீளலா லுடையுமில்லை கிளர்பொறி யரவம்பைம்பூண்
தோளலாற் றுணையுமில்லை தோத்தலர் கின்றவேனில்
வேளலாற் காயப்பட்ட வீரரு மில்லைமீளா
ஆளலாற் கைம்மாறில்லை யையனை யாறனார்க்கே. 400

சகமலா தடிமையில்லை தானலாற் றுணையுமில்லை
நகமேலாந் தேயக்கையா ணண்மலர் தொழுதுதூவி
முகமேலாங் கண்ணீர்மல்க முன்பணிந் தேத்துந்தொண்டர்
அகமலாற் கோயிலில்லை யையனை யாறனார்க்கே. 401

---

பரமன் பயிலும் இடம் கூடுமின் குரங்காடுதுறையே' (5. 63. 8). 'மழுவலான் திருநாமம் மகிழ்ந்துரைத்து அழவலார்களுக்கு அன்புசெய்து இன்போடும் வழுவிலா அருள் செய்தவன் மாற் பேறு தொழவலார் தமக்கு இல்லைத் துயரமே' (5. 59. 7). 'அன்பே அமையும்' (9). 'அன்பு அளவில் உபகரணப் பூசைப் பரிசது' (ஞான பூசாவிதி). 'அன்பன்றித் தீர்த்தம் தியானம் சிவார்ச்சனைகள் செய்வதேலாம் சார்த்தும் பழம் அன்றேதான்' (திருக்களிற்றுப்படியார். 55).

400. கீள் - கிழி, 'கீளார் கோவணம்'. 'சடையும் பிறையும் சாம்பற் பூச்சுங் கீளுடையுங் கொண்டவுருவம்'. பொறி - படப்புள்ளி. அரவம் - பாம்பு. பூண் - பூண்கின்ற கலன். தோத்து - பூங்கோத்து, 'வேனில்வேள் மலர்க்கணை' (திருவாசகம்). காயப்பட்ட வீரர் - தீவிழியாற் காய்தலுற்ற வலியர், 'வீரம்' எதிர்வந்து நின்ற வீரம். மீளா ஆள் :- 'மீளா ஆளாய்க் கோய்ம் மலர்ச் சேவடியிணையே குறுகினேமே' 'மீளா ஆட் செய்து மெய்மையுள் நிற்கிலார்' (5. 90. 3). மீளா ஆளாதலே உயிர்கள் இறைவனுக்குச் செய்யுங் கைம்மாறு என்றதுணர்ந்து வழிபட்டுய்க.

401. சகம் அலாது அடிமை யில்லை :- (394). தான் - சிவபிரான், துணை - உயிர்த்துணை, தாள்அலால் துணையும் இல்லை என்னும் பாடத்திற்குத் திருவடித் துணை என்க. நகம் எல்லாம் தேயக் கையால் நாண்மலர் (கொய்து) தூவித் தொழுது, முகம் எல்லாம் கண்ண நீர் மல்க, முன்பணிந்து ஏத்துகின்ற தொண்டர் அகமே கோயில், 'நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவன்' ('உள்ளம் பெருங் கோயில்), சிவபூசை புரிபவர்க்கு அகத்தும் புறத்தும் இன்றியமையாது வேண்டுவன குறித்ததுணர்க.

உமையலா துருவமில்லை யுலகலா துடையதில்லை
நமையெலா முடையராவர் நன்மையே தீமையில்லை
கமையெலா முடையராகிக் கழலடி பரவுந்தொண்டர்க்
கமைவிலா வருள்கொடுப்பா ரையனை யாறனார்க்கே　　402

மலையலா லிருக்கையில்லை மதித்திடா வரக்கன்றன்னைத்
தலையலா னெரித்ததில்லை தடவரைக் கீழடர்த்து
நிலையிலார் புரங்கள்வேவ நெருப்பலால் விரித்ததில்லை
அலையினார் பொன்னிமன்னு மையனை யாறனார்க்கே.　　403

திருச்சிற்றம்பலம்

402. சிவபெருமானுக்குச் சொரும்பம் சிவஞானமே யாத லின், 'உமையலாதுருவம் இல்லை' என்றும், உடைமை உலகம், அடிமை உயிர்கள், இரண்டும் உடைப்பொருள். அவற்றுள் உடைமையை உலகலா துடையதில்லை என்றும், அடிமையை 'நமையெலாம் உடையர் ஆவர்' என்றும், அவனுடைமையான உலகம், அவன் அருள்வழி நின்று ஒழுகும் அடிமைகளாகிய உயிர்கட்கு நன்மையே அன்றித் தீமை பயவாமையின், 'நன் மையே தீமை யில்லை' என்றும், வினைப் பயனாக எய்தும் துன் பங்களைப் பொறுத்துக்கொண்டு, மேலும் வினை யேறாது திருவடித் தொண்டு பூண்டார்க்கு அளவிலாது அருள் கொடுப்பது ஆண்டா னது கடமை யாதலின், 'கமை (பொறுமை) யெலாம் உடைய ராகிக் கழலடி பரவுந் தொண்டர்க்கு அமைவு இலா அருள் கொடுப்பார்' என்றும் அருளினார் மொழி வேந்தர். 'நாம் ஆர்க் கும் குடியல்லோம்......இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை'. 'நன்றருளித் தீதகற்றும் நம்பிரான்' (6. 30. 7) 'நன்றுடை யானைத் தீயதில்லானை'.

403. திருக்கைலாயமலையே சிவபிரானது இருக்கையாத லின், 'மலையலா திருக்கையில்லை', அம்மலையை ஒருபொருளாகக் கருதாத அரக்கனது (மதிக்கும் மதிக்கு இடமான) தலையை நெரித் தார். தடவரை - கைலை, நிலையிலார் - திரியும் அசுரர், விரித்தது நெருப்பே. அலையின் ஆர் பொன்னி - அலைகள் நிறைந்த காவிரி யாறு.

# 41 திருச்சோற்றுத்துறை

## திருப்பதிக வரலாறு

திருப்பழனப் பதிபுகுந்து பெருங்காதலோடும் பெருமான் கழல் சார்ந்து பொங்கிய அன்புற வணங்கி முன் நின்று போற்றிசைத்து, சீலமுடை அப்பூதியடிகளைச் சிறப்பித்துத் தீந்தமிழ்த் தொடைமாலைத் திருப்பதிகச் சொல்மாலைபாடி, பணியும் பிறையும் அணிந்த இறைய வரை எம்மருங்குந் தொழும் பணிமேற்கொண்டு, திருச்சோற்றுத் துறை முதலாகிய பல தானங்களை நண்ணிப் பாடினார். மீண்டு, செழும்பழனத் திறைகோயிற்றிருத்தொண்டு செய்திருந்தார். அக் காலத்திலே திருச்சோற்றுத் துறையிலிருந்து பாடியருளியது இத் திருப்பதிகம்.

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

பொய்விரா மேனிதன்னைப் பொருளெனக் காலம்போக்கி
மெய்விரா மனத்தனல்லேன் வேதியா வேதநாவா
ஐவரா லலைக்கப்பட்ட வாக்கைகொண் டயர்த்துப்போனேன்
செய்வரா லுகளுஞ்செம்மைத் திருச்சோற்றுத் துறையனாரே.

404. பொய்விராமேனி :- பொய்விராவும் மேனி, 'விராவும்' என்பது செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம், 'செய்யும் என் எச்சவீற்றுயிர் மெய் சேறல்' உற்றது. பொய் மறித்தியற்றி வைத்துப் புலால் கமழ் பண்டம் பெய்து பைம்மறித்தியற்றியன்ன பாங்கிலாக் குரம்பை' (656). பொய்யுடலை மெய்யெனக்கருதி மெய்ப்பொருளை வழிபடாது பொழுதுபோக்கி, மெய்விராவும் மனத்தனாகாமல் கெட்டேன் என்றவாறு. வீண்பொழுது போக் காது போற்றற்பொருட்டுப் பிழைகணிக்கும் பழக்கமுடையவர் இப்பெருமானார். 405. 408. 410. 'பொழுது போக்கிப் புறக் கணிப்பார்' இனத்திற் சேர நல்லோர் விழையார். வேதியன் - வேதங்களை உணர்ந்தவன். வேத நாவன் - வேதங்களை அருளிய திரு நாவினன். ஐவர் - ஐம்பொறிகள். திருப்பதிகம் 52, 54 பார்க்க. ஆக்கை - உடம்பு (உடல்+பு). செய் - வயல். வரால் மீன்கள். உகளும் - துள்ளும். செம்மை (செய்மை) - நிலவளம்.

கட்டராய் நின்றுநீங்கள் காலத்தைக் கழிக்கவேண்டா
எட்டவாங் கைகள்வீசி யெல்லிநின் றுடுவானை
அட்டகா மலர்கள்கொண்டே யானஞ்சு மாட்டவாடிச்
சிட்டரா யருள்கள்செய்வார் திருச்சோற்றுத் துறையனாரே.

கல்லினாற் புரமூன்றெய்த கடவுளைக் காதலாலே
எல்லியும் பகலுமுள்ளே யேகாந்த மாகவேத்தும்
பல்லில்வெண் டலைகையேந்திப் பல்லிலந் திரியுஞ்செல்வர்
சொல்லுநன் பொருளுமாவார் திருச்சோற்றுத் துறையனாரே.

405. கட்டர் - உடற்கட்டும் உயிர்க்கட்டும் உடையவர். திரிமலபந்தரே தமிழிற் கட்டர் எனப்பட்டார். கட்டு - பந்தம், கட்டராய் நின்று காலத்தைக் கழிக்கவேண்டா எனவே வீடராய் நிலவிக் காலாதீதராய்ப் பேரின்பம் எய்துக என்பது பெற்றாம், எட்ட ஆம் கைகள் :- 'எண்டோள் முக்கண் எம்மானே' 'எண் டோள் வீசிநின்றாடும்பிரான்' 'எட்டுக் கோலாமவர் தோளிணை யாவன'. 'மணிமிடற் றெண்கையாய் கேள்' (கலித்தொகை, கடவுள் வாழ்த்து) எட்ட ஆம் - எட்டன ஆகும், எல்லி - இரவு. அட்டமலர் - எட்டுப் பூக்கள், 'அட்டபுட்பம்' கா - சோலை' ஆன் அஞ்சும் - (ஆனைந்து,) பால் தயிர் நெய் முதலியன' ஆட்டுவோர் அன்பர், ஆடுவோன் திருச்சோற்றுத்துறை முதல் வன். சிட்டர் - வேதாசாரமுடையவர், சிவாகமாசாரமுடையவர். ஈண்டுச் சிவபிரானைக் குறித்தலால், 'இறுதியாங் காலந்தன்னில் ஒருவனே' என்ற பொருட்டாம். 'சிட்டர்கள் வாழுந் தென் றில்லை' (திருவாசகம் 213). 'சிட்டன் சிவன்' (திருப்பல் லாண்டு 3),

406. கல்லினால் - மேருமலையாகிய வில்லால். காதல் - சிவபக்தி, எல்லியும் பகலும் :- இராப்பகலாக ; உள்ளே - உணர்வினுள், ஏக+அந்தம்=ஏகாந்தம் ; தனிமை ; ஒரு முடிபு. 'மாதேவற்கேகாந்தர்' என்புழிக் காந்தர் என்னாது ஏகாந்தர் எனப் பிரித்துரைத்தலுமுண்டு. பின் 'அன்பர்' என்றதால் காந்தர் என்பதே நேரிது. ஏத்தும் - ஏத்துங்கள். முன்னிலை. பல் இல் (லாத) வெள்தலை ;- பிரம கபாலம், பல் இலம் - பல வீடுகள். 'மனைதோறும் பலிகொளும் இயல்பு' (3. 92. 2).

கறையராய்க்கண்டனேற்றிக் கண்ணராய்ப் பெண்ணோர்பாகம்
இறையரா யினியராகித் தனியராய்ப் பனிவெண்டிங்கட்
பிறையராய்ச் செய்தவெல்லாம் பீடராய்க் கேடில்சோற்றுத்
துறையராய்ப் புகுந்தென்னுள்ளச் சோர்வுகண் டருளினாரே.

பொந்தையைப் பொருளாவெண்ணிப் பொருக்கெனக்
காலம்போனேன்
எந்தையே யேகமூர்த்தி யென்றுநின் றேத்தமாட்டேன்
பந்தமாய் வீடுமாகிப் பரம்பர மாகிநின்று
சிந்தையுட் டேறல்போலுந் திருச்சோற்றுத் துறையனாரே.408

'இல்லங்கள் தோறும் எழுந்தருளி' பல் இலந் திரிவாரேனும். சென்றடையாத திருவுடையார் என்பார், 'செல்வர்' என்றார், 'சென்றடையாச் செல்வன்' சொல்லும் பொருளும் ஆவார்:- 'சொல்லும் பொருளெலாம் ஆனார்...தோத்திரமும் சாத்திரமும் ஆனார்' (6. 78. 5). 'சொல்லானைப் பொருளானை' (6. 74. 1)

407. கண்டம் கறையர் - திருக்கழுத்தில் நஞ்சின் கறுப்புடையர் கண்ட கண்ணர் எனல் சிறவாது. இறையர் - தங்குதலுடையவர். 'வண்டிறை கொண்ட கமழ்பூம் பொய்கை' (மதுரைக் காஞ்சி 253). 'இம்மலையிறை கொண்டிண்டி' (சிந்தாமணி 538. 'ஈட்டிய வளநிதி யிறைகொள் மாநகர்' (ஷை 1445). இனியர் பேரின்பத்துக்குக் காரணன் என்னும் பொருளும் பயக்கும். சிவனார், தனியர் - கேவலப் பொருள். 'தான் தனியன்' (திருவாசகம்). 'ஏகமூர்த்தி' (408) பனிவெண்டிங்கட்பிறையர் - 'சந்திரசேகரர்', 'பிறைசூடி'. பீடர் - பெருமையனவாக உடையவர், உள்ளச் சோர்வு - மனத் தளர்ச்சி, உயிரிளைப்பு.

408. பொந்தை - பொள்ளத்த காயம்', (பொள்+து+ஐ=பொந்தை) 'ஆநந்தப் பொந்தைப் பரவி நாம் பூவல்லி கொய்யாமோ' என்னுந் திருவாசகத்தில் இச்சொல்லின் பொருள் இனிது விளங்கும். ஆண்டுச் சிவம். ஈண்டுப் பவம் பற்றிய உடல். பொருக்கெனல - காலம்போன விரைவு குறித்தது. எந்தை - என் அப்பன். 'ஏகமூர்த்தி' - 'தனியர்' (407),

பேர்த்தினிப் பிறவாவண்ணம் பிதற்றுமின் பேதைபங்கன்
பார்த்தனுக் கருள்கள்செய்த பாசுப தன்றிறமே
ஆர்த்துவந் திழிவதோத்த வலைபுனற் கங்கையேற்றுத்
தீர்த்தமாய்ப் போதவிட்டார் திருச்சோற்றுத் துறையனுரே.

கோந்தார்பூங் குழலினுரைக் கூறியே காலம்போன
எந்தையெம் பிரானுய்நின்ற விறைவனே யேத்தாதந்தோ
முந்தரா வல்குலாளே யுடன்வைத்த வாதிமூர்த்தி
சேந்தாது புடைகள்சூழ்ந்த திருச்சோற்றுத் துறையனுரே.410

என்று நின்று :- 'சொல்லிய வண்ணம் செயல்', பந்தமாய்வீடும் ஆகி :- 'பந்தமும் வீடும் படைப்போன் காண்க' (திருவாசகம் திருவண்டப்பகுதி 52) 'பந்தமும் ஆய்வீடும் ஆயினுர் (ஷெ திருப்பொற்சுண்ணம் 20). பரம்பரம் - பராபரம்; மேலவரின் மேலவன், 'மேலையார் மேலையார் மேலாரே' (7. 96. 7. 10). சிந்தையுள் தேறல் :- தேறல் - தெளிவு. (தெரிபுரி சிந்தை யார்க்குத் தெளிவலாலருளுமில்லை' (396).

409. பேதை பங்கன் - 'ஏழை பங்காளன்', 'மங்கை பங்கன்'. பார்த்தன் - அருச்சுனன், பாசுபதன் - பாசுபதாத் திரத்துக்குரியவன், அருள் செய்தவன் பாசுபதன் அது பெற்ற வன் பார்த்தன். இனிப் பேர்த்துப் பிறவாவண்ணம் பேதைபங் கனும் பாசுபதனும் ஆகிய திருச்சோற்றுத்துறையனுர் திறமே பிதற்றுமின் (413). ஆமாத்தூர் மேயான் அடியார்கட்கு ஆள் பெற்றனன் பெயர்த்தும் பெயர்த்தும் பிறவாமைக்கே' (7. 45. 10). 'ஆட்டான் பட்டமையா லடியார்க்குத் தொண்டு பட்டுக் கேட்டேன் கேட்பதெல்லாம் பிறவாமை கேட்டொழிந் தேன்' (ஷெ 21. 2). 'பிழைத்தொருகால் இனிப்போய்ப் பிற வாமைப் பெருமைபெற்றேன்' (ஷெ 58. 4) (திருவாசகம் 375). மற்றுப்......நின் திருப்பாதமே மனம் பாவித்தேன், ...இனிப் பிறவாத தன்மை வந்தெய்தினேன் (ஷெ 48. 1). ஆர்த்து - இரைத்து, இழிவது - இறங்குவது. தீர்த்தம் - தூய (புண்ணிய) நீர். போத - புகுத.

410. கோந்து - கோத்து, ஆர் - ஆர் (நிறைந்த) பொருந் திய, குழலினுர் - கூந்தலார். ஆகுபெயர், மகளிர் திறத்தைக்

அங்கதி ரோனவனை யண்ணலாக் கருதவேண்டா
வெங்கதி ரோன்வழியே போவதற் கமைந்துகொண்மின்
அங்கதி ரோனவனை யுடன்வைத்த வாதிமூர்த்தி
செங்கதி ரோன்வணங்குந் திருச்சோற்றுத் துறையனாரே.411

குறித்தது. வீண்காலம் போக்கியதற் கிரங்கியவாறு, அந்தோ இறைவனை ஏத்தாது குழலினாரைக் கூறியே காலம்போன என்று இயைக்க. போன.- படர்க்கைப் பன்மை யிறந்த காலத் தெரி நிலை வினை முற்று. போ+ன்+அ=போன; னகர மெய் இறந்த காலங் காட்டிற்று; இது போயின என்பதன் சிதைவு. முந்து என்பது அராவுக்கும் அல்லற்கும் அடையன்று. அல்குலாட் குரிய அடை. 'முன்னியவள்', முன்+து=முன்று; முந்து. 'முந்து நடுவு முடிவுமாகிய மூவரறியாச் சிந்துரச் சேவடியான்' (திருவாசகம் 350). 'முந்திய முதல் நடு இறுதியுமானாய்' (ஷை 373) அன்பர்க்கு முன்னியவள்' (ஷை 170). 'முந்தனு டைச் செயல் என்று முடித்தொழுக வினைகள் மூளா அங்காளாகி மீளான்' (சித்தியார்) என்பதில் இறைவனை 'முந்தன்' என்ற தால் இறைவிக்கும் அவ்வினையடியிற் றோன்றிய பெயர் பொருந்துமாறுணர்க. ஆதிமூர்த்தி - 'முதலுருப்பாதி மாதர் ஆவதும் உணரார்' (259). செந்தாது - சிவந்த மகரந்தங்கள் (சோலைகளைக் குறித்தன).

411. அம் கதிரோனவனை - அழகிய சூரியனை, அண் ணல் - தலைவன், 'அருக்கன் பாதம் வணங்குவர் அந்தியில் அருக்கன் ஆவான் அரனுரு அல்லனோ?' (5. 100. 8). 'செஞ் சுடர்க்கோர் சோதிதானும்' (6. 15. 6). 'வெங்கதிரோன் வழியே போவதற்கு அமைந்துகொண்மின்':- 'தூமாதி மார்க் கம் நற்சுத்த பஞ்சாக்கினி அக்காமாதி நீக்கக் கருது அர்ச்சிரா மார்க்கம் மீளாக் கதியாகும் மெய்சிவத்தின் நல்லருட்கே ஆளாகக் காட்டும் இவை' (தருமபுராதீனத்துச் சம்பிரதாய தீபம் 220). பிதிருயானம் முதலிய எல்லாவற்றினும் மேலானது சிவகதி. இவை யெல்லாம் அச்சிவகதிக்கு வழியாகும். சிவகதியே மீளாக் கதி, 'அங்கதிரோனவனை யுடன்வைத்த ஆதி மூர்த்தி'. இங்குச் சூரியன் வழிபடுவதை ஈற்றடி தோற்றுகின்றது.

ஓதியே கழிக்கின்றீர்க ளுலகத்தீ ரொருவன்றன்னை
நீதியா னினையமாட்டீர் நின்மல னென்றுசொல்லீர்
சாதியா நான்முகனுஞ் சக்கரத் தானுங்காணுச்
சோதியாய்ச் சுடரதானூர் திருச்சோற்றுத் துறையனாரே. 412

மற்றுநீர் மனம்வையாதே மறுமையைக் கழிக்கவேண்டில்
பெற்றதோ ருபாயந்தன்னுற் பிரானையே பிதற்றுமின்கள்
கற்றுவந் தரக்கனோடிக் கயிலாய மலையெடுக்கச்
செற்றுகந் தருளிச்செய்தார் திருச்சோற்றுத் துறையனாரே.413

திருச்சிற்றம்பலம்

412. ஒருவனை (சிவபிரானை) ஓதிஅறிதல் அரிது, உள்ளே தேடியுணர்தல் எளிது, உலகத்தீர் ஓதியே போழ்து கழிக்கின்றீர்கள், அவனை வேதாகம நீதியால் உள்ளே நினைமின், நினைய மாட்டீர், அந்நினைவுடன் வாயாலும் நின்மலா என்று சொல்லி நின்மலத்தீர் ஆகுமின். தேடிக் காண்பேன் என்றதைக் கடைப் பிடிக்காத அயனும் சக்கிரம் ஏந்திய அரியும் காணாத பேரொளிப் பிழம்பாய்ச் சுடராய் விளங்கினார்.

413. மறுமை உளதாகாதவாறு கழிக்க விரும்பினால், நீவிர் மற்றொன்றை மனத்தில் வைக்காமல், குருபதேசத்தாற் பெற்ற முத்தியுபாயங்களால், சிவபிரானையே பித்றறுங்கள் (409) அரக்கன் கற்று, அக்கல்வியின் பயனாகச் சிவனடி வணங்கிப் பிறவியறுக்காது, கைலைமலை யருகுவந்து எடுத்தான், எடுக்கவே துறையனார் அவனைச் செற்றார். அவன் பாடிய சாமகானத்தை உகந்தார், நாளும் வாளும் பேரும் பிறவும் அருளினார். நீர் வையாதே பிதற்றுமின்கள். 'வந்தவணம் ஏத்துமவர் வானம் அடைவாரே'.

செய்யமா மணியோளிசூழ் திருமுன்றின் முன்றேவா சிரியன் சார்ந்து
கோய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலு மாரூ ரரைக்
கையினற் றொழாதோழிந்து கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வனேனேன்
றெய்த ரிய கையறவாற் றிருப்பதிக மருள்செய்தங் கிருந்தா ரன்றே.

# 42 திருத்துருத்தி

## திருப்பதிக வரலாறு

பொன்னிக் கரைத் துருத்தி வேள்விக்குடி பாடிப் போற்றிய பாவுறு செந்தமிழ் மாலைகளுள் ஒன்று இத்திருப்பதிகம். (அப்பர் புராணம் 190).

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

பொருத்திய குரம்பைதன்னைப் பொருளெனக் கருதவேண்டா
இருத்தியெப் பொழுதும்நெஞ்சு ளிறைவனை யேத்துமின்கள்
ஒருத்தியைப்பாகம்வைத்தங்கொருத்தியைச்சடையுள்வைத்த
துருத்தியஞ் சுடரினானைத் தொண்டனேன் கண்டவாறே.414

சவைதனைச் செய்துவாழ்வான் சலத்துளே யழுந்துகின்ற
இவையொரு பொருளுமல்ல விறைவனை யேத்துமின்னோ
அவைபுர மூன்றுமெய்து மடியவர்க் கருளிச்செய்த
சுவையினைத் துருத்தியானைத் தொண்டனேன் கண்டவாறே.

---

414. பொருத்திய குரம்பை :- (306) உயிர் பொருந்தும் இடமாக எழுவகைத் தாதுக்களாற் பொருத்திய குடில், 'இருகாற் குரம்பை' (1061) 'சீவார்ந்து ஈ மொய்த்து அழுக்கொடு திரியும் சிறு குடில்' (திருவாசகம் 418). இவ்வுடம்பை ஒரு பொருளாகக் கருதி, உடம்பின் பயனை இழத்தல் வேண்டா, திருத்துருத்தி யிறைவனை நெஞ்சுள் எப்பொழுதும் இருக்க வைத்து வழிபட்டுய்மின்கள். அவ்வாறேதான், அடியேனும், மலைமங்கையை இடத்திலும் அலைமங்கையைத் தலையிலும் அப்பெருமானைக் கண்டுய்ந்தேன். துருத்தி - ஆற்றிடைக்குறை. இத்திருப்பதிகத்துள் யாண்டும், கண்டவாறு என்னே என்று வியந்தபடியும் ஆம். நான் கண்டவாறு கண்டு வழிபட்டுய்மின் என்று எச்சம் வருவித்துரைத்தலும் ஆம்.

415. சவை - கூட்டம், ஈண்டு மக்களைப் பெற்றுக் குடும்பத்தைப் பெருக்குதலைக் குறித்தது, சலம் - கலக்கம் (துன்பம்)

உன்னியேப் போதும்நெஞ்சு ளொருவனை யேத்துமின்னோ
கன்னியை யொருபால்வைத்துக் கங்கையைச் சடையுள் வைத்துப்
பொன்னியி னடுவுதன்னுட் பூம்புனல் பொலிந்துதோன்றும்
துன்னிய துருத்தியானைத் தொண்டனேன் கண்டவாறே. 416

ஊன்றலை வலியனாகி யுலகத்து ளுயிர்கட்கெல்லாம்
தான்றலைப் பட்டுநின்று சார்கன லகத்துவீழ
வான்றலைத் தேவர்கூடி வானவர்க் கிறைவாவென்னும்
தோன்றலைத் துருத்தியானைத் தொண்டனேன் கண்டவாறே.

பெண்ணை மணந்து பிள்ளைகளைப் பெற்றுவரும் வழியிற் கூட்டத்தைப் பெருக்கி உள்ளக் கலக்கத்தை வளர்த்து, அதில் அழுந்தி வருந்தும் இல்வுலகப் பற்றுக்களை ஒரு பொருளாகா, இவற்றால் உயிர்க்குச் சிறிதும் நலம் இல்லை. முப்புரம் எரித்து, அடியவர்க்கு அருளிய இன்ப வடிவினனாகிய திருத்துருத்தி யாண்டவனை அடியேன் கண்டவாறு இறைவனை ஏத்துமின்கள். அவை புரம் :- 'புரமவை' என்பது மொழிமாறி நின்ற தொடர். 'வைசாகி' எழுத்து மாறியது.

416. எல்லா வுலகுயிர்களையும் பெற்றும் கன்னியாயே திகழும் அம்பிகையை இடப்பக்கத்திலும் கங்கையைச் செஞ்சடையிலும்வைத்து, காவிரியாற்றின் இடையே பூம்புனல் வளம் பொலிந்து செறிந்த திருத்துருத்தி நகரிறைவனைத் தொண்டனேன் கண்டவாறே நீவிரும் அத்தனி முதல்வனை எப்போதும் நெஞ்சுள் உன்னி ஏத்துமின். 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' (திருமந்திரம்). உலகுயிர் எல்லாம் ஈன்றும் பவன் பிரமசாரியாகும் பான்மொழி கன்னியாகும்' (சித்தியார் 2. 77).

417. உலகத்துள் எல்லா உயிர்களுக்கும் ஊனுடம்பில் வலியுடையவனாகி, அவ்வுயிரோடு தலைப்பட்டு (உயிர்க்குயிராய்) நின்று அவ்வுயிர் அவ்வுடலிற்சாரும் தீயில் வீழ, அவ்வீழ்ச்சி தாங்கமாட்டாது வருந்தும் உயிர்த் தொகுதியுள் அடங்கும் வானோர் கூட்டம் தேவாதி தேவா மகாதேவா என்று அழைத்துக்

உடறனைக் கழிக்கலுற்ற வுலகத்து ளுயிர்கட்கெல்லாம்
இடர்தனைக் கழியவேண்டி லிறைவனை யேத்துமின்றோ
கடறனி னஞ்சமுண்டு காண்பரி தாகிநின்ற
சுடர்தனைத் துருத்தியானைத் தொண்டனேன் கண்டவாறே.

அள்ளலைக் கடக்கவேண்டி லரனையே நினைமினீர்கள்
பொள்ளலிக் காயந்தன்னுட் புண்டரீ கத்திருந்த
வள்ளலை வானவர்க்குங் காண்பரி தாகிநின்ற
துள்ளலைத் துருத்தியானைத் தொண்டனேன் கண்டவாறே.

---

குறையிரக்கும்போது அருள்செய்யத் தோன்றுகின்ற வள்ளலை, துருத்தி யிறைவனைத் தொண்டனேன் கண்டவாறு என்ன வியப்பு? ஊன்தலை - ஊனின்கண், 'தலை' ஏழனுருபின் பொருட்டு, வன்மை உயிர்க்குயிராயிருந்து ஆட்டுவித்து ஆடுதல். 'உன் னுடம்பிற்கீடம்' (திருக்களிறு) காண்க.

418. பிறவியைத் தீர்க்க உற்ற உலகத்துளுயிர் எல்லாவற் றிற்கும் ஓர் உறுதிமொழி அறிவிக்கின்றேன். இடர் தீர்க்க நினை வீரேல், இறைவனை ஏத்துமின். பாற்கடலில் எழுந்த நஞ்சை யுண்டு, (தேவாசுரர்களைச் சாவாது காத்தவனும்) எவரும் காண்டற்கரிய கடவுட் சுடராய திருத்துருத்தி யிறைவனைத் தொண்டனேன் கண்டவாறு (கண்டு ஏத்துமின்). சுடர் என்றதால் கசிந்துருகுவோர்க்குக் காண்பேளிதாய் நிற்பன் என்பது தோன் றும். 'காண்டற்கரிய கடவுள் கண்டாய் கருதுவார்க்கு ஆற்ற எளியான் கண்டாய்'.

419. ஒன்பது வாயில்களை உடைய இவ்வுடம்பினுள் அகத் தாமரை மலரில் வீற்றிருந்தருளும் வள்ளலும், தேவர்கட்கும் காட்சிக்கு எளியனல்லாத வெள்ளேற்றுத் துள்ளலும்ஆகிய பிரா னைத் தொண்டனேன் கண்டவாறு வழிபட்டு, நீங்கள் அரனையே நினைந்து இப்பிறவிச் சேற்றினின்றும் கடந்து பேரின்ப வரம்பில் இருந்து இன்புறுமின். அள்ளல் - சேறு, 'அள்ளலைக் கடப்பித்து ஆளும் அதிகை வீரட்டனுர்' (274). பொள்ளல் - துளை, 'ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய் ஒக்க அடைக்கும்போ துணரமாட்டேன்' (திருத்தாண்டகம்) 'ஒரு முழம் உள்ள குட்டம் ஒன்பது துளையுடைத்து' (435). 185, குறிப்பு நோக்குக.

பாதியி லுமையாடன்னைப் பாகமா வைத்தபண்பன்
வேதிய னென்றுசொல்லி விண்ணவர் விரும்பியேத்தச்
சாதியாஞ் சதுர்முகனுஞ் சக்கரத் தானுங்காணுச்
சோதியைத் துருத்தியானைத் தொண்டனேன் கண்டவாறே.

சாமனை வாழ்க்கையான சலத்துளே யழுந்தவேண்டா
தூமநல் லகிலுங்காட்டித் தொழுதடி வணங்குமின்னே
சோமனைச் சடையுள்வைத்துத் தொன்னெறி பலவுங்காட்டும்
தூமனத் துருத்தியானைத் தொண்டனேன் கண்டவாறே. 421

காயம் - உடல், தாமரை. உட்புண்டரீகம் - அகத் தாமரை. காண்பு - காண்டல், துள்ளல், ' வெள்ளேற்றுத் துள்ளல் ' (274).

420. தன் திருமேனிப் பாதியில் உமாதேவியாரை வாம பாகத்தில் வைத்த கலியாண குணத்தன்; வேத முதல்வன்; இவ்வாறு சொல்லி விண்ணோர்கள் விரும்பி வழிபட்டு நிற்க ஒளிரும் முதல்வன். பிறப்புடையவராகும் நான்முகனும் ஆழி யானும் செருக்குற்று முறையே அன்னமும் பன்றியுமாகிய முடியும் அடியும் தேடிக் காணுத அளவிலாப் பேரொளிப் பிழம்பினன். திருத்துருத்தி யிறைவன். அவனைத் தொண்டனேன் கண்டவாறு (கண்டு வழிபட்டுய்மின்). சாதி - பிறப்பு. அடை இருவர்க்கும் பொது.

421. சாம் மனை வாழ்க்கை - அழியும் இல்வாழ்க்கை. சலம் - அடைவு, கலக்கம் (415). உலக வாழ்க்கையை விரும் பித் துன்பத்தில் அழுந்திப் பிறவி நெறியில் திரிந்து வருந்துதல் வேண்டா. நல்ல அகிற்புகை காட்டி அடி தொழுது வணங்கி யுய்மின். திங்களைப் பொங்கு சடையுள் வைத்துப் பண்டைய (அருள்) நெறிகள் அனைத்தும் உணர்த்தும் தூய திருவுளத்தில் உறையும் திருத்துருத்தி நகரிறைவனைத் தொண்டனேன் கண்ட வாறு கண்டு திருவடி தொழுது வணங்குமின்,

குண்டரே சமணர்புத்தர் குறியறி யாதுநின்று
கண்டதே கருதுவார்கள் கருத்தெண்ணு தொழிமினீர்கள்
விண்டவர் புரங்களெய்து விண்ணவர்க் கருள்கள்செய்த
தொண்டர்க டுணையினுனைத் துருத்திநான் கண்டவாறே.422

பிண்டத்தைக் கழிக்கவேண்டிற் பிரானையே பிதற்றுமின்கள்
அண்டத்தைக் கழியநீண்ட வடலரக் கன்றனாண்மை
கண்டோத்துக் கால்விரலா லூன்றிமீண் டருளிச்செய்த
துண்டத்துத் துருத்தியானைத் தொண்டனேன் கண்டவாறே.

திருச்சிற்றம்பலம்

---

422. குண்டராகிய சமணரும் புத்தரும் குறி - 'சிவலிங்கம்' (657) குறிக்கோள் 'உண்மைநின்ற பெருகுநிலைக் குறியாளர் அறிவு' (6. 84. 3) 'குறிகளும்' 5. 90. 6. நெறியே நின்மலனே நெடுமாலயன் போற்றிசெய்யுங் குறியே (7. 24. 9) 'குறியிலாக் கொடியேன்' (6. 66. 8). அந்தக் கரணங்கள் அடக்கிக் குருவின் அருளினால் அறிவதொரு குறி '(சித்தியார்)' அருள் ஞானக்குறி' (ஷை) இதயத்தே அரனைக்கூடுங் கோள் கைக்கு வாயிலான குறி (ஷை) சிவமேயாய் நின்றிடுவார். அந் நெறியில் தம்மோடு அழியும் குறி (ஷை). அதைச் சைவத் திறத்தில் நின்றொழுகி அறியாமல், கண்ணுற்கண்டதே கருது வார்கள் புறப்பொருளாராய்ச்சி மட்டும் உடையர்; அகப் பொருளாராய்ச்சியில்லாதார். அவர் கருத்துக்களை ஒரு பொரு ளாகக்கொள்ளாதொழிமின் நீர்கள். பகைவர் மும்மதிலும் எரித்து வானவர்க்கு அருள்புரிந்த தொண்டர் துணைவனைத் தொண்டனேன்துருத்தியிற்கண்டவாறு (கண்டு வழிபட்டுய்மின்).

423. பிதற்றுமின் :- 409, 413, 423. பிண்டம் - உடல். 'பிரானையே பிதற்றுமின்' அண்டம் - உலகம். கழித்தல் - பிறவி தீர்த்தல். அண்டத்தைக் கழிய நீண்ட அடல் - அண்டங் களைக் கடந்து வென்ற பெருவலி. ஆண்மை - ஆளுந்தன்மை; வீரம். கண்டு - மலையெடுத்தமையாற் கண்டு, அவனையும் ஒரு பொருளாகக்கொண்டு அடக்கவேண்டி நேர்ந்ததால் இசைந்து என்றார். இசைந்தாலும் யுத்த சாதனம் வேண்டாமை தோன்றக் கால்விரலால் ஊன்றி என்றார். சாமகானம் கேட்டு, அடக்கும் பெற்றியின் நீங்கி அருளும் பெற்றி உற்றதால் மீண்டு என்றார். துண்டத்து - நிலாத்திங்கட்டுண்டத்தையுடைய; அரங்கம்.

திருவதிகைவீரட்டம்



திருக்கோபுரக்காட்சி

திருத்துருத்தி



திருக்கோயில் உள்தோற்றம்

# 43 திருக்கச்சிமேற்றளி

## திருப்பதிக வரலாறு

கருவார் கச்சியேகம்பர் கனக மாளிகை சூழ்ந்து, செம்பொன் மலைவல்லி தழுவக் குழைந்த மணிமேனிப் பெருவாழ்வினை இறைஞ்சிப் பெருகிய பேர் அன்பு கரைந்தும் கண்ணருவி வார்ந்தும் புளகம் ஆர்ந்து, உள்ளும் வெளியும் நனைப்ப, கண்ட கண் பயன் பெற்றுத் திளைப்பப் பாடிப் பணிந்து, கையார்ந்த திருத்தொண்டு பெருங்காதலோடு செய்து திருமயான்த்தை வலங் கொண்டு, தொழுது, சீர்வளருமதிற்கச்சித் திருமேற்றளி முதலிய திருக்கோயில்களைப் பணிந்தேத்திச் சார்த்திய தமிழ்ச்சொல் மலர் மாலைகளுள் ஒன்று இத் திருப்பதிகம்,

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

மறையது பாடிப்பிச்சைக் கென்றகந் திரிந்துவாழ்வார்
பிறையது சடைமுடிமேற் பெய்வளை யாள்தன்னோடும்
கறையது கண்டங்கொண்டார் காஞ்சிமா நகர்தன்னுள்ளால்
இறையவர் பாடலாட லிலங்குமேற் றளியனாரே. **424**

**424.** வாழ்வாரும் கொண்டாரும் ஆகிய இறையவர் காஞ்சி மாநகர் தன் உள்ளால் இலங்கும் மேற்றளியனார் என்று இயைத்துரைத்துக்கொள்க. பிச்சையேற்றலுக்கென்று அகம் (தோறும்) மறைபாடித் திரிந்து வாழ்வார். சடைமுடிமேற் பிறை சூடி. பெய்வளை (கங்கை)யாளோடும் பிறைசூடி, கண்டத்திற் கறைகொண்டார். அது என்ற மூன்றும் முதனிலைப் பொருளன. சுட்டுவன அல்ல. கறை - நஞ்சின் கறுப்பு. கண்டம் - (திருநீல)கண்டம். பெய்வளையாள் :- வளைகளைப் பெய்த கைகளையுடைய கங்கை. 'தன்' சாரியைகள். பாடல் ஆடல்கள் இலங்கும் தளி, மேற்றளி, தளியனார். நகரில் இறையவர் (தங்கியவர்) என்றுமாம். பாடலும் ஆடலும் இலங்கும் இடம் மேற்றளி. தளி - கோயில், நகரின் மேற் கெல்லையில் உள்ளதுபற்றித் திருக்கச்சிமேற்றளி என்பர். காஞ்சி :- காஞ்சிஎன்னும் மரம்பற்றிய காரணப் பெயர். இதனை

மாலன மாயன்றன்னை மகிழ்ந்தனர் விருத்தராகும்
பாலனூர் பசுபதியார் பால்வெள்ளை நீறுபூசிக்
காலனைக் காலாற்சேற்றார் காஞ்சிமா நகர்தன்னுள்ளால்
ஏலநற் கடம்பன்றந்தை யிலங்குமேற் றளியனாரே. 425

வடசொல்லாகக்கொண்டு பல பொருள்கூறுங் கற்பனை வேறு இவ்வுண்மை வேறு. 'ஆலவாயில்' 'வன்னியூர்' 'குற்றாலம்' முதலிய தமிழ்ப் பெயர்களையும் வடமொழியறிவிற்கேற்ப மொழிபெயர்த்த திறத்தை அறிக. வாயாற் சொல்லாது உளத்தி லெண்ணியவற்றை வாயாற் சொன்னவாறு அறிவார் என்னும் பொருளதாய்ச் 'சொன்னவாறறிவார்' என்றதை 'உக்தவேதி' என்றால், சொன்னதை அறிதலில் வியப்பென்னை? மொழி பெயர்ப்பின் குறைகட்கு ஈதும் ஒரு சான்றாகும்.

425. மால் - மேகம். அன (அன்ன) - ஒத்த மாயன் - திருமால். மகிழ்ந்தனர் :- 'அரியலால் தேவியில்லை'. 'காவியங் கண்ணளாகிக் கடல் வண்ணமாகி நின்ற தேவியைப் பாகம் வைத்தார்' (320). 'மாலினை மாலுற நின்றான்' (843). விருத்தர்ஆகும் பாலனார் :- 'விருத்தனாய்ப் பாலனாகி' (226). பசுபதியார் - பசுக்களுக்கெல்லாம் தலைவர். 'பசு, பாசவேதனை யொண்டளையாயின தவிரவ்வருள் தலைவன்'. (1. 12. 3) 'பசுபதியதன் மிசைவருபசுபதி' (1. 22. 5)- நோக்குக :- 70, 1031, 1038. பசுபதியைப் பாசுபத வேடத்தானை (6. 91. 2). பசுவேறும் எங்கள் பரமன், விடையேறிவருவான் என்பனவும் பசுபதி என்னும் பொருளனவேயாகும். சித்தாகிய சிவன் சித்தாகிய ஆன்மாக்களிடத்திலேதான் நீங்காதிருப்பவன். 'ஆவியுள்நீங்கலன், 'ஆன்மாவின் இடமதாகி உசிர்ப்பெனும் உணர்வும் உள்ளார்' 'ஊனாகி, உயிராகி, ...உணர்வாகி' பால் வெள்ளைநீறு பூசிக் காலனைக் காலாற் சேற்றார்' என்றதால், திருநீறு இறவாமை அருளும் என்பது விளங்கிற்று. 'பவளம் போல் மேனியிற் பால் வெண்ணீறு'. ஏலம் - வாசனைப் பொருள். 'ஏலவார் குழலாள் உமைநங்கை' நற்கடம்பன் - 'நன்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்'. கடம்பன்தந்தை - கடப்ப மலர்மாலையைச் சூடிய முருகனைத் தந்தவன்.

விண்ணிடை விண்ணவர்கள் விரும்பிவந்திறைஞ்சிவாழ்த்தப்
பண்ணிடைச் சுவையின்மிக்க கின்னரம் பாடல்கேட்பார்
கண்ணிடை மணியினொப்பார் காஞ்சிமா நகர்தன்னுள்ளால்
எண்ணிடை யெழுத்துமானா ரிலங்குமேற் றளியனாரே. 426

சோமனை யரவினோடு சூழ்தரக் கங்கைசூடும்
வாமனை வானவர்கள் வலங்கொடு வந்துபோற்றக்
காமனைக் காய்ந்தகண்ணார் காஞ்சிமா நகர்தன்னுள்ளால்
ஏமநின் றாடுமெந்தை யிலங்குமேற் றளியனாரே. 427

ஊனவ ருயிரினோடு முலகங்க ளூழியாகித்
தானவர் தனமுமாகித் தனஞ்சய னோடெதிர்ந்த
கானவர் காளகண்டர் காஞ்சிமா நகர்தன்னுள்ளால்
ஏனமக் கோடுபூண்டா ரிலங்குமேற் றளியனாரே. 428

426. விண்ணில் வாழும் தேவர்கள் விரும்பி (மண்ணில்) வந்து இறைஞ்சுவார்கள், வாழ்த்துவார்கள், பண்ணின்பம் மிக்க இன்னிசைப் பாடல்களைப் பாடுவார்கள். 'அவ்வாழ்த்தும் பாட்டும் கேட்பார் மேற்றளியனார். கண்மணி போல்பவர், எண்ணும் எழுத்தும் ஆயவர். 'எண் ஆனாய் எழுத்தானாய் எழுத்தினுக் கோர் இயல்பானாய்' (130). 'எண்ணும் எழுத்தும் குறியும் அறிபவர்' (868). 'எண்ணானாய் எழுத்தானாய்' (6. 12. 5). என்றதன் கருத்து; நாதம் விந்து தத்துவங்களாய் விளங்கும் இறைவனது நிலை உணர்த்தியதாகும்.

427. சோமன் - சந்திரன், பிறையும் அரவும் புனலும் சூடும் வாமன், (சத்திமான். சக்திக்குத் தலைவன், வாமதேவன்) தேவர்கள் வலங்கொண்டு வந்து போற்றியது, முருகனை அருளி அசுரரை அழித்தற்பொருட்டு, அவ்வாறே நிகழ்தற்கண் மன்மத தகனம் இடைப்பட்டது. ஏமம் - இன்பம், இன்பக் கூத்து, 'ஆனந்த தாண்டவம்', ஏமம் - காவல் எனக்கொண்டு, உயிர்க் காவலாய் அதனுள் நின்றாடுவோன் என்பதும் பொருந்தும்.

428. ஊனவர் :- 'ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க் கோனாகி யான்எனது என்று அவரவரைக்

மாயனாய் மாலனாகி மலரவ னாகிமண்ணாய்த்
தேயமாய்த் திசையெட்டாகித் தீர்த்தமாய்த் திரிதர்கின்ற
காயமாய்க் காயத்துள்ளார் காஞ்சிமா நகர்தன்னுள்ளால்
ஏயமென் றோளிபாக ரிலங்குமேற் றளியனாரே. 429

மண்ணினை யுண்டமாயன் றன்னையோர் பாகங்கொண்டார்
பண்ணினைப் பாடியாடும் பத்தர்கள் சித்தங்கொண்டார்
கண்ணினை மூன்றுங்கொண்டார் காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
எண்ணினை யெண்ணவைத்தா ரிலங்குமேற் றளியனாரே.430

'கூத்தாட்டுவானாகி நின்றாய்' (திருவாசகம்) 'ஊனாகி உயிராகி அதனுள் நின்ற உணர்வாகி' (6. 62. 2). ஊனும் உயிரும் உலகமும் ஊழியும் ஆனவர் என்க. தானவர் - தானஞ் செய்பவர்; கொடையர். 'சிவோதாதா'. (52, 287. 6. 44. 7). கொடையரும் கொடுக்கப்படும் பொருளுமானவர், தனஞ்சயன் - அருச்சுனன்; வெற்றித்திருவினன். கானவர் - (வநசரர்) வேடர்; காட்டுள் வாழ்வினர். 'ஏனம் ஒன்றின் காரணமாகிவந்து வேடடைந்த வேடனாகி விசயனோடு எதிர்ந்த தென்னே'? (1. 48. 6) 71, 6. 34, 3; 7. 57. 6; 7. 66. 4. 7. 98. 9. பார்க்க. காளகண்டர் :- திருநீலகண்டர். ஏனம் - பன்றி(முளை)க் கொம்பு. 'ஏனமுளைக் கொம்பு'. அக்கு - எலும்பு. ஓடு - தலையோடு; வற்றலோடு.

429. மாயன் - கரியன். மாலன் - இந்திரன். மலரவன் - பிரமன். மண் - நிலம். தேயம் - நாடு, எண்டிசை. தீர்த்தம் :- 'மூர்த்திதலம் தீர்த்தம்' திரிதருகின்ற காயம் :- இயங்குதிணைக் குரிய உடல். காயத்துள்ளார் - ஜீவர். ஏய - மேனோக்கிய, - 'கார்நினைந்து ஏத்தருமயிற்குழாம் இருந்த'. (சிந்தாமணி, நாமகள்,58) மென்றோளி:- காமாட்சியம்மையார். பாகர்தளியனார்.

430. 'மண்ணினைஉண்ட மாயன்' - 'உலகமுண்ட திருமால்'. மாயனைப் பாகங்கொண்டது :- 'இடமால் தழுவிய பாகம்' (14) 320, 843. பண்பாடி ஆடும் தொண்டர் உள்ளங் கவர் கள்வர். பக்தர்கள் சித்தங்கொண்ட பரமன் விரும்பியது பண்பாடியாடும் பரிசு. அதனைச் சமயகுரவர்

செல்வியைப் பாகங்கோண்டார் சேந்தனை மகனுக்கோண்டார்
மல்லிகைக் கண்ணியோடு மாமலர்க் கோன்றைசூடிக்
கல்வியைக் கரையிலாத காஞ்சிமா நகர்தன்னுள்ளால்
எல்லியை விளங்கநின்று ரிலங்குமேற் றளியனுரே. 431

வேறிணை யின்றியேன்றும் விளங்கோளி மருங்கினுளைக்
கூறியல் பாகம்வைத்தார் கோளரா மதியும்வைத்தார்
ஆறினைச் சடையுள்வைத்தா ரணிபோழிற் கச்சிதன்னுள்
ஏறினை யேறுமேங்தை யிலங்குமேற் றளியனுரே. 432

நால்வரும் வற்புறுத்தியருளுகின்றனர், 'ஆடுகின்றிலை கூத்து : உடையான் கழற்கு அன்பிலை; என்புருகிப் பாடுகின்றலை' (திருவாசகம்). 'ஆடிப்பாடி அண்ணுமலைகைதோழ ஓடிப்போம் நமது உள்ளவினைகளே' (திருக்குறுந்தோகை). முக்கணனர். எண் - எண்ணம். அவ ரளவை எனலுமாம்.

431. செல்வி :- 'உடையாள்' 'உடையாள் உன்றன் நடுவிருக்கும்' உமாதேவியே உடையாள், அவளது ஓர் அம்சமே திருமகள். 'மகாலட்சுமி' என்று பார்வதியைத்தான் நம் முன்னோர் வழிபட்டனர். சிவபூசையில், அதற்குரிய திரவியங் களை அருளும்வண்ணம் அம்பிகையின் அமிசமான மகாலட்சுமி யையே வழிபடச் சிவாகமங்கள் விதித்துள்ளன. 'பாதியில் உமையாள் தன்னைப் பாகமாவைத்த பண்பன்' (420). சேந்தன் - முருகக் கடவுள். மல்லிகைக் கண்ணி - மல்லிகைப்பூ மாலை, சிவபிரான் மல்லிகை மாலை அணிதலுணர்த்தப்பட்டது, ஆசிரியர் காலத்திலே காஞ்சியிற் கரையிலாக் கல்வி யுடையவர் பலர் இருந்தனர் என்றோ கலை பல விளங்கின என்றோ கருதலாம். எல்லி - சூரியன்; 'அருக்கனுவான் அரனுரு' ஆதலின், அவன் விளங்க அவனுள்ளே சிவன் நின்ருன் என்றருளினுர்.

432. இணைவேறு இன்றி என்றும் விளங்கு ஒளி மருங் கினுள் - ஒப்புரைக்க வேறு எப்பொருளும் இல்லாமல், எக் காலத்தும் விளங்குகின்ற ஒளியையுடைய இடையினுள். கூறு இயல்பாகம் - திருமேனியின் ஒரு கூருக இயன்ற (இடப்) பக்கம், கோள் - வலிமை. அரா - பாம்பு, மதியம் - பிறை, ஆறு - கங்கை, அணி - அழகு, ஏறு - விடை.

தென்னவன் மலையெடுக்கச் சேயிழை நடுங்கக்கண்டு
மன்னவன் விரலாலூன்ற மணிமுடி நெரியவாயால்
கன்னலின் கீதம்பாடக் கேட்டவர் காஞ்சிதன்னுள்
இன்னவற் கருளிச்செய்தா ரிலங்குமேற் றளியனாரே. 433

திருச்சிற்றம்பலம்

---

433. தென்னவன் - தென்னிலங்கை மன்னவனாகிய இராவணன், சேயிழை - செய்ய (கல்) இழை (த்துச் செய்யப்பட்ட அணிகளைப்) பூண்டவள். இழை நூலிழையாகக் கொண்டு தாலி எனலும் கூடும், 'ஆயிழை' 'சேயிழை' 'விளங்கிழை' முதலியன தொல்வழக்கே, சேயிழையாள் எனப் பொருள்பட்டு, அன்மொழித் தொகையாயிற்று. மன்னவன் - என்றும் நிலையாயிருப்பவன். நெரிய - நொறுங்க, கன்னலின் - கரும்பினைப் போலும் இனிமை பயக்கும், கீதம் - சாமகானம், இன் - இனிமை (வாளும், நாளும், பேரும், பிறவும்). அவற்கு - அவ்விராவணனுக்கு, இத்தன்மையனுக்கு என்னும் அண்மைச் சுட்டு ஏலாது.

---

நீடுபுகழ்த் திருவாரூர் நிலவுமணிப் புற்றிடங்கொ ணிருத்தர்தம்மைக்
கூடியவன்போடுகாலங்களிலணைந்துகும்பிட்டுக்கோதில்வாய்மைப்
பாடிளம்பூ தத்தினா னெனும்பதிக முதலான பலவும் பாடி
நாடியவார் வம்பெருக நைந்துமனங் கரைந்துருகி நயந்து செல்வார்

நான்மறைநூற்பெருவாய்மைநமிநந்தியடிகடிருத்தொண்டினன்மைப்
பான்மைநிலை யாலவரைப் பரமர்திரு விருத்தத்துள் வைத்துப்பாடித்
தேன்மருவுங் கொன்றையார் திருவாரூ ரரனெறியிற் றிகழுந்தன்மை
யானதிற மும்போற்றி யணிவீதிப் பணிசெய்தங் கமரு நாளில்.

நீராருஞ் சடைமுடியார் நிலவுதிரு வலிவலமு நினைந்து சென்று
வாராரு முலைமங்கை யுமைபங்கர் கழல்பணிந்து மகிழ்ந்து பாடிக்
காராருங் கறைக்கண்டர் கீழ்வேளூர் கன்றாப்பூர் கலந்து பாடி
யாராத காதலினாற் றிருவாரூர் தனின்மீண்டு மணைந்தா ரன்றே.

## 44 திருக்கச்சியேகம்பம்

### திருப்பதிக வரலாறு

காஞ்சிவாணர் முகத்தாமரையெல்லாம் மலரத் திருவதிகை ஞாயிறு எழுந்தருளியது. அடியார் எதிர்கொண்டனர்; இறைஞ்சினர், கம்பர் செம்பொற்கோயில் குறுகினர். திருநாவுக்கரசர் கருவார்கச்சியேகம்பர் கழல் வணங்கிப் பாடினார், அத் தமிழ்ச்சொல் மலர்மாலைகளுள் ஒன்று இத் திருப்பதிகம். (புராணம். 317 - 321)

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

நம்பனை நகரமூன்று மெரியுண வெருவநோக்கும்
அம்பனை யமுதையாற்றை யணிபொழிற் கச்சியுள்ளே
கம்பனைக் கதிர்வெண்டிங்கட் செஞ்சடைக் கடவுடன்னைச்
செம்பொனைப் பவளத்தூணைச் சிந்தியா வெழுகின்றேனே.**434**

**434.** கம்பனும் அம்பனும் அமுதும் ஆறும் ஏகம்பனும் கடவுளும் பொன்னும் பவளத் தூணும் ஆகிய சிவபிரானைச் சிந்தித்து எழுகின்றேன். நம்பன் - எல்லாவுயிர்களாலும் விரும்பப்படுவோன். நகரமூன்றும் - முப்புரங்களும். வெருவ - அஞ்சி வாய்வெருவ. ' அஞ்சி வெருவி ஓடித் தழுவ வெளிப் பட்ட கம்பன் '. நோக்கும் அம்பன் :- விழித்தெரித்தமை குறித்தது. அம்பு - திருமாலாகிய கணை. அம்புடையவன் அம்பன். அமுது - இறவாதுகாப்பவன் ' இன்பமரும் அமுதை ' (6. 91. 4) ' அமுத வொளிவெளி ' (5. 91. 9). ஆறு - நல்லாறு நன்னெறி. ' நன்னெறியாவது நமச்சிவாயவே '. ' நெறியே; நின்மலனே நெடுமாலயன் போற்றிசெயும் குறியே நீர்மையனே ' (7. 24. 9). கச்சியுள் ஏகம்பன்; கச்சியுள்ளே கம்பன். வெண்டிங்கட் செஞ்சடை :- முரண்டொடை.

ஒருமுழ முள்ளகுட்ட மோன்பது துளையுடைத்தாய்
அரைமுழ மதனகல மதனில்வாழ் முதலையைந்து
பெருமுழை வாய்தல்பற்றிக் கிடந்துநான் பிதற்றுகின்றேன்
கருமுகில் தவழுமாடக் கச்சியே கம்பனீரே. 435

மலையினார் மகளோர்பாக மைந்தனார் மழுவோன்றேந்திச்
சிலையினான் மதில்கண்மூன்றுந் தீயெழச் செற்றசெல்வர்
இலையினார் சூலமேந்தி யேகம்ப மேவினாரைத்
தலையினால் வணங்கவல்லார் தலைவர்க்குந் தலைவர்தாமே.

பூத்தபோற் கொன்றைமாலை புரிசடைக் கணிந்தசெல்வர்
தீர்த்தமாங் கங்கையாளைத் திருமுடி திகழவைத்து
ஏத்துவா ரேத்தநின்ற வேகம்ப மேவினாரை
வாழ்த்துமா றறியமாட்டேன் மால்கொடு மயங்கினேனே. **437**

435. குட்டம் - குளம். 'நெடுநீர்க்குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து' (புறம். 243) ஒரு குட்டை. அதில் ஒன்பது தூம்பு. அதன் அகலம் அரைமுழம்; நீளம் ஒருமுழம்; அதில் வாழும் முதலையோ ஐந்து. பெரிய முழை - (குகை) போலும் வாசலைப் பற்றிக் கிடந்து பிதற்றுகின்றேன் நான். கரிய மேகம் தவழும் மணிமாடங்களையுடைய திருக்கச்சியேகம்பவாணரே!

436. மலையினார் மகள் - இமாசல குமாரி. மைந்தனார் - வலிமையுடையவர். (மஞானர்). மழுப்படை தாங்கியவர். சிலை - மேருமலையாகிய வில். சிலை - மலை, சிலை என்னும் மரத்தாற் செய்யப்படுதலால் வில்லுக்குச் சிலை என்ற பெயராயிற்று. ஈண்டுச்சிலை (மலை)யே சிலையாயிற்று. மும்மதில்; முப்புரம். செல்வர் - மும்மலமும் இல்லாத தூய ஞானச் செல்வ முடையவர். 'சிலையுடை மலையை வாங்கித் திரிபுரம் மூன்றும் எய்தார்' (353). 'இலையுடைப்படை' 373. பார்க்க. தலையினால்.........தலைவர். 'தலையினால் தொழுது ஓங்குவார் நீங்குவார் தடுமாற்றமே' (2. 77. 2).

437. மலர்ந்த பொன் போலும் செந்நிறமுடைய கொன்றை மலர் மாலையைச் சடையிற் சூடிய செல்வர். தூய்மையும் திருவருட் பெருமையும் பொருந்திய கங்கையாளைத் திருமுடி திகழ்ந்து

மையினார் மலர்நெடுங்கண் மங்கையோர் பங்கராகிக்
கையிலோர் கபாலமேந்திக் கடைதோறும் பலிகொள்வார்தாம்
எய்வதோ ரேனமோட்டி யேகம்ப மேவினாரைக்
கையினாற் றொழவல்லார்க்குக் கடுவினை களையலாமே. 438

தருவினை மருவுங்கங்கை தங்கிய சடையனெங்கள்
அருவினை யகலநல்கு மண்ணலை யமரர்போற்றும்
திருவினைத் திருவேகம்பஞ் செப்பிட வுறையவல்ல
உருவினை யுருகியாங்கே யுள்ளத்தா லுகக்கின்றேனே. 439

விளங்கவைத்தவர். ஏத்தும் அன்பர் ஏத்தும் வண்ணம் நின்ற திருவேகம்பத்தில் எழுந்தருளியவர், அவர் திருவடியை வாழ்த்தும் வகை அறியவல்லேன் அல்லேன். பற்றுக்கொண்டு மயங்கினேன். கழிந்த காலத்தைக் கருதி யிரங்கியது, வைத்து நின்ற ஏகம்பர், ஏத்த நின்ற ஏகம்பர்.

438. மை அணிந்த பூப் போலும் நெடிய கண்களையுடைய மங்கையை ஒரு பங்கில் உடையவர், கையில் ஒரு கபாலம் ஏந்தி வீட்டு (த்தெரு) க் கடைதோறும் சென்று பலி கொள்பவர். அம்பால் எய்து துரத்துவதொரு பன்றியை ஓட்டித் திருக்கச்சி யேகம்பத்தில் எழுந்தருளியவர். அவரைக் கை குவித்துத் தலைமேல் ஏற்றிப் போற்றி வாழ்த்தி நினைந்து தொழவல்லவர்க்குக் களையலாகாத கடிய தீவினைகளைக் களைதல் எளிதாகும். ஏனம் ஓட்டியதை அருச்சுனனுக்குப் பாசுபதங் கொடுத்த வரலாற்றில் அறிக. ஓட்டிமேவினார் என்றியையினும், ஓட்டுதலுக்கும் மேவுதலுக்கும் தொடர்பில்லை. ‘ ஓட்டி ’ பெயருமாம்.

439. தருவினை - கொடுக்குஞ் செயல் ; வினைத்தொகை, மரங்களை எனலும் ஆம், தரு - மரம், தரு+இன்+ஐ=தருவினை. கங்கையாறு தன்கண் முழுகுவார் தீவினைகளைக் கெடுத்து, நல்வினைப்பயனைக் கொடுக்கும் வினையுடையது. அது தோன்றிய இடந்தொட்டு முடியும் இடங்காறும் ஆங்காங்கு மரங்களை மருவுதல் உடையது. அருவினை - நீங்குதற்கரிய வினை. அகல - அகன்றொழிய. நல்கும் - அருள் கொடுக்கும். அண்ணல் - சிவபெருமான். அமரர் - தேவர் ; மும்மலத்தோடு செய்யும் போருடைய ஞானவீரர். திரு :- ‘ திருவே என் செல்வமே

கொண்டதோர் கோலமாகிக் கோலக்கா வுடையகூத்தன்
உண்டதோர் நஞ்சமாகி லுலகெலா முய்யவுண்டான்
எண்டிசை யோருமேத்த நின்றவே கம்பன்றன்னைக்
கண்டுநா னடிமைசெய்வான் கருதியே திரிகின்றேனே. 440

படமுடை யரவினோடு பனிமதி யதனைச்சூடிக்
கடமுடை யுரிவைமூடிக் கண்டவ ரஞ்சவம்ம
இடமுடைக் கச்சிதன்னு ளேகம்ப மேவினான்றன்
நடமுடை யாடல்காண ஞாலந்தா னுய்ந்தவாறே. 441

---

தேனே...அமரரேறே' 'கருவெந்து வீழக் கடைக்கணித் தென்னுளம் புகுந்த திரு' 'செப்பரிய அயனொடுமால் சிந்தித்தும் தெரிவரிய அப்பெரிய திரு' 'திருவொளி காணிய பேதுறுகின்ற திசைமுகன்' 'சென்றடையாத திருவுடையான்' 'திருநெறி' 'சிவமே பெறுந்திரு எய்திற்றிலேன்' 'அடியோம் திருவைப் பரவி நாம் தெள்ளேணம் கொட்டாமோ' என்பனவற்றால், எல்லாம் வல்ல முழுமுதற் பொருளையும் அவனருளையும் அவனை யடையும் நெறியையும் அந்நெறியிற் சென்று பெறும் பேரின்பத்தையும் 'திரு' எனல் விளங்கும். செப்பிட - சொல்ல, உறைய - வாழ. செப்புவார் உள்ளத்தில் உறையவல்ல வுரு சிவனுரு.

440. கோலம் - வேடம். 'பல பல வேடம் ஆகும் பரன்' திருக்கோலக்காவை உறைவிடம் ஆக உடைய திருக் கூத்தன். எல்லாத் தலங்களிலும் திருக்கோயில் கொண்டிருக்கும் முழு முதல்வன் ஒருவனே. அவனே ஞானானந்த நடனம் புரிபவன்; ஐந்தொழிற் கூத்தன். இவ்வுண்மை யறியாதார், திருமுறையில் திருக்கூத்தன் என்றுள்ள இடந்தோறும் மகேசுரமூர்த்தியாகிய நடராசர் என்பர். உண்டது நஞ்சம், அதனை உண்டதன் காரணம் உலகெலாம் உய்தல் வேண்டுமென்று கொண்ட திரு வுள்ளம். திருவேகம்பனைக்கண்டு அடிமை செய்தற் பொருட்டாக அவன் திருவடியே கருதித் தலந்தோறும் திரிகின்றேன் நான். எண்+திசை; எட்டுத் திக்கு. இதில் உலகுய்ய நஞ்சுண்டமை உணர்த்திய துணர்க.

441. பாம்பும் திங்களும் சூடி, யானைத்தோல் போர்த்து, கண்டவர் அஞ்சி நடுங்க, பரந்த இடத்தையுடைய; பெருமை

பொன்றிகழ் கொன்றைமாலை பொருந்திய நெடுந்தண்மார்பர்
நன்றியிற் புகுந்தெனுள்ள மெள்ளவே நவிலநின்று
குன்றியி லடுத்தமேனிக் குவளையங் கண்டரெம்மை
இன்றுயில் போதுகண்டா ரினியரே கம்பனாரே. 442

யுடைய, திருக்கச்சியுள் திருவேகம்பத்தில் எழுந்தருளிய சிவ பெருமானது திருக்கூத்தாடும் திருவிளையாடலைக் காண உலகம் உய்தி பெற்றது. உய்யும் ஆறு திருக்கூத்துக் காட்சியே. இதில் உலகுய்யக் கூத்தாடல் குறித்ததுணர்க. கடம் - மத நீர், கடம் உடை உரிவை - யானைத்தோல். நடம் உடை ஆடல் :- ஆடல் பொது, நடம் சிறப்பு. உடலாடல், கண்ணுடல், கையாடல், காலாடல் நடமாடல் எனப் பொதுவினை யாதல் அறிக. நடம், முதலியன குறித்தவற்றிற்கே உரியவாதலும் ஆநந்த நடம், பஞ்சாக்கர நடம், பஞ்சகிருத்திய நடம் எனப் பொதுவாதலும் உண்டு.

442. பொன்திகழ் கொன்றைமாலை (:- 'பூத்த பொற் கொன்றை மாலை' 437) பொருந்திய நீண்ட குளிர்ந்த மார்புடையவர். திருமார்பிற் கொன்றைமாலை சூடியவர் என்பது ஈண்டுணரப்படும். நன்றி - நன்மை; சிவம். சிவநெறி. நவில - போற்றுரைக்கப் பயில. குன்றியில் அடுத்த மேனி :- 'திகழொளிக்குன்றி யேய்க்கும் உடுக்கை' (குறுந்தொகை, கடவுள் வாழ்த்து) என்றதுபோல், செம்மேனிக்குக் குன்றிமணி நிறம் ஒப்பாயிற்று. குவளையங்கண்டர் :- 'குவளைக்களத்தம் பலவன்' 'காவிநின்றுஏர்தருகண்டர்' 'தென்றில்லை நின்றோன் மிடற்றின் வண்ணக்குவளை மலர்கின்றன' (திருக்கோவையார். 33, 41, 162) 'பைங்குவளைக்கார் மலரால் ... எங்கோனும் போன்றிசைந்த பொங்குமடு. (திருவாசகம் 167). இன்துயில் போது - இனிய துயில்கின்ற வேளை. துயில்போது :- வினைத்தொகை, அதன்அடை இனிமைப்பண்பு. இன்றுயில் போது :- பண்புத்தொகை. இனியர் ஏகம்பனார். மெள்ளவே நவிலல் :- பிறர் செவி கேளாவாறு மெல்லொலியுறச் சொல் லுதல். கொன்றைமாலை நெடுந்தண்மார்பும், நன்றியிற் புகலும், குன்றி மேனியும், குவளைக்கண்டமும், இன்றுயில்போது கண்டதும் ஏகம்பனார் இனியரென்றதற்கு ஏதுக்கள்.

துருத்தியார் பழனத்துள்ளார் தொண்டர்கள் பலருமேத்த
அருத்தியா லன்புசெய்வா ரவரவர்க் கருள்கள்செய்தே
எருத்தினை யிசையவேறி யேகம்ப மேவினார்க்கு
வருத்திநின் றடிமைசெய்வார் வல்வினை மாயுமன்றே. 443

திருச்சிற்றம்பலம்

443. துருத்தியும் பழனமும் சிவதலம், அருத்தி - விருப்பம். அன்புசெய்வார் :- 'மெய்யன்பர்' எருத்து - விடை. வருத்தி - உடலை வருந்தச்செய்து, உடலில் உயிரை வருத்தி, அடிமை செய்தலே வினைத்தீர்வுக்கு ஏதுவாகும். அவ்வடிமையும் ஏகம்பமேவினார்க்கே செய்தல் உயிர்களது கடன்.

திருப்புகலூ ரமர்ந்தருளுஞ் சிவபெருமான் சேவடிகள் கும்பிட் டேத்தும்
விருப்புடைய வுள்ளத்து மேவியெழுங் காதல்புரி வேட்கை கூர
வொருப்படுவார் திருவாரு ரொருவாறு தொழுதகன்றங் குள்ளம் வைத்துப்
பொருப்பரையன் மடப்பாவை யிடப்பாகர் பதிபிறவும் பணிந்து போந்தார்.

சித்த நிலாவுந் தென்றிரு வாரூர் நகராளும்
மைத்தழை கண்ட ராதிரை நாளின் மகிழ்செல்வம்
இத்தகை மைத்தென் றென்மொழிகேன் என் றருள்செய்தார்
முத்து விதான மணிப்பொற் கவரி மொழிமாலை.

தேவர் பிரானைத் தென்புக லூர்மன் னியதேனைப்
பாவியன் மாலைச் செந்தமிழ் பாடிப் பரிவோடும்
மேவிய காலந் தோறும் விருப்பிற் கும்பிட்டே
யோவுத லோவு திருப்பணி செய்தங் குறைகின்றார்.

சீர்தரு செங்காட் டங்குடி நீடுந் திருநள்ளா
றார்தரு சோலை சூழ்தரு சாந்தை யயவந்தி
வார்திகழ் மென்முலை யாளொரு பாகன் றிருமருகல்
ஏர்தரு மன்பாற் சென்று வணங்கி யின்புற்றார்.

# 45 திருவொற்றியூர்

## திருப்பதிக வரலாறு

திருவொற்றியூர்த் திருக்கோயிலை உற்று, இறைஞ்சி, உட்புகுந்து, தொண்டருடன் உருகி வலங்கொண்டு அடியாரது கருநாமம் தவிர்ப்பாரைக் கைதொழுது முன்வீழ்ந்து தொழுது ஆர்வம் மிக்கு நிலம் தோய்ந்து எழுந்து அங்கமெலாம் பரவசத்தின் முகிழ்ந்து விழிநீர் பொழிய விதிர்ப்புற்று விம்மி, எழுதாத மறை யளித்த எழுத்தறியும் பெருமானைப் பாடிய திருவிருத்தங்களுள் ஒன்று இத் திருப்பதிகம்.

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

வெள்ளத்தைச் சடையில்வைத்த வேதகீ தன்றன்பாதம்
மெள்ளத்தா னடையவேண்டின் மெய்தரு ஞானத்தீயால்
கள்ளத்தைக் கழியநின்றார் காயத்துக் கலந்துநின்று
உள்ளத்து ளொளியுமாகு மொற்றியூ ருடைய கோவே. **444**

**444.** கங்கை நீர்ப்பெருக்கை, அதன் வேகத்தை அடக்கிச் சடைமிசை வைத்தவனாகிய தொடுக்குங்கடவுட் பழம் பாடலான் திருவடியை விரையாது வழுவின்றிப் பெற விரும்பினால்; அது பெறத்தக்க உபாயத்தைக் கேண்மின். ஒற்றியூருடைய் கோவாகிய மெய்ப்பொருளை அளிக்கும் உணர்வாகிய தீயால் (4. 75. 4) கள்ளம் முதலிய குற்றங்களாகிய காட்டை எரித்தொழித்துச் செப்பஞ்செய்து நின்றவரது ஊன் உடலாகிய திருக் கோயிலுள்ளே விளங்கும் உள்ளமாகிய பெருங் கோயிலில் (மூலட்டானத்தில்) எழுந்தருளிக் கலந்து நின்று சிவப்பிரகாசம் புரிவார் அத்திருவொற்றியூருடையார். இது திருவடி யடையும் வழி. கலந்து நிற்றல் - அவனே தானே ஆகிய அந்நெறி ஏகனாகி இறைபணி நிற்றல்.

வசிப்பேனும் வாழ்க்கைவேண்டா வானவ ரிறைவனின்று
புசிப்பதோர் போள்ளலாக்கை யதனோடும் புணர்வுவேண்டில்
அசிர்ப்பேனு மருந்தவத்தா லான்மாவி னிடமதாகி
உசிர்ப்பேனு முணர்வுமுள்ளா ரோற்றியூ ருடையகோவே.

தானத்தைச் செய்துவாழ்வான் சலத்துளே யழுந்துகின்றீர்
வானத்தை வணங்கவேண்டில் வம்மின்கள் வல்லீராகில்
ஞானத்தை விளக்கையேற்றி நாடியுள் விரவவல்லார்
ஊனத்தை யொழிப்பர்போலு மோற்றியூ ருடையகோவே. 446

---

**445.** வசிப்பேனும் வாழ்க்கை :- 'வசித்திட வரும் வியாபி யேனும் வழக்குடையனாகி' (சித்தியார் சுபக்கம் சூ. 4; 20). வாழும் வாழ்க்கை. கட்டு நெறியில் (பெத்தத்தில்) உடலில் உலகில் காலதேச வரையறைக்குட்பட்டு வசித்தல் என்னும் குறை வாழ்க்கை வேண்டா. புசித்தலின்றேல் அழியத் தக்க பொத்த லுடம்பொடும் தேவாதி தேவன் நின்று பொருந்தவேண்டினால், உள்ளுருகிச் செய்வதாகிய, செய்தற்கரிய தவத்தால், ஆன்மாவி னிடத்ததாய் உயிர்ப்புடன் கூடியதேனப்படும் உணர்வும் உடையவர் திருவொற்றியூருடையார். அசிர்ப்பு - கண்ணீர்ப் பெருக்கம். அயர்ப்பு என்பதன் மரூஉவாகக்கொளின், இளைப்பு ஆம். தவம் மெய் இளைத்தற் பொருட்டுஞ் செய்யப்படுவது. ஆன் மாவினிடம்...உசிர்ப்பு...உள்ளார் :- 'என்னுளே உயிர்ப்பாய்ப் புறம் போந்து புக்கென்னுளே நிற்கும் இன்னம்பர் ஈசனே' (5. 21. 1). 'ஆவியுள் நீங்கலன்' 'உள்ளத்தின் உள்ளே நின்ற கரு' 'ஊனாகி உயிராகி அதனுள் நின்ற உணர்வாகி' என்புழி, ஊன் (பாசம்) உயிர் (பசு) உணர்வு (பதி) என்னும் முப்பொருளும் உணர்த்தப்பட்டன. வசிப்பு - அதுவதுவாய வசிப்பு. (தணிகைப். 816). 'உண்டவூண் உனக்கு ஆம் வகை' (திருவிசைப்பா).

**446.** தானம் - கொடை, சலம் - சஞ்சலம்; அசைவு; வருத்தம் விளைக்கும் உலக வாழ்க்கை. வானத்தை - அருள் வெளியை; இன்ப வெளியை, வல்லீராகில் வம்மின்கள். ஞானத்தை - சிவ ஞானத்தை, விளக்கை - சிவஞான தீபத்தை, நாடி - ஆகம வளவையாலும் அநுமான அளவையாலும் ஆராய்ந்து, 'நாடி' எனவே அநுமான அளவையான் என்பதூஉம்

காமத்து ளழுந்திநின்று கண்டரா லொறுப்புண்ணுதே
சாமத்து வேதமாகி நின்றதோர் சயம்புதன்னை
ஏமத்து மிடையிராவு மேகாந்த மியம்புவார்க்கு
ஓமத்து ளொளியதாகு மொற்றியூ ருடையகோவே. 447

சமையமே லாறுமாகித் தாஞெரு சயம்புவாகி
இமையவர் பரவியேத்த வினிதினங் கிருந்தவீசன்
கமையினை யுடையராகிக் கழலடி பரவுவார்க்கு
உமையொரு பாகர்போலு மொற்றியூ ருடையகோவே. 448

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

' கண்டு ' எனவே அநுபூதியில் என்பதூஉம் தாமே போதரும், (சிவ. போ. பாயிரம்). உள்விரவ வல்லார் - அநுபூதியிற் கண்டு கலந்து சிவாநந்தம் நுகர வல்லவர், ஊனத்தை - பிறவியை ; உடலெடுத்தலை ; ஊனுடம்பினை ; குறையை. 775.

447. காமத்துள் - ஆசையுள்; பெண்ணுசை, மண்ணுசை, பொன்னுசையுள். அழுந்திநிற்றல் - அநுபவித்தல். கண்டர் - காலன், அவன் தூதர் முதலியோர். ஒறுப்பு - தண்டனை. சாமத்து வேதம் - சாம வேதம். சயம்பு - தான் தோன்றி, (சுயம்பு). ஏமத்தும் - பகற்பொழுதின் நான்கு யாமங் களிலும் இராப்பொழுதின் நள்ளிரவொழிந்த யாமங்களிலும். ஏகாந்தம் - ஒரு முடிவு. ' வெருவந்த செய்தொழுகும் வெங்கோலனுயின் ஒருவந்தம் ஒல்லைக் கெடும் ' (563) ' ஒருவந்தம் ஒருதலை ஏகாந்தம் என்பன ஒரு பொருட்கிளவி '. (பரிமேலழகருரை). ' ஆக்கம் இழந்தேம் என்று அல்லாவார் ஊக்கம் ஒருவந்தம் கைத்துடையார் ' ஒருவந்தம் ஊக்கம் - ஒருவந்தமாயவூக்கம். நிலைபெற்ற ஊக்கம். (ஷை) ஏகம் - ஒன்று. அந்தம் - முடிபு ஏகாந்தம் - ஒருதலை. அநேகம்+ அந்தம்=அநேகாந்தம் - பலதலை. பரிமேலழகருரையின் வாய்மையை உணரமாட்டாமல், பொருத்தம் இன்றி எழுதியதோ ருரையைப் பொருளாகக்கொண்டு ' செல்வம் ' என்றுரைப்பது பொருந்தாது. இறைவனை இயம்புவார்க்கு ஏகாந்தம் அன்றி அநேகாந்தம் ஒவ்வாது. ஓமம் - தீயோம்பும் புறவேள்வி, சுக வேள்வியில் ஞானத்தீ. ஈரிடத்தும் ஒளி வடிவாயிருந்தருள்பவன் திருவொற்றியூருடையான். 'ஒன்றுகக் காண்பதே காட்சி.'

448. பா. 969. ' புறப்புறம் புறம் அகப்புறம் அகம் என்னும் நான்கனுள் அகச் சமயம் ஒழித்து ஒழிந்த முக்கூற்றுப்

ஒருத்திதன் றலைச்சென்றுளைக் கரந்திட்டா னுலகமேத்த
ஒருத்திக்கு நல்லனாகி மறுப்படுத் தொளித்துமீண்டே
ஒருத்தியைப் பாகம் வைத்தா னுணர்வினு லையமுண்ணி
ஒருத்திக்கு நல்லனல்ல னேற்றியூ ருடையகோவே. 449

புறங்களில் தனித்தனி அறுவகைப்பட்ட சமயங்களின் நின்று கொண்டு அவற்றுள்ளும் பலவேறு வகைப்பட ஓர்த்து உணர்கின்ற அவரவர்கொண்ட முதற்பொருளாய், அவரின் வேருகிய பாடாணவாதம் முதலிய அகச் சமயத்தார்க்கு இலயம் போகம் அதிகாரம் என்னும் மூன்று அவத்தையின் முறையே சத்தியும் உத்தியோகமும் பிரவிருத்தியும் என்னும் தொழில் வேறுபாடுபற்றிச் சிவன் சதாசிவன் மகேசன் என்னும் பெயருடைய அருவம் அருவுருவம் உருவம் என்னும் தடத்தக் குறியே குறியாக உடைத்தாய்ச், சித்தாந்த சைவர்க்கு அத் தடத்தக்குறியே அன்றி வேதாகமங்களின் கருத்திற்கு அதீதமாய் உயிர்க்குயிராய், உயிர்கட்கெல்லாம் அறிவைப் பிறப்பிக்கும் அம்மையப்பனுமாகி, எங்கணும் எக்காலமும் செறிந்து வியாபகமாய்' (சிவஞான சித்தியார். சுபக்கம். 1. உரை) நிற்பவன் சிவன் என்னும் உண்மையால், சமயமேலாறுமாதல் விளங்கும். சயம்பு (447). இமையவர் - கண்ணிமையாது கடவுளையுணர்பவர். கமை - பொறுமை. க்ஷமா என்னும் வட சொல்லின் தற்பவம்.

449. சென்ற ஒருத்தியைத் தலையிற் கரந்திட்டான். கங்கையைச் சடையுள் மறைத்தான் என்றதாம். ஒருத்திக்கு - அக்கங்கைக்கு. நல்லன் - இனியன். ஆகி - போன்று. 'ஆள்வாரிலிமாடாவேனோ' மறுப்படுத்து - மாசுண்டாக்கி. ஒளித்து - உமைநங்கை அறியாது அப்புனற்கங்கையைச் சடையுள்ளே மறைத்து. சுட்டுவருவித்துரைக்க. ஒழுக்கம் விழுப்பம் தரலான் உயிரினும் ஓம்பப்படும் என்றலே அமைவதா யிருக்க, மற்றும் ஒழுக்கம் என்றது மிகை என்பார்க்கு விடையாகப் பரிமேலழகர் 'அவ்வொழுக்கம்' எனச் சுட்டு வருவித்துரைத்து நூலின் குற்றமின்மை ஓம்பினுர். வருவித்த சுட்டால் 'அங்ஙனம் விழுப்பந்தருவதாயவொழுக்கம்' எனப் பெறலுணர்த்தினுர். அவ்வாறே ஈண்டும் பொருத்தமுற

பிணமுடை யுடலுக்காகப் பித்தராய்த் திரிந்துநீங்கள்
புணர்வெனும் போகம்வேண்டா போக்கலாம் போய்மைநீக்க
நிணமுடை நெஞ்சினுள்ளா னினைக்குமா நினைக்கின்றார்க்கு
உணர்விேனா டிருப்பர்போலு மோற்றியூ ருடையகோவே.450

உரைத்துக்கோள்க. ஒருத்தியை - உமைநங்கையாரை. பாகம் - இடப்பால். ஐயம் - பிச்சை. உண்ணி - உண்பவன். உணர்விறல் உண்ணி என்றதால் வாயால் உண்ணும் மற்றைப் பிச்சை போல்வது அன்று. ஒருத்திக்கும் - கங்கை உமை நங்கையென்னு இருவருள் ஒருத்திக்கும். 'கங்கை சடையுட் கரந்தாய் அக்கள்ளத்தை மெள்ள வுமைநங்கை அறியின், போல்லாது கண்டாய் எங்கள் நாயகனே' (1000)

450. பிணம் முடை உடல் என்றும் பிணம் உடை உடல் என்றும் பிரிக்கலாம். பிணமாதலும் முடைநாற்றமும் உடைய உடல். பிணமாதலை உடைய உடல். உடலுக்காகப் பித்தாய்த் திரிதல் :- உடற்பற்றுடையவராய், அதைப் போற்றிக்காக்க, உணவுக்கும், போருளுக்கும், மழை குளிர் வெயில் தாக்காது தடுத்துக் காத்தற்கும், சிற்றின்பம் விளைக்கும் உடற் சேர்க்கைக்கும் அலைதல். புணர்வு எனும் போகம் வேண்டா என்றது சிற்றின்ப வேட்கையைக் கோள்ளற்க என்றதாம். போக்கலாம் போய்மை - போக்குதற்கு உரியதாகும் போய்ப் பிறவியை. நீங்க - பிறவிக்கு ஏதுவான வினையின் நீங்க. நிணம் - கோழுப்பு. நெஞ்சினுள்ளிடத்து. நினைக்குமா நினைக்கின்றார்க்கு - உள்ளிருக்கும் இறைவனை நினைக்கும் ஆறு நினைக்கின்ற அடியவர்க்கு. உணர்வினேடு - அவர்க்கு வாய்த்த குணமான சிவஞானத்தோடு (பசுஞானத் தோடிரான்). இருப்பர் - குணியாய் இருந்து விளங்குவார் நினைக்குமா நினைக்கின்றார் :- 'நிறைதரு கருணாநிலயமே உன்னைத் தோண்டனேன் நினையுமா நினையே' (திருவிசைப்பா. 11) 'நினைப்பறநினைந்தேன்' 'நினையாமல் நினைந்து' என்ற கருத்தும் போருந்தும். சீவபோதமாக நினையாது சிவபோதமாக நினைதலே எல்லாவற்றிற்கும் உரிய உண்மையாகும்.

பின்னுவார் சடையான்றன்னைப் பிதற்றிலாப் பேதைமார்கள்
துன்னுவார் நரகந்தன்னுட் டொல்வினை தீரவேண்டின்
மன்னுவான் மறைகளோதி மனத்தினுள் விளக்கொன்றேற்றி
உன்னுவா ருள்ளத்துள்ளா ரொற்றியூ ருடையகோவே. 451

முள்குவார் போகம்வேண்டின் முயற்றியா லிடர்கள்வந்தால்
எள்குவா ரெள்கிநின்றங் கிதுவொரு மாயமென்பார்
பள்குவார் பத்தராகிப் பாடியு மாடிநின்றும்
உள்குவா ருள்ளத்துள்ளா ரொற்றியூ ருடையகோவே. 452

451. பின்னுசடை, வார்சடை, பின்னியவார்ந்த சடை. பின்னுதல் - முறுக்குண்ணல். வார்தல் - நீண்டொழுகுதல். 'பின்னியதாழ் சடையார்' (1. 8. 10). பிதற்று - முதனிலைத் தொழிற் பெயர், பிதற்றுதல், இல்லாப் பேதைமார்கள். மகன் மகள் ஒருமை, மகவர் பன்மை, அதன் மரூஉவே 1, மகார் 2, மார். 'மகார்கள்' - 'மார்கள்' என மருவிற்று. இது பெயர்ச் சொல்லின் மரூஉவாதலின் வினைகொள்ளலாயிற்று. இதனை இலக்கண நூலார் விகுதி எனக் கொண்டனர். கோமகன் - கோமான், சேரன்மகன் - சேரமான், மலையன் மகன் - மலையமான், வேள்மகன் - வேண்மான், இருங்கோ வேண்மாள் என்பவற்றில் மான், மாள் (ஒருமை) 1 மகார் - மார் (பன்மை) என்று மருவியவாறறிக. 'சடையவனே விடையவனே உடையவனே கடையவனேனைத் தாங்கிக்கொள் என்று பிதற்றுத பேதை மகார்கள் நரகத்துள் துன்னித் துன்புறுவார்கள். அத்துன்பத் திற்கு ஏதுவான தொல்லைவல்வினைத் தொந்தம் தீரவேண்டினால், நிலைபெற்ற மேலான வேதங்களை ஓதி உள்ளத்துள் விளக்கு ஒன்று ஏற்றி உன்னுகின்றவர் உள்ளத்தில் உள்ளவர் ஒற்றியூருடையார். 729. 526. மன்னுதல் - அழியாது நிலைத்தல். வான் - பெருமை. வால் - தூய்மை. மனவிளக்கு :- 'மனமணிவிளக்கு' உன்னுதல் - கருதுதல், உள்ளத்துள்ளார் - மனத்துள் உயிர்க்குயிராயிருப்பவர்.

452. நேஞ்சறிவுறூஉ :- முள்குவார் - முயங்கும் மகளிர், 'இளமுலை முகிழ்செய முள்கிய, (கலித். 125). 'அமர்க்கண் ஆமான் அருநிறம் முள்காது' (நற்றிணை 105). 'ஆய்கதிர் முடி நிழல் முனிவரர் சரணம் முள்குமே' (சூளாமணி. 55). 'நெடுங் கணார்தம் குவிமுலைத் தடத்து முள்கி' (ஷை 69). முள்கு

வேறுத்துகப் புலன்களைந்தும் வேண்டிற்று வேண்டுநேஞ்சே
மறுத்துக வார்வச்சேற்றக் குரோதங்க ளானமாயப்
போறுத்துகப் புட்பகத்தே ருடையானை யடரவூன்றி
ஒறுத்துகந் தருள்கள்சேய்தா ரோற்றியூ ருடையகோவே.

திருச்சிற்றம்பலம்

என்பது நீண்டு (முள்கு)முழ்கு என்றுதலுமுண்டு, 'சுற்றுவார் குழலார்தம் துகிற்றடம் முற்று முழ்கும் போழுது' (ஷை 616), முள்கு + ஆர்ந்து + இருப்பர் = முள்கார்ந்திருப்பர், இது மருவி உட்கார்ந்திருப்பர் என்றுயிற்று, முழங்காலைக் கையால் தழுவிக் கட்டிக்கோண்டு, ஈரடியும் நிலந்தோய முழங்கால் இரண்டும் நேட்டங்காலிட்டிருத்தலை முள்காந்திருத்தல் என்பர். 'பசுப் போல்வார் முற்பட்டாற் பாற்பட்ட சான்றோர் முசுப்போல முள்காந்திருப்பர்' (நன்னூல். 96. சங்கர நமச்சிவாயருரை). சிந்தாமணி முதலியவற்றில் 'முள்குதல்' என்னுஞ் சோல்லாட்சி பயின்றுளது. முயற்றி - முயல்கின்றுய், முன்னிலை வினை. வேண்டி முயற்றி என்றதால், வேண்டில் என்பது பிழை யேனல் புலப்படும். எள்குவார் - இகழ்வார். மாயம் - புதுமை. எள்கல் முதலிய மூன்றும் முள்குவார் (மகளிர்) வினை. பள்குவார் - அச்சத்தில் ஆழ்பவர், பதுங்கி என்றுருமுளர், (சூளாமணி1585). உள்குவார் - நினைப்பவர்.

453. நேஞ்சே, ஐந்து புலன்களும் நீ வேறுத்து அழியுமாறு முன் வேண்டியதையே பின்னும் வேண்டி நிற்கும்; அப்புலன்களின் வழியே நீ சேல்லின், 'காமக் குரோத லோப மோக மத மாற்சரியங்களானவை மாயா, அவை மாய்ந் தோழியவேண்டி அப்புலன்களின் வழியிற் சேல்லுஞ் சேலவை வேறுத்து, அவற்றை (க் காமாதிகளை, புலனேறி வேட்கைகளை) அழிப்பாயாக. காமாதி மாய மறுத்து உகப்பாயாக எனலுமாம், நேஞ்சே என்று விளித்து உக என்று ஏவியதாகக் கோள்க. ''உக' வியங்கோளுமாம். ''ஞானம் பிரகாசித்தும் அஞ் ஞானத்தை வேம்பு தின்ற புழுப் போல நோக்கிற்றை நோக்கி நிற்கும் ஆதலின், அது நீக்குதற்கு ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி யுச்சரிக்க'' (சிவ. போதம். சூ. 9. அதி. 3).

# 46 திருவொற்றியூர்

## திருப்பதிக வரலாறு

திருவொற்றியூரிலே வழித்தொண்டர் எதிர்கொண்டு புகச் சென்று, கோபுரத்தை இறைஞ்சி, உட்புகுந்து, ஞானத் தொண்டருடன் உருகி வலங்கொண்டு, அடியார் கரு நாமம் தவிர்ப்பாரைக் கைதொழுது வீழ்ந்து, எழுதாத மறை அளித்த எழுத்தறியும் பெருமானைத் தொழுது நிலம்படிந்து எழுந்து, பரவசம் எய்தி, விழிகள் தாரை பொழிய விதிர்ப்புற்று விம்மிப் பாடியருளிய பலவற்றுள் ஒனறு இத்திருப்பதிகம். (புராணம் 333 - 37) இப் பதிகத்துள் இரண்டு திருநேரிசையே உள்ளன, பிற கிடைத்தில.

### திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

ஓம்பினேன் கூட்டைவாளா வுள்ளத்தோர் கொடுமைவைத்துக்
காம்பிலா மூழைபோலக் கருதிற்றே முகக்கமாட்டேன்
பாம்பின்வாய்த் தேரைபோலப் பலபல நினைக்கின்றேனை
ஓம்பிநீ யுய்யக்கொள்ளா யொற்றியூ ருடையகோவே. 454

---

454. கூட்டை :- உடம்பைக் கூடு என்பதும் தொல் வழக்கு, 'கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே காட்டுப் பள்ளியுளான் கழல் சேர்மினே' (5. 84. 2). வருமுறைப் பிறவி வெள்ளம் வரம்பு காணாதழுந்தி, உருவெனுந் துயரக் கூட்டில் உணர்வு இன்றி மயங்குவார்கள், திருமணத்துடன் சேவித்து முன்செலுஞ் சிறப்பினாலே மருவிய பிறவி நீங்க மன்னு சோதியி னுட்புக்கார்' (திருஞானசம்பந்தர் புராணம் 1249) என்னுஞ் சேக்கிழார் திருவாக்கால், துயரங்கட்குக் கூடு உடல் என்பது விளங்கும். "தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டுங் கூத்தன் புறப்பட்டுப் போன இக் கூட்டையே காக்கை கவரில் ......என்?" (திருமந்திரம் 167). வாளா - வீணில். காம்பு இலா மூழை.- பிடித்தற் குரிய காம்பு இல்லாத அகப்பை. முகத்தலில்லாதது காம்பிலாத அகப்பை. 'பாம்பின் வாய்த் தேரை' (2. 79. 6). என்புழி, தருமை யாதீனத்து இருபத்தைந்தாவது குருமகா சந்நிதானம் சீலத்திரு சுப்பிரமணிய

மனமெனுந் தோணிபற்றி மதியெனுங் கோலையூன்றிச்
சினமெனுஞ் சரக்கையேற்றிச் செறிகட லோடும்போது
மனனெனும் பாறைதாக்கி மறியும்போ தறியவொண்ணா
துனையுனு முணர்வைநல்கா யொற்றியூ ருடையகோவே. 455

திருச்சிற்றம்பலம்

தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களது பெருங் கருணைக்கு ஆளாகி, இரண்டாவது திருமுறைக்கு அடியேன் எழுதிய குறிப்புரையை ஈண்டுணர்க. எழுத்தறியும் பெருமானே, எண்ணாத பல பல எண்ணமெல்லாம் எண்ணி எண்ணி நெஞ்சம் புண்ணாகின்ற என்னை ஓம்பி, யான் உய்யும் வண்ணம் நீ ஆண்டுகொள்வாய்.

455. மனம் தோணி ; மதிகோல் ; சினம் சரக்கு ; (பாசம்) கடல் ; மனன் (மன்மதன்) பாறை ; மறியும்போது - கீழ்மேலாகும் பொழுது. ஒண்ணாது - ஒன்ருது ; பொருந்தாது. மனத்தோணி பற்றி மதிக்கோலை ஊன்றி, சினச் சரக்கை யேற்றி (ப் பாச) க் கடற் பரப்பில் ஓடும் வேளையில், காமப்பாறை தாக்கிக் கவிழ்ந்து கீழ்மேலாகும் பொழுது, ஒற்றியூருடைய கோவே, உன்னை அறிய ஒன்ருது வருந்துவேன், அப்போது என்னை மறந்து உன்னை உன்னும் உணர்வை நல்குவாய். மனன்(மநஸ்) என்பது பழமை யான பாடம். மனன் - மன்மதன். இத்திருப் பாடலை மறவாது எஞ்ஞான்றும் ஓதிவருதல் வீடுபேறு விழைவாரது கடனாகும். 'மதன்' என்பது பிழைபட்டபாடம்.

செங்குமுத மலர்வாவித் திருக்கடவூ ரணைந்தருளிப்
பொங்கியவெங் கூற்றடர்த்த பொன்னடிக டொழுதேத்திக்
குங்குலியக் கலயனார் திருமடத்திற் குறைவறுப்ப
அங்கவர்பாற் சிவனடியா ருடனமுது செய்தார்கள்.

சீர்மன்னுந் திருக்கடவூர்த் திருமயா னமும்வணங்கி
யேர்மன்னு மின்னிசைப்பாப் பலபாடி யினிதமர்ந்து
கார்மன்னுங் கறைக்கண்டர் கழலிணைக டொழுதகன்று
தேர்மன்னு மணிவீதித் திருவாக்கூர் சென்றணைந்தார்.

# 47 திருக்கயிலாயம்

## திருப்பதிக வரலாறு

திருக்கயிலைமலை வீற்றிருந்த பெருங்கோயில் காணக்காதலித்த கலைவாய்மைக் காவலஞர் இதனை அருளிய காலம் புராணத்திற் குறிக்கப்பட்டிலது. (347) திருக்காளத்திமலையை வழிபட்டதன் பின்னர்ப் பாடியருளியது போலும். (354 - 380)

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

கனகமா வயிர முந்து மாமணிக் கயிலைகண்டும்
உனகனு யரக்கனேடி யெடுத்தலு முமையாளஞ்ச
அனகனுய் நின்றவீச னூன்றலு மலறிவீழ்ந்தான்
மனகனு யூன்றினேன் மறித்துநோக் கில்லையன்றே. 456

கதித்தவன் கண்சிவந்து கயிலைநன் மலையையோடி
அதிர்த்தவ னெடுத்திடல்லு மரிவைதா னஞ்சவீசன்
நெதித்தவ னூன்றியிட்ட நிலையழிந் தலறிவீழ்ந்தான்
மதித்திறை யூன்றினேன் மறித்துநோக் கில்லையன்றே.

**456.** உன்+அகன்=உனகன் - உன்னுகின்ற அகத்தை யுடையவன். 'உனகன் - இழிந்தவன்' (லெக்ஸிகன்) அரக்கன் - இராவணன், அனகன் - கடவுள்; இயல்பாகவே தூயன், அகன் - பாவி. அநகன் - பாவமில்லாதவன். மன் அகனுய் - நிலைபெற்ற உள்ளத்தனுகி. இரக்கம் உருது, அழித்தல் வேண்டும் என்பது நிலையான அகத்தினனுகி. மறித்தும் - மீண்டும்.

**457.** கதித்தவன் - மலையை எடுத்தற்பொருட்டு உற்ற எழுச்சியை உடையவன். கண் சிவந்து என்புழியெல்லாம் (457 - 464) சினத்தின் காரியமாகிய செந்நிறத்தை அடைந்து என்றுரைத்துக் கொள்க. கறுப்பும் சிவப்பும் வெகுளிப்பொருள வாதலும் நிறத்துருவுணர்த்தலும் உண்மை தொல்காப்பியத்தில்

கறுத்தவன் கண்சிவந்து கயிலைநன் மலையைக்கையால்
மறித்தலு மங்கையஞ்ச வானவரிறைவ னக்கு
நெறித்தொரு விரலாலூன்ற நெடுவரை போலவீழ்ந்தான்
மறித்திறை யூன்றினேன் மறித்துநோக் கில்லையன்றே.

கடுத்தவன் கண்சிவந்து கயிலைநன் மலையையோடி
எடுத்தலு மங்கையஞ்ச விறையவ னிறையேநக்கு
நொடிப்பள விரலாலூன்ற நோவது மலறியிட்டான்
மடித்திறை யூன்றினேன் மறித்துநோக் கில்லையன்றே.

கன்றித்தன் கண்சிவந்து கயிலைநன் மலையையோடி
வென்றித்தன் கைத்தலத்தா லெடுத்தலும் வெருவமங்கை
நன்றுத்தா னக்குநாத னூன்றலு நகழவீழ்ந்தான்
மன்றித்தா னூன்றினேன் மறித்துநோக் கில்லையன்றே.

அறிக. அரிவை - உமையம்மையார், நெதித்தவன் - தபோநிதி. நிதி - நெதி, தவன் - தவத்தோன். 'விழுநெதி' (நற்றிணை. 16) மதித்து - கருதி. இறை - இறைவன்; சிறிது.

458. கறுத்தவன் - கறுத்தநிறத்திராவணன்; சினந்தவன், மறித்தலும் - கீழ்மேலாக்க முயலுதலும். வானவர்இறைவன் - தேவாதிதேவன் நக்கு - நகைத்து, நெறித்து - நெறியச் செய்து, 'நெடுவரை(மலை)போலவீழ்ந்தான்' என்றது அவனது உடல்நீட்சி குறித்தது, மறித்து - மீண்டும். இறை. 457, 461, 465.

459. கடுத்தவன் - சினந்தவன். இறையே - சிறிதே. நக்கு - நகைத்து. நொடிப்பளவில் - கைந்நொடிப்பொழுதில். மடித்து : காலை, கால்விரலை மடியவைத்து.

460. கன்றி - சினந்து. நன்று-பெரிதும், மேல் 'இறையே நக்கு' என்றதற்கேற்ப உரைக்கவேண்டிட. நன்று - சிவம் எனலும் நன்று, எதுகை நோக்கி மிக்கது. நகழ்தல் - துன்புறல். 'நகழ மால்வரைக்கீழிட்டு அரக்கர் கோனை நலனழித்து' (6. 11. 10) 'நகழ்வொழிந்தார் அவர் நாதனையுள்கி நிகழ் வொழிந்தார் எம்பிரானொடுங்கூடி' (திருமந்திரம். 2669)

களித்தவன் கண்சிவந்து கயிலைநன் மலையையோடி
நெளித்தவ னெடுத்திடலு நேரிழை யஞ்சநோக்கி
வெளித்தவ னூன்றியிட்ட வெற்பினு லலறிவீழ்ந்தான்
மளித்திறை யூன்றினேன் மறித்துநோக் கில்லையன்றே.

கருத்தனுய்க் கண்சிவந்து கயிலைநன் மலையைக்கையால்
எருத்தனு யெடுத்தவாறே யேந்திழை யஞ்சவீசன்
திருத்தனுய் நின்றதேவன் றிருவிர லூன்றவீழ்ந்தான்
வருத்துவா னூன்றினேன் மறித்துநோக் கில்லையன்றே

கடியவன் கண்சிவந்து கயிலைநன் மலையையோடி
வடிவுடை மங்கையஞ்ச வெடுத்தலு மருவநோக்கிச்
செடிபடத் திருவிரல்லா லூன்றலுஞ் சிதைந்துவீழ்ந்தான்
வடிவுற வூன்றினேன் மறித்துநோக் கில்லையன்றே. 463

'நகழ்வன சில' (கம்பர், அதிகாய. 136) என்னும் பொருட்டுமாம். நகழ்வாதனம் (தத்துவப்பிரகாசம், 107 உரை) போலவீழ்ந்தான் எனலுமாம். மன்றி - தண்டித்து 'மன்றி விடல்' (பழமொழி. 288)

461. களித்தவன் :- மனக்களிப்பினன். நெளித்தவன் :- காயத்துவளைவினன். வெளித்தவன் :- அன்பர்க்கு மறையாது வெளிப்படுதலையுடையவன் வெற்பு - கைலைமலை. மளித்து - மடித்து. மீண்டும் எனலும் ஆம்.

462. கருத்தன் - இலங்கைக்குத் தலைவன் ; மலையை யெடுக்கக் கருதிய கருத்தினன். எருத்தன் - காளைபோன்றவனுகி. கழுத்தையுடையவனுமாம். ஏந்திழை - உமாதேவியார். திருத்தன் - தீர்த்தன்; திருத்துதலையுடையவன். 'சிந்தனையைத் திருத்தியாண்ட சிவலோகா'. வருத்துவான் - வருத்தும் பொருட்டு.

463. 'வடிவுடைமங்கை' :- அழகுடையவற்றிற்கெல்லாம் அழகுதந்த அழகிய உமையம்மையார். மருவ - பொருந்த. செடி - தீங்கு. வடிவு - அடையாளத்துரு.

கரியத்தான் கண்சிவந்து கயிலைநன் மலையைப்பற்றி
இரியத்தா னெடுத்திடலு மேந்திழை யஞ்சவீசன்
நெரியத்தா னூன்றமுன்ன நிற்கிலா தலறிவீழ்ந்தான்
மரியத்தா னூன்றினேன் மறித்துநோக் கில்லையன்றே.464

கற்றனன் கயிலைதன்னைக் காண்டலு மரக்கனோடிச்
செற்றவ னெடுத்தவாறே சேயிழை யஞ்சவீசன்
உற்றிறை யூன்றமுன்ன முணர்வழி வகையால்வீழ்ந்தான்
மற்றிறை யூன்றினேன் மறித்துநோக் கில்லையன்றே. 465

திருச்சிற்றம்பலம்

464. கரிய - கரிந்திட; கருமையுற. இரிய - ஓட. நெரிய- முறிய. மரிய - இறக்க.

465. கற்றனன் - சிவபிரான். செற்றவன் - நெருங்கியவன். சேயிழை - செம்மை நிறத்தையுடைய இழைகளையணிந்த உமாதேவியார். இறை - சிறிது; இறைவன்.

சார்ந்தார்தம் புகலிடத்தைத் தான்றோன்றி மாடத்துக்
கூர்ந்தார்வ முறப்பணிந்து கோதிறமிழ்த் தொடைபுனைந்து
வார்ந்தாடுஞ் சடையார்தம் பதிபலவும் வணங்கியுடன்
சேர்ந்தார்க டம்பெருமான் றிருவீழி மிழலையினை.

கைகள் குவித்துக் கழல்போற்றிக் கலந்த வன்பு கரைந்துருக
மெய்யில் வழியுங் கண்ணருவி விரவப் பரவுஞ் சொன்மாலை
செய்ய சடையார் தமைச்சேரார் தீங்கு நெறிசேர் கின்றாரென்
றுய்யு நெறித்தாண் டகமொழிந்தங் கொழியாக் காதல் சிறந்தோங்க.

காலந் தவறு தீர்ந்தெங்குங் கலிவான் பொழிந்து புனல்கலந்து
ஞால மெல்லாங் குளிர்தூங்கி யுணவு பெருகி நலஞ்சிறப்ப
மூல வன்ப ரிருவர்களு மொழிமா லைகளும் பலசாத்தி
நீல கண்ட ருறைபதிகள் பிறவும் வணங்க நினைவுற்றார்.

# 48 திருவாப்பாடி

## திருப்பதிக வரலாறு

இத் திருப்பதிக வரலாறு பெரியபுராணத்திற்குறிக்கப்பட்டில்லை.

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

கடலக மேழினேடும் பவனமுங் கலந்தவிண்ணும்
உடலகத் துயிரும்பாரு மோள்ளழ லாகிநின்று
தடமலர்க் கந்தமாலை தண்மதி பகலுமாகி
மடலவிழ் கோன்றைசூடி மன்னுமாப் பாடியாரே. 466

ஆதியு மறிவுமாகி யறிவினுட் செறிவுமாகிச்
சோதியுட் சுடருமாகித் தூநேறிக் கோருவனுகிப்
பாதியிற் பேண்ணுமாகிப் பரவுவார் பாங்கராகி
வேதியர் வாழுஞ்சேய்ஞல் விரும்புமாப் பாடியாரே. 467

466. கடல் அகம் ஏழ் - நீரும் (ஏழுகடலும்). பவனமும் - காற்றும். விண்ணும் - ஆகாயமும். உடலகத்து உயிரும். பாரும் - மண்ணும். ஒள் அழல் - ஒளியையுடைய தீ. இறைவனுடைய எட்டுருவான பாரும், நீரும் (கடலேழும்), காற்றும் (பவனமும்) விண்ணும், இயமானனும், நெருப்பும், மதியும் பகலும் கூறினர் ஆதலின், 'பவனம்' என்ற பாடமே உண்மையானது. இரண்டாவதடியிற் பாரும் என்றதாலும் புவனம் என்றது பொருந்தாது. மாலை தண்மதி :- 'மாதர்ப்பிறைக்கண்ணியான்'.

467. ஆதியும், அறிவும், அறிவினுள் செறிவும், சோதியுள் சுடரும், தூநேறிக்கு ஒருவனும், பாதியிற் பேண்ணும், பரவுவார் பாங்கரும் ஆகி, ஆப்பாடியிலுள்ளார் என்று கோள்க. 'ஆகி' ஆறும் ஆப்பாடியார் என்னும் வினைக்குறிப்போடு முடியும். முற் பாட்டில் ஆகி மன்னும் ஆப்பாடியார் என்றதுபோல ஆகிவிரும்பும் ஆப்பாடியார் எனலுமாம். ஆதி-முதல். அறிவு - சிவஞானம். அறிவினுட் செறிவு - சிவஞான யோகம். செறிவு - யோகம்

எண்ணுடை யிருக்குமாகி யிருக்கினுட் பொருளுமாகிப்
பண்ணொடு பாடறன்னைப் பரவுவார் பாங்கராகிக்
கண்ணொரு நெற்றியாகிக் கருதுவார் கருதலாகாப்
பெண்ணொரு பாகமாகிப் பேணுமாப் பாடியாரே. 468

'சீலம் இன்றி நோன்பின்றிச் செறிவே இன்றி அறிவின்றி' (திருவாசகம்) எனச் சரியை கிரியை யோகம் ஞானம் ஆகிய நான்கும் உணர்த்துகின்றுழி யோகத்தைச் 'செறிவு' என்றது காண்க. சோதி - அபரஞானம். உட்சுடர் - பரஞானம் முறையே ஞானப்ரகாசமும் சிவப்ரகாசமும் ஆம். சோதியுட் சோதி - அறிவுக்கறிவு எனலுமாம். தூநெறி - சைவசித்தாந்தச் செந்நெறி. அந்நெறிக்கு ஒருவன் பரமசிவன். 112 பாதியிற் பெண் - அர்த்தநாரீ. பரவுவார் பாங்கர் :- (468) (பால்+கு+ அர்) பக்கத்தார். 'வாழ்த்துவார் வாயுளான்'. வேதியர் - மறையோர். சேய்நல்லூர், சேய்நலூர், சேய்ஞலூர், சேய் - சண்டேசுரர். ஆப்பாடி - அவர் மேய்த்த ஆக்களின் பாடி.

468. எண் - கணக்கு, எண்ணம், இருக்கு - முதல் மறை. திருஞானசம்பந்தரை முதன் மறைப் பிள்ளையார் எனச் சேக்கிழார் பெருமான் கூறி யருளியதுணர்க. இருக்கின் உட்பொருள் - அம் முதன் மறையின் மறைபொருள் (இரகசியார்த்தம்). பண்ணொடு பாடல் தன்னை - பண்ணும் பாடலுமாயிருப்பவனை, 'வேதத்தின் கீதம் பாடும் பண்ணவனைப் பண்ணில் வருபயன் ஆனானை' (6. 60. 6). 'பண்ணின் இசையாக நின்றாய் போற்றி' (6. 55. 7). 'கந்திருவம் பாட்டிசையிற் காட்டுகின்ற பண்ணவன் காண் பண்ணவற்றின் றிறலானான் காண்' (6. 52. 1). 'பழுத்த பண்களாகிச் சோதியாய் இருளாகிச் சுவை கலந்த அப்பாலாய் வீடாய் வீட்டின் ஆதியாய் அந்தமாய் நின்றான்' (6. 26. 6). பரவுவார் பாங்கர் :- (467). நெற்றியில் ஒரு கண்ணாகி, கருதுவார் கருதலாகாப் பெண்ணொரு பாகமாதல் :- அம்மையப்பர் என்பதன் உண்மையை ஞானிகள் அல்லாதார்க்கு அறிதலும் எண்ணுதலும் இயலாமை உணர்த்திற்று. ஆகிப் பேணும் ஆப்பாடியார் என்க.

அண்டமா ரமரர்கோமா னுதியெம் மண்ணல்பாதம்
கொண்டவன் குறிப்பினாலே கூப்பினான் றாபரத்தைக்
கண்டவன் றாதைபாய்வான் காலற வெறியக்கண்டு
தண்டியார்க் கருள்கள்செய்த தலைவராப் பாடியாரே. 469

சிந்தையுந் தெளிவுமாகித் தெளிவினுட் சிவமுமாகி
வந்தநற் பயனுமாகி வாணுதல் பாகமாகி
மந்தமாம்பொழில்கள்சூழ்ந்தமண்ணித்தென்கரை மேன்மன்னி
அந்தமோ டளவிலாத வடிகளாப் பாடியாரே. 470

469. பல்வேறு அண்டங்கள். ஆர் - ஆர்கின்ற, பொருந்துகின்ற. அமரர் - தேவர்கள். கோமான் (கோமகன்) கோவாகிய மகன், மகன் - தேவன், கோ - தலைவன், கோமகன் - தேவாதி தேவன், மலைமகள், திருமகள், கலைமகள் என்று தேவி எனற பொருளில் வழங்குதலுணர்க, ஆதி - முதல்வன், எம் அண்ணல் - எம் பெருமான். பாதம் கொண்டவன் - திருவடி பெறறவர் ; சண்டேசுர நாயனார். குறிப்பினாலே - சிவலிங்க பாவனையாலே, தாபரத்தைக் கூப்பினான் - தாபரத்துள் ஒன்றான மணலைச் சிவலிங்காகாரமாகக் குவித்து வழிபட்டார். கண்ட அவன் தாதை என்றோ அவன் தாதை கண்டு என்றோ கொள்ளலாம். தாதையாகிய பாய்வான், பாய்வான் கால் - (சீறிப்) பாய்வானது கால். அற - அற்று வீழும்படி. எறிய - ‘ பெருங் கொடு மழுவால்வீச ’ (478). கண்டு - சிவபெருமான் சண்டேசுரருடைய திருவருளுறைப்பைத் திருவுளத்திற் கொண்டு. சண்டியார்க்கு - சண்டேசுரநாயனார்க்கு. அருள்கள் :- ‘ அடுத்த தாதை இனி உனக்கு நாம் ’ எனப்பெற்றமை; சிவமயமாய்ப் பொங்கி யெழுந்த திருவருளில் முழுகப்பெற்றமை; யாவரும் துதிக்கச் சிவப்பிரகாசத்தில் தோன்றியது; தொண்டர் தலைமை; நாம் உண்ட கலமும் உடுப்பனவும் சூடுவனவும் ஆகிய அனைத்துக்கும் உரிமையுற்றமை; சண்டீசனும் ஆம் பதப்பேறு. அற எறியக் கண்டு செய்த தலைவர் ஆப்பாடியார்.

470. சிந்தை - (கேட்டற்குப்பின்) சிந்தித்தல். தெளிவு - (சிந்தித்தற்குப் பின்னதாகிய) தெளிதல். 396. 408 பார்க்க. தெளிவினுள் சிவமாதல் :- தெளிவினுள் விளங்கும் தூய நிலை ;

வன்னிவா ளரவுமத்த மதியமு மாறுஞ்சூடி
மின்னிய வுருவாஞ்சோதி மெய்ப்பொருட் பயனுமாகிக்
கன்னியோர் பாகமாகிக் கருதுவார் கருத்துமாகி
இன்னிசை தொண்டர்பாட விருந்தவாப் பாடியாரே. 471

நிட்டை. கேட்டல் :- ஞானத்திற் சரியை. சிந்தித்தல் :- ஞானத்திற் கிரியை. தெளிதல் :- ஞானத்தில் யோகம். நிட்டை கூடல் :- ஞானத்தில் ஞானம் உபாயச் சரியையிற் சரியை முதல் உபாய ஞானத்தில் ஞானம் ஈருகிய பதினாறு வகையும் அவற்றினின்று விரியும் பல வேறு வகையும், உண்மைச் சரியை யிற் சரியை முதல் உண்மை யோகத்தின் ஞானம் ஈருகிய பன்னிரு வகையும் அவற்றினின்றும் விரியும் பல வேறு வகை யும், உண்மை ஞானத்திற் சரியை முதலிய (இக் கேட்டல். சிந்தித்தல், தெளிதல் ஆகிய) மூவகையும் இவற்றினின்று விரியும் பல வேறு வகையும், ஞானத்தின் ஞானங்களின் பல வேறு வகையும் கடந்து அவற்றுள் முடிவாகிய ஞானமே பரமுத்தி யைத் தருவது. அம் முடிவான ஞானமே தெளிவினுட் சிவம். அது தரும் பரமுத்தியே வந்த பயன். வாள் நுதல் - ஒளியுடைய நெற்றியாள் ; உமையம்மையார். மந்தம் - தென்றல். மண்ணி யாறு. அந்தம் - முடிவு. அளவு - பிரமாணம் ; எண். அடிகள் - கடவுள். மன்னி அந்தமும் அளவும் இல்லாத ஆப்பாடியார்.

471. வன்னி - வன்னியிலே. வாள் அரவு - கடும் பாம்பு. மத்தம் - ஊமத்தம்பூ. மதியம் - பிறை. ஆறு - கங்கை. மின்னுருவொளி, மெய்ப்பொருட் பயன் :- மெய்ப்பொருள் - மேற்குறித்த முடிவான ஞானம். பயன் - பரமுத்தி. கன்னியோர் பாகம் - ‘ அர்த்தநாரீசுவரன். ’ ‘ பான்மொழிகன்னி ’ (சித்தியார்) கருதுவார் கருத்துமாதல் :- ‘ வாயானை மனத்தானை மனத்துள் நின்ற கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான்றன்னை ’ ‘ அடியேன் மனத்துள் அமர்கருத்தனே.........புத்தூர்ச் சென்று கண்டுய்ந் தேனே. ’ தொண்டர் இன்னிசை பாட இருந்த ஆப்பாடியார். சூடி ஆகி......இருந்த ஆப்பாடியார்.

உள்ளுமாய்ப் புறமுமாகி யுருவுமா யருவுமாகி
வெள்ளமாய்க் கரையுமாகி விரிகதிர் ஞாயிறுகிக்
கள்ளமாய்க் கள்ளத்துள்ளார் கருத்துமா யருத்தமாகி
அள்ளுவார்க் கள்ளல்செய்திட் டிருந்தவாப் பாடியாரே. 472

மயக்கமாய்த் தெளிவுமாகி மால்வரை வளியுமாகித்
தியக்கமா யொருக்கமாகிச் சிந்தையு ளொன்றிநின்று
இயக்கமா யிறுதியாகி யெண்டிசைக் கிறைவராகி
அயக்கமா யடக்கமாய வைவராப் பாடியாரே. 473

472. உள்ளும் புறமும், உருவும் (அருவுருவும்) அருவும், வெள்ளமும் கரையும், விரிகதிர் (த் திங்களும்) ஞாயிறும் கள்ளமும் கள்ளத்துள்ளாரும், கருத்தும் அருத்தமும் ஆகி, அருளுகின்றவர்க்கு அள்ளல் செய்து இட்டு இருந்த ஆப்பாடியார். அள்ளுவார் - அள்ளிக்கோள்வார். அள்ளல் செய்து - அள்ளி. இட்டு - கொடுத்து. ‘இட்டார்க்கு இட்ட பயன்’ உருவும் அருவும் கூறியதால், அருவுருவமும் ஞாயிறு கூறவே திங்களும் கோள்ளப்பட்டன.

473. மயக்கம் - கலக்கம். தெளிவு - விளக்கம். வரை - மலை. வளி - காற்று. தியக்கம் - அசைவு. சோர்வு :- புறத்துச் சென்று அசைந்து அலைந்து சோரும் நிலையை. ஒருக்கம் - ஒருங்குறல். ஒற்றுமை செய்தல். ‘உருத்திரசன்மர் எனவுரைத்து வானில் ஒருக்கவோ என்றதோர் சொல்’ (திருவள்ளுவமாலை. பாயிரம். 1.) அகத்துள் ஒருங்குறும் நிலைமை. இயக்கம் - இயங்குதல். செலவு. இறுதி - முடிவு. எண் திசைக்கு இறைவர் - ‘அட்டதிக்குப் பாலகர்.’ அயக்கம் - ‘நோயின்மை. நிராமயம்.’ (தமிழ்ச்சொல்லகராதி. மதுரைத் தமிழ்ச் சங்கப் பதிப்பு. பக்கம். 225. பார்க்க.) ‘குன்றுகள் அயக்கலின்’ (கம்ப. சேது. ப. 10) என்றதாலும் அடக்கத்திற்கு முரணுவது அசைவு ஆதலாலும் அசைத்தல் என்றல் சிறந்தது. அசைத்தல், அசைக்கல், அசக்கல், அசக்கம், அயக்கம் என முறையே மருவிற்று. மயக்கமும் தெளிவும், மால்வரையும் வளியும், தியக்கமும் ஒருக்கமும், இயக்கமும் இறுதியும், அயக்கமும் அடக்கமும் முரணுவன. மலையும் வளியும் பொருத வரலாறுண்டு. மயங்குவது மயக்கம். தியங்குவது தியக்கம். ஒருங்குவது ஒருக்கம். இயங்குவது

ஆரழ லுருவமாகி யண்டமேழ் கடந்தவெந்தை
பேரொளி யுருவினானைப் பிரமனு மாலுங்காணச்
சீரவை பரவியேத்திச் சென்றடி வணங்குவார்க்குப்
பேரரு ளருளிச்செய்வார் பேணுமாப் பாடியாரே. 474

திண்டிற லரக்கனோடிச் சீகயி லாயந்தன்னை
எண்டிற லிலனுமாகி யெடுத்தலு மேழையஞ்ச
விண்டிறல் நெரியவூன்றி மிகக்கடுத் தலறிவீழப்
பண்டிறல் கேட்டுகந்த பரமராப் பாடியாரே. 475

திருச்சிற்றம்பலம்

இயக்கம். அயங்குவது அயக்கம். அடங்குவது அடக்கம். தெளிதல் - தெளிவு. இறுதல் - இறுதி. சிந்தையுள் ஒன்றி நிற்றல் - தோற்றம். இயக்கம் - நிலை. இறுதி - முடிவு ; முத்தொழில்கட்கும் முதலாதல் உணர்த்திற்று. சிந்தை ஈண்டு ஆன்மா. இறைவன் ஒன்றிநிற்கும் இடம் வேறில்லை.

474. ஆர் அழல் :- பெருந்தீ என்றபடி எங்கும் நிறைந்த தீயும் ஆம். 'ஏழண்டத்தப்பாலான்' (6. 8. 5). பேர் ஒளி உருவினான் :- 'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்சோதீ' சீரவை - கனங்கள் ; சீர்மைகள். பரவுதலும் ஏத்துதலும் சென்று அடிவணங்குதலும் சிவபெருமானுடைய பேரருள் பெறும் வழிகள் ஆகும். பேரருள் - 'பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம் ஆகிய உணர்வரிய மெய்ஞ்ஞானம்'.

475. திண்மை - உறுதி. திறல் - வலிமை. சீகயிலாயம் :- ஸ்ரீ என்பதைச் சீ எனல் தமிழ் வழக்கு. சீபாதம், சீபஞ்சாக்கரம், சீராமன், சீதரன், சீராகம், சீமான், சீமாட்டி (சீமதி), சீகாழி, சீகாளத்தி, சீபருப்பதம். திரு எனல், இதனின் வேறு. எண் திறல் இலன் - எண்ணத்தக்க வலிமை இல்லாதவன். ஏழை - உமாதேவியார். விண்டு - நீங்கி. இற - ஒடிய. கடுத்து - சினந்து. பண் திறல் - பண்ணுந் திறனும், பண்ணின் திறனுமாம். 'பண்ணொடு பாடல் தன்னைப் பரவுவார் பாங்கர்' (468) என்றும் 'பண்திறல் கேட்டு உகந்த பரமர்' என்று (ஈண்டு)ம் உள்ளவாறு நோக்கின், இத் தலத்தில் இறைவர் திருப்பெயர் 'பாடலுகந்தார்' (481) என்று தெளிவுறும். பாலுகந்தநாதர் என்பது ஆப்பாடி என்றது நோக்கியாக்கியதுபோலும்.

# 49 திருக்குறுக்கைவீரட்டம்

## திருப்பதிக வரலாறு

திருக்கருப்பறியலூர், திருப்புன்கூர், திருநீடூர், திருக்குறுக்கை, திருநின்றியூர், திருநனிபள்ளி முதலியவற்றை அடைந்து வழிபட்டார். அக்காலத்தில், திருக்குறுக்கைவீரட்டத்தில் பாடப்பெற்றது இத் திருப்பதிகம்.

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

**ஆதியிற் பிரமனார்தா மர்ச்சித்தா ரடியிணைக்கீழ்**
**ஓதிய வேதநாவ ருணருமா றுணரலுற்றார்**
**சோதியுட் சுடராய்த்தோன்றிச் சொல்லினை யிறந்தார்பல்பூக்**
**கோதிவண் டறையுஞ்சோலைக் குறுக்கைவீ ரட்டனாரே. 476**

476. ஆதியில் முதற்கற்பத்தில், முதற்படைப்பில், படைப்பின் தொடக்கத்தில், நூறுகோடி பிரமர்களுள் ஆதியிற்றோன்றிய பிரமனார் அடியிணைக்கீழ் அர்ச்சித்தார். மேல் திருமால் அருச்சனை புரிந்தது கூறப்படும். 480 அடியிணைக்கீழ் அர்ச்சிக்கப்பெற்றவர் வீரட்டனார். வேதநாவர் பிரமனார். வேதநாவர் உணரும் ஆறு வீரட்டனார் உணரலுற்றார். சோதி - ஞானசோதி. சுடர் - இன்பச் சுடர். 'சோதியே சுடரே சூழொளி விளக்கே சுரிகுழற்பணைமுலைமடந்தை பாதியே'. சொல்லினை இறந்து நின்றார் :- 'நால்வேதத்து அப்பால்நின்ற சொற்பதத்தார் சொற்பதமும் கடந்து நின்ற சொலற்கு அரிய சூழலாய் இது உன் தன்மை' (6. 95: 4). பல மலர்களைக் கோழுதி வண்டுகள் பாடும் சோலைகள் சூழ்ந்த திருக்குறுக்கைவீரட்டனார். பிரமனாரும் வேதநாவரும் அர்ச்சித்தாரும் ஆகியவர் உணருமாறு வீரட்டனார் உணரலுற்றார். உணருமாறுணரல் :- 'விளம்புமா விளம்பு, பணியுமாபணி, கருதுமாகருது, உரைக்குமாவுரை, நணுகுமா நணுகு, (நுன கழலிணை என் நெஞ்சினுள் இனிதாய்த் தொண்டனேன்) நுகருமாநுகர், புணருமாபுணர் தொடருமாதொடர், விரும்புமாவிரும்பு, நினையுமாநினை' என்று திருவிசைப்பாவில்



திருக்குறுகை

நீற்றினை நிறையப்பூசி நித்தலு நியமஞ்செய்து
ஆற்றுநீர் பூரித்தாட்டு மந்தண னொரைக்கோல்வான்
சாற்றுநா ளற்றதென்று தருமரா சற்காய்வந்த
கூற்றினைக் குமைப்பர்போலுங் குறுக்கைவீ ரட்டனாரே. 477

தழைத்ததோ ராத்தியின்கீழ் தாபர மணலாற்கூப்பி
அழைத்தங்கே யாவின்பாலைக் கறந்துகொண் டாட்டக்கண்டு
பிழைத்ததன் தாதைதாளைப் பெருங்கோடு மழுவால்வீசக்
குழைத்ததோ ரமுதமீந்தார் குறுக்கை வீரட்டனாரே. 478

முதற்றிருப்பதிகத்துள்ளவாறுள்ளது. அர்ச்சித்தாராய், அடியிணைக்கீழ் ஓதிய வேதநாவர் எனலுமாம்.

**477.** நித்தலும் - நாடோறும். நியமம் - செய்கடன், நிச்சயம் ; நியதி. நீற்றினை நிறையப் பூசிச் செய்து. ஆற்று நீர் - காவிரி நீர். பூரித்து - நிறைத்து. ஆட்டும் - அபிடேகஞ்செய்யும். அந்தணன் - மார்க்கண்டேய முனிவர். கோல்வான் - உடல் வேறும் உயிர் வேறும் ஆகக் கூறுசெய்ய. சாற்றும் நாள் - சிவபிரான் மிருகண்ட முனிவர்க்குச் சொல்லிய பதினாறுண்டு. வரையறுத்தல் பிறவினை. வரையறுதல் தன்வினை. அற்றது காலம். பதினாறென்றுவரையறுத்தது திருவருள். தருமராசன் - நடுவன். சமன் :- (ஞமன்போல). ‘ விரிசீர்த் தெரிகோற் சமன் போல ஒரு திறம் பற்றல் இலியரோ ’ என்றதன் (புறநானூறு. 6) உரையை நோக்குக. கூற்று - தருமராசன் ஏவலாளருள் ஒருவன். குமைப்பர் - அழிப்பர். இது திருநீற்றினை நிறையப் பூசுதலும், தின நியமம் தவறாமையும், அபிடேகம் முதலியனவும் இறவாத இன்ப அன்பு வாழ்வைக் கொடுத்த உண்மையை (மார்க்கண்டேயர் திவ்விய சரிதத்தை) உணர்த்திற்று.

**478.** இது சண்டேசுர நாயனார் புராணம் உணர்த்திற்று. தழைத்தல் - தழைமிகுதல். ஆத்தி - சிவபூசைக்குரிய மலர்களைத் தரும் சிறந்த சில மரங்களுள் ஒன்று. ‘ ஆத்தி சூடி ’ ‘ கொன்றை வேய்ந்தோன் ’ என்னும் சிறப்பு, எல்லா மரங்களுக்கும் இல்லை. தாபரம் - மாபரனாகிய பரசிவத்துக்கு ஆதாரமாய்ப் புறத்தே நிற்கும் திருமேனி திருவேடம் ஆகிய இரண்டனுள்

சிலந்தியு மானைக்காவிற் றிருநிழற் பந்தர்செய்து
உலந்தவ ணிறந்தபோதே கோச்செங்க ணானுமாகக்
கலந்தநீர்க் காவிரிசூழ் சோணாட்டுச் சோழர்தங்கள்
குலந்தனிற் பிறப்பித்திட்டார் குறுக்கைவீ ரட்டனாரே. 479

ஒன்றான சிவலிங்கத் திருமேனியை. மணலால் - மண்ணியாற்று மணலால். கூப்பி - சிவலிங்காகாரமாகக் குவித்துச் செய்து. அழைத்து - துவாதசாந்தத்தினின்று புட்பாஞ்சலியுடன் சிவாகம விதிப்படி எழுந்தருளப்பண்ணி, (சித்தியார். சூ. 8:- 19) அங்கே- எங்கும் உள்ளவன் இங்கும் உளன் என்னுந் தெளிவினார்க்குச் சிவன் மந்திரத்தால் உருக்கொண்டு உறையும் அத்தாபரத்திலே. (ஷை. 12:- 4). ஆவினதுபால், ஆவினது இனியபால். ' கறந்து கொண்டு ' என்றது சிவபூஜார்த்தம் என்பதைக் குறித்தது. ' கொண்டு ' என்றதில் விருப்பும் ' கண்டு ' என்றதில் வெறுப்பும் புலப்படல் உணர்க. பிழைத்த - சிவாபராதம் செய்த. தன் தாதை - தன்னைத் தந்தவன். தாதா (- கொடையாளன்) என்பதன் தற்பவம். ' தந்தை ' தமிழ்ச்சொல். ' தாதை ' வடசொல். தாள் - கால். பெரிய கொடிய மழு. ' குழைத்தது ஓர் அமுதம் ' :- ' சிவாநந்தாமிர்தம். ' ' பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம் ' என்பதில், ' சோறு ' என்றதும் அது.

479. இது கோச்செங்கட்சோழ நாயனார் புராணம் உணர்த்திற்று. சிலந்தியும் :- திருநிழற்பந்தர் செய்யற்பாலதல்லாத இழிந்த சிற்றுயிரும் பேரறிவுடைய மக்கள் செய்யுஞ் சிவ புண்ணியத்தை மேற்கொண்ட உயர்வு குறித்து நின்றது. உலந்து - யானையால் அழிக்கப்பெற்றுக் குறைந்து. அவண் - திருவானைக் காவில். கோச்செங்கணான் ஆகிய சிலந்தி. இறந்தபோதே என்றது துறக்க நிரயங்களிற் செல்லாமல் மீண்டும் நிலத்திற் போந்து கருப்பாசயத்தைத் தலைப்பட்டமை குறித்தது. இறந்த போதே அப்பிறவி நினைவுடன் பிறப்பித்திட்டார் என்க. ' கலந்த நீர்க் காவிரி ' என்றது திருவானைக்காவில் இறைவனைத் தன்பாற் கலந்துகொண்டு அவனுக்குச் ' செழுநீர்த்திரள் ' என்று பெயர் வழங்கச் செய்த பெருமை காவிரிக்குஉண்மை குறித்தது. சோணாட்டுச் சோழர் :- சோலைவளநாடு என்பதன் மரூஉ சோணாடு. சோலைவளநாட்டரசர் என்பதன் மரூஉ 'சோழர்'.

ஏறுட னேழடர்த்தா னெண்ணியா யிரம்பூக்கொண்டு
ஆறுடைச் சடையினானை யர்ச்சித்தா னடியிணைக்கீழ்
வேறுமோர் பூக்குறைய மெய்ம்மலர்க் கண்ணையிண்டக்
கூறுமோ ராழியீந்தார் குறுக்கைவீ ரட்டனாரே. 480

கல்லினா லெறிந்துகஞ்சி தாமுணுஞ் சாக்கியனார்
நெல்லினார் சோறுணாமே நீள்விசும் பாளவைத்தார்
எல்லியாங் கெரிகையேந்தி யெழிறிகழ் நட்டமாடிக்
கொல்லியாம் பண்ணுகந்தார் குறுக்கை வீரட்டனாரே. 481

.. . .. . . .. .... " . . .... . " "

'வளவன்' என்னும் பெயர்ப் பொருளும் ஈண்டுணர்க. கோச் செங்கணார் தோற்றத்தால் அக் குலத்தின் அவர் முன்னோரும் பின்னோரும் பெருஞ்சிறப்புற்றது குறிக்கச் 'சோழர் தங்கள் குலம்' என்றருளினார்.

480. ஏறு உடன் ஏழ் அடர்த்தான் :- நப்பின்னை முதலிய மகளிர் மணங்குறித்துக் கண்ணன் எழுவிடை அடர்த்த வரலாறு பாகவதத்திற் கூறப்படுகின்றது. ஈண்டுத் திருமாலைக் குறித்து நின்றது. அவன் ஆயிரம் பூக்களை எண்ணிக் கைக்கொண்டு, கங்கைச்சடைப் பெருமானை, திருவடியிணைக்கீழ் அருச்சனை புரிந்தான். ஆயிரத்துள் ஒன்று குறைய, வேறும் ஒரு பூ வேண்டி, தன் மெய்யிலுள்ள செந்தாமரை மலர் போலும் கண்ணைப் பறித்து அருச்சித்தான். அவன் மெய்யன்புக்கு இரங்கி, அவன் வேண்டிய ஆழிப்படையை அருளினார் குறுக்கை வீரட்டனார். (637) 'பொய்விடையேழடர்த்தோன்' (பாரதம். 18. போர்ச். 146).

481. கஞ்சி உண்ணும் சாக்கியனார், வார்கொண்ட வன முலையாள் உமைபங்கன் கழலே மறவாது கல்லெறிந்து அன்பு மலரால் வழிபட்டார். நன்ஞானம் அடைவதற்கு நாடிய பல வழியும் மெய்வழியாகத் தோன்றவில்லை. மன்னுத பிறப் பறுக்குந் தத்துவத்தின் வழி உணர்வாராய், சாக்கியமும். பிறவும் பொருளலல எனத் தெளிந்து, திருவருள்கூட 'ஈறில்லாத சிவ நன்னெறியே பொருள்; சைவ நெறியே மெய்ந்நெறி; சிவமே பொருள்; பிற சமயப் பொருள் எல்லாம் அவமே' என்று

காப்பதோர் வில்லுமம்புங் கையதோ ரிறைச்சிப்பாரம்
தோற்பெருஞ் செருப்புத்தோட்டுத் தூயவாய்க் கலசமாட்டித்
தீப்பெருங் கண்கள் செய்ய குருதிநீ ரொழுகத்தன்கண்
கோப்பதும் பற்றிக்கொண்டார் குறுக்கைவீ ரட்டனாரே. 482

நிறைமறைக் காடுதன்னி னீண்டெரி தீபந்தன்னைக்
கறைநிறத் தெலிதன்மூக்குச் சுட்டிடக் கனன்றுதூண்ட
நிறைகடன் மண்ணும் விண்ணும் நீண்டவானுலகுமெல்லாம்
குறைவறக் கொடுப்பர்போலுங் குறுக்கைவீ ரட்டனாரே. 483

---

உய்வகை யுணர்ந்தார். கஞ்சியுண்ணும் அவர்க்கு நெற்சோற்றுணவும் வேண்டாதவாறு பிறவி தீர்த்து, சிவலோகம் (நீள் விசும்பு) ஆளவைத்துப் பழவடிமைப் பாங்கு அருளினார். எல்லி - இரவில். 'ஆங்கு' ஏழனுருபின பொருட்டு. கையில் எரியேந்தி, எழில் திகழ் நட்டம் - அழகு பொலியும் ஆட்டம். கோல்லிப் பண்ணுகந்தநாதர் (475).

482. இது கண்ணப்பநாயனார் புராணம் உணர்த்திற்று. கைக்கொண்டு காவல் செய்தற்குரியன கருவியாகிய வில்லும் அம்பும். கையின்கண்ணதாயது. ஊன்பொறை தோலாற்றைக் கப்பட்ட பெரிய செருப்பும் தொட்டு. தூயவாயினின்றும் வெளிப் படும் நீர். வாயாகிய கலசத்திலிருந்து நன்னீர் அபிடேகம்புரிந்து. பெரிய நெற்றித் தீக்கண்ணும் சூரியநேத்திரமும் சிவந்த குருதி (- இரத்தம்) நீர ஒழுக்கக் கண்டு வருந்தித் தன் கண்ணை இடந்து அப்புகின்ற அரும்பெருந் தொண்டினையும் ஏற்றுக்கொண்டார் திருக்குறுக்கை வீரட்டனார். 'கண்கள்' என்பது எவற்றை ?

483. நிறைமறை :- "நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழி". குறைவிலா நிறைவினனாகிய பரமசிவனாற் செய்யப்பட்டமையானும் இறுதிக் காலத்துப் பரமசிவனிடத் தொடுங்கிப் படைப்புக் காலத்து முன்போலவே தோற்றுதலானும் உபசாரமாக நித்தம என்று கூறப்படுவதாலும், எல்லாச் சமய நூற் பொருளியல்புகளெல்லாம் முற்றுணர்வுடைய அம் முதல் வனாற் செய்யப்பட்ட வேதம் கூறும் பொருளியல்பின் ஏகதேச மாய்க் காணப்பட்டு அதனுள் அடங்குதலானும், வேதத்தினடங் காதபொருள் வேறின்மையானும் 'நிறைமறை' என்றருளினார்.

அணங்குமை பாகமாக வடக்கிய வாதிமூர்த்தி
வணங்குவா ரிடர்கடீர்க்கு மருந்துநல் லருந்தவத்த
கணம்புல்லர்க் கருள்கள்செய்து காதலா மடியார்க்கென்றும்
குணங்களைக் கொடுப்பர்போலுங் குறுக்கைவீ ரட்டனாரே.

நிறைகாடு எனின் தாவரங்கள் நிறைந்த காடென்றதாம். திருமறைக்காட்டிலே எலியாயிருந்து, திருவிளக்கு நெய்யுண்ணப் புகுந்து, சுடர் சுட மூக்கால் தூண்டிய அபுத்திபூருவ புண்ணியத்தின் பயனாக மறுமையில் மூவுலகாளும் மாவலி வேந்தான வரலாறு இதிற் குறிக்கப்பட்டது. விண் - துறக்கம். நீண்ட வானுலகு - பேரின்ப வெளி. குறைவு அற - நிறைவு உற.

484. அணங்கு - தெய்வம். உமை - 'உமா' வடசொல் திரிபு. பாகம் - இடப்பால். ஆதிமூர்த்தி - முதலுரு. வணங்குவார்கள் - அடியார்கள். இடர்கள் - பிறவி முதலிய துன்பங்கள். மருந்து - அமிர்து. நல் அருந்தவத்த கணம்புல்லர் - பிறவிப் பிணி தீர்க்கும் அரிய தவத்தை உடைய கணம்புல்ல நாயனார். 'கையணிமான் மழுவுடையார் கழல்பணி சிந்தனையுடைய செய்தவத்துக் கணம்புல்லர் திருத்தொண்டு விரிததுரைப்பாம்' (பெரிய. ஐயடிகள். 8). அருள்கள் :- 'பெருஞ்செல்வம், அதன் பயன், நல்குரவு, விளக்கெரித்தல், புல்விலைப்பொருள், அதுவிலைபோகாமை, புல்விளக்கு, முடிவிளக்கு, வினைத்தொடக்கெரித்தமை, மங்கலமாம் பெருங்கருணை, சிவலோக வாழ்க்கை, மெய்ப்பொருளாவன ஈசர்கழலேன்னும் விருப்பு' (பெரியபுராணம்) காதல் - சிவபத்தி. குணங்கள் :- எண்குணங்கள். 'எண்குணத்துளோம்' (6. 98. 10) 'எட்டுக்கோலாம் அவர் ஈறில் பெருங்குணம்' (184). 'காதலாம் அடியார்' என்றதில் உள்ள காதல் எத்தகையது ? 'காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி ஓதுவார்தமை நன்னெறிக்கு உய்ப்பது... .....நமச்சிவாயவே' என்றருளிய திருஞானசம்பந்தர் திருவாய் மலர்ந்த காதல் இது. மாதர் காதல் வேறு, ஞான பாதர் காதல் வேறு. கருதல் என்பதன் மரூஉவே காதல். கட்டு நெறியும் வீட்டு நெறியும் கருதாமல் எய்துவன அல்ல. 'கருதியது முடித்தலும் காமுறப் படுதலும்' (சிறுபாண். 213) 'தன் னெஞ்சு கருதிய புணர்ச்சியைக் குறைகிடவாமல் முடிக்கவல்ல தன்மையையும், (நுகர்தற்குரிய மகளிரை நுகர்ந்து பற்று அறுக்கால் பிறப்பு அறுமையின்

எடுத்தன னெழிற்கயிலை யிலங்கையர் மன்னன்றன்னை
அடுத்தொரு விரலாலூன்ற வலறிப்போ யவனும்வீழ்ந்து
விடுத்தனன் கைநரம்பால் வேதகீ தங்கள்பாடக்
கொடுத்தனர் கொற்றவாளுள் குறுக்கைவீ ரட்டனாரே. 485

திருச்சிற்றம்பலம்

கருதியது முடிக்க வேண்டும் என்றார்.) அங்ஙனம் தானே இன்பம் உறுதே அம் மகளிரும் தம்மாலே மிக்க இன்பத்தைப் பெறும் தன்னை விரும்பப்பட்டிருத்தலையும் ' (நச்சினார்க்கினியர் உரை).

485. இலங்கையர் மன்னன் எழிற் கயிலை எடுத்தனன். எடுத்தனனாகிய அம்மன்னன்றனை அடுத்து, ஒரு விரலால் ஊன்ற அவனும் அலறிப்போய் வீழ்ந்து, எடுத்த கயிலையை விடுத்தனன். எடுக்கும் முயற்சியை விடுத்தனனுமாம். கையில் உள்ள யாழ்நரம்பால் வேத கீதங்களைப் பாடக் கொற்றவாளும் நாளும் குறுக்கை வீரட்டனார் கொடுத்தனர். போயவனும் எனலும் ஆம். போயவன் - போனவன். யகரமெய் இறந்தகாலங் காட்டும் இடைநிலை, (போ+ய்+அவன்=போயவன்). வீரட்டனார் கொடுத்தனர் என, ' ஆர் ' ஈற்றிற்கேற்ப ' அர் ' ஈறு கொள்ளப் பட்டது. பலர்பாலுணர்த்தியதன்று.

வாய்ந்த மிழலை மாமணியை வணங்கிப் பிரியா விடைகொண்டு
பூந்தண் புனல்சூழ் வாஞ்சியத்தைப் போற்றிப் புனிதர் வாழ்பதிகள்
ஏய்ந்த வன்பி னாலிறைஞ்சி யிசைவண் டமிழ்கள் புனைந்துபோய்ச்
சேர்ந்தார் செல்வத் திருமறைக்கா டெல்லை யில்லாச் சீர்த்தியினார்.

உண்ணீர் மையினாற் பிள்ளையா ருரைசெய் தருள வதனாலே
பண்ணினே ருமொழியாளென் றெடுத்துப் பாடப் பயன்றுய்ப்பான்
றெண்ணீ ரணிந்தார் திருக்காப்பு நீக்கத் தாழ்க்கத் திருக்கடைக்காப்
பெண்ணீ ரிரக்க மொன்றில்லீர் என்று பாடி யிறைஞ்சுதலும்.

அன்ப ரீட்டங் களிசிறப்ப வாண்ட வரசுஞ் சிவக்கன்றும்
இன்ப வெள்ளத் திடைமூழ்கி யெழுந்துள் புகுந்து தம்பெருமான்
முன்பு பணிந்து போற்றிசைத்துப் பரவி மொழிமா லைகள்பாடி
யென்பு கரைய வுள்ளுருகி யிறைஞ்சி யரிதிற் புறத்தணைந்தார்.

## 50 திருக்குறுக்கைவீரட்டம்

### திருப்பதிக வரலாறு

49 ஆவது திருப்பதிக வரலாறு நோக்குக. இதில் இரண்டு திருப்பாடலே கிடைப்பன.

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

நெடியமால் பிரமனோடு நீரேனும் பிலயங்கொள்ள
அடியோடு முடியுங்காணா ரருச்சுனற் கம்பும் வில்லும்
துடியுடை வேடராகித் தூயமந்திரங்கள் சொல்லிக்
கொடிநெடுந் தேர்கொடுத்தார் குறுக்கைவீ ரட்டனாரே. 486

486. நீர் எனும் பிலயம் ஜலப்ரளயம் (பாதலம்?). பிரமன் முடிகாணான். மால் அடிகாணான். பிலயம் கொள்ள-ஜலப்ரளயம் (பாதலம்) வரையில். அருச்சுனற்கு - அருச்சுனனுக்கு. அம்பும் வில்லும் கொடுத்தார். வேடராகிக் கொடுத்தார். மந்திரங்கள் சொல்லிக் கொடுத்தார். துடி - துடிப்பு. உடுக்கை பொருந்து மேற்கொள்க. தூய மந்திரங்கள் :- பாசுபதாத்திர பிரயோகத் துக்குரிய மந்திரங்கள். கொடித்தேர். நெடுந்தேர். பிலயம் என்பது பிரளயம் என்னும் பொருளது என்று லெக்ஸிகனிற் குறித்திருக்கின்றனர். 'பெம்மானிடம் பிலயம் தாங்கி மன்றத்து மண் முழவம் ஓங்கி மணி கொழித்து வயிரம் உந்திக் குன்றத் தருவி அயலே புனல் ததும்பும் குறும்பலாவே' (திருஞான சம்பந்தர்) என்றதிற் 'பிலயம்' என்றது பிரளயத்தைக் குறித்த தென்றனர் 'அடிமுடி' - 'பாதாளம் ஏழினும் கீழ் சொற் கழிவு பாத மலர் போதார் புனை முடியும் எல்லாப் பொருள் முடிவே', திருவாசகம்.)

ஆத்தமா மயனுமாலு மன்றிமற் றொழிந்ததேவர்
சோத்தமெம் பெருமானென்று தொழுதுதோத் திரங்கள் [சொல்லத்
தீர்த்தமா மட்டமீமுன் சீருடை யேழுநாளும்
கூத்தராய் வீதிபோந்தார் குறுக்கைவீ ரட்டனாரே. 487

திருச்சிற்றம்பலம்

487. ஆத்தம் - குருசேவை, ( இலக்கியச் சொல்லகராதி. பக்கம் 21 ) அயனுக்கும் மாலுக்கும் சிவ (குரு) சேவையே நோக்கம் ஆதலின், ஆத்தமாம் அயனும் மாலும் எனலாயிற்று. அவ்விருவரும் அல்லாத தேவர் பிறர், சோத்தம் - அஞ்சலி, ' சோத்துன்னடியம் என்றோர் ' ( திருக்கோவையார் 173 ) ' சோத்தம் உன்னடியம் என்று ஒருகாற் சொன்னார் ' சோத்தம் - இழிந்தார் செய்யும் அஞ்சலி '. (ஷை உரை). ' மிடைந்தெலும் பூத்தை மிக்கழுக்கூறல் வீறிலி நடைக்கூடம் தொடர்ந்தெனை நலியத்துயருறுகின்றேன் சோத்தம் எம்பெருமானே' (திருவாசகம் 419) சோத்தம் என்று தொழுதல்:- காயத்தின் வினை. எம் பெருமான் என்று பாவித்தல்:- மனத்தின் வினை. தோத்திரங்கள் சொல்லல் :- வாக்கின் வினை, தீர்த்தம் - (பிரமோற்சவ)யாகம். அட்டமீ திதிக்கு முன் ஏழுநாளும் என்க. திருவீதியுலாப் போதரல் பிரதமை முதல் அட்டமி முடிய எட்டுநாள்.

போத நிகழ வாவென்று போனா ரதென்கொ லெனப்பாடி
யீதெம் பெருமா னருளாகி லியானும் போவே னென்றெழுந்து
வேத வனத்தைப் புறப்பட்டு விரைந்து போக வவர்முன்னே
யாதி மூர்த்தி முன்காட்டு மவ்வே டத்தா லெழுந்தருள.

மாட நீடு திருப்புகலி மன்ன ரவர்க்கு மாலயனும்
நேடி யின்னங் காணாதார் நேரே காட்சி கொடுத்தருள
ஆடல் கண்டு பணிந்தேத்தி யரசுங் காணக் காட்டுதலும்
பாட வடியா ரென்றெடுத்துப் பரமா தம்மைப் பாடினார்.

சோலை மறைக்காட் டமர்ந்தருளும் சோதி யருள்பெற் றகன்றுபோய்
வேலை விடமுண் டவர்வீழி மிழலை மீண்டுஞ் செல்வனென
ஞால நிகழ்ந்த நாகைக்கா ரோணம் பிறவும் தாம்பணிந்து
சாலு மொழிவண் டமிழ்பாடித் தலைவர் மிழலை வந்தடைந்தார்.

## 51 திருக்கோடிகா

### திருப்பதிக வரலாறு

திருச்செம்பொன்பள்ளி, மயிலாடுதுறை, துருத்தி, வேள்விகுடி, எதிர்கொள்பாடி போற்றிப் பணிந்து, திருக்கோடிகாவில் அணைந்து பாடியது இத் திருப்பதிகம். (அப்பர் 190)

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

நெற்றிமேற் கண்ணி னானே நீறுமெய் பூசி னானே
கற்றைப்புன் சடையி னானே கடல்விடம் பருகி னானே
செற்றவர் புரங்கண் மூன்றுஞ் செவ்வழல் செலுத்தி னானே
குற்றமில் குணத்தி னானே கோடிகா வுடையகோவே. 488

கடிகமழ் கொன்றை யானே கபாலங்கை யேந்தி னானே
வடிவுடை மங்கைதன்னை மார்பிலோர் பாகத்தானே
அடியிணை பரவநாளு மடியவர்க் கருள்செய்வானே
கோடியணி விழவதோவாக் கோடிகா வுடையகோவே. 489

**488.** நெற்றியிற் கண்ணுடையவனே; திருமேனியில் திருநீற்றைப் பூசியவனே; பொன்போலும் கற்றைச் சடையுடையவனே; பாற்கடலில் எழுந்த நஞ்சுண்டவனே; பகைவர்முப்புரமும் செந்தீயுண்ணத் தீயைச் செலுத்தியவனே; குற்றம் இல்லாத எண் குணங்களை யுடையவனே; திருக்கோடிகாவை உறைவிடமாகக் கொண்ட தலைவனே. 493 ஆவது திருநேரிசையை நோக்கின் எல்லாம் விளி எனல் புலப்படும். புன்மை - பொன்மை; மென்மை. செற்றவர் - சினந்தவர்; பகைவர். செவ்வழல் - செந்தீ. அழல் செலுத்தல் - எரிகொளச்செய்தல்.

**489.** கடி - மணம், கபாலம் - பிரமகபாலம் வடிவுடை மங்கை :- திருக்கோடிகாவில் உள்ள அம்பிகையின் திருப்பெயர். மார்பில் ஓர் பாகத்தான் :- 'மலைமகளை மார்பத்து அணைத்தார்' (6, 21, 6) 'மார்பிற் பெண் மகிழ்ந்த பிரமாபுர

நீறுமெய் பூசினனே நிழறிகழ் மழுவினனே
ஏறுகந் தேறினனே யிருங்கட லமுதொப்பானே
ஆறுமோர் நான்குவேத மறமுரைத் தருளினனே
கூறுமோர் பெண்ணினனே கோடிகா வுடையகோவே 490

காலனைக் காலாற்சேற்றன் றருள்புரி கருணையானே
நீலமார் கண்டத்தானே நீண்முடி யமரர்கோவே
ஞாலமாம் பெருமையானே நளிரிளந் திங்கள்சூடும்
கோலமார் சடையினனே கோடிகா வுடையகோவே. 491

மேவிய பெம்மான்' (1, 1, 4) 'வடிவுடைமங்கைதன்னை மார்பி லோர் பாகம் வைத்தார்' (375). அடிஇணை - திருவடித்துணை. பரவ - வாழ்த்தி வணங்கலால், அடியவர்க்கு நாளும் அருள் செய்பவனே. கோடி அணி விழவு திருக்கோடிகாவில் இடை விடாது நிகழும் காலம் அது.

490. நீறு மெய்பூசினனே :- பா. 488. நிழல் - ஒளி. மழு - ஒருபடை. 'கனல்மழு', ஏறுகந் தேறினன் :- 34, இருங்கடல் அமுது :- பாற்கடல் கடைந்தெடுத்த அமிர்தம். அமுதினை ஒப்பவனே. வேதம் நான்கும் அங்கம் ஆறும் ஆகிய அறத்தை உரைத்தருளியவனே. ஓர் கூற்றிற் பெண்ணுடைய வனே. ஓர் பெண் கூறுடையவன் எனலுமாம்.

491. காலன் - இயமன். காலால் - திருவடியால். சேற்று - உதைத்து, அருள் - இரங்கிச்செய்த வண்மை. திருநீலகண்டன். நீள்முடி - நீண்ட மணிமுடி. அமரர்கோ - தேவர் கோ அறியாத தேவதேவன். ஞாலம் ஆம் பெருமையான்:- 'ஞாலமாந்தில்லை தன்னுள் நவின்ற சிற்றம்பலத்தே நீலஞ் சேர்கண்டனர்' (227), ஞாலம் உலகம் என்னும் பொதுப்பெயர்ப் பொருளதாகக்கொண்டு 'எல்லா உலகமும் ஆனாய் நீயே' என்னுங் கருத்ததாக்கி, 'அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்த' சருவ வியாபகம் உணர்த்திய தென்க. நளிர் - குளிர்ச்சி, கோலம் - அழகு.

பூணர வாரத்தானே புலியுரி யரையினுனே
காணில்வெண் கோவணம்முங் கையிலோர் கபாலமேந்தி
ஊணுமோர் பிச்சையானே யுமையொரு பாகத்தானே
கோணல்வெண் பிறையினுனே கோடிகா வுடையகோவே.

கேழல்வெண் கோம்புபூண்ட கிளரொளி மார்பினுனே
ஏழையே னேழையேனு னென்செய்கே னெந்தைபெம்மான்
மாழையொண் கண்ணினுர்கள் வலைதனின் மயங்குகின்றேன்
கூழையே றுடையசெல்வா கோடிகா வுடையகோவே. 493

அழலுமி ழங்கையானே யரிவையோர் பாகத்தானே
தழலுமி ழரவமார்த்துத் தலைதனில் பலிகோள்வானே
நிழலுமிழ் சோலைசூழ நீள்வரி வண்டினங்கள்
குழலுமிழ் கீதம்பாடுங் கோடிகா வுடையகோவே. 494

492. பூண் அரவு ஆரத்தான் - பூண்ட பாம்பணியுடைய வன். புலியுரி அரையினுன் - புலித்தோலை உடுத்த இடையுடையவன். காணில் - கண்டால். வெண் கோவணமும் (உடுத்து), கையில் ஒரு (பிரம) கபாலமும் ஏந்தி, ஊணும் உணவும். ஓர் பிச்சையான் - சிறு பிச்சையன். ஒருமை சிறுமைப்போருட்டு, தனிமையுமாம். கோணல் - வளைவு.

493. கேழல் - பன்றி, வெண்கோம்பு - வெள்ளைக்கோம்பு. கிளர் - விளங்குகின்ற, ஏழையேன் ஏழையேன் நான்:- 'என்னுனுய் என்னுனுய் என்னினல்லால் ஏழையேன் என் சோல்லியேத்து கேனே' செய்+கு+ஏன்=செய்கேன். பிற்காலத்தார் ககர வோற்று எதிர்காலங்காட்டிற்று என்றனர். செய்கு+யான் என் பதன் மரூஉ என்பர் சோல்லராய்ச்சியாளர். மாழை - அழகு. 'மாழைமைப் பாவியகண்ணியர்' (திருவாசகம் 411) ஒண் கண் - ஒளிவிழி, வலை - மயக்கவலை.

494. அழல் உமிழ் அம்கையான் - தீயை ஏந்திய அகங்கை யுடையவன், அரிவை - உமாதேவியார். தழல் - வெய்யநஞ்சு. நஞ்சாகிய தீ, 'நச்சுத்தீ', அரவம் - பாம்பு. ஆர்த்து - கட்டி, - பிரமகபாலம். பலி - பிச்சை. நிழல் - தண்ணிழல்.

ஏவடு சிலையினானே புரமவை யெரிசெய்தானே
மாவடு வகிர்கொள்கண்ணாண் மலைமகள் பாகத்தானே
ஆவடு துறையுளானே யைவரா லாட்டப்பட்டேன்
கோவடு குற்றந்தீராய் கோடிகா வுடையகோவே. 495

ஏற்றநீர்க் கங்கையானே யிருநிலந் தாவினானும்
நாற்றமா மலர்மேலேறு நான்முக னிவர்கள்கூடி
ஆற்றலா லளக்கலுற்றார்க் கழலுரு வாயினானே
கூற்றுக்குங் கூற்றதானாய் கோடிகா வுடையகோவே. 496

குழல் - வேய்ங்குழல். கீதம் - இசைப்பாட்டு. வேய்ங்குழலிசையை வண்டினங்கள் பாடுஞ்சோலை சூழ்ந்த கோடிகா.

495. ஏ - அம்பு, அடு - அடுத்த, கோல்லும் சிலை - வில், சிலையினாலே எரிசெய்தான் எனலுமாம். புரமவை - முப்புரம்; மும்மதில் மாவடுவகிர்கோள் கண்ணாள் :- 'வடுவகிர்க் கண்ணியம்மை' என்பது திருவலம்புரத்து நாய்ச்சியார் திருப்பெயர். மாவடு வகிரன்ன கண்ணிபங்கா' (திருவாசகம் 413) என்பது பாத்தலைக் கேடதாயினும் நம் பிறவித்தலை கெடுப்பதே. மலைமகள் - இமாசலகுமாரி. திருக்கோடிகாவின் தென்பால் அணுகியது திருவாவடுதுறை. ஐவர் - ஐம்புலன்; ஐம்பொறி. கோவடுகுற்றம்: கோவை அட்ட குற்றம், பசுக்கொலைக் கோப்பாகிய பாவம். தீராய் - தீர்ப்பாய்.

496. ஏற்றம் - உயர்ச்சி, ஏறு+அம்=ஏற்றம். உயர்ச்சியையுடைய கங்கை நீரைச் சடைமிசை யுடையவனே. ஏற்ற கங்கைநீருமாம். இருநிலம் - பெரும்பூமி, தாவினான் - தாண்டியவன், நாற்றம் - மணம், நாறு+அம்=நாற்றம். ஏற்றம் போல்வது, மாமலர் - தாமரை, 'பூவினுக்கு அருங்கலம் பொங்கு தாமரை.' தன் அன்னையான திருமகட்கிடமாய மலருமாம். ஆற்றல் - வலிமை; சீவபோதம். அழல்உரு - தீவண்ணம். கூற்றுக்குங்கூற்று - காலகாலன்.

பழகநா னடிமைசெய்வேன் பசுபதீ பாவநாசா
மழகளி யானையின்றோன் மலைமகள் வெருவப்போர்த்த
அழகனே யரக்கன்றிண்டோ ளருவரை நெரியவூன்றும்
குழகனே கோலமார்பா கோடிகா வுடையகோவே. 497

திருச்சிற்றம்பலம்

497. பழக - பழக்கம் உற, நான் செய்து செய்து பழக வேண்டி அடிமைத் தொண்டு செய்வேன். பசுபதீ - உயிர்க்கு இறைவா. பாவநாசா - தீவினையை அழிப்பவனே. வினைக்கேடா. மழ களி யானை - இளமதகளிறு. மலைமகள் அஞ்சி வெருவ மழகளியானைத்தோல் போர்த்த அழகனே. அரக்கன் - இராவணன். திண்தோள் - திண்ணிய தோள்கள் (ஆகியவரை). அருவரை - அளப்பரியமலை. குழகன் - இளைஞன்; அழகன். கோலம் - அழகு. பன்றிக் கொம்புமாம். 'கேழல் வெண் கொம்பு பூண்ட கிளர்ஒளி மார்பினனே' (493).

பூவிற் பொலியும் புனற்பொன்னிக் கரைபோய்ப் பணிவார் பொற்ப
ஆவுக் கருளு மாவடுதண் டுறையார் பாத மணைந்திறைஞ்சி [மைந்த
நாவுக் கரசர் ஞானபோ னகர்க்குச் செம்பொ னுயிரமும
பாவுக் களித்த திறமபோற்றிப் போந்து பிறவும் பணிகின்றார்.

தலையின் மயிரைப் பறித்துண்ணுஞ் சாதி யமணர் மறைத்தாலுண்
ணிலையி லாதார் நிலைமையினுன் மறைக்க வொண்ணுமோ வென்னும்
விலையில் வாய்மைக் குறுந்தொகைகள் விளம்பிப் புறம்போந்
தங்கமர்ந்தே
யிலைகொள் சூலப் படையார்சே ரிடங்கள் பிறவுந் தொழவணைவார்.

பொங்கு புனலார் பொன்னியினி லிரண்டு கரையும் பொருவிடையார்
தங்கு மிடங்கள் புக்கிறைஞ்சித் தமிழ்மா லைகளுஞ் சாத்திப்போ
யெங்கு நிறைந்த புகழாள ரீறி றொண்ட ரெதிர்கொள்ளச்
செங்கண் விடையார் திருவானைக் காவின் மருங்கு சென்றணைந்தார்,

சிலந்திக் கருளுங் கழல்வணங்கிச் செஞ்சொன் மாலை பலபாடி
யிலங்கு சடையா ரெறும்பியூர் மலையு மிறைஞ்சிப் பாடியபின்
மலர்ந்த சோதித திருச்சிராப் பள்ளி மலையுங் கற்குடியும்
நலங்கொள் செல்வத் திருப்பராய்த் துறையுந் தொழுவா னண்ணினார்

# 52 திருவாரூர்

## திருப்பதிக வரலாறு

திருநாவுக்கரசர் திருவாரூரிலிருந்து, வலிவலம், கீழ்வேளூர், கன்றுப்பூர் வழிபாடு செய்து மீண்டுற்றுப் பாடியது இத் திருப்பதிகம்.

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

படுகுழிப் பவ்வத்தன்ன பண்டியைப் பெய்தவாற்றால்
கெடுவதிம் மனிதர்வாழ்க்கை காண்டோறுங் கேதுகின்றேன்
முடுகுவ ரிருந்துளேவர் மூர்க்கரே லிவர்களோடும்
அடியனேன் வாழமாட்டே னாரூர்மூ லட்டனீரே. 498

புழுப்பெய்த பண்டிதன்னைப் புறமொரு தோலான்மூடி
ஒழுக்கறு வோன்பதுவா யோற்றுமை யொன்றுமில்லை
சழக்குடை இதனுளேவர் சங்கடம் பலவுஞ்செய்ய
அழிப்பனாய் வாழமாட்டே னாரூர்மூ லட்டனீரே. 499

498. படுகுழிப் பவ்வத்து அன்ன பண்டி - பெரும்பள்ளமான கடல் போன்ற வயிறு. ' நிலத்திடைப் போறை ' என்னுந் தொடக்கத்துப் பாடலில், ' உடலிருங்கடல் ' அமைப்பை (11. 30. 8) நோக்குக. ஆற்றால் - விதத்தால். கேதுகின்றேன் :- அழைக்கின்றேன். கேதல் - அழைத்தல். ' கேதல் உளைத்தல் இகுத்தல் விளித்தல் மாவேனல் கூவுதல் வாவேனல் மத்தல் கரைதல் ஆகருடணை இவையே அன்றி அகவல் என்பதும் அழைத்தல் ஆகும் ' (பிங்கலநிகண்டு. 1996). உள் இருந்து ஐவர் முடுகுவர். மூர்க்கர். ஏல் - எனில்; மரூஉ. அடியனேன் இவர்களோடும் இப் பண்டியில் வாழமாட்டேன். மூலட்டனீர் - மூலத்தானத்தீர். மூலஸ்தாநம் - மூலத்தானம் - மூலட்டானம். வடசொற்றிரிபு.

499. புழு பெய்த பண்டி - புழுக்கள் இட்டுவைத்த வயிறு. ' உன்னுதரத்தே கிடந்த கீடம் உறுவதெல்லாம்

பஞ்சின்மெல் லடியினார்கள் பாங்கரா யவர்கணின்று
நெஞ்சினோய் பலவுஞ்செய்து நினையினும் நினையவொட்டார்
நஞ்சணி மிடற்றினானே நாதனே நம்பனேநான்
அஞ்சினேற் கஞ்சலென்னீ ராரூர்மூ லட்டனீரே. 500

கெண்டையந் தடங்கணல்லார் தம்மையே கெழுமவேண்டிக்
குண்டராய்த் திரிதந்தைவர் குலைத்திடர்க் குழியினூக்கக்
கண்டுநான் றரிக்ககில்லேன் காத்துக்கோள்கறைசேர்கண்டா
அண்டவானவர் போற்று மாரூர்மூ லட்டனீரே. 501

.... . .... . . . ... .. .. .. . . ..... ........ .....

உன்னுடைய தேன்றாய்' (திருக்களிறு. 87). ஒரு தோலால் மூடி. புறம் மூடி. பண்டியைத்தோலாற் புறத்தே மூடி. ஒழுக்கு அருவாய் - ஒழுகுதல் நீங்காத வழி. ஒன்பது வாய் :- 185. 435. ஒற்றுமை சிறிதும் இல்லை. சழக்கு - குற்றம்; பொய். சங்கடம் - துக்கம். அழிப்பன் - கலக்கத்தை யுடையேன். அழிப்பு - கலக்கம்.

500. பஞ்சினும் மெல்லிய அடியையுடைய பெண்டிர் பக்கத்தராய் நின்று அவர்கள் (- அவ் வைவர்) நெஞ்சில் நின்று நோய் பலவும் செய்து எனலுமாம். பாங்கராய் நின்று செய்து நினையவொட்டார். நெஞ்சு நினைந்தாலும் ஐவர் (அவர்கள்) நினையவொட்டார். திருநீலகண்டனே, உடையானே, நம்பனே, நான் அஞ்சினேன். அஞ்சின எனக்கு அஞ்சல் என்று சொல்லி அபயம் அளித்தருளீர். அஞ்சினேன் + கு. பஞ்சின் - பஞ்சு போல. 'நெஞ்சின்' நெஞ்சினது எனலுமாம். நினையுங் கருவி நெஞ்சு, நோய் பலசெய்து, நெஞ்சு நினையினும் நினையவொட்டார்.

501. கெண்டையங்கண் தடங்கண் - விசாலாட்சம். நல்லார் - மகளிர். கெழும - புல்ல. பொருந்த. குண்டர் - மூர்க்கர்; குண்டுபோல உடற்கட்டுடையர். திரிதந்து - திரிதரல் செய்து. ஐவர் - பஞ்சேந்திரியம். குலைத்து - நிலைகுலையச் செய்து. இடர்க்குழி - துன்பப்படுபள்ளம். நூக்க - தள்ள. 'ஒல்லை நீர்புக நூக்க' (5 72. 7). தரிக்ககில்லேன் - தாங்க மாட்டேன். கறை - நஞ்சின் கறுப்பு. கண்டா - (திருநீல) கண்டனே. அண்டவானவர்கள் - அண்டங்களாகிய வானில் வாழ்கின்ற தேவர்கள்,

தாழ்குழ லின்சொலல்லார் தங்களைத் தஞ்சமென்று
ஏழையே னாகினாளு மென்செய்கே னெந்தைபெம்மான்
வாழ்வதே லரிதுபோலும் வைகலு மைவர்வந்து
ஆழ்குழிப் படுக்கவாற்றே னாரூர்மூ லட்டனீரே. 502

மாற்றமொன் றருளகில்லீர் மதியிலேன் விதியிலாமை
சீற்றமுந் தீர்த்துச்செய்யீர் சிக்கன வுடையராகிக்
கூற்றம்போ லவர்வந்து குலைத்திட்டுக் கோகுசெய்ய
ஆற்றவுங் கில்லேனாயே னாரூர்மூ லட்டனீரே. 503

502. தொங்குங் கூந்தலும் இனிய சொல்லும் உடைய அழகிய மகளிரையே புகலிடம் என்று கொண்டு அறிவிலேனாகி, நாள்தோறும் (அலைந்து மயங்கித் துன்புறுகின்ற நான்) என்ன செய்யவல்லேன் ? எந்தை பெருமானே, இனி அம்மாயவலையின் நீங்கி நின் திருவருள் நெறியில் ஒழுகி வாழ்வது எளிதன்று போலும். நாள்தோறும் ஐம்பொறிகளாரும் அணுகி நின்று ஆழ்ந்தகுழியிற் படுத்துகின்றனர். அதில் அகப்படுத்தப் பொறுக்கும் வலியுடையேன் அல்லேன், திருவாரூர்த் திருமூலட்டானரே, அடியேனைக் காத்தருள்க. குழலைக் கண்டும் குழலின் மொழியைக் கேட்டும் மயங்கும் இயல்பு குறித்தது, அவ்விரண்டும் கூறப்பட்டன. நாளும் என் செய்கேன்' என்றதால் பெண்ணாசைக் குரியன அன்றிப் பெண்ணாளும் பாகனடிமைக்குரியன செய்யவல்லேனல்லேன் என்றதாயிற்று. நாளும் நல்லாரைத் தஞ்சமென்று ஏழையாதற்குத் துணையாகவந்து வைகலும் ஆழ்குழிப் படுத்துகின்ற ஐவர், அருள் வாழ்விற்குத் துணையாகார். அவர் செய்யுந் துன்பத்திற்கு 'ஆற்றேன் அடியேன்.'

503. திருவாரூர்த் திருமூலட்டனீரே, மாற்றம் ஒன்று அருள்கிலீர். அடியேனுக்கு மதியின்மை ஏதுவாக வேதாகம விதி வழி யொழுகுதல் இல்லையாயிற்று. அதனால், தேவரீர்க்குச் சீற்றம் விளைந்தது. அதனைத் தீர்த்தருளீர். ஐவர் உறுதியுடையவராய்க் கூற்றத்தைப் போலக் குறுகி. என்னைக் குலைத்திட்டு, கோகு (- குறுகுதலை, சிறுமையை) செய்கின்றனர். நாயேன் அதனைப் பொறுக்ககில்லேன். கோகு என்பது குறுகு என்பதன் மரூஉ. பொழுது - போது. துருசு - தூசு. முகடு - மோடு.

உயிர்நிலை யுடம்பேகாலா வுள்ளமே தாழியாகத்
துயரமே யேற்றமாகத் துன்பக்கோ லதனைப்பற்றிப்
பயிர்தனைச் சுழியவிட்டுப் பாழ்க்குநீ ரிறைத்துமிக்க
அயர்விஞ லைவர்க்காற்றே ஞரூர்மு லட்டனீரே.　　504

தவறு - தாறு என்பவற்றிற்போல முதலிருகுறில் ஒரு நெடிலாதல் உண்டு. அவற்றுள் இது முகடு - மோடு என்றுதல் போன்றது. கோகு என்பதற்குக் குடுமி, தோள், கழுதை என்ற பொருளுரைப் பினும் அவை ஈண்டுப் பொருந்தாமை அறிக. போர்க்குத் தோள்தட்ட எனின் ஆம். மாற்றம் - பரிகாரம். மாறுவது மாற்றம். சீறுவது சீற்றம் கூறுபடுப்பது கூற்றம் ஆற்ற - பொறுக்க. கில்லேன் - மாட்டேன். 'எனைக் கோத்தைக்கு மூங்கர் வழிகாட்டுவித் தென்னைக் கோகுசெய்தாய்.' (957)

504. உயிர் நிற்றற்கு இடம் உடல். அதுவே உயிர்நிலை. 'அன்பின் வழியது உயிர்நிலை' 'அன்பு முதலாக அதன்வழி நின்ற உடம்பே உயிர் நின்ற உடம்பாவது' (குறள் 80 பரிமேலழகருரை). என்புழிக் குறித்த பொருளே இது. 'நீர்நிலை' போல்வது 'உயிர்நிலை'. 'நிலை' முதனிலைத் தொழிலாகு பெயராய் ஆண்டுக் குளத்தைக் குறிக்கும். உடம்பு எனப் பின் உள்ளதால் ஈண்டு, உயிர்நிலையதாகிய உடம்பு என்று பொருள் கொள்ளப்பட்டு, நிலை என்னும் அடி நிலையது என்னும் முதலுக் காகிய பெயராம். அன்றி நிலைத்த உடம்பென வினைத் தொகையுமாம். உடம்பே கால். உள்ளமே தாழி. துயரமே ஏற்றம். துன்பமே கோல். பாழுக்கே நீர் இறைத்தல். பயிர்க்கோ பாய்வதில்லை. அயர்ச்சி முயற்சியின் பயன். இப் பயனில் செயல் ஐவரால் விளைவது. உடம்பின் பயன், தன்னுள் ஒளிரும் உத்தமனைக் கண்டுற்று மீண்டும் தன்னோடு சாராது உயிர் வீடு பெறுதல். அது நிகழாமையே பயிர்சுழியவிடல். கால் :- நட்டிருக்கும் கால். ஏற்றம் அக்கால்மேல் முன்பின் விட்டுப் பொருத்தியிருக்கும் நீண்டதொருமரம். அது கருவி. கோல்:- அவ் வேற்றத்தோடு கட்டித் தொங்கவிட்டிருக்கும் ஒரு கழி. தாழி :- அதன் கீழ்முனையிற் கட்டி நீர்முகக்குஞ் சால். பாழ்க்கு நீர் இறைத்தல் :- 309, 311 குறிப்பிலும் காண்க.

கற்றதே லொன்றுமில்லை காரிகையாரோடாடிப்
பெற்றதேற் பெரிதுந்துன்பம் பேதையேன் பிழைப்பினாலே
முற்றினா லைவர்வந்து முறைமுறை துயரஞ்செய்ய
அற்றுநா னலந்துபோனே னாரூர்மூ லட்டனாரே. 505

பத்தனாய் வாழமாட்டேன் பாவியேன் பரவிவந்து
சித்தத்து ளைவர்தீய செய்வினை பலவுந்தீய
மத்துறு தயிரேபோல மறுகுமென் னுள்ளந்தானும்
அத்தனே யமரர்கோவே யாரூர்மூ லட்டனாரே. 506

505. திருவாரூர்த் திருவீரட்டானரே, கற்றது யாதெனில் ஒன்றும் இல்லை. காரிகையாரோடு ஆடல் அன்றி மற்றொன்றும் இல்லை என்றவாறு. அது கற்றதாற் பெற்ற பயன் யாதெனில், பெருந் துன்பமே பெற்ற பயன். 'நெடுங்காமம் முற்பயக் குஞ்சின்னீர இன்பத்தின்... பிற்பயக்கும் பீழைபெரிது' (நீதிநெறி விளக்கம்). பேதையேன் - அறியாமையுடையேன். பிழைப்பினால்- தவற்றால். வாய்ப்புக்கு மறுதலையும் ஆம். 'பிழைப்பு வாய்ப்பு ஒன்று அறியா நாயேன் குழைத்த சொல்மாலை கொண்டருள் போற்றி' (திருவாசகம். 4 :- 219 - 220) 'பிழைப்பு வாய்ப்பு ஒன்று அறியேன் பித்து ஏறினாற்போல் அழைப்பதே கண்டாய் அடியேன்' (நக்கீரதேவநாயனார் அருளிய கைலைபாதி காளத்தி பாதி யந்தாதி. 98) என்பவற்றால், பிழைப்பு வாய்ப்பு ஒன்றற் கொன்று மறுதலையாதலை உணரலாம். முற்றுதல் - முதிர்தல்; முழுதாதல். முறைமுறை :- ஐவர்க்குத் தனித்தனி உரிய முறைமை. அற்று - எதிர்க்கும் ஆற்றல் ஒழிந்து.

506. பத்தன் - தொண்டன் பாவியேன் - பாவத்தைச் செய்துள்ள யான். பரவிவந்து வாழமாட்டேன் என்க. மாட்டாமை ஐவரை வெல்லாமையின் பயன். தீயவினை; செய்வினை. 'செய் வினை வந்தெமைத் தீண்டப்பெறா' 'தீவினை வந்தெமைத் தீண்டப்பெறா' 'மத்துறுதயிர்' உள்ளம் மறுகுதற்கு உவமை. 'மத்தார் தயிர்போல் மறுகுமென் சிந்தை மயக்கொழிவி' (935) உள்ளம் மறுகும். அத்தன் அத்தை; அப்பன் அம்மாள்; ஆத்தன் ஆத்தாள் என்பன தமிழகத்து வழக்கு. 'ஆத்தானை அடியேன்றனக்கு' (7 - 20 - 4) என்று ஆளுடையநம்பிகளும்,

தடக்கைநா லைந்துங்கொண்டு தடவரை தன்னைப்பற்றி
எடுத்தவன் பேர்க்கவோடி யிரிந்தன பூதமெல்லாம்
முடித்தலை பத்துந்தோளு முறிதர விறையேயூன்றி
அடர்த்தருள் செய்ததென்னே யாரூர்மூ லட்டனீரே. 507

திருச்சிற்றம்பலம்

‘பூத்தே யுலகம் புரப்பாளை..........மறைக்கு முதலாய் முளைத் தாளை ஆத்தே ஆத்தே எனுங் குமரா அடியேம் சிற்றில் அழியேலே அரசே விரிஞ்சைப்பதி வாழ்வே அடியேம் சிற்றில் அழியேலே’ என்று (திருவிரிஞ்சைப்பிள்ளைத்தமிழ்) வரகவி மார்க்கசகாயதேவரும், ‘ஆத்தாளை எங்களபிராமவல்லியை’ (அபிராமியந்தாதி) என்று அபிராமிபட்டரும் ஆண்டமை அறிக.

507. தடக்கை - பெருங் கைகள். நாலைந்தும் - இருபதும். தடவரை - பெருங் கைலைமலை. பேர்க்க-பெயர்க்க. பூதமெல்லாம் ஓடியிரிந்தன. பத்துத் தலையும் இருபது தோளும் முறியச் சிறிதூன்றி. அடர்த்து(ப் பின்) நாளும் வாளும் பேரும் பிறவும் அருள் செய்தது.

பைஞ்ஞீ லியினி லமர்ந்தருளும் பரமர் கோயில் சென்றெய்தி
மைஞ்ஞீ லத்து மணிகண்டர் தம்மை வணங்கி மகிழ்சிறந்து
மெய்ஞ்ஞீர் மையினி லன்புருக விரும்புந் தமிழ்மா லைகள்பாடிக்
கைஞ்ஞீ டியதந் திருத்தொண்டு செய்து காத லுடனிருந்தார்.

அண்ணா மலைமே லணிமலையை யாரா வன்பி னடியவர்தங்
கண்ணா ரமுதை விண்ணோரைக் காக்கக் கடலில் வந்தெழுந்த
உண்ணா நஞ்ச முண்டானைக் கும்பிட் டுருகுஞ் சிந்தையுடன்
பண்ணார் பதிகத் தமிழ்பாடிப் பணிந்து பரவிப் பணிசெய்தார்.

கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை யென்றெடுத்துப்
பரவாய சொன்மாலைத் திருப்பதிகம் பாடியபின்
விரவார்தம் புரமெரித்த விடையவனார் வெள்ளையெயிற்
றரவாரம் புனைந்தவர்தந் திருமுன்றிற் புறத்தணைந்தார்.

# 53 திருவாரூர்

## திருப்பதிக வரலாறு

நீடுபுகழ்த் திருவாரூர் நிலவுமணிப் புற்றிடங்கொண்ட நிருத்தரைக்கூடிய அன்போடு காலங்களில் அணைந்து கும்பிட்டுப் பாடியருளிய கோதில்வாய்மைத் திருப்பதிகங்களுள் ஒன்று இது. (226)

### திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

குழல்வலங்கொண்டசொல்லாள் கோலவேற்கண்ணிதன்னைக்
கழல்வலங் கொண்டுநீங்காக் கணங்களக் கணங்களார
அழல்வலங் கொண்டகையா னருட்கதி ரெறிக்குமாரூர்
தொழல்வலங் கொண்டல்செய்வான் றோன்றினார்
[றோன்றினாரே. 508

508. குழல்வலங்கொண்ட சொல்லாள் - வேய்ங்குழலின் இன்னிசையை வெற்றிகொண்ட இனிய சொல்லினாள். கோலம் - அழகு வேலபோலுங்கண் கோலம் வேற்கும் ஏற்கும். கழல் - திருவடி. வலங்கொண்டு நீங்காக் கணங்கள் :- 200 ஆவது திருப்பாடலிற குறித்த கூட்டத்தினர். 189, 190 குறிப்பும் உணர்க. ' திருக்கயிலை வீறறிருந்த சிவபெருமான் திருக் கணத்தால் பெருக்கிய சீர்த்திருவாரூர்ப் பிறந்தார்கள் ' (4164) ' ஆரூரிற் பிறந்தாரெல்லாம் நங்கணங்களான பரிசு காண்பாய் ' (பெரியபுராணம் 1897) அழல் வலங்கொண்ட கையான் :- ' வாய்மை மறைநூற் சீலத்தால் வளர்க்குஞ் செந்தீயேனத் தருவார் ' ' கையில் விளங்கு கனலுடையார் ' (பெரியபுராணம் 1875; 1880). அருட்கதிர :- ' சென்னிமிசை நீதரித்தபிரான் அருளே சிந்தை செய்து திரிமேல் நீர்வாரத்து நாடறிய எரித்த திருவிளக்கின் விட்டெழுந்த சுடர் ' (சேக்கிழார் பெருமான் திருவாக்கு). ' ஆராய்ந்து அடித்தொண்டர் ஆணிப்பொன் ஆரூர் அகத்தடக்கிப், பாரூர் பரிப்பத்தம் பங்குனியுத்திரம் பாற் படுத்தான், நாரூர் நறுமலா நாதன் அடித்தொண்டன் நம்பிநந்தி, நீரால திருவிளக்கிட்டமை நீள்நாடு அறியும் அன்றே ' (987)

நாகத்தை நங்கையஞ்ச நங்கையை மஞ்ஞையென்று
வேகத்தைத் தவிரநாகம் வேழத்தி னுரிவைபோர்த்து
பாகத்தி னிமிர்தல்செய்யாத் திங்களை மின்னென்றஞ்சி
ஆகத்திற் கிடந்தநாக மடங்குமா ரூரனார்க்கே. 509

தொழுதகங் குழையமேவித் தொட்டிமை யுடையதொண்டர்
அழுதகம் புகுந்துநின்ற ரவரவர் போலுமாரூர்
எழிலக நடுவெண்முத்த மன்றியு மேர்கொள்வேலிப்
பொழிலகம் விளங்குதிங்கட் புதுமுகிழ் சூடினாரே. 510

'அந்தவளப்பொடி கொண்டணிவார்க் கிருளொக்கும் நந்தி புறப்படிலே' (99) 'நந்திபணி கொண்டருளும் நம்பனைத் தன்னை ...........ஆரூர் மூலட்டானம் இடங்கொண்ட பெருமானை......... அடைந்தடியேன் அருவினைநோய் அறுத்தவாறே' (6. 34. 4). தொழில் வலங்கொண்டல் - தொழுதலும் வலங்கொள்ளுதலும். செய்வான் - செய்தற் பொருட்டு. தோன்றினார் - பிறந்தவர். ஏனையோர் பிறந்தும் இருந்தும் செத்தவரே என்றவாறு.

509. பாம்பு, நங்கை, திங்கள் மூன்றும் சிவபிரான் அணிந் திருத்தலைக் கருதிய கற்பனை இது திருமுடிமேற் கிடந்த பாம்பினை அஞ்சினாள் கங்கை நங்கை. அந் நங்கையை மயில் என்று கருதி அஞ்சிற்று அப்பாம்பு. அப்பாம்பினைக் கண்டு தன்னை விழுங்குமென்று திங்கள் அஞ்சி, யானைத்தோற் போர் வைக்குள் ஒளித்துக்கொண்டு நிமிர்ந்து பார்த்தலும் செய்யா திருந்தது. அத்திங்களொளியை மின்னலென்று கருதி அஞ்சி அடங்கிற்று, சிவபிரான் திருமார்பிற் கிடந்த பாம்பு. பாம்பினைக் கண்ட மெல்லியல் அஞ்சுதலும் மயிலைக் கண்ட பாம்பு அஞ்சு தலும் இயல்பு. திங்களை மின் என்று கருதி அஞ்சி அடங்குத லும் பாம்பின் செயல். திங்கள் [illegible] மறைந்து எட்டி எட்டிப் பார்ப்பதுபோல இடையிடையே [illegible] தலால் மின் னெனும் எண்ணம் உண்டாயிற்று. மின் [illegible] என்று இடிக்கு ஆகும்பெயர் 'விரிநிற நாகம் விடருள [illegible] உருமின் கடுஞ் சினம் சேண் நின்றும் உட்கும்.' (நாலடியார்)

510. திருவாரூர்த் திருமூலட்டானர், புகுந்து நின்றார். அதனால் அவரவர்போலும் என்க. திங்கட் புதுமுகிழ் சூடினார் -

இளம் பிறை சூடிய திருமூலட்டானர். தொண்டரகம் புகுந்து நின்றார். நின்றதால் அவரவர்போலும். தொழுதல், அகம் குழைதல், மேவுதல் தொட்டிமையுடைமை அழுதல் எல்லாம் தொண்டர் இயல்பு. அழுத + அகம் = அழுதகம். அகரம் தொக்கது. தொண்டரது அகம் புகுந்து நிற்றலும் அவரவர் போறலும் திங்கட் புதுமுகிழ் சூடினார் தொழில். முத்தம் அன்றி யும் திங்கட் புதுமுகிழ் சூடினார். ஆரூர் எழிலகம் நடுவெண் முத்தம் :- பூங்கோயில் ஆதலின் அப்பூவின் முத்தம்; 'சுரிவளை சொரிந்த முத்தின் சுடர்ப்பெரும் பொருப்பு' (பெரியபுராணம். 73). ஆரூரின் அழகிய இடத்தின் நடுவானது பூங்கோயில். அந்நடுவில் உள்ள முதல்வர் முத்தமும் சூடினவர். திங்கட்புது முகிழும் சூடினவர். அவர் சூடிய வெண் முத்தம் ஆரூர் எழிலக நடுவணது. வெண்டிங்கட் புதுமுகிழ் ஏர்கொள் பொழிலக நடுவண் விளங்குவது. எழில், ஏர் - அழகு ; எழுச்சி பொழில் - சோலை. வேலி. திருவாரூர்க் கோயில், குளம், செங்கழுநீர் ஓடை மூன்றும் அவ்வஞ்சுவேலியாகும். 'அஞ்சணை வேலி யாரூர்' (514) 'தொட்டிமை' என்பதன விளக்கம் சித்தாந்தம் மலர் 22, இதழ் 10 (விரோதி - ஐப்பசி. 1949 அக்டோபர்) இல் யாம் எழுதிய 'தமிழ்ச் சொல்' என்னுங் கட்டுரையால் அறியப் பெறலாம். சீவகசிந்தாமணியில், 'தொட்டிமையுருவம்' (1255, 2085) 'காமன் தந்த தொட்டிமையுடைய வீணைச் செவிச்சுவை யமிர்தம்' (2047) என்புழி, உருவத்தொற்றுமை, குரலொலி வீணையொலியினொற்றுமை குறித்துநிற்றலறிக. விட்டிசைத்தலை விட்டிசை என்றும், பக்கிசைத்தலைப் பக்கிசை என்றும் கூறு மாறு, தொட்டிமைத்தலைத் தொட்டிமை என்றனர். கண்ணிமை யிரண்டும் ஒன்றணையொன்று தொட்டு ஒற்றுமையுற்றிமைத்தல் பற்றிய இத்தொடர் உவமையாய்நின்று, ஒற்றுமையுடைய உவமே யத்தைக் குறித்து வழங்கும் பண்டையதொரு வழக்கு. இந் நாயனார் காலத்தும் இது வழக்கிலிருந்ததுபோலும். அடிய வர்க்கே சிறந்துரிய ஒற்றுமையைக் குறிக்க இதனை ஆண்டருளி னார். அடியவர் தம் இனத்தொடும் இறைவனொடும் உறும் ஒற்றுமையே பொய்யாது நிலைப்பது. 'உன் அடியவர் தொகை நடுவே ஓர் உருவாய நின் திருவருள் காட்டி என்னையும் உய்யக் கொண்டருள்' 'இணங்கத் தன் அடியார் கூட்டமும் வைத்து', என்பன 'தொட்டிமையுடைய தொண்டர்' களுக்கே உரிய ஒற்றுமை குறித்தன 'கண்ணிணைக் காக்கின்ற இமையிற்

நஞ்சிருண் மணிகோள்கண்டர் நகையிரு ளீமக்கங்குல்
வேஞ்சுடர் விளக்கத்தாடி விளங்கினூர் போலுமூவா
வேஞ்சுடர் முகடுதீண்டி வெள்ளிநா ராசமன்ன
அஞ்சுட ரணிவேண்டிங்க ளணியுமா ரூரனுரே. 511

எந்தளிர் நீர்மைகோல மேனியேன் றிமையோரேத்தப்
பைந்தளிர்க் கோம்பரன்ன படர்கோடி பயிலப்பட்டுத்
தஞ்சடைத் தோத்திறுலுந் தம்மதோர் நீர்மையாலும்
அந்தளி ராகம்போலும் வடிவரா ரூரனுரே. 512

காத்தனர்' (கம்பர்) என்றதில், ஒற்றுமையும் உணர்த்தப்பட்டது. 'தோட்டிமை' என்றது பிழைபட்ட பாடம்.

511. நஞ்சு கோள் கண்டர்; இருள் கோள் கண்டர்; மணி கோள் கண்டர்; நஞ்சுண்டு கறுத்து இருள்போலவும் நீல மணி போலவும் விளங்குங் கண்டத்தர். நகையிருள் - விளக்க முடைய இருள்; 'இருள் உருவம் காட்டும்.' ஈமம் - சுடுகாடு. கங்குல் - இரவு. வேஞ்சுடர் விளக்கத்து ஆடி - வேவ்விய சுடு காட்டுத் தீச் சுடர் விளக்கத்தில் நட்டம் ஆடி (விளங்கினூர் போலும்). மூவா வேஞ்சுடர் முகடு தீண்டி வெள்ளி நாராசம் அன்ன திங்கள் - அழியாத வேவ்விய சூரிய மண்டலத்தைத் தோட்டு வெள்ளிக் கம்பியிருந்தாற்போன்ற பிறை. அம் சுடர் அணி திங்கள் - அழகிய நிலாச் சுடரும் அழகும் உடைய திங்களை. சிவபிரான் சடை வேஞ்சுடர் முகடு. அதிலுள்ள பிறை வெள்ளி நாராசம். நிலாவின் தண்மை அஞ்சுடர். வேயி லின் வேம்மை வேஞ்சுடர்.

512. ஆரூரனுர் இமையோர் ஏத்தக் கோடி பயிலப்பட்டு, தோத்திறுலும் நீர்மையாலும் அந்தளிராகம் போலும் வடிவர். இமையோர் ஏத்துவது எம்தளிர் நீர்மையும் கோலமும் உடைய திருமேனி என்று; அதற்கு ஏது கோடிபயிலப்படுதல்; தம் சடைத்தோகுதியாலும் தம் நீர்மையாலும் 'எம் தளிர்' என்று இமையோர் ஆறனுருபின் உடைமைக் கிழமையிற் கூறிக் கோண்டது, கற்பக மரமும் அதிற்படரும் காமவல்லி என்னுங் கோடியும் தமக்கே உரியன ஆதலின். பைந்தளிர்க் கோம்பர் - பசிய தளிர்களையுடைய கற்பகப்பூங்கோம்பு; அன்ன-அத்தகைய;

வானகம் விளங்கமல்கும் வளங்கெழு மதியஞ்சூடித்
தானக மழியவந்து தாம்பலி தேர்வர்போலும்
ஊனகங் கழிந்தவோட்டி லுண்பது மொளிகொணஞ்சம்
ஆனகத் தஞ்சுமாடு மடிகளா ரூரனாரே. 513

படர்கொடி - காமவல்லி என்னும் படருங்கொடி; பயிலப்பட்டு - (தன்கண்) பயிலப்பெற்று; தம் சடைத் தொத்தினாலும் - தமது சடைக்கற்றையாலும்; தம்மதோர் நீர்மையாலும் - தம்முடையதொரு தன்மையாலும்; அம் - அழகிய; தளிர் - தளிரினது; ஆகம் போலும் வடிவர் - வடிவுபோல்கின்ற வடிவினர் பைந்தளிர்க் கொம்பர்களையுடைய அத்தகு சிறப்புடைய படர்கொடி என்று கொடியின் சினையாக்கியங் கூறலாம். சிவபிரான் பைந்தளிர்க் கொம்பர். அம் முதல்வனைத் தழுவியுள்ள நாய்ச்சியார் படர் கொடி. கொடிப்பயிற்சியும் சடைத்திரளின் நிறம் முதலியனவும் அவ்விருவரது இயல்பும் ஒப்புக்குரியன. 'வெள்ளிவெற்பின் மேல் மரகதக்கொடியுடன் விளங்கும் தெள்ளு பேரொளிப்பவள வெற்பு' என்றருளினார் சேக்கிழார் பெருமானார் 'பொன்மலைக் கொடி' 'மலைவல்லி' என்றலும் நினைக.

513. வானகம் விளங்க மல்கும் வளம் கெழு மதியம் என்றது சிவபிரானது சடைமேலுள்ள பிறை எல்லாத் தத்துவங்களுக்குள்ளும் தத்துவாதீதத்திலும் உள்ள வெளிகளெல்லாவற்றையும் விளக்கும் வளமுடையது குறித்து. தான் :- அசை, அகம் - பாவம் ஈவோர்பாவம் அழிதல் ஏற்றலின் பயன்களுள் ஒன்று. 'புண்ணியம் ஆம், பாவம்போம், தீது ஒழிய, நன்மை செயல்' என்னும் வாக்கியம் (நல்வழி) நான்கும் ஈண்டுணரத் தக்கன. ஊன் அகம் கழிந்த ஓட்டில் :- பிரமகபாலத்தில், தேர்வதும்பலி; உண்பதும் நஞ்சு. 'அருந்தும்விடம் அணியாம் மணிகண்டன்' என்புழி 1 'அருந்துமென்பது காலமயக்கம்'; 2. அருந்துதற்றொழில் முடிவதன்முன் நஞ்சம் கண்டத்து நிறுத்தப்பட்டு அணியாயிற்று ஆகலின், நிகழ்காலத்தாற் கூறப்பட்டது எனினும் அமையும்' (திருக்கோவையார் 272 உரை) ஆனகம் அஞ்சும் - 'ஆனிடத்தைந்தும்'. ஆடும் - அபிடேகம் புரியப் பெறும். அடுத்துவரும் திருப்பாடலில் 'அஞ்சணையஞ்சுமாடி' என்றதும் உணர்க. அடிகள் - கடவுள். இதுமுன் திருவடி ஞானம் பெற்றவர்களைக் குறிக்கும் பெயராயிருந்து, பின் இறைவனைக் குறித்தும் ஆளப்படுகின்றது.

அஞ்சணை கணையி னானை யழலுற வன்றுநோக்கி
அஞ்சணை குழலி னாளை யமுதமா வணைந்துநக்கு
அஞ்சணை யஞ்சுமாடி யாடர வாட்டுவார்தாம்
அஞ்சணை வேலியாரூ ராதரித் திடங்கொண்டாரே. 514

வணங்கிமுன் னமரரேத்த வல்வினை யானதீரப்
பிணங்குடைச் சடையில்வைத்த பிறையுடைப் பெருமை
[யண்ணல்
மணங்கம ழோதிபாகர் மதிநிலா வட்டத்தாடி
அணங்கோடி மாடவீதி யாரூரெம் மடிகளாரே 515

514. அஞ்சு அணை கணையினானை - அஞ்சு மலராக அணைந்த அம்புடைய மன்மதனை. அழல் உற - தீயை அடைய; தீய; எரிய. அழுதலையடைய எனல் இரதிக்குத் தகும். அன்று - யோகிருந்த அக் காலத்தில்; விண்ணோர் கருவேளை ஏவிய வேளையுமாம். நோக்கி - நெற்றிக் கண்ணாற் பார்த்து; யோகத்தையும் நம்மையும் மதியாது வந்தவாற்றைக் கருதி. அஞ்சு அணைகுழலினாளை - சுருள், குழை, பனிச்சை, கொண்டை, முடி என்னும் ஐந்தும் பொருந்தும் கூந்தலாராகிய உமை; கமலாம்பிகை; அல்லியங்கோதை. அமுதம் ஆ - அமுதத்தினிமை போலும் இனிமை விளைய. நக்கு - சிரித்து. யோகி போகியாதல் பற்றி விளைந்த நகை. அஞ்சு அணை அஞ்சும் ஆடி:- ‘ஆனகம் அஞ்சும் அடி’. அஞ்சு இரண்டனுள் முன்னது பஞ்சகவ்வியம். பின்னது ‘ஆனைந்து’ எனப்படும் ‘நறு நெய் யோடு பால் தயிர்’. ஆடரவு - ஆடுகின்ற பாம்பு. கோல்லும் பாம்புமாம். அடுதல் - கோல்லல். அஞ்சு அணை வேலி :- திருவாரூர்க் கோயில், குளம், நீரோடை மூன்றும் அவ்வஞ்சு வேலியளவின. (பா. 510. குறிப்பு).

515. அடிகளார் அண்ணல்; பாகர். அல்லது அண்ணலும் பாகரும் அடிகளார் என்க. ஏத்தவும் தீரவும் வைத்தபிறை அமரர் முன் வணங்கி ஏத்தவைத்த பிறை, வல்வினையாயின தீர வைத்தபிறை, பிறையையுடைய பெருமையாவது வணங்காதாரையும் பிழைத்தாரையும் ஒதுக்காமற் சிறப்பித்துக் காத்தருளியது. ஆன :- வினையாலணையும் பெயர். மணம் கமழ்

நகலிடம் பிறர்கட்காக நான்மறை யோர்கடங்கள்
புகலிடமாகி வாழும் புகலிலி யிருவர்கூடி
இகலிட மாகநீண்டங் கீண்டெழி லழலதாகி
அகலிடம் பரவியேத்த வடிகளா ரூரனாரே. 516

நறுமணம் வீசும் கூந்தலாள்; அன்மொழித் தொகை. பாகர் - இடப்பாகத்திலுடையவர். மதிநிலா வட்டத்து - சந்திரமண்டிலத்தில். ஆடி அண் அம் கொடி - அசைந்து அண்ணுகின்ற அழகிய கொடி. கொடியையுடைய மாடம். மாடங்களுள்ள வீதிகள். வீதியையுடைய ஆரூரர். 'வீதிவிடங்கர்' என்பது கொண்டு வீதிச் சிறப்புணர்க. அணங்கு + கொடி (- அணங்கொடி) என்று கொண்டுரைப்பின், ஆடி என்பதன் முடிவிடம் இன்றாய்க்கெடும். வினையான :- பலவின்பால் வினை ஈண்டுப் பெயராய்த் தீர என்னும் வினைக்கு முதலாய் நின்றது.

516. பிறர்கட்கு நகலிடமாக நான்மறையோர் தம் புகலிடமாகி வாழும் புகலிலி ஆரூரனார். கூடி இகல் இடம் ஆக நீண்டு ஈண்டெழிலாகி, அகலிடம் பரவி ஏத்த ஆரூரனார். நகல் இடம் - நகைத்தற்குரிய இடம். புகல் - அடைக்கலம், புகல் இலி - தனக்குமேல் ஒரு புகலாக யாரையும் வேண்டாத தனி முதலாய், எவ்வுயிர்க்கும் தான் புகலிடமான மெய்ப்பொருள். இருவர் - மாலும் அயனும். இகல் - மாறுபாடு. இகலும் இடம். நீண்டு - வியாபித்து. ஈண்டு - செறிந்த, செறிந்து எனலுமாம், எழில் - எழுச்சி, அழலது - அழலுதலுடையதீ, அகல் இடம் - உலகம், பரவி - வாழ்த்தி, ஏத்த ஆரூரில் எழுந்தருளியுள்ளார். 'நகலிடம்' 'புகலிடம்':- வேற்றுமைத்தொகை. 'இகலிடம்' 'அகலிடம்' வினைத்தொகை 'பிறர்' என்றது நான்மறையோர் அல்லாதவரை. நான்கு மறையும் கேட்டு நினைந்து தெளிந்தோர் அம் மறை நெறியில் நின்று இறைவன் திருவடியே புகலெனக் கொண்டு திருவருள் நெறியின் வழாது பேரின்பம் துய்ப்பர். அவர் அல்லாதவர் (பிறர்) உலக நெறியில் உழன்று யாவரும் நகுதற்குரியராவர்.

ஆயிர நதிகண்மொய்த்த வலைகட லமுதம்வாங்கி
ஆயிர மசுரர்வாழு மணிமதின் மூன்றும்வேவ
ஆயிரந் தோளுமட்டித் தாடிய வசைவுதீர
ஆயிர மடியும்வைத்த வடிகளா ரூரனாரே.　　517

திருச்சிற்றம்பலம்

517. ஆயிர நதிகள் மொய்த்த கடல் என்றருளிய உண்மையை உணராது, நகரத்தை ஒற்றுகவும் திகர ககரங்கட்கிடையிலே ஙகரமெய் இருந்து மறைந்ததாகவும், எண்ணிக்கொண்ட பிழைபட்ட பாடமே எல்லாப் பதிப்பிலும் உளது, ஆயிரந்திங்கள் மொய்த்தாற் போன்ற வெண்ணிறமுடைய பாற்கடல் என்று கொண்டனர் போலும். ஆயிரம் - பலப்பல, அசுரர் :- முப்புரத்தனர். வேவ - தீவிழியால் வெம்மையுற்றழிய, மட்டித்து - மடித்து. ' மடித்தாடும் அடி ' அசைவு தீர - இளைப்பாற. 'ஆயிர மடியும் வைத்த 'து யாது எனப் புலப்படவில்லை. கங்கையைக் குறிப்பதோ. அடி - திருவடி வியாபகமோ ?

கையார்ந்த திருத்தொண்டு செய்துபெருங் காதலொடுஞ்
செய்யாநின் றேயெல்லாச் செந்தமிழ்மா லையும்பாடி
மையார்ந்த மிடற்றர்திரு மயானத்தை வலங்கொண்டு
மெய்யார்வ முறத்தொழுது விருப்பினொடு மேவுநாள்,

சீர்வளரு மதிற்கச்சி நகர்த்திருமேற் றளிமுதலா
நீர்மருவுஞ் சடைமுடியார் நிலவியுறை யாலயங்கள்
ஆர்வமுறப் பணிந்தேத்தி யாய்ந்ததமிழ்ச் சொன்மலராற்
சார்வுறுமா லைகள்சாத்தித் தகுந்தொண்டு செய்திருந்தார்.

அந்நகரி லவ்வண்ண மமர்ந்துறையு நாளின்கண்
மன்னுதிரு மாற்பேறு வந்தணைந்து தமிழ்பாடிச்
சென்னிமிசை மதிபுனைவார் பதிபலவுஞ் சென்றிறைஞ்சித்
துன்னினார் காஞ்சியினைத் தொடர்ந்தபெருங் காதலினால்.

ஏகம்பன் காணவனென் னெண்ணத்தா னெனப் போற்றிப்
பாகம்பெண் ணுருவானைப் பைங்கண்விடை யுயர்த்தானை
நாகம்பூ ணுகந்தானை நலம்பெருகுந் திருநீற்றின்
ஆகந்தோ யணியானை யணைந்துபணிந் தின்புற்றார்.

# 54 திருப்புகலூர்

## திருப்பதிக வரலாறு

திருப்புகலூரில் புக்க திருநாவுக்கரசுநாயனூர் சித்தம் நிறைந்தே அன்பு தேவிட்டும் தேளி வெள்ளம் மோய்த்து இழியும் தாரைக்கண் போழியும் நீர் மெய் முழுதும் ஆரப் பணிவுற்று, அப் புகலூர் மன்னிய தேனேப் பாடியது இப் பாவியல் மாலேச் சேந்தமிழ்த் திருப்பதிகம். (பேரிய. 237-40).

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

பகைத்திட்டார் புரங்கண்மூன்றும் பாறிநீ ராகிவீழப்
புகைத்திட்ட தேவர்கோவே போறியிலே னுடலந்தன்னுள்
அகைத்திட்டங் கதனேநாளு மைவர்கோண் டாட்டவாடித்
திகைத்திட்டேன் செய்வதேன்னே திருப்புக லூரனீரே. 518

மையரி மதர்த்தவோண்கண் மாதரார் வலேயிற்பட்டுக்
கையேரி சூலமேந்துங் கடவுளே நினேயமாட்டேன்
ஐநேரிந் தகமிடற்றே யடைக்கும்போ தாவியார்தாம்
செய்வதோன் றறியமாட்டேன் திருப்புக லூரனீரே. 519

. . . .... . ...... .

518. பகைத்திட்டார் - பகைவருடைய, பாறி - அழிந்து. நீறு - சாம்பல். புகைத்திட்ட - எரித்த. போறி - அறிவு. அகைத்தல் - அறுத்தல், எழுப்புதல், ஓட்டுதல், சேலுத்தல், கிளேத்தல், முறித்தல், வருத்தல் ஆகிய எல்லாப் போருளும் ஈணடுப் போருந்தும். 'நீங்கருந்துயர் செய்வளி முதல் மூன்றன் நிலேயுளேன் அவை துரந்திடு முன் வாங்கி நின் தனி வீட்டுறைகு வான் விரும்பி வந்தனன் நின் குறிப்பு அறியேன்' என்று வளி முதலியவற்றைக் குறித்துக் கூறிய துரத்தல் ஐம்போறிக்கும் ஏற்கும் பா. 649, 651, 653, 655, 670, 672, 674, 750 பாாக்க. ஐவர் - ஐம்போறி, கோண்டு ஆட்ட ஆடி. 'ஆட்டு வார்க்கு ஆற்றகிலேன்' (652). திகைத்தல் - மயங்குதல். 'திரு இங்கு வருவாள் கோல்லோ என்று அகம் திகைத்து நின்ருன்' (கம்பா. சூர்ப்ப. 59)

519. மை - கண்ணிற்பூசும் மை, மணியின் கருமையையும் கோட்டின் சேம்மையும் குறித்து மையரி என்ருருமாம். மையும்

முப்பது முப்பத்தாறு முப்பது மிடுகுரம்பை
அப்பர்போ லைவர்வந்து வதுதரு கிதுவிடேன்று
ஒப்பவே நலியலுற்ரு லுய்யுமாறறிய மாட்டேன்
செப்பமே திகழுமேனித் திருப்புக லூரனீரே. 520

பொறியிலா வழுக்கையோம்பிப் பொய்யினை மெய்யேன்
நெறியலா நெறிகள்சென்றே னீதனே னீதியேதும்[றெண்ணி
அறிவிலே னமரர்கோவே யமுதினை *மனனில் வைக்கும்
செறிவிலேன் செய்வதென்னே திருப்புகலூரனீரே. 251

அரியும் மதர்த்தலும் ஒண்மையும் கண்ணிடத்துக்கொண்டு ஆடவரைத் தம் மயக்க வலையிற் படுத்துவர். அவர் வழிப்பாடு கடவுள் வழிபாட்டாலன்றித் தீராது. கடவுள் வழிப்பக்கமும் செலுத்தாது. கையில் ஏந்திய விரித்த பல்கதிர் கோள்சூலம். எரிகின்ற சூலத்தை ஏந்துகின்ற கடவுள் ஐ - கோழை, சிலேட்டுமம். நெரிந்து - சாய்ந்து அகமிடற்றே - மிடற்றகத்தே) கழுத்தினுள்ளே. அடைக்கும்போது ஆவியார்:- 'ஐயினால் மிடறு அடைப்புண்டு ஆக்கை விட்டு ஆவியார் போவதுமே' 'ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய் ஒக்க அடைக்கும் போதுணரமாட்டேன்'

520 முப்பதும் முப்பத்தாறும் முப்பதும் இடுகுரம்பை - முப்பத்தாறு தத்துவங்களும் அறுபது தாத்துவிகங்களும் அண்டத்திலுள்ளவாறே அமைத்த பிண்டமாகிய குடில். 'இருநாற் குரம்பை இது' (10௦1) 'ஐவர்க்கு இடம் பெறக் கால் இரண்டோட்டி அதில் இரண்டு கை வைத்த வீடு' (கந்தரலங்காரம்) குரம்பையப்பர் - குடிலின் தலைவர், 'இல்ல முடையார்' 'கள்ளரோடில்லம் உடையார்', ஐவர் - ஐம்பொறி, அது தருக. இது விடு(க). ஒப்பவே - ஒரு சேரவே; நலியல் - வருத்துதல். உய்யும் ஆறு - தப்பும்வழி, செப்பமே - செம்மை 'பவளம்போல் மேனி' 'அந்திவண்ணன்' செந்நெறியிலேயே விளங்கும் சிவ ஞானமூர்த்தியுமாம்.

521. பொறி - பொலிவு. அழுக்கு - மலம். ஈண்டு உடம்பிற்கு ஆகுபெயர். 'அழுக்கு மெய் கொடு உன் திருவடி

* மண்ணில் என்றும் பாடம் உண்டு.

அளியினூர் குழலினூர்க ளவர்களுக் கன்பதாகிக்
களியினூர் பாடலோவாக் கடவூர்வீ ரட்டமென்னும்
தளியினூர் பாதநாளுந் நினைவிலாத் தகவினெஞ்சம்
தெளிவிலேன் செய்வதென்னே திருப்புக லூரனீரே. 522

இலவினூர் மாதர்பாலே இசைந்துநா னிருந்துபின்னும்
நிலவுநாள் பலவென் றெண்ணி நீதனே னாதியுன்னை
உலவினா னுள்கமாட்டே னுன்னடி பரவுஞானம்
செலவிலேன் செய்வதென்னே திருப்புக லூரனீரே. 523

அடைந்தேன்' (நம்பியாரூரர்) பொய் - நிலையில்லாதது. மெய் - நிலையானது. நெறியலா நெறிகள் - சைவ நெறியல்லாத வேற்றுச் சமய நெறிகள். அமுதினை மனனில் வைக்கும் செறிவு - விண்ணுலகத்து அமிர்தினை மனத்தில் வைத்தற்கு ஏதுவான யோகம். 'மண்ணில்' என்றது பிழைபட்ட பாடம். ஏடுகளிலும் 'மனனில்' என்றே உளது. எம் ஏட்டில் மண்ணில் என்று எழுதி மனனில் என்று திருத்தியிருக்கின்றார். 523 ஆவது திருப்பாடலில் 'நீதனேன்' என்றுள்ளதுணாக. 310, (6, 47, 4) பார்க்க. நீதன் (- நீதிமான்) எனின், நீதியேதும் கல்லேன், நெறியலா நெறிகள் சென்றேன் எனல் ஒல்லுமோ ?

522. அளி - வண்டுகள். அளியின் ஆர்குழலினூர்கள் - வண்டுகளின் நிறைந்த கூந்தலார். குழலினூர்க்கு அன்பு - மாது நேசம். களியினூர் பாடல் - சிற்றின்பக் களிப்புடையார் பாடும் பாடல்கள். ஓவா - நீங்காத. கடவூர் வீரட்டம்; திருக்கடவூர்க் கால சங்காரம் புரிந்த வீரட்டானம். தளி - திருக்கோயில். தளியினூர் :- 'அமுதகடேசர்' நாளும் - நாள்தோறும். நினைவு - மறவாதுன்னுதல், நினைவு இல்லாமையால் நெஞ்சம் தகவும் உயிர் தெளிவும் இல்லாதன ஆயின.

523. இலவினூர் - இலவம் பூப்போலும் வாயும் அடியும் உடையார். சிந்தாமணி 482, 1588. மாதாபாலே :- ஏகாரம் - அடியார் முதலிய நன்னெறியினரிடத்தில் இசை இன்மை குறித்து நின்றது. பிரிநிலை. பின்னும் நிலவு நாள் - மேலும். உடம்போடு கூடி வாழுங் காலம். 'ஒருபொழுதும் வாழ்வதறியார் கருதுப கோடியும் அல்ல பல' (திருக்குறள்) ஆதி - முதல்வர், உலவி - உள்ளத்தில் உலவச் செய்ய. உலவியுள்க எனல் பொருந்தாது.

காத்திலே னிரண்டுமூன்றுங் கல்வியே லில்லையேன்பால்
வாய்த்திலே னடிமைதன்னுள் வாய்மையாற் றூயேனல்லேன்
பார்த்தனுக் கருள்கள்செய்த பரமனே பரவுவார்கள்
தீர்த்தமே திகழும்போய்கைத் திருப்புக லூரனீரே. 524

செயவெனெச்சமாகத் திரித்துக் கோள்க. உன் அடி பரவும் ஞானம் :- நின் அடி பரவ நீயாகி நிற்கும் மெய்யுணர்வு. 'நீயான ஞான விநோதந்தனை என்று நீயருள்வாய் ?' (கந்தரலங்காரம்). சேலவு - ஒழுக்கம். செல்லுதலுமாம். 'அறிவு செல்லவில்லை' என்ற வழக்குணர்க. 'நீதனேன்' 521. பார்க்க. உன் திருவடியைப் பரவும் சிவஞானம் சேலவு இல்லேன் செல்ல இல்லேன். சிவஞானத்திற் செல்லுதல் இல்லேன் சிவஞானம் செல்ல (- என் உள்ளே செல்ல, புக) இல்லேன். 'சேலவு' தன்மைக்கண் வழுவமைதி. உன்னடி பரவும் ஞானத்திற் சேல் லுதல் இல்லேன் என்றுமாம்.

524. காத்திலேன் இரண்டும் மூன்றும் - ஐம்போறிகளையும் அடக்கினேனல்லேன். 'இரண்டும் மூன்றும்' என்றாற் போலக் குறிக்கும் வழக்கம் ஆசிரியர்க்கு மிகுதியாயிருக்கின்றது. 'மூன்று முந்நூற்றறுபதும் (- 1080 மலர்)' 292. 'ஐயிரண்டும் ஆறொன்றும் ஆனார் போலும் அறுமூன்றும் நான்மூன்றும் ஆனார் போலும்' (6-16-6) பத்துத் திசையும் ஏழுலகும் பதினேண் கணமும் பன்னிரு சுடரும் ஆனார். 'ஐயிரண்டும் ஆறொன்றும்' என்பது சோடசகலாப்பிரசாதத்தை யுணர்த்துவதேன்பர். அப் போருட்கு, ஐந்து இரண்டு ஆறு ஒன்று என்று கோண்டு பதினாறு கலை எனல் வேண்டும். ஆறும் ஒன்றும் ஏழு என்று உம்மைத் தோகையாகக் கோண்டுரைத்தது முன்னது கல்வியேல் என் பால் இல்லை. அடிமை தன்னுள் வாய்த்திலேன். தன்னுள் - சிவபிரானிடத்தில், அடிமை வாய்த்திலேன். வாய்மையால் - வாயுரையால். முப் போறி (திரிகரணம்) ஆகிய உள், வாய், மேய் என்னும் மூன்றனியல்பும் (சத்தியமும்) முறையே உண்மை, வாய்மை, மேய்மை எனப்படும். தூய்மை - யாதோன்றும் தீமை யிலாது சோல்லல். பரவுவார்கள் - வாழ்த்தி வழிபடுவோர். தீர்த்தம் - தீவினைக்குக் கழுவாய் ஆகிய தூநீர்.

நீருமாய்த் தீயுமாகி நிலனுமாய் விசும்புமாகி
ஏருடைக் கதிர்களாகி யிமையவ ரிறைஞ்ச *நின்றார்
‡ஆய்வதற் கரியராகி யங்கங்கே யாடுகின்ற
தேவர்க்குந் தேவராவர் திருப்புக லூரனாரே. 525

மெய்யுளே விளக்கையேற்றி வேண்டளவுயரத்தூண்டி
உய்வதோ ருபாயம்பற்றி யுகக்கின்றே னுகவாவண்ணம்
ஐவரை யகத்தேவைத்தீ ரவர்களே வலியர்சாலச்
செய்வதொன் றறியமாட்டேன் திருப்புக லூரனீரே. 526

525. இமையவர் இறைஞ்ச நிலனும் நீரும் தீயும் (வளியும்) விசும்பும், தண்கதிரும் செங்கதிரும் ஆகி நின்று, ஆய்ந்துணர் வதற்கு எளியரல்லராகி, அவ்வத் தத்துவ புவனங்களில் முத் தொழில் புரியுந் தேவர்க்கும் அதிட்டான மூர்த்தியாய் எழுந்தருளி இயக்குவிக்கும் தனி முதற் பொருளாவார் திருப்புகலூரனார். சிவ பரஞ் சுடர். இமையவர் முதலிய இயமானர். நீர், நிலம், தீ, கார். விண், இரு சுடர் ஆகிய எட்டுருவாய் நின்றுணர்த்தியும், சித்துப் பொருளாகிய இயமானர்க்கு அசித்துப் பொருளாகிய மற்றையேழன்கண்ணும் வைத்தும தன்கண் வைத்தும் ஆய்வ தற்கருமையும், அவ்வத் தததுவாதிபதிகளை ஆட்டுவித்தலும் அறிவித்தவாறுணாக. ‘ விசும்பு ’ என்றதால், அதில் உலவும் வளியும் பெற வைத்தருளினார். இது படர்க்கைப் பரவல். ‘ நின்றார் ’ ‘ ஆவது ’ என்றும் பாடம் உண்டு.

526. மெய் – உடம்பு. விளக்கு - ஒளிநெறிக்குரிய பிரா சாத மந்திர ஞான தீபம். வேண்டு அளவு - மும்மலங்களையும் கடக்க வேண்டிய எல்லை வரையில். உயர - துவாதசாந்தத்தை எய்த. தூண்டி - பிராசாத யோகத்தால் உந்தி. உய்வது ஓர் உபாயம் - பிறவித் துன்பத்தினின்று உய்ந்து வீடு பெறற்கேற்ற தோருபாய நிட்டையை உறுதியாகப் பிடித்து, உகக்கின்றேன் - உயர்த்துகின்றேன். உகவாவண்ணம் - உயர்த்தாத வகையில், அகத்தே ஐவரை வைத்தீர். அவரோடு யான் செய்யும் போரில்

* நின்று. ‡ ஆவதற்கு.

அருவரை தாங்கினானு மருமறை யாதியானும்
இருவரு மறியமாட்டா வீசனு ரிலங்கைவேந்தன்
கருவரை யெடுத்தஞான்று கண்வழி குருதிசோரத்
திருவிரல் சிறிதுவைத்தார் திருப்புக லூரனாரே. 527

திருச்சிற்றம்பலம்

அவர்களே சாலவலியர். செய்யத்தக்கது ஒன்றும் அறியவல்லே னல்லேன்.

527. இத் திருப்பதிகத்தில் எட்டும் பத்துமாம் இரண்டும் சிவபிரானைப் படர்க்கையிற் பரவுவன. அருவரை - பிறரால் எடுத்துக் குடையாகக் கவித்துப் பிடித்தற்கரிய கோவர்த்தனகிரி. தாங்கினான் - ஆக்களைக் காக்கத் தாங்கிய கண்ணனாகிய திரு மால். அருமறை - கற்றும் கேட்டும் உணர்தற்கரிய வேதம். ஆதி - படைத்தற்றொழிற்கு முதல்வன். முதற்றொழிலனுமாம். இலங்கை வேந்தன் கரிய (பெரிய) மலையை எடுத்தநாளன்று, அவன் இருபது கண்களின் வழியிலும் செந்நீர் ஒழுகச் சிறிது திருக் காற் பெரு விரலை ஊன்றினார் திருப்புகலூரனார். ஈசனார் - உடையார். தமிழில் இறைவனை உடையான் என்பது தொல் வழக்கு. அப் பொருட்டாய ஈசன் என்பது வடமொழிக் கலப் புற்ற பின் வழங்கும் பெயர். 'உடையாள்' அம்பிகை. 'இடையறு அன்பு உனக்கு என்னூடகத்தே நின்றுருகத் தந்தருள் எம் உடையானே' 'உடையாள் உன்றன் நடுவிருக்கும்' (திருவாசகம்) உடைமை உயிர்களும் உயிரில் பொருள்களும். அவற்றுள் உயிர்கள் அடிமையாதலும் உடையன. 'நாளன்று' என்பதன் மரூஉவே 'ஞான்று' என்பது. கல்வெட்டுக்களுள் 'மகர ஞாயிற்று இரேவதி ஞான்று' என்பது முதலிய தொடர் களால் அதன் தொன்மை புலப்படும்.

நீடுதிருக் கழுக்குன்றி னிருத்தனார் கழல்வணங்கிப்
பாடுதமிழ்த் தொடைபுனைந்து பாங்குபல பதிகளிலுஞ்
சூடுமிளம் பிறைமுடியார் தமைத்தொழுது போற்றிப்போய்
மாடுபெருங் கடலுடுத்த வான்மியூர் வந்தணைந்தார்.

# 55 திருவலம்புரம்

## திருப்பதிக வரலாறு

திருநாவுக்கரசர் திருவலம்புரத்திற் சென்று பாடியருளியது இத்திருப்பதிகம்.

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

தெண்டிரை தேங்கியோதஞ் சென்றடி வீழுங்காலைத்
தொண்டிரைத் தண்டர்கோனைத் தொழுதடி வணங்கியெங்கும்
வண்டுகண் மதுக்கண்மாந்தும் வலம்புரத் தடிகடம்மைக்
கொண்டுநற் கீதம்பாடக் குழகர்தா மிருந்தவாறே. 528

மடுக்களில் வாளைபாய வண்டின மிரிந்தபொய்கைப்
பிடிக்களி றென்னத்தம்மிற் பிணைபயின் றணைவரால்கள்
தொடுத்தநன் மாலையேந்தித் தொண்டர்கள் பரவியேத்த
வடித்தடங் கண்ணிபாகர் வலம்புரத் திருந்தவாறே. 529

. . . .

528. ஓதம் சென்று அடிவீழுங்காலை, தொண்டு இரைத்துத் தொழுது வணங்கிக் கொண்டு பாட இருந்தவாறு என்னே! என்க. தெள்+திரை - தெளிந்த அலை. ஓதம் - நீர். அடி - திருக்கோயிலாண்டவன் திருவடி. கடலலை திருவலம்புரத்திற் குழகர் திருவடியில் வந்து வீசும் போது, எங்கும் தொண்டர்கள் அத் தேவாதி தேவனைத் தொழுது திருவடி வணங்கி, அவனை உள்ளத்திலும் அவர் சீரை உரையிலும் கொண்டு, நல்லிசை பாடிப் போற்றுவார்கள். அவர்கள் பாடக் குழகர் வீற்றிருந்தருள்கின்றார். அடிகளது திருவலம்புரம் எங்கும் வண்டுகள் மதுக்களை மாந்தியுறங்கும் வளமுடையது. எங்கும் பலவகை மலர்களிற் பல்வேறு சுவையுடையவாய்க் கிடைக்கும் மதுக்களை மாந்தித் தம்மை மறந்துறங்கும் வண்டுகள், எங்கும் அடிகளைத் தொழுது பாடி வணங்கிப் பேரின்பக் கள்ளுண்டு சீவபோத மற்றுச் சிவபோதத்திலுறங்கும் தொண்டர்களுக்கு நிகராயின. வலம்புரத்தடிகளாகிய குழகர் தம்மைத் தொண்டர் பாட இருந்தார். தொண்டு - தொண்டர். இரைத்து - சீர் பாடி.

529. வாளை மீன்கள் மடுக்களிற் பாய்ந்தன பாயவே அம் மடுக்களிலிருந்த வண்டுகள் அஞ்சி ஓடின. ஓடிப் போய்

தேனுடை மலர்கள் கொண்டு திருந்தடி பொருந்தச்சேர்த்தி
ஆனிடை யஞ்சுங்கொண்டே யன்பினு லமரவாட்டி
வானிடை மதியஞ்சூடும் வலம்புரத் தடிகடம்மை
நானடைந் தேத்தப்பெற்று நல்வினைப் பயனுற்றேனே. 530

கையை அடைந்தன. அடையவே, அப் பொய்கையிலிருந்த வரால்கள், பிடியும் களிறும் போலத் தம்மிலே பிணைந்துகொண் டன. பிணைதல் - இரட்டையாகக் கலந்து கொள்ளல். பிடி - பெண் யானை. களிறு - ஆண் யானை. மீன்களிலும் களிறு என்னும் வகையொன்றுண்டு. 'முடங்கிறல்,........ மலங்கு, இளவாளை, செங்கயல், சேல், வரால், களிறு அடைந்த தண் கழனி யணியாரூரம்மானே' (199). பயின்றன வரால்கள் என்று பாடம் இருந்ததோ? பயின்று அணைகின்ற வரால்களையுடைய வலம்புரம் என்று இயைக்க. தொண்டர்கள் தொடுத்த நன்மாலை ஏந்திப் பரவி ஏத்த இருந்தவாறு என்க. 'வடித்தடங்கண்ணி' என்பது. தலத் தேவியாரது திருப்பெயர். 'வடுவகிர்க்கண்ணி யம்மை' என்று இன்றும் வழங்குகின்றது

530. திருவலம்புரத்து அடிகளை நான் அடைந்து. மலர்கள் கொண்டு அடிபொருந்தச் சேர்த்து, ஆனஞ்சும் கொண்டு அமர ஆட்டி, ஏத்தப்பெற்று (முற் பிறவிகளிற் செய்த) நல்வினைகளின் பயனை (இப் பிறவியிற்) பெற்றேன் என்க. தேன் உடை மலர் கள் :- முறுக்கு அவிழ வண்டுகள் உடைத்தமையால் மலர்ந்த பூக்கள் ; தேனையுடைய பூக்கள். திருந்து அடி :- அநுபவ ஞானம் முதிர முதிரச் சிந்தையிற் றிருந்தும், திருத்துவது சிவ னருள். திருந்துவது ஆன்மா. சிவனடியில் ஆன்மாக்கள் திருந்துகின்ற உண்மையை அநுபவித்துணர்தல் வேண்டும். திருத்தத்திற்கு இடம் சிவனடியே அன்றி வேறில்லை. பதி சம்பந்தத்தாலன்றிப் பாசசம்பந்தத்தாற் பசுக்கள் திருந்துமோ? அவ்விரண்டு சம்பந்தமும் அன்றி வேறுண்டோ? அடிபொருந்தச் சேர்த்தல் - வாச்சியப் பொருளிற் சேரப் பாவித்துத் தூவுதல். 'ஆனிடையஞ்சும்' 513, 514. அன்பினுல் அமர ஆட்டி :- 'தம் அன்பாம் மஞ்சனநீர் தாம் ஆட்டி'; 'இறவாத ஆனந்தம் எனும் திருமஞ்சனம் ஆட்டி'. வானிடை மதியம் :- 'வானூர் மதியம்', நான் அடைந்து :- நாண் கேட்டு என்றலும் பொருந்தும்.

முளையெயிற் றிளநல்லேனம் பூண்டுமோய் சடைகடாழ
வளையெயிற் றிளையநாகம் வலித்தரை யிசையவீக்கிப்
*புளைகயப் போர்வைபோர்த்துப் புனலோடு மதியஞ்சூடி
வளைபயி லிளையரேத்தும் வலம்புரத் தடிகடாமே. 531

தற்போதம் அற்றுச் சொல்லுகின்ற அருளாளர்கள் 'நான்' எனல் குற்றமாகாது. திருமுறையாசிரியர்கள் 'நான்' என்ற இடங்களை யெல்லாம் நோக்குக. நான் அடிகளை அடைந்து ஏத்தப் பெற்று நல்வினைப் பயன் உற்றேன் என்றதில், ஏத்தப் பேறல் பயன் உறல் இரண்டும் ஆசிரியர்க்கே உரியன. ஏத்தப் பேறல் ஏத்தல் என்னும் பொருட்டு.

531. இளைய அழகிய பன்றியின் முளையெயிற்றை அணிந்து, மோய்த்த சடைகள் தாழ வளைந்த பற்களையுடைய இளைய பாம்பினை வலித்து அரையில் பொருந்தக்கட்டி, துளை யுடைய கையினதான யானைத் தோலைப் போர்த்துக் கங்கையுந் திங்களுஞ்சூடி, வளைகள் பயின்ற இளையர்கள் தொழுதேத்தும் திருவலம்புரத்து அடிகளானார் (எங்கும் நிறைந்த சிவபிரானார்). யானைத் தோற் போர்வையைப் புளைகயப் போர்வை என்றார். புழைக்கைய போர்வை என்றது அவ்வாறு எதுகை நோக்கி நின்றதுபோலும். ஓர்க. புழை - துளை. 'புழைகை' எதுகை நோக்கியியல்பாயிற்று. அஃது அடையடுத்த சினையாகு பெயராய் முதலை யுணர்த்தி, அகர விறுதிபெற்று எச்சப்பொருட்டாய்ப் போர்வை என்னும் பெயர்கோண்டது. 'வளைபயிலிளையரேத்தும்' என்றதாற் பண்டைய மகளிரது சிவபத்தியும் திருக்கோயிலில் மகளிர் திரளாகச் சென்று வழிபடும் வழக்கமும் புலப்பட்டன. பூண்டு, தாழ வலித்து, இசைய வீக்கிப்போர்த்துச்சூடி வலம் புரத்து அடிகளானார் என்று ஆக்கம் வருவித்து முடிக்க. 'பிறை சூடி' 'கரந்தும் விளையாடி' என்புழிப்போல, 'சூடி' என்றதைப் பெயராகக் கேண்டு அதனோடு முடித்து எழுவாயாக்கி அடிகள் தாம் என்று பயனிலை யாக்கலும் ஏத்தும் என்பதற்கு ஏத்தப் பேறும் எனச் சேயற்பாட்டுப் பொருளுரைத்து, பூண்டு முதலிய எச்சங்களைப் பேறும் என்பதனோடு இயைத்தலும் பொருந்தும்.

* புணைபுழைகைய என்பதும் பாடம்.

சுருளுறு வரையின்மேலாற் றுளங்கிளம் பளிங்குசிந்த
இருளூறு கதிர்நுழைந்த விளங்கதிர்ப் பசலைத்திங்கள்
அருளுறு மடியரெல்லா மங்கையின் மலர்களேந்த
மருளுறு கீதங்கேட்டார் வலம்புரத் தடிகளாரே. 532

நினைக்கின்றே னெஞ்சுதன்னு னீண்டபுன் சடையினானே
அனைத்துடன் கொண்டுவந்தங் கன்பினு லமையவாட்டிப்
புனைக்கின்றேன் பொய்ம்மைதன்னை மெய்ம்மையைப்
புணரமாட்டேன்
எனக்குநான் செய்வதென்னே யினிவலம் புரவனீரே. 533

532. சுருள் - வளைவு, பளிங்கு - படிகம், இருள் உறு கதிர் - இருளினையுடைய இரவில் உறுகின்ற நெற்கதிரில், நுழைந்த - புகுந்த, இளங்கதிர்ப்பசலைத்திங்கள் - இளநிலாவை யுடைய பசிய வெணபிறை, திங்களை அணிந்த அடிகளார். அருளை விரும்பும் அடியவரெல்லாரும் அகங்கையிற் பூக்களைத் யேந்தித் தூவிவழிபட மகிழ்ந்தும், குறிஞ்சியாழ்த்திறமான மருள் என்னும் இன்னிசை பொருந்திய பாடலைப் பாடப்போற்றக் கேட்டும் வீற்றிருந்தார் வலம் புரத்து அடிகளார் பயிர் வளர்ச் சிக்கு நிலாத் துணையாதலை, ‘தூமதிவாக்கிய கிரணந்துளித் தென்னக் கதிர்ச்சாலி காமர்மணித் தரளங்கள் கான்று செறுத் திடராக்கி’ (காஞ்சிப். 125) ‘செழுஞ்சுவைத் தெள்ளமிழ்த கிரணங்கள் தம்மாற் செறிகருப்பக் கனம் உறுத்து வளரா நிற்கும்’ (தணிகைப். 131) ‘சகல புவனத்திலும் உயிர்ப்பயிர் தழைப்ப நற்றண்ணளி சுரந்திடுதல்’ (முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ். அம்புலிப் 171) ‘சசியாதிபன்’ என்பவற்று லறிக. சசியம் - தானியம், விளைவு.

533. வலம்புரவனீரே, நீண்ட புன்சடையினானே, நெஞ்சு தன்னால் நினைக்கின்றேன். (அபிடேகத்திற்குச் சிவாகமத்தில் விதிக்கப்பட்ட பொருள்கள்) அனைத்தும் ஒருசேரக் கொண்டு வந்து, அத்திருக்கோயிலுள், மெய்யன்பால், பொருந்த அபிடே கம் புரிந்து, மெய்ம்மையைச் சேர வல்லேன் அல்லேன். பொய்மையைப் பெருக்குகின்றேன். இனி நான் எனக்குச் செய்வது யாது ? நெஞ்சின் நினைவும் உடலின் செயலும் உரையின்

சேங்கயல் சேல்கள்பாய்ந்து தேம்பழ மினியநாடித்
தங்கயந் துறந்துபோந்து தடம்பொய்கை யடைந்துநின்று
கோங்கையர் குடையுங்காலைக் கொழுங்கனி யழுங்கினூராம்
மங்கல மனையின்மிக்கார் வலம்புரத் தடிகளாரே. 534

அருகேலாங் குவளைசெந்நே லகவிலை யாம்பனெய்தல்
தெருவேலாந் தெங்குமாவும் பழம்விழும் படப்பையெல்லாம்
குருகினங் கூடியாங்கே கும்மலித் திறகுலர்த்தி
மருவலா மிடங்கள் காட்டும் வலம்புரத் தடிகளாரே. 535

வாய்மையும் ஒன்றுபட நின்று மெய்மையை யுணர்ந்தும் புணர்ந்தும் பிறவி நீக்கமும் பேரின்பாக்கமும் அடையாமல் வாளா நாள் கழிக்கும் பெற்றியேன் நான், இனி எனக்கு யான் செய்வது என்னே ! செய்வதொன்றறியமாட்டேன்.

534 செங்கயல் மீன்களும் சேல் மீன்களும் பாய்ந்து, இனியனவாகத் தேம் பழங்களை விரும்பி, தம் நீர் நிலையைத் துறந்து சென்று பெரிய பொய்கையை அடைந்து நின்று, (கோங்கைகளையுடைய) மகளிர் நீராடுங்காலையில், கொழுங் கனிக்கு அழுங்கினூராம் அடிகளார் மங்கலமனை. மனையில்மிக்கு ஆர்ந்த வலம்புரம், அழுங்குதல் - இரங்குதல், பாய்ந்து நாடித் துறந்து போந்து அடைந்து நின்று குடையுங்காலை அடிகளார் அழுங்கினூராம் என்க. நின்று என்னும் செய்தெனெச்சத்தைச் செயவெனெச்சமாகத் திரித்து நிற்பவெனல் வேண்டும் என்பர். சான்றோர் செய்யுட்களிற் பயின்றுவரும் எல்லாவிடத்தும் அவ்வாறு திரித்தல் வேண்டுமெனின், பிழை, பாடியதோ? திரிப்பதோ? அருகிவருவதேல் திரித்தல் சிறக்கும். நின்று என்னும் மீன்களின் வினை குடையும் என்னும் கோங்கையர் வினையைத் தழுவிற்றெனின் வரும் பிழை என்னையோ? 'வினை யெஞ்சுகிளவியும் வேறு பல் குறிய' என்பதனுரைக்கண், சேனு வரையர் எழுதியதுணர்க. 'மங்கலமென்ப மனைமாட்சி'

535. ஊரின் அருகிடமெல்லாம் குவளை மலர்களும் செந் நெற்பயிர்களும், அப்பயிரிடத்திற் பூத்த இலைகளையுடைய ஆம்பல்களும் நெய்தல்களும் மிக்குள்ளன. தெருக்களிலெல் லாம் தென்னையும் மாமரங்களும் ஓங்கி வளர்ந்துள்ளன.

கருவரை யனையமேனிக் கடல்வண்ண னவனுங்காணுன்
திருவரை யனையபூமேற் றிசைமுக னவனுங்காணுன்
ஒருவரை யுச்சியேறி யோங்கினு ரோங்கிவந்து
அருமையி லெளிமையாஞு ரவர்வலம் புரவனுரே. 536

வாளேயி றிலங்கநக்கு வளர்கயி லாயந்தன்னை
ஆள்வலி கருதிச்சென்ற வரக்கனை வரைக்கீழன்று
தோளோடு பத்துவாயுந் தோலேந்துட னழுந்தவூன்றி
ஆண்மையும் வலியுந்தீர்ப்பா ரவர்வலம் புரவனுரே. 537

திருச்சிற்றம்பலம்

தோட்டங்களிலெல்லாம் பழங்கள் விழும். ஆங்கே பறவைக் கூட்டங்கள் சேர்ந்து குழுமி ஒலித்து, இறகுகளை உலர்த்தி மருவுதலாகும் இடங்களைக் காட்டும் வளம் பொருந்திய திருவலம் புரத்து அடிகளார். இதிலும் வினை முடிபு 529, 531, 532, போல இடர்ப்பட்டுக்கோள்ளற்பாலதாயுளது. குழுமல், குழ்மல், கும்மல், கும்பல், குழுமியோலித்து - கும்மலித்து (மரூஉ), 'விளையாடி' என்பது சோற்போருளாகாது.

536. கருவரை - கரியமலை, அனைய - போன்ற வரை யனைய மேனி என்ற பின் கடல் வண்ணன் என்றது சிறப்புடைத் தாகாது. கருவரையுங்கடலும் போன்ற வண்ணன் 'கார் வண்ணன்'. 'கடல் வண்ணன்' எனல் வழக்கு. 'பச்சை மாமலைபோல் மேனி' என்றது மேனியின் பசுமைக் கோப்பு ரைத்தது 'கருவரை' என்றது பேருருவத்திற் கோப்பாயின் மேனி யேனலாகாது. கருமை - பேருமை, மலைமார்பிற்குவமஞ் சேய்தல் உண்டு. 'திருவரை அனைய பூ' என்றதும் சீரிதன்று. காணுன் காணுன் என்று தனித்தனி கூறி முடித்துப் பின், ஒரு மலையுச்சியிலேறி ஓங்கினுர். ஓங்கி வந்து அருமையில் எளிமையானுர் என்று சிவபிரானைக் குறித்ததும் போருந்தாது. பேரியபுராணத்தில் இவ்வலம்புரம் குறிக்கப்படாதது என்னையோ? இப்பதிகம் பிறர் பாடிச் சேர்த்ததோ?

537. வாள் - ஒளி, எயிறு - கோறைப்பல், இலங்க - வேளிர, நக்கு - சிரித்து, ஆள்வலி' - 'ஆண்மையும் வலியும்' வரை - அக் கயிலாயம். கயிலாயந்தன்னைச் சேன்ற அரக்கனை வரைக்கீழ் அழுந்தவூன்றித் தீர்ப்பார் வலம் புரவனுர் என்று முடித்துக்கோள்க.

# 56 திருவாவடுதுறை

## திருப்பதிக வரலாறு

திருநாவுக்கரசு நாயனுர் திருவீழிமிழலேயினின்று அரிதின்நீங்கி, பூவிற்பொலியும் புனற் பொன்னிக்கரைபோய்ப் பணிவாராய்ப், பொற்பு அமைந்த ஆவுக்கு அருளும் ஆவடுதண்டுறையார் பாதம் அணைந்து இறைஞ்சி, ஞானபோனகர்க்குச் செம்பொன் ஆயிரமும் பாவுக்கு அளித்த திறம் போற்றியது இத்திருப்பதிகம். (பெரிய, அப்பர், 293)

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

மாயிரு ஞாலமெல்லா மலரடி வணங்கும்போலும்
பாயிருங் கங்கையாளைப் படர்சடை வைப்பர்போலும்
காயிரும் பொழில்கள்சூழ்ந்த கழுமல வூரர்க்கம்பொன்
ஆயிரங் கொடுப்பர்போலு மாவடு துறையனாரே. 538

538. மாய்ஞாலம்வினைத்தொகை. 'மாயிருஞாலம்மறுவின்றி விளங்கப் பல் கதிர் விரிந்தன்றொருமுகம்' (திருமுருகாறு) இத் தொடரிலே யகரமெய் இடை நின்றதன் அமைதியை நன்னூலிலே (162) சங்கரநமச்சிவாயப் புலவர் உரையாலறிக. 'ஆயிருதிணை' 'இவன்' என்பனவும் இதுபோல்வன. பொருள் கொடுப்பவரை இருளுலகம் எல்லாம் போற்றுமென்பார், 'மாயிரு ஞாலமெல்லாம் வணங்கும்' என்றார். பொருட்காகச் செய்யாதன வெல்லாம் உலகம் செய்யுமென்பார் 'அடி வணங்கும்' என்றார். வாங்கும் வலியரை மெலியராக்கவும், மெலியரை வலியராக்கவும் வன்மையரேனும் கொடுப்பாராயின், அவரை மேன்மையாராக்கிப் பிறரால் போற்றப்படப் பண்ணவும் வல்லது பொருளாதலின் அது கொடுப்பாரடி வாங்குவார்க்கு 'மலரடி' யாகும் என்றார். இவ்வுலகியலை அருளியளிலும் பொருந்துமாறுணர்த்தினார். பாய்கங்கை; இருங்கங்கை. படர்ந்த சடையில் வைப்பர். காய்பொழில் இரும்பொழில் கழுமலவூரர்க்கு - திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார்க்கு, ஆயிரம் பொன் கொடுப்பர்.

மடந்தைபா கத்தர்போலு மான்மறிக் கையர்போலும்
குடந்தையிற் குழகர்போலுங் கோல்புலித் தோலர்போலும்
கடைந்தநஞ் சுண்பர்போலுங் காலனைக் காய்வர்போலும்
அடைந்தவர்க் கன்பர்போலு மாவடு துறையனாரே. 539

உற்றநோய் தீர்ப்பர்போலு முறுதுணை யாவர்போலும்
செற்றவர் புரங்கண்மூன்றுந் தீயெழச் செறுவர்போலும்
கற்றவர் பரவியேத்திக் கலந்துலந் தலந்துபாடும்
அற்றவர்க் கன்பர்போலு மாவடு துறையனாரே. 540

539. மடந்தை - உமாதேவியார், மான்மறி - மான் கன்று, திருக்குடந்தைக் குழகர், 'கோன்மலிந்த முவிலை வேற்குழகர் போலும் குடந்தைக் கீழ்க் கோட்டத் தெங்கூத்தனாரே' (6, 75, 1) கோல்புலியினது தோலையுடையவர் என்று விரிக்க. 'கோல்புலி' என்னும் வினைத்தொகை, 'செய்யும் செய்த என்னுங்கிளவியின் மெய்யொருங்கியலும் தொழில் தொகு மொழியும் மருவின் பாத்திய; புணரியல் நிலையிடையுணரத் தோன்றா' (தொல். எழுத்து. 482) என்றவாறு நின்றது பிரிந்து, தோலுக்கும் தோலர்க்கும் அடையாகாமை அறிக. கடைந்த - பாற்கடலில் அமரரும் அசுரரும் நின்று கடைந்த. அடைந்தவர் - புகலடைந்தவர், போலும் எல்லாம் ஒப்பில்போலி.

540. உற்ற நோய் :- சகசமாயும் ஆகந்துகமாயும் பொருந்திய மும்மல நோய், பிறவி நோய் முதலிய பலவும் கொள்க. உறுதுணை :- திருவருளன்றி ஏனைய (எல்லாம் இடையில் வந்துகழியும் உருத்துணையே அன்றி, அநாதியாக என்றும் உற்றதுணை ஆகா.) உயித்துணையே உறுதுணை. (வேறு யாரும் துணையாக உறுவாரை இல்லாதார்க்குத் திருவடியே துணையாக வுறுவன) 'உற்றாரிலாதார்க் குறுதுணையாவன' (895) செற்றவர் - பகைவர்; திரிபுரத்தசுரர். செறுவர் - அழிப்பர், கற்றவர் - கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிற்கக் கற்ற சிவஞானச்செல்வர். (கற்றவர் விழுங்குங் கற்பகக்கனி, கற்றல் கேட்டல் முதலிய ஐந்தும் உடையார் என்றலும், கற்றல் கேட்டலுடையார் பெரியார் கழல் கையால் தொழுதேத்த ..... 'மேவிய பெம்மான் இவன்' கலத்தல், உலத்தல், அலத்தல், பாடுதல், அறுதல் ஐந்தும் உடையார்க்கு அன்பர், கலத்தல் - உள்ளமும், உயிரும்

மழுவமர் கையர்போலு மாதவள் பாகர்போலும்
எழுநுனே வேலர்போலு மென்புகோண் டணிவர்போலும்
தொழுதெழுந் தாடிப்பாடித் தோத்திரம் பலவுஞ்சொல்லி
அழுமவர்க் கன்பர்போலு மாவடு துறையனூரே 541

போடியணி மெய்யர்போலும் போங்குவேண் ணூலர்போலும்
கடியதோர் விடையர்போலுங் காமனைக் காய்வர்போலும்
வேடிபடு தலையர்போலும் வேட்கையாற் பரவுந்தோண்டர்
அடிமையை *ஆள்வர்போலு மாவடு துறையனூரே. 542

உணர்வும் கலத்தல், உலத்தல் - பற்றுவற்றுதல், அலத்தல் - பாசப்பற்றுல் துயருறல், அறுதல் - பற்றுமுற்றும் அற்றொழிதல், 'அற்றவர்க்கற்ற சிவன் உறைகின்ற ஆலவாய்' இரண்டாவது திருமுறையில், பக்கம் 53 இல் யாம் எழுதியுள்ளவற்றை உணர்க. (2, 11, 4). திருவடியீற் கலந்து, நாக்கு வற்றி, இதுகாறும் வீண் போக்கிய காலங்குறித்துத் துயர்ந்து பாடும் பற்றற்ற பரமஞானிகளுக்கு அன்பர்.

541. மழுப்படை அமர்ந்த கையர். மாதுமைபாகர். கூரிதாயெழுந்த துணையுடைய முத்தலைவேலர். எலும்பையும் அணியெனக்கொண்டு அணிவர். மூலாதாரத்தினின்று தொழுது கொண்டு சுழுமுனை நாடி வழியாக மேலெழும் உயிர்ப்போடும் எழுந்து, உடலை எழுப்பித் தானும் எழுந்து ஆடியும் பாடியும் தோத்திரம் அனைத்தும் சொல்லியும் உருகியழும் அன்புருவானூர்க்கு அன்பர். 'கழலடி தொழுது கைகளால் தூமலர் தூவி நின்று அழுமவர்க் கன்பன் ஆனைக்கா அண்ணலே' (5 31. 7) 'திருநாமம் மகிழ்ந்துரைத்து அழவல்லார்களுக்கு அன்பு செய்து இன்போடும் வழுவிலா அருள் செய்தவன்' (5. 59. 7) 'தொழுதழு தாடிப்பாடும் அன்பலாற் பொருளுமில்லை ஐயன் ஐயாறனூர்க்கே' (399). 'அடிகளை நினைந்திட்டு அழுமலர்க் கண்ணிணை யடியவர்க்கல்லால் அறிவரிது அவன் திருவடியிணை யிரண்டும்' (7. 58. 10).

542. திருவெண்ணீற்றுப் பொடி பூசிய திருமேனியர் பவளம் போலும் சேம் மேனியிற் பால் போலும் வெண்ணீறு

* அளப்பர்.

வக்கா னுயிரைவவ்வக் கண்மலர் கொண்டுபோற்றச்
சக்கரங் கொடுப்பர்போலுந் தானவர் தலைவர்போலும்
துக்கமா மூடர்தம்மைத் துயரிலே வீழ்ப்பர்போலும்
அக்கரை யார்ப்பர்போலு மாவடு துறையனாரே. 543

விடைதரு கொடியர்போலும் வெண்புரி நூலர்போலும்
படைதரு மழுவர்போலும் பாய்புலித் தோலர்போலும்
உடைதரு கீளர்போலு முலகமு மாவர்போலும்
அடைபவ ரிடர்களைக்கு மாவடு துறையனாரே. 544

பூசியவர். வெண்மை பொங்கும் பூணு நூலணிந்த வேத முதல்வர். (544) விரைந்து செல்லும் ஒப்பற்ற விடையூர்பவர். கருவேளை எரியுண்ணச் செய்தவர். வெடித்தலைப்பட்ட தலைகளை மாலையாகப் பூண்டவர். பிரம கபாலமுமாம். தலை மாலை தலைக்கணிந்தவர் சிவபிரானார். வேட்கை - சிவபக்தி, அடிமையை அளத்தல் :- அவரவர் அன்பிற்குத் தக அருளல்.

543. வக்கரன் :- ஓர் அசுரன். அவனைக் கொல்ல வேண்டி, சக்கிராயுதம் பெற ஆயிர மலருள், குறைந்த ஒன்றற் கீடாகக் கண் மலர் கொண்டு திருமால் போற்றி வழிபட்டமையால் அப் படையைக் கொடுத்தருளினார் திருவேகம்பனார். தானவர் - தானம் புரிவோர். சீவபோதம் அற்றுத் தானான சிவபோதத்தர். 287, 369 374 காண்க. அசுரர் தலைவர் எனல் சிறப்பின தன்று. வானவர் தலைவர் என்றது போலத் தானவர் தலைவர் என்றதாக் கொள்வார் கொள்க. துக்கத்தையே அடையும் மகா மூடர்களை அத் துக்கம் விளைக்கும் பிறவித் துயரிலே விழுத் துவர். (மோட்ச சுகத்தையே நாடிப் பெற முயலும் மகா ஞானிகளை அச் சுகத்தை வளர்க்கும் வீட்டின்பத்திலே அழுத்துவர்). அக்குமணியை அரையிற் கட்டுவர். ' அக்கு ஒட்டினைச் சேய் அரை கரங்கொண்டார்க்கு முலைச் சுவடு நல்குந் திருக்காமக் கோட்டியம்மை ' (காஞ்சிப் புராணம்)

544. விடையுரு எழுதிய கொடி எடுத்தவர். வெண்புரி நூல் பூண்டவர். ' பொங்கு வெண் ணூலர் ' மழுப் படையேந் தியவர் ' மழுவமர் கையர் ' (542) பாய் புலித் தோலுடுத்தவர்.

முந்திவா னோர்கள்வந்து முறைமையால் வணங்கியேத்த
நந்திமா காளரென்பார் நடுவுடை யார்கணிற்பச்
சிந்தியா தேயொழிந்தார் திரிபுர மெரிப்பர்போலும்
அந்திவான் மதியஞ்சூடு மாவடு துறையனாரே. 545

பானம ரேனமாகிப் பாரிடந் திட்டமாலும்
தேனமர்ந் தேறுமல்லித் திசைமுக முடையகோவும்
தீனரைத் தியக்கறுத்த திருவுரு வுடையர்போலும்
ஆனரை யேற்றர்போலு மாவடு துறையனாரே. 546

'கொல்புலித் தோலர்'க்கு உரைத்தாங்கு உரைத்துக்கொள்க. 'சடையும் பிறையும் சாம்பற் பூச்சும் கீளுடையும் கொண்ட உருவம்'. 'எல்லாவுலகமும் ஆனாய்நீயே'. புகலடைந்தவரை இடர் தீர்த்தாட்கொள்ளும் அருளுருவினர். 376. பா. காண்க.

545. வானவர்கள் முந்தி வந்து முறைமையுடன் வணங்கி யேத்தத் திரிபுரம் எரித்தார். நந்திமாகாளர் என்பவர் நிற்ப எரித்தார். சிந்தியாதே ஒழிந்தவர்களுடைய திரிபுரத்தை எரித்தார். வானோர் ஏத்த, நந்திமாகாளர் நிற்ப எரிப்பர் என்க. சிந்தியாதே யொழிந்தது திரிபுரத்தசுரர்வினை. நடுவுடைமை - செம்மையுடைமை. 'செப்பமுடைமை' 'திருநின்ற செம்மை' சிவபாதங்களை நெஞ்சின் நடுவுடையவர் எனலும் பொருந்தும். 'நாட்டினேன் நின்றன்பாதம் நடுப்பட நெஞ்சினுள்ளே' என (231) முன்னுரைத்தருளியதுணர்க. நந்தி, மகாகாளர் என்பார் சிவகணங்கள். சிவ (கிரியா) பூசை புரிவார் அவரையும் வழிபடுவர்.

546. பான் - பத்துத் தோற்றம் (தசாவதாரம்). ஆகுபெயர். அவற்றுள் ஒன்றாக அமர்ந்த ஏனம். பான் அமர் ஏனம் வராகாவதாரம், ஒருபான், ஒன்பான் என்பவற்றுள், 'பஃது' பான் எனத் திரிந்தவாறறிக. பால்-பிரிவு, உயர்திணைப்பால், அஃறிணைப்பால், ஆண்பால் பெண்பால் முதலியன. வகை. நமர் - நம்மினத்தவர். திருமாலும் நான்முகனும் நம்மைப்போலச் சகலர், 'நம்மவர் அவரே மூவரென்றே எம்பிரானொடும் எண்ணி விண்ணாண்டு மண்மேல் தேவரென்றே, இறுமாந்தென்ன பாவம் திரித(ர்)வரே

பார்த்தனுக் கருள்வர்போலும் படர்சடை முடியர்போலும்
ஏத்துவா ரிடர்கடீர வின்பங்கள் கொடுப்பர்போலும்
கூத்தராய்ப் பாடியாடிக் கொடுவலி யரக்கன்றன்னை
ஆர்த்தவா யலறுவிப்பா ராவடு துறையனாரே. 547

திருச்சிற்றம்பலம்

(திருவாசகம்) வகையால் நம்மவர் எனலுமாம், பானமர் என்ற தற்கு வேறு பொருளுமுளவேற் கொள்க. பால்நமர் - வகையால் நமருள், ஏனம் பன்றி, பார் - நிலம், இடந்திட்ட - பேர்த்திட்ட, தேன் - வண்டு, அமர்ந்து - விரும்பி, அல்லி - அகவிதழ்களைக் குறித்துத் தாமரைக்கு ஆகிய பெயர். நாற்றிசைக் கோன்முய முகத்தன். கோன்மை அவனது தத்துவ புவனத்தெல்லையள வுடையது. தீனர் - முழுமுதல்வனைக் காணுஞ் செல்வத்தை அடையாத வறியர் ; துயராளர். காணமாட்டாத் துயரத்தினர். தியக்கு - கலக்கம். ஆன்+நரை+ஏற்றனர் - ஆன் வெள்ளே றூர்பவர். 'நரைவெள்ளேறு', ஏற்றர் - ஏறுடையவர்.

547. பார்த்தன் - அருச்சுனன், படர்ந்த சடைமுடியுடை யவர், ஏத்துவார் இடர்கள் தீர இன்பங்கள் கொடுப்பர்:- 225, 234, 242, 247 வேண்டுவார் வேண்டுவதே ஈதலில் அவரவர் இடர் தீர்த்தலும் அடங்கும், கூத்தரானார். பாடினார், ஆடினார், கொடியவலியுடைய இராவணனை அலறச் செய்தார. ஆர்த்தல் - ஒலித்தல், ஆரவாரஞ் செய்தல், ஆர்த்தவாய் பத்தும் அலறு வித்தார். அலறல் - அழுதல்.

திருவான்மி யூர்மருந்தைச் சேர்ந்துபணிந் தன்பினொடும்
பெருவாய்மைத் தமிழ்பாடி யம்மருங்கு பிறப்பறுத்துத்
தருவார்தங் கோயில்பல சார்ந்திறைஞ்சித் தமிழ்வேந்தர்
மருவாரு மலர்ச்சோலை மயிலாப்பூ வந்தடைந்தார்

வண்டோங்கு செங்கமல மெனவெடுத்து மனமுருகப்
பண்டோய்ந்த சொற்றிருத்தாண் டகம்பாடிப் பரவுவார்
விண்டோய்ந்த புனறகங்கை வேணியார் திருவுருவங்
கண்டோங்கு களிசிறப்பக் கைதொழுது புறத்தணைந்தார்.

# 57 திருவாவடுதுறை

## திருப்பதிக வரலாறு

முதன் முறை துறைசையிற் போந்து பாடியருளியது இத் திருப் பதிகம். அடுத்த முறையிற் போந்தபோதுதான் 'மாயிரு ஞால மெல்லாம் மலரடி வணங்கும் போலும் என்னுந் தொடக்கத்துத் திருப்பதிகம பாடியருளியதாகக் கூறுப. (புராணம், 190)

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

மஞ்சனே மணியுமானாய் மரகதத் திரளுமானாய்
நெஞ்சுளே புகுந்துநின்று நினைதரு நிகழ்வினானே
துஞ்சும்போ தாகவந்து துணையெனக் காகிநின்று
அஞ்சலேன் றருளவேண்டு மாவடு துறையுளானே. 548

548. மஞ்சன் - மைந்தன் என்பதன் மரூஉ. போலி என லும் ஆம், ஆனாய் என்ற இரண்டும் விளி, மணி - மாணிக்கம். மரகதத்திரள் - மரகதக்கோத்து; ஆகுபெயராய் ஒளித் திரளுமாம். நெஞ்சுளே புகுந்து இன்று நினைதரு நிகழ்வினானே :- நெஞ்சு நினைத்தற்கருவி அதனுள்ளே புகுந்து நிற்றல் நினைப்பித்தற்கு. நினைவைத் தருதல் நினைப்பிப்போன் நிகழ்ச்சி. அந்நிகழ்ச்சியை யுடையோனை நிகழ்வினான் என்றருளினார். நெஞ்சினைத் தூய்மை செய்து நினையுமா நினைப்பியாதே வஞ்சமே செய்தி ' (237) ' துஞ்சும்போதும் துயிலின்றி யேத்துவார் ' (1058)க்குத், துஞ் சும்போதும் சுடர் விடுசோதியை நெஞ்சுள் நின்று நினைப்பிக்கும் நீதியை ' (1991) என்றருளியதுணர்க. அதனை உணர்ந்த அநுப வத்தால், அந்நிலை, இடையீடுபடாதவாறு, துஞ்சும் போதாக எனக்குத் துணையாகி வந்து நின்று அஞ்சல் என்று அருள வேண்டும் என்று வேண்டினார் பிறர்க்குத் துணையாகிய வரலாறு பல அறிவேன். அதனை நான் அனுபவத்தில் அறியக்காட்டு என்பார் ' எனக்கு ' என்றார்.

நானுகந் துன்னைநாளும் நணுகுமா கருதியேயும்
ஊனுகந் தோம்புநாயே னுள்ளுற வைவர்நின்றார்
தானுகந் தேயுகந்த தகவிலாத் தொண்டனேனான்
ஆனுகந் தேறுவானே யாவடு துறையுளானே. 549

கட்டமே வினைகளான காத்திவை நோக்கியாளாய்
ஒட்டவே யோட்டிநாளு முன்னையுள் வைக்கமாட்டேன்
பட்டவான் றலைகையேந்திப் பலிதிரிந் தூர்கடோறும்
அட்டமா வுருவினானே யாவடு துறையுளானே. 550

549. உகந்து - விரும்பி, உயர்ந்து, நான் நாளும் உன்னை உகந்து நணுகுமாறு கருதியுங்கூட, நாயேன் (மல நடைப் பயிற்சி மிகுதியால்) ஊனுடம்பை உகந்து ஓம்புகின்றேன். ஓம்பும் நாயேனது உள்ளே உற ஐவர் நின்றார். அதுவே ஏது உன்னை உகத்தலின் நீங்கி ஊனை உகத்தற்கு. பிறவிதோறும் ஐவர் உகந்ததையே உகந்து பயின்றுவந்து, உன்னை உகந்து நணுகுந்தக வில்லாதேன் நான். உகந்ததே என்றது ' உகந்தே ' என நின்றது. ' தான் ' என்பது அசை. நின்றார்தாம் எனல் வேண்டுவது எதுகை நோக்கி. நின்றார்தான் எனலாயிற்று என்றலுமாம். 369. குறிப்பு நோக்குக. ' தாமார்க்குங் குடியல் லாத் தன்மையான் ' என்புழித் ' தாம் ' என்றது போல்வது இது. அது ' தாம் '. இது ' தான் '. தான் :- அவர் என்னும் சுட்டுப் பொருட்டு உகந்ததே உகத்தல் தகவிலாதது. கான்றசோறென அருவருத்தல் செய்யாமையே அது. ' காலாக்கினி புவனமுதல் அநாசிருத புவனம் ஈருயுள்ள எவ்வகைப் பட்ட புவனமும் இதற்குமுன் அனுபவித்துக் கழித்தமையிற் கான்றசோறெனக் கண்டு அருவருத்துவிட்டு, அறுவகை அத்துவாவுட்பட்ட மூவகைப் பிரபஞ்சமும் காரண ரூபத்திற் சிறிதும் காணப்படா மையாற் பித்திகை வடிவம் காண்பார்க்குக் காணப்படாதாய் அதன்கண் மறைந்த சித்திர வடிவம்போல முழுப்பொய் எனக் கண்டு, அவ்வாறு கண்ட காட்சி சலியாதிருத்தல் வேண்டும் (சித்தியார். சூ. 9:- 6 உரை) அச் சலித்தலுக்கு அடிப்படை ஐவர் குறும்பேயாகி அவர் உகந்ததே உயிர் உகத்தலாகிய தகவன்மை. ஆண் - எருது உகந்து - உயர்ந்து; விரும்பி என்றலுமாம்.

550. கட்டமே ஆன வினைகள் இவை காத்து நோக்கி ஆளாய் என்க. கட்டம் :- வடசொற்றிரிபு (551) வினைகளா

பெருமைநன் றுடையதில்லை யென்றுநான் பேசமாட்டேன்
ஒருமையா லுன்னையுள்கி யுகந்துவா னேறமாட்டேன்
கருமையிட் டாயவூனைக் கட்டமே கழிக்கின்றேனுன்
அருமையா நஞ்சமுண்ட வாவடு துறையுளானே. 551

துட்டனாய் வினையதென்னுஞ் சுழித்தலை யகப்பட்டேனைக்
கட்டறு வைவர்வந்து கலக்காமைக் காத்துக்கோள்வாய்
மட்டவிழ் கோதைதன்னை மகிழ்ந்தோரு பாகம்வைத்து
அட்டமா நாகமாட்டு மாவடு துறையுளானே. 552

இவை எனலுமாம் கட்டம் மே - துன்பம் மேவுதற்குக் காரண மான (வினைகள்). காத்து - சாராதவாறு தடுத்து. நோக்கி - அருட்கண்ணாற் பார்த்து. ஒட்டவே - உயிரோடு நீ ஒட்டும் படியே. ஒட்டி - நான் உன்னோடு ஒட்டி, 'உணரப்படுவாரோடு ஒட்டி வாழ்தி' 'ஒட்டியாட்கோண்டு போயோளித்திட்டவுச்சிப் போதன்' (7, 59 10) நாளும் என்னுள்ளே உன்னை வைக்க மாட்டேன். பட்டதலை ; வான்தலை. 'வேடி படுதலையர்' 542. குறிப்பு நோக்குக. பிரமகபாலம். பலிக்காகத் திரிந்து. ஊர்கள் தோறும் திரிந்து. கள்ளிறுதோறு இரண்டுள் ஒன்று பன்மை குறிக்கப்போதும் ஆயினும் பின்னது ஒவ்வோருரையும் குறிக்க நின்றது அட்டமாவுரு - அட்டமூர்த்தம். 'அட்டமாமலர்கள்' (405) 'அட்டமாநாகம்' ( 52) என்று பாடம் போல்வது. மாவுரு - பெருவடிவம். மே:- முதனிலைத்தோழிர்பெயர்.

551. பெருமை நன்று (- பெரிது) உடையதில்லை என்று (ஒருமுறையேனும்) உன் திருத்தலம என்று பேசிச் சிவநல்வினை தேடிக்கோள்ளமாட்டேன். உடையது இல்லை எனல் சிறவாது. ஒருமை நேஞ்சோருமையுடன், உன்னை நினைத்து, உயர்ந்து, வீட்டுவகை அடையமாட்டேன். கருமை - 'காரிட்ட ஆணவக் கருவறை' (தாயுமானவர்) கருமை இட்டு ஆயஊன் - ஆணவச் சார்பால் எய்திய ஊனுடம்பு. கட்டமே - கட்டத்திலே. நான் கழிக்கின்றேன். உண்ணுதற்கு அருமையாம் நஞ்சத்தை (எளி தாய்) உண்ட.

552. துட்டன் - கோடியன். வினை' என்னும் சுழியுள் அகப்பட்ட என்னை 'பிறவிச் சுழி' (935) கட்டறுக உள்ள

காரழல் கண்டமேயாய் கடிமதிற் புரங்கண்மூன்றும்
ஓரழ லம்பினாலே யுகைத்துத்தீ யெரியமூட்டி
நீரழற் சடையுளானே நினைப்பவர் வினைகளைப்பாய்
ஆரழ லேந்தியாடு மாவடு துறையுளானே. 553

செறிவிலேன் சிந்தையுள்ளே சிவனடி தெரியமாட்டேன்
குறியிலேன் குணமொன்றில்லேன் கூறுமா கூறமாட்டேன்
நெறிபடு மதியொன்றில்லே னினையுமா நினையமாட்டேன்
அறிவிலே னயர்த்துப்போனே னாவடு துறையுளானே. 554

...... ........... ........... ... . . . . . . . . .....

என்னை ஐவர் வந்து கலக்காதவாறு காத்து, ஆளாக்கிக்கொள்வாய். கட்டன் - பாசத்தை உடையவன் (பசு) 'கட்டனேன் பிறந்தேன் உனக்காளாய்' (7, 54, 2) கட்டு - பொய். கட்டன் - பொய்யன் எனலும் ஆம். கட்டனல்லன் எனில், ஐவர் கலக்க மாட்டார். மட்டு - தேன். கோதை - கூந்தல்; மாலை; மாது; மாலையைச் சூடிய கூந்தலையுடைய மாது என முப்பொருட்கும் பொதுவாய் நின்றதொரு பெயர். ஒரு பாகம் மகிழ்ந்து வைத்து, அட்டநாகம், மாநாகம், எட்டுப் பாம்பு ஆட்டும் இறைவன் 'புற்றிலாடர வாட்டும் புனிதனார்' (5, 87, 3) 'அட்டபுயங்கப் பிரான்' புயங்கம் - பாம்பு. 'கரிய பாம்பும் பிடித்தாடி'

553. கார் அழல் - கரிய தீப்போலும் வெய்ய நஞ்சம். அழல்போலும் நஞ்சு, உவமவாகுபெயர், கண்டம் - திருக்கழுத்து, மேயாய் - பொருந்தியவனே; விரும்பி (யருந்தி)யவனே, கடி - காவல், ஓர் அம்பு, 'ஈரம்புகண்டிலம் ஏகம்பர் தம்கையில் ஓர் அம்பே முப்புரம் உந்தீபற; ஒன்றும் பெருமிகையுந்தீபற' (திருவாசகம்) அழல் அம்பு - தீக்கணை (1. 11. 6; 2 - 50. 1; 6. 86. 10; 7. 16. 5). உகைத்து - செலுத்தி. நீர் - கங்கையைச்சூடிய, அழற்சடை:- உவமத்தொகை. அழல்போலும் ஒளிர் செஞ்சடை. நினைப்பர் - இடைவிடாது தியானம்புரிபவர். ஆர் அழல் - பொறுத்தற்கரிய தீ, பண்புத்தொகை. ஆர்ந்த அழல் என வினைத்தொகையுமாம். அழலை ஏந்தி ஆடும்:- 'தீத்திரள் கங்கையேந்தி நின்றார்' (5. 26. 2)

554. சிந்தையுள்ளே செறிவிலேன் :- 'நெறியும் அறிவும் செறிவும் நீதியும் நான் மிகப்பொல்லேன்' (7. 73. 4) சீலம்

கோலமா மங்கைதன்னைக் கொண்டொரு கோலமாய
சீலமே யறியமாட்டேன் செய்வினை முடிநின்று
ஞாலமா மிதனுளென்னை நைவியா வண்ணநல்காய்
ஆலமா நஞ்சமுண்ட வாவடு துறையுளானே. 555

. .. .. . .. . . . . .. . . ..... ..

இன்றி நோன்பின்றிச் செறிவே இன்றி அறிவின்றி' 'செறிவுண்டேன் மனத்தாற்றெளிவுண்டேற்றேற்றத்தால்' (7. 59. 5) யோகம் அந்தக்கரண சம்பந்தம் உடையது. ஞானவத்தையெல்லாம் உணர்வின்கண் நிகழ்வன. இருவேறவத்தையும் ஒன்றென்றுணர்ந்து மயங்கியிடர்ப்படுவோர் பலர். யோகிற்றருவதோர் சமாதிதானும் தாழ்ந்து பின் சனனஞ்சாரும்' சித்தியார். சூ. 4 :- 34) என்றதன் உரையில், 'இந்த யோகாவத்தையைத் தானே மீட்சியில்லாததாகிய ஞானவத்தைபோலும் எனக் கொண்டு மயங்குவார்க்கு அங்ஙனம் மயங்காமைப் பொருட்டு இதனை அதனோடு ஒப்பவைத்து ஈண்டுக் கூறினர்'. 'சகலத்திற் சுத்தம்' (சிவஞா. மாமுனிவர் உரை). சிவனடி - திருவருள். குறி - உயிர்க்குச் செல்வழி முடிவாகிய இலக்கு. இது மெய்ந்நெறிக்குறி. பொய்ந்நெறிக்குறிபோல இதுவும் பல்வேறாகும். ஆயினும் சைவ சித்தாந்தமார்க்க லட்சியமே ஈண்டுக் குறி எனப்பட்டது. 'குறிக்கொளிலாது கெட்டேன்' (657) குணம் ஒன்று - அருளையடைதற்குரிய பண்புகளுள் ஒன்று கூறும் ஆ(று) - வேத சிவாகமங்களிற் சொல்லும் வண்ணம். கூற - உன் புகழ் சொல்ல, நெறிபடுமதி - திருவருணெறியிற் பொருந்தும் அறிவு, மதிநுட்பமுமாம். நினையுமா(று) - சிவாகம விதிப்படி தியானம் புரியும் முறைமை. அறிவிலேன் - நூலறிவு இல்லேன். அயர்ந்து - இளைத்து. 'மதிநுட்பம் நூலோடுடையார்க்கு அதி நுட்பம் யாவுள முன் நிற்பவை' (குறள்) என்புழிப் போல, மதிநுட்பத்தை 'நெறிபடுமதி' என்றும் நூலை 'அறிவு' என்றும் குறித்ததாகக் கொள்ளலாம். 'போனேன்' :- போதல் ஈண்டு மெய்வினையன்று, அறிவின் நிலைமை.

555. கோலம் - அழகு. மாமங்கை - பெரியநாயகி; ஒப்பிலாமுலையம்மை, ஒருகோலம் - ஒப்பற்ற அம்மையப்பர் திருக்கோலம், சீலம் - தன்மை, 'சீலமோ உலகம் போலத் தெரிப்பரிது'. (சித்தியார்), செய்வினை முடி நின்று ஞாலம் ஆம்

நெடியவன் மலரி னானும் நேர்ந்திரு பாலுநேடக்
கடியதோ ருருவமாகிக் கனலேரி யாகிநின்ற
வடிவின வண்ணமென்றே யென்றுதாம் பேசலாகார்
அடியனே னெஞ்சினுள்ளா ராவடு துறையுளானே. 556

இதனுள் என்னை நைவியாவண்ணம் நல்காய் - யான் செய்த இருவினையும் பந்தித்து நின்று பிரபஞ்சமாகிய இப்பாசத்துள் என்னை அழுத்தி வருத்தப்படுத்தாதவாறு காத்தருள்வாய். ஆல மாம் நஞ்சு - ஆலகாலவிடம், நஞ்சு பலவற்றுள் ஆலகால மென்பது இஃது என்று பிரித்துணர்த்திய அடைமொழி.

556. நெடியவனும் மலரினானும். நேர்ந்து - உடன்பட்டு, பால் - (மலரோன் மேலும் மாயோன் கீழும் ஆகச் சென்ற)பக்கம். நேட (தேட) நீட என்பதன் மரூஉ. கடியதோருருவம் :- ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ்சோதியால் எய்தும் கடுமை யுடையதோருட்குடைமை கனலும் எரிவடிவம் உருவும் வடிவும் வேறுபட்டன. ‘ பல்வகை வடிவு.... . பொருட்குணம் ’ (நன்னூல். 454) ‘ உருவுட்காகும் ’ (தொல்காப்பியம், சொல், உரி. 4) ‘ ஒப்பும் உருவும் வெறுப்பும் கற்பும் ஏரும் எழிலும் சாயலும் நாணும் மடனும் நோயும் வேட்கையும் நுகர்வும் நெஞ்சு கொளின் அல்லது காட்டலாகாப் பொருள ’ என்றார் (ஷை பொரு ளியல் இறுதி). வண்ணம் வடிவு அளவு சுவைஎன்னும் பண்பின் வகையுள் ஒன்றாய்க்கட்புலனாவது வடிவு, கட்புலனாகாது நெஞ்சு கொளற்பாலது உருவு. எழுத்தின் ஒலியுரு, வரிவடிவு இரண்டும் பாயிரத்தினுரையில் நச்சினார்க்கினியரால் விளக்கப்பட்டமை உணர்க. வண்ணம் வடிவை இடமாகக்கொண்டு கட்புலனாவது. உருவை நிலைக்களமாகக்கொண்டு நெஞ்சு கொளற்பாலதாம் வண்ணமும் உண்டு. ‘ இன்னவுருவென்றறிவொணாதான்றான் காண் ’ (6, 49, 8) ‘ அவன் இவன் என்று யாவர்க்கும் அறிய வொண்ணாச் செம்பொன்காண் ’ (6. 85. 3) ‘ இப்படியன் இந் நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்று எழுதிக் காட்டொணாதே ’ (6, 97, 10) என்றருளியவை வடிவு வண்ணங் களைப் பேசலாகாமை யுணர்த்தும். என்றே என்று என்றது ‘ ஒன்றே என்று ’ என்றிருந்ததோ ? பேசலாகாதவராயினும், அடிமைத் திறமுடையார் நெஞ்சினின்றகலார் என்பார், அடிய

மலைக்குநே ராயரக்கன் சென்றுற மங்கையஞ்சத்
தலைக்குமேற் கைகளாலே தாங்கினான் வலியைமாள
வுலப்பிலா விரலாலூன்றி யோறுத்தவற் கருள்கள்செய்து
அலைத்தவான் கங்கைசூடு மாவடு துறையுளானே. 557

திருச்சிற்றம்பலம்

னேன் நெஞ்சினுள்ளார்' என்றநுபவத்தை யுணர்த்தினர். 'பேச லாகார்' என்பது பேசுதலுக்கு அகப்படாதவர்; சிந்தையும் மொழி யுஞ்செல்லாத நிலைமையர் என்னும் பொருட்டாம். பேசலாகாது என்ற வழக்கின் பொருளதுமாகும்.

557. மலைக்கு - திருக்கைலையங் குன்றத்துக்கு. சென் றுற - போய் நிற்க. மங்கை - உமாதேவியார். தலைக்குமேற் கைகளாலே தாங்குதல் :- மலையைக் கைகளால் எடுத்துத் தலைக்குமேலே தூக்கிப் பிடித்துத் தாங்குதல். தாங்கினனது வலியை, மாளஊன்றி ஒறுத்து, செய்து சூடும் ஆவடு துறை யுளான் என்க. உலப்பு இலாவிரல் :- அழிவிலாத திருக்காற் பெருவிரல். 'உலப்பிலாவொன்றே உணர்வு சூழ் கடந்ததோ ருணர்வே', அலைத்த கங்கை. வான் (ஆகாத) கங்கை.

முந்திமூ வேயிலெய்த முதல்வனு ரேனவேடுத்துச்
சிந்தைகரைந் துருகுதிருக் குறுந்தோகையுந் தாண்டகமுஞ்
சந்தநிறை நேரிசையு முதலான தமிழ்பாடி
யெந்தையார் திருவருள்பெற் றேகுவார் வாகீசர்.

திருவாலங் காடுறையுஞ் செல்வர்தா மெனச் சிறப்பி
னொருவாத பெருந்திருத்தாண் டகமுதலா மோங்குதமிழ்ப்
பெருவாய்மைத் தொடைமாலை பலபாடிப் பிறபதியு
மருவார்வம் பெறவணங்கி வடதிசைமேல் வழிக்கொள்வார்.

காதணிவெண் குழையானைக் காளத்தி மலைக்கொழுந்தை
வேதமொழி மூலத்தை விழுந்திறைஞ்சி யெழுந்துபெருங்
காதல்புரி மனங்களிப்பக் கண்களிப்பப் பரவசமாய்
நாதனை யேன் கண்ணுளா னேனுந்திருத்தாண் டகநவின்றார்.

# 58 திருப்பருப்பதம்

## திருப்பதிக வரலாறு

விஞ்சையர், விண்ணவர், இயக்கர், சித்தர், கின்னரர், நாகர், கந்தர்வர், ஞானிகள், மோனிகள் என்னும் திறத்தர் அனைவரும் நாள் தோறும் வந்து நம்பரை இறைஞ்சி நலம் பெறும் தானம் ஆன திருச் சிலம்பை வணங்கிச் சாற்றியருளிய வண்டமிழ் இத் திருப்பதிகம். (புராணம் 349)

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

கன்றினார் புரங்கண்மூன்றுங் கனலெரி யாகச்சீறி
நின்றதோ ருருவந்தன்னு னீர்மையு நிறையுங்கொண்டு
ஒன்றியாங் குமையுந்தாமு மூர்பலி தேர்ந்துபின்னும்
பன்றிப்பின் வேடராகிப் பருப்பத நோக்கினாரே. 558

558. கன்றினார் - சினந்தபகைவர். கனலும் எரி, சீறி நின்றதோர் உருவம். நீர்மை - குளிர்ந்த இயல்பு, நீர்மை ஒளியு மாம். நிறை - அருளால் நிறுத்தும் ஆற்றல், 'நிறை - ஐம் பொறிகளையும் அடக்குதல்' (திருக்கோவையார் 31) என்பது ஈண்டுப் பொருந்தாது. ஆங்கு உமையும் தாமும் ஒன்றி, ஊர் (தோறும்) பலி தேர்ந்து. அருச்சுனன் பொருட்டுப் பன்றிப் பின் வேடரான வரலாறு முன்னும் பின்னும் உண்மை அறிக. பன்றியது பின் 'பன்றிப் பின்':- 'இகரவீற்றுப் பெயர் திரிபிட னுடைத்தே' (தொல். தொகைமரபு 12) 'இகரவிறுதிப் பெயர் நிலை முன்னர் வேற்றுமையாயின் வல்லெழுத்துமிகுமே' (ஷை உயிர் மயங்கு, 33) உருபியலில் இகரவீறு கூறப்பட்டிலது. (ஷை இயல் 39. 40. 42. 45. 46 உருபிற்குச் சாரியை கூறுவன) இப் பருப்பதம் அருச்சுனம் (தலைமருது) ஆதலின், அருச்சுனனை நினைந்து, ஆண்டவனைப் பாடியதாயிற்று.

கற்றமா மறைகள்பாடிக் கடைதோறும் பலியுந்தேர்வார்
வற்றலோர் தலைகையேந்தி வானவர் வணங்கிவாழ்த்த
முற்றவோர் சடையினீரை யேற்றமுக் கண்ணர்தம்மைப்
பற்றினார்க் கருள்கள்செய்து பருப்பத நோக்கினாரே. 559

கரவிலா மனத்தராகிக் கைதொழு வார்கட்கென்றும்
இரவுநின் றெரியதாடி யின்னருள் செய்யுமெந்தை
மருவலார் புரங்கண்மூன்று மாட்டிய வகையராகிப்
பரவுவார்க் கருள்கள்செய்து பருப்பத நோக்கினாரே. 560

559. கற்றமாமறைகள்:- முதல்வன் 'கல்லாதன எல்லாம் கற்பித்தான்' 'கலைஞானங் கல்லாமே' கற்பித்தான் ஆதலின் அவன் ஒன்றும் கற்றலின்று எனினும், தான் கற்பிக்கத் தன்னைத் தம்முட்கொண்டு உயிர்கள் கற்குந் தொழிலைத் தனதாக்கிக் கோடலால் கற்றானுமாவன். 'கற்றானைக் கங்கைவார் சடையான் றன்னை' 'அடைவார் தம் பாவம் போக்கக் கற்றவன்' ஆதலால் தனக்குங் கற்றற்றொழில் உண்டெனலுமாம். கடை - வாயிற் கடை. வற்றல் தலை. ஓர் வற்றற்றலை, 'வற்றலோடு கலனாப்பலி தேர்ந்து எனதுள்ளம் கவர்கள்வன்'; ஓர் சடையிற் கங்கை நீரை முற்ற ஏற்ற முக்கண்ணர். வணங்கி வாழ்த்த ஏற்ற முக் கண்ணர். வாழ்த்த முற்ற ஏற்ற கண்ணர். பற்றினார் - பற்று விடற்குப் பற்றற்றான் பற்றினைப்பற்றியவர்.

560. கரவு - கரத்தல்; குறை காட்டல்; உள்ளதை மறைத்தல், கரத்தல் ஒருவற்கு வேண்டுவதொன்று அன்மையின் நோய் (இடும்பை) ஆகும் என்பது (திருக்குறள் 1056 உரை) உணர்க. 'கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால் விரவாடும் பெருமானை' (62). 'கைதொழுவார்க்கு என்றும் இரவு நின்று எரியது ஆடி இன்னருள் செய்யும் எந்தை' என்றதில் உள்ள உண்மையைக் கூர்ந்துணர்வர்க்கு 'இருள் அடராது உள் உயிர்க் குயிராய்த் தெளிக்கும் அறிவு திகழ்ந்துளது' (கோடிக்கவி) என்னும் சைவ சித்தாந்தச் செம்பொருட்டுணிவுகளுள் ஒன்று தெளிவுறும். மருவலார் - பகைவர். மாட்டிய - எரிகொளுத்திய; மாளச் செய்த, 'மாள்' தன்வினைமுதனிலை, 'மாட்டு' பிறவினை முதனிலை, 'கோள்' 'கோட்டு'; 'விள்' விட்டு 'பூண்' 'பூட்டு'. பரவுவார் - வாழ்த்துவார்.

கட்டிட்ட தலைகையேந்திக் கனலேரி யாடிச்சீறிச்
சுட்டிட்ட நீறுபூசிச் சுடுபிணக் காடராகி
விட்டிட்ட வேட்கையார்க்கு வேறிருந் தருள்கள்செய்து
பட்டிட்ட வுடையராகிப் பருப்பத நோக்கினரே. 561

கையராய்க் கபாலமேந்திக் காமனைக் கண்ணாற்காய்ந்து
மெய்யராய் மேனிதன்மேல் விளங்குவெண் ணீறுபூசி
உய்வரா யுள்குவார்கட் குவகைகள் பலவுஞ்செய்து
பையரா வரையிலார்த்துப் பருப்பத நோக்கினரே. 562

வேடராய் வெய்யராகி வேழத்தி னுரிவைபோர்த்து
ஓடரா யுலகமெல்லா முழிதர்வ ருமையுந்தாமும்
காடராய்க் கனல்கையேந்திக் கடியதோர் விடைமேல்கொண்டு
பாடராய்ப் பூதஞ்சூழப் பருப்பத நோக்கினரே 563

561. கட்டிட்ட - கட்டிய. எரியில் ஆடி, சுட்டிட்ட - சுட்ட. சுடுகாடு எனினும் காட்டைச் சுடுவதில்லை, பிணத்தையே சுடுப. 'சுடுபிணக்காடு' என்றலே சிறந்தது. அக்கருத்தில் வழங்குவது 'சுடுகாடு'. காட்டிலாடுவாரைக் 'காடர்' என்றார். விட்டிட்ட - விட்ட; நீங்கிய, வேட்கை விட்டவர்க்குத் தனிச் சிறப்பாக அருள்கள் செய்து. பட்டுஇட்ட :- இட்ட பட்டுமாம். 'ஊனுயிர்வேறு செய்தான்' என்புழிப்போல, ஈண்டும் ('வேறு' என்பதற்குப்) பொருள்கொள்க.

562. கபாலத்தையேந்திய கையராகிக்காமவேளைத் தீக் கண்ணால் தீய்த்து, மெய்யராகவே திருமேனியராதலை நிறுவி, மேனியின்மேல் (567) விளங்குகின்ற திருவெண்ணீற்றைப் பூசி, பிறவிப்பகுதியில் விழுந்தழுந்தாது பேரின்பக்கரையேறியுய்யும் பேற்றினராய், இடைவிடாது திருவடி நினைவார்க்கு இன்பங்கள் பலவும் செய்து. படத்தையுடைய பாம்பினை இடையிற் கட்டித், திருப்பருப்பதத்தை நோக்கி வீற்றிருந்தருள்கின்றார். பை - படம், மெய்யுணர்வுடையார்க்கே காமத்தைக் கடிதலொல்லும்.

563. வேடர் - பலபலவேடமாகும்பரன், அருச்சுனன் முதலோர்க்காக வேடனைவர் வெய்யர் - கடியர். வேழம் -

மேகம்போன் மிடற்றராகி வேழத்தி னுரிவைபோர்த்து
ஏகம்ப மேவினார்தா மிமையவர் பரவியேத்தக்
காகம்பர் கழறராகிக் கடியதோர் விடையொன்றேறிப்
பாகம்பெண் ணுருவமானார் பருப்பத நோக்கினாரே. 564

பேரிடர்ப் பிணிகடீர்க்கும் பிஞ்ஞக னெந்தைபெம்மான்
காருடைக் கண்டராகிக் கபாலமோர் கையிலேந்திச்
சீருடைச் செங்கண்வெள்ளே றேறிய செல்வர்நல்ல
பாரிடம் பாணிசெய்யப் பருப்பத நோக்கினாரே. 565

யானை, உரிவை - தோல், (564) ஓடர் - ஓட்டம் உடையவர்; உலகமெல்லாம் ஓடராய் உழிதர்வர், (திரிதருவர்), 'இழிதரு கால்' 'திரிதர்வரே' (திருவாசகம்). உமையம்மையாரும் தாமும் காட்டினைச் சார்ந்தவராய் வேடராய் உழிதர்வர். கனல்(தீ) கையில் ஏந்திக் கடியதோருவிடையை ஊர்ந்து பூதகணத்தர் தமது பக்கத்தவராய்ச் சூழத் திருப்பதத்தை நோக்கினார்.

564. மேகம்போல் மிடற்றர் - நீலமுகில் போலும் (நஞ் சுண்டதால் ஆன) திருநீலகண்டர், "கொண்டலும் நீலமும் புரை திருமிடறர் கொடுமுடியுறைபவர்' (1. 79. 2) 'மிடற்றர்' (564) வேழத்தினுரிவை போர்த்து' (563). ஏகம்பம் - திருவேகம்பர். ஏகாம்ரம் (ஒருமா) என்பதன் திரிபு. மேவினார் - விரும்பியுறைபவர். இமையவர் பரவியேத்தக் காக்கின்ற கம்பர், காகம்பர் :- வினைத்தொகை. கம்பம் - 'தாணு' கேநோபநிடதம் பார்க்க. 'காவடி' 'காவயிறு' என்ற (வினைத்தொகை) வழக்கும் இது வினைத்தொகையாதலை நாட்டும். கழல்+த்+அர்=கழறர்; கழலையுடையவர்; காலிற் கழலுடையவர், கழல் அணிந்து விடையேறுவார். கம்பர் - கம்பேந்தியவருமாம்.

565. பேரிடர்ப் பிணிகள் - பேரிய இடர் விளைப்பனவாய்ப் பிணித்துவருத்துவனவற்றை. பிஞ்ஞகன் - தலைக்கோலத்தன். காருடைக் கண்டர் :- மேகம்போல் மிடற்றர் (564) ஓர் கையில் கபாலம் ஏந்தி, சீருடைய ஏறு, செங்கண் ஏறு, வெள்ளேறு, ஏறு ஏறிய செல்வர். 'ஏறுகந்தேறினானே' (490). பாரிடம் - பூதம். பாணி - பாட்டு, பூதங்கள் பாட ஆடுதல் :- 'பாடல் பயின்றபல்பூதம் பல்லாயிரங்கொள் கருவிநாடற்கரியதோர் கூத்து' (18).

அங்கண்மா லுடையராய வைவரா லாட்டுணுதே
உங்கண்மால் தீரவேண்டி லுள்ளத்தா லுள்கியேத்தும்
சேங்கண்மால் பரவியேத்திச் சிவனென நின்றசேல்வர்
பைங்கண்வேள் ளேறதேறிப் பருப்பத நோக்கினுரே. 566

அடல்விடை யூர்தியாகி யரக்கன்றே ளடரவூன்றிக்
கடலிடை நஞ்சமுண்ட கறையணி கண்டனுர்தாம்
சுடர்விடு மேனிதன்மேற் சுண்ணவெண் ணீறுபூசிப்
படர்சடை மதியஞ்சேர்த்திப் பருப்பத நோக்கினுரே. 567

திருச்சிற்றம்பலம்

566. பின்னீரடியை முன்னும் முன்னீரடியைப் பின்னும் கோண்டு போருளறிதற்குரியது இது சேங்கண்மால் பரவி யேத்திச் சிவன் என நின்ற சேல்வர் :- ஏத்த நின்ற சேல்வர் எனச் சேயவேனேச்சமாகத் திரித்துரைத்துக் கோள்க. சிவன் என நிற்றல் - குறைவிலா மங்கல குணத்தன்; தூயதன்மையன், முற்றுணர்வினனேன விளங்குதல். பைங்கண் வேள்ளேறது ஏறி(ப் பருப்பதம்) நோக்கினுர் :- ‘சேங்கண் வேள்ளேறிய சேல்வர்’ (565). ‘ஏத்திச் சிவனே என’ எனலுமாம்.

567. அடல்விடை - கோல்லேறு. ஊர்தி - ஊரப்படுவது. விடையூர்தியாதல் - இடபவாகனருடராதல். கடல் - பாற்கடல். நஞ்சம் உண்டகறை - நஞ்சுண்டதால் ஆகிய கறுப்பு. அணி :- ‘கறைமிடறணியலும் அணிந்தன்று, மேனிதன்மேல் .. பூசி’:- 562. கண்ண வேண்ணீறு :- ‘கண்ண வேண்சந்தனச்சாந்து’ (11) ‘சுண்ணநீறணி மார்பு’ (2. 111. 4), படர்சடை - படர்ந்த சடையில். மதியம் - பிறை.

மான விஞ்சையர் வான நாடர்கள் வானி யக்கர்கள் சித்தர்கள்
கான கின்னரர் பன்ன காதிபர் காம சாரிக ளேமுதல்
ஞான மோனிக ளுளு நம்பரை வந்தி றைஞ்சி நலம்பெறுந்
தான மான திருச்சி லம்பை வணங்கி வண்டமிழ் சாற்றினுர்.

# 59 திருவவளிவணல்லூர்

## திருப்பதிக வரலாறு

இத் தலத்தை நாயனார் தரிசித்த வரலாறு காணப்படாமையாற் பதிக வரலாறும் புலப்பட்டிலது. (பெரிய புராணம் 360-1)

### திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

**தோற்றினா னெயிறுகவ்வித் தொழிலுடை யரக்கன் றன்னைத்**
**தேற்றுவான் சென்றுசொல்லச் சிக்கெனத் தவிருமென்று**
**வீற்றினை யுடையனாகி வெடுவெடுத் தெழுந்தவன்றன்**
**ஆற்றலை யழிக்கவல்லா ரவளிவ ணல்லூராரே. 568**

**வெம்பினா ரரக்கரெல்லா மிகச்சழக் காயிற்றென்று**
**செம்பினா லெடுத்தகோயில் சிக்கெனச் சிதையுமென்ன**
**நம்பினா ரென்றுசொல்லி நன்மையான் மிக்குநோக்கி**
**அம்பினா லழியவெய்தா ரவளிவ ணல்லூராரே. 569**

568. எயிறு - பல். எயிற்றுகவ்வித் தோற்றினான் ஆகிய அரக்கன் தொழிலுடைய அரக்கன், ஈண்டுத் தொழில் என்பது பொதுமை குறிப்பினும் தீத்தொழிலே கொள்க. தேற்றும் பொருட்டுச் சென்று சிக்கெனத் தவிரும் என்று சொல்ல(வும் கேளானாகி), வீற்றினை - தற்பெருமையை; வெடுவெடுத்து எழுந்தவன் - விடு விடு என்று சொல்லி வெருண்டும் விரைந்தும் புடைபெயர்ந்தவன், எழுந்தவன்றன் ஆற்றலை - எழுந்த இராவணனது வலியை, அவளிவணல்லூரார் :- ஊர்ப்பெயரின் உண்மைக் காரணம் புலப்பட்டிலது.

569. மிகச் சழக்காயிற்று என்று அரக்கர் எல்லா(ரு)ம் வெம்பினார். சழக்கு - குற்றம்; அபராதம், ‘ செம்பினால் எடுத்த கோயில் சிக்கெனச் சிதையும் ’ என்ன - செம்பாலாக்கிய கோயிலைச் சிதைக்கவுறுதிகொண்டு, கொண்ட அவ்வுறுதியின் நீங்காது சிதைத்தொழித்துவிடும் என்று வேண்டிக்கொள்ள. சழக்காயிற் றென்றதும் சிதையும் என்றதும் அரக்கர் தொழிலே. அதுகேட்ட

கீழ்ப்படக் கருதலாமோ கீர்த்திமை யுள்ளதாகில்
தோட்பெரு வலியினாலே தோலைப்பனுன் மலையையென்று
வேட்பட வைத்தவாறே விதிர்விதிர்த் தரக்கன்வீழ்ந்து
ஆட்படக் கருதிப்புக்கா ரவளிவ ணல்லூராரே. 570

நிலைவலம் வல்லனல்ல னேர்மையை நினையமாட்டான்
சிலைவலங் கொண்டசெல்வன் சீரிய கயிலைதன்னைத்
தலைவலங் கருதிப்புக்குத் தாக்கினான் றன்னையன்று
அலைகுலை யாக்குவித்தா ரவளிவ ணல்லூராரே. 571

.......................................................................

சிவபிரான், நம்பினார் (- நகையுற்றார்) என்று திருவாய்மலர்ந்து, இராவணனால் துன்புறுவார்க்கு இன்புறும் நன்மையால், பெருங் கண்ணோட்டஞ் செய்தருளி, ஓர் அம்பினால் அழிய எய்தார் அவளிவள் நல்லூரார். இராமன்வாயிலாக அவனுயிர்த்துணையாய் நின்று அம்பை விடுத்தருளினார் என்னும் இராமாயண வரலாற்றின் உண்மைக்கு ஈதொரு சான்று. பொன், வெள்ளி, இரும்பு என்ப வற்றின் ஆய மும்மதில் திரிபுரத்தன. செம்புமதில் யாண்டுங் கூறப்பட்டிலது. 'செம்பினால் எடுத்த கோயில்' என்றதன்றி மதில் என்றிலது. அரக்கர் 'வெம்பினார்' என்றும் 'கோயிலைச் சிதையும்' என்றும் 'நோக்கி அம்பினால் அழிய எய்தார்' என்றும் உள்ளவாற்றால் இதில் முப்புர தகனம் கூறப்பட்டிலது. இப் பதிகம் முழுவதும் இராவணன் வரலாறே கூறப்படுதலின், இதிலும் அதுவே கொள்ளப்பட்டது.

570. கீழ்மையுற நினைக்கலாமோ? புகழாந்தன்மை இருப் பதாகில், (புஜபல பராக்கிரமம் என்னும்) தோளினது பெரிய வலிமையாலே, நான், கயிலையைத் தொலைப்பன் என்று அதை எடுக்கக் கையை வைத்த அளவில், அரக்கன் (இராவணன்) நடு நடுங்கி விழுந்து ஆளாம்படி திருவுளங்கொண்டு, அவனைத் திருக் கால்பெருவிரலால் ஊன்றத் தொடங்கி யருளியவர் அவளிவள்நல்லூரார். வேட்படவைத்தவாறே :- வேள் - மண், மன்மதன். மண்பட; மன்மதன் படவைத்தவழி.

571. நிலைத்த வெற்றியை அடைய வல்லவன் அல்லன்; நேர்மை (ஒழுங்கு) என்பதே நினைக்கமாட்டேன்; (வெற்றிக்கு நேர்மை ஒரு காரணம்) வில்வலிமையுற்ற செல்வன். தன்

தவ்வலி யொன்றனுகித் தனதோரு பெருமையாலே
மெய்வ்வலி யுடையனென்று மிகப்பெருந் தேரையூர்ந்து
செவ்வலி கூர்விழியாற் சிரம்பத்தா லெடுக்குற்றானை
அவ்வலி தீர்க்கவல்லா ரவளிவ ணல்லூராரே. 572

நன்மைதா னறியமாட்டா னடுவிலா வரக்கர்கோமான்
வன்மையே கருதிச்சென்று வலிதனைச் செலுத்தலுற்றுக்
கன்மையான் மலையையோடிக் கருதித்தா னெடுத்துவ்வாயால்
அம்மையோ வென்னவைத்தா ரவளிவ ணல்லூராரே. 573

பத்துத்தலை வலிமையொன்றையே எண்ணி, கனத்த கயிலாய மலையை எடுக்க நினைந்து புகுந்து தாக்கினன். அவனை அக்காலத்தில், அலையவும் குலையவும் செய்தருளினர் அவளிவள் நல்லூரார். தலைவலம் :- தலையாயவலிமை என்றலுமாம். எவர்க்கும் இல்லாத பத்துத் தலையுடைய தன் வலிமை என்றதே முற்குறித்த பொருள், மேல் (சிரம் பத்தால் எடுக்குற்றானை அவ்வலிதீர்க்கவல்லார்' என்றலும் 'வன்மையே கருதி' என்றும் வருதல் காண்க

572. தவ்வுதல் - ஒடுங்குதல், குறைதல். தவ்வலி - ஒடுங்கும்வலி; குறைந்த வன்மை. ஒன்றன் - ஒன்றனையே துணையாக உடையவன், தன் வலியையே தனக்குத் துணையாக உடையவன், தன் குறை வலியை நிறை வலியாக எண்ணிக் கொண்டு, அதனையே துணையாகக்கொண்டு 'இராவணேசுவரன்' 'திரிலோகாதிபதி' எனும் தனது பெருமையொன்றாலே, அப்போய்வலியை மெய்வலியாகவும் அவ்வலிமைத்துணை தனக்கு உள்ளதாகவும் கொண்டு மிகப் பெரிய தேரைக்கடாவி; செய்ய கடிய கொடிய கண்களால் நோக்கிப் பத்துத் தலைகளாலும் எடுக்கலுற்றவனை, அவ்வலியை ஒழிக்க வல்லவர் அவளிவள் நல்லூரார். அடுத்ததில், 'வன்மையே கருதிச் சென்று' என்றது காண்க.

573. நன்மையே அறிகிலாதவன், நியாயம் இல்லாதவன், அரக்கர் கோமகன் தனது வலிமையையே துணையாக நினைந்து பேரமி, அவ்வலிமை தன்னைக் கடாவலுற்று ஓடிக், கல்லாந்

கதம்படப் போதுவார்கள் போதுமக் கருத்தினாலே
சிதம்பட நின்றநீர்கள் சிக்கெனத் தவிருமென்று
மதம்படு மனத்தரக்கி வன்மையான் மிக்குநோக்க
அதம்பழத் துருவுசெய்தா ரவளிவ ணல்லூராரே. 574

நாடுமிக் குழிதர்கின்ற நடுவிலா வரக்கர்கோனை
ஓடுமிக் கென்றுசொல்லி யூன்றினா னுகிரினாலே
பாடிமிக் குய்வனென்று பணியநற் றிறங்கள்காட்டி
ஆடுமிக் கரவம்பூண்டா ரவளிவ ணல்லூராரே. 575

. . . . . . . . . . . .

தன்மையதாகக் கருதி மலையை எடுத்தான் கடவுள் அவனது வலியை ஒழித்தார். அம்மா என்று அலறினான். அவ்வாறு செய்தவர் அவளிவள்நல்லூரார்.

574. கதம் - கோபம். பட - தோன்ற. போதுவார்கள் - புகுதருவார்கள். மரூஉ. போதும் - புகுதும். சிதம் - வெற்றி; அறிவு; வெண்மையுமாம். நீர்கள் :- 'நின்' ஒருமை. நீ + இர் = 'நீயிர்' பன்மை. 'நீயிர்' என்பதன் மரூஉ 'நீர்' அதனோடு அஃறிணைக்கே உரிய 'கள்' சேர்ந்து 'நீர்கள்' என்று வழங்கிப், பின் 'நீங்கள்' என்று மருவிற்று. நீ + இர் = நீயிர், நீவிர் என யகரம் வகரம் ஆம் மெய்யிரண்டும் இடையுடம்பாக அடுத்தலும் இவன்(இ+அன்)என வகரம் உடம்படுமெய்யாதலும் அறியின் வரையறையின்றி வருதல் புலப்படும். 'சிக்கென' 569 பார்க்க. மதம் - செருக்கு. அதம்பழம் - அத்திப்பழம்; அளிந்த பழம், 'ஆற்றயலெழுந்த வெண்கோட் டதவத்தெழு குளிறு மிதித்தவொரு பழம்போலக் குழையக் கொடியோர் நாவே காதலர் அகலக் கல்லென்றவ்வே,' (குறுந்தொகை, 24, உரை) என்புழி 'அதம்பழத்துருவு செய்தார் அவளிவணல்லூராரே' என்றதை எடுத்துக்காட்டியுள்ளார்கள் புகழுடலெய்திய, உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள். (அருங்கலச் செப்பு) அதம்பழத் துருவு செய்தல் அத்திப்பழம் போலச் சிவந்தும் குழைந்தும் நலிந்தும் போகப் பண்ணுதல்.

575. நாடுகளிலே மிகத்திரிகின்ற நியாயமில்லாத அரக்கர் கோமகனை விரைந்தோடு என்று அதட்டித் திருக்காற் பெரு விரலாலே சிறிதே ஊன்றினார். அது பொறுக்கமாட்டாமல், நான்கயிலைமலையாண்டவனைப் பாடியுய்வேன் என்று பணிந்தான். பணியவே, நாளும் வாளும் நேரும்பேரும் ஆகிய நல்ல திறங்

ஏனமா யிடந்தமாலு மெழிறரு முளரியானும்
ஞானந்தா னுடையராகி நன்மையை யறியமாட்டார்
சேனந்தா னிலாவரக்கன் செழுவரை யெடுக்கவூன்றி
ஆனந்த வருள்கள்செய்தா ரவளிவ ணல்லூராரே. 576

ஊக்கினுன் மலையையோடி யுணர்விலா வரக்கன்றன்னைத்
தாக்கினுன் விரலினாலே தலைபத்துந் தகரவூன்றி
நோக்கினு னஞ்சத்தன்னை நோன்பிற வூன்றுசொல்லி
ஆக்கினு ரமுதமாக வவளிவ ணல்லூராரே. 577

திருச்சிற்றம்பலம்

---

களைக் காட்டினுர். ஆடுகின்ற அரவம் மிகப் பூண்டவராகிய அவளிவள்நல்லூரார்.

576. பன்றியுருக்கொண்டு, நிலம் அகழ்ந்த திருமாலும் அழகுதரும் தாமரைப் பூவில் வாழும் நான்முகனும் முழுமுதல்வனைக்காணவேண்டும் என்னும் அறிவுடையராகிச் சிவத்தை அறிய வல்லரல்லராயினர். சேனம் - பருந்து. நிலா - நில்லாத. பருந்து போல நாடுமிக்குழிதர்கின்ற (575) அரக்கன். 'சேனை' சேனம் என்ருகும். சேனை+தான்=சேனந்தான் (பனை + தாள் — பனந்தாள்), சேனை இல்லாத அரக்கன் எனலும் பொருந்தும். செழுவரை - செழிப்புடையதாய கயிலைமலையை, எடுக்க - எடுத்தலால். ஊன்றி - திருக்காற்பெருவிரலால் அழுத்தி, ஆனந்த அருள்கள்:- 'நற்றிறங்கள்' (575)

577. அரக்கன் ஓடி மலையை ஊக்கினுன், தன்னை-அவனை. இது தவறு என்னும் உணர்ச்சி சிறிதும் இல்லாத இராவணனை. அவனை விரலினாலே தாக்கினுர் (சிவபிரான்). இதிலும் 575இலும் நல்லூரார் என்றதற்கேற்ப 'ஆர்' ஈறின்மை அறிக. பத்துத் தலையும் தகர்ந்தொழிய நோக்கி ஊன்றினுர். தன்னை - அவனை, அஞ்ச ஊன்றி நோக்கினுர் என்க. நோன்பு - தவம், விரதம், இற - கெட, ஊன்று - ஊன்றியதால் உண்டான வருத்தத்தை, சொல்லி - நீக்கி, ஊன்றுதலை நீக்கி எனலுமாம். சொல்லி - சாமகானம்பாடி என்று பொருத்தலும் கூடும். 'துணைவனுக்குற்ற துன்பம் சொல்லிய தொடங்கினுனே' (சிந்தாமணி,1146)என்புழி, சொல்லிய - தீர்த்தற்கு என்றெழுதிய நச்சினுர்க்கினியர் உரையை உணர்க. அமுதம் ஆக ஆக்கல் :- இறப்பில்லையாகச் செய்தல்,

# 60 திருப்பெருவேளூர்

## திருப்பதிக வரலாறு

எல்லையில்லாச் சீர்த்தியினுர் ஆகிய தலைமைக் கீர்த்தியினுர் (வாகீசர்) திருவீழிமிழலை மாமணியை வணங்கிப் பிரியாவிடை கொண்டு, திருவாஞ்சியத்தைப் போற்றி, அன்பினுற் சென்று இறைஞ்சிய புனிதர்வாழ் பதிகளுள் ஒன்ருன திருப்பெருவேளூரை வழிபட்டுப் புனைந்தது இத் திருப்பதிகம். (புராணம், 263)

திருச்சிற்றம்பலம்

மறையணி நாவினுனை மறப்பிலார் மனத்துளானைக்
கறையணி கண்டன்றன்னைக் கனலெரி யாடினுனைப்
பிறையணி சடையினுனைப் பெருவேளூர் பேணினுனை
நறையணி மலர்கள் தூவி நாடோறும் வணங்குவேனே. 578

நாதனு யுலகமெல்லா நம்பிரா னெனவுநின்ற
பாதனும் பரமயோகி பலபல திறத்தினுலும்
பேதனுய்த் தோன்றினுனைப் பெருவேளூர் பேணினுனை
ஓதநா வுடையனுகி யுரைக்குமா றுரைக்குற்றேனே. 579

578. மறை - வேதத்தை, அணிநா - அணியாகப்பூண்டநா. அழகியநா, 'அருங்கலம் அருமறை ஆறங்கம்' (108) வேதத்தைப் படைத்ததாதலின் மறையை அணிந்த நாவாயிற்று. மறப்பு - மறத்தல். 'பிறப்பில் பெருமானைப் பின் தாழ்சடை யானை மறப்பிலார் கண்டீர் மையல் தீர்வாரே' (காழி வேந்தர்) 'மறவாதே தன் திறமே வாழ்த்துந் தொண்டர் மனத்தகத்தே அனவரதம் மன்னிநின்ற திறலான்' (6. 68. 8). கறை - நஞ்சின் நஞ்சின் கறுப்பு. பேணினுன் - விரும்பிக் கோயில் கொண்டவன். நறை - தேன், மணம், நாள்தோறும் மலர்கள் தூவி வணங்கு தலைச் சைவர் மறவாராயின் அவர் மனத்துளான் ஏழண்டத் தப்பாலான்.

579. நாதனுய் - தலைவனுய், உடையவனுய், உலகம் எல்லாம் நம்பிரான் என்று போற்றவும் நின்ற பாதன், நாதனுய்

குறவிதோண் மணந்த செல்வக் குமரவே டாதையென்றும்
நறவிள நறுமென்கூந்த னங்கையோர் பாகத்தானைப்
பிறவியை மாற்றுவானைப் பெருவேளூர் பேணினானை
உறவினால் வல்லனாகி யுணருமா றுணர்த்துவேனே. 580

நின்றபாதன், பரமயோகி - யோகியர் தலைவன். பலபல திறத்தினான் - 'பலபல வேடமாகும் பரன்' 'அனைத்து வேடமாம் அம்பலக்கூத்தன்' 'நவந்தருபேதம் ஏக நாதனே நடிப்பன்' (சித்தியார்) பேதனாய்த் தோன்றினான் :- 'ஒன்றேயோன்றேவ்வா வேடம் ஒருவனே தரித்துக் கொண்டு நின்றல்' ஷெ ஓத நாவுடையன் ஆகி உரைக்கும் ஆறு உரைக்க உற்றேன் :- திருநாவுக்கரசர் என்னுந் திருப்பெயரின் காரணம் புலப்படுதல் உணர்க. 'ஓத நாவுடையன்':- நாவுடைமைக்குத் தக்கசெயல் சிவ கீர்த்தனம் ஓதுதலே என்க. 'நாவினுக்கு அருங்கலம் நமச்சிவாயவே' நமச்சிவாயவே நா நவின்றேத்தும்' 'நாக்கொண்டு பரவும் அடியார் வினை போக்க வல்ல புரிசடைப் புண்ணியன்' 'கூத்தா நின் குரையார் கழலே அலது ஏத்தா நா எனக்கு'.

580. குறவி - குறவர் மகளாராய்த் தோன்றிய வள்ளி நாய்ச்சியார். தோளைப்புணர்ந்த செல்வக் குமரவேள் :- சிவபிரானுடைய புதல்வருள், முருகப்பிரானே தாய் தந்தை நடுவில் உள்ளவர். சோமாஸ்கந்த ருபத்திற் காண்க, 'கடவுட் பிராட்டியுடங்கிருப்பக் கதிர் வேற்காளை நள்ளிருப்ப, நடலைப் பிறவிமருந்தாகி வைகும் நாதன்றிருவுருவம்' (காஞ்சிப். சிவபுண்ணிய. 7) தாதை - 'தாதா' என்னும் வடசொற்றிரிபு; ஆவீறு ஐயீறுதல் விதி. சபா - சபை. சிவா - சிவை. நறவிளம் - மணமுடைய கூவிளம். கூவிளம் என்பதன் முதற்குறை. விள - விளா எனின், விளாவை அணியும் வழக்குளதாதல் வேண்டும். நறவு இளநங்கை எனக்கூட்டி அனிச்சம்போலும் மென்மையையுடைய இளம்பெண், என்றலுமாம். நறுமை (- நன்மை)யும் மென்மையும் கூந்தலுக்கு, நறவும் இளமையும் கூந்தலாட்கு, பிறவியைப் போக்குவான், உறவினால் - இடைவிடா துற்றுற்று நோக்கி யடைதலால், உணரும் ஆறு உணர்த்துவேன் :- சிவபிரானைத் தாம் உணரும் வண்ணம் தம்மை உணரச் செய்வேன். 'தோண்டனேன் புணருமாபுணர்' என வேண்டிப் புணர்த்துக்கோள்ளல்

மைஞ்ஞவில் கண்டன்றன்னை வலங்கையின் மழுவோன்
கைஞ்ஞவின் மானினேடுங் கனலேரி யாடினானைப் [றேந்திக்
பிஞ்ஞகன் றன்னையந்தண் பெருவேளூர் பேணினானைப்
பொய்ஞ்ஞேக நினையமாட்டாப் பொறியிலா வறிவிலேனே.

ஓடைசேர் நெற்றியானை யுரிவையை மூடினானை
வீடதே காட்டுவானை வேதநான் காயினானைப்
பேடைசேர் புறவணிங்காப் பெருவேளூர் பேணினானைக்
கூடநான் வல்லமாற்றங் குறுகுமா றறிகிலேனே.        582

போன்று, உணருமாறுணர் என்று வேண்டி உணர்த்திக் கோள்ளல். இது (யான்) உணருமாறு உணர்த்துவேன், முற்ற வுணர்ந்தவர்களைப்போல உணர்ந்து என்றால் உணர்த்தல் இயலாது என்றதாம்.

581. மை + நவில் = மைஞ்ஞவில், மை - நஞ்சுண்ட கறுப்பு, நவில் - பயின்ற, கண்டன் (திருநீலகண்டர்) வலங்கை யின் (- வலக்கையில்) மழுப்படையோன்றுதாங்கி, கை - கையில் நவில் - பழகிய. மான் - மான்கன்று, பிஞ்ஞகனை; அழகும் குளிர்ச்சியும் போருந்திய பெரிய வேளூர் பேணினானைப் போய் நேக மெய்மிக நினைந்து வழிபடமாட்டாதேன்; பொறியிலேன்; அறிவிலேன், ‘ பொறியிலா வழுக்கை (இலச்சினையில்லாத உடலை) யோம்பிப் பொய்யினை மெய்யேன்றெண்ணி நெறியிலா நெறிகள் சென்றேன் ’ (521) பொறியிலா (- ஒளியில்லாத) என்னும் எதிர்மறை ‘ அறிவின்மை ’ என்னும் பெயர் கோண்டது. பொறி - இலச்சினை, ஒளி.

582. ஓடை - நெற்றிப்பட்டம். உரிவை - தோல். மூடி னான் - போர்த்தான். வீடதே - முத்தியையே. நான்கு வேதம் ஆயினான். பேடை - பெண்புறா. பேணிய கடவுளைக் கூடவல்ல மாற்றம் குறுகும் வண்ணம் நான் அறிகிலேன். வீடதே :- அது பகுதிப் பொருள் விகுதி. யானையுரிவையை மூடினானும் வீடே காட்டுவானும் நால் வேதம் ஆயினானும் பெரு வேளூர் பேணினானும் ஆகிய கடவுளைக் கூடுமாறும் அதற்கு வல்லதாய் ஒரு மாற்றம் குறுகுமாறும் நான் அறிகிலேன்.

கச்சைசேர் நாகத்தானைக் கடல்விடங் கண்டத்தானைக்
கச்சியே கம்பன்றன்னைக் கனலெரி யாடுவானைப்
பிச்சைசேர்ந் துழல்வினானைப் பெருவேளூர் பேணினானை
இச்சைசேர்ந் தமரநானு மிறைஞ்சுமா றிறைஞ்சுவேனே 583

சித்தராய் வந்துதன்னைத் திருவடி வணங்குவார்கள்
முத்தனை மூர்த்தியாய முதல்வனை முழுதுமாய
பித்தனைப் பிறருமேத்தப் பெருவேளூர் பேணினானை
மேத்தநே யவனைநாளும் விரும்புமா றறிகிலேனே 584

முண்டமே தாங்கினானை முற்றிய ஞானத்தானை
வண்டுலாங் கொன்றைமாலை வளர்மதிக் கண்ணியானைப்
பிண்டமே யாயினானைப் பெருவேளூர் பேணினானை
அண்டமா மாதியானை யறியுமா றறிகிலேனே 585

.........................................................

583 கச்சை - இடையிற்கட்டும் பட்டை, நாகக்கச்சை, ' அரவக்கச்சு ' ' கச்சைசேர் அரவர் ' (639), கடல் - பாற்கடல் விடம் - நஞ்சு. கண்டத்தான் - திருநீலகண்டர். திருக்கச்சி யேகாம்பரநாதர். உழல்வினான் - திரிதலையுடையவர். உழல்வு - சுழல்வு. திரிவு. இச்சை - பக்தி. ' இச்சை சேர்ந்தமர - துரிய நிலையும் துரியாதீதநிலையும் (சிவஞானபோத மாபாடியம். சூ. 11) உணர்ந்தார்க்கு, ஏற்ற பொருளும் கொள்ளலாம். ஆண்டுச் சிவஞானமாமுனிவர் விளக்கியிருக்கும் ' முத்தி நிலை ' யை உணர்க. ' இறைஞ்சுமாறு இறைஞ்சுவேன் ' என்பதும் ' உணருமாறு உணர்த்துவேன் ' என்பதும் ஒரு நிகரனவல்ல.

584. சித்தர் - ஞானிகள்; சித்திகளில் வல்லவர்கள். தன்னை வணங்குவார்கள். தன் திருவடியை வணங்குவார்கள். வணங்குவார்களுக்கு முத்தியைத் தந்தவனை. ஞானமூர்த்தி. முழுதும் ஆயபித்தன்-முழுப்பித்துள்ளவன். பிறரும் - வணங்கப் பழக்கமில்லாதவரும். அண்டம் - (பல்கோடி) அண்டங்கள். மேத்த - மிகுத்த. மரூஉ. நே - அன்பு. நேயவன் - அன்பினன். நே + அம் = நேயம் + அன் = நேயவன். விரும்பும் ஆறு - திரு வுள்ளம் உவக்கும் வண்ணத்தை. விரும்பும்ஆற்றில் எனலுமாம்.

585. முண்டம் - தலை, தலைமாலை பூண்டவன், அயன் தலையைக் கையிற் பிச்சைப் பாத்திரமாகத் தாங்கியவன். முற்றிய

விரிவிலா வறிவினார்கள் வேறொரு சமயஞ்செய்து
எரிவினாற் சொன்னாரேனு மெம்பிராற் கேற்றதாகும்
பரிவினாற் பெரியோரேத்தும் பெருவேளூர் பற்றினானை
மருவிநான் வாழ்த்தியுய்யும் வகையது நினைக்கின்றேனே.

ஞானத்தான் - பரிபூரணஞான சொருபன், வண்டு உலாம் கொன்றைமாலை:- சாதியடை, 'வண்டு உண்டிடுங்கொன்றையணி அண்டர் நாயககயிலையுறைகின்ற பரதெய்வமே' (தக்ஷிணாமூர்த்தி திருவருட்பா 10) என்று பிற்காலத்தும் அவ்வாறு அடை கொடுத்தல் அறிக. மதிக்கண்ணியான் - மாதர்ப் பிறைக்கண்ணியான்' வளர்மதி - பிறை. பிண்டமே ஆயினான் - ' என் ஊனே ஊனின் உள்ளமே ' ' ஊனாகி உயிராகி ' ' பிண்டத்திற் பிறந்ததொரு பொருளை ' ' பிண்டத்தைக் காக்கும் பிரானார் ' ' பிண்டத்தைக் கழிக்கவேண்டிற் பிரானையே பிதற்றுமின்கள் ' என்று பிறண்டுரைத்த ஆசிரியரே ஈண்டு அவனையே 'பிண்டமாயினான்' என்ற தன் உண்மையை உணர்க. 'வினைபடும் உடல் நீ புகுந்து நின்றமையால் விழுமிய விமானம் ஆயினதே' (திருவிசைப்பா. 117) என்னும் கருத்துப்பற்றியதுமாம். 'எல்லாவுலகமும் ஆனாய் நீயே' ஆதலின், ' அண்டபிண்டம் அவை சமம்' என்னும் உண்மைக்குத் தக்கவாறு பிண்டமாகிய உலகமும் நீயே ஆனாய் என்ற கருத்தும் உணர்க.

586. விரிவிலா அறிவினார்கள் - மெய்ப்பொருளிருக்கும் எல்லையளவும் (தத்துவ) ஆராய்ச்சி புரியத் தக்க விரிவுறாத சிற்றறிவுடைய புறச்சமயத்தவர்கள், வேறு - 'சைவ சமயமே சமயம்' என்னும் உண்மைச் சமயத்திற்கு வேறாக, ஒரு சமயம் செய்து - உலகாயதம் முதலியவற்றுள் ஒன்றனைப்போலப் புதியதொரு சமயம்செய்து. எரிவினால்-வயிற்றெரிச்சலால்; நெருப்பையொத்த சினத்தால். செய்து சொன்னாரேனும் ஏற்றதாகும் எம் பிரானுக்கு. பரிவு - அன்பு, பெரியோர்:- 'கற்றல் கேட்டலுடையார் பெரியார் ' மருவி - கூடி, உய்யும் வகையது நினைக்கின்றேன் - ' உய்வினை நாடுகின்றேன் '.

போருகட லிலங்கைமன்ன னுடல்கெடப் பொருத்திநல்ல
கருகிய கண்டத்தானைக் கதிரிளங் கொழுந்துசூடும்
பெருகிய சடையினானைப் பெருவேளூர் பேணினானை
உருகிய வடியரேத்து முள்ளத்தா லுள்குவேனே. 587

திருச்சிற்றம்பலம்

587. போருகடல் - கரையை அலைதாக்கும் கடல், போரு தற்கிடமான கடலுமாம். கடலிற்போர் ; கடற்போர் ; கப்பற் போர் போருமன்னனுமாம். உடல் கெடப் பொருத்தி :- நல்ல - அழகிய. கருகிய - நீலநிறமார்ந்த. கதிர் இளங்கொழுந்து - பிறைக் கொழுந்து. பெருகிய சடை.- 'வளர் சடை' 'கற்றைச் செஞ்சடை' உருகிய அடியார் - நெஞ்சின் உருக்கம் உற்ற சிவஞானிகள் ஏத்தும் உள்ளத்தால் உள்குவேன். உள்குதல் நினைத்தல்.

அம்ம ருங்கு கடந்து போமவ ரார்கொள் சூல வயிற்படைச்
செம்மல் வெண்கயிலைப்பொருப்பைநினைந்தெழுந்ததோர்சிந்தையால்
எம்மருங்குமோர் காத லின்றி யிரண்டு பாலும் வியந்துளோர்
கைம்ம ருங்கணை யுந்தெலுங்கு கடந்து கன்னட மெய்தினார்.

ஏற்றி னாரரு டலைமிசைக் கொண்டெழுந் திறைஞ்சி
வேற்று மாகிவிண் ணாகிநின் றார்மொழி விரும்பி
ஆற்றல் பெற்றவ ரண்ணலா ரஞ்செழுத் தோதிப்
பாற்ற டம்புனற் பொய்கையின் மூழ்கினார் பணியால்.

முன்பு கண்டுகொண் டருளினா ரமுதுண்ண மூவா
வன்பு பெற்றவ ரளவிலா வார்வமுன் பொங்கப்
பொன்பி றங்கிய சடையரைப் போற்றுதாண் டகங்கள்
இன்ப மோங்கிட வேத்தினா ரெல்லையி றவத்தோர்.

மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடு மென்னுங்
கோதறு தண்டமிழ்ச் சொல்லாற் குலவு திருப்பதி கங்கள்
வேத முதல்வரை யாற்றில் விரவுஞ் சராசர மெல்லாம்
காதற் றுணையொடுங் கூடக் கண்டே னெனப்பாடி நின்றார்.

## 61 திருவிராமேச்சுரம்

### திருப்பதிக வரலாறு

நாவரசர், தென்னிலங்கை யிராவணனது சிரம்பத்தும் துணித்த மன்னவன் இராமனுக்கு வரும் பெரும் பாதகம் தீர்த்த பிஞ்ஞகனைத் தொழுவதற்கு நினைந்து போய்த், தேவர்தொழுந் தனி முதலைத் திருவிராமேச்சுரத்து மேவிய சங்கரனைப் பாடியவற்றுள் ஒன்று இத் திருப்பதிகம் (புராணம் 408 - 9)

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

பாசமுங் கழிக்ககில்லா வரக்கரைப் படுத்துத்தக்க
வாசமிக் கலர்கள்கொண்டு மதியினுன் மால்செய்கோயில்
நேசமிக் கன்பினுலே நினைமினீர் நின்றுநாளும்
தேசமிக் கானிருந்த திருவிரா மேச்சுரம்மே. 588

588. பாசமும் கழிக்ககில்லா அரக்கர் - கழிதற்குரிய பாசத்தையும் கழிக்கும் வன்மையில்லாத இராக்கதர், 592, 598 என்னும் எண்ணுடைய பாடலில் அன்றி மற்றை யோன்பதி லும் 'அரக்கர்' என்பது பன்மை குறித்தலுணர்க. படுத்து - அழித்து. தக்க மலர்கள்; வாச (மண) மலர்கள்; மிக்க அலர்கள் மதியினுன் - சிவஞானத்தால், வினைதீர்க்கவல்ல வழியுணர்ந்த அறிவால் எனலுமாம், மால் - திருமாலின் அவதாரங்களுள் ஒன் றுன இராமமூர்த்தி, நேசம்மிக்க அன்பினுல், (உலகீர்) நீர் நாளும் நன்று நினைமின். தேசம் மிக்கான் -ஒளிமிக்கவன். 'தேசத்தார் பரவி யேத்தும்' (387), அலர்கள் கொண்டு செய் கோயில் இராமபிரான், இலங்கையினின்று மீண்டு போந்து, இப்போ துள்ளது போன்ற பெரிய திருக்கோயிலை அப்போதே கட்டி வழி பட்டதாகக் கொள்ளல் பொருந்தாது. முதன் முதலிற் பூங்கோ யில் கட்டிப் போற்றியதாகக் கொள்வதே பொருத்தம். சொல் வேந்தர் அங்குற்ற காலத்தில் இருந்த நிலையிலேயே இராமபிரான் வழிபடத் தொடங்கிய நாளில் இருந்ததெனல் அசம்பவம்.

முற்றின நாள்களென்று முடிப்பதே காரணமாய்
உற்றவன் போர்களாலே யுணர்விலா வரக்கர் தம்மைச்
செற்றமால் செய்தகோயி றிருவிரா மேச்சுரத்தைப்
பற்றிநீ பரவுநெஞ்சே படர்சடை யீசன்பாலே. 589

கடலிடை மலைகடம்மா லடைத்துமால் கருமமுற்றித்
திடலிடைச் செய்தகோயிற் றிருவிரா மேச்சுரத்தைத்
தொடலிடை வைத்துநாவிற் சுழல்கின்றேன் தூய்மையின்றி
உடலிடை நின்றும்பேரா வைவராட் டுண்டுநானே. 590

589 நெஞ்சே நீ பரவு நாள்கள் முற்றின என்று முடிப்பதே காரணமாய் உற்றவன் போர்களாலே உணர்விலா அரக்கர் தம்மைச் செற்றமால் - அரைகோடியாண்டுகள் வாழ வரத்திற் பெற்ற ஆயுள் கடந்துவிட்டான் என்று, அவனையும் ஏனைய அரக்கரையும் மாய்ப்பதே காரணமாய்உற்ற வலிய போர்களாலே, தம் உயிருக்கும் கேடுண்டாக்கிக்கொள்ளும் அவ்வுணர்விலிகளை மாய்த்த இராமபிரான்; அவன் செய்த திருக்கோயில் ஆகிய திருவிராமேச்சுரத்தைப் பற்றிப், படர்ந்த சடையையுடைய ஈசன் பால் பரவு. நெஞ்சே நீ உலகிற் பரவிப் பிறப்பிறப்பிற்கென்னை யாளாக்காது, இராமேச்சுரத்தைப் பற்றிப் படர்சடை யீசன்பாலே பரவு. ஈசன்பாலே பரவு என்றதால், அதுவேற்றிடத்திற் பரவுதல் பெறப்பட்டது. நெஞ்சின் நினைவிற்குப் பற்றுக்கோடாதல் இராமேச்சுரம், நினைதலே பற்றுதல். கோயில் திருவிராமேச்சுரம், ஊர் பின்னர்த்தோன்றியது. இராமபிரான் காலத்தில் அங்கு ஊர் இல்லை. பரவுதல் - இறைவன் தங்கும் இடமாக விரிந்து நிற்றல், ‘ நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன் ’. நீர்மிக்குப் பரவிய ஏதுவாலே பரவை என்று கடற்கொரு பெயர் உண்டாயிற்று. மன வேளி பூதவேளியினும் பேரியது. அதனால், ஈசன்பாலே பரவு என்றார். சிவ வியாபகத்தின் அளவு பரவும் ஆற்றலை யெய்துக என்று ஏவியவாறு.

590. மலைகள் தம்மால் கடலிடை அடைத்துத்திடலிடைச் செய்த கோயில் :- மலைகளைக் கடலில் அடைத்து. நீரகற்றி நில மாக்கிய அத்திடலிற் செய்த திருக்கோயில் (ஆகிய திருவிராமேச் சுரம். மால் - இராமபிரான். கருமம் - இலங்கையை அழித்துச்

குன்றுபோற் றோளுடைய குணமிலா வரக்கர்தம்மைக்
கொன்றுபோ ராழியம்மால் வேட்கையாற் செய்தகோயில்
நன்றுபோ னெஞ்சமேநீ நன்மையை யறிதியாயில்
சென்றுநீ தொழுதுய்கண்டாய் திருவிரா மேச்சுரம்மே   .591

சீதையை மீட்டுவரச் செய்த வினை. முற்றி - முடிந்து. அடைத்ததும் திடல் செய்ததும் கரும முற்றியதும் முன்னும் அத்திடலிடைக் கோயில் செய்தது பின்னும் ஆகும். உடல் - திருநாவுக்கரசர் திருமேனி, உடலிடை நின்றும் பேரா ஐவர்:- ஐம்பொறிகள். ஆட்டுண்ணல் - பொறிவழிப் போய் வருந்துதல் பொறிவழிச் செல்லும் எவையும் உயிர்க்குத் தூய்மை விளைப்பன ஆகா. நாவில் தொடல் ஆம் வாக்கில் வைத்து. இடை - வாக்கு. ஐவர் ஆட்டுண்டு சுழல்கின்றேன், தூய்மையின்றி வைத்து எனலும் தூம்மையின்றிச் சுழல்கின்றேன் எனலும் பொருந்தும். தூய தன்மையன் என்னும் பொருளது சிவன் ' என்னும் பெயர்; அம் முழுமுதற் பொருளின் தூய்மையையும் தமது நாவின் தூய்மை யின்மையையும் எண்ணித் தூய்மையின்றிவைத்துச் சுழல்கின் றேன் என்றார் 'வாக்குத் தூய்மையிலாமையினாலே மாதவா வுன வாய்க்கொளமாட்டேன். நாக்குத்தான் என் சொல்வழி கேளா நான் அது ஒட்டேன் ' என்ற வைணவப் பெரியா(ழ்வா)ர் கருத்தும்இங்கு நோக்கத்தக்கது. அகத்தூய்மையின்றிப் புறத்தே பாடிக்கொண்டிருக்கின்றேன் என்றாராயிற்று. நெஞ்சம் ஐவரால் ஆட்டுண்டும் இராமேச்சுரத்தை நாவில் வைத்துச் சுழல்கின் றேன் எனலுமாம் ' இடை ' மூன்றும் ஏழனுருபின் பொருளன.

591. குன்றுபோல் தோள் உடைய அரக்கர், குணம் இலா அரக்கர். குணத்தால் அன்றித் தோளின் வலிய தோற்றத்தால் மட்டும் அரக்கரைக்கொன்று. தம் சாரியை. போர் ஆழி - போர் வெற்றியைத் தரும் சக்கிரப் படையையுடைய (மால்). அம்மால் - அந்தமால்; அழகியமால், இராமன் - அழகன் ; இனியன், வேட்கை - கொலைத்தீவினையைத் தீர்த்துக்கொள்ளும் பெருவிருப் பம் ; சிவபத்தியுமாம். நெஞ்சமே, நீ நன்மையை அறிதி ஆயில் திருவிராமேச்சுரமே சென்று தொழுது நீ உய். ' நன்றுபோல் நெஞ்சமே ' - நன்றுபோலும் என்றது நன்று அன்று தீதே என்ற தாம். தீதாதலின், நன்மையை அறிதி ஆயின், சென்று தொழுது

வீரமிக் கெயிறுகாட்டி விண்ணுற நீண்டரக்கன்
கூரமிக் கவனைச்சென்று கொன்றுடன் கடற்படுத்துத்
தீரமிக் கானிருந்த திருவிரா மேச்சுரத்தைக்
கோரமிக் கார்தவத்தாற் கூடுவார் குறிப்புளாரே. 592

உய்எனலாயிற்று. நீ என்பது இருமுறை நின்றது நெஞ்சொடுற்ற பேச்சு நடையாதலின், நன்மை - சிவம், சிவப்பேறு,.' அறிதல்' 'ஈண்டு', உயிர் அறிதற்குத் தான் கருவியாய் நின்று நினைதலை யுணர்த்திற்று. அறிதற்றொழில் உயிர்க்கே உரித்து. ஏனைத் தத்துவங்களுக்கில்லை.

592. வீரம் மிக்கு எயிறு (- கோரைப்பல்) காட்டி, விண் உறநீண்ட (ஓங்கி வளர்ந்த) அரக்கன் என்க. கூரம் - கொடுமை. க்ரூர் என்னும் வடசொல்லின் திரிபுஆகும். கூரமிக்கவன் - மிக்க கொடியன். கூரமும் உளர் கொடுபடையினும் உயிர் உணவல கொடியார்' (சிவதருமோத்தரம். 7:-45) சென்று கொன்று உடன் கடற்படுத்துத் தீரம் மிக்கான் (இராமபிரான்). இருந்த - கோயில் செய்து வழிபட்டு இருந்த. நீண்ட அரக்கன் :- கல்லாது நீண்டவொருவன் உலகத்து நல்லறிவாள ரிடைப்பட்டு மெல்ல இருப்பினும் நாய் இருந்தற்றே' (நாலடியார்) என்புழி நீட்சி காலத்திற்கும் அவன் உடலின் நெடியவளர்ச்சிக்கும் பொது வாதல் போல்வது. நீண்டு கூர எனினும் பொருந்தும். உடன்:- விரைவுப்பொருட்டு, ஏனைய அரக்கருடன் எனலுமாம். கடற் படுத்தல் - கடலில் வீழ்த்தல், மூன்றுலகிற்கும் அதிபதியாகிய பெரிய வீரனைக் கடற்படுத்தியது மிக்க தீரமாகும். கோரம் மிக்கார் - அகோர மந்திர செபத்தின் மிகுதியாற் கொடுவினை களைத் தவிர்த்துக்கொண்டசிவ நல்வினையாளர் ' ஆனைந்துந்தான் பருகிக் கோரம் இருநூறு' (தணிகைப், அகத். 391.) கோரம் - பூவரும்பு. (சூடாமணி நிகண்டு. 11. ரகரவெதுகை 6) அச்சம் எனக்கொண்டு, பிறப்பச்சம் மிக்கு அரிய தவத்தால் எனலும் ஆம். கூடுவார் குறிப்புள்ளார். குறிப்பு - சிவத்தையே பெறுதல் வேண்டும் என்னும் குறிக்கோள். மால்செய்கோயிலை யார் சென்று வழிபடினும் தத்தம் குறிப்பு (நினைப்பு) நிறைவேறப் பெறுவர் எனலுமாம்.

ஆர்வல நம்மின்மிக்கா ரென்றவவ் வரக்கர்கூடிப்
போர்வலஞ் செய்துமிக்குப் பொருதவர் தம்மைவீட்டித்
தேர்வலஞ் செற்றமால்செய் திருவிரா மேச்சுரத்தைச்
சேர்மட நெஞ்சமேநீ செஞ்சடை யெந்தைபாலே. 593

வாக்கினா லின்புரைத்து வாழ்கிலார் தம்மையெல்லாம்
போக்கினாற் புடைத்தவர்க ளுயிர்தனை யுண்டுமாலன்
தேக்குநீர் செய்தகோயி றிருவிரா மேச்சுரத்தை
நோக்கினால் வணங்குவார்க ணோய்வினை நுணுகுமன்றே.

593. நம்மினும் வலம் மிக்கார் ஆர் ? ஆர் நம்மின் வலம் மிக்கார் ? என்ற அவ்வரக்கர் கூடிப்பொருதனர். பொருத அவர் தம்மை வீட்டித் தேர்வலம்சென்ற மால். மால் செய் ஈச்சுரத்தை நெஞ்சமே சேர். எந்தைபால் சேர். அரக்கராகிய பொருதவர் எனலும் பொருந்தும். போர்வலம் - போர் வலிமை; வன்போர். மிக்கு - மேற்சென்று; மண்டி. பொருதல் - தாக்குதல்; போர் புரிதல். வீட்டி - அழித்து. தேர்வலம் :- தேர்ப்படைவலிமையு மாம். சென்ற - அழித்த. ஆர்வலம் - அன்பு. 673.

594. வாக்கினால் - இனியனவும் நல்லனவும் கூறிப் பழகத்தக்க வாயால். இன்பு - இன்பம் விளைப்பனவாய சொற் களை. உரைத்து - சொல்லி. வாழ்கிலார் - வாழாத அரக்கர். வாழ்கிலார் தம்மை யெல்லாம் - வாழமாட்டாத எல்லா அரக்கரை யும். போக்கினால் - போக்கத்தக்க படையால். புடைத்து - தாக்கி, அவர்கள் உயிரை உண்டு செய்த கோவில். மால் தான் செய்த கோயில். தேக்கு நீர் - தேங்குதலுடைய கடல் நீரில்; கட்டிய அணைக்கரையில். 'தேக்கு' என்னும் அடியாகப் பிறந்த பெயர். 'போகு' 'போக்கு', தேக்கம், ஒடுக்கம், அடக்கம் என்பவற்றின் அடியும் உணர்க. நோக்கு - அகநோக்கம், புறக் காட்சி இரண்டும் பொருளாகும். நோய்வினை - நோயும் அதற் கேதுவான வினையும். நுணுகும் - குறையும். 'உள்ளதன் நுணுக்கம்'. நோய் - இன்பத் துன்பம் (பிராரத்தம்). வினை - ஆகாமியம், சஞ்சிதம். மூலகன்மம் வேறு. இவை அதன் காரியம்.

பலவுநா ளடிமைசெய்து பார்தன்மேற் குழுமிவந்து
கொலைவிலார் கொடியரரய வரக்கரைக் கொன்றுவீழ்த்த
சிலையினன் செய்தகோயி றிருவிரா மேச்சுரத்தைத்
தலையினால் வணங்குவார்க டாழ்வராந் தவமதாமே. 595

கோடிமா தவங்கள்செய்து குன்றினார் தம்மையெல்லாம்
வீடவே சக்கரத்தா லெறிந்துபின் னன்புகொண்டு
தேடிமால் செய்தகோயி றிருவிரா மேச்சுரத்தை
நாடிவாழ் நெஞ்சமேநீ நன்னெறி யாகுமன்றே. 596

595. பலவும் நாள் - பலநாளும்; நாள் பலவும். பார் - மண்ணுலகு. குழுமி - கூடி; கொலைவில்; கொலைவில்லார்; கொலைவிலார். கொல்வார் செயல் கொல்லுங் கருவிக் கடையாயிற்று. வில்லாரும் கொடியரும் ஆய அரக்கர். 'கொன்று விழுத்த சிலையினன்' :- கொலையும் விழுத்தலும் சிலையினன் வினை. அவனது கருவி சிலை. 'சிலை' என்னும் மரத்தாற் செய்த லாற் பெற்ற பெயர். 'தலையே நீ வணங்காய்' தாழ்வர் - 'தாழ்வெனுந் தன்மை' யுடையவர்(579). ஆம் தவம் - ஆதற்கு ஏதுவான தவம். 'ஏகம்பம் மேவினாரைத் தலையினால் வணங்க வல்லார் தலைவர்க்குத் தலைவர் தாமே' (436). 'தலையினால் தொழுது ஓங்குவார் நீங்குவார் தடுமாற்றமே' (2. 77. 2).

596. மாதவங்கள் கோடிசெய்து எறிந்துகொண்டு தேடிச் செய்த கோயில். குன்றினார் - நல்லொழுக்கம் முதலியவற்றிற் குறைந்தவர். (அரக்கர்). வீட - அழிய. சக்கரம் - மரூஉ. சக்கிரம்' 'யரலக்கிகரம்'. ஈண்டுச் சக்கிரம் என்பது படை என்னும் பொருட்டாம். எறிந்து - வீசிக் கொன்று. மால் என்றது - ஈண்டு இராமபிரானை. நெஞ்சமே நீ நாடிவாழ். நல்நெறி ஆகும். 'நன்னெறி' :- 'நன்னெறியாகிய ஞானம்' (சிவஞானபோதம். சூ. 8. அதி. 1. ஏது.) 'நன்னெறியாகிய என ஞானத்தை விசேடித்தார்., நன்மையெனப்படுவன எல்லா வற்றுள்ளும் சிறந்த நன்மையெனப்படுவது வீடுபேறு என்ப. அதனைத் தலைப்படுதற்கு ஏதுவாய்ச் சிறந்த நெறியாகலின், ஞானம் நன்னெறி யெனப்பட்டது. (ஷை. மாபாடியம்). (கோடி-) தனுக்கோடியில் எனலும் ஆம்.

வன்கண்ணர் வாளரக்கர் வாழ்வினை யொன்றறியார்
புன்கண்ண ராகிநின்று போர்கள்செய் தாரைமாட்டிச்
செங்கண்மால் செய்தகோயி றிருவிரா மேச்சுரத்தைத்
தங்கணு லெய்தவல்லார் தாழ்வராந் தலைவன்பாலே. 597

வரைகளொத் தேயுயர்ந்த மணிமுடி யரக்கர்கோனை
விரையமுற் றறவொடுக்கி மீண்டுமால் செய்தகோயில்
திரைகள்முத் தால்வணங்குந் திருவிரா மேச்சுரத்தை
உரைகள்பத் தாலுரைப்பா ருள்குவா ரன்பினாலே. 598

திருச்சிற்றம்பலம்

597. வன்கண்ணர் - அகத்தின் வன்மையைப் புறத்திற் காட்டுங் (கொடுங்)கண்ணுடையர், தறுகண், கடுங்கண், இடுக்கண், மென்கண், புன்கண், செங்கண், கருங்கண், வெங்கண் முதலிய எவ்வொன்றும் ஒவ்வொரு பண்புணர்த்திவருவன. வாள் - கொடுமை. வாளுமாம். வாழ்வினை :- வாழ்வினை :- வினைத்தொகை. வாழ்வதற்கு உரியவினை, ஒன்று - சிறிது. புன்கண்ணர் - நோய்செய்வார். துன்பம் விளைப்போர். புன் கண் - துன்பம், நோய். மாட்டி - மாள்வித்து. (மாள்+த்+இ முதனிலை யீறும் இடைநிலையும் டகரமாய்த் திரிந்தன). கண்ணால் எய்தல் :- கண்டுபோற்றிவழிபடல். தலைவன்பால் தாழ் (தங்கு) வர் என்றவாறு. 'ஆம்' என்பது செய்யும் என்னும் முற்றன்று. அது பலர்பாற்படர்க்கைக்கு எய்தாது.

598. வரைகள் ஒத்தே உயர்ந்த - மலைகளைப்போன்று ஓங்கிய. விரைய ஒடுக்கி; முற்றும் ஒடுக்கி; அற ஒடுக்கி. மீண்டு செய்த கோயில். திரைகள் முத்துக்களைக் கரைக்கண் வீசி வணங்குந் திருவிராமேச்சுரம். அடியார்கள் மலர் தூவி வணங்குதல் போன்று அலைகள் முத்துக்களைத் தூவி வணங்குந் தோற்றம் கண்கூடு. உரைகள் பத்தால் - முன்னைய பத்துப் பாடல்களால். உள்குவார் - நினைப்பார். அன்பினாலே உள்குவார் உரைப்பார் என்க.

# 62 திருவாலவாய்

## திருப்பதிக வரலாறு

திருநாவுக்கரசு நாயனார். சீர்திகழும் பாண்டிமா தேவியாரும், திருநீற்றின் சார்வு அடையக் கூன் நிமிர்ந்த தென்னவனாரும் குலச்சிறையாரும் மிக்க காதலுற்றுப் பணிந்துபோற்ற மதுரையில் வாழ்ந்திருந்த காலத்தில், திருவாலவாயில் அமர்ந்த செழுஞ் சுடரும் செழும் பொருள் நூல் தரும் பெருமானுமாகிய சொக்கே சரைப் பாடிய நேரிசையும் தாண்டகமும் முதலான பெருவாய்மைத் தமிழுள் ஒன்று இத்திருப்பதிகம் (புராணம் 405 - 6).

### திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

வேதியா வேதகீதா விண்ணவ ரண்ணாவென்றென்
றோதியே மலர்கடூவி யொருங்கிநின் கழல்கள் காணப்
பாதியோர் பெண்ணைவைத்தாய் படர்சடை மதியஞ்சூடும்
ஆதியே யாலவாயி லப்பனே யருள்செயாயே. 599

599. வேதியா - மறைமுதல்வா ; வேதகீதா - வேதத்தைப் பாடுதலுடையவா ; வேதப்பாடலாய், விண்ணவர் அண்ணா - தேவாதி தேவா, என்று என்று ;- பன்மைக்குறிப்பு. என்று ஓதியே மலர்களைத் தூவுதல் வேண்டும். தூவுதல் தந்திரம். ஓதுதல் மந்திரம். அம்மந்திரத்தின் வாச்சியப் பொருளாக நினைத்தல் பாவனை. மந்திரம் தந்திரம் பாவனை ஆகிய மூன்றும் ஒருங்கு நிகழாதது நிறை வழிபாடன்று. ஏகாரம் ஓதாமையைப் பிரித்து நிற்றலின் பிரிநிலை. ‘ ஓதி மாமலர்கள் தூவி ’ (609) தேற்றமும் ஆகும். ஒடுங்கி - ‘ ஒன்றியிருந்து. படர்ந்த சடை மிசைப் பிறையைச்சூடும் முதல்வா, ஆலவாயில் - ஆலமரத்தின் கீழ். இந்நாயனார் அருளிய அடைவு திருத்தாண்டகத்தில் (6, 71, 7) நெய்தல் வாயில், முல்லைவாயில், ஞாழல் வாயில், மதுரை நகர் ஆலவாயில், புனவாயில், குடவாயில், குண வாயில் என்றவற்றை நோக்கின், திருவிளையாடற் புராணத் திலே திருவாலவாய் ஆன படலத்திற் (19 - 26 பா.) கூறிய

நம்பனே நான்முகத்தாய் நாதனே ஞானமூர்த்தீ
என்பொனே யீசாவென்றென் றேத்திநா னேசற்றென்றும்
பின்பினே திரிந்துநாயேன் பேர்த்தினிப் பிறவாவண்ணம்
அன்பனே யாலவாயி லப்பனே யருள்செயாயே.　　600

பெயர்க்காரணம் எத்தகையது என்றும் உணரலாம். வாயும் வாயிலும் ஒன்றே? முல்லைவாயில், ஞாழல் வாயில் முதலிய வற்றிலுள்ள 'வாயில்' என்பது வாயாகிய உறுப்பினைக்குறிக் குமோ? ஆலவாயிலும் ஞாழல் வாயிலும் மரத்தைக் குறித்து வந்த பெயராதலை இந்நாயனார் திருவாக்கைக்கொண்டு நன் குணரலாகாதோ? 'வாயில் புகுவார்' என்று அத்திருத்தாண் டகம் உணர்த்தும் ஒன்றே, ஆலம் (- நஞ்சு. அது) பாம்பிற்கு ஆகுபெயராய், வாலை வாயில் வைத்து எல்லை காட்டிற்று என்றதைக் கட்டு என்று காட்டும். இத்திருப்பாடலிலும் ஆல வாயில் அப்பனே' என்றதன்றி, ஆலவாய் என்னுமை அறிக. 'அப்பன்' :- 'அம்மையப்பன்' எல்லாவுயிர்க்கும் இவன் ஒருவனே அப்பன், 'அம்மையே அப்பா'.

600. நம்பனே-எல்லா வுயிர்களும் உறும் நசைக்குரியனே: 'நம்பும் மேவும் நசையாகும்மே' (தொல். உரி) 'நான் முகத் தாய்' - நான்கு முகங்களை யுடையவனே. 'நாலு கோலாம் அவர் தம் முகம் ஆவன' 180 குறிப்பிற் காண்க. மலரவனே எனல் ஈண்டுப் பொருந்தாது. நான்முகத்திற்குத்தக 'எண்டோள்' உண்மை பயின்ற வழக்கு. 'எண்டோள் வீசிநின்றுடும் பிரான்' 'எட்டுக் கோலாமவர் தோளிணை யாவன' 'எண்டோள் முக்கண் எம்மானே'. நாதன் - இயவுள். ஞானமூர்த்தீ - அருளுருவினனே; துரியநிலை. இன்புருவம் துரியாதீத நிலை. என் பொனே - எனக்குப் பொன்னுயிருந்து நிலைத்த பயனைச் செய் பவனே. ஏனைய பொன் தானும் நிலையாது. தன்னால் எய்தும் பயனும் நிலையாது. அஃது அனைவர்க்கும் உரிய பொன். இது பெற்றோர்க்கே உரித்து. ஆதலின் 'என்பொன்' என்றார். ஈசா- உடையாய். என்று என்று :- 599 குறிப்பு. 'ஏசற்று - மன முதலிய விகாரங்களை அகற்றுதல். 'பூசித்துப் பரமசிவன் பூசனையைப்போல் உளத்துள் ஏசற்று வலஞ்செய்து பணிந்து குவித்து இருகரமும் தேசுற்ற தேசிகனே சிவஞானதானவினை

ஒருமருந் தாகியுள்ளா யும்பரோ டுலகுக்கெல்லாம்
பெருமருந் தாகிநின்றாய் பேரமு தின்சுவையாய்க்
கருமருந் தாகியுள்ளா யாளும்வல் வினைகடீர்க்கும்
அருமருந் தாலவாயி லப்பனே யருள்செயாயே. 601

ஆசற்று நிறைவேற அநுமதம் செய்க' (சிவதருமோத்தரம். சிவஞானதானவியல். 27 உரை). இதற்குரிய பிற பொருள் ஈண்டுப் பொருந்தா. என்றும் பின்பினே திரிந்து :- 'தோள்மேல் நீறுகொண்டு........இட்ட.........நெற்றி நெறியிலங்கு கூந்தலார் பின்பின் சென்று' (5. 13. 7). 'பண்மலிந்த மொழியவரும் யானும் எல்லாம் பணிந்திறைஞ்சித் தம்முடைய பின்பின் செல்ல......வலம்புரமே புக்கு அங்கே மன்னினாரே' (6. 58. 1) 'குழகனா......ரைக் கண்டு அடியேன் பின்பின் செல்லப் புறக் கணித்துத் தம்முடைய பூதம் சூழ வா வா என உரைத்து மாயம் பேசி வலம்புரமேபுக்கு அங்கே மன்னினாரே' (ஷை. 4) என்று பிறாண்டும் ஆண்டான் பின்னே அடிமை போதலை யுணர்த்திய தறிக. 'உலப்பிலா ஆநந்தமாய தேனினைச் சொரிந்து புறம் புறம் திரிந்த செல்வமே'. குழந்தை (அடிமை)யான உயிரின் பின், ஆண்டருளியதாயுமானார் போதலையும், 'புலன்கள் ஐந்தால் ஆட்டுண்டு போதுபோக்கிப் புறம் புறமே திரியாதேபோது நெஞ்சே' (6. 31. 10) என்று பொறிபுலன் பின்னே நெஞ்சம் போதலையும் குறித்தல் அறிந்து. பிறவாமைக்குத் தக்க போக்கைக் கடைப்பிடிக்க பேர்த்து (பெயர்த்து) மீண்டு. இனிப் பேர்த்து என்க. பேர்த்துப் பிறத்தலின் எதிர்மறையாதலின், பேர்த்து என்னும் வினையெச்சம் பிறத்தல் என்னும் தொழிற் பெயரின் முதனிலை கொண்டது. பிறவாவண்ணம் அருள் செய்யாய். அன்பனே :- 'அன்பே சிவம்'. 'எந்தை; யாய்; எம்பிரான் மற்றும் யாவர்க்கும் தந்தை; தாய்; தம்பிரான். தனக்கு அஃதுஇலான்' (திருவாசகம்).

601. ஒரு மருந்து - தனி மருந்து. ஒப்பொன்றும் இல்லாதது. பெரு மருந்து - ஏனைய மருந்துகட்குத் தலையான மருந்து. கருமருந்து - பிறவிப்பிணி தீர்க்கும் மருந்து. 'சிவஞானமிர்தம்' 'ஞானமிர்தம்' 'சிவானந்தாமிர்தம்' 'ஆநந்தாமிர்தம்' "ஞானமயமாய்ப் பிரிப்பின்றி நின்று அநாதியே தொடர்ந்து

செய்யநின் கமலபாதஞ் சேருமா தேவர்தேவே
மையணி கண்டத்தானே மான்மறி மழுவொன்றேந்தும்
சைவனே சாலஞானங் கற்றறி விலாதநாயேன்
ஐயனே யாலவாயி லப்பனே யருள்செயாயே. 602

வெண்டலை கையிலேந்தி மிகவுமூர் பலிகொண்டென்றும்
உண்டது மில்லைசொல்லி லுண்டது நஞ்சுதன்னைப்
பண்டுனை நினையமாட்டாப் பளகனே னுளமதார
அண்டனே யாலவாயி லப்பனே யருள்செயாயே. 603

. . . . . . . . . . . . . . . . .

வரும் பிறவிப்பிணியினை அறுத்தற்கு ஓர் மருந்தாந்தன்மையினை யுடையவன் அக்கடவுள். அதற்கு ஐயம் இல்லை. அதனை எஞ்ஞான்றும் இடைவிடாது அன்புடன் நினைப்பீராக '' (நிரம்ப வழகிய தேசிகர் உரை) 'உன்னும்.........மன்னுபவந் தீர்க்கும் மருந்து' (திருவருட்பயன். 10). 'மன்னுவார் மணஞ்சேரி மருந்தினை உன்னுவார் வினையாயின ஓயுமே' (5. 87. 2). ஒன்றே பிறவிநோய்தீர்க்கவல்ல பெறலரும் பெருமருந்தாதலின், ஒருமருந்து, பெருமருந்து, கருமருந்து, அருமருந்து என்றார். உம்பருலகு - இம்பருலகு எல்லாவற்றிற்கும் பெரியதொரு மருந்து பிறிதில்லை. பேரமுதின் சுவை (- பேரின்பச் சுவை) யாதலின் 'கருமருந்து'ம் வல்வினைகள் தீர்க்கும் அருமையால் 'அருமருந்து'ம் ஆயிற்று. திருவாசகம் 618. 620. 624. 632.

602. செய்ய - சிவந்த ; 'செம்மை' யதாகிய. கமல பாதம் - தாமரைப்பூப்போலுந் திருவடி. சேரும் ஆ - இடை விடாது நினையும் ஆறு. சேருமா அருள் செயாய் என்க. தேவர்தேவே - தேவர்க்கெல்லாம் தலைமைத் தேவாயுள்ளவனே. மை - நீலவிடம், பண்பாகு பெயர். 'நீலவிட அரவணிந்த நிமலா' ; 'நீலகண்டன்', மான் மறி - மான்கன்று, மழு - மழுப்படை, சைவனே - (சிவசம்பந்தனே) சைவ சமயத்தின் கடவுளே. சாலக்கற்றறிவு. ஞானம் கற்றறிவு, ஞானம் சாலக் கற்றறிவிலாதநாயேன். நாயேனுடைய ஐயனே. (என்னையனே), திருவாலவாயில் அப்பனே நின் கமலபாதம் சேருமாறு அருள் செயாய்.

603. வெள்தலை - பிரமகபாலம், மிகவும் கொண்டு, மிகவும் உண்டதும் இல்லை எனல் இறவாது, பலிகொண்டு

எஞ்சலில் புகலிதேன்றேன் றேத்திநா னேசற்றேன்றும்
வஞ்சக மோன்றுமின்றி மலரடி காணும் வண்ணம்
நஞ்சினை மிடற்றில்வைத்த நற்போருட் பதமேநாயேற்
கஞ்சலேன் றுலவாயி லப்பனே யருள்செயாயே. 604

வழுவிலா துன்னைவாழ்த்தி வழிபடுந் தோண்டனேனுன்
செழுமலர்ப் பாதங்காணத் தேண்டிரை நஞ்சமுண்ட
குழகனே கோலவில்லி கூத்தனே மாத்தாயுள்ள
அழகனே யாலவாயி லப்பனே யருள்செயாயே. 605

உண்டதும் இல்லை. பலியைக்கோண்டதே அன்றி உண்டதே இல்லை. நஞ்சினைத்தான் உண்டது. பண்டு - பலபிறவியாக. உன்னை நினையமாட்டாப் பளகன். பளகு - குற்றம். 'நேஞ்சே பளகறுத்து உடையான் கழல் பணிந்திலே பரகதி புகுவானே' (திருவாசகம் 39) 'பளகறும் இட்டியாதி பசு தருமங்கள் காலத்தளவையிற் கழியும்' (காஞ்சிப்புராணம், சத்ததானப் 7) பளகனேன் - குற்றத்தினேன், 'குற்றமே பேரிதுடையேன்' உளம் ஆர, அது பகுதிப் போருட்டு. அண்டன் - தேவன், எல்லாவுயிர்களும் அண்டற்குரியவன். அண்டமானவன். ஆர அருள் செயாய். ஆர - நிறைய.

604. எஞ்சல் - குறைதல், இல் - இல்லாத, புகல் - புகும் இடம்; அடைக்கலம் புகுதற்குரிய மேய்ப்போருள், இது - இத்திருவாலவாயப்பன் மலரடி, என்று ஏத்தி நான் ஏசற்று வஞ்சகம் ஒன்றும் (சிறிதும்) இன்றி மலரடி என்றும் காணும் வண்ணம் நஞ்சினை மிடற்றில் வைத்த நற்போருட்பதமே, நாயேற்கு அஞ்சல் என்று அருள் செய்யாய். நற்போருள் - சிவம். அச்சிவம் என்னும் போருளைக் குறிக்கும் சிவமேனும் நாம பதம் நற்போருட் பதம். பதம் (சோல்) வேறு பதார்த்தம் (சோற் போருள்) வேறு. 'நற்பதத்தார் நற்பதமே..... ...நால் வேதத்து அப்பால் நின்ற சோற்பதத்தார் சோற்பதமும் கடந்து நின்ற சோலற்கு அரிய சூழலாய் இது உன் தன்மை' என்றும் வஞ்சகம் இன்றி எனலுமாம். என்றும் காணும் வண்ணம் நஞ்சினை மிடற்றில் வைத்த நற்போருட்பதம் எனல் சிறந்தது. (ரிய திருநிலை. 4).

605. 'வழுவிலாது உன்னை வாழ்த்தி வழிபடுந்தோண் டனேன்' என்றது கோண்டு நாயனூர்க்குச் சோக்கலிங்கமே

நறுமலர் நீருங்கொண்டு நாடோறு மேத்திவாழ்த்திச்
செறிவன சித்தம்வைத்துத் திருவடி சேரும்வண்ணம்
மறிகடல் வண்ணன்பாகா மாமறை யங்கமாறும்
அறிவனே யாலவாயி லப்பனே யருள்செயாயே. 606

ஆன்மார்த்த பூசா மூர்த்தி என்பர். வழு - கேடு ; தவறு ; பாதகம். கடவுளை வாழ்த்துவதிற் கேடும் தவறும் பாதகமும் உறலாகாது. வாழ்த்துதல் - வழுத்துதல் ; வாழ்க என நினைந்து சொல்லிக் கையாற் குறித்தல். 'வழு' 'வாழ்' என்னும் இரண்டிற்கும் உரியது அம்முதனிலை, அது 'விழு' 'விழை' இரண்டிற்கும் 'வீழ்' என்னும் முதனிலை யுரித்தாதல் போல்வது. வழிபாடு - அருள்வழி யொழுக்கம். 'தொண்டன்' என்னும் படர்க்கைப் பெயரைத் தன்மையாக்கித் தொண்டனேன் எனல் தொல்வழக்கு. 'பளகனேன்' (603) என்றதும் அது. உன் பாதம். செழுமலர் - தாமரைப்பூ. மலர்ப்பாதம் - 'கமல பாதம்' (602). காண அருள் செயாய், நஞ்சம் உண்டும் பொலிவு குன்றுமையாற் 'குழகன்' (அழகன், இளமையன்) என்றார். கோலவில்லீ - அழகிய மேருவில்லாளனே, கூத்தனே - கான்மாறியாடியவனே. மாத்து - பத்தரைமாற்றுத் தங்கம். இது 'சொக்கன்' என்னும் பெயர்ப் பொருளின் விளக்கம். சொக்கு - அழகு, பொன், மயக்கு. மாத்தாயுள்ள அழகன் என்றதும் அம் முப்பொருளும் பயத்தல் அறிக. 'ஆனுய்' (சங்கற்ப நிராகரணம். 12 ;- 80 - 81) 'மாற்றிலாச் செம்பொனுவர் மாற்பேறரே'.

606. நறுமலரும் நீரும் கொண்டு நாள்தோறும் (நீர்) ஆட்டியும் (மலர்) தூவியும் ஏத்தியும் வாழ்த்தியும் சித்தம் வைத்தும் திருவடி சேரும் வண்ணம் அருள் செய்யாய். செறிவன - திருவடியிற் செறிதற்குரிய நெறிகள் பலவற்றால் ; யோகமார்க்கங்களால். யோகம் - செறிவு. சீலம் (- சரியை) நோன்பு (- கிரியை) செறிவு (யோகம்). அறிவு (ஞானம்)' (திருவாசகம். 645) மறிகடல் வண்ணன் பாகா :- 'இடமால் தழுவிய பாகம்' '(14)' மையரிக்கண்ணியாளும்மாலும் ஓர் பாகம் ஆகிச் செய்அரிதில்லை தன்னுள் திகழ்ந்த சிற்றம்பலத்தே கையெரிவீசி நின்று கனலெரியாடுமாறு,' (221). நால் வேதமும் ஆறங்கமும் அறிதலுடையவனே.

நலந்திகழ் வாயினூலாற் சருகிலைப் பந்தர்செய்த
சிலந்தியை யரசதாள வருளினு யென்று திண்ணம்
கலந்துடன் வந்துநின்ருள் கருதிநான் காண்பதாக
அலந்தன னுலவாயி லப்பனே யருள் செயாயே 607

பொடிக்கோடு பூசிப்போல்லாக் குரம்பையிற் புந்தியோன்றிப்
பிடித்துநின் ருள்களேன்றும் பிதற்றிநா னிருக்கமாட்டேன்
எடுப்பனேன் றிலங்கைக்கோன்வந் தேடுத்தலு மிருபதுதோள்
அடர்த்தனே யாலவாயி லப்பனே யருள்செயாயே. 608

திருச்சிற்றம்பலம்

607. சிலந்தி வாயில் திகழும் நலம், முழுமுதல்வனுக்கு உரியதான பந்தர். சிலந்தி வாய்நூலாற் செய்த நிழல், பந்தர் நிழல் போல்வதொரு நலம் விளைத்தது. 'சருகிலைப்பந்தர்' :- 'ஞானமுடைய ஒரு சிலந்தி நம்பர் செம்பொற்றிருமுடிமேற் கானல் விரவுஞ் சருகுதிராவண்ணம் கலந்த வாய்நூலான் மேனற்றிரு மேற்கட்டியென விரிந்து செறியப் புரிந்துளது, 'எம்பிரான்றன் மேனியின்மேற் சருகு விழாமை வருந்தி உம்பர் இழைத்த நூல்வலயம்' (பெரியபுராணம் கோச்செங்கட் சோழ நாயனுர். 3,5) என்றதால், சருகிலை விழாதவாறு செய்த பந்தர் (சருகு இல்லையாகச் செய்த பந்தர்) என்க.

608. இலங்கைக் கோன் (திருக்கைலையை) 'எடுப்பன்' என்று வந்து எடுத்தலும் (அவன்) இருபது தோள்(களையும்) அடர்த்தலைச் செய்தவனே ! ஆலவாயில் அப்பனே நான் போல்லாக் குரம்பையில் போடிக்கோடுபூசிப் புந்திஒன்றி நின் தாள்கள் பிடித்து என்றும் பிதற்றியிருக்கமாட்டேன். அவ்வாறு இராமல் நின் தாள்களைப் பிடித்துப் பிதற்றி என்றும் இருக்க அருள் செய்யாய். திருநீறு இன்றிச் சிவவழிபாடு செய்தலாகாது. 'நீற்றினை நிறையப்பூசி நித்தலும் நியமஞ் செய்து ஆற்றுநீர் பூரித்தாட்டும் அந்தணனுர்' 'மந்திரம் நமச்சிவாய ஆக நீறணியப்பெற்ருல் வெந்தறும் வினையும் நோயும் வெவ்வழல் விறகிட்டன்றே' (749) 'திருவாய் பொலியச் சிவாய நம என்று நீறணிந்தேன்' (918).

## 63 திருவண்ணுமலை

### திருப்பதிக வரலாறு

மலைநாட்டுப்பதிகளை இறைஞ்சி வண்டமிழ்பாடி, மாதோர் பாகர் அருளாலே வடபால் நோக்கி ஆதிதேவர் அமர்ந்த திருவண்ணுமலையை நண்ணிய வாகீசர், அதனைத்தொழுது வலங் கொண்டு, அதன்மிசையேறி, தொண்டர் தொழும்புக்கு எதிர்நிற்கும் அங்கணரைசத் தொழுது எழுந்து திளைத்து. தங்கு பிறப்பே வீட்டினுக்கு மேலாம் பெருமை சாதித்து, அண்ணுமலை மேல்அணி மலையை, ஆராத அன்பின் அடியவர் கண்ணாரமுதை, விண்ணுரைக்காக்க, எவரும் உண்ணுத நஞ்சை உண்டானைக் கும்பிட்டு உருகும் சிந்தையுடன் பணிந்து பரவிப் பாடிய பண்ணுர் பதிகத் தமிழ் இது. (பெரிய புராணம் 311 - 13).

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

ஓதிமா மலர்கடுவி யுமையவள் பங்காமிக்க
சோதியே துளங்குமெண்டோட் சுடர்மழுப் படையிஞனே
ஆதியே யமரர்கோவே யணியண்ணு மலையுளானே
நீதியா னின்னையல்லா னினையுமா நினைவிலேனே. 609

609. மாமலர்கள் - சிவார்ச்சனைக்கு விதித்த சிறந்த பூக்களை. ஓதித் தூவி - சிவநாமங்களை ஓதி அருச்சித்து. தூவி நினையுமாறு. நின்னை அல்லால் நினையுமாறு. நினைவு இல்லேன். ஓதிய நாமங்களுள் ‘ உண்மையவள் பங்கா, மிக்க சோதியே, துளங்கும் எண் தோள் சுடர் மழுப்படையிஞனே, ஆதியே, அமரர்கோவே, அணியண்ணுமலையுளானே ’ என்பனவும் அடங்கும். நீதி - சிவாகமமுறை, நினையல்லால் ஓதித் தூவி நினையுமாறு மற்றெவரையும் நினைவு இல்லேன், ‘ அண்ணுமலையனை மறந்துய்வனே ’ (திருக்குறுந் தொகை) என்று தங்கு பிறப்பே வீட்டினுக்கு மேலாம் பெருமை சாதித்தவுண்மைக்குச் சேக்

பண்டனை வென்றவின்சொற் பாவையோர் பங்கநீல
கண்டனே கார்கொள்கொன்றைக் கடவுளே கமலபாதா
அண்டனே யமரர்கோவே யணியணு மலையுளானே
தொண்டனே னுன்னையல்லாற் சொல்லுமா சொல்லிலேனே.

கிழார் திருவாக்கே சான்றாதலறிக. 'உண்ணுமலையுமையாளொடு முடனாகிய வொருவன்' ஆதலின் 'உமையவள் பங்கா என்றும், பேரழலுருவாதலின், ' மிக்க சோதியே என்றும், அழலாய் நின்றவாறே நில்லாது, அவ்வரியயனிருவரும் ஏனைய எல்லாவுயிரும் உய்யும் பொருட்டு அங்கம் பிரத்தியங்கம் சாங்கம் உபாங்கம் உடைய திருவுருக் கொண்டருளினுன் ஆதலின், ' துளங்கும் எண்டோட் சுடர் மழுப்படையினுன் ' என்றும், அவனே மூவர்க்கும் முதல்வன் (சதுரன்) ஆதலின் ' ஆதியே ' என்றும், எல்லாத் தேவர்க்கும் மகாதேவனுதலின், அமரர் கோவே ' என்றும், அத்தகைய பெறுதற்கு அரியன் ஆயினும் காட்சிக்கு எளியன் அணியன் ஆகி நினைக்க முத்திதருதலால், ' அணி அணுமலையுளானே ' என்றும், நெஞ்சம் அவனுக்கே இடமாக வைத்து இரவும் பகலும் எப்பொழுதும் பிரியாது வணங்கும் அன்பே அமைந்தவராதலின் 'தொண்டனேன்' (610) என முன்னும் பின்னும் குறித்தற்குத்தக்க ஏதுவாய்ச் சிவாகம நீதிப்படி தமக்கையாரால் ஆட்கொள்வித்தமையை மறவாதவர் ஆதலின், ' நீதியான் ' என்றும், அவனுக்கே இடமாக்கிய நெஞ்சத்திற் பிறனுக்கு இடமின்மையால், ' நின்னையல்லால் நினையுமா நினைவிலேன் ' என்றும் பாடியருளினுர் பாவேந்தர். நினைதல் (- மனம்) ஓதல் (வாக்கு) தூவுதல் (காயம்) என்னும் முப்பொறிக்குமுரிய வழிபாடுணர்த்திற்று.

610. பண்தனை - பண்ணிசையினிமையை. ஆகுபெயர். வென்ற - வெற்றி கொண்ட, இன்சொல் - இனியவாய சொற்களையுடைய பாவை :- உவமவாகுபெயர். கார்கொள் கொன்றை :- ' கண்ணிகார் நறுங்கொன்றை '. கடவுள் :- பாசஞான பசுஞானங்களைக் கடந்த பதிஞானமூர்த்தி. அண்டன் - தேவன். தொண்டனேன் உன்னை அல்லால் சொல்லுமாறு ஒரு சொல்லும்

உருவமு முயிருமாகி யோதிய வுலகுக்கெல்லாம்
பெருவினை பிறப்புவீடாய் நின்றவெம் பெருமான்மிக்க
அருவிபொன் சொரியுமண்ணு மலையுளா யண்டர்கோவே
மருவிநின் பாதமல்லான் மற்றொரு மாடிலேனே. 611

பைம்பொனே பவளக்குன்றே பரமனே பால்வெண்ணீறு
செம்பொனே மலர்செய்பாதா சீர்தரு மணியேமிக்க
அம்பொனே கொழித்துவீழு மணியணு மலையுளானே
என்பொனே யுன்னையல்லா லேதுநா னினைவிலேனே. 612

611. உருவம் ஆகி ஓதிய உலகு - காரியமாம் அசேதன ப்ரபஞ்சம்; (சடம்) காரணம் மாயை. உயிரும் ஆகி ஓதிய வுலகு - சேதன ப்ரபஞ்சம்; (சித்து). பெருவினை :- மூலகன்மம் நுண்வினை. ஏனைய மூன்றும் பருவினை. பிறப்பாய் நின்ற எம்பெருமான். வீடாய் நின்ற எம்பெருமான். 'ஊனநாடகம்' 'ஞானநாடகம்' 'பந்தமும் ஆய் வீடும் ஆயினர்' (திருவாசகம். 214) 'மருவி அல்லால் மற்றொரு மாடிலேன்'. மாடு - செல்வம். 'செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே'. 'மலையுளான்' 'மலையுளாய்' என்றது அருளுரை. அஃது என்றும் பொய்யாகாது.

612. பைம்பொன் - தங்கம். தணிகைப்புராணம்-களவுப் 341). செம்பொன் - பொன். செம்பு, வெண்பொன் - வெள்ளி. இரும்பொன் - இரும்பு. பவளக் குன்று - 'பவளம்போல் மேனி'. பரமன் - எல்லாத் தேவர்கட்கும் மேலான தேவன். மலையாதவன் - பவளம்போல் மேனியிற் பால். வெண்ணீறு. சீர் - கனம். மணி - மாணிக்கம். அம் - அழகு. பொன்னை கொழித்து வீழும் மலை. என் பொனே - என்னுடைய பொன் போலும் சாலச் சிறந்த சிவஞானப் பொலிவுடைய ஆநந்த வெள்ளமே. ஏதும் - எப்பொருளையும். நினைவு - நினைதல். மலர்செய் பாதா - அன்பர்களது அகத் தாமரை மலர்தலைச் செய்யும் திருப்பாதனே. 'மலர்' முதனிலைத் தொழிற்பெயர். 'செய்பாதா' வினைத்தொகை. 'மலர்செய்' இரண்டனுருபு விரித்துரைத்துக்கொள்க செம்பாதமும் செய்பாதமும் ஒன்றுதா.

பிறையணி முடியினானே பிஞ்ஞகா பெண்ணோர்பாகா
மறைவலா விறைவாவண்டார் கொன்றையாய் வாமதேவா
அறைகழ லமரரேத்து மணியணா மலையுளானே
இறைவனே யுன்னையல்லாலி யாதுநா னினைவிலேனே. 613

புரிசடை முடியின்மேலோர் பொருபுனற் கங்கைவைத்துக்
கரியுரி போர்வையாகக் கருதிய காலகாலா
அரிகுல மலிந்தவண்ணா மலையுளா யலரின்மிக்க
வரிமிகு வண்டுபண்செய் பாதநான் மறப்பிலேனே. 614

613. பிறை அணி முடியினானே - பிறை சூடிய சடைமுடிக் கடவுளே; பிஞ்ஞகா - தலைக்கோலத்தானே; பெண் ஓர் பாகா :- மாதியலும் பாதியனே; மறைவலா - நான்மறைகளையும் தோற்றிய வன்மையனே; மறைப்பொருள் உணர்ச்சியில் வல்லவனே; இறைவா - எப்பொருட்கண்ணும் இருப்பவனே; வண்டார் கொன்றையாய் - ' வண்டார் கொன்றையுன்மத்தம் வளர்சடைக் கொண்டான் ' (5 - 53 - 6). வாமதேவா - ' கங்கை சூடும் வாமன் ' (427). அறைகழல் - ஒலிக்கும் வீரகண்டை. ' இறைவா ' ' இறைவனே ' என்று ஈரிடத்து வந்தமையால் முன்னதற்குத் ' தங்குவோன் ' என்றும், பின்னதற்குத் 'தலைவன்' என்றும் பொருள்கொள்க. இறை என்பது தங்குகை; தலைமை; கடவுள்; தலைவன் என்பன முதலிய பல பொருள் பயக்கும்.

614. புரிசடை முடியின் மேல் (- முறுக்குண்ட சடை முடியின் மிசையில்). ஓர் கங்கை என்னும் பொருபுனல் நங்கையை வைத்து, யானைத் தோலைப் போர்வையாக நினைந்து மேற்கொண்ட காலகாலா. ' யானையின் பசுந்தோல் பிறருடம்பிற் பட்டால் கொல்லும் ' (சிந்தாமணி. 2787 நச்சினார்க்கினியர் உரை) ஆயினும் நஞ்சண்டேசுரன் அது போர்த்தும் இறவா திருந்தமையால், ' காலகாலா ' என விளித்தருளினார். ' ஆளும் நாயகன் அஃதறிந்துயிர்த்தொகை அனைத்தும், வாளிலாது கண்ணயர்வது மாற்றுதல் மதித்து, நீளிருங் கரியுரித்திடும்

இரவியு மதியும்விண்ணு மிருநிலம் புனலுங்காற்றும்
உரகமார் பவனமெட்டுந் திசையொளி யுருவமாகுய்
அரவுமிழ் மணிகொள்சோதி யணியண்ண மலையுளானே
பரவுநின் பாதமல்லாற் பரமநான் பற்றிலேனே. 615

அதளினை நிமலன், ருளின் மேற்கொடு போர்த்தனன் அருள்புரி தொடர்பால்' ஐயன் மிக்கதன் கதிரினைக் குருதிநீரருத, மையல் யானைவன்றுேலை மேற்கோண்டனன் மறைத்தான்' (கந்த புராணம். ததீசியுத்தரப் படலம். 148, 149). அப் படலத்திற் புலித்தோல், மழுப்படை, மான், பாம்பு, தலை, துடி, பூதப்படை, முயலகன் முதலியவற்றின் வரலாற்றுக்களைக் காரணத்தோடும் உணர்க. அதனுல், திருமுறைகளுள் அவற்றைப் பலமுறையும் கூறுதல் சிவப்பிரபாவம் சிந்தையிடையருதிருத்தற் பொருட்டு என்றுணரலாம். அரிகுலம் - சிங்கத்திரள். அரியேன்றதன் பற்பல பொருள்களுள்ளே மலைக்கேற்புடையன யாவும்கொள்க. அலர் - பூ. முதனிலைத் தொழிலாகுபெயர். வரி - கீற்று. பாட்டுமாம். பண் - இசை.

615. இரவி - சூரியன். மதி - சந்திரன். விண் - ஆகாயம். இருநிலம் - பெரும்பூமி. புனல் - நீர். காற்று (கால்+து=) காலுதலுடையது, வாயு. உரகம் - பாம்பு. உரம்-மார்பால், கம் - நகர்வது. ஆர் - ஆர்தல் - உண்ணல். பவனம் - காற்று. 'காலே மிகவுண்டு காலே யிலாத கணபணத்தின் மேலே துயில் கோள்ளும் மாலோன்' (கந்தரலங்காரம்) 'வாயுவான பஞ்சடைத்துத் திருமால் துயிலும் மலரணையே' (சேவ்வந்திப் புராணம்) 'பவனசனம்', 'பவனம் எட்டும்':- 'பூதலங் களவை யேட்டும்' (6. 34. 9) என்று பின்னும் கூறிய துணர்க. பவனம் பூமி என்னும் பொருட்டாய் நின்று மக்கட்கு இடவாகு பெயராய், எட்டுருவில் ஒன்றும் புலனுயமைந்தனைக் குறித்ததாகக் கோள்ளல் பொருந்தாது. ஒளியுருவம்' - தீ. உரகம் :- ஈண்டு ஆதிசேடனைக் குறித்தது. ஆர்வனம் - (சுமையாகப்) பொருந்திய பூமி. பரவுதல் - வாழ்த்தல். 'திசை யொளியுருவம் :- அண்ணமலையின் வரலாற்றுக்குறிப்பு.

பார்த்தனுக் கன்றுநல்கிப் பாசுப தத்தையீந்தாய்
நீர்த்ததும் புலாவுகங்கை நெடுமுடி நிலாவவைத்தாய்
ஆர்த்துவந் தீண்டுகொண்ட லணியணு மலையுளானே
தீர்த்தனே நின்றன்பாதத் திறமலாற் றிறமிலேனே. 616

பாலுநெய் முதலாமிக்க பசுவிலைந் தாடுவானே
மாலுநான் முகனுங்கூடிக் காண்கிலா வகையுணின்றாய்
ஆலுநீர் கொண்டல்பூக மணியணு மலையுளானே
வாலுடை விடையாயுன்றன் மலரடி மறப்பிலேனே. 617

616. பார்த்தன் - அருச்சுனன். நல்கி - அருளி, 'பாசுபதத்தை யீந்தாய்.' (71) நீர் ததும்பு உலாவுகங்கை - நீர் ததும்பும் கங்கை. உலாவும் கங்கை. ததும்பியுலாவுங்கங்கை எனல் சிறவாது. நெடுமுடியில் நிலாவக் கங்கையை வைத்தாய். நெடுமுடி நிலாத் தோன்றவைத்ததுமாம். கொண்டல் - கீழ்க்காற்றுலடிக்கப்பட்டு வரும் மேகம் ஏனைய, கோடை தென்றல் வாடை மூன்றும் முறையே மேற்கு, தெற்கு. வடக்குத் திசைகளின் காற்றைக் குறிப்பன. ஆர்த்து - இடித்து முழங்கி. ஈண்டு - செறிகின்ற, தீர்த்தன் - தூயன். 'அடிமைத் திறம்' 'சைவத்திறம்'.

617. பாலும் நெய்யும் முதலாக ஐந்து. மிக்க - மேம்பட்ட, பசுவில் ஐந்து - 'ஆனகம் அஞ்சும்'. (513). 'ஆனிடை ஐந்தும்' (308) 'ஆவாகி ஆவினில் ஐந்தும் ஆகி' (6 - 94 - 8) மாலும் நான்முகனும் கூடிக் காணமாட்டாத வகையுள் நின்றது திருவண்ணாமலைச் சிறப்பு. கொண்டல் - மேகம். பூகம் - கமுகு, திரட்சி எனக்கொண்டு மேகக்கூட்டம் எனலுமாம். ஆலும் நீரும் கொண்டலும் பூகமும் உடைய (அண்ணு)மலை. ஆலும் - முழங்கும். வால் - வெண்மை. வாலுடை விடை - வெள்விடை. விடையாய் - விடையுடையாய். (6. 98. 9).

இரக்கமொன் றியாதுமில்லாக் காலனைக் கடிந்தவெம்மான்
உரத்தினால் வரையையூக்க வொருவிர னுதியினாலே
அரக்கனை நெரித்தவண்ணா மலையுளா யமரரேறே
சிரத்தினால் வணங்கியேத்தித் திருவடி மறப்பிலேனே. 618

திருச்சிற்றம்பலம்

618. இரக்கம் (இரங்கு - அம்) - மனம் இரங்கும் தன்மை, ஒன்று யாதும் - யாதொன்றும் இல்லாக் காலன் - இல்லாத காலன். 'நடுவன்' ஆதலின், தன் நடு நெறியிற் பிறழாமை காக்க இரக்கம் யாதொன்றும் இல்லாது காலம் ஒன்றே கருதுபவனானன் என்பார் 'இரக்கம் ஒன்றியாதும் இல்லாக் காலன் என்றருளினார். கடிந்த - கோபம் கொண்டு உதைத்து நீக்கிய. எம்மான் - எம் ஆண்டவன். உரத்தினால் - வலிமையால். வரை - கயிலை. ஊக்க - ஊக்கங்கொண்டு எடுக்க. நுதி - முனை. அரக்கனை - இராவணனை, அமரர் ஏறே - 'தேவர்கோ அறியாத தேவதேவே'. சிரத்தினால் - தலையால் தாளை வணங்காத் தலை கோளில் பொறியிற் குணமிலவே' (குறள்) வணங்குதல் (மெய்). ஏத்தல் (வாய்), மறப்பின்மை, (உள்ளம்).

கண்டு தொழுது வணங்கிக் கண்ணுத லார்தமைப் போற்றிக்
கொண்ட திருத்தாண் டகங்கள் குறுந்தொகை நேரிசை யன்பின்
மண்டு விருத்தங்கள் பாடி வணங்கித் திருத்தொண்டு செய்தே
அண்டர் பிரான்றிரு வையா றமர்ந்தனர் நாவுக்கரசர்.

நீடிய வப்பதி நின்று நெய்த்தான மேமுத லாக
மாடுயர் தானம் பணிந்து மழபாடி யாரை வணங்கிப்
பாடிய செந்தமிழ் மாலை பகர்ந்து பணிசெய்து போற்றித்
தேடிய மாலுக் கரியார் திருப்பூந் துருத்தியைச் சேர்ந்தார்.

திருப்பூந் துருத்தி யமர்ந்த செஞ்சடை யானையா னேற்றுப்
பொருப்பூர்ந் தருளும் பிரானைப் பொய்யிலி யைக்கண்டே னென்று
விருப்புறு தாண்டகத் தோடு மேவிய காதல் விளைப்ப
இருப்பொங் திருவடிக் கீழ்நா மென்னுங் குறுந்தொ க பாடி.

# 64 திருவீழிமிழலை

## திருப்பதிக வரலாறு

வீழிமிழலை வந்தணைய, ஆழிவலவனறியாத அடியாரடியார் களும் மறையோர்களும் எதிர்கொண்டு வணங்க 'வணங்கி உள்புக்கு ; விண்ணிழிந்த கோயில் வாயில் சென்று அணைந்து, வலம் வந்து, முன்றில் வணங்கித் திருமுன் எய்தி விழுந்து எழுந்து விம்மிக் கைகள் குவித்துக் கழல் போற்றிக் கலந்த அன்பு கரைந்துருக மெய்யில் வழியும் கண்ணருவி விரவிப்பரவும் சொல்மாலைகளுள்ளும் படிக்காசு பெற்றுச் சிவனடியார் எல்லாரும் எய்தி உண்க என இரண்டுபொழுதும்பறை நிகழ்த்திச் சொல்லால் சாற்றிச் சோறிட்டுத் துயர்கூர் வறுமை தொலைத்திட்டவற்றுள்ளும் ஒன்று இத் திருப்பதிகம்.

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

பூதத்தின் படையர்பாம்பின் பூணினர் பூணநூலர்
சீதத்திற் பொலிந்ததிங்கட் கொழுந்தர்நஞ் சமுழ்ந்துகண்டர்
கீதத்திற் பொலிந்தவோசைக் கேள்வியர் வேள்வியாளர்
வேதத்தின் பொருளர்வீழி மிழலையுள் விகிர்தனுரே. 619

.........................................................................

619. பூதப்படையுடையவர். பாம்பாகிய பூணணிந்தவர். பூணநூல் - பூணூல். 'நூலது வேதம் நுண்சிகை ஞானமாம்' (திருமந்திரம்) பூணம்+நூல். இருபெயரொட்டு. பூணனூல் என்றதன் மாற்றம் எனலும், பூண்+அ+நூல் எனலும் ஆம். (கோள்+அம்+பூதூர்=கோள்ளம் பூதூர்.) சீதம் - குளிர்ச்சி. 'திங்கட்கொழுந்தர்.' 'பிறைக்கொழுந்து.' நஞ்சு அழுந்துகண்டர் :- வெளியேயும் வாராது வயிற்றுள்ளம் செல்லாது திருக்கழுத்தில் நின்றது பற்றி நஞ்சு அழுந்துகண்டர் என்று அருளினர். கீதம் - இசைப்பாட்டு. கீதத்திற் பொலிந்தவோசைக் கேள்வியர் வேள்வியாளர் வேதம் என்றுகொண்டு கேள்வியரும் வேள்வியாளருமாகிய அருந்தணரது மறை என்றுரைக்க, 625. பார்க்க. கீதத்திற்பொலிந்த ஓசை என்பது பழமறைப் பாட்டொலி, கற்றலின்றிக் கேட்டல் கடனுதலின் மறையைக்

திருவாவடுதுறை



திருக்கோயிலும் தீர்த்தமும்

திருவீழிமிழலை



சம்பந்தர் – அப்பர்
திருமடங்கள்

காலையிற் கதிர்செய்மேனி கங்குலிற் கறுத்தகண்டர்
மாலையின் மதியஞ்சேர்ந்த மகுடத்தர் மதுவும்பாலும்
ஆலையிற் பாகும்போல வண்ணித்திட் டடியார்க்கென்றும்
வேலையி னமுதர்வீழி மிழலையுள் விகிர்தனாரே. 620

கேள்வி என்றே வழங்குவர். 'சுருதி' என்றதும் அப் பொருட்டாதல் 'இரு பிறப்பாளர் மூவரானும் இயல்பாக இறுக்கப்படூஉம் கடன் மூன்றனுள் முனிவர்கடன் கேள்வி யானும் தேவர் கடன் வேள்வியானும் தென்புலத்தார் கடன் புதல்வரைப் பெறுதலானும் அல்லது இறுக்கப்படா' [திருக் குறள். அதிகாரம். 7. பரிமேலழகர் (தலைப்பின் விளக்கமாகிய) உரைத்தொடக்கம்] பதிற்றுப் பத்து பா. 70. 'தொலையாக் கொள்கைச் சுற்றம் சுற்ற வேள்வியிற் கடவுளருத்தினை, கேள்வி உயர்நிலையுலகத்தையரின்புறுத்தினை, வணங்கியசாயல் வணங்கா வாண்மையிளந் துணைப்புதல்வரின் முதியர்ப்பேணித் தொல்கடன் இறுத்த வெல்போ ரண்ணல்' என்றதே பரிமே லழகர் உரைக்கு ஆதாரம். ஓசையையுடைய மறைக்கேள்வி யுடையவர். வேள்வியை ஆள்பவர். அவரது வேதம். அவ் வேதத்தின் பொருளாயிருப்பவர் திருவீழிமிழலை விகிர்தனார். 'விடையின்மேல் வருவானை வேதத்தின் பொருளானை', 'வேதியா, வேத கீதா' (599) என்றவாறும் கொள்ளலாம். விண்ணிலிருந்து மண்ணிலுற்றமையை விகிர்தனார்' என்று குறித்தருளினார் வாகீசராகிய சுகிர்தனார்.

620. காலையிற் கதிர் - காலையில் உதயம் புரியும் செங் கதிரோன்போலக் கதிரைச் செய்கின்ற மேனி சிவபிரானது திரு மேனி. அக் கதிர்போலும் மேனியுமாம், கங்குலின் - இரவு போல. கறுத்தகண்டர் - திருநீலகண்டர். மாலையின் மதியம் - 'மாசில் வீணையும் மாலைமதியமும்' 'காலைக்கதிர் செய் மதியம் கண்டேன்' என்றதும் உண்டு. (6. 77. 2) மகுடம் - சடைமுடி அடியார்க்கு மதுவும் பாலும் ஆலைக்கரும்பின் பாகும் பாற்கட லமுதமும் போல என்றும் அண்ணித்திட்டு இருப்பவர். நல்லிட்டமாய்த் திருப்புத்தூரனைச் சிந்தை செயச் செயக் கருப்புச்சாற்றிலும் அண்ணிக்குங்காண்மினே' (5. 61. 5). 'ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான்' (திருவாசகம்.) மது-

வருந்தின நெருநலின்றாய் வழங்கின நாளராற்கீழ்
இருந்துநன் பொருள்கணால்வர்க் கியம்பின ரிருவரோடும்
பொருந்தினர் பிரிந்துதம்பாற் பொய்யரா மவர்கட்கென்றும்
விருந்தினர் திருந்துவீழி மிழலையுள் விகிர்தனாரே. 621

தேன். 'ஆலைக்கரும்பின் இன் சாற்றை' (152). அமுது - (அமிர்தம்) - இறவாமை காப்பது. வேலை' ஈண்டுப்பாற்கடலின் மேலது. கண்டமும் மகுடமும்' அகத்தும் புறத்தும் இனியர் என்ற குறிப்பு. 'இன்' மூன்றும் உவமம்.

621. வருந்தினம் - வருகின்ற நாள்; நாளை. நெருநல்+து=நெருநற்று. நேற்று மரூஉ. வழங்கினநாள் - நிகழ்ந்த நாள். நாளையாய் நேற்றாய் இன்றாய் வழங்கிய நாளினர். 'நெருநலையாய் இன்றாகி நாளையாகி நிமிர்புன்சடையடிகள் நின்றவாறு' (6. 94. 1). 'இன்றுளார் நாளைஇல்லையெனும் பொருளொன்றும் ஓராது உழிதரும் ஊமர்' (5. 84. 9)களுக்கு உணர்வரிது. நாளை - வரஇருக்கும் நாள். இன்று (இல்+து) வந்து இல்லா தொழியும் நாள். நெருநல் (நெரு+ந்+அல்) - இறக்கும் பொழுதை நெருங்கி ஒழிதல் உற்ற நாள். நெறுநற்று, நேற்று - நெருங்கிற்று என்றவாறு. வருந்தினமாயும் நெருநலாயும் இன்றாயும் வழங்கின நாளர் என்றதன் கருத்து :- காலாதீதனாயினும், (135) காலதத்துவமாயிருந்து, ஆன்மாக்களைக் காலகாலராக்குங் காலகாலன் என்றவாறு. 'வானோர் தங்கட்கெல்லாம் காலனும் காலனைக் காய்ந்தானுகும்' (6. 15. 6). (சிவஞானபாடியம். காலதத்துவ விளக்கத்தை நோக்குக). ஆல் - 'கல்லால்நிழல்'. 'ஆற்கீழ் இருந்து......இயம்பினர்' :- 'ஆலின் கீழ் அறங்கள் எல்லாம் அன்று அவர்க்கு அருளிச் செய்து' (359). நன் பொருள்கள் - அறமுதற்பொருள்கள்; நான்மறை, ஆறங்கம். 'ஆலதன் கீழிருந்து நால்வர்க்கு அறம் பொருள் வீடு இன்பம் ஆறங்கம் வேதம் தெரித்தானைத் திருநாகேச்சுரத்துளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேராதாரே' (6. 66. 2). நால்வர்க்கு இயம்பினர் - சனகாதியர்க்குபதேசித்தார். இருவர் - அயன் அரி. 'ஆதிமூர்த்தி பங்கனே பரமயோகீ' (259). 'இடமால்

நிலையிலா வூர்மூன்றொன்ற நெருப்பரி காற்றம்பாகச்
சிலையுநா ணதுவுநாகங் கொண்டவர் தேவர் தங்கள்
தலையினாற் றரித்தவென்புந் தலைமயிர் வடமும்பூண்ட
விலையிலா வேடர்வீழி மிழலையுள் விகிர்தனாரே. 622

மறையிடைப் பொருளர்மொட்டின் மலர்வழி வாசத்தேனர்
கறவிடைப் பாலினெய்யர் கரும்பினிற் கட்டியாளர்
பிறையிடைப் பாம்புகொன்றைப் பிணையல்சேர் சடையுணீரர்
விறகிடைத் தீயர்வீழி மிழலையுள் விகிர்தனாரே. 623

தழுவிய பாகம்' (14). தம்பாற் பொய்யராம் அவர்கட்குப் பிரிந்து, மெய்யராம் அவர்கட்குப் பிரியாது என்றும் விருந்தா யிருப்பவர். பிரிவிடம் கூறவே சேர்விடம் பெற்றாம்.

622. நிலையிலாவூர் திரிபுரம். (திரிகின்ற ஊர்). ஊர் மூன்று - முப்புரம்; திரிபுரம், ஒன்ற - ஒரு சேர; பொருந்த. நெருப்பு - தீக்கடவுள். அரி - திருமால். காற்று - வாயுதேவன். இம்மூவரும் அம்பின் உறுப்பாகியவர். (6. 86. 9.) 'கையினார் அம்பு எரிகால் ஈர்க்குக் கோலா' (6. 86. 9) 'அரிவாள் கூர்எரி' (2. 50. 1) 'எரிகாற்றீர்க்கரிகோல் வாசுகி நாண் கல்வில்' (1. 11. 6). சிலையும் நாகம் (- மலை) நாணும் நாகம் (- பாம்பு), சிலையும் நாணதுவும் நாகம் (- மலை;பாம்பு). நாகம் இருபொருளதாய் நின்றது. தேவர்களின் தலையினால் தரித்த என்பும் தலைமயிர் வடமும் பூண்ட விலை யில்லா வேடத்தர். 'பஞ்சவடிமார்பினான்' (6. 90. 5; 7. 53, 6) 'நரைவிரவியமயிர் தன்னோடு பஞ்சவ்வடிமார்பன்' (7. 71. 4)

623. மறையிடைப் பொருளார். 'வேதத்தின் பொருளர்' (619). மொட்டு - அரும்பு. மலர்வழி - பூக்கும் வழி. வினைத் தொகை. மொட்டினது மலரும் வழி என்க. வாசம் - மணம். தேனர் - தேனாய் இனிப்பவர். அரும்பினிற் பெரும்போது

எண்ணகத் தில்லையல்ல ருளரல்ல ரிமவான்பெற்ற
பெண்ணகத் தரையர்காற்றிற் பெருவலி யிருவராகி
மண்ணகத் தைவர்நீரி னால்வர்தீ யதனில்மூவர்
விண்ணகத் தொருவர்வீழி மிழலையுள் விகிர்தனாரே. 624

கொண்டாய் மலர் விரும்பும் ஈசன்' (5. 93. 7) என்புழி அரும்பு போது மலர் மூன்றும் குறளிற்போல நின்றதுணர்க. கறவு - கறக்கும் ஆ, 'கற்று'. பாலின் நெய்யர். பாலிற்படு நெய்போல் மறைய நின்றுளன் மாமணிச்சோதியான்' கரும் பினிற்கட்டியாளர், 'கரும்பினிற் கட்டிபோல்வார் கடவூர் வீரட்டனாரே.' (307). இன் கரும்பின்றன்னுள்ளால் இருந்த தேறற்றேளியானை' (6. 66. 9) 'கரும்பினைக்கட்டியைக் கந்த மாமலர்ச்சுரும்பினை' (5. 93. 7) 'கரும்போப்பானைக் கரும்பினிற் கட்டியை' (5. 3. 2) 'கட்டியோக்குங் கரும் பினிடைத்துணி' (5. 5. 6) சடையுள் பிறை, பாம்பு, கொன்றைப் பிணையல், (கங்கை) நீர் உடையவர். விறகிடைத் தீயர் :- 'விறகிற்றீயினன்'.

624. எண் அகத்து - எண்ணும் உள்ளத்தில்; எண்ணத் தில். அகம் பெயரும் உருபுமாம். இல்லையல்லர் உள்ளர் அல்லர். இல்லாதவரும் அல்லர். உள்ளவரும் அல்லர். 'மெய்மையும் பொய்மையும் ஆயினார்' 'உண்மையுமா யின்மையுமாய் நின்றாய்' (திருவாசகம்). புறத்தே காண்ப வர்க்கு அகத்தே உள்ளவரல்லர். அகத்தே நினைவார்க்குப் புறத்தே இல்லாதவரும் அல்லர் எனலுமாம். இமவான் - பனி யுடையான். பனியுடைய மலை வேறு மலையான் வேறு அல்ல. 'குணவான், பலவான்' என்புழிப்போல் வடமொழி மத்தும் வத்தும் உடைமைப் பொருட்டாய் நிற்கும் (हिमवान्). பெண் - மலையரையன் மடப்பாவை. பெண்ணகத்தரையர் (பெண் அகத்து அரையர்) - 'மாதியலும் பாதியர்' (1) விண்ணகத்தொருவர், (2) காற்றிற் பெருவலியிருவர். (3) தீயதனில் மூவர். (4) நீரில் நால்வர். (5) மண்ணகத்தைவர். 'மண்ணதனிலைந்தை மாநீரினான்கை வயங்கெரியின் மூன்றை மாருதத்திரண்டை விண்ணதனிலொன்றை' (6. 60. 3) 'பாரிடையைந்தாய்ப் பரந்தாய் போற்றி. நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி,

சந்தணி கொங்கையாளோர் பங்கினர் சாமவேதர்
எந்தையு மெந்தைதந்தை தந்தையு மாயவீசர்
அந்தியோ டுதயமந்த ணாளரா னெய்யால்வேட்கும்
வெந்தழ லுருவர்வீழி மிழலையுள் விகிர்தனாரே. 625

நீற்றினை நிறையப்பூசி நித்தலா யிரம்பூக்கொண்டு
ஏற்றுழி யொருநாளொன்று குறையக்கண் ணிறையவிட்ட
ஆற்றலுக் காழிநல்கி யவன்கொணர்ந் திழிச்சுங்கோயில்
வீற்றிருந் தளிப்பர்வீழி மிழலையுள் விகிர்தனாரே. 626

தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி, வளியிடையிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி, வெளியிடை யொன்றாய் விளைந்தாய் போற்றி' (திருவாசகம். 4:-136-141). சிவஞானமாபாடியம் சூ. 8, அதி. 2, தன்மாத்திரை விளக்கத்தை ஈண்டு நோக்குக.

625. சந்து - சந்தனம். பங்கு - இடப்பால். சாமவேத கானம் பாடுபவர். எந்தை - என்னப்பன். எந்தை தந்தை - பாட்டன். தந்தை தந்தை - பூட்டன். அவனுக்குத் தந்தை - ஓட்டன். பாட்டி பூட்டி ஓட்டி. 'ஒட்டிக்கு மேல் உறவில்லை' என்பது பழமொழி. இது நான்குநேரிப்பக்கத்தில் வழங்குகின்றது. ஆய ஈசர் - ஆகிய உடையார். அந்தி - மாலையந்தி. உதயம் - காலைச்சந்தி காலை மாலை என்றவாறு. அந்தணர் - அழகும் தண்மையும் ஆள்பவர். 'அந்தத்தை அணவுவார்' என்றது ஈண்டுப் பொருந்தாது. வேட்கும் - வேள்வி செய்யும். வெந்தழல் - வெய்ய தீ; விரும்புதற்குரிய தீ. தழலுருவர் - தீவடிவினர். தீவண்ணர் வேறு. வேள்வித் தீவடிவர் வேறு. சிவாக்கினிரூபமாயிருந்து வழிபடுவோரை உய்யக்கொள்பவர். சிவபூசையின் அங்கத்துள் ஒன்று சிவாக்கினி பூசை. 'அக்கினி காரியம்' எனப் பத்ததிகளிற் கூறப்படுவது உணர்க.

626. திருவீழிமிழலையுள், விண்ணிலிருந்து கோயில் வந்ததன் வரலாறு இதிற் குறிக்கப்பட்டுளது. திருமால் சக்கிராயுதம் பெறச்சிவனை வழிபடுங்கால் ஆயிரம் பூக்களுள்

சித்திசெய் பவர்கட்கெல்லாஞ் சேர்விடஞ் சென்றுகூடப்
பத்திசெய் பவர்கள்பாவம் பறிப்பவ ரிறப்பிலாளர்
முத்திசெய் பவளமேனி முதிரொளி நீலகண்டர்
வித்தினின் முளையர்வீழி மிழலையுள் விகிர்தனாரே. 627

ஒன்று குறையவே அது நிறையக்கண்ணைப் பறித்து இட்டார். இட்ட அவ்வலிமைக்கு ஆழி (- சக்கிராயுதம்) நல்கினார் விகிர்தனார். அத்திருமால் தம் ஆன்மார்த்த மூர்த்தியை விண்ணி லிருந்து கொணர்ந்து மண்ணில் திருவீழிமிழலையுள் வைத்து எல்லாவுயிர்களும் கண்டு போற்றி உய்யச்செய்தார். இத்திரு முறையிலும் தேசனைத் தேசங்கள் தொழநின்ற திருமாலால் பூசனை ’ எனவும், ‘ குறிக்கொண்டிருந்து செந்தாமரை ஆயிரம் வைகல் வைகல், நெறிப்பட இண்டைபுனைகின்ற மாலை நிறையழிப்பான் கறைக்கண்ட நீ ஒரு பூக்குறைவித்துக் கண் சூல்விப்பதே, பிறைத்துண்ட வார்சடையாய் பெருங்காஞ்சியெம் பிஞ்ஞகனே ’ எனவும் பெரிய காஞ்சியில் நடந்ததாகவும் இவ்வரலாறு குறிக்கப்படுவதுணர்க. திருநீற்றினை நிறையப் பூசலும், நகமேலாந் தேயக் கையால் நாண்மலர் தொழுது தூவி நித்தலும் பூசிக்க ஆயிரக்கணக்கிற் பூக்கொள்ளலும், ஒன்று குறையினும் நிறைவிக்கும் விடா முயற்சியும், அதனால் இறப்பச்சம் எய்தாது சிவசிந்தனையில் ஒழியாது நிற்றலும் பிறவும் இவ்வரலாறு குறித்தலறிக.

627. சித்திசெய்பவர்கட்கு எல்லாம் - சித்திகளை விரும்பி அவற்றிற்குரியவற்றைச் செய்யும் எல்லார்க்கும், அவ்வச் சித்தித் தானங்களைச்சென்று அடையச் செய்பவர். பத்தி (தொண்டு) செய்பவர் எல்லாருடைய பாவங்களையும் பறித் தகற்றுபவர். மூவாச்சாவாமூர்த்தி. முத்தி(வீடு)செய்பவர். பவளம் போலும் திருமேனியர். முதிர்ந்த ஒளியுடைய திருநீலகண்டர். வித்தினின் முளையர் :- ‘ வித்தாம் முளையாகும் வேரேதானும் வேண்டும் உருவமாம் விரும்பி நின்ற பத்தாம் அடியார்க்கு ஓர் பாங்கனுமாம்......கருகாவூர் எந்தை. ’ (6. 15, 2) சித்தி, பத்தி, முத்தி மூன்றும் அறிவித்தவாறறிக.

தருக்கின வரக்கன் றேரூர் சாரதி தடை நிலாது
பொருப்பினை யெடுத்த தோளும் பொன்முடி பத்தும் புண்ணாய்
நெரிப்புண்டங் கலறி மீண்டு நினைந்தடி பரவத் தம்வாள்
விருப்பொடுங் கொடுப்பர் வீழி மிழலையுள் விகிர்த னாரே.

திருச்சிற்றம்பலம்

628. தருக்கின அரக்கன் - எடுத்தற்கரிய கயிலையை எடுக்கவல்லேன் என்று தலை நிமிர்ந்து செருக்குற்றுப் பேசிய இராவணன். தேர் ஊர் சாரதி - தேரினை ஊர்ந்து செல்லும் வலவன். 'வலவன் ஏவா' வானவூர்தி. தடை - கயிலைக் காவலர் தடுத்த தடையின் வண்ணம். நிலாது - புகாது நில்லாமல், பொருப்பு - கயிலைமலை. இருபது தோளும் பத்து முடியும் புண்ணாகி, நெரிப்பு - நெரித்தல். நினைந்து - குற்றத்தை எண்ணி; திருவடிகளைத் தியானம் புரிந்து, பரவ - வாழ்த்த, சாம கானம் பாட. விருப்பொடும் வாள் கொடுப்பர்.

அங்குறை யுந்தன்மை வேண்டி நாமடி போற்றுவ தென்று
பொங்கு தமிழ்ச்சொல் விருத்தம் போற்றிய பாடல் புரிந்து
தங்கித் திருத்தொண்டு செய்வார் தம்பிரா னாருள் பெற்றுத்
திங்களும் ஞாயிறுந் தோயுந் திருமட மங்கொன்று செய்தார்.

பல்வகைத் தாண்டகத் தோடு பரவும் தனித்தாண் டகமும்
அல்ல லறுப்பவர் தானத் தடைவு திருத்தாண் டகமும்
செல்கதி காட்டிடப் போற்றுந் திருவங்க மாலையு முள்ளிட்
டெல்லையில் பன்மைத் தொகையு மியம்பின ரேத்தி யிருந்தார்.

ஆண்டவர சங்கணர்சீ ரருள்பெற்றப் பதிநின்றும்
பாண்டிநாட் டெழுந்தருளும் பான்மையராய்த் தென்றிசைபோய்க்
காண்டகைய திருப்புத்தூர் பணிந்தேத்திக் கதிர்மதியந்
தீண்டுகொடி மதின்மதுரைத் திருவால வாய்சேர்ந்தார்.

எய்தியபே ரானந்த வின்பத்தி னிடையமுந்தி
மொய்திகழுஞ் சடையானை முளைத்தானை யென்றெடுத்துச்
செய்தவத்தோர் தாண்டகச்செந் தமிழ்பாடிப் புறத்தணைவார்
கைதொழுது பணிந்தேத்தித் திருவுள்ளங் களிசிறந்தார்.

அரும்பெருஞ் சிலைக்கை வேட னாய்விறற் பார்த்தற் கன்று
உரம்பெரி துடைமை காட்டி யொள்ளமர் செய்து மீண்டே
வரம்பெரி துடைய னாக்கி வாளமர் முகத்தின் மன்னுஞ்
சரம்பொலி தூணி யீந்தார் சாய்க்காடு மேவி னாரே. 632

இந்திரன் பிரம னங்கி யெண்வகை வசுக்க ளோடு
மந்திர மறைய தோதி வானவர் வணங்கி வாழ்த்தத்
தந்திர மறியாத் தக்கன் வேள்வியைத் தகர்த்த ஞான்று
சந்திரற் கருள்செய் தாருஞ் சாய்க்காடு மேவி னாரே. 633

போல்வது. 'நலந்திகழ் வாயினூலாற் சருகிலைப் பந்தர் செய்த **சி**லந்தியை அரசதாள அருளினாய்' (607). வரம் ·· வாள் முதலியன என்றலும் இசைவர்.

632. வேடன் ஆனவன் சிவபிரான். அருஞ்சிலை ; பெருஞ்சிலை, சிலை - வில், 'பிநாகி' 'காண்டீபம்', 'காண்டீபன்' என்று விற்சிறப்பாற் பெற்ற பெயர். அஃது அருச்சுனனது. அதுவும் 'பிநாகி' என்றது போல்வதொரு சிறப்புப் பெயர். 'காண்டபிருட்டன்' என்று கன்னனைக் குறிப்பதும் அன்னதே. விறல் - வலிமை ; வெற்றி. பார்த்தன் - பிரதைக்குப் புத்திரன். உரம் - வலிமை. ஒள் அமர் - வீரம் ஒளிரும்போர். வரம் :- பாசுபதம் அருளப்பெற்றது. வாள் - ஒளி. சரம் - அம்பு முதலிய கணைகள். தூணி - அம்புறுத் தூணி.

633. அங்கி - தீ. எண்வகைவசுக்கள் - 1. அநலன். 2. அநிலன். 3. ஆபன். 4. சோமன். 5. தரன். 6. துருவன். 7. பிரத்தியூடன் 8. பிரவாசன். தேவ வகுப்புள் ஒரு சாரார். எண் வகை என்றது எட்டு என்னும் பொருட்டாய் நின்றது. (பாரதம், குருகுலம். 63) மந்திரங்களையுடைய மறையை ஓதி. தந்திரம் - செயற்பாலது ; செய்வகை. வேள்வி - யாகம். தகர்த்த ஞான்று - தகரச் செய்த நாளன்று. சந்திரற்கு - சந்திரனுக்கு.

தருக்கின வரக்கன் றேரூர் சாரதி தடை நிலாது
பொருப்பினை யெடுத்த தோளும் பொன்முடி பத்தும் புண்ணாய்
நெரிப்புண்டலங் கலறி மீண்டு நினைந்தடி பரவத் தம்வாள்
விருப்பொடுங் கொடுப்பர் வீழி மிழலையுள் விகிர்த னாரே.

திருச்சிற்றம்பலம்

628. தருக்கின அரக்கன் - எடுத்தற்கரிய கயிலையை எடுக்கவல்லேன் என்று தலை நிமிர்ந்து செருக்குற்றுப் பேசிய இராவணன். தேர் ஊர் சாரதி - தேரினை ஊர்ந்து செல்லும் வலவன். ‘வலவன் ஏவா’ வானவூர்தி. தடை - கயிலைக் காவலர் தடுத்த தடையின் வண்ணம். நிலாது - புகாது நில்லாமல், பொருப்பு - கயிலைமலை. இருபது தோளும் பத்து முடியும் புண்ணாகி. நெரிப்பு - நெரித்தல். நினைந்து - குற்றத்தை எண்ணி ; திருவடிகளைத் தியாநம் புரிந்து, பரவ - வாழ்த்த, சாம கானம் பாட. விருப்பொடும் வாள் கொடுப்பர்.

அங்குறை யுந்தன்மை வேண்டி நாமடி போற்றுவ தென்று
பொங்கு தமிழ்ச்சொல் விருத்தம் போற்றிய பாடல் புரிந்து
தங்கித் திருத்தொண்டு செய்வார் தம்பிரா னாருள் பெற்றுத்
திங்களும் ஞாயிறுந் தோயுந் திருமட மங்கொன்று செய்தார்.

பல்வகைத் தாண்டகத் தோடு பரவும் தனித்தாண் டகமும்
அல்ல லறுப்பவர் தானத் தடைவு திருத்தாண் டகமும்
செல்கதி காட்டிடப் போற்றுந் திருவங்க மாலையு முள்ளிட்
டெல்லையில் பன்மைத் தொகையு மியம்பின ரேத்தி யிருந்தார்.

ஆண்டவர சங்கணர்சீ ரருள்பெற்றப் பதிநின்றும்
பாண்டிநாட் டேழுந்தருளும் பான்மையராய்த் தென்றிசைபோய்க்
காண்டகைய திருப்புத்தூர் பணிந்தேத்திக் கதிர்மதியந்
தீண்டுகோடி மதின்மதுரைத் திருவால வாய்சேர்ந்தார்.

எய்தியபே ரானந்த வின்பத்தி னிடையழுந்தி
மொய்திகழுஞ் சடையானை முளைத்தானை யென்றெடுத்துச்
செய்தவத்தோர் தாண்டகச்செந் தமிழ்பாடிப் புறத்தணைவார்
கைதொழுது பணிந்தேத்தித் திருவுள்ளங் களிசிறந்தார்.

அரும்பெருஞ் சிலைக்கை வேட னுய்விறற் பார்த்தற் கன்று
உரம்பெரி துடைமை காட்டி யொள்ளமர் செய்து மீண்டே
வரம்பெரி துடைய னுக்கி வாளமர் முகத்தின் மன்னுஞ்
சரம்பொலி தூணி யீந்தார் சாய்க்காடு மேவி னுரே. 632

இந்திரன் பிரம னங்கி யெண்வகை வசுக்க ளோடு
மந்திர மறைய தோதி வானவர் வணங்கி வாழ்த்தத்
தந்திர மறியாத் தக்கன் வேள்வியைத் தகர்த்த ஞான்று
சந்திரற் கருள்செய் தாருஞ் சாய்க்காடு மேவி னுரே. 633

போல்வது. 'நலந்திகழ் வாயினூலாற் சருகிலைப் பந்தர் செய்த சிலந்தியை அரசதாள அருளினுய்' (607). வரம் - வாள் முதலியன என்றலும் இசைவர்.

632. வேடன் ஆனவன் சிவபிரான். அருஞ்சிலை; பெருஞ்சிலை, சிலை - வில், 'பிநாகி' 'காண்டீபம்', 'காண்டீபன்' என்று விற்சிறப்பாற் பெற்ற பெயர். அஃது அருச்சுனனது. அதுவும் 'பிநாகி' என்றது போல்வதொரு சிறப்புப் பெயர். 'காண்டபிருட்டன்' என்று கன்னனைக் குறிப்பதும் அன்னதே. விறல் - வலிமை; வெற்றி. பார்த்தன் - பிரதைக்குப் புத்திரன். உரம் - வலிமை. ஒள் அமர் - வீரம் ஒளிரும்போர். வரம் :- பாசுபதம் அருளப்பெற்றது. வாள் - ஒளி. சரம் - அம்பு முதலிய கணைகள். தூணி - அம்புறுத் தூணி.

633. அங்கி - தீ. எண்வகைவசுக்கள் - 1. அநலன். 2. அநிலன். 3. ஆபன். 4. சோமன். 5. தரன். 6. துருவன். 7. பிரத்தியூடன் 8. பிரவாசன். தேவ வகுப்புள் ஒரு சாரார். எண் வகை என்றது எட்டு என்னும் பொருட்டாய் நின்றது. (பாரதம், குருகுலம். 63) மந்திரங்களையுடைய மறையை ஓதி. தந்திரம் - செயற்பாலது; செய்வகை. வேள்வி - யாகம். தகர்த்த ஞான்று - தகரச் செய்த நாளன்று. சந்திரற்கு - சந்திரனுக்கு.

ஆமலி பாலுநெய்யு மாட்டியர்ச் சனைகள்செய்து
பூமலி கொன்றைசூட்டப் பொறுததன் றாதைதாளைக்
கூர்மழு வொன்றலோச்சக் குளிர்சடைக் கொன்றைமாலைத்
தாமநற் சண்டிக்கீந்தார் சாய்க்காடு மேவினாரே.          634

மையறு மனத்தனாய பகீரதன் வரங்கள்வேண்ட
ஐயமி லமரரேத்த வாயிர முகமதாகி
வையக நெளியப்பாய்வான் வந்திழி கங்கையென்னுந்
தையலைச் சடையிலேற்றார் சாய்க்காடு மேவினாரே.          635

634. ஆ - பதி. ஆட்டி - ஆடப்பண்ணி அர்ச்சனைகள் - மலர்தூவிப் பணிதல் முதலியவை. பூக்கள் மலிந்த கொன்றை மலர் மாலையை. பொறுத - உள்ளத்தே பொறுமையில்லாத. தாதை - அப்பன். தாளை - காலை. கூர்மழு ஒன்றால் - ஒரு கூரிய மழுவால். ஓச்ச - உயர்த்து வெட்ட. குளிர் சடைக் கொன்றைமாலைத் தாமம் - கங்கையுடைமையாற் குளிர்ந்த சடையிற் சூடும் கொன்றையங்கண்ணி 'திருமாலை' யை. காமர் வண்ணமார்பிற் சார்த்தும் தாரினை. 'திருப்பள்ளித்தாமம்' என்னும் மரபுணர்க. கொன்றையால் தாமம் புனைதல் எளிதன்று சிலர்க்கே எளிது. நல்சண்டிக்கு - பிறவிப்பிணிக்கு மருந்து ஆகிய திருவடி வழிபாட்டினை மறவாத சண்டேசுர நாயனார்க்கு (அளித்தருளினார்). ஆட்டி, செய்து, சூட்டப் பொறுத தாதை ஓச்சச் சண்டிக்கு ஈந்தார் மேவினார் என்க. முன்மூன்றும் சண்டீசர் தொழில். பொறுமையும் ஓச்சலும் தாதை தொழில். ஈதல் ஈசனது. திருக்களிறு .- 'பாதகம் என்றும் பழி யென்றும் பாராதே, தாதையை வேதியனைத் தாளிரண்டும் சேதிப்பக், கண்டீசர் தாமாம் பரிசளித்தார் கண்டாயே தண்டீசர், தஞ் செயலால்தான்.'

635. மை - குற்றம். அறு - அற்ற, பகீரதன் தன்குலத் தோரைத் துறக்கம் அடைவிக்கத் தவம் புரிந்தவனாதலின், மையறுமனத்தனானன். பகீரதன் வரங்களை வேண்டியதாலும் அமரர் ஏத்தியதாலும் தையலைச் சடையிலேற்றார். 'வேண்ட' 'ஏத்த' இரண்டும் ஏதுப்பொருளவாய வினையெச்சம், கங்கை இழியுங்கால் எண்டிசையிலும் அளவிலாத முகத்ததாய் இழியும்

குவப்பெருந் தடக்கைவேடன் கொடுஞ்சிலை யிறைச்சிப்பாரந்
துவர்ப்பெருஞ் செருப்பானீக்கித் தூயவாய்க் கலசமாட்ட
உவப்பெருங் குருதிசோர வொருகணை யிடந்தங்கப்பத்
தவப்பெருந் தேவுசெய்தார் சாய்க்காடு மேவினாரே. 636

இயல்புடைமையால் 'ஆயிரமுகமதாகி இழி கங்கை' எனப்பட்டது நீர் மலைமேலிருந்து பள்ளமடையாய்க் கீழ் வீழுங்காலும் நிலத்தே ஒழுகுங்காலும் பலமுகமாதலை உணர்க. அது பாய்தலின் விரைவு வையகத்தை நெளியச் செய்யும் பாய் வான் - பாய, பாய வந்து இழியும் கங்கை. தையல்-மெல்லியல். வையகம் நெளியவந்திழியும் வன்மை சடைக்கெதிர் நில்லாது அகன்றமை தோன்றத் 'தையல்' என்றார். 'எழுத்தறிவார் ஆயுங் கடவுள் அவிர்சடைமுன் கண்டளவில் வீயும் சுரநீர் மிகை.' (நன்னெறி). வையகம் நெளியக் கங்கை வந்தது; கங்கை நெளியச் சடையேற்றது. ஐயம் இல் அமரர் - இறைவன் இருக்கும்போது நமக்கு இடர் இல்லை என்னும் தெளிவுடைய வானோர்.

636. குவ - குவவு; திரட்சி. தட - பெருமை. வேடருக்கு இன்றியமையாதது குவப்பெருந் தடக்கை. கொடுஞ்சிலை - வளைந்த வில். இறைச்சிப்பாரம் - ஊன் ஆகிய பொறை. துவர் - செந்நிறம். சேக்கிழார் 'பொற்செருப்பு' என்றதும் இது நோக்கிப்போலும். துவர் - விறகு எனக்கொண்டு ஏற்ப உரைத்தலுமாம். குருதிக்கறை உற்ற செருப்பு. பெருஞ் செருப்பு :- தன்மை நவிற்சி. காட்டு நடைக்குரியது. கையில் வில்லும் ஊனும் இருந்தமையால், காற்செருப்பால் நீக்கலாயிற்று. நீக்கப்பட்டது நிருமாலியம். அகத்தன்பினிறைவால் வாயே அபிடேக கலசமும் அதிற் கொண்ட நீரே கங்கையினும் தூயதும், அவரே ஆசாரியாபிடேகம் பெற்ற அருச்சகரினும் பெரிதும் உரியராய ஆட்டலுற்றவரும் ஆய உண்மை தோன்றத் 'தூயவாய்க் கலசம் ஆட்ட' என்றார். 'அன்புமிழ்வார் போல விமலனார் முடிமேல் விட்டார்'. உவ - உவந்து. 'வரிப்புனை பந்து' என்புழிப்போலக் கொள்க. உவந்து சோர. சோர - ஒழுக்க என்று பிறவினைப் பொருட்டாக்குக. சோரலால் இடந்து (கண்ணை) அப்ப. கணையால் இடந்து (- பேர்த்து). கண்ணை

நக்குலா மலர்பன்னூறு கொண்டுநன் ஞானத்தோடு
மிக்கபூ சனைகள்செய்வான் மென்மல ரொன்றுகாணு
தொக்குமென் மலர்க்கணென்றங் கொருகணை யிடந்துமப்பச்
சக்கரங் கொடுப்பர்போலுஞ் சாய்க்காடு மேவினரே. 637

இடந்து. கணையாலிடந்து என்றிருபொருள்படுமாறறிக. (637) தேவு - 'சிவமாந்தன்மைப் பெருவாழ்வு'. தவச் சிறுவேடரைத் தவப்பெருந் தேவராகச் செய்தருளினர். தவ - மிகற்பொருட்டு. 'அயன் திருமால் செல்வமும் ஒன்றோ என்னச் செய்யும் தேவே' (சிவஞானசித்தியார் காப்பு) என்புழிப்படும் பொருளே (சிவத் துவமே) ஈண்டுக் கொள்ளற்பாலதுணர்க. 'நரகரைத்தேவு செய்வான்' என்புழிப்படும் பொருள் தேவர் என்பது. நரகர்க்குத் தேவர் மறுதலையாவர். ஆண்டு அமரத்துவம். ஈண்டுச் சிவத்துவம். திருவிருத்தம் 482 நோக்குக.

637. நக்கு உலாம் மலர் - மலர்ந்து மணம் உலாவும் தாமரைப் பூக்கள். 'நகை மலர்' என்னும் ஆட்சியைக் கருதுக. பல்+நூறு=பன்னூறு. 'பூவான மூன்று முந்நூற்றறுபது மாகும் எந்தை' (292). மலர் கொண்டு செய்யும் பூசனைகளின் மிகையாற் பயனெய்த வேண்டுவார் நன்ஞானத்தோடு செய்யற் பாலர். "கிரியை என மருவும் அவை யாவும் ஞானம் கிடைத் தற்கு நிமித்தம் எனக் கிளக்கும்" (சிவப்பிரகாசம்). 'நன் ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம்' என்னும் அமணர் வழக்குள் ஒன்றாகாது 'சிவஞானம்' என்னும் பொருட்டாதல், நன்மைக்குச் சிவம் என்னும் பொருளுண்மையால் அறிக. திருமால் செய்த மிக்க பூசைகள் நன்ஞானத்தோடு நிகழ்ந்தமை யால்தான், கண்மலர்க்குக் கண்ணைப் பறித்திட்டுவந்து சக்கிரங் கொடுக்கப்பெற்றார். மலர் குறையின் கண் இடல் பொருந்துமோ என்பார்க்கு விடையாக, மலர்க்கண் மலர்க்கு ஒக்கும் என்று தேர்ந்து ஒரு கண்ணை இடந்தும் அப்பினர் என்றார். மலர் - தாமரை. திருமாலின் உறுப்புட் சிற்சில மலர் போன்றவை. அங்கு - வழிபட்ட அப்போதே; அவ்விடத்தேயே. ஒரு மலர் குறையக் கண்ட போதுமாம். அங்கு - காலம் இடம் ஆகிய இருபொருட்டுமாம்.

புயங்களைஞ் ஞான்கும்பத்து மாயகோண் டரக்கனோடிச்
சிவன்றிரு மலையைப்பேர்க்கத் திருமலர்க் குழலியஞ்ச
வியன்பெற வெய்திவீழ விரல்சிறி தூன்றிமீண்டே
சயம்பெற நாமமீந்தார் சாய்க்காடு மேவினாரே. 638

திருச்சிற்றம்பலம்

638. புயங்கள் - தோள்கள். ஐஞ்ஞான்கும் இருபதும். 'தடக்கை நாலைந்தும்' (507). இங்கு நாணஞ்சுகையன் (342) என்புழிக்கொண்ட பொருளைக் காண்க. இருபது தோள் எனவே பத்து என்றது தலையை எனல் பெறப்படும். சிவன்மலை, திருமலை, திருமலைச் சருக்கம்' என்பது முதலியவற்றை நோக்கிக் கையிலைக்கே 'திருமலை' என்பது காரணச் சிறப்புப் பெயராதல் அறிக. பேர்க்க - பெயர்க்க. 'திருமலர்க் குழலி :- திருவை மலர்க்கும் குழற்கும் சார்த்துவதினும் குழலிக்குச் சார்த்துதல் சிறந்தது. 'குரும்பைமுலை மலர்க்குழலி கொண்டதவம்' (சுந்தரப்பெருமாள் நாயனார்). வியன் - வேறுபாடு; மிகுதியுமாம். 'வியன் கலவிருக்கை' (சிலப். 5 :- 7) வியன்பெற - திருமலையை எடுக்கலாம் என்று துணிந்த நிலை வேறுபாடடைய; எய்தி - நெருக்கலை உற்று. சிறிதூன்றியதன் விளைவே இத் துணைப்பெரியதாயின், பெரிதுமூன்றின் என்னும் ? மீண்டு :- அவனது சாமகானத்துக்கு இரங்கியதன் குறிப்பு, சயம்பெற :- தோற்றவன் ஆயினும், கோற்றவனுதலும் பேற்றநாளும் உற்ற பேரும் வேற்றிக் குறியாயின என்னும் குறிப்பு.

திருவால வாயமர்ந்த செஞ்சுடரைச் செழும்பொருளால்
தருவானை நேரிசையுந் தாண்டகமு முதலான
பெருவாய்மைத் தமிழ்பாடிப் பேணுதிருப் பணிசெய்து
மருவார்தம் புரமெரித்தார் பூவணத்தை வந்தடைந்தார்.

கோடிமாட நிலவுதிருப் பூவணத்துக் கோயிலினுள்
நெடியானுக் கறிவரியார் நேர்தோன்றக் கண்டிறைஞ்சி
வடிவேறு திரிசூலத் தாண்டகத்தால் வழுத்திப்போய்ப்
பொடிநீடு திருமேனிப் புனிதர்பதி பிறபணிவார்.

## 66 திருநாகேச்சரம்

### திருப்பதிக வரலாறு

திருவிடை மருதூரைச் சேர்ந்து, மறிவிரவு கரத்தாரை வணங்கி சைவகி வண்டமிழ்ப் பாமாலை பல மகிழச்சார்த்தித் திருநாகேச் சுரத்துப் (போய்ப்) பொறியரவம் புனைந்தாரைப் போற்றிப் புனைந்த அருந் தமிழ்மாலைகளுள் ஒன்று இத் திருப்பதிகம். (பெரியபுராணம். 192).

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

கச்சைசே ரரவர்போலுங் கறையணி மிடறர்போலும்
பிச்சைகொண் டுண்பர்போலும் பேரரு ளாளர்போலும்
இச்சையான் மலர்கள்தூவி யிரவோடு பகலுந்தம்மை
நச்சுவார்க் கினியர்போலு நாகவீச் சரவனாரே. 639

வேடுறு வேடராகி விசயனோ டெய்தார்போலும்
காடுறு பதியர்போலுங் கடிபுனற் கங்கைநங்கை
சேடேறி சடையர்போலுந் தீவினை தீர்க்கவல்ல
நாடறி புகழர்போலு நாகவீச் சரவனாரே. 640

639. கச்சை சேர் அரவர் - அரவக்கச்சை யுடுத்தவர். கறை - நஞ்சின் கறுப்பு. அணிமிடறர் - 'திருநீலகண்டர்'. பிச்சை கொண்டு உண்பர் :- தாருகவனத்து வரலாறு; விடையேறி மாதோடும் சென்று ஊர்தோறும் சிவபோதமாகிய பிச்சை ஏற்றுச் சிவபோதமாகிய சிவபுண்ணியம் அருளும் உண்மை. பேரருளாளர் :- பெருங் கருணையுடையவர். பிச்சை கொண்டு உண்பது உயிர்களைக் காக்கும் பேரருளாண்மையாலன்றிப் பசியாலன்று. இச்சை - உள்ளன்பு. தம்மை இரவோடு பகலும் நச்சுவார் :- 'ஏற்றாய் அடிக்கே இரவும் பகலும் பிரியாது வணங்குவன்' (1). நச்சுவார் (நத்துவார்) - விரும்புவார். 'நச்சினார்க்கினியர்' என்பது இறந்தகாலத்தது. இது முக் காலத்திற்கும் உரித்து. நாகவீச்சுவரனார் = 'சாளரந்தோறும் தோன்றுஞ் சந்திரவுதயம் போலும்' என்புழிப்போலப் பெற்ற தமிழ்ப் புணர்ச்சி.

640. வேடு×வேந்து. இரண்டும் மறுதலை. 'இழிகுல மாகிய எயினர் பாவை நான் முழுதுலகருள் புரிமுதல்வர் நீர்

கற்றுணை வில்லதாகக் கடியரண் செற்றார்போலும்
பொற்றுணைப் பாதர்போலும் புலியத ளுடையர்போலும்
சொற்றுணை மாலைகொண்டு தொழுதெழு வார்கட்கெல்லாம்
நற்றுணை யாவர்போலு நாகவீச் சரவனாரே. 641

எனைத்தழுவுதல் ........பழி' (கந்த. வள்ளியம்மை 90) 'ஆறலைக்கும் வேடலன் வேந்தும் அலன்' (நீதி நெறி விளக்கம் 30) 'வெண்குடை நிழற்றிய வொருமையோற்கும், கடுமாப்பார்க்கும் கல்லா வொருவற்கும், உண்பது நாழி உடுப்பவை யிரண்டே, பிறவும் எல்லாம் ஓரொக்கும்மே' (புறநானூறு. 189). 'மன்னவன்றன் மகன் வேடரிடத்தே தங்கி வளர்ந்தவனையறியாது மயங்கி நிற்ப' (சித்தியார்) சிவஞான போதம். சூ. 8. உரை. முதல்வன் மன்னவன். ஆன்மா மன்னன் மகன். ஐம்பொறிகள் வேடர். திருவலிவல மும்மணிக் கோவையின் முதற்பேரகவலிற் பார்க்க. வேள்+து=வேடு. (ஆள்+தூஉ=ஆடூஉ, மகள்+தூஉ=மகடூஉ. அலிதூ உ) விருப்பினது. மெய்வேடர். மெய்வேடரல்லர் வேடராக விரும்பிக் கொண்ட வேட்டுவவடிவத்தர். வேடு - வேடுவ மரபு. வேடர். வேடுருறும் வேடம் பூண்டவர் எனலுமாம். காடு உறு பதியர் - காடாகவுற்ற பதியினர். 'கோயில் சுடுகாடு'. பதியாகவுற்ற காட்டினர் எனலுமாம். 'கடிபுனற் கங்கை நங்கை. சேடு (-பெருமை) எறிசடையர்' :- 635. பார்க்க. சிவபெருமானே பிறவிக் கடல்கடத்தும் பெரும்புணையாகிய திருவடியினன் என்று நூலே(உலகே)லாம் போற்றுதலின், தீவினைதீர்க்கவல்ல நாடறி புகழர்' என்றார். 'நாடறி புகழர்' என்னும் செந்தமிழ்த் தொடர் இனியதோராட்சி. 'இறைவனடி சேராதார் பிறவிப் பெருங்கடல் நீந்தார் (திருக்குறள்) திருவோற்றியூ ரொருபாவொருபஃது. 8. காண்க.

641. கல்+துணை+வில்-மேருமலையாலாகிய(போர்க்குத்) துணைக்கருவியானவில். துணை அளவுமாம். 'கற்றுணைப்பூட்டி' கடியரண் - காவல்மும்மதில் ; திரிபுரம். பொற்றுணைப்பாதர் - பொன்னை யொத்த திருவடித்துணை. அதள் - தோல். சொற்றுணை மாலை - பாமாலை. தொழுது எழுவார்கட்கெல்லாம் நற்றுணை ஆவர். பூமாலைகொண்டு போற்றுவார்க்கே யன்றிப் பாமாலை

கொம்பனாள் பாகர்போலுங் கோடியுடை விடையர்போலும்
செம்பொனா ருருவர்போலுந் திகழ்திரு நீற்றர்போலும்
எம்பிரா னெம்மையாளு மிறைவனே யென்றுதம்மை
நம்புவார்க் கன்பர்போலு நாகவீச் சரவனாரே. 642

கடகரி யுரியர்போலுங் கனன்மழு வாளர்போலும்
படவர வரையர்போலும் பாரிடம் பலவுங்கூடிக்
குடமுடை முழவமார்ப்பக் கூளிகள் பாடநாளும்
நடநவி லடிகள்போலு நாகவீச் சரவனாரே. 643

கொண்டு பணிவார்க்கும் நற்றுணையாவர் ‘சொற்றுணை வேதியன்’ ‘நற்றுணையாவது நமச்சிவாயவே’. பிறவி தீர்க்கும் நலமே எல்லாவற்றினும் பெரிதாதலின், நற்றுணை என்றார்(641).

642. கொம்பு - பூங்கொம்பு. அன்னாள் - நிகர்த்தவள். கோடியுடைவிடையர் – விடையெழுதிய கோடியுயர்த்தவர். ‘ஊர்தி வால்வெள்ளேறே சிறந்த சீர் கெழுகோடியும் அவ்வேறென்ப’ (புறம்) விடைக்கோடியுயர்த்தியதன் குறிப்பு :- மும்மலத்தின் இழிந்த பசுக்களைத் தன் திருவடிக்கே உயர்த்தும் பேரருட்டிறம் உணர்த்துங் குறிப்பு. செம்பொன்போலும் திருவுருவர். ‘ஆர்’ உவமவுருபு. ‘பொன்னார் மேனியன்’ ‘காச்சிலாத பொன்னொக்கும் கனவயிரத்திரள் ஆச்சிலாத பளிங்கினன்’ (2. 9. 2) ‘செம்பொன் மேனி’ எனத் திருமுறையிற் பயின்றதறிக. ’ எம்பிரான் எம்மை ஆளும் இறைவனே என்று நாகேச்சுரவனாரை நம்புவார்க்கு அன்பர்.

643. கடகரியுரியார்-மதயானைத் தோலுடுத்தவர். கரத்தை யுடையது கரி. ஆளர் - ஆள்பவர். படவரவு - படத்தையுடைய பாம்பு. அரவு அரையர் - இடையிற் கட்டிய அரவினையுடையவர். பாரிடம் - பூதங்கள். குடமுடை முழவம் - ‘குடமுழா’ இது சிற்சில திருக்கோயில்களுள் இன்றும் காணப்படும். ‘கூடுமே குடமுழவம் வீணைதாளம் குறுநடைய சிறு பூதம் முழக்க, மாக்கூத்து ஆடுமே.’ (6. 4. 5). ‘மாக்கூத்து’ - ‘மகா தாண்டவம்’, ‘மாநடம்’. கூளிகள் - பேய்கள். பூதங்களும் பாடுவன எனினும், ஈண்டுப் பாரிடம் ஆர்ப்பக் கூளிகள் பாட

பிறையுறு சடையர்போலும் பெண்ணொரு பாகர்போலும்
மறையுறு மொழியர்போலு மான்மறை யவன்றனோடும்
முறைமுறை யமரர்கூடி முடிகளால் வணங்கநின்ற
நறவமர் கழலர்போலு நாகவீச் சரவனாரே. 644

வஞ்சகர்க் கரியர்போலு மருவினோர்க் கெளியர்போலும்
குஞ்சரத் துரியர்போலுங் கூற்றினைக் குமைப்பர்போலும்
விஞ்சைய ரிரியவன்று வேலைவாய் வந்தெழுந்த
நஞ்சணி மிடற்றர்போலு நாகவீச் சரவனாரே. 645

என்றதால், பேய்களே கொள்ளப்படுவன. 'பேய்கள் பாடப் பல் பூதங்கள் துதிசெய......மாநடம் ஆடும் வித்தகனார்.' (2. 102. 7). 'பூதகணம் ஆட ஆடும் சொக்கன் காண்' (6. 87. 2) 'பக்கம் பூதங்கள் பாடப் பலிகொள்வான்' (5. 29. 10) 'பாடல் பயின்ற பல்பூதம் பல்லாயிரங்கொள் கருவி நாடற்கரியதோர் கூத்தும்' (18) என்பவற்றில், பூதங்கள் பாடலும் ஆடலும் இறைவன் ஆடுங்காலும் அன்றிப் பலிகொள்ளுங்காலும் உள்ளமை உணர்க.

644. இளம்பிறை சூடியார் (சந்திரசேகரனார், மங்கை பங்கினர். வேதவாக்கினர். திருமாலும் மறையவனும் தேவர்களும் முறை முறையாகக்கூடித் தம் முடிதாழ்த்து அடிவணங்க அருள் புரிந்து நின்ற நறைமலர்க் கழலடியிணையர் திருநாகேச்சரத் திறைவர். இறைவன் சடையிற் பிறையுற்றது. ஒரு பாகத்திற் பெண்ணினல்லாள் உற்றாள். திருவாயின் மொழிந்தனவே மறைகளெல்லாம். மொழியிலுற்ற மறைகள். மறைகள் உற்ற மொழி. மால்+மறையவன் - அரியும் அயனும். 'முறை முறை' என்ற அடுக்கு (287). அவர் வணங்க வரும் திரளின் இடையீடின்மையும், அந்நிலையில் ஒரு வரிசை அவரவர் தகைமைக்குத்தக முன்பின் புகலும் பிறவும் குறித்து நின்றது. 'நறவு அமர்கழல்' - 'கழல்' ஆகுபெயராய்த் தனக்கு இடமாய திருவடியையும், அத் திருவடியிற் சேர்க்கும் மலர்கள் நறவு அமர்ந்தனவாதலையும் குறித்தல் அறிக.

645. வஞ்சகர்க்கு அரியர் :- 'கரவாடும் வன்னெஞ்சர்க் கரியான்'. 'வஞ்சனையால் அஞ்செழுத்தும் வழுத்துவார்க்குச்

போகமார் மோடிகொங்கை புணர்தரு புனிதர்போலும்
வேகமார் விடையர்போலும் வெண்பொடி யாடுமேனிப்
பாகமா லுடையர்போலும் பருப்பத வில்லர்போலும்
நாகநா ணுடையர்போலு நாகவீச் சரவனாரே. 646

சேயான்'. 'வஞ்ச நெஞ்சத்தவர்க்கு வழிகொடார், நஞ்ச நெஞ்சர்க்கருளும் நள்ளாறரே' (நஞ்சநெஞ்சு=நைந்த நெஞ்சு). 'வஞ்சம் கொண்டார் மனம் சேரகிலார்' 'வஞ்சமனத்திறையும் நெஞ்சணுகாதவன்' 'வஞ்சம் அற்ற மனத்தாரை மறவாத பிறப்பிலி' என்றனவும் பிறவும் திருமுறையிற் காண்பன. 'மருவினோர்க்கு எளியர்':- 'சார்ந்தவர்க்கலால் நலம் இலன்' (109). குஞ்சரத்து உரியர் - யானைத் தோலினர். குஞ்சரம் - குஞ்சத்தை யுடையது. புதரிற் சஞ்சரிப்பது எனல் பொய்யுரை. கு - புதர். சரம் - சஞ்சரிப்பது என்பார், 'குஞ்சரம்' 'சரம்' என்பனவற்றிலுள்ள சகாரம் இரண்டும் வெவ்வேறுதலை உணரார். கூற்று - உடலையும் உயிரையுங் கூறுசெய்யும் தெய்வம். குமைப்பர் - அழிப்பர். 'கோடுவெளிற் றறிவிரண்டும் குமைப்ப' (தணிகைப்புராணம் காப்பு) 'விஞ்சையர்' என்றது அவர் முதலிய தேவர்கள். இரிய - ஓட. வேலை - கடல். 'வாய்' ஏழனுருபின் பொருட்டாயதோரிடைச்சொல். நஞ்சோ அமுதோ வந்தது வாய்தானே! அதனால் வேலையது வாய் என ஆறன் தொகையுமாம்.

646. போகம் - இன்பம். புணர்வுமாம். மோடி - (காடு கிழாள்). துர்க்கை. புணர்ந்தாலும் புனிதம் உடையவர். வேகம் - விரைவு. திருவெண்ணீற்றை வெண்பொடி எனல் 'வெண்பொடி மேனியினன் கருநீல மணிமிடற்றன் பெண்படி செஞ்சடையான்' என்று சொல்லுஞ் சுந்தரம் ஈண்டுணரத் தக்கது. திருமால் ஒரு பாகம் இருப்பது முன்னரும் கூறப் பட்டது. 245, 320, 'மற்றையொருபாலும் அரியுருவம் திகழ்ந்த செல்வர்' (6. 58. 3). பருப்பதம் - மேருபருவதம். வில்லர் - (மேருவை) வில்லாக உடையவர். பருப்பத வில் - மேருவில். வில்லர் - வில்லுடையார். நாகநாண் உடையர்:- அம் மேருவில்லிற் பூட்டிய நாண் பாம்பாதலைக் குறித்தது. 'எரிகாற்றீர்க்கு அரிகோல் வாசுகி நாண் கல்வில்லால் எயில் எய்தான்' (1 11 6) 'குன்றவார்சிலை நாண் அரா' (2. 50. 1).

கோக்கரை தாளம்வீணை பாணிசெய் குழகர்போலும்
அக்கரை யணிவர்போலு மைந்தலை யரவர்போலும்
வக்கரை யமர்வர்போலு மாதரை மையல்செய்யும்
நக்கரை யுருவர்போலு நாகவீச் சரவனாரே. 647

வின்மையாற் புரங்கண்மூன்றும் வெந்தழல் விரித்தார்போலும்
தன்மையா லமரர்தங்க டலைவர்க்குந் தலைவர்போலும்
வன்மையான் மலையெடுத்தான் வலியினைத் தோலைவித்
நன்மையா லளிப்பர்போலு நாகவீச் சரவனாரே. [தாங்கே

திருச்சிற்றம்பலம்

647. கோக்கரை, தாளம். வீணை பாணிசெய் குழகர்.- திருக்கூத்தாடுங்கால் இயம்பும் கருவியும், கொட்டும், தட்டும், இசைக்கும் பிறவும் திருமுறையுட் பயின்றுள. அக்கு அரை அணிவர்:- 'அக்கரவம் அரைக்கசைத்த அம்மான்' தண்ணார் 'அக்குலாம் அரையினர்' 'அக்கு' 'அக்கு ஒட்டினைச் சேய் அரைகரம் கொண்டார்' (காஞ்சிப் புராணம்). ஐந்தலை அரவர்:- 'அஞ்சு கோலாம் அவர் ஆடரவின்படம்' 'பத்துக் கோலாம் அவர் பாம்பின்கண் பாம்பின் பல்.' (181, 186), வக்கரை திருவக்கரை என்னுஞ் சிவதலத்தில் எழுந்தருளி யிருக்கும் நினைவு. வல்+கரை - வற்கரை. மரூஉ. மாதர் - தாருக வனத்து முனிபத்தினியர். மையல் - மோகம். நக்கர் - 'நக்நன்' சோக்கலிங்கம் உண்டே துணை (இரட்டையர் பாடல்).

648. வின்மை - (மேரு) வில்லின் வன்மை. வில்லின் தன்மை வின்மை. அத்தன்மை ஈண்டு வன்மையாகும். வாளா இருந்தே மூளாத் தீப் புரம் உறச் செய்ததே வன்மை. தன்மை - தானும் இயல்பு. எல்லாத்தேவருள்ளும் (மாந்தருள்ளும்) மற்று எவ்வுயிருள்ளும் இருந்து தானாதலின், தன்மையால் அமரர் தங்கள் தலைவர்க்கும் தலைவர் என்றார். உம்மை இறந்தது தழீஇயிற்று. வன்மை - ஆற்றல்; வலி. தோலைவித்து - தோற்கப்பண்ணி. ஆங்கே - அப்பொழுதே, அவ்விடத்தே, 637 இல் 'அங்கு' என்றதன் குறிப்புரையை நோக்குக. நன்மை - சாமகானங் கேட்ட இன்ப நலம். அளிப்பர் - அன்பின் முதிர்ச்சியான அளியால் அருள்கள் செய்வார்.

## 67 திருக்கொண்டீச்சரம்

### திருப்பதிக வரலாறு

இப் பதிக வரலாறு பற்றிய குறிப்புக் கிடைத்திலது

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

வரைகிலேன் புலன்களைந்தும் வரைகிலாப் பிறவிமாயப்
புரையிலே யடங்கிநின்று புறப்படும் வழியுங்காணேன்
அரையிலே மிளிருநாகத் தண்ணலே யஞ்சலென்னாய்
திரையுலாம் பழனவேலித் திருக்கொண் டீச் சரத்துளானே.

649. 'கடைக் கண்ணான் மங்கையையும் நோக்கா என் மேல் ஊனமது எல்லாம் ஒழித்தான்' (6. 19. 4) என்றதனை உளங்கொண்டு, இத்திருப்பதிகத்தையுணர்வாராக. வரைகிலேன் - நீக்கிடும் ஆற்றலில்லேன். புலன்கள் ஐந்தும் - ஐம்புலன் களையும். 'அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும் வேண்டிய எல்லாம் ஒருங்கு' (குறள். 343). 'செவி முதலிய ஐம்பொறிகட்கும் உரியவாய ஓசை முதலிய ஐம்புலன்களையும் கெடுத்தல் வீடு எய்துவார்க்கு வேண்டும். புலம் என்றது அவற்றை நுகர்தலை. துன்பத்தானும் பாவத்தானும் அன்றி வாராத பொருள்கள்மேல் அல்லது, வீட்டு நெறியாகிய யோக ஞானங்களில் மனத்தைச் செலுத்தாமையின், அதனை அடல் வேண்டும்' என்றும், அஃது அப்பொருள்கள் மேல் செல்லின், அந்நுகர்ச்சி விறகு பெற்ற தழல்போல முறுகுவதல்லது அடப் படாமையின், வேண்டிய எல்லாம் ஒருங்கு விடல்வேண்டும்' என்றும் கூறினார் (திருவள்ளுவர்) என்றார் பரிமேலழகர். வரை கிலாப் பிறவிமாயப் புரையிலே அடங்கிநின்று புறப்படும் வழியும் காணேன் - நீக்குதற்கரிய பிறப்பிற்கு ஏதுவான வஞ்சக் கூறுபாடுகளிலே அகப்பட்டு (ஒடுங்கி) நின்று, அதனின் நீங்கிப் புறப்படும் வழியையும் அறிகிலேன். 'பிறவிக்கு ஏதுவான மாயப்புரை' புரை - கூறுபாடு (சிந்தாமணி 1732). அடங்கி நிற்றல் - ஆசையால் அறிவு சென்று பொருந்துதல். புறப்படும்

தொண்டனேன் பிறந்துவாளா தொல்வினைக் குழியில்வீழ்ந்து
பிண்டமே சுமந்துநைந்து பேர்வதோர் வழியுங்காணேன்
அண்டனே யண்டவாண வறிவனே யஞ்சலென்னாய்
தெண்டிரைப் பழனஞ்சூழ்ந்த திருக்கோண்டீச் சரத்துளானே.

வழி வேண்டவே அடங்கி நிற்றல் அகப்படுதலாயிற்று. அரை - இடை. நாகம் - அரவக்கச்சு. அஞ்சல் - அஞ்சாதே. என்னாய் - என்றருள்வாய். திரை-அலைகள். உலாம்-உலாவும்; வந்து வந்து செல்லுதல். பழனம் - வயல். ஐந்தலைப் பாம்பினை அடக்கி அரையிற் கட்டிய அண்ணல் நீ எனக்கு ஐம்புலனடக்கம் விளைத்தருளவல்லாய் என்றவாறு. புரையடக்கம் பனிமலர்க் கோதைமார் தம் மேலனாய்க் கிடத்தலுமாம்

650. தெளிந்த நீர் அலைகளையுடைய வயல் சூழ்ந்த திருக்கோண்டீச்சரத்தில் எழுந்தருளிய கடவுளே, தேவனே, அண்டங்களுள்ளும் புறம்பும் வாழ்பவனே. ஞான சொருபனே, தொண்டனேன் பிறந்து வீணே, பிரவாகாநாதியாகத் தொடரும் வினையானகுழியில் விழுந்து, அவ்வினைக்குத் தக்க ஊனாலான பிண்டத்தைப் பொறுத்துத் தேய்ந்து (இதனினின்றும்) பெயர்ந்துய்வதொரு வழியும் அறியேன். அஞ்சாதே என்று சொல்லி என்னை ஆளாக்கிக்கொண்டு நின் திருவடி நிழலில் வைத்தருள்வாய். ‘ தொண்டன் ’ என்னும் படர்க்கைப் பெயர், தன்மை யொருமையீறுஞ் சேர நின்று, அப்படர்க்கையின் நீங்கித் தன்மைக் குரியதாதலறிக. ‘ அடியனேன் ’ ‘ பத்தனேன் ’ என்று பயிறலும் நினைக. பிண்டம் - உடல். அண்டம் - உலகம். ‘ அண்ட பிண்டம் அவை சமம் ’ (கோயிற்புராணம்). வினைக்குழி ’ :- வினைத்துடக்கிற்பட்டு மீளாத்துன்புறும் நிலையின் நீங்கிச், சிவபெருமானுக்கு மீளா ஆளாகிப் பேரின்பம் உறுதல் பெரிதும் அரிதாம்படி, தன் கண் வீழ்த்தி அடக்கி யுயிர்களைச் சிறுமைப்படுத்துதலின் ‘ வினைக்குழி ’ என்றார். ஆன்மா வியாபகப் பொருள். அது குழியில் வீழ்ந்து அவ்வியாபக முறுதலின், ‘ பிண்டமே சுமந்து ’ என்றார். ‘ உயிர் ஈரும் வாள் நாள் ’ ஆதலின் ‘ நைந்து ’ என்றார் ’ அண்டவாணன் என்பது அண்ட வாழ்நன் என்றதன் மரூஉ. ‘ அஞ்சல் ’ ‘ (மகன்) எனல் ’ போல்வது.

கால்கொடுத் தெலும்புமுட்டிக் கதிர்நரம் பாக்கையார்த்துத்
தோலுடுத் துதிரமட்டித் தொகுமயிர் மேய்ந்தகூரை
ஓலெடுத் துழைஞர்கூடி யோளிப்பதற் கஞ்சுகின்றேன்
சேலுடைப் பழனஞ்சூழ்ந்த திருக்கொண்டீச் சரத்துளானே.

கூட்டமா யைவர்வந்து கொடுந்தொழிற் குணத்தராகி
ஆட்டுவார்க் காற்றகில்லே னுடர வசைத்தகோவே
காட்டிடை யரங்கமாக வாடிய கடவுளேயோ
சேட்டிரும் பழனவேலித் திருக்கொண்டீச் சரத்துளானே. 652

---

651. சேல்களைக்கொண்ட வயல்கள் சூழ்ந்த திருக் கொண்டீச்சரத்தி லெழுந்தருளிய பெருமானே, இருகால் கொடுத்தும் எலும்புகளைப் பொருத்தியும், விளங்கும் நரம்புகளை யாக்கையுள் ஆரச்செய்தும், தோலை உடுத்தும், குருதியை அட்டியும் (சேர்த்தும்) தொக்க மயிர்களால் வேய்ந்தும் அமைத்த இப் பொய்யுடம்பாகிய கூரையைப் பக்கத்துள்ள சுற்றங் கிளைகேள் எல்லாரும் ஒன்றுகூடி, ஓலம் எடுத்துக் கதறியழுதுவிட்டு, சுடுகாட்டில் குழிதோண்டிப் புதைத் தொளிக்கும் நிலைமை......க்கு அஞ்சுகின்றேன். மீண்டும் அது வாராத வழியை அருள்வாய் என்றது. கதிர்த்தல் - விளங்குதல். யாக்கை ஆர்த்து - யாக்கையாகக் கட்டி எனலுமாம். 'ஒடும் நீரினை ஓட்டைக் குடத்து அட்டி' என்றுற்போ லுதிரமட்டி என்புழிக்கொள்க. 'மடம்படு முணர் நெய்யட்டி' (729)

652. ஐவரும் ஒருங்கு கூடி வந்து, கொடிய தொழிலே தம் இயல்பாம் வண்ணத்தராகி, என்னைப் பலபட ஆட்டு கின்றனர். அவர் ஆட்டும் அச்செயலைப் பொறுக்கமாட்டேன். ஆடரவை அரையிற் கச்சையாகக் கட்டிய அண்ணலே, கள்ளி முதுகாட்டில் அதனை நாடகசாலையாகக் கொண்டு ஆடிய கடவுளேயோ? நன்மையும் பெருமையும் உற்ற கழனிகள் சூழ்ந்த திருக்கொண்டீச்சுரத்துள்ள முதல்வனே. சேடு - நன்மை. இருமை - பெருமை. உள்ளானே, ஆற்றகில்லேன் என்றியைக்க. கொடுந்தொழிலும் கொடுங்குணமும் உடையர். கொடுந் தொழிலே தம் குணமாக உடையர் எனலுமாம். தொழிற் பண்புமாம்.

போக்கமாய் நின்றபொல்லாப் புழுமிடை முடைகொளாக்கை
தோக்குநின் றைவர்தோண் ணூற் றறுவருந் துயக்கமெய்த
மிக்குநின் றிவர்கள்செய்யும் வேதனைக் கலந்துபோனேன்
சேக்கரே திகழுமேனித் திருக்கோண டீச் சரத்துளானே. 653

ஊனுலா முடைகொளாக்கை யுடைகல மாவதென்றும்
மானுலா மழைக்கணார்தம் வாழ்க்கையை மெய்யென் [றெண்ணி
நானெலா மினையகால நண்ணிலே னெண்ணமில்லேன்
தேனுலாம் பொழில்கள்சூழ்ந்த திருக்கோண டீச்சரத்துளானே.

---

653. போக்கம் - பொய். 'போக்கம் பேசிப் பொழுது கழியாதே' 'பொக்கமிக்கவர் பூவும் நீரும் கண்டு நக்குநிற்பன் அவர் தம்மை நாணியே' (5. 90. 9). மிடை - கலந்த. முடை - புலால் நாற்றம் (656). 'முடை கமழ்ந்துதிரமுமிழும்' (கூர்ம புராணம்) என்றதும் ஈண்டுக் கருதற்பாலது. தோக்கு - கூடி. துயக்கம் - சோர்வு, அறிவின் திரிபுமாம். வேதனை - வாதை, துன்பம். அலந்து - அலைந்து. துன்புற்று (505). சேக்கர் - சேவ்வான். 'சேவ்வானன்னமேனி' (அகம். கடவுள் வாழ்த்து) செய்யமேனி. திருக்கோண டீச்சரத்தானே, பொய்யான பொல்லாத புழுப்பொதிந்த புன்புலால் நாற்றத்தையுடைய இவ்வுடலிலே கூடிநின்ற ஐவரும் (ஐம்புலக் கள்வரும்) தொண்ணூற்றறுவரும் (தத்துவம் முப்பத்தாறு, தாத்துவிகம் அறுபது) ஆகிய இவர்கள் செய்யும் வேதனைக்கு அலந்துபோனேன். யான் துயக்கம் எய்தச் செய்யும் வேதனை. மிக்கு நின்று செய்யும் வேதனை. துயக்கம் எய்துதல் அலந்துபோனார் வினை. தொண்ணூற்றறுவரும் துயக்கம் எய்த ஐவராய இவர்கள் செய்யும் வேதனை எனலுமாம். ஆயின், இகரச்சுட்டுக்கு அணிய ராவார் ஐவர்-தொண்ணூற்றறுவரல்லர் என்றுகுழ (655 பார்க்க). ஆயினும், 655 இல் அங்கனம் கொள்ளல் பொருந்தாது.

654. தசையுலாவும் புலால் நாற்றங்கொண்ட உடல் நடுக்கடலில் உடையும் மரக்கலம் போல்வதென்றும் மான் போலும் குளிர்விழியவர்தம் வாழ்க்கையை அழியா வாழ் வென்றும் எண்ணி, நான் இவ்வளவு காலமெல்லாம் திருக் கோண டீச்சரத்துள்ளானை நண்ணலும் எண்ணலும் இல்லேன்,

சாணிரு மடங்குநீண்ட சழக்குடைப் பதிக்குநாதர்
வாணிக ரைவர்தோண்ணூற் றறுவரு மயக்கஞ்செய்து
பேணிய பதியினின்று பெயரும்போ தறியமாட்டேன்
சேணுயர் மாடநீடு திருக்கோண்டீச் சரத்துளானே. 655

இனைய - இத்தன்மைய. நண்ணிலேன் - கிட்டிலேன்; பொருந்திலேன். நண்ணுதல்-கிரியை. எண்ணம்-தியானம். யோகத்திற்குரியதுமாம். தேன் - வண்டுகள். நீருலாம் என்பது போலத் தேனுலாம் எனலுமாம். யாக்கை என்றதன் மருஉவே ஆக்கை. உடைகலம் - உடைகின்ற மரக்கலம்; உடையும் மட்கலமும் போல விரைந்தழிவதும் ஆம். ‘ நண்ணிலேன் ’ நின்னை என்க. மழைக்கண் - மழை போலுங் குளிர்ச்சி செய்யும் கண்.

655. சாண் அளவில் இருமடங்கு நீண்ட பதி சழக்குடையபதி. சழக்கு - பொய். ‘ தக்க சொற்றிறம் உரைத்திலை சழக்கினன் எனப் பெயரிடும் இக்கருத்தை யினி விட்டுவிடு விட்டுவிடேனக் கழறினான். ’ (அரிச்சந்திர புராணம். நகர் நீங்கு. 124) ‘ இச் சழக்கின்று நான் இசைந்தாற் றருமந்தான் சலியாதோ ’ (சேக்கிழார்) என்றவாறுரைத்தால், நீதிக்கு விரோதம் என்ற பொருட்டாம். ஐவரும் இப் பதியான உடலில் நாதராயிருந்து, உயிரை அடிமைப்படுத்தி, பொருளீட்டும் வணிகர்போல வினையீட்டுவராய் நீதிவிரோதமே புரிவர். பொய்யே வளர்ப்பர். ஐவரும் தொண்ணூற்றறுவரும் மயக்கஞ் செய்து. பேணிய பதி. பதிக்குநாதர் பேணியபதி. பதியினின்றும் பெயரும் போது - பொழுது. பொழுதை அறியமாட்டேன். பொழுதில் நின்னை உணரமாட்டேன். ‘ உன்னை நினைந்தே கழியும் என்னாவி ’ (1055) ‘ நின் நாமம் பரவி நமச்சிவாய என்னும் அஞ்செழுத்தும். சாம் அன்று உரைக்கத் தருதிகண்டாய்.’ (995). பெயர்தல் - உடலிற் புகுந்துறைந்து மீளல். சேண் உயர் மாடம் நீடு திருக்கோண்டீச்சரம் என்றது திருக்கோயிற் சிறப்புணர்த்திற்று. அவ்வூரிலிருக்கும் மாடங்களினுயர்ச்சி எனலாகாது. அக்காலத்தில், திருக்கோயிலினும் உயர்த்தி வீடு கட்டும் எண்ணமே சைவர்க்கு உறுதலில்லை,

பொய்ம்மறித் தியற்றிவைத்துப் புலால்கமழ் பண்டம்பெய்து
பைம்மறித் தியற்றியன்ன பாங்கிலாக் குரம்பைநின்று
கைம்மறித் தனையவாவி கழியும்போ தறியமாட்டேன்
செந்நெறிச் செலவுகாணேன் திருக்கொண்டீச் சரத்துளானே.

பாலனாய்க் கழிந்தநாளும் பனிமலர்க் கோதைமார்தம்
மேலனாய்க் கழிந்தநாளு மெலிவோடு மூப்புவந்து
கோலனாய்க் கழிந்தநாளுங் குறிக்கோளி லாதுகெட்டேன்
சேலுலாம் பழனவேலித் திருக்கொண்டீச் சரத்துளானே. 657

656. பொய் யெல்லாவற்றையும் புறம் போகலொட்டாது தடுத்துத் திருப்பி, அவற்றாற் செய்துவைத்துப் புலால்கமழும் பண்டங்களை இட்டுப் பையை மறித்துச் செய்தாற் போன்ற அழகில்லாத உடற் குடிலினின்று, இனி இவ்வுடல் எனக்கு வேண்டா எனக் கைகவித்து விலக்கினாற்போன்ற ஆவி கழியும் பொழுது அறியகில்லேன். திருநிறை செம்மை நெறியிற் செல்லும் செலவு (ஞானசாரம்) உணரேன். பைம்மறியாப் பார்த்தல் :- தருமையாதீன வெளியீடு 'சாத்திரங்களும் தோத்திரங்களும்' பக்கம். 2 ·, 30 பார்க்க. 'தொல்லுலகைப் பைம்மறியாப் பார்க்கிற பரையாகும். அப்பரையைப்பைம்மறியாப் பார்க்கிற பரம்.' (சிற்றம்பல நாடிகள் வெண்பா. 55). கைம்மறித்தல் - 'தக்கார்போற் கைம்மறித்த காந்தள் - காந்தள் நன்மக்களைப் போலே அந்தோ இதுதகாது என்று கைகவித்து விலக்கின.; 'தம் கைம்மறித்து' - (சிந்தாமணி. 1227. 1809) 'நளினக்கைம்மறித்து' (கம்பராமாயணம். கடல்தாவு படலம். 93).

657. இளஞ்சேயாய் இருக்கக் கழிந்த நாளிலும், (காளையாய்க்) குளிர்ந்த பூங்கோதைமகார்தம்மிடத்தணுகியிருக்கக் கழிந்த நாளிலும், மெலிவும் மூப்பும் உற்றுக் கைக்கோல் ஏந்திக் கொண்டு முக்காலுக்குத் தக்கானாகியிருக்கக் கழிந்த நாளிலும், உயிர்த்துணையாகிய உன்னைக் குறியாகக்கொள்ளுதல் இல்லாமற் கெட்டேன். சேல்மீன் உலாவும் வயல்களை வேலியாகவுடைய திருக்கொண்டீச்சரத்துள்ள முதல்வனே. இதில் குறிக்கோள் இல்லாது கழிந்த காலமும், குறிக்கோளினின்றியமையாமையும், குறியாவதும் உணர்த்தியவாறுணர்க. குறிக்கோளிலாது கெட்டவாறுணர்தற்குச் சென்ற காலத்தின் நீட்சியை நோக்கின்,

விரைதரு கருமென்கூந்தல் விளங்கிழை வேலோண்
[கண்ணாள்
வெருவர விலங்கைக்கோமான் விலங்கலை யெடுத்தஞான்று
பருவரை யனையதோளு முடிகளும் பாறிவீழத்
திருவிர லூன்றினானே திருக்கோண்டீச் சரத்துளானே. 658

திருச்சிற்றம்பலம்

81 ஆண்டிருந்தவர்க்கு அதுதகும். சில்வாழ் நாளர்க்குத்தகாது. 'அவன்றன் குறிப்பே குறிக்கொண்டு போமாறமைமின்' (யாத்திரைப். 3) 'உன்றன் திருக்குறிப்புக் கூடுவார்' (திருச்சதகம். 55) 'என் குறிப்பே செய்து நின்குறிப்பில் விதுவிதுப்பேன்' (நீத்தல் 34) 'திருக்குறிப்பருளுந்தில்லைச் செல்வன்' (9. 4. 7) 'குறியிலேன்' (554) 'என்று வந்தா யென்னும் எம்பெருமான்றன் திருக்குறிப்பே' என்றவற்றால், இறைவனதாய திருக்குறிப்பும் அடியாரதாய குறிக்கோளும் விளங்குதலறிக. 'குறியிலாக் கொடியேனை அடியேனாகச் செய்தானைத் திருநாகேச்சரத்துளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேராதாரே' (6. 66. 8).

658. விரை - மணம். கருமையும் மென்மையும் கூந்தலுக் குரியன. கூந்தலும் இழையும் கண்ணும் உடைய அம்பிகை. வெருவர - அஞ்சுதல் உண்டாக. கோமான் - கோமகன். மகன் என்பதன் மரூஉவே மான். இலக்கண நூலார்க்கு அது விகுதி ஆயினும் சொல்லாராய்ச்சிக்கு அஃது ஒவ்வாது. மகள் - மாள். மகவர் - மகார் - மார் என மருவியவையும் உணர்க. செட்டிமார், குருக்கண்மார், ஆசிரியன்மார் என்பவற்றில் அம் மகார் என்னும் பொருள் அன்றிப் பிறிதில்லை. மகார் என்பது மருவி மார் என்றாதல் ஒன்று. செய்யுமவர், கொள்ளுமவர் முதலியன மருவி, செய்மார் கொண்மார் முதலியனவாதல் ஒன்று. 'மகார்' 'அவர்' இரண்டும் பெயர்ச்சொல்லாதலின் அவற்றின் மரூஉவும் வினை கொண்டுமுடிகின்றன. மார்வினையோடும் முடிதற்கு ஏது யாது என்று ஆய்வார்க்கு இது விளங்காதிராது. 'பாடன்மார் எமர்' என்புழிப்படும் இடர்ப்பாட்டிற்கு, மருவிய பின்னர் விகுதியெனக்கொண்டுரைத்ததே ஏது. பருவரை - பரியமலை. பாறி - சிதறி. ஞான்று - நாளன்று என்பதன் மரூஉ.

# 68 திருவாலங்காடு

## திருப்பதிக வரலாறு

மெய்மை நிலை வழுவாத மேன்மை நெறி விழுக்குடிமைச் செம்மையினர் பழையனூர்த் திருவாலங்காட்டிறைவனைப் பணிந்து பாடியவற்றுள் ஒன்று இத் திருப்பதிகம் (புராணம் 341 - 2).

### திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

வெள்ளநீர்ச் சடையர்போலும் விரும்புவார்க் கெளியர்போலும்
உள்ளுளே யுருகிநின்றங் குகப்பவர்க் கன்பர்போலும்
கள்ளமே வினைகளேல்லாங் கரிசறுத் திடுவர்போலும்
அள்ளலம் பழனைமேய வாலங்காட் டடிகளாரே. 659

659. வெள்ளநீர் - கங்கை நீர்ப்பெருக்கம். நீரை அடக்கிய சடையினர். விரும்புவார்க்கு எளியர் - நச்சுவார்க்கு அரிய ரல்லாராய் மிக எளியராயருள்வார். உள்ளுளே - உள்ளத்துள்ளே. உருகி நின்று அங்கு உகப்பவர்க்கு. கசிந்து நின்று, பாசத்தின் நீங்கியுயர்ந்து நினையுமவர்க்குத் தம்பால் அவர் வைத்த அன்பா யிருப்பவர். உயிர்கள் செய்யும் எல்லா வினைகளையும் அவை நுகர்ந்து தீர்க்கற்பாலன. தீர்க்கும்போதும் வினை செய்தலால் முற்றுந் தீரா. செய்யாமை செய்து செயலறுப்பார்க்கு எதிர்வினை யும் இல்லை. நுகர்வினையும் தீரும். தீருங்காற் செய்யும் புதுவினை இல்லாமையால், வினைமுற்றுந் தீர்ந்துவிடும். செய்யாச் செயல் செய்து கரிசறத் தீர்த்தல் எல்லார்க்கும் விளங்காது. அதனால் அது வெள்ளம் அன்று. கள்ளமே. அள்ளல் - சேறு. பழனை திருவாலங்காட்டருகிலுள்ளதோரூர் பழையனூர் எனப்படுவது. அதன் மரூஉவே பழனை என்பது. மேய (மே+ய்+அ) எழுந் தருளிய. இது போய, ஆய முதலியவை போலும் பெயரெச்சம்.

செந்தழ லுருவர்போலுஞ் சினவிடை யுடையர்போலும்
வெந்தவெண் ணீறுகொண்டு மெய்க்கணிந் திடுவர்போலும்
மந்தமாம் பொழிற்பழனை மல்கிய வள்ளல்போலும்
அந்தமி லடிகள்போலு மாலங்காட் டடிகளாரே. 660

கண்ணினாற் காமவேளைக் கனலெழ விழிப்பர்போலும்
எண்ணிலார் புரங்கண்மூன்று மெரியுணச் சிரிப்பர்போலும்
பண்ணினா ர் முழவமோவாப் பைம்பொழிற் பழனைமேய
அண்ணலா ரெம்மையாளு மாலங்காட் டடிகளாரே. 661

காறிடு விடத்தையுண்ட கண்டரெண் டோளர்போலும்
தூறிடு சுடலைதன்னிற் சுண்ணவெண் ணீற்றர்போலும்
கூறிடு முருவர்போலுங் குளிர்பொழிற் பழனைமேய
ஆறிடு சடையர்போலு மாலங்காட் டடிகளாரே. 662

660. செந்தழல் உருவர் - செந்தீ வண்ணர். சினவிடை யுடையர் - செங்கண் விடையினையூர்தியாக உடையவர். சுட்ட திருவெண்ணீற்றினைக் கொண்டு திருமேனிக்கு அணிசெய்திடுவார். மந்தம் ஆம் பொழில் - தென்றல் உலாவும் சோலை. பொழிலையுடைய பழனை. மல்கிய-மிக்க. வள்ளல். கொடையாளர். அந்தம் - ஈறு; முடிவு. இல் - இல்லாத. அடிகள் - உடையவர்; காட்டிலுள்ள துறவியார்.

661. காமவேளை - மன்மதனை. கண்ணினால் - நெற்றிக் கண்ணினால் கனல்எழ - தீப்பறக்க. விழிப்பர் - விழித்தெரிப்பர் எண் இலார் - எண்ணுதலில்லாதவர்; பகைவர். எரிஉண - தீய சிரிப்பர் - நகைப்பர். பா. 35 பார்க்க அதற்கு இது முரண் படும். பண்ணின் ஆர் முழவம் - பண்ணிசைக்குத் தகப் பொருந்திக் கொட்டப்படும் முழவு. இசைக்கு ஆகுபெயர். ஓவா - நீங்காத. பைம்பொழில் - பைஞ்சோலை. அண்ணலார் - பெருமையார். எம்மை - எங்களை. நம்மை ஆள்வார் (668)

662. காறிடு விடத்தை-கொல்கின்ற நஞ்சினை. உண்டவ ருயிரைப் போக்கும் விடமுமாம். உண்டகண்டர் - (நஞ்சு) அருந் திய திருநீலகண்டர். தூறு :- 'பற்றை' என்பர்; சுடலையில்

பார்த்தனோ டமர்பொருது பத்திமை காண்பர்போலுங்
கூர்த்தவா யம்புகோத்துக் குணங்களை யறிவர்போலும்
பேர்த்துமோ ராவநாழி யம்பொடுங் கொடுப்பர்போலும்
தீர்த்தமாம் பழனைமேய திருவாலங் காடனாரே. 663

வீட்டினார் சுடுவெண்ணீறு மெய்க்கணிந் திடுவர்போலும்
காட்டினின் றுடல்பேணுங் கருத்தினை யுடையர்போலுங்
பாட்டினார் முழவமோவாப் பைம்பொழிற் பழனைமேயார்
ஆட்டினா ரரவந்தன்னை யாலங்காட் டடிகளாரே. 664

கரிசாம்பல் முதலியன தூளாகும். சுண்ணம் - பொடி. திருவெண்ணீற்றர். கூறு - பாகம். உருவர் திருமேனியர். அர்த்தநாரீசுவரர், குளிர் பொழில், நிகழ்கால வினைத்தொகை. ஆறு - கங்கை. கங்கையை அடக்கியிட்டசடையுடையவர்.

663. பார்த்தன் - அருச்சுனன். அமர் - போர். பொருது- தாக்கி. பத்திமை - 'தொண்டராங்குணம்' காண்பர் - அறிவர். கூர்த்த - கூரியதாகிய. வாய் - முனை. அம்பு - மால்கணை. கோத்து - வில்லிடைச் சேர்த்துத் தொடுத்து. குணங்களை - தவத்திற்கேற்ற இயல்புகளை. அறிவர் - உணர்வர். பேர்த்தும் - பெயர்த்தும்; மீண்டும். ஓர் - ஒப்பற்ற. ஆவம் நாழி - அம்புறுத் தூணியை. அம்புகளோடும் கொடுப்பர். தீர்த்தம் - பரிசுத்த முடையது; பாவம் போக்குவது.

664. வீட்டினார் - இறந்தவர் சுடுநீறு - வெண்ணீறு. 'மெய்க்கு அணிந்திடுவர்' (660). காட்டில் - சுடுகாட்டில். நின்று ஆடுதலைப் பேணும் கருத்தினை உடையவர். பேணுதல் - விரும்புதல். 'பாட்டினார் முழவம் ஓவாப் பைம்பொழிற் பழனை'- 'பண்ணினார் முழவம் ஓவாப் பைப்பொழிற் பழனை' (661). மேயார்-மேவியவர் (659 குறிப்பு). அரவம் - பாம்பு. அரவத்தை ஆட்டினார். பாம்பாட்டிய பரமன். 'பாம்பாட்டிச் சித்தர் பாடல்' என்னும் வழக்குணர்க. ஆலங்காட்டடிகள் பாம்பாட்டடிகள்

தாளுடைச் செங்கமலத் தடங்கொள்சே வடியர்போலும்
நாளுடைக் காலன்வீழ வுதைசெய்த நம்பர்போலும்
கோளுடைப் பிறவிதீர்ப்பார் குளிர்பொழிற் பழனைமேய
ஆளுடை யண்ணல்போலு மாலங்காட் டடிகளாரே. 665

கூடினு ருமைதன்னோடே குறிப்புடை வேடங்கொண்டு
சூடினர் கங்கையாளைச் சுவறிடு சடையர்போலும்
பாடினர் சாமவேதம் பைம்பொழிற் பழனைமேயார்
ஆடினர் காளிகாண வாலங்காட் டடிகளாரே. 666

வெற்றரைச் சமணரோடு விலையுடைக் கூறைபோர்க்கும்
ஒற்றரைச் சொற்கள்கொள்ளார் குணங்களை யுகப்பர்போலும்
பெற்றமே யுகந்தங்கேறும் பெருமையை யுடையர்போலும்
அற்றங்க ளறிவர்போலு மாலங்காட் டடிகளாரே, 667

665. தாள் - தண்டு. செங்கமலச் சேவடி. தடம்கொள் சேவடி. தட - பெருமை. நாள் உடைக் காலன் - அவ்வவ் வுயிர்க்கு உடலோடு நிற்கவைத்த நாள்களைக் கருத்தில் உடைய காலன். தொடர்ந்த உடலையும் உயிரையும் பிரிக்கும் நாளை யுடையனுமாம். உதை செய்த - உதைத்தலைச் செய்த. ‘ உதை கரணம் செய்துகந்த சிவமூர்த்தி ’ (133). நம்பர் - விரும்பப் படுபவர். பேறுபவர் எனின், விரும்புதலை விரும்புவாராவர். கோள் - துன்பம். ‘ பிறவித் துன்பம் ’ என்னும் வழக்குணர்க. ஆள் உடை அண்ணல் - ஆளுதலை உடைய தலைவர். என்னை யாளுடைய வள்ளல்.

666. குறிப்பு-காதற்குறிப்பு. வேடங்கொண்டு உமையோடு கூடினர். கங்கையாளைச் சூடினர். சுவறிடு சடையர் :- கங்கை மிகப் பெரிதாயினும், சடையின் நுனிக்கும் அஃது ஆற்றாது சுவறிட்டது (வற்றியது) என்றதாம். கங்கையைச் சடைசுவறிற்று (உறிஞ்சிற்று) எனலுமாம். சாமவேதம் பாடினர். ‘ மேயார் ’ (664). காளிகாண (ஆலங்காட்டில்) ஆடினர் அடிகள்.

667. வெற்றரைச் சமணர் - திகம்பர சைனர். விலை யுடைக்கூறை போர்க்கும் ஒற்று - தேரர் ; சுவேதாம்பரசைனரு மாவர். ஒன்றும் அரையும் ஆம் சொற்கள் ஒற்றரைச்

மத்தனாய் மலையெடுத்த வரக்கனைக் கரத்தோடொல்க
ஒத்தினார் திருவிரலா லூன்றியிட் டருள்வாபோலும்
பத்தர்தம் பாவந்தீர்க்கும் பைம்பொழிற் பழனைமேய
அத்தனார் நம்மையாள்வா ராலங்காட் டடிகளாரே. 668

திருச்சிற்றம்பலம்

சொற்கள். 'ஒண்ணும் பாதியுமாஞ்சொல்' என்பது உலக வழக்கு. அரைச்சொல் - பொருள் நிரம்பாப் பொய்யுரை. பொருளில் வறுஞ்சொல்லுமாம். புறச்சமயத்தார் சொற்களைக் கொள்ளாதவர் குணங்களை உகப்பர் (- விரும்புவர்). பெற்றம் - எருது. உகந்து - உயர்ந்து. ஏறும் பெருமை. அற்றங்கள் அறிவர் - பந்த நிவிர்த்திகளை அறிபவர். எல்லாப்பற்றும் 'அற்றவர்க்கு அற்றசிவன்'. அற்றங்கள் - பிறர் அறியாவாறு மறைத்துச் செய்யும் பாவங்கள். பூதங்கள் அஞ்சும் அறிந்து அகத்தே நகும். 'அற்றம் மறைக்கும் பெருமை' (குறள் 980) 'அற்றம் மறைத்தலோ' (ஷை. 846).

668. மத்தன் - உன்மத்தன். திருக்கைலையை யெடுக்க நினைந்ததே உன்மத்தம் அன்றோ ?. ஒல்க - தளர. ஒத்தினார் - ஒற்றினார். திருவிரலால் ஒற்றி ஊன்றியிட்டருள்வர். பத்தர். தொண்டர். அத்தனார் - தலைவர். நம்மை ஆள்வார் :- 'எம்மை ஆளும் - அடிகளார்' (661.)

தேவர்தொழுந் தனிமுதலைத் திருவிரா மீச்சரத்து
மேவியசங் கரனையெதிர் நின்றுவிருப் புறுமொழியால்
பாவுதிரு நேரிசைகண் முதலான தமிழ்பாடி
நாவரசர் திருத்தொண்டு நலம்பெருகச் செய்தமர்ந்தார்.

பொய்கைசூழ் பூம்புகலூர்ப் புனிதர்மலர்த் தாள்வணங்கி
நையுமனப் பரிவினொடு நாடோறுந் திருமுன்றிற்
கைகலந்த திருத்தொண்டு செய்துபெருங் காதலுடன்
வைகுநா ளெண்ணிறந்த வண்டமிழ்மா லைகண்மொழிவார்.

## 69 திருக்கோவலூர்வீரட்டம்

### திருப்பதிக வரலாறு

தமிழ் மன்னரான வாகீசத்திருமுனிவர், பலதலங்களைத் தமிழ் பாடி வணங்கித் திருவெண்ணெய்நல்லூர், திருவாமாத்தூர் சென்று, வழிபட்டு, திருக்கோவலூரை வணங்கிப் பாடிய வளத்தமிழ் இத் திருப்பதிகம். (புராணம். 146 - 7),

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

சேத்தையேன் சிதம்பன்நாயேன் சேடியனே னழுக்குப்பாயும்
போத்தையே போற்றிநாளும் புகலிட மறியமாட்டேன்
எத்தைநான் பற்றிநிற்கே னிருளற நோக்கமாட்டாக்
கோத்தையேன் செய்வதென்னே கோவல் வீரட்டனீரே. 669

669. சிதம்பன் - பண்பிலேன். நாயேன் - நாயினேன். நாய்போல்வேன். நாய் வேறு நாயன் வேறு; பொன் வேறு பொன்னன் வேருனற்போல. சேடியனேன் - குற்றத்தினேன்; முடைநாற்றத்தேன். அழுக்குப் பாயும் போத்தையே போற்றி :- 'போந்தையைப் பொருளா எண்ணிப் பொருக்கெனக் காலம் போனேன்' (408). 'பொள்ளல் இக்காயம்' (419). புகலிடம் அறியமாட்டேன். நாளும் போத்தையே போற்றியிருப்பதாற் புகலிடம் அறிய வாய்ப்பில்லை. நான் எத்தைப் பற்றிநின்றேன்? அஃது, இஃது; எஃது என்பன இரண்டனுருபேற்று, அஃதை, இஃதை, எஃதை என வழங்கி, அத்தை, இத்தை, எத்தை என மருவின. 'அத்தைத் தினறு' 'இத்தை ஆயும் அறிவுடையன்' 'இத்தில் வரும் நீர்' 'எத்தைக் கொண்டு எத்தகை ஏழை யமணொடிசைவித்து எனைக் கோத்தைக்கு முங்கர் வழிகாட்டுவித் தென்னக்கோகு செய்தாய்' (957). 'எத்தை' என்று மருவிய தற்கு வேறு இடம் ஏன்? இருள் - அறியாமை. அற - நீங்க. நோக்கமாட்டா-கருதவலியில்லா. கோத்தையேன்-குருடனேன்; அறிவில்லேன் (திருவருட்பயன். 71). 'கைவிளக்கின் பின்னே போய்க் காண்பார்போல் மெய்ஞ்ஞான மெய்விளக்கின் பின்னே போய் மெய்காண்ப தெந்நாளோ' (தாயுமானவா).

தலைசுமந் திருகைநாற்றித் தரணிக்கே பொறையதாகி
நிலையிலா நெஞ்சந்தன்னு ணித்தலு மைவர்வேண்டும்
விலைகொடுத் தறுக்கமாட்டேன் வேண்டிற்றே வேண்டி
[யெய்த்தேன்
குலைகள்மாங் கனிகள் சிந்துங் கோவல்வீ ரட்டனீரே. 670

வழித்தலைப் படவுமாட்டேன் வைகலுந் தூய்மைசெய்து
பழித்திலேன் பாசமற்றுப் பரமநான் பரவமாட்டேன்
இழித்திலேன் பிறவிதன்னை யென்னினைந் திருக்கமாட்டேன்
கொழித்துவந் தலைக்குந்தெண்ணீர்க் கோவல்வீ ரட்டனீரே.

. . . . . . . .

670. தலையைத் தாங்கி இரு கையைத் தொங்கச்செய்து, நிலத்துக்கே சுமையாகி, நிலையில்லாத நெஞ்சினுள்ளே, நாள்தோறும் ஐம்புலக் கள்வர் வேண்டும் விலைப்பொருள் தந்து அவர் தொடர்பறுக்க வலியில்லேன். அவர் வேண்டியதே யானும்வேண்டி யிளைத்தேன். குலைகளைக்கொண்ட மாம்பழங்கள் சிந்துகின்ற கோவல். நான் சுமந்தது தலையை. நிலம் சுமந்தது என்னுடலை. 'ஆரா இயற்கை - ஒருகாலும் நிரம்பாத இயல்பினையுடைய (அவா)'. 'நிரம்பாமையாவது தாமேயன்றித் தம் பயனும் நிலையாமையின், வேண்டாதனவாய பொருள்களை வேண்டி மேன்மேல் வளர்த்தல்' (குறள் 370. பரிமேலழகர் உரை) 'அவாவினை ஆற்ற அறுப்பின்' (ஷை. 367) 'அவா வற்றார்' (365) 'அவாவறுத்தல்' என்னும் தொல்வழக்கு வழாது, 'அறுக்கமாட்டேன்' என்றருளியதால், விலைதீர்த்து நீக்க நிற்பது 'அவா' எனல் விளங்கும். 'ஐவர்' (649). 'ஐவர்க்கு ஒற்றிவைத்தாய்' (964) 'நிலையிலா நெஞ்சந் தன்னுள்' (6. 95. 4.).

671. வழி+தலைப்படவும்+மாட்டேன் :- 'திருநெறி' 'நன்னெறி' 'முன்னெறி' (112) எனச் சிறப்பித்துச் சொல்லப்படும் சிவநெறியைத் தலைப்படவும் வலியுடையேனல்லேன். 'தம்மிற்றலைப் பட்டார்பாலே தலைப்பட்டுத் தம்மிற் றலைப்படுதல் தாம் உணரின்......தலைப்படுவர் தாம் அத்தலை.' (திருக்களிற்றுப்படியார். 2) 'தலைப்படல்.' 'தலைக்கூடல்.' வைகலும் தூய்மை செய்தல் :- மும்மலமும் அற்றுச்சுத்தா வத்தையிலே நின்று துரியாதீதத்தை எய்தி நாடோறும் பழகுதல்.

சாற்றுவ ரைவர்வந்து சந்தித்த குடிமைவேண்டிக்
காற்றுவர் கனலப்பேசிக் கண்சேவி மூக்குவாயுள்
ஆற்றுவ ரலந்துபோனே ஞதியை யறிவோன் றின்றிக்
கூற்றுவர் வாயிற்பட்டேன் கோவல்வீ ரட்டனீரே. 672

கேவலாவத்தையும் சகலாவத்தையும் மிக்க அசுத்தம் ஆக்குவன. சுத்தாவத்தை தூய்மைசெய்வது. ஆன்மாத் தன்னைச் சார்ந்த மூன்றழுக்கும் (மலத்திரையம்) நீங்கச் சகல தரிசனமும் கேவலாதீதமும் எய்தி ஞான தரிசனம் பேற்று, பரையதீதமும் சிவப்பேறும் எய்திப் பரமானந்த அவசம் உறுதலே தூய்மை செய்தல். வைகலுந்தூய்மை செய்தல் ஞானுப்பியாசத்தால் அதறகு யோகாப்பியாசமும், அதற்குக் கிரியாகிரமங்களும் சரியை ஒழுக்கமும் வேண்டும். பழித்திலேன் - தூடணம் பண்ணினேனல்லேன். ‘பூதப்பழிப்பு’ ‘கலாதிஞானநிராகரணம்’ ‘சுத்த தத்துவதூடணம்’ என்பனவும் அவற்றிடைப்படும் ஞானுப்பியாசத்தின் அவசாங்களும் செய்திலேன் என்றவாறு. ‘துகளறு போதம்’ பார்த்துணர்க. தாயுமானவர் துகளறு போதப்பொருளின் விளக்கம் எனப் பாடியருளிய (எங்நாட்) கண்ணியுள் யாக்கையைப் பழித்தல், மாதர் மயக்கறுத்தல்கட்கு மேல், ‘தத்துவ முறைமை, தன்னுண்மை, அருளியல்பு, பொருளியல்பு, ஆநந்த வியல்பு அன்பு நிலைமை, அன்பர்நேறி’ என்னும் பகுதிகளையுணர்ந் தொழுகுதல், வேண்டும். அஃது அத் தூய்மை செய்தலாம். பிறவியை இழிந்ததாகக் கருதிலேன் எனில், என்னதான் நினைத்திருக்கமாட்டேன்? தெண்ணீர் - தெளிந்தநீர். கொழித்து - பலவகைப்பொருள்களையும் கொழித்து.

672. ஐவர் - ‘ஐம்புலக்கள்வர்;’ ‘ஐம்பொறி வேடர்’ ‘துன்னிய ஐம்புலவேடர் சுழலிற்பட்டுத் துணைவனையும் அறியாது துயருறுந் தொல்லுயிர்’ (சித்தியார்). சந்தித்த குடிமை - துச்சிலிருக்கும் தன்மை. உயிர், பொறிகளும் வளியும் பித்தும் ஐயும் உறையும் உடலினுள் துச்சிலிருந்து துயருறு கின்றது. ‘புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள் துச்சில் இருந்த உயிர்க்கு’ (குறள்). சந்தித்த குடிமை - நேர்ந்த நுகர்ச்சி என்ருருமளர். சாற்றுவர் - சொல்லுவர். காற்றுவர் - போக்குவர். கனல - சுட. கனலப்பேசிக்காற்றுவர் - சுடச்சொல்லித் தொலைப்பர். ‘அடர்மல ஆற்றல் காற்றுஞ்

தடுத்திலே னவர்தம்மைத் தத்துவத் துயர்வுநீர்மைப்
படுத்திலேன் பரப்புநோக்கிப் பன்மலர்ப் பாதமுற்ற
அடுத்திலேன் சிந்தையார வார்வலித் தன்புதிண்ணம்
கொடுத்திலேன் கொடியவாநான் கோவல்வீ ரட்டனீரே. 673

செயல்தலை நின்ற இன்பத் திருவுருமுதன்மை போற்றி' (தணிகைப். நந்தி. 129). ஐவர் வந்து சாற்றுவர், சந்தித்த குடிமை வேண்டிக் காற்றுவர்; கனலப்பேசிக் கண் செவி மூக்கு வாயுள் ஆற்றுவர்; அலந்துபோனேன். சாற்றுவா - உயிர அதோகதி அடையத் தக்கவற்றை நிறைப்பர். 'குளங் கொளச்சாற்றி' (மதுரைக்காஞ்சி 246) காற்றுவர் - (ஐவரும் சேர்ந்த குடிவாழ்க்கையை விரும்பி, உயிரைப் போக்குவர். கனலப்பேசிக் கண்ணுள், செவியுள், மூக்குள், வாயுள் ஆற்றுவர் (- போம் ஆறு செய்வர்.) 'ஆற்றுசுல, :- ஈட்டுதல், செய்தல், நடத்துதல், நீக்கல், வலியார்தல் முதலிய பல பொருள் பயக்கும் ஆதலின், பழிபாவங்களை ஈட்டும் வழியாகக் கண் செவி முதலியன நிகழ்தலைக் குறித்ததுமாம். 'அலந்தேன்'- துன்புற்றேன்; அலைந்தேன். (505) 'அலந்தேன் அடியேன்' (6) ஆதியை அறிவு - நின் முதன்மையை உணர்தல். ஒன்று - ஒரு செயல்; சிறிதும். கூற்றுவர் :- அந்த ஐவர்; யமதூதர்.

673. என் அகத்தைத் தம் வயப்படுத்தாவாறு ஐவரைத் தடுத்திலேன். தத்துவம் - மெய்ப்பொருளாகிய சிவம். தத்துவத் துயர்வு - சிவ வியாபகத்தினளவு. ஆன்மா வியாப்பியமாகும் நீர்மைபடும்படி செய்திலேன். பரப்பு - பரை வியாபகம். பல்மலர்- பல பூக்களை. பாதம் - திருவடிகளில். முற்ற - முற்றும்படி. அடுத்திலேன் - அடுக்கும்படி தூவி வழிபட்டிலேன். பூசிப்ப வர்க்குத் திருவடி நிறைவு தெரிதல் இன்றியமையாதது. 'பரை உயிரில் யான் எனது என்று அறநின்றது அடி' (உண்மைநெறி விளக்கம்) சிந்தைஆர - சித்தம் ஆர, நிறைய. ஆர்வலித்து - ஆர்வலராகி, ஆர்வலம் செய்து. ஆவலம் - அன்பு ஆர் வலித்து - அன்புற்று. 'ஆர்வலம் நம்மின் மிக்கார்' (593) என்புழியும் பொருந்துமேல் இப்பொருளே கொள்க. அங்கு வேறுரைத்தாம்; அஃது ஆண்டுப் பொருந்துவதால். திண்ணம் - உறுதி. தடுத்தலின்மை முதலிய நான்கும் கொடியவாம்.

மாச்செய்த குரம்பைதன்னை மண்ணிடை மயக்கமெய்து
நாச்செய்த நாலுமைந்து நல்லன வாய்தல்வைத்துக்
காச்செய்த காயந்தன் னு ணித்தலு மைவர்வந்து
கோச்செய்து குமைக்கவாற்றேன் கோவல்வீ ரட்டனீரே.674

படைகள்போல் வினைகள்வந்து பற்றியேன் பக்கனின்றும்
விடகிலா வாதலாலே விகிர்தனை விரும்பியேத்தும்
இடையிலே னென்செய்கேனு னிரப்பவர் தங்கட்கென்றும்
கோடையிலேன் கோள்வதேநான் கோவல்வீ ரட்டனீரே.

பிச்சிலேன் பிறவிதன்னைப் பேதையேன் பிணக்கமென்னும்
துச்சுளே யழுந்திவீழ்ந்து துயரமே யிடும்பைதன்னுள்
அச்சனு யாதிமூர்த்திக் கன்பனுய் வாழமாட்டாக்
கோச்சையேன் செய்வதென்னே கோவல்வீ ரட்டனீரே. 676

---

இவற்றிற்குக் காரணம் 'நான்' என்னும் அகந்தையே என்றவாறு. ஆ! கோடியநான் கோடுத்திலேன் எனலுமாம்.

674. மாச்செய்த குரம்பை - ஐம்பெரும் பூதங்களாற் செய்த குடில்செய் ( குடிசை). நன்செய் - (நஞ்சை) புன்செய் - (புஞ்சை) என்பனபோலும் மருஉ. மண் - உலகப் பொருள். எய்தும் நா - அடைவிக்கும் நாச்சுவை. (ஆகுபெயர்). நாலும் ஐந்தும் - ஒன்பது. 'ஒன்பது துளை' (435) 'ஒன்பது வாயிற் குடில்' 'ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்' கா-சுமத்தல். உயிரை உடல் சுமத்தல். உயிரைச் சுமத்தலைச் செய்த காயம் (- உடல்). உடலுள் நித்தலும் (- நாள்தோறும்). கோ - தலைமை. குமைக்க - அழிக்க.

675. வினைகள் நால்வகைப் படையும்போலத் தோடர்ந்து வந்து பற்றி என் பக்கத்தில் நின்றும் விடமாட்டா. ஆதலால், கோவல் - வீரட்டத்து விகிர்தனீரை விரும்பியேத்தும் இடையிலேன். நான் என்செய்வேன் ? இரப்பவர்க்கு என்றும் ஒன்றும் கோடுத்தல் இல்லேன். நான் கோள்வதே (அன்றிக் கோடேன்). இடை - போழுது. 'இறப்பதே ஈயமாட்டேன்'.

676. பேதையேன் பிறவியைப் பிச்சிலேன் - பேதைமை காரணமாக வரும் பிறப்பைப் பேதைமையுடையேன் ஆதலின், பிய்த்துப் போக்கிலேன். பிணக்கம் - மாறுபாடு. துச்சு ;- 'துற்று' என்பதன் மருஉ. துன்று+இல்=துன்றில், துற்றில்,

நிணத்திடை யாக்கைபேணி நியமஞ்செய் திருக்கமாட்டேன்
மணத்திடை யாட்டம்பேசி மக்களே சுற்றமென்னும்
கணத்திடை யாட்டப்பட்டுக் காதலா லுன்னைப்பேணும்
குணத்திடை வாழமாட்டேன் கோவல்வீ ரட்டனீரே. 677

விரிகட லிலங்கைக்கோனை விரிகயி லாயத்தின்கீழ்
இருபது தோளும்பத்துச் சிரங்களு நெரியவூன்றிப்
பரவிய பாடல்கேட்டுப் படைகொடுத் தருளிச்செய்தார்
குரவோடு கோங்குசூழ்ந்த கோவல் வீரட்டனாரே. 678

திருச்சிற்றம்பலம்

---

துச்சில். 'உள்' ஈறுபெற்றுத் 'துச்சுள்' என்றாகும். துய்த்துள் என்றதன் மரூஉமாம். 'துய்ப்பு' 'துப்பு' என மருவியதுணர்க. 'துய்ப்பார்க்குத் துப்பாய துய்ப்பாக்கி' என்பது மருவித் 'துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கி' என்று ஆயிற்று (குறள்). துய்ச்சுள் அழுந்தி வீழ்ந்து அதுவே தான் என்று துயரம் எய்த இடும்பையுள் (அச்சனாய்-) உயிராய். அச்சு - உயிர். தலைவன் எனலுமாம். 'இச்சை ஞானம் தொழில் இவை மூன்றனோடு அச்சன் நின்று அனைத்தும் விளைத்தால் என' (தணிகைப் பிரமன் சிருட். 23) அச்சன் - கடவுள். அச்சனாய ஆதி மூர்த்திக்கு அன்பனாய் (இடும்பைதன்னுள்) வாழமாட்டாக் கொள்கையேன். கோத்தை - குருடு. 'எனைக் கோத்தைக்கு முங்கர் வழிகாட்டுவித்தென்னைக் கொகுசெய்தாய்' (957).

677. நிணம் - கொழுப்பு. நிணத்திடைக்கட்டிய வுடல், நிணத்திடையாக்கை. பேணி - விரும்பி. நியமம் - சிவாகம விதிப்படி நாள்தோறும் செய்யும் ஒழுக்கம் முதலிய நித்திய நியமங்கள். 'மணம்' 'ஆட்டம்' என்பன கலியாணம் மகிழ்ச்சி விளையாட்டுக்களைக் குறிப்பன. மக்கள் சுற்றம் என்னும் கணம் (- கூட்டம்) ஆட்டப் படுதல் - ஆட்டி யலைக்கப்படுதல். உன்னைக் காதலாற் பேணும் குணம். நியமஞ் செய்யாதவாறு உடற்பற்று (தேகாபிமானம்) தடையாயிற்று. சிவபத்தி செய்யாதவாறு மக்கட் சுற்றம் தடையாயிற்று.

678. விரிகடல் - 'இந்து மகாசமுத்திரம்' என்ற பெயர்ப் பொருளது. வியல் - அகலம். பெருமை. இருபது தோளும் பத்துத்தலையும் நெரிய ஊன்றி. பரவிய - வாழ்த்திய. பாடல் - சாமகானம். படை - வாள். குரவும்கோங்கும் மரம்.

## 70 திருநனிபள்ளி

### திருப்பதிக வரலாறு

இத் திருப்பதிகம் பாடிய சமயம் புராணத்திற் கூறப்படவில்லை யாயினும், திருச்செம்பொன் பள்ளி, திருமயிலாடுதுறை முதலிய தலங்களை வழிபட்ட காலத்தில், திருநனிபள்ளியிற் சென்று போற்றியதாயிருக்கலாம்.

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

முற்றுணை யாயி னானை மூவர்க்கும் முதல்வன் றன்னைச்
சொற்றுணை யாயி னானைச் சோதியை யாதரித்து
உற்றுணர்ந் துருகியூறி யுள்கசி வுடையவர்க்கு
நற்றுணை யாவர்போலு நனிபள்ளி யடிகளாரே. 679

679. முற்றுணை - முன்துணை; முன்னைத்துணை 'முன்னெறி யாகிய முதல்வன்' (112) முன்னானை மூவர்க்கும் (திருவாசகம். 193) அங்நெறியிற் செல்லும் உயிர்க்குத் துணையாதலிலும் முன்னவனே யாவன். தோன்றுந் துணையான தாய்க்கும் தந்தைக்கும் முன்னதாய்க் கருவாய்க் கிடக்கத் தொடங்கும் முன்னரே உடனின்று காத்து வருந்தோன்றாத் துணை. மூவர்க்கும் முதல்வன் - 'மூவர்கோனாய் நின்ற முதல்வன்.' இவ்வுண்மையை ஆதாரயோகம்புரிவோரே அறிவர். சொற்றுணை யாயினான்(641)- 'சொற்றுணை வேதியன்.' (104). 'மொழிக்குத்துணை முருகா எனும் நாமங்கள்'. ஆகமப் பிரமாணத்தாலறியப் பெறுபவன் எனலுமாம். சொல் - ஆகமம் துணை - அளவை. சோதி - உணர்வொளி, அருளொளி, சிவப்ரகாசம். ஆதரித்து - விரும்பி உற்றுணர்தல், உருகுதல், ஊறி உள்கசிதல் எல்லாம் உடைய வர்க்கு நற்றுணையாவர். (641) ஒருமை யீறும் பன்மை யீறும் கலந்தமையால் ஒருமை பன்மை மயக்கம் என்பர். இஃது ஒருவரைக்கூறும் பன்மையாய உயர் சொற்கிளவி. செய்யுட்கும் இவ்வழக்கு முன்னோரால் கொள்ளப்பட்டது. இரு வேறு முடிபாதலாலும் குற்றமின்றாம்.

புலர்ந்தகால் பூவுநீருங் கொண்டடி போற்றமாட்டா
வலஞ்செய்து வாயினூலால் வட்டணைப் பந்தர்செய்த
சிலந்தியை யரையனுக்கிச் சீர்மைக ளருளவல்லார்
நலந்திகழ் சோலைசூழ்ந்த நனிபள்ளி யடிகளாரே. 680

எண்பதும் பத்துமாறு மென்னுளே யிருந்துமன்னிக்
கண்பழக் கொன்றுமின்றிக் கலக்கநா னலக்கழிந்தேன்
சென்பகந் திகழும்புன்னை செழுந்திரட் குரவம்வேங்கை
நண்புசெய் சோலைசூழ்ந்த நனிபள்ளி யடிகளாரே. 681

---

680. புலர்ந்தகால் - பொழுது புலர்ந்த வேளையில். காலில் என ஏழனுருபு விரிக்க. அத்துச்சாரியை குறைந்து நின்றது எனின், காலம் என்ற தன் அம் ஈறு குறைந்ததெனலும் வேண்டும். அக்கால் இக்கால், ஒருகால் எனக் கால் என்ற சொல்லே காலம் என்னும் பொருட்டாதல் அறிக. பூவும் நீரும் புலர்ந்தகால் கொண்டு எனினும், புலர்ந்தகால் போற்ற எனினும் பொருந்தும். மாட்டா - மாட்டாமல். சிலந்தி வலஞ்செய்து, வாயின் நூலால், வட்ட அணைப்பந்தர் செய்தது. செய்த சிலந்தியைக் கோச்செங்கட் சோழனுக்கிச் சீர்மைகள் அருள வல்லவர் அடிகளார். வட்டம்+அணை=வட்டவணை, வட்டணை. வட்டமாக அணைந்து செய்த பந்தர் வட்டணைப்பந்தர். வட்டணை-வட்டம் என்பது (பிங்கலந்தை 2286). சீர்மை - புகழ். 'குலத்திற்கும் மாசில் குடிமைக்கும் சீர்மைக்கும்' (தஞ்சை வாணன் கோவை. 241). நலம் திகழ் சோலை சூழ்ந்தது திருநனிபள்ளி. மாட்டாத சிலந்தி எனல் துராந்நுவயம்.

681. எண்பதும் பத்தும் ஆறும் - தொண்ணூற்றுறும் தத்துவம் முப்பத்தாறும் தாத்துவிகம் அறுபதும்). என்உளே - என் கண்ணே. உயிர்ச் சார்பாதலின் என்னுளே என்றார். மன்னி - நிலைபெற்று. கண்பழக்கு - கண்ஒடிப்பழகிய பழக்கம். கண் ணோட்டம். ஒன்றும் - சிறிதும். கலக்கக் கலங்கி அலைந்து வருந்தினேன். அலைக்க அழிதல், அழித்தல் - அலைக்கழித்தல். அலக்கழிதல் மரூஉ. சென்பகம், புன்னை, குரவம், வேங்கைகள் நண்பு செய்யும் சோலை சூழ்ந்த நனிபள்ளி. நள்+பு=நண்பு - செறிவு.

பண்ணினூர் பாடலாகிப் பழத்தினி லிரதமாகிக்
கண்ணினூர் பார்வையாகிக் கருத்தோடு கற்பமாகி
எண்ணினூ ரெண்ணமாகி யேழுல கனைத்துமாகி
நண்ணினூர் வினைகடீர்ப்பார் நனிபள்ளி யடிகளாரே.　　682

துஞ்சிருள் காலைமாலை தொடர்ச்சியை மறந்திராதே
அஞ்செழுத் தோதினூரு மாரனடிக் கன்பதாகும்
வஞ்சனைப் பாற்சோருக்கி வழக்கிலா வமணர்தந்த
நஞ்சமு தாக்குவித்தார் நனிபள்ளி யடிகளாரே.　　683

682. பண்ணின் ஆர் பாடல் - பண்களோடு பொருந்திய பாடல்கள். பண்ணில் (இன்னிசைப்) பாடல். பழத்தினிற் சுவை இரதம் - சுவை. கண்ணின் ஆர் பார்வை - கண்ணிற் பொருந்திய பார்வை (புறநோக்கம்). கருத்தோடு கற்பம் - கருத்திற் கற்பனை; ' வாயானை மனத்தானை மனத்தில் நின்ற கருத்தானை' என்றதிற்போல மனமும் நினைவும் கொள்க. கற்பம் - சங்கற்பம். எண்ணின் ஆர் எண்ணமும் கருத்தோடு கற்பமும் வெவ்வேறுதல் அறிக. எண்ணம் - அறிவு. எண்ணங்கொள்வான் - அறிவைக் கொள்ளவேண்டி (சிந்தாமணி 636). எண்ணினூர் எண்ணம் - எண்ணியவரதெண்ணம், எண்ணிற் பொருந்திய கணக்கும் ஆம். ' கருதியது முடித்தலும் காமுறப் படுத்தலும் ' (சிறுபாணாற்றுப் 213) என்புழி நச்சினூர்க்கினியர் எழுதிய உரையை நோக்கின், 'கருதல்' என்றதே 'காதல்' என்று மருவிற்று எனல் விளங்கும். கருத்தோடு கற்பம் என்றதற்குச் சவிகற்பம் நிருவிகற்பம்; காதல் நினைவு என்றும் கூறலாம். ஏழுலகு என்றபின் 'அனைத்தும்' என்றது முழுமைப் பொருட்டு. ஆகி ஆறும் தீர்ப்பார் என்னும் முற்றைக் கொண்டன. நண்ணினூர்தம் வினைகளைத் தீர்த்தற்பொருட்டுப் பாடல் முதலியன ஆனூர் எனவே அவ்வடிகளாரைப் பாடிச் சுவைத்துப் பார்த்துக்கருதிக் கற்பித்து எண்ணி உலகைப் பாராது பரமே தரிசித்து வினைகளைப் போக்குதல் உயிர்களது கடனுயிற்று. 'உலகேழும் ஆயான்' (திருவாசகம் 181)

683. இருள் துஞ்சு காலையும் மாலையும் ' என்று நீ அன்று நான்' என்றபடி தோன்ருத்துணையாய் இடைவிடாது உயிர்க்குயிராய் உள்ளொளியாய்த் தொடர்ந்து புறம் புறம் திரிந்து

செம்மலர்க் கமலத்தோனுந் திருமுடி காணமாட்டான்
அம்மலர்ப் பாதங்காண்பா னாழியா னகழ்ந்துங்காணான்
நின்மல னென்றங்கேத்து நினைப்பினை யருளிநாளும்
நம்மல மறுப்பர்போலு நனிபள்ளி யடிகளாரே. 684

அரவத்தால் வரையைச்சுற்றி யமரரோ டசுரர்கூடி
அரவித்துக் கடையத்தோன்று மாலநஞ் சமுதாவுண்டார்
விரவித்தம் மடியராகி வீடிலாத் தொண்டர்தம்மை
நரகத்தில் வீழவொட்டார் நனிபள்ளி யடிகளாரே. 685

காத்தருளும் செல்வத்தை மறந்திராமல், பின்பினே திரிந்து பிடித்துக்கொண்டு பேரா இன்பம் தீரா தெய்வத் திருவைந் தெழுத்தை விதிப்படி ஓதிவரின், நாளும் சிவனடிக்கு அன்பு பெருகி வளரும். அரனடிக்கன்பு செய்யும் பயனுக்கு அளவில்லை, தாலிபுலாக நயம் பற்றி ஓர் எடுத்துக்காட்டு:- நல்வழக்கம் இல்லாத தீய அமணர் வஞ்சனையால் பாற்சோறுக்கி அதிற் கலந்து கொடுத்த நஞ்சினை அமுதம் ஆக்கி நாயேனையும் காத்தருளினார் நனிபள்ளி யடிகளார். சிவபத்தியால் நலம் அனைத்தும் நண்ணலாம். தொடர்ச்சி என்னும் தலைப்பில் இத் திருப்பாடலின் விளக்கமாக எழுதிய எமது கட்டுரையைச் சைவ சித்தாந்த மகாசமாஜத்துப் பொன் விழா மலருட் காண்க. பெரிய. திருநா. 105. பார்க்க.

684. செம்மலர் - செந்தாமரை. ஆழியான் - சக்கிராயுதத்தன், பாற்கடலான். சிவபக்தியிலாழ்தலை யுடையவன். அகழ்ந்தும் - மண்இடந்தும். நின்மலன் - மலமில்லான். விமலன். நினைப்பு - தியானம். நம் மலம் - நமக்குள்ள மும்மலங்களையும். அறுப்பர் - அறச்செய்வர். மும்மை மலம் அறுவித்து, 'காண்பான் அகழ்ந்தும் காணான்' என்க. ஏத்தும் நினைப்பை அருளி நாளும் மலம் அறுப்பர். போலும், அசை. அவ்விருவர்மலமும் அறுக்காதார், நம்மலம் அறுப்பர் என்றவாறு (திருவாசகம் 404, 367. 399· 403, 175, 176 178, 186, 192, 235 முதலியன).

685. அரவத்தால் - வாசுகி என்னும் பாம்பால். வரையை-மந்தரமலையாகிய மத்தை. சுற்றி - சூழவளைத்து. அமரரோடு

மண்ணுளே திரியும்போது வருவன பலவுங்குற்றம்
புண்ணுளே புரைபுரையன் புழுப்பொதி பொள்ளலாக்கை
                                                                 686
...........................................................................

பத்துமோ ரிரட்டிதோளான் பாரித்து மலையெடுக்கப்
பத்துமோ ரிரட்டிதோள்கள் படருடம் படரவூன்றிப்
பத்துவாய் கீதம்பாடப் பரிந்தவற் கருள் கொடுத்தார்
பத்தர்தாம் பரவியேத்து நனிபள்ளிப் பரமனாரே.          687

திருச்சிற்றம்பலம்

அசுரர் - தேவாசுரர் - இருதிறத்தரும், அரவித்து - அரவம் (பேரொலி) செய்து. அரவம் என்னும் பெயரடியாகத்தோற்றிய தோருவினையெச்சம். அரவித்துக்கடைய ஆலநஞ்சு தோன்றிற்று. அதனை அமுதாக உண்டு அழியா முதல்வன் என்றதனை விளக்கினார். தம் அடியாராகி. விரவி ஆகி வீடு (அழிவு) இல்லாத் தொண்டர் வீழ ஒட்டார். நரகத்தில் வீழ ஒட்டார் (- இசையார்) சிவனடியாரேல்லார்க்கும் நரகம் புகல் இல்லை என்பது திண்ணம்:

686. மண்ணுலகில் திரியுங்காலமெல்லாம் குற்றங்களே உயிர்க்குப் பெருகிவரும். புண்ணுளே புரைபுரை :- 'ஆக்கை புரைபுரை கனியப் புகுந்து நின்றுருக்கி' (திருவாசகம்.) புழுப்பொதி பொள்ளல் ஆக்கை - புழுக்கள் பொதிந்த துளைகளை யுடைய உடல்; 'போக்கமாய் நின்ற பொல்லாப் புழுமிடை முடைகோ ளாக்கை,' (653) பொள்ளல் - துளைகள். பொள்ள லுடலி னலந் தீது புந்தி செய்யார்' (ஞானவாசிட்டம்)

687. பத்தும் ஓர் இரட்டி - இருபது. பாரித்து - பரக்கச் சொல்லி, (சிந்தாமணி) அடியீட்டு (திருக்கோவையார். 132) அடர - தாக்க. பத்துவாய்களாலும் சாம கீதம் பாடினான். பரிந்து - இரங்கி. பத்தர் - தொண்டர்.

# 71 திருநாகைக்காரோணம்

## திருப்பதிக வரலாறு

திருமறைக் காட்டிலே திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருடன் வழிபட்டு விடைகொண்டிருந்த வாகீசர் திருவீழிமிழலைப்பரமன் திருக்கழலை மீண்டும் சார நினைத்து, அம்மறைக்காட்டமர்ந்தருளுஞ் சோதியருள் பெற்று அகன்று போய்த் திருநாகைக்காரோணம் பணிந்து பாடிய வண்டமிழ் இத்திருப்பதிகம்.

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

மனைவிதாய் தந்தைமக்கள் மற்றுள சுற்றமென்னும்
வினையுளே விழுந்தழுந்தி வேதனைக் கிடமாகாதே
கனையுமா கடல்சூழ்நாகை மன்னுகா ரோணத்தானை
நினையுமா வல்லீராகி லுய்யலா நெஞ்சினீரே. 688

வையனை வையமுண்ட மாலங்கந் தோண்மேற்கொண்ட
செய்யனைச் செய்யபோதிற் றிசைமுகன் சிரமொன்றேந்தும்
கையனைக் கடல்சூழ்நாகைக் காரோணங் கோயில்கொண்ட
ஐயனை நினைந்த நெஞ்சே யம்மநா முய்ந்தவாறே. 689

---

**688.** நெஞ்சினீரே, வினைப்பயனாக, எடுத்த உடலின் சார்பாக எய்தும் தாய், தந்தை, மனைவி, மக்கள் மற்றுள்ள சுற்றம் என்னும் பாசக்கடற்குள் விழுந்தழுந்தித் துன்பத்துக்கு இடமாகாமலே, நினையுமாறு நினையவல்லீர் ஆகில் உய்யலாம். முழங்கும் பெரிய கடல் சூழும் திருநாகையில் மன்னும் காரோணத்திறைவனை நினையவல்லீராகில் உய்யலாம். நினையும் ஆறு - நினையும் வண்ணம். காயாரோகணம் என்பது காரோணம் என்று மருவிற்று என்பர்.

**689.** வையனை - எருதூர்பவனை. வையம் - எருது. வையம் - மண்ணுலகம். மால் - திருமால் அங்கம் தோள்மேல்

நிருத்தனை நிமலன்றன்னை நீணிலம் விண்ணின்மிக்க
விருத்தனை வேதவித்தை விளைபொருண் மூலமான
கருத்தனைக் கடல்சூழ்நாகைக் காரோணங் கோயில்கொண்ட
ஒருத்தனை யுணர்தலாறு முய்ந்தவா நெஞ்சினீரே.        690

மண்டனை யிரந்துகொண்ட மாயனோ டசுரர்வானோர்
தெண்டிரை கடையவந்த தீவிடந் தன்னையுண்ட
கண்டனைக் கடல்சூழ்நாகைக் காரோணங் கோயில்கொண்ட
அண்டனை நினைந்தநெஞ்சே யம்மநா முய்ந்தவாறே.        691

கொண்ட செய்யன்:- அம் மாலைத் தண்டத்தால் அடித்துத் தோலையுரித்து முதுகெலும்பைப் பிடுங்கித் தண்டமாகக் கையிற் கொண்ட கங்காள மூர்த்தம். கங்காளம் - தசைகிழிந்த உடலின் எலும்பின்கூட்டம். முழுவெலும்பு. 'கங்காளம் தோள்மேலே காதலித்தான் காணேடி.' (திருவாசகம் 265) செய்ய போது - செந்தாமரைப் பூ. திசை - நான்கு. 'திசைமுகன்' எண்ணையுணர்த்தும் வடமொழியாட்சி முறை. சிரமேந்துங்கை - கபாலக்கை. ஐயன் - முதல்வன். நினைந்த நெஞ்சு என்னும் பெயரெச்சம், உய்திக்கு ஏதுக்குறிப்பு.

690. நிருத்தன் - கூத்தன். நிமலன் - இயல்பாகவே தூய தன்மையன். நீள் நிலம் - நீண்டவுலகு. (மண்ணுலகு). விண்ணின் மிக்க விருத்தன் - விண்ணோர் பலர்க்கும் மேலான வன். விண் இடவாகுபெயர். வேதவித்து - (6-79-3) வேதங் களைப்படைத்தவன். விளைபொருள் மூலம் - விளைகின்ற எப் பொருட்கும் நிமித்த காரணமானவன். மாயை முதற்காரணம். தநுகரண முதலிய விளைபொருள் காரியம். சிவசத்தி துணைக் காரணம். பதி நிமித்த காரணம். காரிய 'காரணங்கள் ...ஆக்குவன் அகிலம் எல்லாம்' (சிவஞானசித்தியார். சூ. 1. 18) கருத்தன்-வினைமுதல்வன். 'ஒருத்தன்' 'ஒன்றேபதி' சிவஞான-போதம். 'பதிதான் ஒன்று என்று அறையும்' (சித்தியார் சூ. 1·2.) உணர்தலான் நாம் உய்ந்தவாறு. 673இல் நான் கொடிய ளுமாறு எனக்கொள்ளலாகாமை அறிக. நெஞ்சினீரே நாம் உய்ந்தவாறு ஒருத்தனை உணர்தலால் என்க.

691 மண்தனை-மண்ணுலகை. இரந்துகொண்ட மாயவன் இது மாவலி மன்னனிடத்திலே மூவடி மண்ணிரந்த வரலாறு

நிறைபுன லணிந்தசென்னி நீணிலா வரவஞ்சூடி
மறையொலி பாடியாடன் மயானத்து மகிழ்ந்தமைந்தன்
கறைமலி கடல்சூழ்நாகைக் காரோணங் கோயில்கொண்ட
இறைவனை நாளுமேத்த விடும்பைபோ யின்பமாமே. 692

வெம்பனைக் கருங்கையானை வெருவவன் றுரிவைபோர்த்த
கம்பனைக் காலற்காய்ந்த காலனை ஞாலமேத்தும்
உம்பனை யும்பர்கோனை நாகைக்கா ரோணமேய
செம்பொனை நினைந்தநெஞ்சே திண்ணநா முய்ந்தவாறே. 693

குறித்தது. வாமனனாகிச் சென்று சிறிது இரப்பான்போற் காட்டி மூவுலகும் பெற்றமையால் மாயன் என்றார். அசுரர்×சுரர். தேள்+திரை - தெண்டிரை, ஈண்டுப் பாற்கடல். கடைய வந்த ஏதுப்பொருட்டாய வினையெச்சத்தொடர். வந்த தீவிடம் பெயரெச்சத்தொடர். தீவிடம் - பண்புத்தொகை உண்ட கண்டன், பெயரெச்சம் இடப்பெயர் கொண்டது. அண்டன் தேவன்; அண்டவாணன்; அண்டமுதல்வன்.

692. நிறைபுனல் - கங்கைநீரினை. அணிந்த - அழகுறுத்திய. சென்னி :- சடைமுடிக்கு ஆகுபெயர். நீள் நிலா - நீண்டபிறை நிலாவும். அரவம் - பாம்பும். மறை யொலி - வேதமுழக்கம். 'மயானத்து மறையொலிபாடி யாடல் மகிழ்ந்த மைந்தன்' என்று மாற்றிக்கொள்க. கறை - (நீல) நிறம். 'கருங்கடல்' 'கருமலி கடல்' (696) என்னும் வழக்குணர்க. இடும்பை - துன்பம். இன்பம் - சிவப்பேறுமாம். இடும்பை போதல் பாசவீடுமாம்.

693. வெம்மை - கொடுமை. பனைக்கை - பனைமரம் போலப் பருத்த கை. கருங்கை. 'பனைக்கை மும்மதவேழம்' வெருவ - அஞ்ச. அன்று - கயாசுரன் முன்வந்து நின்ற அந்நாளில். உரிவை - தோல். கம்பன் - கச்சித்திருவேகம்பநாதன். காலற் காய்ந்தகாலனை - காலனைச் சினந்துதைத்தகாலனை. 'காலகாலன்'. ஞாலம் - உலகம். உம்பன் - தேவன். உம்பர்கோன் - தேவாதி தேவன். செம்பொன் - 'செம்பொற்றியாகேசன்' நாம் உய்ந்த வாறு திண்ணம்.

வேங்கடுங் கானத்தேழை தன்னோடும் வேடனாய்ச்சென்
றங்கமர் மலைந்துபார்த்தற் கடுசர மருளினானை
மங்கைமா ராடலோவா மன்னுகா ரோணத்தானைக்
கங்குலும் பகலுங்காணப் பெற்றுநாங் களித்தவாறே. 694

தெற்றினர் புரங்கண்மூன்றுந் தீயினில் விழவோரம்பால்
செற்றவெஞ் சிலையர்வஞ்சர் சிந்தையுட் சேர்விலாதார்
கற்றவர் பயிலுநாகைக் காரோணங் கருதியேத்தப்
பெற்றவர் பிறந்தார்மற்றுப் பிறந்தவர் பிறந்திலாரே. 695

694. வேங்கானம், கங்குங்கானம்; காட்டின் வெம்மையும் கடுமையும் அறிய நின்றன. கானத்து - காட்டில், ஏழை - உமாதேவியார். 'ஏழைபங்காளன்' எருதேறி ஏழையுடனே ...... விந்து என் உளமே புகுந்த; அங்கு - அக்காட்டில் அருச்சுனன் தவம்புரிந்த இடத்தில். அமர் - போர். மலைந்து - மாறுபட்டு, போராடி. பார்த்தற்கு - அருச்சுனனுக்கு. அடுசரம் - கோல்லும் பாணம் (பாசுபதம்). ஆடல் - ஆடுதல். ஓவா- ஒழியாத. கங்குலும் பகலும் காணப் பெற்றுக் களித்தல் - இரவும் பகலும் இறைவனைக் கண்டு வணங்கி யின்பம் அடைதல். 'நின்ற வினைக்கொடுமை நீங்க இருபொழுதும், துன்றுமலர் இட்டுச் சூழும் வலஞ்செய்து, தென்றல் மணம் கமழும் தென் திருவாரூர் புக்கு, என்றன் மனம் குளிர என்று கொல் எய்துவதே' (7. 83. 2.)

695. தெற்றினர் - மாறுபட்டவர் (பகைவர்). செற்ற - அழிந்த. வெஞ்சிலையர் - வெய்ய (மேருமலை) வில்லியார். வஞ்சர் சிந்தையுள் - வலியரது மாய மனத்தில். கரவாடும் வன் நெஞ்சர்க்கு அரியான். சேர்வு - அடைதல். கற்றவர் - திருவடியை வணங்கக் கற்றவர். 'கல்லா நெஞ்சின் நில்லான் ஈசன் (சம்பந்தர்) காரோணத்தைக் கருதி ஏத்தப் பெற்றவர் பிறந்தவராய்ப் பிறவியின் பயனை அடைந்தவ ராவர். அவ்வாறு ஏத்தாத வகையிலே பிறந்தவர் இருந்தும் பிறவாதவரே. இறந்தவரே யாவர். 'புலியூரானைப் பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே' (6. 1. 1.) பிறந்தேன் நின் திருவருளே பேசின் அல்லாற் பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே' (6. 47. 10) மற்று வினைமாற்றின்கண் வந்தது.

கருமலி கடல்சூழ்நாகைக் காரோணர் கமலபாதத்
தொருவிர னுதிக்குநில்லா தோண்டிற லரக்கனுக்கான்
இருதிற மங்கைமாரோ டெம்பிரான் செம்போனுகம்
திருவடி தரித்துநிற்கத் திண்ணநா முய்ந்தவாறே. 696

திருச்சிற்றம்பலம்

696. கருமலிகடல்:- கறைமலிகடல்' (692) கமலபாதம்- தாமரை மலர்போலுஞ் சேவடி. பாதத்து ஒருவிரல் நுதி - திருவடியின் ஒருவிரலது நுனி. ஒண்திறல் - ஒளியும் வலியும். உக்கான் - அழிந்தான். திருவடியின் ஒருவிரல் நுனியைத் தாங்கும் ஆற்றல் இன்றி அழிந்தான் அப்பெருவலியிராவணன். தலைமேற்கங்கை, இடப்பால் உமை நங்கை, எம்பிரான் செம் போற்றிருமேனி என்னும் மூவர் சுமையும் உடைய திருவடி முழுவதும் தாங்கி நிற்கின்றோம் வலியே இல்லாத நாம்; 'நெஞ்சினீரே' என்பது மேற்போந்தமையின், 'நாம்' என்று கூறினார். நாம் உய்ந்தவாறு திண்ணம். இதற்குத் திருவடி தரித்து நிற்றல் ஏது என்றவாறு

நின்றதிருத் தாண்டகமு நீடுதனித் தாண்டகமும்
மன்றுறைவார் வாழ்பதிகள் வழுத்துதிருத் தாண்டகமும்
கொன்றைமலர்ச் சடையார்பாற் குறைந்தடைந்த நேரிசையுந்
துன்றுதனி நேரிசையு முதலான தொடுத்தமைத்தார்.

ஆருயிரின் றிருவிருத்தந் தசபுரா ணத்தடைவும்
பார்பரவும் பாவநா சப்பதிகம் பன்முறையும்
நேர்படநின் றறைகூவுந் திருப்பதிக முதற்பிறவும்
பேரருளின் கடலளிக்கும் பெருமானைப் பாடினார்.

இம்மாயப் பவத்தொடக்கா மிருவினைக டமைநோக்கி
யும்மாலிங் கென்னகுறை யுடையேன்யான் றிருவாரூர்
அம்மானுக் காளானேன் அலையேன்மி னீரென்று
பொய்ம்மாயப் பெருங்கடலு ளெனுந்திருத்தாண் டகம்புகன்றார்.

மன்னியவந் தக்கரண மருவுதலைப் பாட்டினாற்
தன்னுடைய சரணான தமியேனைப் புகலூரன்
என்னையினிச் சேவடிக்கீ ழிருத்திடுமென் றெழுகின்ற
முன்னுணர்வின் முயற்சியினாற் றிருவிருத்தம் பலமொழிந்தார்.

## 72 திருவின்னம்பர்

### திருப்பதிக வரலாறு

இத் திருப்பதிகம் பாடிய வரலாறு குறிக்கப் பட்டிலது.

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

விண்ணவர் மகுடகோடி மிடைந்தசே வடியர்போலும்
பெண்ணொரு பாகர்போலும் பேடலி யாணர்போலும்
வண்ணமா லயனுங்காணு மால்வரை யெரியர்போலும்
எண்ணுரு வநேகர்போலு மின்னம்ப ரீசனாரே. 697

பன்னிய மறையர்போலும் பாம்பரை யுடையர்போலும்
துன்னிய சடையர்போலுந் தூமதி மத்தர்போலும்
மன்னிய மழுவர்போலு மாதிட மகிழ்வர்போலும்
என்னையு முடையர்போலு மின்னம்ப ரீசனாரே. 698

697. விண்ணவர் - தேவர். மகுடகோடி - முடித்தொகை நிரல். மிடைநத - கலந்த. சேவடியர் - செய்ய தாளர். திருவடியை முடியிற்பட வணங்கும் அமரர் தொகைக்கு அளவில்லை என்றதாம். பெண்ணொருபாகர் - மாதியலும் பாதியர், பேடு, அலி, ஆணர் - ஆணும் (பெண்ணும்) அலியும் பேடும் ஆகியவர். வண்ணம் - அழகு. கார்வண்ணமுமாம். மால் - திருமாலும் அயனும் - பிரமனும். மால்வரை எரியர் - பெரிய மலைவடிவான பேரொளியினார். தீயுருவானமலை:- திருவண்ணாமலை. எண்ணுரு அநேகர் - எட்டுருவிற் பல வானவர். எண்ணுகின்ற உருவத்தி லளவிலாதவர். எட்டுரு (அட்டமூர்த்தம்) எனினும் ஒவ்வொன் றிலும் பல உள்ளன. திருவின்னம்பரில் எழுந்தருளிய உடையார். ஈசனார் - உடையார்.

698. பன்னிய - சொல்லிய, ஆராய்ந்த. மறையர் - வேத (முதல்வ)ர். பாம்பு அரைஉடையார் - அரையிற்பாம்பினைக் கச்சாகக்கொண்டுடுத்தவர். துன்னிய - நெருங்கிய; கற்றை யான. தூமதி - வெண்பிறை. மத்தர் - சென்னியர். (மத்தகர்

மறியொரு கையர்போலு மாதுமை யுடையர்போலும்
பறிதலைப் பிறவிநீக்கிப் பணிகொள வல்லர்போலும்
செறிவுடை யங்கமாலை சேர்திரு வுருவர்போலும்
எறிபுனற் சடையர்போலு மின்னம்ப ரீசனாரே. 699

விடமலி கண்டர்போலும் வேள்வியை யழிப்பர்போலும்
கடவுநல் விடையர்போலுங் காலனைக் காய்வர்போலும்
படமலி யரவர்போலும் பாய்புலித் தோலர்போலும்
இடர்களைந் தருள்வர்போலு மின்னம்ப ரீசனாரே. 700

என்பதன் மரூஉ). மன்னிய - பொருந்திய, மழுவர் - மழுப் படையுடையவர். மாது இடம் மகிழ்வர் - உமாதேவியாரை இடப்பாற் கொண்டு மகிழ்பவர். மாதிடத்தால் மகிழ்வர். இடத்திலிருந்து மாது மகிழப் பெறுபவர். என்னையும் (ஆளாக) உடையவர், 'உடையார்' என்றதால் அடிமை (ஆள்) என்பது பெறவைத்தார்.

699. மறி - மான் கன்று. ஒருகையர் - ஒருகையில் ஏந்தியவர். மான்கன் றேந்திய ஒரு கையினர் எனலுமாம். மாதுஉமை உடையார். உமை மாதினை (இடப்பால்) கொண்டிருப்பவர் பறிதலைப் பிறவி:- தலைமயிரைப் பறித்தலை வழக்கமாக உடைய சமண் தோற்றத்தை நீக்கிச் சூலைநோய் தந்து தடுத்தாண்டு. பணிகொள - பாமாலை பாடப் பயில்வித்துப் பணி கொள்ள. (அப்பர்புராணம். 73) பணி செய்ய வல்லரல்லாரையும் ஈசனார் பணிகொள்ள வல்லர். அங்கமாலை - தலைமாலை. கங்காளரூபம் வேறு. எறிபுனல் - கங்கை.

700. விடம் மலிகண்டர் - பாற்கடலின் எழுந்த நஞ்சு. நின்று நிறத்தினை மிகக் காட்டிய திருக்கழுத்துடையவர். வேள்வியை அழிப்பர் :- தக்கயாகசங்காரத்தைக் குறித்தது. கடவும் - செலுத்தும். நல்விடையர் - அழகிய எருதுடையவர். காலனைக் காய்வர் - மார்க்கண்டேயர்க்காக யமனை உதைத்த வரலாறு குறித்தது. படம் மலி அரவர் - ஐந்தலைநாகம் பூண்டவர். பாய்புலி - இறந்த காலவினைத் தொகை. புலித்தோலுடுத்தவர். இடர்களைந்து அருள்வர் :- இடர் - பாச பந்தம். களைதல் - பாசவீடு. அருளல் பேரின்பந் தரல். (சிவப் பேறு). 'நிறையுடையார் இடர்களையாய் நெடுங்கள மேயவனே'.

அளிமலர்க் கோன்றைதுன்று மவிர்சடை யுடையர்போலும்
களிமயிற் சாயலோடுங் காமனை விழிப்பர்போலும்
வெளிவள ருருவர்போலும் வெண்பொடி யணிவர்போலும்
எளியவ ரடியார்க் கென்று மின்னம்ப ரீசனாரே. 701

கணையமர் சிலையர்போலுங் கரியுரி யுடையர்போலும்
துணையமர் பெண்ணர்போலுந் தூமணிக் குன்றர்போலும்
அணையுடை யடியர் கூடி யன்பொடு மலர்கள்தூவும்
இணையடி யுடையர் போலு மின்னம்ப ரீச னாரே. 702

701. அளி - வண்டுகள். சாதியடை. அவிர்சடை :- செஞ்சடையோளி. களிமயிற்சாயல்-களிப்புடைய மயில் போலுஞ் சாயலையுடைய உமாதேவியார். காமனைவிழிப்பர் - மன்மதனைத் தீவிழியால் எரிப்பர். பெண்ணின்பால் ஆசை நீத்தவரே காமத்தைக் கடந்தவர் ஆவர். சிவபிரான் மாதொருபாகரா யிருந்தே மன்மத தகனம் செய்தது பெருவியப்பென்றபடி. வெளிவளர் உருவர் :- அண்டபகிரண்டம் முழுவதும் நிறைந்த விசுவரூபி. 'உலகினுக்கு உயிரும் ஆகி உலகுமாய் நின்றது' (சித்தியார்.) வெண்பொடி - திருநீறு. அடியார்க்கு என்றும் எளியவர். அடியரல்லாதார்க்கு என்றும் அரியர் என்பது அதனாற் பெறப்பட்டது. இப்பாட்டில் உள்ள பொருள் முரண் அறியற்பாலது.

702. கணை - திருமால் ஆகிய பாணம். சிலை - மேரு மலையாகிய வில். கரி - யானை. உரி - தோல். கரியுரிஉடையார் - யானைத்தோலுடையார். துணை அமர் பெண்ணர் - துணைவியாக இடப்பாலிற் பொருந்திய உமாதேவியையுடையவர். தூமணிக் குன்றர் - தூய அரதனகிரியவர். தூய மணிக்குன்று திருக் கயிலையுமாம். அணையுடை அடியார் - தம் திருவடி நிழலை அணைதலையுடைய தொண்டர். கூடி - பலர்கூடி. அன்போடு பத்தியுடன். மலர்கள் தூவும் - பூக்களைத் தூவிப் பூசனைபுரியும். இணையடியுடையார் - திருவடித்துணைகளை யுடையவர்: இணையடி களை அடைய மலர்கள் தூவும் அன்பர்கள் அடியார்கள்.

போருப்பமர் புயத்தர்போலும் புனலணி சடையர்போலும்
மருப்பிள வாமைதாங்கு மார்பில்வெண் ணூலர்போலும்
உருத்திர மூர்த்திபோலு முணர்விலார் புரங்கண்மூன்றும்
எரித்திடு சிலையர்போலு மின்னம்ப ரீசனூரே. 703

காடிட முடையர்போலுங் கடிகுரல் விளியர்போலும்
வேடுரு வுடையர்போலும் வெண்மதிக் கோழுந்தர்போலும்
கோடலர் வன்னிதும்பை கோக்கிற கலர்ந்தகோன்றை
ஏடமர் சடையர்போலு மின்னம்ப ரீசனூரே. 704

703. போருப்பு அமர் புயத்தர் - மலைபோலும் தோளினர். மேருமலையாகிய வில் அமர்ந்த தோளார். புனல் - கங்கைக்கு. அணி - அழகு செய்யும். புனலை அணிந்த எனல் எளிது. இள ஆமை மருப்பு தாங்கும் மார்பில்- 'முற்றலாமை யிளநாகம்' மருப்பு - கோடு, உருத்திர மூர்த்தி. மகாசங்காரகாரணனாகிய பரமசிவன். அயன்மாலோடுங் குணதத்துவத்தின் வைகிப் பிரகிருதிபுவனுந்தம் சங்கரிக்கும் குணருத்திரனே அன்று. (சிவஞானபாடியம் சூ. 1) மகாருத்திரனைக் குணருத்திரனாக வைத்து எண்ணுதல் கூடாது. 'நம்மவர் அவரே மூவர் என்றே எம்பிரானோடும் எண்ணி விண்ணாண்டு மண்மேல் தேவர் என்றே இறுமாந்து என்னபாவம் திரிதவரே' (திருவாசகம் திருச்சதகம்4)

704. காடு - சுடுகாடு. சுடுகாட்டை ஆடுதற்குரிய இடமாகக் கோண்டவர். கடிகுரல் விளியர் - உலகையழித்து ஆடுங்கால் செய்யும் ஆரவாரத்தினர். கடுமையான குரலால் ஒலியுண்டாக்குபவர். அருச்சுனன் தவத்தில் இடையூறு நீக்கச் சென்ற வேட்டுவ வுருவத்தையுடையவர். மதிக்கோழுந்து - பிறைத்திங்கள். கோடு அலர் - கோம்பில் மலர்கின்ற எருக்கு முதலிய பூக்கள். வன்னி இலை, தும்பைப் பூ, கோக்கின் இறகு, அலர்ந்த கோன்றையின் இதழ். இவைகள் போருந்திய சடையை யுடையவர் ஈசனூர் என்க. ஏடு - இதழ்.

காறிடு விடத்தையுண்ட கண்டரேண் டோளர்போலும்
நீறுடை யுருவர்போலு நினைப்பினை யரியர்போலும்
பாறுடைத் தலைகையேந்திப் பலிதிரிந் துண்பர்போலும்
ஏறுடைக் கொடியர்போலு மின்னம்ப ரீசனாரே. 705

ஆர்த்தெழு மிலங்கைக்கோனை யருவரை யடர்ப்பர்போலும்
பார்த்தனோ டமர்பொருது படைகொடுத் தருள்வர்போலும்
தீர்த்தமாங் கங்கைதன்னைத் திருச்சடை வைப்பர்போலும்
ஏத்தவே முலகும்வைத்தா ரின்னம்ப ரீசனாரே. 706

திருச்சிற்றம்பலம்

705. காறிடுவிடம் - கைக்கின்ற நஞ்சு (662) எட்டுத் தோளை யுடையவர். திருநீற்றுமேனியர். நினைப்பினுக்கு அரியர். 'நினைப்பினை யரியர்' என்பது உருபுமயக்கம். வாக்கு மனோதீதன். பாறுடைத்தலை - சிதறுதலுடைய பிரமன் தலை. பலி - பிச்சை. ஏறுடைக் கொடியர் ஆனேற்றுக் கொடியையுடையவர்.

706. ஆர்த்து - ஆரவாரம் செய்து. அருவரை - அரிய கயிலாய மலை. வரையால் அடர்ப்பர் என மூன்றுவது விரிக்க. அடர்த்தலாவது மலைமேல் விரலூன்றி நெருக்கி வருத்துதல். பார்த்தன் - அருச்சுனன். படை - பாசுபதம். தீர்த்தம் - தூய்மை. 'தன்னை ஏத்த' என ஒரு சொல் வருவிக்க. வைத்தல்- படைத்தல். 'உலகு' என்றது உயிர்களை ஏத்துதல் அவற்றிற் கன்றி ஏலாமை யறிக.

மண்முதலா முலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்
புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றே னெனப்புகன்று
நண்ணரிய சிவானந்த ஞானவடி வேயாகி
அண்ணலார் சேவடிக்கீ ழாண்டவர சமர்ந்திருந்தார்.

வானவர்கண் மலர்மாரி மண்ணிறைய விண்ணுலகின்
மேனிறைந்த வைந்துபே ரியவொலியும் விரிஞ்சன்முதல்
யோனிகளா யினவெல்லா முண்ணிறைந்த பெருமகிழ்ச்சி
தானிறைந்த சித்திரையிற் சதயமாந் திருநாளில்.

# 73 திருச்சேறை

## திருப்பதிக வரலாறு

திருக்குடமூக்கிலிருந்து திருவாஞ்சியம் அணையும்போது வழியில் நாலூர் முதலிய சிவதலங்களை வழிபட்டார்கள். அப்போது திருச்சேறையுட் சென்று பாடிப்பரவியது இத் திருப்பதிகம்.

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

பெருந்திரு விமவான்பெற்ற பெண்கோடி பிரிந்தபின்னை
வருந்துவான் றவங்கள் செய்ய மாமணம் புணர்ந்துமன்னும்
அருந்திரு மேனிதன்பா லங்கோரு பாகமாகத்
திருந்திட வைத்தார்சேறைச் செந்நெறிச் செல்வனாரே. 707

707 பெருந்திருவையுடைய இமவான்:- 'பெருஞ் செல்வம் ஆக்கும் ஐயாறன் அடித்தலம்'. திரு - செல்வம். இமவான் :- மலையரசன். பெண்கோடி - பார்வதி. தம்மைப் பிரிந்த பின்னை என ஒரு சொல் வருவிக்க. பெண்கோடி தவங்கள் செய்ய மணம் புணர்ந்து பாகமாக வைத்தார் சேறைச் சேல்வனார். துன்பம் சுடச்சுட நோற்கவேண்டி யிருத்தலின்.' வருந்துவான் தவங்கள் என்றார். புனல்காலே யுண்டியாய் வற்றி வருந்திச் செய்தற்குரிய பெரிய தவங்களைச் செய்ய என்க. காமத்தால் மணம் புணரவில்லை. தவத்திற்கிரங்கி அவள் வேண்டுகோளின் படி மாமணம் புரிந்தாரென்க. வேண்ட முழுதும் தரும் இறைவன் பார்வதி தவஞ்செய்து வேண்டிய மணத்தை மறுத்தல் கூடாமை அறிக. மன்னும்-நிலைபேறுடைய. மக்களது நில்லாத ஊன்மேனி போன்றதன்மையால் மன்னும்அருந்திருமேனிஎன்றார். பாகமாக - இடப்பாகமாக. திருந்திட - ஈருருவாக இருந்தவர்கள் ஓருருவாகத் திருந்தி அமைய. செந்நெறிச் செல்வனார் - செம் மையான ஞான நெறியால் காண்பதற்குரிய சிவபிரான்.

ஓர்த்துள வாறுநோக்கி யுண்மையை யுணராக்குண்டர்
வார்த்தையை மெய்யேன்றெண்ணி மயக்கில்வீழ்ந் தழுந்து வேனைப்
பேர்த்தேனை யாளாக்கோண்டு பிறவிவான் பிணிகளேல்லாம்
தீர்த்தருள் செய்தார்சேறைச் செந்நெறிச் செல்வனாரே. 708

ஒன்றிய தவத்துமன்னி யுடையனா யுலப்பில்காலம்
நின்றுதங் கழல்களேத்து நீள்சிலை விசயனுக்கு
வென்றிகோள் வேடனாகி விரும்பிவெங் கானகத்துச்
சென்றருள் செய்தார்சேறைச் செந்நெறிச் செல்வனாரே. 709

708. உண்மையை யுள்ளவாறு நோக்கி ஓர்த்துணராக் குண்டர். சைவசித்தாந்தத் தத்துவங்களை; சிவமாகிய செம் பொருளை. சைவசித்தாந்தம் அல்லாதன எல்லாம் பூருவ பட்சம் ஆதலின், உண்மை எனப்பட்டது. பொருளல்லவற்றைப் பொருளாக உணரலாகாது என்பார் உளவாறு நோக்கி என்றார். இப்பியை வெள்ளியெனவும், பழுதையைப் பாம்பு எனவும் நோக் குவது திரிபுணர்ச்சி. ஓர்த்தல் - ஆராய்தல், நோக்குதல் - உள்ளத்தால் நோக்குதல். நோக்கல் - நோக்கம். உணராக் குண்டர் என்றது, மெய்யுணர்ச்சியின்றித் திரிபுணர்ச்சியால் தம் நெறியே மெய்நெறியென மருளுகின்ற சமணரை. ' ஓர்த்துள்ள முள்ளதுணரின் ஒருதலையாப் பேர்த்துள்ள வேண்டா பிறப்பு'' (குறள் - 356) பொய்யை மெய்யெனக் காட்டித் தம்மை வஞ்சித்த கோடுமையாற் சமணரைக் 'குண்டர்' என்றார். குண்டர் - இழிந்தவர். உண்மையறியாப் பருவத்தில் நிகழ்ந்ததை நினைத்து மயக்கில் வீழ்ந்தழுந்துவேனைப் பேர்த்தேனை ஆளாக் கோண்டு அருள்செய்தார் என்றார். பொய்யை மெய்யாகக் காட்டும் நெறியை மெய்யென நம்பி அச் சமணத்து வீழ்ந்தேன் என்பார், ' மயக்கில் வீழ்ந்தழுந்துவேனை ' என்றார். பேர்த்து- மீட்டு. வயிற்று நோயோடு பிறவிப் பிணியும் தீர்த்தருள் செய்தமை யுணர்த்தியவாறு. வான் பிணிகள்-பெரிய நோய்கள். பிறவிக்கு ஏதுவாய கட்டுக்களைத் தீர்த்தார் எனலும் ஆம்.

709. ஒன்றிய தவத்து - பலவழியில் செல்லாது மனம் ஒருமையுற்ற தவத்தில். மன்னி - நிலைபெற்று. உடையனாய் - சுவாமியாகி. உலப்பில் காலம் - முடிவில்லாத காலம். தவஞ்

அஞ்சையு மடக்கியாற்ற லுடையனு யநேககாலம்
வஞ்சமி றவத்துணின்று மன்னிய பகீரதற்கு
வெஞ்சின முகங்களாகி விசையோடு பாயுங்கங்கை
செஞ்சடை யேற்றூர்சேறைச் செந்நெறிச் செல்வனாரே. 710

நிறைந்தமா மணலைக்கூப்பி நேசமோ டாவின்பாலைக்
கறந்துகொண் டாட்டக்கண்டு கறுத்ததன் றாதைதாளை
எறிந்தமா ணிக்கப்போதே யெழில்கொள்தண் டீசனென்னச்
சிறந்தபே ரளித்தார்சேறைச் செந்நெறிச் செல்வனாரே. 711

செய்த காலத்தின் மிகுதி. விசயன் - அருச்சுனன். விசய னிடம் சென்ற சிவன், அவன் தோற்க வெற்றிகொண்டான் ஆதலின், வென்றிகொள் வேடன் என்றார். தவத்திற்கிடை யூறாக வந்த பன்றியைக் கொன்ற வெற்றி. தெய்வ வடிவு நீங்கி மனிதருள் தாழ்ந்த வேடனானதும் தண்மை மிக்க கயிலாயத்தை விடுத்து வெம்மை மிக்க கானகத்து விரும்பிச் சென்றதும் தன்னடியார்க்கு எளியனும் ஆண்டவனது தன்மையைவிளக்கின. தவம் செய்யும் காலத்தும் நீண்ட வில்லையுடையனாதலின் 'நீள்சிலைவிசயன்' என்றார். தங்கழல்கள் ஏத்தும் விசயனா தலின், வேடனாகிக் கானத்து விரும்பிச்சென்று அருள் செய்தார்.

710. அஞ்சையும் - ஐம்பொறிகளையும். புறப்பகையை வென்றார்க்கும் வெல்லுதற்கரிய அகப்பகையை, ஐம்பொறிகளை யும் வென்ற சிறப்புத்தோன்ற 'ஆற்றலுடையனாய்' என்றார். ஆற்றல் - மனவலிமை. தவமறைந்து அல்லவை செய்வோர் உலகத்துப் பலராதலின் அவர்களை விலக்க வஞ்சமில் தவத்துள் நின்று என்றார். மன்னிய - நிலைபெற்ற. பகீரதற்கு - பகீரத னுக்காக, பகீரதன் பொருட்டுக் கங்கையை ஏற்றார் என்க. வெஞ்சின முகங்களாகி - கொடிய கோபத்தையுடைய பல முகங் களாகி, விசை - வேகம். தாங்கற்கரியளாகப் பாய்ந்த கங்கையை எளிமையாகச் சடையில் ஏற்றுத் தம் ஆற்றலைக் காட்டினார் என்க.

711. கூப்பி - குவித்து. நேசம் - அன்பு. ஆ - பசு. ஆட்ட - திருமஞ்சனம் ஆட்ட. நிறைந்த மாமணல் என்றது

விரித்தபல் கதிர்கோள்சூலம் வேடிபடு தமருகங்கை
தரித்ததோர் கோல கால பயிரவ னாகி வேழம்
உரித்துமை யஞ்சக்கண்டு வோண்டிரு மணிவாய்விள்ளச்
சிரித்தருள் செய்தார்சேறைச் செந்நெறிச் செல்வனாரே. 712

சுற்றுமுன் னிமையோர்நின்று தொழுதுதூ மலர்கள்தூவி
மற்றெமை யுயக்கொளென்ன மன்னுவான் புரங்கண்மூன்றும்
உற்றொரு நொடியின்முன்ன மொள்ளழல் வாயின்வீழச்
செற்றருள் செய்தார்சேறைச் செந்நெறிச் செல்வனாரே. 713

சிவலிங்கருபமான சிறப்பு நோக்கி. கறுத்த - சினந்த. தாதை- (தாதா) தந்தை ஆகிய எச்சத்தன். தாள் - கால். மாணி - பிரமசாரி. 'அப்போதே' என்றது தாதைதாளை எறிந்ததற்கும் சண்டீசனும் பதம் பெற்றதற்கும் கால இடையீடு இன்மை யுணர்த்திநின்றது. எழில் - அழகு. இறைவன் சூடிய எழில் மிக்க மாலைகளை யேற்றுக் கொள்ளுதற்குரிய பதவி ஆதலின் எழில்கோள் சண்டீசன் என்றார். பிதாவைக் கொலைபுரிந்தானைக் குற்றங் கடிந்தானாக்கி 'அரனடிக்கன்பர் செய்யும் பாவமும் அறமதாகும் என்பதைக் காட்டியவாறு.

712. கதிர் - ஒளிக்கதிர். வேடிபடுதமருகம் - வேடி போன்ற ஒலியை யுண்டாக்கும் உடுக்கை. சூலமும் தமருகமும் கையின்கண் தரித்ததோர் கோலம் என்க. காலபயிரவன் - உலகிற்கு இறுதிக்காலத்தை யுண்டாக்கும் வயிரவன். வேழம்- தாருகவனத்து முனிவர்கள் அனுப்பிய யானை. அந்த யானையின் தோலை உரித்துப் போர்த்துக்கொண்ட கோலம் உமாதேவியார் அஞ்சத்தக்க சிரிப்பு. இறந்த யானையின் தோலைக்கண்டு அஞ்சுதல் பேதைமை என எள்ளிய குறிப்பு. மணியாய் விள்ளச் சிரித்தருள் செய்தது பெருஞ் சிரிப்பு. விள்ளுதல் - மலர்தல், அகலமாதல். திரிசூலத்தின் ஒளிப் பெருக்கம் உணர 'விரித்த பல் கதிர் கோள் சூலம்' எனப்பட்டது. கையிற் சூலமும் உடுக்கையும் தரித்ததோருகோலம் (அழகு) கால பயிரவனாரது இத் திருப் பாடலை நாடோறும் மறவாது போற்றுவோர்க்கு வறுமை முதலிய துன்பம் நீங்கும். செல்வம் முதலிய பெருகி இன்பம் ஓங்கும்.

713. சுற்றும் - சூழ்ந்தும், முன் - திருமுன்னர். இமை யோர் - தேவர்; துவாதசாந்தத்தில் உள்ளம் வைத்துச் சுழுமுனை

முந்தியிவ் வுலகமெல்லாம் படைத்தவன் மாலினோடும்
எந்தனி நாதனேயென் றிறைஞ்சிநின் றேத்தல்செய்ய
அந்தமில் சோதிதன்னை யடிமுடி யறியாவண்ணம்
சேந்தழ லானார்சேறைச் செந்நெறிச் செல்வனாரே. 714

ஒருவரு நிகரிலாத வொண்டிற லரக்கனோடிப்
பெருவரை யெடுத்ததிண்டோள் பிறங்கிய முடிகளிற்று
மருவியெம் பெருமானென்ன மலரடி மெள்ளவாங்கித்
திருவருள் செய்தார்சேறைச் செந்நெறிச் செல்வனாரே. 715

திருச்சிற்றம்பலம்

நாடியில் மட்டும் வாயுவை மேலேற்றி நிறுத்தி, விழித்தகண் இமைத்தலின்றித் தியானம் புரிவோர். தூ - தூய்மை. 'எம்மை உய்யக்கோள்' என்று தனித்தனி வேண்டினர் இமையோர். திரிபுரத் தசுரர் கொடுமை தாங்காமல், எம்மை உய்யக்கோள் என்றனர் இமையோர். உற்றுச் சென்றார். ஒரு நொடியின் முன்னம் சென்றார். அழல் வாயின் வீழச்சென்றார். செற்றது புரத்தை. அருள் செய்தது இமையோர்க்கு.

714: முந்தி - முன். படைத்தவன் - பிரமன், மால் - விண்டு. இருவரும் 'யாமே கடவுள்' எனச் செருக்குற்றுத் தேடியலைந்து உண்மை கண்டு, எம் தனிநாதனே சிவன் என்று நெஞ்சாரநினைந்து உணர்ந்து போற்றி நின்று ஏத்தினர். இறைஞ்சி நிற்றல்:- காயத்தின் செயல். ஏத்தல் - வாக்கின் வினை. 'எம்தனிநாதன்' என்று அறிந்து நினைந்தது மனத்தின் வினை. அந்தம் - முடிவு. இல் - இல்லாத. சோதி - ஞானப்பேரொளி. அடிமுடி - ஆதியும் அந்தமும். சேந்தழல் - செய்ய தீயுருவம்.

715. ஒருவரும் நிகர் (ஒப்பு) இல்லாத ஒள்திறல் அரக்கன்- எவரும் இணையாதல் அல்லாத ஒளியும் வலியும் உடைய இராவணன். பெருவரை - திருக்கயிலைமலை. திண்மை - உறுதி யுடைமை. பிறங்கிய ஒளியுடன் விளங்கிய. இற்று - ஈண்டுச் சிந்தி என்னும் பொருட்டு, என்ன என்று போற்றி வணங்க. மலரடியை வலிசெய்யாதவாறு எடுத்து.

# 74. பொது

## திருப்பதிக வரலாறு

ஆருயிரின் திருவிருத்தம் தலபுராணத்தடைவு பாவநாசம் முதலிய பொதுவுள் ஒன்று இத் திருப்பதிகம்.

நினைந்த திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

முத்தினை மணியைப்பொன்னை முழுமுதற் பவளமேய்க்கும்
கொத்தினை வயிரமாலைக் கொழுந்தினை யமரர்சூடும்
வித்தினை வேதவேள்விக் கேள்வியை விளங்கநின்ற
அத்தனை நினைந்தநெஞ்ச மழகிதா நினைந்தவாறே. 716

716. மாயையைக் கடந்த முழுமுதல்வனுக்குவமையும் உருவகமும் அமைய மாயாகாரியப் பொருள்களைக் கூறுதல் உலகர் மரபு. அவருட்சிலர், தம் அன்பும் அறிவும் ஆண்டவனது தூய நிலையும் தன்னேரப்பின்மையும் அறிந்து, அம்மாயாகாரியப் பொருள்களையும் அடைமொழியால் வேறுபடுத்து, ஈயறியாப் 'பூந்தேனே' என்பது போலக் கூறுந் திறம் மிக்கவர். முத்து, மணி, பொன், பவளம், வயிரம் எல்லாம் சடம். அவை சித்துப் பொருட்கு நிகராகா. ' மன்னும் இருமாயையும் கடந்து வயங்கும் இறைவர்க்கு அம்மாயைத் துன்னும் மணி பொன் அமிழ்தாதி தொடுத்திட்டுவமைவழங்கி யாங்கென்னும் நிகராப் பொருள்களே யிதன்மாட்டுவமம் எடுத்த, எனக் கொன்னும் மதியிற் கூர்த்தவர் கள் குறிப்பர் இதற்கோர் நிகர் இன்றே' (தணிகைப்புராணம் 326.) முழுமுதற் பவளக் கொத்து. வயிரக்கொழுந்து. அமரர் சூடும் வித்து:- தேவர்கள் தங்கள் முடிமிசை யணியும் திருவடியையுடைய ஞானசொரூபர். 'உலகுக்கெல்லாம் வித்த வன்காண்' வேள்வி - வழிபாடு. வேதக்கேள்வி - மறைச் சுருதி. அத்தன் - பொருளன்; தலைவன். நெஞ்சு நினைத்தது மட்டும் வியப்பன்று. அழகிதாக நினைந்ததும் வியப்பே.

முன்பனை யுலகுக்கெல்லா மூர்த்தியை முனிகளேத்தும்
இன்பனை யிலங்குசோதி யிறைவனை யரிவையஞ்ச
வன்பனைத் தடக்கைவேள்விக் களிற்றினை யுரித்தவெங்கள்
அன்பனை நினைந்தநெஞ்ச மழகிதா நினைந்தவாறே. 717

கரும்பினு மினியான்றன்னைக் காய்கதிர்ச் சோதியானை
இருங்கட லமுதந்தன்னை யிறப்போடு பிறப்பிலானைப்
பெரும்பொருட் கிளவியானைப் பெருந்தவ முனிவரேத்தும்
அரும்பொனை நினைந்தநெஞ்ச மழகிதா நினைந்தவாறே. 718

717. முன்×பின்; முன்று×பின்று; முன்பு×பின்பு; முன்னர்×பின்னர்; முன்றை×பின்றை; முற்றை×பிற்றை; முந்தை×பிந்தை; முன்னை×பின்னை, முன்னது×பின்னது என்பனவும் பிறவும் ஆகமறுதலைச் சொற்கள் உள்ளன. அவற்றுட் பல (பொருள்) வேறுபாடுணர்த்துகின்றன. சிலவற்றின் வேறுபாடு புலப்பட்டிலது. ஈண்டு முன்பன் என்பது முன்னோன் என்னும் பொருள் பயக்கின்றது. உலகுக்கெல்லாம் முன்பன்:- 'முன்பாகி நின்ற முதலே போற்றி' 'முன்பின் முதல்வன் (865) 'முன்னவன் உலகுக்கு' 'முன்னவன் காண் பின்னவன்காண் மூவாமேனி முதல்வன்காண் முடிவவன்காண்' 'முன்னைப் பழம் பொருளே பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே' முனிகள் - மனனசீலர்கள். இன்பம் - பேரின்பவுருவினன். இலங்கு சோதி யிறைவன் - புறத்தே செங்கதிர் வெண்கதிர் தீயாகத் திகழும் ஒளிமுதல்வன். அகத்தே உணர்வொளியாயும் இன்பவொளியாயும் உணர விளங்கத் தங்கும் தலைவன். அரிவை உமாதேவியார் வல்+பனை+தட+கை=வலிய பனைபோலும் பெரிய துதிக்கையையுடைய (களிறு). வேள்வி தட்சயாகம். எங்கள் அன்பன்:- 'அன்பே சிவம்'. 5. 17. 1. காண்க.

718. கரும்பினும் இனியான்:- ஆலையிற் பாகும் போல அண்ணித்திட்டு அடியார்க்கு என்றும் வேலையின் அமுதர் (620) 'கருப்புச் சாற்றிலும் அண்ணிக்கும் காண்மின் (5. 61. 5.) ஆலைக்கரும்பின் இன்சாற்றை' (151) நினைவார்க் கெலாம் ஊற்றுத் தண்டொப்பர்' (5. 24. 3). காய் கதிர்ச்சோதியான்- 'சிவசூரியன்'. காலையிற் கதிர் செய்மேனி' 'அருக்கன் ஆவான்

அரனுரு அல்லனோ?' இருங்கடல் அமுதம் - பெரிய பாற்கடலில் எழுந்த அமிர்தம். ஆனவனே. 'கடலமுதே கரும்பே' (திருவாசகம்) 'பேரா ஒழியாப் பிரிவில்லா மறவா நினையா அளவிலா மாளா இன்ப மாகடலே' (திருவாசகம் 480). 'அருளா ரமுதப் பெருங் கடல் வாய் அடியாரெல்லாம் புக்கழுந்த' (ஷை 487). இறப்போடு பிறப்பிலான் - பிறப்பிலார் இறப்பிலார் (6. 10 8) 'பிறவாதும் இறவாதும் பெருகினுன்' (6. 74. 6,) பெரும் பொருட் கிளவியான் - மகா வாக்கியப் பொருளாயிருப்பவன். பெயருக்கும் பொருளுக்கும் வேறுபாடில்லை என்னும்படி பொருளைப் பெயரென்றும் பெயரைப் பொருளென்றும் ஆண்டனர் முன்னோர். 'பெரும்பெயர்க்கடவுள்' என ஞேயம் ஒன்றேபெரும் பெயருக்குப் பொருளாகக் கூறினுர். ஏனையவற்றைத் தன்னுள் அடக்கி நிற்றலிற் றலைமை பற்றி என்று உணர்க. பெரும் பெயரெனினும், மகா வாக்கியம் எனினும், ஒரு வார்த்தை யெனினும் ஒக்கும். பெரும் பெயர்ப்பொருளே அஞ்செழுத்திற்கும் ஆதலின், பெரும் பெயரோடு அஞ்செழுத்திடை வேற்றுமை யின்மையுணர்க. ஈண்டிய பெரும் பெயர் - எல்லா நூற்பொருளும் திரண்டு கூடிய பெரும் பெயர் என்க. 'அருள் நாலும் ஆரணமும் அல்லாதும் அஞ்சின் பொருள் நூல் தெரியப்புகின்' என்பதனும் உணர்க. (இது சிவஞானபோதமாபாடிய வசனம் சிறப்புப்பாயிரத்துட் காண்க.) 'பெரும்பேச்சு உடையான்' (827) என்று பின்னரும் வருதல் உணர்க. 'மகாவாக்கியம்' 'பெரும் பேச்சு' இரண்டும் ஒன்ருயிருத்தலை நோக்குக. 'பெரும் பெயர்க்கிளவி' 'பெரும் பொருட்கிளவி' என்னும் இரண்டும் வேறல்ல. 724இல் விண்ணிலே மின்னல் மெய்யிலே பெரும் பொருள், கண்ணிலே மணி, இருளிலே சுடர் ஒப்பான் என்றதும் ஈண்டு உணரத்தக்கது. மெய்மையே வழிபடா நிற்றலால் அம் மெய்மையிற் பெரும் பொருள் (சிவம்) தோன்றப் பெறலாம். அப்பெரும் பொருளைக் குறிப்பது பெரும் பெயர். ஈண்டு ஒப்பான் என்றதால் மயக்கம் உளதாகலாம். அப்பொருள் சொல்ல ஒன்ருதும் கருத வொன்ருதும் நிற்பதாதலின் பெரும் பொருள் ஒப்பான் என்ருர். மெய்க்கு 'அரும்பொன்'. வாய்க்குக் 'கரும்பினும் இனியான்'. கண்ணுக்குக் 'காய்கதிர்ச் சோதியான்'. மூக்கிற்கு 'இருங்கடலமுதம்'. செவிக்குப் 'பெரும் பொருட் கிளவியான்'. உயிர்க்கு 'இறப்போடு பிறப்பிலான்'. நெஞ்சிற்கு அழகிதாக நினைதல்.

செருத்தனை யருத்திசெய்து செஞ்சரஞ் செலுத்தியூர்மேல்
கருத்தனைக் கனகமேனிக் கடவுளைக் கருதும்வானோர்க்
கொருத்தனை யொருத்திபாகம் பொருத்தியு மருத்திதீரா
நிருத்தனை நினைந்தநெஞ்ச நேர்பட நினைந்தவாறே. 719

கூற்றினை யுதைத்தபாதக் குழகனை மழலைவெள்ளே
றேற்றனை யிமையோரேத்த விருஞ்சடைக் கற்றைதன்மேல்
ஆற்றனை யடியரேத்து மமுதனை யமுதயோக
நீற்றனை நினைந்தநெஞ்ச நேர்பட நினைந்தவாறே. 720

கருப்பனைத் தடக்கைவேழக் களிற்றினை யுரித்தகண்டன்
விருப்பனை விளங்குசோதி வியன்கயி லாயமென்னும்
பொருப்பனைப் பொருப்பன்மங்கை பங்கனை யங்கையேற்ற
நெருப்பனை நினைந்தநெஞ்ச நேர்பட நினைந்தவாறே. 721

719. செரு+தனை=செருவை; போரை, அருத்தி - விருப்பம். செஞ்சரம் - செவ்விதிற் சென்றெய்துங்கணை தவறாது குருதியிற் படிந்து செந்நிறத்ததாகத்தக்க கணையுமாம். ஊர் - மூன்றூர்; திரிபுரம். நிலையிலாவூர் மூன்று, (622) ஊர் மேல் செலுத்தி என மாறுக. ஊர் மேல் கருத்தனை - முப்புரத் தின்மேல் குறிக்கோள் உடையவனை. கனக மேனி - செம்பொன் மேனி, ‘பொன்னார் மேனியனே’. மேனியை யுடைய கடவுள். கருதும் - தியாநம் புரியும். ஒருத்தன் - ஏகநாயகன். ஒருத்தி-தனி முதல்வி. ‘ ஒருத்தனை யொருத்தி பாகம் பொருத்தியும் அருத்தி தீரா (நிருத்தனை) ’ என்பது முற்றெதுகை நயம் பொருந்தியது. பொருத்தியும் - இடப்பாலில் திருமேனியில் ஒரு கூறுகப் பொருந்த வைத்திருந்தும். அருத்தி-காதல். நிருத்தன்-கூத்தன்.

720. கூற்று - காலன். குழகன் - இளைஞன். மழலை வெள் ளேறு ‘மழவிடை’ ஏற்றன்-ஏறுதலையுடையவன்;ஏற்றத்தனுமாம். ஆற்றன் - கங்காதரன் என்னும் வடசொல்லுக்குத் தக்க தமிழ்ப் பழஞ்சொல். அடியர் வழிபடும் அமுதமயமான இறவாத அமுதயோக நீற்றன் - சிவாமிர்தம். நல்கும் திருநீற்று மேனியன்.

721. கருங்கை; பனைக்கை; தடக்கை வெம்பனைக் கருங் கையானை (593) வேழக்களிறு - வேழமாகிய களிறு. இரு பெயரொட்டு, கண்டன் - வீரன். தெவ்வர் புரம் எரிகண்டர்.

நீதியா னினைப்புளானை நினைப்பவர் மனத்துளானைச்
சாதியைச் சங்கவெண்ணீற் றண்ணலை விண்ணில்வானோர்
சோதியைத் துளக்கமில்லா விளக்கினை யளக்கலாகா
ஆதியை நினைந்தநெஞ்ச மழகிதா நினைந்தவாறே. 722

பழகனை யுலகுக்கெல்லாம் பருப்பனைப் பொருப்பொடொக்கும்
மழகளி யானையின்றோன் மலைமக ணடுங்கப்போர்த்த
குழகனைக் குழவித்திங்கள் குளிர்சடை மருவவைத்த
அழகனை நினைந்தநெஞ்ச மழகிதா நினைந்தவாறே. 723

---

(கோயிற்புராணம் நடராசச். 26.) விருப்பன் - அடியார் விருப்பினை யுடையவன். யாவரும் விரும்புதலை யுடையவன். 'விளங்கு சோதி வியன் கயிலாயம் என்னும் பொருப்பன்.- தூய மால் மால்வரைச் சோதி' (பெரியபுராணம். 17.) பொருப்பன் - மலையரையன், இமாசலராசன். பொருப்பன் மங்கை - பார்வதி, மங்கைபங்கன் - மாதியலும் பாதியன். அங்கை ஏற்ற நெருப்பன்- அழகிய கையிலே அழலேந்தியவன். அனலேந்தி.

722. நீதியால் நினைப்பு உளானை - சிவாகம விதிப்படி புரியும் (தியாதாவினது) தியானத்துக்குத்தியேயமாக உள்ளவனை. தியாதா - நினைப்பவன். தியாநம் - நினைப்பு. தியேயம் - நினைக்கப்படுகின்ற பொருள். ஆதியாவான், உயர்வினன். சாதியரதனம் ச+ஆதி=சாதியுமாம். சங்க வெண்ணீறு. சங்கத்தைப்போலும் வெளியநீறு. திருநீற்றுப் பொலிவுடையஅண்ணல். விண்ணில் வானோர்க்கெல்லாம் ஒளியாயவன். துளக்கம் - அசைவு. தூண்டலுமாம். தூண்டாவிளக்கு, தூண்டாமணி விளக்கே' நுந்தா வொண்சுடரே'அளக்கல் ஆகா ஆதியை-காட்சி முதலிய அளவைகளால் அளந்தறிய முடியாத முதல்வனை.

723 பழகன் - பழக்கமுடையவன், பழகு+அம்=பழக்கம். ஒழுகு+அம்=ஒழுக்கம்உலகம். உணராமையாற்பொய்யனுமாம். இன்னோரன்ன பலவுள. பருப்பனை - பருத்த பனைமரம். பொருப்பு - மலை. 'பனைக்கை' 'கைம்மலை' 'வருங்குன்றம்' மழகளிறு. களியானை - களிறு. மலைமகள் - பார்வதி. நடுங்கத்தோல்போர்த்த குழகன். (720) குழவித்திங்கள்:-

விண்ணிடை மின்னொப்பானை மெய்ப்பெரும் பொருளொப் பானைக்
கண்ணிடை மணியொப்பானைக் கடுவிருட் சுடரொப்பானை
எண்ணிடை யெண்ணலாகா விருவரை வெருவநீண்ட
அண்ணலை நினைந்தநெஞ்ச மழகிதா நினைந்தவாறே. 724

திங்கட்குழவி' 'பிறைக்கொழுந்து' 'திங்கட்பிஞ்சு' திங்களைச் சூடுதலின் முன்னரே குளிர்சடை, குளிர்சடையில், குழவித் திங்களை மருவவைத்த அழகன்.

724. விண் - மேகம்; வானுமாம். மின்ஒப்பான் - மின்னலைப்போல்வான். மின்னுக்கு இடம் காரும் வானுமாம். மெய்ப்பொருள். பெரும்பொருள். மெய்ப்பெரும் பொருள் ஒப்பான் - தானே மெய்ப்பெரும் பொருளாயிருத்தலின் தானே தனக்கொத்த தலைமைத் தன்மையன் என்றவாறு. மெய் - சத்தியம் (குணம்). பெரும் பொருள் - சத்தியார்த்தம் (குணி) சத்தியவத்து வேறு. அதன் சத்தியம் வேறு. மெய்மை - குணம் பெரும்பொருள் - குணி. கண்ணிடைமணி - "கண்ணிற் கருமணியே பாவாய் காவாய்' கடுவிருள் - செறியிருள். சுடர் - ஒளி. விண்ணும் மின்னும்; மெய்யும் பொருளும்; கண்ணும் மணியும்; இருளும் ஒளியும். உணர்ந்தார்க்கும் உணர்வரிய ருதலின் விண்ணில் மின்னும். பொய்யர்க்குப் பொய்யனும் மெய்யர்க்கு மெய்யனுமாம் இயல்பினனுயினும் உண்மை வழிபாடுடையவர்க்கு மெய்ம்மையிற் புலனுகும் பெரும் பொருளாம். எல்லாம் உடையராயினும், சிவவழிபாடு இல்லாதார் கண்ணிருந்தும் மணியில்லாதார் போல வாழ்வை இழப்பர் ஆதலின் கண்ணுள் மணியாம். சிவனை வழிபட அவன் உள்ள தூய நிலைக்கு ஏகல் வேண்டா; அவன் உள்ளத்தே என்றும் திருக்கூத்தாடுகின்றான்; அதனாலும், அவன் 'உள்ளொளி' யாதலாலும், கருவிருட்சுடர் என்றார். எண்ணிடை - எண்ணத்திலே. எண்ணல் - கருதல். கணக்கிடப்படுதல். எண்ணல் ஆகா-நினைத்தற்கியலாத. இருவர் - அரியும் அயனும், வெருவ - வாய்வெருவி அஞ்ச, நீண்ட அண்ணல் - 'சோதியாய்த்தோன்றும் உருவமே' நீண்ட அண்ணல் - எங்கும் வியாபித்த தலைவன்.

உரவனைத் திரண்டதிண்டோ ளரக்கனை யூன்றிமூன்றூர்
நிரவனை நிமிர்ந்தசோதி நீண்முடி யமரர்தங்கள்
குரவனைக் குளிர்வெண்டிங்கட் சடையிடைப் போதியுமைவாய்
அரவனை நினைந்தநெஞ்ச மழகிதா நினைந்தவாறே. 725

திருச்சிற்றம்பலம்

725. உரவன்-ஞானசோருபன். 'உரனுறு திருக்கூத்து' (சேக்கிழார்) திரண்டதோள்; திரண்டதிண்டோள். மூன்றூர் நிரவன் - திரிபுரத்தைத் தரையோடு தரையாய் நிரவல் செய்தவன். நிமிர்ந்த சோதியமரர். நீள்முடியமரருடைய குரவன்; தலைவன். எல்லாவுயிர்க்கும் உள்நின்று உணர்த்தும் இயல்பும் வேண்டின் வெளியிற் குருவாய் வந்துபதேசிக்கும் நிலையும் உடையன் சிவபிரான் ஆதலின், குரவன் என்பது ஆசிரியன் என்னும் பொருளைத் தருதல் அமரர்திறத்திலும் அமையும். ஐவாய் அரவன் - ஐந்தலைப் பாம்பினையுடையவன்.

பிறப்போ டிறப்பென்று மில்லா தான்காண்
பெண்ணுருவோ டாணுருவ மாயினான் காண்
மறப்படுமென் சிந்தைமருள் நீக்கி னான்காண்
வானவரு மறியாத நெறிதந் தான்காண்
நறப்படுபூ மலர்தூபந் தீப நல்ல
நறுஞ்சாந்தங் கொண்டேத்தி நாளும் வானோர்
சிறப்போடு பூசிக்குந் திருவா ரூரிற்
றிருமூலட் டானத்தெஞ் செல்வன் றானே.

கந்தமலர்க் கொன்றையணி சடையான் றன்னைக்
கதிர்விடு மாமணி பிறங்குகனகச் சோதிச்
சந்தமலர்த் தெரிவையொரு பாகத் தானைச்
சராசரநற் றாயானை நாயேன் முன்னைப்
பந்தமறுத் தாளாக்கிப் பணிகொண் டாங்கே
பன்னியநூற் றமிழ்மாலை பாடுவித் தென்
சிந்தைமயக் கறுத்ததிரு வருளி னானைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டே னானே.

# 75. பொது

## திருப்பதிக வரலாறு

ஆருயிர்த் திருவிருத்தம், தசபுராணத்தடைவு, பாவநாசத் திருப்பதிகம், சரக்கறைத் திருவிருத்தம், முதலிய பொதுப் பதிகங் களுள் ஒன்று இத் திருப்பதிகம், குறைந்த திருநேரிசை தனித் திருநேரிசை முதலிய பெயர்கள், திருப்பாடல் பத்தும் இல்லாமற் குறைந்தமை முதலியவற்ருல் உளவானவை,

தனித் திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

தொண்டனேன் பட்டதென்னே தூயகா விரியினன்னீர்
கொண்டிருக் கோதியாட்டிக் குங்குமக் குழம்புசாத்தி
இண்டைகொண் டேறநோக்கி யீசனை யெம்பிரானைக்
கண்டனைக் கண்டிராதே காலத்தைக் கழித்தவாறே. 726

பின்னிலேன் முன்னிலேனுன் பிறப்பறுத் தருள்செய்வானே
என்னிலே னுயினேனு னிளங்கதிர்ப் பயலைத்திங்கள்
சின்னிலா வெறிக்குஞ்சென்னிச் சிவபுரத் தமரரேறே
நின்னலாற் களைகணுரே நீறுசே ரகலத்தானே. 727

726. மறையோதி, நீர் முதலியன ஆட்டித், தார் முதலியன சூட்டி, வழிபட்டுக் கண்டு கண்டு கண்குளிரவும் உள்ளங் குளிரவும் பெருது காலத்தைக் கழித்தமை கருதித் தொண் டனேன் பட்டது என்னே என்று இரங்கினுர். சிவ வழிபாட்டிலே காலங்கழித்தல் இன்றிப் பவவழிப்போக்கிலே காலங்கழித்துப் பட்டது ஒன்றும் இல்லைஎன்பார். 'பட்டது (அடைந்தது) என்னே' என்ருர். நன்னீர் என்றதால், தூய்மை காவிரிக்கு அடையாகும். தூய நன்னீர் எனலுமாம். கண்தனை - கண்ணை. 'உலக வுயிர்க்கெல்லாம் ஒருகண்ணே' (இருபாவிருபஃது 20) 'கண்ணே கண்ணிற் கருமணியே மணியாடுபாவாய் காவாய்' 'உள்ளத்தின் கண்ணுயகள்வன்' (சிவஞானபோதம் சூ.9.) கண்டு இராதே காலத்தைக் கழித்த வாற்றிலே தொண்டனேன் பட்டது என்னே என்க.

727. பின்னிலேன் - முடிவில்லேன். முன்னிலேன் - முதலில்லேன். பதி பசு பாசம் ஆகிய முப்பொருளும் அநாதி

கள்ளனேன் கள்ளத்தோண்டாய்க் காலத்தைக் கழித்துப்
தேள்ளியே ருகிநின்று தேடினே ருடிக்கண்டேன் [போக்கித்
உள்குவா ருள்கிற்றெல்லா முடனிருந் தறிதியென்று
வேள்கினேன் வேள்கிநானும் விலாவிறச் சிரித்திட்டேனே.

நித்தியம். ஆதலின், நான் முன்னும் பின்னும் இல்லேன் என்றூர். நான் திருமுன் நின்று போற்றிலேன், பின் நின்று வழிபட்டிலேன் எனலுமாம் உடலெடுத்தல் முன்னுகும். அதை விடுத்தல் பின்னுகும். ஆதலின் நான் பிறப்பும் இறப்பும் இல்லேன். வினைத்திறத்தால் வருதலும் ஒழிதலும் உடற்கே உண்டு. அப்பிறப்பையும் (இறப்பையும்) அறுத்து அருள் செய்பவனே என்றலும் கூடும். நாயினேன் நான் என் இல்லேன்? நான் என் இல்லேன் ஆயினேன். இளங்கதிர் - இளநிலா. பயலைத்திங்கள் - இளம்பிறை. பயல், பயலை, பசலை, பையல் பைதல் எல்லாம் இளமைப் பொருளவாதலும் ஆட்சியிலறியப் படும். சில்நிலா-சிறிது நிலா. சென்னியிலே இளம்பிறை சில்நிலா எரிக்கும். சிவபுரத்து ஏறு. அமரர் ஏறு, தேவர்கோ (இந்திர னல்லன்); விரும்பி வழிபடுவார்க்கிறைவன் எனலுமாம். அமர்தல் - விரும்புதல். திருநீறு பொருந்திய திருமார்புடைய வனே நின்னை அல்லால் ஆர்களைகண் (அடியேனுக்கு)? 'ஆர்' மரூஉ. யாண்டு, யாமை, யானை, யாறு. யாடு, யாப்பு, யாக்கை, யாய் முதலியவை ஆண்டு, ஆமை, ஆனை, ஆறு, ஆடு. ஆப்பு ஆக்கை, ஆய் முதலியனவாக மருவி வழங்குதலை உணர்க. யாவர், யார், ஆர் என்னும் முறையில் வைத்தறிதற்பாலது. யா+அர்=யாவர். யா+அது=யாவது. இவற்றுள் யாவர் என்பது யார் என்றும் யாது என்பது யாவது என்றும் மருவின என்றூர் தோல்காப்பியர். யாது என்றதோ யாவது என மருவும்? (தோகைமரபு 30).

728. யானும் கள்ளனேன். எனது தோண்டும் கள்ளத் தோண்டு. இவ்வாறு வினைமுதலும் வினையும் கள்ளத்தன்மை நீங்காமல் நிகழக் காலம் வீணே கழிகின்றது. ஞானத் தேளிவு சிறிதும் இல்லேன், உள்ளேருகி நின்று, (நின்னைத்தேடினேன். நினைப்பவர் நினைந்தவெல்லாம் நினைப்பவர் நினைப்புடன் இருந் துணர்கின்ருய் என்னும் உண்மையை நாடிக்கண்டேன். 'உள்குவார் உள்ளத்தானை உணர்வெனும் பெருமையானை' (731)

உடம்பெனு மனையகத்து வுள்ளமே தகளியாக
மடம்படு முணர்நெய்யட்டி யுயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயா லெரிகொள விருந்துநோக்கில்
கடம்பமர் காளைதாதை கழலடி காணலாமே. 729

கண்டு நாணினேன். நாணிநானும் என் விலாவெலும்பு ற்றேழியும் வண்ணம் சிரித்திட்டேன். 'வஞ்ச மனத்தான் படிற் றொழுக்கம் பூதங்களஞ்சு மகத்தே நகும்' என்று சடமாய பூதங்கள் நகும் எனினும், அவற்றின் வழியாகச் சித்தாகிய முதலே உயிர்க்குயிராய் நின்றறிந்து சிரிக்கும் என்று கொள்க. இஃது உணர்விலதனை உணர்வுடையது போல வைத்தும் செய்யா மரபினதைச் செய்வது போலத் தொழிற் படுத்தும் கூறுதற்கண் அடங்கும். (தொல் பொருளியல். 2.) 'கள்ளரோ டில்லமுடையார் கலந்திடில் வெள்ள வெளியாம் என்றுந்தீபற' (திருவுந்தியார்) 'உள்ளத்தின் கண்ணுய கள்வன்' (சிவஞானபோதம் சூ. 9. அதி 1 வே. 2.) 'ஏகமாய் உள்ளத்தின் கண்ணுனன் உள்குவார் உள்கிற்றை உள்ளத்தாற் காணுனே உற்று.' (சூ. 9. அதி 11. வே. 2.)

729. உடம்பு எனும் மனையகத்து:- 'மெய்யுணர்த்திய அப் போதமே நம் தஞ்சவுடல், இந்தவுடல் எடுத்த வீடுதான் அழியும் அளவும் அதில் தங்குவார்போல் வஞ்சமுடன் அமர்தும்' (ஞான பூசாவிதி) முதலியவற்றால், உடலை வீடுபோலக் கூறுதலுண்மை உணர்க, உடம்பே வீடு. உள்ளமே தகளி (அகல்), உணர்வே நெய். உயிரே திரி. ஞானமே தீ. உடலான வீட்டில், சிவமானபொருள் இருப்பது, மடமான இருளால் தெரிந்திலது. விளக்கேற்றிப் பார்த்துணர்தல் வேண்டும். உள்ளமான அகலுள் பசுஞானமான நெய் சேர்த்து, உயிரான திரியிட்டுச் சிவஞான மான தீயால் எரிதலைக்கொள்ள, அச் சிவஞானப் பிரகாசத்தி லிருந்து நோக்கினால், சிவமானபொருளைக்காணலாம். நோக்கல்- அத்துவித பாவனை. மடம்படும் உணர்(வு) பசுஞானம். மடம் படா உணர்வு சிவஞானம். உணர்' முதனிலைத் தொழிலாகு பெயராய் ஞானத்தை உணர்த்திற்று. மடம்படும் உணர்வு அவ்வியாபகம்; சிவஞானம் ஆகிய பரை பரிபூரண (வியாபக)ம் என்பதைக் குறிக்க இடம்படுஞானம்' எனப்பட்டது. மடம்படு

வஞ்சப்பெண் ணரங்குகோயில் வாளேயிற் றரவந்துஞ்சா
வஞ்சப்பெண் ணிருந்தசூழல் வான்றவிழ் மதியந்தோயும்
வஞ்சப்பெண் வாழ்க்கையாளன் வாழ்வினை வாழலுற்று
வஞ்சப்பெண் ணுறக்கமானேன் வஞ்சனே னென்செய்கேனே.

முணர் - சீவபோதம். இடம்படு ஞானம் சிவபோதம் எனலுமாம். 'அவனருளே கண்ணுகக்காணினல்லால்......காட்டோணுதே' 'அவனருளாலே அவன்தாள் வணங்கு' அட்டி :- உதிரம் அட்டி' (651) கடம்பு அமர் காளை - கடம்ப மலர் மாலையை விரும்பும் முருகப்பிரான். தாதை - தந்தை. கழலடி - திருவடி. காண்டல் :- சிவாநந்தாநுபவத்தின்மேற்று.

730. வஞ்சப்பெண் - கங்காதேவி. அவள் இருக்கும் அரங்கையே கோயிலாகக் கொண்டு வாழ்வது பாம்பு. அவ்வாளேயிற்றரவமும் வான்தவழ் மதியமும் வாழும் இடம் அச்செஞ்சடைச் சூழல். வஞ்சப்பெண் வாழ்க்கையாளன் - செஞ்சடையோன். வாழ்க்கை ஆளன்-வாழ்க்கையை ஆள்பவன். அவ் வாழ்க்கை வஞ்சப்பெண் வாழ்க்கை. (அவ்) வாழ்வினை வாழலுறுதல் - (அவ்) வாழ்வை நடாத்த விழைதல். வஞ்சப் பெண்ணுறக்கம் - 'கள்ளக் காதலனிடத் தன்புகலந்து வைத் தொழுகும் உள்ளக் காரிகை மடந்தை' (திருவிளையாடல். வாதவூரடிகளுக்குபதேசித்தது. 17). பொய்யுறக்கம் போலும் உறக்கம். கைப்பிடி நாயகன் தூங்கும்போது அவனை ஏய்த்துத், தன்மேற் படும் அவன் கையெடுத்து அப்புறந்தள்ளிப் புறம் போக நினைக்குங் கள்ளக் காரிகையாகிய குடிச்சேற்றியின் வஞ்சத் துயில். உள்ளக்கிழவனை விட்டுக் கள்ளக் குழகனைத் தொட்டுக் காதலால் நட்டுவாழும் ஒருத்தி, இரவில் அவன் வரவு நோக்கித் தூங்காது கண்மூடியிருக்கும் பொய்நிலை. ஏழுலகும் பெற்றுலும் இளமை கழியாத எம்பெருமாட்டியைச் செம்பாதி யில் உடைய நம்பான், வம்பாகத் தலைமேலும், மெய்ப்பாதியாள் அறியாவாறு துய்ப்பாதியாளான வஞ்சப் பெண்ணை வைத்து உள்ளான். அதனுல் அவன் வஞ்சப்பெண் வாழ்க்கையாளன் ஆனுன். செஞ்சடையாளிடம் நெஞ்சகம் வைத்து, செம்பாதியாள் கண் மூடுங்காலத்தை நோக்கிக்கொண்டு உறக்கம் சிறிதும்இன்றி இருக்கின்றுன். சிவபிரான் உமையை ஏய்த்துக் கங்கையைக் கலக்க உறங்காதுள்ளான். அவன் சென்னியில் மன்னிய

பாம்பும் திங்களை விழுங்கக் கருதி உறங்காதிருக்கின்றது. அவ் வஞ்சப்பெண் வாழ்க்கையாளன் வாழ்வுபோலும் வாழ்வினை வாழலுற்றார் திருநாவுக்கரசு நாயனார். அதுவே 'உயிர்த் துணையாந் தோன்றாத் துணைக்கு ஓர்துணையாகித் துவாதசாந்தப் பெருவெளியில் துரியங்கடந்த பரநாத மூலத்தலத்து' வாழ்வு. அக் குரவர் இருவரும் உற்றிடும் துவாதசாந்தத்து ஒரு பெரு வெளிக்கே விழித்துறங்கும் வாழ்வு இத் திருப்பாடலில் அறிவிப்பன :- (1) வஞ்சப் பெண்ணாகிய அலைமகள் அப் பெண் வாழ்க்கையாளனைத் தழுவ விழைந்து, மலைமகள் காணுவாறு வந்து தழுவத் தக்க தலைமகன் வரவினைநோக்கித் தூங்காது தூங்கியலைகின்றாள். (2) செஞ்சடை முடியான் செம்பாதியாள் அறியாவாறு தலைமகளைத்(ஏழன்றேகையுமாம்)தழுவத்துயிலாது துயில்கின்றான். (3) வாள் எயிற்றுப் பாம்பு மதியை விழுங்கக் கருதிக் கண்வளராது வளர்கின்றது. (4) இடையில் அவ் வஞ்சப் பெண்ணை மதியம் தோய்கின்றது. (5) அப்பரும் வேணியப்பரை அடைய விரும்பி, வஞ்சப் பெண்போல் உறங் காது உறங்குகின்றார். இந்நிலை துவாதசாந்தப் பெருவெளியில் விழித்துறங்கும் சிவயோகநிலை. சிவோகம் பாவனை நிலையும் ஆம். முன்னது யோகம். பின்னது ஞானம். 'ஆங்காரம் அற்று உன் அறிவான அன்பருக்கே தூங்காத தூக்கமது தூங்கும் பராபரமே'; 'தூங்கிவிழித் தென்னபலன்'; 'தூங் காமல் தூங்கிநிற்கும் பாங்கு கண்டால் அன்றோ பலன் காண் பேன் பைங்கிளியே'; 'தூங்காமல் தூங்கிச் சுகப்பெருமான் நின் நிறைவில் நீங்காமல் நிற்கும் நிலைபெறவும் காண்பேனோ?'; நீங்கா துயிருக் குயிராகி நின்ற நினைஅறிந்தே தூங்காமல் தூங்கின் அல்லாதே எனக்குச் சுகமும் உண்டோ?'; 'அரைசே பொன்னம்பலத்தாடும் அமுதே என்று உன் அருள் நோக்கி இரைதேர் கொக்குஒத்து இரவுபகல் ஏசற்றிருந்தே வேசற்றேன்' 'இடைவிடாதுன்னைச் சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந்தருளு வதினியே'; 'ஒன்றிற் பற்றும் இன்றிச் சொல்லும் பொருளும் இழந்து சுகாநந்தத் தூக்கத்திலே அல்லும் பகலும் இருப்பது என்றோ கயிலாயத்தனே'; 'சினந்தனையற்றுப் பிரியமும் தான் அற்றுச் செய்கையற்று, நினைந்ததும் அற்று, நினையாமையும் அற்று நிர்ச்சிந்தனாய்த் தனந்தனியே இருந்து ஆனந்த நித்திரை தங்குகின்ற அனந்தலில் என்று இருப்பேன்;அத்தனே கயிலாயத் தனே?' 'பொற்புறுங் கருத்தே அகமாய் அதிற்பொருந்தக்

உள்குவா ருள்ளத்தானை யுணர்வெனும் பெருமையானை
உள்கினே னுனுங்காண்பா னுருகினே னூறியூறி
எள்கினே னெந்தைபெம்மா னிருதலை மின்னுகின்ற
கொள்ளிமே லெறும்பெனுள்ள மெங்ஙனங் கூடுமாறே. 731

கற்பின்மங்கையர் என விழி கதவுபோற் கவினச் சோற்பனத் திலும் சோர்வின்றி இருந்த நான் சோர்ந்து நிற்பதற்கு இந்த வினை வந்தவாறு என் கொல் நிமலா' 'இரைதேர் கொக்கு' (திருச்செந்தூரகவல்) 'ஞானசம்பந்தம்' மலர் 7, இதழ் 3, (10—2—1948) இல், இத் திருப்பாடலின் விளக்கமாக எழுதிய எம் கட்டுரையைக் காண்க.

731. உள்குவார் உள்ளத்தான் 'நினைப்பவர் மனம் கோயிலாக்கொண்டவன் (1581)' 'நினைக்கும் நெஞ்சின் உள்ளார்.' (1340) 'நினைப்பார்கள் மனத்துக்கோர்வித்து மாவாய்' (3022). பெருமைக்குள் தலைசிறந்தது உணர்வே. அது பண்பு. அதன் பண்பி அவ்வுணர்வாகி நின்ற பேரின்பம். துரியம் உணர்வு நிலை. துரியாதீதம் பேரின்ப நிலை. அருள் குணம் ஆநந்தம் குணி என்றல் சைவ சித்தாந்த மரபு. 'உணர்வின்கண் ஒன்றுவான்' (6. 86. 3) என்புழி உணர்வும் அதன்கண் ஒன்றுவதும் என்று வேறாக வைத்துரைத்தல் அறிக. இவ்வுணர்வு பசுஞானம் அன்று. சிவஞானமே. பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பொருளைப் பதிஞானத்தாலே நேசமொடும் உள்ளத்தே நாடிப்பாதநீழற்கீழ் நீங்காதே நில்' (சித்தியார்) 'உண்மை நின்ற பெருகுநிலைக் குறியாளர் அறிவு தன்னை' (6. 84. 3) பரமசிவன் அத் தலை சிறந்த பெருமையாகிய அருளையுடையவன் என்பார், 'உணர்வு எனும் பெருமையான்' என்றார். 'பித்தா பிறை சூடி பெருமானே அருளாளா'. அவனைக் காண்பான் (- காண) நினையா என் நெஞ்சை நினைவித்தான் ஆதலால் நானும் உள்கினேன் ஊறி ஊறி உருகினேன். ஊறுவது அன்பு. உருகுவது உள்ளம். 'உருகுமனத்து அடியவர்கட்கு ஊறுந்தேன்' 'அமுதனைன் றள்ளூறித்தித்திக்கப்பேசுவாய்'. 'உருகுவது உள்ளங்கொண்டு ஓர் உருச்செய்தாங்கு அள்ளூருக்கை அமைத்தனன்' (திருவாசகம்). எள்கினேன் – அரியனாகக் கருதாது எளிய

மோத்தையைக் கண்டகாக்கை போலவல் வினைகள்
மொய்த்துன்
வார்த்தையைப் பேசவொட்டா மயக்கநான் மயங்குகின்றேன்
சீத்தையைச் சிதம்புதன்னைச் செடிகோணாய் வடிவோன்
றில்லா
ஊத்தையைக் கழிக்கும்வண்ண முணர்வுதா வுலகமூர்த்தீ.

னென்று கொண்டிட்டேன்.' மழக்கையிலங்கு பொற்கிண்ணம் என்று அலால் அரியை என்று உனைக்கருதுகின்றிலேன்' (ஷ). எந்தைபெம்மான் :- என்னப்பனுக்கும் பெரியமகனை உள்ளத்தானை, பெருமையானை - பெம்மானை உள்ளம் கூறும் ஆறு எவ்வாறு. ? இருதலைமின்னுகின்ற கொள்ளிமேல் எறும்பு என் உள்ளம் - இருபாலும் மின்னுகின்ற தீக்கொள்ளியின் நடுப் பட்ட எறும்பு போலும் (எனது) உள்ளம், மின்னுதல் அன்றி எரிதல் கொள்ளிக்கில்லை. 'மேல்' என்பது ஒருதலையை நோக்கிக் காலப்பின்னும், ஒருதலையை நோக்கி இடமுன்னும். ஆதலின், நடு என்னும் பொருட்டெனல் புலனும். எறும்பு என் உள்ளம் - எறும்பு என்னும் உள்ளம். என்ற - என்கின்ற - என்னும் என முக்காலத்திலும் விரியும். என் - உவமவுருபுமாம். 'தழல்போல்மேனி' என்புழிப்போல. என்னுள்ளம் என்பதை ஆறன்றேகையாகக்கொள்ளின். எறும்பு போன்ற உள்ளம், எறும்பாகிய உள்ளம் என்றுரைத்துக்கொள்க. 'இருதலைக் கொள்ளியினுள்ளெறும்பு ஒத்து' (திருவாசகம்).

732. காக்கைகள் மொய்த்தல் பிணத்தை. வினைகள் மொய்த்தல் உயிரை. பிணத்தைக் கண்ட காக்கை அதனை விடாது மொய்க்கும். தன்னைச் செய்த உயிரைக் கண்ட வினையும் அதனை விடாது மொய்க்கும். மோத்தை ஆடு என்பது பொருந்தாது. மாட்டுவாலினும் ஆட்டுவால் குட்டை யாதலின், அஞ்சாது அதன்மேல் நிற்றல் காக்கைக் கியல்பாயினும். உயிருள்ள ஆட்டைப் பல காக்கை மொய்த் தலில்லை. உயிரை மொய்க்கும் வினைக்குப் பிணத்தை மொய்க்கும் காக்கை ஒரு புடை யொப்பு. வினைப்பன்மைக்குக் காக்கைப் பன்மை ஒப்பாகக் குறிக்கப்பட்டது. உன் வார்த்தை - உனது புகழ். 'வாக்கு உன் மணி வார்த்தைக்கு ஆக்கி'

அங்கத்தை மண்ணுக்காக்கி யார்வத்தை யுனக்கேதந்து
பங்கத்தைப் போகமாற்றிப் பாவித்தேன் பரமாநின்னைச்
சங்கோத்த மேனிச்செல்வா சாதனு ளுயேனுன்னை
எங்குற்ரு யென்றபோதா விங்குற்றே னென்கண்டாயே. 733

'வார்த்தைகள் பேசி' 'தித்திக்கப் பேசுவாய்' (திருவாசகம்) 'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.' பேசப் பெரிதும் இனியாய் போற்றி'. பேசவொட்டாதனவாய் மயக்க. ஒட்டாது என்றதன் திரிபும் ஆம். 'காக்கை கரவா கரைந்துண்ணும்' (குறள்). வினைகளும் அன்ன. தமக்குத் திருவருளிரை தேடிப் பெற்று நீடு வாழாது காக்கைக்கே யிரையாகும் ஆக்கைக்கே இரைதேடி அலமந்து, நாக்கைக்கொண்டும் பூக்கைக் கொண்டும் அரன்நாமம் நவிலாதும் பொன்னடி போற்ருதும் கழிவர்.' மயக்க மயங்குகின்றேன். சீத்தை - சீத்தலுறுவது ; சீ என்று வெறுத்தற்குரியது. 'பீழை 'யுமாம். 'சிதம்பு' (69). சேடி - நாற்றம். ஊத்தை - ஊற்றை. ஊறுதலுடையது. ஊத்தை வாய்ச்சமணர்' (6. 40. 4) ஈங்குத் திருநேய்த்தானத் திருத் தாண்டக முழுதும் நினைக. உடல் உயிர்க்கு உரித்தன்று. உணர்வே உரியது எனவுபதேசித்து, ஒட்டா :- வினைகள் ஒட்டி நின்று சிவகீர்த்தனம் செய்யத் துணைசெய்யாமல் எட்டி நின்று இடர்ப்படுத்தும் என்றபடி. பந்த மார்க்கத்தில் ஒட்டி நின்று துணைசெய்வன. 'போதால்' என்றும் பாடம்.

733. அங்கம் - உடம்பு; ஊத்தை. மண்ணுக்கு ஆக்கி :- மண்ணிற் பொருந்த நெடிது வீழ்ந்து. புதைக்கப்பட்டோ எரிக்கப்பட்டோ மண்ணோடு மண்ணாய்ப் போமாறு உடலின் நீங்கி எனலுமாம். விழுந்து தொழும்போது, உடம்பு மண்ணிற் கழிக்கப்பட்டதாயும் உயிர் அவ்வுடம்பின் நீங்கிச் சிவத்திற் கலந்ததாயும் எண்ணுதல் சைவ மரபு. ஊத்தையைக் கழிக்கும் வண்ணம் உணர்ந்து கழித்து. 'ஊனைக்காவி உழிதர்வர் ஊமரே'. காவி - சுமந்து. போக மாற்றத் தக்கது ஊன். பாச நீக்கத்தைக் குறித்ததாதலின், அத் தொழுதலைப் பலிபீடத்து அருகிற் செய்தல் வேண்டுமெனச் சிவாகமங்கள் விதித்துள்ளன. பாசம் அற்ற ஆன்மாவைக் குறிப்பதே அப் பலிபீடத்தை அடுத் துள்ள நந்தி. அது பதியையே நோக்கியிருத்தல் கருதத்தக்கது.

விழுந்தது பாசம். எழுந்தது பசுவாயிருந்த ஆன்மா. கலந்தது சிவத்தில். நிலைத்தது பேரின்ப நுகர்ச்சியில். 'ஆயபதிதான் அருட்சிவலிங்கமாம்; ஆய பசுவும் அடல்ஏறு என நிற்கும்; ஆய பலிபீடம் ஆகும் நற்பாசமாம்; ஆய அரன்நிலை ஆய்ந்து கோள்வார்கட்கே' (திருமந்திரம். 2412). 'பசுத்தன்மை நீக்கி அப் பாசம் அறுத்தாற் பசுக்கள் தலைவனைப் பற்றிவிடாவே' (ஷை 2406) என்னும் உண்மை 'ஆர்வத்தை உனக்கே தந்து' என்றதால் அறியப்படும். தலைவனைப்பற்றி விடாமையே ஆர்வத்தின் குறியாகும். பங்கத்தை - பாசச்சார்பான இழிந்த எண்ணத்தை; சேற்றை. 'பிறவியளறு'. பிறவிச் சேற்றினை. 'பன்றிபோல் அளற்றிற் பட்டுத்தேறி' (752). 'பிரபஞ்சம் என்னும் சேற்றைக் கழிய வழிவிட்டவா' (கந்தரலங்காரம்). போக - ஒழிய. மாற்றி - ஓரிடத்தின் நீங்கிப் பிறிதோரிடத்திற் சேரத்தள்ளி. 'மடவாரோடும் பொருந்து அணைமேல் வரும் பயனைப் போக மாற்றி' என்புழிப் போலக் கோள்க. நின்னைப் பாவித்தேன் - என்னை மறந்து நின்னை நினைந்தேன். 'நான் என ஒன்று இல் என்று தானே எனும் அவரைத் தன் அடி வைத்து இல் என்று தான் ஆம் இறை' (சிவஞானபோதம். 63). இதிற் குறித்ததே 'ஊன் செய்யா ஞானம்'. ஏனைச்சமயத்தார் ஞானமெல்லாம் ஊன் செய்யும் ஞானம். ஈண்டுப் பாவித்தது ஊன் செய்யா ஞானபாவனை. சங்கு ஒத்த மேனிச்செல்வா :- பவளம்போல் மேனி, பால்வெண்ணீற்றுச் செல்வத்தாற் சங்கு போன்றதாயிற்று. நாயேன் :- படர்க்கைப் பெயர் தன்மையீறுற்றுத் தன்மைப் பெயராயிற்று. அப்பர் தம்மை நாயேன்று குறித்தல் அறிந்து செருக்கறுதல் தலைக் கடனாகும். சாதல் நாள்-சாங்காலம். 'சாம் அன்று' (995). 'வீடும் நாள்' (629). 'துஞ்சும் போழ்து' (1339) சாம் போதில், உன்னை நாயேன் எங்கு உற்றாய் என்று வினவுவேன். என்ற போது ஆ. என்ற போதா (என்ற+போது+ஆ) ஆ - ஆக; ஆதல். இங்கு உற்றேன் என். என் (- என்றுணர்த்து). ஏவல். இத் திருப் பாடலைச் சைவர், சிவபூசாந்தத்தில் விழுந்திறைஞ்சும் பொழுது சொல்லிவருதல் மரபு. ஊத்தையைக் கழிக்கும் வண்ணம் உணர்வுதர வேண்டிப் பெற்றுணர்ந்து, கழித்துப் பரமனைப் பாவித்து, அவன் இங்குற்றேன் என்றுணர்த்துவதற்குத் தக்க பொழுது இஃது என்றார்.

வெள்ளநீர்ச் சடையனார்தாம் வினவுவார் போலவந்தென்
னுள்ளமே புகுந்துநின்றார்க் குறங்குநான் புடைகள்போந்து
கள்ளரோ புகுந்தீரென்னக் கலந்துதான் நோக்கிநக்கு
வெள்ளரோ மென்றுநின்றார் விளங்கிளம் பிறையனாரே. 734

.......................................................................................................

734. விளங்கு பிறை இளம் பிறை. இளம் பிறையனார் - பிறை சூடி, 'சந்திரசேகரர்' என்றதில் இச்சிறப்பில்லை. வெள்ளநீர்ச்சடையனார் (கங்காதரர்), உள்ளமே :- ஏகாரம் ஏழனுருபின் பொருட்டு. கள்ளர்×வெள்ளர் (கருளர் - கர்ளர் - கள்ளர். வெருளர் - வெர்ளர் - வெள்ளர்) 'ஆமையரவோடேன வெண்கோம்பக்குமாலை பூண்டாமோர்கள்ளர் வெள்ளர் போலவுள் வெங்நோய் செய்தார்' (1. 73. 10) 'கள்ளரை வெள்ளர் தொடர்ந்திட்டு' (திருமந்திரம். 2900) வினவுவார்போல வந்து உள்ளமே புகுந்து நின்றார்க்கு :- உள்ளம் புகுவதன் முன்னர், நான் உள்ளே புகலாமோ, என இசைவு பெற வினவுவார் போல ஒரு குறிப்புத் தோற்றிப் பின்னர், புகுந்தது எனக்குத் தெரியாதவாறு நான் உறங்கும்போது புகுந்து நின்றது கள்ளம். நான் விழித்துப் பார்த்து, அவர்க்குப் புடை பெயர்ந்து, கள்ளரோ புக்கீர் என்றேன். அவரும் என்னோடு கலந்து நோக்கிச் சிரித்து நாம் கள்ளரேம் அல்லேம். வெள்ளரேம் என்று நின்றார். உள்ளமே புகுந்து கள்ளராய் நின்றவர் (தலை மேற்பிறை போல) வெள்ளரோம் என்று சொல்லி நின்றார். கள்ளர் உள்ளமே புகுந்து நின்றார். அவ்வுள்ளம் நம் அப்பரது இல்லம். இல்லம் உடையாரான அப்பர், தாம் அறியாவாறு தம் உறக்கத்திற்புகுந்த கள்ளரான சிவனாரைப், புடைபெயர்ந்து விழித்துப்பார்த்து 'புகுந்தீர் கள்ளரோ' என்றார். புகுந்த கள்ளரும் இல்லம் உடையாரான அப்பரும் கலந்துகொண்டனர். கலந்து நோக்கி நக்கு வெள்ளரோம் (கள்ளர் அல்லோம்) என்று (சொல்லி) நின்றார். புகுந்து நின்ற கள்ளர் இல்லம் உடையாரால் அறியப்பட்டதும் புறப்பட் டோடற் பாலர், ஓடாது நின்றார். வெள்ளரோம் என்று சொல்லியும் நின்றார். அதுவே கலப்பன்றோ? நோக்குதலும் நகுதலும், தம் கள்ளத்தை இல்லம் உடையார் அறிந்து வினவியதன் விளைவு. 'உறங்கும் நான்' என்றதால் விழித்தலும், 'நின்றார்' என்றதால் ஓடா மையும் பெறப்பட்டன. 'கள்ளரோடில்லம் உடையார் கலந்,

பெருவிர லிறைதானூன்றப் பிறையெயி றிலங்கவங்காந்
தருவரை யனையதோளா னரக்கனன் றலறிவீழ்ந்தான்
இருவரு மொருவனாய வுருவமங் குடையவள்ளல்
திருவடி சுமந்துகொண்டு காண்கநான் றிரியுமாறே. 735

திருச்சிற்றம்பலம்

திடில் வெள்ள வெளியாம் என்று உந்தீபற, வீடும் எளிதாம் என்று உந்தீபற.' (திருவுந்தியார். 23) "கூப்பிடும் ஆற்றிலே வன்காடு இருகாதம் காப்பிடு கள்ளர் கலந்து நின்றார் உளர்; காப்பிடு கள்ளரை வேள்ளர் தொடர்ந்திட்டுக் கூப்பிட மீண்டதோர் கூறை கொண்டாரே.' (திருமந்திரம். 2900) 'உள்ளத்தின் கண்ணாய கள்வன்' (சிவஞானபோதம். 56) 'உள்ளங் கவர் கள்வன்'

735. திருக்காற் பெருவிரலைச் சிறிதேதான் ஊன்றினான் இருவரும் ஒருவன் ஆன உருவம் உடைய வள்ளல். அச் சிற்றூற்றம் பொறாது எயிற்றுப்பல் கழல வாய் திறந்து அலறி வீழுந்தான் மலை போலும் தோளான் ஆன இராவணன். நான் சுமந்துகொண்டு திரியும் ஆறு காண்க. எதைச்சுமந்து? பெருவிரல் மட்டுமோ? அதுபோல இரண்டுள்ள திருவடிகளை. திருவடிகளை மாத்திரமோ' அவற்றை அடியாகக்கொண்ட திருவுருவத்தை. அத்திருவுருவம் ஒன்றைத்தானோ? அவ்வுருவில் இருவர் உளர். அவ்வளவும் என் தலையில் சுமந்து நான் திரிகின்றேன். அன்று - திருக்கைலையை எடுத்த நாளில். அங்கு - அம் மலைமேல். 'கமல பாதத்து ஒருவிரல் நுதிக்கு நில்லாது ஒண்டிறல் அரக்கன் உக்கான். இருதிறமங்கைமாரோடு எம்பிரான் செம்பொன் ஆகம் திருவடிதரித்து நிற்கத் திண்ணம் நாம் உய்ந்தவாறே.' (696). வீழ்ந்தான் காண்க எனலுமாம். வள்ளலது திருவடி. வள்ளலதிருவடி. திரியுமாற்றைக்காண்க. 'அருவரையனைய தோளான் அரக்கன்' என்றதால் நான் அத்தகைய வலியேனல்லேன் என்பது தோன்றிற்று. நிற்றலும் ஆற்றாது அவன் வீழ்ந்தான்; நான் சுமந்து திரியுமாறு காண்க என்றார்.

## 76. பொது

### திருப்பதிக வரலாறு

திருப்புகலூரிலே திருத்தொண்டு செய்து பெருங்காதலுடன் வைகும் நாளில் மொழிந்த எணணிறந்த வண்டமிழ் மாலைகளுள் ஒன்று, பேரருளின் கடல் அளிக்கும் பெருமானைப்பாடிய இத் திருப்பதிகம். (பெரிய புராணம், 415).

தனித் திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

மருளவா மனத்தனாகி மயங்கினேன் மதியிலாதேன்
இருளவா வறுக்குமெந்தை யிணையடி நீழலென்னும்
அருளவாப் பெறுதலின்றி யஞ்சினா னலமந்தேற்குப்
பொருளவாத் தந்தவாறே போதுபோய்ப் புலர்ந்ததன்றே.736

---

736. நான் மருளும் அவாவும் உடைய மனத்தினேன் ஆகி, அம் மருளால் விளைவதும் அவ் வவாவை விளைப்பதுமான மயக்கத்தை உற்றேன். மருளும் மயக்கமும் அவாவும் முறையே ஒன்றற்கொன்று ஏதுவும் பயனுமாகும். மயக்கத்திற்கு ஏது மருள். அவாவிற்கு ஏது மயக்கம். மருளின் பயன் மயக்கம். அதன் பயன் அவா. அவா, மயக்கம், மருள் மூன்றும் மதியிலார் பால் நீங்காதிருப்பன. மதியுடையார்பால் ஒழிதற்பாலன. மருள்×தெருள்; இருள்×ஒளி. தெருள்-தெளிவு. அருள், அறிவு, உணர்வு என்பன ஒருபொருளன. சிவப்பிரகாசம் 70. 75 பார்க்க. மருள் இருள் மயக்கம் என்பன வெவ்வேறு பொருளன வாயிருந்தும், ஒரு பொருளனவாக ஆளப்படுகின்றன. மருளவாமனம் அருளவாவுயிர். மனத்திற்கு மருள் இயல்பு. சார்ந்ததன் வண்ண மாதற்கண் உயிர்க்கு எய்தும் பேராவியற்கையே அருள். அருளவாப்பேறு. மருளவா வியல்பு. எந்தையிணையடி நீழல் வேறு அருள் வேறு அன்று. 'அடிநீழல் என்னும் அருள்' என்னுந் தொடரை நன்குணர்வார்க்குத் திருவடி நிழல் என்பது விளங்காதிராது. அத்திருவடி இருளவாவை அறுக்கும். இருளவா-பாசப்பற்றும் பசுப்பற்றும். அறுக்கும் அடி :- 'பற்றை அறுப்போர்பற்று'; அறுக்கும் அடி. அறுக்கும் அருள். அருளை

மெய்ம்மையா முழவைச்செய்து விருப்பெனும் வித்தைவித்திப்
போய்ம்மையாங் களையைவாங்கிப் பொறையெனு நீரைப்
பாய்ச்சித்
தம்மையு நோக்கிக்கண்டு தகவெனும் வேலியிட்டுச்
செம்மையு ணிற்பராகிற் சிவகதி விளையுமன்றே. 737

அவாவுதல் அருளவா. அவாவைப்பெறுதல் - அவாப் பெறுதல். பெறுதல் இன்றி - பெருது. நான் அருளவாப் பெறுதல் இன்றி அஞ்சி அலமந்தேன். அலமந்தேற்கு = அலமந்தேனுக்கு. அலமந்த எற்கு என்றதன் மரூஉவுமாம். பொருள் அவா - பொருட்பற்று. தந்தவாறே - கொடுத்த வண்ணமே. போது - பொழுது ; மரூஉ. போய்ப் புலர்ந்தது - சென்று விடிந்தது. அஞ்சி அலமந்தேன். அலமந்தேனுக்குப் பொருளவாத் தந்த வாறே போழ்து போய்ப் புலர்ந்தது. ‘ இணையடி நீழலென்னும் அருள் ’ என்றதால் அடியும் அருளும் ஒன்றுமாறு புலனாகும்.

737. 1. மெய்மையாம் உழவைச் செய்தல். 2. விருப்பெனும் வித்தை வித்தல். 3 பொய்மையாங்களையை வாங்கல். 4. பொறையெனும் நீரைப் பாய்ச்சல். 5. தம்மையும் நோக்கிக் காண்டல் 6. தகவெனும் வேலியிடல். 7. செம்மையுள் நிற்றல். 8. சிவகதிவிளைதல். இவ்வெட்டும் விளங்கவுணர்தல் இங்கு நல்லோர்க்குற்ற கடனாகும். இது குறிப்புரை யாதலின், விளக்குதல் ஈண்டியலாது. 1. மெய்ம்மையாம் உழவு :- சரியை கிரியை யோகம் ஞானம்ஆன மெய்ந்நெறி நான்கும் சிவகதியாகும். “ சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடா ஆகலான் ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய்தவத்தான் ஞானம் நிகழும் என்றது ” (சிவஞானபோதம். சூ. 8. ஆதி. 1) ‘ சரியை கிரியாயோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச்சேர்வர்.’ (சித்தியார். சூ. 8 :- 11) ‘ ஞானநெறியடைந் தடைவர் சிவனை ’ (ஷை) ‘ ஞானமெய்ந்நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச் சொலாம் ’ (பெரிய புராணம்) ‘ மெய்ஞ்ஞெறி ஞானமாகும் ’ (7‹8) 2. விருப்பு எனும் வித்து :- இச்சைமீதூர்தல் (சிவஞான போதமாபாடியம். சூ. 11. அதி. 2. பக்கம். 549) என்னும் சிவபக்தி. ‘ அன்பு, காதல், பக்தி என்பன இச்சை

மீதூர்தற்பொருள ஆகலின் அது பரமுத்தியினும் உண்டு. அதனை உணராதார், பத்தியாவது சீவன்முத்தி நிலைக்கே செய்யப்படும் ஒரு சாதகம் போலும் என மயங்கிக்கொண்டு தமக்கு வேண்டியவாறே உரைப்பர். பரமுத்திநிலைக்கண் இச்சை நிகழாதவழிச் சிவபோகம் அநுபவம் ஆதல் செல்லா மையானும் சீவன் முத்தி நிலைக்கே கூறுவதோன்றாயின், 'செம் மலர் நோன்றாள்' என்னும் சூத்திரத்து ஒருங்கு வைத்து ஓதலே அமையும் ஆதலின், சூத்திரம் வேறு செய்யவேண்டாமையின், அஃது ஆசிரியர் கருத்து அன்மையானும் அது பொருந்தாமை அறிக.' (ஷை. சூ. 11. அதி. 2) 'கண்ணுக்குஏயும் உயிர் காட்டிக் கண்டிடுமாபோல ஈசன் உயிர்க்குக் காட்டிக் கண்டிடுவன். இத்தை ஆயும் அறிவுடையனாய் அன்பு செய்ய'லே விருப்பெனும் வித்தை வித்தலாகும். 'மறவாது கடைப் பிடித்துச் செய்யும் அன்பானே அம்முதல்வன் திருவடியாகிய சிவாநந்தாநுபூதியைத் தலைப்படும்' என்னும் பொருட்டாய, 'அயரா அன்பின் அரன்கழல் செலும்' இயல்பே விருப் பெனும் வித்தை வித்தலாகும். 3. பொய்ம்மையாங்களையை வாங்கல் :- மெய்மையுழவிற் பொய்மைக்களையன்றி மற்றில்லை. பொய்மை - அசத்தியம். அதனை வாங்குதலாவது சத்தியத்தைக் கடைப் பிடித்து ஒழுகுதல். வாய்மை; உண்மை; மெய்மை மூன்றுமே சத்தியம். அவற்றுள் ஒன்று இன்றேனும் அசத்திய மாகும். 4. பொறையெனும் நீரைப்பாய்த்தல் :- பொறை - பொறுமை. அஹிம்ஸை. பொருமை - ஹிம்ஸை. பொறுமையான நீரால், பொய்யான களையைப் பிடுங்கி, விருப்பான வித்து வளரச் செய்வதே மெய்யான ஞானவுழவு. 5. தம்மையும் நோக்கிக் காண்டல் :- 'தம்மையுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்' (சிவஞானபோதம்) தன்னறிவறியுந் 'தன்மை தன்னாலே தனையறிந்தால் தன்னையும் தானே காணும் தான் அதுவாகி நின்றே' (சிவப்பிரகாசம். 72). சிவரூபத்தால் ஆன்ம தரிசனம். சிவதரிசனத்தால் ஆன்மசுத்தி. 'நோக்குதல்' ஆன்ம தரிசனம், 'காண்டல்' 'சிவதரிசனம்' 'அரன் தன்னாலே தன்னை யுங்கண்டு தமைக்காணார்' (சிவஞானபோதம். சூ. 9. வெ. 1) 1 கொல்லாமை (தகவு எனும் வேலியிடல்) 2, ஐம்பொறி யடக்கல்(பொய்மையாங்களையை வாங்கல்) 3. பொறுமை(பொறை யெனும் நீரைப்பாய்ச்சல்) 4. இரக்கம் (செம்மையுள் நிற்றல்) 5. அறிவு (சிவகதிவிளைதல்) 6. மெய் (மெய்மையாம் உழவைச்

எம்பிரா னென்றதேகொண் டென்னுளே புகுந்துநின் றிங்
கெம்பிரா னாட்டவாடி யென்னுளே யுழிதர்வேனை
எம்பிரா னென்னைப்பின்னைத் தன்னுளே கரக்குமென்றால்
எம்பிரா னென்னினல்லா லென்செய்கே னேழையேனே. 738

செய்தல்) 7. தவம் (தம்மையும் நோக்கிக் காண்டல்) 8. அன்பு (விருப்பெனும் வித்தை வித்தல்) என்று பொருத்தி ஞான பூசைக்குரிய எண்மலர் (அட்டபுட்பங்) களை உணர்த்தியவாறும் உரைக்கப்படும். 6. தகவெனும் வேலியிடல் :- வேம்புதின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்கும் நிலையின் நீங்கிநிற்கும் சாதகங்களும் சிவ சாதனங்களும் சைவ பூடணங்களும் ஆகிய திருவைந்தெழுத்து, திருவடையாளமாலை (உருத்திராக்கம், கண்டிகை) திருநீறு, சிவவேடங்கள் எல்லாம் சிவகதிக்குரிய தகவு என்னும் வேலியாகும். அவ்வேலியைப் போற்றாதார் சிவ கதியை எய்தாமை மட்டுமோ? அவகதி (அதோகதி)யும் எய்துவர். 8. செம்மையுள் நிற்றல்:- 'திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக்கரையன்றனடியார்க்குமடியேன்' (7. 39. 4) 'சீலம் ஆர்ந்தவர் செம்மையுள் நிற்பவர்' (1914) 'செம்மை யாய சிவகதி சேரலாம்' (1505) 'சிந்தையுட் சிவமாய் நின்ற செம்மை' (1553) 'நிவஞ்சகத்தகன்ற செம்மையீசன்' (737) சிவமுத்தியே செம்மையாகும். அதில் நிற்றலாவது ஓங்குணர்வின் உள்ளடங்கி உள்ளத்துள் இன்பு ஒடுங்கத் தூங்குதல். 8. சிவகதி .- 'செம்மையாய சிவகதி' 'பாறினாய் பாவி நெஞ்சே பன்றிபோல் அளற்றிற்பட்டுத் தேறி நீ நினைதியாயிற் சிவகதி திண்ணம் ஆகும்' (552). உழவுக்குரிய வேலியும் பார்வையும் நீரும் களைக் கட்டுதலும், வித்தும் ஞான வுழவுக்குரிய நெறியில் முறையே தகவும் சிவக்காட்சியும் பொறையும், பொய்யொழிவும், பத்தியாம் மெய்ந்நெறியும் கூறப் பட்டன. அதன் விளைவு போல் இவ்வுழவின் விளைவு சிவகதி. சிவகதி :- சிவாநுபவம் சுவாநுபூதிகமாதல்.

738. 'எம்பிரான்' என்றதையே கருத்துட்கொண்டு, என் உள்ளே புகுந்து நின்று, எம்பிரான் என்னை இவ்வுலகில் உடம்பில் ஆட்டுகின்றான். யான் ஆடுகின்றேன். என்னுள்ளே உழிதருகின்றேன். என்னுள்ளே புகுந்து நிற்கும் எம்பிரான்

காயமே கோயிலாகக் கடிமன மடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறையநீ ரமையவாட்டிப்
பூசனை யீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே. 739

பின்னை என்னைத்தன்னுள்ளே கரத்தல் செய்வான். செய்வான் எனில், எம்பிரான் என்று சொல்லின் அல்லால் ஏழையேன் என்செய்வேன்? எம்பிரான் என்றேன்; என்ற அவ்வொன்றனையே உளங்கொண்டு என் உள்ளே புக்குநின்றான். இங்கு என்னை ஆட்டுகின்றான், யான் ஆடுகின்றேன். ஆடி என்னுளே ஆட்டு வானைத்தேடி உழிதருகின்றேன். பின்னை என்னைத் தன்னுளே கரக்கும் என்றால், ஏழையேன் எம்பிரான் என்னின் அல்லால் மற்று என் செய்கேன்? கரத்தல். முன்னீரடியிலே சீவபோத நிலையும் பின்னீரடியிலே சிவபோத நிலையும் உணர்த்தப்பட்டன. முன்னது உள்ளே தேடிய நிலை. பின்னது தேடிக்கண்டு கொண்ட நிலை. உழிதரல் - நான் ஆட என்னை ஆட்டுவான் யாவன் என்று உள்ளே தேடி யலைதல். பின்னை - தன்னை இன்னான் என்று கண்டுகொண்ட பின்னர். தன்னுளேகரத்தல் - 'நான் என ஒன்று இல் என்று தானே எனும் அவரைத் தன் அடிவைத்து இல் என்று தானும் இறை' (சிவஞான போதம். சூ. 9. அதி. 1. வெ. 1) நிலை. எம்பிரானெனல் - அவனருளால் அல்லது ஒன்றையும் செய்யாது எல்லாம் அவன் செயல் என்று இறைபணி வழுவாது நிற்றல். தன்னில் தன்னை......... அரியனே' (5. 97. 29) 'என்னை ஏதும் அறிந்திலன் எம்பிரான்.........அறிந்தேனே' (5. 91. 8) என்பவற்றை ஈண்டுக்கருதுக.

739. காயமே கோயில் ஆதல்:- 'படமாடக் கோயில் பகவற்கொன்றீயின் நடமாடக் கோயில் நம்பற்கங்காகா.' 'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம் வள்ளற் பிரானுக்கு வாய்கோபுர வாசல் தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம் கள்ளப்புலனைந்தும் காளாமணி விளக்கே.' (திருமந்திரம்) புன்புலால் யாக்கை......பொன்னெடுங் கோயில்' (திருவாசகம்) 'ஓங்குடலம் திருக்கோயில் உள்ளிடம் உள்ளிடம்' (ஞானபூசாவிதி) கடிமனம் அடிமையாதல்:- சங்கற்ப விகற்பங் களைக் கடிந்த மனம் திருவடியை மறவாது நினைக்குந் தன்மையை

அடைதல். வாய்மையே தூய்மையாதல் :- 'தூஉய்மை என்ப தவா இன்மை மற்றது வாஅய்மை வேண்டவரும்' (திருக்குறள் 364). 'ஒருவர்க்கு வீடு என்று சொல்லப்படுவது அவா இல்லாமை. அவ்வவா இல்லாமைதான் மெய்மையை வேண்டத் தானே உண்டாம்.' 'வீடாவது உயிர் அவிச்சை முதலிய மாசு நீங்குதல் (இது பாச வீடாகிய பாதிமுத்தியே சிவப் பேருகிய மற்றைப் பாதிமுத்தியும் சேர்ந்தாற்ருன் வீடு முற்றுப் பெறும்) ஆகலின், அதனைத் தூய்மை என்றும் காரணத்தைக் காரியமாக உபசரித்துத். தூய்மை என்பது அவாவின்மை என்றும் மெய்மையுடைய பரத்தை ஆகுபெயரான் மெய்மை என்றும் கூறினுர். வேண்டுதல் - இடைவிடாது பாவித்தல். அவா அறுத்தல் வீட்டிற்குப் பரம்பரையான் அன்றி நேரே ஏது. ! (பரிமேலழகர் உரை). மனமணியிலிங்கமாதல் :- 'மனேன்மனி' என்பது மனமனி என்று குறிக்கப்பட்டிருந்து, அதை மனமணி எனப் பிழைபட எழுதியிருக்கலாம் போலும். என்னே? முன்னர் மனத்தை அடிமையாகக் குறித்ததால், மீண்டும் அம்மனத்தையே இலிங்கமாகக் குறித்தல் செய்யார். சிவ பிரானுக்கு மனம் இலிங்கமாகாது. மணிலிங்கம், அணிலிங்கம், மணியிலிங்கம் என்று எவ்வாறு கொளினும் மனத்தோடு பொருந்தாது. சிவனுக்குச் சத்திமூர்த்தியாதலின் மனேன்மனியை மனமனி என்று குறித்தருளினுர்போலும். சத்திமூர்த்தியாதலைச் சிவஞான சித்தியாரில் 'நாட்டுமிதயந்தானும் (300) எனத் தொடங்கும் திருவிருத்தத்தினுரையால் உணர்க. அதிற் சத்தி சிவலிங்க மூர்த்தியாதல் உணர்த்தப்பட்டது. நே+அம்=நேயம் நே - அன்பு. நெய்யும் பாலும் அகவழிபாட்டில் அன்பேயாகும். 'விளைத்த அன்புமிழ்வார்போல விமலனுர் முடிமேல் விட்டார்' எதனை? 'வாயின் மஞ்சன நீர் தன்னை' எவர்? 'சிலைமிசைப் பொலிந்த செங்கைத் திண்ணனுர்' பெரிய புராணம். 123-4) 'அன்பாம் மஞ்சன நீர்' (திருக்களிறு. 44) 'அன்பு அன்றித் தீர்த்தம் தியானம் சிவார்ச்சனைகள் செய்வதெல்லாம் சார்த்தும் பழம் அன்றேதான்' (ஷை 55) என்றதால், 'நேயமே' என்று பிரிநிலையும் தேற்றமும் உணர்த்தும் ஓகாரத்தால் உணர்த் திஞர். நிறைய ஆட்டி என்றதைச் சிவபூசை புரிவார் எல்லாரும் சிந்தித்தல்வேண்டும், போற்று அவி காட்டினேம், அவி - நிவேதனப் பொருள், இருக்கு ஆட்டினேம் என்ருருமுளர். போற்ருகிய அவி என்று உருவகமாக்கலும் பொருந்தும்.

வஞ்சகப் புலையனேனை வழியறத் தொண்டிற்பூட்டி
அஞ்சலென் றாண்டுகொண்டா யதுவுநின் பெருமையன்றே
நெஞ்சகங் கனியமாட்டே னின்னையுள் வைக்கமாட்டேன்
நஞ்சிடங் கொண்டகண்டா வென்னென நன்மைதானே. 740

நாயினுங் கடைப்பட்டேனை நன்னெறி காட்டியாண்டாய்
ஆயிர மரவமார்த்த வமுதனே யமுதமொத்து
நீயுமென் னெஞ்சினுள்ளே நிலாவினாய் நிலாவிநிற்க
நோயவை சாருமாகி னோக்கிநீ யருள்செய்வாயே. 741

740. நஞ்சிடம் கொண்ட கண்டா, வஞ்சகப் புலையனேனை வழி அறத் தொண்டிற் பூட்டி, அஞ்சல் என்று (சொல்லி அபயம் அருளி) ஆண்டுகொண்டாய், அதுவும் நின்பெருமை அன்றே! நெஞ்சகம் கனியவும் வல்லேனல்லேன். நின்னை உள்(ளத்தில்) வைக்கவும் வல்லேன் அல்லேன். என்னுடைய நன்மைதான் (உனக்கு) என்ன உள்ளன? வஞ்சகம் - வலிய வுள்ளம். வலிது + அகம் = வல் + து = என்பதன்மருஉவே வஞ்சு. அகம் - உள்ளம். வன்னெஞ்சு. அதனையுடைய புலையனேன். வழி - வேத சிவாகம நெறி; சரியாதி மார்க்கம். அற - இல்லையாக. பூட்டி - பூணுமாறு செய்து. அஞ்சல் :- 'அபயம்' நெஞ்சகம் - உள்ளிடம். கனிய - பழுக்க. உள் - உள்ளுந்தொழிற் கருவியாகிய மனத்தில். என் என நன்மைதான் - என்னையோ என நன்மைதான்? என நன்மை ஆறன்றுருகை. என் - 'எவன்' (வினா வினைக்குறிப்பு) என்பதன் மருஉ. என்றால் உனக்கு நன்மைதான் ஒன்றும் இன்றியொழிந்தும் என்னைத் தொண்டிற் பூட்டி அஞ்சல் என்று ஆண்டுகொண்டாய். நெஞ்சகம் கனிதல் நின்னை உள்வைத்தல் ஆகிய இரண்டும் செய்யமாட்டாத என்றால் யாது நன்மை உனக்கு உண்டு? ஒன்றும் இல்லையே!

441. நாயினும் கடைப்பட்ட என்னை நன்னெறியைக் காட்டி ஆளாக்கொண்டருளினை. ஆயிரம் பாம்பினை ஆர்த்த அமுத மயமானவனே. என் நெஞ்சினுள்ளே நீயும் அமுதம் ஒத்து நிலாவினை. (அங்கனம்) நீ நிலாவி நிற்கவும் என்னை நோயவை சாரும் ஆயின், அவை சாராதவாறு கடைக்கண் ணோக்கம் வைத்துக் காத்தருள் செய்வாய்.' 'நிலையிலா நெஞ்சந் தன்னுள் நிலாவாத புலாலுடம்பே புகுந்து நின்ற கற்பகமே'.

விள்ளத்தா னென்றுமாட்டேன் விருப்பெனும் வேட்கையாலே
வள்ளத்தேன் போலநுன்னை வாய்மடுத் துண்டிடாமே
உள்ளத்தே நிற்றியேனு முயிர்ப்புளே வருதியேனும்
கள்ளத்தே நிற்றியம்மா வெங்ஙனங் காணுமாறே. 742

ஆசைவன் பாசமெய்தி யங்குற்றே னிங்குற்றேனாய்
ஊசலாட் டுண்டுவாளா வுழந்துநா னுழிதராமே
தேசனே தேசமூர்த்தீ திருமறைக் காடுமேய
ஈசனே யுன்றன்பாத மேத்துமா றருளேம்மானே. 743

742. வாய் விட்டுச் சொல்லத்தான் சிறிதும் வல்லேன் அல்லேன். காணும் ஆறு எவ்வாறு? விருப்பு என்னும் வேட்கை என்றதால், இரண்டும் வேறல்லாமை பெறப்பட்டது. விருப்பால் வாய் மடுத்துண்டிடாமே கள்ளத்தே நிற்றி; உள்ளத்தே நிற்றி; உயிர்ப்புள்ளே வருதி. அவ்வாறு நின்றும் வந்தும் யான் காணும் ஆறு வெள்ளத்தே நில்லாமல், கள்ளத்தே நிற்கின்றாய். அங்கனம் கள்ளத்தே நின்றால் யான் எங்கனம் காணும் ஆறு? வள்ளம் - கிண்ணம். வள்ளத்தேன்போல வாய்மடுத் துண்டிடாமல் :- மழக்கையிலங்கு பொற்கிண்ணம் என்று அலால் அரியை என்று உனைக்கருதுகின்றிலேன்' (திருவாசகம்) என்புழிப் பொற்கிண்ணத்தின் பெறலரும் பெற்றியும் விலையும் மழவறியாது என்பதும் அஃது அதன் கையிற் பொருந்தியவாறு இறைவன், மணிவாசகர் உணர்விற் பொருந்தி நின்றதும் அதனால், அரிதின் முயன்று பெறாத எளிமையும் புலனாகும். நம் அப்பர்க்கு, தம் உள்ளத்தே நின்றும் உயிர்ப்பாய்ப் புறம் போந்து புக்கு வந்தும், வள்ளத்தேன் போல வாய்மடுத் துண்ணும் வண்ணம் எளிதெய்த வெள்ளத்தே நில்லாது, அரிதின் எய்தவும் இயலாதவாறு கள்ளத்தே நிற்கின்றான் இறைவன். 'என்னுளே உயிர்ப்பாய்ப் புறம் போந்து புக்கு என்னுளே நிற்கும் இன்னம்பர் ஈசனே.' 'கள்ளரோ புகுந்தீர் என்னக் கலந்து தான் நோக்கி நக்குவெள்ளரோம் என்று நின்றார் விளங்கிளம் பிறையனாரே' என்னுந் திருவாக்குக்களிலும், உள்ளத்து நிற்றல், உயிர்ப்புள் வருதல், கள்ளத்தே நிற்றல், கூறப்பட்டமை உணர்க.

743. ஆசையாகிய வலிய பாசம். 'ஆசாபாசம்' எனினும் வழக்குண்மை ஓர்க. ஆசை - பற்று. பாசம் - கட்டு.

நிறைவிலே னேசமில்லே னினைவிலேன் வினையின்பாச
மறைவிலே புறப்பட்டேறும் வகையெனக் கருளேனெம்மான்
சிறையிலேன் செய்வதென்னே திருவடி பரவியேத்தக்
குறைவிலேன் குற்றந்தீராய் கொன்றைசேர் சடையினானே.

'ஆசையெனும் பாசத்தால் ஆடவராம் சிங்கத்தை வீசு மனையாந்தறியில் வீக்கியே - நேசமிகும், மாயா மனைவியொடு மக்கள் எனும் வெறிய நாயாற் கடிப்பித்தல் நாடு.' (நீதி வெண்பா) அங்கு - அவ்வுலகம். இங்கு - இவ்வுலகம். உயிர்கள் செல்லத்தக்கவிண், நரகு முதலியவற்றைச் சேய்மையிடத்துச் சுட்டாலும் அவை தாம் இருக்கும் மண்ணுலகை அண்மை யிடத்துச் சுட்டாலும் குறித்தார். எங்கும் எவரும் உறுதல் ஊசலாட்டுண்ணலாயிற்று. மண்விண் நரகுறலாற் பயனொன்று மில்லை யென்றுணர்ந்தாரே வாளாவுழத்தலை உணர்ந்துரைப்பர். உழிதரல் - திரிதல். அலைதல். உழதராமே - திரியாதே, அலையாதே. தேசனே - தேயுருபியே. தேசமூர்த்தி :- 'உலகு அவனுரு' (சித்தியார்). திருமறைக்காடு மேய ஈசனே எம்மானே, உன் திருவடியைப் புகழும் வண்ணம் அருள். ஊசலாட்டு :- 'உமையாளொருபாகனை அருத்தியாற் சென்று கண்டிட வேண்டு மென்று ஒருத்தியார் உளம் ஊசலதாடுமே' (5, 40, 5) பாசங் கழன்றாற் பசுவுக்கிடம் பதியாம் ஊசல் வடம் கழன்ற தோவ் வாதோ நேசித்த பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் பாட்டுமக்கோ மற்றைச் சமயமெங்குமாம்' (ஒழிவிலொடுக்கம்).

744. நேசம் - அன்பு. நினைவு - (தியானம்). இடைவிடாது சேர்தல். வினையின் பாசம் - (கருமபந்தம்). இருவினைத்தளை. மறைவு - சூழல். வினை மறைவின் அகப்பட்டு இழியும், யான் அதனினின்றும் புறப்பட்டு ஏறும் வகையை அருள்வாய். என் எம்மானே! சிறையில்லேன் - சிறையாகிய (உடல்) இல்லத்தில் இருக்கின்ற யான். செய்வது யாது? திருவடிகளை வாழ்த்திப்புகழ ஒன்றும் குறைபாடில்லேன். கொன்றைச் செஞ் சடையினானே! அடியேன் குற்றம் போக்கியருள்வாய்,

நடுவிலாக் காலன்வந்து நணுகும்போ தறியவொண்ணு
அடுவன வஞ்சுபூத மவைதமக் காற்றலாகேன்
படுவன பலவுங்குற்றம் பாங்கிலா மனிதர்வாழ்க்கை
கெடுவதிப் பிறவிசீசீ கிளரொளிச் சடையினீரே. 745

திருச்சிற்றம்பலம்

745. கிளர் சடை, ஒளிச்சடை. சடையினீரே. நடுவு இல்லாக்காலன் - உள்ளத்தாமரையில் இல்லாத காலன். காலனை எவ்வுயிரும் எண்ணுமையின் இங்கனம் கூறினர். நணுகுதல் - குறுகுதல். அடியேன் ஆண்டவனுகிய - நின்னை அறிய அஞ்சு பூதங்களும் ஒன்ரு. ஒன்ருமை - ஒண்ணுமை. மருஉ. ஒன்ரு ஒன்னுர் என்றலும் உண்டு. ஒன்று(ளே) ஒண்ணு(ளே) என்றலும் உண்டு. கன்று கண்ணு, பன்றி - பண்ணி. தின்று - திண்ணு. முதலிய மருஉக்களிலும் அத்திரிபுண்மை உணர்க. அடுதல் பூதகாரியம். அவை - அப்பூதங்கள். ஆற்றல் - பொறுத்தல். எதிர்ப்புத்தள்ளல். பாங்கிலாமனிதர் வாழ்வு குற்றம் பலவும் படுவன. இப்பிறவி கெடுவது.

கல்லாதார் மனத்தணுகாக் கடவு டன்னைக்
கற்ருர்க ளுற்ருேருங் காத லானைப்
பொல்லாத நெறியுகந்தார் புரங்கண் மூன்றும்
பொன்றிவிழ வன்றுபொரு சரந்தொட்டானை
நில்லாத நிணக்குரம்பைப் பிணக்க நீங்க
நிறைதவத்தை யடியேற்கு நிறைவித் தென்றும்
செல்லாத செந்நெறிக்கே செல்விப்பானைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேனுனே.

கூற்ரு யினவா றுவிலக் ககிலீர்
கொடுமை பலசெய் தனநா னறியேன்
ஏற்ரு யடிக்கே யிரவும் பகலும்
பிரியா துவணங் குவனெப் பொழுதும்
தோற்ரு தென்வயிற் றினகம் படியே
குடரோ டுதுடக் கிமுடக் கியிட
ஆற்றே னடியே னதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே.

# 77. பொது

## திருப்பதிக வரலாறு

திருப்புகலூரில் புனிதர் மலர்த்தாள் வணங்கி, நாடோறும் திருமுன்றிலில் திருத்தொண்டு செய்து பெருங்காதலுடன் எழுந்தருளியிருந்த காலத்திலே எண்ணிறந்த வண்டமிழ் மாலைகள் மொழிந்தார் மொழிவேந்தர். நின்ற திருத் தாண்டகம், நீடுதனித தாண்டகம், க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகம், பல்வேறு திருநேரிசைகள், ஆருயிர்த் திருவிருத்தம், தசபுராணத்தடைவு, பாவநாசப்பதிகம், அறைகூவுந் திருப்பதிகம் முதலிய யாவும் பிறவும் அங்குப்பாடியவை. அவற்றுள் ஒன்று இத்திருப்பதிகம் (புராணம். 415)

தனித் திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

கடும்பக னட்டமாடிக் கையிலோர் கபாலமேந்தி
இடும்பலிக் கில்லந்தோறு முழிதரு மிறைவனீரே
நெடும்பொறை மலையர்பாவை நேரிழை நெறிமென்கூந்தற்
கொடுங்குழை புகுந்தவன்றுங் கோவண மரையதேயோ.746

746. 'கடும்பகல் நட்டம்' 'நள்ளிருளில் நட்டம்' எனும் இரண்டும் புரிந்தருள்பிரான் நம் முழுமுதல்வன். 'மானுர்......பகல் நட்டம் ஊனுர் தருமுயிரான்' (1. 13. 7) என்றும் எங்கும் எவ்வுயிருள்ளும் எப்பொருளிலும் அத்திருக் கூத்து நிகழ்தலின், கடும்பகலும் நள்ளிரவு மட்டும் சிறப்பாக எடுத்துரைத்தல் என்னை யெனின், இறைவன் ஆட்டுவிப்பவன் உயிர்கள் ஆடுவன. ஆட்டுவிப்பானுக்கு ஆட்டம் ஒழிவிலது. ஆடுவனவற்றிற்கும் அஃதே. ஆடுதல் உயிர்க்கு நல்வாழ்வு. ஆட்டுதல் பேரிரக்கத்தின் விளைவு. அவனது பேரிரக்கம் கடும் பகலிலும் உளது. நள்ளிரவிலும் உளது. எத்தொழில் புரிவாரும் கடும் பகலிலும் நள்ளிரவிலும் ஒய்வுறுவர். கடவுளோ கடும் பகலிலும் ஆடுகின்றார். துஞ்சிருளிலும் ஆடுகின்றார். ஆட்டத் தின் பயனோ அவர்க்கில்லை, எல்லாப் பயனும் உயிர்கட்கே யாம். ஆதலின், ஒய்வுறும்போதிலும் ஓயாது கூத்தாடும்

கோவண முடுத்தவாறுங் கோளர வசைத்தவாறும்
தீவணச் சாம்பர்பூசித் திருவுரு விருந்தவாறும்
பூவணக் கிழவனுரைப் புலியுரி யரையனுரை
ஏவணச் சிலையினுரை யாவரே யெழுதுவாரே. 747

சிறப்பால் அவ்விரண்டும் விதந்தோதப்பட்டன. இடும்பலிக்கு இல்லந்தோறும் உழிதருதல் :- 'இல்லங்கள் தோறும் எழுந் தருளியபரனே.' (திருவாசகம்) நெடும் பொறைமலையர் - இமாசலராசனுர். நெடுமலை. பொறைமலை. நெடும் பொறையு மாம். அறை, பொறை, குன்று, மலை, பிறங்கல், விலங்கல் முதலியவை தம்முள் வேறுபாடுடையன. அவற்றின் காரணத்தை உணரின் அவ்வேறுபாடு விளங்கும். மலையர் பாவை - இமாசல குமாரி. நேரிழை - நேரிய இழையினுள், இழை - பணி, பூண். பாவை. இழை, கூந்தல், குழை எல்லாம் உமாதேவியைக் குறித்தவை. பாவையும், இழையும், கூந்தலும் குழையும் என்னற்க. பாவைபோல்வாளும் நேரிழையாளும், நெறிமென் கூந்தலாளும், கொடுங்குழையாளும் ஆகிய ஒருத்தி (தனி முதல்வி) புகுந்த அன்றும் அரையிற் கோவணம் இருந்ததோ? போகியான பின்னரும் யோகியின் கோலம் பொருந்துமோ?

747. அரையிற்கோவணம் உடுத்த சிவயோகரூபத் தையும், கச்சாகப் பாம்பணிந்த வடிவத்தையும், பவளம் போலும் செம்மேனியில் வெண்ணீறு சண்ணித்த திருவுரு வத்தையும், செந்தாமரைக் காடனைய அழகிய வண்ணத்தையும், புலித்தோலைஅரையில்உடைய தோற்றத்தையும், மேருவில் லேந்தியமெய்யையும் எழுதிக்காட்டவல்லார் யாவர்? கோவண வுடையும் புனிதநீறும் பிறவும் உடைய வேடம்பூண்டு வந்த முதல் வனை நாவலூரர் தொடரலுற்றுர். மாலயன்தொடர அரிய 'ஏவணச் சிலையினுரை யார் தொடர்ந்து எட்டவல்லார்?' (பெரிய. தடுத் தாட். 44) தொடர்ந்தெட்ட வல்லமை யில்லாவிடினும், பார்த்த வடிவைப் பார்த்தவண்ணம் எழுதுதலும் அரிதோ? 'இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்று எழுதிக்காட்டொணுதே!' 'அப்படியும் 'அந்நிறமும் அவ் வண்ணமும் அவனருளே கண்ணுகக்காணின்' அகலாது காணலாம். கண்டவாறு காட்டலாம். எழுதியும் காட்டலாம்.

விளக்கினார் பெற்றவின்ப மெழுக்கினாற் பதிற்றியாகும்
துளக்கினன் மலர்தொடுத்தாற் றூயவிண் ணேறலாகும்
விளக்கிட்டார் பேறுசொல்லின் மெய்ஞ்ஞெறி ஞானமாகும்
அளப்பில கீதஞ்சொன்னார்க் கடிகடா மருளுமாறே. 748

---

அக்கண்ணில்லாமையால், ஏவணச்சிலையினாரை யாவரே எழுத வல்லார்! கண்டால்தானே எழுதலாம்? ஏ - அம்பு. சிலை - வில் மேருவில். 'யாவரே எழுதுவார்' என்றது எழுதவல்லார் ஒருவரும் இலர் என்றதாம்.

748. விளக்கினார் - திருக்கோயிலைத் தூய்மையுறத் திருவலகினால், துகள் முதலியவற்றை ஒரு சேரக் கூட்டியவர். அவர் பெற்ற இன்பத்தி னளவிற் பத்து மடங்கு மெழுகினார்க்கு வாய்க்கும். மெழுகு:- முதனிலை, மெழுக்கு தொழிற்பெயர். மெழுக்கினால் - மெழுகுதலால். இதனை நோக்கி 'விளக்கினால்' என்பாருமுளர். அது 'விளக்கினாற் பெற்ற வின்பம்' என்று பாடம் இருப்பின் அமையும். அவ்வாறின்மையால் அப் பொருள் கூறல் பொருந்தாது. பதிற்றி - பத்து மடங்கு. துளக்கு - ஒளி. துளக்கின் நல்மலர் - ஒளியுடைய இனிய நல்ல பூக்கள். துளக்கினன் என்று ஆண்பாற்பொருள் கோடல் பொருந்தாமை, 'விளக்கினார்' 'இட்டார்', 'சொன்னார்' என்பவற்றை நோக்கியுணர்க. தொடுத்தால், அத் தொடையின் பயனாகத் தூயவிண் (சிவலோகம்) ஏறல் (ஊர்த்துவகதியிற் சென்று அடைதல்) ஆகும். 'தூயவிண்' என்றதால் ஏனையவிண் விலக்கப்பட்டன. விளக்கு - திருவிளக்குக்கள். திருவிளக்கீடு. இட்டவர் எய்தும் பேறு. பெறுவது - பேறு (இலாபம்). சொல்லின் - ஆய்ந்துரைத்தால். சொல்இல்லாத மெய்ஞ்ஞெறி-உண்மைவழி, பொய்வழிகளை நீக்கிற்று. சரியை, கிரியை, யோகம் ஆகிய சைவத்தவங்களின் நெறியே மெய்நெறி. அவையே 'இறப்பில் தவம்.' ஏனைய இறப்புள் தவம். அத்தவநெறி பொய்நெறி, இறப்பில் தவத்தின் எய்துவதே ஞானம். 'மேற்சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கோடாவாகலான் ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தான் ஞானம் நிகழும் என்றது' (சிவஞானபோதம் சூ. 8. அதி. 1.) இதனால், தவநெறியும், தவங்களும், நன்னெறியும், அது ஞானமாவதும், ஞானமாகிய நன்னெறியின்

சந்திரற் சடையில்வைத்த சங்கரன் சாமவேதி
அந்தரத் தமரர்பெம்மா னானல்வெள் ளூர்தியான்றன்
மந்திர நமச்சிவாய வாகநீ றணியப்பெற்றால்
வெந்தறும் வினையுநோயும் வெவ்வழல் விறகிட்டன்றே. 749

வேருவன வீடு பயவாமையும் குறிக்கப்பட்டன. 'தலைவா உனை வேண்டிக்கொள்வேன் தவநெறியே' (7 - 13 - 1 - 9) 'ஞான மெய்ந்நெறி தான் யார்க்கும் நமச்சிவாயச் சொலாம்' (பெரிய. திருஞான. 1248) நன்னெறிக்குய்ப்பது' (சம்பந்தர்). கீதம் - பாட்டு; தோத்திரம். 'தொடுக்குங் கடவுட் பழம்பாடல்' சொன்னார்க்கு அடிகள்தாம் அருளும் ஆறு அளப்பு இல. அருளும் வகை அளவிலாதன. 'ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணமும்......அளவில்லை.' (3. 54. 4). இத்திருப்பாடல், திருக்கோயிலிலே திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், திருப் பள்ளித்தாமம் தொடுத்தல், திருவிளக்கிடுதல், சிவகீதம்பாடுதல் என்பன செய்தல் வேண்டும் என்பதும், அதனதன் பயன் ஒன்றிரண்டு பல்கும் என்பதும் உணர்த்திற்று. இதனைச் சரியா மார்க்கத்தது என்று எள்ளாது மேற்கொண்டு பயனெய்தற்பாலர் ஏனையமார்க்கத்தில் ஒழுகும் பலரும். ஈண்டுத் திலகவதியார், சங்கிலி நாய்ச்சியார், சுந்தரமூர்த்தி நாயனார், நம்பி நந்தியடிகள் நாயனார் புராணங்களை உணர்க.

749. சந்திரற் சடையில் வைத்த சங்கரன் - சந்திரனைச் சடையில் வைத்து, அவனுக்கு என்றும் வளராத தேயாத வாழ்வுண்டாக்கி யின்பஞ் செய்தவன். சங்கரன் - இன்பஞ்செய் பவன். சாமவேதி - சாமவேதப் பாடலன். அந்தரம் - விண். அமரர் பெம்மான் - தேவாதி தேவர்க்கும் பெருமகன். 'தலையாய தேவாதி தேவர்க்கு என்றும் சேயான்', ஆன்நல்வெள் ஊர்தியான்; நல்வெள் ஆன் ஊர்தியான். 'நரை வெள்ளேறு ஒன்றுடையான்'. மந்திரம் நமச்சிவாய ஆக. நமச்சிவாய என்றும் திருவைந் தெழுத்து மந்திரம் ஆகத் திருநீறு அணியப் பெற்றால் இரு வினையும் அவ்வினையால் வரும் இன்பத் துன்பங்களும் வெந் தீயிலே விறகிட்டால் வெந்தொழிதல்போல வெந்தொழியும். அணிய - அழகுறப்பூச. மாயாவாதி முதலோர் பூச்சு அணித லாகாது. சிவாகம விதிப்படி பூசுதலே அணிதலாகும். இடத் தோள் முதலாக வலத்தோள் வரை வலக்கையாலோரே

புள்ளுவ ரைவர்கள்வர் புனத்திடைப் புகுந்துநின்று
துள்ளுவர் சூறைகொள்வர் தூநெறி விளையவொட்டார்
முள்ளுடை யவர்கடம்மை முக்கணுன் பாதநீழல்
உள்ளிடை மறைந்துநின்றங் குணர்வினு லெய்யலாமே. 750

யீர்ப்பாகப் பூசும் வன்மையினர் இன்றும் உளர். வெவ்வழல் விறகிட்டு :- உவமை. இட்டு - இட்டாற்போல. அன்றே - அப்பொழுதே. 'சிவாயநம' என்று நீறணிந்த அப்பொழுதே தருவாய் சிவகதி என்று வேண்டிப் பெறலாம். காலம் இடையீடுபடாமை, அன்றே வேந்தறும் வினையும் நோயும் என்றவாற்ருல் உணர்க. 'விண்ணுற வடுக்கிய விறகின் வெவ்வழல் உண்ணிய புகில் அவை ஒன்றும் இல்லையாம் பண்ணியவுலகினிற் பயின்ற பாவத்தை நண்ணிநின்று அறுப்பது நமச்சிவாயவே.' (106) என்பது ஈண்டுக் கருதற்பாலது. பண்ணியவுலகினில் - மாயா காரியவுலகில். பயின்ற பாவம் - வினையும் நோயும். இரண்டிலும் திருவஞ்செழுத்து வேருகாமையும் ஏனையவும் ஒன்றுபடுதலுணர்க. 'சந்திரற் சடையில்' என்றது இரண்டனுருபு உயர்திணையில் தொகுதல், பொருள் வேறுபாட்டைத் தருதலின், அதனைத் தவிர்க்க. சந்திரன் சடையில் வைத்த எனின், வைத்தவன் சந்திரனுவான். சடையில் வைக்கப்பட்டவன் சந்திரன் எனவேண்டி, னவ்வோற்றை றவ்வோற்ருக்குவது பாவலர் மரபாஞ் செய்யுள் வழக்கு நோக்கிய தோரிலக்கணவிதி. இதனை யுணரமாட்டாதார் இக்காலத்தில், இத்தகைய தொடர்களைப் பிரித்தெழுதிப் பொருள் வேறுபாட்டிற்கு இடமுண்டாக்குகின்றனர். வேதி :- 'வேதி தொடர.' (40) ஊர்தி - ஊருங் காரணத்தின் எய்திய பெயர். அமரர் - விருப்பர் ; இறப்பிலார்.

750. புள்ளுவர் ஐவர் கள்வர் :- வேடரும் கள்வரும் ஆகிய ஐவர். 'ஐம்புலவேடர்' (சிவஞான போதம். சிவஞான சித்தியார்). புனத்திடை என்பது ஈண்டுப் புந்தியில் என்க. அவரைவரும் புந்தியிற் புகுந்து நின்று துள்ளுவர் ; சூறை கோள்வர் ; தூநெறி விளையவொட்டார். சூறை - ஆறலைத்தல், கொள்ளை. 'மானிலத்துயிர் சூறையிட்டருந்துற' (உபதேச காண்டம். அயமுகி. 12) 'ஈறில் துன்பம் எனுங் கோடுங்

தொண்டனேன்பிறந்துவாளாத்தோல்வினைக்குழியில்வீழ்ந்து
பிண்டமே சுமந்துநாளும் பெரியதோ ரவாவிற் பட்டேன்
அண்டனே யமரர்கோவே யறிவனே யஞ்சலென்னாய்
தெண்டிரைக் கங்கைசூடுந் திகழ்தரு சடையினானே. 751

கானகம் சூறை யாடுஞ்சுடரேன' (வேதாரணிய புராணம். தலவிசேட. 7.) தூநெறி - திருவருள்வழி. முள்ளுடையவர்கள் தம்மை - தீமை புரிவதில் நுண்மையுடைவர்களாகிய அவ்வைம் புலவேடரை. முக்கணன் பாத நீழலுள்ளிடை மறைந்து நின்று அங்குணர்வினால் எய்யலாம் :- அவர் ஐவர். அவர் செய்யுந் தீமையோ அளவிலாதது. அவற்றை அழித்துத் துன்ப நீக்கம் பெற நம்மையாளும் நாயகனுடைய முக்கண்ணனே அமையும். அவர் நம்மைச் சாராதிருக்குமாறு மறைந்து நிற்க அவன் திருவடி நீழல் உண்டு. நாம்காணாமல் மறைந்து நின்று நம்மை அவர் அம்பால் எய்யுமாறு போல, நாமும் முக்கணன் பாத நீழலுள்ளிடை மறைந்து நின்று, அவரை அச்சிவஞானத்தால் எய்து வெல்லலாம். உணர்வு - சிவஞானம். ஒருவிழி தீயால் துள்ளலை யடக்கலாம். ஒரு விழி நிலாவால் இருளை நீக்கிச் சூறைகோள்ளலை விலக்கலாம். ஒருவிழி சுடரால் இருளை நீக்கி (அருள்) நெறியைக் காட்டலாம். நம் மும்மலமும் போக்க முக்கண்ணுடையான் எனலுமாம். மலமகன்றால், புள்ளுவர் துள்ளல் எது? பிரமீசர் பதிற்றுப்பத்தந்தாதி. 65.

751. இத் திருமுறையில், சிற்சில திருப்பதிகங்களுள் சிலபல திருப்பாடல்கள் கிடைத்தில. சில ஒன்றுபோலமைந்து சிறிதுவேறுபடுகின்றன. பற்பலஇடங்களிற் சொல்லும் தொடரும். குறைதல், மிகுதல், வழுவுதல் உற்றுள்ளன. 650 ஆவது திருப்பாடற்கும் இதற்கும் சிறிதே வேறுபாடாகும். இவ்வாறே 954, 1063 எண்ணுடையவற்றின் முதலடியில் உள்ள ஐயாறு என்பதில் 'ஐ' இல்லை. முதலடியிற்றில் உள்ள ஆறெழுத்தும் இல்லை. 'சேஞ்சடையான்' என வேறு ஆறெழுத்துள்ளன. தொண்டனேன் எனத் தொடரும் இதனுள், 'வாளா' என்புழி வல்லெழுத்துமிகையே. 650 இல் நைந்து பேர்வதோர்வழி காணமையும் இதில் நாளும் பெரியதோரவாவிற் பட்டமையும் உணர்த்தியவாறுணர்க. அங்குள்ள அண்டவாணனே இங்குள்ள

பாறினாய் பாவிநெஞ்சே பன்றிபோ லளற்றிற்பட்டுத்
தேறிநீ நினைதியாயிற் சிவகதி திண்ணமாகும்
ஊறலே யுவர்ப்புநாறி யுதிரமே யொழுகும்வாசல்
கூறையான் மூடக்கண்டு கோலமாக் கருதினாயே. 752

---

அமரர்கோவாவான். பழனஞ்சூழ்ந்த திருக்கோண்டீச்சுரத்தானே என்ற தொடரளவாய்க் கங்கை சூடுந் திகழ்தரு சடையினானே எனல் நின்றது. அருளாளர், 'இது முன்வந்தது, மீண்டும் அதுவே வருகின்றது' என்னும் ஏகதேச ஞானத்தை நீங்கியவராதலின் இன்னோரன்னவை அவர் திருவாக்கில் வருதல் இயல்பு. பாவலருட் பலர் மறதியாற் பாடுதல் போல்வதன்று இது. 'தோல் வினைக் குழி.' (769).

752. பாறினாய் - ஓடினை நீங்கினை; 'பயிலுறு பாவங்கள் பாறப்பெற்றுளாய்' (சிவரகசியம் - சிவனடியார். 23) 'பட்டிமை யுருக்கள்கோடு பாறலரிது'. (கந்த புராணம். சத முகன். 7) அடிப்பறிந்தனை என்னும் வழக்கும் ஈண்டுப் பொருந்தும். 'பது முகனைக் கொடுபோகும் பத்து முகன்போற் பாறுதலும்' (சேது புராணம். வேதாள. 14) என்புழிப் போலக்கொண்டு, சிவனடிக்கீழ் நீங்காது நின்று நினைந்து சிவகதியைத் திண்ணமாக நண்ணல் இன்றி ஓடினை எனலே சிறந்தது. பாவமே பயின்ற நெஞ்சம் பரனடியைத் தேறலும் நினைதலும் செய்ய மாட்டாது என்பார் 'பாவி நெஞ்சே' என்றார். அளறு - சேறு. அளற்றிற் பட்டுத்தேறுதல் பன்றிக்கில்லை, நெஞ்சிற்குள தாகலாம். படுதற்கு மட்டும் பன்றி ஒப்பாயிற்று. தேறுதற்கன்று. மேலோர் நெஞ்சம் கல்வி கேள்விகளால் தேறும். கயவர் நெஞ்சிற்குப் பட்டுத் தேறலும் அரிது. 'உற்றலாற் கயவர் தேறார் என்னுங் கட்டுரையோ டொத்தேன்' (311). பட்டுத் தேறி :- 'பட்டறி, கெட்டறி, பத்தெட்டிறுத்தறி' (வழக்கு). நினைதி - நினைவாய் நினைவாயாகிற் சிவகதி (737. 5, 43. 8) திண்ணம் ஆகும் எனவே, நினையாயாயின். பவகதி பாரு தேன்றாராயிற்று. ஊறல் - வாய் முதலியவற்றில் ஊறும் நீர். உவர்ப்பு - உப்புறைப்பு. வெறுப்பு. உவர்ப்ப (- வெறுக்க) என்று பாடம் இருந்ததோ? உதிரம் - குருதி. வாசல் :- 185. 674. 'ஊற்றுத் துறை ஒன்பதுள் நின்று ஓரீர் ஒக்க அடைக்கும்போதுணர மாட்டீர்' (6. 93. 5) கூறை - தோற் கூறை. நூற்கூறை. கோலம் - அழகு.

உய்த்தகா லுதயத்தும்ப ருமையவ ணடுக்கந்தீர
வைத்தகா லரக்கனேதன் வான்முடி தனக்குநேர்ந்தான்
மொய்த்தகான் முகிழ்வெண்டிங்கண் மூர்த்தியே னுச்சிதன்
வைத்தகால் வருந்துமென்று வாடிநா னேடுங்கினேனே.[மேல்

திருச்சிற்றம்பலம்

753. 'பாவகஞ் செய்து தீட்டிப் பட்டிமை யோலையுய்ப் பான்' (திருவிளையாடல் மெய்நா. 13) உய்த்தகால் - (இராவணன் திருக்கைலையை எடுத்தலாகிய தொழிலைச்) செய்த காலம். உய்த்தல் - செய்தல் 'உய்த்திடுஞ் செய்தி கேட்டே உறுவிக்கும் பலத்தை' (சிவஞானசித்தியார். சூ. 2:- 18) உதயம் - தோற்றம். காலுதயத்து-காலோதயம், காலத்தோற்றம். காலத்தோற்றத்தில், கைலையை எடுத்த காலத்தில் என்றபடி. உம்பர் - அம்மலைமேல். உய்த்தகால் உதயத்து என்பதற்கு எண்ணிலாவுயிர்களை வீடுறுத்திய திருவடியால் உதைத்த போது என்றுரைத்தலும் பொருந்தும். உதையம் என்பது உதயம் என்றுதல் பயின்றதே; அருகியதன்று. 'அ ஐ முதலிடையொக்குஞ் சஞயமுன்' (நன்னூல்). ஐகாரம் அகரமாதலைப் பல சொற்களிற் காணலாம் 'திருவிரலால் உதைகரணம் செய்துகந்த சிவமூர்த்தி' (133) என்று இராவணனை உதைத்த வரலாறு குறித்தே முன்னுள்ளது காண்க. உய்த்தல் - வீடுபெறுத்தல். 'உய்த்த வியோம ரூபர்' (சதாசிவ ரூபம். 29.) வைத்தகால் - ஊன்றிய திருவடி. 485. 678. 688. முதலியவற்றிற் காண்க. நேர்ந்தான் - உடன்பட்டான். மொய்த்தகால் முகிழ்வெண்டிங்கள் மூர்த்தி :- தேய்த்த திருவடியிற் பொடியாகிப் பின் வழிபட்டு வணங்கிய திங்கட் பிறையைத் திருமுடியிற் கொண்டு திகழும் சிவமூர்த்தி 'தக்கன்றன் வேள்வியினிற் சந்திரனைத் தேய்த்தருளி' மொய்த்தகால் - வண்டுகள் மொய்த்த பூ. மிக்க நிலா என்றுருமுளர். முகிழ் - அரும்பு. கான் - மணம். ஆகுபெயராய்ப் பூவையுணர்த்தும். 'கான்முகம் போதிந்த தேண்ணீர் கவர்ந்து' (சிந்தாமணி. இலக்கணை. 38). கான்-காடு. மொய்த்த காட்டில் முகிழ்திங்கள். காட்டிலே காய்ந்த நிலா' (வழக்கு), முகிழ்தல் - அரும்புதல், 'முகிழ்மென் முலையாளுமைபங்கா'. குவிதல். 'முகிழ்த்தகையினர்', திங்களுக்கு

அவ்விரண்டு முண்டு. அதனுல் அப்பிறையைச் சூடி அவற்றை நீக்கி ஆண்டனன். நேர்தல் - உடன்படல், இசைதல், 'மகிழ் வுடன் ஆங்கவை நேரா', (கூர்ம புராணம் அரியய. 8) இராவணன் தன் வன்றலையிற் சேவடிபட உடன்பட்டான். தனது தலையின் வன்மைக்குக் கடவுளது தாளின் மென்மை தாங்காது என்று கருதி வருந்தித் தன்தலையைத் தாழ்த்தி ஒடுங்கிக் கோள்ளாமல், தாங்கிக்கோள்ள நேர்ந்தான். அடியேனே என் உச்சியின்மேல் வைத்த மெல்லடி என் னுச்சி வன்மையால் வருந்தும் என்று கருதி வாடி, அத்திருவடியை வைத்தபோது, அஃது என் தலையைச் சாராதவாறு, தாழ்ந்து ஒடுங்கினேன்.

கருமலி கடல்சூழ்நாகைக் காரோணர் கமலபாதத்
தோருவிர னுதிக்குநில்லா தோண்டிற லரக்கனுக்கான்
இருதிற மங்கைமாரோ டேம்பிரான் சேம்போனகம்
திருவடி தரித்துநிற்கத் திண்ணநா முய்ந்தவாறே. (696)

பேருவிர லிறைதானூன்றப் பிறையேயி றிலங்கவங்காந்
தருவரை யனையதோளா னரக்கனன் றலறிவீழ்ந்தான்
இருவரு மோருவனுய வுருவமங் குடையவள்ளல்
திருவடி சுமந்துகோண்டு காண்கநான் றிரியுமாறே. (735)

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
　　நரகத்தி லிடர்ப்படோம் நடலையில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
　　இன்பமே யெந்நாளும் துன்பமில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான
　　சங்கரனற்சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்று மீளாவாளாய்க்
　　கோய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினேமே.

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தேன்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை போய்கையும் போன்றதே
ஈசனேந்தை யிணையடி நீழலே.

# 78. பொது

## திருப்பதிக வரலாறு

77 ஆவது திருப்பதிக வரலாறு காண்க.

குறைந்த திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

வென்றிலேன் புலன்களைந்தும் வென்றவர் வளாகந்தன்னுள்
சென்றிலே னுதலாலே செந்நெறி யதற்குஞ்சேயேன்
நின்றுளே துளும்புகின்றே னீசனே னீசனேயோ
இன்றுளே னுளையில்லே னென்செய்வான் றோன்றினேனே.

754. வென்றிலேன் புலன்கள் ஐந்தும் - ஐந்து புலன் களையும் வென்றும் இல்லேன். வென்றவர் வளாகம் தன்னுள் சென்றிலேன் - ஐம்புலனை வெல்லேனாயினும், அவற்றை வென்ற பெரியோர் வாழும் இடத்திலேனும் சென்று வெல்லுமாறு உணரும் பேறுற்றேனோ? அதுவும் செய்திலேன். அடுத்த திருப்பாட்டில், கலைகள் ஞானம் கற்றிலேன் ; கற்றவர் தங்களோடும் உற்றிலேன்' என்றவாறு, இதிலும் வென்றவர் வளாகத்துள்ளும் சென்றிலேன் என்று உம்மை கூட்டி யுரைத்துக்கொள்க. புலனடக்கமும் அடங்கினோரிணக்கமும் இல்லாமை காரணம். செந்நெறிக்குச் சேயனாயது காரியம்.' செந்நெறி. 'சேறைச் செந்நெறிச் செல்வனார்'. செந்நெறிக் குஞ்சேயேனென்றதால் அந்நெறியிலொழுகியடையும் பேற்றுக் குஞ்சேயேனென்பது தானே விளங்கும். இறந்ததுதழீஇய உம்மை. நீசனேன் நின்று உள்ளே துளும்புகின்றேன் - இழிந்த யான் செந்நெறிக்குஞ் சேயேனாகி நின்று, எனக்குள்ளே வருந்து கின்றேன். அவ் வருத்தம் என்னுள் இருக்கும் நீ யன்றிப் பிறர் அறியார். துளும்பல் - வருந்தல். அலைதல் அசைதல் முதலிய பிற பொருள் பொருந்துமேற் கொள்க. 'மைக்கண்ணீர் துளும்ப' (திருவிளையாடல்) என்புழிப்போற்கொள்ளல் ஈண்டுப் பொருந் தாது. 'இன்றைக்கிருப்பாரை நாளைக்கிருப்பரென்றெண்ணவோ திடமில்லையே' (தாயுமானவர்). என் செய்வான் - யாது செய்ய?

கற்றிலேன் கலைகள்ஞானங் கற்றவர் தங்களோடும்
உற்றிலே னதலாலே யுணர்வுக்குஞ் சேயனானேன்
பேற்றிலேன் பெருந்தடங்கட் பேதைமார் தமக்கும்பொல்லேன்
எற்றுளே னிறைவனேநா னேன்செய்வான் றோன்றினேனே.

ஒரு பயனும் எய்தாதது என் தோற்றம் என்றது. 'நீசனேன் ஈசனேயோ' 310. 521. 523; (6. 47. 4) (6. 11. 1. 10)

755. கலைகள் கற்றிலேன் - கலைகளைக் கற்றுக்கொண்டிலேன். ஞானம் கற்றவர் தங்களோடும் உற்றிலேன் - கலை ஞானத்தைக் கற்ற சான்றவர்களோம் உறவாடல்கொண்டிலேன். கலைகள் ஞானம் கற்றிலேன், கற்றவரோடும் உற்றிலேன் எனலும் ஆம். போது சிறப்பென்னும் இருவகைக் கலை ஞானத்துள். உவமையிலாக் கலைஞானம் சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம் ஆகிய சிறப்பு. ஏனைப் போதுக்கலை ஞானத்துக்கு உவமையுண்டு. அவற்றைக் கற்றிலேன் என்றார் நம் அப்பர். கற்றவர் என்பதும் போதுக்கலை கற்ற புலவரைக் குறித்ததன்று. சிவஞானத்தை யுடையவரைக் குறித்தது. 'ஆதலாலே உணர்வுக்குஞ்சேயன் ஆனேன்' என்றதை நோக்கின் அவ்வாய்மை விளங்கும். உணர்வு - சிவஞானம். ஆண்டுச் 'செந்நேறிக்குஞ் சேயேன்' என்றார். ஈண்டு 'உணர்வுக்குஞ் சேயன்' என்றார். செந்நேறியும் அந்நேறியுணர்வும் திருவருளின ஆதலின். உவமையுடைய போதுக்கலையைக் குறித்ததன்று இது. உவமையிலாக் கலைஞானமாகிய சிறப்புடைய சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானத்தையே ஆகும். பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம் ஆகிய மெய்ஞ்ஞானம் உணர்வரியது. அதை உணர்ந்து சிவாநந்தத்தில் திளைப்பவர் நம் அப்பர். 'கல்லாதார் மனத்தணுகாக் கடவுள்' என்றதும், அடுத்துக் 'கற்றார்கள் உற்று ஓருங் காதலான்' (6. 84. 8) என்றதும் உணர்க. 'கலைபயில்வோர் ஞானக் கண்ணானன் கண்டாய்.' (6. 73. 2) 'திருவானைக்காவிலுறை சிவனே ஞானம் ஆனாய்' (6. 62. 2) 'கலைஞானம் கல்லாமே கற்பித்தான்' (6. 11. 4) 'கலை பயிலுங்கருத்தன்' 'கலையாரும் நூல் அங்கம் ஆயினான்' (6. 87. 10) 'கற்றவர்கள் உண்ணுங் கனியே போற்றி' (6. 32. 1) 'கற்றார் பயில்கடனாகைக்

மாட்டினேன் மனத்தைமுன்னே மறுமையை யுணரமாட்டேன்
மூட்டிநான் முன்னைநாளே முதல்வனை வணங்கமாட்டேன்
பாட்டிளுய் போலநின்று பற்றதாம் பாவந்தன்னை
ஈட்டினேன் களையமாட்டே னேன்செய்வான் ரேன்றினேனே.

காரோணத்தேங்கண்ணுதலே' (994) என்பவற்றை நோக்கின் சிவசம்பந்தம் உற்ற கலையே உணரப்படும். 'கல்லா நெஞ்சி னில்லான் ஈசன்' என்றதும் உணர்க. 'கற்றதேல் ஒன்றும் இல்லை காரிகையாரோ டாடிப் பெற்றதேற் பெரிதுந் துன்பம் பேதையேன் பிழையினுலே' (505) என்புழி, அப்பர்க்குக் கல்வி யில்லை என்பதோ பொருள்? பெற்றிலேன் - அடைந் திலேன். சிவஞானம் இன்றிச் சிவனைப் பெறலரிது. 'அவனருளே கண்ணுகக் காணின் அல்லால்......காட்டொணுதே' 'காண் பார் ஆர் கண்ணுதலாய்க் காட்டாக்காலே.' பெருந்தடங்கட் பேதைமார்க்கும் போல்லேன்; அவர்கண் பெருந்தடங்கண்ணு யினும் அவற்றிற்கு யான் போலிவில்லேன். போல்லேன் - போலிவில்லேன். 'இமயப்போருப்பகஞ் சேர்ந்த போல்லாக்கருங் காக்கையும் போன்னிறமாயிருக்கும்' (யாப்பருங்கலக் காரிகை) என்பதில், கருங்காக்கை போலிவில்லாதது (போலம்போ லோளிராதது). அது போலமேயான மலையைச் சார்ந்து போன்னிற முற்றது என்பதே அதன் போருள். போல்லாத (தீய) காக்கை எனல் ஆண்டுப் போருந்தாது. எற்று-என்னது; எத்தன்மையது. எற்றுளேன் - ஒன்றுமில்லேன்; இம்மை மறுமை வீடுகளுள் எத்தன்மையதும் இல்லேன் என்றவாறு.

756. மனத்தை மாட்டினேன். என் மனத்தினை இம்மையிற் செலுத்தினேன். 'வள்ளல்தான் வல்ல வேல்லா மாட்டினன்.' (சிந்தாமணி. 1274) 'உலோக பாலன் தான்வல்ல விஞ்சைக ளேல்லாவற்றையும் செலுத்தினுன்' என்பது நச்சினுர்க்கினியர் உரை. முன்னே இம்மையிற் செலுத்துதன் முன்னரே. மறுமைப் பயன்களை மூட்டி. போருத்தி, ஏவிவிட்டு. பற்றுச்செய்து. முன்னை நாளே - இளமையிலேயே. 'முப்பதாம் ஆண்டளவில் மூன்றற் ரூரு போருளைத் தப்பாமற்றன்னுட் பேறுணுயிற் - சேப்புங், கலை யளவேயாகுமாங் காரிகையார் தங்கண் முலையளவே யாகுமாம் மூப்பு' என்னுங் கருத்து. மூட்டிநான், முன்னைநாளே முதல்வனை

கரைக்கடந் தோதமேறுங் கடல்விட முண்டகண்டன்
உரைக்கடந் தோதுநீர்மை யுணர்ந்திலே னுதலாலே
அரைக்கிடந் தசையுநாக மசைப்பனே யின்பவாழ்க்கைக்
கிரைக்கடைந் துருகுகின்றே னென்செய்வான் றோன்றினேனே

............................................................................................

வணங்கமாட்டேன் என்றதாலும் விளங்கும். பாட்டிநாய் என்பதற்குப் பெருமையில்லாதநாய் என்றனர் சிலர். திருநாவுக்கரசு நாயனார் புராண உரை பக்கம் 708. சிவக்கவிமணி கோ. க. சு. அவர்கள் அப்பர் தேவாரப் பதிப்பு பக்கம் 456. பட்டிநாய் என்பது முதல் நீண்டதுமாம். 'பாட்டரும் பகடு' சிந்தாமணி (436) என்புழி நச்சினார்க்கினியர் பட்டு என்பது பாட்டென முதல் நீண்டது எனக்கொண்டு, பட்டு விகாரம் என்றார். பட்டிநாய் - திருட்டுநாய். பட்டி என்பது களவு நாய் முதலிய பல பொருள் உடையது. பாட்டிநாய் என்று தந்நகரம் உள்ளதாகக் கொண்டு பெண்ணாய் எனலாம். 'பிடி பிணை பெட்டை மந்தி பிணாவோடாகுபாட்டி' சூடாமணி நிகண்டு 3 :- 34. "பாட்டுவித்தாலா ரொருவர் பாடாதாரே"

"ஆட்டினான் முன் அமணரோ டென்றனைப்
பாட்டினான்றன பொன்னடிக் கின்னிசை
வீட்டி னான்வினை மெய்யடி யாரோடும்
கூட்டி னான்குரங் காடு துறையனே"

என்று பின்னர் இப்பெருமானது திருவாக்கில் வந்திருத்தலின், ஈண்டும் அவ்வாறே பொருள் கொள்ளல் தக்கது. பாட்டினாய் போல நிற்றலாவது பாடச் செய்த சிவனாகிய நீயாய் நின்று எல்லா முன்செயலெனச் செய்து நிற்றல். இதனை இறைபணி நிற்றல் என்பர். பாசம் சாராதவாறு இறைபணி நின்று திருவடியைப் பெறுது, என் செயலாக எல்லாம் செய்துவரும் பற்ற தாம் பாவத்தையே ஈட்டினேன் என்பது கருத்து. பருகினவாறு என்பதைப் பருக்கினவாறு என்றதும் அறிக. ஈட்டல்-ஈண்டுதல் என்றதன் பிறவினை ; திரட்டுதல்

757. கரை கடந்து ஓதம் ஏறும் கடல் விடம் உண்ட கண்டன் :- கரையைத் தாண்டி அலை (யீரம்) ஏறுகின்ற கடலில் எழுந்த நஞ்சு. ஓதம் - அலை, ஈரம், வெள்ளம்.

சேம்மைவெண் ணீறுபூசுஞ் சிவனவன் றேவதேவன்
வெம்மைநோய் வினைகளைக்கும் விகிர்தனுக் கார்வமெய்தி
அம்மைநின் றடிமைசெய்யா வடிவிலா முடிவில்வாழ்க்கைக்
கிம்மைநின் றுருகுகின்றே னென்செய்வான் றோன்றினேனே.

எங்கோன் புரிதரு கருணையென்னும் ஓதத்திறைழுக்கு' (கந்த புராணம். இந்திரனருச்சனைப். 3) கடல் :- ஈண்டும் பாற்கடல். கண்டன் - கழுத்தினன். உரைகடந்து ஒதும் நீர்மை உணர்ந் திலன் :- 'வாக்குமனோதீதன்.' 'சொற்பதத்தார் சொற்பதமும் கடந்து நின்ற சொலற்கரிய சூழலாய்,' உரையுணர்வு இறந்து நின்றுணர்வ தோருணர்வு' ஆதலின், அவற்றைக் கடந்து நின்று பரநாதத்தில் ஓதும் நீர்மையை உணர்ந்து ஓதல்வேண்டும். 'ஊனக்கண் பாசம் உணராப் பதியை ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி' (சிவஞானபோதம். சூ. 9) 'ஈண்டு அம் முதலை ஞானக்கண்ணினாலே காண்க என்றது; அவன் வாக்கு மனாதீதகோசரமாய் நிற்றலான்.' (ஷை. பொழிப்பு). அரை - இடை. அரையிற் கிடந்து அசையும் நாகம் - அசை கின்ற பாம்பு. 'ஆடு பாம்பு' என்பதில் அடுதல் - கோல்லல். அசைப்பனே - (அப்பாம்பினைக் கச்சாகக்) கட்டுதலுடையவனே. இன்ப வாழ்க்கைக்கு இரைக்கு - சிற்றின்பம் விளைக்கும் உலக வாழ்விற்கும் பசிதீர்க்க இன்றியமையாத இரைக்கும். அடைந்து - அடையத் தகாதாரை அடைந்து. (உருகுகின்றேன்).

758. சேம்மை வேண்ணீறு பூசும் சிவனவன் - 'சேம்மை' எனப்பேறும் சிவானந்த முத்திப்பேற்றை நல்கும் திருவேண் ணீற்றினை மெய்யெலாஞ் சண்ணிக்குஞ் சிவபிரான். 'அவன்' என்பது சுட்டுப் பெயராய் நில்லாது, 'சிவன்' என்பதோடு சேர்ந்து அதன் பொருளாய் நின்றது. தேவதேவன். 'தேவர்கோ அறியாத தேவதேவன்.' 'தலையாய தேவாதி தேவர்க்கு என்றும் சேயான்'. வேம்மை - பிறவிக்கோடை; வெப்பம். நோய் - இன்பத்துன்பம். (பிராரத்தம்) வினைகள் - ஆகாமியசஞ்சிதங்கள். விகிர்தன். இயல்பினன். பசுபாசங்களின் வேறுபட்டவன். வி+ கிர்தன் - சேயற்பாடில்லான், விகிர்தம் - வேறுபாடு. ஆர்வம் - அன்பு. அம்மை - முற்பிறப்பில். சேய்யா - சேய்யாமலே கழித்து. அம்மையிற் சேய்யாது கழித்து இம்மையில் உருகுகின்றேன்.

பேச்சோடு பேச்சுக்கெல்லாம் பிறர்தமைப் புறமேபேசக்
கூச்சிலே ஞுதலாலே கொடுமையை விடுமாறேரேன்
நாச்சொலி நாளுமூர்த்தி நன்மையை யுணரமாட்டேன்
ஏச்சுளே நின்றுமெய்யே யென்செய்வான் றேன்றினேனே.

வடிவு இலா வாழ்க்கை; முடிவு இல் வாழ்க்கை. பேரின்ப வாழ்க்கையல்லாதவற்றிற்கு வடிவும் உண்டு. முடிவும் உண்டு. அவ்விரண்டும் இல்லாத பேரின்ப வாழ்க்கையை ஆன்மா எய்தும் வரையில் உடலாகிய வடிவும் அவ்வடிவிற்கு முடிவும் உண்டு என்றுமாம். (1) பசுக்கள் கேவலாவத்தையில் ஆணவ மயம் (2) சகலாவத்தையில் மாயாமயம். (3) ஆன்மாக்கள் சுத்தா வத்தையிலே சிவமயம் ஆதலின், முதலாவதிலும் மூன்ருவதிலும் வடிவில்லை. இரண்டாவதில் வடிவும் அதற்கு முடிவும் உள. முன் இரண்டவத்தைக்கும் முடிவுண்டு. சுத்தாவத்தையில் ஆன்மாவிற்கு ஞானமே வடிவம். அதற்கு முடிவில்லை. ஆனுல் அந்த ஞானவாழ்வை வடிவிலா முடிவில் வாழ்க்கை என்றுர். சுத்தாவத்தையின்கண் எய்தும் சாக்கிராதியைந்தும் அத் தகையன. அவ்வுண்மையை நெஞ்சுவிடு தூது ‘மேனியிலா வஞ்சவத்தையுங் கடந்தாயபெரும்பேரொளிக்கே தஞ்சமெனச் சென்று தலைப்பட்டு வஞ்சம் அறத் தானந்தமில்லாத தண்ணளி யால் ஓங்கிவரும் ஆனந்தம் என்பதோர் ஆறுடையான்’ (55, 57) என்றதால் உணர்க.

759. பேச்சோடு பேச்சுக்கெல்லாம் :- தொடங்கியது முதல் முடியுமளவும் ஒவ்வொரு பேச்சுக்கும். பிறர் தமை - பிறரை. புறம் பேசல் - புறங்கூறல். கூச்சிலேன் - கூசுதல் இல்லேன். கொடுமை :- சாதலினும் கொடியது. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல் அறங்கூறும் ஆக்கம் தரும்’ (குறள்). விடும் ஆறு ஓரேன் - விட்டொழிக்கும் வழியைச் சிறிதும் ஆராய்ந்திலேன்,’ ஆராய்வதில்லேன். உணரேன் என்பதன் மருஉவே ஓரேன் என்பது. ஓர்ந்துணர்தல்; ஓர்த் துணர்தல்; ஓர்த்துள்ளம் உள்ளதுணர்தல் எனல் அம் மருஉ வழக்கின் பிற்பட்டதே. எடுத்தல் என்பது ஏத்தல் எனமருவிய பின்னர் ‘எடுத்தேத்தல்’ எனலும் அன்னதே. மூர்த்தி - சிவ மூர்த்தி. சிவமூர்த்தியாகிய நின்னுல் ஆன்மாக்களுக்கு(ம் அடி யேனுக்கும்) எய்தும் நன்மையை நாளும் நாவிற் சொல்லி

தேசனைத் தேசமாகுந் திருமாலோர் பங்கன்றன்னைத்
பூசனைப் புனிதன்றன்னைப் புணரும்புண் டரிகத்தானை
நேசனை நேருப்பன்றன்னை நிவஞ்சகத் தகன்றசெம்மை
ஈசனை யறியமாட்டே னென்செய்வான் றோன்றினேனே. 760

(உளத்தால் உள்ளி) உணர்வால் உணரமாட்டேன். நாளும் உணரமாட்டேன். சொல்லி உணரமாட்டேன். ஏச்சுஉள் - இகழ்ச்சிக்கிடமான இவ்வுடம்பினுள், இவ்வுலகினுள். நின்று என் செய்வான் தோன்றினேன். மெய்யே - மெய்யாக. 'ஒரூர் பேச்சு ஒரூர்க்கேச்சு' (வழக்கு). இழித்து என்பது இழிச்சு - ஈழ்ச்சு - ஏழ்ச்சு - ஏச்சு எனமருவியது. 'எம்பிரான் இழித் திட்டேனே' (திருவாசகம்) இழிச்சுதல் - இழிவுபடுத்தல். இறக் குதல். 'அட்டகறியின் பதம் அறிந்து அங்கு இழிச்சி' (பேரிய புராணம், சிறுத்தோண்டர். 66). இறக்கிப் பேசுதல் என்பது வழக்கு.

760. தேசன் - ஒளியுருவினன், 'தேசமிக்கான்' (588) உலகாயிருப்பவனே. 'தேசனைத் தேசன்றன்னை' (?32), 'தேசனைத் தேசங்கள் தொழநின்ற திருமாலின் பூசனைப் பூசனைகள் உகப்பானைப் பூவின்கண் வாசனை மலை நிலம் நீர் தீவளி ஆகாசமாம் ஈசனை எம்மானை என்மனத்தே வைத்தேனே' (67). 'தேசனைத் திருமால் பிரமன் செயும் பூசனைப் புணரிற் புணர்வாயதோர் நேசனை நெஞ்சினுள் நிறைவாய்நின்ற ஈசனைக் கண்டு கோண்டதேன்னுள்ளமே' (5, 98, 9). திருமாலோர் பங்கன் :- 'இடமால் தழுவிய பாகம்' 14 மையரிக் கண்ணி யாளும் மாலும் ஓர் பாகம் ஆகி' 221. மாலுங் கோப்பளித்த பாகர் : (245) காவியங் கண்ணளாகிக் கடல் வண்ணமாகி நின்ற தேவியைப் பாகம் வைத்தார் (320) 'அரியலால் தேவி யில்லை' (398). பூசன் - பூச்சியன் ; அன்பன், பூசல், அன்பு, பூசலார், 'புன்கணீர் பூசல் தரும்' (குறள்). புனிதன் - தூயன். புண்டரிகம் - தாமரை. 'அகனமர்ந்த அன்பினராய் அறுபகை சேற்று ஐம்புலனும் அடக்கி ஞானம் புகலுடையோர் தம் உள்ளப் புண்டரிகத்துள் இருக்கும் புராணர்' (திருஞானசம்பந்தர்). நேசன் - அன்பன். நேருப்பன் - தீயாயிலங்குமவன். நிவஞ்சகம் (நிபஞ்சகம்) - ஐந்தும் நீங்கிய நிலை. அவிச்சை, அகங்காரம்

விளைக்கின்ற வினையைநோக்கி வெண்மயிர் விரவிமேலும்
முளைக்கின்ற வினையைப்போக முயல்கிலே னியலவெள்ளம்
திளைக்கின்ற முடியினன்றன் றிருவடி பரவமாட்டா
திளைக்கின்றே னிருமியூன்றி யென்செய்வான் றோன்றினேனே

அவா, விழைவு, வெறுப்பு (குறள் 38. பரி) என்னும் ஐந்து குற்றமும் நீங்கிய நிலை, பஞ்சகம் - ஐந்தின் கூட்டம். அதன் திரிபு வஞ்சகம், இது வஞ்சகம் பேசேல் ' என்புழிக் கோள்வதன் வேறு காலம், நியதி, கலை வித்தை, அராகம் என்னும் பஞ்ச கஞ்சுகம் (ஐந்துபோர்வையும்) நீங்கிய நிலை எனலுமாம். 'அராக முதலிய மூன்றும் ஆன்மாவின் இச்சா ஞானக் கிரியைகளை விளக்கிப் போகம் நுகர்தற் பொருட்டுப் புத்தி தத்துவத்திற் செலுத்தியும், நியதி தத்துவம் இதனையே நுகர்க எனப்போகத்தின் கண்ணே ஆன்மாவை நியமித்து நிறுத்தியும், காலதத்துவம் இதனை இத்துணைப் பொழுது மாத்திரையின் நுகர்க எனப் போகத்தின்கண் வரையறுத்து நிறுத்தியும் இவ்வாறு இவ் வைந்தும் ஆன்மாவுக்கு உபகாரமாய் ஏனைக் கருவிகள்போல அவத்தைப் படுதற்கு ஏதுவாய் இடையிடையே கூடுதலும் நீங்குதலும் இன்றி எக்காலத்தும் ஆன்மாவினுடனுய்க் கஞ்சுகம் போலப் பந்தித்து நிற்றலின். இவை பஞ்சகஞ்சுகம் என்று உபசரித்துக் கூறப்படும். (சிவஞானபாடியம் சூ 2. அராக தத்துவ விளக்கம்) அவை முதலிய தத்துவமெல்லாம் சிவபிரானை அடைதற்குத் தடையாதலின், அவை நீங்கிய நிலையிலே வியாபகமாக ஆன்மாவிற்கு விளங்கும் நிட்பிரபஞ்சப் பொருளை ' அகன்ற செம்மை யீசன் ' என்றருளினர். ' நித்த நிர்மல சுத்த நிட்ப்ரபஞ்சப் பொருளை ' ' நிஷ்பஞ்சகம் ' வடமொழி. நிவஞ் சகத்து - வஞ்சகம் நீங்கியவிடத்து எனலும் கூடும். செம்மை :- 737 பார்க்க. ' திருநின்ற செம்மையே செம்மையாக்கொண்ட திரு நாவுக்கரையன்றன் அடியார்க்கும்அடியேன் ' ஈசன்-உடையவன்.

761. இன்பத் துன்பப் பயன்களைத் துய்த்து இளைத்துத் தளர்ந்து மூத்தும் வினையொழிக்கும் வழியில் ஈடுபட்டிலேன், விளைக்கின்ற வினையை - தன் பயனையும் புதிய வினையையும் தோற்றுகின்ற பிராரத்த கருமத்தை (சித்தியார். 102). நோக்கி - எண்ணி ; குறித்து ; வெண்மயிர் - நரை மயிர். விரவி - கலந்து. இது வயதாகியும் என்னும் பொருள் குறித்து நின்றது. உம்மை

விளைவறி விலாமையாலே வேதனைக் குழியிலாழ்ந்து
களைகணு மில்லேனேந்தாய் காமரங் கற்றுமில்லேன்
தளையவிழ் கோதைநல்லார் தங்களோ டின்பமெய்த
இளையனு மல்லேனேந்தா யேன்செய்வான் றோன்றினேனே.

தோக்கது. மேலும் முளைக்கின்ற வினையை - ஆகாமியகருமத்தை. போக - அழிய. முயல்கிலேன் - முயலமாட்டேன் இது முதுமை யுணர்த்திற்று, அடுத்த திருப்பாடலை நோக்குக. மூத்து நரை முதிர்ந்தும் வினைதீர்க்க நினையேன் எனல் குறித்தது. இயல - ஒழுகுதலையுடைய. இயலல் - ஒழுகல். நடத்தல். ‘ மயில் கண்டன்ன மடநடை மகளிர் ’ (திருமுருகாற்றுப்படை), ‘ நடை மயிலே ’ (பிரயோக விவேகம்). இயல்வேள்ளம் - ஒழுகுதலை யுடைய கங்கை. ‘ ஆறேழுகும் ’. அது திளைக்கின்ற முடி. முடி - கங்கைச் சடைமுடி. முடியினுன்றன் திருவடி - சிவனது சீபாதம். பரவமாட்டாது - வாழ்த்த வலியின்றி. இருமி ஊன்றி இளைக்கின்றேன். இருமலும் அஃதுற்றக்கால் போருதூன்றலும் இளைத்தலும் முதுமையின் விளைவுகள். அவற்றால் நித்தியத்திற் புரியும் சிவபூஜை தடைப்படுதலுண்டு. அவ்வுண்மையைக் கூறியது அநுபவம். ‘ முன்பேலாம் இளைய காலம் மூர்த்தியை நினையா தோடிக் கண்கண இருமி நாளும் கருத்தழிந்து அருத்தம் இன்றிப் பின்பகல் உணங்கல் அட்டும் பேதைமார் போன்றேன்’. (278) ‘ இரக்கமாய் என் உடலுறு நோய்களைத் துரக்கனே ’ (5. 4. 10) “ கேளுமின் இளமையது கேடுவந்து ஈளையோடு இருமலது எய்தன்முன் கோளரவு அணிகோண்டீச் சுரவனை நாளும் ஏத்தித் தொழுமின் நன்காகுமே ’ (5. 70. 5) விளைக்கின்ற வினையை நோக்கி மேலும் முளைக்கின்ற வினையைப் போக முயல்கிலேன். வேண்மயிர் விரவி மேலும் முளைக்கின்ற வினை. வேண் மயிர் விரவல் - மூத்தற் குறிப்பு. ‘ பன்னருந் தவம்புரி பருவம் ஈதேனக் கன்னமூலத் தினிற்கழற வந்தேன மின்னருங் கருமை போய் வேளுத்ததோர் மயிர் ’ (கம்பர். அயோத். தோடக்கம்)

762. விளைவு - பின்விளையும் பயனை. அறிவு - அறிதல். இலாமையாலே - இல்லாத காரணத்தாலே. வேதனைக்குழி - துன்பக்குழி. ‘ வினைக்குழி ’ 650. 751. 766. குழியில்

வெட்டன வுடையனாகி வீரத்தான் மலையெடுத்த
துட்டனைத் துட்டுத்தீர்த்துச் சுவைபடக் கீதங்கேட்ட
அட்டமா மூர்த்தியாய வாதியை யோதிநாளும்
எட்டனை யெட்டமாட்டே னென்செய்வான் றோன்றினேனே.

திருச்சிற்றம்பலம்

ஆழ்ந்து அதனினின்றும் ஏற்றித் துன்பம் களையும் துணையும் இல்லேன். களைகண் - களையுமிடம். வினைத்தொகை எந்தாய் எந்தையே! காமரங்கற்றும் இல்லேன் - இசைப்பாட்டுக்களைக் கற்று(ணர்ந்து) மில்லேன். சீகாமரம் என்னும் பண்ணும் எனலுமாம். ஆயினும். கறையணி கண்டன்றன்னைக் காமரங் கற்றுமில்லேன்' (768) எனப்பின்னுள்ளதைக் காணின், அது போருந்தாமை புலப்படும். 'தும்பி காமரம் இசைப்ப...... வேனிற் கோமகன் மகுடஞ்சூடியிருப்பது அக்குளிர் பூஞ்சோலை.' (திருவிளையாடல் தருமிக்குப். 20). தளை அவிழ் கோதை நல்லார். - கட்டு அவிழ்ந்து விரிந்து பூங்கோதையைச் சூடிய கூந்தலையுடைய அழகிய மகளிர். நல்லார் தங்களோடு - நல்லாரோடு. இன்பம் எய்த இளையனும் அல்லேன். எந்தாய் - எம் தாயே எனலுமாம். 'அம்மையே அப்பா' 'ஈன்றாளுமாய் எனக் கெந்தையுமாய் உடன் தோன்றினராய்' (513). 'செவ்வாய்க் கருங்கட்பைந் தோகைக்கும் வெண்மதிச் சென் னியற்கும் ஒவ்வாத் திருவுரு வொன்றே யுள தவ் வுருவினை மற்றெவ் வாச்சியம் என்று எடுத்திசைப்பேம் இன்னருட் புலியூர்ப்பைவாய்ப் பொறியரவல்குல் எந்தாய் என்று பாடுதுமே.' (சிதம்பரச் செய்யுட் கோவை. 73)

763. வெட்டனவு - கடுமைக்குறிப்பு. 'வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம்' (நல்வழி 33) உடையனாகி எடுத்த துட்டன். வீரத்தால் எடுத்த துட்டன். துட்டு - அடங் காமை துட்டத்தனம். வழக்கு. சுவை - செவிச்சுவை ; இன்பம் கீதம் - சாமகீதம்; பாட்டு. அட்டமா மூர்த்தி - எட்டுருவுடைய சிவபிரான் கேட்ட ஆதி. ஆய ஆதி. ஆதியைநாளும் ஓதி எட்ட மாட்டேன் எள் + தனை = எட்டனை - எள்ளளவும். உம்மை விரிக்க. 'இறையேயும் ஏத்தமாட்டேன்' (768) எனப் பின்வருதலும் உணர்க. உள்ளே உயிர்க்குயிராய் எட்டியிருப்பவனை, அக

நோக்கம்எய்தி எட்ட வலியில்லேன்எனலுமாம். எட்டனை எனப் போதுவில் எண்மட்டுங் கூறியதால் எட்டுருவினனை என்பர். எண்குணத்தனை எண்டிசையனை எனலும் இன்னும் எட்டாகச் சொல்லப்படுவனவும் பொருந்துமேற் கூறிக்கொள்க. இத் திருப்பதிகம் சிவவழிபாடில்லாத பிறவியின் பயினின்மையை உணர்த்திற்று. அடுத்த திருப்பதிகமும் இதனோடு சேர்ந்து ஒன்றெனக்கொள்ளலும் உண்டு. 'ஐயாறனடித்தலமே' என முடியும் இருபதும் ஒரே தொகையவாகக் கொண்டு அதற்கு 19 ஆவதில் அடிமுடி தேடியதும் 20 ஆவதில் இராவணன் செய்தியும் அமைந்தவாறு காரணம் என்பர். அதுபோல. ஈண்டு இல்லை. 10 ஆவது இராவணன் செய்தியைக் கூறுகின்றது.

துஞ்சிருள் காலை மாலை தொடர்ச்சியை மறந்தி ராதே
அஞ்செழுத் தோதின் நாளு மரனடிக் கன்ப தாகும்
வஞ்சனைப் பாற்சோ றாக்கி வழக்கிலா வமணர் தந்த
நஞ்சமு தாக்கு வித்தார் நனிபள்ளி யடிகளாரே.

சுண்ணவெண் சந்தனச் சாந்துஞ் சுடர்த்திங்கட் சூளா மணியும்
வண்ண வுரிவை யுடையும் வளரும் பவள நிறமு
மண்ண லரண் முரணேறு மகலம் வளாய வரவுந்
திண்ணென் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நா
மஞ்சுவ தியாதொன்று மில்லை யஞ்ச வருவது மில்லை.

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணை திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே

கல்லி னோடெனைப் பூட்டி யமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்கவென் வாக்கினால்
நெல்லு நீள்வயல் நீலக் குடியரன்
நல்ல நாமம் நவிற்றியுய்ந் தேனன்றே.

பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் போற்றிசெய்யு
மென்னாவி காப்பதற் கிச்சையுண் டேலிருங் கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென் மேற்பொறி மேவுகொண்டா
றுன்னார் கடந்தையுட் டூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே.

## 79. பொது

### திருப்பதிக வரலாறு

முன்னைப்பதிக வரலாறு காண்க, (பெரிய புராணம் 415)

குறைந்த திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

தம்மானங் காப்பதாகித் தையலார் வலையுளாழ்ந்து
அம்மானை யமுதன்றன்னை யாதியை யந்தமாய
செம்மான வொளிகொண்மேனிச் சிந்தையு ளொன்றிநின்ற
எம்மானை நினையமாட்டே னென்செய்வான் றோன்றினேனே.

764. மாதர் மயக்கிலழுந்திச் சிவசிந்தனையைச் சிறிதும் எய்தாமைக்கு வருந்துவது. தம்மானம்; தையலார்தம்மானம் - தையலாருடைய மானம். மானம் காப்பது - வெளிப்படை. மானங்காத்தல் - அவமானம் உளதாகாவாறு தடுத்தல். ஆடை அணி முதலியவற்றால் அது காக்க முயன்று ஆண்டவனை மறப்பது உலகியல். குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி கணமேயுங் காத்தலரிது (குறள். 29). மானம் - வலி. இப்பொருட்கு ஆடவர் வலியை வெல்லவொட்டாது மகளிர் வலியே தடுத்துத் தோல்வி யுறுத்தி அவரை அவர் தம் வயப்படச் செய்கின்ற தென்க. தையலார்தம் மானம் காப்பதாகி அவர் மாயவலையுள் சூழ்ந்து அம்மானும் அமுதனும் ஆதியும் எம்மானுமாகிய சிவபிரானை நினைய வலியில்லேன் ஆனேன். என்செய்யும் பொருட்டுத் தோன்றினேன்.? அந்தம் - அழகு. எல்லாப் பொருட்கும் முடிவிடம் எனலுமாம். ஆய - ஆன. செவ்வொளி மானவொளி. மானம் - பெருமை. செவ்வானம் என்பதன் மரூஉவாகிய செம்மானமும். ஆம். ஒளி கொண்ட திரு மேனியையுடைய எம்மான். சிந்தையுள் ஒன்றி நின்ற எம்மான். ஒன்றி நின்றவனை ஒன்றியிருந்து நினையவலியில்லேன். அதற்கு ஏது, ஒன்றாவாறு தடுக்கும் தையலார் மையல் வலையுள் ஆழ்ந்ததே ஆகும் என்று இரங்கியவாறு உணர்க. .

மக்களே மணந்ததார மவ்வயிற் றவரையோம்பும்
சிக்குளே யழுந்தியீசன் றிறம்படேன் றவமதோரேன்
கொப்புளே போலத்தோன்றி யதனுளே மறையக்கண்டும்
இக்களே பரத்தையோம்ப வென்செய்வான் றோன்றினேனே.

கூழையே னாகமாட்டேன் கொடுவினைக் குழியில்வீழ்ந்து
ஏழினின் னிசையிலாலு மிறைவனை யேத்தமாட்டேன் [லேன்
மாழையொண் கண்ணினல்ல மடந்தைமார் தமக்கும்போல்
ஏழையே னாகிநாளு மென்செய்வான் றோன்றினேனே. 766

765. மனைவியையும் மக்களையும் அம்மக்கட்கு மக்களையும் அவரவர் மனைவியர் வயிற்றிற் பிறந்தவரையும் காக்கும் வாழ்க்கைச் சிக்கலுள் அழுந்திச் சைவத்திறம் பொருந்திலேன். அத்திறத்துத்தவத்தை உணரேன். நீர்க்குமிழி போலத் தோன்றியது இக்களேபரம் (-உடம்பு). நீரிலே தோன்றி நீரிலே மறைவது குமிழி. அதுபோல மண்முதலிய பூதகாரியமாகித் தோன்றி அப்பூதங்களிலே மறைவது உடம்பு. தோன்றிய கணத்தினுள். மறைவது. வானவில் போலவும் மின் போலவும் தோன்றி மறையும் உடல் என்பதும் நினைக. 'வாங்கு சிலை புரையும் உடல்' (நால்வர் நான்மணிமாலை) எனலும் உண்டு. 'படுமழை மொக்குளிற் பல்காலுந் தோன்றிக் கெடும் இதோர் யாக்கை' (நாலடியார். 27) சிந்தாமணி 2754 - 2760. பார்க்க. 'மின்னும் மொக்களும் என நனி வீயினும் வீயும்' (ஷை. 2754). ஓம்பல்:- 'குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்' (குறள். 549) 'அகன்றிடா தோம்பிற் றன்றே' (கந்த புராணம். சூரபன். மூன்றாம். 167) 'குடியோம்பிக் கொள்ளுமா கொள்வோர்' (நீதிநெறி விளக்கம். 29) என்று போற்றல் காத்தல் என்னும் பொருட்டாதலறிக. அதன் உள்ளே - தோன்றிய அக்கணத்துக்குள்ளே. அது - அக்கணம். அப்பர் பாட்டனுரும் பூட்டனுருமாக இருந்தமை அறிக.

766. கூழையேனாகமாட்டேன் :- சிவபிரான் திருவடிக்கே ஆம் அன்பினாற் குழையும் இயல்புடையேனாக வலியில்லேன்.

குழைமை - கூழைமை. கூழை - பின்பு. கூழைமை - பின் நிற்கும்வழிபாடு. ஆண்டானடிமைத்திறத்திற்குரியது. 'தில்லை யம்பலத்துக் கூத்தனுக்கு ஆட்பட்டிருப்பதன்றோ நந்தம் கூழைமையே' (784). 'என்பு இருத்தி நரம்பு தோல் புகப் பெய்திட்டு என்னை ஓர் உருவம் ஆக்கி இன்பு இருத்தி முன்பு இருந்த வினைதீர்த்திட்டு என் உள்ளம் கோயில் ஆக்கி அன்பு இருத்தி அடியேனைக் கூழ் ஆட்கொண்டு அருள் செய்த ஆரூரர்தம் முன்பு இருக்கும் விதியின்றி, முயல்விட்டுக் காக்கைப் பின்போனவாறே' (43) 'பீழைமை பலவும் செய்து பிணிப் படை பரப்பி வந்து, வாழுயிர்ப் பொழித்து வவ்வி வலிந்துயிர் வாங்கி யுண்ணுங் கூழைமை பயின்ற கூற்ற வரசனைக் குதிக்குஞ் சூழ்ச்சி பாழியந்தடக்கை வேந்தே பயின்றிலம் யாங்களென்றார்.' (சூளாமணி. துறவுச். 18) 'கோலவைக் கனிவாய் கொடுத்துக் கூழைமை செய்யாமே' (நாலாயிர. பெரியாழ்வார். மூன்று. அஞ்சந. 5)) என்பவற்றில் உண்ணுங் கூழைமை, வாய்கொடுத்துக் கூழைமை செய்யாமே என்றதால் விளங்கும் கருத்து ஈண்டும் பொருந்தும். கொடுவினைக் குழியில் வீழ்ந்து :- 650. 751. 762. ஏழிசை. இன்னிசை. ஏழின் இசை. ஏழின் இன்னிசை. நம் அப்பர் காலத்திற்கு முன்னரே தமிழிசையால் இறைவனை வழிபடும் வழக்குண்மை யுணர்க. நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பியது புதிதன்று. இராவணன் இசையால் இறைவனை வழிபட்டதற்கு முன்பிருந்தே ஏழிசை யாய் இசைப் பயனாய் உள்ளவனை அதனால் வழிபட்டனர் தமிழர் முதலோர். மாழை - இளமை. 'மைபூத்தலர்ந்த மழைக் கண் மாழைமானோர் நோக்கு' (சிந்தாமணி. 2198) 'மாழை வாள் முகங்கள்' - 'இளைய முகங்கள்' (ஷெ. 2536 உரை). 'மாழை யொண்கண் பரவையைத் தந்தாண்டான்' (1. 51. 10) மாழையை மான் என்றலும் உண்டு. கண்ணின் - கண்களை யுடைய. நல்ல - அழகிய. மடந்தை - மடம் உடைமை. 'நாண் மடம் அச்சம் பயிர்ப்பு.' மடந்தை மகவர் என்பதன் மரூஉ மடந்தைமார். 'மகார்' பெயர் ஆதலின் வினைகொள்ளும், நூல் களில் மார் ஈற்று வினையாகக் கொண்டது, சொல்லாராய்ச்சி முடிபின் வேறுகும், பொல்லேன். 755. பார்க்க. ஏழையேன் - அறிவில்லேன். 'நுண்ணுணர்வின்மை வறுமை' (நாலடியார்) 'பிணியன் ஏழை' (நன்னூல்). 'பார்ப்பானை யேழை என்றலும் பசுவைச் சாது என்றலும் கூடா.' (பழமொழி).

முன்னையேன் வினையினாலே மூர்த்தியை நினையமாட்டேன்
பின்னைநான் பித்தனாகிப் பிதற்றுவன் பேதையேனான்
என்னுளே மன்னிநின்ற சீர்மைய தாயினானை
என்னுளே நினையமாட்டே னென்செய்வான் றோன்றினேனே.

767. என் முன்னை வினையினாலே - யான் முன்பு செய்த தீவினையின் பயனை அநுபவித்தலாலே. மூர்த்தியை - சிவ மூர்த்தியை. நினைய - விடாது நினைந்து போற்ற. மாட்டேன் - வலியில்லேன். பின்னை - கடவுளை வழிபடாது பெருங்குற்றம் என்றும் பேரிதோரிழப்பு என்றும் இப்பிறவிக்கு அதுவன்றி வேறு பயனில்லை என்றும் அறிந்த பின்னர். நான் பித்தனாகிப் பிதற்றுவன். பித்து - சிவபெருமான் திருவடிக்கே பற்றுவைத்து அதையே எண்ணிக்கொண்டு பேற நாடும் உயரிய நோக்கம். 'பித்துப் பத்தரினத்தாய்ப் பரன் உணர்வினால் உணரும் மெய்த் தவரை மேவா வினை' (சிவஞானபோத வெண்பா) பிதற்றுவன் :- 'மற்று நீர் மனம் வையாதே மறுமையைக் கழிக்க வேண்டில், பெற்றதோ ருபாயந்தன்னால் பிரானையே பிதற்றுமின்கள்' (413) 'பிண்டத்தைக் கழிக்கவேண்டில் பிரானையே பிதற்றுமின்கள்' (423) 'பேர்த்தினிப் பிறவாவண்ணம் பிதற்றுமின் பேதை பங்கன் .....றிறமே' (409), நான் பிதற்றுவன். நான் நினைய மாட்டேன். (நான்) என்செய்வான் தோன்றினேன். என்னுளே மன்னிநின்ற சீர்மையதாயினான் :- 'உயிர்க்குயிராய்த் தெளிக்கும் அறிவு திகழ்ந்துளது! (கொடிப்பாட்டு) என்னுளே நினைய மாட்டேன் :- திருமாலோடு நான் முகனுந் தேடித் தேடொணாத் தேவனை என்னுளே தேடாமல், உலகமெலாம் தேடியுழல்வேன். 'உள்ளத்தே நிற்றியேனும் உயிர்ப்புளே வருதியேனும் கள்ளத்தே நிற்றி' (742) அக்கள்ளனைத் தேடல் போல உள்ளத்தே உன்னைத் தேடிப் பிடித்துக்கொள்ளேனானேன். 'என்னுள்ளே நிற்கும் இன்னம்பரீசன்.' 'எம்பிரான் என்றதே கொண்டு என் னுள்ளே புகுந்து நின்று' (738). 'தன்னிற் றன்னை அறியுந் தலைமகன், தன்னிற் றன்னை அறியிற்றலைப்படும், தன்னிற் றன்னை அறிவிலன் ஆயிடில், தன்னில் தன்னையும் சார்தற்கு அரியனே'.

கறையணி கண்டன்றன்னைக் காமரங் கற்றுமில்லேன்
பிறைநுதற் பேதைமாதர் பெய்வளை யார்க்குமல்லேன்
மறைநவி லுவினானை மன்னிநின் றிறைஞ்சிநாளும்
இறையேயு மேத்தமாட்டே னென்செய்வான் றோன்றினேனே.

வளைத்துநின் றைவர் கள்வர் வந்தெனை நடுக்கஞ் செய்யத்
தளைத்துவைத் துலையை யேற்றித் தழலெரி மடுத்த நீரில்
திளைத்துநின் றாடு கின்ற வாமைபோற் றெளிவி லாதேன்
இளைத்துநின் றாடு கின்றே னென்செய்வான் றோன்றினேனே.

திருச்சிற்றம்பலம்

768. கறை - நஞ்சின் கறுப்பு. கண்டன் - 'திருநீல கண்டன்' காமரம் கற்றும் இல்லேன் :- (762.) பஞ்சமம் பாடியாடுந் தேள்ளியார் கள்ளந்தீர்ப்பார்' (287). பிறைநுதல் - பிறைபோலும் நுதல் (- நெற்றி). உவமத்தொகை. நுதலும் பேதைமையும் உடைய மாதர். பெய்வளை - வினைத்தொகை. மாதரும் வளையாரும் ஆகியவர்க்கும் அல்லேன். அல்லேன் :- பொருத்த முடையேன் அல்லேன். தளையவிழ்கோதை நல்லார் தங்களோடின்பம் எய்த இளையனும் அல்லேன்' (762). மறை நவில் நாவினன் :- மறையுங் கோப்பளித்த நாவர்' (742) 'நாலுகோலாமறை பாடினதாமே' (180) 'மறைகளாயின நான்கும் மற்றுள பொருள்களும் எல்லாம் துறையும் தோத் திரத்திறையும் தோன்மையும் நன்மையும் ஆய .....ஆதி' (7. 75. 1). 'விழையாருள்ளம் நன்கெழு நாவில் வினைகெட வேதம் ஆறங்கம் பிழையா வண்ணம் பண்ணியவற்றால் பேரியோரேத்தும் பெருமான்' (1. 42. 7) 'வேத நாவினர்' (2. 38. 7) மன்னி நிற்றல் - பற்றுட்படாது நீங்கி நிலைத் திருத்தல். இறைஞ்சுதல் - வணங்குதல். நாளும் - என்றும். நாள்தோறும். இறையேயும் - சிறிதேயும்.

769. கள்வர் ஐவரும் வந்து என்னை வளைத்து நின்று (எனக்கு) நடுக்கம் செய்ய இளைத்து நின்று ஆடுகின்றேன். காரணம் தேளிவின்மையே. எதுபோன்றது அத்தேளியாமை ?

தளைத்து வைத்து உலையை ஏற்றித் தழலுமேரி மடுத்த நீரில் திளைத்து நின்று ஆடுகின்ற ஆமைக்குத் தெளிவில்லாமை போன்றது எனக்குத் தெளிவில்லாமை. சூடு மிகுமுன் உலை நீரில் ஆமையை இடின், அது மிக்க இன்புற்றுத் திளைக்கும். சூடு ஏறஏற அதற்கு அழிவு அணுகும். புலன்வழி யொழுகும் மாக்களும் அதனுல் விளையும் பெருந்துன்பங்களை அறிய மாட்டார். புலனெறிநீத்து அருள்வழி போய்ப் பேரின்பம் நுகர்வதே மக்கட் பிறப்பின் பயன். துன்பத்தில் வீழ்தலை இன்பத்துள் வாழ்தலாக நினைந்து, பிறந்திறந்து துயருறுந் தொல்லையின் நீங்கி எல்லையிலின்பத்துள் அழுந்தி நிற்கும் அழிவிலா வாழ்வை அடைய விரும்புவோர்க்கு இதன்கண் அமைந்த உவமை ஞானத் தெளிவுறுத்தும். மாக்கள் உலகவலைப் பட்டு வருந்துவர். மக்கள் அதனுட்படாவாறு அருள்வழி யொழுகுவர். பேதைமையால் தெளிவுண்டாகாது. நாலடியாரில். 'பேதைமை' என்றதன் கீழ் அமைந்த 'கொலைஞர் உலை ஏற்றித் தீமடுப்ப ஆமை நிலை அறியாது அந்நீர் படிந்து ஆடி அற்றே, கொலைவல்பெருங் கூற்றம் கோட்பார்ப்ப ஈண்டை வலையகத்துச் செம்மாப்பார்மாண்பு.' (331) என்னும் வெண் பாவின் முன்னீரடியில் ஆமையினியற்கை யொன்றனை உவம மாக்கிப் பின்னீரடியில் மாக்களினியற்கையைப் பொருளாக்கிய துணர்க. பிறவற்றைக் கொன்று, அவற்றின் ஊனைத்தின்று தம் ஊனைப் பெருக்கும் கொலைஞரே அவற்றைக் கொல்லும் முறைமையை உணர்வர். ஆமையைக் கொல்வதரிது. நெருப்பு மூட்டி உலை நீரை அடுப்பில் ஏற்றி அதில் ஆமையை இடுவர் அதைக் கொல்லுமாறுணர்ந்தோர். தீயும் சுடர்விட்டெரியும். நீரும் சூடுற்றுக் கொதிக்கும். ஆமையும் நீரில் இன்புற்றுத் திளைக்கும். நீர் காயக்காய மாய்ந்துகொண்டே வரும் ஆமை. தான் அழிந்து வரும் நிலையை அறியாது அது. அதுவே முன்னீரடியிற் குறித்தது. ஆமைக்கும் மாக்களுக்கும் வாழ்க்கை யின்பமும் அழியும் நிலையினை அறியாமையும் போது. பின் அழிதலை முன் அறியாமை மாறுதது. அதனை மாண்பு என்றது இவ்வெண்பா. அஃது எதிர்மறையிலக்கணை. நம் அப்பர் சைன மதத்திற் சேர்ந்தொழுகி மீண்டுய்ந்தவராதலின், அச் சைனர் குறித்ததோ ருவமையைத் தமது திறத்திற்கேற்றி, நமது திறத்தை நாடச் செய்தருளினர். தொலைவிலிராது சூழ்ந்து (வளைத்துக்) கொண்ட கள்வர்க்கு நடுங்காதார் எவர்? ஒருவர் அல்லர்

ஐவர். உயிர் உடலின் நீங்குவதிற் சிறிதும் வெறுப்பிலராயினும், அஃது அதில் உள்ளபோதே உய்யப் பார்க்கும் விரைவினை யுடைய உத்தமர்க்கு, அவ்வுய்தி எய்துமுன் உடற்குக் கேடு வருவதாயின், அஞ்சாதிருத்தல் ஒல்லாது. ஐவரும் சூழ்ந்து நடுக்கம் விளைக்கினும் அவர் சூழ்ச்சிக்காளாகி, அவர் ஆட்டு மாறுடியும் ஒட்டுமாறேடியும் காட்டுமாறு கண்டும் ஊட்டு மாறுண்டும். இளைப்புறினும் அவர் திறத்தில் ஓர் இன்பம் உண்டு போலத் தோன்றும். அவ்வின்பத்தையே நாடி, அவர் வலையிலே சிக்கி வருந்துவதற்கே மீண்டும் அவாவுறுதல் பேதைமை யன்றி வேறில்லை. ஆமைக்குத் தெளிவிருப்பின், வெந்நீரில் திளைக்குமோ ? அவ்வெப்பம் அதன் உடற்கினிதா யிருந்து, அதைத் தெளியாமை அக் களியாமைக்கு அழிவாக் கிற்று. மெய் வாய். கண், மூக்குச் செவி ஆய ஐந்தனுலும் முறையே உறும் ஊறு, சுவை, ஒளி, நாற்றம். ஓசை ஐந்தும் பிறப் பிறப்பாகிய துன்பத்தை விளைக்கும் என்று தெளியாமையே பேரின்ப வாழ்வு பெறவொட்டாது தடையாயிருப்பது. பிறந் திறந்துழலும் பெருந்துன்பத்தைச் செய்கின்றது. தெளிந்து திருவருள் பெற்றுச் சிவமாதற்கே பிறந்தேன். தெளியாமல் ஐம்புலத்தாசை வலையுட்பட்டுப் பிறவிப்பெருங் கடலில் விழுந்து துன்புறுதற்கும் பிறந்தேனல்லேன் என்று இத்திருப்பாடல் உணர்த்துகின்றது. பானுகோபன் வீரவாகுவேர் திருமுன் போந்து போர்செய்த களிப்பில் முழுகித் திளைத்திருந்து, தான் தன்குலத்தோடு வேரறச் சாய்ந்தொழிய இருக்கும் பின் விளைவைச் சிறிதும் தெளிந்திலன். அதனுல், அவனை ‘ உலைபடும் இளவெந்நீரின் உளம் மகிழ் கமடம் ஒத்தான் ’ எனத் தணிகைப் புராணத்திற் குறித்தருளினர் கச்சியப்ப முனிவர். இதனேடு நாலாந் திருமுறையிலே திருநேரிசைப் பகுதி முற்றும். என்னையாளும் தருமைத் திருமடத்தின் 25 ஆம் பட்டத்துக் குருமகா சந்நிதானம் சீலத்திரு. சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களை எழுமையும் மறவாது போற்றி வாழ்த்துவ தொன்றே அன்றித், திருமுறைப் பொருளில், அடியேனை ஈடுபடுத்தி, இரண்டாவது திருமுறைக்கும் இதற்கும் பொருள் எழுதுவித்து, சிவசிந்தனையை இடை விடாது அடையச்செய்தருளிய பேரின்பக்கொடைக்கு, அடியேன் செய்யுங் கைம்மாறு வேறில்லை. வாழ்க அவர்கள் பொன்னர் திருவடி மலர்கள். வளர்க தருமையாதீனத் திருமுறைப் பணி.

# 80. கோயில்

## திருப்பதிக வரலாறு

நீடுந் திருப்பெருகோளி நிறை யம்பலம் நினைந்து கூடும் அன்பால் இன்புறு குணமும் பெறவரும் நிலைகூட, ஆடுங்கழல் புரியும் அமுதத்திருநடம் ஆராவகை தொழுது ஆர்கின்ற திருநாவுக்கரசு நாயனுர், தலைமிசைப் புனையஞ்சலியும், விழிகள் ஒழிவறப் பொழியும் மழையும், பரிந்துருகும் அகக்கரணங்களும், நிலமிசை விழும் முன்பு எழும் (வணங்கும் பேறெய்தும்) திரு மேனியும், பின்ருழ் சடையான் திருநடங் கும்பிடும்பேரார்வமும் கோண்டு, திருவருள் பொழியும் கருணை பெறவரும் ஆனந்த மெய்த்தன்மையிற் பாடிய திருவிருத்தங்களுள் ஒன்று இத் திருப்பதிகம்.

திருவிருத்தம் பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

பாளை யுடைக்கமு கோங்கிப்பன் மாட நெருங்கியெங்கும்
வாளை யுடைப்புனல் வந்தெறி வாழ்வயற் றில்லைதன்னுள்
ஆள வுடைக்கழற் சிற்றம் பலத்தர னாடல்கண்டாற்
பீளை யுடைக்கண்க ளாற்பின்னைப் பேய்த்தொண்டர் காண்ப
தென்னே. 770

770. இத்திருப்பதிகத்திலே பாதாதிகேசாந்தம் பாடி மீண்டும் பாதத்தைப் போற்றிய மரபுணர்ந்துகொள்ளலாம். இது சிவ தரிசன விதி. திருவடியிற்ருெடங்கித் திருவடியின் முடிவதே சிவதரிசன கிரமம். 1. ஆடற் காட்சி. 2. திருவடிக் காட்சி 3. துகிற் காட்சி. 4. கச்சுக் காட்சி. 5. கவித்தகைக் காட்சி. 6. ஏனத்தெயிற்றுக் காட்சி. 7. சிரித்த திருமுகக் காட்சி. 8. நெற்றிக்கண் காட்சி. 9. தூமத்தமலர்க் காட்சி. 10. திருவடிப் பெருவிரற் காட்சி ஆகிய பத்தும் முறையே குறிக்கப்பட்டன. பாளையை உடைய கமுக (பாக்கு) மரம். வாளைமீன். எறி வயல். புனல் எறியும் வயல். வயலையுடைய தில்லை. இது தலப்பெயர். வழிபடும் அன்பரை ஆளக் கழ லுடையது திருவடி. கழல் திருவடிக்கு இடப்பொருளாகு பெயர்.

போருவிடை யோன்றுடைப் புண்ணிய மூர்த்தி புலியதளன்
உருவுடை யம்மலை மங்கை மணுள னுலகுக்கெல்லாம்
திருவுடை யந்தணர் வாழ்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
றிருவடி யைக்கண்ட கண்கோண்டு மற்றினிக் காண்ப
தென்னே. 771

சிற்றம்பலம் - தகராகாசம். இத்திருக்கோயிலின் போன்மன்றின் பேயர். திருக்கூத்தனைக் கண்ட கண்கள் மற்றேவையுங்காணு. மேய்த்தோண்டர் திருக்கூத்தினைக் கண்ட கண்களால் மற்றே வற்றையுங் காணுர். திருக்கூத்தல்லாதவற்றைக் காண்போர் பேய்த்தோண்டர். காணுங் கண்கள் பீளையுடைய கண்கள். திருவிசைப்பாவிலே நாலாவது திருப்பதிகம் கண்ணும் வாயும் முறையே காணவும் பேசவும் தகாத பேயரைக் கூறிற்று. மூவாயிரவர் தங்களோடு முன்னரங்கேறி நின்ற கோவே உன்றன் கூத்துக் காணக் கூடுவதென்று கோலோ ' (திருவிசைப்பா. 196) ' தென்றில்லை யம்பலத்துள் அத்தா உன்றன் ஆடல் காண அணைவதும் என்று கோலோ (ஷை. 197) ' தேவே தென்றிருத்தில்லைக் கூத்தாடீ நாயடியேன் சாவாயும் நினைக்காண்டல் இனி உனக்குத் தடுப்பரிதே.' (ஷை. 214) ' ஐந்து பேரறிவும் கண்களே கோள்ள .....இந்து வாழ் சடையான் ஆடும் ஆனந்த எல்லையில் தனிப்பேருங் கூத்தின் வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார். ' (பேரிய புராணம்).

771. போருவிடை - போரேறு. ஒன்று உடை புண்ணிய மூர்த்தி - தனித்ததோன்றனையுடைய அறவடிவினன். புலி அதளன் - புலித்தோலாடையன். உரு உடைய மலை மங்கை - அழகுடைய பார்வதி. அம் மலைமங்கை எனக் கோண்டு அழகிய பார்வதி எனின், உருவை மேனியாகக் கோள்க. மணுளன் :- மணவாளன் என்பதன் மரூஉ. உலகுக்கு எல்லாம் - எல்லா வுலகங்கட்கும். திரு :- பேரின்பச் சேல்வ முதலிய யாவும் திரு எனப்படும். தில்லைவாழந்தணர் ' போங்கிய திருவினீடும் போற்புடைப் பணிகளேந்தி மங்கலத் தோழில்கள் சேய்து மறைகளாற்றுதித்து.........அங்கணர் கோயிலுள்ளா அகம்படித் தோண்டு சேய்வார் ' (பேரியபுராணம் தில்லைவாழ. 4) 'திருநடம்

தொடுத்த மலரொடு தூபமுஞ் சாந்துங்கொண் டெப்பொழுதும்
அடுத்து வணங்கு மயனொடு மாலுக்குங் காண்பரியான்
பொடிக்கொண் டணிந்துபொன் னாகிய தில்லைச்சிற் றம்பலவன்
உடுத்த துகில்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்ப
தென்னே. 772

வைச்ச பொருணமக் காகுமென் றெண்ணி நமச்சிவாய
அச்ச மொழிந்தே னணிதில்லை யம்பலத் தாடுகின்ற
பிச்சன் பிறப்பிலி பேர்நந்தி யுந்தியின் மேலசைத்த
கச்சி னழகுகண் டாற்பின்னைக் கண்கொண்டு காண்ப
தென்னே. 773

புரிவார்க் காளாந் திருவினுற் சிறந்த சீரார்' (ஷை 5). 'உல கெலாம் புகழ்ந்து போற்றும் மானமும் பொறையும் தாங்கி மனையறம் புரிந்து வாழ்வார்' (ஷை 7). 'அகலிடத் துயர்ந்த தில்லை யந்தணர் அகிலமெல்லாம் புகழ்திரு மறையோர்' (ஷை 10) என்றருளிய சேக்கிழார் திருவாக்கால் அறியக் கிடக்கும் திருவை ஈண்டு நினைக. திருவடியைக் கண்ட கண்களால் மற்றவற்றைக் காண்டல் சிவபத்தர்க்கு வேண்டாதது.

772. தொடுத்தமலர் - பூந்தொடையல். மாலையும் தூபமும் (தீபமும்) சாந்தும் பிறவும் கொண்டு புரியும் பூசை சிவதரிசனத் திற்கு இன்றியமையாத சாதனம். எப்பொழுதும் வணங்குதல். அடுத்து வணங்குதல். அயனும் மாலும் அம்பலவனைக் காணாமைக்கு அகந்தையே அன்றி, அவர் செய்த பூசை ஏது வன்று. பொடி - திருவெண்ணீற்றுப் பொடி. அணிந்தது வெண்ணீறு. அம்பலம் பொன். உடுத்த துகில் - திருக் கூத்திற்குரியதாக அசைத்த எழிலுடை.

773. வைச்ச (பொருள்) - வைத்த (பொருள்) என்பதன் மரூஉ. பிற்பயக்கச் சேர்த்து வைத்த பழம்பொருள். பின்னர் நமக்குப் பயன்படுவதாகும் என்று எண்ணி முன்னர் வைச்ச பொருள் நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்து. அப் பொருளே, வைப்புச் செல்வம். அச் செல்வம் இருத்தலால் பேரின்ப வாழ்வு குறைவற நடக்கும் என்று துணிந்து அச்சம் ஒழிந்தேன். அழகிய தில்லையம்பலத்தில் ஆடுகின்ற பித்தன்;

செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
மைஞ்ஞின்ற வொண்கண் மலைமகள் கண்டு மகிழ்ந்துநிற்க
நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீல மணிமிடற்றன்
கைஞ்ஞின்ற வாடல்கண் டாற்பின்னைக் கண்கொண்டு
காண்பதென்னே. 774

ஊனத்தை நீக்கி யுலகறி யவென்னை யாட்கொண்டவன்
றேனைத் தெனக்கினி யான்றில்லைச் சிற்றம் பலவனெங்கோன்
வானத் தவருய்ய வன்னஞ்சை யுண்டகண் டத்திலங்கும்
ஏனத் தெயிறுகண் டாற்பின்னைக் கண்கொண்டு காண்ப
தென்னே. 775

பிறப்பில்லான்; (இறப்புமில்லான்); திருப்பெயர் நந்தியெனப் பெற்றான். அவன் திருவரையிற் கட்டிய கச்சினழகைக் கண்டால், கண்ட அக்கண்ணைக்கொண்டு காணத்தக்கது பின்னை என்னை உளது ?

774. நாலடியிலும் 'நின்ற' என்பது ஞின்ற என்று ஆயிற்று. நகர ஞகரப் போலி. இத் திருவிருத்தத்தை 'ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி ஞஃகான் உறழும் என்மரும் உளரே' (நன்னூல் 124) என்பதன் உரையிற் காட்டினார் சங்கர நமச்சிவாயப் புலவர். 283 குறிப்பிற் காண்க. செய் - வயல். நீலம் - நீலோற்பலம். கருங்குவளை. கருநெய்தல். மை - கண்ணிற்கிடும் மை. மலைமகள் - சிவகாமியம்மை. விளக் கொத்தமிடறு. மணிமிடறு. நீலமணிமிடறு. 'திருநீலகண்டன்'. கை நின்ற ஆடல் :- என்று வந்தாய் என்னும் திருக்குறிப் புணர்த்தும் திருக்கை நின்ற திருக்கூத்து.

775. ஊனத்தை நீக்கி உலகு அறிய என்னை ஆட் கொண்டவன் :- பரசமயஞ் சென்றனன் என்னும் நீங்காத குறையை நீக்கி உலகோர் அறியுமாறு அடியேனைச் சூலைநோய் கொடுத்து ஆளாகக்கொண்ட குருநாதன். எனக்குத் தேனை ஒத்து இனியவன். எம் கோன். வானத்தவர் உய்ந்து - போக வலிய நஞ்சினை உண்டவன். உண்ட நஞ்சு அடங்கிய இடம் கண்டம். அவன் உட்கொண்டானல்லன். 'பரவைக்கடல் நஞ்சம் உண்டதும் இல்லை' (798) வெளியேகான்றதும் இல்லை.

தெரித்த கணையாற் றிரிபுர மூன்றுஞ்செந் தீயின்மூழ்க
எரித்த விறைவ னிமையவர் கோமா னிணையடிகள்
தரித்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
சிரித்த முகங்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பது
தென்னே. 776

திருக்கழுத்தளவில் நிறுத்த வல்ல திறத்தைக் காட்டினன். ஆதலின் உண்ட கண்டம் என்றார். அத்தகு மேன்மை உற்ற அக் கண்டத்திற்குப் பரிசில் ஏனத்தெயிறு. பன்றிக்கோடு. 'ஏனமுளைக் கொம்பு' அது கழுத்திலணிந்துள்ளதொன்று. தளைகெடாதவாறு ய என்னை என்புழி விட்டிசைத்துக் கொள்க.

776. தெரித்தகணை - ஆராய்ந்தெடுத்த அம்பு. 'திரிபுரம் மூன்றும்' என்றதால், திரிந்தபுரம் என்றிறந்தகாலப் பொருட்டாய வினைத்தொகையாகும். செந்தீயில் மூழ்கியதால் முக்காலத்தது அன்று. மூழ்க எரித்த இறைவன் 3. 64. 7; 3. 65. 6. பார்க்கின் முப்புரமெரித்தது மும்மலநீக்கமெனல் விளங்கும். இமையவர் எல்லார்க்கும் கோமகன். 'மகன்' என்றது 'மான்' என மருவிற்று. இதனையும் 'மகள்' என்றதன் மரூஉவாகிய 'மாள்' என்றதையும் நூலோர் இறுதிநிலையாக் கொண்டனர். சேரன் மகன் - சேரமான். மலையன் மகன் - மலையமான். மருமகன்-மருமான். 'ஆன் என் இறுதி இயற்கையாகும்'(தொல். சொல். விளி. 15) என்பதற்குதாரணமாகச் சேரமான் மலையமான், என்பன காட்டுதல், சொல்லாராய்ச்சியாளர்க்கு ஒவ்வாது. இணையடிகள்-ஒத்த தாள்களை. தரித்த மனத்தவர் - உள்ளத்திற் பொறுத்த அந்தணர், அடியவர் முதலோர். வாழ்கின்ற - சிவானந்த வாழ்வு நடத்துகின்ற. தில்லை :- ஊர்ப் பெயர். சிற்றம்பலம், பேரம்பலம், திருமூலட்டானம் முதலிய பல (திருக் கோயிற்) பிரிவுகளுள் ஒன்றான பொன்மன்றைக் குறிப்பது சிற்றம்பலம். திருக்கோயிலின் எல்லாப் பிரிவுகளையும் ஒரு சேரக் குறித்து வழங்குந் திருப்பெயர் 'சிதம்பரம்' என்பது. 'பெரும்பற்றப்புலியூர்' என்பதும் தமிழ்ப்பழம் பெயர். சிரித்த முகம் - புன்னகை முகிழ்த்த நன்னர் வாண்முகம். அது கண்ட கண்ணுற் காணத் தக்கது வேறுளது?



தில்லைச் சிதம்பர நடன சபாபதி

சுற்று மமரர் சுரபதீ நின்றிருப் பாதமல்லாற்
பற்றேன் றிலோமேன் றழைப்பப் பரவையு ணஞ்சையுண்
சேற்றங் கநங்கனைத் தீவிழித் தான்றில்லை யம்பலவன் [டான்
நேற்றியிற் கண்கண்ட கண்கோண்டு மற்றினிக் காண்ப
தென்னே. 777

சித்தத் தேழுந்த சேழுங்கம லத்தன்ன சேவடிகள்
வைத்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
முத்தும் வயிரமு மாணிக்கந் தன்னுள் விளங்கியதூ
மத்த மலர்கண்ட கண்கோண்டு மற்றினிக் காண்பதேன்னே.

... .... .. .... ... ...... ... . ..... .... .. . . ....

777. பரவை - பாற்கடல். சுற்றும் அமரர் - சூழ்ந்து தோழும் தேவர். சுரபதி - சுரர்க்குப்பதி (- இந்திரன்). அமரரும் சுரபதியும் அழைப்ப நஞ்சைஉண்டான். அமரர் சுரபதி என்னுந் தோடர் உம்மைத்தோகையாகா. ‘ தோகை ’ ‘ ஒட்டு ’ ‘ பேயரி ஞகிய தோகை ’ ‘ இருபேயரோட்டு ’ என்பவற்றை உணர்ந்தோர் ஒட்டாதவற்றைத் தோகை என்ஞர். ‘ எல்லாத் தோகையும் ஒரு சோல் நடைய ’ (தோல். சோல். எச்சவியல். 24). ‘ உயர் திணை மருங்கின் உம்மைத்தோகையே பலர்சோல் நடைத்து என மோழிமஞர் புலவர் ’ (ஷை 25). அதஞல், ‘ அமரர் சுரபதி ’ என்னுந் தோடர் பலசோல் நடைத்தே அன்றி ஒரு சோல் நடைத்தன்று. தேவரும் இந்திரனும் தில்லையம்பலவனை நோக்கி, அழைத்துக் குறையிரந்தது :- ‘ நின் திருப்பாதம் அல்லால் பற்று ஒன்று இல்லோம் ’ என்றுரைத்ததாம். பரவை :- காரணப் பேயர். அங்கன் - உருவுளி. அநங்கன் - உருவிலி. ந+அங்கன்=அநங்கன். அங்கு - அக் கயிலையில் யோகியா யிருந்த இடத்தில்; காலத்தில். அநங்கனைச் சேற்று - (உருவிலி யாகக்) கருவேளை அழித்து. தீ விழித்துச் சேற்ருன் என்று இறுதி பிரித்துக் கூட்டியுரைக்க. தீ விழித்தது நேற்றிக் கண். அது காமங்கடிந்த சேயற்கருஞ் சேயலைப் புரிந்த பேருமைக்குரியது. அதனைக் கண்ட கண் கோண்டு, காமங்கோடுக்கும் பிறவற்றைக் கண்டு பிறவிப் பேருங்கடலில் அழுந்தாவாறு, பேரின்பக் கடலில்அழுந்தி நிற்க, அதனையே கண்டுகோண்டு இருக்க.

778. சித்தத்து எழுந்த சேழுங்கமலத்து அன்ன சேவடிகள் :- புறத்துள்ள கமலம் சேற்றிற் பிறந்தோளிருந் தாமரை. அகத்தாமரை, உள்ளப்புண்டரிகம், இதயகமலம்,

தருக்கு மிகுத்துத்தன் றோள்வலி யுன்னித் தடவரையை
வரைக்கைக ளாலெடுத் தார்ப்ப மலைமகள் கோன்சிரித்து
அரக்கன் மணிமுடி பத்து மணிதில்லை யம்பலவன்
நெருக்கி மிதித்த விரல்கண்ட கண்கொண்டு காண்பதென்னே

திருச்சிற்றம்பலம்

---

ஆறுதாரகமலம் எல்லாம் பங்கயம் அல்ல. 'கருதுவாரிதயத்துக் கமலத்து ஊறுந் தேனவன்காண்' 'என்னிடைக் கமலம் மூன்றினுள் தோன்றியெழுஞ்சுடர்' (திருவிசைப்பா 49) என்று சிவபூசையுள் அகப்பூசை புரிவார், இதயகமலம் உந்திக்கமலம் புருவநடுக்கமலம் மூன்றினும் தோன்றியெழுஞ் சுடர் என்க. சிவஞானபோதம் சூ. 9. மாபாடியம் பார்க்க. சித்தத்து எழுந்த செழுங்கமலத்து வைத்த மனத்தவர். கமலத்தில் அக் கமலத்தை அன்ன சேவடிகள். கமலத்துச் சேவடிகளை வைத்த மனத்தவர். தில்லைவாழந்தணர் முதலோர். 'நீலத்தார் கரியமிடற்றார்' எனத் தொடங்குந் திருப்பாடலை நினைக. (3. 1. 3). முத்து, வயிரம், மாணிக்கம் விளங்கிய தூய (முடியணிந்த) சென்னி. மத்தகம் (- சென்னி) என்பது மருவி மத்தம் என்றாயிற்று. 'பாலோளியாமத்தனே மதுராபுரி யுமையாளத்தனே ஆலவாயா' (சிவபோகசாரம்). மத்தம் - ஊமத்தை. 'மத்தமலர்' சென்னியி லுள்ள ஊமத்தை மலர் எனலுமாம். ஆயினும், பாதாதிகேச மாதலின் சென்னியை இதிற்கொள்ளல் இன்றியமையாதது. விளங்கிய என்னும் பெயரெச்சம் (சென்னியென்னும் பொருட் டாயின் அம்) மத்தத்தைக்கொள்ளும்.

779. தருக்கு - உடற்றிமிர். (1. 5. 7) மிக்கது தருக்கு, மிகுத்தவன் அரக்கன். தோள்வலி 'புஜபலம்'. உன்னி - நோக்கி. தடவரை - பெருங்கைலை. வரைக்கைகள் - மலைபோலுங் கைகள் வரையை எடுத்து ஆர்ப்ப. ஆர்ப்ப - ஆரவாரஞ் செய்ய. கோ - கோமகன்; கோமான்; கோன். அரக்கன் - இராவணன். பத்து மணி முடியையும் நெருக்கி மிதித்த விரலைக் கண்ட கண்.

# 81. கோயில்

## திருப்பதிக வரலாறு

80 ஆவது திருப்பதிக வரலாறு காண்க.

திருவிருத்தம் பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

கருநட்ட கண்டனை யண்டத் தலைவனைக் கற்பகத்தைச்
செருநட்ட மும்மதி லெய்யவல் லானைச்செஞ் தீமுழங்கத்
திருநட்ட மாடியைத் தில்லைக் கிறையைச்சிற் றம்பலத்துப்
பெருநட்ட மாடியை வானவர் கோனென்று வாழ்த்துவனே.

780. கரு - கருநிறமுடைய நஞ்சினை 'கருவார்கச்சி' 'கருவமைந்தமாநகர்' என்புழிக்கொள்ளும் பொருள்கொண்டு, தேவாசுரர் வாழ்விற்குரிய கருவை நட்ட கண்டன் எனலுமாம். நட்ட - நிலைக்கப்பண்ணின. கண்டனை - திருநீல கண்டனை. அண்டத் தலைவனை - அண்டர் நாயகனை. கற்ப கத்தை ;- 'புலாலுடம்பே புகுந்து நின்ற கற்பகமே'. செரு நட்ட மும்மதில் எய்ய வல்லான் :- 'மறப்பிலா அடிமைக் கண் மனம் வைப்பார் தமக்கெல்லாம் சிறப்பிலார் மதில் எய்த சிலை வல்லார்' (3. 64. 7) என்றதில், ஆளுடைய பிள்ளையார் மலநீக்கம் உறத்தக்கார் இன்னர் என்றருளியதுணர்க. திருநட்டம் - திருக்கூத்து. செந்தீயி லாடியது அது. ஆடி :- பெயர். 'காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி' என்புழியும் பெயராய் நின்ற 'வார்த்தை'யைத் தழுவி ஆறனுருபேற்பதறிக. இறை - இறைவன். அம்பலம் சிறிது. ஆட்டம் பெரிது. பெரு நட்டம் 'மகாதாண்டவம்'. வானவர்கோன் :- 'வானோர்க்கும் ஏனோர்க்கும் பெருமான்' (63). வாழ்த்துவன் - பரவுவேன், 'வாழ்த்துவதும்......பரவுவனே' (திருவாசகம்). திருத்தில்லையம் பலத்தானை வாழ்த்தித் தங்கள் வாழ்வும் வைப்பும் ஆக அவனைக் கொண்டு பேரின்புறுவது பிரியாத அந்தணர் நெறி. (கோயில் நான்மணி மாலை 34)

ஒன்றி யிருந்து நினைமின்க ளுந்தமக் கூனமில்லைக்
கன்றிய காலனைக் காலாற் கடிந்தா னடியவற்காச்
சென்று தொழுமின்கள் தில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
என்றுவந் தாயென்னு மெம்பெரு மான்றன் றிருக்குறிப்பே.

கன்மன வீர்கழி யுங்கருத் தேசொல்லிக் காண்பதென்னே
நன்மன வர்நவி றில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
பொன்மலை யில்வெள்ளிக் குன்றது போலப் பொலிந்திலங்கி
என்மன மேயொன்றிப் புக்கனன் போந்த சுவடில்லையே. 782

781, ஒன்றியிருந்து நினைதல்-சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சா யிடை விடாது நினைத்தல்; அத்துவிதமாதல், ஊனம் - குறை. பிறப்பிறப் பகலாமையே உயிர்க்குக் குறை; அதற்குத் தடை மும்மலச் சேர்க்கை அஃது அற்றால், சிவஞானப் பேறுண்டாம். அஃதுண்டாமளவு மும்மலம் அறும். கன்றிய - சினந்த. காலனை - இயமனை. காலால் - திருவடியால். அடியவற்கு ஆய்-அடியவனுக்கிய மார்க்கண்டேய முனிவனுக்கு இரங்கியருள்வானாகி. கடிந்தான் - சினந்துதைத்த காலன், தில்லையுள் சிற்றம்பலத்து நட்டம் - தில்லை நகரில், சிற்றம் பலத்திலாடுந் திருக்கூத்தனை. சென்று - அத்தில்லையுள் போய், தொழுமின்கள் - தொழு(துய்)மின்கள். 'உந்தமக்கு' 'நினை மின்கள்' 'தொழுமின்கள்' என்னும் பன்மை உலகோரைக் குறித்தவை. நீயிர் சென்று தொழுது ஒன்றியிருந்து நினைமின், எய்தும் பயனைப் பெறுவதுறுதி என முன்னரே நன்றுணருமாறு, எம்பெருமான் திருக்குறிப்பு 'என்று வந்தாய்' என்னும்படி அவனது கவித்த திருக்கை காட்டுகின்றது, 'நாயேனைத் தினையின் பாகமும் பிறிவது திருக்குறிப்பு அன்று' (திருவாசகம் 41) 'கோனே உன்றன் திருக்குறிப்புக் கூடுவார் நின் கழல் கூட...... புழுக்கூடு காத்து......இருப்பதானேன்' (ஷை. 59) 'அவன்றன் திருக்குறிப்பே குறிக்கொண்டுபோமாறு அமைமின்' (ஷை. 605) 'கடிசேரடியே வந்தடைந்து கடைக்கொண்டிருமின் திருக்குறிப்பை' (ஷை. 606).

782. கல்மனவீர் - கல்லைப் போலுந்திண்ணிய மனத்தீர்; உருகாத நெஞ்சுடையீர், கழியும் கருத்தே - நிலையாத கருத்தையே. சொல்லிக் காண்பது - சொல்லிப்பார்ப்பது.

குனித்த புருவமுங் கோவ்வைச்சேவ் வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போன் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய வேடுத்தபோற் பாதமுங் காணப்பெற்றுல்
மனித்தப் பிறவியும் வேண்டுவ தேயிந்த மாநிலத்தே. 783

கருத்தைச் சோல்லல் - விருப்பங்களை அறிவித்துக் கோடுத்தருள் என வேண்டுதல் நட்டம் காண்பதென்னே? காண்டல்:- கேட்டவரங்கள் கைகூடப் பேறுதலுமாம் என்னே - என்ன பயன்? அவை பற்று வளர்த்து மீண்டும் பிறப் பிறப்புட் படுத்துவன ஆதலின் பயன் (ஆன்மலாபம்) இன்றேன்றவாறு. 'நன்மனவா நவில்' என்றே பழம் பதிப்புக்களிலும் ஏடுகளிலும் உளது. நன்மனவர் - கன்மனமின்றி உருகும் நெஞ்சுடைய தில்லைவா ழந்தணர் முதலோர். நவில் - துதிக்கும். போன்மலையில் வேள்ளிக் குன்றதுபோலப் போலிந்து இலங்கி ஒன்றிப் புக்கனன். புகுந்த சுவடு இல்லை. புகுந்த என்பதன் மருஉவே போந்து என்பது. 'சேன்று அடைந்தேனுடைய புந்தியைப் புக்க அறிவு' (851) 'குழைவார் சிந்தை புக்கிருந்து போகாத புனிதன்' (6. 79. 2) 'வந்தாய் போயறியாய் மனமே புகுந்து நின்ற சிந்தாய்' (7. 21. 7) போந்த சுவடு - வேளியிற் போய சுவடு என்றலுமுண்டு. ஈண்டு அது போருந்தாது. போன்மலை - போன்மன்று. வேள்ளிக் குன்று - வேண்ணீறு சண்ணித்த மேனியுடைய நடராசப்பிரான். வேள்ளி வேற்பு - விடை. பவளவேற்பு - வள்ளலார். மரகதக் கோடி - மாமலையாள் என்றதை நினைக. பேரிய புராணம். அப்பர். 379.

783. குனித்த - வளைத்த. கோவ்வைச் சேவ்வாய் - கோவைப் பழம் போலுஞ் சேய்ய திருவாய். குமிழ் சிரிப்பு - புன்னகை. வளர்குமிழ் மலரும்' (கோயிற் புராணம் நடராசச். 14) என்றதால், மலரது முன்னிலையான அரும்பைக் குமிழ் எனல் புலப்படும். படவே, அரும்பும் நகையைக் குமிழ் சிரிப்பு என்பர். 'குமிண் சிரிப்பு' என்றதிற் குமிண் என்றது முதனிலையாதல் வேண்டும். அவ்வாறுேன்று தமிழில் வேறேங்குங்காணப்படவில்லை. 'முறுவலிப்பு' (786). பனித்த சடை - கங்கை நீராற் குளிர்ந்த சடை. 'பவளம் போல் மேனி :- (1050) 'பேரோளிப்பவள வேற்பேன......வீற்றிருந்த வள்ளலார்'

(பெரிய. அப்பர். 379) பால்வெள் நீறு - பால் போலுந் திருவெண்ணீறு :- 'செய்ய திருமேனி வெண்ணீருடி' (6. 9. 7) இனித்தம் - இனிதாந்தன்மை. இனிது அம். பேரின்பம் தரும் தூக்கிய திருவடி, 'வ+தனம்' - வகாரமாகிய சென்றடையாத திரு (துறைசையமக வந்தாதி 100). காணப்பெற்ருல் :- பேற லரி தென்றது. 'மனித்தப்பிறவி' 'மனித்தனுகிய பூழியன்' (தடாதகை. திருவவ. 64) 'மனித்தருக்கரசு' (திருமணப், 199) எனப் பரஞ்சோதி முனிவர் வாக்கிற் பயின்றுளது இச்சொல். 'பொல்லா மனித்தர்' என்ருருமுனர். மன்ருடுந் திருக்காட்சி கிடைக்கப்பெறின், வேண்டா என வெறுத்திழிக்கும் பிறவியும் வேண்டும் எனும் உயர்வுடைய் தாகும். 'மருந்தாகி நின்னடியே மறவேன் அம்மான் மறித்து ஒரு காற் பிறப்பு உண்டேல், மறவாவண்ணம் திருவாரூர் மணவாளா திருத்தெங்கூராய் செம்பொனேகம்பனே திகைத் திட்டேனே.' 'மேலும் இப்பூமிசை இன்னம் பாலிக்குமோ இப்பிறவியே' 'வாய்த்தது நம் தமக்கு ஈது ஓர் பிறவி மதித்திடுமின்' 'திருநாவுக்கரசர் தங்கு பிறப்பே வீட்டினுக்கு மேலாம் பெருமை சாதித்தார்' (பெரிய புராணம் அப்பர் 312) 'மண்ணில் இருவினைக்குடலாய் வான் நிரயத் துயர்க்குடலாய் எண்ணிலுடல் ஒழிய முயல் அருந்தவத்தால் எழிற்றில்லைப் புண்ணிய மன்றினில் ஆடும் போது செய்யா நடம் காண நண்ணும் உடல் இது அன்ரே நமக்குடலாய் நயந்த உடல்' 'மறந்தாலும் இனி இங்கு வாரோம் என்று அகல்பவர் போல், சிறந்தார நடம் ஆடுந் திருவாளன் திருவடிகண்டு இறந்தார்கள் பிறவாத இதில் என்ன பயன்? வந்து பிறந்தாலும் இறவாத பேரின்பம் பெறலாம் ஆல்.' 'ஓதல் உறு மருந்தில்லை யொழிய வொருமருந்தில்லை.' (கோயிற் புராணம்) 'எவ்வுடல் எடுத்தேன் மேல்நாள் எண்ணிலாப் பிறவிதோறும் அவ்வுடல் எல்லாம் பாவம் அறம் பொருட்டாகும் அன்ரே தெவ்வுடல் பொடித்தாய் உன்றன் சேவடிக்கு அடிமை பூண்ட இவ்வுடல் ஒன்றே அன்ரே எனக்கு உடலானது ஐயா!' (திருவிளையாடல் விடையிலச்சினை. 16). 'ஆல வாயுடையார் புகழ் பாடப் பெறுவேமேல் வேண்டுவதிம் மனித யாக்கை (ஷை. திருவால வயானபடலம். 1) 'விரைவிடை யிவரும் நினைப்பிறவாமை வேண்டுநர் வேண்டுக மதுரம் பெருகுறு தமிழ்சொல் மலர் நினக்கு அணியும் பிறவியே வேண்டுவன் தமியேன்' (சோணசைலமாலை). 'இந்த மாநிலத்தே' (1014 - 15).

வாய்த்தது நந்தமக் கீதோர் பிறவி மதித்திடுமின்
பார்த்தற்குப் பாசு பதமருள் செய்தவன் பத்தருள்ளீர்
கோத்தன்று முப்புரந் தீவளைத் தான்றில்லை யம்பலத்துக்
கூத்தனுக் காட்பட் டிருப்பதன் றேநந்தங் கூழைமையே.

பூத்தன பொற்சடை பொன்போன் மிளிரப் புரிகணங்கள்
ஆர்த்தன கொட்டி யரித்தன பல்குறட் பூதகணந்
தேத்தென வென்றிசை வண்டுகள் பாடுசிற் றம்பலத்துக்
கூத்தனிற் கூத்துவல் லாருள ரோவென்றன் கோல்வளைக்கே

... .. ... .... ...... . . . . . ...... ... . . . . . . . ......

784. நம் தமக்கு ஈது ஓர் பிறவி வாய்த்தது. இப் பிறவியை மதித்திடுமின். அவமதியாதீர் இப்பிறவியின் பயன்? தில்லையம்பலத்துக் கூத்தனுக்கு ஆட்பட்டிருப்பதன்றோ ? அதுவே நம் கூழைமை. நம் கூழைமை கூத்தனுக்கு ஆட்பட்டிருப்பது அன்றோ ? ஆம் ஆம். ஆயின், வாய்த்த இப்பிறவியை மிகப் பெரிதாக மதித்து அவனுக்கு ஆட்பட்டிருப்பதே இப்பிறவியின் பயனாகிய கூழைமை. பார்த்தற்கு - அருச்சுனனுக்கு, பிரதைக்குப் புதல்வன் என்ற காரணத்தால் வந்த பெயர் பார்த்தன் என்பது. பாசுபதம் அருள் செய்தவன். 'அருச்சுனற்குப் பாசுபதங் கொடுத்தான்' (71). பத்தருள்ளீர்- தொண்டருள்ளீர். அவருள் ஒருவராயடங்கிய பெருமையீர். 'சொல்லாண்ட சுருதிப்பொருள் சோதித்த தூய்மனத் தொண்டருள்ளீர்' (திருப்பல்லாண்டு. 4) அன்று - 'மூவார் புரங்கள் எரித்த அன்று. கோத்து - மேருவில்லிலே எரி காற்றீர்க்கரிகோலை' வாசுகிநாணிலே கோத்து. தீவளைத்தான்- தீவளைந்து எரிக்கச் செய்தான். செய்தவனும் வளைத்தவனுமாகிய கூத்தனுக்கு ஆட்பட்டிருப்பது அன்றோ நம் கூழைமை என்க. கூழைமை ,- 769. குறிப்பினைக் காண்க. 'அவ்வவ் விடம்புக்கு அவ்வாயர் பெண்டிர்க்கு அணுக்கனாய்க் கோவ்வைக் கனிவாய் கொடுத்துக் கூழைமை செய்யாமே' (பெரியாழ்வார்:- 2 :- 5)

785. பொற்சடை :- போல்+சடை; பொலிவுடைய சடை. பின்னர்ப் பொன்போல் மிளிர என்றலின், இதனை உவமத் தொகையாக் கொள்ளல் பொருந்தாது. போல் என்பது (போல்+ அம்=) பொலம் என அம்முப்பெறலும், பொன் என ஈறு

முடிகொண்ட மத்தமு முக்கண்ணி னோக்கு முறுவலிப்புந்
துடிகொண்ட கையுந் துதைந்தவெண்ணீறுஞ் சுரிகுழலாள்
படிகொண்ட பாகமும் பாய்புலித் தோலுமென் பாவிநெஞ்சிற்
குடிகொண்ட வாதில்லை யம்பலக் கூத்தன் குரைகழலே 786

திரிதலும் உண்டு. 'பொன்னென் கிளவி யீறுகெட முறையின் முன்னர்த் தோன்றும் லகார மகாரஞ் செய்யுள் மருங்கிற் றொடரியலான' (தொல். எழுத்து 356) என்றது சொல்லாராய்ச் சிக்கு ஒத்ததன்று. ஈறு கெடலாம் லகாரம் மகாரம் தோன்றற்கு இயைபு யாது? நிலம் என்பதில் அம்முப்பேறு நோக்கின், இதன் பொருந்தாமை புலப்படும். பொலிதல் - விளங்குதல். விளக்கம் பல வகைத்து. பொன்னைப் போலும் விளக்கமே ஈண்டுக் கொள்ளற்பாலது. மிளிர்தல் - ஒளி செய்தல்; பிறழ்தல்; கீழ் மேலாதல். மூன்றும் சடைக்கிருக்கின்றன. பூத்தல் - பொலி வுற்றன. பொற்சடை பொன்போற் பூத்தன. மிளிரப் பூத்தன. புரிதல் - விரும்புதல். புரிகணம் - விரும்பும் கூட்டம்; அன்பர் இனம், அடியார் கூட்டம். ஆர்த்தன :- குடமுழவம் வீணை தாளம் குறுநடைய சிறுபூதம் முழக்க மாக்கூத்து ஆடுமே' (6. 4. 5). 'மாக்கூத்து' - மகாதாண்டவம். அரித்தல் - சிறிது சிறிதாக எடுத்துச் சேறல். 'அரித்தொழுகு வெள்ளருவி' (அப்பர்). அஃது ஈண்டு எடுத்துச் செல்லற்பொருட்டு. பொன் தீமணி விளக்குப் பூதம்பற்றப் புலியூர்ச்சிற்றம்பலமே புக்கார் தாமே' (6. 2. 9). கொட்டியரித்தன எனலுமாம். பல்பூதம் குறட்பூதம். பூதகணம். குறள்; சிந்து; நெடில்; கழிநெடில் என்பன உடலைக் குறித்த வேறுபாடு. குறளன், சிந்தன், நெடியன், நீண்டோன் (கழிநெடியன்) என்னும் பெயர்களை நினைக. குறளர்க்கு ஆமை உவமம். பெருங்கதை. க. 46 :- 261 - 3 பார்க்க.

786. முடிகொண்ட மத்தம் - திருமுடியிற் சூடிக்கொண்ட ஊமத்தம் பூ. முக்கண்ணின் நோக்கு - செங்கதிர், வெண்கதிர், செந்தீயாகிய மூன்று கண்களின் பார்வை. இறைவன் விசுவரூபி யாதலின், அவ் விசுவத்தில் ஒளிரும் அம் மூன்றும் அவனுடைய கண்களாயின. 'அருக்கனுவான் அரனுரு அல்லனோ'? அவன் உருவமும்ஆண்டவன்அவ்வுருவில் உள்ளஉயிருமாகக் கொள்க,

' அங்கதிரோனவனை அண்ணலாக் கருதவேண்டா வெங் கதிரோன் வழியே போவதற்கமைந்து கொண்மின் ' (411). முறுவலிப்பு :- முறுவல் (- பல், சிரிப்பு) என்பதனடியாக முறுவலித்தல் என்று தோன்றிய தொழிற்பெயர். ' நகை என்பது சிரிப்பு; அது முறுவலித்து நகுதலும் அளவே சிரித்தலும் பெருகச் சிரித்தலும் என மூன்றென்ப ' (தொல் பொருள். மெய்ப்பாடு 3 பேராசிரியம்) ' நண்ணுதார் முறுவலிப்ப நல்லுற்றார் கரைந்தேங்க எண்ணாராத்துயர் விளைக்கும் இவை யென்ன உலகியற்கை ' (திருவாய் மொழி. 4. 2. 9 தி. பா. 1.) முறுகல் என்பது கடுமையுறல் என்னும் பொருட்டு. அது முறுவல் எனமருவிற்று. திருகல் திருவல், கருகல் கருவல், மறுகல் மறுவல், சிறுகல் சிறுவல் முதலியன காண்க. பற்கள் கடியனவாதலை அவை தீயில் வெந்தழியாமையாற் காணலாம். முறுவலிப்பு - சிரிப்பு. புன்முறுவல். ' செவ்வாயிற்குமிழ் சிரிப்பு ' (783). துடி - உடுக்கை. கொண்ட கை - ஏந்திய திருக்கை. 'சேர்க்குந்துடி சிகரம்' ' தோற்றம் துடியதனில் ' (உண்மை விளக்கம்) ' தமருகக் கரம் ' சிதம்பரச் செய்யுட் கோவை. 1) ' துதைந்த வெண்ணீறு ' :- ' தூவெண்ணீறு துதைந்த செம்மேனி ' (5. 65. 4) தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியும் தாழ்வடமும் நாயகன் சேவடி தைவரும் ....உடையார் புகுந்தனர் வீதியுள்ளே! (அப்பர் புராணம். 140) சுரி குழலாள் - சுரிந்த கூந்தலையுடைய உமாதேவியார். சுரிகுழல் - வினைத்தொகை, சுரியல் :- ஆண் பெண்மயிர்ப் பொது. இது சுரிதல் என்னுந் தொழிற்பொருட்டு. படி-உருவம். (155. 6. 97. 10 )குழலாளதுருவம். குழலாள்படி கொண்ட பாகம். மங்கையுருவைக் கொண்ட இடப்பங்கு, பாய்புலித்தோல் :- ' பாய்புலி ' இறந்தகாலவினைத்தொகை. தோலுரிப்பதன் முன்னையது பாய்தல். புலியினது தோல். பாவி என் நெஞ்சில் எனமாற்றிப் பாவியாகிய என் நெஞ்சினுள் என்றுரைக்க. பாவி என நெஞ்சினைக் குணியாகக் கூறலும் பொருந்தும். ' அழுக்காறெனவொருபாவி ' (குறள். 168) ' இன்மை யெனவொருபாவி ' (1042) என்புழிப் பரிமேலழகர், பண்பிற்குப் பண்பில்லையேனும் தன்னை யாக்கினானை யிருமையுங் கெடுத்தற் கொடுமைபற்றி......பாவியென்றார் ; கொடியானைப் பாவியென்னும் வழக்குண்மையின் ' என்றுரைத்த துணர்க. குணத்திற்குக் குணமில்லை. குணிக்கே குணம்

படைக்கல மாகவுன் னுமத் தெழுத்தஞ்சே னுவிற்கொண்டேன்
இடைக்கல மல்லே னெழுபிறப் பும்முனக் காட்செய்கின்றேன்
றுடைக்கினும் போகேன் றொழுது வணங்கித் தூநீறணிந்துன்
அடைக்கலங் கண்டா யணிதில்லைச் சிற்றம் பலத்தரனே.

உண்டு. அழுக்காறும் இன்மையும் குணம். அவற்றைப் பாவி எனக் குணியாக்கின், அவற்றின் வேருய்ப் பாவம் என்னுங் குணம் அவற்றிற்கு உண்டு என்ருகும். ஆதலின், பண்பிற்குப் பண்பில்லையேனும்.........கொடுமைபற்றிப் பாவி யென்ருர்' என்றுரைத்தார். ஆண்டுப் பண்பி யில்லை யேனும் என்றல்பிழை. குடிகொண்டவா - குடிகொண்டவாறு என்னே! பெருவியப்பு. நெஞ்சில் அம்பலக் கூத்தன் குரைகழல் குடிகொண்டது.

787. அணிதில்லைச் சிற்றம்பலத்து அரனே உன் நாமத்து எழுத்து அஞ்சும் படைக்கலம் ஆக என் நாவில் கொண்டேன்; இடைக்கலம் அல்லேன்; உனக்கு எழு பிறப்பும் ஆள் செய் கின்றேன்; துடைக்கினும் போகேன்; தூநீறு அணிந்து தொழுது வணங்கி, உன் அடைக்கலம் கண்டாய். என் நாவில் உன் நாமம் கொண்டேன். உன் நாமத்து - உன் பெயர் பல்லாயிரங்களுள், எழுத்தஞ்சு - திருவைந்தெழுத்துப் பெயர். எழுத்தஞ்சும் கொண் டேன் என இனைத்தென அறிந்த கிளவிக்கு வினைப்படு தொகுதிக் கண் வேண்டும் உம்மை விரித்துரைத்துக்கொள்க. எழுத்தஞ்சும் படைக்கலம் ஆகக்கொண்டேன். அப்படைக்கலம் ஆணவப் படையை அகற்றும். மாயைப் படையை வாராமே மாற்றும். கருமப்படையைக் கழற்றும். இம் மும் மலப்பகையும் போக்கும் படைக்கலம் திருவைந்தெழுத்து :- 'முதிரும் ஆணவப் பகையும் அம்முழுப்பகைதுமிப்பக் கதியும் மாயையும் கருமமும், (தணிகைப் புராணம். 808) 'பகைசெய்யு முலகு' (ஷை. 708), இடைக்கலம் :- 'கலம்' என்னும் சொல் அடைவேறு பாட்டாற் பொருள் வேறுபட நிற்கும். அடைக்கலம், அணி கலம், அருங்கலம், இடுங்கலம், இலைக்கலம், ஒற்றிக்கலம், சேமக்கலம், படிமக்கலம், பரிகலம், மரக்கலம் முதலிய வற்றை நோக்குக. 'எழுபிறப்பும் உனக்கு ஆட்செய்கின்றேன்' என்றதால், 'இடைக்கலம் அல்லேன்' என்பது ஆட்செய்யா தொருகாலத்தும் இராமையைக் குறித்து நிற்றல் விளங்கும். விளங்கவே, நாவிற்கொண்டது முதலாக எழுபிறப்பும் உனக்கு

பொன்னொத்த மேனிமேல் வெண்ணீ றணிந்து புரிசடைகண்
மின்னொத் திலங்கப் பலிதேர்ந் துழலும் விடங்கர்வேடச்
சின்னத்தி னன்மலி தில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
என்னத்த னாடல்கண் டின்புற்ற தாலிவ் விருநிலமே. 788

---

ஆட்செய்கின்றேன் ; இடையில் ஒருபோதும் ஆட்செய்யா தொழிந்தேனல்லேன் ; திருவைந்தெழுத்தை நாவிற்கொள்ளா தொழிந்தேனுமல்லேன். 'இடைநடுவே குறிக்கும் இச்செல்வம்' என்றது போல, இடையில் வந்த பொருள் அல்லேன் என்ற பொருளதாகும். உனக்கு ஆட்பட்டு இடைக்கலத்தே கிடப்பார் என்னளவே! எனக்கு ஒன்றும் இரங்காத உத்தமன் உன்ன ளவே என்று பின்னரும் (1011) இடைக்கலத்தே எனக் காலம் இடப்பொருட்டாதல், அறிக. ஆட்பட்டு இடைக்கலத்தே கிடத்தல் என்றதும் உணர்க. கலம் - மட்கலம். அது மாயா காரியமான மண்ணிலிருந்து தோன்றி அழியும். மண்தோன்றி யழிவதற்கு இடையில் மட்கலம் தோன்றியழியும். அதுபோல் அல்லேன். எழுபிறப்பும் ஆட் செய்கின்றேன் எனலும் பொருந்தும். 'புல்லார் புடைத்தறுகண் அஞ்சுவான் இல்லுள் வில்லேற்றி இடைக்கலத் தெய்து விடல்' (பழமொழி நானூறு, 27) என்புழி 'மட்பாண்டம்' என்று பொருள் கொண்டனர் (லெக்ஸிகன்). 'தோன்று இடைக்கல மருதல் செய்யும்முலை' (கம்பர். யுத்த. அணிவகுப்புப். 16) என்புழிக் குற்றுகரப் புணர்ச்சியாகக் கொள்ளப்படும். ஈண்டு அவ்வாறு பிரித்துக் கொள்ளல் பொருந்ாது. துடைக்கினும் - துடைத்தாலும் போதல் செய்யேன். சிற்சிலவற்றைத் துடைத்துப் போக்குதல் பழக்கம். அதுபோல, என்னை நீ என் அடியான் எனக்கொள்ளத்தக்காய் அல்லை என்று விலக்கினும் விலகேன் என்றவாறு. நீற்றைத் தொழுது வணங்கி அணிந்து எனலும் தூநீறணிந்து (நின்னைத்) தொழுது வணங்கி எனலும் பொருந்தும். அணிந்து என்னும் வினையெச்சம் அடைக்கலம் என்பதன் கண் உள்ள முதனிலையோடு முடிந்தது. அணிதில்லை :- தில்லையின் அழகு, தில்லைச் சிற்றம்பலம், தில்லைச்சிற்றம்பலத்தான் என்னும் ஒட்டு இரண்டற்கும் 'அணி' உரித்தாகும்,

788. பொன் ஒத்த மேனிமேல் வெள்நீறு அணிந்து :- 'பவளம்போல் மேனியிற் பால் வெண்ணீறு' (783) 'வெள்ளிப் பொடிப் பவளப்புறம் பூசிய வேதியனே' (1050) 'சிவன்

சாட வெடுத்தது தக்கன்றன் வேள்வியிற் சந்திரனை
வீட வெடுத்தது காலனை நாரண னுன்முகனுந்
தேட வெடுத்தது தில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
ஆட வெடுத்திட்ட பாதமன் றோநம்மை யாட்கொண்டதே.

திருச்சிற்றம்பலம்

எனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி யெம்மான்' (1058) என்றதால், 'சிவன்' என்பதைச் செம்மேனியன் என்னும் பொருட்டாய தமிழ்ச்சொல்லாக்கி யருளிய துணரப் படும். 'தாங்கரிய சிவம் தானாய் நின்றான் கண்டாய்' (6. 39. 8) என்றதும் உணர்க. புரிசடைகள் மின் ஒத்து இலங்க :- முறுக் குண்ட சடைகளின் தோற்றம் மின்னலைப் போன்று விளங்க. பலிதேர்ந்து உழலும் விடங்கர் - பிச்சையெடுத்துத் திரியும் சிவபிரான். விடங்கர் - உளியால் செய்யப்படாதவர் ; இயல்பாய வடிவினர். சத்த விடங்கத் தலத்தும் அவ்விடங்கரை வழி பட்டுய்யலாம். விடங்கடரது நட்டமாகிய ஆடல்கண்டு இன் புற்றது இவ்விரு நிலம். வேடச் சின்னத்தினன். சிவவேட மாகிய சின்னம் (- அடையாளம்) 'சிவசின்னம்' என்னும் வழக்குண்மை யறிக. சின்னத்தினுல் மலிந்த தில்லை. தில்லையுள் சிற்றம்பலம். சிற்றம்பலத்து நட்டம் என் அத்தன் ஆடல். அந் நட்டமாகிய ஆடல். விடங்கரது நட்டம், என் அத்தனது ஆடல். விடங்கராகிய என் அத்தனது நட்டமாகிய ஆடல். ஆடலைக்கண்டு இருநிலம் இன்புற்றது. நட்டம் - வட சொற் சிதைவன்று. தமிழ்ச்சொல் 'ஓரில் நெய்தல் கறங்க ஓரில், ஈர்ந்தண் முழுவின் பாணிததும்பப், புணர்ந்தோர் பூவணியணியப் பிரிந்தோர், பைதல் உண்கண் பனிவார் புறைப்பப், படைத் தோன் மன்ற அப்பண்பிலாளன், இன்னுதம்ம இவ்வுலகம், இனிய காண்க இதன் இயல்புணர்ந்தோரே' (புறநானூறு 194) என்றதும் அதனுரையில், ' 'கொடிது இவ்வுலகினதியற்கை ; ஆதலான், இவ்வுலகின் தன்மை யறிந்தோர் வீட்டின்பத்தைத் தரும் நல்ல செய்கைகளை அறிந்து செய்துகொள்க.' என்றெழுதியுள்ளதும் ஈண்டு நினைத்தற்குரியன. 'உய்ந்து போமாறே வலிக்குமாம் மாண்டார் மனம்.' நாலடியார். 23.

789. தக்கனது வேள்வியிலே சந்திரனைச் சாடித்தேய்க்க எடுத்ததும், காலனை அழிக்க எடுத்ததும், நாரணனும் நான் முகனும் தேட எடுத்ததும், தில்லைச் சிற்றம்பலத்துள் நட்டம்

ஆட எடுத்திட்டதும் ஆகிய பாதம் அன்றோ நம்மை ஆட் கொண்டது ? சாடல் - கொல்லல் ; சாட - கொல்ல. வேள்வி - யாகம். தக்கயாக சங்காரம் கந்தபுராணத்திலே தட்ச காண்டத் திலே விரித்துணர்த்தப்படுகின்றது. வீடல் - சாதல். வீட - சாவ. நட்டம் ஆடல் - ' கூத்தாட்டு. ' தூக்கிய திருவடி ; குஞ்சித பாதம் ; ' வளைதாள் ' ' முத்திதருந்தாள் ' என்பர். ' அருள் தான் எடுத்து நேயமிகும் ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தான் அழுத்தல்தான் எந்தையார் பாதம் ' ' முத்தி நான்ற மலர்ப் பதத்தே நாடு ' (உண்மை விளக்கம்) என்பவற்றால், ஆட் கொள்ளும் பாதம் ஆட எடுத்திட்ட பாதம் எனல் இனிது விளங்கும். ' மலம் சாய அமுக்கிய ' ஊன்று மலர்ப்பதத்தே உற்ற திரோதம் ' ஆட்கொள்ளாத பாதம் என்பது கருத்தன்று. அது பாசவீடு குறித்தது. இது சிவப்பேறு குறித்தது. இரண்டனுள் சிவப்பேறு சிறந்தது. அதனால், எடுத்த திருவடியை எடுத்தேத்துவர்.

கடவுந் திகிரி கடவா தொழியக் கயிலையுற்றான்
படவுந் திருவிர லொன்றுவைத் தாய்பணி மால்வரைபோ
லிடவம் பொறித்தென்னை யேன்றுகொள் ளாயிருஞ் சோலைதிங்கள்
தடவுங் கடந்தையுட் டூங்கானை மாடத்தெந் தத்துவனே.

ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாயுடன் றோன்றினராய்
மூன்றா யுலகம் படைத்துகந் தான்மனத் துள்ளிருக்க
வேன்றா னிமையவர்க் கன்பன் றிருப்பா திரிப்புலியூர்த்
தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி யோங்களுக்கே.

அப்பானீ யம்மைநீ யைய னுநீ
யன்புடைய மாமனு மாமி யுநீ
யொப்புடைய மாதரு மொண்பொரு ளுநீ
யொருகுலமுஞ் சுற்றமு மோரூருநீ
துய்ப்பனவு முய்ப்பனவுந் தோற்று வாய்நீ
துணையா யென்னெஞ்சந் துறப்பிப் பாய்நீ
யிப்பொன்னீ யிம்மணிநீ யிம்முத் துநீ
யிறைவனீ யேறூர்ந்த செல்வ னீயே.

# 82. திருக்கழுமலம்

## திருப்பதிக வரலாறு

அருட்கடலும் அன்பின்கடலும் சைவத்தின் இருகண்ணும் சிவனருளும் சிவையருளும் போல இணைந்து ஞானக்கன்றும் நாவரசும் சென்று சீகாழித் திருக்கோபுரத்தைப் பணிந்து, உள் புகுந்து, விண்பணிய ஓங்கும் பெரு விமானத்தை வலங்கொண்டு தொழுது விழுந்து எழுந்தபோது, பிள்ளையார், அப்பரே உங்கள் தம்பிரானுரைப் பாடுவீர் என்றார். என்ற கன்றின் குன்றுமொழி கேட்டு, அரசும் கண்புனல் பொழியக்கலைமொழி பொழியக் கசிந்து பாடிய செந்தமிழ்மாலை இத்திருப்பதிகம் (பெரிய புராணம். 185-7,)

### திருவிருத்தம்

### திருச்சிற்றம்பலம்

பார்கொண்டு மூடிக் கடல்கொண்ட ஞான்றுநின் பாதமெல்லாம்
நாலஞ்சு புள்ளின மேந்தின வென்பர் நளிர்மதியங்
கால்கொண்ட வண்கைச் சடைவிரித் தாடுங் கழுமலவர்க்
காளன்றி மற்று முண்டோ வந்தணுழி யகலிடமே. 790

790. பார் - நிலம். ஞான்று - நாளன்று, மரூஉ. நாள் இருபத்தேழு ; அசுவினி முதலியன. 'திருவோண ஞான்று', 'ரேவதி ஞான்று' என்னும் வழக்குண்மை கல்வெட்டு முதலியவற்றின் அறிக. நின்பாதம் எல்லாம் நாலஞ்சு புள்ளினம் ஏந்தின என்பர் :- இவ்வுண்மை வரலாறு நெடுங்காலத்தின் முன்னையதாயினும், உலகில் வழங்கி வருதலின், 'என்பர்' என்றார். தேவர் புள்ளினமாகித் தாங்கி யிருப்பதாகப் புராணம் புகலும். அமரர் மொய்த்துச் சுற்றிக்கிடந்து தொழ முந்நீரில், மிதந்தது. (485) 'தோல்பறவை சுமந்தோங்கு செம்மைத் தோணி புரந்தானே' (3 - 100.) என்று காழிவேந்தர் திரு வாக்கும் இவ்வுண்மையை வெளியிட்டதறிக. நளிர் மதியம் - குளிர்பிறை, நளிர் 'என்பது சந்நிபாத சுரத்திற்குத் தமிழில் வழங்கும் ஒரு பெயர். இது வடசொல்லன்று. 'கால்கொண்ட 'வண்கை' 'தாள்தோய் தடக்கையோ'? 'தாள்தடவு கையன்' (196) கங்கை என்றிருந்ததோ ? 'வண்கை'க்கும் சடைக்கும்



திருத்தோணிபுரம் (சீகாழி)

கடையார் கொடிநெடு மாடங்க ளெங்குங் கலந்திலங்க
உடையா னுடைதலை மாலையுஞ் சூடி யுகந்தருளி
விடைதா னுடையவவ் வேதியன் வாழுங் கழுமலத்துள்
அடைவார் வினைக ளவையென்க நாடோறு மாடுவரே. 791

இயைபுயாது? கையாற் சடை விரித்து எனல் பொருந்து மேற்கொள்க. மதியமும் கங்கையும் அணிந்த சடையை விரித்தாடும் கழுமலவர். கால் - வலிமை. பெருக்கெடுத்து விரைந்து வந்த சடை. வலிமை கொண்ட கங்கை. கழுமலம்+அர்= கழுமலவர். புலம்+அர்=புலவர். சீகாழிக்குரிய பன்னிரு பெயருள் ஒன்று கழுமலம். 'ஊர் பரந்த வுலகின் முதலாகிய ஓரூர் இது' (1. 1. 3) 'துயர் இலங்கும் உலகிற் பலவூழிகள் தோன்றும் பொழுதெல்லாம் பெயர் இலங்கு பிரமாபுரம்' (ஷை. 7) 'கருமை பெற்ற கடல் கொள்ள மிதந்தது ஓர் காலம் இது' (ஷை. 5) 'ஊருறுபதிகள் உலகுடன் பொங்கி யொலிபுனல் கொளவுடன் மிதந்த காருறு செம்மை நன்மையால் மிக்க கழுமல நகர்' (3. 118. 3). அம் தண் ஆழி அகல் இடம் - அழகும் தண்மையும் ஆழமும் உடைய கடலிடை அகன்ற இடம். அந் நிலத்துறையும் உயிர்கள் எல்லாம் கழுமலவர்க்கு ஆள் (அடிமை) அன்றிப் பிறிதும் உண்டோ? 'உயர் பசுபதியதன் மிசை வருபசுபதி' (1. 22. 5). 'பாய ஆருயிர் முழுவதும் பசுபதியடிமை'. உலகெலாம் நீருள் அழுந்திய ஊழியில் ஒருவனே அழியாத் தோணிபுரத்தில் விளங்கக் கண்டு, ஆண்டவன் இவனே என்றுணர்ந்து ஆளாயின உயிர்கள். அப்போதும் ஆளாகாவேல் அவை சித்தெனப்படுமோ?

791. கடை - புறவாயிலில். ஆர் - பொருந்திய. கொடி மாடங்கள்; நெடுமாடங்கள். (800 பார்க்க) எங்கும் மாடங்கள் கலந்து இலங்க உடையான். மாடங்களெங்கும் கொடி கலந்து இலங்க எனலுமாம். உடையான் - சுவாமி. உடைதலை - உடைந்த தலை. தலைமாலையும் சூடி. உகந்து - விரும்பி. உகந்து சூடியருளி; சூடி உகந்தருளி. விடை - 'உயர்பசுபதி' (1. 22. 5) விடையுடைய அவ் வேதியன் :- சிவபிரான். வாழும் - கோயில்கொண்டுறையும். கழுமலத்துள்ளடைவாக ஆடுவர். வினைகள் என்கு (- அஞ்சி அகல) நாள்தோறும் டுவர்

திரைவாய்ப் பெருங்கடன் முத்தங் குவிப்ப முகந்துகொண்டு
நுரைவாய் நுளைச்சிய ரோடிக் கழுமலத் துள்ளழுந்து
விரைவாய் நறுமலர் சூடிய விண்ணவன் றன்னடிக்கே
வரையாப் பரிசிவை நாடோறு நந்தமை யாள்வனவே. 792

விரிக்கு மரும்பதம் வேதங்க ளோதும் விழுமியநூல்
உரைக்கி லரும்பொரு ளுள்ளுவர் கேட்கி லுலகமுற்றும்
இரிக்கும் பறையோடு பூதங்கள் பாடக் கழுமலவன்
நிருத்தம் பழம்படி யாடுங் கழனம்மை யாள்வனவே. 793

(- பரமானந்தத்தில் முழுகுவர்). பேரின்பக் கூத்து ஆடுவர். 'வினைகளவை' என்பதில் அவை சுட்டன்று. நிலைமொழிப் பொருளது.

792. திரை - அலை. வாய் - வழி என்னும் பொருட்டு. திரைவழியாற் குவிப்ப. பெருங்கடல் திரை வழியால் முத்தம் குவிப்ப, நுரைவாய் நுளைச்சியர் முகந்துகொண்டு ஓடி வரையாப் பரிசு என்க. 'ஓடி' என்னும் வினையெச்சம் வரையா' என்பதன் முதனிலை கொண்டது. கழுமலத்துள் அழுந்து விண்ணவன்; மலர் சூடிய விண்ணவன். விரைவாய் நறுமலர். விரை - மணம். வாய் - வாய்ந்த. விண்ணவனடிக்கே வரையாத பரிசு. விண்ணவன் - வெள்ளத்தின் மேல் நில்லாது விண்ணில் ஓங்கிக் கழுமலத்துள் அழுந்தி யிருந்தருள்பவன். ஈண்டு விண் தோணிபுரம் நின்றவான் (வெளி). வரைதல் - நீக்கல். வரையா - நீக்காத, ஓடிச்சூடிய என்றும் ஓடி அழுந்துமலர் சூடிய என்றும் கூட்டலாகாமை உணர்க. நம் தம்மை நாள்தோறும் ஆள்வன. இவை இத் திருவடிகள். 'ஆள்வனவே' என்று முடியும் திருப்பாடல் பலவும் ஒரு தனிப்பதிகமாயிருந்தனவோ ?

793. பதம் - வேதத்தின் ஓர் உறுப்பு. உலகம் முற்றும் இரிக்கும் பறை. உலகம் முழுதையும் அச்சுறுத்துகின்ற வாத்தியம். இரித்தல் - அச்சுறுத்தல். பறையோடுபாட, பூதங்கள் பாட ஆடுங் கழல். நிருத்தம் ஆடுங் கழல். பழம்படி ஆடுங் கழல். பழம்படி - பண்டைய வண்ணம். ஆடுங்கழலை வேதங்கள் அரும் பதங்களை விரிக்கும். அக் கழலை நூல் ஓதும்.

சிந்தித் தெழுமன மேநினை யாமுன் கழுமலத்தைப்
பந்தித்த வல்வினை தீர்க்கவல் லானைப் பசுபதியைச்
சந்தித்த கால மறுத்துமென் றெண்ணி யிருந்தவர்க்கு
முந்தித் தொழுகழ லுடோறு நந்தமை யாள்வனவே.    794

---

அரும் பொருளை உள்ளுவர் உரைக்கில் வேதங்கள் விரிக்கும். கேட்கில் நூல் ஓதும். உரைத்தலும் கேட்டலும் அரும்பொருளை யுள்ளுவரது தொழில். விரித்தல் வேதத்தினது. ஓதல் நூலினது 'அரும் பொருளுள்ளுவர்' இடைநிலை விளக்கு. விரிக்கும் அரும்பதம் வேதங்கள் ஓதுங்கழல். விழுமிய நூலை யுரைக்கிலும் அரும் பொருளை யுள்ளுவர் கேட்கிலும் உலக முற்றும் தனக்கு வடிவாகக் கொண்டதாகும் கழல்; பழம் படி நிருத்தம் ஆடுங்கழல் எனக் கூறலுமாம். 'விரிக்கும்' 'ஓதும்' 'முற்றும், என முற்றாக்கினும் 'கழுமலவன்' என்னும் பெயரோடு இயைத்துரைப்பினும் பொருந்தும். பொருந்தினும் நன்கு பொருள் விளங்காதது இப்பாடல் என்பது புலப்படும். வேதங் களையும் நூல்களையும் உரைக்கிலும் கேட்கிலும் உலகமுற்றும் அரும் பொருள் உள்ளுவர். அப் பொருள் நம்மை ஆள்வன வாகிய ஆடுங் கழலே எனலுமாம். உலகேழும் விளங்க விழுமிய நூல் ஆய்ந்தான் அடிநிழற் கீழதன்றே என்றன் ஆருயிரே' 809. பதம் முதலிய ஐந்தும் பாட எனலுமாம்.

794. மனமே, கழுமலத்தை நினையா முன் (நம்மைப்) பந்தித்த வல்வினை தீர்க்கவல்லானை; பசுபதியைச் சிந்தித்தெழு! பசுபதியைச் சந்தித்தகாலம் மறுத்தும் என்று எண்ணியிருந்த வர்க்கும் முந்தித் தொழு! அப் பசுபதியின் கழல் நம் தம்மை ஆள்வன. தொழுகழல் எண்ணியிருந்தவர்க்கு முந்திநந்தமை யாள்வன எனல் பொருந்து மேற்கொள்க. சிந்தித்து எழுதல்:- சித்தம் ஆரத் திருவடியே நினைந்து உள்கி (6. 64. 4.) எழுதல். கழுமலத்தை வழிபட அத்தலப் பெயரை நினைத்தற்கு முன்னரே, அவன் நம் வல்வினை தீர்க்கும். அவ் வினைவலியை வாட்டுதலில் அவன் வலியன். அன்ன மென்னடையாளொடும் டினி துறையமரர் தம் பெருமானார் என்று முதலுந் திருப்பதிகத்திற் காழிவேந்தர் வினை நீக்கமே குறித்தமை அறிக. பசு பதி:- பசுக்களைப் பந்தித்த பாசந் தீர்த்தாளும்பதி. சிந்தித்து ஏழு முந்தித்தொழு என்னும் ஈரேவலும் மனத்தைக் குறித்தன. மறுத்தும் - வினையை

நிலையும் பெருமையு நீதியுஞ் சால வழகுடைத்தாய்
அலையும் பெருவெள்ளத் தன்று மிதந்தவித் தோணிபுரஞ்
சிலையிற் றிரிபுர மூன்றெரித் தார்தங் கழுமலவர்
அலருங் கழலடி நாடொறு நந்தமை யாள்வனவே. 795

முற்றிக் கிடந்து முந்நீரின் மிதந்துடன் மோய்த்தமரர்
சுற்றிக் கிடந்து தொழப்படு கின்றது சூழரவந் [சூடுங்
தெற்றிக் கிடந்துவெங் கொன்றளந் துன்றிவெண் டிங்கள்
கற்றைச் சடைமுடி யார்க்கிட மாய கழுமலமே. 796

..........................................................................................

நீக்குதும் என்று எண்ணி இருந்தவர்க்கு முந்தி நந்தமை ஆள்வன தொழுகழல் என்று பிற்கூறியதற்கேற்பவுரைக்க. 'அறுத்தும்' எனப் பிரித்தலுமாம். பசுபதியைச் சந்தித்தகாலத்தில், (நம்மைப்) பதிந்த வல்வினையை அறுத்தும் என்று எண்ணியிருந்தவர்க்கு முந்தித் தொழு என்றுதல் மூந்தியாள்வன என்றுதல் கொள்க. அறுத்தும் - வினையை அறுப்போம்.

795. நிலையுடையது; பெருமையுடையது; நீதியுடையது; சால அழகுடையது; நிலையும் பெருமையும் நீதியும் சாலுமாறு அழகுடையதாகி, அலையும் பெருவெள்ளத்தில் அன்று மிதந்த இத் தோணிபுரம் எனலுமாம். தோணிபுரத்தில் வீற்றிருந்தருளும் கழுமலவர். சிலையின் மேருமலையாகிய வில்லால், திரிபுரம் - திரியும் புரம். திரிபுரம் மூன்று என்றதால், 'திரி' என்பது தமிழ்ச் சொல்லாகிய வினையடியாதல் விளங்கும். எரித்தார்தம் கழலடி, கழுமலவர் கழலடி, அலரும் அடி, மலரும் திருவடி, அலருங் கழல் - பரவுங்கழல். எரித்தார்தங் கழுமலவர் எனல் பொருந் தாது; 'தம்' சாரியையாயினும். 'தோணிபுரம் நின்று வற்றுவது போற் கிடப்பினும் பொருத்தியுரைத்தலில் இடர்ப்பாடின்று, இப்பாடலும் 793ஆவது பாடலும் விளக்கமில்லாதன. 'தன்' என்பது சிவத்தைக் குறிப்பது. தம் என்பது அதன் உயர்வுப்பன்மையாகக் கொண்டுரைத்தலும் பொருந்தும். 'தன்னு னந்தக்கொடி' (சிவகாமவல்லி) திருவிளையாடற் புராணப்பாயிரம் பார்க்க. தன் - சிவம், ஆனந்தம் - காமம், வல்லி - கோடி.

796. சூழ் அரவம் தெற்றிக் கிடந்து.........வண்டினங்கள் சூடும் கற்றைச் சடைமுடியார்க்கு இடம் ஆகிய கழுமலம், முற்றிக் கிடந்து முந்நீரில் மிதந்து அமரர் உடன் மொய்த்துச்

உடலு முயிரு மொருவழிச் செல்லு முலகத்துள்ளே
அடையு முனைவந் தடைந்தா ரமரா ரடியிணைக்கீழ்
நடையும் விழவோடு நாடோறு மல்குங் கழுமலத்துள்
விடையன் றனிப்பத நாடோறு நந்தமை யாள்வனவே. 797

சுற்றிக்கிடந்து தொழப்படுகின்றது என்று கொள்க. அரவம் - பாம்பு. தெற்றி - பின்னி, 'வெங்கொன்றளந்துன்றி' என்றது பொருள் புலப்பாடிலாதது. வெங்கோல் தளர்ந்து ஊன்றுகின்ற வெளிய திங்கள் எனப் பொருளுரைக்கலாம்படி வெங்கோன்றளர்ந் தூன்று என்னும் பாடம் இருந்தது போலும். 'வெங்கோன்றளந் தூன்றி' என்றும் சில பதிப்பில் உள்ளது. இஃது எட்டிலும் வெங்கோன்றளந்துன்றி என்றும் வெங்கோன்றளந்தூன்றி' என்று முளது. வெண்கூதளந்துன்றி என்றிருந்து பிழைத்ததென்று தோன்றுகின்றது. ' வெண்கூதாளம் தொடுத்த கண்ணியன் ' (திருமுருகு. 192)' வெண் கூதாளத்துத் தண்பூங் கோதையர்' பட்டினப் பாலை 85) என்புழி 'வெண்டாளி' என்றனர் நச்சினார்க் கினியர். மலை யகராதி, 'நீர்த்தாளி' என்னும். 'காந்தளம் போது விராய்த் தொடு கூதளங் கண்ணியன்' (தணிகைப்புராணம் களவுப் 482) 'மல்லிகை கொடிமுல்லை மாதவி கூதாளம் பல்லிணர் மந்தாரம்' (ஷை வீராட்டகாசம். 74) 'கூதளம்' என்றது பொருந்தாதேல், 'கூவிளம்' (857) எனலாம். 'தேன்றிகழ் கொன் றையும் கூவிள மாலை திருமுடிமேல் ஆன்றிகழ் ஐந்துகந்தாடும் பிரான்' (1025) எனப் பின்னர் உள்ள தறிக. 'வன்னி கொன்றை மதமத்தம் எருக்கொடு கூவிளம் பொன்னியன்ற சடையிற் பொலிவித்த புராணனார்' 2. 7. 1. கூவிளம்-வில்வம். 'தண்ணறு மத்தமும் கூவிளமும்' (67) அரவம் பின்னிக்கிடந்த இடமும் கூதளமோ கூவிளமோ துன்றிய இடமும் திங்கள் சூடியதும் சடை. அது கற்றைச்சடை. அச் சடையின்முடி. அம் முடி யுடையார்க்குக் கழுமலம் இடம். அது தொழப்படுகின்றது. தொழுவோர் அமரர்.

797. உலகத்துள்ளே உடலும் உயிரும் ஒருவழிச் செல் லுதல்:- சடமான உடலும் சித்தான உயிரும் ஒருவழிச் செல்லுதல் ஒவ்வாது. சடத்துக்குச் செலவே இல்லை. சித்தான உயிர் சடமான உடலைச் செலுத்தவல்லது. புற (பாச)ப் பற்றும்

பரவைக் கடனஞ்ச முண்டது மில்லையிப் பார்முழுதும்
நிரவிக் கிடந்து தொழப்படு கின்றது நீண்டிருவர்
சிரமப் படவந்து சார்ந்தார் கழலடி காண்பதற்கே
அரவக் கழலடி நாடோறு நந்தமை யாள்வனவே. 798

அகப்பற்றும் விளக்கும் வழியே ஈண்டு 'ஒருவழி' என்றதாம். அவ்வழியில் உயிர் உடலைச் செலுத்திச் செல்கின்றது, பசுப் பற்று அகப்பற்று. பாசப்பற்றும் பசுப்பற்றும் நீங்கியவரே பதிப்பற்றுள்ளவர். அது பற்றற்றான் பற்று. அது பற்றுதற்குரிய பற்று. மற்றவை விடற்குரிய பற்று. இப் 'பற்று விடற்கு அப் பற்றைப் பற்றுக' என்றது குறள். அத்தகைய உலகத்துள்ளே உனை அமரர் அடைந்தார் வந்து. அடையும் உனை அடைந்தார். அடியிணைக் கீழ்வந்து அடைந்தார். 'பற்றற்றார் பற்றும் பவள வடி' (அப்பர்). நடை - கூத்து. விழவோடு நடையும் மல்கும் கழுமலம். நாள்தோறும் விழவும் கூத்தும் மல்கும். அக் கழுமலத்துள் விளங்கும் விடையன். விடையன் - விடையேறி. 'ஏற்றான்', தனிப்பதம் - இணையில்லாத் திருவடி. ஒப்பிலாத்தாள். நாள்தோறும் நந்தம்மை ஆள்வன தனிப்பதம். 'அடியிணை' 'தனிப்பதம்' என்பனவற்றை ஆராய்க. தனிப்பதம் - சிவாநந்த முத்தியாகிய பேறு.

798. பரவை - பரத்தலையுடைய (கடல்). கடல் நஞ்சம் - பாற்கடலிற் றோன்றிய நஞ்சு. நஞ்சம் உண்டதும் இல்லை:- அந்நஞ்சத்தை உட்கொண்டதும் இல்லை. வெளிப்படுத்தியது மில்லை. தன்பால் நிறுத்தி விட்டது திருநீலகண்டம். அத் திருநீலகண்டம் இப்பார் முழுதும் நிரந்து கிடந்து தொழப் படுகின்றது. அத் திருநீல கண்டனது கழலடி (யையும் திரு திருமுடியையும்) காண்பதற்கே மாலும் அயனுமாகிய இருவரும் கீழும் மேலும் நீண்டு தேடிச் சிரமப்பட வந்து சார்ந்தனர். அத் தகு பெருமையையுடைய கழலடி நம்தம்மை ஆள்வன. அரவக் கழல்:-'அரவம் ஆர்த்து அனல் ஆடிய அண்ணல்' (15. 97. 26.) ஆடரவக்கிண்கிணிக்காலன்றன் ஓர்சேடனை ஆடுந்தீக்கூத்தனை நான் கண்டதாரூரே (196) சிரமம் - வருத்தம், 'சிரமத்தினை யின்றியுறுற்று சிறப்பு' (சேதுபுராணம். அமுத தீர்த்தம் 11.)

கரையார் கடல்சூ ழிலங்கையர் கோன்றன் முடிசிதறத்
தொலையா மலரடி யூன்றலு முள்ளம் விதிர்விதிர்த்துத்
தலையாய்க் கிடந்துயர்ந் தான்றன் கழுமலங் காண்பதற்கே
அலையாப் பரிசிவை நாடோறு நந்தமை யாள்வனவே. 799

திருச்சிற்றம்பலம்

799. இலங்கையர்கோன் முடி சிதற அடி ஊன்றலும் விதிர் விதிர்த்துத் தலையாய்க் கிடக்க உயர்ந்த சிவன் (தன்) கழுமலம் காண்பதற்கே (ஊன்றிய அடியான) அலையாப் பரிசிவை நந்தம்மை நாள்தோறும் ஆள்வன. 'தொலையாமலரடி' 'அலையாப்பரிசிவை' இரண்டும் திருவடியைக் குறித்தவை. தன் - சிவன். தம் - ஆன்மாக்கள். (கோயிற்புராணம் பதஞ்சலி 5.) பா. 795 பார்க்க. 'பரிசிவை' என்றதில் இவை சுட்டுப் பெய ரன்று. பரிசு என்னும் முன்மொழிப் பொருள் மாத்திரையாய் நிற்பது. அலையாத தன்மையுடைய இவை எனக் கழலடியைக் குறித்ததுமாம். கரை ஆர் கடல் - ஓசைமிக்க கடல். கடற் கரையுமாம். தொலையா மலர் அடி - தோல்வியுருத பூங்கழ்தாள். முடி சிதறுவித்ததே வெற்றி. உள்ளம் இராவணனது. விதிர் விதிர்த்து - நடுநடுங்கி, தலையாய்க் கிடத்தல் - பத்துத் தலை களும் ஒருசேர வீழ்ந்து கிடத்தல். கிடந்து - கிடக்க. உயர்ந் தான் - கயிலைக்கண் உயர்ந்து விளங்கிய சிவபிரான். அவன்றன் கழுமலம். அதைக் காண்பதற்கே. ஆள்வன எனக் கொண்டு, காட்சி ஒன்றே ஆட்கொள்ளப் பெறும் பெரும் பயன் அளித்த தாகக் கொண்டுரைக்கலாம். அலையாப்பரிசு திருவடி ஒன்றால் தான் எய்தும். மற்றெல்லாம் அலையும் பரிசே எய்துவிப்பன.

---

ஒன்றி யிருந்து நினைமின்க ளுந்தமக் கூனமில்லை
கன்றிய காலனைக் காலாற் கடிந்தா னடியவற்காச்
சென்று தொழுமின்கள் தில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
"என்றுவந் தா" யென்னு மெம்பெரு மான்றன் திருக்குறிப்பே.

பத்தனாய்ப் பாட மாட்டேன் பரமனே பரம யோகி
யெத்தினாற் பத்தி செய்கே னென்னைநீ யிகழ வேண்டா
முத்தனே முதல்வா தில்லை யம்பலத் தாடு கின்ற
அத்தாவுன் னாடல் காண்பா னடியனேன் வந்த வாறே.

# 83. திருக்கழுமலம்

## திருப்பதிக வரலாறு

83 ஆவது திருப்பதிக வரலாறு இதற்கும் உரியது.

### திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

படையார் மழுவொன்று பற்றிய கையன் பதிவினவில்
கடையார் கொடிநெடு மாடங்க ளோங்குங் கழுமலமாம்
மடைவாய்க் குருகினம் பாளை விரிதோறும் வண்டினங்கள்
பேடைவாய் மதுவுண்டு பேரா திருக்கும் பெரும்பதியே. 800

திருச்சிற்றம்பலம்

800. படை ஆர் மழு - படை ஆர்ந்த மழு. படை - படுத்தல்; கொல்லல். தடுத்தல் தடை. கொடுத்தல் கொடை. விடுத்தல் - விடை என்பனபோல்வது இது, மழு ஒன்று பற்றிய கையன் - மழுப்படை ஒன்று பிடித்த கையினன்: கையன்பதி - கையனது நகர். பதி வினவில் - நகரை வினுவினுல், வினவில் கழுமலமாம் பெரும்பதியே அம்மழுக்கையன் பதி. கையன் பதி வினவில் கழுமலமாம் பெரும்பதியே. கழுமலம் கடையார் கொடிநெடுமாடங்கள் ஓங்கும் பெருமையது. அப் பெரும் பதியில் குருகினம் மடைவாய்ப் பேரா திருக்கும். வண்டினங்கள், பாளை விரிதோறும் பேடைவாய் மதுவுண்டு பேராதிருக்கும். இரைகிடைத்தலின் குருகினம் மடைவாய்ப் பெயராமல் இருக்கும். வண்டினங்கள் பாளை விரிதோறும் பேடைவாய் மதுவைப் பெறுதலின் பெயராமல் இருக்கும். பெடைவண்டின் வாயினின்று ஒழுகும் மதுவை உண்ணுவது காதல் உணர்த்தும். 'பேடைவாய் மது' இடக்கருமாம். 'பைந்துகின் மகளிர் தேன் சோர் பவள வாய் திகழ நாணிச் சிந்தித்து' (சிந்தாமணி. 1819) என்பதில் 'திகழ' 'இடக்கர்' என்று நச்சினார்க்கினியர் உரைத்த தறிக.

## 84. பொது

### திருப்பதிக வரலாறு

திருப்புகலூரில் புனிதர் மலர்த்தாள் வணங்கி நாடோறும் திருத்தொண்டு செய்து பெருங்காதலுடன் வைகும் நாளில் மொழிந்த எண்ணிறந்த வண்டமிழ் மாலைகளுள் ஒன்று இவ்வாருயிர்த் திருவிருத்தம். (பெரிய. அப்பர் புராணம். 413 - 15).

ஆருயிர்த்திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

எட்டாந் திசைக்கு மிருதிசைக் கும்மிறை வாமுறையேன்
றிட்டா ரமரர்வெம் பூச லெனக்கேட் டெரிவிழியா
ஒட்டாக் கயவர் திரிபுர மூன்றையு மோரம்பினால்
அட்டா னடிநிழற் கீழதன் றேவென்ற னாருயிரே. 801

801. எட்டாம் திசைக்கும் இரு திசைக்கும் இறைவா - எட்டுத் திக்கிற்கும் மேல்கீழ் ஆகிய இரண்டு திக்கிற்கும் தலைவா; உலகநாதா முறையோ என்று அமரர் பூசல் இட்டார். பூசல் - பேரொலி. தேவர்கள் அசுரர் செய்யும் கொடும் போரால் கடைவாயிலில் வந்து நின்று முறையிட்டனர் என்று கைலைக் காவலர் சொல்லக்கேட்டு எனலும் ஆம். வெம்பூசல்= வெய்ய பேரோலம். பூசலை அசுரர்க்கு ஏற்றின் போர்த் தொழிலாகும். 'பூசல் அவுணர்புன் விலங்கு பூத மனிதர் முதல் உலகு' (திருவிளையாடல் அட்டமாசித்தி 27). எரி விழியா - தீக்கண் விழித்து, விழியா என்றதால் எரி என்பது இடப்பொருளாகு பெயராய் நெற்றிக்கண்ணைக் குறித்தது. ஒட்டாக்கயவர் - ஒட்டாத கீழோராகிய அவுணர். 50 பார்க்க. 'ஒட்டாத பாவித் தொழும்பரை நாம் உருவறியோம்'. (திருவாசகம்) ஒட்டாமை = அணுகாமை; நண்ணாமை; பகைமை. 'திரிபுர மூன்றையும்'=795. குறிப்பை காண்க ஓர் அம்பினால்- ஒரு கணையால். அட்டான் - எரித்த இறைவன். வினையா லணையும் பேயர். அடி நிழற் கீழது அன்றோ என்றன் ஆருயிர்?:- 'சிற்றம்பலக் கூத்தா உருவள ரின்பச் சிலம்பொலி யலம்பும்

பேழ்வா யரவி னரைக்கமர்ந் தேறிப் பிறங்கிலங்கு
தேய்வா யிளம்பிறை செஞ்சடை மேல்வைத்த தேவர்பிரான்
மூவா னிளகான் முழுவுல கோடுமண் விண்ணுமற்றும்
ஆவா னடிநிழற் கீழதன் றேவேன்ற னுருயிரே. 802

உன் னடிக்கீழ தென்னுயிரே ' - (திருமாளிகைத் தேவர் திருவிசைப்பா 13.) என்றன் ஆருயிர் :- யான் வேறு உயிர் வேறென இரண்டல்ல. ' இராகுவினது தலை ' என்பது போலும். இத்திருப்பதிகம் முழுவதும் திருவடி நிழற் கீழது என்றன் ஆருயிர் என முடிதலின் இதனை ஆருயிர்த் திருவிருத்தம் என்றனர். இது சேக்கிழாருக்கு முன்னரே வழங்கிய பெயர்.

802. பேழ்வாய் அரவின்-பிறழ்வாயினையுடைய பாம்பினை, 'பிறழ்' என்பது பேழ் என்று மருவிற்று. 'பிறழ்வாய் - மறிந்த வாய்' (பெரும்பாணாற்றுப்படை 215 உரை) 'பிறழ்பற்பேழ்வாய்' (திருமுருகாற்றுப்படை. 47) என்புழிப் ' பெருமையினையுடைய வாய்' என்றுரைத்தார் நச்சினார்க்கினியர். அரவினை அரைக்கு அமர்ந்து; இடையில் விரும்பிக் கச்சாகக் கட்டி. (சடைமேல்) ஏறிப் பிறங்குவதும் இலங்குவதும் தேய்தல் வாய்ந்ததும் இனித் தேயாது வளராது என்றும்இளமையோடிருப்பதுமான பிறையை அச் செஞ்சடைமேல் வைத்த தேவாதி தேவன். மூவான் இளகான் - மூத்தலில்லாதவன்; இளகுதலில்லாதவன்; 'மூவாது யாவர்க்கும் மூத்தான்றன்னை முடியாதே முதல் நடுவு முடிவானானை' (6. 74. 3.)'மூவாய் பிறவாய் இறவா போற்றி' (6 55.9.) 'மூவாதமேனி முக்கண்ணா போற்றி' (6. 56. 1.) இளகுதல் தழைத்தல்; தளர்தல், அசைதல். தளர்ச்சி முதலியன இளமைப் பண்பு. மூப்பிற்குமுரிய. இளகும் - தளிர்க்கும்; மேல்கும். (சிந்தாமணி. 718. 1778) முழுவுலகோடும் - உலக முழுதுடனும்; எல்லா வுலகங்களுடனும். மண்ணுலகும் விண்ணுலகும் மற்றைய உலகங்களும் ஆவான். 'விசுவரூபி' 'எல்லாவுலகமும் ஆனாய் நீயே' ஆவான் - ஆமவன்; ஆவாதவன். எல்லாமாய் அல்லனுமாவான் இறைவன். 'எல்லாம் சிவன் என்ன நின்றாய் போற்றி' 'எல்லாமாயல்லதுமாயிருந்ததனை.' 'முழுவேழுலகும்' (நம்மாழ்வார் திருவாய் மொழி 2. 6, 7.)

தரியா வெகுளிய ணுய்த்தக்கன் வேள்வி தகர்த்துகந்த
எரியா ரிலங்கிய சூலத்தி ஞனிமை யாதமுக்கட்
பேரியான் பேரியார் பிறப்பறுப் பானென்றுந் தன்பிறப்பை
அரியா னடிநிழற் கீழதன் றேவேன்ற ஞருயிரே. 803

803. தரியா வெகுளியன் - தாங்குதற்கரிய வெகுட்சி யுடையவன். ‘குணமேன்னுங் குன்றேறி நின்ருர், வெகுளி கணமேயுங் காத்த லரிது. (குறள்). வெகுளியன் - வெகுளுதலே உடையோன். வெகுளல் - சினத்தல். ‘உறுப்பறை குடிகோள் அலேகோலே என்ற வெறுப்பின் வந்த வெகுளி நான்கே’ (தோல் காப்பியம், மெய்ப்பாடு10) என்றசுவைக்குரியது ஈண்டும் ஏற்கும். ‘தேரியா வெகுளி’ பிழை, வேள்வி - ஆபிசார யாகம்- (திருவிளே யாடல். யானேயெய்த. 10.) தகர்த்து - அழித்து. உகந்த - உயர்ந்த, எரி ஆர் இலங்கிய சூலத்திஞன் - தீ ஆர்ந்த விளங்கிய சூலப்படையினன் ‘எரியார்’ ‘நரியார்’ என்பது போல நின்றது மாம் ‘தென்றலார்புகுந்துலவு திருத்தோணிபுரத்துறையும் கோன் றைவார் சடையார்' (1. 60 7.) எனக் காற்றைச் சோல்லுமாறு தீயைச் சோல்லலாம். 'இமையாத முக்கட் பேரியான்' 'இவன் முக்கண்ணனே’ என்னும் வழக்கும் அப் பெருமை உணர்த்தும். பேரியார் பிறப்பு அறுப்பான்:- கற்றல் கேட்டல் (நினேத்தல் தேளிதல் நிற்றல் ) உடையார் பேரியார்’ இறைவன் கழல் ஏத்தப் பிறவியை வேரறுப்பவன். ‘பிறவியை வேரறுத்துப் பெரும் பிச்சுத்தரும் பெருமான்’ ‘பிறவியை வேரறுப்பவனே’ (திருவா சகம்). என்றும் தன் பிறப்பை அரியான்:- உயிர்க்காகப் படைப்பு முதலிய ஐந்தோழிலும் நிகழ்த்தத் தான் அருளுருக் கோள்ளு தலே அரியாதவன். ஈண்டுப் பிறப்பு அவனது தடத்த ருபங்கோள் ளுதலின் மேற்று. ஏனேயோர்க்குள்ளவாறு ஊனுடலேடுக்கும் பிறவியின் மேலதன்று. அரியாதவனடிநிழல். என்றும் அரியான். அருமையை இன்மைப் போருட்டாகக் கோண்டு, என்றும் பிறப் பையில்லான் எனலுமாம். பிறப்பை அரிதலாது :- தோடர்ந்து வரும் பிறப்பை இடை யீடுபடச் செய்யினும், இடை யீடு பட்டதன் பின் எய்தும் பிறவிகள் தோடர்புடையன ஆகும். அவ்வாருகாமல், வேரோடு அற்றெழியச் செய்தலே அரித லாகும். அறுத்தலும் அன்னதே.

வடிவுடை வாணெடுங் கண்ணுமை பாளையோர் பான்மகிழ்ந்து
வேடிகோ ளரவொடு வேங்கை யதள்கொண்டு மேன்மருவிப்
பொடிகோ ளகலத்துப் பொன்பிதிர்ந் தன்னதொர் கொன்றையந்தார்
அடிக ளடிநிழற் கீழதன் றேவென்ற னுருயிரே. 804

பொறுத்தா னமரர்க் கமுதருளி நஞ்ச முண்டுகண்டம்
கறுத்தான் கறுப்பழ காவுடை யான்கங்கை செஞ்சடைமேல்
செறுத்தான் றனஞ்சயன் சேணு ரகலங் கணையொன்றினால்
அறுத்தா னடிநிழற் கீழதன் றேவென்ற னுருயிரே. 805

804 வடிவு - அழகு. உடை - உடைய, வாள்நெடுகண் - வாட்படைபோலும் நெடிய கண்ணிணையுடைய (உமையாள்). ஓர்பால் - இடப்பக்கம். உமையாளை மகிழ்ந்துகொண்டு; அரவொடு வேங்கையதள் கொண்டு. அரவு - பாம்பு. அதள் - தோல், வேடி கோள் அரவு - விடர்களை உறைவிடமாகக் கொள்ளும் பாம்பு. 'விரி நிற நாகம் விடருளதேனும் உருமின் கடுஞ் சினம் சேணின்றும் உட்கும். (நாலடியார்), மேல்மருவி - மேற்கொண்டு. மேலே மருவப் போர்த்து என்றவாறு. 809 பார்க்க. கொண்டு மருவி. பொடி - திருவெண்ணீறு. கோள் அகலம் - பூசிக்கொள்ளும் மார்பு. அகலத்தையும் தாரையும் உடைய அடிகள். பொன் பிதிர்ந்தாற் போன்ற பசிய கொன்றைத்தார் (-மாலை). அடிகள்:- 'யாமெலாம் வழுத்தும் துறவி' (காஞ்சிப் புராணம்).

805. பொறுத்தா னமரர்க் கமுதம் அருளிநஞ் சுண்டு கண்டம் என்று இருந்தது போலும் அமுத+ருளிநஞ்சம்' என வகையுளி செய்து, புளிமா+ (நிரை நேர் நேர்) புளிமாங்காய் என்றமைத்துக் கொள்ளினன்றி, இவ்வடி தளை கெடாததாகாது. நஞ்சம் உண்டு கண்டம் கறுத்தான். ஏன்! அமரருக்கு அமுது அருளியதால். கறுப்பு அழகா உடையான். கண்டத்திற்கு அந் நஞ்சாலுற்ற கறுப்பைத் திருவா யுடையவன். திரு நீலகண்டன். 'வானத்தவர் உய்ய வன்னஞ்சை யுண்டகண்டத் திலங்கும் ஏனத் தெயிறு' (775) செஞ்சடைமேலே கங்கையைச் செறுத்தவன். செறுத்தல் - அடக்கல். பொங்கு கங்கை சடைச்செறுப்பவனே

காய்ந்தான் செறற்கரி யானென்று காலனைக் காலொன்றினால்
பாய்ந்தான் பணைமதில் மூன்றுங் கணையென்னு
மொள்ளழலால்
மேய்ந்தான் வியனுல கேழும் விளங்க விழுமியநூல்
ஆய்ந்தா னடிநிழற் கீழதன் றேவென்ற னாருயிரே. 806

(திருவாசகம் அடைக்கலப் 2.) தனஞ்சயன் (அருச்சுனன்) பகை யரசரை வென்று பெற்ற பொருளினன். வெற்றித்திருவினன் எனலுமாம். தனம் சயமேயாகக் கொண்டவன். சேண் ஆர் அகலம் - அகலம் பொருந்திய மார்பு. சேண் - அகலம் நீளம். 'அகன் மார்பு' 'நீண்மார்பு' என்னும் வழக்குணர்க. அவனது மார்பை ஒரு கணையால் அறுத்தமை அறிதற்பாலது. 'அருச் சுனற்கு அம்பும் வில்லும் துடியுடைவேடராகித் தூய மந்திரங்கள் சொல்லிக் கொடி நெடுந்தேர் கொடுத்தார்' (486) 'ஏிநஞ்சம்' என்பதை விட்டிசைத்துக் கொள்ளலுமாம்.

806. செறல் - அழித்தல். 'பாவடியாற் செறல்' (புற நானூறு), செறற்கு அரியான் - கொல்லற்கு அரியவன் (என்று காலனைக் கால் ஒன்றினால் காய்ந்தான். காய்ந்து பாய்ந்தான். (806) பணை - பருமை ) பருமதில் மூன்று - மூவெயில். கணை என்னும் ஒள் அழல்:- பாணம் எனப் பெயர் பெறும் தீக்கணை. 'அம்பு எரி கால் ஈர்க்குக்கோல்' 'குன்றவார் சிலை நாண் அரா அரிவாளி கூர் எரிகாற்றின் மும்மதில், வென்றவாறெங்ஙனே'. மும்மதிலும் ஒள்ளழற்கணையால் மேய்ந்தான். மேய்தல் - பரு குதல், வியல்-அகலம். வியல்+உலகு=வியலுலகு; வியனுலகு. உலகேழும் விளங்க ஆய்ந்தான் விழுமிய நூலை. அந்நூல் நான்மறை ஆறங்கம். 'விரிக்கும் அரும்பதம் வேதங்கள் ஓதும் விழுமிய நூல்.' (793). ஆய்ந்த அவனது அடி நிழல். அந்நிழற் கீழது என்றன் ஆருயிர். 'விழையா ருள்ளம் நன்கெழுநாவில் வினைகெட வேதம் ஆறங்கம் பிழையா வண்ணம் பண்ணிய வாற்றூற் பெரியோரேத்தும் பெருமான்' (1. 42. 7.)

உளைந்தான் செறுதற் கரியான் றலையை யுகிரோன்றினால்
களைந்தா னதனை நிறைய நெடுமால் கணார்குருதி
வளைந்தா னொருவிர லின்னொடு வீழ்வித்துச் சாம்பர்வெண்ணீ
றளைந்தா னடிநிழற் கீழதன் றேவென்ற னாருயிரே. 807

முந்திவட் டத்திடைப் பட்டதெல் லாமுடி வேந்தர் தங்கள்
பந்திவட் டத்திடைப் பட்டலைப் புண்பதற் கஞ்சிக்கொல்லோ
அந்திவட் டங்கதிர் மாமலர்க் கொன்றையும் நக்கசென்னி
அந்திவட் டத்தொளி யானடிச் சேர்ந்ததென் னாருயிரே 808

---

807 உளைந்தான் - வருந்தினான். செறுதற்கு அரியான் - செறற்கரியான். (806) நான்முகன். உகிர் - கைந்நகம். அதனை - அப் பிரமகபாலத்தை. நிறைய - நிறைக்க என்னும் பொருட்டு. 'நிறைய நெடுமால் கண் ஆர் குருதி வளைந்தான்:- 'தாமரையோன் சிரம் அரிந்து கையிற் கொண்டார் தலையதனிற் பலிகொண்டார் நிறைவாம் தன்மை வாமனனார் மாகாயத் துதிரங்கொண்டார். (6. 96. 1.) கண் ஆர் குருதி - கண்ணில் நிறைந்த செந்நீர்' ஒருவிரலினொடு வீழ்வித்து. வீழ்வித்தது விரல். வீழ்ந்தது குருதி. சாம்பர் வெண்ணீறு அளைந்தான் - சாம்பராகிய திருவெண் ணீற்றிற் புரண்டவன். அளைதல் - ஈண்டுப் புரளுதல் என்னும் பொருளது. 'தாதளைந்து இனவண்டு' (நைடதம். அன்னத்தை 2.)

808. முந்து இவ் வட்டத்திடைப்பட்டது எல்லாம் முடி வேந்தர் தங்கள் பந்தி வட்டத்திடைப்பட்டு அலைப்பு உண்பதற்கு அஞ்சிக் கொல்லோ என் ஆருயிர் அந்திவட்டத்து ஒளியானடிச் சேர்ந்தது? இவ்வட்டம் - இந்நிலவலயம். வட்டத்திடைப் பட்டதெல்லாம் அதனை ஆளும் வேந்தர் பந்திவட்டத்திடைப் பட்டு அலைப்புண்ணுகின்றன. சமண் சமயம் புக்கிருந்த காலத்தை 'முந்து' என்றார். முன்+து=முன்று, முந்து. மரூஉ. இவ்வட்டத்திடை:- சமணர் மலிந்த இம் மண்டலத்தில். பட்டது எல்லாம் - பட்ட துன்பம் முழுவதும்; சூலைநோய் உற்றமை; நீற்றறையி லிட்டமை; நஞ்சு கலந்தூட்டியமை; மதகளி றிடறுவித்தமை; கல்லோடு கட்டிக் கடலி லிட்டமையெல்லாம். அவற்றை அஞ்சியோ ஆருயிர் அடியைச் சேர்ந்தது? இது வரலாற்றுக் குறிப்பு. யானைப்பந்தி குதிரைப்பந்திகளின் வட்டத்திடையே அகப்பட்டு அலைச்சல் அடைகின்றன. அடை தலை அஞ்சியோ ஆருயிர் அந்திவண்ணன் திருவடியைச்

மிகத்தான் பெரியதோர் வேங்கை யதள்கொண்டு மெய்ம்மருவி
அகத்தான் வெருவநல் லாளை நடுக்குறுப் பான்வரும்பொன்
முகத்தாற் குளிர்ந்திருந் துள்ளத்தி னுலுகப் பானிசைந்த
அகத்தா னடிநிழற் கீழதன் ரேவென்ற னுருயிரே 809

பைம்மா ணரவல்குற் பங்கயச் சீறடி யாள்வெருவக்
கைம்மா வரிசிலைக் காமனை யட்ட கடவுண்முக்கண்
எம்மா னிவனென் றிருவரு மேத்த வெரிநிமிர்ந்த
அம்மா னடிநிழற் கீழதன் ரேவென்ற னுருயிரே. 810

---

சேர்ந்தது? இங்கு 954, 1063, 5. 1. 9. பார்க்க. நந்திவட்டம் நந்தியாவர்த்தம் என்னும் பூ. 'நந்தியாவட்டம்' என்பது வழக்கு' 'அந்தணனுறு மான்பால் அவியினை யலர்ந்தகாலை நந்தியா வட்டம் நாறும் நகைமுடி யரசனுயின்' (சிந்தாமணி 1287).

809. மிகப் பெரியதொரு புலித் தோலைக்கொண்டு திரு மேனிமேற் போர்த்து, நல்லவளான உலகநாயகி அகத்தில் வெருவ நடுக்கம் அடைவிப்பான். பொன் முகம் - பொலிவுடைய முகம். முகத்தால் குளிர்ந்திருந்து. அகத்தால் இன்புறுதல் :- 'முகத்தான் அமர்ந்து இனிது நோக்கி அகத்தான் ஆம் இன் சொலினதே அறம்' (குறள். 93) உள்ளத்தினுன் உகப்பான் இசைந்த அகத்தான் :- உள்ளத்தாலே உகப்ப இசைந்த அகத் தினுன். அகத்தானது அடி. உகப்பு - உயர்வு. விருப்பம் என்னும் பொருள் பிற்காலத்தது. வரும் பொன் முகத்தால் - வளர்கின்ற பொன் முகத்தினுல். பொன் முகம் குளிர்விக்கும். உள்ளம் உகப்புறுத்தும். அவற்றுல் குளிர்ந்திருக்கவும் உகப்ப வும் இசைந்த அகம்; நடுக்குறுப்பானும் உகப்பானுமாய் இசைந்த அகத்தவன். நடுக்குறுப்பவும் உகப்பவும் இசைந்த அகத் தான்றன் அடி. 'அகத்தான் வெருவ' - உள்ளே வெருவ. உருபு மயக்கம். அகத்தானடி :- ஆறனுருபு விரித்துரைக்க.

810. பை - படம். மாண் அரவு - மாண்ட பாம்பு. மாள்; மாண் இருமுதனிலையும் வினையாகுங்கால் இறந்த காலத்தில் ஒன்றுபடும். பைம் 'மாண்' இருபொருட்டு. மாளாநின்ற - மாணு நின்ற. மாளும் மாணும் எனப் பிறகாலங்களில் ஒன்ருமையுணர்க. அரவுபோலும் அல்குல். (கடிதடம்) பங்கயம். தாமரை. 'சேற்றிற் பிறந்திடுங் கமலம்' (குமரேச சதகம்) சீறடி - சிறுமை + அடி.

பழகவோ ரூர்தி யரன் பைங்கட் பாரிடம் பாணிசெய்யக்
குழலு முழவோடு மாநட மாடி யுயரிலங்கைக்
கிழவ னிருபது தோளு மொருவிர லாலிறுத்த
அழக னடிநிழற் கீழதன் றேவேன்ற னுருயிரே. 811

திருச்சிற்றம்பலம்

---

சிறிய காலடி, அடியாள் - உமைநங்கை' வெருவ :- கைச்சிலே, மாச்சிலே, வரிசிலே. கைம்மா - யானே. காமன் - மதன். கைம்மாவையும் காமனேயும் சீறடியாள் வெருவ அட்ட கடவுள் எனலுமாம். முக்கண் எம்மான் இவன் என்று இருவரும் ஏத்த எரியாக நிமிர்ந்த அம்மான். தீயாடிய கூத்தன். 'இருவர்' அயனும் மாயனும். எரிநிமிர்தல் - தீப்பிழம்பாக எங்கணும் வியாபித்து நிற்றல். 'இருவர்க்குங் காண்பரிய நிமிர் சோதி' (131) 'இரவியும் மதியும் விண்ணும் இருநிலம் புனலும் காற்றும் உரகம்ஆர்பவனம் எட்டும் திசை யோளி உருவம் ஆனய்'. (615).

811. பழகு அவ்வூர் ஊர்தி அரன் - பழக ஓர் ஊர்தி அரன் ; பழகிய அவ்வூர்தியை யுடைய அரன். பழக ஓர் ஊர்தியை யுடைய அரன். பழக என்னும் வினேயேச்சம் உடைய என விரித்த பெயரேச்சங்கோண்டதாகும். ஊர்தி - விடை. ஊர்ந்து செல்லப் படுவது. பைங்கட் பாரிடம் - பசிய கண்களேயுடைய பூதம். பாணி செய்ய - தாளம் இட. 'உமை பாடத் தாளம் இட' (2. 111. 1) 'குழலும் முழவோடும்' என்றதில் உள்ள மூன்றனுருபைக் கூட்டிக் குழலோடும் என்க. குழலோடும் முழவோடும் மாநடமாடி. 'குடமுழவம் வீணே தாளம் குறுநடைய சிறுபூதம் முழக்க மூாக்கூத்தாடுமே' (6. 4. 5). 'நடமாடி' பெயர் ; 'காத்தும் படைத்தும் கரந்தும் விளேயாடி' என்புழிப்போல. ஆடி இறுத்த அழகன் எனல் சிறவாது; விரலால் இறுத்தபோழ்து மாநடமாடியதாகப் போருள் படுதலின், உயர் இலங்கைக் கிழவன் - உயரிய இலங்கைக் குரியவன். கிழமை - உரிமை. 'கோவூர்கிழார்'. 'இருபது தோளும் ஒரு விரலால் இறுத்த அழகன் :- இனேத்தேன அறிந்த சினேக்கிளவிக்கு வினேப்படு தோகுதியின் வேண்டும் உம்மை பேற்று, இறுத்தது ஒரு விரல்; இற்றன இருபது தோளும் என்னும் நயத்தின் அமைந்தவாறறிக. சிறு முயற்சியாற் பேரு வேற்றியேய்துங்கால் உண்டாகும் அழகு என்பது தோன்ற 'அழகன்' என்றார்.

## 85. திருச்சோற்றுத்துறை

### திருப்பதிக வரலாறு

திருப்பழனப் பதிபுகுந்து பெருங்காதலோடும் பெருமான் கழல் சார்ந்து போற்றிசைத்து. சீலமுடைய அப்பூதியடிகளைச் சிறப்பித்து. 'சொன்மாலை' பாடிப் பின்னர், எழும் பணியும் இளம்பிறையும் அணிந்தவரை எம்மருங்கும் தொழும்பணி மேற்கொண்டு, தழும்புறு கேண்மையின் நண்ணிப், பல சிவ தலங்களை அடைந்து வழி பட்டார்கள். பாடியருளினார்கள். அவற்றுள் ஒன்று திருச்சோற்றுத் துறையைப் பாடியருளிய இத்திருப்பதிகம்.

திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

காலை யெழுந்து கடிமலர் தூயன தாங்கொணர்ந்து
மேலை யமரர் விரும்பு மிடம்விரை யான்மலிந்த
சோலை மணங்கமழ் சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
மாலை மதியமன் றேவெம் பிரானுக் கழகியதே. 812

812. விண்ணிலுறை வானவர்கள் காலையில் துயிலெழுந்து தூயனவாகிய மணமலர் பறித்துக்கொண்டு போந்து மிக்க விருப்புடன் வழிபடும் சிவனிடம் திருச்சோற்றுத்துறை. அது மணத்தால் மிக்க சோலைகள் சூழ்ந்தது. மணம் கமழும் சோற்றுத்துறை, 'சோறு மணக்கும் மடங்களெலாம்' (சேக்கிழார் பிள்ளைத்தமிழ்). அத் துறையுள் திருக்கோயில் கொண்டுறைகின்ற சிவபிரானது திருச்சடைமேல் விளங்கும் மாலைப் பிறையன்றோ எம்பிரானுக்கு அழகியது? 'மாலை மதியம்' - மாலையில் விளங்கும் மதியம். மாலையாகிய மதியம். 'மாதர்ப் பிறைக் கண்ணியான்' (21). இத்திருப்பதிகத்தில் ஐந்து பாட்டிலே மதியைக் குறித்துள்ளது. உறைவார் என்பது 'உயர் சொற் கிளவி'. மேல் வருவனவும் இன்ன. சோற்றுத்துறையுறைவார் என்றது அத்தலத்துச் சிவபிரானது திருப்பெயர். அது பன்மை யொருமை மயக்கமாகாது.

வண்டலை கொன்றையும் வன்னியு மத்தமும் வாளரவும்
கொண்டணெங் தேறு முடியுடை யான்குரை சேர்கழற்கே
தொண்டணெங் தாடிய சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
வெண்டலை மாலையன் றேவெம் பிரானுக் கழகியதே. 813

அளக்கு நெறியின னன்பர்க டம்மனத் தாய்ந்துகொள்வான்
விளக்கு மடியவர் மேல்வினை தீர்த்திடும் விண்ணவர்கோன்
துளக்குங் குழையணி சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
திளைக்கு மதியமன் றேவெம் பிரானுக் கழகியதே, 814

813. வண்டுகள் சேரும் கொன்றைமலர் மாலையும் வன்னியிலையும் மத்தமும் கொடும் பாம்பும் கூடிக் கொண்டு ஏறும் திருமுடியுடையவன். தொண்டர் எல்லாரும் அவ் வெம்பெருமானது ஒலிசேர் கழலடிக்கே தொண்டு பொருந்திப் பேரின்பக் கடலுள் ஆடுவது போலத் திருச்சோற்றுத்துறைக் காவிரியுள் ஆடிமகிழ்வர். அத்தகு பெருமை பொருந்திய தலத்துள் திருக்கோயில் கொண்டெழுந்தருளிய சிவபிரானது திருச்சடைமேல் விளங்கும் வெளிய தலைமாலையன்றே அவ் வெம்பெருமானுக்கு அழகியது ?

814. அளக்கும் நெறியினன்; ஆய்ந்துகொள்வான்; விண்ணவர் கோன்; துறையுறைவார். அவர் சடைமேல் திளைக்கும் மதியம் அன்றே எம்பிரானுக்கு அழகியது ? அன்பர்களுடைய மனத்தை ஆய்ந்துகொள்வான். அவர்களது அன்பினை அளக்கும் நெறியினன். ஆண்டவன் திருவடிப் பெருமையையும் தம்மையும் விளக்கும் அடியவருடைய பழைய (சஞ்சித) வினையையும் புதிய (ஆகாமிய) வினையையும் தீர்த்திட்டாளும் தேவாதிதேவன். துளக்கும் - ஒளி செய்யும். குழை - காதிற் குண்டலம். 'தோடுங்குழையும்' (திருவாசகம்). குழையணிவார்; சோற்றுத்துறையுறைவார். அவர் சடைமேல் திளைக்கும் மதியாம்

ஆய்ந்தகை வாளர வத்தோடு மால்விடை யேறியெங்கும்
பேர்ந்தகை மானிட மாடுவர் பின்னு சடையிடையே
சேர்ந்தகைம் மாமலர் துன்னிய சோற்றுத் துறையுறைவார்
ஏந்துகைச் சூல மழுவெம் பிரானுக் கழகியதே. 815

கூற்றைக் கடந்ததுங் கோளர வார்த்ததுங் கோளுழுவை
நீற்றிற் றுதைந்து திரியும் பரிசதும் நாமறியோம்
ஆற்றிற் கிடந்தங் கலைப்ப வலைப்புண் டசைந்ததொக்கும்
சோற்றுத் துறையுறை வார்சடை மேலதோர் தூமதியே. 816

815. கைவாள் அரவம் - கையிற் பூண்ட கொலைப் பாம்பு° ஆய்ந்த - நுணுகிய; ஆராய்ந்த அரவத்தோடு ஏறி ஆடுவர். எங்கும் பேர்ந்த கை - எங்கணும் பெயர்ந்த கை. கைமான் - கையில் ஏந்திய மான். மானுடன் நடம் ஆடுவர். மால் நடம் ஆடுவர் எனலும் ஆம். பின்னு சடையிடையே சேர்ந்த கைமலர். 'கால் கொண்ட வண்கைச் சடை' (890) என்றதும் இப் பொருட்டேபோலும். ஆண்டுக் கொண்ட ஐயம் ஈண்டு நீங்கிற்று. கால்கொண்ட வண்கையால் (தாள்தோய் தடக்கையால்) சடையை விரித்து ஆடும் கழுமலவர் என்று ஆண்டுரைத்துக் கொள்க. ஈண்டுச் சடையிடையே சேர்ந்தகை என்றும் கொள்க. கைம்மலர் :- அன்பர் பூசனையில் கையால் தூவியிடச் சடையிடையே சேர்ந்த மலர். அம்மலர் (நிருமாலியம்) துன்னியதுறை. திருச்சோற்றுத் துறையுறைவார் ஏந்திய திருக்கைச் சூலமும் மழுவும் எம்பிரானுக்கு அழகியன.

816. கூற்றை - காலனை. கடந்ததும் - வென்றதையும். கோள் அரவு ஆர்த்ததும் - கொலைப் பாம்பைப் பூண்டதையும். கோள் - கொலை, வலிமை கோள் உழுவை - 'கோல்புலியை' திருநீற்றிலே துதைந்து (- நெருங்கி). பரிசதும் - பரிசினையும். அது :- சுட்டுப்பெயரன்று. பரிசு எனும் முன்மொழிப் பொருட்டே யாய் நின்றது. பிறர் பகுதிப்பொருட்டென்பர். அது பகுதி யாகாது. கடந்ததையும் ஆர்த்ததையும் பரிசதையும் நாம் அறியோம். அறியோம் என்றது பார்த்தறியோம், அவற்றை வீரச் செயலென மதியேம், அவை வியப்பல்ல என்பன முதலிய பொருள் தரும். திருச்சோற்றுத் துறையுறைவார் திருச்சடை

வல்லாடி நின்று வலிபேசு வார்கோளர் வல்லசுரர்
கொல்லாடி நின்று குமைக்கிலும் வானவர் வந்திறைஞ்சச்
சொல்லாடி நின்று பயில்கின்ற சோற்றுத் துறையுறைவார்
வில்லாடி நின்ற நிலையெம் பிரானுக் கழகியதே. 817

ஆய முடையது நாமறி யோம்அர ணத்தவரைக்
காயக் கணைசிலை வாங்கியு மெய்துந் துயக்கறுத்தான்
தூயவெண் ணீற்றினன் சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
பாயும்வெண் ணீர்த்திரைக் கங்கையெம் மானுக் கழகியதே.

மேலதாகிய ஒரு தூய பிறை, அச் சடையில் அடங்கிய கங்கையாற்றிற் கிடந்து, அவ் யாற்றினலை அலைப்ப அலைப்புண்டு அசைந்தது போலும். மதி அசைந்தது ஒக்கும்.

817. வல்லாடி - வன்பு செய்து. வலி - வன்பு. கோளர் - வலியர்; கொலைஞர். கொல்லாடி - கொலைசெய்து. குமைக்கிலும் - அழித்தாலும். வல்லாடி நின்று வலிபேசுவாரும் கோளரும் ஆகிய வல்லசுரர் கொல்லாடி நின்று குமைத்தாலும், வானவர் (தேவர்)கள் விண்ணினின்று மண்ணில் வந்து வழிபட்டு உய்வார்கள். சோற்றுத் துறையுறைவார் தம்மை இறைஞ்சும் வானவர்களுடன் சொல்லாடி நின்று பழகுவார். அவ் வெம்பிரா னுக்கு வில்லாடி நின்றநிலை அழகியது.

818. ஆயம் - கூட்டம்; 'வெற்பர் ஆயம் ஓடி' (பெரிய புராணம் கண்ணப்பர் 77.) உடையது - உடையதை. நாம் அறியோம் - திரிபுரத்தை அழிக்கச் சென்ற சிவபிரானுக்குப் படைத்திரள் உண்டோ இல்லையோ நாம் அறியோம். அரணத் தவர் - முப்புரக்கோட்டையையுடைய அசுரர். காய - வேவ. கணை சிலை வாங்கியும் - அம்பை வைத்து வில்லை வளைத்தும். எய்தும் - தொடுத்தும். துயக்கு - அறிவின்திரிபு; தடை; சோர்வு; தளர்ச்சி. துயக்கறுத்தான் - அவுணரால் அமரர்க்குற்ற சோர்வை நீக்கினன். தூய திருநீற்றை அணிந்தவன். திருச்சோற்றுத்துறை யுறைவார்-அவர் சடைமேல் கங்கை அழகியது. சடைமேல் பாயும் கங்கை. வெண்ணீர்க்கங்கை; திரைக்கங்கை. திரை - அலை.

அண்ட ரமரர் கடைந்தெழுந் தோடிய நஞ்சதனை
உண்டு மதனை யொடுக்கவல் லான்மிக்க வும்பர்கள்கோன்
தொண்டு பயில்கின்ற சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
இண்டை மதியமன் றேவெம் பிரானுக் கழகியதே, 819

கடன்மணி வண்ணன் கருதிய நான்முகன் றனறியா
விடமணி கண்ட முடையவன் றனேனை யாளுடையான்
சுடரணிந் தாடிய சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
படமணி நாகமன் றேவெம் பிரானுக் கழகியதே. 820

819. அண்டர் - பகைவர் (அசுரர்). (பிங்கலந்தை 3055) அமரர் - தேவர். 630 பார்க்க. அண்டரும் அமரரும் கடைந்து எழுந்து ஓடுவதற்கு ஏதுவான நஞ்சினை உண்டும் அதனால் தான் ஒடுங்காது அதனை ஒடுக்க வல்லவன். 'வானுளார் பரச அந்தரத்து அமரர்கள் போற்றப் பண்ணினர் எல்லாம்' (3. 118. 4) என்றதிற்போல வானுளாரும் அமரரும் எனலுமாம். மிக்க உம்பர்கள் கோன் - எண்ணில்லாத தேவர்க்கெல்லாம் முதல்வன் ('விண்ணவர் கோன்' 814) இந்திரன் தொண்டு பயில்கின்ற சோற்றுத்துறை யுறைவார் எனலும் ஆம். சடை மேல் இண்டை மதியம் அன்றோ அழகியது? இண்டை மதியம் - இண்டை மாலையும் பிறையும். 'இந்திரன் வனத்து மல்லிகை மலரி னிண்டை சாத்தியதென நிறைந்த சந்திரன் முடிமேல் வந்துறுஞ் சோண சைலனே கைலை நாயகனே.' (சோண சைலமாலை 57.) என்றவாறு இண்டை பிறைக்கு உவமையுமாம். இண்டையாய் நின்ற மதியம் எனலுமாம்.

820. கடல் மணி வண்ணன் - கடல் வண்ணன்; மணி வண்ணன் - கடல் போலும் நிறமுடையவன், நீலமணி போலும் நிறமுடையவன். கருதிய - திருமுடியை எளிதிற் கண்டு கொள்ளலாமென்று எண்ணிய. நான்முகன்-திசைமுகன். ஈண்டுத் 'திசை' நான்கு என்னும் எண்ணுப் பொருள் மேலது. அறியா என்னும் பெயரேச்சம் உடையவன் என்னும் பெயர் கொண்டது. விடம் - நஞ்சு, அணி - அணியும். (அழகு செய்யும்) கண்டம் - திருநீலகண்டத்தையுடையவன், தான் எனை ஆள் உடையான்:-

இலங்கைக் கிறைவ னிருபது தோளு முடிநெரியக்
கலங்க விரலினு லூன்றி யவனைக் கருத்தழித்த
துலங்கன் மழுவினன் சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
இலங்கு மதியமன் றேயெம் பிரானுக் கழகியதே. 821

திருச்சிற்றம்பலம்

'தானே வந்தென்னைத் தலையளித்தாட்கொண்டருளும் வான் வார்கழல்' சுடர் - வெயிலை. அணிந்து ஆடிய - அழகுறக் கொண்டு முழுகிய. இத்தலத்தில் இந்திரன், சூரியன், கௌதமர், அருளாளர் முதலியோர் வழிபட்டனர். 'செங்கதிரோன் வணங்கும் திருச்சோற்றுத்துறையனுரே'. (பாட்டு 411) இக் காலத்திலும் ஆண்டுதோறும் இத் திருக் கோயிலுள்ளே எழுந் தருளியுள்ள சிவலிங்கத் திருமேனியில் சூரியனொளி வீசும் வியத்தகு காட்சி உண்டு.

821. இலங்கைத் தலைவனுகிய இராவணனுடைய இருபது தோள்களும் பத்து முடிகளும் நெரியவும், நெஞ்சம் கலங்கவும் திருக் காற்பெரு விரலால் ஊன்றி அழித்த மழுவினன் :- அவனது கருத்தழித்த மழுவினன். துலங்கல் - ஒளிர்தல். இலங்குமதியம் :- 'இலங்கு வெண்பிறைசூ டீசனடியார்க்குக் கலங்கு நெஞ்சமிலை காண்'. (நன்னூல் சங்கர நமச்சிவாயப் புலவருரை. 92). தோளும் முடியும் நெரியக் கலங்க ஊன்றிக் கருத்தழித்த மழுவினனுகிய சோற்றுத்துறையுறைவார்சடை மேல் இலங்கும் மதியம் அன்றே அவ்வெம்பிரானுக்கு அழகியது ?

கோவாய் முடுகி யடுதிறற் கூற்றங் குமைப்பதன்முன்
பூவா ரடிச்சுவ டென்மேற் பொறித்துவை போகவிடின்
மூவா முழுப்பழி மூடுங்கண் டாய்முழங் குந்தழற்கைத்
தேவா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே.

# 86. திருவொற்றியூர்

## 86 ஆவது திருப்பதிக வரலாறு

தமிழ் வேந்தர், திருவான்மியூர் மருந்தைச் சேர்ந்து பணிந்து பாடிப் பிறகோயில் பலசார்ந்து இறைஞ்சி, மயிலாப்பூர் வந்தடைந்தார்; தரைவளர்சீர்த் திருமயிலைச்சங்கரனுர் தாள் வணங்கினுர்; உரைவளர்மாலைகள் அணிவித்தார்; திரைவளர் வேலைக்கரையிற் போனுர்; திருவொற்றியூர் சேர்ந்தார், வழித்தொண்டர் கூட்டம் ஒற்றியூர் ஒளிமணி வீதிகளை விளக்கி, கொடிகளும் மாலைகளும் கமுகும் கதலியும் நிரைத்துப் பொற்குடமும் நற்புகையும் சுடர் விளக்கும் பொலிவித்து, எதிர்கொண்டுபுக்கது. திருநாவுக்கரசரும் திருக்கோபுரத்தை வணங்கி வலங்கொண்டு, அடியார்கருநாமம் தவிர்ப்பாரை ஒரு ஞானத்தொண்டருடன் உருகிக் கைதொழுது முன் வீழ்ந்தார்; எழுதாத மறையளித்த எழுத்தறியும் பெருமானைப் பாடினுர். அவற்றுள் ஒன்று இத் திருப்பதிகம்.

திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

சேற்றுக் களிற்றுரி கோள்கின்ற ஞான்று செருவெண்
கோம்போன்
றிற்றுக் கிடந்தது போலு மிளம்பிறை பாம்பதனைச்
சுற்றிக் கிடந்தது கிம்புரி போலச் சுடரிமைக்கும்
நெற்றிக்கண் மற்றதன் முத்தொக்கு மாலொற்றி யூரனுக்கே.

822. திருவொற்றியூர் எழுத்தறியும் பெருமானுக்குக் களிற்றைச் சேற்று உரிகோள்கின்ற ஞான்று கோம்பு ஒன்று இற்றுக் கிடந்தது போலும் இளம்பிறை. அக்கோம்பினைச் சுற்றிக்கிடந்த கிம்புரி போலும், அப்பிறையைச் சுற்றிக் கிடக்கும் பாம்பு. அக்கோம்பின் உளதாய் வெளிப்படும் முத்துப்போலும் சுடர் இமைக்கும் நெற்றிக்கண். சேற்று - அழித்து. களிறு - ஆண்யானை. உரி - தோல். ஞான்று - நாளன்று என்பதன் மரூஉ. செரு - போர். யானைப்போர்க்கு அதன் கோம்பே படையாதலின், செருவெண் கோம்பு ஆம். வெண்கோம்பு:- இயைபின்மை மாத்திரை நீக்கிய அடை. இற்று - இறுதலை

சொல்லக் கருதிய தொன்றுண்டு கேட்கிற்றொண்
டாயடைந்தார்
அல்லற் படக்கண்டு பின்னென் கொடுத்தி யலைகொண்முந்நீர்
மல்லற் றிரைச்சங்க நித்திலங் கொண்டுவம் பக்கரைக்கே
ஒல்லைத் திரைகொணர்ந் தெற்றொற்றி யூருறை யுத்தமனே.

யுற்று. இறுதல் - ஒடிதல். அதனை - அப்பிறையை. கிம்புரி - யானைக் கொம்பிற்கிடும் பூண். 'வச்சிர மருப்பின் ஒற்றை மணிகொள் கிம்புரிவயங்க' (கந்த புராணக் காப்பு). 'குழூஉக் களிற்றுக் குறும்புடைத்தலிற் பருஉப் பிணிய தொடி கழிந்தனவே' (புறம். 97) 'பொற்கோட்டியானையர்' (ஷை. 377), 'திரண்ட களிற்றையுடைய அரணை யழித்தலால் பரிய பிணித் தலையுடையவாகிய கிம்புரிகள் கழன்றன' (ஷை. 97. உரை. 'இரும்பு செய்தொடி' (அகம். 26) எனலுமுண்டு. ஒற்றி யூரனார் திருமுடிமேற் பிறையானது களிற்று வெண்கொம்புக்கும் அப்பிறையைச் சுற்றிக் கிடக்கும் பாம்பானது அக்கொம்பைச் சுற்றிக்கிடக்குங் கிம்புரிக்கும், அவரது சுடரிமைக்கும் நெற்றிக் கண்ணனது அக்கொம்பின்கண் உண்டாம் முத்துக்கும் உவமேயம். சுடர் - தீ.

823. அலையைக் கொண்ட கடலில் உள்ள வளத்தினையும் திரையினையும் உடைய சங்கங்களையும் முத்துக்களையும் கொண்டு நிலையின்மையை யுடைய கரைக்கே விரைந்து கொணர்ந்து அலைகள் மோதுகின்ற திருவொற்றியூரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் உத்தமரே. கேட்பீராகில் அடியேன் சொல்லக் கருதியது ஒன்றுண்டு; தொண்டராய்த் தேவரீரைப் புகலடைந்தவர் அல்லற்படுகின்றனர். அவர் அது படுதலைக் காண்கின்றீர். இப்போது அதனைத் தீர்ப்பீரல்லீர். பின்னர் என்ன கொடுத்தருள்வீர்? நும் ஊரோ ஒற்றியூர். நும் வாழ்வும் ஒற்றியூரில். நும்மைத் தொண்டாயடைந்தார் படும் அல்லலை அகற்றுத நீர் பின் யாது கொடுப்பீர்? வம்பு - நிலை யின்மை. 'வம்பு நிலையின்மை மாதர் காதல் நம்பும் மேவும் நசையாகும்மே' (தொல். சொல். உரிச். 18). 824. பார்க்க.

பரவை வருதிரை நீர்க்கங்கை பாய்ந்துக்க பல்சடைமேல்
அரவ மணிதரு கொன்றை யிளந்திங்கள் சூடியதோர்
குரவ நறுமலர் கோங்க மணிந்து குலாயசென்னி
உரவு திரைகொணர்ந் தெற்றுமொற்றி யூருறை யுத்தமனே.824

தானகங் காடரங் காக வுடையது தன்னடைந்தார்
ஊனக நாறு முடைதலை யிற்பலி கொள்வதுந்தான்
தேனக நாறுந் திருவொற்றி யூருறை வாரவர்தாம்
தானக மேவந்து போனகம் வேண்டி யுழிதர்வரே, 825

824. பரவை வருதிரைநீர்க் கங்கை - கடல் போலப் பெருக்கெடுத்து வருகின்ற அலைகளையுடைய கங்கை நீர், பாய்ந்து - ; உக்க - சிதறிய, உக்க சடை - கங்கை சிதறு தற்குத்தக்க வன்மைமிக்க சடை. பல்சடை :- 'பல் சடைப் பனிகால் கதிர்வெண்டிங்கள்.' (சம்பந்தர்), சடைமேல் அரவமும் கொன்றையும் திங்களும் குரவ மலரும் கோங்க மலரும் அணிந்து குலாய சென்னியையுடைய உத்தமன். அரவம் - பாம்பு. அணிதரு கொன்றை - அழகைத் தருகின்ற கொன்றை மாலை. 'அணிந்து' எனப் பின் வருதலின், ஈண்டு வேறுபொருள் கொள்ளப்பட்டது. சூடியதொரு குரவ மலர்; நறுமலர், மலர் என்பதைப் பிரித்துக் கோங்கத்தோடும் சேர்க்க. குலாய - குலவிய, சென்னி - தலையுச்சி. உரவு - கடல். திரை - அலை, எற்று - மோதுகின்ற. 823. பார்க்க.

825. தேன் அகம் நாறும் திருவொற்றியூர் - பூத்தேன் மிக்குத் தன்னிட மெல்லாம் மணக்கும் வளமுடைய திருவொற்றியூரில். உறைபவர். தாமே வீடுதொறும் போந்து பிச்சையுண்டி வேண்டித் திரிவர். 'தானே வந்தென்னைத்தலை யளித்தாட் கொண்டருளும் வான்வார்கழல் பாடிவந்தோர்'. 'இல்லங்கள் தோறும் எழுந்தருளி' 'அடியார் பழங் குடில் தோறும் எழுந்தருளிய பரனே (திருவாசகம்). தான் அகமே வந்து என்பதில் உள்ள ஏகாரத்தைப் பிரித்துத் தானே அகம் வந்து என்றுரைக்க. உறைவார் தாம் தானே என்றதில் உள்ள பன்மை ஒருவரைக் குறித்த உயர்சொற்கிளவி. அரங்கு :- தான் அரங்காக உடையது

வேலைக் கடனஞ்ச முண்டுவெள் ளேற்றேடும் வீற்றிருந்த
மாலைச் சடையார்க் குறைவிட மாவது வாரிகுன்ற
ஆலைக் கரும்பொடு செந்நெற் கழனி யருகணைந்த
சோலைத் திருவொற்றி யூரையெப்போதுந் தொழுமின்களே.

புற்றினில் வாழ மரவுக்குந் திங்கட்குங் கங்கையென்னும்
சிற்றிடை யாட்குஞ் செறிதரு கண்ணிக்குஞ் சேர்விடமாம்
பெற்றுடை யான்பெரும் பேச்சுடை யான்பிரி யாதெனையாள்
விற்றுடை யாளுற்றி யூருடை யான்றன் விரிசடையே. 827

காடகம். தான் பலிகொள்வதும் தன்னை அடைந்தவரது ஊன் அகம் நாறும் உடைந்த தலையில்.

826. வேலைக் கடல் - கரையுடைய கடல். வேலை - கடற்கரை. நஞ்சம் உண்டு வெள்விடையோடும் வீற்றிருந்தவர். வெள்ளேறு - 'நரை வெள்ளேறு'. மாலைபோலும் செஞ்சடையார். மாலை என்பது அப்பொழுது வானில் தோன்றும் நிறத்துக்கு ஆகுபெயர். அது சிவபிரானது செஞ்சடைக் குவமையாயிற்று. அவர்க்கு இடம் ஆவது திருவொற்றியூர். அது சோலையுடையது. அதன் அருகே கழனிகள் அணைந்துள்ளன. செந்நெல் விளையுங் கழனி. கரும்பும் விளையும். ஆலையிற் புகவிட்டுச் சாறு வடிக்கும் இனிய கரும்பு. வாரி - வருவாய், குன்ற - குறையாத, கரும்பொடு செந்நெல்லுடைய கழனி. நெற்கழனி.- இரண் டனுருபும் பயனுந் தொக்க தொகைநிலைத் தொடர்.

827. அரவுக்கும் திங்கட்கும் சிற்றிடையாட்கும் கண் ணிக்கும் சேர்விடம் விரிசடையே ஆம் என்க. புற்றினில் வாழும் அரவு:- 'புற்றில் வாளரவன் - புற்றின் கண்ணவாகிய ஒளியையுடைய பாம்பையுடையவன்' 'வேள்வித்தீயிற் பிறந்து திருமேனிக்கண் வாழ்தலாற் புற்றையுடைய வல்லாத அரவு என்றுரைப்பினும் அமையும்' (திருக்கோவையாருரை. 97). 'புற்றில் வாழரவும் அஞ்சேன்' (திருவாசகம் 516) திங்கள் - பிறை. கங்கையைச் சிற்றிடையாள் என்றது வடமொழி வழக்கு. 'நதி பதி என்று கடலையும் 'சமுத்திர பத்தினி' என்று யாற்றையும் வடநூலார் வழங்குவர். செறிதருகண்ணி - தலைமேற் செறிக்கும்

இன்றரைக் கண்ணுடை யாரெங்கு மில்லை யிமயமென்னும்
குன்றரைக் கண்ணன் குலமகட் பாவைக்குக் கூறிட்டநா
ளன்றரைக் கண்ணுங் கொடுத்துமை யாளையும் பாகம்வைத்த
ஒன்றரைக் கண்ணன்கண் டீரொற்றி யூருறை யுத்தமனே.

சுற்றிவண்டி யாழ்செயுஞ் சோலையுங் காவுந் துதைந்திலங்கு
பெற்றிகண் டான்மற்றி யாவருங் கொள்வர் பிறரிடைநீ
ஒற்றிகொண் டாயொற்றி யூரையுங் கைவிட் டுறுமென்
றெண்ணி
விற்றிகண் டாய்மற் றிதுவொப்ப தில்லிடம் வேதியனே. 829

ஒற்றைப்பூத்தோடை. ‘திங்கட் கண்ணி’ ‘பிறைக்கண்ணி’ என்பன நினைக. சேர்வு - சேர்தல்; சார்வு, தீர்வு, வேர்வு முதலியன நோக்குக. பெற்று:- பெற்றம்; எருது. ‘பெற்றேறும் பெருமானுர்’ (3. 64. 10) ‘பெற்றேன்றுயர்த்த பெருமான் பெருமானும் அன்றே’ (3. 54. 11.). பெரும்பேச்சு - மகாவாக்கியம். ‘பெரும் பொருட் கிளவியான்’ (718) என்பதன் குறிப்பினைக் காண்க. எனைப் பிரியாதுடையான்; எனை ஆளுடையான். எனை விற்றுடையான்; ஆளாக்கிக்கொண்டு விற்றற்கும் உரிமையுடையான். இத்தகு பெரியன் ஒற்றியூருடையான். அவனது விரி சடையே அரவு முதலிய நான்கும் சேர்விடம் ஆம்.

828. அரைக்கண் உடையார் எங்கும் இன்று இல்லை. கூறிட்ட அன்று ஒன்றரைக்கண்ணன் ஒற்றியூர் உறை உத்தமன்; கண்டீர்! இமயம் என்னும் குன்றர் ஐக்கு அண் நல்குலமகள் பாவைக்கு - பனிமலை (ஹிமாசலம்) எனச் சிறப்பித்து வழங்கப் படும் குன்றருடைய தலைவனுக்குத் தோன்றுமல் வந்து கிடைத்த நல்ல மேன்மையுடைய உமாதேவியார்க்கு. கூறு இட்ட நாள் - தன் திருமேனியைப் பகுத்து இட்ட நாள். நாள் அன்று - நாளன்று; இங்கு நாளன்று எனப் பிரிக்காமலிருப்பதே தக்கது; ‘நாளன்று’ என்றதே ‘ஞான்று’. அரைக்கண்ணும் அளித்து, அவ்வுமையாளையும் செம்பாகத்தில் வைத்துக்கொண்ட ஒன்றரைக்கண்ணன் ஆனுன் ஒற்றியூருறை உத்தமன். ‘கண்டீர்’ முன்னிலையசை எனல் மரபு. குன்றர் ஐ கண் எனப்பிரித்துக் கண்போலும் மகள் எனலுமாம்.

829. வண்டு சுற்றி யாழ் செய்யும் சோலை. சோலையும் காவும் என்ற இவ்வாசிரியர்க்கு அவ்விரண்டும் வெவ்வேறுதல்

சுற்றிக் கிடந்தொற்றி யூரனென் சிந்தை பிரிவறியான்
ஒற்றித் திரிதந்து நீயென்ன செய்தி யுலகமெல்லாம்
பற்றித் திரிதந்து பல்லோடு நாமென்று கண்குழித்துத்
தெற்றித் திருப்பதல் லாலென்ன செய்யுமித் தீவினையே. 830

புலப்படும். பிற நூல்களுள் இரண்டும் ஒரு பொருளவா யாளப் பட்டுள்ளன. 'இளமரக்கா' என்பது காவினியல் புணர்த்தும். வயல் சூழ்ந்த இளமரங்களையுடையதே இளமரக்கா எனப்படும். (பிங்கலந்தை. 2845) ஊரோடு சேர்ந்த மரங்களின் கூட்டத்தைக் காடு (ஷை 2841) என்பர். மலையோடு சேர்ந்ததைச் சோலை (ஆராமம்) என்பர். (ஷை 2842) கழிக்கரையிலுள்ளதைக் கானல்(ஷை2843) என்பர். செய்குன்று சேரத் தொகுத்தவற்றைத் தோப்பு (தொகுப்பு என்றதன்மரூஉ) என்பர். (ஷை 2844) குறுங்காடு 'இறும்பு' பெருங்காடு 'வல்லை' ஷை 'கடிமரந் துளங்கிய கா' (புறம் 23.) 'காடு கால்யாத்த நீடுமரச்சோலை' (அகம் 109) என்பவற்றால் வேறுபாடு ஒரு சிறிது புலப்படும். மலையிலுள்ளதைச் சோலை என்றும், மலர்க்காவைச் சோலை எனலாகா தென்றும், பொழில் முதலியன வெவ்வேறென்றும் பண்டைய நூல்களால் அறியலாகும். துதைந்து - நெருங்கி. இலங்கு பேற்றி (- விளங்கும் தன்மை)யைக் கண்டால் யாவரும் கொள்வர். வேதியனே, நீ பிறரிடை ஒற்றிகொண்டாய், ஒற்றியூரையும் கைவிட்டு உறும் என்று எண்ணி விற்றிகண்டாய். இது ஒப்பது இடம் மற்று இல். ஒப்பற்ற இடத்தைப் பிறரிடத்திலிருந்து நீ ஒற்றிகொண்டு விற்றி என்றது.

830. ஒற்றியூரன் சுற்றிக்கிடந்து என்சிந்தை பிரிவு அறியான்; நீ உலகம் எல்லாம் ஒற்றித் திரிதந்து என்ன செய்தி? உலகமெல்லாம் பற்றித்திரிந்து பல்லோடு நாமென்று கண் குழித்துத் தெற்றித்திருப்பது அல்லால் இத் தீவினை என்ன செய்யும்? என் சிந்தையைப் பிரியாமல் ஒற்றியூரன் (அச்சிந்தையைச்) சுற்றிக் கிடக்கின்றான். அதனால் தீவினை என்னை யாதுஞ் செய்யவல்லதன்று என்றதாம், தீவினை உலகமெல்லாம் பற்றித்திரிதலும், பல்லையும் நாவையும் மெல்லுதலும், கண்ணைக் குழித்தலும், தெற்றித்திருத்தலும், அல்லாமல் வேறு என்ன செய்ய வல்லது? தெற்றுதல் - மாறுபடல்; பிணங்குதல்; பின்னுதல்; தடுத்தல். திரிதரல் உழிதரல்

அங்கட் கடுக்கைக்கு முல்லைப் புறவ முறுவல்செய்யும்
பைங்கட் டலைக்குச் சுடலைக் களரி பருமணிசேர்
கங்கைக்கு வேலை யரவுக்குப் புற்றுக் கலைநிரம்பாத்
திங்கட்கு வானந் திருவோற்றி யூரார் திருமுடியே. 831

தருக்கின வாளரக் கன்முடி பத்திறப் பாதந்தன்னால்
ஒருக்கின வாறடி யேனைப் பிறப்பறுத் தாளவல்லான்
நெருக்கின வானவர் தானவர் கூடிக் கடைந்தநஞ்சைப்
பருக்கினவா றென்செய்கே னொற்றி யூருறை பண்டரங்கனே.

திருச்சிற்றம்பலம்

புகுதரல் என்பன முதலியவற்றில், தரல் துணைவினையாய் வந்தது என்பர். ஒற்றி - ஒன்றாகி, ஒன்றுபட்டு. இனி வினை ஒற்றி இடர்ப்படுத்த வழியில்லை; ஒற்றியூரன் ஒற்றிக்காப்பதால்.

831. திருவோற்றியூரர் திருமுடி ஒன்றே, கொன்றைக்கு முல்லைக் கொல்லையாயும், 'பல்லாடு தலை'க்குச் சுடுகாடாயும் கங்கையாற்றுக்குக் கடலாயும், பாம்புக்குப் புற்றாயும், பிறைக்கு விண்ணாயும் நின்று வெவ்வேறு (பல) இடமாயிற்று. அம் - அழகு. கள் - தேன். கடுக்கை - கொன்றை. புறவம் - முல்லை நிலம். முல்லைப் புறவம் - முல்லை மலரும் நிலம். முறுவல் - சிரிப்பு. பை கண் - பசிய கண்கள். 'தலை' ஈண்டுத் தலைக் கணிந்த தலைமாலையைக் குறித்தது. பல்லாடு தலை சடைமேல் உடையான் (6. 92. 2 - 10), சுடலை - சுடலுடையது; சுடு காடு. களரி - காடு. களர் நிலம் பற்றிய காரணப் பெயர். பருமணி - பரியமணி (முத்து, பவளம் முதலியன), வேலை - கடல். கலை நிரம்பாத் திங்கள் - பிறை. வானம் - வெளி.

832. திருவோற்றியூருறையும் பாண்டரங்கம் என்னும் திருக்கூத்துடையான் அடியேனைப் பிறப்பறுத்து ஆளவல்லான். வானவரும் தானவரும் கூடிப் பாற்கடலைக் கடைந்த காலத்து எழுந்த நஞ்சினைப் பருகச் செய்தவாறு என்செய்வேன்? தருக்கின அரக்கன் - செருக்கிய இராவணன். பத்துமுடியும் இற. இறல் - இறுதல், ஒடிதல். இற ஒருக்கினவாறு. ஒருக்குதல் - அழித்தல்; பத்து முடியையும் ஒருமையுறச் செய்தல்.

ஒருங்கல் :- தன்வினை. ஒருக்கல் :- பிறவினை. 'பாதம்' ஈண்டுத் திருக் காற்பெருவிரலின் நுனியைக் குறித்தது. அவ் விராவணன்முடி பத்தும் இற ஒருக்கியதும் பாதம்; அடியேன் பிறப்பறுத் தாள்வதும் பாதம். நெருக்கின - நெருங்கப்பண்ணிய. நஞ்சைப் பருகினவன் பண்டரங்கன். பருக்கினவர் வானவரும் தானவரும். பருகல் :- தன்வினை. பருக்கல் :- பிறவினை. தானவர் - அசுரர். பாடல் - பாட்டல் என்பதுபோல். 'பாட்டிநுய்' (756), 'பாட்டுவித்தார் ஆர் ஒருவர் பாடா தாரே.' 'காட்டி வைத்தார் தம்மை யாம் கடிப்பூப் பெய்யக் காதல் வெள்ளம் ஈட்டிவைத்தார் தொழும் ஏகம்பர், ஏதும் இலாத எம்மைப் பூட்டிவைத்தார் தமக்கு, அன்பது பெற்றுப் பதிற்றுப் பத்துப் பாட்டிவைத்தார் பரவித்தொழுதாம் அவர் பாதங்களே' (திருவேகம்ப முடையார் திருவந்தாதி 99) என்புழிப் பாட்டுதல் பாட்டுவித்தல் இரண்டும் உள்ளமை உணர்க. 'பாண்டரங்கம் பண்டரங்கம் எனநின்றது' கலித் தொகை - கடவுள் வாழ்த்து. நச்சினார்க்கினியர் உரை. அது பண்டங்கம் எனமருவிற்று. 'திங்கள் தங்கும் முடிப் பண்டங்கனே' 'பண்டங்கன் வந்து பலிதா என்றான்' (பொன் வண்ணத் தந்தாதி. 32 - 33) 'பலிதிரிந்துழல் பண்டங்கன்' (2. 6. 12) 'நெடியானோடு நான்முகனும் நினைவொண்ணாப்படியாகிய பண்டங்கன்' (2. 35. 9) 'பாம் பரைச் சாத்தியோர் பண்டங்கன்' (2. 44. 3) 'தோணிபுரத் துறையும் பண்டரங்கர்' (1. 60. 1) 'பாசத்தைப் பற்றறுக்க லாகும் நெஞ்சே பரஞ்சோதி பண்டரங்கா பாவநாசா' (6. 31. 9) 'பற்றார்புரம் எரித்தாய் என்றேன் நானே பசுபதிபண்டரங்கா என்றேன் நானே' (6. 37. 6).

நினைந்துருகு மடியாரை நைய வைத்தார்
நில்லாமே தீவினைக ணீங்க வைத்தார்
சினந்திருகு களிற்றுரிவைப் போர்வை வைத்தார்
செழுமதியின் றளிர்வைத்தார் சிறந்து வானோ
ரினந்துருவி மணிமகுடத் தேறத் துற்ற
வினமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப் பில்கி
நனைந்தனைய திருவடியென் றலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே.

# 87. திருப்பழனம்

## திருப்பதிக வரலாறு

இது திருப்பழனத்திற் பாடிய சொன்மாலைகளுள் ஒன்று. (திருப்பதிகம். 12, பார்க்க);

### திருவிருத்தம்

### திருச்சிற்றம்பலம்

மேவித்து நின்று விளைந்தன வேந்துயர் துக்கமெல்லாம்
ஆவித்து நின்று கழிந்தன வல்ல லவையறுப்பான்
பாவித்த பாவனை நீயறி வாய்பழ னத்தரசே
கூவித்துக் கொள்ளுந் தனையடி யேனைக் குறிக்கொள்வதே.

833. பழனத்து அரசே, துக்கம் எல்லாம் வேந்துயர் மேவித்து நின்று விளைந்தன ; அல்லல் ஆவித்து நின்று கழிந்தன. அவை அறுப்பான் பாவித்த பாவனை நீ அறிவாய். ஆபற்சகாயர் ஆதலின் இப் பதிகம் இவ்வாறமைந்தது. கூவித்துக் கொள்ளும் தனை அடியேனைக் குறிக்கொள்வது. மேவுதல் ; மேவித்தல், ஆவித்து - உயிர்த்து ; புகைத்து ; ஆவி விட்டு. 'ஊனில் ஆவி உயிர்க்கும் பொழுதெல்லாம் நான் நிலாவியிருப்பன் என் நாதனை' (5. 1. 5) கூவித்து - கூவச் செய்து. கூவல்; கூவித்தல். துக்கம் எல்லாம் வேந்துயரத்தை மேவச் செய்து நின்று முற்றின. வேந்துயரும் துக்கமும் ஆகிய எல்லாம் மேவித்து நின்று விளைந்தன எனலும் ஆம். 'துயரமே ஏற்றம் ஆகத் துன்பக் கோலதனைப் பற்றி' (504) என்புழித் துயரம் துன்பம் வேவ்வேறுதல் விளங்கிற்று. அத் துன்பமே ஈண்டு வடமொழியில் 'துக்கம்' எனப்பட்டது. 'சுகதுக்கம்' என்றதன் பொருளதே தமிழில் 'இன்பத்துன்பம்' என்பது. 'அல்லல் என்செய்யும் அருவினை என்செய்யும்.' 'அல்லல் தீர்க்கும் அருமருந்து'. அறுப்பான் - அறுக்க. பாவித்த பாவனை:- சிவோகம்பாவனை. சரியைமுதலிய நாற்றிறத் தினருடையவும் ஆம். கூவித்துக் கொள்ளல் :- 'அறைகூவி ஆட்கொண்டருளி' (திருவாசகம் 3 :- 148) 'இங்கே வா என்று அங்கேகூவும் அவ்வருளைப்பெறுவான் ஆசைப்பட்டேன்'

சுற்றிநின் றார்புறங் காவ லமரர் கடைத்தலையில்
மற்றுநின் றார்திரு மாலோடு நான்முகன் வந்தடிக்கீழ்ப்
பற்றிநின் றார்பழ னத்தர சேயுன் பணியறிவான்
உற்றுநின் றாரடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 834

(ஷை. 418) 'என்னை நீ கூவிக்கொண்டருளே' (ஷை. 449) 'நீயே அருள் செய்து கோனே கூவிக்கொள்ளும் நாள் என் றென்றுன்னைக் கூறுவதே'. (ஷை. 499) 'உடையாய் கூவிப் பணிகொள்ளாதொறுத்தால் ஒன்றும் போதுமோ' (ஷை: 497) என்பவற்றான் ஆண்டவன் அடிமையைக் கூவுதல் உண்மையை உணர்க. ஆற்றல்மிக்க அன்பால் அழைக்கின்றிலேன்' (திருவா சகம். 49) 'பற்றியழைத்துப் பதறினர்' (ஷை. 4;- 49) அடியேன் ஆதரித்து அழைத்தால் அதந்துவேன் என்றருளாயே' (ஷை. 458) 'பிறைசேர் சடையாய் முறையோ என்று அழைத்தால் அருளாதொழிவதே அம்மானே உன் அடியேற்கே' (ஷை. 496) என்பவற்றால் அடிமை ஆண்டவனை அழைத்த லுண்மையை அறிக. அழைத்தல் அடிமையின் தொழில்; கூவல் தலைவன் செயல் என்னும் வேறுபாடும் உணர்க. தனை - அளவு. கொள்ளும் தனை - கொள்ளும் அளவு. குறிக்கொள்வது குறிக் கொண்டருளுவது என்றமையால் இறைவன் செயலாயிற்று. குறிக்கொள்ளல் உயிர்க்கே உரித்தாதல் 'நின் குரைகழல் காட்டிக் குறிக்கொள்க என்று நின் தொண்டரிற் காட்டாய்' 'பண்டைத் தொண்டரோடும் அவன்றன் குறிப்பே குறிக் கொண்டு போம் ஆறு அமைமின்' (திருவாசகம். 405, 607) என்பவற்றால் அறியப்படும். குறிக்கொள்வது :- வியங்கோள். இதன் 734. குறிப்பிற் காண்க.

**834.** பழனத்து அரசே, புறம் சுற்றிக் காவல் நின்றார்; மற்றும் கடைத்தலையில் (பலர்) நின்றார்; திருமாலோடு நான்-முகன் வந்து (நின்) அடிக்கீழ்ப்பற்றி நின்றார்; உன்பணி அறிவான் உற்று நின்றார். அடியேனைக் குறிக்கொண்டருளுவது. (அருள்க). அருளுவது :- வியங்கோள். 'மறப்பது அறிவிலேன் கூற்றுக்களே'. 'அறிவில்லாதேன் சொல்லிய சொற்களை [அவற்றை] மறப்பாயாக'. 'மறப்பது என்பது வியங்கோள்' (திருக்கோவையார். 87. உரை). புறஞ்சுற்றிக் காவல் நின்றார் மற்றும் பலர். வந்து அடிக்கீழ்ப்பற்றி நின்றார் திருமாலும்

ஆடிநின் றுயண்ட மேழுங் கடந்துபோய் மேலவையும்
கூடிநின் றுய்குவி மென்முலை யாளையுங் கொண்டுடனே
பாடிநின் றுய்பழ னத்தர சேயங்கோர் பான்மதியம்
சூடிநின் றுயடி யேனையஞ் சாமைக் குறிக்கொள்வதே. 835

எரித்துவிட் டாயம்பி னுற்புர மூன்றுமுன் னேபடவும்
உரித்துவிட் டாயுமை யாளடுக் கெய்தவோர் குஞ்சரத்தைப்
பரித்துவிட் டாய்பழனத்தர சேகங்கை வார்சடைமேல்
தரித்துவிட் டாயடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 836

நான்முகனும். அறிவான் - அறிய. உற்று - விரும்பி. 'மற்று' என்றதை அசையாக்கி, 'நின்றார்' என்ற நான்கனுள் முன்னிரண்டும் அமரர்க்கும் பின்னிரண்டும் மாலயற்கும் உரியவாக்கியுரைத்தலும் ஆம்.

835. பழனத்து அரசே, அண்டம் ஏழும் கடந்துபோய் மேலவையும் ஆடிநின்றாய்; கூடிநின்றாய்; குவிமென்முலையாளையும் கொண்டுடனே பாடி நின்றாய்; அங்கு ஓர்பால் மதியம் சூடி நின்றாய். அடியேனை அஞ்சாமைக் குறிக்கொண்டருளுவது. பால்மதியம் - பால்போலும் வெண்பிறை (843), 'உலகெலாம் மலர்சிலம்படி' ஆதலின், 'ஏழண்டத் தப்பாலான் இப்பாற் செம்பொற் புனத்தகத்தான்' ஆகி ஆடி நிற்றல் உரித்தே. 'ஆதியாய் நடுவுமாகி' 'கற்பனை கடந்த சோதி' என்றுதொடங்கும் பெரிய புராணத் திருப்பாடல்களை நினைக. 1. மாக்கூத்து (தூல நடனம்) 2. நுண்கூத்து (சூக்கும நடனம்) 3. கழிநுண்கூத்து (அதிசூக்கும நடனம், பர நடனம்) என்ற மூவகையாம். 'உலகமே உருவமாக..........நாடகம் நடிப்பன் நாதன்' (சிவஞான சித்தியார். சூ. 5 :- 7) என்பது சூக்கும நடனத்தை உணர்த்திற்று. அஞ்சாமை :- பிறப்பும் இறப்பும் மேலும் எய்துங்கொல் என்று அஞ்சுதல் நீங்கி, வீடுபெறுவதுறுதியென்னுந் துணிவுடைமை. ஈண்டு 'அஞ்சாமை' என்பது மறைவினை யெச்சப் பொருட்டாய் நின்று குறிக்கொண்டு அருளுவது என்பதைத் தழுவிற்று.

836. பழனத்து அரசே முன்னே புரம் மூன்றும் அம்பினாற் படவும் எரித்துவிட்டாய். உமையாள் நடுக்கு எய்த ஓர்

முன்னியு முன்னி முளைத்தன மூவெயி லும்முடனே
மன்னியு மங்கு மிருந்தனை மாய மனத்தவர்கள்
பன்னிய நூலின் பரிசறி வாய்பழ னத்தரசே
முன்னியு முன்னடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 837

குஞ்சரத்தை உரித்துவிட்டாய். வார்சடைமேல் கங்கை பரித்து விட்டாய்; தரித்துவிட்டாய். அடியேனைக் குறிக்கொண்டு அருளுவதே. முன்னே :- திரிபுரம் எரித்த காலத்தைக் குறிப்பது. அஃது அநாதியாகும், பரிபக்குவம் உடையவர்க்கு முப்புர தகனம் (மும்மலமும் நீக்கும் அருட்செயல்) நிகழ்வதாகும். 'பிறந்த நாள் மேலும் பிறக்கும் நாள் போலும் துறந்தோர் துறப்போர் தொகை'. (திருவருட்பயன். 11) புரத்தை எரித்ததும், குஞ்சரத்தை உரித்ததும், கங்கையைப் பரித்ததும் தரித்ததும் செய்த நீ அடியேனையும் குறிக்கொண்டருள்க. குஞ்சரம் - குஞ்சத்தையுடையது என்னும் காரணத்தாற் பெற்ற பெயர். பரித்தலும் தரித்தலும் தாங்குதல் என்னும் ஒரு பொருளே குறிப்பனவாக உரைத்தல் கூடாது. பரிதல் - நீங்கல் பரித்தல் - நீக்கல். கங்கையின் விரைவு வன்மை முதலிய நீக்கிய குறிப்புணர்த்துவதென்று கொண்டு, நீக்கிவிட்டாய் என்றும் உரைக்க. தரித்தல் - தாங்குதல்.

837. முன்னியும் உன்னை முனைத்தன - எதிர்ப்பட்டும் பரந்து சென்றும், உன்னை எதிர்த்தன, முன்னல் - எதிர்ப்படுதல்; பரந்து செல்லல், முனைத்தல் - எதிர்த்தல்; போராடல். மும்மதிலும் முனைத்தன. உடனே மன்னியும் அங்கும் இருந்தனை? மாயமனத்தவர்கள் - வஞ்ச மனத்தினர்; புறப்புறம் முதலிய சமயத்தவர்கள். நூல் - அவ்வச் சமயநூல்கள். பரிசு - அவ்வந் நூற் பொருளியல்பு. உன்னியும் - நினைத்தும். முதலடியில், 'முனைத்தன' என்றும் 'முளைத்தன' என்றும் பாடபேதம் உளது. 'முன்னி முளைத்தன' என்றே பழம் பதிப்புக்களிற் காணப்படுகின்றது. முன்னியும் முன்னி முளைத்தன என்றுள்ள வாறே பொருள் கூறலும் பொருந்தும். பொருந்தினும், இதன் பொருள் செவ்விதின் விளங்கிற்றிலது. பழம்பதிப்பில் ஈற்றடியிலும் 'முன்னி' என்றே உளது. அதுவே இப்பதிப்பிலும் உளது.

ஏய்ந்தறுத் தாயின்ப ளுயிருந் தேபடைத் தான்றலையைக்
காய்ந்தறுத் தாய்கண்ணி ளுலன்று காமனைக் காலனையும்
பாய்ந்தறுத் தாய்பழ னத்தர சேயென் பழவினை நோய்
ஆய்ந்தறுத் தாயடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 838

மற்றுவைத் தாயங்கோர் மாலொரு பாக மகிழ்ந்துடனே
உற்றுவைத் தாயுமை யாளொடுங் கூடும் பரிசெனவே
பற்றிவைத் தாய்பழ னத்தர சேயங்கோர் பாம்பொருகை
சுற்றிவைத் தாயடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 839

838. பழனத்து அரசே, படைத்தான் தலையை அறுத்தாய். அறுத்தற்கேற்றவன் துன்பன்; வன்பன். அறுக்க நினைத்தலுஞ் செய்யமாட்டாத இன்பனுயிருப்பவன் நீ; அவ்வின்பனுயிருந்தே அப்பிரமன் தலையை அறுத்தனை. ஏய்ந்து:- இயைந்து என்றதன் மரூஉ. உடன்பட்டு என்றபடி. காமனைக் காய்ந்தறுத்தாய்; கண்ணினுற் காய்ந்து. அன்று - யோகிருந்த அக்காலத்தில், 'கண்ணுதல் யோகிருப்பக் காமன் நின்றிட வேட்கைக்கு விண்ணுறு தேவராதி மெலிந்தமை ஓரார்'. (சித்தியார். 72). கண்ணினுற் காய்தல் - நெற்றிக் கண்ணின் தீயாற் சுட்டெரித்தல். காமன் - மன்மதன். காலனையும் பாய்ந்தறுத்தாய் - இயமனையும் பாய்ந்து திருவடியால் உதைத்து மாய்த்தனை. 'காலன்றன் ஆருயிரதனை வவ்வினுய்' (சுந்தரப் பெருமாள்). என் பழவினை நோய் ஆய்ந்து அறுத்தாய் - யான் செய்த சஞ்சித கருமத்தையும் பிராரத்த கருமத்தையும் நுணுகியறச் செய்தனை. பிராரத்த கருமாநுபவத்தின் நிகழும் ஆகாமிய கருமத்தையும் அறுத்தாய்

839. பழனத்தரசே! மற்று - மற்றும். அங்கு ஓர் திருமாலை வைத்தாய். ஒரு பாகம் மகிழ்ந்து உடனே உற்றுவைத்தாய். உமையாளொடும் கூடும் பரிசென்னவே பற்றிவைத்தாய் அங்கு ஓர் பாம்பு ஒரு கை சுற்றி வைத்தாய். 'மற்று' உம்மை செய்யுட்டிரிபு. பரிசு - தன்மை; பேற்றி. எனவே - போலவே. கைசுற்றி - கையிற் சுற்றி.

ஊரினின் றுயோன்றி நின்றுவிண் டாரையு மோள்ள்ழலால்
போரினின் றய்போறை யாயுயி ராவி சுமந்துகோண்டு
பாரினின் றய்பழ னத்தர சேபணி செய்பவர்கட்
காரநின் றுயடி யேனைக் குறிக்கோண் டருளுவதே. 840

போகம்வைத் தாய்புரி புன்சடை மேலோர் புனலதனை
யாகம்வைத் தாய்மலை யான்மட மங்கை மகிழ்ந்துடனே
பாகம்வைத் தாய்பழ னத்தர சேயுன் பணியருளால்
ஆகம்வைத் தாயடி யேனைக் குறிக்கோண் டருளுவதே. 841

840. பழனத்து அரசே, ஒன்றி - போருந்தி . விண்டார் - பகைவர். ஒள் அழல் - ஒளியதாய தீ; பண்புத்தோகை: போர் - மும்மதிற் போர். திரிபுரம் எரித்த வரலாறு குறித்தது இது. போறையாகி உயிர்க்கும் ஆவியைச் சுமந்துகோண்டு பாரில் நின்ருய்; உயிர்க்குப் போறை உடம்பு. உயிர்க்குயிரா தலின், கடவுட்குப் போறை உயிர் ஆயிற்று. ஆதலின், போறையாய்ச் சுமந்துகோண்டு நின்ருய் என்ருர். போறையாய் உயிர்க்கும் ஆவி. 'ஆய்' என்னும் எச்சம் 'உயிர்' என்னும் முதனிலைகோண்டது. ஆவியே போறையாவதும் உயிர்ப்பதும் ஆகும். பணி - திருப்பணி. ஆர - நிறைய; நுகர. ஊரினின் தாய் ஒன்றி நின்று விண்டார் - ஓர் ஊரினின்றும் பிறிதோர் ஊர்க்குத் தாவி நின்று அழிக்கும் பகைவர்.

841. பழனத்து அரசே, சடைமேல் ஓர் புனலதனைப் போகம் வைத்தாய். மலையார் மடமங்கையை ஆகம் வைத்தாய்; மகிழ்ந்து உடனே பாகம்வைத்தாய். பணி - தோண்டு. ஆகம்- உடம்பு. அருளால், உடற்ருேண்டு புரியவைத்தாய் என்றதாம். பணியர் உள்ளால் ஆகம் வைத்தாய் எனல் சிறவாது.

அடுத்திருந் தாயரக் கன்முடி வாயோடு தோணெரியக்
கெடுத்திருந் தாய்கிளர்ந் தார்வலி யைக்கிளை யோடுடனே
படுத்திருந் தாய்பழ னத்தர சேபுலி யின்னுரிதோல்
உடுத்திருந் தாயடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 842

திருச்சிற்றம்பலம்

---

842. அடுத்து - நெருங்கி. அரக்கன் - இராவணன். முடி - தலை முடி பத்தும். வாய் - பத்து வாயும். தோள் - இருபது தோளும். வாயோடு முடியும் தோளும் நெரியக் கெடுத்திருந் தாய். இருத்தல் - அரக்கன் அசைத்த மலைமேல் நடுக்குறாது வீற்றிருத்தல். கிளர்ந்தார் - வளர்ந்தார். வளர்ந்தது வலி. கிளை - கிளைத்தவர். 'கிளை' என்னும் முதனிலைத் தொழிற் பெயர் ஆகு பெயராயிற்று. அசுரர் கிளை அழித்தமை குறித்தது. படுத்தல்- அழித்தல். உரியாகிய தோல் ; உரித்த தோல். தோலையுடுத் திருந்தாய்.

ஒன்றுகோ லாமவர் சிந்தை யுயர்வரை
ஒன்று கோலாமுய ரும்மதி சூடுவர்
ஒன்று கோலாமிடு வெண்டலை கையது
ஒன்றுகோ லாமவ ரூர்வது தானே.

வஞ்சித்தென் வளைகவர்ந்தான் வாரானே யாயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம் பரந்தார்க்கும் பழனத்தா
னஞ்சிப்போய்க் கலிமெலிய வழலோம்பு மப்பூதி
குஞ்சிப்பூவாய் நின்ற சேவடியாய் கோடியையே.

குலம்பலம் பாவரு குண்டர்முன் னேநமக் குண்டுகொலோ
அலம்பலம் பாவரு தண்புன லாரு ரவிர்சடையான்
சிலம்பலம் பாவரு சேவடி யான்றிரு மூலட்டானம்
புலம்பலம் பாவரு தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே.

ஆராய்ந் தடித்தொண்ட ராணிப்பொ னாரு ரகத்தடக்கிப்
பாரூர் பரிப்பத்தம் பங்குனி யுத்திரம் பாற்படுத்தான்
நாரூர் நறுமலர் நாத னடித்தொண்டன நம்பிநந்தி
நீரால் திருவிளக் கிட்டமை நீணா டறியுமன்றே.

# 88. திருப்பூந்துருத்தி

## திருப்பதிக வரலாறு

திருப்பூந்துருத்தி யமர்ந்த செஞ்சடையானைக் கண்டேன் என்று விருப்புறு தாண்டகத்தோடு, மேவிய காதல் விளைப்ப, திருவடிக் கீழ் இருப்போம் என்னும் குறுந் தொகைபாடி, அங்கு உறையுந் தன்மை வேண்டி, 'நாம் அடிபோற்றுவது' என்று போற்றிய பொங்கு தமிழ்ச் சொல் விருத்தப்பாடல் இத்திருப் பதிகம். (புராணம். 388 - 89).

திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

மாலினை மாலுற நின்றான் மலைமக டன்னுடைய
பாலனைப் பான்மதி சூடியைப் பண்புண ரார்மதின்மேல்
போலனைப் போர்விடை யேறியைப் பூந்துருத் திம்மகிழும்
ஆலனை யாதிபு ராணனை நாமடி போற்றுவதே. 843

843. மாலினை - மயக்கத்தை. மால் உற - திருமால் அடைய. நின்றான் - தாருக வனத்து முனிவர் செருக்கடக்கற் பொருட்டுக்கொண்ட பிட்சாடனருருவத்தோடு நின்றவன். மலைமகளுடைய இடப் பாலன். பால் மதி சூடி - வெண்பிறை சூடியவன். பண்பு - சிவ பரத்துவம். உணரார் - அறியாத திரிபுரத்தசுரர். மதில்மேல் போலன் - 'மூவெயின் மிசைப் புகலன்,' 847. பார்க்க. 'புகலன்' என்பது போலன் என்றாயிற்று மொழி முதற் குறிலிணை ஒரு நெடிலாகுஞ் சொற்கள் பல உள. அவ்வுண்மை, துகள் - தூள்; நிகளம் - நீளம்; அகழம் - ஆழம்; பொழுது - போழ்து - போது; விழுதல் - வீழ்தல் - வீதல்; விழைதல் - வீழ்தல்; மிகல் - மேல்; புகுந்தான் - போந்தான்; பொருவிடை - போர்விடை என்பன முதலியவற்றால் அறியப்படும். ஏறி :- பெயர். ஆலன் - கல்லாலின் புடையமர்ந்தவன். 'ஆலதன் கீழன், (845). ஆதி புராணன் - தோன்மூதாளன். நாம் அடிபோற்றுவது பூந்துருத்தி யாதிபுராணனை என்க.

மறியுடை யான்மழு வாளினன் மாமலை மங்கையோர்பால்
குறியுடை யான்குண மொன்றறிந் தாரில்லை கூறிலவன்
பொறியுடை வாளர வத்தவன் பூந்துருத் தியுறையும்
அறிவுடை யாதிபு ராணனை நாமடி போற்றுவதே. 844

மறுத்தவர் மும்மதின் மாயவோர் வெஞ்சிலை கோத்தோரம்பால்
அறுத்தனை யாலதன் கீழனை யால்விட முண்டதனைப்
பொறுத்தனைப் பூதப் படையனைப் பூந்துருத் தியுறையும்
நிறத்தனை நீல மிடற்றனை யானடி போற்றுவதே 845

உருவினை யூழி முதல்வனை யோதி நிறைந்து நின்ற
திருவினைத் தேசம் படைத்தனைச் சென்றடைந் தேனுடைய
பொருவினை யெல்லாந் துரந்தனைப் பூந்துருத் தியுறையும்
கருவினைக் கண்மூன் றுடையனை யானடி போற்றுவதே. 846

---

844. மறி - மான்கன்று மழு வாளினன் - மழு வாளை யேந்தியவன். மாமலை மங்கை - இமாசல குமாரி. குறி :- அடையாளம். ஓர் பால் மங்கைக் குறியுடையான். சிவபிரான் குணம் ஒன்றும் அறிந்தாரில்லை. கூறில் - சொல்லின். அவன் - அச்சிவபிரான். பொறி - படப்பொறி. வாள் அரவம் - கொலைப் பாம்பு. அரவத்தவன் - பாம்பணிந்தவன். ‘ சர்ப்பாபரணன் ’, உறையும் - திருக்கோயில் கொண்டெழுந்தருளும். அறிவு - சிவஞானம்.

845. மறுத்தவர் - பகைவர். மும்மதில் - மூவெயில் (திரிபுரம்). மாய - அழிய. சிலை - வில். 847 பார்க்க. ஆலதன் கீழன் :- ‘ ஆலன் ’ (843). ஆல்விடம் - ஆல காலம் என்னும் நஞ்சு; உண்டு அதனைத் திருநீலகண்டம் எனப் பல்லுயிரும் போற்றி வாழ அத் திருக் கழுத்திற் பொறுத்தலுடையவனை. பொறுத்து (பொறு + த் + து) :- துவ்வீறு பெற்ற தொழிற் பெயர். ‘ தவளைப் பாய்த்து, என்பது போல்வது. பொறுத்து + அன் = பொறுத்தன். ஆடலன் என்பது போல்வது பொறுத் தலன் என்பது. பொறுத்தலன், பொறுத்தன் இரண்டும் தொழிற் பெயர்க்குரிய ஈற்றால் வேறுபட்டன. ‘ படைத்தன் ’ ‘ துரந்தன் ’ (846). நிறம் - நினைவு, பண்பு. ஒளி.

846. உருவினை - ஞான சொரூபத்தை; தடத்த ரூபத்தை. ஊழி முதல்வன் - ‘ ஊழி முதற் சிந்தாத நன்மணி ’

தக்கன்றன் வேள்வி தகர்த்தவன் சார மதுவன்றுகோள்
மிக்கன மும்மதில் வீயவோர் வெஞ்சிலை கோத்தோரம்பால்
புக்கனன் பொன்றிகழ்ந் தன்னதோர் பூந்துருத் தியுறையும்
நக்கனை நங்கள்பி ரான்றனை நானடி போற்றுவதே. 847

(திருவாசகம்). ஓதி - மறை முதலியவற்றை ஓதி. ஓதல் ஓது வித்தல் ; கற்றல் கற்பித்தல், என்பவற்றின் வேறுபாடுணர்ந் துரைக்க. ஓதல் ஓதுவித்தல் இரண்டும் வைகரி வாக்கால் நிகழ்த்துவன. ஓதி நிறைந்து நின்ற திரு - பூரண ஞானம். 'கல்லாதன எல்லாம் கற்பித்தான்' (6. 43. 1). சென்று அடைந்தேன் - இப் பிரபஞ்ச வாழ்க்கை யல்லகண்டமெல்லாம் கடந்து சென்று, சிவபெருமான் திருவடியே தஞ்சம் என்று அடைந்தேன். அடைந்தேனுடைய வினையெல்லாம் துரந்தன் - அடைந்த அடியேனுடைய எல்லா வினைகளையுந் துரத்தியவன். துர+த்+து=துரத்து. அது மெலிந்து நின்ற தெனலுமாம். துரப்பு - நீக்கம். பொருவினை - தாக்கும் வினைகள். 'போத மேலாகப் பண்டே புல்லிய மல நோய் தீர்ந்தும் வாதனை தாக்கும்' (காஞ்சிப்புராணம்). கரு :- மூலப்பொருள். 'கருவனே கரு வாய்த் தெளிவார்க்கெலாம் ஒருவனே' 'கருவனைக் கடல் நாகைக் காரோணனை' (திருக்குறுந்தொகை) ; 'கருவை என்றன் மனத்திருந்த கருத்தை' (திருத்தாண்டகம்). கண் மூன்றுடையன் - முக்கண்ணுடையவன்.

847. வேள்வி - யாகம். தகர்த்தவன் - அழித்தவன். சாரம் அது அன்று. கோள் - வலிமை. வீய - அழிய. 845. பார்க்க. அம்பால் மும்மதில் வீய (அதன்மேல்) புக்கனன். பண்புணரார் மதில்மேல் போலன் என்புழிப் புகலன் என்று உரைத்தது வாய்மைப் பொருளாதலை ஈண்டும் உணர்க. 'புகலன்' 'புக்கனன்' இரண்டும் 'புகு' என்னும் முத னிலையிற்றோன்றியனவே யாகும். பொன் திகழ்ந்தாற் போன்ற தோரு பூ. பூந்துருத்திக்கும் அவ்வடை உரித்தாகலாம். நக்கன் - (நகு+அன்) விளக்கமுடையவன். நக்நன் என்னும் வடசொற்றிரிபுமாம்.

அருகடை மாலையுந் தானுடை யானழ காலமைந்த
உருவுடை மங்கையுந் தன்னொரு பாலுல காயுநின்றான்
பொருபடை வேலினன் வில்லினன் பூந்துருத் தியுறையும்
திருவுடைத் தேச மதியனை யானடி போற்றுவதே. 848

மன்றியும் நின்ற மதிலரை மாய வகைகெடுக்கக்
கன்றியும் நின்று கடுஞ்சிலை வாங்கிக் கனலம்பினால்
பொன்றியும் போகப் புரட்டினன் பூந்துருத் தியுறையும்
அன்றியுஞ் செய்தபி ரான்றனை யானடி போற்றுவதே. 849

848. அருகு - அணிய இடம். அடைமாலை - இடையிடையே இலைவைத்துக் கட்டியமாலை. இண்டையுமாம். 'அழகால் அமைந்த உருவுடை மங்கை' தலத்து அம்பிகையின் திருப்பெயர்க் குறிப்பு. 'அழகார்ந்த நாயகி'. ஒருபால் மங்கையாயும் மற்றொருபால் உலகாயும் நின்றான். மங்கையாய் நிற்றல் சொரூபம். உலகாய் நிற்றல் தடத்தம். பொருபடை வேல் - சூலம். பொருதல் - தாக்குதல். வில் - பிநாகம். திரு - அழகு. தேசமதி - ஒளியுடைய பிறை. தேசு - ஒளி. மதியன் - பிறைசூடி.

849. நின்ற மதிலரை :- திரிபுரத்தசுரரை. மாயமன்றியும் - மாய்ந்தொழிய ஒறுத்தும். மன்றுதல் - ஒறுத்தல். 'அடிகேட மன்ற விடல்' (பழமொழி நானூறு. 288) 'முட்டில் ஐங் கழஞ்சு பொன் மன்ற வொட்டிக் கொடுத்தோம். மன்றிலிருந்து ஒறுத்தலும் தண்டம் விதித்தலும் செய்தலால், அவற்றை 'மன்றல்' என்றனர். இது தூய தமிழ்ச்சொல். அபராதம் என்போர் மன்றுதல் எனத் தமிழிற் சொல்லித் தம் மொழியையும் மறவாது பேணுவாராக. மாயவகை கெடுக்கக்கன்றியும் எனலும் ஆம். மாயவகை-மாயங்களின் திறத்தை. கெடுக்க - தொலைக்க. கன்றியும் - சினந்தும். கனல் அம்பு - தீக் கணை. பொன்றியும்- அழிந்தும். அன்றியும் - அன்மையையும் ; நன்மை நன்றி ; அன்மை அன்றி. நன்மையும் நன்மையன்மையும். 'எல்லாமாய் அல்லதுமாய் இருந்தது' 'ஒருவனே எல்லாம் ஆகி அல்லனுய் உடனும் ஆவான்'.

மின்னிறம் மிக்க விடையுமை நங்கையோர் பான்மகிழ்ந்தான்
என்னிற மென்றம ரர்பெரியா ரின்னந் தாமறியார்
பொன்னிற மிக்க சடையவன் பூந்துருத் தியுறையும்
என்னிற வெந்தைபி ரான்றனை யானடி போற்றுவதே. 850

அந்தியை நல்ல மதியினை யார்க்கு மறிவரிய
செந்தியை வாட்டுஞ் செம் பொன்னினைச் சென் றடைந்
தேனுடைய
புந்தியைப் புக்க வறிவினைப் பூந்துருத் தியுறையும்
நந்தியை நங்கள்பி ரான்றனை நானடி போற்றுவதே. 851

850. மின் நிறம் மிக்க இடை :- 'மின்னிடை' உமை நங்கை. ஓர் பால் மகிழ்ந்தான். அமரர் பெரியார் - அமரரும் பெரியாரும். என் நிறம் - யாது நிறம் ?. என்று இன்னம் தாம் அறியார். 'அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும் அவனருளே கண்ணாகக்காணின் அல்லால் இப்படியன் இந்நிறத்தன் இவ் வண்ணத்தன் இவன் இறைவன் என்று எழுதிக் காட்டொணாதே', (6. 97. 10). பொன்னிறம் மிக்க சடை. பொன்னொத்த மேனியனாதலின் பொன்னிறமிக்க சடையன் எனலுமாம். எல் நிறஎந்தை - கதிரோனொளியுடைய என் அப்பன். 'பொன்னிறம் கட்டியினும் பூணினும் நின்றாற்போல் அந்நிறம் அண்ணலும் அம்பிகையும் - செந்நிறத்தள் எந்நிறத்தளாயிருப்பள் எங்கள் சிவபதியும் அந்நிறத்தளாயிருப்பன் ஆங்கு' (திருக்களிற்றுப் படியார். 7) 'யானாகி நின்றான்' (திருவாசகம்) என்ற கருத்ததுமாம்.

851. அந்தியை :- 'சந்தியானைச் சமாதி செய்வார் தங்கள் புந்தியானைப் புத்தேளிர் தொழப்படும் அந்தியானை ஆமாத்தூர் அழகனைச் சிந்தியாதவர் தீவினையாளரே'. நல்லமதியினை - அந்தியில் விளங்கும் அழகிய பிறையை; மதியை ஆர்க்கும் அறிவு அரிய பொன். செந்தீயை வாட்டுஞ் செம்பொன். தீ - தி. குறுக்கல். சென்று அடைந்தேனுடையபுந்தி அப்புந்தியிற் புகுந்த அறிவை. நந்தி - சிவபிரான். 'நந்தி நாமம் நமச்சிவாயவே'.

பைக்கையும் பாந்தி விழிக்கையும் பாம்பு சடையிடையே
வைக்கையும் வானிழி கங்கையு மங்கை நடுக்குறவே
மொய்க்கை யரக்கனை யூன்றினன் பூந்துருத் தியுறையும்
மிக்கநல் வேத விகிர்தனை நானடி போற்றுவதே. 852

திருச்சிற்றம்பலம்

852. பைக்கை -(பைத்தல்) படத்தை விரித்தல். 'பைத்த பாம்பின் துத்தியேய்ப்ப' (பொருநராற்றுப்படை. 69) பைக்கையும் - படத்தை விரித்தலும். பாந்தி விழித்தலும், பாந்தி - பதுங்கி. ஆந்தை பாந்தியிருப்ப' (கலிங்கத்துப் பரணி. 127). சடையிடையே பாம்பு பைக்கையும் பாந்தி விழிக்கையும், அச்சடையிடையே வான் இழிகங்கையை வைக்கையும் என்க. அக்கங்கையும் (இடப் பாலுள்ள) மங்கையும் நடுக்கம் அடைய அரக்கனை ஊன்றினன். மொய்க்கை அரக்கன்:- மொய் - கூட்டம்; (வலி). இருபது கைகளின் கூட்டம். மிக்க நன்மை. நல்வேதம். விகிர்தன்-வேறுபாடுடையவன். பரந்தள் என்றதன் காரணமும் இங்குப் புலப்படும்.

முத்து விதான மணிப்பொற் கவரி முறையாலே
பத்தர்க ளோடு பாவையர் சூழப் பலிப்பின்னே
வித்தகக் கோல வெண்டலை மாலை விரதிக
ளத்த னாரூ ராதிரை நாளா லதுவண்ணம்.

போரானை யீருரிவைப் போர்வை யானைப்
　புலியதளே யுடையாடை போற்றி னானைப்
பாரானை மதியானைப் பகலா னானைப்
　பல்லுயிராய் நெடுவெளியாய்ப் பரந்து நின்ற
நீரானைக் காற்றானைத் தீயா னானை
　நினையாதார் புரமெரிய நினைந்த தெய்வத்
தேரானைத் திருவீழி மிழலை யானைச்
　சேராதார் தீநெறிக்கே சேர்கின்றாரே.

# 89. திருநெய்த்தானம்

## 89 ஆவது திருப்பதிக வரலாறு

திருவையாறு அமர்ந்து, நீடிய அப் பதி நின்றும் சென்று வழிபட்ட தலங்களுள் ஒன்றாய திருநெய்த்தானத்தை உற்றுப் பாடிய செந்தமிழ்மாலை இத்திருப்பதிகம்.

### திருவிருத்தம்

### திருச்சிற்றம்பலம்

பாரிடஞ் சாடிய பல்லுயிர் வானம ரர்க்கருளிக்
காரடைந் தகடல் வாயுமிழ் நஞ்சமு தாகவுண்டான்
ஊரடைந் திவ்வுல கிற்பலி கோள்வது நாமறியோம்
நீரடைந் தகரை நின்றநெய்த் தானத் திருந்தவனே. 853

தேய்ந்திலங் குஞ்சிறு வெண்மதி யாய்நின் றிருச்சடைமேல்
பாய்ந்த கங்கைப் புனல்பன் முகமாகிப் பரந்தோலிப்ப
ஆய்ந்திலங் கும்மழு வேலுடை யாயடி யேற்குரைநீ
ஏந்திள மங்கையு நீயும்நெய்த் தானத் திருந்ததுவே. 854

.......................................................................................

853. பாரிடம் - மண்ணுலகு. சாடிய - அழித்த. பல்உயிர்- அரக்கர் கூட்டம் வான் அமரர் - வானில் உள்ள தேவர். கார் - மேகம். கடல் - பாற்கடல். காரடைந்த கடல் :- இரண்டாவது சீர் விட்டிசைத்துக் கொள்ளற் பாலது. கடல் வாய் உமிழ் நஞ்சு :- கடலில் பாம்பின் வாய் உமிழ்ந்த நஞ்சம். நஞ்சினை அமுதம் உண்பது போலுவந்துண்டு நின்றான். இவ் வுலகில் ஊர் அடைந்து பலிகோள்வதும் நாம் அறியோம். 816 பார்க்க. நீர் - காவிரியாற்று நீர். அடைந்த கரை - மிகலுற்ற கரையில். நின்ற-நிலைத்த (நெய்த்தானம்). 'நீரடைந்தகரை' என்னும் இரண்டனுள் இரண்டாவது சீரின் முதற் குறிலை, இரண்டாவதடியிற் குறித்ததுபோல விட்டிசைத்துக்கொள்க. இன்றேல், கட்டளைக் கலித்துறையிலக்கணம் அமையாது. எல்லாம் திருவிருத்தமெனினும் கட்டளைக்கலித் துறையே.

854. மதியாய், உடையாய், மங்கையும் நீயும் நெய்த் தானத்து இருந்தது நீ அடியேற்கு உரை. தேய்ந்ததும் இலங்கு வதும் சிறியதும் வெளியதும் பிறை அப் பிறைசூடிய

கொன்றடைந் தாடிக் குமைத்திடுங் கூற்றமொன்
　　　　　　　　　　　　　　　　　　　றார்மதின்மேல்
சென்றடைந் தாடிப் பொருததுந் தேசமெல் லாமறியும்
குன்றடைந் தாடுங் குளிர்பொழிற் காவிரி யின்கரைமேல்
சென்றடைந் தார்வினை தீர்க்கும்நெய்த் தானத் திருந்தவனே.

கொட்டு முழவர வத்தொடு கோலம் பலவணிந்து
நட்டம் பலபயின் றுடுவர் நாக மரைக்கசைத்துச்
சிட்டர் திரிபுரந் தீயெழச் செற்ற சிலையுடையான்
இட்ட முமையொடு நின்றநெய்த் தானத் திருந்தவனே. 856

பெருமானை மதியாய் என விளித்தார். நின் திருச்சடைமேல் பாய்ந்த கங்கைப் புனல் பலமுகமாகிப் பரந்து ஒலிக்கும் ஆய்ந்து - நுணுகி. இலங்கும் மழுவேல். மழுவேலையுடையாய். இளமங்கை 'ஏந்தெழில்' என்பது போலக்கொண்டு, இளமையை ஏந்து மங்கை என்றுரைக்க. ஏந்து மங்கை - இடப்பாலில் ஏந்தப் பெற்ற மங்கை. இத்தலத்து அம்பிகை திருப்பெயர் 'இளமங்கை', அதனைப் பாலாம்பிகா-(வாலம்பிகை) என்றனர் வடமொழியாளர்.

855. கூற்றம் ஒன்னார் மதின்மேல் சென்று அடைந்து ஆடிப் பொருததும் தேசம் எல்லாம் அறியும் என்க. ஒன்னார்- பகைவர் ; ஒன்றார் என்பதன் மரூஉ. திரிபுரத்தசுரர் மதில்மேல் சென்று அடைந்து ஆடிப் பொருது குமைத்துக் கொன்று ஆடியது கூற்றம். அது சிவபிரான் கணை யேவலால் நிகழ்ந்தது. திரிபுர தகனம் எல்லாத் தேசங்களாலும் அறியப்பட்டது. காவிரி குன்று அடைந்து ஆடுவது; குளிர்பொழி லுடையது அக்கரைமேல் நெய்த்தானம் உளது. அதில் சென்று அடைந்தார் வினையை அங்கிருந்தருளும் முக்கண்ணன் தீர்த்தருள்வான்.

856. கொட்டு முழவு. முழவு கொட்டும் அரவம் (- ஓசை). அரவத்தொடு ஆடுவர். பலகோலம் அணிந்து ஆடுவர். நட்டம் ஆடுவர். பல நட்டம் பயின்று ஆடுவர். அரைக்கு நாகம் அசைத்து ஆடுவர். அரைக்கு - அரையின்கண். நாகம் - பாம்பு. அசைத்து - கட்டி. உடையான் இருந்தவன் ஆடுவர் என்று இயையும். 'ஆடுவர்' என்றது ஒருவரைக் கூறும் பன்மையாம்

கொய்ம்மலர்க் கொன்றை துழாய்வன்னிமத்தமுங் கூவிளமும்
மெய்ம்மலர் வேய்ந்த விரிசடைக்கற்றைவிண் ணோர்பெருமான்
மைம்மலர் நீல நிறங்கருங் கண்ணியோர் பான்மகிழ்ந்தான்
நின்மல னுடை னிலயநெய்த் தானத் திருந்தவனே. 857

உயர் சொற்கிளவி. சிட்டர்க்காகத் திரிபுரத்தைச் செற்றவன். தீ எழச் செற்றவன். சிலை - மேருவில். சிலையுடையான் - மேரு வில்லினன். செறுதல் - அழித்தல். சிட்டர் - நல்லறிவினர், பொறுமையுடையர். இட்டம் :- விருப்பம். இட்டமாப் பாடுவார்க் கில்லையாம் பாவமே'. உமையோடும் இட்டம் ஆய்நின்ற நெய்த்தானத்து இருந்தவனே என்று ஆக்கம் வருவித் துரைக்க. உமை இட்டமோடு நின்ற என்று உருபு பிரித்துக் கூட்டலுமாம். நெய்த்தானத் திருந்தவனது தொழில் உமையோடு நிற்றல் ; நெய்த்தானம் உமை இட்டமோடு நிற்றல் ; நெய்த் தானத்திருந்தவனது இட்டம் உமையோடு நிற்றல் மூன்றனுள் பொருந்துவது கொள்க.

857. ஆடல் நிலயம் ஆகிய நெய்த்தானம். நெய்த் தானத்து இருந்தவன் பெருமான் ; மகிழ்ந்தான் என இயைக்க. கொய்த கொன்றைமலரும் துழாயும் வன்னியும் மத்தமும் கூவிளமும் வேய்ந்த சடை. மெய்ம்மலர் :- எட்டுப் பூவுள் ஒன்றாய சத்திய புட்பம். மெய்யாகிய மலர்வேய்ந்த சடை. மெய் - அறிவு ; ஞானபுட்பமும் ஆம். முற்கூறியனவற்றையே மெய்மலர் என்றதாகக் கொள்ளலுமாம். விரிசடை - வினைத் தொகை. சடைக்கற்றையையுடைய பெருமான். விண்ணோர்க் கெல்லாம் பெருமகன். மைமலர்கண் - மைமலர்ந்த விழி. நீலம் - கருங்குவளை. நிறம் - ஒளி. கருங்கண். கண்ணி - கண்ணள். (உமாதேவி). ஓர் பால் - இடப்பாகம். மகிழ்ந்தான் - வைத்துக் கண்டு மகிழ்ந்தவன். 'காணமகிழ்தல்' (திருவள்ளுவர்). மை நீலமலர் நிறம்போலுங் கருங்கண் எனலுமாம். 'மைஞ்ஞின்ற வொண்கண்' (774). நின்மலன் - மலரகிதன் ; அமலன் ; இது நிமலன் எனத்திரிந்து வழங்கும். நிர்+மலம்=நிர்மலம் ; நின்மலம். நிமலம். ஆடல் - திருக்கூத்து. நிலயம் - உறையுள். 'கொன்றைமாலையும் கூவிள மத்தமும் சென்று சேரத் திகழ் சடைவைத்தவன்'.

பூந்தார் நறுங்கொன்றை மாலையை வாங்கிச் சடைக்கணிந்து
கூர்ந்தார் விடையினை யேறிப்பல் பூதப் படைநடுவே
போந்தார் புறவிசை பாடவு மாடவுங் கேட்டருளிச்
சேர்ந்தா ருமையவ ளோடுநெய்த் தானத் திருந்தவனே. 858

பற்றின பாம்பன் படுத்த புலியுரித் தோலுடையன்
முற்றின மூன்று மதில்களை மூட்டி யெரித்தறுத்தான்
சுற்றிய பூதப் படையினன் சூல மழுவொருமான்
செற்றுநந் தீவினை தீர்க்குநெய்த் தானத் திருந்தவனே. 859

---

858. நறுங்கொன்றைப் பூந்தார் மாலையை வாங்கிச் சடைக்கு அணிந்து, கூர்ந்தார். விடையினை ஏறிப் பூதப்படை நடுவே போந்தார். பாடவும் ஆடவும் கேட்டருளிச் சேர்ந்தார் என்க. கூர்ந்து ஆர் விடை - விரைவுமிக்குப் பொருந்திய காளை; ஒன்றற்குப் பத்தாகப் பிறவி கூர்ந்த மால் ஆகிய விடை என விடைக்கு அடையாக்கியுரைத்தலுமாம். பல் பூதப்படை நடுவே விடையினை ஏறிப் போந்தார். சிவபிரானுக்குப் பூதங் களும் உமாதேவியார்க்குக் காளிகளும் உரியர். பூதகணங்கள் பல்வகைப்படும். காளிக் கூட்டமும் அவ்வாறு பல்வகைத்து. அசுரர் யாகத்தில் இன்புற்ற பூதக் கூட்டமும் காளிக் கூட்டமும் சிவசம்பந்தம் உடையவற்றின் வேருகும். புறவிசை பாடல் - புறத்தே சூழ்ந்து நின்று சாமகானம் முதலிய இசை பாடுதல். போந்தார் பாடவும் ஆடவும் சேர்ந்தார் (நெய்த்தானத் திருந்தவன்) கேட்டருளியதாகக் கொள்ளலும் கூடும். உமையவ ளோடும் இருந்தவன் கூர்ந்தார்; போந்தார்; சேர்ந்தார் என்க.

859. பற்றின பாம்பன் - பாம்பைப் பற்றியவன். ‘சர்ப் பாபரணன்’; ‘நாகாபரணன்’. படுத்த புலி - கொன்ற புலி. படுக்கப்பட்ட புலி எனச் செயப் பாட்டுப் பொருளில் நின்ற பெயரெச்சம். படுத்தல் வினைக்குப் புலி செயப்படு பொருள். சிவபிரான் வினைமுதல். உரித்தோல் - உரித்தலை யுற்றதோல். உரியாகிய தோல். தோல் உடை-தோலாகிய உடை. உடையன் - உடையினன். தோலுடையன் - தோலையுடையவன். முற்றின முற்றுதல் செய்த; வாணுள் முற்றிய. மூன்றுமதில் - ‘மும்மதில் - (திரிபுரம்) ‘மூவெயில்’, மூட்டி எரித்தறுத்தான் - எரி மூட்டி’; யறுத்தான். மூட்டி - மூள்வித்து, அறுத்தல் - அவை பறத்தற் குரிய உறுப்பை அறுத்தலுமாம். சுற்றிய - சூழ்ந்த. சூலம்,

விரித்த சடையினன் விண்ணவர் கோன்விட முண்டகண்டன்
உரித்த கரியுரி மூடியோன் ஞார்மதின் மூன்றுடனே
எரித்த சிலையின னீடழி யாதென்னை யாண்டுகொண்ட
தரித்த வுமையவ ளோடுநெய்த் தானத் திருந்தவனே. 860

தூங்கான் றுளங்கான் றுழாய்கொன்றை துன்னிய செஞ்சடை
வாங்கா மதியமும் வாளர வுங்கங்கை தான்புனைந்தான் [மேல்
தேங்கார் திரிபுரந் தீயெழ வெய்து தியக்கறுத்து
நீங்கா னுமையவ ளோடுநெய்த் தானத் திருந்தவனே. 861

.................................................................................................................

மழு, மான் மூன்றும் ஏந்தியவன் என்று கூறக் கருதியவராயின், அவற்றை உடையவன் என்பதற்கேற்ற சொற்பெய்திருப்பார். இராமையால், சூலம் மழுவொருவான் என்று இருந்ததோ என எண்ணக்கிடக்கின்றது. சூலத்தையும் மழுவையும் ஒருவான் என்ற பொருள் பயப்பது. உள்ளவாறே கொள்ளின் நான் காவதடியிற் பெறப்படும் பெயர்ப்பொருளோடு கூட்டி, சூலத்தையும் மழுவையும் மானையும் உடைய சிவன் என்க. நம் தீவினை செற்றுத் தீர்க்கும். செற்று - அழித்து; கொன்று. தீர்க்கும் - தீரச்செய்யும்.

860. விரித்த சடையினன் - சடையை விரித்து ஆடுகின்றவன். விண்ணவர்கோன் 'தலையாய தேவாதி தேவர்க்கென்றும் சேயான்'. விடம் - நஞ்சு. 'திருநீலகண்டன்'. உரித்த உரி. கரியுரி. கரி - கரத்தையுடையது; யானை. மூடி - போர்த்து. ஒன்னார் - பகைவர்; ஒன்றார் என்பதன் மரூஉ. மதில் மூன்று :- 559. எரித்த சிலையினன் - சிலையால் எரித்தவன். 'படுத்த புலி' (559) போல்வதன்று இது. இவ்வெச்சம் வினைமுதல் கொண்டது. சிலை எரித்ததன்று, சிலையில் வைத்து, எய்யப்பட்ட தீக்கணையே எரித்தது. சிலை கணைக்கு, இடவாகு பெயர் ஈடு - பெருமை. கொண்ட என்னும் எச்சம் 'உமையவள்' என்ற பெயர்கொள்ளும். 'இருந்தவன்' என்பதையும் கொள்ளும். தரித்த உமையவள் :- எல்லாவுலகங்களையும் தாங்கிய அம்பிகை. 'சகதம்பா.' 'உலகநாயகி'. தரித்தல் - பொறுத்தல். நெய்த்தானத்து உமையவளோடும் இருந்தவன்.

861. தூங்கான்துளங்கான் - ஆடான் அசையான். தூங்கான் - நீட்டியான்; விரைவுடையான்; தாமதம் செய்யான்.

ஊட்டிநின் றுன்பொரு வானில மும்மதி றீயம்பினுல்
மாட்டிநின் றுனன்றி ஞர்வெந்து வீழவும் வானவர்க்குக்
காட்டிநின் றுன்கத மாக்கங்கை பாயவோர் வார்சடையை
நீட்டிநின் றுன்றிரு நின்றநெய்த் தானத் திருந்தவனே. 862

திருச்சிற்றம்பலம்

(குறள். 383, 672) துளங்கான் - சலியான் எனலும் ஆம் 'சலியா நடம்' 'என்றும் இவர் ஆடப் பதஞ்சலியார்' (சிதம்பர மும்மணிக்கோவை. 21) 'துளங்காது தூக்கம் கடிந்து செயல்' (குறள் 668) என்புழி, 'அசைதலின்றி நீட்டித்தலை யொழிந்து செய்க', எனப் பரிமேலழகர் உரைத்ததும் தூக்கம் துளக்கம் இரண்டும் ஆண்டுள்ளதும் உணர்க. 'துளக்கு அற்ற காட்சியவர்'. (குறள். 699) - நிலைபெற்ற அறிவினையுடையார்' என்னும் பகுதியும் ஈண்டு உணரத்தக்கது. 'வட்டவாய்க்கமலத் தண்ணல் மணிமுடி துளங்க ஒச்சிக்குட்டிய குமரப்புத்தேள்' (தணிகைப் புராணம்). துழாய் - துளசி. துன்னிய - நெருங்கிய. வாங்காமதியம் - நீளாப்பிறை; வளராப் பிறை. வாளரவுக்கு நடுங்கிப் பின்வாங்காததுமாம். சடைமேல் மதியும் அரவும் கங்கையும் புனைந்தான். தேங்கார் - 'தியங்கார்' என்பதன் மரூஉ. சோரார்; மயங்கார். பகைவர் தீ எழ எய்து தியக்கு அறுத்து. தியக்கு - அசுரால் தேவர்க்கு உற்ற சோர்வு; மயக்கம். அறுத்து - போக்கி. உமையவளோடு நீங்கான்.

862. பொருவானில் அம்மும்மதில் தீ ஊட்டி நின்றுன். முப்புரப் போர் வானில் நிகழ்ந்தது. நிலம் எனப்பிரிப்பின், பொருவான் - போர்செய்தற் பொருட்டு; பொருபவன். நிலம் - மண்ணுலகில் என்க. அம்பினுல் அன்றினுர் வெந்து வீழவும் மாட்டி நின்றுன் - கணையால், பகைவர் எரிந்து கீழ்விழவும் மாள்வித்து நின்றுன். தீயை அம்பினுல் ஊட்டி எனவும், தீயை மாட்டி எனவும் கூறலும் ஆம், வீழவும் காட்டி நின்றுன் வானவர்க்கு. கதம் - விரைவு. கங்கை பாயச் சடையை நீட்டி நின்றுன். பாய்ந்த கங்கையின் பெருக்கத்தால், சுருக்கிய சடையை விரித்து நீட்டலாயிற்று. திரு நின்ற நெய்த்தானம் - திருமகள் நிலையாயிருக்கும் நெய்த்தானம்.

## 90 திருவேதிகுடி.

### 90 ஆவது திருப்பதிக வரலாறு

திருப்பழனம் திருச்சோற்றுத்துறை முதலிய சிவ தலங்களை வழிபட்ட காலத்தில், திருவேதி குடிக்கும் சென்று போற்றிப் பாடியது இத்திருப்பதிகம். திருவேதிகுடி என்பது வேதியன் (பிரமன்) பூசித்ததாற் பேயர் என்பர்.

திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

கையது காலெரி நாகங் கனல்விடு சூலமது
வெய்யது வேலைநஞ் சுண்ட விரிசடை விண்ணவர்கோன்
செய்யினி னீல மணங்கம ழுந்திரு வேதிகுடி
ஐயனை யாரா வமுதினை நாமடைந் தாடுதுமே. 863

863. விண்ணவர் கோன் ஆகிய ஐயன், அவன் கையது நாகம் ; கனல் ; சூலம். கால் எரிநாகம் ; எரிகால் நாகம் - நஞ்சு கக்கும் பாம்பு கனல் - தீ. விடு சூலம் - விடுகின்ற சூலம். கனல் விடு சூலம் என்னின், கால் எரியைத் தனியாகக் கொள்ளலாம். காலெரி நாகம் கனல்விடு சூலம் என்று இரண்டே கொள்ளலாம். சூலமது என்றதில் 'அது' என்பது சுட்டுச் சொல்லன்று சூலம் என்னும் முன்மொழிப்பொருளதாயே நின்றது. வெய்யது - வெம்மையுடையது 'வேலை' ஈண்டுப் பாற்கடல். வெய்யதாய நஞ்சு என்க. நஞ்சு உண்டகோன். விரிசடைக்கோன். 'விண்ணவர் கோன்' (860) செய்யினில் - வயலில். நீலம் - நீலோற் பலம். 'மணம் கமழும் திருவேதிகுடி' என்றதால் நீர் நிலவளம் உணர்த்தப்பட்டது. ஆராவமுது' அத்தலத்தின் இறைவன் திருப்பெயர். இறைவி திருப்பெயர் பா. 869 - இல் 'மடமொழி மங்கை' என்றதும் அறிக. 'மங்கையர்க்கரசி' என்று இக்காலத்தில் வழங்குகின்றது. நாம் அடைந்து ஆடுதும். ஆடுதும் - ஆடுவோம். பேரின்ப வெள்ளத்தில் முழுகுவோம்; இன்பக் கூத்தாடுவோம்; பெரிதும் இனியாய் நீ எனப் பேசுவோம்.

கைத்தலை மான்மறி யேந்திய கையன் கனன்மழுவன்
பொய்த்தலை யேந்திநற்பூதி யணிந்து பலிதிரிவான்
செய்த்தலை வாளைகள் பாய்ந்துக ளுந்திரு வேதிகுடி
அத்தனை யாரா வமுதினை நாமடைந் தாடுதுமே. 864

முன்பின் முதல்வன் முனிவனெம் மேலை வினைகழித்தான்
அன்பி னிலையி லவுணர் புரம்பொடி யானசெய்யும்
செம்பொனை நன்மலர் மேலவன் சேர்திரு வேதிகுடி
அன்பனை நம்மை யுடையனை நாமடைந் தாடுதுமே. 865

864. கைத்தலைமான்மறி - சிறிய தலையையுடைய மான் கன்று. ஏந்தியகையன் என்றமையால், கையின் கண் என்றே கையின் கண் தலை (- பிரம கபாலம்) என்றே உரைத்தல் பொருந் தாது. கை (- சிறுமை)யுடைய (பிரமன்) தலை எனலாம் எனின், ‘பொய்த்தலை யேந்தி’ எனப் பின் வருதலால் அதுவும் பொருந் தாது. கனல் மழுவன்-எரிமழுவுடையவன். ‘எரியும் மழுவினன்’ (870). பொய்த்தலை - இறந்த மலரவன் தலை மெய்த்தலை யாகாது தலைபோல வைக்கப் படுவதைப் பொய்த்தலை என்பது வழக்கு. நற்பூதி - அழகிய திருநீறு. பாசம் போக்கிப் பராவண மாக்கும் நலம். அணிந்து - அழகுறப்பூசி. பலிதிரிவான் - பலிக் காகத் திரிபவன். செய்த்தலை - வயலின் கண். ‘வயற்கணே கயற்கணம் பாயுந் திரிசிராமலை’ (செவ்வந்திப் புராணம்). உகளும் - துள்ளும். ‘வயலுகளுஞ் சேல் அன்ன நீள் விழியாய்’ (தஞ்சை வாணன் கோவை) அத்தன் - முதல்வன்.

865. ‘முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருள்’ ஆதலின், ‘முன் முதல்வன்’. ‘பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப் பெற்றியன்’ ஆதலின் ‘பின்முதல்வன்’ முன்னும் முதல்வன் ; பின்னும் முதல்வன். யாரினும் முன்ன எம் பிரான்’ ‘முழுதும் யாவையும் இறுதியுற்றநாட்பின்ன எம்பிரான்’ (திருவாசகம் 103) ‘முன்னவனே பின்னும் ஆனவனே’ (ஷை 147) ‘முன்னும் ஒருவர் இரும் பொழில் மூன்றற்கும் முற்றும் இற்றால் பின்னும் ஒருவர் சிற்றம்பலத்தார் தரும் பேரருள்’ (திருக்கோவையார். 160) முன்பு வலிமை. முன்பின்

பத்தர்க ளுளு மறவார் பிறவியை யொன்றறுப்பான்
முத்தர்கண் முன்னம் பணிசெய்து பாரிட முன்னுயர்த்தான்
கோத்தன கோன்றை மணங்கம ழுந்திரு வேதிகுடி
அத்தனை யாரா வமுதினை நாமடைந் தாடுதுமே. 866

முதல்வன் - வலிமையுடைய முதலோன். இப் பொருள் சிறப்புடையதன்று. முனிவன் - மனனசீலன். பாசப் பொருளனைத்தும் முனிதலையுடையவன். மேலைவினை - ஆகாமிய கருமம்; சஞ்சித கருமமும் ஆம். 'மேல்' காலத்தால் இறந்ததையும் இடத்தால் எதிர்வதையும் குறிக்கும். கீழ், முன், பின் எல்லாம் அன்ன. கழித்தான் - தீர்த்தான். அன்பின் நிலையில் - மறக்கருணையில். அன்பு இல்லாத நிலை எனலுமாம். அவுணர்க்கு அன்பிருந்தால் அழிப்பரோ பிறவுயிர்களை ? முப்புரத்தை நீருக்கின வரலாறு. திரிபுரத்தைப் பொடி செய்தான் என்பது பெருவழக்கு. நன்மலர் மேலவன் :- நான்முகன் இது தல வரலாறு ஏற்பட்ட பின்னர்ப்பாடியதாகும். வேதி (- பிரமன்.) 'விசும்பினை வேதி தோடர ஓடரங்காக வைப்பான்' (40) விழுதிகுடி, வீதிகுடி, வேதிகுடி என மருவியதெனல், குடிஎன முடியும் ஊர்ப் பெயர்களால் உணரப்படும். கிள்ளுகுடி இலந்தங்குடி ஆலங்குடி எட்டிகுடி. அன்பன் :- 'அன்பே சிவம்' உடையன் - 'சுவாமி' பொன்னை - மேருமலை வில்லாளனை. ஆகுபெயர்.

866. பத்தர்கள் பிறவியை அறுப்பான். நாளும் மறவார் பிறவியை அறுப்பான், அவ்விருதிறத்தார் பிறவியொன்றையே அறுப்பான். மற்றையோர் பிறவியை அறுக்கமாட்டான். 'இறைவனடி சேராதார்' 'பிறவிப் பெருங்கடல் நீந்தார் (சேர்ந்தார்) நீந்துவர்'. நாளும் மறவார் - இடைவிடாது நினைப்பவர். ஒன்று அறுப்பான் :- ஒன்ருக (ஒருசேர) அறுப்பான்; ஒன்றையே அறுப்பான்; ஒன்றியிருந்து அறுப்பான். ஒன்று - ஒருமையையுடையது; பண்பி. ஒருமை - பண்பு. முத்தர்கள் - பாச நீக்கம் உற்றவர்கள். பாரிடமுன் - மண்ணுலகில். முன்னம் - முன்னர். பணி செய்துயர்த்தான் - பணிசெய்துயரச் செய்தான். பணி செய்துயர்தல் முத்தர் செயல். உயர்த்தல் இறைவன் செயல். கோத்தன கோன்றை - கோத்துக்களை யுடையனவாகிய கோன்றை; கோன்றைப் பூங்கோத்துக்கள்,

ஆனணைந் தேறுங் குறிகுண மாரறி வாரவர்கை
மானணைந் தாடு மதியும் புனலுஞ் சடைமுடியன்
தேனணைந் தாடிய வண்டு பயிறிரு வேதிகுடி
ஆனணைந் தாடு மழுவனை நாமடைந் தாடுதுமே.  867

எண்ணு மெழுத்துங் குறியு மறிபவர் தாமொழியப்
பண்ணி னிசைமொழி பாடிய வானவர் தாம்பணிவார்
திண்ணனன் வினைகளைத் தீர்க்கும் பிரான்றிரு வேதிகுடி
நண்ண வரிய வமுதினை நாமடைந் தாடுதுமே.  868

867. ஆன் - விடை. அணைந்து - சார்ந்து. ஏறுங்குறியும் குணமும் அறிவார் ஆர்? குறி - பெயர்; அடையாளம். குணம் - எண்குணமும் சத்துவம் முதலியனவும், செம்மை, நன்மை முதலியனவும். அவர் - அப்பரமசிவனுருடைய. கை - திருக் கையில். மான் அணைந்து ஆடும். மதியும் புனலும் சடைமுடியில் உடையன் என்று கொள்க. தேன் - பூக்களில். ஆகு பெயர். தேனுக்காகப் பூவில் அணைந்து ஆடிய வண்டு எனவும் தேனை அணைந்து ஆடிய வண்டு எனலும் ஆம். தேன் - பெடைவண்டு; வண்டினத்துள் ஒன்று. ஆன் - 'ஆனைந்து'; (பஞ்சகௌவியம்). மழுவன் - மழுப்படை யுடையவன். 'ஆனிடையஞ்சுங்கொண்டு அன்பினால் அமர ஆட்டி' (530) 'அஞ்சணையஞ்சுமாடி' (514). 'பேரும் குணமும் பிணிப் புறும் இப் பிறவி' (திருவாசகம். 561) இல்லாத கடவுள். 'ஒருநாமம் ஓருருவம் ஒன்று மில்லான்' (ஷை 235) 'மைப் படிந்த கண்ணாளும் தானும்' எனத் தொடங்கும் திருத் தாண்டகத்துள், குறி, குணம் இன்மை கூறப்பட்டது. 'ஊரிலான் குணங்குறியிலான் செயலிலான் உரைக்கும் பேரிலான்' (கந்த புராணம்) 'எண்ணாய் எழுத்தாய்' (130. 6. 12. 5)

868 எண்ணும் எழுத்தும்:- 'எண்ணிடை யெழுத்து மானார்' (426), எண்ணையும் 'எழுத்தையும் குறியையும் அறிபவர்தாம் மொழிய வானவர் தாம் பணிவார். பண்ணினிசை மொழிபாடிய வானவர் தாம் பணிவார். 'குறிகளும் அடையாள மும் கோயிலும் நெறிகளும், அவர் நின்றதோர் நேர்மையும்

ஊர்ந்தவிடை யுகந் தேறிய செல்வனை நாமறியோம்
ஆர்ந்த மடமொழி மங்கையோர் பாகமகிழ்ந்துடையான்
சேர்ந்த புனற்சடைச் செல்வப்பிரான்றிரு வேதிகுடிச்
சார்ந்த வயலணி தண்ணமு தையடைந் தாடுதுமே. 869

எரியு மழுவின னெண்ணியு மற்றொரு வன்றலையுள்
திரியும் பலியினன் றேயமும் நாடுமேல் லாமுடையான்
விரியும் பொழிலணி சேறுதிகழ்திரு வேதிகுடி
அரிய வமுதினை யன்பர்க ளோடடைந் தாடுதுமே. 870

.........................................................................................................................

அறிய' (5-90-6) அவர் வினைகளைத் தீர்க்கும் பிரான். திண்ணென்னும் வினைகள்:- தீர்க்கத் தீராதவாறு உறுதியாகப் பற்றித் தொடரும் வினை, 'பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே' (பட்டினத்தார் பாடற்றிரட்டு). நண்ண அரிய பாற்கடல் கடைந்து அடைந்ததுபோல் எளிதில் அடைதற்கு அரிய சிவாமிர்தம். (8.70) அறிபவர் வானவர் பணிவார் எனலும் ஆம்.

869. ஊர்ந்த விடையுகந்து ஏறிய செல்வன்:. உகந்து விடை ஏறியூர்ந்த செல்வன்; விடை உகந்து ஏறி ஊர்ந்த செல்வன். ஊர்ந்த விடை ஏறிய செல்வன் என்று உள்ளவாறே கொள்ளின், ஊர்தல் ஏறுதல் இரண்டும் வெவ்வேறு காலத்தன ஆகும் ஆர்ந்த - நிறைந்த; செவிக்கினிதாக அருந்திய (மொழி). மடமொழி - மடப்பும் பொருந்திய சொல். 'மட மொழி மங்கை' என்பதும் 'மங்கையர்க்கரசியம்மை' என்று இத்தலத்தில் இறைவி திருப்பெயராக வழங்குவதும் நோக்கத்தக்கன. மகிழ்ந்து உடையவன். புனல் சேர்ந்த சடை. சேர்ந்த சடையுமாம், சேராதது சடையாகாது. சடைச் செல்வப்பிரான்:- சடையுடையார் எய்தும் அழியாத பேரின்பச் செல்வத்தைக் குறித்தது. வேதிகுடியைச் சார்ந்த வயல். 'வயல் அணிதண்ணமுது' என்றாலும் வயல் சார்ந்ததும் அச்சார்பு அணியாவதும் வேதிகுடிக்கே ஆயினும், அச்சார்பும் அணியும் அங்குத் திருக்கோயில்கொண்ட பெருமானுக்கும் உரிய ஆதலின், 'சார்ந்த வயல் அணிதண்ணமுது' எனப்பட்டது.

870. எரியும் மழுவினன் - 'கனல் மழுவன்' (864). எண்ணியும் திரியும் பலியினன்; மற்றொருவன் தலை - பிரம

மையணி கண்டன் மறைவிரி நாவன் மதித்துகந்த
மெய்யணி நீற்றன் விழுமிய வெண்மழு வாட்படையான்
செய்ய கமல மணங்கம ழுந்திரு வேதிகுடி
ஐயனை யாரவமுதினை நாமடைந் தாடுதுமே. 871

கபாலம், பலி கொள்ளத்திரிதல் இழிவுண்டாக்குவது என்று எண்ணியும் பலிக்காகத் திரியுமவன். தேயம்:- 'தேஎம்' என்பது தேயம் எனத்திரிந்தது. 'செய்யார் தேஎம் தெருமரல் கலிப்ப' (பொருநராற்றுப்படை. 134) 'தேயமும் நாடும்' முறையே பெரியனவும் சிறியனவுமான இடப்பிரிவுகளை உணர்த்தி நின்றன. தேயமெல்லாம் உடையான். நாடெல்லாம் உடையான். விரியும் பொழில் வேதிகுடி. சேறுதிகழ் வேதிகுடி. அதில் உள்ள அரிய அமுது (808). அன்பர்கள் - அன்பு மிக்க தொண்டர்கள். 'அன்பரொடு மரீஇ' (சிவஞானபோதம். 12) 'இணங்கத் தன் சீரடியார்கூட்டமு வைத்தும்'.

871. மை அணி கண்டன் - மேகம் போலும் அழகிய கண்டன். நஞ்சணிந்த கண்டன். 'மைவானமிடற்றானை அவ்வான் மின்போல் வளர்சடைமேல் மதியானை மழையா யெங்கும் பெய்வானை' (6.50.6) 'மேகம்போல் மிடற்றர்' (564). மறைவிரிநாவன் - வேதங்களையும் ஆகமங்களையும் விரித்துரைத்த நாவினன். 'மறையுங் கோப்பளித்தநாவர்' (242). மதித்து - முத்திதரத்தக்கது இதுவே என மதித்து. உகந்த - விரும்பிக் கொண்ட நீற்றன். மெய் - திருமேனி. அணி - அழகுறப்பூசிய. விழுமிய - சிறந்த. வெள்மழுவாட் படை:- வெண்மை குற்றம் இன்மையைக் குறித்த அடை. அநீதியாக அப்படையை ஆளாதவன் என்றவாறு. அவர் மகனாரும் அம்மழுவைப் பிழையாத தாதைதாளை வீசினாரல்லர். 'பிழைத்த தன்தாதை தாளைப் பெருங்கொடுமழுவால் வீசக் குழைத்ததோ ரமுதம் ஈந்தார் குறுக்கை வீரட்டனார்' (478). செய்ய கமலம் - செந்தாமரை.

வருத்தனை வாளரக்கன்முடி தோளொடு பத்திறுத்த
பொருத்தனைப் பொய்யா வருளனைப் பூதப் படையுடைய
திருத்தனைத் தேவர்பி ரான்றிரு வேதி குடியுடைய
அருத்தனை யாரா வமுதினை நாமடைந் தாடுதுமே. 872

திருச்சிற்றம்பலம்

872. வருத்தனை - இராவணனைத் துன்புறுத்தியவனை. வாள் அரக்கன் முடி பத்தும் இருபது தோளொடும் இறுத்த பொருத்தனை. பொருத்தன் - பொருத்துதலைச் செய்தவன். பொய்யா அருளன் - பொய்க்காத கருணையுடையவன். இஃது இராவணனுக்கு இரங்கியவாறு குறித்தது. பூதப்படையுடைய திருத்தன் (-தீர்த்தன்). அருத்தன் - பொருளன். மெய்ப் பொருளானவன் ; செல்வன். வருத்தன் முதலிய ஏழும் இறைவனையே குறித்தன.

பண்ணி னேர்மொழி யாளுமை பங்கரோ
மண்ணி னார்வலஞ் செய்மறைக் காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்மினே

அரக்க னைவிர லாலடர்த் திட்டநீ
ரிரக்க மொன்றிலீ ரெம்பெரு மானிரே !
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ
சரக்க விக்கத வந்திறப் பிம்மினே.

பாட வடியார் பரவக் கண்டேன்
பத்தர் கணங்கண்டேன் மொய்த்த பூதம்
ஆடன் முழவம் அதிரக் கண்டேன்
அங்கை யனல்கண்டேன் கங்கை யாளைக்
கோட லரவார் சடையிற் கண்டேன்
கொக்கி னிதழ்கண்டேன் கொன்றை கண்டேன்
வாடற் றலையொன்று கையிற் கண்டேன்
வாய்மு ரடிகளைநான் கண்ட வாறே.

## 91 திருவையாறு

### திருப்பதிக வரலாறு

திருவையாற்றிற் சராசரமெல்லாம் காதற்றுணையோடும் கூடக் கண்டேன் என்று பாடி, தொழுது வணங்கிக் கண்ணுதலாரைப் போற்றிப் பாடியருளியவற்றுள் ஒன்று இத் திருவிருத்தம். (புராணம். 385).

திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

குறுவித்த வாகுற்ற நோய்வினை காட்டிக் குறுவித்தநோய்
உறுவித்த வாவுற்ற நோய்வினை தீர்ப்பா னுகந்தருளி
அறிவித்த வாறடி யேனையை யாற னடிமைக்களே
செறிவித்தவாதொண்ட னேனைத்தன் பொன்னடிக்கீழெனையே

873. இத்திருப்பதிகம் முழுதும் பொருள் விளங்காததாயுளது. பாடப்பெற்ற காரணம் முதலியன தெரியாமையும் அதற்கொருகாரணம் ஆகும். குறுவித்தவா என்பது முதலியவற்றைக் குறுவித்தவாறு என்பது முதலியனவாகக் கொள்க. விளியாதல் பொருந்துமேற்கொள்ளலாம். அடியேனை, தொண்டனேனை, எனை என்று இரண்டனுருபு மும்முறை வருதலின் பொருத்தம் புலப்பட்டிலது அடிமைக்கணே என்பது இவ்வாறு பிழைபட்டதோ? நோய் வினையைக் காட்டிக் குற்றம் குறுவித்ததோ? குற்றம் நோயைக் குறுவித்ததோ? குறுவித்த நோய் என்று பின்னுள்ளது. அது வினைமுதலா? செயப்படுபொருளா? குறுவித்தல் - குறுகச் செய்தல்; குற்றச்செய்தல்; குறுகுவித்தல். உறுவித்தல் - மிகுவித்தல். வினைகாட்டிக் குற்றம் நோயைக் குறுவித்தவாறு. குற்றத்தால் எய்தும் நோயை. குற்றங்கட்கிடமாக்கும் நோய். குற்றமாம் நோய். குற்றத்தால் எய்தும் நோயும். அந்நோய்க்கு ஏதுவான வினையும் குறுவித்த நோய்; குற்ற நோய். உறுவித்த நோய்; உற்ற நோய். 'அடிமைக்கள்' என்றேகொண்டு, வலித்தல் ஆகிய திரிபு எய்தியது என்றலும் ஆகும். உறுவித்த நோய் மிகச்செய்த நோய். உற்ற நோய் - மிக்க நோய். தீர்ப்பான்:- முற்றுவினையும்,

கூர்வித்த வாகுற்ற நோய்வினை காட்டியுங் கூர்வித்தநோய்
ஊர்வித்த வாவுற்ற நோய்வினை தீர்ப்பா னுகந்தருளி
ஆர்வித்த வாறடி யேனையை யாற னடிமைக்களே
சேர்வித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே.

---

எச்சவினையும், வினையாலணையும் பெயருமாம் நோய்'சூலை' ஆயின். அறிவித்தல் 'கூற்றாயினவாறு விலக்ககிலீர்' எனத் தொடங்கிப் பாட அறிவித்ததாகும். தன்வினை பிறவினைகளைப் பற்றிய நுட்பவேறுபாட்டைக், கேரளபாணினீயம் பக்கம். 253-4 பார்க்க. ஓட்டுதல், ஓட்டுவித்தல் இரண்டும் ஓடுதல் என்னுந் தன் வினையை நோக்கப் பிறவினையே ஆகும். ஆயினும், ஆண்டவன்வினையைஓட்டினுன்என்புழிஉடன்ஓடுவான்அவனே? 'ஓட்டுவித்தான்' எனில் ஓட்டுவான் ஓடமாட்டான். எனைக் குறுவித்தவா என்று விற்பூட்டாகக் கொள்ளலும் இதில் அமையும். குற்ற நோயை வினை காட்டிக் குறுவித்தவா! குறிவித்த நோயை உறுவித்தவா! உற்ற நோய் வினையைத் தீர்ப்பான் உகந்தருளி அடியேனை ஐயாறன் அடிமைக்களே அறிவித்தவாறு. அடிமைக்கள் என்றதற்கு - அடிமையின்பம் எனலும் பொருந்தும். அடுத்த பாடலிலும், 'அடிமைக்களே ஆர்வித்தவாறு' எனப் பொருந்துகின்றதுணர்க. முதல் இரண்டிலும் சூலை நோயும், அடுத்த இரண்டில் நாயனுர் கடலில் மிதந்ததுமாம்.

874. தன் பொன்னடிக் கீழ் எனைக்கூர்வித்தவா. குற்ற நோய் வினைகாட்டியும் கூர்வித்தவா கூர்வித்த நோய் ஊர் வித்தவா. உற்றநோய் வினைதீர்ப்பான் (தீர்ப்பவன், தீர்க்க) உகந்தருளி அடியேனை ஆர்வித்தவாறு ஐயாறன் அடிமைக்களே. தொண்டனேனைச் சேர்வித்தவா என்க. கூர்தல், கூர்வித்தல். ஊர்தல், ஊர்வித்தல். ஆர்தல் - ஆர்வித்தல். சேர்தல் - சேர் வித்தல். இவை முறையே தன் வினையும் பிறவினையுமாகும். சூலை நோயையே யன்றிச் சமணர் செய்த நோயையும் குறித்த தாகக் கொள்ளலாம். ஆர்வித்தல் : நுகர்வித்தல் ; 'மாசில் வீணை' 'மாலை மதியம்' 'வீசு தென்றல்' 'வீங்கிள வேனில்' 'முசுவண்டு அறை பொய்கை' 'ஈசன் எந்தையிணை யடிநீழல்' என ஆர்தலைச் செய்தல். அடிமைக்களே கூர்வித் தன; ஆர்வித்தன ; சேர்வித்தன எனலாம்.

தாக்கின வாசல மேவினே காட்டியுந் தண்டித்தநோய்
நீக்கின வாநெடு நீரினின் றேற நினேந்தருளி
ஆக்கின வாறடி யேனையை யாற னடிமைக்களே
நோக்கின வாதொண்ட னேனைத்தன் போன்னடிக் கீழேனேயே

தருக்கின நான்றக வின்றியு மோடச் சலமதனல்
நெருக்கின வாநெடு நீரினின் றேற நினேந்தருளி
உருக்கின வாறடி யேனையை யாற னடிமைக்களே
பெருக்கின வாதொண்டனேனைத்தன் போன்னடிக்கீழேனேயே

---

875. அடிமைக்களே தன் போன்னடிக்கீழ் எனேத் தாக்கினவா ; நீக்கினவா ; ஆக்கினவா ; நோக்கினவா என்க. சலமே - கடல் நீரே ; சலமதனல் நெருக்கினவா. (876) மாறுபாடேன்றனர்கள் ; திரு. கோ. க. சுப்பிரமணிய முதலியார் அவர்கள். (அப்பர் புராண வுரையில். பக்கம் 642 ). தண்டித்த நோய்-சூலே நீற்றறையிலிட்ட நோய்; கல்லினேடு பூட்டி ஒல்லே நீர்புக நூக்கிய நோய் ; சூலே நோய் எல்லாம். சமண் புக்கதற்குத் தண்டனேயுமாம். நெடுநீரின் நின்று ஏறல் :- அக் கடலில் ஆழாது கல்லே புணேயாகக் கரையேறித் திருவைந்தெழுத்தின் சிறப்பைத் தெரிவித்தல். ஆக்குதல் - மறு பிறப்பு என்னும்படி, சமண்செய்த கொடுமைக்கெல்லாம் மாய்தல் உருமே உய்ந்து வாழச் செய்தல். பெருக்குதல் - மிகுத்தல்.

876. அடிமைக்களே தன் தன்போன்னடிக்கீழ் என்னேப் பெருக்கினவா (இன்பம்). ' நாம் ஆர்க்கும் குடியல்லோம் ' ' பணிவோம் அல்லோம் ' ' துகிலுடுத்துப் போன் பூண்டு திரிவார் சொல்லும் சொற்கேட்கக் கடவோமோ துரிசற்றேமே ' ' பகடேறி வருவார் சொல்லும் பணிகேட்கக் கடவோமோ ' பற்றற்றேமே ' ' என்றும் நாம் யாவர்க்கும் இடைவோம் அல்லோம் இருநிலத்தில் எமக்கு எதிராவாருமில்லே ' ' காவலரே ஏவிவிடுத்தாரேனும் கடவோம் அலோம்' 'வந்து ஈரார் மன்னவன் ஆவான் தான் ஆரே ? ' எனல் முதலிய பல சொல்லி ' இறுமாந் திருப்பவ ' ராதலின், ' தருக்கின நான் ' என்றனர். நெடுநீர் - முந்நீர், கடலேற விட்ட கருணேத்திறம். உருக்குதல் - உள்ள முதலனேத்தும் ஒன்ற ஒருவல். (திருக்களிறு) பெருக்குதல் - பேரின்பத்துள் ஆராமை.

இழிவித்த வாறிட்ட நோய்வினை காட்டி யிடர்ப்படுத்துக்
கழிவித்த வாகட்ட நோய்வினை தீர்ப்பான் கலந்தருளி
அழிவித்த வாறடி யேனையை யாற னடிமைக்களே
தொழுவித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக்
கீழெனையே. 877

இடைவித்த வாறிட்ட நோய்வினை காட்டி யிடர்ப்படுத்து
உடைவித்த வாறுற்ற நோய்வினை தீர்ப்பா னுகந்தருளி
அடைவித்த வாறடி யேனையை யாற னடிமைக்களே
தொடர்வித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக்
கீழெனையே 878

877. தன் பொன்னடிக் கீழ் எனைத் தொழுவித்தவாறு. அடிமைக்களே தொழுவித்தவாறு. இட்டநோய் வினை காட்டி இழிவித்தவாறு. காட்டி இடர்ப்படுத்துக் கழிவித்தவாறு. கட்ட நோய்வினை தீர்ப்பான் (தீர்ப்பவன், தீர்க்கச்) கலந்தருளி. (அவை) அழியச் செய்தவாறு. அடியேனைக் கலந்தருள் அழிவித்தவாறு. அழிதல் - நோய்வினை அழிதல். அழிவித்தல் இறைவனது. அழிவித்தற்பயன் நாயனூர்க்குரியது. இட்டநோய் - ஊழின்படி இட்டநோய். கட்டநோய்-துன்பந்தரும் நோய். கட்டம்(-கஷ்டம்). தொழுதல்; தொழுவித்தல், தொழுவிப்போன் தொழமாட்டான். கலந்தருளித் தீர்ப்பான் எனலுமாம். இழிதல் இழிவித்தல்; கழிதல், கழிவித்தல்; அழிதல் அழிவித்தல்; தொழுதல் தொழுவித்தல் எனத் தன்வினையும் பிறவினையும் உறும் வேறு பாடுணர்க.

878. இட்ட நோய் வினைகாட்டி இடைவித்தவாறு. தன் பொன்னடிக்கீழ் எனை இடைவித்தவாறு. காட்டி இடர்ப் படுத்து உடைவித்தவாறு. உற்ற நோய் வினைதீர்ப்பான் உகந் தருளித் தீர்ப்பான் எனலுமாம். அடியேனை அடைவித்தவாறு, அடிமைக்களே தொடர்வித்தவாறு. இடைதல் - ஒதுங்குதல். இடைவித்தல் - ஒதுங்கச் செய்தல் வன்மை குறைவித்தலும் வருந்தச் செய்தலுமாம். உடைதல், உடைவித்தல். அடைதல், அடைவித்தல். தொடர்தல், தொடர்வித்தல்.

படக்கின வாபட நின்றுபன் ஞளும் படக்கினநோய்
அடக்கின வாறது வன்றியுந் தீவினை பாவமெல்லா
மடக்கின வாறடி யேனையை யாற னடிமைக்களே
தொடக்கினவா தொண்டனேனைத்தன் பொன்னடிக்கீழேனையே

மறப்பித்த வாவல்லை நோய்வினை காட்டி மறப்பித்தநோய்
துறப்பித்த வாதுக்க நோய்வினை தீர்ப்பா னுகந்தருளி
இறப்பித்த வாறடி யேனையை யாற னடிமைக்களே
சிறப்பித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழேனையே

துயக்கின வாதுக்க நோய்வினை காட்டித் துயக்கினநோய்
இயக்கின வாறிட்ட நோய்வினை தீர்ப்பா னிசைந்தருளி
அயக்கின வாறடி யேனையை யாற னடிமைக்களே
மயக்கின வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழேனையே

879. படநின்று படக்கின என்றதால், படச்செய்தல் என்ற பொருளதாதல் அறிக. படக்கின - தாழ்த்திய எனலுமாம். நோய் அடக்கினவாறு. அது அன்றியும் தீவினை யெல்லாம் பாவம் எல்லாம் மடக்கினவாறு. அடக்கினவாறு என்று பிரித்தும் பதித்தனர் பின்னோர். பழம் பதிப்பிலுள்ளவாறு 'மடக்கினவாறு' என்றே இருப்பின் மகரமேனும் அகரமேனும் முதலாய் நிற்கப் பிரித்துக் கொள்ளலாம். தொடக்கின - தொடக்குறச்செய்தன.

880. வல்லை - கடுப்பு, வலிமை. நோயின் கடுப்பும் வலிமையும் கொள்ளலாம். விரைவு எனக்கொண்டு மறப்பித்தலின் காலவிரைவினையுங் கூறலாம். மறப்பித்ததும் துறப்பித்ததும் நோயே. துறத்தல் நாயனாரது தொழில். துறக்கப்பட்டது பற்று. நோய் துறப்பித்தல் அநுபவத்திற் பலர் கண்டதும் காணத் தக்கதுமாம். இறத்தல் - கடத்தல். இறப்பித்தல் - கடக்கச்செய்தல். சிறத்தல் - உள்ளது மிகுதல். சிறப்பித்தல் - உள்ளது மிகுவித்தல்.

881. துயக்குதல் - சோர்வித்தல், தளர்வித்தல், தடுப்பித்தல், இயங்குதல், இயக்குதல். இயங்குவித்தல். அயக்குதல் :- ' அயக்கமாய் அடக்கமாய ஐவர் ஆப் பாடியாரே '

கறுத்துமிட் டார்கண்டங் கங்கை சடைமேற் கரந்தருளி
இறுத்துமிட் டாரிலங் கைக்கிறை தன்னை யிருபதுதோள்
அறுத்துமிட் டாரடி யேனையை யாற னடிமைக்கனே
பொறுத்துமிட் டார்தொண்ட னேனைத்தன் பொன்னடிக்
கீழெனையே. 882

திருச்சிற்றம்பலம்

(473). அயக்கம் - நோயின்மை. அசைக்குதல் என்பதன் மரூஉ வாகக் கொண்டுரைத்தலுமாம். மயக்கினவாறு - மயங்கச்செய்த வண்ணம். மயங்குதல் - கலத்தல்.

882. கறுத்தும் - சினந்தும். கண்டம் :- திருநீலகண்டம். கரத்தல் - மறைத்தல். இறுதல்+இறுத்தல் 'வில்லிறுத்தான்' 'இறுதி' 'ஈறு' இறுதல் இடைக்கண்ணதுமாம். முடிதல் - இருது முடிவுறல். இறுதிவேறு முடிவுவேறு. இறை - இறைவன் (இராவணன்). இருபது தோள்களையும் அறுத்துமிட்டார் என்று இனைத்தென அறிந்த சினைக்கிளவிக்கு வினைப்படு தொகுதிக் கண் வேண்டும் உம்மை விரித்துரைக்க. பொறுத்தல் - தாங்குதல்; பார்த்தல்; தரித்தல், (ஆதாரமாயருளல்) என்னைப் பொறுத்துமிட்டார்.

தலையெ லாம்பறிக் குஞ்சமண் கையரு
ணிலையி னுன்மறைத் தான்மறைக் கொண்ணுமே
யலையி னுர்பொழி லாறை வடதளி
நிலையி னுனடி யேநினைந் துய்ம்மினே

வாயி ருந்தமி ழேபடித் தாளுரு
ஆயி ரஞ்சம ணும்மழி வாக்கினுன்
பாயி ரும்புன லாறை வடதளி
மேய வன்னென வல்வினை வீடுமே,

கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை
யரவாடச் சடைதாழ வங்கையினி லனலேந்தி
யிரவாடும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே.

# 92. திருவையாறு

## திருப்பதிக வரலாறு

திருவையாறு சென்று வழிபட்ட காலத்திற் பாடியருளிய வற்றுள் ஒன்று இத்திருப்பதிகம். இஃது இருபது திருப்பாட லுடையது. இவை பழம் பதிப்பிலும் தருமபுர ஆதீனத் தொடர் புடைய மதுரை ஞானசம்பந்தப்பிள்ளை பதிப்பிலும் ஒரு சேர உள்ளன.

### திருவிருத்தம்

### திருச்சிற்றம்பலம்

சிந்திப் பரியன சிந்திப் பவர்க்குச் சிறந்துசெந்தேன்
முந்திப் பொழிவன முத்தி கொடுப்பன மொய்த்திருண்டு
பந்தித்து நின்ற பழவினை தீர்ப்பன பாம்புசுற்றி
அந்திப் பிறையணிந் தாடுமை யாற னடித்தலமே. 883

883. ஐயாறன் அடித்தலம் அரியன; பொழிவன; கொடுப்பன; தீர்ப்பன. சிந்திப்பவர்க்குச் சிந்திப்பரியன. அவர்க்குச் சிந்திப்ப அரியன எனலுமாம். சிந்திப்பவர்க்குச் சிந்திப்ப அரியன ஆயினும், 'அருவினையென்பவுளவோ கருவி யாற் காலம் அறிந்து செயின்' (குறள். 483) 'பெருமை யுடையவர் ஆற்றுவர் ஆற்றின் அருமையுடைய செயல்' (975) என்று கருதிச் சிந்திப்பவர்க்கு, முந்தி (வந்து) செந்தேன் சிறந்து பொழிவன. அத் தேன் 'கருதுவார் இதயத்துக் கமலத்தூறுந்தேன்.' அது பேரின்பப்பேறு; சிவப்பேறு. முத்தி கொடுப்பன - வீடுதருவன. இது பாச நீக்கம். மொய்த்தும், இருண்டும், பந்தித்தும் நின்ற பழவினை (சஞ்சிதங்)களைத் தீர்ப்பன. மொய்த்திருண்டது ஆணவம்; பந்தித்து நின்றது மாயை எனக்கொண்டு பழவினையோடு கூட்டி மும்மலமும் தீர்ப்பன எனலுமாம். பாம்பு சுற்றியதும் அந்திப் பிறை யணிந்ததும் ஆடுதலும் ஐயாறன் செயல். முன்னவை திருவடி யின் இயல்பு.

இழித்தன வேழேழ் பிறப்பு மறுத்தன வென்மனத்தே [காய்க்
பொழித்தன போரேழிற் கூற்றை யுதைத்தன போற்றவர்க்
கிழித்தன தக்கன் கிளரோளி வேள்வியைக் கீழமுன்சேன்
றழித்தன வாறங்க மானவை யாற னடித்தலமே. 884

மணிநிற மொப்பன பொன்னிற மன்னின மின்னியல்வாய்
கணிநிற மன்ன கயிலைப் பொருப்பன காதல்செய்யத்
துணிவன சீலத்த ராகித் தொடர்ந்து விடாததொண்டர்க்
கணியன சேயன தேவர்க்கை யாற னடித்தலமே. 885

884. ஆறு அங்கம் ஆன ஐயாறன் அடித்தலம் இழித்தன ஏழேழ் பிறப்பும் அறுத்தன; என் மனத்தே பொழித்தன போர் எழிற்கூற்றை உதைத்தன; போற்றவர்க் காய்த் தக்கன் வேள்வியைக் கிழித்தன! கீழ முன் சென்று அழித்தன. இழித்தன - அறுவறுத்தன. இழிவுபடுத்தின தாழ்த் தியன. இழித்தனவாகிய பிறப்பு. ஏழேழ் பிறப்பு .- ஏழேழாக மறித்தும் மறித்தும் எய்தும் இருபத்தோரு பிறவி. 'எழுபிறப்பும் தீயவை தீண்டா' (குறள். 62) என்றதற்குப் பரிமேலழகர் உரைத்தவாறுணர்க. 'எழுமை யெழுபிறப்பும் உள்ளுவர்' (ஷை 107) எழுபிறப்பும் எங்கள் நம்பி (7. 63. 1) 'இச்சை யறியோம் எங்கள் பெருமான் ஏழேழ் பிறப்பும் எனையாள்வாய்' (7. 41. 2) 'மூவேழ் சுற்றம் முரணுறு நரகிடை ஆழாமே அருள் அரசே போற்றி' (திருவாசகம்) 'எம்மான் எந்தை மூத்தப்பன் ஏழேழ்படிகால் எமை ஆண்ட பெம்மான்' ஈமப் புறங்காட்டில் பேயோடு ஆடல் புரிவானே' (7. 52. 9) 'ஏழாட்காலும் பழிப்பிலோம்' 'எந்தை தந்தை தந்தை தந்தை தம் மூத்தப்பன் ஏழ் படிகால் தொடங்கி வந்து வழி வழியாட் செய்கின்றோம்' (பெரியாழ்வார் திருமொழி. 3. 6) 'எற்றைக் கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடுற்றோமே யாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்' (திருப்பாவை 29) 'இருபத் தோரு ஜந்மங்கள்' (ஷை வியாக்கியாநம்).

885. ஐயாறன் அடித்தலம் மணி நிறத்தைப் போல்வன; பொன்னிறத்தைப் பொருந்தின. மின்னும் இயல்வாய்ந்த கணி நிறம் போன்றன. கைலைமலையை உடையன. காதல் செய்யத்

இருடரு துன்பப் படல மறைப்பமெய்ஞ் ஞானமென்னும்
பொருடரு கண்ணிழந் துண்பொரு ணாடிப் புகலிழந்த
குருடருந் தம்மைப் பரவக் கொடுநர கக்குழிநின்
றருடரு கைகொடுத் தேற்றுமை யாற னடித்தலமே. 886

எழுவா யிறுவா யிலாதன வெங்கட் பிணிதவிர்த்து
வழுவா மருத்துவ மாவன மாநர கக்குழிவாய்
விழுவா ரவர்தம்மை வீழ்ப்பன மீட்பன மிக்கவன்போ
டழுவார்க் கமுதங்கள் காண்கவை யாற னடித்தலமே. 887

---

தெளிவன. (துணிவு பிறத்தற்குரியன) சீலத்தினையுடையவராகித் தொடர்ந்து (காலை நண்பகல் மாலை நள்ளிரவு எப்பொழுதும்) விடாதுதொழும் தொண்டர்க்கு அணியவாயிருப்பன. தேவர்க்குச் சேயவாயிருப்பன. கணி நிறம் - வேங்கைப்பூவின் நிறம். அன்ன கைலை என்னற்க. அன்னவை அடித்தலமே அன்றிவேறில்லை.

886. ஐயாறன் அடித்தலம், மறைப்ப இழந்து நாடி இழந்த குருடரும் பரவக் கொடுத்து ஏற்றும் என்க. மெய்ஞ் ஞானக் கண்ணை மறைக்கும் படலம் இருள் தருகின்ற துன்பம். மெய்ஞ்ஞானம் என்னும் பொருளைத் தருகின்ற கண் மெய்ஞ் ஞானக்கண். ‘ பொருள் தருகண் ’ என்றதால். மெய்ஞ்ஞான மாகிய கண் எனல் ஈண்டுப் பொருந்தாது; மெய்ஞ்ஞானம் என்றது நோக்கி ‘இருள்’ என்பதற்கு அறியாமை (அஞ்ஞானம்) எனப் பொருளுரைக்க. அறியாமையே துன்பத்திற்கேது. உண்ணு தற்குத் தக்கபொருள் உண்பொருள். ‘ உண்பொருள் ’ செயப்படு பொருளில்நின்ற வினைத்தொகை. பொருளை நாடிப் புகலை இழந்த குருடர். குருடரும் வாழ்த்தக் குழியினின்றும் கரையேற்றும். அருளைத் தருகின்ற கையைக் கொடுத்துக் கரையில் குருடரையும் ஏற்றும், நரக்குழியினின்றும் ஏற்றும். ஏனைக் குருடர்க்கு மறைப்பது கண்ணிற்கு வரும் படலம் என்னும் நோய், உண் பொருளை நாடித் தமக்குப் புகலாயிருக்கும் பரசிவனை இழந்த குருடர்க்கு மறைப்பது அப்படலம் அன்று; இது வேறு என்பார் ‘ இருள்தரு துன்பப்படலம் ’ என்றார்.

887. ஐயாறன் அடித்தலம் எழுவாயும் இறுவாயும் இல்லா தன; வேங்கண் பிணி தவிர்த்து வழுவாத மருத்துவம் ஆவன.

துன்பக் கடலிடைத் தோணித் தொழில்பூண்ட தொண்டர்
இன்பக் கரைமுகந் தேற்றுந் திறந்தன மாற்றயலே [தம்மை
பொன்பட் டொழுகப் பொருந்தொளி செய்யுமப் பொய்
பொருந்தா
அன்பர்க் கணியன காண்கவை யாற னடித்தலமே. 888

மாநரகக் குழிக்கண் விழுவாரை விழுப்பன, விழுந்தவரையும் விழுமுன் கழுவாய் செய்து கொண்டவரையும் அந்நரகினின்று மீட்பன; மிக்க அன்போடு அழுமவர்க்கு அமுதங்கள் (ஆதலைக்) காண்க. எழுவாய் - முதல்; ஆதி. இறுவாய் - முடிவு; அந்தம். எழுவாய் இறுவாய் இல்லாமை - ஆதியும் அந்தமும் இன்மை; முதலும் முடிவும் இல்லாமை. 'ஆதியும் அந்தமும் ஆனஐயாற னடித்தலம்' (899) என்புழி, ஆன என்னும் எச்சம் 'ஐயாறன்' 'அடித்தலம்' என்னும் இரண்டிற்கும் உரித்து. 'போற்றியருளுக நின் ஆதியாம் பாதமலர் போற்றி யருளுக நின் அந்தமாஞ் செந்தளிர்கள்'. (திருவாசகம் 173) வெங்கண் - கொடுமை, வெங்கட்பிணி - கொடும்பிணி. எங்கள் பிணி. அழுவார்க்கு அமுதங்கள் :- 'ஒழுகு மாடத்துள் ஒன்பது வாய்தலும் கழுகரிப்பதன் முன்னம் கழலடி தொழுது கைகளால் தூமலர் தூவிநின்று அழுமவர்க்கு அன்பன் ஆனைக்கா அண்ணலே' (5. 31. 7). 'மழுவலான் திருநாம மகிழ்ந்துரைத்து அழுவலார்க்களுக்கு அன்பு செய்து இன்போடும் வழுவிலா அருள் செய்தவன் மாற்பேறு தொழவலார் தமக்கு இல்லை துயரமே'. 5. 59. 7. 'அழுமவர்க்கு அன்பர்' (541).

888. துன்பம் கடல் போலும் பெரியது. அக்கடலில் தோணிபோலும் அலையும் தொழில். உற்றவர் தொண்டர். 'தொழில்' (1037). அத்தோணியைக் கடற்கரையில் ஏற்று வன போலும் அத் தொண்டரை இன்பக் கரையில் ஏற்றும் அடித் தலம். அடித்தலத்தின் ஒளியை நோக்கின், பொன்னொளி மிகக் குறைந்தது என்க. பொன்மாற்று அயலே பட்டு ஒழுக - பொன்னின் மாற்று அயலே பட்டு ஒழுகி ஓட. பொருந்தொளி - வினைத்தொகை. பொருந்தும் ஒளி. ஒளியைச் செய்யும். அப் பொய் - அப் பொன் (மண், பெண்) போலும் பொய்ப் பொருள்களை. பொருந்தா அன்பர் - மெய்ப்பொருளென்று பற்றாத சிவநேசர். அன்பர்க்கு அணியன - அன்பர் (சிவ நேசர்)க்கு

களித்துக் கலந்ததோர் காதற் கசிவோடு காவிரிவாய்க்
குளித்துத் தொழுதுமுன் னின்றவிப் பத்தரைக் கோதில் செந்
தெளித்துச் சுவையமு தூட்டி யமரர்கள் சூழிருப்ப [தேன்
அளித்துப் பெருஞ்செல்வ மாக்குமை யாற னடித்தலமே.889

அணியன; அணிமையிலுள்ளன. 'இடையரு அன்பராமவர்க்கு அன்பர் ஆரூரரே' (5. 7. 4) 'அளவுபடாதது ஓர் அன்பு' (31) 'அன்பலாற் பொருளும் இல்லை' (399) 'வேட்கையாற் பரவுந் தொண்டர் அடிமையை அளப்பர்போலும்' (542) 'அளக்கும் தன் அடியார் மனத்து அன்பினை' (5. 21 6) 'நித்த மணாளனை ...... அம்மானை அன்பில் அணைத்து வைத்தேன்' (151). 'கங்கை வார்சடைக் கரந்தார்க்கு அன்பராகில் அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே' (6. 95. 10).

889. அடித்தலம் பெருஞ்செல்வம் ஆக்கும். அளித்து ஆக்கும் சூழ் இருப்ப அளித்து ஆக்கும். சூழிருப்பவர் அமரர். அமரர்களது சூழ் எனலும் அமரர்கள் சூழ இருப்ப எனலும் ஆம். அமரர்கள் தேன் தெளித்து அமுது ஊட்டிச் சூழ் இருப்ப. செந்தேன். கோது இல் தேன். கோது - குற்றம்; வண்டெச்சில், புளிப்பு, ஈலிழுதல் முதலியன குற்றம். பத்தரைத் தெளித்து. இப் பத்தர், நின்ற பத்தர். முன் நின்ற இப் பத்தர் :- நாயனுர் சென்றிருந்த காலத்தில், இறைவன் திருமுன் நின்ற இப் பத்தர். தொழுது நின்ற பத்தர். குளித்துத் தொழுது. காவிரியிற் குளித்து. 'வாய்' ஏழனுருபு. கசிவோடு தொழுது. காதற்கசிவு. கலந்ததோரு காதல். களித்துக் கலந்ததோரு காதற் கசிவு. களித்தல் - உள்ளத்தது. கலத்தல் - உடலது. காதற்கசிவு உணர்வினது. 'தேன்' திருவருள் என்று கொண்டு உரைத்தலுமாம். 'திருவையாறமர்ந்ததேன்' என்றதுணர்க. 384 - 393. பார்க்க. 'காதல் செய்யகிற்பார் தமக்குக் கிளரொளி வானகம் தான் கொடுக்கும்' (895). பெருஞ் செல்வம் :- பேரின்பம். அதுவே, 'நிலையுடைய பெருஞ் செல்வம்' 'நீடுலகிற் பெறலாம்'. அழியும் உலகிற் பெறலாஞ் செல்வம் எல்லாம் நிலையில்லாதன. 'சென்றடையாததிரு' 'சென்றடையாச் செல்வன்' 'ஏரி நிறைந்தனைய செல்வன்' 'செல்வன் கழலேத்துஞ் செல்வம்' 'செல்வாய செல்வம்'.

திருத்திக் கருத்தினைச் செவ்வே நிறுத்திச் செறுத்துடலை
வருத்திக் கடிமலர் வாளோடுத் தோச்சி மருங்குசென்று
விருத்திக் குழக்கவல் லோர்கட்கு விண்பட் டிகையிடுமால்
அருத்தித் தருந்தவ ரேத்துமை யாற னடித்தலமே. 890

890. அடித்தலம் இடும் என்க. அருத்தித்து - அருத்தி என்னும் பெயரடியிற் பிறந்த வினையெச்சம். அருத்தி - விருப்பம். அருத்தித்தல் - வேண்டுதல். 'உன்னை அருத்தித்து வந்தோம்' 'அர்த்திக்கையாலே பிச்சின் மேலே பிச்சேற்ற வந்தோம்' (திருப்பாவை 25. வியாக்கியானம்). அருந்தவர் - செய்தற்கு அரிய தவத்தைச் செய்யும் சிவஞானியர். தவம் 'இறப்பு இல்தவம்'; சரியை கிரியை யோகம். சரியையாளர் முதலோரும் தவத்தோரே ஆயினும், அருந்தவர் என்றதால். சிவஞானத் தவரே ஈண்டுக் கோள்ளற்பாலர். ஏத்துதல் :- அத்துவிதமாய் நின்று வணங்குதல். கருத்தினைத் திருத்திச் செவ்வே நிறுத்திச் செறுத்து உடலை வருத்தி வாள் எடுத்து ஓச்சி மருங்கு சென்று விருத்திக்கு உழக்க வல்லோர்கட்கு விண்பட்டிகை இடும். கருத்தினைத் திருத்துதல் :- 'சிந்தனை திருத்தும் திருமீயச்சூர் எந்தமையுடையாரிளங் கோயிலே' (5. 11. 2) 'சீரார் அருளால் சிந்தனையைத் திருத்தி ஆண்ட சிவலோகா பேரானந்தம் பேராமை வைக்க வேண்டும் பெருமானே' (திருவாசகம்); கருத்து மற்றவற்றையே கருதிவரும். கருதும் போதெல்லாம் தடுத்துத் திருத்திச் சிவத்தையே கருதப் பழக்குதல், செவ்வே நிறுத்தல் - நெஞ்சத்தைச் சிவபெருமான் திருவடிக்கே பதித்தல். 'நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்'. 'அணி அணுமலையுளானே நீதியா னின்னை அல்லால் நினையுமா நினைவிலேனே' (609). செறுத்து - அடக்கி. கருத்தை அடக்குதல் :- அது சென்ற இடத்தாற் செலவிடா தீதோரீஇ நன்றின் பால் உய்ப்பது ஆகிய அறிவின் செயல் செறிவு - அடக்கம். 'செறிவறிந்து சீர்மை பயக்கும்' (குறள். 123). உடலை வருத்தம் - உடம்பை யோகத்தால் வருந்தப் பண்ணல். 'மெய்வருத்தக்கூலி' - 'உடம்பு வருந்திய வருத்தத்தின் கூலி'. (குறள். 619. பரிமேலழகருரை). கடிமலர்வாள் - மணமுடைய பூவாகியவாளை. எடுத்து ஓச்சி - எடுத்து உயர்த்தித் (திருவடியில்) தூவி. மருங்கு சென்று -

சாமீப்பியம் அடைந்து. சாலோக சாமீப சாருப சாயுச்சிய முத்தி களுள் ஒன்று. கிரியாயோகப் பயன் ஆகிய பதமுத்தி சாமீப் பியமும் சாருபமும். ஞானப்பயனாகிய சாயுச்சியமே பரமுத்தி. கருத்தைத் திருத்திச் செவ்வே நிறுத்தி உடலை வருத்தி மருங்கு செல்லல் கிரியாயோக மிரண்டற்கும் உரித்தே. யோகத்திற்குச் சிறப்பாகும். விருத்தி :- உடல் விருத்தியும் உயிர் விருத்தியும். 'விருத்தி நான் உமை வேண்டத் துருத்தி புக்கங்கிருந்தீர் (7. 46. 2) உடல் விருத்தி தாரீரே யாகில் திருமேனி வருந்தவே வளைக்கின்றேன்' (ஷை. 9) 'மேவிய காதல் தொண்டு விரவு மெய்விருத்தி பெற்றார், ஆவியின் விருத்தியான அந்தணர் புலியூர் மன்றில் காவியங் கண்டர் கூத்துக் கண்டு கும்பிடுவது என்று வாவிசூழ் தில்லை மூதூர் வழிக்கொள்வான் வணங்கிப் போந்தார்' (பெரிய புராணம் ஏயர்கோன். 110) என்று சேக்கிழார் சுவாமிகள் இரண்டு விருத்தியையும் கூறியதுணர்க. 'குற்றேவல்' - 'அந்தரங்க வ்ருத்தி' 'உடைவாளும் அடுக்குருவும் எடுத்தல்; கலசப் பானை பிடித்தல்'; படிக்கம் வைத்தல்; 'உமிழும் பொன் வட்டில் எடுத்தல்; திருவடிகள் விளக்குதல்; ஒலியன்பணி மாறுதல்; சாமரம் இரட்டுதல்; அடைக்காய் திருத்தல்; அடி வருடுதல், முலைகளிடர் தீர அணைத்தல் இவை தொடக்க மானவை கோவிந்தற்குப் பண்ணுங்குற்றேவலாகிறது'. (ஆறாயிரப்படி வியாக்யானம்) என்பவற்றை நோக்கிக் குற்றே வலுக்கு உழக்கவல்லோர்கள் எனலும் யோகவிருத்தி எனலும் அமையும். "குற்றேவல்" என்கிறத்திலே இரண்டு வகை யறிந்து சொல்லுங்கோள், இற்றைப்பொழுதை உங்களோடே போக்குகிறோம் அங்ஙனே யாகிலென்றான்; (எற்றைக்கும் ஏழேழு பிறவிக்கும்) இற்றையளவில் போகாதுகாண் - இப்பிறவியளவில் போகாதுகாண். (எற்றைக்கும் ஏழேழுபிறவிக்கும்) அகால கால்யமான நலமந்தமில்லதோர் நாட்டிலே யிருக்கவுமாம்; ஆஸ்ரிதஸஜாதீயனாய்க்கொண்டு நிலைவரம்பில பலபிறப்பாய் ஸம்ஸாரமண்டலத்திலே அநேகாவதாரம் பண்ணவுமாம்; (ஷை) செல்வம், இலாபம் என்ற பொருளும் அதற்கு உண்டு. பட்டிகை :- ஏடு, தெப்பம், யோகப்பட்டம் எனப் பலபொருளுடையது விண் பட்டிகை யிடுதல் :- வல்லோர்கள் விண்புகத் தெப்பமிடுதல். விண்ணோர்க்கு ஏடு எழுதியிடுதல். 'பொற்சுரிகை மேலோர் பொற்பூவும் பட்டிகையும் புரிந்தருள வேண்டும்' (7. 46. 10) என்றருளிய நம்பியாரூரர் திருவுள்ளத்தின்படி பூங்கச்சுமாம்.

பாடும் பறண்டையு மாந்தையு மார்ப்பப் பரந்துபல்பேய்
கூடி முழவக் குவிகவிழ் கோட்டக் குறுநரிகள்
நீடுங் குழல்செய்ய வைய நெளிய நிணப்பிணக்காட்
டாடுந் திருவடி காண்கவை யாற னடித்தலமே. 891

நின்போ லமரர்க ணீண்முடி சாய்த்து நிமிர்த்துகுத்த
பைம்போ துழக்கிப் பவளந் தழைப்பன பாங்கறியா
என்போ லிகள்பறித் திட்ட விலையு முகையுமெல்லாம்
அம்போ தெனக்கொள்ளு மையனை யாற னடித்தலமே. 892

891. பறண்டை :- பகண்டை எனப்படும் சில்லையோ? வேறோ? 'பகன்றில்' (26) எனபதுபோல விளங்காததொன்று இது. 'பாடும் பறண்டை' என்றதாற் பாடுவது என்று தெரிகின்றது. ஆந்தை முதலியவற்றோடு கூறப்பட்டதால் உயரியதன்று. பறண்டையும் ஆந்தையும் ஆர்ப்பப் பரந்து, கூடி, கோட்ட, செய்ய நெளிய, ஆடும் திருவடி. ஆர்த்தல் - ஒலி செய்தல் பல்பேய்பரந்து கூடி முழவத்தின் குவிந்து கவிழ்ந்த மண் (மார்ச்சனை) இடத்தில் கோட்ட, குறிய நரிகள் குழலொலி செய்ய, வையம் (-பூமி) நெளிய, நிணங்களை உடைய பிணங்களைக்கொண்ட காட்டில் ஆடும் திருவடிகள். அடித்தலம் திருவடி காண்க.

892. 'ஐயாறன்' என்னும் படர்க்கையும் 'நின்' என்னும் முன்னிலையும் மயங்கலாமோ என்னலாம். 124-131 பார்க்க. ஐயாறனையாகிய நின் அடித்தலம் நின்போல் பவளம் தழைப்பன. 'பவளம்போல் மேனி(யிற்பால் வெண்ணீறுடை)யன் நீ. நின் அடித்தலமும் பவளம் தழைப்பன. அமரர்கள் - தேவர்கள். 'அமரரால் அமரப்படுவான்' (சுந்தரர்) என்புழிப் படும் பொருளும் கொள்ளலாம். அன்பர் என்றதாம். திருமுடியைச் சாய்த்து நிமிர்த்தியன திருவடி (அடித்தலம்). உகுத்தனவும் அவையே. உக்கன பைம்போது. அவை உழக்கிப் பவளநிறம் தழைக்க லாயின சிவபாதமலரில். பாங்கு - சைவப்பாங்கு; ஆகமப்படி செய்யும் முறைகள். சைவத்திறமும் ஆம். அறியா - அறியாத, அறிந்து எனலுமாம். அறிந்து இட்ட என்க. அறியா என் போலிகள், இட்ட இலையும் முகையும், பறித்து இட்ட இலையும்

மலையார் மடந்தை மனத்தன வானோர் மகுடமன்னி
நிலையா யிருப்பன நின்றோர் மதிப்பன நீணிலத்துப்
புலையாடு புன்மை தவிர்ப்பன பொன்னுல கம்மளிக்கும்
அலையார் புனற்பொன்னி சூழ்ந்தவை யாற னடித்தலமே 893

பொலம்புண்டரீகப் புதுமலர் போல்வன போற்றியென்பார்
புலம்பும் பொழுதும் புணர்துணை யாவன பொன்னனையாள்
சிலம்புஞ் செறிபா டகமுஞ் செழுங்கிண் கிணித்திரளும்
அலம்புந் திருவடி காண்கவை யாற னடித்தலமே. 894

முகையும் எல்லாம் அம்போது (-அழகிய போதுகள்); மலர்கள், என - என்றுளங்கொண்டு கொள்ளும் - ஏற்று. வேண்டுவ நல்கும்

893. அடித்தலம் மனத்தன, மதிப்பன, தவிர்ப்பன. மலை - இமயமலை மலையார் - இமாசலராசனார். மடந்தை - பார்வதி மனத்தன - திருவுள்ளத்திலிருப்பன. வானோர் - தேவர். மகுடம் - முடி. மன்னி - பொருந்தி. வானோர மகுடத்தை மன்னி நிலையாயிருப்பன அடித்தலம். அடித்தலத்தை இடையறாது வணங்கும் வானோர் முடியில், அவை நிலையா யிருக்கின்றன. நின்றோர் - நிட்டையாளர். மதிப்பன - உணர்வன. நீள்நிலம் - நீண்ட மண்ணுலகினது. புலை ஆடு புன்மை - புலாலுடல் எடுக்கும் புன் பிறவியை. 'புன்மை' ஆகு பெயர். தவிர்ப்பன - ஒழிப்பன பொன்னுலகம் - துறக்கம்; விண்; வானுலகத்தின்பத்தை அளிக்கும் - இரங்கி அருள்செய்யும். அலை ஆர் புனல் பொன்னி - அலைமிக்க நீரையுடைய காவிரி. பொன்னி சூழ்ந்த ஐயாறு. ஐயாறனடித்தலம் அளிக்கும் என்றும், அளிக்கும் புனல் என்றும், அளிக்கும் ஐயாறன் என்றும் இயைக்கலாம்.

894. அடித்தலம் புதுமலர் போல்வன, துணையாவன; திருவடி, பொலம் - பொன், புண்டரீகம் - வெண்டாமரை. ஈண்டுத் தாமரை என்னும் பொருட்டாய் நின்றது. கோகநதம் - செந்தாமரை. புண்டரிகம் வெண்டாமரை என்பது வடமொழி வழக்கு. ஞானம் புகலுடையோர்தம் உள்ளப் புண்டரிகத்துள் இருக்கும் புராணர் கோயில்' (சம்பந்தர்) புதுமலர் - நாண்மலர்.

உற்று ரிலாதார்க் குறுதுணை யாவன வோதிநன்னூல்
கற்றார் பரவப் பெருமை யுடையன காதல்செய்ய
கிற்பார் தமக்குக் கிளரொளி வானகந் தான்கொடுக்கும்
அற்றார்க் கரும்பொருள் காண்கவை யாற னடித்தலமே.895

நாண்மலர் என்றது ஈண்டு அப்பொழுது அலர்ந்த மலரை, 'இராமன் திருமுகச்செவ்வி ஒப்பதே முன்பு பின்பு. அவ்வாசகம் உரைக்கக் கேட்ட அப்பொழுது, அலர்ந்த செந்தாமரையினை வென்றது.' (கம்பராமாயணம்) இங்கு முன்பும் பின்பும் தாமரையை ஒப்பது, வாசகம் கேட்ட அப்பொழுது மாத்திரம் அம்மலரை வென்றது இராமன் திருமுகம் என்ற வாய்மையை உணர்க. முன்பு பின்பு அப்பொழுது என்ற முக்காலத்தையும், 'சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை யொத்திருக்கும் முகம்' அதனை வென்றபொழுதைக் கூறும் அரிய தோரிடத்தையும் உணராத பிறர், ''கேட்ட அப்பொழுது' என்றது, அப்பொழுது அலர்ந்த செந்தாமரை என்றனர். போற்றி என்பார்-துதி செய்து கதி என்றடைந்தோர். புலம்பும்-தனித்து வருந்தும் காலத்திலும், புணர் துணை - பொருந்தும் துணை. பொன்னனையாள் - அறம் வளர்த்த அன்னை, 'சிலம்பு.' 'பாடகம்,' 'கிண்கிணி' காலணிகள். அலம்பும் - ஒலிக்கும்.

895. ஐயாறன் அடித்தலம் உறுதுணை ஆவன; பெருமை யுடையன்; கொடுக்கும்; அரும்பொருள் காண்க. உற்றார் :- உற்றார், பெற்றார் கிளைஞர் கேளிர், சுற்றத்தார் முதலிய பலருள் ஒருவகையர், கிளைத்தவர், கேட்பவர், சுற்றுபவர், உற்றவர், பெற்றவர் எல்லாரும் ஒரு திறத்தராகார். மகன் மகள் பேரன் பேர்த்தி எனக் கிளைத்தல் நலம் பொலம் கேட்டல். சுற்றி யிருத்தல். 'எண்பெருஞ் சுற்றம்' பொருளிருக்கும் அளவும் உறுதல்; கொடுத்தல் கொள்ளல் செய்துறுதல், மக்களைப் பெறுதல் முதலிய எல்லாம் பல தொழிலாலும் தன்மையாலும் வேறு படுதலறிக. 'கேளும் கிளையும் கெட்டோர்க்கில்லை' (வெற்றிவேற்கை) 'உற்றார்க்குரியர் பொற்றொடிமகளிர்' 'சுற்றமும் துணையும்' 'உற்றார் பெற்றார்' என்னும் வழக்கும் உணர்க. உற்றாரிலாதார் - அகதி. உறுதுணை - மிக்கதுணை. நன்னூல் ஓதிக் கற்றார் - சிவாகமங்களை ஓதிக் கற்றறிந்தவர்.

வானைக் கடந்தண்டத் தப்பான் மதிப்பன மந்திரிப்பார்
ஊனைக் கழித்துய்யக் கொண்டருள் செய்வன வுத்தமர்க்கு
ஞானச் சுடராய் நடுவே யுதிப்பன நங்கையஞ்ச
ஆனை யுரித்தன காண்கவை யாற னடித்தலமே. 896

பரவ - வழிபட, வாழ்த்த பெருமை - வியாபகம். காதல் செய்ய கிற்பார் - கருதுதலைச் செய்ய வல்லவர் கருதல் - காதல்; மரூஉ. சிறுபாணாற்றுப்படையிற் (213) காண்க செய்யகிற்பார் தமக்கு - செய்ய வல்லார்க்கு. கிளர் ஒளி வான் அகம் - துறக்கம். சிவலோகமுமாம். அற்றார் :- 'பொருளற்றார் பூப்பர் ஒரு கால் அருளற்றார் அற்றார் மற்றாதலரிது' (திருக்குறள்).

896. ஐயாறன் அடித்தலம் மதிப்பன; செய்வன; உதிப்பன; உரித்தன காண்க. வானை - உம்பருலகை. கடந்து அப்பால் மதிப்பன - தாண்டி அப்புறத்தே உணரப்படுவன. இது திருவடியின் வியாபகம் உணர்த்துவது, ஊனைக் கிழித்தல் - பிறவி நீக்கம், உய்யக் கோள்ளல் - உயிர்கள் உய்திபெற ஆட்கோள்ளுதல் அருள் செய்தல் - பேரின்பம் நல்குதல். ஊனைக்கழித்தலைத் துன்ப நீக்கமாகவும் உய்யக்கொண்டருள் செய்தலை இன்ப ஆக்கமாகவும் உணர்க. பாசவீடு சிவப்பேறு இரண்டும் இணைந்ததே வீடுபேறு. வீடுபேறு - விடுதலும் பெறு தலும்; உம்மைத்தொகை. வீட்டைப் பெறுதல் என வேற்றுமைத் தொகையாதலும் சிலவிடத்துப் பொருந்தும். உத்தமர் - சத்திநிபாதத்துத்தமர். (ஞானச்சுடர் - உணர் வொளி; 'சிவஞான தீபம்' சிவஞானசோதி'. நடுவே உதிப்பன - உள்ளத்தே தோன்றுவன. 'கண்டோல்லை காணுநேறிகண்ணுயிர் நாப்பணிலை யுண்டில்லை யல்லதொளி' (திருவருட்பயன்) என்புழிப்படும் பொருளுமாம். 'இடர்கெடுத்து என்னை ஆண்டுகோண்டு என்னுள் இருட்பிழம்பற எறிந்தெழுந்த சுடர்மணி விளக்கின் உள்ளொளி விளங்கும் தூய நற்சோதியுட் சோதி' (திருவிசைப்பா) நங்கை - உமாதேவி. யானை உரித்தது- ஆணவம் அகற்றியது. அச்சம் :- அறியாமைப் பெருக்கை யகற்றுங்கால் அறிவில் உண்டாகும் அச்சமும் வெருவலும் குறித்தது.

மாதிர மானில மாவன வானவர் மாமுகட்டின்
மீதன மென்கழல் வெங்கச்சு வீக்கின வெந்நமனார்
தூதரை யோடத் துரப்பன துன்பறத் தொண்டுபட்டார்க்
காதர மாவன காண்கவை யாற னடித்தலமே. 897

பேணித் தொழுமவர் பொன்னுல காளப் பிறங்கருளால்
ஏணிப் படிநெறி யிட்டுக் கொடுத்திமை யோர்முடிமேல்
மாணிக்க மொத்து மரகதம் போன்று வயிரமன்னி
ஆணிக் கனகமு மொக்குமை யாற னடித்தலமே. 898

897: ஐயாறன் அடித்தலம் ஆவன; மீதன; வீக்கின; துரப்பன; ஆவன காண்க. மாதிரம்: வான், திசை, மலை முதலிய பல பொருளுள் யாதும் பொருந்தும் எனினும், மால் நிலம் என்றதற்கேற்ப வானுலகம் என்பது சிறக்கும். விண்ணும் மண்ணும் ஆவன என்க. வானவர் - தேவர். மாமுகட்டின் மீதன - பெரிய உச்சி மேலன. 'வானோர் மகுடம் மன்னி நிலையாயிருப்பன' (893). மென்கழல் வெங்கச்சு வீக்கின:- 'கச்சினன் கழலினன்' (திருமுருகாற்றுப்படை) வீக்கிய கழலின் மென்மையும் கச்சின் வன்மையும் குறித்தலால், ஈண்டு வெம்மை வன்மைப் பொருட்டாம். 'வெம்மைவேண்டல்' எனலாம். வீக்குதல் - கட்டுதல். வெந் நமனார் - வெய்ய சமனார். சமன்(- நடு) ஞமன், நமன் என மருவிற்று. 'நடுவன்' என்பதும் அறிக. 'தெரிகோல் ஞமன்' (புறம்) என்றதன் உரை காண்க. நமனார் தூதர் - எமதூதர்; காலதூதர். ஓடத் துரப்பன - ஓடும்படி துரத்துவன. துரத்தல் - ஒறுவித்தல், 'ஓட்டுதல்' ஈண்டுப் பொருந்தாது. துன்பு பிறவித்துன்பம் முதலியன. அற - ஒழிய. தொண்டு பட்டார்க்கு - தொண்டு பூண்டவர்க்கு. ஆதரம் - அன்பு. 'அன்பே சிவம்' (திருமந்திரம்).

898. ஐயாறன் அடித்தலம் ஆள, இட்டுக்கொடுத்து, ஒத்து, போன்று, மன்னி ஒக்கும் என்க. பொன்னுலகாளப் பெறுமவர் அடித்தலத்தைப் பேணித்தொழுமவர். அவர்க்கு அவ்வுலகைக் கொடுப்பன அடித்தலம் ஏணிப்படியை நெறியில் இட்டுக் கொடுப்பதே முறை. அருள். பிறங்கும் அருள். பிறக்கம் - விளக்கம் ஒளிசெய்தல், உயர்ச்சி, அருளால்

ஓதிய ஞானமும் ஞானப் பொருளு மொலிசிறந்த
வேதியர் வேதமும் வேள்வியு மாவன விண்ணுமண்ணும்
சோதியுஞ் செஞ்சுடர் ஞாயிறு மொப்பன தூமதியோ
டாதியு மந்தமு மானவை யாற னடித்தலமே. 899

கொடுத்து. இமையோர் முடிமேல் இருக்கும் ஐயாறன் அடித்தலம் மாணிக்கத்தை ஒத்தன. மரகதத்தைப் போன்றன. வயிரத்தை மன்னின. ஆணிப்பொன்னை ஒத்தன. 'ஆணிப் பொன்' (கம்பர்) மாணிக்கம், மரகதம், வயிரம், ஆணிப் பொன் எல்லாம் அடித்தலத்துக்கு உவமமே அன்றி ஒப்பாவன அல்ல. உவமமும் ஒப்பும் ஒன்றுகா. 'ஒப்புடையனல்லன் ஓர் உவமன் இல்லி' என்றருளிய இந் நாயனுர் கருத்தை நோக்குக. இரண்டும் ஒன்றுமேல், கூறியது கூறலாகும். 'நெஞ்சோத்து நிற்றல்' 'எண்ணிறைந்த நெய்யோத்து நின்றுனே நீல மிடற்றுனே என் கையோத்து நேர்கூப்புக' என்னும் இடத்தில் 'ஒப்பு' ஈதென்றுணரலாம். 'குருவிபோலக் கூப்பிட்டான்' 'புலிபோலப் பாய்ந்தான்' 'மதிமுகம்' என்புழி உவமம் விளங்கும்.

899. ஐயாறன் அடித்தலம் ஞானமும் ஞானப்பொருளும் வேதமும் வேள்வியும் ஆவன; விண்ணும் மண்ணும் சோதியும் தூமதியோடு ஞாயிறும் ஒப்பன. ஆதியும் அந்தமும் ஆன ஐயாறன். ஓதிய ஞானம் - வேதாகமங்களை ஓதியதாற் பெற்ற மெய்யுணர்வு; அபரஞானம். ஞானப் பொருள் - பரஞானம். 'வேத சாத்திர மிருதி புராண கலைஞானம் விரும்பசபை வைகரியாதித்திறங்கள் மேலாம் நாதமுடிவானவெல்லாம் பாச ஞானம்' என்றது வேறு. 'ஓதிய ஞானம்' என்னும் ஈது வேறு. 'நால்வகை வாக்கின் பகுதியவாகிய வேதம் முதலிய சொற் பிரபஞ்சமும் நிலமுதல் நாதம் ஈருகிய பொருட்பிரபஞ்சமும் என்னும் இவைபற்றி நிகழும் ஏகதேச ஞானம் அனைத்தும் பாசஞானம். (சிவஞானசித்தியார். 293) 'உயர் ஞானம் இரண்டாம் மாறு மலம் அகல அகலாது மன்னு போதத் திருவருள் ஒன்று. ஒன்று அதனைத் தெளியவோதும் சிவாகமம் என்று உலகு அறியச் செப்பும் நூலே' (சிவப்பிரகாசம். 10) என்ற இரண்டும் முறையே ஞானப் பொருளும் ஞானமும் ஆக

சுணங்கு முகத்துத் துணைமுலைப் பாவை சுரும்பொடுவண்
டணங்குங் குழலி யணியார் வளைக்கரங் கூப்பிநின்று
வணங்கும் பொழுதும் வருடும் பொழுதும்வண் காந்தளொ
தணங்கு மரவிந்த மொக்குமை யாற னடித்தலமே. [ண்போ

இதிற் குறிக்கப் பெற்றன. இவை சிவஞானப் பகுதி. ஒலி சிறந்த வேதியர் :- வேதியர் வேதம் ஒலிப்பதிற் சிறத்தலைக் குறித்தது. சிறவாதார் பலர். ஒலி சிறந்த வேதம் எனலுமாம். வேதோச்சாரணகிரமம் உணர்ந்தோர் உணர்வார். விண்ணிலும் மண்ணிலும் ஞாயிறு, மதி, அக்கினி ஆகிய சோதிகளிலும் ஐயாற னடித்தலம் ஒத்து விளங்குகின்றன. 'பார்க்குமிடமெங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தம்' என்றதுணர்க. 'போற்றி நின் அருளுக ஆதியாம் பாதமலர் போற்றி அருளுக நின் அந்தமாஞ்செந்தளிர்கள்' (திருவாசகம்) 887. பார்க்க.

900. ஐயாறன் அடித்தலம் பாவை குழலி வணங்கும் பொழுதும் வருடும் பொழுதும் காந்தட்போது அணங்கும்; அரவிந்தம் ஒக்கும். சுணங்கு - தேமல். முகம் - முலைமுகம். துணைமுலை - இணைநகில். பாவை - பொய்ம்மை போல்வாள்; உவம வாகுபெயர். பாவையாகிய குழலி. சுரும்பும் வண்டும் அணங்கும் குழல். அழகு செய்யும் கூந்தல். இரண்டினமும் மொய்த்துச் சுமையாக்கிவருத்தும் எனலுமாம். அணங்குதல் - அழகு செய்தல், வருத்துதல். குழலி - குழலாள். அணி - அலங்காரம்; அழகு. ஆர் - பொருந்திய நிறைந்த. கரங் கூப்பி. கை குவிபு. குவிபு என்பதன் மரூஉவே கூப்பு என்பது. 'குவிபிட்டான்' கூப்பிட்டான் என்று மருவியதும் அறிக. கைகுவிதலும் வாய்குவிதலும் பற்றியுண்டான சொல் குவிபு - கூவ்பு - கூம்பு கூப்பு என்னும் முறையில் மருவிற்று, கூப்பு என்றதனடியாகக் கூப்பி என்னும் வினையெச்சம் தோன்றிற்று, வணங்கும்பொழுது காந்தட்போது வருந்தும். வருடும்பொழுது அரவிந்தத்தை ஒக்கும். செங்காந்தட் பூப் போல் ஒளிசெய்து அழகுறுத்தும் எனலுமாம். என்றும் அரவிந்தம் (- தாமரையை) ஒக்கும் அடித்தலம் அவ்விரு பொழுதிலும் காந்தட் போது போலணங்கு (- அழகு) செய்யும் எனலுமாம்,

சுழலார் துயர்வெயிற் சுட்டிடும் போதடித் தொண்டர்துன்னும்
நிழலா வனவென்றும் நீங்காப் பிறவி நிலைகெடுத்துக்
கழலா வினைகள் கழற்றுவ கால வனங்கடந்த
அழலா ரொளியன காண்கவை யாற னடித்தலமே.          901

901. ஐயாறன் அடித்தலம். வெயில் சுட்டிடும்போது நிழல் ஆவன ; பிறவிகெடுத்து வினைகள் கழற்றுவ ; வனங் கடந்த அழலொளியன - காண்க. சுழல் - கலக்கம் ; சுற்று ; சோர்வு. ஆர் துயர் - நிறைந்த துயரம். துயர் வெயில் - துய ராகிய வெயில் வெயில் சுடும்போது நிழலாயிருந்து தணிப்பன. அடித் தொண்டர் :- 'அடித்தொண்டர்' 'முடித்தொண்டர்' (989) திருவடித் தொண்டு பூண்ட மெய்யன்பர். துன்னும் நிழல் - பொருந்தும் நிழல்; செறிந்த நிழல். தொண்டர் துன்னும் நிழல் ; தொண்டர்க்குத் துன்னும் நிழல். என்றும் நீங்காப் பிறவி நிலை :- எக்காலத்தும் நீங்காது நிற்கும் பிறப் பினது நிலையை. நிலைகெடுத்து - நிலைகுலைத்து. 'நீணிலத்துப் புலையாடு புன்மை தவிர்ப்பன' (893) கழலாவினைகள் கழற்றுவ-கழன்றொழியாத வினைகளைக் கழன்றொழியச் செய்வன. காலவனம் கடந்த அழல் ஆர் ஒளியன :- காலம் என்னும் காட்டை எரித்து வென்ற தீயின் நிறைந்த ஒளியுடையன ; காலாதீதப் பொருள். 'என்றைக்கும் உள்ளது' (தாயுமானவர்) 'அழலாரொளியன' அரியும் அயனும் அடிமுடி தேடியதை உணர்த்திய குறிப்பு. இதனாலும் அடுத்த திருவிருத்தத்தாலும் இவ்விருபதும் இருவேறு பதிகமாகக் கொள்ளலாகாதன எனல் விளங்கும். தருமையாதீனத்தின் இசைவு பெற்று மதுரை ஞான சம்பந்தப் பிள்ளை வெளியிட்ட அடங்கன்முறைப் பதிப்பிலும் இருவேறு பதிகமாக இல்லை. சிவக்கவிமணி சி. கே. சு. முதலியார் B. A., அவர்கள் முதலியோர், நல்லூர்ப் பெருமணத் தில் ஞானசம்பந்தர் திருவீதியுலாவில் வெயில் மிக்கு வருந்திய போது, தேவார ஐயா அவர்கள் இதனை உருகிப்பாட ஐந்து கணத்துள் நிறைய மழை பெய்தது. சில ஆண்டு கழித்துத் திருப்புக் கொளியூரவி நாசியிலும் இவ்வாறு நிகழ்ந்தது. (தருமையாதீனப் பதிப்பு அப்பர் புராணம் பக்கம் 641 பார்க்க.)

வலியான் றலைபத்தும் வாய்விட் டலற வரையடர்த்து
மெலியா வலியுடைக் கூற்றை யுதைத்துவிண் ணோர்கண்
பலிசேர் படுகடைப் பார்த்துப்பன் னாளும் பலரிகழ [முன்னே
அலியா நிலைநிற்கு மையனை யாற னடித்தலமே. 902

திருச்சிற்றம்பலம்

902. வலியான் - இராவணன்; வலியுடையவன். பத்துத் தலையும் வாய்விட்டு அலற அடர்த்து நிற்கும். கைலை வரையால் அடர்த்து நிற்கும். கூற்றை உதைத்து நிற்கும். விண்ணோர்கள் முன்னே அலியா நிலை நிற்கும். பலிசேர் படுகடைப் பார்த்து நிற்கும். பன்னாளும் நிற்கும். பலர் இகழ நிற்கும். மெலியா வலிமை கூற்றுடையது. அத் தகு கூற்றும் மெலிய உதைத்தன அடித்தலம். கடைதோறும் சென்று பலியை நோக்கி நிற்றல் இகழ்ச்சியாக்கும். விண்ணோரெதிரில் பலிக்காகக் கடைதோறும் நிற்றல் ஆண்மை நிலை ஆகாது. அலியாம் நிலையே என்றார். ஒருநாள் அன்று, பலநாளும் பலர் இகழ நிற்கும்.

விற்றூணொன் றில்லாத நல்கூர்ந்தான் காண்
வியன்கச்சிக் கம்பன்காண் பிச்சை யல்லால்
மற்றூணொன் றில்லாத மாசது ரன்காண்
மயானத்து மைந்தன்காண் மாசொன் றில்லாப்
பொற்றூண்காண் மாமணிநற் குன்றொப் பான்காண்
பொய்யாது பொழிலேழுந் தாங்கி நின்ற
கற்றூண்காண் காளத்தி காணப் பட்ட
கணநாதன் காணவனென் கண்ணு ளானே.

வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே யாளென்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி உள்ளே யொளித்தாய் போற்றி
யோவாத சத்தத் தொலியே போற்றி
ஆற்றாகி யங்கே யமர்ந்தாய் போற்றி
யாறங்க நால்வேத மானாய் போற்றி
காற்றாகி யெங்குங் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.

# 93. திருக்கண்டியூர் வீரட்டம்

## திருப்பதிக வரலாறு

திருவானைக்காவின் மருங்கு சென்றணைந்து போற்றிய காலத்தில் இத் திருக்கண்டியூர் தொழுது சென்றிருக்கலாம் என்று கருதுகின்றனர் ஆராய்ச்சியாளர். (தருமையாதீன வெளியீடு. திருநாவுக்கரசு நாயனுர் புராணம். ப. 493, 508, பார்க்க.)

### திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

வானவர் தானவர் வைகன் மலர்கோணர்ந் திட்டிறைஞ்சித்
தானவர் மால்பிர மன்னறி யாத தகைமையினுன்
ஆனவ னுதிபு ராணனன் ருேடிய பன்றியெய்த
கானவ னைக்கண்டி யூரண்ட வாணர் தொழுகின்றதே. 903

903. வானவர் - தேவர். தானவர் :- கொடைஞர், மண்ணேர். 'வானவர்க்குந் தானவனே' (52) 'தந்தையும் தாயுமாகித் தானவன் ஞானமூர்த்தி' (287) 'தானவர் தனமும் ஆகித் தனஞ்சயனேடெதிர்ந்த கானவர்' (428) என்பவற்ருல் விளங்கும் பொருள் 'அசுரர்' என்பதன்று. வானவர் - தேவர். தானவர் - கொடைஞர், மண்ணேர்; அசுரர். 52, 287. 428. 6. 44. 7. வைகல் - நாள்தோறும். மலர்கோணர்ந்து - "யோசனை போய்ப் பூக்கொணர்ந்து அங்கு ஒருநாளும் ஒழியாமே பூசனை செய்து இனிதிருந்தான் புள்ளிருக்கு வேளூரே'. இட்டு - திருவடி முதலியவற்றிலே தூவியிட்டும் அணிந்திட்டும். இறைஞ்சி - வணங்கி. தானவர் - வைகுந்தமும் சத்தியலோகமும் ஆகிய தானங்களில் உறைபவராகிய. மால் பிரமன் - அரியும் அயனும். அறியாத - அடிமுடி தேடிக் காணுதபடி. தகைமையினுன் - அப்பாலைக் கப்பாலாய் நின்ற ஞானத்திரளாயும், எப்பாலும் நிறைந்த ஒளிப் பிழம்பாயும் விளங்கிய வியாபகப் பொருளானவன். இறைஞ்சி அறியாத தகைமையினுன் என்க 'வானவர் தானவர்' என்றுள்ளதை நோக்கி அசுரர் எனல் ஈண்டுப் பொருந்தும். அடுத்து, 'தானவர்

வான மதியமும் வாளர வும்புன லோடுசடைத்
தான மதுவென வைத்துழல் வான்றழல் போலுருவன்
கான மறியொன்று கையுடை யான்கண்டி யூரிருந்த
ஊனமில் வேத முடையனை நாமடி யுள்குவதே. 904

பண்டங் கறுத்ததோர் கையுடை யான்படைத் தான்றலையை
உண்டங் கறுத்தது மூரோடு நாடவை தானறியும்
கண்டங் கறுத்த மிடறுடை யான்கண்டி யூரிருந்த
தொண்டர் பிரானைக்கண் டீரண்ட வாணர் தொழுகின்றதே.

மால் பிரமன் அறியாத தகைமையினுன்' என்றுள்ளது. தான் மால் பிரமன் ஆகிய அவர் அறியாத தகைமையினுன் எனக் கொள்ளலாம். ஆதி - முதல். புராணன் - பழையோன்; தொல் லோன். அன்று - அருச்சுனனது தவத்திற்குப் பயன் அருளச் சென்ற அந்நாளில். ஆனவன் - விடையான். 'ஆனணைந் தேறுங் குறி' (867) ஆன அநாதி புராணன் எனற்குமிட முண்டு. கானவன் :- அருச்சுனனுக்குப் பாசுபதம் அருளிய வேட்டுருவினன். வாணர் - வாழ்நர். மரூஉ. வீழ்நர் - வீணர் என்றது போல்வது. வாணர்க்கு வீணர் மறுதலையாகும்.

904. வானமதியம் - 'வானூர்மதியம்'. வாள் அரவு கொடிய பாம்பு. புனல் - கங்கை நீர். சடைத்தானம் அது எனவைத்து - மதி முதலியவற்றிற்குச் சடையே இடம் என்று உலகுபோற்ற வைத்து. உழல்வான் - திரிபவன். தழல்போல் உருவன் - 'தீவண்ணன்'. கானமறி - காட்டில் திரியும் மான் கன்று. ஒன்று கை - ஒன்றியகை. மறியொன்றனைக் கையில் உடையவன் என்னற்க. ஊனம் இல் வேதம் - குறைவிலாத பொருள் நிறைவையுடைய மறை. 'பூமன் சிரம் கண்டி' என்பது பிரசித்தம். பிரமன் அறிந்த வேதம் அவனுக்குத் தலைபோகும் ஊனம் விளைத்தது. அதுவே ஊனமின்றி விளங்கும் உயர்வுற்றது முழுமுதல்வன்பால். குற்றம் இல்வேதம்' (907).

905, பண்தங்கு அறுத்தது ஓர் கை உடையான் - ஓர் கையில், இசைத்திறத்தில் இத்தனை எனவரையறுத்த பண் களுக்கெல்லாம் உறைவிடமான யாழை உடையவன். 'மிக நல்ல வீணை தடவி' யவனுமாம். பண்டு அங்கு அறுத்ததோர்

முடியின்முற் றுததோன் றில்லையெல் லாமுடன் றுனுடையான்
கோடியு முற்றவ்விடை யேறியோர் கூற்றோரு பாலுடையான்
கடியமுற் றவ்வினை நோய்களை வான்கண்டி யூரிருந்தான்
அடியுமுற் றுர்தோண்ட ரில்லைகண் டீரண்ட வானவரே 906

கை உடையான் என்று பட்டாங்குரைத்தலே தக்கதாயினும், படைத்தான் தலையை அங்கு அறுத்ததும் உண்டு என்று அடுத்துக் கூறியதால், இவ்வாறு பொருளுரைத்தாம். பண்டே பிரமகபாலக் கையன். அவன். பிரமன் சிரத்தைக் கண்டியூரில் அறுத்த வீரத்தை ஊரும் நாடும் அறியும் என்க. கறுத்த கண்டம் ஆகிய மிடறு கண்டமும் மிடறும் கழுத்தையே குறிக்கும் பெயர். மிடல் - வலி. மிடல் + து - மிடறு. நஞ்சுட் கோண்டும் நஞ்சு போகாத மிடலுடையது 'நஞ்ச நேஞ்சர்க் கருளும் நள்ளாறரே' (5 68. 7) தோண்டர் பிரான் - தோண்டர்க்குப்பிரியன் ; தோண்டரைப் பிரியான்.

906. முடியின் முற்றுதது ஒன்று இல்லை - முடித்தால் முற்றுறுதது யாதும் இல்லை. தான் எல்லாம் உடன் உடையான் - தானே எல்லாவற்றையும் தன்பால் உடையவன். அஃதாவது எல்லாப் போருளையும் எல்லாவுயிரையும் முறையே உடைமையும் அடிமையும் ஆக உடையவன் பரமசிவனே ஆதலின், அவனே சருவ சங்கார காரணன். அவன் முடித்தால் முடியாத தோன்றில்லை என்றதாம். ஆக்கலும் அளித்தலும் ஆகிய தொழிற்கேல்லாம் முதல்வன் சிவபெருமானே. சிவஞானபோதம் முதற் சூத்திரம் போருளை உணர்க. கோடியும் உற்ற விடை:- விடையெழுதிய கோடியும் உடையவன் இறைவன். அவ் விடையே ஊர்தியாகக்கோண்டு ஏறுமவன். 'கூற்று', 'பால்' என்பன ஒரு போருளன எனினும். ஈண்டுக் கூற்று என்பது இடவாகு பெயராய், அம்பிகையைக் குறிப்பதாகக் கோண்டு, அம்மையை ஒரு பக்கத்தே உடையவன் என்க. கடிய வினை நோய் முற்றக்களைவான். கடிய முற்று அவ்வினை நோய் களைவான் எனலும் ஆம். இருந்தானடி தோண்டர் உற்றுர். வானவர் இல்லை. அண்டங்களில் உள்ள வானவர்,

பற்றியோ ரானை யுரித்தபி ரான்பவ ளத்திரள்போல்
முற்று மணிந்ததோர் நீறுடை யான்முன்ன மேகொடுத்த
கற்றங் குடையவன் றானறி யான்கண்டி யூரிருந்த
குற்றமில் வேத முடையானை யாமண்டர் கூறுவதே. 907

போர்ப்பனை யானை யுரித்த பிரான்பொறி வாயரவம்
சேர்ப்பது வானத் திரைகடல் சூழுல கம்மிதனைக்
காப்பது காரண மாகக்கொண் டான்கண்டி யூரிருந்த
கூர்ப்புடை யொள்வாண் மழுவனை யாமண்டர் கூறுவதே.

907. ஓர் ஆனைபற்றி உரித்தபிரான் - ஓர் யானையைப் பிடித்து அதன் தோலை உரித்துப் போர்த்து, அழிவின்றி நின்ற கடவுள் யானைத் தோலைப் போர்த்துக் கொண்டவர் இறப்பர். அது செய்தும் சாவாதான் நம் பெருமான். அடுத்த திருவிருத்தத்திலே 'போர்ப்பனை யானை உரித்தபிரான்' என்றதும் காண்க. 'பவளம் போல் மேனியிற் பால் வெண்ணீறும்......காணப் பெற்றால் மனிதப் பிறவியும் வேண்டுவதே! (783), பவளத்திரள் போலும் திருமேனியில் முற்றும் அணிந்ததோரு நீறுடையான். பவளத்திரள் மேல்' என்று பாடம் இருந்து பிழைபட்டதுபோலும். முன்னமே கொடுத்த கல் தங்கு உடையவன் தான்அறியான் :- காவியுடை அணிந்த அக் கடவுள் தனக்கு அது வந்த காலம் அறியான் என்ற கருத்தது போலும், கல் - காவிக்கல். குற்றம் இல் வேதம் :- 'ஊனம் இல் வேதம், (904). கூறுவது உடையானை ஆம். யாமும் அண்டரும் கூறுவது உடையானை எனலுமாம். எல்லார்க்கும் அவனே உடையான் (- சுவாமி).

908. போர்யானை பனையானை. 'பனைக்கை மும்மத வேழம்'. யானை யுரித்தபிரான். பொறி - படப் புள்ளி. வாய் - வாய்ந்த அரவம் - பாம்பு. வானத் திரை - வானோக்கி எழும் அலை. அரவம் சேர்ப்பது உலகம் :- ஆதிசேடன் உலகத்தைத் தாங்குதலைக் குறித்தது. உலகம் இதனை - இவ்வுலகினை. அரவத்தைச் சேர்ப்பதன் கருத்து அவன் தலைமேல் உள்ள உலகத்தைக் காப்பதைக் காரணம் ஆக்கிக்கொண்டதாம். காப்பது காரணமாகச் சேர்ப்பது கொண்டான், உலகினைக்

அட்டது காலனை யாய்ந்தது வேதமா றங்கமன்று
சுட்டது காமனைக் கண்ணத னாலே தொடர்ந்தெரியக்
கட்டவை மூன்று மெரித்த பிரான்கண்டி யூரிருந்த
குட்டமுன் வேதப் படையனை யாமண்டர் கூறுவதே. 909

அட்டு மொலிநீ ரணிமதி யும்மல ரானவெல்லாம்
இட்டுப் பொதியுஞ் சடைமுடி யானிண்டை மாலையங்கைக்
கட்டு மரவது தானுடை யான்கண்டி யூரிருந்த
கொட்டும் பறையுடைக் கூத்தனை யாமண்டர் கூறுவதே. 910

காப்பது அரவம். அக் காப்பது காரணம் ஆக அரவம் சேர்ப்பது கொண்டான். சேர்ப்பதைக் கொண்டான். கூர்ப்பு - கூரிய தன்மை. அதனையுடைய வாள். ஒள்ளியவாள். வாளாகிய மழு, மழுவுடையவன் மழுவன்.

909. அட்டது காலனை. ஆய்ந்தது வேதங்களையும் ஆறு அங்கங்களையும். அன்று தொடர்ந்து எரியக் கண்ணதனுலே சுட்டது காமனை. கட்டவை மூன்றும் - முப்புரங்களையும். ' எரித்தபிரான் ' என்றதால் எரிய எரித்தபிரான் எனல் பொருந்தாது. எரியச்சுட்டது எனல் சிறந்தது. கட்டு - மதில். ' அவை ' முன்மொழிப் பொருளது. குட்டம் - கடல். வேதம் கடல் எனப்படும். கடல்போலும் வேதப்படையுடையவன் எனலும் பொருந்தும். கட்டு - பந்தம். ' மும்மல காரியம் ' ' முப்புரமாவது மும்மல காரியம் ' (திருமந்திரம்)

910. அட்டும் ஒலிநீர் :- கங்கையின் பேரொலி செய்து வரும் வெள்ளம். அட்டல் - அழித்தல். அணிமதி - அழகிய பிறை. அலர் ஆன எல்லாம் - பூவாகிய யாவும். நீரும் மதியும் மலரும் எல்லாம் இட்டுப்பொதியும் சடைமுடி இண்டைமாலை யுடையான். அங்கையில் கட்டும் அரவுடையான். இண்டைமாலை போலக்கட்டும் அரவுடையான் எனலுமாம். பறை - வாத்தியம். கூத்துக்குத் தக இசைக்கும் பறை. ' பறையுடைக் கூத்தன் ' உடுக்கையே பறை எனலும் ஆம்; கூத்தன் தன் கையில் உடையது அதுவே ஆதலின்.

மாய்ந்தன தீவினை மங்கின நோய்கண் மறுகிவிழத்
தேய்ந்தன பாவஞ் செறுக்ககில் லாநம்மைச் செற்றநங்கைக்
காய்ந்த பிரான்கண்டி யூரேம் பிரானங்க மாறினையும்
ஆய்ந்த பிரானல்ல னேவடி யேனையாட் கொண்டவனே. 911

மண்டி மலையை யெடுத்துமத் தாக்கியவ் வாசுகியைத்
தண்டி யமரர் கடைந்த கடல்விடங் கண்டருளி
உண்ட பிரானஞ் சொளித்த பிரானஞ்சி யோடிநண்ணக்
கண்ட பிரானல்ல னேகண்டி யூரண்ட வானவனே. 912

திருச்சிற்றம்பலம்

911. அடியேனை ஆட்கொண்டவன் பிரான் அல்லனோ? ஆம். ஆதலின், மாய்ந்தன. மங்கின. தேய்ந்தன. செறுக்ககில்லா. அநங்கைக்காய்ந்தபிரான்; செற்றுக்காய்ந்தபிரான், அநங்க: என்பது மன்மதன் பெயர். அஃது இரண்டனுருபு ஏற்று அநங்கை என்று திரிந்து நின்றது. சம்பந்தர் அருளிய திருப்பதிகம். 181 - 5 இல், 'அநங்கைக் காய்ந்த பிரான்' என்றதும், 'பெருந்திறத்து அநங்கனை அநங்கமா விழித்ததும் பெருமை போலும்' (349 - 9) என்றதும் ஈண்டு நோக்குக. அங்கன் - உருவன். அநங்கன் - உருவிலி. அங்கம் ஆறு :- 909. ஆய்ந்த - ஆராய்ந்து வகுத்தருளிய தீவினையின் மாய்வும் நோய்களின் மங்கலும், பாவத்தின் தேய்வும் ஆட்கொண்ட காரணத்தால் ஆன காரியங்கள். மறுகி - கலங்கி. விழத் தேய்ந்தன. அதனால் நம்மைச் செறுக்ககில்லா (- அழிக்க வலியில்லாதன).

912. கண்டியூர் அண்ட வானவன், உண்ட பிரானும் நஞ்சொளித்தபிரானும் கண்ட பிரானும் அல்லனோ? மண்டி - நெருங்கி, மிக்குச் சென்று எனலுமாம். மலை - மந்தரமலை, மத்து - கடைதற்குரிய கருவி. வாசுகி - பாம்பு. தண்டி - சுற்றி. (மத்தைச்சுற்றும் கடைவதற்குரிய) கயிறாக வாசுகியைத்தண்டி. அமரர் - தேவர். அசுரரும் கொள்ளப்படுவர். 'வடங்கெழுமலை மத்தாக வானவர் அசுரரோடு கடைந்திட எழுந்த நஞ்சம் கண்டு பல் தேவர் அஞ்சி அடைந்து நும் சரணம் என்ன

அருள் பெரிதுடையராகித் தடங்கடல் நஞ்சம் உண்டார் சாய்க்காடு மேவினுரே! (630) என்றதுணர்க. அமரர் கடைந்த கடல். கடல் விடம் - கடலில் எழுந்த நஞ்சு. விடம் உண்ட பிரான் என்றபின், நஞ்சு ஒளித்தபிரான் என்றது என்னே? உண்டது வயிற்றுள்ளும் போகாமல் வெளியும் கான்றுேழியாமல், கழுத்தில் ஒளியப் பண்ணிய பெருந்திறல் விளக்கற் பொருட்டு. 'பரவைக் கடல் நஞ்சம் உண்டதும் இல்லை' (798). அஞ்சு ஒளித்த பிரான் அஞ்சியோடி நண்ணக் கண்ட பிரான் எனக் கொண்டு, புலனைந்தும் அடக்கிய மார்க்கண்டேயர், கூற்றினை அஞ்சியோடி வந்தடையக்கண்டு, காலனைக் காலால் உதைத்து அவன் வலியடங்கக் கண்டபிரான் எனலுமாம். தேவர்+அசுரர் அஞ்சியோட என்றலின் இது சிறந்தது.

ஓசை யோலியெலா மானுய் நீயே யுலகுக் கொருவனுய் நின்ற நீயே
வாச மலரெலா மானுய் நீயே மலையான் மருகனுய் நின்றுய் நீயே
பேசப் பெரிது மினியாய் நீயே பிரானுயடியேன்மேல் வைத்தாய் நீயே
தேசவிளக்கெலா மானுய் நீயே திருவையாறகலாதசெம்பொற்சோதீ.

மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளோடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடு படாம லையா றடைகின்ற போது
காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.

மாயிரு ஞால மெல்லாம் மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கை யாளைப் படர்சடை வைப்பர் போலுங்
காயிரும் பொழில்கள்சூழ்ந்த கழுமலவூரர்க் கம்பொன்
ஆயிரம் கொடுப்பர் போலு மாவடு துறையனுரே.

முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி
முதிருஞ் சடைமுடிமேல் முகிழ்வெண் டிங்கள்
வளைத்தானை வல்லசுரர் புரங்கண் மூன்றும்
வரைசிலையா வாசுகிமா நாணுக் கோத்துத்
துளைத்தானைச் சுடுசரத்தாற் றுவள நீறுத்
தூமுத்த வெண்முறுவ லுமையோ டாடித்
திளைத்தானைத் தென்கூடற் றிருவால வாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னுனே.

# 94. திருப்பாதிரிப்புலியூர்

## திருப்பதிக வரலாறு

'அல்லிருள்' அன்ன அமணர் அறைந்தவாறே 'அரும்பெரும் பாவத்தவன்' ஆகிய அரசன், சொல்வேந்தரை இனிச் செய்வது என்ன என்றான். அவர் நாவரசரைக் 'கல்லுடன் பாசம் பிணித்துக் கடலிடைப் பாய்ச்சுவது என்றார்'. அவ்வாறே 'வீழ்த்துமின்' என்றான் வேந்தன். அவ் 'வெவ்வினையாளர்' அது செய்யச் சென்றனர். 'அவருடன் நாவுக்கரசர் செவ்விய தம் திருவுள்ளம் சிறப்பச் சென்றார், அப்பதகர் மன்னவன் சொன்னபடி பௌவத்தில் முடித்தார்'. அவர் அகன்றேகினர். 'உறைப்புடை மெய்த் தொண்டர் வண்டமிழால் அஞ்செழுத்தும் ஏத்தினார்' அதுதான் 'சொற்றுணை வேதியன்' என்னும் தொடக்கத்துத் திருப்பதிகம் 'அஞ்செழுத்தையும் அரசு போற்றிடக் கடலுள் கல்மிதந்தது', மிதந்த அப்பெருங்கல்லும் அரசு ஏறத்தெப்பம் ஆயிற்று. கயிறும் கழன்றது. அதன்மேல் 'விளங்கித் தோன்றினார் மெய்ப்பெருந் தொண்டர்', இருவினையாகிய கயிற்றால் மூன்றுமலமாகிய கல்லிற் கட்டுண்டு பிறவியாகிய கடலில் வீழும் மாக்களேல்லாம் பேரின்ப வீடாகிய கரையில் ஏறச் செய்தருளும் மெய்ம்மையையுடைய அத்திருவஞ்செழுத்து, நாவரசை ஒரு கல்லின்மேல் ஏற்றுவது வியப்போ? வருணனும் பண்டைய மாதவத்தால், நாவரசை அலைக்கைகளால் தெளிந்த வழியில் தலைமிசையேற்றுய்ந்தான், அக் கல்லே பல்லக்காகத் தாங்கிக் கொண்டுவந்து கரையேறவிட்ட குப்பத்தில், திருப்பாதிரிப்புலியூர்ப் பக்கத்தில் எழுந்தருள்வித்தான். மெய்த்தவத்தோர் குழாம் எல்லாம் அரகர என ஆர்த்தெழுந்தனர். அப்பெருங்கடலும் அம்முழக்கத்தோடு போட்டியிட்டொலித்தது. தொழுந்தகை நாவினுக்கு அரசும் திங்கட் கொழுந்தணி சடையனைக் கும்பிட்டு அன்புற விழுந்து பணிந்து எழுந்து அருள் நெறி விளங்கப்பாடுவாராய் அத் திருப்பாதிரிப் புலியூர்த் தோன்றாத் துணைக்குச் சார்த்திய வண்டமிழ் மாலை இத் திருப்பதிகம். 'ஈன்றாளுமா யெனக் கெந்தையுமாகி என எடுத்துத் தோன்றாத் துணையாயிருந்தனன் தன்னடியோங்கட்கு என்று வான்தாழ் புனற் கங்கை வாழ் சடையானை மறறு எவ்வுயிர்க்கும் சான்றாம் ஒருவனைத் தான் தமிழ் மாலைகள் சாத்தினரே' எனச் சேக்கிழார் பெருமான் பாடியருளிய திருப்பாடலையும் இங்கு நோக்குதல் வேண்டும். கடலிற் கல்லோடு கட்டிப் போகவிட்டும் கரையேற்றிய திருவருளைப் போற்றிய திருப்பதிகம் இது. இதனைப் பாடி வருவோர்க்குத் துன்பம் நீங்கும், இன்பம் ஓங்கும். ('அப்பர் புராணம்'. 120 - 134).

திருவதிகை



திலகவதியார் திருமடம்

திருப்பாதிரிப்புலியூர்



பாடலிபுத்திரம்

திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாயுடன் றோன்றினராய்
மூன்றா யுலகம் படைத்துகந் தான்மனத் துள்ளிருக்க
ஏன்றா னிமையவர்க் கன்பன் றிருப்பா திரிப்புலியூர்த்
தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி யோங்களுக்கே.

913. எனக்கு ஈன்றாளுமாய் எந்தையுமாய் உடன் தோன்றினராய் மூன்றாய் உலகம் படைத்து உகந்தான் :- 287. 321. 5. 47. 5. பார்க்க. ஈன்றாள் - மாதினியார். எந்தை - புகழனார். உடன்தோன்றினர் - திலகவதியார். எனக்குப் படைத்த உலகம் மூன்று. உலகம்-உலகப்பற்று. திலகவதியாரே திருவருணெறிக்கு மீட்டவராதலின், 'உடன் தோன்றினர்' என உயர்த்துக்கூறிப் பத்தியும் நன்றியறிதலு முணர்த்தினார், தோன்றாத்துணை மனத்துள் இருக்க ஏன்றான். (915) விழித்த கண்குருடாய்த் திரிவீரர் ஆகிய இமையவர்க்கு 'அன்பே சிவம்' எனத் திகழ்பவன். இமையவட்கன்பன் என்றிருந்து பிழை பட்டதோ? அடுத்ததில் 'உமையவட்கன்பன்' எனல் அறிக. தன் அடியோங்களுக்குத் தோன்றாத் துணையாயிருந்தனன். அடியோங்களுள் எனக்கு அம் மூன்று தோன்றுந் துணையா யிருந்தனன். 'ஆய் ஆய் ஆய் ஆய்ப்படைத்து உகந்தான்' என்று இறந்த காலத்தாற் குறித்ததும் 'எனக்கு' என்றதும் 'ஏன்றான்' இருந்தனன்' என்றனவும் நோக்கின், மாதினியார் முதலிய மூவரையுமே குறித்தது எனல் உறுதிப்படும். 'அடியோங்கள்' என்றது தம்மையும் அங்கிருந்த அடியாரையும் குறித்ததாகக் கொள்ளல் சிறந்தது. எல்லார்க்கும் தோன்றாத் துணையிருந்தனன் என்று இறந்த காலத்தாற் கூறியதறிக. திருப்பாதிரிப்புலியூர்ப் பிரானுக்குத் 'தோன்றாத் துணை' என்னும் திருப்பெயருண்மையும் உணர்க. மனத்துள்ளிருக்க ஏன்றவன் தோன்றாத் துணையாயிருந்தனன். உலகம் படைத்துகந்தவன் தோன்றிய துணையாயிருந்தனன். ஈன்றாள், எந்தை, உடன் தோன்றின ராயதே தோன்றிய துணையாதல். மூன்றாய்த் தோன்றிய துணை எனக்கு. தோன்றாத் துணை அடியோங் களுக்கு என்ற துணைமையுள் முன்னது தமக்கே உரித்தாதலும்,

பற்ருய் நினைந்திடப் போதுநெஞ் சேயிந்தப் பாரைமுற்றும்
சுற்ரு யலைகடன் மூடினுங் கண்டேன் புகனமக்கு
உற்ரு னுமையவட் கன்பன் றிருப்பா திரிப்புலியூர்
முற்ரு முளைமதிக் கண்ணியி ஞன்றன மொய்கழலே, 914

பின்னது தம்மோடு பலர்க்கும் உரித்தாதலும் உணர்த்தினுர். ஏன்ருன் - ஏல்+த்+ஆன்: 'இமையவர்க்கு அன்பன்' 'அடியேனுக்கு அன்பன் (6. 19. 11,) றன்னை அளவிலாப் பல்லூழி கண்டு நின்ற தீர்த்தனைத் தென்கூடல் திருவால வாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே'. தோன்ருத் துணை - எதிர்மறைப் பெயரெச்சம். தோன்ருமை - உணர்விலும் உளத்திலும் தோன்றிப் புறத்தே விழிக்குத் தோன்ருமை. தோன்றுதல் - ஆணும் பெண்ணும் ஆகி, அம்மை நீ அப்பன் நீ துணையாய் என் நெஞ்சம் துறப்பித்த திலகவதியார் நீ என மூன்ருய்த் தோன்றியமை.

914. நெஞ்சே, கழலே பற்ருய் நினைந்திடப் போது. இந்தப் பாரை முற்றும் சுற்ருய் அலை கடல் மூடினும் நமக்குப் புகல் கண்டேன். அப் புகல், உற்ருனும் அன்பனும் மதிக் கண்ணியினுனும் ஆகிய திருப்பாதிரிப்புலியூர்த் தோன்ருத் துணைவன் கழலே ஆகும். 921. பார்க்க. பற்று - திருவடிப் பற்று. 'பற்றுக பற்றற்ருன் பற்று, அப்பற்றைப் பற்றுக(இப்) பற்றுவிடற்கு.' (குறள்). 'ஒற்றையேறுடையா னடியேயலால் பற்ரேன்றில்லிகள் மேற் படை போகலே' (5. 92. 10.) நினைந்து இட என்று வெவ்வேறு வினையாகக் கொண்டு, தியானம் அருச்சனை இரண்டும் பொருளாகக் கூறலாம். நெஞ்சே நினைந்து போது இடக் கழலே புகலாகக் கண்டேன் எனலும், பாரை முற்றும் கடல் மூடினும் நமக்குப் புகல் கழலே எனக் கண்டேன் எனலும் ஆம். புகல்; அடைக்கலம்; கதி; சரணம்; போக்கு, வீடு என்பன ஒரு பொருளன. சுற்ருய் - சூழ்ந்து, சுற்று ஆகி; சூழ்வதாகி. அலைகடல் - அலைகின்ற கடல்; வினைத்தொகை. மூடுதல் பிரளயகாலக் குறிப்பு. நமக்குப் புகல்; நமக்குற்ருன் என்றிருபாலும் ஒட்டும் இடை நிலை விளக்கு எனலுமாம். உற்ருன் - உறுதுணை. உற்ருன் ஒருமை. உற்ருர் பன்மை. 'உமையவட்கன்பன்' என்றதால், மேல் (913)

விடையான் விரும்பியேன் னுள்ளத் திருந்தா னினிநமக்கிங்
கடையா வவல மருவினை சாரா நமனையஞ்சோம்
புடையார் கமலத் தயன்போல் பவர்பா திரிப்புலியூர்
உடையா னடிய ரடியடி யோங்கட் கரியதுண்டே. 915

மாயமெல் லாமுற்ற விட்டிரு ணீங்க மலைமகட்கே
நேயநிலாவ விருந்தா னவன்றன் றிருவடிக்கே
தேயமெல் லாநின் றிறைஞ்சுந் திருப்பாதிரிப்புலியூர்
மேயநல் லான்மலர்ப் பாதமென் சிந்தையு ணின்றனவே. 916

...........................................................................................................

'இமையவட்கன்பன்' என்றிருந்ததோ என்றையுறலாகின்றது. முற்றுமதி; முளைமதி; பிறை. மதிக் கண்ணி - பிறையாகிய கண்ணி. 'தாரன் மாலையன் தண்ணறுங் கண்ணியன்' 'கங்கை காணக் கோடார் முடிக் கண்ணியை' (திருக்குறுந்தொகை). 'மாதர்ப்பிறைக் கண்ணியான்' (21; 25 - 28; 31)

915. விடையான் - 'எருத்துவாகனன்' என் உள்ளத்து விரும்பி இருந்தான். நமக்கு இங்கு இனி அவலம் அடையா; அருவினை சாரா; நமனை அஞ்சோம். அடியோங்கட்கு அரியது உண்டே? இல்லை என்றவாறு. என் உள்ளத்து இருந்தான் - 'மனத்துள்ளிருக்க ஏன்றான்' (913). 'நமக்கு' (914). அவலம் - மனக்கவலை. 'நற்றறிவாரிற்கயவர் திருவுடையர் நெஞ்சத்து அவலம் இலர்' (குறள் 1072). அபலம் என்னும் வடசொல்லின் திரிபாகக் கொண்டு பலம் இன்மை எனலும் அழுகை எனலும் ஈண்டுப் பொருந்தா. அருவினை - நீங்குதற்கரிய வினை. 'இருவினை.' 'பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே'. 'அல்லல் என்செயும்? அருவினை என் செயும்?' நமனை அஞ்சோம் :- 'நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ்சோம்' (6. 98. 1). புடை ஆர் கமலம் - பக்கத்தில் நிறைந்த தாமரை. ஊர்ப் பக்கத்து நில நீர் வளம் குறித்தது. அக் கமலத்து அயன் என்றது இனம் பற்றியது. அயன் (- பிரமன்; மலரவன்) போல்பவர் மறையவர். வேதியர் வாழும் பாதிரிப்புலியூர். உடையான் - 'சுவாமி'. அடியர் அடி. அவ் வடிக்கு அடியோங்கள். அடியோங்கட்கு அரியது உண்டே? இல்லை. ஏகாரம் எதிர்மறைப் பொருட்டாய வினா.

916. மாயம் எல்லாம் முற்றவிட்டு - மாயையெல்லாம் முழுதும் அகன்று. இருள் நீங்க - ஆணவம் அகல. மாயை

வைத்த பொருணமக் காமென்று சொல்லி மனத்தடைத்துச்
சித்த மொருக்கிச் சிவாய நமவென் றிருக்கினல்லால்
மொய்த்த கதிர்மதி போல்வா ரவர்பா திரிப்புலியூர்
அத்த னருள்பெற லாமோ வறிவிலாப் பேதைநெஞ்சே. 917

நீங்கின் வினையும் நீங்கும். நீங்கவே மும்மலமும் நீங்கினவாம். அவை நீங்க மலைமகட்கே நேயம் நிலாவும். ந - மாயை (கன்மம்). ம - ஆணவம். வா - மலைமகள். சி - தோன்றாத் துணை. ய - அப்பர். மாயமெல்லாம் முற்றவிட்டது நகாரநீக்கம். இருள் நீங்கியது ஆணவ நீக்கம். மலைமகட்கே நேயம் (- அன்பு) நிலாவியது, வகாரம் பற்றாக யகாரம் உறுதல். இருந் தான் (நல்லான்) சிகாரம். நல்லான் மலர்ப் பாதம் அப்பர் சிந்தையுள் நின்றது யகாரம் ஈசனில் ஏகமானதென்க. ஆசு - ஆணவம். அகலுமா - நீங்குமாறு. அருளுமா - அருளுமாறு. 'ஆசுறு திரோதமேவா தகலுமா சிவமுன்னாக, ஓசைகோள் அதனின் நம்மேல் ஒழித்து அருள் ஓங்கும். மீள வா சியை அருளுமா ய மற்று அது பற்றா உற்று அங்கு ஈசனில் ஏகம் ஆகும் இது திருவெழுத்தின் ஈடே' (சிவப்பிரகாசம். 92) இதில் 'நம்மேல்' என்றது நகாரத்தையும் அதன் வழி நின்ற மகாரத் தையும் என்னும் பொருளதாம். ந+மேல்=நம்மேல்; உம்மைத் தொகை. இதற்குப் பிறர் உரைத்தவை பொருந்தாமை உணர்க. தேயம் - உலகம். மேய - மேவிய. நல்லான் - தோன்றாத் துணையாயிருந்து கடலினின்று கரையேறச் செய்த நலம் புரிந்தவன். சிந்தையுள் பாதம் நின்றன :- 919.

917. அறிவு இல்லாப் 'பேதை நெஞ்சே, நமக்கு வைத்த பொருள் ஆம் என்று சொல்லி, மனத்து அடைத்து, சித்தம் ஒருக்கி 'சிவாய நம' என்று சொல்லிக்கொண்டிரு. அப்படி இருக்கின் அல்லால் அத்தன் அருள் பெறலாகுமோ? ஆகாது. சிவாய நம என்று இரு. 'சிவனே என்று இரு' என்று ஏவுதல் இயற்றுதல் இரண்டும் இன்றும் உலக வழக்கில் உள. நமச் சிவாயத் திருப்பதிகம் முதலியவற்றுள்ளே தூலவைந்தெழுத்தும், ஈண்டும் 'சிவாய நம என்று நல்லம் மேவிய நாதன்' என்பது முதலிய பிற இடத்தும் சூக்கும வைந்தெழுத்தும், 'விண்ணினார் பணிந்தேத்த வியப்புறும் மண்ணினார் மறவாது சிவாய என்று



கரையேறவிட்டகுப்பம் (திருப்பாதிரிப்புலியூர்)

கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்ற னாமம் பயின்றே னுனதருளால்
திருவாய்ப் பொலியச் சிவாய நமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீபா திரிப்புலி யூரரனே. 918

எண்ணினார்க்கு இடம் எழில் வானகம் பண்ணினாரவர் பாலைத் துறையரே' என்னும் திருக்குறுந்தொகையுள், அதிசூக்கும வைந்தெழுத்தும் உபதேசித்தருளியவாறு காண்க. 'பேரெழுத் தொன்றுடையான்' என்று திருவெறும்பியூர்த் திருத்தாண்டகத் தில் உபதேசித்தருளியதும் உணர்தற்பாலது. 'மொய்த்த கதிர் மதிபோல்வார்' அந்தணர். அறிவு, கடன்மை தவறுமை, காலந் தவறுமை முதலியவற்றால் இரு சுடரையும் போல்வார் அ(க்காலத்து)ந்தணர். அவர் எனல் சுட்டன்று; போல்வார் என்னும் முன்மொழிப் பொருளதாய் நின்றதாகும். 'எழில் வானகம் பண்ணினாரவர்' என்புழியும் அதுவே ஆகும். இருக்கின் அருள் பெறலாம். அல்லால் பெறல் ஆமோ? ஆகாது. அறி வில்லாமையே பேதைமைக்கு ஏது. பேதைமை மயக்கம்; சிவாய நம என்று இருந்து அருள் பெறல் வேண்டும் எனும் அறிவு இல்லாமை.

918. கருவாய்க் கிடந்து - கருவிற் கிடந்து. கழலே நினையும் கருத்து - திருவடியையே நினைக்கின்ற காதல். 'கருதல் என்றதன் மரூஉவே காதல் என்பது. 'கருதியத முடித்தலும் காமுறப் படுதலும்' என்ற (பெரும்பாணாற்றுப்படைத்) தொட ரின்கண் உள்ள முற்பகுதிக்கு தன்னெஞ்சு கருதிய புணர்ச்சி யைக் குறைகிடவாமல் முடிக்க வல்ல தன்மையையும்' என்று உரைத்ததும் 'நுகர்தற்குரிய மகளிரை நுகர்ந்து பற்று அறக் கால் பிறப்பு அருமையின் கருதியது முடிக்கவேண்டும் என்றார்' என்று விளக்கியதும் நோக்கின் இச் சொற்பொருளும் 'காதல்' என்றதன் தோல்லுருவும் இனிது விளங்கும். 'காதல்' என்றதன் முதனிலை யாது? இறுதிநிலை யாது? காது+அல் எனல் பொருந் துமோ? இங்குத் திருவடிக் காதல் உணர்த்தப்பட்டது. 'காதல் வழிபாடு' (கழறிற்றறிவார். 14). உருவாகித் தெரிந்து - கருவின் நீங்கி வெளிப்படற்குரிய உருவாய்த் தெரிந்து தெரி தல் - ஆராய்தல்; தேர்தல். நாமம் ஆகிய திருவைந்தெழுத்தில்

ஒவ்வோன்றும் ஒவ்வோன்றனுருவேனத் தெரிந்து. 'சிவன் அருள் ஆவி திரோதம் மலம் ஐந்தும் அவனெழுத்தஞ்சின் அடைவு ஆம்'. (உண்மைவிளக்கம். 42). உருவாய்த் தெரிதல் செபித்துணர்தலுமாம். செபித்தலை உருவேற்றுதல் என்று வழங்குப. 'உருவங் காண்டலும் நாடினேன்' (110). நாமம் - திருநாமம்; திருவைந்தெழுத்து. 'நாமம் பரவி நமச்சிவாய என்னும் அஞ்செழுத்தும்; சாம் அன்று உரைக்கத் தருதிகண்டாய் எங்கள் சங்கரனே' (995) 'விக்கி அஞ்செழுத்தும் ஒத்து ஒழிந்து உம்மை மறக்கினும் என்னைக் குறிக்கோண்மினே'(926) 'துஞ்சும்போதும் நின்னுமத் திருவெழுத்தஞ்சும் தோன்ற அருளும் ஐயாறரே' (5. 27. 3). 'திருநாமம் அஞ்செழுத்தும் செப்பார் ஆகில்.........இறக்கின்றரே' (6. 95. 6). 'திருநாமம் அஞ்செழுத்தும் சோராமல் எப்போழுதும் சோல்' (கைலைபாதி, காளத்திபாதி. 100). பயின்றேன் - நாவாற் சோல்லிச் சோல்லிப் பயிலப் பெற்றேன். நாவினுக்கு அருங்கலம் ஆக்கிக்கோண்டேன். திருநீறு திருவாகிப் போலியும் வண்ணம் சிவாய நம என்று சோல்லி அதனை அழகுறப் பூசினேன். இவ்வாறு உள்ளம் கருத உரை பயில உடல் அணிய முப்போறியாலும் தப்போன்ருவாறு வழிபட்ட அடியேனுக்கு நீ சிவகதி தருவாய். என் கடன் முடித்தேன். நின் கடன் சிவகதி தருவது என்றவாறு. பாதிரிப் புலியூர் அரனே நீ சிவகதி தருவாய். 'கருவாய்' :- ஏழனுருபேற்ற பெயர். 'உருவாய்' 'திருவாய்' இரண்டனுள்ளும் 'ஆய்' என்றது இறந்தகால வினையேச்சம். திருவாய் போலிய என்னும் பாடத்திற்கு அழகிய வாய் போலியச் சிவாயநம என்று சோல்லி நீறு அணிந்தேன் எனல்வேண்டும். 'போலிய' என்பது என்று என்பதனது சோல்லேனேச்சத்தோடு முடியும். போலியச் சோல்லி. 'தருவாய்' என்றது' தருசோல் வருசோல் ஆயிருகிளவியும் தன்மை முன்னிலை ஆயிரிடத்த' என்றதற்குத் தக நின்றதாயினும், தா என் கிளவி ஒப்போன் கூற்றே' என்றதற்குத் தகுமோ எனின், அதனுலும் தகும் என்க. தக்கவாறு யாதோ எனின் கூறுதும். 'அறிவினுள்ளே என்றும் நின்றிடுதலாலே இவன் அவன் என்னலாமே! 'சிவன் சீவன் என்ற இரண்டும் சித்து ஒன்ரும்'. 'அநந்நியமாய் இருக்கும்.' அநந்நியமாகக் காண்பன்' என்னும் தமிழ்ச் சிவாகமம் ஆகிய சிவஞானசித்தி வசனத்தால் அதுவும் தக்கதாதல் அறிக. 'கருவுற்ற காலத்தே என்னை ஆண்டு கழற்போது தந்தளித்த

எண்ணு தமர ரிரக்கப் பரவையு ணஞ்சையுண்டாய்
திண்ணு ரசுரர் திரிபுரந் தீயெழச் செற்றவனே
பண்ணுர்ந் தமைந்த பொருள்கள் பயில்பா திரிப்புலியூர்க்
கண்ணுர் நுதலாய் கழனங் கருத்தி லுடையனவே.     919

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டுமிவ் வையகத்தே
தொழுவார்க் கிரங்கி யிருந்தருள் செய்பா திரிப்புலியூர்ச்
செழுநீர்ப்புனற்கங்கை செஞ்சடைமேல்வைத்த தீவண்ணனே.

.............................................................................................................

கள்வர்' (6. 89. 9). 'கருவுற்றிருந்துன் கழலே நினைந்தேன்' (937) 'கருவுற்ற நாள் முதலாக உன்பாதமே காண்பதற்கு உருகிற்று என் உள்ளமும்; நானும் கிடந்து அலந்து எய்த் தொழிந்தேன்' (961).

919. உண்டாய் செற்றவனே, நுதலாய் என அழைத்து, (நின்) கழல்(கள்) நம் கருத்தில் உடையன என்றுர். எண்ணதுண்டாய் என்றும் எண்ணுதிரக்க என்றும் இயைத்து எண்ணுமையை அமரர்க்கும் உண்டவனுக்கும் ஏற்றலாம். தாம் அமரராயிருக்க எண்ணி, நஞ்சு உண்டானும் அமரனுயிருக்க எண்ணுமையும் இரந்தால் வரும் விளைவு யாது என எண்ணு மையும் பிறவும் அமரர் கண் முடியும். திருநீலகண்டப் பெருமானுர்க்கு நஞ்சுண்ணல் அருஞ்செயலன்று எண்ணுமை யாவது மதியாமை. பரவை - பரந்தகடல்; காரணப் பெயர். திண்ணுர் - வலியர். திண்ணுராகிய அசுரர். திண் ஆர் எனப் பிரித்து வலிமை பொருந்திய என்றலுமாம். செற்றவனே - அழித்தவனே. பண் ஆர்ந்து அமைந்த பொருள்கள்:- 'வேதப் பயனும் சைவம்'. அவ்வேதம் 'பண்ணின் பயனும் நல்லிசை' நிறைந்து அமைந்த பொருள்களையுடைமையால், அவற்றைப் பயில்கின்ற சிறப்பு அப்புலியூர்க் குரித்து. சாம கானம் பயில்கின்ற புலியூரான் எனலுமாம் கண்ணுர் நுதலாய் - நுதலிற் பொருந்திய கண்ணுடையாய். கழல் - திருவடி. இடப் பொருளாகு பெயர். நம் கருத்தில் உடையனவே:- கருத்தில் இருந்து நம்மை ஆளாக உடையன. நாம் உடைமை. அவை உடையன.

920. இவ் வையகத்தே தொழுவார்க்கு இரங்கி யிருந் தருள் செய்(கின்ற) பாதிரிப்புலியூர்த் தீவண்ணனே, (அடியேன்

மறுமையில்) புழுவாய்ப் பிறக்கினும், புண்ணியா என் மனத்தே உன்னடி வழுவாதிருக்க வரம் தரவேண்டும் என்று இயைத்துணர்க. யான் புழுவாய்ப் பிறக்கினும் என் மனத்தே உன்னடி வழுவாதிருக்க வரந்தரவேண்டும் என்றதால், எப்பிறப்பிலும் ஆண்டவனை அடிமை மறத்தலாகாது. 'தனக்குன்றமா வையம் சங்கரன் றன் அருள் அன்றிப் பெற்றால் மனக்கு என்றும் நஞ்சிற் கடையா நினைவன்; மதுவிரியும் புனக்கொன்றையான் அருளால், புழுவாகிப் பிறந்திடினும், எனக்கு என்றும் வானவர் பொன்னுலகோடு ஒக்க எண்ணுவனே!' (பொன் வண்ணத் தந்தாதி. 43) 'பொய்யா நரகம் புகினும் துறக்கினும் போந்து புக்கு இங்கு உய்யா உடம்பினொடு ஊர்வ நடப்ப பறப்ப என்று நையா விளியினும் நால்நிலம் ஆளினும் நான்மறை சேர் மையார் மிடற்றான் அடி மறவா வரம் வேண்டுவனே' (ஷை 98) 'படைபடு கண்ணி தன் பங்க, தென்றில்லைப் பரம்பர, வல்விடைபடு கேதுக, விண்ணப்பம் கேள். என் விதிவசத்தால், கடைபடு சாதி பிறக்கினும் நீ வைத்தருளு கண்டாய், புடைபடு கிங்கிணித்தாட் செய்ய பாதம் என்னுள் புகவே!' (கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம். 17) 'அருள் தரு சீர்த்தில்லையம்பலத்தான்றன் அருளின் அன்றிப் பொருள் தரு வானத்தரசு ஆதலின், புழுவாதல் நன்றாம். சுருள்தரு செஞ்சடையோன் அருளேல் துறவிக்கு நன்றாம் இருள் தரு கீழ் ஏழ் நரகத்து வீழும் இருஞ் சிறையே'. (ஷை. 23) 'புழுவுக்கும் குணம் நான்கு எனக்கும் அதே புழுவுக்கு இங்கு எனக்குள்ள பொல்லாங்கு இலை. புழுவினும் கடையேன், புனிதன் தமர் குழுவுக்கு எவ்விடத்தேன் சென்று கூடவே'. (5. 91. 4). புண்ணியா என அழைத்தது; தாம் செய்த புண்ணியத்தின் பயனாக உள்ளவனும் வழுவாதிருக்கும் வரமான பயனைக் கொடுப்பவனும் சிவபிரானே என்று குறித்தற்கு. 'புண்ணியனைப்' பூசித்த புண்ணியத்தினாலே நண்ணிய ஞானத்தினால் இரண்டினையும் அறுத்து' (சித்தியார். 283). 'செய்வினையும் செய்வானும் அதன் பயனும் கொடுப்பானும்' (பெரிய. 3644) என்றதில், கொடுப்பான் சிவன் என்றது அறிக. புனற் கங்கையைச் செஞ்சடைமேல் வைத்த தீவண்ணன். 'செய்' வினை முதனிலை பாதிரிப் புலியூரன் என்னும் பெயரொடு கூடி வினைத்தொகை நிலையாயிற்று. ஏவலாகாது.

மண்பாத லம்புக்கு மால்கடன் மூடிமற் றேழுலகும்
விண்பா றிசைகெட் டிருசுடர் வீழினு மஞ்சனெஞ்சே
திண்பா னமக்கொன்று கண்டோந் திருப்பா திரிப்புலியூர்க்
கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான் கழலிணையே. 921

921. நெஞ்சே, அஞ்சல். வீழினும் அஞ்சல். நமக்குத் திண்பால் ஒன்று கண்டோம். அத் திண்பால் கழலிணையே. மண்ணுலகம் பாதலம் புக்கு அழிய நிலநடுக்கம் (பூகம்பம்) உற்றுப் பெருங்கடல் வெள்ளம் பெருக்கெடுத்து வந்து சூழ்ந்து, மற்றும் ஏழுலகும் வீழினும் விண்ணில் திசை தடுமாறி இருசுடரும் வீழினும் நமக்கு அச்சம் இல்லை. நீ அஞ்சாதே நெஞ்சே, அவ்வாறு உலகம் அழியினும் நமக்கு அழியாத இடம் உளது. திண்பால் - அழியாத இடம்; உறுதி யான இடம்; திண்ணிதாயபால். திண்பால் ஒன்று கண்டோம். அவ்வொன்று எது? கழலிணையே. திருப்பாதிரிப்புலியூரிற்றிருக் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள கடவுள். கண்பரவிய நெற்றியையுடைய கடவுள். நெற்றிக்கண்ணுடையவராகிய கடவுள். கடவுட் சுடர் - சிவப்பிரகாசம். கடவுட் சுடரான் - சிவப்பிரகாசன், சுடரானது கழலிணை. 'வானம் துளங்கில் என்? மண் கம்பம் ஆகில் என்? மால்வரையும் தானம் துளங்கித் தலைதடுமாறில் என்? தண்கடலும் மீனம்படில் என்? விரிசுடர் வீழில் என்? வேலை நஞ்சு உண்டு ஊனம் ஒன்று இல்லா ஒருவனுக்கு ஆட்பட்ட உத்தமர்க்கே! (1057) என்றதில் வான்துளக்கம் மண்கம்பம் மலைத்துளக்கம் மலை யிடத்தின் தலைதடுமாற்றம் கடல் வறட்சி, விரிசுடர் வீழ்ச்சி முதலிய உலகழி காலத்தும் அழியாத சிவனுக்கு அடிய ரானூர்க்கு அச்சம் சிறிதும் இன்றென்றவாறு அறிக. மண் பாதலம் புகுதல் - நிலம் நிலையின் இழிந்து ஆழ்தல்; நிலம் நடுங்குதல்; பிளத்தல் முதலியன. மால் கடல் மூடுதல் - 'பெருங் கடல் மூடி' 'இருங் கடல் மூடி' (1056); நீர் பெருகுதல், மண் பாதலம் புகின் நீர் மூடும். விண் பால் திசை கெடுதல் - நாள் கோள் முதலிய விண் பொருள் வீழத் திசை கெடும். எட்டுத் திசையிலும் உள்ள எல்லாம் கெடும். பா. 1056, 1057 பார்க்க.

திருந்தா வமணர் தந் தீநெறிப் பட்டுத் திகைத்துமுத்தி
தருந்தா ளிணைக்கே சரணம் புகுந்தேன் வரையெடுத்த
பொருந்தா வரக்க னுடனெரித் தாய்பா திரிப்புலியூர்
இருந்தா யடியே னினிப்பிற வாமல்வந் தேன்றுகொள்ளே.

திருச்சிற்றம்பலம்

922. வரை எடுத்த பொருந்தா அரக்கன் உடல் நெரித்தாய், பாதிரிப் புலியூர் இருந்தாய் என்று அழைத்து, 'முத்தி தரும் தாளிணைக்கே சரணம் (அடைக்கலம்) புகுந்தேன் இனிப் பிறவாமல் வந்து ஏன்று கொள் எனவேண்டுகின்றார். அமணர் திருந்தாதவர்; பகைவர். அவர் நெறி தீ நெறி. அந் நெறியிற் படுதல் தீநெறிப் படுதல். அது பட்டுத் திகைத்தேன். அத் திகைப்பு ஒழிந்து தெளிந்தேன். தெளிந்து முத்திதரும் தாளிணைக்கே சரணம் புகுந்தேன். புகுந்தமையால், யான் இனிப் பிறவாமல் நீ வந்து ஏன்று (தாங்கிக்) கொள். 'கடையவனேனை.........சடையவனே தளர்ந்தேன் எம்பிரான் என்னைத் தாங்கிக் கொள்ளே' (திருவாசகம்). வரை - கைலை மலை, எடுத்த அரக்கன்; பொருந்தா அரக்கன். பொருந்தாமை - தனது சிவ பக்திக்கும் கைலையை எடுத்த செயலுக்கும் பொருத்தமில்லாமை. இதிற் பிறவாமை வேண்டினார். மேல் (920) பிறப்புண்டாயின் மறவாமை வேண்டினார். மறவாமையும் சிவதரிசனமும் கிடைக்கப்பெற்றால், மனித்தப் பிறவியும் வேண்டுவதென்றார் (783). எனினும், 'வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை' என்றதே குறிக்கோளாகும்.

இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி யியமான னாயெறியுங் காற்று மாகி
யருநிலைய திங்களாய் ஞாயி றாகி யாகாச மாயட்ட மூர்த்தி யாகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணு மாணும் பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகி
நெருநலையா யின்றாகி நாளை யாகி நிமிர்புன் சடையடிக ணின்ற வாறே.

வென்றிலேன் புலன்க ளைந்தும் வென்றவர் வளாகந் தன்னுட்
சென்றிலே னாத லாலே செந்நெறி யதற்குஞ் சேயேன்
நின்றுளே துளும்பு கின்றே னீசனே யீச னேயோ
இன்றுளேன் நாளை யில்லே னென்செய்வான் றோன்றி னேனே.

# 95 திருவீழிமிழலை

## திருப்பதிக வரலாறு

திருவீழிமிழலையில் அப்பர்சுவாமிகள் வாசியில்லாக் காசுபடி பெற்று உதவ, நாளும் தொண்டர் மகிழ்ந்து சோறு உண்ண உண்ணத் தொலையாதே ஏறு பெருமையைப் புவி போற்ற இன் புற்றிருக்கும் நாளில், சார்த்திய பல மொழிமாலைகளுள் ஒன்று இத் திருப்பதிகம்.

திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

வான்சொட்டச் சொட்டநின் றட்டும் வளர்மதி யோடயலே
தேன்சொட்டச் சொட்டநின் றட்டுந் திருக்கொன்றை
சென்னிவைத்தீர்
மான்பேட்டை நோக்கி மணாளீர் மணிநீர் மிழலையுளீர்
நான்சட்ட வும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே.

**923.** வான்-வானில். சொட்டச் சொட்ட-நிலா ஒழுகஒழுக நின்று; அட்டும் - இடும் (மதி), வளர்மதி - பிறை தேன் சொட்டச் சொட்ட நின்று அட்டும் (-இடும்) கொன்றை. திருக் கொன்றையைச் சென்னியில் வைத்தீர் சென்னி - தலையுச்சி. சடைக்கு ஆகுபெயராக்கலும் பொருந்தும். மான்பேட்டை - பேட்டைமான்; பெண்மான்; 'பிணைமான் இனி துண்ண வேண்டிக் கலைமாத் தன் கள்ளத்தின் ஊச்சும் சுரம்' (ஐந்திணையைம்பது. 38) என்புழி ஆணைக் கலை என்றும் பெண்ணைப் பிணை என்றும் குறித்தல் அறிக. மான்நோக்கி - அணிமுலையம்மை. (சுந்தர குசாம்பிகை). நோக்கி மணாளீர் - நோக்கியின் மணவாளரே. மணி நீர் மிழலையுளீர்:- அழகிய நீர்வளமிக்க திருவீழிமிழலைவாணரே, 'நெடுங் கடலும் தன் நீர்மை குன்றும் தடிந் தெழிலி தான் நல்காதாகி விடின்' (17) என்னுங் குறளுரையில், 'தன்னியல்பு குறைதலாவது நீர்வா ழுயிர்கள் பிறவாமையும் மணி முதலாயின படாமையும் ஆம்.' என்ற பரிமேலழகர் விளக்கம் அறிக இங்கே, 'மணி நீர்'

அந்தமு மாதியு மாகிநின் றீர்அண்ட மெண்டிசையும்
பந்தமும் வீடும் பரப்புகின் றீர்பசு வேற்றுகந்தீர்
வேந்தழ லோம்பு மிழலையுள் ளீர்என்னைத் தென்றிசைக்கே
உந்திடும் போது மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே.

அலைக்கின்ற நீர்நிலங் காற்றன லம்பர மாகிநின் றீர்
கலைக்கன்று சேருங் கரத்தீர் கலைப்பொரு ளாகிநின் றீர்
விலக்கின்றி நல்கு மிழலையு ளீர்மெய்யிற் கையொடுகால்
குலைக்கின்று நும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்
மினே. 925

என்றதற்கு அப் பொருளுமாம். நான் மறக்கினும் என்னைக் குறிக்கொண்மின். ' சட்ட - செம்மையே ' ' சட்ட என்பது செப்பப் பொருட்டாயதோ ரகர வீற்றிடைச் சொல். அது சட்டம் என இழிவழக்கில் மகரவீருய் மரீஇயிற்று. ' (சிவஞானபோதமாபாடியம். சூ. 9. அதிகரணம். 2. வெண்பா. 2).

924. அந்தமும் ஆதியும் ஆகிநின்றீர் - முடிவும் முதலுமாகி நின்றவரே, ' ஈறே முதல் ' (சிவஞானபோதம். சூ. 1. அதி. 3.) அண்டம் எண் திசையும் பந்தமும் வீடும் பரப்புகின்றீர் - அண்டங்களில் எட்டுத் திசையிலும் கட்டும் வீடும் பரவச் செய்கின்றவரே. பந்தமும் வீடும் படைப்போன் காண்க. (திருவாசகம். 3:- 52) ' பந்தமும் ஆய் வீடும் ஆயினர் ' (திருவாசகம். 214). பசு ஏற்று உகந்தீர் - விடையேறுதலை விரும்பினீர். ' பசுவேறித் திரிவீர் ' ' பசுவேறும் எங்கள் பரமன். ' ஏறு - ஏற்று; கூறு-கூற்று நாறு - நாற்று. ஏற்றை (- விடையை) ஏறினீர் எனலுமாம். உகப்பு உயர்வு. வேந்தழல் ஓம்பும் மிழலை - தீவேட்கும் செந்தமிழந்தணர் வாழும் திருவீழிமிழலை. மிழலையுள்ளீர் - மிழலையுள் உள்ளவரே, தென்றிசைக்கே - எமலோகத்துக்கே, என்னை உந்திடும் (செலுத்திடும்) போது மறக்கினும் என்னைக் குறிக்கோள்மின்.

925. அலைக்கின்ற நீர் - அலைதலைச் செய்கின்ற நீரும்; நிலம் - மண்ணும்; காற்று - காற்றும்; அனல் - தீயும்; அம்பரம் ஆகிநின்றீர் - விண்ணும் ஆகி நின்றவரே ! ' இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய் எறியும் காற்றுமாகி அருநிலைய

தீத்தொழி லான்றலை தீயிலிட் டுச்செய்த வேள்விசெற்றீர்
பேய்த்தொழி லாட்டியைப் பெற்றுடை யீர்பிடித் துத்திரியும்
வேய்த்தொழி லாளர் மிழலையுள் ளீர்விக்கி யஞ்செழுத்தும்
ஓத்தொழிந் தும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே

திங்களாய் ஞாயிருகி ஆகாசமாய் அட்டமூர்த்தியாகி ' (6.94.1). எல்லாமாய் அல்லனுமாய் இருப்பவனுதலின், ' மண்ணல்லை விண்ணல்லை ........வாயுவல்லை.........எரியுமல்லை '... ...என எல்லாம் அல்லனுதல் உணர்த்தப்பட்டது. கலைக்கன்று - கலை மான் கன்று. சேரும் கரத்தீர் - பொருந்தும் கையையுடையவரே. ' கானமறியொன்று கையுடையான் ' (904). கலைப்பொருள் ஆகி நின்றீர் - கலைகளினுடைய உண்மைப் பொருள் ஆகி நின்றீர் - ' கல்வி ஞானக் கலைப் பொருளாயவன் ' (5. 76. 6.) விலக்கு இன்றி நல்கும் மிழலையுளீர் - விலக்கலின்றி, எல்லார்க்கும் எப் பொருளும் தருகின்ற திருவீழிமிழலையில் திருக்கோயில்கொண் டிருப்பவரே. மெய்யில் - உடம்பில்; கையொடுகால் - கையும் காலும்; குலைக்கும் இன்று. ' மெய்யிற் கையொடு கால் அசை யாத காலம் கூட்டி னீங்கி உயிர்போங் காலம். அக் காலம் நும்மை மறக்கலாகும். அப்பொழுதும் மறவாது நும்மை நினைக்கச் செய்யுந் திறத்தை எனக்கு அருளக் குறிக்கொள்மின்.

926. தீத் தொழில் - தீயோம்பும் வேள்வி. ' அக்கிநி காரியம். ' अग्निकार्यम् தீத் தொழிலான் :- ஈண்டு வேள்வி செய்த தக்கனைக் குறிக்கும். தலை - அவனது தலையை. தலை தீயில் இட்டுச் செய்த வேள்வி செற்றீர் - அவன் செய்த வேள்வியில் அவன் தலையை அவியுணவாக இட்டு, அதனை அழித்தவரே. தக்கன் தலையைப் போக்கி ஆட்டுத் தலை ஆக்கிய செயலைக் கந்த புராணம் தட்சகாண்டத்திற் காண்க. பேய்த்தொழிலாட்டியைப் பெற்றுடையீர் பேயின் தொழிலை ஆள்பவளைப் பெற்றுடையவரே. ' பேய் எருதும் பெருச்சாளியும் என்று ஏசத்தகும்படி ஏறுவதே இமையாத முக்கண் கூசத் தகும் தொழில் நுங்கையும் நுந்தையும் நீயும் இந்தத் தேசத்தவர் தொழும் நாரைப் பதியுட் சிவக்களிறே ' (திருநாரையூர்ப் பிள்ளையார் இரட்டைமணிமாலை. 4.) ' ஏந்திய சீர் வீர னற்குடியேந்திழைக்கும் இருந்தேன் நாறிய பூந்தார்க் குமரற்கும் முன்னினை......... நாரைப் பதியுள் விநாயகனே '

தோட்பட்ட நாகமுஞ் சூலமுஞ் சுற்றியும் பத்திமையால்
மேற்பட்ட வந்தணர் வீழியு மென்னையும் வேறுடையீர்
நாட்பட்டு வந்து பிறந்தே னிறக்க நமன்றமர்தம்
கோட்பட்டு நும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே.

(ஷை. 14.) என்பவற்றால் பேயூர்தியுடையாள் ஒரு பெண் விநாயகர்க்குத் தங்கை முறையிற் கொள்ளப்பெறும் வரலாறு உண்டு. ஈண்டும் 'பேய்த் தொழிலாட்டியைப் பெற்றுடையீர்' என்று பெற்றுடைமை குறிக்கப்பட்டது. வேய்த்தொழிலாளர் - அந்தணர். பிடித்துத்திரியும் வேய் - திரிதண்டு. அது மூங்கிற் கோம்பு. விக்கி - தொண்டை விக்கி. அஞ்செழுத்தும் ஓத்து - திருவைந்தெழுத்தோதுதல். அது சிவனை மறவாமைக்கு உபாய மாவது.

927. தோள் பட்ட நாகமும் சூலமும் சுற்றியும் - திருத் தோளிற் படுதலுற்ற பாம்பையும் சூலப் படையையும் அணிந்தும். சுற்றுதல் - அணிதல். 'உச்சிமீது சுற்றினள்' (உபதேச காண்டம். உருத்திராக்க. 13.) பத்திமை - (அன்புடைமை) தொண்டாந் தன்மை. மேல்பட்ட - மேன்மை அடைந்த. அந்தணர் - செந்தமிழந்தணர். வீழியும் - திருவீழிமிழலைப் பதியையும். என்னையும் - அடியேனையும். வேறு உடையீர் - சிறப்பாகக் கொண்டவரே. வேறுடைமை :- அம் முதல்வன் வீழியிலும் என்னுள்ளத்திலும் சிறந்து நிற்கின்றான் என்றவாறு. 'தில்லைச் சிற்றம்பலத்தும் என் சிந்தையுள்ளும் உறைவான்' (திருக்கோவையார்). 'எந்தமாதவம் செய்தனை நெஞ்சமே பந்தம் வீடவை ஆய பராபரன் அந்தம் இல்புகழ் ஆரூர் அரனெறி சிந்தை யுள்ளும் சிரத்துளும் தங்கவே' (5. 7. 2.) 'நெஞ்சே தவம் என் செய்தாய்......மாமயிலாடுதுறையன் நம் தலையின் மேலும் மனத்துளும் தங்கவே' (5. 39. 6.) 'அடியேனுடைய நெஞ்சம் ஆலயமாக் கொண்டு நின்றதே.' (5. 73. 4.) 'என்னமாதவம் செய்தனை நெஞ்சமே......செந்நெறி மன்னுசோதி நம்பால் வந்து வைகவே.' (5. 77. 2.) 'வேறுவுன்னடியேன் விளங்குங் குழைக் காதுடையாய் தேறேன் உன்னையல்லால் சிவனே என் செழுஞ்சுடரே' (7. 28. 8.) நாட்பட்டு - நெடுங்காலம் கழித்து. (1015) இறக்கப் பிறந்தேன். இறக்கக் கோட்பட்டு எனல் பொருந்துமேற்கொள்க.

கண்டியிற் பட்ட கழுத்துடை யீர்கரி காட்டிலிட்ட
பண்டியிற் பட்ட பரிகலத் தீர்பதி வீழிகொண்டீர்
உண்டியிற் பட்டினி நோயி லுறக்கத்தி லும்மையைவர்
கொண்டியிற் பட்டு மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே.

தோற்றங்கண் டான்சிர மொன்றுகொண் டீர்தூய
வெள்ளேருதொன்
றேற்றங்கொண் டீரேழில் வீழி மிழலை யிருக்கைகொண்டீர்
சீற்றங்கொண் டென்மேற் சிவந்ததோர் பாசத்தால் வீசியவெம்
கூற்றங்கண் டும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்
மினே. 929

928. கண்டி - உருத்திராக்கமாலை. கண்டிகை பூண்டு. 1047. கண்திகைக்கச் செய்வது. கரிகாடு - கரிந்த காடு, பண்டி :- தலையோட்டைக் குறித்து நின்றது. பரிகலம் - உண்கலம். உண்பொருட்கு ஆகுபெயர். 'தலையதனிற்பலி கொண்டார்' (6. 96. 1) 'நல்ல பரிகலம் திருத்தி' (திருவிளை. விருத்த. 24.) பரிகலத்தையுடையீர்; பதிவீழிகொண்டீர்-திருவீழி மிழலைப்பதியைக் கோயில் கொண்டெழுந்தருளும் இடமாகக் கொண்டீர். உண்டியில் பட்டினியில்; நோயில் உறக்கத்தில் நும்மை மறக்கினும் என்ற துணர்க. உண்டபோதும், பட்டினி யாயிருக்கும் போதும், நோயுடைய காலத்தும், உறங்கும் போதும் திருவடி நினைவு அமையாது மறத்தல் இயல்பு. வழிபடுங் காலங்களில் வழிபடுவோர் இருத்தற்குரிய முறைகளைச் சைவபத்ததிகள் விதித்தவாறு நோக்கிக்கொள்க. 'உலாவல் நிற்றல் உறக்கம் உணர்வு உண்டிபட்டினி' (சிவஞானசித்தியார். 285) என்றவற்றை நோக்கி ஒன்றற்கொன்று மறுதலையாகப் பொருத்திக்கொள்க. ஐவர் கொண்டியிற் படுதல் - ஐம்புலக் கள்வர் கொள்கையிற் சார்தல்; புலனெறியிற் போதல். 'புலனெறி நீத்து அருள்வழிபோய்ப் போதமாம் தன்வலியைப் போத்திநின்ற மலவலிவிட்டு' (திருவிளையாடற் புராணம்) கொண்டி :- கொள்+தி=கொண்டி உள்+தி=உண்டி. உள் உண் என்றுயிற்று. பேள் - பேண்; எள் - எண் என்பனபோலும்.

929. தோற்றம் கண்டான் - 'உண்டாக்கும் வண்ணம் கண்டான்' (சகல கலாவல்லி மாலை. 1) சிரம் - தலை. ஒன்று - ஐந்தலையுள் ஒன்று. 'ஆதிக்கணுன் முகத்தில் ஒன்று......,

சுழிப்பட்ட கங்கையுந் திங்களுஞ் சூடிச்சொக் கம்பயின் றீர்
பழிப்பட்ட பாம்பரைப் பற்றுடை யீர்படர் தீப்பருக
விழிப்பட்ட காமனை விட்டீர் மிழலையுள் ளீர்பிறவிச்
சுழிப்பட்டு நும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே.

தன்கை வாளால் சேதித்த திருவடியைச் செல்ல நல்ல சிவ லோக நெறி வகுத்துக் காட்டுவான்'. (6. 20. 1). 'தாமரை யோன் சிரம் அரிந்து கையிற் கொண்டார்' (6. 96 1) 807 பார்க்க. தூய வெள்ளேருது :- 'வாலுடை விடையாய் உன்றன் மலரடி மறப்பிலேனே' (618). ஏற்றம் - ஏறுந் தொழில். ஏறு, நாறு, சீறு, மாறு, கூறு முதலியவை ஏற்றம், நாற்றம், சீற்றம், மாற்றம், கூற்றம் என அம்மீறுற்று நிற்றல் அறிக. தோற்றம் (+தோன்று+அம்). எழில் - அழகு. திருவீழி மிழலையில் எழுந்தருளியிருத்தலையுடையீர். கூற்றம் சீற்றம் கொண்டு. கொண்டு வீசிய கூற்றம். சிவந்ததொருபாசம் (- கயிறு) வெங்கூற்றம் - 'கொடுங்கூற்று'. இறக்கும்பொழுது இறைவனை இறையும் எண்ணுதலியலாது. 'நின் நாமம் பரவி நமச்சிவாய என்னும் அஞ்செழுத்தும், சாம் அன்றுரைக்கத் தருதி கண்டாய் எங்கள் சங்கரனே'. (995).

930. சுழி - நீர்ச்சுழி, திங்கள் - பிறை, சொக்கம் - சுத்த நிருத்தம் (சிந்தாமணி. உரை. 672.) பொன்னனையாள் சுத்தநிருத் தம் ஆடிப் பூவணவாணரைச் சேவித்து அடியாரை அருச்சித்து அருத்தி அருந்தும் நியமம் உணர்த்திய திருவிளையாடற் பாட லினுரையில், நூற்றெட்டுக் கரணங்களை உடைத்தாய்ச் சாந்திக் கூத்து நான்கனுள் ஒன்றாயுள்ள சுத்த நிருத்தம்' என்றெழு தியதறிக. சொக்கம் பயின்ற காரணத்தாலும் சொக்கன் எனப் பெயர் பெற்றான் கால்மாறியாடிய பால் வெண்ணீற்றன். 'சடைமேல் மதியும் சூடித் திண்தோள்கள் ஆயிரமும் வீசி நின்று திசைசேர நடமாடி' (6. 45. 1) பழிப்பட்ட - பழியைப் பட்ட. அரை - திருவரையில். பற்று - பற்றுதலை ; முதனிலைத் தொழிற் பெயர். படர் தீ - படர்கின்ற தீ ; இயல்படை. விழிப் பட்ட காமனை அவ்விழித்தீப் பருகவிட்டவரே. திருவீழிமிழலை யில் உள்ளவரே. பிறவிச்சுழி - பிறவியென்னும் பெருங்கடல் நீர்ச்சுழியில், பிறவிச்சுழிப்பட்டு மறத்தலாவது :- பற்றாருது,

பிள்ளையிற் பட்ட பிறைமுடி யீர்மறை யோத வல்லீர்
வெள்ளையிற் பட்டதோர் நீற்றீர் விரிநீர் மிழலையுள்ளீர்
நள்ளையிற் பட்டைவர் நக்கரைப் பிக்க நமன்றமர்தம்
கோள்ளையிற் பட்டு மறக்கினு மென்னைக் குறிக்கோண்மினே.

மண் போன் பேண் என்னும் மூன்றன் வகையிலும் ஆசை கோண்டு பிறந்திறந்துழலுதல். அதனுல், திருவடியில் நினைவு செல்லாது.

931. பிள்ளையிற்பட்ட பிறை - பிள்ளைப்பிறை ; இளம் பிறை. ‘ பிள்ளை வெண்பிறை சூடிய சென்னியான் ’ (5. 20. 10). மறை ஓதவல்லீர் - வேதாகமங்களை தோற்றி அவற்றை ஓத வல்லரே. வெள்ளையிற்பட்டதோர் நீற்றீர் :- ‘ வெள்ளை நீறு ’ (3. 120. 2). ‘ விரி நீர் மிழலையுள்ளீர் ’ :- நீர்வள மிகுதி குறித்தது. (932) நள்ளை - நடு, ஐவர் நள்ளையிற் பட்டு - ஐம்புல வேடர் நடுவகப்பட்டு. நக்கர் - சிரித்தலையுடையவர். சிரிப்போர் அவ்வைவர். பிக்க - பிய்க்க. இறக்குங்கால் ஐவரும் பிரிதலைக் குறித்தது. பிய்த்தல் - பிரித்தல். நமன்தமர் - எம தூதர். கோள்ளை - கொள்ளல். ஐவர் நக்கு அரைப்பிக்க எனப் பிரித்து ஐம்புலவேடரும் நகைத்து, அரைத்தல் செய்ய. அரைத்தல், அரைப்பித்தல் அரைபடுவது உயிர். அரைப்பது துயரம். அரைப்பிப்பவர் ஐவர். அரைதல் - தேய்தல். உயிர் எல்லாவற்றையும் ஒவ்வோன்ருய் விட்டு நீங்கி இறக்கும் நிலையில் அதுபடும் துன்பத்தை ஐவர் அரைப்பிக்க அரைபடுவ தாகக் கூறினுர். ‘ நமன்தமர்தம் கோட்பட்டு நும்மை மறக் கினும் (927) ஐவர் கோண்டியிற்பட்டு மறக்கினும் (928) பிறவிச் சுழிப்பட்டு நும்மை மறக்கினும் (930) ’ என்று மேல் வந்தவாறே ஈண்டும் ‘ நமன்தமர்தம் கோள்ளையிற் பட்டு மறக் கினும் என்னைக் குறிக்கோண்மின் ’ என்றவாற்ருல், சிவபிரானை எளிதில் மறத்தற்குக் காரணம் கூறியவாறும், அவன் குறிக் கோண்டாலன்றி அவன் திருவடி நினைவுண்டாதல் அரிதேன்று குறித்தவாறும் உணர்க.

கறுக்கொண் டரக்கன் கயிலையைப் பற்றிய கையுமெய்யும்
நெறுக்கென் றிறச்செற்ற சேவடி யாற்கூற்றை நீறுசெய்தீர்
வெறிக்கொன்றை மாலை முடியீர் விரிநீர் மிழலையுள்ளீர்
இறக்கின்று நும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே.

திருச்சிற்றம்பலம்

932. கறு - கறுவுதல். 'கறுத்தானவர் தம் செயல்' (கந்த புராணம் தாரகன் வதை. 158); முதனிலைத் தொழிற் பெயர். கறுக்கொண்டு. கறுவுதலையுற்று. அரக்கன் - இராவணன். கயிலையைப் பற்றிய கையும் இற; மெய்யும் இற; நெருக்கென்று இற. மெய் - உடல். நெருக்கு கனல், சுருக்கெனல் முதலியன வழக்கு. இறல் - ஒடிதல்; முரிதல். சேவடியால் நீறு செய்தீர். கூற்றை நீறு செய்தீர் கன்றிய காலனைக் காலாற் கடிந்தான் அடியவற்காய்' (781). 'காலன்றன்னைக் கால்தனிற் பிதிரவைத்தார்' (312) 'காலத்தாற் காலனையுங் காய்ந்தாய் போற்றி' (6. 56. 10) வெறி - மணம். வெற்றி வேர், வெட்டிவேர் மருஉ. கொன்றைமலர் மாலையை முடியிலே அணிந்தவரே. 'விரி நீர்மிழலையுள்ளீர்'. 931. 'இறக்கின்று' இறக்கு இன்று - இறக்கும் இன்று. ஆண்டும் குலைக்கும் இன்று (925) எனல் வேண்டும் போலும்.

எட்டாந் திசைக்கு மிருதிசைக் கும்மிறை வாமுறையென்
றிட்டா ரமரர்வெம் பூச லெனக்கேட் டெரிவிழியா
ஒட்டாக் கயவர் திரிபுர மூன்றையு மோரம்பினால்
அட்டா னடிநிழற் கீழதன் றேவென்ற னுருயிரே.

பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பா நின்ற
புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை யரித்துத் தின்பீர்க்
கில்லையே கிடந்ததுதான் யானேல் வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்ணா லாரூர்த்
தடங்கடலைத் தொடர்ந்தோரை யடங்கச் செய்யும்
எம்மான்ற னடித்தொடர்வா னுழிதர் கின்றே
னிடையிலேன் கெடுவீர்கா ளிடறேன் மின்னே.

## 96 திருச்சத்திமுற்றம்

### திருப்பதிக வரலாறு

திருச்சத்தி முற்றத்து இருந்த சிவக்கொழுந்தை, என்றும் இனிய பெருமானை இறைஞ்சி முன்றில் அணைந்து திருப்பணிகள் செய்து சார்த்திய தமிழ் மாலைகளுள் ஒன்று இத் திருப்பதிகம். (பெரிய புராணம் அப்பர் :- 193 - 4).

### திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

**கோவாய் முடுகி யடுதிறற் கூற்றங் குமைப்பதன்முன்
பூவா ரடிச்சுவ டென்மேற் பொறித்துவை போகவிடில்
மூவா முழுப்பழி மூடுங்கண் டாய்முழங் குந்தழற்கைத்
தேவா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 933**

933. கூற்றம் கோவாய்க் குமைப்பதன் முன் என்மேல் பூவார் அடிச்சுவடு பொறித்துவை. முடுகி அடுதிறல். திறலை யுடைய கூற்றம். கோ - தலைமை ; தலைவன். முடுகி - விரைந்து. அடுதல் - கொல்லல். திறல் - வலிமை. குமைப்பது - அழிப்பது. பூ - தாமரை மலர். ஆர் - உவமவுருபு. சுவடு - குறி. போக விடில் - பொறிக்கப் பெறாது கழிய விட்டால். மூவா முழுப்பழி - அழியாத பழிமுழுதும். மூடும் - சூழ்ந்து கொள்ளும். முழங்கும் தழல் - ஒலி செய்யும் தீ. தழற்கை - தீயேந்தியகை. கைத்தேவா - கையையுடைய தேவனே. திருச் சத்தி முற்றம், முற்றத்து உறையும் - முற்றத்தில் எழுந்தருளி யிருக்கும். சிவக்கொழுந்தே - சிவமாகிய கொழுந்தே. சிவக் கொழுந்தே கூற்றம் (என்னைக்) குமைப்பதன் முன்(நின்) பூவடிச் சுவடு என்மேற் பொறித்துவை. விடில் மூவா முழுப்பழி (நின்னை) மூடும் என்றார். ' காவாதொழியிற் கலக்குமுன்மேற்பழி ' (1029).

காய்ந்தா யனங்க னுடலம் பொடிபடக் காலனைமுன்
பாய்ந்தா யுயிர்செகப் பாதம் பணிவார்தம் பல்பிறவி
ஆய்ந்தாய்ந் தறுப்பா யடியேற் கருளாயுன் னன்பர்சிந்தை
சேர்ந்தாய் திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே.

போத்தார் குரம்பை புகுந்தைவர் நாளும் புகலழிப்ப
மத்தார் தயிர்போன் மறுகுமென் சிந்தை மறுக்கொழிவி
அத்தா வடியே னடைக்கலங் கண்டா யமரர்கடம்
சித்தா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 935

934. அனங்கன் உடலம் பொடிபடக் காய்ந்தாய் - மன்மதனது உடலை நெற்றிக்கண் ணெருப்பால் பொடிபட்டழிய நோக்கிஞய். காலனை முன் உயிர்செகப் பாய்ந்தாய் - எமனை உயிர் உடலின் நீங்கப் பாய்ந்துதைத்தாய். பாதம் பணிவார்தம் பல் பிறவி ஆய்ந்து ஆய்ந்து அறுப்பாய் - திருவடிகளை வணங்கும் அன்பர்களுடைய பல பிறவிகளும் நுணுகி நுணுகி அறச் செய்தருள்வாய். 'ஒய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய் ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்.' (தொல்காப்பியம். 814). அடியேற்கு அருளாய் :- அம் மூன்றனுள் ஒரு திறத்திலேனும் அருள் செய்வாய். உன் அன்பர் சிந்தை சேர்ந்தாய் - உன் அன்பராகிய அடியவர் உள்ளத்தை அகலாதவனே. திருச்சத்தி முற்றத் துறையும் சிவக்கொழுந்தே, காய்ந்தாய், பாய்ந்தாய், அறுப்பாய், சேர்ந்தாய் என அழைத்து, அடியேற்கு அருளாய் என்று வேண்டினர்.

935. போத்து ஆர் குரம்பை - துளை (ஒன்பது) பொருந்திய குடில் (உடம்பு). 'போத்தை ஊன்' 'மலம் சோரும் ஒன்பது வாயிற் குடில்' (மணிவாசகம்). 'ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய் ஒக்க அடைக்கும் போது உணரமாட்டேன்' (6. 99. 1) 'ஒழுக்கரு ஒன்பதுவாய் ஒற்றுமை யொன்றுமில்லை.' (499) 'ஒன்பதுபோல் அவர் வாசல் வகுத்தன' (185). ஐவர் குரம்பை புகுந்து - ஐம்பொறி வேடர் (என்) உடலிற் புகுந்து. நாளும் - நாள்தோறும். புகல் அழிப்ப - எனக்குப் புகலிடமான நின் திருவடிப் பற்றை அழிக்க. மத்து ஆர் தயிர் போல் மறுகும் என் சிந்தை :- 'மத்துறு தயிரே போல மறுகும் என் உள்ளம்.' (506). மத்துப் பொருந்திய தயிர் போலக் கலங்கும் என் மனம்



திருச்சத்திமுற்றம்

நில்லாக் குரம்பை நிலையாக் கருதியிந் நீணிலத்தொன்
றல்லாக் குழிவீழ்ந் தயர்வுறு வேனைவந் தாண்டுகொண்டாய்
வில்லேர் புருவத் துமையாள் கணவா விடிற்கெடுவேன்
செல்வா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே.

சிந்தை மறுக்கு - மனக் கலக்கம். மறுக்கு - (மறுகலுடையது) கலக்கம். ஒழிவி - ஒழியச்செய். 'மத்துறு தண் தயிரின் புலன் தீக்கதுவ வித்துறுவேன்' (ஷை.134) 'வல்மத்து இட உடைந்து தாழியைப் பாவு தயிர் போல் தளர்ந்தேன்' (ஷை. 413) 'மத்திடு தயிராகி' (ஷை.44) அத்தா - தலைவா; ஆண்டவனே. அடியேன் நினக்கே அடைக்கலம் அமரர்கள் தம் சித்தா - தேவர்களுடைய சித்தியாக உள்ளவனே ; சித்தத்திலுள்ளவனே ; சித்தானவனே. திருச்சத்திமுற்றத்துறையும் சிவக்கொழுந்தே, என் சிந்தை மறுக்கு ஒழிவி என்க. 'இனி இடையாயினார் பேண் என்பது எற்புச் சட்டகம் ; முடைக் குரம்பை ; புழுப் பிண்டம் ; பைம் மறியா நோக்கப் பருந்து ஆர்க்கும் தகைமைத்து ; ஐயும் பித்தும் வளியும் குடரும் கொழுவும் புரளியும் நரம்பும் மூத்திர புரீடங்களும் என்றிவற்றது இயைபு. பொருளன்று. பொருளாயின். பூவே சாந்தே பாகே எண்ணேயே அணிகலனே என்றிவற்றுற் புனைய வேண்டாவன்றே தான் இயல்பாக நன்றாயின் ? என்று அதன் அசுபத்தன்மை உரைப்பக்கேட்டு நீங்குவர்.' (இறையனார் களவியல். பாயிரம் 'காமம்' பற்றிய ஆராய்ச்சி) என்றதால் உடலின் இழிவு புலப்படுத்தினார். 'மலங்கள் ஐந்தாற் சுழல்வன் தயிரிற் பொரு மத்துறவே' (திருவாசகம். 133).

936. வில் ஏர் புருவத்து உமையாள் கணவா - வில்லை ஒத்த திருப்புருவத்தையுடைய உமையம்பிகையின் கண்போன்றவனே ; செல்வா - சென்றடையாத நிலையுடைய பெருஞ் செல்வனே, திருச்சத்தி முற்றத் துறையும் சிவக் கொழுந்தே, வந்து ஆண்டு கொண்டாய். எத்தகைமையேனை ? நில்லாக் குரம்பை நிலையாக் கருதி இந் நீள் நிலத்து ஒன்று அல்லாக் குழி வீழ்ந்து அயர்வு உறுவேனை. நில்லாக் குரம்பை - நிலையில்லாத உடல் ஆகிய குடி செய் (குடிசை. மரூஉ). நில்லாத குடிசையை நிற்பது என்று எண்ணியது. ஒன்று அல்லாக்குழி 'பொய்வாய்மை பெருக்கிய புன்சமயப் பொறியில் சமண்நீசர் புறத்துறையாம் அவ்வாழ் குழியின் விழுந்

கருவுற் றிருந்துன் கழலே நினைந்தேன் கருப்புவியில்
தெருவிற் புகுந்தேன் றிகைத்தடி யேனைத் திகைப்பொழிவி
உருவிற் றிகழு முமையாள் கணவா விடிற்கெடுவேன்
திருவிற் பொலிசத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே.

தெழும் ஆறு அறியாது மயங்கி அவம்புரிவேன்' (அப்பர் புராணம். 73) 'பரசமய நெறிக்குழியில் விழுந்தறியாது மூளும் அருந்துயர் உழந்தீர்' (ஷை. 64) 'வினைப்பர சமயக்குழி நின்றும் எடுத்தாள வேண்டும்' (ஷை. 49) ஒரு பொருளாகக் கருதத் தகாத சமண் சமயக்குழி; ஒன்று அல்லாத பல குழி. உலகப்பற்றால் விளையும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு துன்பக் குழியாகும். இடறிய எல்லா இடமும் இடர்க்குழியே. பாவப் படுகுழி'. நரகக்குழி 'பிறவிக்குழி' 'சித்தாந்தத்தே சிவன்றன் திருக்கடைக்கண் சேர்த்திச் செனனமொன்றிலே சீவன் முத்தராக வைத்தாண்டு மலங்கழுவி ஞானவாரி மடுத்து ஆனந்தம் பொழிந்து வரும்பிறப்பை அறுத்து முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்பன் என்று மொழிந்திடவும் உலகரெல்லாம் மூர்க்க ராகிப் பித்தாந்தப் பெறும் பிதற்றுப் பிதற்றிப் பாவப் பெருங் குழியில் வீழ்ந்திடுவர் இது என்ன பிராந்தி?' (சித்தியார்) விடிற்கெடுவேன் (937) 'வெற்றடியேனை விடுதி கண்டாய் விடிலோ கெடுவேன்' (திருவாசகம். 127).

937. உருவின் திகழும் உமையாள் கணவா - அழகின் விளங்கும் உமையம்பிகையின் கணவனே. திருவின் பொலிகின்ற சத்தி முற்றத்து உறையும் சிவக்கொழுந்தே. சத்தி முற்றம் திருவாற் பொலிகின்ற சிறப்புணர்த்திற்று. திருச்சத்தி முற்றம் திருமகளாலும் பொலிகின்றது. கருப்புவி யில் - கர்ப்பலோகத்தில். கரு உற்று இருந்து - கருப்பையை அடைந்திருந்து. உன் கழலே நினைந்தேன்;- பா. 918. குறிப்பைப் பார்க்க. தெருவில் புகுந்தேன் திகைத்து:- கருவினின்றும் வெளிப்பட்டு வளர்ந்து தெருவில் முதன் முதலாக உலாவப் புகுந்தபோது திகைத்தல் குழவிகட்கு இயல்பு. அந்நிலைமையை முதியோர்க்கு உலக வாழ்க்கையிற் பொருத்தியுரைத்துக் கொள்க. திகைப்பு ஒழிவி - திகைத்தலை ஒழியச்செய். 'மறுக்கொழிவி' (935), விடில் கெடுவேன்:- (936) 'போகவிடில் மூவா முழுப்பழி மூடும்' (933) கருவில்

வெம்மை நமன்றமர் மிக்கு விரவி விழுப்பதன்முன்
இம்மையுன் ருளேன்றன் னெஞ்சத் தெழுதிவை யீங்கிகழில்
அம்மை யடியேற் கருளுதி யென்பதிங் காரறிவார்
செம்மை தருசத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 938

விட்டார் புரங்க ளொருநொடி வேவவோர் வெங்கணையால்
சுட்டாயென் பாசத் தொடர்பறுத் தாண்டுகொள் தும்பிபம்பும்
மட்டார் குழலி மலைமகள் பூசை மகிழ்ந்தருளும்
சிட்டா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 939

நிரம்பியதும் பழைய உணர்வு கூடப்பெற்று, கடவுளை நினைந் திருத்தல் உயிர்க்கியல்பாதலைச் சிவதருமோத்தரம், தணிகைப் புராணம் அகத்தியனுக்கு உபதேசித்த படலம் முதலிய வற்றுட் காண்க. பா. 1029 பார்க்க.

938. வெம்மை நமன்தமர் மிக்கு விரவி விழுப்பதன் முன் - கொடுங்கூற்று வன்படைஞர் மிகுந்து என்னைக் கலந்து என்னுடலின் நீங்கி உடலை விழச் செய்தற்கு முன்பே, இம்மை - இப்பிறவியிலேயே, உன்தாள் என்தன் நெஞ்சத்து எழுதிவை - உன்திருவடியை என் உள்ளத்தில் எழுதிப் பதிவு செய்துவை. 'பாவியேன் நெஞ்சகத்தே பாதப் போது பொறித்தான்' என்று கீழ் வேளூரிற் கேடிலியைப் போற்றியக் கால் உணர்த்திய உண்மையை இங்கு நினைக. ஈங்கு இகழில் - இப்பொழுது அலட்சியம் பண்ணினால், அம்மை - மறுமையில், அடியேற்கு - அடியனேற்கு, அருளுதி - அருள்வாய். என்பது - என்னும் நிலையை. இங்கு - இப்பிறவியில், அறிவார் ஆர் - உணர்வார் எவர்? ஒருவரும் இலர். செம்மை - பேரின்பவீடு, சிறப்பு என்னுஞ் செம்பொருள்' (குறள். 358) 'வீட்டிற்கு நிமித்த காரணமாய செவ்விய பொருள்' (பரிமேலழகருரை). 'செம்மையுள் நிற்பராகிற் சிவகதி விளையும்' (737) என்றதன் குறிப்பை நோக்குக. 'திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக் கொழுந்தே'.

939. தும்பி - வண்டு வகையுள் ஒன்று. பம்பும் - நெருங் கும். மட்டு - தேன்; கள். ஆர் - பொருந்திய. (மலர் அணிந்த) குழலி - குழலாள் (உமையம்மையார்). மலை - இமயம். மலை மகள் - இமாசல குமாரி. திருச்சத்திமுற்றம் என்னும் பெயரின்

இகழ்ந்தவன் வேள்வி யழித்திட் டிமையோர் பொறையிரப்ப
நிகழ்ந்திட வன்றே விசயமுங் கொண்டது நீலகண்டா
புகழ்ந்த வடியேன்றன் புன்மைகள் தீரப் புரிந்துநல்காய்
திகழ்ந்த திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே.

தக்கார்வ மெய்திச் சமண்தவிர்ந் துன்றன் சரண்புகுந்தேன்
எக்காத லெப்பய னுன்றிற மல்லா லெனக்குளதே
மிக்கார் தில்லையுள் விருப்பா மிகவட மேருவென்னும்
திக்கா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 941

---

காரணம் புலப்பட மலைமகள் பூசை மகிழ்ந்தருளும் சிட்டன் என்றார். திருச்சத்திமுற்றத்துறையுஞ் சிவக்கொழுந்தே, மட்டார் குழலி மலைமகள் பூசை மகிழ்ந்தருளும் சிட்டா, பகைவர் புரங்கள் ஒரு நொடியில் வேவ ஒரு கணையால் சுட்டாய் என அழைத்து, என் பாசத் தொடர்பு அறுத்து ஆண்டுகொள் என்று வேண்டினார். விட்டார் - பகைவர். ஒரு நொடி - கைந்நொடிப் பொழுதாகிய ஒரு மாத்திரையில். வெங்கணை - சுடுகணை (- அம்பு). பாசத் தொடர்பு - பாச சம்பந்தம்; பாசப் பற்று. சிட்டா - நல்லறிவுரு வினனே. 'குன்ற மகள் தன் மனக் காதல் குலவும் பூசை கொண்டருளும் என்றும் இனிய பெருமான்' (பெரியபுராணம். திருநா. 193).

940 திருச்சத்தி முற்றத்துறையும் சிவக்கொழுந்தே, நீலகண்டா, அடியேன்றன் புன்மைகள் தீரப் புரிந்து நல்காய். திகழ்ந்த சத்திவிலாசம் மிக்க. இகழ்ந்தவன் - தக்கன். சிவ நிந்தை செய்தவன். வேள்வி - தக்கன் செய்த யாகம். அழித்து இட்டு- வேள்வியை அழித்து, தக்கனுக்கு ஆட்டுத்தலை இட்டு, ஏனையோர்க்கு வெவ்வேறு தண்டனை விதித்திட்டு. இமையோர் - தேவர். பொறை - பொறுத்தருள்க என்று இரந்து வேண்ட; பொறை - குற்றம் பொறுத்தல். நிகழ்ந்திட - பிரசித்தியாக. அன்றே - அந்நாளிலேயே. விசயமும் - பெருவெற்றியும் கொண்டது - அடைந்தது. கொண்டதைப் புகழ்ந்த அடியேன் எனலாம். புன்மைகள் - புல்லிய தன்மைகள், குற்றங்கள்; சிறுமைகள். தீரப் புரிந்தருளாய் - ஒழியச் செய்தருள்வாய். புரிதல் - விரும்புதல். (புரிந்து) விரும்பி எனலுமாம்.

941. தகு + ஆர்வம் - தக்கார்வம். தக்க ஆர்வம் என்பதன் திரிபுமாம். மீண்டும் சைவம் புகுதல் வேண்டும் என்னும் தக்க

போறித்தே ரரக்கன் போருப்பேடுப்புற்றவன்போன்முடிதோள்
இறத்தா ளோருவிர லூன்றிட் டலற விரங்கியோ ள்வாள்
குறித்தே கோடுத்தாய் கோடியேன்சேய் குற்றக்
கோடுவினைநோய்
சேறுத்தாய் திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கோழுந்தே.

திருச்சிற்றம்பலம்

ஆர்வம். திருநாவுக்கரசு நாயனார் தம் மரபுக்குத் தக்க ஆர்வம் மீண்டு சைவம் புகக் கோண்டதும் தகாத ஆர்வம் சமண் சாரக்கோண்டதும் ஆம். சமண் - சமண் சமயம்; சமணர் உறவை. தவிர்ந்து - விட்டு. உன்றன் சரண் - ‘ உன் கழலே ’ (918. 937) ‘ உன் பாதமே ’ (961). ‘ சரண் புகுந்தேன் ’ என்றதால் அடைக்கலம் புக்கேன் எனலுமாம். ‘அந்தணாளன் உன் அடைக்கலம் புகுத அவனைக் காப்பது காரணமாக, வந்த காலன்றன் ஆருயிரதனை வவ்வினாய் ’ (சுந்தரப்பெருமாள்). எக்காதல் - எப்பற்று. எப்பயன் - யாது பயன். உன் திறம் அல்லால் எக்காதலும் எப்பயனும் எனக்கு இல்லை என்றபடி. ‘ உளதே ’ என்ற ஏகாரம் எதிர்மறை. மிக்கார்தில்லை - மேலோர் வழிபடும் தில்லை. மிக்கார் - தில்லை வாழ்ந்தணர்; பதஞ்சலி வியாக்கிரபாதர் முதலோருமாம். எல்லாக் கோயிலினும் மிக்கு ஆர்தில்லையுமாம். ‘ விருப்பன் ’ என்பதன் விளி விருப்பா என்பது. மிக - மேலாக. வடமேரு என்று சிறப்பித்துச் சோல்லப்படும் திக்குடையாய், திருச்சத்தி முற்றத் துறையும் சிவக்கோழுந்தே.

942. திருச்சத்திமுற்றத் துறையும் சிவக்கோழுந்தே, கோடுத்தாய், சேறுத்தாய். போறித் தேர் - சூரனது இந்திரஞாலத் தேர் போன்றதோர் இயந்திரத் தேர். அரக்கன் - இராவணன். போருப்பு - கைலை. எடுப்பு - எடுத்தலை. உற்றவன் - அடைந்தவன். (இராவணன்). பத்துப் போன்முடியும் இருபது தோளும். இற - இற்றொழிய. தாள் ஒரு விரல் - திருத்தாளின் ஒரு விரலை. ஊன்றிட்டு - ஊன்றியிட்டதால். அலற - கதற. இரங்கி - திருவுள்ளத்தில் இரங்கி. ஒள் வாள் - ஒளியதாகிய வாள். குறித்தே - பேயர் குறித்தே; கருதி எனலும் ஆம். கோடியேன் சேய்த குற்றத்தின் பயனான நோய். குற்றமாகிய கோடிய வினையின் பயனான நோய். சேறுத்தாய் - அழித்தாய்.

# 97. திருநல்லூர்

## திருப்பதிக வரலாறு

தம் தலைமேல் தாள்வைத்த திருநீலகண்டர் திருவடியை நினைந்து மணிமாடத்திருநல்லூர் குறுகினார் குறுக்கையர் குடிக் கோற்றவனார். அங்கு அணைந்து தம் பெருமான் அடிவணங்கினார். ஆராது பொங்கிய அன்பொடு திளைத்தார். போற்று இசைத்தார். அப்போற்றுக்களுள் அடங்கியது இத் திருப்பதிகம். (பெரிய. அப்பர். 213 - 14). இத்திருப்பதிகம் 'கனவிழந்துரைத்தல்' என்னும் அகத்துறைக் குறிப்புடையது என்பர். (திருக் கோவையார். 355).

### திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

அட்டுமி னில்பலி யென்றென் றகங்கடை தோறும்வந்து
மட்டவி ழுங்குழ லார்வளை கொள்ளும் வகையென்கொலோ
கொட்டிய பாணி யெடுத்திட்ட பாதமுங் கோளரவும்
நட்டநின் றாடிய நாதர்நல் லூரிடங் கொண்டவரே. 943

943. இல் - இல்லின். பலி - பிச்சை. அட்டுமின் - இடுமின். என்று என்று :- பன்மைப் பொருள் குறித்து நின்றன. அகம் - வீட்டினது. கடைதோறும் - வாயிற் கடையெல்லாம். தெருக் கடை, வாயிற்கடை, புழைக்கடை அறங்கடை முதலியவற்றை நோக்கி. அங்கங்கு ஏற்றதன் கடையாகக் கொள்ளற்பாற்று. வந்து கொள்ளும் வகை என் கொலோ? மட்டு - கள். அவிழும் - விரியும். குழலார் - குழலினராகிய மகளிர். தாருக வனத்து முனிவர் பன்னியராகிய பெண்டிர். குழலார் வளை - குழலினருடைய கைவளையல்கள். கொட்டிய பாணி - கொட்டிய தாளம். கையுமாம். 'எடுத்திட்ட பாதம்' :- 889. கோள் அரவு - கொலைப் பாம்பு. கோள் - கொலை. நின்று நட்டம் ஆடிய நாதர். நல்லூரை இடமாகக் கொண்டவர். நல்லூரில் இடத்தைக் கொண்டவருமாம்.

பெண்ணிட்டம் பண்டைய தன்றிவை பெய்பலிக்
கென்றுழல்வார்
நண்ணிட்டு வந்து மனைபுகுந் தாருநல் லூரகத்தே
பண்ணிட்ட பாடல ராடல ராய்ப்பற்றி நோக்கிநின்று
கண்ணிட்டுப் போயிற்றுக் காரண முண்டு கறைக்கண்டரே.

படவே ரரவல்குற் பாவைநல் லீர்பக லேயொருவர்
இடுவா ரிடைப்பலி கொள்பவர் போலவந் தில்புகுந்து
நடவா ரடிக ணடம்பயின் றாடிய கூத்தர்கொலோ
வடபாற் கயிலையுந் தென்பானல் லூருந்தம் வாழ்பதியே. 945

944. பெண்ணுசை பண்டையது அன்று. இவை பெய்யும் பலிக்காக இன்று புதிதாகக் கொண்டதே ஆகும் என்று (சொல்லிக் கொண்டு) திரிவார். பலிக்குழல்வார். நல்லூரகத்தே வந்து மனையை நண்ணிட்டுப் புகுந்தாரும் கறைக் கண்டரே. கறைக் கண்டர் - திருநீலகண்டர். கறை - நஞ்சின் கறுப்பு. பண்ணிட்ட பாடலர். ஆடலர். பாடலும் அப் பாடலுக்கு ஏற்ற ஆடலும் உடையவர். பாடலருமாய்; ஆடலருமாய்ப் பற்றி நின்று; நோக்கிநின்று. கண்ணிட்டு - கண்ணடி செய்து. கண்ணுற் சாடை காட்டுதல். கண்ணடித்துப் போயிற்று அதற்குத் தக்க காரணம் உளது. 'போயிற்று' வினையாலணையும் பெயர். போயினதற்குக் காரணம் உண்டு என்று நான்கனுருபேற்றல் அறிக.

945. படஏர் அரவு அல்குல் பாவை நல்லீர் - படத்தையும் அதனோடு எழுச்சியையும் உடைய பாம்பு போலும் பின் புறத்தையுடைய பாவைபோலும் அழகினீர். பகலே - பகலில். ஏகாரம் ஏழனுருபின்பொருட்டு. ஒருவர் வந்து இல் புகுந்து நடவார். அடிகளால் நடவார். இடுவாரிடை - இடுமவரிடத்தில். பலிகொள்வார்போல் - ஐயம் ஏற்பவரைப் போல. போலவந்து புகுந்து பயின்று ஆடிய கூத்தர். நடவார் அடிகள் :- அடிகளால் நடவாதவராகி ; நடத்தல் ஆர்ந்த அடிகள். நடம் - திருக்கூத்து. பயின்று - மிகச்செய்து பழகி. கொல் ஓ இரண்டும் அசை. கூத்தர் தம் வாழ் பதி கயிலையும் நல்லூரும். வடபாற் கயிலையும் தென்பால் நல்லூரும் என்றது இரண்டும் ஒன்றும்

செஞ்சுடர்ச் சோதிப் பவளத் திரள்திகழ் முத்தனைய
நஞ்சணி கண்டனல் லூருறை நம்பனை நானொருகால்
துஞ்சிடைக் கண்டு கனவின் றலைத்தொழு தேற்கவன்றான்
நெஞ்சிடை நின்றக லான்பல காலமும் நின்றனனே 946

வெண்மதி சூடி விளங்கநின் றானைவிண் ணோர்கள்தொழ
நண்ணில யத்தொடு பாடல றாதநல் லூரகத்தே
திண்ணில யங்கொண்டு நின்றான் றிரிபுர மூன்றெரித்தான்
கண்ணுளும் நெஞ்சத் தகத்து முளகழற் சேவடியே. 947

பெருமையன. கயிலைக்காட்சி நல்லூர்க்காட்சி இரண்டும் ஒன்று மாறுபெற்ற அநுபவ வாக்கு.

946. செஞ்சுடர்ச் சோதிப்பவளத்திரள் திகழ்முத்து அனைய நஞ்சு அணிகண்டன் :- செய்ய சுடரொளியுடைய பவளத் திரட்சியிலே திகழ்கின்ற முத்துப் போன்ற நஞ்சுண்ட கண்டத்து நம்பன். நஞ்சு அணிகண்டன் (திருநீலகண்டன்). முத்து அனைய நஞ்சு என்க. 'மேலாய தவத்தோர் வேடந் தனைப் பூண்டிங்கு ஏலாதனவே இயற்றினீர் மாதவத்தீர் பாலாகித் தோன்றிப் பருகினோர் ஆவி கொள்ளும் ஆலால நீர்மைத்தே ஐயர் இயற்கையதே' (கந்தபுராணம்; வள்ளி யம்மையார் திருமணப் படலம். ) என்பதில், நஞ்சு, 'பாலாகித் தோன்றிப் பருகினோர் ஆவி கொள்ளும்' என்று துணர்க. அதனால், 'திகழ் முத்தனைய நஞ்சு' எனல் பொருத்தம். நல்லூரில் உறைகின்ற நம்பன். நம்பு நசை, நம்பன் - நசையினன். நசை அன்பும் அன்பருடையதுமாம். நான் ஒரு கால் துஞ்சிடைக்கண்டு கனவின்றலைத் தொழுதேன் - ஒரு முறை நான் தூக்கத்திலே கனவிலே கண்டு வணங்கினேன். தொழுதேற்கு - வணங்கிய எனக்கு. அவன்தான் - அந்நல்லூர்ப் பெருமான் (என்) நெஞ்சிடை நின்று அகலான் ஆகிப் பல காலமும் நின்றனன். திருக்கோவையார் 355. 'கனவிழந் துரைத்தல்' காண்க. கனவில் நெஞ்சிடை நின்ற கலான். (951) நனவில் கையகன்றான்.

947. வெண்மதி (- வெண்பிறை) சூடி விளங்கி நின்றான்; விண்ணோர்கள் தொழநின்றான்; நல்லூரகத்தே திண் நிலயம் கொண்டு நின்றான்; திரிபுரம் மூன்று எரித்தான். 801 பார்க்க.

தேற்றப்படத்திரு நல்லூ ரகத்தே சிவனிருந்தால்
தோற்றப் படச்சென்று கண்டுகொள் ளார்தொண்டர் துன்மதியால்
ஆற்றிற் கெடுத்துக் குளத்தினிற் றேடிய வாதரைப்போல்
காற்றிற் கடுத்துல கெல்லாந் திரிதர்வர் காண்பதற்கே. 948

அவன் கழற் சேவடியே (என்) கண்ணுளும் நெஞ்சத்தகத்தும் உள. நல்லூர் பாடல் அருதது. அப்பாடல் நண் இலயத்தோடு கூடியது. நண்ணிய இலயத்தோடு பாடல் அருத நல்லூர். இலயத்தோடு நண்(ணும்) பாடல் எனலுமாம் நண்+இலயம் - நண்ணிலயம். திண்+நிலயம்=திண்ணிலயம். நிலயம் - திருக் கோயில். திரிபுரம் என்றது வினைத்தொகை. திரியும்புரம் மூன்று என்க. கண்ணுளும் நெஞ்சத் தகத்துளும் என்றது பிழையுற்ற பாடம். கண்ணுளும் என்றது நோக்கி அகத்துளும் என்று எழுதியிருக்கலாம். 'அகத்தும் உளகழல்' என்று இயற்சீர் வெண்டளை அமைய நின்ற தறிவார்க்கு அது பிழை எனல் புலப்படும்.

948. திருநல்லூரகத்தே சிவன் இருந்தால் தொண்டர் சென்று கண்டுகொள்ளார் ? கொள்ளாமை தொண்டராவார்க்குத் தக்கதாமோ ? அறிவின் கேட்டால், ஆற்றிலே கெடுத்துக் குளத்திலே தேடிய அறிவிலோர் போலக், காற்றினும் கடிது விரைந்து, உலகெல்லாம் திரிதருவர், அச் சிவ பரஞ்சுடரைக் காண்பதற்கு. தேற்றம் - தெளிவு. தேற்றப்பட - தெளிவுற. சிவன் தேற்றப்பட இருந்தான், தொண்டர், தோற்றப்படச் சென்று கண்டுகொள்வர். தோற்றப்பட - சிவபிரான் தோற்ற அடியர் பட. சிவபிரான் சந்நிதியில் அடியார் தோற்றப்படச் சென்று எனலுமாம். தோற்றப்படல் - தோற்றத்தை அடைதல். துன்மதி - கெட்ட புத்தி ; புல்லறிவு . ஆற்றிற் போட்டுக் குளத்தில் எடுத்தது சுந்தரமூர்த்தி நாயனர் தொண்டின் அருட் சிறப்புக்களுள் ஒன்று. இங்கு ஆற்றில் கெடுத்ததும் குளத்தில் தேடியதும் அறியாமையின் செயல். போட்டு எடுத்ததும், கெடுத்துத் தேடியதும் வெவ்வேருகும்.

நாட்கொண்ட தாமரைப் பூத்தடஞ் சூழ்ந்தநல் லூரகத்தே
கீட்கொண்ட கோவணங் காவென்று சொல்லிக் கிறிபடத்தான்
வாட்கொண்ட நோக்கி மனைவி யொடுமங்கோர் வாணிகனை
ஆட்கொண்ட வார்த்தை யுரைக்குமன் றேயிவ் வகலிடமே

அறைமல்கு பைங்கழ லார்ப்பநின் றானணி யார்சடைமேல்
நறைமல்கு கொன்றையந் தாருடை யானுநல் லூரகத்தே
பறைமல்கு பாடல னாடல னாகிப் பரிசழித்தான்
பிறைமல்கு செஞ்சடை தாழநின் றாடிய பிஞ்ஞகனே. 950

949. நாள்கொண்ட தாமரைப் பூத்தடம் - காலை (மலர் தலைக்) கொண்ட தாமரைப் பூக்களையுடைய குளம். கீள்கொண்ட கோவணம் :- 'கீளார் கோவணம்'. கோவணம் கா - கோவணத்தைக் காத்துவை. கிறி - பொய். வாள் கொண்ட நோக்கி - வாள்போலும் கண்ணி. வாள் ஒளியுமாம். 'வாட்கண்' என்பது பயின்ற வழக்கு. 'வாட்கண் மட நல்லாய்' 'வாட்டடங்கண் மாதே'. வாணிகன் - அமர்நீதி நாயனார். 'அல்லிமென்முல்லையந்தார் அமர்நீதிக்கு அடியேன்' (திருத்தொண்டத்தொகை). 'பழையாறை அமர் நீதி நல்லூரின் முன் கோவணம் நேர் கொண்டு இங்கு அருள் என்று தன் பெருஞ் செல்வமும் தன்னையும் தன் துண்டமதி நுதலாளையும் ஈந்த தொழிலினனே' (திருத்தொண்டர் திருவந்தாதி. 7). 'வழுவில் அன்பரும் மைந்தரும் மனைவியார் தாமும் முழுதும் இன்னருள் பெற்றுத் தம் முன் தொழுதிருக்கும் அழிவில் வான் பதம் கொடுத்தெழுந்தருளினார் ஐயர்' (பெரிய புராணம். அமர்நீதியார். 47) என்பன ஆட்கொண்ட வார்த்தைகளுள் அடங்கும். அகலிடம் :- 'வியனுலகம்'.

950. அறை - ஓசை. மல்கு கழல் - மிக்க கழல். பை கழல் - பசிய கழல். ஆர்க்க - ஒலிக்க. நின்றான் - நின்று ஆடினான். அணி - அழகு. நறை - தேன், மணமுமாம். தார் - மாலை. பறை - வாத்தியம். பாடலன் - பாடலுடையவன்: ஆடலன் - ஆடலுடையவன். பரிசு - தன்மை. அழித்தான் - கெடுத்தான். காதல் விளைவித்துக் கருத்தை மயக்குதல் குறித்தது. பிறை மல்கு செஞ்சடை - பிறை நிறைந்து தோன்றும்

மன்னிய மாமறை யோர்மகிழ்ந் தேத்த மருவியெங்கும்
துன்னிய தொண்டர்க ளின்னிசை பாடித் தொழுதுநல்லூர்க்
கன்னியர் தாமுங் கனவிடை யுன்னிய காதலரை
அன்னிய ரற்றவ ரங்கண னேயரு ணல்கேன்பரே    951

திருவமர் தாமரை சீர்வளர் செங்கழு நீர்கொணெய்தல்
குருவமர் கோங்கங் குராமகிழ் சண்பகங் கொன்றைவன்னி
மருவமர் நீள்கொடி மாட மலிமறை யோர்கணல்லூர்
உருவமர் பாகத் துமையவன் பாகனை யுள்குதுமே.    952

---

சிவந்த சடை தாழ நின்று ஆடிய பிஞ்ஞகன் :- 'பின் தாழ் சடையான்' பிஞ்ஞகன் - தலைக் கோலத்தன்.

951. மன்னிய - நிலைத்த. மாமறையோர் - பெருமையுடைய மறைகளை உணர்ந்த அந்தணர். மன்னிய மறை - நித்திய வேதம். மகிழ்ந்து ஏத்த - உள்ளத்தின் மகிழ்ந்து உரையிற் புகழ்ந்து உடலால் வழிபட. எங்கும் மருவித் துன்னிய தொண்டர்கள் இன்னிசை பாடி, தொழுது, அங்கணனே அருள் நல்கு என்பர். பாடுதல், தொழுதல், நல்கல் மூன்றும் தொண்டர் வினைகள். நல்லூர்க் கன்னியர் கனவிடை உன்னிய காதலர் (946) என்றது அங்கணனை. காதலரை அங்கணனே என்பர். அருள் நல்கு என்பர். அங்கணன் - அழகிய கண்ணன். கண்ணிற் கழகு கருணை. அற்றவர்க்கு அங்கணன். அற்றவர் - பற்றற்றவர். அவர்க்கே எவரும் அந்நியராதல் இல்லை. அந்நியர் - பிறர். அஃது ஈண்டுத் தமிழின் சிறப்பெழுத்தால் அமைந்தது ; எதுகை நோக்கியதும் ஆம். அன்னியரை அற்றவர் - எவ்வுயிரையும் தம் உயிர் போல் எண்ணுபவர்.

952. திருவளர் தாமரை - 'திருவளரும் தாமரைப்பூ' 'திரு என்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்' 'திருமகள் தங்கும் தாமரை எனினும் அமையும்' சீர்வளர் செங்கழுநீர் - அழகு வளரும் சிவந்த கழுநீர்ப் பூக்கள். கழுநீர் - கல்லாரம். நெய்தல் - நெய்தற்பூ. குருவளர் - நிறம் வளரும். கோங்கம் - கோங்க மலர். சண்பகம், கொன்றை, வன்னி(யிலை.) இவற்றின் மரு அமர்ந்த நல்லூர் - நீள்கொடி மாடங்கள் மலிந்த

சேல்லேர் கோடியன் சிவன்பேருங் கோயில் சிவபுரமும்
வல்லேன் புகவு மதில்சூ ழிலங்கையர் காவலனைக்
கல்லார் முடியோடு தோளிறச் செற்ற கழலடியான்
நல்லூ ரிருந்த பிரானல்ல னோநம்மை யாள்பவனே. 953

திருச்சிற்றம்பலம்

நல்லூர் - மறையோர் (வாழும்) நல்லூர் (951) உரு அமர் பாகத்து உமையவள் பாகன் - 'உருவிற் றிகழும் உமையாள் கணவா' (937) தாமரை முதலிய மலரையும் இலையையும் கொண்டு நல்லூர்ப் பெருமானை ஊழி வழிபடுவோம் என்பது கருத்தாகலாம். முன்னீரடியும் கொண்டு முடிவது யாதென விளங்கிற்றிலது. உள்குதல் - நினைத்தல். இதன் முதற் சீர் நான்கும் திருக்கோவையார் முதற் பாட்டில் அமைந்தவாறே உள்ளன. இவ்வாறு இருவர் பாக்களையும் நோக்கின் மிக்க ஒற்றுமை காணப்படுகின்றது.

953. சேல்லோ கோடியன் என்பது சேல்லேர் கோடியன் என்று இருந்ததெனின் இடிக்கோடியனாகிய இந்திரனைக் குறிப்பதாகும். அவனை இங்குக் குறித்தல் பொருந்தாது சேல்லோ கோடியன் என்பது விளங்காததாயுளது. நடக்கையோ கோடி தாயுள்ளேன் எனத் தாமே சொல்லிக்கொண்டதாகக் கருதலாம். சிவபுரமும் புகவும் வல்லேன் - சிவன் பெருங்கோயிலாகிய சிவபுரம் மதில்சூழ்ந்திருக்கும் இலங்கை. இலங்கையர் காவலன் - இலங்கையர்க்கு மன்னன். காவல்+அன் - காத்தலையுடையவன். கா+வலன் காத்தலில் வல்லவன் (பாவலன், நாவலன், புரவலன், இரவலன்) கல்லார் முடி. கல் - நவரத்தினம். முடி - (மணி) முடி. தோள் இற. இற - இற்றொழிய. முடிகளும் தோள்களும் இற. இறச் செற்ற அடி - கழலடி. அடியனாகிய பிரான். நம்மை ஆள்பவன் கழலடியானாகிய பிரான் அல்லனோ? நல்லூர் இருந்த பிரான். கல்லார் முடி என்றதால் நவரத்தினங்களை இழைத்துப் பதித்துச் செய்யப்பட்ட மணி முடி என இனிது விளங்கும். முடி பத்தும் தோள் இருபதும் இறச் செற்ற கழலடியான் என்றதால், அத் திருவடியின் கழலும் (வெற்றிப்பாடும்) அதற்குற்ற வருத்தமும் புலப்படும்.

## 98. திருவையாறு

### திருப்பதிக வரலாறு

வேத முதல்வர் ஐயாற்றில் விரவும் சராசரம் எல்லாம் காதற்றுணையோடும் கூடக் கண்டு தொழுது வணங்கிக் கண்ணுத லாரைப் போற்றிப் பாடிய திருவிருத்தங்களுள் இத் திருப்பதி கத்தின் இரண்டும் அடங்குவன. (பெரிய. அப்பர். 384 - 5).

### திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

அந்திவட் டத்திங்கட் கண்ணிய னையா றமர்ந்துவந்தென்
புந்திவட் டத்திடைப் புக்குநின் றானையும் பொய்யென்பனோ
சிந்திவட் டச்சடைக் கற்றை யலம்பச் சிறிதலர்ந்த
நந்திவட் டத்தொடு கொன்றை வளாவிய நம்பனையே. 954

954. அந்திவட்டம் திங்கள் கண்ணியன் - மாலையந்தியில் வட்டமாகத் திகழும் மாதர்ப் பிறையைக் கண்ணியாக அணிந்த கருணையன். ஐயாறு அமர்ந்து வந்து - திருவையாறு திருக்கோயிலில் விரும்பி யெழுந்தருளிவந்து, என் புந்தி வட்டத்து இடை புக்கு நின்றான்-அடியேனது அகச்சூழலிடையிற் புகுந்து நிலைத்தவன். நின்றானையும் பொய் என்பனோ? என்னேன், பொய் எனல் - அவன் புக்கிலன் வந்திலன் நின்றிலன், அப்படி ஒருவன் யாண்டும் இலன் என்பன முதலிய இன்மை (நாத்திகம்) பேசுதல். வட்டச் சடைக்கற்றை சிந்தி அலம்பச் சிறிது அலர்ந்த நந்திவட்டத்தொடு கொன்றையும் வளாவிய நம்பன். வட்டமாகச் சிந்தி எனலுமாம். நந்திவட்டம் - நந்தியாவர்த்தம் பூ ; 'அந்தி வட்டத் திளங் கண்ணியன் ஆறமர் செஞ்சடையான்' என முதலடியிற் சிறிது வேறுபடுத லன்றிப் பிறிது யாதும் வேறு படாமை (1078 இற்) காண்க. 650, 751 இரண்டும்போல் இவையும் அமைந்துள. 808, 1064 ; 5. 1. 9 ; 5. 93. 2 ; 6. 5. 9. பார்க்க 'கொன்றை வளாவிய நம்பனையே' :- வேரிவளாய விரைமலர்க் கொன்றை' 'சேரிவளாய என் சிந்தை' 'வாரிவளாயவருபுனல்[2] 'ஏரி வளாவிக்கிடந்தது'. (1068).

பாடகக் கால்கழற் கால்பரி திக்கதி ருக்கவந்தி
நாடகக் கானங்கை முன்சேங்க ணேனத்தின் பின்னடந்த
காடகக் கால்கணங் கைதொழுங் காலேங் கணுய்நின்றகால்
ஆடகக் காலரி மாறேர வல்லனே யாற்றனவே. 955

திருச்சிற்றம்பலம்

955. ஐயாற்றன - ஐயாற்றனுடையன; வினைக்குறிப்பு முற்று. ஐயாற்றனகால் எனல் பன்மையுருபேற்ற ஆறன் வேற்றுமைத் தொகாநிலைத் தொடராதலும் கால் ஐயாற்றன எனல் வினைக் குறிப்பு முற்றுப் பயனிலை கொண்ட எழுவாய்த் தொடராதலும் அறிக. அரி மால் தேர வல்லன் என்னும் (மதுரை ஞானசம்பந்தப் பிள்ளையின் பதிப்பிலுள்ள) பாடம் பொருந்தும். அரி மான் தேர் வலவன் என்பது பற்பல பழைய பதிப்பிலே உள்ள பாடம். அரிமால் - அரியாகிய திருமால். தேர - அடி தேடித் தெரிந்துகொள்ள. அல்லன் - காண்டற்கு எளியன் அல்லன் ஆன சிவபிரான். வல்லன் எனில் அவன் காட்சிக்கு எட்டா திருக்கவல்லவனான சிவபிரான் என்றுரைக்க. அரி - பிரமன் எனக் கொண்டு அயனும் மாலும் எனலுமாம். 'பரிமான் தேர்' 'வல்வினை' என்றும் பாடபேதம் உண்டு. பாடகம் - காலணியினொன்று. 'பாடகச் சேம்பதும மலர்ப்பாவையர் பல்லாண்டிசைப்ப' (கம்பர். பால. திருவவதார. 62) கழல் :- வீரர் வெற்றிக் குறியாக வலக் காலில் அணியும் மணிச் சிறப்பு. பரிதிக் கதிர் – கதிரோனொளி. உக்க - சிந்திய. அந்தி - மாலையந்தி. பரிதிக் கதிர் உக்க அந்தி :- மாலைப் பொழுது; இரவு. அந்தி நாடகம் - இராக் கூத்து. நங்கை முன் - உடையவளாகிய நம் தாய்க்கு முன்னர், ஏனம் - பன்றி. காடகக் கால் - காட்டில் (நடந்த) கால். ஏனத்தின் பின் காடகம் நடந்த கால் எனலுமாம். கணம் - பதிணெண்கணமும். கைதொழும் கால். எம் கண்ணாய் நின்ற கால். ஆடகம் - பொன். உவமை. 201. பார்க்க.

தன்னைச் சரணென்று தாளடைந் தேன்றன் னடியடையப்
புன்னைப் பொழிற்புக லூரண்ணல் செய்வன கேண்மின்களோ
என்னைப் பிறப்பறுத் தேன்வினைக் கட்டறுத் தேழ்நரகத்
தேன்னைக் கிடக்கலொட் டான்சிவ லோகத் திருத்திடுமே.

## 99. திருக்கச்சியேகம்பம்

### திருப்பதிக வரலாறு

திருநாவுக்கரசர் காஞ்சிநகர் மறுகுட் போந்து கம்பர் செம் பொற்கோயில் குறுகினார், திருவாயிலைப் பணிந்தெழுந்து செல்வத் திருமுன்றிலை அணைந்து, (அக்) கருவார் கச்சித் திருவேகம்பர் கனகமணி மாளிகை சூழ்ந்து, செம்பொன்மலை வல்லி தழுவக் குழைந்த மணிமேனிப் பெருவாழ்வினை முன்கண்டு இறைஞ்சிப் பேரா அன்பு பெருகினார், கண்ணருவி மயிர்க்கால் தோறும் வரும்புளகம் ஆர்ந்த மேனிப்புறம்பு அலைப்ப, அன்பு கரைந்து என்பு உள் அலைப்ப, நயனம் பயன்பெற்றுத் திளைப்பத் திருவே கம்பரை மனத்தில் உறவைத்து எல்லாச் செந்தமிழ் மாலையும் பாடினார். ஆர்வம் உறப்பணிந்தேத்தி ஆய்ந்த தமிழ்ச் சொல் மலரால் சார்வுறும் அம்மாலைகளுள் ஒன்று இத்திருப்பதிகம் (அப்பர் புராணம், 321 - 26),

திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

ஓதுவித் தாய்முன் னறவுரை காட்டி யமணரோடே
காதுவித் தாய்கட்ட நோய்பிணி தீர்த்தாய் கலந்தருளிப்
போதுவித் தாய்நின் பணிபிழைக் கிற்புளி யம்வளாரால்
மோதுவிப் பாயுகப் பாய்முனி வாய்கச்சி யேகம்பனே. 956

956. ஓதுவித்தாய் - ஓதச்செய்தனை. முன் - இளமையில் ; அமண்சார்புறுமுன் எனலுமாம். அறவுரை - தருமசாத்திரம் ; சமண் சமயத்துத் தரும போதம். காட்டி - அறிவுறுத்தி காது வித்தாய் - கொல்வித்தாய். அமணரோடே சேர்வித்து, அவர் என்னைக் கொல்லுமாறு முயலச் செய்தாய் என்றவாறு. கட்ட நோய் பிணி தீர்த்தாய் :- கட்டம் - துன்பம். கலந்தருளி - என் உயிர்க்குயிராய்த் தோன்றாத் துணையாய்க் கலந்தருளி. போது வித்தாய் - சமண் சமயத்தின் நீங்கிச் சைவ சமயத்திற் புகச் செய்தாய். புகுது என்பதன் மரூஉவே போது என்பது. புகுதுக - போதுக. ‘ போ ’ முதனிலையாயின், பொருள் வேறுபடல் அறிக. நின் பணி - நின் திருவடித் தொண்டு. பிழைக்கின் - வழுவினால்.

எத்தைக்கொண் டெத்தகை யேழை யமணொ டிசைவித்
தென்னைக்
கொத்தைக்கு மூங்கர் வழிகாட்டு வித்தென்னக் கோகு
செய்தாய்
முத்திற் றிரளும் பளிங்கினிற் சோதியு மொய்பவளத்
தொத்தினை யேய்க்கும் படியாய் பொழிற்கச்சி யேகம்பனே.

புளியம் வளாரால் - புளியமரத்தின் வளாரினால் மோதுவிப்பாய் - மோதச்செய்வாய். ' வளாரினால் அடித்துத் தீய பந்தமும் இடுவர்' (சித்தியார் 2 :- 15). உகப்பாய் முனிவாய் - விரும்புவாய் வெறுப்பாய். (விருப்பும் வெறுப்பும் கொள்வாய்.) ' காயத்திடுவாய் நின்னுடைய கழற்கீழ் வைப்பாய் கண்ணுதலே ' (திருவாசகம்). ' எல்லாம் பார்த்திடிற் பரிவே யாகும் இந்த நீர் முறைமை யன்றோ ஈசனார் முனிவும் என்றும் ' (சித்தியார். 2 :- 16) ' தேசநெறி நிலையாமை கண்டு அறங்கள் செய்த' 'சரிதப் பகுதிக்கும் சமண சமயம் புகுந்த சரிதப் பகுதிக்கும் அகச் சான்று இதிற் காண்க.' (திரு. C. K. S. உரை). அறவுரை என்று நம்பிச் சென்ற அப்பர் கொன்றன்ன இன்னா செய்யப் பெற்றார் ஆதலின், ' அறவுரை காட்டிக் காதுவித்தாய் ' என்றார். உகப்பு - அமணர் செய்த கொடுமைகளின் பயன் சமண் புக்க பாவத்தின் கழுவாய் ஆதலின், அது திருவரு ளுவப்புணர்த்தும். முனிவு :- அக் கொடுமைகளின் ஏது ஆதலின் சிவனார் முனிவாயிற்று. அவன் முனிவின்றேல் அமணர் அது செய்ய வல்லரோ ? சூலை தந்ததும் முனிவே. துன்பங்களின் உய்ந்தது உகப்பு.

957. முத்தின் திரள் - முத்துக் கொத்து. பளிங்கின் சோதி - பளிங் கொளி. பவளத் தொத்து - பவளத் திரள். ' மொய்பவளத் தொடுதரளம் துறையாருங் கடற் றோணிபுரத் தீசன் ' (சம்பந்தர்). பவளம் போல் மேனியிற் பால் வெண்ணீறு. ஏய்க்கும் - ஒத்திருக்கும். படியாய் - தன்மையனே. பொழில் - சோலை. கச்சியேகம்பனே, முத்தொளியும் பளிங்கொளியும் பவளத்தொளியும் ஒத்தொளிரும் இயல்பினனே, எத்தைக் கொண்டு எத்தகையேழை அமணொடு இசைவித்து என்னைக் கொத்தைக்கு மூங்கர் வழி காட்டுவித்தென்னக் கோகுசெய்தாய்? எஃது + ஐ = எஃதை, எத்தை, மரூஉ. அத்தை,

மெய்யம்பு கோத்த விசயனோ டன்றொரு வேடுவனாய்ப்
பொய்யம்பெய் தாவ மருளிச்செய் தாய்புர மூன்றெரியக்
கையம்பெய் தாய்நுன் கழலடி போற்றாக் கயவர்நெஞ்சில்
குய்யம்பெய் தாய்கோடி மாமதில் சூழ்கச்சி யேகம்பனே. 958

என்பனவும் அன்ன. பஃது பத்து என்றாயிற்று 'இத்தை ஆயும் அறிவு' (சித்தியார். சூ. 1). 'இத்தையும் அறியார்' (ஷை. சூ:- 69) 'எங்கித்தைக் கன்மமேலாஞ் செய்தாலும்' (ஷை. சூ. 10:- 6) 'அத்தின் அளவறியாது' (ஷை பரபக்கம். சௌ. ம. 3) 'எத்தைக் கொண்டு' என்றது. அமணரோடு இசைவித்ததன் காரணத்தை வினயது. 'எத்தகை யேழையமண்' என்றது இசையுமிடத்தின் இழிவுணர்த்தியது. 'கோத்தைக்கு மூங்கர் வழிகாட்டு வித்தென்ன'. உவமம். கோத்தை - குருடு. மூங்கர் - ஊமையர். 'என்கண் கோத்தையாக்கினீர்' (சுந்தரர்) 'கண்ணாற் கோத்தை' (தொல். சொல். வேற். மூன்றாவது. 'இன்னான்' என்றதற்குக் காட்டு) ஏழை - நுண்ணுணர்வின்மை. 'நுண்ணுணர் வின்மை வறுமை' (நாலடியார்) 'கோகு' குறுகு என்றதன் மரூஉ. இழிவு என்னும் பொருளது. 503. குறிப்பு. எனைக்கோகு செய்தாய். காட்டுவித் தென்ன - காட்டுவித்தாற் போல. காட்டுவித்தல் - காட்டச் செய்தல். மூங்கர்:- அமணர். வழி - கடவுள் நெறி.

958. கோடிமா மதில்சூழ் கச்சியே கம்பனே, விசயனோடு அன்று ஒரு வேடுவனாய் ஆவம் அருளிச்செய்தாய்; புரம் எரிய எய்தாய்; நுன் அடி போற்றாக் கயவர் நெஞ்சில் குய்யம் பெய்தாய். மெய்யம்பு - மெய்க்கணை. விசயன் - வெற்றியன்; அருச்சுனன். அன்று - அக்காலத்தில். (அன்றுதல் - பகைத்தல்.) பகைத்து. அன்று வேடுவன் - பகைத்த வேடன். பொய்யம்பு - பொய்க் கணை. எய்து - செலுத்தி. எய்து ஆவம் வினைத்தொகை யுமாம். அம்புறை தூணி (அம்புறுத் தூணி). தவவேடனை அருச்சுனன் மெய்யாக அம்பு எய்யச் சிவவேடன் பொய்யாக அம்பு எய்து ஆவம் அருளிச் செய்தான் என்றலுமாம். பாசுபதம் அருளிய வரலாறுணர்க. கையம்பு - கைக்கணை, திருமாலாகிய அம்பு. நுன் - நின் என்றதன் மரூஉ. யான் (தன்மை), நீன் முன்னிலை, தான் படர்க்கை. யான் - யன் - என் என்றும் நீன் - நின் - நுன் என்றும் தான் - தன் என்றும் ஆயின. பிற்காலத்தில்

குறிக்கோண் டிருந்துசெந் தாமரை யாயிரம் வைகல்வைகல்
நேறிப்பட வின்டை புனைகின்ற மாலை நிறையழிப்பான்
கறைக்கண்ட நீயோரு பூக்குறை வித்துக்கண் சூல்விப்பதே
பிறைத்துண்ட வார்சடை யாய்பெருங் காஞ்சியெம்
பிஞ்ஞகனே. 959

னுன் என்பது உன் என்று வழங்கலாயிற்று 'உன்னை யொழிய ஒருவரையும் நம்புகிலேன்' என்றது பழம் பாடலன்று. ஒருகை முகன் தம்பி யாகக் கொண்ட 'நின்னுடைய' காலத்தின் பின்னது. 'போற்ருக் கயவர்' என்று அப்பரும் சிவனடியே சிந்திக்கும் திருவை எய்தாதவரைக் கயவர் எனப் பழித்ததை அறிக. குய்யம் - இரகசியம் குஹ்யம் என்றதன் மருஉ. மறைப்பு. கயவர் அறியாதவாறு கடவுள் தன்னை ஒளித்து நிற்றலே குய்யம் பெய்தல் ஆம். கச்சிமதிலும் அம்மதிலின் கொடியும் தோல் புகழ் வாய்ந்தவை.

959. பிறைத் துண்டம் - 'நிலாத் திங்கட்டுண்டம்'. இக் காலத்தில் அப் பெருங் காஞ்சித் திருவேகம்பத்துள் வடகீழ் மூலையில் நிலாத் திங்கட்டுண்டத்தான் என்னத் திருமால் திகழ் கின்ருர். 'பிறைத் துண்டவார் சடையாய் பெருங் காஞ்சியெம் பிஞ்ஞகனே' என்றதறிக. குறிக்கோண்டிருந்து - ஆழி பெறக் கருதி, சிவனடியே சிந்தைக் குறியாகத் தியாநம் புரிந்து, ஆயிரம் செந்தாமரை. ஆயிரம் வைகல் எனலாகாது. வைகல் வைகல் - நாள்தோறும். நேறிப்பட - இண்டை கட்டும் முறைமையிற் பொருந்த. 'தொண்டர் அஞ்சுகளிறும் அடக்கிச் சுரும்பு ஆர் மலர் இண்டை கட்டி வழிபாடு செய்யும் இடம்.........கேதாரமே' என்றதில் உள்ள நேறி. இண்டை புனைகின்ற திருமால். 'முருகு ஆர் நறுமலர் இண்டை தழுவி வண்டே முரலும் பெருகு ஆறு அடை சடைக் கற்றையினுய்' (1061). நிறை - நேஞ்சில் நிறுத்திய உறுதி. ஆடவர்க்கு நிறையும் பெண்டிர்க்குக் கற்பும் உரியன. அழிப்பான் - அழித்தற் பொருட்டு. கறைக்கண்ட - திருநீலகண்ட (அண்மைவிளி). நீ ஒரு பூ குறையச் செய்து, கண்ணைச் சூல்விப்பது தகுமோ ? எனல் 'சூல்விப்பதே' என்று வினவியதன் கருத்து: சூல்வித்தல் - தோண்டச்செய்தல். 'பெருங்காஞ்சி':- இன்றும் பெரியகாஞ்சிபுரம் சின்னகாஞ்சிபுரம் என வழங்குதல் அறிக. பெரியன் - மகாதேவன்.

உரைக்குங் கழிந்திங் குணர்வரி யானுள்கு வார்வினையைக்
கரைக்கு மெனக்கை தொழுவதல் லாற்கதி ரோர்களெல்லாம்
விரைக்கொண் மலரவன் மாலெண் வசுக்களே காதசர்கள்
இரைக்கு மமிர்தர்க் கறியவொண் ணானெங்க ளேகம்பனே.

கருவுற்ற நாள்முத லாகவுன் பாதமே காண்பதற்கு
உருகிற்றெ னுள்ளமும் நானுங் கிடந்தலந் தெய்த்தொழிந்
திருவொற்றி யூரா திருவால வாயா திருவாரூரா [தேன்
ஒருபற்றி லாமையுங் கண்டிரங் காய்கச்சி யேகம்பனே. 961

960 எங்கள் ஏகம்பன் உணர்வரியான். கைதொழுவது அல்லால் (எவர்க்கும்) அறியவொண்ணான். உரைக்கும் கழிந்து இங்கு உணர்வு அரியான் :- ' உரையுணர் விறந்து நின்றுணர் வதோருணர்வே ' (திருவாசகம்). உள்குவார் வினையைக் கரைக்கும் - நினைப்பவர் வினையை ஒழிப்பான். என - என்று உறுதியாகக் கருதிக்கொண்டு. கைதொழுவது அல்லால் :- கையால் மலரிட்டுத் தொழுது வழிபடும் அதனால் அல்லாமல், மற்றெதனாலும் எவர்க்கும் அறிய ஒண்ணான். கதிரோர்கள் - ஆதித்தர் பன்னிருவர். மலரவன் - நான்முகன். மால் - திருமால். எண் வசுக்கள் - வசுக்கள் எண்மர். ஏகாதசர்கள் - உருத்திரர் பதினொருவர். (கந்தபுராணம். கணங்கள் செல். 9. கூர்மபுராணம் பலவ. 14. உரை.) அமிர்தர் - அமுதுண்டுஞ் சாம் விண்ணோர். முப்பத்துமூவர் தேவருள் பன்னிருவர் கதிரோர், பதினொருவர் உருத்திரர், எண்மர் வசுக்கள் இருவர் மருத்துவர் என்பர். அமிர்தம் மருந்து எனப்படும். படவே மருத்துவர் இருவரே இதில் அமிர்தர் எனப்பெற்றனர். முப்பத்துமுக்கோடி தேவர்க்கும் முப்பத்துமூவர் தலைவர் என்பர். (பொருட்டொகை நிகண்டு967.) ' எங்கள் ஏகம்பன் ' என்றதாலும் பிற இடம் பலவற்றுள் ஏகம்பனைத் தனிச் சிறப்பிற் கூறுதலாலும் ஆசிரியர்க்கு ஆன்மார்த்த மூர்த்தி திருவேகம்பன் எனல் புலப்படும். திருவாலவாயச் சொக்கநாதன் என்பாருமுளர்.

961. கரு உற்ற நாள் முதல் ஆக உன் பாதமே காண்பதற்கு என் உள்ளமும் உருகிற்று ; நானும் கிடந்து அலந்து எய்த்து ஒழிந்தேன் ; ' கருவுற் றிருந்துன் கழலே நினைந்தேன

அரியய னிந்திரன் சந்திரா தித்த ரமரரெல்லாம்
உரியநின் கொற்றக் கடைத்தலை யாருணங் காக்கிடந்தார்
புரிதரு புன்சடைப் போக முனிவர் புலம்புகின்றார்
எரிதரு செஞ்சடை யேகம்ப வென்னோ திருக்குறிப்பே. 962

கருப்புவியில்' (937). 'கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் கருத்துடையேன்' (918) 'கருவுற்ற காலத்தே என்னை ஆண்டு கழற்போது தந்தளித்த கள்வர் போலும்' (6. 89. 9). கருவுற்ற நாள் முதலாக உன் பாதமே காண்பதற்கு உருகியது என் உள்ளம்; கிடந்து அலைந்து எய்த்தொழிந்தது நான் என்றதால், 'நினையாது ஒருபோதும் இருந்தறியேன்' 'இரவும் பகலும் எப்பொழுதும் பிரியாது வணங்குவன்' 'சலம் பூவொடு தூபம் மறந்தறியேன்' 'தமிழோடிசை பாடல் மறந்தறியேன்' 'நலம் தீங்கிலும் உன்னை மறந்தறியேன் உன் நாமம் என் நாவில் மறந் தறியேன்' என்றவை முரணுகாமை உணர்க. அப்பர் எச்சமயம் புகினும் அவர் நாட்டம் எல்லாம் மெய்ப்பொருளுணர்ச்சியிலேயே ஆதலின், அப் பொருளை அவர் மறந்தாரல்லர். திருவொற்றியூரா, திருவாலவாயா, திருவாரூரா என்று அம் மூன்றனையும் எண்ணிச் சிவபிரானை அழைத்தது யாது காரணத்தால்? ஒருபற்றிலாமை யும் கண்டு இரங்குவாய் என்று கச்சியேகம்பனை இரந்தது, அம்மைக்குப் பேரின்ப வீடு தந்தருளியது குறித்துப் போலும். 'கடைக்கண்ணால் மங்கையையும் நோக்கா என் மேல் ஊனமது எல்லாம் ஒழித்தான்' (6. 19. 4) 'பற்று அற்றோமே' (6. 98. 3). 'ஒண்கழலாற்கு அல்லால் எப்பற்றும் இலன்' (5. 97. 7). 'கோண்டீச்சுரவனூர் பற்று அலால் ஒருபற்று மற்று இல்லையே' (5. 70. 2.) 'ஒற்றையேறு உடையான் அடியே அலால் பற்று ஒன்று இல்லிகள்மேற் படைபோகல்' (5. 92. 10)

962. தீயை ஒத்த செந்நிறத்தைக்கொண்ட சடையுடைய திருவேகம்பனே, நின்கடைத் தலையினராய் உணங்கிக்கிடந்தார்; புலம்புகின்றார். (நின்) திருக்குறிப்பு என்னோ? அரியும் அயனும் இந்திரனும் சந்திரனும் ஆதித்தனும் அமரரும் மற்றெல்லாரும் தாம் புகலடைதற்குரிய நின் கடைத்தலை. கொற்றக் கடைத்தலை. அரி - திருமால். அயன் - பிரமன். 974. உரிமை - அபயம்

பாம்பரைச் சேர்த்திப் படருஞ் சடைமுடிப் பால்வண்ணனே
கூம்பலைச் செய்த கரதலத் தன்பர்கள் கூடிப்பன்னாள்
சாம்பரைப் பூசித் தரையிற் புரண்டுநின் றாள்சரணென்
றேம்பலிப் பார்கட் கிரங்குகண் டாய்கச்சி யேகம்பனே. 963

---

அளித்தலில் ஆண்டவனுக்கும், அடைக்கலம் புகுதலில் அடிமைகட்கும் உண்டு. கோற்றக்கடை கற்றைச்சடையானுக்குரியதைக் குறித்ததுமாம். கடைத்தலை - தலைக்கடை. முதல் வாயிற் கடை. கடைத்தலையார் - புறங்கடையாராகி. 'புரங் கடந்தானடி காண்பான் புவி விண்டுபுக்கறியா திரங்கி டேந்தா யென்றிரப்பத் தன் னீரடிக் கென்னிரண்டு கரங்க டந்தா னொன்று காட்டமற்றாங் கதுங் காட்டி டென்று வரங்கிடந்தான்றில்லை யம்பலமுன்றிலம் மாயவனே' (திருக்கோவையார். 86) உணங்கா - உணங்கி ; வற்றி. 'புனல்காலே உண்டியாய் அண்டவாணரும் பிறரும் வற்றி யாரும் நின்மலரடி காணு மன்ன.' (திருவாசகம்) 'வான் வந்த தேவர்களும் மாலயனோ டிந்திரனும் கானின்று வற்றியும் புற்றெழுந்தும் காண்பரிய தான்' (ஷை) 'உலவாக் காலம் தவம் எய்தி உறுப்பும் வெறுத்து இங்கு உனைக் காண்பான் பலமா முனிவர் நனிவாடப் பாவியேனைப் பணி கொண்டாய்' (ஷை) 'தொழுகையர் அழுகையர் துவள்கையர்' (ஷை) பா. 965. 1062. பார்க்க. புரி - முறுக்கு. போகம் - சிவாநந்தபோகம். புலம்புகின்றார் - வாடுகின்றார். எரிதருசடை. செஞ்சடை :- தீயைப் போன்ற சிவந்த சடை. திருக்குறிப்பு - திருவுள்ளக் கருத்து. என்னோ - யாதோ ?

963. பால்வண்ணனே, ஏகம்பனே, அன்பர்கள் கூடிப் பூசிப் புரண்டு சரண் என்று ஏம்பலிப்பார்(கள். அவர்)கட்கு இரங்கு. பாம்பு அரை சேர்த்தி :- அரவக் கச்சு. படரும் சடை முடியையுடைய பால்வண்ணன். கூம்பல் - குவிதல். (கூப்பல் - குவித்தல்) கூம்பலைச் செய்த கரம். கரதலம் - கைத்தலம் ; கையகம். கைத்தலத்தைப் பெற்ற அன்பர்கள். அன்பே கூம்பலைச் செய்த கைகளைப் பெறுவித்தது. 'கூம்பலங் கைத் தலத்தன்பர் என்பூடுருகக் குனிக்கும் பாம்பலங்காரப் பரன்' (திருக்கோவையார். 11.) பல்நாள் - நெடுங்காலம். சாம்பர் - திருநீறு. தரை - நிலம். நின் தாள் சரண் - உன் திருவடியே புகல். (287. 941) ஏம்பலித்தல் - வருந்தி வஞ்சடைதல்.

ஏன்றுகொண் டாயென்னை யெம்பெரு மானினி யல்ல
மென்னில்
சான்றுகண் டாயிவ் வுலகமெல் லாந்தனி யேனென்றென்னை
ஊன்றிநின் றுரைவர்க் கொற்றிவைத் தாய்பின்னை யொற்றி
யெல்லாம்
சோன்றுகொண் டாய்கச்சி யேகம்பமேய சுடர்வண்ணனே.

ஏம்பல் - ஏங்குதல். ஏம்பல் என்னும் சொல்லினின்று ஏம் பலித்தல் என்பது தோன்றிற்று. கலக்கமுமாம். சாம்பல் - சாம்பர். (பந்தல் - பந்தர்). ஈற்றுப் போலி.

964. கச்சி ஏகம்பம் மேய சுடர் வண்ணனே, என்னை ஏன்று கொண்டாய். எனை - என்னை. என்னை என்ற பாடம் தவறு. இனி எம்பெருமான், யாம் உன்னை ஏன்று கொண்டாம் அல்லம் எனில், இவ்வுலகம் எல்லாம் (கொண்டதற்குச்) சான்று கண்டாய். என்னை ஐவர் ஊன்றி நின்றுர். தனியேன் என்று கருதினர் அவ்வைவரும். ஊன்றி நின்ற ஐவர்க்கும் என்னை ஒற்றிவைத்தாய். பின்னை அவ்வொற்றியெல்லாம் சோன்று கொண்டாய் - சுவன்று கொண்டாய். சூன்று என்பது சோன்று என மருவும். சூன்று - தோண்டி. கைப்பற்றி என்றதாம். சுவன்று என்றதன் மரூஉவுமாகும். சுவறல் - உறிஞ்சல். சோன்று - உறிஞ்சி. ஈண்டு அஃது ஒற்றியெல்லாம் மீட்டுக் கொண்டாய் என்ற கருத்ததாயிற்று. ஒற்றி நீக்கித் தனக்கே உரிமையாக்கிக்கொள்ளலாம். கச்சி - திருக்கச்சி. ஏகம்பம் - ஏகாம்பரம். மேய - மேவிய - எழுந்தருளிய. சுடர்வண்ணன்:- 'தீவண்ணன்'. என்னை ஏற்றுக் கொண்டாய் அடிமை என்று. அதனுல் நீ எம்பெருமான். நான் உன் அடியேன். இனி அல்லேன் எனல் இயலாது. அல்லம் எனில், இவ்வுலகம் எல்லாம் சான்று. ஏன்றுகொண்டது மெய்மை என்பதற்குச் சான்று. சூலை நோய் தீர்த்து ஆட்கொண்டமையும் சமணர் செய்த கொடுமையனைத்தும் தாக்காதவாறு காத்தமையும் ஏன்று கொண்டதற்குத் தக்க சான்றும். அவ்வுண்மையை உலகம் எல்லாம் அறிந்துள.

உந்திநின் றார்உன் றன் ஓலக்கச் சூளைகள் வாய்தல் பற்றித்
துன்றிநின் றார்தொல்லை வானவ ரீட்டம் பணியறிவான்
வந்துநின் றாரய னுந்திரு மாலு மதிற்கச்சியாய்
இந்தநின் றோமினி யெங்ஙன மோவந் திறைஞ்சுவதே. 965

திருச்சிற்றம்பலம்

965. சூளைகள் - வேசிகள். அரம்பையர். உனது திருவோலக்கத்தில். உந்தி - தள்ளி. நடனம் புரிந்து எனலுமாம். தொல்லை - பழமை. வானவர் ஈட்டம் - தேவர் கூட்டம். வாய்தல் பற்றி - கடைவாயிலைப் பற்றிக்கொண்டு. துன்றி நின்றார் - நெருங்கி நின்றனர். பணி அறிவான் - கட்டளையை அறிந்து கொள்ளவேண்டி. அயனும் (- பிரமனும்) திருமாலும் பணி அறிவான் வந்து நின்றார். மதிற் கச்சி :- கச்சி மதில் மிக்க பெருமையுடையது ; பலராலும் பல நூலிலும் புகழப்படுவது. இந்த நின்றோம் - இவ்விடத்தில் நின்ற யாம். இகரச் சுட்டின் திரிபு இந்த என்பது. அ - அந்த. உ - உந்த என்றுதலறிக. 'இந்தா' என்பதற்கு மதுரைச் சங்கப் பதிப்பான தமிழ்ச் சொல்லகராதியில் உள்ள விளக்கத்தைக் காண்க. இந் நின்றோம் என்றதாம் இனி வந்து இறைஞ்சுவது எங்ஙனமோ? எங்கனமோ என்றதன் மரூஉவே எங்ஙனம் என்பது. அங்ஙனம் முதலிய சுட்டுமுதற் சொற்களும் யாங்ஙனம் என்பதும் மரூஉ மொழியே. சிந்தாமணி, கந்தபுராணம் முதலியவற்றில் எதுகைத் தொடரில் அமைந்த பாக்களாலும் அவ்வுண்மையை அறியலாம்.

எண்ணுகே னென்சொல்லி யெண்ணு கேனோ
    வெம்பெருமான் றிருவடியே யெண்ணி னல்லாற்
கண்ணிலேன் மற்றோர் களைக ணில்லேன்
    கழலடியே கைதொழுது காணி னல்லா
லொண்ணுளே யொன்பது வாசல் வைத்தா
    யொக்க வடைக்கும்போ துணர மாட்டேன்
புண்ணியா வுன்னடிக்கே போது கின்றேன்
    பூம்புகலூர் மேவிய புண்ணி யனே.

# 100 திருவின்னம்பர்

## திருப்பதிக வரலாறு

போங்குபுனல் ஆர் பொன்னியினில் இரண்டு கரையும் பொரு விடையார் தங்கும் இடங்கள் புக்கு இறைஞ்சிச் சார்த்திய தமிழ் மாலைகளுள் ஒன்று போலும் இத் திருப்பதிகம். (புராணம். 301)

திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

மன்னு மலைமகள் கையால் வருடின மாமறைகள்
சொன்ன துறைதோறுந் தூப்பொரு ளாயின தூக்கமலத்
தன்ன வடிவின வன்புடைத் தொண்டர்க் கமுதரும்பி
இன்னல் களைவன வின்னம்ப ரான்ற னிணையடியே. 966

பைதற் பிணக்குழைக் காளிவெங் கோபம்பங் கப்படுப்பான்
செய்தற் கரிய திருநடஞ் செய்தன சீர்மறையோன்
உய்தற் பொருட்டுவெங்கூற்றை யுதைத்தன வுமபர்க்கெல்லாம்
எய்தற் கரியன வின்னம்ப ரான்ற னிணையடியே. 967

966. இன்னம்பரான்தன் இணை அடியே மலைமகள் கையால் வருடின ; மறைகள் சொன்ன துறைதோறும் பொருளாயின ; கமலத்து அன்ன வடிவின ; தொண்டர்க்கு அமுது அரும்பி இன்னல் களைவன. அம்பர், இனிமை - அம்பர் = இன்னம்பர். 'அச்சிறு பாக்கம் அளப்பூர் அம்பர் ஆவடுதண் டுறை அழுந்தூர் ஆறை' (க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்டகம். 4). மன்னுமலை :- நிலையான இமயகிரி. மன்னுமகள் - என்றுமுள்ள தேவி. மலைமகள் - இமாசலகுமாரி. வருடின :- '......பாவை......குழலி ...வளைக்கரம் கூப்பி நின்று வணங்கும் பொழுதும் வருடும் பொழுதும் காந்தள் அணங்கும் அரவிந்தம் ஒக்கும்' (900).

967. இன்னம்பரான் இணையடியே காளி கோபம் பங்கப் படுப்பான் திருநடஞ் செய்தன ; மறையோன் உய்தற்பொருட்டுக் கூற்றை உதைத்தன ; உம்பர்க்கெல்லாம் எய்தற்கு அரியன.

சுணங்குநின் றார்கோங்கை யாளுமை சூடின தூமலரால்
வணங்கிநின் றும்பர்கள் வாழ்த்தின மன்னு மறைகடம்மில்
பிணங்கிநின் றின்னன வென்றறி யாதன பேய்க்கணத்தோ
டிணங்கிநின் றாடின வின்னம்ப ரான்ற னிணையடியே. 968

பைதல் - இளமை. பிணக்குழை :- பிணக்கு - மாறுபாடு. உழை - ஏழனுருபு. மாறுபட்டு ஆடிய திருக் கூத்தில். பணிக்குழை என்று இருந்தது ஆயின், பணிக் குழை - பாம்பா லாகிய குழை என்க. 'சர்ப்ப குண்டலம்'. அரவக்குழை'. வேம் கோபம் - வெய்ய சினம் பங்கப்படுப்பான் - கேடுபடச் செய்ய. செய்தற்கு அரிய திருநடம் - காளியாற் செய்தற்கு எளிதல்லாத ஊர்த்துவதாண்டவம். அருமை :- நாணின் நீங்கிக் காலை மேலே தூக்கியாட ஒவ்வாமை. சீர்மறையோன் :- மார்க் கண்டேய முனிவர். சீர் என்னும் அடை மறைக்கும் அவர்க்கும் உரித்து. உய்தற்பொருட்டு - (இறவாதிறைவனடியிலிருத்தற் பொருட்டு) இறத்தலினின்றும் தப்புதற்பொருட்டு. வெங்கூற்று - வெய்ய கூற்றன். உம்பர் - தேவர். எய்தற்கு - அடைதற்கு.

968. சுணங்கு - தேமல். நின்று ஆர் கோங்கை - நின்று பொருந்திய கொள்கை. 'கோங்கை' மரூஉ. கையாற் கொள்ளப் படுவது என்னும்பொருட்டு, அவையல்கிளவி. சொல்லலாகாமை குறித்துப் பெயரிட்டு வழங்கிய தமிழ்ச் சான்றோர் பெருமைகளை நினைந்து போற்றுக. 'முதுக்குறைந்தனள்' என்பது முதலிய வற்றை வழக்கிரண்டனுள்ளும் கண்டெண்ணுக. உம்பர் தூமலரால் வணங்கி நின்று வாழ்த்திய பெருமையுடையன இணையடி. மன்னும் மறைகள் :- வேதம் நித்தியம் என்னும் பொருட்டு, தம்மில் பிணங்கி நின்று இன்னன என்று அறியாதன- தம்முள் முரண் உற்று, சிவபிரான் திருவடிகள் இத்தன்மையன என்று அறியமாட்டாதன. 'மறையிலீறுமுன் தொடரொணாத நீ' (திருவாசகம்.) 'வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியன்' (ஷை) 'நூலே நுழைவரியான் நுண்ணியனாய் வந்து அடியேன் பாலே புகுந்து பரிந்துருக்கும் பாவகத்தால்' (ஷை) 'நான்மறைகள் தாம் அறியா எம்பெருமான்' (ஷை) 'மிக்க வேத மெய்ந் நூல் சொன்னவனே சொற்கழிந்தவனே' (ஷை). கணம் - கூட்டம். பேய்க் கூட்டத்தோடு இணங்கி நின்று ஆடின.

ஆறொன் றியசம யங்களி னவ்வவர்க் கப்பொருள்கள்
வேறொன்றி லாதன விண்ணோர் மதிப்பன மிக்குவமன்
மாறொன்றி லாதன மண்ணொடு விண்ணகம் மாய்ந்திடினும்
ஈறொன்றி லாதன வின்னம்ப ரான்ற னிணையடியே. 969

அரக்கர்தம் முப்புர மம்பொன்றி னுலட லங்கியின்வாய்க்
கரக்கமுன் வைதிகத் தேர்மிசை நின்றன கட்டுருவம்
பரக்கவெங் கானிடை வேடுரு வாயின பல்பதிதோ
றிரக்க நடந்தன வின்னம்ப ரான்ற னிணையடியே 970

969. ஆறு ஒன்றிய சமயங்கள் - 136. 298, 329, 448, 589, 972, (5. 89. 6). 6. 50. 7. 6. 65. 7. 6. 68. 5. பார்க்க. அறுவகைச் சமயம். ' அறிவினுல் மிக்க அறுவகைச் சமயம் அவ்வவர்க் கங்கே ஆரருள் புரிந்து ' (7. 55. 9); ஆறுருக நாற்றிறத்தில் ஒன்றிய சமயங்கள். அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என்பன நாற்றிறம். அவ்வச் சமயங்களின் அவ்வவர்க்கு அவ்வப் பொருள்களேயாய் நின்று அருள் புரிவான் சிவபெருமான். ' யாதொரு தெய்வம் கொண்டீர் அத் தெய்வம் ஆகி ஆங்கே மாதொரு பாகனுர் தாம் வருவர் ' (சித்தியார்). அப் பொருள்கள் அன்றி வேறு ஒன்று இல்லாதனவாய் விளங்குவன. விண்ணோர் - அச் சமயத்திற்கேல்லாம் மேலானவராய சுத்தாத்துவித சைவசித்தாந்த ஞானுநந்தச் செல்வர்கள். தேவருமாம். மதிப்பன - உணர்வன ; உணரப்படுவன. உவமன் இலாதன. மிக்கு இலாதன. மாறு இலாதன. உவமன் ஒன்று மிக்கு மாறு இலாதன. 975. உவமன் வேறு. ஒப்பு வேறு. ' ஒப்புடையன் அல்லன் ஓர் உருவனல்லன் ஓரூரனல்லன் ஓர் உவமன் இல்லி ' ' ஒப்பிலாதன உவமனில் இறந்தன ஒண் மலர்த் திருப்பாதத் தப்பன் ' (திருவாசகம்) ' உவமனில் இறந்தன ஒண்மலர்த்தாள் தந்து .....காட்டி......அருள் புரிந்த என் தலைவன் '. இணையடிக்கு மிக்கதும் இல்லை உவமனும் இல்லை. மாறு (- ஒப்பு) மில்லை. ' மாற்றுடை ' என்னும் வழக் குணர்க. மண்ணும் விண்ணும் (இடவாகு பெயர்) மாய்ந்திடினும் இணையடி மாயாதன.

970. அரக்கர் - திரிபுரத்தசுரர். முப்புரம் - ' மூன்றூர் '. அம்பு ஒன்று:- ' மால் கணை '. அங்கி - நெருப்பு. ' மூவார்

கீண்டுங் கிளர்ந்தும்பொற் கேழன்முன் றேடின கேடுபடா
ஆண்டும் பலபல வூழியு மாயின வாரணத்தின்
வேண்டும் பொருள்கள் விளங்கநின் றாடின மேவுசிலம்
பீண்டுங் கழலின வின்னம்ப ரான்ற னிணையடியே. 971

புரங்கள் எரித்த அன்று'. அங்கியின் வாய்க் கரத்தல் - எரிந் தொழிதல். வைதிகத் தேர் மிசை - வேதக் குதிரை பூட்டிய பூமியாகிய தேர்மேல். வேத சம்பந்தம் வைதிகம். ஈண்டுக் குதிரையை உணர்த்திற்று. கட்டு உருவம் :- வேடர்வடிவம் இயல்பானதன்று ; கட்டிக்கொண்டது. கட்டுருவம் - கட்டோளி யுமாம். தடத்தம் என்றவாறு. பரக்க - பரந்து விளங்க. வெங் கான் - வெய்யகாடு. கான் இடை - காட்டில். வேடு உருவு ஆயின - வேட்டுவ வடிவாயின. பல்பதிதோறு - பல்லூர் தோறும். இரக்க - இரத்தல் செய்ய. 'பத்தூர் புக்கு இரந்து உண்டு பல பதிகம் பாடி' (7. 46. 1) இணையடி இரக்க நடந்தன. இணையடி தேர் மிசை நின்றன என்றதாற் பெருஞ் செல்வமும் பல்பதிதோறிரக்க நடந்தன என்றதாற் பொல்லா வறுமையும் உணர்த்தி, இறைவனது ஏரி நிறைந்தனைய செல்வத்தையும் விற்றூண்ணொன்றில்லாத நல்குரவையும் குறித்தவாறறிக.

971. கீண்டும் - கிழித்தும் ; நிலத்தைக் கிளறியும். கிளர்ந்தும் - கிண்டியும். கிளர்தல் - கிண்டல். கேழல் - பன்றி. பொன் - அழகு, திரு. திருமால் உருக்கொண்ட பன்றியாதலின், திருவையுடைய கேழல் என்றுமாம். ஏனைப் பன்றிக்குப் 'பொன்' என்னும் அடை பொருந்தாது. அவை தம்மை வளர்ப்பார்க்குப் பொன் கிடைக்கத் தாம் கைம்மாறுதலும் கொலையுண்ணலும் அடைகின்றமையாற் பொருந்தும் போலும். கேடுபடா ஆண்டும் ஆயின. பல பல ஊழியும் ஆயின. இணையடி காலங் கடந்த உண்மையை உணர்த்தியவாறு. ஆரணம் - வேதம். வேண்டும் பொருள்கள் ஆரணத்தின் விளங்க இணையடி நின்று ஆடின. வேதங்களில் அவரவர்க்கு வேண்டும் பொருள்கள் விளங்க நின்று திருவடி ஆடின. திருவுருத்திரம் துறவினோர்க்குரித்து ; சீசூத்தம் துறவாதார்க்குரித்து என்றவாறு. அவரவர் வேண்டும் பொருள்கள் பற்பல வேதங்களில் உள. மேவு சிலம்பு ஈண்டும் கழலின - மேவிய சிலம்பும் ஈண்டிய கழலும் உடையன.

போற்றுந் தகையன பொல்லா முயலகன் கோபப்புன்மை
ஆற்றுந் தகையன வாறு சமயத் தவரவரைத்
தேற்றுந் தகையன தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே
ஏற்றுந் தகையன வின்னம்ப ரான்ற னிணையடியே. 972

பயம்புன்மை சேர்தரு பாவந் தவிர்ப்பன பார்ப்பதிதன்
குயம்பொன்மை மாமல ராகக் குலாவின கூடவொண்ணுச்
சயம்புவென் றேதகு தாணுவென் றேசதுர் வேதங்களின்
றியம்புங் கழலின வின்னம்ப ரான்ற னிணையடியே. 973

972. போற்றும் தகையன - உயிர்கள் எல்லாம் போற்றிப் பயன் கொள்ளும் தகைமையுடையன. பொல்லா முயலகன் - பொலிவில்லாத முயலகன் என்னும் அசுரன். 'தருக்கிய முயலகன் மேல்தாள் வைத்தான்' (6. 90. 9) 'அடிகொண்டார் சிலம்பலம்பு கழலும் ஆர்ப்ப அடங்காத முயலகனை அடிக்கீழ்க் கொண்டார்.' (6. 96. 3). முயலகனது கோபப் புன்மையை ஆற்றுந் தகைமையுடையன. புன்மை - குற்றம்; புல்லிய தன்மை. (893; 973) ஆறு சமயத்தவரவரைத் தேற்றும் தகையன. பா. 966. உரை பார்க்க. தேற்றுதல் - தெளித்தல். தெளிவித்தல். 'தெள்ளித் தெளிக்கும் புலவோர்' (சகலகலா வல்லிமாலை. 3) தேறிய தொண்டரை - தெளிந்த தொண்டர்களை. செந்நெறிக்கே - செம்மையதான சிவநெறியிலே. ஏற்றும் - ஏறப் பண்ணும். இணையடியே போற்றுந் தகையன; புன்மை ஆற்றுந் தகையன; ஆறு சமயத்தவரவரை ஆற்றுந் தகையன; தொண்டரைச் செந்நெறிக்கே ஏற்றுந் தகையன என்று இயைக்க. முயலகன் புன்மை ஆற்றுதல் ஆணவ மல நீக்கம். செந்நெறிக்கே ஏற்றுதல் திருவருளாக்கம் (சிவப்பேறு). போற்றுதல்- புகழ்(ந்து வழுத்து)தல். கன்ம மல நீக்கம். தேற்றுதல் - மாயாமல நீக்கம். மும்மல நீக்கம் (பாசவீடு).

973. இணையடி பாவம் தவிர்ப்பன; பார்ப்பதி ........ குலாவின; சதுர் வேதங்கள் இயம்பும் கழலின. பயம் - அச்சம். புன்மை - குற்றம் (893; 972). பாவம் அச்சத்தையும் குற்றத்தையும் தோற்றும். தவிர்ப்பன - நீக்குவன. பார்ப்பதி-பருவத ராச புத்திரி. குயம் - கொங்கை. பொன்மை - பொன்னியல்பு;

அயனோடு மாலிந் திரன்சந்த்ரா தித்த ரமரரேலாம்
சயசய வென்றுமுப் போதும் பணிவன தண்கடல்சூழ்
வியனில முற்றுக்கும் விண்ணுக்கும் நாகர் வியனகர்க்கும்
இயபர மாவன வின்னம்ப ரான்ற னிணையடியே　974

போலியும் தன்மை. 'போற்றுமறை' என்னும் வழக்குணர்க. போன்மை மாமலர் - போன்போற் செய்ய அழகிய தாமரைப் பூ. மா - அழகு ; பெருமை. குயத்திற்கு மாமலா உவமை. இணையடியும் தாமரை குயமும் தாமரை. இரண்டும் இனமாய்க் குலாவின. கூடவோண்ணுமை - சேரவோன்ருமை. கூடவோண்ணுச் சயம்பு - அடைதற்கரிய தான்ருேன்றி. தாணு - சிவன். கேகோபஙிடத வரலாறு குறித்து நிற்பதோரு சிவநாமம். 'தாணுவே உனையல்ல தாணுவே.' (சேதுபுராணம். சிவதீர்த்த. 91). சதுர்வேதங்கள் - நான்மறைகள். நின்று - தம் எல்லையில் அடங்கி. இயம்பும் - சொல்லும். சொல்வன வேதங்கள். சொல்லப்படுவன கழல்கள். அக் கழல்களையுடையன இணையடி.

974. இதன் முதலடியிலே 'ஆதித்தர்' என்று நிற்குங் காய்ச்சீர் முன் 'அமரரேலாம்' என்னும் நிரை முதற் சீர் வந்து வெண்டளை கெட்டு, ஒரேழுத்து மிகுங் குற்றம் தோன்றச் சிலர் பதித்தனர். 'சந்த்ராதித்தர்' என்ருே 'இந்த்ரன்' என்ருே கோண்டால் அக் குற்றம் தவிரும். மதுரை ஞானசம்பந்தப் பிள்ளை பதிப்பில், 'சந்திராதித்தமரரேலாம்' என்றுளது. ஆதித்ய+அமரர்-ஆதித்தமரர் எனல்போருந்தாது.(962)சயசய-வேல்க வேல்க 'சய சய போற்றி' (திருவாசகம். 5. 66). முப்போதும் - காலை நண்பகல் மாலை. 'கைப்போது மலர் தூவிக் காதலித்து வானோர்கள் முப்போது முடிசாய்த்துத் தோழநின்ற முதல்வன்' (64). பணிவன - பணியப்பேறுவன. தண் கடல் - குளிர்ந்த நீர்க் கடல். கடல் சூழ் நிலம். வியல் நிலம். 'வியல் என் கிளவி அகலப் போருட்டே' (தோல்காப்பியம்). முற்றுக்கும் - முழுவதுக்கும். வியல்+நகர். நாகர் நகர் - நாகருலகம். மண்ணோர், விண்ணோர், நாகர் என்னும் மூன்றுலகர்க்கும் இகமும் பரமும் ஆவன. இகம் - இம்மை. பரம் - மறுமை. இப்பிறப்பும் மறுபிறப்பும். இகபரம் - இருமைப் பயனுக்கு ஆகுபேயர். 'இயபரம்' என்றது மருஉ. 'இகபரங் கேட்டவன்' என்பதை உலகர் வழங்குமாறறிக.

தருக்கிய தக்கன்றன் வேள்வி தகர்த்தன தாமரைப்போ
துருக்கிய செம்பொ னுவமனி லாதன வொண்கயிலை
நெருக்கிய வாளரக் கன்றலை பத்து நெரித்தவன்றன்
இருக்கியல் பாயின வின்னம்ப ரான்ற னிணையடியே. 975

திருச்சிற்றம்பலம்

975 தருக்கிய - செருக்கடைந்த. தக்கன் - தட்சன். வேள்வி - யாகம். தகர்த்தன - சிதைத்தன 'தக்கன் கிளரொளி வேள்வியைக் கீழமுன் சென்று அழித்தன' (884). தாமரைப் போது - தாமரை மலரும். உருக்கிய செம்பொன் - தீயிலிட்டு உருக்கப்பட்ட செய்ய பொன்னும். இணையடிக்கு உவமன் இல்லாதவாறு தாமரை மலரும் செம்பொன்னும் இழிவுற்றன. 'உவமன் இலாதன.' 969. உரை பார்க்க ஒண் கயிலை - வெள்ளொளியுடைய திருமலை. அரக்கன் :- இராவணன். தலை பத்தும் நெரித்தவன் - சிவபிரான். அவனது இருக்கு. இருக்கு இயல்பு - மறையின் தன்மை. 'ஓதிய ஞானமும் ஞானப் பொருளும் ஒலிசிறந்த வேதியர் வேதமும் வேள்வியும் ஆவன ............ஐயாறன் அடித்தலமே.' (899). ஈண்டு இருக்கு என்றது மறையென்னும் பொதுப் பொருள் மேலதுமாம். திருவுருத்திரஈாப்பணுள்ள திருவைந்தெழுத்தைக் குறித்ததாகக் கோடல் சிறந்தது. அதுவே வேதத்தியல்பாகும். உவமன் இலாதன என்றது குறித்து முன் (969) 'மிக்குவமன் மாறேன் றிலாதன' என்றதன் குறிப்புரையில் எழுதியதைக் காண்க.

ஒருவரையு மல்லா துணரா துள்ள
முணர்ச்சித் தடுமாற்றத் துள்ளே நின்ற
இருவரையு மூவரையு மென்மே லேவி
யில்லாத தரவறுத்தாய்க் கில்லே னேலக்
கருவரைசூழ் கான லிலங்கை வேந்தன்
கடுந்தேர்மீ தோடாமைக் காலாற் செற்ற
பொருவரையா யுன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே.

## 101 திருவாரூர்

### திருப்பதிக வரலாறு

திருநாவுக்கரசர் திருவாரூர் வந்தடைந்தார் ; அங்கு அவர் எழுந்தருள, அன்பர்கள் திருக்கோயில் முதலிய எங்கும் போங்கும் வண்ணம் திருமலிமங்கலம செய்தனர். அமண் மாயை கடந்து கல்லே மிதப்பாகக் கடலையும் கடந்தவர் வந்தார் என்னும் களிப்பால், எதிர்கொண்டு தொழுதனர் எல்லையில்லாத் தொண்டர். சொல்லினரசரும் வணங்கித் தொழுதுரை செய்து அணைவாராய்ப் ' பற்றொன்றிலா அரும்பாதகராகும் அமணர்தம்பால் உற்ற பிணி ஒழிந்து உய்யப்போந்தேன் ' புற்றிடங் கொண்டான்றன் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் பெறலாவதொன்றோ ? என்று பாடிக்கொண்டு அற்ற உணர்வோடும் ஆரூர்த் திருவீதியுள் அணைந்தார். அதுவே இத் திருப்பதிகம் (புராணம். 217 - 220).

திருவிருத்தம்

திருச்சிற்றமபலம்

குலம்பலம் பாவரு குண்டர்முன்
னேநமக் குண்டுகொலோ
அலம்பலம் பாவரு தண்புன
லாரூ ரவிர்சடையான்
சிலம்பலம் பாவரு சேவடி
யான்றிரு மூலட்டானம்
புலம்பலம் பாவரு தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. 976

.........................................................................

976. குலம் பலம் - குலமும் பலமும் ; கூட்டமும் வலிமையும். பாவரு - பரவுதல் வந்த ; பெருகிய. குண்டர் - மூர்க்கர். அலம்பு அலம்பு ஆ வருபுனல் ; தண்புனல் ; புனல் ஆரூர். அலம்புதல் - ஒலித்தல், கழுவுதல். கழுவுதலும் ஒலித்தலும் உடையதாக வரும் நீர். தண்ணீர். நீர் வளம் மிக்க ஆரூர். ஆரூரிற் கோயில்கொண்டுள்ள சிவபிரான். அவிர் சடை - விளங்கும் சடை ; சடையான் - சடையுடையவன். சடையான் அடி, சேவடி. சிலம்பு அலம்பா வரு சேவடி - சிலம்பு ஒலித்து வருகின்ற செய்ய திருத்தாள். 894. பார்க்க. சடையானும் சேவடியானும் ஆகிய ஈசுவரனது திருவாரூர்த் திருமூலட்டானம். மூலட்டானம், மூலஸ்தாநம் என்பதன் திரிபு. மூலாதாரத்தலம்.

மற்றிட மின்றி மனை துறந்
தல்லுணு வல்லமணர்
சொற்றிட மென்று துரிசுபட்
டேனுக்கு முண்டுகொலோ

புலம்பல் அம்பு ஆவரு தொண்டர். ஈண்டுப் புலம்பல் என்றது உடையவன் தம்பால் வைத்த பேரிரக்கத்தையும் அதன் பயன்களையும் எண்ணியுருகும் பெற்றியாலும் பல பிறவியாக நன்றி மறந்த குற்றத்தையெண்ணி வருந்தும் வினையாலும் வாய்விட்டுப் புலம்புதல் என்ற பொருளதாயிற்று. கட்டின் நீங்கித் தனிமை உற்றவர்க்கே அது கூடுவது. அதனால், 'புலம்பே தனிமை' (தொல்காப்பியம்) என்ற பொருளும் அடங்கும். அம்பு - நீர். அது விழி நீர்ப் பெருக்கைக் குறித்தது. 'கண்ணீர் ததும்பி' (திருவாசகம்). புலம்பலால், வெள்ளமாவருதல். அத் தகு மெய்த் தொண்டர்க்குத் தொண்டராகும் புண்ணியம். திருவாரூர்த் தொண்டர்க்கு உறையுள் தேவாசிரிய மண்டபம். அவர்க்குத் தொண்டராதல் சிவபூசாபலனாகும். புண்ணியம் - சிவபூசை. 'புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தினாலே' (சித்தியார்). புண்ணியம் - சிவபுண்ணியம். புலம்பல் தொண்டர்க்குரிய இயல்புகளுள் மிகச் சிறந்தது. அழுவார்க்கு அமுதங்கள்' (887) 'அழுமவர்க்கு அன்பன்' (5. 31. 7) 541. பார்க்க. 'அழவலார்களுக்கு அன்பு செய்து இன்போடும் வழுவிலா அருள் செய்தவன்' (5. 59. 7) 'அழும் அதுவே அன்றி மற்று என்கேன் செய்கேன் பொன்னம்பலத் தரைசே.' 'அழுதால் உன்னைப் பெறலாமே.' (திருவாசகம்). திருவாரூரில் அக்காலத்தில் அமணர் பெருகியிருந்தனர். தண்டியடிகள், நம்பி நந்தியடிகள் நாயனார் புராணங்களின் உணர்க. தொண்டர்க்குத் தொண்டராம்புண்ணியம், குண்டர்க்கு முன்னே நமக்கும் உண்டு கோல் என்று வியந்து போற்றியவாறுணர்க. அலம்பல் அம் பாவரு - அலம்புதலும் அழகும் பரவலும் உடையதாய் வருகின்ற (புனல்) என்றும் புலம் - சிவஞானம். பலம் - சிவஞானப் பயனாய பேரின்பம் என்றும் உரைக்கலாம். நமக்கும் என்றும்மை விரித்துரைக்க. 978, 980, 981 இலும் அங்கனம் விரிக்க.

977. மற்று - பிறிது. இடம் - உறையுள். இன்றி - இன்றியும். மனை - வீட்டை. துறந்து - விட்டு. அல் - இரவில்.

விற்றிடம் வாங்கி விசயனொ
 டன்றொரு வேடுவனாய்ப்
புற்றிடங் கொண்டான்றன் றொண்டர்க்குத்
 தொண்டராம் புண்ணியமே. 977

ஒருவடி வின்றிநின் றுண்குண்டர்
 முன்னமக் குண்டுகொலோ
செருவடி வெஞ்சிலை யாற்புர
 மட்டவன் சென்றடையாத்

உணு - உண்ணுத. வல் அமணர் - வலிய அமண் சமயத்தார். சொல் - சொல்லிய (மதக்) கோட்பாடுகளை. திடம் - உறுதி யுடையவை. என்று - எனக் கொண்டு. துரிசுபட்டேன் - சைவத் தினீங்கிச் சமணத்திற் புக்க குற்றம் அடைந்தேன். துரிசு பட்டேனுக்கும் - குற்றமுற்றேனுக்கும். எனக்கும் புண்ணியம் உண்டுகொல் ? வில் திடம் - வில்லை வலிமையால். வாங்கி - வளைத்தவன் (சிவன்). விற்றிடம் - விசயனது விற்றிடம். (வில் வலிமை). அருச்சுனனுடைய வில்லின் திடத்தை வாங்கி; 'வாங்கல்' கவர்தல் எனலுமாம். விசயன் - அருச்சுனன். அன்று - அவன் காட்டில் தவம் புரிந்த காலத்தில். ஒரு வேடுவன் - தனி வேடன். 'புற்றிடங் கொண்டான்' திருவாரூர்ப் பிரானது தமிழ்த் தொல் பெயர். வன்மீகநாதன் என்னும் மொழி பெயர்ப்பில் அத் தமிழ்ப் பெயரினது பொருளமைதி யில்லை. அமணர்க்கு இராவுண்டி இராவுண்டி. சொல் - அறிவுறூஉ. திடம் :- வடசொற்றிரிபு. அன்று ஒரு வேடுவனாகி விசயனொடு வில் திடம் வாங்கியாகிய புற்றிடங்கொண்டான் என்க. வாங்கி ஆய்க் கொண்டான் என்றியைத்தல் பொருந்தாது. விசயனொடு அன்றிய வேடுவன் எனலும் ஆம் அன்றுதல் - பகைத்தல். வேடுவனாய் வாங்கியாகிய புற்றிடங்கொண்டான் என்றலன்றி ஆய் என்னும் எச்சத்திற்கு முடிபு பொருந்தாது. 'மனைதுறந்தல் லுணுவல்லமண் குண்டர் மயக்கம் நீக்கி எனை நினைந்தாட்கொண் டாய்' (998).

978. புரம் அட்டவன் ; திருவுடையான் ; திருமூலட் டானன் ; விடையான் அடித்தொண்டர்க்குத் தொண்டராம்

திருவுடை யான்றிரு வாரூர்த்
திருமூலட் டானன்சேங்கண்
பொருவிடை யானடித் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. 978

மாசினை யேறிய மேனியர்
வன்கண்ணர் மொண்ணரைவிட்
டீசனை யேநினைந் தேசறு
வேனுக்கு முண்டுகொலோ

புண்ணியம், குண்டர்முன் நமக்கு உண்டுகொலோ ? ஒரு வடிவு இன்றி - சிறிதும் அழகில்லாமல். வடிவு - அழகு, உருவம் கருத்தாலறியற்பாலது உருவம். கண்ணுற் காணற்பாலது வடிவம். நின்றுண்குண்டர் ; இருந்துண்தேரர். குண்டர் - மூர்க்கர். செரு - போரில். அடி - அடிக்கும். வில்லடித்தல் என்னும் வழக்குணர்க. வடித்துக் கொண்ட சிலை. வடி - கூர்மை. கூரிய அம்பிற்கும் ஆம். வெஞ்சிலை - வெய்ய சிலை (வில்). கருவியின் ஆகும் செயலைக் கருவிமேல் ஏற்றியுரைத்த தாகும். புரம் - முப்புரம். அட்டவன் - எரித்தழித்தவன். சென்று அடையாத் திரு உடையான் :- ‘சென்றடையாத திரு வுடையான்’ (சம்பந்தர்) ‘சென்றடையாச் செல்வன்’ (6. 87. 1.) எங்கும் நிறைந்த திருவருட் செல்வத்தை இருந்தாங் கிருந்து அறிந்தாங்கறிந்து கொள்ளல் திருவருட் செல்வப்பேறு. அது பெறப் புடை பெயர்ச்சி வேண்டா. ஏகதேசத்திலிருக்கின்ற செல்வம் சென்று அடையப்படும். சிவனருளின்றேற் கிடையாத செல்வம் எனல் சிறவாது. ‘செல்லாத செல்வம் உடையாய் போற்றி’ (6. 57. 3) என்பதற்கு அது பொருந்தலாம். திருவா ரூர்த்திருமூலட்டானேசுவரர். செங்கண் பொருவிடை. அவ் விடையை ஊரும் பிரான். அவன் அடி. அடித்தொண்டர் :- 987, 989.

979. மாசு - அழுக்கு. ஏறிய - மிக்க; ஏறி மேற் படிந்த. மேனியர் - கரிய மேனியுடையவர். வன்கண்ணர் - அகத்து வன்மையைப் புறத்துக் காட்டும் கண்ணியர். மொண்ணர்-வழுக் கைத் தலையர். விட்டு - அகன்று. ஈசனையே-உடையவனையே. நினைந்து - எண்ணேயொழுக்குப் போல நீளத். தொடர்ந்துன்னி.

தேசனை யாரூர்த் திருமூலட்
டானனைச் சிந்தைசெய்து
பூசனைப் பூசுரர் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. 979

அருந்தும் பொழுதுரை யாடா
வமணர் திறமகன்று
வருந்தி நினைந்தர னேயென்று
வாழ்த்துவேற் குண்டுகொலோ
திருந்திய மாமதி லாரூர்த்
திருமூலட் டானனுக்குப்
பொருந்துந் தவமுடைத் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. 980

ஏத்துவேனுக்கும் - எடுத்துரைத்து வழிபடும் எனக்கும் (புண்ணியம் உண்டு கொலோ ?). தேசனை :- ‘மெய்ச்சுடருக்கு எல்லாம் ஒளி வந்த பூங்கழலுத்தரகோசமங்கைக் கரசே’ (திருவாசகம். 119). ஆரூர்த் திருமூலட்டானனை. சிந்தை செய்து - நினைத்தலையாற்றி. பூசனை - பூசித்தல். பூசனைப் பூசுரர் - பூசித்தலையுடைய பூதேவர். பூசுரராகிய தொண்டர். தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம். ‘பூசுரர்’ பூசிக்கும் தொண்டரைக் குறித்தது.

980. அருந்தும் பொழுது உரை ஆடா அமணர் :- அமண் சமயத்தினர் உண்ணும் பொழுது பேசிடார்; பிறர் பேசக் கேளார்; பேசவிடார். வெண்குன்றத்தில் ஒருவர் உண்ணும் பொழுது, அவர் வீட்டில் உள்ளாரோ ? என்று வாய்திறந்து நான் பட்டபாட்டை அவ்வெண்குன்றப் பெருமானே அறிவான். அமணர் திறம் :- சமண் சமயக்கோட்பாடு. அகன்று - நீங்கி. வருந்தி - பரசமயம்புக்குப் போக்கிய வீண்காலங் குறித்து நொந்து. நினைந்து - சிவன் கழலே சிந்தித்து. அரனே என்று - அரகர என்று சொல்லி. வாழ்த்துவேற்கு - வாழ்த்தும் அடியேனுக்கும். திருந்திய மாமதில் ஆரூர் :- திருவாரூர்த் திருமதில் பெரியதும் திருந்தியதும் ஆதலை உணர்த்திற்று. திருமூலட்டானனுக்குப் பொருந்தும் தவம் :- சரியை கிரியை

வீங்கிய தோள்களுந் தாள்களு
மாய்நின்று வெற்றரையே
மூங்கைகள் போலுண்ணு மூடர்முன்
னேநமக் குண்டுகோலோ
தேங்கமழ் சோலைத்தென் னூருர்த்
திருமூலட் டானன்செய்ய
பூங்கழ லானடித் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. 981

யோகமென்னும் இறப்பில்லாத தவம், (சிவ. போ. சூ. 8 அதி 1.) முற்செய்தவத்தான் ஞானம் நிகழும் :- "சரியை, கிரியா யோகங்களாகிய தவத்தினைச் செய்தவர்" (சிவஞானபாடிய வாசகம்) தவம் இவ்வாறு சரியை முதல் நால்வகைப்பட்டு அவற்றுள்ளும் பல்வேறு வகைப்பட்டு நிகழ்தல் (ஷை) தவம் உடைத் தொண்டர் :- சரியையாளர் கிரியையாளர், யோகியர். அத்தவத்தின் பயனாகிய ஞானத்தைப் பெற்றோரும் தொண்டருள் அடங்குவர். அவர்க்குத் தொண்டராம் புண்ணியம் வாழ்த்து வேற்கு முண்டுகோல்.

981. வீங்கிய தோள்கள் ;- வீங்கிய தாள்கள். தோள் களும் தாள்களும் மிக்க பருமையுடையன. அவற்றிற்கேற்ப மற்றைப் பகுதிகளும் பருத்தன எனக்கோள்க. அப் பரிய உடம்பு மறைப்பின்றி நிற்றல் பார்ப்போர்க்கு வெறுப்பை விளைக்கும். அன்றியும் ஊமையர்போல் பேசாமல் உண்ணு கின்ற நிலை அவ்வெறுப்பை மிகுக்கும். அதனை வீங்கிய...... நின்று வெற்றரையே மூங்கைகள் போல் உண்ணும் மூடர்" எனக்குறித்தார். பிறர்க்கு வெறுப்புண்டாக்குவோர் அறிஞ ராகார். மூங்கைகள் - ஊமையர். "மூடர் முன்னே நமக்குப் புண்ணியம் உண்டு கோலோ" என்க. தேங்கமழ் சோலை - தேன்மணம் கமழும் சோலைகள் ; தென் ஆரூர் - அழகிய திருவாரூர். சோலைகளையுடைய ஆரூர் ; திருமூலட்டானம் - திருமூலட்டானேசுவரர் ; செய்ய பூங்கழலான் - சிவந்த தாமரைப் பூவையொத்த பொலிவுடைய கழலணிந்த திருவடி யினன் ; அடித்தொண்டர் - திருவடித்தொண்டர் ; அடித் தொண்டர் முடித்தொண்டர் - அடிமன்னர், முடிமன்னர் என்னும்

பண்ணிய சாத்திரப் பேய்கள்
　　பறிதலைக் குண்டரைவிட்
டெண்ணில் புகழீசன் றன்னருள்
　　பெற்றேற்கு முண்டுகோலோ
திண்ணிய மாமதி லாரூர்த்
　　திருமூலட் டானனேங்கள்
புண்ணியன் றன்னடித் தொண்டர்க்குத்
　　தொண்டராம் புண்ணியமே　982

வழக்கினை இதன் 987 ஆவது திருவிருத்தத்திலும் திரு மந்திரம் 1601 லும் காண்க. " தொண்டர்க்குத் தொண்ட ராம் புண்ணியம் உண்டுகோலோ "

982. பண்ணிய சாத்திரப்பேய்கள் :- வேதாகமங்களைப் பழித்து அவற்றை முதலாகக் கொள்ளாமல் தாமே படைத்துக் கொண்ட சமய சாத்திரங்களை உடைய பேயர்கள். அவை பூருவ பக்கப் பொருள்களைச் சித்தாந்தமாகக் கொண்டுரைத்த புனைந்துரை நூல்கள் என்றவாறு. கடவுளை வழிபடாதாரும் கடவுள் இல்லை என்பாரும் பேயர் எனப்படுவர். சமணர்க்குக் கடவுள் வேறில்லை; அருகனே கடவுள். அருகன் மக்களுள் ஒரு வனாய் இருந்து அமண் நெறியில் வீடுபெற்றவன். " நாயேன் பலநாளும் நினைப்பின்றி மனத்துன்னைப் பேயாய்த் திரிந்து எய்த்தேன் " (7. 1. 2). 'நமச்சிவாய என்று உன்னடி பணியாப் பேயன்' (திருவாசகம் 404) " உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்தலகையா வைக்கப்படும் " (திருக்குறள்) என்பவற்றால் கடவுளை நினையாதாரும் இல்லை என்பாரும் பேயரெனப்படுதலை அறியலாம். பண்ணிய சாத்திரங்களுள் ஒன்று தருக்கம். அத் தருக்கமே பேசித் திரியும் பேய்கள் எனலும் ஆம். சாத்திரம் கேட்கில் என், " சாத்திரம் பலபேசும் சழக்கர்காள். " பறிதலைக்குண்டர் - " தலையெலாம் பறிக்கும் சமண்கையர். " சமணர் தலைமயிர்களைப் பறிப்பர். தலைமயிர் பறித்தல் சுடுபாறையிற் கிடத்தல் முதலியன நிர்ச்சரமென்னும் தவம் என்பர் ஆருகதர். எண் - அளவு; திண்ணிய மாமதில் ஆரூர் - (980); எங்கள் புண்ணியன் - எங்களுடைய சிவ

கரப்பர்கண் மெய்யைத் தலைபறிக்
கச்சுக மென்னுங்குண்டர்
உரைப்பன கேளாதிங் குய்யப்போந்
தேனுக்கு முண்டுகோலோ
திருப்பொலி யாரூர்த் திருமூலட்
டானன் றிருக்கயிலைப்
பொருப்பன் விருப்பமர் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. 983

புண்ணியத்தின் பயனாக உள்ளவன். புண்ணிய சொரூபியும் ஆம். புண்ணியன் அடித்தொண்டர். தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் உண்டு கோலோ.

983. திருமூலட்டானனும், திருக்கயிலைப்பொருப்பனும் ஆகிய சிவபெருமானுக்கு விருப்பு அமர்ந்த தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம், குண்டர் உரைப்பன கேளாது (அங்கு உய்யும் வழியின்றி) இங்கு உய்யப்போந்தேனுக்கும் உண்டு கொல் என்க. மெய்யைக் கரப்பர்கள் - உடலைப் பாயால் மறைப்பவர்கள். தலை - தலைமயிரை. சுகம் - இன்பம். என்னும் - என்று கருதும்; சொல்லும். குண்டர் - மூர்க்கர்; உரைப்பன - சொல்லும் உபதேசங்களை. கேளாது - பொருட்படுத்தாமல் "கேளாம் புறன்" (சிவ. போதம் அவையடக்கம்) அவர் வேள்ளறிவு இதுவென்றோழிவதேயன்றி அதனைக் கொள்ளாம் என்பார் கேளாம் புறன் என்றார். கேட்டல் - பொருளாகக் கோடல். அது "ஊறு கேளாது" என்பதனானும், கேளாரும் வேட்ப மொழிவதாம் என்பதனானும் அறிக. (சிவஞானபாடியம் தியாகராசர் வீற்றிருப்பதாதலின் எல்லாத் திருவும் பொலியும் ஆரூர் என்பார் திருப்பொலி ஆரூர் என்றார். செல்வத்திரு, கல்வித்திரு, ஞானத்திரு, பேரின்பத்திரு (சென்றடையாததிரு) சிவமேபெறுந்திரு, 'கடைக்கணித்து என் உளம் புகுந்த திருவந்த பாடித் தெள்ளேணம் கொட்டாமோ, அடியோம் திருவைப்பரவி' என்பன முதலியவற்றால், சிவபெருமானைத் திருவென்றதறிக. பொருப்பு - மலை, விருப்பு - பக்தி, பொருப்பன் விருப்பு - சிவ பக்தி, அமர் தொண்டர் :- வினைத்தொகை.

கையி லிடு சோறு நின்றுண்ணுங்
காத லமணரைவிட்
டுய்யு நெறிகண்டிங் குய்யப்போந்
தேனுக்கு முண்டுகோலோ
ஐய னணிவய லாரூர்த்
திருமூலட் டானனுக்குப்
பொய்யன் பிலாவடித் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. 984

குற்ற முடைய வமணர்
திறமது கையகன்றிட்
டுற்ற கருமஞ்செய் துய்யப்போந்
தேனுக்கு முண்டுகோலோ

984. கையில் இடுகின்ற சோற்றை நின்று உண்ணும் விருப்பத்தை உடைய அமணர். அமணரை விட்டு - சமணரை அகன்று; உய்யும் நெறி - பிறவி தீர்த்துப் பேரின்பம் எய்த ஆம் சைவப்பெருநெறி. கண்டு-திருவருளால் உணர்ந்து. அருள்சூலை நோய்வடிவில்வந்தது. 'முன்னமேமுனியாகி யெனையடையத் தவ முயன்றான் அன்னவனை இனிச் சூலை மடுத்தாள்வன் எனஅருளி'' (பெரிய. திருநா. 48) '' பண்டுபுரி நறறவத்துப் பழுதினள விறை வழுவுந் தொண்டரையாளத் தொடங்குஞ் சூலை வேதனை தன்னைக் கண்டருநெற்றியரருளக் கடுங்கனல்போ லடுங் கொடிய மண்டு பெருஞ் சூலையவர் வயிற்றினிடைப் புக்கதால் '' (ஷை 49.) '' மாமலையாள் மணவாளன் மலர்க்கழல் வந்தடையும் இவ்வாழ்வு பெறத்தரும் சூலையினுக்கெதிர் செய்குறை யென்கொல் '' (ஷை 73.) இங்கு - இச் சைவ நெறியில். உய்யப்போந்தேனுக்கும் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் உண்டு கொல்? ஐயன் - தலைவன், அடிகள், தியாகராசன், அணி - நீர்வளமும் நிலவளமும் உடைய பயிரழகு. பொய்யன்பில்லா அடித்தொண்டர் - திருவடிக்கு மெய்யன்புடைய தொண்டர்கள்.

985. குற்றம் உடைய அமண்; குற்றம் உடைய அமணர். குற்றம் - அநேகாந்தவாதமும் பிறவும். திறம் - சமயத்திறம். கையகலல் - சார்பு விட்டு நீங்கல். அகன்றிட்டு (- நீக்கிட்டு)

மற்போலி தோளா னிராவணன்
றன்வலி வாட்டுவித்த
போற்கழ லானடித் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. 985

திருச்சிற்றம்பலம்

என்றது நீக்கியதன் அருமை குறித்தது. உற்ற கருமம் :- சைவத்தினீங்கியக்கால் ஒரு கருமமும் உற்றிலது. சமணத்தின் நீங்கிச் சைவத்தின் மீண்டக்கால் உள்ள சூலை நோய் நீக்க, தமக்கையார்க்கு அறிவித்தல் முதலாகத் திருவதிகையை வழி பட்டது முடிய உள்ள செயல்கள். மல் - வலிமை. போலி - விளங்கும். தோளான் - இருபது தோள்களையுடையவன். தோளா ளுகிய இராவணன். இராவணனது வலியை வாடச் செய்த கழலான். வாடுதல், வாட்டுதல், வாட்டுவித்தல் என்னும் மூன் றற்கும் உள்ள வேறுபாடறிக. போற்கழல் - பொன்னுற் செய்யப் பட்ட வீரகண்டை. 'ஆணிக் கனகமும் ஒக்கும் ஐயாறனடித் தலமே' (898) கழல் அதனை அணிந்த திருவடிக்கு இடப் பொருளாகு பெயர் (தானி - இடப் பொருள்). கழலானடிக்குத் தொண்டு பூண்டொழுகுவோர் கழலானடித் தொண்டர். அவர்க் குத் தொண்டராம் புண்ணியம் உய்யப் போந்தேனுக்கும் உண்டு கொலோ என்க.

"பொய்புரை நூல்சில புகலுந் தீயமண்
கையர்கள் பிணித்துமுன் கடல கத்திடு
வெய்யகற் றேணியாய் மிதப்ப மேற்படு
துய்யசொல் லரசர்தாள் தொழுது போற்றுவாம்"

— கந்தபுராணம்

"முப்ப னைத்திற மூவரிற் காட்டியோர் முதலாய்க்
கப்ப னைத்துமா ருயிரெனக் கவைத்தரு வானேற்
கொப்ப னைத்திரு நாவினுக் கரசெனு மொருபே
ரப்ப னைத்தொழு தகற்றுது மும்மலத் தவலம்"

— உபதேச காண்டம்

# 102 திருவாரூர்

## திருப்பதிக வரலாறு

வாகீசர் திருவாரூர் வந்தடைந்தார். எல்லையில் தொண்டர் களிப்பால் எதிர்கொண்டனர். தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் உண்டென்று வந்தார். திருவீதியுள் அணைந்தார். தோரணவாயில் நண்ணினார். திருநெடுந்தேவாசிரியன்முன் வந்து இறைஞ்சினார். திருமாளிகை வாயிலிற் புகுந்தார். நீள்சுடர் மாமணிப்புற்றுகந்தாரை நேர் கண்டுகொண்டார். தொழுதார். விழுந்தார். கரசரணாதியங்கம் புளகங்கள் கொள்ளலானார். அன்பு எழுந்து கூர்ந்தது. அளியுற்றார். கண்களில் தண் துளிமாரிபொழிந் தார். திருமூலட்டானர் கழல் போற்றினார். மதுரவாக்கிற் சேர் வாகும் திருவாயிற் புனைந்த தீந்தமிழ் மாலைகள் பலவற்றுள் ஒன் றனில், நான்மறை நூற்பெருவாய்மை நம்பிநந்தியடிகள் திருத் தொண்டின் நன்மைப் பான்மை நிலையால், அவரைப் பரமர் திரு விருதத்துள் வைத்துப் பாடினார். அதுவே இத்திருப்பதிகம். (அப்பர் புராணம். 217-228). இதிற் பங்குனியுத்திரத் திருவிழாச் சிறப்பை உணர்த்துகின்றார். 21 ஆவது திருப்பதிகத்தில் மார்கழித் திருவா திரைத் திருவிழாச் சிறப்புணர்த்தினார்.

திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

வேம்பினைப் பேசி விடக்கினை யோம்பி வினைபெருக்கித்
தூம்பினைத் தூர்த்தங்கோர் சுற்றந் துணையென் றிருத்திர்
தொண்டீர்
ஆம்பலம் பூம்பொய்கை யாரு ரமர்ந்தா னடிநிழற்கீழ்ச்
சாம்பலைப் பூசிச் சலமின்றித் தொண்டுபட் டுய்ம்மின்களே.

986. வேம்பு:- உவமையாகுபெயர். வேம்புபோற்கசக்கும் பேச்சு. உலகியல் பற்றிய பேச்செல்லாம் முன் பேசிப்பேசி வெறுப்பைத் தருவனவேயாதலின், அவை வேம்பையொத்தன. வேம்பு கைப்பது போலக் கைப்பன. விடக்கு - ஊன்; 'வேற்று விகார விடக்குடம்பு' (திருவாசகம். 1:- 84) க்கு ஆகுபெயர்.

ஓம்புதல் - ஊண்புதல் என்பதன் மருஉ. ஊணுல் ஊனைப் பெருக்கல் ஊண்புதல். உண்ணுதல் ஊண்புதல் இரண்டும் இன்றும் வழக்கில் உள்ளன. அது 'வீண்பு - வீம்பு.' 'பாண்பு - பாம்பு' 'காண்பு - காம்பு' எனல் போல மருவி வழங்குகின்றது. வினை :- தொல்வினை, பழவினை (சஞ்சிதகருமம்) ; உள்வினை, நிகழ்வினை (பிராரப்தகர்மம்) ; மேல்வினை, வருவினை (ஆகாமியகருமம்) என்பவற்றுள், நிகழ்வினையது நுகர்ச்சியின் எய்திப் பெருகும் வருவினையைக் குறித்தது. சஞ்சிதத்தைப் பெருக்குமாறில்லை. ஆகாமியமே சஞ்சிதமாக மாறுகின்றது. நல்வினை - தீவினையாகிய ஆகாமியம் அறமும் மறமும் ஆகிய சஞ்சிதமாகமாறி இன்பமும் துன்பமும ஆகிய பிராரப்தமாகும். ஒன்பது தூம்புடைய உடலில், தூர்த்துத்தூர்த்துவரினும் தூராக் குழியான வயிற்றைத் தூம்பு எனறுர். 'தூராக்குழி' 'சோற்றுத் துருத்தி' 'தோலைவிலாச் சோற்றுத் துன்பக்குழி' 'பருத்திப் பொதியினைப் போலே வயிறு பருக்கத் தங்கள் துருத்திக் கறுசுவை போடுகின்றுர்' 'சோறிடுந்தோற்பை' சோறும் கறியும் நிரம்பிய பாண்டத்தை' (பட்டினத்துப்பிள்ளையார் பாடல்). சுற்றம் - சுற்றியிருப்பவர். 'காலாடுபோழ்திற் கழிகளைஞர் வானத்து மேலாடு மீனிற் பலராவர் - ஏலா இடர் ஒருவர் உற்றக்கால் ஈர்ங்குன்றநாட தொடர்புடையேம் என்பார் சிலர்.' (நாலடியார். 113). இருத்திர் - இருப்பீர். தொண்டீர் - தொண்டு புரிதலுடையீர். தொண்டீர் தொண்டுபட்டுய்மின்கள். ஆம்பல். அம்போது = ஆம்பற்பூ. அம்சாரியை. அழகெனல் ஒல்லாது. 'புளியம் பழம்' என்பதிலும் அழகெனலாமோ ? 'பொய்கை' 'வ..வி' 'கயம்' முதலியன வெவ்வேறுதலைப் 'பெருங்கதை' முதலிய நூல்களிற் காண்க. 'வண்டிமிர் பொய்கையும் வாவியும் கயமும் கேணியும் கிணறும் நீணிலைப் படுவும்' (பெருங். 3. மகத 3:- 5, 6) ஆரூர்ப் பொய்கை கமலாலயம் முதலியன. அடிநிழற்கீழ்த்தொண்டுபட்டுய்ம்மின்கள். சாம்பல்:- நீறுபட்ட தன்மேலும் நீறுபடாததும் அழியாததும் ஆகும் திருவெண் பொடி. 'பொடிகள் பூசிப் பாடுந் தொண்டர் புடைசூழ அடிகள் ஆரூர் ஆதிரைநாளால் அது வண்ணம்' (215). வேம்பினைப் பேசுதலும், விடக்கினை ஓம்புதலும், வினைகளைப் பெருக்குதலும் தூம்பினைத் தூர்த்தலும், சுற்றம் துணை என்று இருத்தலும் **நீங்கிச் சிவகீர்த்தனம், திருவருட்செல்வம், இறைபணி நிலை, திருவடித்துணை ஓங்க இருத்தல்.**

ஆராய்ந் தடித்தொண்ட ராணிப்பொ னாரு ரகத்தடக்கிப்
பாரூர் பரிப்பத்தம் பங்குனி யுத்திரம் பாற்படுத்தான்
நாரூர் நறுமலர் நாத னடித்தொண்டன் நம்பிநந்தி
நீராற் றிருவிளக் கிட்டமை நீணா டறியுமன்றே. 987

987. நார் ஊர் நறுமலர் நாதன் - தமது அன்பு மிக்க நறிய (உள்ளத்) தாமரைமேல் விளங்கும் சிவபிரான். நாதனடி - சிவனடி. அடித்தொண்டன் ஆகிய நம்பிநந்தி. 'நம்பிநந்தி' என்றுள்ளதை நோக்கி, அது 'நமிநந்தி' என மருவியதறிக. நம்பிநந்தி பங்குனியுத்திரம் பாற்படுத்தான் எனின், ஈற்றடியோடு இனிதியையாது. அடித்தொண்டர் ஆணிப் பொன்னும், பங்குனி யுத்திரம் பாற்படுத்தானும் நாதனடித் தொண்டனும் ஆகிய நம்பி நந்தி, நீரால் திருவிளக்கு இட்டமை நீள் நாடு அறியும் என்று கொள்க. பாரூர் பரிப்ப ஆராய்ந்து அடக்கி, ஆரூர் அகத்துப் பாரூர் அடக்கி. தம் பங்குனி யுத்திரம். பார் ஊர் - பாரில் உள்ள பல்லூர்கள். பரிப்ப - தாங்க. ஊர் பலவற்றினின்று திருவிழாக் காணப் புகுதரும் அன்பர் கூட்டத்தை ஆரூரகம் தாங்கி நிற்க. ஆரூரகத்துப் பாரூரெல்லாம் அடங்கவும், பாரூர் களை ஆரூர் பரிக்கவும் செய்தருளினார் நம்பிநந்தியடிகள்நாயனார். ஆராய்ந்து அடக்கிப் பரிப்பப் பாறபடுத்தான். ஆராய்ந்து பாற் படுத்தான் எனலுமாம். இது பங்குனியுத்திரம். மார்கழித் திருவாதிரை முன் ( 208 - 217 ) கூறப்பட்டது. அடித் தொண்டர்×முடித்தொண்டர். (989) 'பொடிக்கொண்டு பூசிப் புகுந்தொண்டர் பாதம் பொறுத்த பொற்பால் அடித்தொண்டன் நந்தியென்பான் உளன் ஆரூரமுதினுக்கே' (989) என்றதால், அடித்தொண்டன் என்றதன் காரணம் கூறப்பட்டது. 'அடி மன்னர் × முடிமன்னர்' 'முடிமன்னராகி மூவுலகமதாள்வர் அடிமன்னர் இன்பத்தளவில்லை கேட்கின்' (திருமந்திரம். 1601) ஆணிப்பொன் - 'ஆணிக்கனகம்' (898). அடித்தொண்டர் ஆணிப் பொன் - நம்பிநந்தியடிகள் நாயனார். ஆணிப்பொன் - உரையாணிப்பொன். அடித்தொண்டர்க்கு உரையாணிப்பொன். (மாற்றறிய உரைத்துக் காட்டவுள்ள சிறந்த பொன்) ஆவார். 'நீறுபுனைவாரடியார்க்கு நெடுநாள் நியதியாகவே, வேறு வேறு வேண்டுவன எல்லாம் செய்து மேவுதலால், ஏறு சிறப்பின் மணிப்புற்றில் இருந்தார் தொண்டர்க்காணி எனும் பேறு

பூம்படி மக்கலம் பொற்படி மக்கல மென்றிவற்றால்
ஆம்படி மக்கல மாகிலு மாரூ ரினிதமர்ந்தார்
தாம்படி மக்கலம் வேண்டுவ ரேற்றமிழ் மாலைகளால்
நாம்படி மக்கலஞ் செய்து தொழுதும் மடநெஞ்சமே. 988

திருநாவுக்கரசர் விளம்பப் பெற்ற பெருமையினர்.' (பெரிய. ஷை நாயனார் புராணம். 31) பங்குனியுத்திரத் திருவிழாவில் ஆரூரில் வந்துள்ள பாரூர் மக்களை அவரவர்க்குத் தக்க பால் (- இடம்) படச் செய்ததும் நீரால் திருவிளக்கிட்டதும் இதில் ஏத்தப்பட் டன. 'நாதரருளால் திருவிளக்கு நீரால் எரித்தார் நாடறிய.' (ஷை 14). இதன் மூன்றாவதடியில் 'நாரூர்' என்று உள்ளவாறு உணராது, பாற்படுத்தான் ஆரூர் எனப் பிரித்தது பிழையாகும். முதலடியில் 'ஆரூர்' என்றதும் னகர நகரப் புணர்ச்சியும் மோனையும் நோக்கிப் பிரிப்பது நன்று. மலர்போலும் அடியு மாம் :- 'செய்யார் கமலமலர் நாவலூர் மன்னன்' (7. 13. 11) 'அல்லியந் தாமரைத்தார் ஆரூரன்' (7. 22. 10) என்ற கருத் ததுமாம். 'எரியாய தாமரைமே லியங்கினாரும் இடைமருது மேவிய ஈசனாரே' (6. 16. 7) 'மலர்மிசையேகினான்' (குறள்). மலர் தொடுத்தற்குரிய நாரும் ஆம். இது பங்குனியுத்திரத் திருவிழாத் தொடக்கம் போலும். ஆரூரிற் பாரூரெல்லாம் அடங்கச் செய்த திறம் வியந்தது. 'அக் கணங்கள் ஆர அழல் வலங்கொண்ட கையான் (நம்பிநந்தியடிகள்) அருட்கதிர் எறிக்கும் ஆரூர்' (508). 'அடித்தொண்டன் நந்தியென்பான்' (989) 'நந்தி' (991) 'நந்தி பணிகொண்டருளும் நம்பன்' (6. 34. 4).

988. படிமம் - பிரதிமா என்னும் வடசொல்லின் திரிபு. பிரதியைப்படி எனல் பயின்ற வழக்கு. பிரதிமா - பிரதிமை, படிமை, படிமம் எனத் திரிந்தது. உபமா, உவமை, உவமம் என்பது போல்வது. கலம் - பூண். படிமக்கலம் - பிரதிமைக்குப் பூட்டும் பூண். அது பூவாலும் பொன்னாலும் செய்யப்படும். 'பொன்னாலாகாது விட்டாலும் பூவாலும் ஆகாதோ' என்பது இயலாதார் கடவுட்குச் செய்யும் பணிபற்றிய வழக்கு, பூம்படிமக் கலம் என்றும் பொற்படிமக்கலம் என்றும் படிமக்கலம் ஆம்.

துடிக்கின்ற பாம்பரை யார்த்துத் துளங்கா மதியணிந்து
முடித்தொண்ட ராகிமுனிவர் பணிசெய்வ தேயுமன்றிப்
பொடிக்கொண்டு பூசிப் புகுந்தொண்டர் பாதம் பொறுத்த
பொற்பால்
அடித்தொண்ட னந்தியென் பானுள னாரூ ரமுதினுக்கே. 989

என்று இவற்றால் படிமக்கலம் ஆம். இவற்றால் ஆம் - பூவாலும் பொன்னாலும் ஆம். ஆகிலும் - ஆனாலும். ஆரூர் இனிது அமர்ந்தார் - திருவாரூர்த் திருக்கோயிலை யினிது விரும்பிப் புற்றிடங் கொண்ட முதல்வர். படிமக்கலம் வேண்டுவரேல் - பிரதிமாபரணம் விரும்புவாரேன்னில் ; நெஞ்சமே ; நாம் ; தமிழ் மாலைகளால் படிமக்கலம் செய்து தொழுதும். நெஞ்சமே, படிமக்கலம் பூம்படிமக்கலம் பொறபடிமக்கலம் என்று இவற்றால் ஆம். ஆகிலும், ஆரூரினிதமர்ந்தார்தாம், வேண்டுவாரேனில், நாம் தமிழ் மாலைகளால் படிமக்கலம் செய்து தொழுதும் எனச் சொல்வகை செய்துகொளக. 'தொழுதும் மடநெஞ்சமே' என்பது 'தொழுதுமடநெஞ்சமே' என்று முன் மொழியீற்று மகரவொற்றுக் கெட்டு நிற்கும். அதையுணராமல், யகரவொற்றுடன் பதித்துவிட்டனர் சிலர். படிமக்கலம் என்பது முகம் பார்க்கும் கண்ணாடி பெரியோரிடம் சமர்ப்பிக்கும் உபகரணம் என்னும் பொருளது (தமிழ்லெக்ஸிகன்). படிமம் - பிரதிமை. 'படிமம் பொன்றிருப்ப நோக்கி' (சீவக. 2642) 'திருட்டாந்தம் நன்றியலுலகுக்கெல்லாம் படிமமா' (திருவாலவா. 47 : 3.) வடிவம். 'பவளத்தின் பருவரை பொற்படிமத்தான் காண்'. விரதம் :- 'பல்படிம மாதவர்கள்கூடி' (தேவாரம்). தூய்மை :- 'படிமப்பாதம் வைத்த வப்பரிசும்' (திருவாசகம். 2 : 76). என்பவற்றுள் ஈண்டுப் பொருந்துவதுளதேற்பொருத்திக்கொள்க.

989. 'அருமணித்தடம் பூண்முலையரம்பையரொடு அருளிப்பாடியர் உரிமையிற் றொழுவார் உருத்திர பல்கணத்தார் விரிசடை விரதிகள் அந்தணர், சைவர், பாசுபதர், கபாலிகள் தெருவினிற் பொலியுந் திருவாரூர்' (200) என்று முன்னர் அறிவிக்கப்பெற்றுள்ள நவகணத்துள், 'வேயொத்த தோளியர்' (189) ஆகிய 'அரம்பையர்' (200) அல்லாத ஏனைய கூட்டத்தினரை எண்கணமும் பின் படர ஏறேற்றமா ஏறிச் செல்லும்

கரும்பு பிடித்தவர் காயப்பட் டாரங்கோர் கோடலியால்
இரும்பு பிடித்தவ ரின்புறப் பட்டா ரிவர்கணிற்க
அரும்பவிழ் தண்பொழில் சூழணி யாரூ ரமர்ந்தபெம்மான்
விரும்பு மனத்தினை யாதென்று நானுன்னை வேண்டுவதே.

அந்தணனை நான் கண்டது ஆரூரே (190) என்றருளினர். அக் கணங்களுள் உருத்திரபல்கணத்தரை இங்கு 'முனிவர்' என்று குறித்தார். 'அந்தணர் என்போர் அறவோர் மற்றுஎவ் வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலான்' என்று திருவள்ளுவர் (திருக் குறள்) முனிவரைக் கூறியதுணர்க. அம் முனிவர் பலதிறத்தர். அவருள் ஒருதிறத்தார் சிவரூபம் பெற்றுடையவராய் உருத்திர பல்கணத்தார் ஆவர். அவரையே 'துடிக்கின்ற பாம்பு அரை (யில்) ஆர்த்துத் துளங்கா மதி(யைத் தலைமேல்) அணிந்து, (அதனால்) முடித்தொண்டர் ஆகி' (னர்) என்று குறித்தார். அவர் ஆரூரமுதினுக்குப் பணிசெய்வர். அவர் பணிசெய்வதேயும் அன்றி நம்பிநந்தியடிகள் பணிசெய்தலும் அமுதினுக்கு உளது என்பது இதனால் உணர்த்தப்பட்டது. முடித்தொண்டர் - மதியை முடிமேல் அணிந்து தொண்டு செய்யுமவர். அடித்தொண்டர் - அடியார் திருவடியைப் பொறுத்த பொற்புடைய தொண்டர். திருவெண் பொடிக் கொண்டு பூசிப் புகும் தொண்டர்களுடைய திருப்பாதங்களை முடிமேற் சூடிப் பொறுத்த பொலிவால் அடித் தொண்டன் என்றது காரணப் பெயர் ஆகும். நந்தி என்பான் - நந்தி என்று சிறப்பித்துக் கூறப்பெறுவார். ஆரூரமுதினுக்கு முனிவர் முடித் தொண்டராகிப் பணிசெய்வதேயும் அன்றி அடித் தொண்டன் நந்தியென்பானுமுளன் என்று உம்மை கூட்டி யுரைக்க. 'முனிவர்' 'முடித்தொண்டர்' என்ற பன்மையும் 'அடித்தொண்டன்' என்று 'நம்பிநந்தியடிகள்' ஆகிய ஒரு வரையே குறித்த ஒருமையும் அறிக.

990. கரும்பு - கரும்பு வில். பிடித்தவர் - கருவேள்; மன்மதனார். காயப்பட்டார் - நெற்றிக்கண் தீயால் காய்தலை யுற்றார். பிடித்தவர் சண்டேசுவர நாயனார். 'கோடலியால்' என்றதால் அரிவாட்டாயரைக் குறித்ததன்று. இன்பு:- 'தொண் டர்தமக்கு அதிபனாக்கி அனைத்தும் நாம் உண்டகலமும் உடுப் பனவும் சூடுவனவும் உனக்காகச் சண்டீசனுமாம் பதம் தந்தோம்

கோடிகோள் விதானங் கவரி பறைசங்கங் கைவிளக்கோ
டிடிவில் பெருஞ்செல்வ மெய்துவ ரெய்தியு மூனமில்லா
அடிகளு மாரூ ரகத்தின ராயினு மந்தவளப்
பொடிகோண் டணிவார்க் கிருளொக்கும் நந்தி புறப்படிலே.

என்று அங்கு அவர் போற்றடமுடிக்குத், துண்டமதிசேர் சடைக் கொன்றைமாலை வாங்கிச் சூட்டினர்' (பெரிய. சண்டேசுவர. புராணம். 56) என்றதிற் குறித்த இன்பம்; 'சிவமயமாய்ப் பொங்கியெழுந்த திருவருளின் மூழ்கி .....ஒளியில் தோன்றி'ய இன்பம். 'நம்பொருட்டால் ஈன்றதாதை விழஎறிந்தாய் அடுத்த தாதை இனி உனக்கு நாம்' (ஷை 55, 54). 'எம்பொருட்டுப்புரி பாவமும் புண்ணியமாக்கி எம்பால், விருப்பற்றவர் செய்அறமும் மற மாக்குவிப்பாய்' (காஞ்சிப். தழுவக். 77). 'மால்தான் எண்ணி வேள்மதனை ஏவ எறிவிழித்து' (சிவஞான சித்தியார் 53.) 'அரனடிக் கன்பர்செய்யும் பாவமும் அறமதாகும், பரனடிக் கன்பிலாதார் புண்ணியம் பாவமாகும், வரமுடைத் தக்கன்செய்த மாவேள்வி தீமையாகி, நரரினிற் பாலன்செய்த பாதகம் நன்மை யாய்த்தே' (ஷை 119) "ஈசற்கு நல்லோன் எறிசிலையோ நன்னுதால் ஒண்கருப்பு வில்லோன் மலரோ விருப்பு" (நன்னெறி. 2) "ஏற்றுங் கணையைமல ரேன்று கருதா மதனைத் துணையை விடுத்தேரித்த தோன்றல்" (திரு வெங்கையுலா 12, 13) இவர்கள் மன்மதனும் சண்டேசுவர நாயனரும். பெம்மான் என்றது அண்மைவிளி. விரும்பும் மனத்தாய். மனத்து விருப்புமாம். யாது என்று-கரும்பு இரும்பு களுள் நீ விரும்பும் பொருள் எப்பொருள் என்று (அறிந்து). நான் உன்னை யாது என்று வேண்டுவது? 'யாதொன்று' 'வேண்டுவனே' என்றும் பாடம் உண்டு.

991. குடி - குடிகளும், கோள்கின்ற விதானமும், கவரியும் பறையும் சங்கும் கைவிளக்கும் இவற்றோடு அழிவில்லாத பெருஞ்செல்வமும் அடைவோர் (செல்வத்தில் சிறந்த மக்கள்) பலர் திருவாரூரில் வந்திருப்பர். வந்திருந்தாலும் ஊனம் இல்லா ஒருவனுகிய திருமூலட்டானனும் (தியாகராசனும்) திருவாரூரகத்தே வீற்றிருப்பினும் நம்பிநந்தியடிகள் நாயனர் ஆரூரகத்தே இராமல் அதன் புறத்தே படில் திருவெண்ணீறு பூசும் அடியார்க்கு அங்கு ஒளி இராது. இருளை நிகர்க்கும்.

சங்கோலிப் பித்திடு மின்சிறு காலைத் தடவழலில்
குங்குலி யப்புகைக் கூட்டென்றுங் காட்டி யிருபதுதோள்
அங்குலம் வைத்தவன் செங்குரு திப்புன லோடவஞ்ஞான்
றங்குலி வைத்தா னடித்தா மரையென்னை யாண்டனவே 992

விதானம் - மேற்கட்டி. கவரி வெண்சாமரம். பறை - பஞ்சமுக வாத்தியம் முதலியன. சங்கம் - சங்கநாதம். கைவிளக்கு :- திருக்கோயில்களிலும் திருமடங்களிலும் பார்த்து இதன் அமைப்பை அறிக. இடிதல் - அழிதல். இடிவு இல் - அழிவு இல்லாத. எய்துவர் எய்தியும் - பெறுவோர் அடைந்தும். ஊனம் இல்லா அடிகள் :- "வேலை நஞ்சுண்டு ஊனம் ஒன்றில்லா ஒருவன்"(1057) ஆகிய கடவுள். ஆரூர் அகத்தினர் ஆயினும்- திருவாரூரிலே இருப்பவர் ஆயினும். நந்தி புறப்படில - நம்பி நந்தியடிகள் நாயனார் திருவாரூரின் அகத்திராமல் புறத்தே செல்வாராயின், அம் தவளப் பொடி கொண்டு - திருவெண்ணீற்றுப் பொடியைக் கைக்கொண்டும் (அன்பு கொண்டும்) அணிவார்க்கு - அழகுறப் பூசும் அடியார்க்கு 'பொடிக்கொண்டு பூசிப் புகும் தொண்டர்' (989). இருள் ஒக்கும் - திருவிளக்கிடாமையால் இருண்ட இடத்தை நிகர்க்கும். 'ஆவிதனிலஞ் சொடுக்கி யங்கணனேன்ருதரிக்கும் நாவியல்சீர் நமிநந்தி யடிகள் (1—62—6).

992. தொண்டீர் என்று வருவித்து ஒலிப்பித்திடுமின் என முடிக்க. முன் (989) தொண்டிர் உய்மின்கள் என்றதறிக. சிறுகாலை - விடியற்காலை. தடவழல் :- கனலேரி. குங்கிலியப் புகைக் கூட்டு என்பது ஒரு தொகைநிலைத் தொடர். அது காட்டி என்னும் வினைக்குச் செயப்படுபொருள். காட்டி ஒலிப்பித்திடுமின். ஒலிப்பித்தலென்னும் வினைக்குச் செயப்படுபொருள் சங்கு. இரண்டும் நிகழ்த்தும் வேலை சிறுகாலை. இவ்வாறு ஏவுதலுக்கு ஏது, தம்மையாண்ட திருவடித் தாமரை தொண்டரையும் ஆட்கொள்ளவேண்டும் என்னும் அப்பரது கருணைநோக்கம். இருபது தோள் அங்குலம் - தோள்களில் அழகிய கயிலையை; இருபது தோள்களாகிய அழகிய கூட்டம் எனலுமாம். உலம் - திருக்கயிலையை ; திரண்ட கல்லைப் போல. உலம் வைத்தவன் - திரண்ட கல்லைப்போலும் வலிய தோள்களை வைக்கப்பெற்றவன்.

தோள்களுக்கு உலம் உவமையாகும். செங்குருதிப்புனல் - சிவந்த ரத்தநீர். ஞான்று - நாளன்று. அங்குலி - விரல் ஈண்டுத் திருக்காற் பெருவிரலைக் குறித்தது. வைத்தான் - சிவபெருமான்; வினையாலணையும் பெயர். வைத்தானடி :- ஆறனுருபு தொக்கது. அடித்தாமரை - உருவகம். ' தூபம் விதியினால் இடவல்லார் ' (307).

அறப்பெருஞ் செல்வி பாகத் தண்ணலஞ் செழுத்தா லஞ்சா
மறப்பெருஞ் செய்கை மாறு வஞ்சக ரிட்ட நீல
நிறப்பெருங் கடலும் யார்கரு நீந்துதற் கரிய வேழு
பிறப்பெனுங் கடலும் நீத்த பிரானடி வணக்கஞ் செய்வாம் "

— திருவிளையாடற்புராணம்

தேவரையு முனிவரையுந் துளவ மார்பிற்
றிருவரையுங் குாவரையுஞ் செல்வ மிக்கோர்
யாவரையு மேவல்கொளு நெற்றி நாட்டத்
திறைவரைமுன் னிகழ்ந்திருந்த வெண்ணங் தோன்றச்
சேவரையு நெடுங்கொடியின் றகைமை யெல்லாத்
திசைவரையுஞ் செலத்தமிழன் செய்யுள் பாடு
நாவரையர் புகழ்மொழிகள் வரைந்து கூறி
நயந்தவர்செய் திருத்தொண்டு வியந்து வாழ்வாம் "

—சேது புராணம்

ஆலநிழ லமர்ந்தபிரான் அருளி னாலே
யன்றேருகற் புணையாக வாழ நீந்தி
ஞாலமுழு துய்ந்தருள நவை யிலாத
நறுந்தமிழின் பலமினிது நாளு நல்கிச்
சாலமிகு பாவமுது வேனில் வெம்மைத்
தழலாற வாகமநூற் றருமஞ் சான்ற
சீலநிறை சைவநெறி நிழல்ப ரப்புந்
திருநாவுக் கரசினடி சிந்தை செய்வாம் "

—திருவாரூர்ப் புராணம்

# 103 திருநாகைக்காரோணம்

## திருப்பதிக வரலாறு

வாகீசர் திருமறைக்காட்டில் இருந்து வழிபட்டுப் பெயர்ந்து திருவீழிமிழலைத்தாணுவின் கழலைச் சார நினைந்து மறைக்காட்டுச் சோதியருள் பெற்று அகன்றுபோய் ‘ வேலைவிடம் உண்டவர் வீழிமிழலை மீண்டும் செல்வன் ’ எனக் கூறிச்செல்லும் வழியில் பணிந்த தலங்களுள் ஒன்றான திருநாகைக்காரோணத்திற் பாடிய வண்டமிழ் இத் திருப்பதிகம். (புராணம். 290, 91).

### திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

வடிவுடை மாமலை மங்கைபங் காகங்கை வார்சடையாய்
கடிகமழ்சோலை சுலவு கடனாகைக் காரோணனே
பிடிமதவாரணம் பேணுந் துரகநிற் கப்பெரிய
இடிகுரல் வெள்ளேரு தேறுமி தென்னைகோ லெம்மிறையே.

993. வடிவுடைமாமலைமங்கைபங்கா - அழகுடைய பெரிய இமாசலகுமாரிபாகா. கங்கைவார் சடையாய் - கங்கையின் ஆற்றலைத் தடுத்த நீள்சடையானே. கடிகமழ் சோலை சுலவுகடல் நாகைக்காரோணனே - மணம் வீசும் சோலைகள் சூழ்ந்த கடல் அருகேயுள்ள திருநாகையிலே திருக்காரோணம் என்னும் திருக் கோயிலை உடையவனே. காரோணம் - காயாரோகணம் என்பதன் திரிபு என்றும் காயம் உடம்பு. ஆரோகணம் ஏற்றுக்கொள்ளுதல் என்றும் புண்டரிகமகாமுனிவரை இறைவன் தந் திருமேனியில் ஏற்றுக்கொண்டருளினன் என்றும் நாகம் (ஆதிசேடன்) பூசித்த தால் பெற்ற பெயர் நாகை என்றும் பெரிய புராண உரையில் சிவக்கவிமணி உரைத்தார். ‘ ஒரு ரிஷியைக் காயத்தோடு வானுலகுக்கு ஆரோகணம் செய்யும்படி இறைவன் அருளியதால் காயாரோகணம் என்ப. அது மருவிக் காரோணம் எனத் தலப் பெயருட் சேர்ந்தது ’ (தலச் சிறப்பகராதி 165 அடங்கன் முறை. பக். 1224) என்று அறிவு சான்ற திரு. ம. பாலசுப்பிர மணிய முதலியார் B. A., B. L., அவர்கள் எழுதியிருப்பதறிக.

கற்ருர் பயில்கட ஞுகைக்கா ரோணத்தெங் கண்ணுதலே
விற்ருங் கியகரம் வேனெடுங் கண்ணி வியன்கரமே
நற்ரு ணெடுஞ்சிலே நாண்வலித் தகர நின்கரமே
செற்ருர் புரஞ்செற்ற சேவக மென்னேகொல் செப்புமினே994

கார்ஓணத்தான் என்னும் தமிழ்ச் சொல்லிரண்டன்புணர்ச்சியாகத் தோன்றுகின்றது. 'ஓணத்தான்' என்றதை எதுகையில் வைத்து, 'பாணத்தான் மதில் மூன்றும் எரித்தவன் பூணத்தான் அரவாமை பொறுத்தவன் காணத்தான் இனியான் கடல்நாகைக் காரோணத்தான் என நம் வினை ஓயுமே' என்று பாடியருளிய தால், அது தமிழாதல் புலப்படும். காஞ்சிப். காயாரோகணப். 6. பார்க்க. 'காரோணத்தான்' என்பதன் முதலெழுத்தை ஈற்றில் நிறுத்தி, ரோணத்தான் என்று அடிமுதலில் அமைப்பது 'கெடில வீ ரட்டனுரடி சேருமவருக்கே' என்பதுபோலும். 'திருவோணம்', 'ஓலமார் கங்கையாதி ஓணநீராடல் எல்லாம்' (சேதுபுராணம். தோத்திர. 48) என்பவற்ருல் 'ஓணம்' என்னும் தமிழ்ச் சொல்லாட்சியை உணர்க. எம் இறையே - எம் கடவுளே. பிடி - பெண் யானே. மதவாரணம் - களிறு. பேணும் துரகம் - விரும் பப்படும் குதிரை. யானேயும் குதிரையும் இருக்க எருதின்மேல் ஏறுவது ஏனே? எருதின் குரலோசையும் நிறமும் அறிவிப்பது இடிகுரல் வெள்ளேருது. திருநாவுக்கரசு நாயனுர் திருநாகைக் காரோணத்தில் இறைவன் விடையேறித் திருவீதி வலம் வரும் திருநாளில் சென்று இவ்வாறு பாடியருளினுர்போலும். ஓணப்பிரான் (திருமால்) வழிபட்டதாற் 'காரோணம்' என்று கோயிலேக் குறித்தனர்போலும். காஞ்சிப். அந்தர்வேதிப் 36-38.

994. கற்றவர்கள் பெருகிய கடலருகேயுள்ள திருநாகைக் காரோணத்திலே எழுந்தருளிய கண்ணுதலே பெருமானே வில்லேந்திய திருக்கை வேற்கண்ணியாகிய என் தாயினுடைய அகல் தடக்கையேயாகும். அந் நெடுவில்லின் நாணே வலித்த திருக்கை நின் செங்கையேயாகும். திரிபுரத்தை அழித்த வெற்றி எவர் கைக்கு உரியது? கற்ருர் - 'கற்றல் கேட்டல் உடையார் பெரியார்' (சம்பந்தர்) பிறவியறுக்கும் திருவடியைத் தொழும் அறிவைத் தோற்றும் சிவாகமங்களேக் கறறவர்.

தூமென் மலர்க்கணை கோத்துத்தீ வேள்வி தொழிற்படுத்த
காமன் பொடிபடக் காய்ந்த கடனாகைக் காரோணநின்
நாமம் பரவி நமச்சிவாய வென்னு மஞ்செழுத்தும்
சாமன் றுரைக்கத் தருதிகண் டாயெங்கள் சங்கரனே. 995

பயில் - பயின்ற; மிக்க. கண்ணுதல் - நெற்றிக்கண்ணன். அன்மொழித் தொகை (கண்ணுதலான்). வில் தாங்கிய கரம் - வில்லை ஏந்திய கை. வேல்நெடுங் கண்ணி - வேல்போலும் நெடிய கண்ணையுடையவள். வியன்கரமே - அகன்ற கையே; தடக்கையே. நல்தாள் நெடுஞ்சிலை - நல்லதாளால் மிதிக்கப் பட்ட நெடியவில். நன்று ஆள்நெடுஞ்சிலை என்று பிரித்துப் பொருள்கொள்ளலும் ஆம். அது வில்லாண்மை குறிப்பது. வலித்தகரம் என்பதில் தகரம் விட்டிசைக்கப்படும். படாதேல் தளைகெடும். செற்றார் - பகைவர். புரம் - திரிபுரம். செற்ற - அழித்த. சேவகம் - வீரம். என்னை - யாது; எதனுடையது. கொல் அசை. செப்புமின் - சொல்லுமின்.

995. தூயமெல்லிய பூங்கணையைக்கோத்து எரியோங்குந் தொழிலை உண்டாக்கிய மன்மதன் சாம்பலாகும்படி சுட்டகடல் நாகைக்காரோண, உன் திருநாமத்தை வாழ்த்தித் திருவைந் தாகிய நமச்சிவாய என்னும் திருமந்திரத்தை, யான் உடலின் நீங்கும் அந்நாளில் உரைக்கும் ஆற்றலைத் தந்தருள்வாய், எங்கள் சங்கரனே. தூ - தூய்மை. மென்மலா - மெல்லியனவாகிய பூக்கள். மலர்க்கணை-பூக்களாகிய அம்புகளை. கோத்து-கரும்பு வில்லின் நாணில் வைத்துத்தொடுத்து. தீ வேள்வி - அக்கினி காரியம். தொழிற்படுத்த - தொழிற்படுத்திய; தொழிற்படச் செய்த. வேள்வித்தொழில் என்றிருப்பது சிறந்தது. 'படுத்த காமம்' பெயரெச்சத் தொடர். பொடி - சாம்பல் 'வெந்துபொடி யான காமனுயிர் இரதி வேண்டப் புரிந்தளித்த புண்ணியனே' (பெரியபுராணம் 2379) காய்ந்த தீக்கண்ணால் எரித்த - நாமம். திருப்பெயர். பரவி - வாழ்த்தி. திருவஞ்செழுத்து - இத் திரு விருத்தத்தில் கூறியது தூல பஞ்சாக்கரம். சாம் அன்று - அடியேன் இவ்வுடலின் நீங்கும் அந்நாளில் 'வீடும் நாள்' (629) 'சாதல்நாள்' (733). உரைக்கத் தருதல் :- ஐயினால் மிடறு

பழிவழி யோடிய பாவிப் பறிதலைக் குண்டர் தங்கள்
மொழிவழி யோடி முடிவேன் முடியாமைக் காத்துக்கொண்
கழிவழியோத முலவு கடலுநாகைக் காரோணவேன்    [டாய்
வழிவழி யாளாகும் வண்ண மருளேங்கள் வானவனே. 996

அடைப்புண்டுஆக்கைவிடும் நிலையில் ஆவியார் தளர்ந்து நின்னை மறந்துவிடாதவாறு உனக்கு ஆளாகி அன்புமிக்கு உன் திருநாமம் அஞ்சும் சொல்லிக் கசிவினுல் தொழச்செய்தல். சங்கரன் - இன்பத்தை விளைப்பவன். 'உன்னை நினைந்தே கழியும் என் ஆவி கழிந்ததற்பின் என்னை மறக்கப்பெருய்' (1052). 'நான் துஞ்சும் போழ்து நின் நாமத் திருவெழுத் தஞ்சுந்தோன்ற அருளும் ஐயாறரே!' 'மந்திரம் நமச்சிவாய ஆக நீறு அணியப்பெற்ருல் வேந்தறும் வினையும் நோயும் வெவ்வழல் விறகிட்டன்றே(749). 'எந்தையார் திருநாமம் நமச்சிவாய என்று எழுவார்க்கு இரு விசும்பிலிருக்கலாமே' (6-93-10). 'செம்பவளத் திருமேனிச் சிவனே என்னும் நாவுடையார் நமை ஆளவுடையார்' (6-98-6). 'சிவனேனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி யெம்மான் ... அவன்றனை...... பவனேனும் நாமம் பிடித்துத் திரிந்து பன்ருள் அழைத்தால் இவன் எனைப் பன்ருள் அழைப்பு ஒழியான் என்று எதிர்ப்படுமே' (1058) 'சிவாயநம என்றிருக்கினல்லால் ...... அத்தனருள் பெறலாமோ' (917). 'சிவாயநம என்று நீறணிந் தேன்' (918). 'மறவாது சிவாய என்று எண்ணினுர்க் கிடமா எழில் வானகம் பண்ணினுரவர் பாலைத்துறையரே' (5-51-6)

996. பழியின் வழியே ஓடிய பாவிகளாகிய தலைமயிர் பறிக்கும் குண்டர்களுடைய சொற்படியோழுகி அழிவேனின் அழியாமல் காத்து ஆட்கோண்டருளினுய். கழிவழியே ஓதம் உலவுகின்ற கடலருகே உள்ள நாகைக்காரோண! வழிவழி ஆள் ஆகும் வண்ணம் என்? வழிவழியாக நான் உனக்கு ஆளாகும் முறைமை யாது? எங்கள் வானவனே அருள். 'கருவேலை தன்னைக் கடப்பர் உலகில் மருவாத இன்பத்துள் வைத்தகுருவின் அடியார் அடியார் அடியார் அடியார் அடியாரைச் சார்ந்தஅவர்' (துகளறுபோதம்) 'திருவாரூரில் மழவிடையார்க்கு வழிவழியாளராய் மணஞ்சேய் குடிப்பிறந்த பழவடியாரோடுங்கூடி யெம்மானுக்கே பல்லாண்டு கூறுதுமே'. (திருப்பல்லாண்டு.11)

சேந்துவர் வாய்க்கருங் கண்ணிணை வெண்ணகைத் தேன்
வந்து வலஞ்செய்து மாநட மாட மலிந்த செல்வக் [மொழியார்
கந்த மலிபொழில் சூழ்கட லுநாகைக்கா ரோணமென்றும்
சிந்தை செய்வாரைப் பிரியா திருக்குந் திருமங்கையே. 997

'என்றும் என்றும் மாண்டு மாண்டு வந்து வந்து மன்னநின் வணங்கவே வேண்டும் நினகழற்கண் அன்பு.' (திருவாசகம் 78) 'சிறந்து உன்னைத் தெய்வமெனக் கோள்ளாத சீத்தை பிறந்த குலம் பிறவா நின்ற குலம் பீளினுறந்த குலத்து முமையொரு பால் மேயாய் மறந்தும் பிறவாத வாழ்வெனக்கு வேண்டுமால்'. (காஞ்சிப். தழுவக். 238)

997. செம்பவளம்போலும் வாயினையும் கரியகண்ணிணையையும் வெண்பற்களையும் தேன்போலும் இனிய மொழியையுமுடைய மகளிர் வந்து வலம்புரிந்து சிறந்த நடனஞ்செய்ய நிறைந்த செல்வத்தையுடைய மணம் மிக்க சோலைகள் சூழ்ந்த கடலையடுத்த நாகையிலுள்ள காரோணத்தை எப்பொழுதும் நினைத்தலைச் செய்கின்ற அன்பர்களைத் திருமங்கை பிரியா திருப்பாள். துவர் - பவளம்; "வளை வளர்கையன் விழிவளர் பாற்கடல் வார்துவரின் - கிளைவளர் காட்சிய சேயரிக்கண்" (தணிகைப். களவு. 206). இணை - இரண்டு. நகை - பல். நகுதல் (- விளங்குதல்). பற்றிய காரணப்பெயர். நகைத்தல் என்பதறிக. சேந்துவர்வாய் கருங்கண் வெண்ணகை என்றது முரண். தேன்மொழி உவமைத்தொகை. மாநடம் - அழகிய கூத்து. காரோணத்தில் வந்து வலஞ்செய்து நடமாடும் மகளிர் எழிலும் மொழியும் உணர்த்தப்பட்டன. திருமங்கை என்றது இலக்குமியை அன்று. பரமானந்தாவேசமாகிய மகாமோட்ச லட்சுமியை' (சிவாத்துவித சைவபாடியம் பக்கம் 555). சிவாலயங்களிலும் சிவபூசையிலும் மகாலட்சுமியென வழிபடப்பெறுவதும் இச் சிவமேபெறும் திருவேயாகும். 'இருவரும் ஒருங்கே இறவருங்காலை எந்தையே ஒடுக்கி ஆங்கவர்தம் உருவம் மீதேற்றிக் கோடலாற் காயாரோகணம்' மாலும் மலரவனும், 'எம்மை... நினது காயத்துறுத்துக என்று இறைஞ்சி நோற்றுர் ... அவ்வாறருளினன். அதனுல் காயாரோகணம்' 'நோற்போர் கயிலையை மெய்யோடெய்திக் குடிகோளும் ஆற்றினுனும் அப்பெயர் கோண்டது' [காஞ்சிப். (1) காயா. 6. (2) அந்தரு. 37-8]

பனைபுரை கைம்மத யானை யுரித்த பரஞ்சுடரே
கனைகடல் சூழ்தரு நாகைக்கா ரோணத்தெங் கண்ணுதலே
மனைதுறந் தல்லுண வல்லமண் குண்டர் மயக்க நீக்கி
எனைநினைந் தாட்கொண்டாய்க் கென்னினி யான்செயு
மிச்சைகளே, 998

சீர்மலி செல்வம் பெரிது டையசெம்பொன் மாமலையே
கார்மலி சோலை சுலவு கடனாகைக் காரோணனே
வார்மலி மென்முலை யார்பலி வந்திடச் சென்றிரந்து
ஊர்மலி பிச்சைகோ டுண்பது மாதிமை யோவுரையே. 999

998. பனையையொத்த கையையுடைய களிற்றை யுரித்த மெய்யொளியே! முழங்குகின்ற கடலடுத்த திருநாகைக்காரோணத்தில் உள்ள எம் கண்ணுதலே மனைதுறந்து இரவில் உண்ணுதலில் வல்ல அமணர்களாகிய மயக்குரையின் நீக்கி என்னையும் ஒரு பொருளாக எண்ணி ஆளாகக்கொண்டருளிய நினக்கு இனியான் செய்யும் இச்சைகள் என்? 'மனைதுறந்து அல்லுண வல்லமணர்' (977) பனை:- மரம். 'பனைக்கைமும்மத வேழம் உரித்தவன்' பரஞ்சுடர் - மெய்யொளி. 'மெய்ச்சுடருக் கெல்லாம்' ஒளிவந்த பூங்கழ லுத்தரகோசமங்கைக்கரசே' (திருவாசகம் 119). கனைகடல் - முழங்குங்கடல்; வினைத்தொகை. கண்ணுதல் - கண்ணுதலான். அன்மொழித்தொகை. மனை துறந்து - வீட்டைத் துறத்தல். மனைவியைத் துறத்தல். அல் - இரவு. உண - உண்டி. இரவிலுண்ணுதவர் அமணர். குண்டர் - குண்டாககையர்; மூர்க்கர். மயக்கம் - மயக்குரை. ஆகுபெயர். மயக்குரையின் நீக்கி. என்னை நினைந்து அடிமை கொண்டு என் இடர்கெடுத்து நின்னை நினையத் தந்து ஆட்கொண்ட நினக்கு, இனியான் செய்யும் இச்சைகள் என்? இச்சைகளால் ஆம் செயல் (கைம்மாறு)களைக் குறித்தலின், இச்சைகள் என்றது காரண ஆகுபெயர்.

999. கனம் மிக்க செல்வம் பெரிதும் உடைய செம்பொன் மாமலையே முகில் தவழும் சோலைகள் சூழும் கடலடுத்த திருநாகைக் காரோணனே! வீக்கிய கச்சைத் தாக்கிய மெல்லிய கொங்கையையுடைய மங்கையரும்வந்து பிச்சையிடப்போயிரந்து

வங்க மலிகட ஞகைக்கா ரோணத்தெம் வானவனே
எங்கள் பெருமானேர் விண்ணப்ப முண்டது கேட்டருளீர்
கங்கை சடையுட் கரந்தாயக் கள்ளத்தை மெள்ளவுமை
நங்கை யறியிற்போல் லாதுகண் டாயெங்க ஞயகனே1000

ஊர்தோறும் பிச்சைகொண்டு உண்பது மாதிமையோ? சொல்வா யாக. மாதிமை -?. மண்டலமாவோடலை மாதி என்பதால், அத்தன்மையைக் குறித்த பண்புப் பெயர் எனினும் ஈண்டுப் பொருந்தாது. சீர் - கனம்; மேன்மை. செல்வம் பெரிது - பெருஞ்செல்வம். செம்பொன் மாமலையே என்று விளித்ததன் கருத்து விளங்காதோ? சோலைமேலுறங்கும் கார் (மேகம்) மிகுதி நோக்கிக் கார்மலி சோலை என்றார். சுலவு - சூழும். வார் - கச்சு. வந்து பலி இடச் சென்று இரந்து பிச்சைகொண்டு உண்பது மாதிமையோ (- பெருமையோ). ஊர்தோறும் கொண்ட பிச்சையாதலின் பலி (பிச்சை) என்றார்.

1000. வங்கம் - கப்பல். மலி - நிறைந்த ; மிக்க. திரு நாகைக் காரோணத்து எம் வானவனே ! எங்கள் பெருமானே ! எங்கள் நாயகனே ! ஒரு விண்ணப்பம் உண்டு. அதைக் கேட்டருள்வீர். சடையுள்ளே கங்கையை மறைத்தாய் ; அம் மறைத்த கள்ளத்தை உமை நங்கையார் மெள்ளத் தெரிந்து கொண்டால், பொல்லாங்கு விளையும். இடப்பால் எழிலுடைய நங்கையொருத்தி யிருக்க அவளறியாவாறு கங்கை என்னும் மற்றொருத்தியைச் சடைமறைவில் வைத்தொழுகுங் கள்ளம் அவ்வுமைநங்கையுள்ளம் அறியக்கூடும். கூடின் உனக்குப் பொல்லாங்கு விளையும். நலம் × பொலம் ; நன்று × தீது ; நன்மை × தின்மை ; தீமை ; நன்கு × தீங்கு ; நல்லாங்கு × பொல்லாங்கு என்பன இருவழக்கிலும் அறிக. 'அரும்பாசம் நன்மைதின்மை ஆகும்' (சொக்கநாத வெண்பா. 82) நல்லாங்கு 'தீங்கிதென நாடறியேன்' (ஷை 53) 'இன்மை உயிர்க்குயிர் நீயின்மை யிருந்தியற்றின் நன்மை தின்மைக் கேதுவோ நான்' (சிவபோகசாரம். 83) 'நன்மை தின்மை ஆட்டுவது நாடாதறி விலார்தஞ்செயலாய் நாட்டுதல்போல் உண்டோநகை' (ஷை 90)

கருந்தடங் கண்ணியுந் தானுங் கடனாகைக் காரோணத்தான்
இருந்த திருமலை யென்றிறைஞ் சாதன் றெடுக்கலுற்றான்
பெருந்தலை பத்து மிருபது தோளும் பிதிர்ந்தலற
இருந்தரு ளிச்செய்த தேமற்றுச் செய்தில னெம்மிறையே.

திருச்சிற்றம்பலம்

1001. இராவணன், இறைவனும் இறைவியும் வீற்றிருந்த திருக்கைலைமலையை, அவ்விருவரும் எழுந்தருளியிருக்கும் அருளிடம் எனக்கருதிப் போற்றி நன்றியறிதல் செய்யாது, அவர் அசைய அம்மலை அசைய எடுக்கத்தொடங்கினான்; அன்று பத்துப் பெருந்தலைகளும் இருபது தோள்களும் பிதிர்ந்து அலறும்படி எம் இறைவன் செய்தது யாது எனில், பிறிது யாதும் இல்லை. இருந்தருளிச் செய்ததே ஆகும். 'கருந்தடங்கண்ணி' என்னும் அழகிய தூய தமிழ்ப் பெயர், அப்பர் அடிகள் காலத்தின் முன்னரே வழங்கியதென்பதுணர்க. அஃது இப்பொழுது நீலாயதாட்சி என்று வழங்குகின்றது. இவ்வாறு தமிழ்மொழி யிடத்தைக் கவர்ந்து, தாம் நின்று அவற்றை ஒழித்த வடமொழிக்களவில்லை. இரு மொழிக்கும் முதற்குரவர் ஆகிய கண்ணுதலார், ஒரு மொழியால் மற்றொரு மொழி ஒழியப் படைத்தாரல்லர்.

வலஞ்சுழி யுந்தி வயிற்றெழு நோயு
　மயங்கிடு பிறவிவெந் நோயுங்
கலங்கியே யகலக் கரைபொரு திரங்கு
　கருங்கட லுண்முளைத் தெழுந்த
விலங்கொளிப் பவள வரைநிகர் முதலை
　யின்னிசைத் தமிழினாற் பாடிப்
புலன்களைங் கிளையும் வென்றுமெய்ஞ் ஞானம்
　பூத்தவன் பொன்னடி தொழுவாம்''

—வாயு சங்கிதை

# 104 திருவதிகைவீரட்டானம்

## திருப்பதிக வரலாறு

அடியவர்க்கு எளியானும் அல்லாதார்க்கு அரியானும் ஆகிய திருவதிகை வீரட்டானத்தமுதனைத் தெரிவரிய பெருந்தகைமைத் திருநாவுக்கரசர் பாடிய பல செந்தமிழ்ப் பாட்டுக்களுள் அடங்குவன இத்திருப்பதிகம் (புராணம் 144-5).

திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

மாசிலோள் வாள்போன் மறியு மணிநீர்த் திரைத்தொகுதி
ஊசலை யாடியங் கொண்சிறை யன்ன முறங்கலுற்றால்
பாசறை நீலம் பருகிய வண்டுபண் பாடல்கண்டு
வீசுங் கெடிலவ டகரைத் தேயெந்தை வீரட்டமே. 1002

---

1002. எந்தை வீரட்டம் வடகரைத்தே என்று கொள்க. மாசு - குற்றம் ; ஈண்டுக் கூர்மை, தோற்றம், நிறம் முதலிய வற்றுற் குறைதலை யுணர்த்திற்று. அக்குறைவொன்றும் இல்லாதவாள் மாசில்வாள்; ஒள்வாள. மணிநீர்த்திரைத்தொகுதி மறியுந்தோற்றம் வாள்மறிதலைப் போன்றிருக்கும். அந்நீர்த் திரைத்தொகுதி மறிதலே ஊசலாடுதல். அதன்மேல் அன்னம் உளது. அஃது உறங்கலுறுகின்றது. அஃது உறங்கப் பண் பாடுவன வண்டுகள். அவை கருங்குவளை மலர்த்தேனை உண்டு பாடும். அக்குவளை 'பாசடை நீலம்'. 'பாசறை' - பச்சிலைக் குடில் ; பாடிவீடு. ஈண்டு அது பொருந்தாது. இது பாசடை என்றிருந்து பிழைத்ததே யாகும். 'பாசடை நிவந்தகணைக் கானெய்தல்' (குறுந்தொகை 9) 'சிறுபாசடைய நெய்தல்' (நற்றிணை 27) 'நெய்தற் பாசடைபுரையும் அஞ்செவி' (ஷை 47) 'பிடிச்செவியினன்ன பாசடை' (ஷை 310), (குறுந். 246). ஒண்சிறை அன்னம் அங்கு ஊசலை ஆடி உறங்கல் உற்றால். வண்டு பண்பாடல்கண்டு கெடிலம் வீசும். பாடற்பரிசிலாகத் தான் கொணரும் மணி முதலியவற்றை வீசும். செயப்படு பொருள் உய்த்துரைக்க வேண்டி, முன்னரே 'மணி நீர்த்திரைத் தொகுதி' என்று குறிக்கப்பட்டது. வண்டு பருக நீலம் கொடுத்த

பைங்காற் றவளை பறைகொட்டப் பாசிலை நீர்ப்படுகர்
அங்காற் குவளைமே லாவி யுயிர்ப்ப வருகுலவும்
செங்காற் குருகிவை சேருஞ் செறிகெடி லக்கரைத்தே
வெங்காற் குருசிலை வீர னருள்வைத்த வீரட்டமே. 1003

அம்மலர்க் கண்ணிய ரஞ்சனஞ் செந்துவர் வாயிளையார்
வெம்முலைச் சாந்தம் விலைபெறு மாலை யெடுத்தவர்கள்
தம்மருங் குற்கிரங் கார்தடந் தோண்மெலி யக்குடைவார்
விம்மு புனற்கெடி லக்கரைத் தேயெந்தை வீரட்டமே. 1004

கோடையுமாம். அதற்குப் ' பருகிய ' என்றதைப் பருக என வினையெச்சமாக்குக. கெடிலநதிக்கு வடகரையின் கண்ணது திருவதிகை வீரட்டம். கரைத்து - கரையிலுள்ளது.

1003. வீரட்டம் கெடிலக்கரைத்து, வெங்கால் - வெய்ய அடி. குரு - செந்நிறம்; ஈண்டுப் பொன் (மேரு) மலையைக் குறித்த ஆகுபெயர். சிலை - வில். சிலைவீரன் - வில்வீரன் ; சிவபிரான். அருள் வைத்த வீரட்டம் - முப்புரம் எரித்து உயிர் களுக்கு மும்மலம் ஒழித்த திருவருளை வைத்த திருவீரட்டம்; ' முப்புரமாவது மும்மலகாரியம் ' (திருமந்திரம்). பைகால் தவளை - பசிய கால்களையுடைய தவளைகள். பறைகொட்ட - பறையோசை என்னக் கத்த. பாசிலை - பசிய இலை. இலைநீர் - இலைகளுள்ளநீர். நீர்ப்படுகர் - நீர் தங்கும் பள்ளம். ஆற்றங் கரையில் தங்கி இருக்கும் நீர்ப்பகுதியைப் படுகர் என்பர். அம் கால் குவளை - அழகிய தண்டுடைய குவளை மலர். (ஆகுபெயர்). ஆவி உயிர்ப்ப - மணம்வீச, அருகு உலவும் குருகு. செங்கால் குருகு. ' இவை ' சுட்டன்று. குருகு என்றதன் பொருட்டாய் நின்றது. குருகுகள் சேர்தற்குக் குவளை மலர் இடம். அதற்கு நீர்ப்படுகர் இடம். அது கெடிலத்தினது. அதனால், சேருங் கெடிலக்கரை என்றியைந்தது, பெயரெச்சம் இடப்பெயர் கொண்டது, சேர்தற்கு வினைமுதல் குருகுகள், கரைத்து - கரையின் கண்ணது.

1004. அம் - அழகு. மலர்க்கண்ணியர் - செந்தாமரைப் பூவைப்போலுங் கண்ணுடையவர். அஞ்சனம் - கண்ணிற்கிடும் மை. ' செந்துவர் வாய் ' (997). இளையார் - இளம்பெண்டிர்.

மீனுடைத் தண்புனல் வீரட்ட ரேநும்மை வேண்டுகின்றதி
யானுடைச் சில்குறை யொன்றுள தானறுந் தண்
ணெருக்கின்
தேனுடைக் கொன்றைச் சடையுடைக் கங்கைத் திரைதவழும்
கூனுடைத் திங்கட் குழவியெப் போதுங் குறிக்கொண்மினே.

வெம்மை - சூடு ; விருப்பம். சாந்தம் - சந்தனம். விலைபெறு மாலை - விலை மதிப்புடைய மாலைகள். மருங்குற்கு இரங்கார் - இடைபடும் தளர்ச்சிக்கு வருந்தார். தடந்தோள் மெலிய முழுகுவார். குடைதல் :- 'மொய்யார்தடம் பொய்கைபுக்குமுகேர் என்னக் கையாற் குடைந்து குடைந்துன்கழல்பாடி' இத்திருவாசகத்திற்குறித்த 'மொய்யார் தடம் பொய்கை' திருப்பெருந் துறையில் உள்ள தீர்த்தம் ஆகும். விம்முதல் - ஒலித்தல். புனல் - வெள்ளம் ; நீர்ப்பெருக்கம் 'புனல் சூழ் அதிகை' 'புனலாட்டு' 'சீதப்புனலாடிச் சிற்றம்பலம் பாடி' புனற் கெடிலம் - புனலையுடைய கெடிலநதி எந்தை - வீரட்டேசுவரர்; தமிழ்ப் பெயர் மறைந்தது. கெடில வாணர் (94-103) என்பது பழம் பெயராயிருக்கலாம். கெடிலம் + வாழ்நர். 'வாணர்' மரூஉ. 'மன்றவாணர்' 'அம்பலவாணர்' 'அண்டவாணர்' 'பாவாணர்' 'தண்டமிழ் நூற்புலவாணர்க்கோரம்மானே' (7. 96 6) கடுநிலம் (- வன்னிலம்) கடிபுனலம் (- விரைந்து வரும் புனலுடையது) கடிபுலம் கேடில்புலம் என்றவற்றுள் ஒன்று மருவிக் கெடிலம் என்றாயிருக்கலாம். மொழி முதலகரம் எகரமாதல் இயல்பு. வல்லம் - வெல்லம். பலம் - பெலம். சயம் - செயம். கட்டியங்காரன் - கெட்டியங்காரன் ; கெட்டிக் காரன். ரத்நம் - ரெத்நம் ரங்கன் - ரெங்கன் என்பன முதலிய பற்பல இரு வழக்கிலும் உள. நெடில் குறிலாதலும் இயல்பே. வா, தா, காண், தான், நீன் முதலியன வ, த, கண், தன், நின் முதலியனவாகக்குறுகுதல் அறிக.

1005. மீன்களைக்கொண்ட குளிர்ந்த வெள்ளத்தையுடைய கெடில நதிக்கரையில் உள்ள திருவீரட்டேசுவரரே, உம்மை யான் வேண்டுகின்றதாகிய சிறு குறை ஒன்று உளது. அது யாது என்னில், நறிய தண்ணிய எருக்கம்பூவையும் தேனுடைய கொன்றைப்பூவையும் சூடிய சடையில் உடைதலையுற்ற கங்கை யலையில் தவழும் வளைவுற்ற திங்கட்குழவியை எப்போழுதும்

ஆரட்ட தேனு மிரந்துண் டகமக வன்றிரிந்து
வேரட்ட நிற்பித் திடுகின்ற தால்விரி நீர்ப்பரவைச்
சூரட்ட வேலவன் றாதையைச் சூழ்வய லாரதிகை
வீரட்டத் தானை விரும்பா வரும்பாவ வேதனையே. 1006

கருத்திற் கொள்ளுதிர் என்பதேயாகும். சில்குறை :- சின்மை சிறியதென்னும்பொருட்டு 'தண்புனல்' 'தண்ணெருக்கு' பண்புத்தொகை, புனல் வீரட்டம்; புனல் வீரட்டா; புனல் வீரட்டரே என்னும் முறையிற் கொள்க; புனலுக்கும் வீரட்டர்க்கும் இயைபின்மையான். கங்கைப் பேராற்றலையில் திங்கட்குழவி கெடாதவாறு எப்போதும் குறிக்கொண்டருளுக எனறு குறையிரந்தார். எருக்கின் தேனையுடைய சடை. கொனறையையுடைய சடை. சடையானது உடைய கங்கை; இன் தேன் எனலுமாம்.

1006. விரிநீர்ப்பரவை - பெருகிய நீரையுடைய பரவிய கடல். பரவைச்சூர் - கடலுள் ஒளித்த சூரனை. அட்ட - கொன்ற. வேலவன் - வேற்படையையுடைய முருகக்கடவுள். வேலவன்தாதை - வேற்கையனுக்குத் தந்தையான சிவபிரான். சூழ்வயல் - சூழ்ந்த வயல். வயல் ஆர் - வயல்கள் நிறைந்த. அதிகை வீரட்டத்தானை - திருவதிகைக் கெடில வடவீரட்டத் துறையும் பெருமானை. விரும்பா - விரும்பித்தொழலில்லாத. அரும்பாவவேதனை - தீர்தற்கரிய தீவினைப் பயனாகிய துன்பம். 'பாவவேதனை' எழுவாய். 'நிற்பித்திடுகின்றது' பயனிலை. ஆர் அட்டது ஏனும் - யார் சமைத்ததேனினும்; இன்னார் சமைத்தார், யாம் உண்ணலாம், யாம் உண்ணலாகாது என்று எண்ணும் நிலைமையின்றி, இழிந்தோர் அடினும், அதை உட்கொண்டு பசித்தீயைப் போக்கும் நோக்குமட்டும் உடையராய், வீடுதோறும் இரந்துண்டு திரியவும், அவ்விரப்பும் அதனை விளைக்கும் நிரப்பும் வேரூன்றி நிலைக்கவும் செய்கின்றது சிவ வழிபாடு செய்யாத தீவினை. அகம் - வீடு. அகம் அகவன் :- வீடுவீடாகச் செல்பவன். 'அகவன்' அகவுதலையுடையவனாய்; எனலும் மகவன் - மகவுடையனாய் என்னுமாம். பொன் வண்ணத்தந்தாதி 12. வலிவல மும்மணிக்கோவை முதலகவல் பார்க்க. 'அடுக்கிய சீலையராய் அகல் ஏந்தித் தசையெலும்பில்

படர்பொற் சடையும் பகுவா யரவும் பனிமதியும்
சுடலைப் பொடியுமெல் லாமுள வேயவர் தூயதெண்ணீர்க்
கெடிலக் கரைத்திரு வீரட்ட ராவர்கெட் டேனடைந்தார்
நடலைக்கு நற்றுணை யாகுங்கண் டீரவர் நாமங்களே. 1007

ஒடுக்கிய மேனியோடு ஊண் இரப்பர் ஒள் இரணியனை நடுக்கிய மாநரசிங்கனைச் சிம்புளதாய் நரல இடுக்கிய பாதன்றன்தில்லை தொழாவிட்ட ஏழையரே.' (கோயிற்றிருப்பண்ணியர் திருவிருத்தம் 36.) 'புகழ்மாமருதிற் பெருந்தேன் முகந்துகொண்டுண்டு பிறிதொன்றில் ஆசையின்றி இருந்தேன் ; இனிச்சென்று இரவேன் ஒருவரை யாதொன்றுமே ; வருந்தேன் இறந்தும் பிறந்தும் ; மயக்கும் புலன்வழிபோய்ப் பொருந்தேன்.' (திருவிடைமருதூர் மும்மணிக்கோவை. 3) ஷை 21. பாடலையும் பார்க்க.

1007. அவர் தூய தெளிந்த நீருடைய கெடில நதிக் கரையில் திகழும் திருவீரட்டானேசுவரர் ஆவார். அவர்க்கு உரிய அடையாளங்கள் சடையும் பாம்பும் பிறையும் சுடலைப் பொடியும் ஆகும். அவர்க்கு அவை எல்லாம் உள்ளனவே. அவற்றைக்கண்டும் அவரைத் தொடர்ந்து பற்றிக்கொள்ள முயலாமல் விட்டொழிந்தேனே ! கெட்டேன். அவர் திருநாமங்கள், அவரை அடைக்கலம் என்று அடைந்தவர் நடலையைத் தீர்ப்பதற்கு நல்ல துணையாவன. நடலை - வருத்தம், துன்பம். 'நடலைப் படாமை விலக்கு' (1036). திருநாமம் நற்றுணையாதலை, 'சாம் அன்று நின் நாமம் பரவி நமச்சிவாய என்னும் அஞ்செழுத்தும் உரைக்கத் தருதிகண்டாய் எங்கள் சங்கரனே' (995) 'உன்னை நினைந்தே கழியும் என் ஆவி கழிந்ததற்பின் என்னை மறக்கப்பெறாய் எம்பிரான் உன்னை வேண்டியதே.' (1052) 'நற்றுணையாவது நமச்சிவாயவே' (104) 'நடலைக்கு நற்றுணை':- 'மறத்திற்கும் அஃதே (அன்பே) துணை' 'துன்பத்திற்கியாரே துணையாவார்' (குறள் 76. 1299) என்புழிப்போல நடலையை நீக்குதற்கு நற்றுணை எனப் பொருளுரைக்க.

காளங் கடந்ததோர் கண்டத்த ராகிக்கண் ணார்கெடில
நாளங் கடிக்கோர் நகரமு மாதிற்கு நன்கிசைந்த [தாமங்ஙனே
தாளங்கள் கொண்டுங் குழல்கொண்டுமியாழ்கொண்டுங்
வேளங்கள் கொண்டும் விசும்புசெல் வாரவர் வீரட்டரே.

திருச்சிற்றம்பலம்

1008 காளம் - நஞ்சு. கடந்தது - வென்றது. நஞ்சினது கொல்லும் ஆற்றலைக் கொன்று, அதனை உள்ளும் புகாமல் வெளியும் மீளாமல், திருக்கழுத்தில் அடக்கிக் கொண்ட வெற்றியே கடத்தல். ஓர்கண்டத்தர் - ஒப்பற்ற திருநீலகண்டர். நஞ்சினை உட்கொள்ளலோ கான்றலோ செய்யாது தன்னுள் அடக்கிக் கொண்டது எவ்வாறு என்று கண்டோரும் கருதினோரும் ஒருங் கழுத்தினார் எனலுமாம். ஓர் :- குறுக்கல். கண் - ஆற்றுக்காற் பாய்ச்சலுக்குக் கரைக்கண் ஆங்காங்குளதாக்கும் நீர் புகுந்தோடும் புழை. கண் ஆர் கெடிலம் - அப் புழை பொருந்திய கெடிலநதி. ' நாளங் கடியும் அதற்கோர் நகரமும். நாளங்கடி - நாளங்காடி, காலைக்கடை? மாதிற்கு - உமையம்மை யார்க்கு. தாளங்களும் குழலும் யாழும் கொண்டும் தாம் வேளங்கள் கொண்டும் விசும்புசெல்வார். தாளம் முதலியன ஆடற்கேற்ப இயம்புதற்குக் கொள்ளப்பட்டன. வியாளம் - பாம்பு. அது வேளம் எனத் திரிந்தது. ' வேடங்கள் ' என்றது பிழை எனத் தோன்றுகின்றது. வேடம் என்ற அப் பாடத்திற்கு அவை இயம்புதற்கொப்ப ஆடற்பொருட்டு எனலாம். விசும்பு செல்லல் - திரிபுரத்தை வெற்றிகொண்டு மீண்டு திருக்கைலைக்குச் செல்லுதல். அங்கு வெற்றிக் கூத்தாட, விசும்பில் ஆடிக் கொண்டே செல்கின்றார். திருவதிகைத் திரிபுராந்தகர் எண்கை யுடையாராதலின், இத்தனையும் கொள்ளவல்லர். கொடுகொட்டி யாடுங்கால் கொடிபுரை நுசுப்பினாள் சீரும், பண்டரங்கம் ஆடுங் கால் தூக்கும், காபாலம் ஆடுங்கால் பாணியும் தருவாள் என்றது ஏறமர் கடவுள் மூவெயில் எய்ததைக் குறித்த கலித்தொகைக் கடவுள் வாழ்த்து. இங்கு அதற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையையும் நோக்குக. இப் பாடலின் பொருள் நன்கு புலப் பட்டிலது.

# 105 திருப்புகலூர்

## திருப்பதிக வரலாறு

திருப்புகலூரிலிருந்த காலத்தில், திருநாவுக்கரசரது நன்னிலைமை காட்டத் திருவுளங்கொண்ட நம்பர், திருமணி முன்றிலில் உழவாரம் நுழைந்த இடமெல்லாம், பொன்னும் நவமணியும் பொலிந்து இலங்க அருளினர். அவற்றைப் பருக்கையெனக் கருதிச் சிறிதும் மதியாது வாவியில் எறிந்தார். பொன்மணியாம் பொருளும் அப்பொருளைக் குறிக்கும் சொல்லும புல்லும் கல்லும் அவர்க்கு வேறுபடாநிலைமையைத் துணிந்த திருப்புகலூர் நாயனர் அருளால், அரம்பையர் போந்து மயக்கினர். விழுத்தவத்தே அழுத்தமுறும் பழுத்த முனிவர் சித்தநிலை திரியாது செய்யும் பணியின் தலைநின்றார், அத்தனர் திருவடிக்கீழ் அகலாத அன்பும் நினைவும் உருகும் மெய்த்தன்மையுணர்வும் கொண்டிருந்தார். இருவினைகளை ·ஒருவுக எனப் போககினர். காதல் மாதரும் தம் கைதவம் எல்லாம செய்து அவம் உற்றதையும் திரியாத ஒருணர்விற் பெரியாரைப் பெயர்விக்க ஒரு செயலும் இல்லாததையும் எண்ணி இறைஞ்சியகன்றனர். இந்நிலைமையை ஏழுலகும் அறிந்தன. ஏத்தின, அன்புறுபத்தி வடிவான வாகீசர் மின்னிலவுஞ் சடையார் மெய்யருள் எய்தவரும் நிலைமை அணிந்து ஆக அங்குச் சின்னள் இருந்தார். அந்தக்கரணம் மருவும் தலைப்பட்டால், தன்னுடைய சாரன தமியேனைப் புகலூரான் என்னை இனிச் சேவடிக்கீழ் இருத்திடுவான் என்று எழுந்த முன்னுணர்வின் முயற்சியால் மொழிந்த திருவிருத்தம் பலவற்றுள் ஒன்று இத் திருப்பதிகம். (புராணம். 416-26).

### திருவிருத்தம்

### திருச்சிற்றம்பலம்

**தன்னைச் சரணென்று தாளடைந் தேன்றன் னடியடையப்
புன்னைப் பொழிற்புக லூரண்ணல் செய்வன கேண்மின்களோ
என்னைப் பிறப்பறுத் தேன்வினை கட்டறுத் தேழ்நரகத்
தென்னைக் கிடக்கலொட் டான்சிவ லோகத் திருத்திடுமே.**

---

**1009.** புன்னைப்பொழில் புகலூர் அண்ணல் தன்னைச் சரண் என்று (அவ்வண்ணலின்) தாள் அடைந்தேன்,

பொன்னை வகுத்தன்ன மேனிய னேபுணர் மென்முலையாள்
தன்னை வகுத்தன்ன பாகதத னேதமி யேற்கிரங்காய்
புன்னை மலர்த்தலை வண்டுறங் கும்புக லூரரசே
என்னை வகுததிலை யேலிடும பைக்கிடம் யாதுசொல்லே.

தன்னடியை (யான்) அடையப் புகலூரண்ணல் செய்வன கேண்மின்கள். 1. என்னைப் பிறப்பறுத்து; 2. என் வினைக்கட்டறுத்து 3. ஏழ் நரகத்து என்னைக் கிடக்கலொட்டான்; 4. சிவலோகத்து இருத்திடும் திருப்புகலூர்த் தலவிருட்சம் புன்னை. பொழில் - சோலை. பிறப்பறுத்தலும் அதற்கேதுவாய வினைக்கட்டறுத்தலும், அதனால் நரகத்துக்கிடக்கலொட்டாமையும், சிவலோகத்திருத்தலும் அண்ணல் செய்வன. திருநாவுக்கரசு நாயனார் பேரின்ப வுருவான தலம் திருப்புகலூரே. பயன் இரண்டு :- பாசவீடும் சிவப்பேறும். முன்னைய மூன்றும் பாசவீடு. பின்னையொன்று சிவப்பேறு. 'வினைக்கட்டு' என்ற பாடமே சிறந்தது. 'கள்ளப் புலக் குரம்பைக் கட்டழிக்க வல்லான' (திருவாசகம்) என்புழியும் ஒற்றில்லாதது பிழை. வினைக்கட்டு (கர்மபந்தம்).

1010. பொன்னை வகுத்தன்ன மேனியனே :- 'பொன்னே போற் றிருமேனி யுடையான் கண்டாய்' பொன்போல மிளிர்வதோர் மேனியினீர்' 'பொன்னியலுந் திருமேனியனே போற்றி போற்றி' 'பொன்னியலுந் திருமேனியுடையான் கண்டாய்' 'பொன்னார் மேனியனே' என்பவை முதலிய பலவற்றினும், பொன்னை வகுத்தாலொத்த மேனியன் என்றது மிக்கநயமுடையது. அதனினும், அம்மேனியனைப் பாகம் பண்ணி அதில் ஒரு பாகத்தை நம் அன்னைக்குத் தந்த அருளை 'மென்முலையாள் தன்னை வகுத்தன்ன பாகத்தனே' என்றது மிக்க இனிமை விளைக்கின்றது. இரக்கத்திற்குத் தக்க பொற்றிரு மேனியும் மங்கை பங்கும் உடைய நீ இரங்காதொழியாய், உனக்கிடமான திருப்புகலூர்ப் புன்னை மலரில் வண்டுறங்கி இன்புறும் அதுவே, நீ இரக்கம் கொண்டு செய்யும் அருளைப்பெற்று இன்புறுவேன் யான் என்பதைக் குறிப்பதாகும். திருமேனியைத் தோற்றும் ஓர் ஒப்புப்பொருளாகப் பொன்னை வகுத்தாய். திருமேனிப் பாதியை நின் கருணையுருவாகத் தோற்றும்பொருட்டு எந்தாயை வகுத்தாய். யான் இல்லேன் ஆயின், அவ்விடும்பைக்குத் தான் வேறு இடம்

பொன்னள வார்சடைக் கொன்றையி னாய்புக லூரரசே
மன்னுள தேவர்கள் தேடு மருந்தே வலஞ்சுழியாய்
என்னள வேயுனக் காட்பட் டிடைக்கலத் தேகிடப்பார்
உன்னள வேயெனக் கொன்று மிரங்காத வுத்தமனே 1011

யாதுளது? நான் அன்றி வேறு இடம் இடும்பைக்கில்லை என்க 'யாதேனுங்காரணத்தால் எவ்வுலகில் எத்திறமும் மாதேயும் பாகன் இலச்சினையே ஆதலினால்' (திருக்களிறு 82) நீயும் என் தாயும் எங்கும் பொங்கும் இன்ப நிறைவா யென்றும் இருப்பது மேலோர் அறிந்த உண்மை. ஈறில்லாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பத்தின் உருவமே நீ. துன்பத்துக்கு இடம் நான். எனக்கு இரங்கித் துன்பம் தொலைத்து இன்பம் அளிப்பாய்.

1011. பொன் அளவு ஆர் சடைக் கொன்றையினாய் :- 'பொன்னிசையும் புரிசடை' 'பொன்னவில் புன்சடையான்' 'பொன் னக்கன்ன சடைப்புகலூரர்' 'புகலூரரசே' (1010) 'புகலூரண்ணல்' (1009) மன் - பெருமை. உள - உள்ள. தேவர்கள் - திருமால், பிரமன் முதலோர். தேடும் - சரியையிலும் முதலிய இறப்பில் தவத்தின்நெறியிலும்பிற அகந்தைநெறியிலும் அறியா நெறியிலும் தேடிப் பெற முயலும், மருந்தே - பிறவிப் பிணியைத் தீர்க்கும் ஞானனந்த மருந்தே. வலஞ்சுழியாய் - திரு வலஞ்சுழியிற்றிருக்கோயில்கொண்டெழுந்தருளிய தேவதேவா. எனக்கு ஒன்றும் இரங்காத உத்தமன் வேறுயாரும் இன்றும்படி நீயே ஆனாய். உன் திருவடிக்கு ஆட்பட்டும் (தொண்டு பூண்டும்) இடைக்கலத்தே கிடப்பவர் வேறு எவரும் இலராம்படி யானொரு வனே ஆனேன். அளவில்லா வுயிர்களை ஆட்கொண்டிரங்கி யருள்செய்து எனக்கு மட்டும் இரங்காதுள்ளாய். ஆட்பட்ட உயிர்களுள் யான்மட்டும் மீளா ஆளாதலும் ஆளாகாமையும் இன்றி இடையே கிடக்கின்றேன். கட்டுக்கும் வீட்டுக்கும் இடைக்கலத்தே கிடப்பார் யான் அன்றிப் பிறர் யாருமிலர். 'தமியேற்கு இரங்காய்' (1010) என்று வேண்டியும், சிறிதும் இரங்காத உத்தமன் பிறர் ஆவார் இன்றி நீயே ஆனாய். ஒன்று - சிறிதும். 'உத்தமன்' இவண் எதிர்மறைக்குறிப்பு 'இடைக் கலம் அல்லேன் எழுபிறப்பும் உனக்கு ஆட் செய்கின்றேன்' (787) என்றதன் உரையை நோக்குக.

ஓணப் பிரானு மொளிர்மா மலர்மிசை யுத்தமனும்
காணப் பராவியுங் காண்கின் றிலர்கர நாலைந்துடைத்
தோணப் பிரானை வலிதோலைத் தோன்றேல்லை நீர்ப்புகலூர்க்
கோணப் பிரானைக் குறுகக் குறுகா கொடுவினையே. 1012

திருச்சிற்றம்பலம்

1012. ஓணப் பிரான் - திருமால். திருவோணம் திருமாலுக்குரிய நாள். 'மாயோன் அடையும் நாள்' (சூடாமணி நிகண்டு) 'அவிட்ட முதனாளவன்' (சிவஞான மா முனிவர் பாடல்). ஒளிர்மாமலர் - தாமரைப்பூ. மலர் மிசை யுத்தமன் - பிரமன். உத்தமன் - சிரேட்டன். ஓணப்பிரானுகிய திருமாலும் மலர்மிசை யுத்தமனுகிய பிரமனும் பரமேசுவரனைக் காணப் பராவினர், பராவுதல் - வாழ்த்தி வணங்குதல். பராவியுங் காண்கின்றிலர். காரணம்:- சீவபோதம் அருமை, அகந்தையை அகற்ருமை. காண்டல் :- அடிமுடி காண்டல். 'பாதாள மேழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்' (திருவாசகம். 164) 'பாதம் இரண்டும் வினவிற் பாதாளம் ஏழினுக்கு அப்பால்.' (ஷை 346) 'போதார் புனைமுடியும் எல்லாப் பொருள்முடிவே' (ஷை 164) 'சோதி மணிமுடி சொல்லின் சொல்லிறந்து நின்ற தொன்மை (ஷை 346) என 'ஏர்தரும் ஏழுலகு(ம்) ஏத்த எவ் வுருவும் தன்னுருவாய்... மேயபிரானைக் காண்டற்குரிய முறைமை அறியாது தேடுதல் இளைப்பைத் தருவதன்றி மற்றென்ன பயத்தது ? தோள்எனப் பிரித்து உரைத்தார் பெரியார் ஒருவர். கரம் என்றதால், தோள் எனல் மிகையாகும். தோள்களையுடைய பிரான். ந - சிறப்புணர்த்துவது. 'நப்பின்னை' பின்னை காரணப் பெயர். ந, சிறப்புப் பொருளுணர்த்துவதோரிடைச்சொல் என்ப. நச்செள்ளை, நப்பாலத்தன். நக்கீரன் என்றாற்போல. 'நம்பின்னை' 'நற்பின்னை' விகாரமுமாம். (சீவக 482 உரை). பல பெயர் நல்லென்னும் அடைகொண்டிருத்தலையும் நோக்கின், அது மரூஉ என்றே புலப்படுகின்றது. தொலைத்தோன் - ஒழித்தவன். திருக்காற் பெருவிரலூன்றலுக்கே அவன் வலிமுழுதும் பலியா யிற்று. தொல்லை - பழமை. நீர்ப்புகலூர் :- இன்றும் நீர் நடுவே திருக்கோயில் உள்து. கோணப்பிரான் :- அடியார்க்காகச் சாய்ந்து கோணலான திருமேனி நிலையை இன்றும் காணலாம்.

6-வது திருப்பதிக வரலாறு காண்க.

திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

நெய்தற் குருகுதன் பிள்ளையென் றெண்ணி நெருங்கிச் [சென்று
கைதை மடற்புல்கு தென்கழிப் பாலை யதனுறைவாய்
பைதற் பிறையொடு பாம்புடன் வைத்த பரிசறியோம்
எய்தப் பெறினிரங் காதுகண் டாய்நம் மிறையவனே. 1013

பருமா மணியும் பவளமுத் தும்பரந் துந்திவரை [திலங்கும்
பொருமால் கரைமேற் றிரைகொணர்ந் தெற்றப் பொலிந்
கருமா மிடறுடைக் கண்டனெம் மான்கழிப் பாலையெந்தை
பெருமா னவனென்னை யாளுடை யானிப் பெருநிலத்தே.

1013. நம் (எம்) இறைவனே, கழிப்பாலையில் உறைவாய். பிறையோடு பாம்பு உடன் வைத்த பரிசு அறியோம். தன் அருகே பிறை எய்தப் பெறினும் பிறையைத் தான் எய்தப் பெறினும் பாம்பு இரங்காது விழுங்கிவிடும். அது தெரிந்தும் அவ்விரண்டனையும் உடன் வைத்தது எப்பரிசினாலோ? அறிய மாட்டோம் யாம். கழிப்பாலை ஆதலின், கழிகளில் மேயும் குருகு கைதை மடலைத் தன் பிள்ளை என்று எண்ணி நெருங்கிப்போய்ப் புல்கும். 'நெய்தற்குருகு' என்பது குறித்துக் கலித்தொகை யுரைக்குறிப்பில், இ. வை. அ ஐயர் எழுதிய ஆராய்ச்சியை நோக்குக. கைதை - தாழை. பைதல் - இளமை (967). பைதற்பிறை - இளம்பிறை. ஒடு என்னும் மூன்றனுருபும் உடன் என்பது ஒருங்கே வருதலும் உண்மையால், ஈண்டு ஆராய்ச்சி இன்று.

1014. கருமா மிடறுடைக்கண்டன் எம்மான் கழிப்பாலை. திரைகள், மணியும் பவளமும் முத்தும் கொணர்ந்து பரந்து உந்தி வரைபொரு கரைமேல் எற்றப் பொலிந்து இலங்கும் கழிப்பாலை. கழிப்பாலைப் பெருமான், எந்தைபெருமான், இப்பெருநிலத்தே.

அவன் என்னை ஆளுடையான். இதன் முதலடியில் பவளமு முத்தும் என்று கொண்டு வேண்டலைகெடப் பதித்ததுமுண்டு. பழம் பதிப்பில், 'பவளமுத்தும்' என்றே உளது. பவளமும் முத்தும் என்றுகொண்டார் 'பரந்துந்திவரை' என்பது விளங் காய்ச் சீராகாமை உணர்ந்திலர். 'பரந்துவரை' என்று கொண் டாற்றுன் 'பவளமும் முத்தும்' எனலாம். மணியும் பவளமும் முத்தும் பரந்து வரைபொரு மால்கரைமேல் திரை கொணர்ந்து எற்றப்பொலிந்து இலங்கும் கழிப்பாலை என்பதே நேரிது. பரத்தல் வரையைப் பொருதல் இரண்டும் கரைக்குரியன. வரை பொருகரை - மலையை ஒக்கும்கரை. கொணர்தலும் எற்றுதலும் திரையின் வினைகள். மணி பவளம் முத்து மூன்றும் திரையாற் கொணரப்படுவன. அதனால், 'உந்தி' என்றது ஈண்டுப் பொருந்தாமற்போகும். பரந்து பொருகரை என்று இயைதலின் அதன் இடையே உந்துதல் ஒல்லாது. உந்திக் கொணர்ந்து எற்றுவன திரை ஆதலின், அம் முத்தொழிலுள் ஒன்று. ஆண்டு நில்லாது. பருத்த மாமணி; கரிய அழகிய மிடறு (- கழுத்து). எற்றுதல் - மோதுதல். 'இப்பெருநிலத்தே' என்றும் அடுத்து 'இவ்வகலிடத்தே' என்றும் முன் (783) 'இந்த மாநிலத்தே' என்றும் குறித்ததை நோக்கி இவ்வுலகின் சிறப்பை எண்ணிக் கொள்க. 'பல்யோனியெல்லாம் ஒழித்து மானுடத்து உதித்தல் கண்டிடிற் கடலைக் கையானீந்தினன் காரியங்காண்' 'நரர் பயில் தேயந்தன்னில் நான்மறை பயிலா நாட்டில் விரவுதல் ஒழிந்து தோன்றல் மிக்க புண்ணியத்தாலும், தரையினிற் கீழைவிட்டுத் தவஞ்செய் சாதியினில் வந்து பரசமயங்கள் செல்லாப் பாக்கியம் பண்ணுனுதே! 'சைவமாஞ் சமயஞ் சாரும் ஊழ் பெறலரிது சால உயர் சிவஞானத்தாலே போழிள மதியினனைப் போற்றுவார் அருள் பெற்றுரே!' 'வானிடத்தவரும் மண்மேல் வந்து அரன்றனை அர்ச்சிப்பர்.' 'இந்தப் பார்மேல் நாட்டிய நற்குலத்தினில் வந்து அவதரித்துக் குருவால் ஞான நிட்டை அடைந்து அடைவர் நாதன்றுள்.' (சிவஞானசித்தியார்). கருமாமிடறுடைக் கண்டன் - திருநீலகண்டன். எம்மான் - எம் மகன் (- கடவுள்). எந்தை - எம் அப்பன். பெருமான் - பெருமகன் (- பெருங்கடவுள், பெரும் பெயர்ப் பொருள், பெரியோன்; பரத்துவப் பொருள், என்னை ஆள் உடையான் :- அடியேனை ஆண்டவன்.

நாட்பட் டிருந்தின்ப மெய்தலுற் றிங்கு நமன்றமராற்
கோட்பட் டொழிவதன் முந்துற வேகுளி ரார் தடத்துத்
தாட்பட்ட தாமரைப் பொய்கையந் தண்கழிப் பாலையண்ணற்
காட்பட் டொழிந்தமன் றேவல்ல மாயிவ் வகலிடத்தே. 1015

திருச்சிற்றம்பலம்

1015. குளிர் பொருந்திய நீர் நிலைகளில் தாளூன்றிய தாமரைப் பூக்களையுடைய பொய்கைகளைக்கொண்ட தண்ணிய திருக்கழிப்பாலையண்ணலாகிய முழுமுதல்வனுக்கு, இவ்வகன்ற மண்ணுலகிலே, வன்மையுடையேமாய் ஆட்பட்டு நின்றேம். வன்மை யாது எனில், நமன் தமரால் கோள்ளப்பட்டு ஒழிவதன் முந்திச் சிவனடிமையாகி நின்றதாகும். வன்மை இன்றேல், நமன் தமரால் கோள்ளப்பட்டொழிவது திண்ணம் என்றவாறு. நாள் பட்டிருத்தல் - நெடுங்காலம் வாழ்தல். இன்பம் எய்தல் உறுதல் - சிற்றின்பம் (உலகின்பம்) அடைய விரும்புதல், இங்கு - இவ்வுலகில், நமன் - எல்லாரும் நம்மவன் என்று கோள்ள நடுவனுயுள்ள இயமன். தமர் - எமதூதர். கோட்படுதல் - கோள்ளப்படுதல். ஒழிவது - இறப்பது. முந்துறல் - முந்திக் கோள்ளல். ' ஒழிந்தம் ' ' வல்லம் ' இரண்டும் தன்மைக்கண் ஒருமையைப் பன்மையாகக்கூறும் உயர்சொற்கிளவி. அன்று ஏ அசை. வினவுமாம். ' வல்லமாய் ஆட்பட்டொழிந்தம் '.

" பெருநாவ லிருநிழற்கீழ்க் குளிர்புனற்குண்
முளைத்தெழுந்த பெம்மான் செம்மை
தருநாவுக் கிசைத்தமிழா லலைகடலி
னிடைபிணித்த தனிக்கற் றூணன்
றேருநாவா யெனமிதப்ப வீற்றிருந்தங்
கைந்தெழுத்தி னுண்மை யோது
திருநாவுக் கரசரிரு பிரசமலர்ச்
சேவடியைச் சிந்தை செய்வாம் "

— மச்ச புராணம்



பெரியகோபுரம்

# 107 திருக்கடவூர்வீரட்டம்

## திருப்பதிக வரலாறு

திருப்புகலூரைப் பரவித் திருநீலநக்கர் முதலோரிடம் விடைகொண்டு, திருஞானசம்பந்த மூர்த்தி நாயனுருடன் திருவம்பரை வழிபட்டு, திருக்கடவூர் அடைந்து, கூற்றுதைத்த குரைகழலைப் போற்றி குங்குலியக்கலய நாயனர் திருமடத்தில் வாழ்ந்து, திருக்கோயில் வழிபாடு செய்திருந்த நாட்களில் பாடிய திருப்பதிகங்களுள் ஒன்று இத் தமிழ்மாலை (புராணம். 241 - 7)

### திருவிருத்தம்

### திருச்சிற்றம்பலம்

மருட்டுயர் தீரவன் றர்ச்சித்த மாணிமார்க் கண்டேயற்காய்
இருட்டிய மேனி வளைவா ளெயிற்றெரி போலுங்குஞ்சிச்
சுருட்டிய நாவில்வெங் கூற்றம் பதைப்ப வுதைத்துங்ஙனே
உருட்டிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. 1016

1016. மருள் - மயக்கம். துயர் - துயரம். தீர நீங்க. பிறவிக்கு மயக்கமே ஏது, பிறவித்துயர் தீர மயக்கம் தீர்தல் வேண்டும். 'பிறப்பில் பெருமானைப் பின்ருழ் சடையானை மறப்பிலார்கண்டீர்மையல் தீர்வாரே' என்றதில், மையல் தீரின் பிறப்பொழியும். அதுகுறித்துப் பிறப்பில் பெருமானை மறப்பிலாது வழிபடல் வேண்டுமென்றுணர்த்திஞர் முதன்மறைப்பிள்ளையார். 'மருளவா மனத்தனுகி மயங்கினேன் மதியிலாதேன் இருளவா அறுக்கும் எந்தையிணையடி நீழலென்னும் அருளவாப் பெறுதலின்றி அஞ்சிநானலமந்தேன' (736) மருட்டுயர் - மயக்கத்தாலுறுகின்ற பிறவித்துயரம். மருட்டுயர்தீர்தல் பயன். அர்ச்சித்தல் ஏது. தருமையாதீனத்தின் 25 ஆவது பட்டம், சீலத்திரு சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அருளிய ஞானபோதம் ஆகிய 'அருச்சனை' ('ஞானசம்பந்தம்' ம. 17. இ 1) என்னும் கட்டுரையால், அதன் சிறப்பை உணர்க. மாணி - பிரமசாரி. மார்க்கண்டேயன் - மிருகண்டு முனிவர்

பதத்தெழு மந்திர மஞ்செழுத் தோதிப் பரிவினொடும்
இதத்தெழு மாணித னின்னுயி ருண்ண வெகுண்டடர்த்த
கதத்தெழு காலனைக் கண்குரு திப்புன லாறொழுக
உதைத்தெழு சேவடி யான்கட லூருறை யுத்தமனே. 1017

புதல்வர். மார்க்கண்டேயற்கு ஆய்-மார்க்கண்டேய முனிவர்க்குப் பூசாபலத் துணையாகி. இருட்டிய - இருளதாய (மேனியும்), வளைவாள் எயிறு - வளைந்த வாள்போலுங் கூரிய பல்லும் எரிபோலும் குஞ்சி - தீயைப் போலும் (தலையின்) செம்மயிரும், சுருட்டிய நாவில் - மடக்கிய நாககும் உடைய (கூற்றம்). கூற்றம் - உடலையும் உயிரையும் கூறுபடுத்துவது. கூற்றம் பதைப்ப-இயமன் நடுங்க. உதைத்து-; உங்ஙனே உவ்விடத்தே. உருட்டிய - உருளச்செய்த. சேவடியான் - செய்யதிருவடி யுடையான். கடவூர் உறை உத்தமன் - திருக்கடவூரில் எழுந் தருளிய உத்தமன் என்னும் திருப்பெயருடையவன். 'மாணிக் குயிர் பெறக் கூற்றை யுதைத்தன' (1026).

1017. ஐந்தெழுத்தும் ஐந்து பதம் ஆகும். ஒவ்வொன்றும் ஒவ்வொரு பொருளை யுணர்த்தும். அவை மந்திரமாகச் செபிக்கப்படும்போது முன்னர்ப் பிரணவமும் பீசங்களும் கூட்டி யுச்சரிக்கப்படும். சிவஞான மார்க்கத்திலே ஐந்து பதப்பொருளும் உணரப்படும். 'அந்தியும் நண்பகலும் அஞ்சு பதஞ்சொல்லி முந்தியெழும் பழைய வல்வினை மூடாமுன் சிந்தை பராமரியாத் தென் திருவாரூர்புக்கு எந்தை பிரானாரை என்றுகொல் எய்துவதே' (7. 83. 1) 'மந்திரம் நமச்சிவாய ஆக நீறணியப்பெற்றால் வெந்தறும் வினையும் நோயும் வெவ்வழல் விறகிட்டன்றே.' (749) சிவனே என்னும் நாவுடையார் நமையாளவுடையார்' (6. 68. 6). ஓதிப் பரிவினொடும் இதத்து எழும் மாணி. ஓதி எழும் மாணி. மாணி உயிர்; இன்னுயிர். மாணி தன் இன்னுயிர். உயிர் உண்ண; - "உயிர் உண்ணவும் பருகவும் படுவதன்றாயினும், 'அகலிருவிசும்பிற் பாயிருள் பருகிப் பகல்கான் றெழுதரு பல்கதிர்ப்பருதி'. (பெரும்பாணாற்றுப்படை :- 1 - 2) என்றாற்போல ஓர் அணி குறித்து நின்றது" (புறநானூறு 230. உரை). வெகுண்டு - சினந்து, அடர்த்த - தாக்கிய. கதத்து - வலிமையால்.

கரப்புறு சிந்தையர் காண்டற் கரியவன் காமனையும்
நெருப்புமிழ் கண்ணினன் னீள்புனற் கங்கையும் பொங்கரவும்
பரப்பிய செஞ்சடைப் பால்வண்ணனன் காலனைப் பண்டொரு
உரப்பிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. [கால்

........................................................................................................

வெகுண்டு என முன் உள்ளது கதம் என்றது வலியென்னும் பொருட்டு. எழுகாலனை - எழுந்த காலனை. கண்ணிற் குருதிப் புனல் ஆருக ஒழுக உதைத்து எழும் சேவடியான் திருக்கடவூர் உறை உத்தமன். ஒழுக உதைத்தெழுசேவடி

1018. கரப்பு - மறைத்தல், வஞ்சகம். சிந்தையர் - சிந்திக்கும் சித்தம் உடையவர் காண்டற்கு அரியவன் :- 'உணர்வினோர் பெறவருஞ் சிவபோகத்தை ஒழிவின்றி உருவின் கண் அணையும் ஐம்பொறி அளவினும் எளிவர அருளினை' (பெரிய புராணம். 20(4) 'கரவாடும் வன்னெஞ்சர்க்கரியானைக் கரவார் பால் விரவாடும் பெருமானை' (63) 'காவிலாமனத்தராகிக் கைதொழுவார்கட்கென்றும் இரவு நின்றெரியதாடி இன்னருள் செய்யும்எந்தை' (560) 'வஞ்சனையால் அஞ்செழுத்தும் வழுத்து வார்க்குச் சேயான்' (6. 50. 4) கள்ளமுள்ளவழிக் கசிவா னலன்' (5. 82. 4) 'வஞ்ச மனத்தவர்கள் காண வொண்ணு மணிகண்டன்' (6. 42. 8) காமன் - மன்மதன். அவனையும் நெருப்பு உமிழும் கண்ணால் எரித்தவன். காமனையும் கண ணெருப்புமிழ்ந்தவன் என்க. யாவரும் அவனைக் காமுறுவர். எல்லாராலும் காமுறப்படும் அவனையும் தான் காமுருது முனிந்து உமிழ்ந்த தீயார்ந்த கண்ணினன் நம் சிவபிரான். 'காமனையும் கண்ணழலால் விழித்தநாளோ'? உம்மை உயர்வு சிறப்பு. (நன்னூல், சங்கரநமச்சிவாயருரை காண்க.) நீள்புனற் கங்கையும் பொங்கு அரவும் பரப்பிய செஞ்சடையன். பால் வண்ணன். 'பவளம்போல் மேனியில் பால் வெண்ணீறும்'. (783) இது, குங்குமத்தின் மேனி அவன் நிறமே' (54) 'பொன்னார் மேனியன்' என்பவற்றின் முரணும் என்னற்க. 'செந்நிறத்தள் எந்நிறத்தளாயிருப்பள் எங்கள் சிவபதியும் அந்நிறத்தனுயிருப்பன் ஆங்கு' (திருக்களிற்றுப்படியார். 79). **உரப்பிய - பேரொலி செய்து அதட்டிய. காலனை உரப்பிய சேவடியான் கடவூர் உறை உத்தமனே.**

மறித்திகழ் கையினன் வானவர் கோனை மனமகிழ்ந்து
குறித்தெழு மாணிதன் னாருயிர் கொள்வான் கோதித்தசிந்தைக்
கறுத்தெழு மூவிலை வேலுடைக் காலனைத் தானலற
உறுக்கிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. 1019

குழைத்திகழ் காதினன் வானவர் கோனைக் குளிர்ந்தெழுந்து
பழக்கமோ டர்ச்சித்த மாணிதன் னாருயிர் கொள்ளவந்த
தழற்போதி மூவிலை வேலுடைக் காலனைத் தானலற
உழக்கிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே 1020

1019. மறி - மான்கன்று. திகழ் - விளங்கும். திகழ்கை:- வினைத்தொகை. வானவர் - முத்தியுலகில் மெய்யின்பம் நுகர்வோர்; தேவருமாவர். 'தூயவிண்' (748) 'வானைக் கடந் தண்டத்தப்பால் மதிப்பன' (896) 'காதல் செய்யகிற்பார்க்குக் கிளரொளிவானகந்தான் கொடுக்கும்' (895), என்பன முதலிய வற்றால் வான் என்பதன் பொருளை (வீட்டை) உணர்ந்துகொள்க. மனம் மகிழ்ந்து குறித்து எழும்மாணி. மகிழ்ச்சி மனத்தில்; குறித் தல் உயிரில். குறித்தல் - தியானம். மாணிதன் ஆருயிர்:- சித்தாய் அழியாத அஃது, அழியும் உடலுட்புக்கு நிற்றலின் அருமை குறித்தது. மார்க்கண்டேயரைப் போல்வார அரியா என்பார் 'ஆருயிர்' என்றார். காலன் கொள்ளற்பாலன எளிய உயிர் களாகிய பிற கணக்கிலாதிருக்கவும், 'ஆருயிர் கொள்வான்' வந்ததால், 'சேதனம் என்னும் அச்சேறு அகத்தின்மையின் கோது என்று கொளளாதாம் கூற்று' (நாலடி) என்பது வாயா தலறிக. கோதித்த சிந்தையில் கறுத்து (சினத்து). மூவிலை வேல் - திரிசூலம். 'தண்டாயுதமும் திரிசூலமும் விழத் தாக்கி யுன்னைத் திண்டாட வெட்டி விழ விடுவேன' (கந்தரலங்காரம்). அலற உறுக்கிய சேவடியான். உறுக்குதல் - அதட்டல், சினத்தல். காலனை உறுக்கிய சேவடியான் கடவூர் உறை உத்தமனே.

1020. குழை - குண்டலம். 'சங்கக்குழை' 'தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும் பால்வெள்ளைநீறும் பசுஞ் சாந்தும் பைங்கிளியும் சூலமும் தொக்கவளையும் உடைத் தொன்மைக் கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ.'

பாலனுக் காயன்று பாற்கட லீந்து பணைத்தெழுந்த
ஆலினிற் கீழிருந் தாரண மோதி யருமுனிக்காய்ச்
சூலமும் பாசமுங் கொண்டு தொடர்ந்தடர்ந் தோடிவந்த
காலனைக் காய்ந்தபி ரான்கட வூருறை யுத்தமனே.        1021

(திருவாசகம். 232) குழை திகழ் காது. மறி திகழ்கை. (1019). குளிர்ந்து - தண்ணீருட் குளித்தும் உண்ணீர்மை குளிர்ந்தும், பழக்கம் :- பூசனை புரிந்துகைவந்தமை ; சிவபிரானொடு பழகிய பழக்கம். அர்ச்சித்த மாணியின் உயிரை அரிதென்றுணராது கொள்ளவந்த காலன். தழல் - தீ. போதி - போதிந்த; முடிய. உழக்கிய-மிதித்த. 'வருடை பாய்ந் துழக்கல்.' ' (சிந்தாமணி. 1899) மாணியின் ஆருயிர் கொள்ளவந்த காலனை ' உழக்கிய சேவடியான் கடவூர் உறை உத்தமனே.

1021 பாலன் - உபமன்னியுமுனிவர் (வியாக்கிரபாத முனிவருடைய திருமகனார்). பாலனுக்காய் அன்று பாற்கடல் ஈந்து :- 'பாலுக்குப் பாலகன் வேண்டியழுதிடப் பாற்கடல் ஈந்தபிரான்.' (திருப்பல்லாண்டு. 9). ஈந்து, ஈய்ந்து என்றிரு வடிவும் உண்டு. ஈத்தல், ஈதல் என்னும் இரண்டும் முறையே ஈத்து ஈந்து என்றாய வினையெச்சத்திற்கு அடியான தொழிற் பெயர் 'ஈத்துவக்குமின்பம்' (குறள் 228) 'ஈத்தளிக்க வல்லான்' (ஷை : 387) 'ஈத்துமோருவுக' (800). 'ஈத்தலும் ஈதலும்போலப் பாத்தலும் பாதலும் ஒன்று ஆதலிற் பாதீடாயிற்று' என்று (தொல். புறத். 3. உரையில்) நச்சினார்க்கினியர் உரைத்தார். அவ்வாறு 'ஈ' என்னும் முதனிலையும் பகு என்றதன் திரிபாய பா என்பதும் ஒன்றாகா. பகுத்திடுதல், பகுத்தீடு, பாத்தீடு, பாதீடு என்று மருவிய அதனை மருவாத சொல்லோடு கூட்டி ஒன்றெனல் நன்றன்று. ஈதலும் ஈத்தலும் ஒன்று என்றுமட்டும் உரைத்திருக்கலாம். 'அவர் எமக்கு ஈந்தது இவ்வூர்' (குறள் 1142) 'ஈத்திரங்கான், ஈத்தொறும் மகிழான், ஈத்தொறுமாவள்ளியன்' (பதிற்றுப் பத்து 61) என்பவற்றால், ஈந்தது, ஈத்தது என்ற இரண்டு வடிவும் அறிக. ஈத்தொறும் என்றும் ஈயுந்தொறும் என்றும் வேறுபட வரும். 'கண்மணியனையாற்குக் காட்டுக என்றே மண்ணுடை முடங்கல் மாதவி யீத்ததும், ஈத்த வோலைகொண்டு ... தேயமும்' (சிலப். 2. 13. 76 - 8) என்றதில் ' ஈத்ததும் ' ' ஈத்த '

படர்சடைக் கொன்றையும் பன்னக மாலை பணிகயிறு
உடைதலை கோத்துழல் மேனிய னுண்பலிக் கென்றுழல்
சுடர்போதி மூவிலை வேலுடைக் காலனைத் துண்டமதா [வோன்
உடறிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. 1022

.......................................................................................................

என்பனவும் ஈந்ததும் ஈந்த என்பனவும் வெவ்வேறே. வலித்தல் மெலித்தல் என்ன இடமின்றி நிற்கின்றன அவை. 'ஈத்த நிறை' (கலித்தொகை. 138) 'ஈத்த இம்மா' (139 - 140) 'ஈத்த பயம்' (59) 'ஈத்தவை' (84) 'ஈத்தார்' (109) 'ஈத்தை' [தருவாய்] (86) 'ஈதல்' (27; 61) 'ஈயும் வண்மையவன்' (42) 'ஈவாய்' (100) என்றிருவடிவும் நல்லிசைப்புலவர் பாடலுள் இருத்தல் உணர்க. 'ஈ' என்னும் முதனிலை வினை வேறுபாட்டிற்கொள்ளும் வடிவு வேறுபாட்டினை ஆராய்ந்துணர்க. ஈகின்ற, ஈயும், ஈகின்றான் என்பனவற்றிற்கு மற்றதன் வடிவில்லை, இறந்தகாலத்தில்மட்டும் அவ்வடிவம் பயின்றுளது. முனி - மார்க்கண்டர். ஆய்க் காய்ந்த பிரான்.

1022. படர்சடை - படர்ந்தசடை. சடைக்கொன்றை - சடையில் அணிந்த கொன்றை மலர் மாலை. பன்னகம் - பாம்பு. மாலை :- பாம்பை மாலையாகப் பூண்டுள்ளானென்க. பணி - பாம்பு. பணம் - படம். பணத்தையுடையது பணி. பணியைக் கயிறாகக்கொண்டு தலைகளைக் கோத்தமாலை; தலைமாலை. 'சுடியராக் கயிற்றிற்கட்டுஞ் சதுர்மறைக்கரோடி முட்டாட்டாமரை வாசம்' (சேதுபுராணம் இராமனரு. 89). உடைதலை - உடைந்த தலை; 'உடை தலைமாலை' (1039). 'தலைமாலை தலைக்கணிந்து'. கோத்து - கோக்கப்பட்டு; அணியப்பெற்று. உழல் - உழல் கின்ற, உழல்வது தலைமாலை. உழலற்கு இடம் திருமேனி. உண்டற்குக்கொள்ளும் பிச்சைக்கு என்றே உழல்வோன் (- திரிவோன்.) கொன்றையும் பன்னக மாலையும் பணிகயிறுக் கோத்துழலும் உடைதலைமாலையும் உடைய மேனியன் எனப் பொருத்திக்கொள்க. உம்மையை ஏனையிடத்தும் ஒட்டுக. சுடர் போதி மூவிலைவேலுடைக்காலனை :- 'தழற் போதிமூவிலை வேலுடைக்காலனை' (1020) துண்டம் (துண் + து + அம்), துண்டமது :- அது முன்மொழிப் பொருட்டாய் நின்று சுட்டுப் பொருளையுணர்த்தாது நின்றது. உடறிய - சீறிய; வருத்திய.

வெண்டலை மாலையுங் கங்கை கரோடி விரிசடைமேல்
பெண்டணி நாயகன் பேயுகந் தாடும் பெருந்தகையான்
கண்டனி நெற்றியன் காலனைக் காய்ந்து கடலின்விடம்
உண்டருள் செய்தபி ரான்கட வூருறை யுத்தமனே. 1023

கேழல தாகிக் கிளறிய கேசவன் காண்பரிதாய்
வாழிநன் மாமலர்க் கண்ணிடந் திட்டவம் மாலவற்கன்
றூழியு மீந்து வடுதிறற் காலனை யன்றடர்த்து
ஊழியு மாய பிரான்கட வூருறை யுத்தமனே. 1024

1023. வெள்தலை மாலையும் - வெள்ளிய தலைகளைக் கோத்தமாலையும். கங்கை - கங்கையாற்றையும், கரோடி - முடிமாலை. 1022. பார்க்க. விரிசடைமேல் - விரிந்த சடையின்மேல். பெண்டு - (பெண்தன்மையுடையது) கங்கையென்னும் பெண்ணை. அணிநாயகன் - அணிந்த இயவுள். முதலடியிற் 'கங்கை' என்றும் இதிற் 'பெண்டு' என்றும் உள்ள இரண்டும் ஒன்றையே குறிப்பன ஆயினும் முன்னர்ச்சடையில் உள்ளவற்றுட் சில பொருள்களின் வரிசையிற் கூறப்பட்டது. பின்னர்ப் பரன் பெயராகக் கூறப்பட்டது. சடைமேற் பெண்ணை யணிந்தவன் பேயோடும் ஆடும் பெருந்தகையான். கண்நெற்றியன். தனிக்கண் நெற்றியன். கண்ணைத் தனியே உடைய நெற்றியன் தனிக்கண்ணையுடைய நெற்றியினன் ... அன்று - மார்க்கண்டேயரைப் பற்றவந்த அந்நாளில். காலனைக் காய்ந்து உண்டருள் செய்தபிரான் கடவூர் உறை உத்தமனே. கடலின்விடம் - பாற்கடலிற்றோன்றிய நஞ்சினை. உண்டருள் செய்த - உண்ட. நஞ்சிற்கு அருள் செய்தல் இல்லை. துணைவினை. தேவர்க்கும் அசுரர்க்கும் நஞ்சுண்டருள் செய்தார் எனின், உண்டு அருள் செய்தார் என்றாகும். ஈண்டு உண்டார் என்பது மட்டும் கொள்ளற் பாலது. சடைமேல் அணிந்த பெண்டு கங்கை.

1024. கேழல் - பன்றி. கேசவன் - அழகிய மயிருடையவன்; கேசியென்னும் அசுரனைக் கொன்றவன். கேசி - கஞ்சனுல் ஏவி விடுக்கப்பட்டுக் குதிரை வடிவாய் வந்த அரக்கன்' 'தேவசேனையைப் பிடித்துச் சென்றபோது தேவேந்திரனுற் கொல்லப்பட்ட ஓரசுரன்' என்றது ஈண்டுத் தொடர்பில்லாதது.

தேன்றிகழ் கொன்றையுங் கூவிள மாலை திருமுடிமேல்
ஆன்றிக ழைந்துகந் தாடும் பிரான்மலை யார்த்தெடுத்த
கூன்றிகழ் வாளரக் கன்முடி பத்துங் குலைந்துவிழ
ஊன்றிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. 1025

திருச்சிற்றம்பலம்

கேசவன் என்பது விண்டுவின் துவாதச நாமத்தொன்று. காண்பு - காண்டல். திருமால் காண்பதற்கரிய திருவடி காலன் காண்பதற்கெளிதாயிற்று என்று ஒலித்தலறிக. (1026-7) ' மேலும் அறிந்திலன் நான்முகன் மேற்சென்று கீழிடந்து மாலும் அறிந்திலன் மாலுற்றதே வழிபாடு செய்யும் பாலன் மிசைச்சென்று பாசம் விசிறி மறிந்த சிந்தைக் காலன் அறிந்தான் அறிதற்கு அரியான் கழலடியே ' (1070). மாமலர் - தாமரை. மலர்க்கண்:- உவமத் தொகை. மலர்க்கீடாகக் கண்ணையிடந்து அப்பியதால் மலர்க்கண். இடந்து - பேர்த்து. மாலவன் - திருமால். அன்று - ஆயிரம் பூக்கொண்டு வழிப்பட்ட நாளில், ஆழி - சக்கிரம். ஈந்து - கொடுத்து. அடுதிறல் - கொல்லும் ஆற்றல். திறலையுடைய காலனை. அன்று - 1023 பார்க்க. அடர்த்து - கொன்று ; பொருது. ஊழி - ஊழிக்காலம்.

1025. தேன்திகழ் கொன்றையும் கூவிளமாலையும் திரு முடிமேல் அணிந்தவன். ஆன் - பசு (617 ; 263 ; 378 ; 514 ; 530), மலை - திருக்கைலையை. ஆர்த்து - பேரொலி செய்து. எடுத்த அரக்கன். கூன்திகழ் அரக்கன். வாள் - வாளை (ஏந்திய அரக்கன்). கொடிய அரக்கன் என்றலுமாம். முடி பத்தும் குலைந்துவிழ ஊன்றிய சேவடி, சேவடியான் கடவூர் உறை உத்தமனே. அவன் பத்துமுடியும் குலைந்துவிழத் உத்தமன் பெரியதாகச் செய்தானல்லன். திருவடியின் ஒரு விரலை ஊன்றியது ஒன்றே செய்தான். அச் சிறியதான செயலுக்கே, அவன் தன் பேராற்றல் எல்லாம் ஒழிந்து குலைந்து விழுந்தான். ' கருமலி கடல் சூழ் நாகைக் காரோணர் கமல பாதத்து ஒருவிரல் நுதிக்கு நில்லாது ஒண்டிறல் அரக்கன் உக்கான் ' (696) பெருவிரல் இறைதான் ஊன்றப் பிறை யெயிறிலங்க அங்காந்து அருவரையனைய தோளான் அரக்கன் அன்று அலறி விழ்ந்தான். (735).

# 108 திருமாற்பேறு

## திருப்பதிக வரலாறு

திருத்தொண்டு செய்து கச்சி நகரில் மேவும் நாளில், திருமாற் பேறு வந்து அணைந்து பாடிய தமிழ் இத் திருப்பதிகம். (புராணம். 327)

### திருவிருத்தம்

### திருச்சிற்றம்பலம்

மாணிக் குயிர்பெறக் கூற்றை யுதைத்தன மாவலிபால்
காணிக் கிரந்தவன் காண்டற் கரியன கண்டதொண்டர்
பேணிக் கிடந்து பரவப் படுவன பேர்த்துமஃதே
மாணிக்க மாவன மாற்பே றுடையான் மலரடியே. 1026

.......................................................................................................

1026. மாணிக்கு-பிரமசாரியாய்ப் பூசித்த மார்க்கண்டேய முனிவர்க்கு. உயிர்பெற :- உள்ள ஆயுள் என்றும் குறையாது நிலைபெற்றிருக்க. உயிரைப் பெறுதல் கொடுத்தல் யாது மில்லையேனும் ‘ உயிர் கொடுத்தான் ’ ‘ உயிர் பெற்றான் ’ என்னும் வழக்குண்டு. அதன் கருத்து அவ்வவ்விடத்திற்கேற்பக் கொள்ளப்படும். கூற்று - உடலையும் உயிரையும் வெவ்வேறு (கூறு)செய்வது. கூற்றை உதைத்தன. மாவலி - மகாபலி சக்கிரவர்த்தி. பால் :- ஏழனுருபு காணிக்கு - மூவடி மண்ணுக்கு. இரந்தவன் - இரத்தல் செய்தவன் (திருமால்). காண்டற்கு - கண்டு வழிபடுதற்கு. அரியன - கிடைத்த லில்லாதன. (1027) ‘ நீண்டும் கிளர்ந்தும் போற்கேழல்முன் தேடின...... இன்னம் பரான்றன் இணையடியே ’ (971) கண்ட - ஞானத்தால் உயிருள் உணர்ந்த. தொண்டர் - ஞானிகள். பேணி - இடையறுப் பேரன்புகொண்டு, அயரா அன்புசெய்து. கிடந்து - துகளறுபோதத்திற் குறித்த சுகாதீதமாகிக்கிடந்து. பரவப்படுவன - அத்துவிதமாக வழிபடப்பெறுவன. பேர்த்தும்- ஒருமை திரிந்த இடத்தும். அஃதே - அம்முத்தியின்பமே ஆகும். மாற்பேறு - திருமாற்பேறு ; காரணப் பெயர் ; உடையான் - சுவாமி. மாணிக்கம் ஆவன :- மலரடி எழுவாய். உதைத்தன முதலியன பயனிலை. ‘ மாணிக்கம் ஒத்து மரகதம் போன்று வயிரமன்னி ஆணிக் கனகமும் ஒக்கும் ஐயாறனடித் தலம் ’ (898).

கருடத் தனிப்பாகன் காண்டற் கரியன காதல்செய்யில்
குருடர்க்கு முன்னே குடிகொண் டிருப்பன கோலமல்கு
செருடக் கடிமலர்ச் செல்விதன் செங்கம லக்கரத்தால்
வருடச் சிவப்பன மாற்பே றுடையான் மலரடியே. 1027

திருச்சிற்றம்பலம்

1027. கருடத்தனிப்பாகன் - கருடனை யூர்ந்து செல்லும் தனியான சாரதி. தனி என்றாலும் மனைவியரோடும் ஏறிச் செல்லுவன். கருடத்தனிப்பாகன்:- கருடசாரதி 'பார்த்தசாரதி'. காண்டற்கு அரியன : மாவலிபால் காணிக்கு இரந்தவன் காண் டற்கு அரியன' (1026). காதல் செய்யில் - அன்பு செய்தால். குருடர்க்கும் - அகக்கண் புறக்கண் இரண்டும் இல்லாதவர்க்கும் முன்னே - அவர் எதிரே. குடிகொண்டிருப்பன. குடியாகி யிருந்து நிலைபெயரா தொளிர்வன. 'இருள் தரு துன்பப்படலம் மறைப்ப மெய்ஞ்ஞானமென்னும் பொருள்தரு கண் இழந்து உண்பொருள் நாடிப் புகல் இழந்த குருடரும் தம்மைப் பரவக் கொடுநரகக்குழி நின்று அருள்தரு கை கொடுத்து ஏற்றும் ஐயாறன் அடித்தலமே' (886) 'இன்பில் இனிதென்றல் இன்றுண்டேல் இன்று உண்டாம் அன்பின் நிலையே அது.' (திருவருட் பயன். 80). கோலம் - அழகு; அணிசெயல் (அலங்காரம்). மல்கு - மல்கிய. செருடக்கடிமலர் :- 'நிருதி மெனசிரீடப் பூவில்' (காஞ்சிப் புராணம் :- சிவ புண்ணியப் படலம் 61). கருவேள் பூங்கணையெய்து முன்னர்த் தோல்வியும் பின்னர், அம்பிகையின் திருக்கையால் சிவனது திருக்கழுத்தைக் கட்டுமாறு செய்து வெற்றியும் உற்றதால், அம்மையின் திருக்கை அம்மலரினும் மெல்லியன என்றுணரப்படும் என்னுமிடத்தில், காளிதாசர்,

शिरीषपुष्पाधिक सौकुमार्यौ बाहू तदीयाविति मे वितर्कः ।
पराजितेनापि कृतौ हरस्य यौ कण्ठपाशौ मकरध्वजेन ॥

(குமார சம்பவம் 1-41) என்று பாடியுள்ளார். செல்வி - உமா தேவியார். கமலம் - தாமரைப் பூ. செங்கமலம் போலும் கரம் (- கை), கையால் வருடச் சிவந்து நிற்பன மலரடி. மாற்பேறு டையான் மலரடி அரியன ; இருப்பன ; சிவப்பன. 'மலரடி' என்றதற்குத் தக்கவாறு மோனை யமைப்புள்ளதை அறிவார்க்கு 'வெருட' என்பது பிழையாதல் விளங்கும்.

திருப்பாதிரிப்புலியூர்



திருக்கோயில்

திருத்தூங்கானைமாடம்



திருமூலட்டானம்

## 109 திருத்தூங்கானைமாடம்

### திருப்பதிக வரலாறு

'பெண்ணுகடத்தை அணைந்து, திருத்தூங்கானை மாடத்தைப் பணிந்தேத்திப் பரவினுர் பார்பரவுந் திருமுனிவர்.' புன்னெறியாம் அமண் சமயத் தொடககுண்டு போந்த உடலுடனே உயிர்வாழத் தரியேன் நான்; தரிப்பதனுக்கு என்னுடைய நாயக! நின் இலச்சினையிட்டருள் என்று, முன் நின்று பாடிய செழுந்தமிழ் மாலையுள் ஒன்று இத்திருப்பதிகம். (புராணம், 148 - 153).

திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

பொன்ஞர் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் போற்றி
என்ஞவி காப்பதற் கிச்சையுண் டேலிருங் கூ ற்றகல[செய்யும்
மின்ஞரு மூவிலைச் சூலமென் மேற்பொறி மேவுகொண்டல்
துன்ஞர் கடந்தையுட் டூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே.

---

1028. பொன் ஆர் திருவடி - பொன்போலும் அழகிய திருத்தாள் திருவடிக்கு விண்ணப்பம் ஒன்று உண்டு. அது கேட்டருள்வாய்). போற்றி செய்யும் ஆவி - வழிபடுகின்ற அடியேனை, காப்பதற்கு - உடலின் நீங்காது தடுத்து நிலை பெறச் செய்ய. இச்சை உண்டு ஏல் - திருவுள்ளம் உள்ளது எனெனில், இருமை + கூற்று = இருங்கூற்று ; பெருமொழி - 'புன்னெறியாமமண் சமயத் தொடக்குண்டான் என்னும் பழிச் சொல்'. அகல - என்பாற் சாராது நீங்க. 'தொடக்குண்டு போந்த உடல் தன்னுடனே உயிர்வாழத் தரியேன் நான்' (சேக்கிழார் திருவாக் ) மின் - ஒளி. ஆரும் - நிறைந்த. மூவிலைச் சூலம் - 'முத்தலைச் சூலம்' 'மூவிலைவேல்'. என் மேல் பொறி - ; கொண்டல் துன்ஆர்கடந்தை - மேகம் பொருந்திய பெண்ணுகடம். துன் - துன்னுதல். ஆர் - பொருந்திய, மேவு கொண்டல் :- 'வானேக்கி வாழும் உலகெல்லாம்' என்னும் பொருட்டு. கடந்தை சிவதலம். தூங்கானை மாடம் - சிவாலயம் 'சோதி லிங்கத் தூங்கானை மாடத்தான்' (6, 34. 5) 'பெண்ணுனை தூங்குமிடம்' 'பெண்ணுனை தூங்குமாடம்' என்றிருந்து, பெண்ணுகடம் என மருவியிருக்கலாம்.

ஆவா சிறுதொண்ட னென்னினைந் தானென் றரும்பிணிநோய்
காவா தொழியிற் கலக்குமுன் மேற்பழி காதல்செய்வார்
தேவா திருவடி நீறென்னைப் பூசுசெந் தாமரையின்
பூவார் கடந்தையுட் டூங்கானை மாடத்தெம் புண்ணியனே.

'புள்ளிருக்குந்திருவேளூர்' எனச் சேக்கிழார் சுவாமிகள் சொல்லியருளினார். அது புள்இருக்குவேள் ஊர் எனப் பிரித்துப் பொருள் கூறப்படுகின்றது அதுபோலப் பெண் - தேவ கன்னியார் ; ஆ - காமதேனு ; கடம் - வெள்ளை யானை எனப் பிரித்துப் பொருள்கூறப்படுகின்றது இதுவும். பொறித்தல் வேறு வடுச் செய்தல் வேறு. 'அயனை அநங்கனை அந்தகனைச் சந்திரனை வயனங்கண் மாயாவடுச்செய்தான் காணேடீ' (திருவாசகம். 258) என்புழி, 'பொறித்தான்' எனிற் பொருந்துமோ ? 'சுடர்க்கொழுந்து' இறைவன் திருப்பெயர். திரிசூலம் உடைய பெரிய கூற்றனை அஞ்சி அகலத் திரிசூலம் என்மேற் பொறி என்றதுமாம்.

1029. ஆ ஆ :- 'ஆவா' என்னும் ஆட்சி திருமுறையிற் பயின்றுளது. சிறு தொண்டன் - தொண்டருட் சிறியேன் ; சிறு தொண்டு புரிவேன் எனலுமாம். என் நினைந்தான் - யாது கருதினன். அரும்பிணி நோய் - அகற்றுதற்கு அரிய பிணியை யும் நோயையும். பிணியாகிய நோயை என்றுமாம். காவாது ஒழியின் - தடுக்காமல் நின்றால். ஒழிதல் - நிற்றல். தொல். உன்மேல் பழி கலக்கும் :- 'பூவார் அடிச்சுவடு என்மேற் பொறித்துவை போகவிடில் மூவா முழுப்பழி மூடுங்கண்டாய்' (933). காதல் செய்வார் :- 'காதல் செய்யில்' (1027). செய்வார்க்குத் தேவா. தேவன் - திவ்வியன். திருவடி நீறு என்னைப் பூசு :- 'பூவாரடிச்சுவடு என்மேல் பொறித்தலுமே தேவானவாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. (திருவாசகம். 241). செந்தாமரையின் பூ ஆர்கடந்தை - செந்தாமரை மலர்கள் நிறைந்த பெண்ணுகடம் ; நீர் நிலவளக் குறிப்பு. கடந்தையுள் தூங்கானைமாடம் :- ஊரும் கோயிலும் எல்லாத் திருவிருத்தத் திலும் கூறப்பட்டன. எம் புண்ணியனே - எமது சிவபுண்ணியப் பயனுயுள்ளவனே. புண்ணியனே காவா தொழியிற் பழி உன்மேற் கலக்கும். திருவடி நீறு பூசு. பூசிக் காத்தருள், என்னை.

கடவுந் திகிரி கடவா தொழியக் கயிலையுற்ருன்
படவுந் திருவிர லொன்றுவைத் தாய்பனி மால்வரைபோல்
இடவம் பொறித்தென்னை யேன்றுகொள் ளாயிருஞ் சோலை திங்கள்
தடவுங் கடந்தையுட் டுங்கானை மாடத்தெந் தத்துவனே.

திருச்சிற்றம்பலம்

1030. கடவும் - செலுத்தும். திகிரி - தேர். கடவாது ஒழிய - செலுத்தப்படாது நிற்க. கயிலை உற்ருன் - திருக்கைலை மலையை எடுக்கலுற்ருன். அதை எடுக்கலுற்ற காரணம் அவன் தேர் செல்ல அம்மலை இடையூருயிற்றென்பது குறித்தது இது. படவும் - அவன் வருத்தப்படவும். திருவடி அவன்மேற் படவும். அவன் உடல் அம்மலையிற்படவும் (பட்டவுடனே), திருவிரல் - திருக்காற் பெருவிரல். ஒன்று வைத்தாய் :- ஐந்தும் வைத்திருந்தால் ஆகும் கதி சொல்லொணுது என்ற குறிப்பு. பனிமால்வரை - 'இமாசலம்' என்றதன் தமிழ். மால்வரை போல் இடவம் :- பெரிய மலைபோலும் விடை :- 'பெரிய விடை' ஈடலிடபம்' 'மற்ருென்று இணையில் வலியமாகில் வெள்ளிமலைபோல்பெற்று ஒன்று ஏறிவருவார் அவர் எம்பெருமா னடிகளே' (சம்பந்தர்) என்னும் திருக்கடவூர் மயானத்துத் திருப்பாடலை நினைக. இடபம் - இடவம் :- 'வபயோரபேதம்', இடவம் பொறித்து என்னை ஏன்று கொளளாய். திங்களை இருஞ்சோலை தடவும் கடந்தை :- வண்கோண்டல் மதீ முட்டுவன மாடம்.' (கம்பர்) தத்துவன் - மெய்ப்பொருள். ஏன்று கோள் :- 'திருப்பாதிரிப்புலியூர் இருந்தாய் அடியேன் இனிப் பிறவாமல் வந்து ஏன்றுகொள்ளே' (922).

மருக்கு லாவு மறைவனத் தோன்றிய
திருக்க பாடந் திறந்தசொல் வேந்தனை
யருட்கு லாவு மறிவினை மூடிய
விருட்க பாடந் திறக்கவு மேத்துவாம் ''

—திருக்கூவப் புராணம்

## 110 பொது

### திருப்பதிக வரலாறு

திருப்புகலூரிற் பாடியருளிய வண்டமிழ்மாலைகளுள் ஒன்று இப்போதுத் திருப்பதிகம் (புராணம். 412 - 5)

பசுபதித் திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

சாம்பலைப் பூசித் தரையிற் புரண்டுநின் றாள்பரவி
ஏமபலிப் பார்கட் கிரங்குகண் டாயிருங் கங்கையென்னும்
காம்பலைக் கும்பணைத் தோளி கதிர்ப்பூண் வனமுலைமேல்
பாம்பலைக் குஞ்சடை யாயெம்மை யாளும் பசுபதியே 1031

1031. இத்திருப்பதிகத்தில் அடியார்க்காக ஆண்டவனை வேண்டுதலை உணர்க. 'சாம்பலைப் பூசித் தரையிற் புரண்டு நின்தாள் பரவி ஏம்பலிப்பார்கட்கு இரங்கு கண்டாய் :- என்னும் பகுதி முன்னும் (963) உளது. 'சாம்பர்' என்றது ஆண்டு. 'சாம்பல்' என்றது ஈண்டு. அதனால், ஆங்கெழுதிய குறிப்பே ஈங்கும் அமையும். கங்கை என்னும் பணைத்தோளி. இருமை - பெருமை. அழியாமை, வற்றாமை, தன்கண் முழுகினோர் பிறவி நீக்குதல் முதலியன. காம்பு - மூங்கில். மூங்கிலை ஒப்பாகா யென்று அகற்றி வருத்தும் தோள், பணை - பருமை. காம்பு அலைக்குந் தோள். பணைத்தோள். கங்கை என்னும் தோளி. கதிர்ப்பூண் - 'விளங்கிழை', வனம் - அழகு. கங்கையின் கோங்கைமேல், சடையிலுள்ள பாம்பு அலையும். பாம்பினைச் சடை அலைக்கும். தோளியே தன் அலையால் தன் கோங்கைமேல் பாம்பை அலைக்கும் எனலுமாம். எம்மை ஆளும் பசுபதியே என்று முடியும் இத்திருப்பதிகம் பாடிப் பரவசப் படுத்தும். துயிலினிமையை வேண்டாது துஞ்சும்போதுந் துயிலின்றி யேத்துவாராய அடியார் தரையிற்கிடத்தலையே கோள்வர். துயிலற் பொருட்டுப் பிறகோள்ளார். பசுபதியே இரங்கு. மேல்வருவனவற்றிலும் இவ்வாறே கோள்க.

உடம்பைத் தொலைவித்துன் பாதந் தலைவைத்த வுத்தமர்கள்
இடும்பைப் படாம லிரங்குகண் டாயிரு ளோடச் செந்தீ
அடும்போத் தனைய வழன்மழு வாவழ லேயுமிழும்
படம்போத் தரவரை யாயெம்மை யாளும் பசுபதியே. 1032

தாரித் திரந்தவி ராவடி யார்தடு மாற்றமென்னும்
மூரித் திரைப்பௌவ நீக்குகண் டாய்முன்னை நாளொருகால்
வேரித்தண் பூஞ்சுட ரைங்கணை வேள்வெந்து வீழச்செந்தீப்
பாரித்த கண்ணுடை யாயெம்மை யாளும் பசுபதியே. 1033

1032. உடம்பைத் தொலைவித்து உன்பாதம் தலைவைத்த உத்தமர்கள் :- (1055) உடம்பைத் தொலைவித்தலாவது பிறவியில்லாது செய்வித்துக் கொள்வது. (திருவாசகம் 1 :- 84-5. பா. 68; 87; 143; 145; 402; 493; 419; 437). இது பாசவீடு. பாதம் தலை வைத்தலாவது சிவப்பேறு. இவ்விரண்டும் இயைந்ததே வீடுபேறு. இப்பேறு உற்றோரினும் மேலானவர் யாருமிலர். அதனால் 'உத்தமர்கள்' என்றார். சீவன் முத்தராயின், அவர்களதுஉடல் திருக்கோயிலும், அவர்கள் சிவமும் ஆதலின், உடம்பைத் தொலைவித்தமை அவர்களது அநுபவத்திற் புலனாகும். ஏனையோர் உணர்தல் அரிது. 'ஓங்குடலம் திருக்கோயில்... சிவன் சீவன்' 'நடமாடக் கோயில்' 'பராவு சிவர்' என்பவற்றின் பொருளறிவார் இதை அறிவார். இடும்பை- துன்பம். 'இடும்பைக்கு இடும்பை படுப்பர்' (மூதுரை). அழல்மழு- தீ மழுப்படை. அதனொளியால் இருளோடும். 'ஒத்து அனைய' என்று ஆளுதல் பலவிடத்தும் காணப்படும். அடும்பு, அடம்பு எனலும்உண்டு. (பெரிய. ஏயர்கோ. 100) 'அடும்பு இவர் அணி எக்கர்' (கலித்தொகை. 132). செந்தீயழலும் மழு. 'தீப் போலும் அடும்பு. அடும்புபோலும் அழல் மழு' எனல் குற்றம். அழலே உமிழும் படம். படம் போத்தும் அரவு (- பாம்பு). அரவு - பாம்பாகிய கச்சு, அரவக்கச்சு, அரையாய் - இடையினனே. 'பையரா வரையிலார்த்து' (562). 'பைவாயரா வரையம்பலத்தெம்பரன்' (திருக்கோவையார் 169).

1033. தரித்திரம் - வறுமை (வழக்கு). தவிரா - தங்காத. வேற்றிடத்தில் சென்று தங்காது நிலைபெற ; நீங்காத என்றபடி.

ஒருவரைத் தஞ்சமேன் றெண்ணாதுன் பாத மிறைஞ்சுகின்றார்
அருவினைச் சுற்ற மகல்விகண் டாயண்ட மேயணவும்
பெருவரைக் குன்றம் பிளிறப் பிளந்துவேய்த் தோளியஞ்சப்
பருவரைத் தோலுரித் தாயெம்மை யாளும் பசுபதியே. 1034

தடுமாற்றம். தட்டு மாறுதல்; சென்ற நெறியில் குறுக்கே தட்டு மாறல், அதனின் மாறுதல் என்றும் உண்டு. அது நிலம் பொழுது கருத்து அறிவு முதலிய எவற்றினும் நிகழும். 'எவர் கோல் பண்ணவர்கள் எவர்கோல் மண்ணவர்கள் எதுகோல் பொன்னுலகெனத் தட்டுமாறவும்' (மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ். 12) முரித்திரைப் பௌவம் - பேரலைக்கடல். தடுமாற்றத் தைக்கடலென்றுருவகஞ் செய்தார். பௌவத்தை நீக்கு என்று வேண்டினார். அடியார்க்கு நீக்கு என்று ஆசிரியர் வேண்டும் இக் கொள்கை பொதுவாக மக்களுக்கும் சிறப்பாகப் பாவலர் கட்கும் தோன்றுதோட்டுளது. நூல்களில் வாழ்த்துப் பாடுதலும் இதனாலேதான். முன்னை நாள் :- சிவபிரான் யோகம் புரிந்திருந்த காலம். ஒருகால் :- பிரமவிட்டுணு முதலோர் ஏவியபோது. 'கண்ணுதல் யோகிருப்பக் காமன் நின்றிட வேட்கைக்கு விண்ணுறு தேவராதி மெலிந்தமை ஓரார் எண்ணிவேள் மதனை ஏவ எரிவிழித்து இமவான் பெற்ற பெண்ணினைப் புணர்ந் துயிர்க்குப் பேரின்பம் அளித்ததோரார்' (சிவஞானசித்தியார்) வேரி - தேன். தண்பூ - குளிர் மலர். பூங்கணை - மலரம்பு. சுடர்க்கணை - ஒளிரம்பு. ஐங்கணை - ஐந்தம்பு. கணைவேள் - அம்புடைய மன்மதன். வேள் - விரும்பப் பெறுமவன். இவன் கருவேள். முருகன் செவ்வேள். வெந்து விழப் பார்த்தகண். சேந்தீப் பாரித்தகண். பாரித்தல் - பரப்புதல் ; வெளிப்படுத்தல். 'தம்பதி என்று உரை பாரித்தான்' (கோயிற் புராணம், திருவிழாச். 2), கண் - நெற்றிக்கண். உடையாய் - உடையானே; சுவாமியே எனலுமாம்.

**1034.** ஒருவரை - உன்னை அல்லாமல் வேறு ஒரு தெய்வத்தை. 'உன்னை அல்லால் ஒரு தெய்வம் உள்கேன்' (திருவாரூர்த் திருத்தாண்டகம்) 'உள்ளேன் பிறதெய்வம் உன்னை யல்லாது எங்கள் உத்தமனே' (திருவாசகம் 6). 'நின்மலா ஓர் நின்னலால் தேசனே ஓர் தேவர் உண்மை சிந்தியாது சிந்தையே' (ஷை 82) தஞ்சம் - அடைக்கலம்.

இடுக்கொன்று மின்றியெஞ் சாமையுன் பாத மிறைஞ்சு
கின்றார்க்
கடர்க்கின்ற நோயை விலக்குகண் டாயண்ட மெண்டிசையும்
சுடர்த்திங்கள் சூடிச் சுழல்கங்கை யோடுஞ் சுரும்புதுன்றிப்
படர்க்கொண்ட செஞ்சடை யாயெம்மை யாளும் பசுபதியே.

தண்+து+அம்=தஞ்சம். வல்+து+அம்=வஞ்சம். தஞ்சம் என்று மற்றொருவரை எண்ணாது உன் பாதமே கதி என்று வழிபடுகின்றவர். இறைஞ்சுகின்றார் :- வினையாலணையும் பெயர். இறைஞ்சுகின்றாரது வினைச்சுற்றம். அருவினை - நீங்கலரிய வினை. சுற்றம் - சூழல் ; கூட்டம். வினைச்சுற்றம் - வினைத் தொகையை. அகல்வி - அகலச்செய். 'என்னை வாழைப் பழத்தின் மனம் கனிவித்து எதிர்வது எப்போது பயில்விக் கயிலைப் பரம்பரனே' (திருவாசகம். 138) 'அண்டமே அணவும் பெருவரை' என்றது மலையுயர்ச்சியும் பருமையும் குறித்து. வரைக்குன்றம் - வரைகளையுடைய மலை குன்றம் :- உவமையாகு பெயராய், யானையைக் குறித்தது. 'வருங்குன்றம் ஒன்றுரித்தோன்' (திருக்கோவையார்). பிளிறுதல்; பிளிறப் பிளத்தல். வேய் - மூங்கிலின் கணுவிரண்டன் இடைநின்ற அமை. 'அமைத்தோள்.' 'வேய்த் தோளி :- வேயுறு தோளி.' பிளந்து தோல் உரித்தாய். பரு அரை=பரிய அரை. 'பராரை' என மரங்களினடியைக் கூறுதல்போல யானையின் பருத்த அடியைக் கூறினார். பருத்தவரை எனலுமாம்.

1035. இடுக்கு - இடைஞ்சல், முட்டுப்பாடு, இடுங்கு தலுமாம். கண் இடுங்குதற்குற்ற வினைகள் தீமை விளைக்கும். அத்தீமையைக் கண்மேலேற்றி இடுங்குகண் (இடுக்கண்)என்பர். ஒன்றும் - சிறிதும். எஞ்சாமை - குறையாமல். 'இறைஞ்சு கின்றார்' :- 1034 அடர்க்கின்ற - வருத்துகின்ற. நோயை விலக்கு. அண்டம் பலவற்றிலும் எட்டுத் திசையிலும் சுடர் (ஒளிர்) தலையுடைய பிறைத்திங்களை அணிந்து, சுழலைக் கொண்ட கங்கையாற்றொடும் வண்டுகள் நெருங்கிப் படர்ச்சியைக் கொண்ட செஞ்சடை வானவனே, எம்மை ஆளும் பசுபதியே, இறைஞ்சுகின்றார்க்கு நோயை விலக்கு, சுரும்பு துன்றிப்படர்தல்; படர்தலைக்கொண்ட சடை எனலுமாம். 'படர்சடைக்கொன்றை' (1022) 'படர் பொற்சடை' (1007)

அடலைக் கடல்கழி வானின் னடியிணை யேயடைந்தார்
நடலைப் படாமை விலக்குகண் டாய்நறுங் கொன்றைதிங்கள்
சுடலைப் பொடிச்சுண்ண மாசுணஞ் சூளா மணிகிடந்து
படரச் சுடர்மகு டாவெம்மை யாளும் பசுபதியே. 1036

துறவித் தொழிலே புரிந்துன் சுரும்படி யேதொழுவார்
மறவித் தொழிலது மாற்றுகண் டாய்மதின் மூன்றுடைய
அறவைத் தொழில்புரிந் தந்தரத் தேசெல்லு மந்திரத்தேர்ப்
பறவைப் புரமெரித் தாயெம்மை யாளும் பசுபதியே. 1037

1036 அடலைக்கடல் - 'துக்கசாகரம்'. 'துயர்க்கடல்' 'துன்பக்கடல்' (888). கழிவான் - நீங்க. நின் அடியிணையே அடைந்தார் :- 'ஏற்றுய அடிக்கே இரவும் பகலும் பிரியாது வணங்குவன்.' (1) 'தன்னை அடைந்தார்' (4) 'நின்னையே அறியும் அறிவறியேன்' (திருவாசகம்). நடலைப் படாமை:- 1007. குறிப்பைப் பார்க்க. படாமை - படாதவாறு. விலக்கு. பசுபதியே நடலைப்படாமை விலக்கு. நின்னையே அடைந்த தொண்டர் படாமை விலக்கு. நறுங்கொன்றையும் திங்களும் சுடலைப்பொடிச் சுண்ணமும் மாசுணமும் சூளாமணியும் கிடந்து படரச் சுடர்கின்ற மகுடனே. 'சுடலைப்பொடி பூசி' (1.1.1.) 'பொடிச்சுண்ணம்' தமிழ்ச் சொல்லும் வடசொல்லும் ஆம். 'சுண்ண வெண்சந்தனச் சாந்து' (11). மாசுணம் - பாம்பு. மாசு உண்டல் ஆகிய காரணத்தாற் பெற்ற பெயர். தரையிற் புரண்டு மாசுண்டு நகரமாட்டாது கிடக்கும் பெரும் பாம்பு 'மாசுணம்' எனப்படும். 'மண்டேரிதான் வாய் மடுப்பினும் மாசுணம் கண்டுயில்வ பேரா பெருமுச் செறிந்து' (நீதிநெறி விளக்கம். 34). சூளாமணி - நாகரத்நம். 'திங்கள்' என முன்னர்க் கூறப்பட்டதால், 'சுடர்த் திங்கட் சூளாமணி' எனல் ஒவ்வாது. 'மேல் இலங்கு சூழிட்டிருக்கும்நற் சூளாமணியும் சுடலை நீறும்' (1044). 'மேல் இலங்கு சோதித்திருக்கும்நற் சூளாமணியும் சுடலை நீறும்' (1048).

1037. துறவித் தொழிலே புரிந்து உன் சுரும்பு அடியே தொழுவார் மறவித்தொழிலது மாற்று - துறத்தலாகிய தொழிலையே விரும்பிச் செய்து (பற்றற நின்று) நின் வண்டு

சித்தத் துருகிச் சிவனெம்பி ரானென்று சிந்தையுள்ளே
பித்துப் பெருகப் பிதற்றுகின் றார்பிணி தீர்த்தருளாய்
மத்தத் தரக்க னிருபது தோளு முடியுமெல்லாம்
பத்துற் றுறநெரித் தாயெம்மை யாளும் பசுபதியே. 1038

திருச்சிற்றம்பலம்

---

சுற்றும் மலரடிகளையே வழிபடும் அடியாரது மறத்தற்றொழிலை மாற்றியருள்வாய். மதில் மூன்றுடைய புரம். மந்திரத் தேர்ப் பறவைப்புரம். அந்தரத்தே செல்லும் தேர். மந்திரத்தேர். அறவைத் தொழில் புரிந்து செல்லுந் தேர். அறவைத் தொழில் - பின்னர்த் தன்னைத் துணையிலியாக்குந் தீய தொழில். புரிந்து - செய்து. அந்தரத்தே - வானத்திலே. மந்திரம் - இரகசியம். மந்திரத்தால் செல்லும் தேர். பறவை - பறத்தல். பறவைப்புரம் - பறத்தலையுடைய முப்புரம். திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள். துறவி, மறவி, அறவை, பறவை என்றிரண்டீற்றுத் தொழிலாகுபெயர் பயிலுதலும் அறிக. துறவிமறவி பிறவி இறவி என்றும் துறவு மறவு பிறவு இறவு என்றும் ஈற்றுருவ் வேற்று வடிவுறுதல் காண்க. 'பெருந்தகை பிறவியொடிறவுமானான்' (1. 110. 1.)

1038 சித்தத்து - சிந்தையில் உருகி - பிறவற்றை யெண்ணுந் திறமெல்லாம் மறந்துருகி. சிவன் எம்பிரான் என்று; சிவபெருமான் எம்பரமன் என்று சிந்தனையுள்ளே பித்துப் பெருகப் பிதற்றுகின்றார். 'பித்துப் பத்தர் இனத்தாய்ப் பரனு ணர்வினால் உணரும் மெய்த்தவரை மேவா வினை' (சிவஞான போதம் சூ. 12. வெ. 2) பித்துப் பெருகப் பிதற்றுதல் :- பித்தர்க்குப் பத்துக்கொண்டு பித்தருட்பித்தே பெருகி வளர, முன்னை வினையினாலே மூர்த்தியை மறவாது நினைந்து பிதற்றுதல் (767). 'பிண்டத்தைக் கழிக்க வேண்டிற் பிரானையே பிதற்றுமின்கள்' (423). 'பேர்த்தினிப் பிறவாவண்ணம் பிதற்றுமின்' (409) 'மறுமையைக் கழிக்க வேண்டில், பெற்றதோருபாயந் தன்னாற் பிரானையே பிதற்றுமின்கள்' (413). பிணி - பிறவிப் பிணியும், பிறந்திருந்தெய்தும் பிணிகளும், இறவிப் பிணியும்' மும்மலப் பிணியும் முதலிய எல்லாம். தீர்த்தருளாய் - போக்கி நின் திருவடி நீழலைத் தந்தருள்வாய். மத்தத்து மயக்கம்.

# 111 பொது

## திருப்பதிக வரலாறு

திருப்புகலூரிற் பாடியருளிய செந்தமிழ் மாலையுள் ஒன்று இத் திருப்பதிகம். (புராணம். 412 முதலியன காண்க)

சரக்கறைத் திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

**விடையும் விடைப்பெரும் பாகாவென் விண்ணப்பம்**
**வெம்மழுவாட்**
**படையும் படையாய் நிரைத்தபல் பூதமும் பாய்புலித்தோல்**
**உடையு முடைதலை மாலையு மாலைப் பிறையோதுங்கும்**
**சடையு மிருக்குஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே.**

1039. விடையும் விடைப்பெரும்பாகா :- விடைத்தல் - வேறுபடுத்தல், சீறுதல், தாக்குதல். மற்றை எல்லா விடைகளினும் வேறுபடும் விடையே சிவபெருமானுடையது 'உணர் வென்னும் ஊர்வதுடையாய் போற்றி' (6. 57. 6) என்றதால் விடையை உணர்க. சீற்றமும் தாக்கும் காளை முதலியவற்றிற் கியல்பு. விடைப்பாகன். பெரும்பாகன். என் விண்ணப்பம் என்று இத் திருப்பதிக முழுதும் உள்ளது. விஞ்ஞாபனம் என்னும் வடசொல்லின்றிரிபென்பர். வெம்மழுவாள் படையும் - வெய்ய மழுவாளாகிய படையும். படையாய் நிரைத்த பல் பூதமும் - தானையாக வரிசைப்படுத்திய பல பூத கணங்களும், பாய் புலித்தோல் உடையும், உடைதலை மாலையும், மாலைப் பிறை ஒதுங்கி யிருக்கின்ற சடையும் இருக்கும் சரக்கறையோ என் தனி நெஞ்சம் ? 'பாய்புலித் தோல்' (786) 'உடைதலை' (1022). என் தனி நெஞ்சமானது மழுவாட்படை முதலிய ஐந்தும் குடிகொண்டிருக்கும் சரக்கறையோ என்று விண்ணப்பம் செய்துகொண்டார் இதில். சரக்கு-பொருள் சரக்கறை கருவூலம். உடைதலை - உடைந்ததலை. வினைத்தொகை. முடை (நாற்றம்) எனல் பொருந்தாது ; முடைத்தலை என்று பாடம் இல்லாமையால்.

விஞ்சத் தடவரை வெற்பாவேன் விண்ணப்ப மேலிலங்கு
சங்கக் கலனுஞ் சரிகோ வணமுந் தமருகமும்
அந்திப் பிறையு மனல்வா யரவும் விரவியேல்லாம்
சந்தித் திருக்குஞ் சரக்கறை யோவேன் றனிநேஞ்சமே. 1040

வீந்தார் தலைகல னேந்தீயேன் விண்ணப்ப மேலிலங்கு
சாந்தாய வேந்த தவளவெண் ணீறுந் தகுணிச்சமும்
பூந்தா மரைமேனிப் புள்ளி யுழைமா னதள்புலித்தோல்
தாந்தா மிருக்குஞ் சரக்கறை யோவேன் றனிநேஞ்சமே.

1040. வெற்பா, கலனும், கோவணமும், தமருகமும், பிறையும், அரவும் விரவிச் சந்தித்து இருக்கும் சரக்கறையோ என் தனி நெஞ்சம்? விஞ்சத்தடவரை வெற்பா - விந்தியம் என்னும் அகன்ற பக்கமலைகளையுடைய கயிலை மலைவாணு. வரை - பக்கமலை ; மூங்கிலுமாம். 'வெற்பிற கற்பாவியவரை' 'வெற்பிற்கற் பரந்த தாள்வரை' (திருக்கோவையார் 8 உரை) சங்கக்கலன் - சங்கக்குழை ; 'கலன்' என்பது பொதுமை நீங்கி ஈண்டுக் குழைக்குச் சிறந்து நின்றது. சரிகோவணம் - சரிந்த கோவணம். குபிநம் - அழுக்கு. கௌபீநம் அதன் திரிபு இது என்பர். கோவணம் வெண்ணிறத்ததாயிருத்தல் வேண்டும். நிறங்களுள் தலைமை வெண்மைக்கே உரித்து. அதனுல், 'கோவணம்' என்று பெயரிட்டனர் எனலுமுண்டு. 'கீளார் கோவணம்' தமருகம்-உடுக்கு. 'டமருகம்' என்றதன் திரிபு. அந்திப் பிறை (பதிகம் 85 பார்க்க; 1043; 1047; 1048) அனல் - நச்சுத் தீ. அனல்வாய் - நச்சுவாய். அரவு - பாம்பு. விரவி - கலந்து. சந்தித்து - பொருந்தி, என் தனி நெஞ்சம் சரக்கறையோ?

1041. வீந்தார் - அழிந்தார் ; நூறுகோடி பிரமர்களும், ஆறுகோடி நாராயணரும், ஈறிலிந்திரரும் வீய வீயாதவன் (ஈறிலாதவன்) ஈசன் ஒருவனே எனல் பின்னர் ஐந்தாவது திருமுறை முடிவிலே காண்க. வீந்தார் '(உலந்தார்) தலை':-6. (5. 53. 12) 6. 20. 5; 6. 39. 5. 6 47. 3. தலைகலன் - தலையாகிய கலன். கலனை ஏந்தீ என அழைத்தார். சாந்து ஆய வேந்த நீறு. வெண்ணீறு. தவளம் என்பது வெண்மை

வெஞ்சமர் வேழத் துரியாயேன் விண்ணப்ப மேலிலங்கு
வஞ்சமா வந்த வருபுனற் கங்கையும் வான்மதியும்
நஞ்சமா நாக நகுசிர மாலை நகுவெண்டலை
தஞ்சமா வாழுஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே. 1042

எனப் பொருள்தரும் வடசொல். தவளம் வெளிய நிறத்தைக் குறித்து நிற்றலால் 'வெண்ணீறு' என்பது பெயரளவாய் நின்றது. 'தவளப்பொடி' 1054. 'வெண்குன்றம்' (வந்தவாசிப் பக்கத்திலுள்ளது) என்னும் தமிழ்ப்பெயரைத் 'தவளகிரி' என்று வடசொல்லாற் குறிப்பர். தகுணிச்சம்:- அகப்புறமுழவுள் ஒன்று. 'தத்தசம்பாரம் தகுணிச்சம்' என்றது கூற்று. முழவன்று. 'தகுணிச்சம் விரலேறுபாகம்...... பெரும்பறை எனத் தோலாற் செய்யப்பட்ட கருவிகள்' என்றதே ஈண்டுக் கொள்ளத்தக்கது (சிலப்பதிகாரவுரை. அரங்கேற்றுகாதை 13. 27 பார்க்க.) 'சச்சரி கொக்கரை தக்கையோடு தகுணிதம் துந்துபி தாளம் வீணை' என (திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம். 9) வருதலும் அறிக. பூந்தாமரை மேனி:- 'செந்தாமரைக் காடனைய மேனித் தனிச்சுடரே' (திருவாசகம். 30) 'அலங்கலந்தாமரை மேனியப்பா' (ஷை 133) 'சிவபெருமானே செங்கமல மலர்போல் ஆர் உருவாய என் ஆரமுதே' (ஷை 599).

1042. வெஞ்சமர் - கடும்போர், போர் வேழம். வேழத் துரியாய் - களிற்றுத் தோலையுடையவனே. வஞ்சம் ஆ வந்த கங்கை. வல் + து + அம் = வஞ்சம் - வலியுடையது. ஆ- ஆக. வந்த கங்கை. வருபுனல் - வளரும் வெள்ளம். 'வந்த' என்றது கங்கைக்கும் 'வரு' என்றது புனலுக்கும் கொள்க. இன்றேல், 'வந்த' 'வரு' என நின்று வழுவாம். வான்மதி - 'வானூர்மதியம்' வால்மதி (- வெண்பிறை) எனலுமாம். நஞ்சம் - நஞ்சு (விடம்) மாநாகம் - பெரிய பாம்பு. நகுசிரம் மாலை......தலை - நக்கதலை மாலையும் நகுதலையும். நகுதல் - சிரித்தல், விளங்குதல். 'பல்லார்தலை' (6. 90. 7) 'பல்லார்ந்த வெண்டலை' (6. 48. 9). 'பல்லாடுதலை சடைமேலுடையான்' (6. 93. 2). தஞ்சம் - பற்றுக்கோடு. இது சொற்பொருளன்று. (தண் + து + அம் -) தஞ்சம் அடைந்தவர்பால் தண்மையாகப் பேசுதல் வேண்டும் எனல் வழக்கு வரும்புனல் என்றிருந்ததோ?

வேலைக் கடனஞ்ச முண்டாயேன் விண்ணப்ப மேலிலங்கு
காலற்க டந்தா னிடங்கயி லாயமுங் காமர்கொன்றை
மாலைப் பிறையு மணிவா யரவும் விரவியெல்லாம்
சாலக் கிடக்குஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே. 1043

வீழிட்ட கொன்றையந் தாராயேன் விண்ணப்ப மேலிலங்கு
சூழிட் டிருக்குநற் சூளா மணியுஞ் சுடலைநீறும்
ஏழிட் டிருக்குநல் லக்கு மரவுமென் பாமையோடும்
தாழிட் டிருக்குஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே. 1044

---

1043. வேலை - கடற்கரை. கடல் - பாற்கடல். நஞ்சம் உண்டாய் - ஆலாலமுண்டவனே; நஞ்சுண்டவனே. காலற் கடந்தான் - காலனைவென்றவன். ‘உண்டாய்’ என்னும் என்னும் முன்னிலையும் ‘கடந்தான்’ என்னும் படர்க்கையும் மயங்குமா றின்றிப் பொருள் செய்துகொள்க. கடந்த நின் இடம் எனக்கொள்ளலாம். கயிலாயமும் கொன்றையும் மாலைப் பிறையும் மணிவாய் அரவும் கலந்து எல்லாம் அமையக் கிடக்கும் சரக்கறையோ என் தனி நெஞ்சம்? காமர் - விருப்பம் மருவிய; அழகிய எனலும் உண்டு. மாலைப்பிறை :- ‘அந்திப் பிறை’ (1040). மணி - மாணிக்கம். அனல்வாய் அரவு’ (1040). விரவி - கலந்து. சால - அமைய. கிடத்தலின் மிகை யாகக் கொள்ளலுமாம்.

1044. வீழிட்ட - திரண்ட. விரும்பப்பட்ட எனலுமாம். கொன்றைக்காய்களும் கொன்றைப் பூங்கொத்துக்களும் வீழிட் டிருக்குந் தோற்றங் குறித்ததுமாம். தார் - மாலை. கண்ணி, தார், மாலை என்னும் வேறுபாடு குறித்ததன்று. சூழ் இட்டு - சூழ்தலைச் செய்து. ஏழ் இட்டு இருக்கும் நல் அக்கும் - எழுகோவையாகச் செய்த நல்லக்குமணி வடமும். 188. பார்க்க. அரவு - பாம்பு என்பு - எலும்பு. ஆமையோடு, ‘ஆமையோடும்’ என்பதில், ‘ஒடு’ என்பதன் நீட்டலுமாம். ‘ஓடு’ எனின் ‘சூளாமணியும் சுடலை நீறும்’ தொழுது பாதம் 1045 என்புழிப்போலவும் ஓசை கெடும். சூளமணியும் சுடலை நீறும் (1026. 1045) நல் அக்கும் அரவும் என்பும் ஆமை யோடும் தாழ்இட்டு இருக்கும் சரக்கறையோ என்தனி நெஞ்சமே? தாழிடுதல் - உள்வைத்துத் திறக்கவொட்டாது தாழக்கோலிட்டுச் செறித்தல்.

விண்டார் புரமூன்று மெய்தாயென் விண்ணப்ப மேலிலங்கு
தொண்டா டியதொண் டடிப்பொடி நீறுந் தொழுதுபாதம்
கண்டார்கள் கண்டிருக் குங்கயி லாயமுங் காமர்கொன்றைத்
தண்டா ரிருக்குஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே.

விடுபட்டி யேறுகந் தேறீயென் விண்ணப்ப மேலிலங்கு
கொடுகொட்டி கொக்கரை தக்கை குழருளம் வீணைமொந்தை
வடுவிட்ட கொன்றையும் வன்னியு மத்தமும் வாளரவும்
தடு தட்ட மாடுஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே. 1046

1045. விண்டார் - பகைவர் ; நீங்கினர். வினையாலணையும் பெயர். 'வீந்தார்' (1041) என்பதுபோல' மூன்றுபுரமும் :- முப்புரத்தையும். எய்தாய் - அம்பெய்து அழித்தவனே. தொண்டு ஆடிய - தொண்டில் முழுகிய ; தொண்டர்கள் முழுகிய, தொண்டு தொண்டர்களுடைய. அடி - திருவடி. அடிப்பொடி - திருவடித்துகள். தொண்டு - பழமை ; அடிமை. பழமையாகச் சொல்லப்பெற்ற தொண்டர். தொண்டர்க்குத் தொண்டர் என்றலுமாம். தொண்டு அடிப்பொடி - தொண்டரடிப்பொடி. அடியார்க்கடியர் அடிப்பொடி நீறு. திருவடி நீறு 1029. தொண்டர்க்குத் தொண்டர் அணியும் நின் திருவடிப்பொடிநீறு ; தொண்டு - ஒன்பது. நவதாண்டவத்துக்கு எண்ணுகு பெயராய்க்கொண்டு, நவதாண்டவம் ஆடிய பழமையான திருவடியின் பொடிநீறு எனல் பொருந்துமேற்கொள்க. தொழுது பதம் கண்டார்கள் - அடியார் பாதங்களைத் தொழுது பரனருளைக் கண்டவர்கள். பாதங்களைக்கண்டு தொழுதவர்கள் எனலுமாம். பதம் என்று கொள்வதே நன்று. கண்டவர்கள் கண்டுகொண்டே யிருக்கும் கயிலாயம். காமர் - விருப்பம் மருவிய. கொன் றைத்தார் ; தண்தார். தண்ணிய (குளிர்ந்த) கொன்றைமாலை. அடிப்பொடி நீறும் கயிலாயமும் கொன்றைத்தாரும் இருக்கும் சரக்கறையோ என் நெஞ்சம் ?

1046. 'விடு' என்பது 'விடை' என்றதன் முதனிலை. பட்டி - தொழுவம்; களவு. விடுபட்டி யேறு - கடவுட்கு என்று விட்ட பட்டி மாடு, நாட்டில் இன்றும் கடவுட்குரியதாய் மாடு விடுதல் உண்டு. 'பலியெருது' என்பது அதனையே. ஏறு உகந்து ஏறீ - ஏற்றினை விரும்பி ஏறுவோனே, 'கொடுகொட்டில்'

வெண்டிரைக் கங்கை விகிர்தாவென் விண்ணப்ப மேலிலங்கு
கண்டிகை பூண்டு கடிசூத் திரமேற் கபாலவடம்
குண்டிகை கோக்கரை கோணற் பிறைகுறட் பூதப்படை
தண்டிவைத் திட்ட சரக்கறை யோவென் றனிநேஞ்சமே.

'கோடிதாகிய கொட்டி என்னுங் கூத்து' 'கோடுங்கொட்டி, கோடுகொட்டி என விகாரம ஆயிற்று, கோடுங்கொட்டி என்றார் எல்லாவற்றையும் அழித்து நின்று ஆடுதலின்' கொட்டியாடற் கேற்ற மொட்டிய, உமையவள் ஒருபாலாக ஒருபால் இமையா நாட்டத்து இறைவன் ஆகி, அமையா உட்கும் வியப்பும் விழைவும், பொலிவும் பொருந்த நோக்கிய தொக்க, அவுணர் இன்னுயிர் இழப்ப அக்களம், பொலிய ஆடினன் என்ப மற்றதன், விருத்தம் காத்தற் பொருளோடு கூடிப், பொருத்த வரூஉம் பொருந்திய பாடல் திருத்தகு மரபிற் றெய்வத் துதிப்பே. 'இதனுன் உணர்க' என்று கலித்தொகைக் கடவுள் வாழ்த்துப் பகுதியான "கோடுகொட்டி ஆடுங்கால் . தருவளோ' என்றதற்கு எழுதிய நச்சினார்க்கினிய ருரையைக் காண்க. கோக்கரை - (1047). சங்கு - வலம்புரிச் சங்கு. 1041 குறிப்பிற்காண்க. தடுகுட்டம்? கோடுகொட்டிக் கூத்தும், கோக்கரையும், தக்கையும், குழலும், தாளமும், வீணையும், மொந்தையும், கொன்றையும், வன்னியும், மத்தமும், அரவும் ஆடும் சரக் கரையோ நெஞ்சம்?

1047. வெள்திரை கங்கை-வெள்ளலைகளையுடைய கங்கை யாற்றைச் சடையிலடக்கிக்கொண்ட விகிர்தனே; வேறுபாடு உடையவன். யாரும் விரும்பாதவற்றைமேற்கோடல், சுடுகாட்டி லாடல், முதலியவை வேறுபாடுகள். 'கண்டிகைபூண்டு':- 'கண்டியிற்பட்ட கழுத்துடையீர்.' (928) 'முத்து வடக் கண்டிகையும்' (13). கடி சூத்திரம் - அரைநாண்கடி - அரை. சூத்திரம் - கயிறு 'கடிசூத்திரப்பிருது' என்று விநாயகர் சகத்திர நாமத்துள் ஒன்றுண்டு. கபாலவடம்:- 'விலையில் கபாலக்கலனும் ... உடையார்' (17), குண்டிகை - கமண்டலம். கோக்கரை - வலம்புரிச்சங்கு, ஒரு வாச்சியம் எனலும் உண்டு. (1046) கோணற்பிறை:- அந்திப்பிறை (1040) மாலைப்பிறை. (1043) பாதிப்பிறை. (1048). குறட்பூதப்படை - குறளுருவு டைய பூதங்களின் தொகுதி. 'குறளர் சிந்தர் நெடியர்' என

வேதித்த வெம்மழு வாளீயென் விண்ணப்ப மேலிலங்கு
சோதித் திருக்குநற் சூளா மணியுஞ் சுடலைநீறும்
பாதிப் பிறையும் படுதலைத் துண்டமும் பாய்புலித்தோல்
சாதித் திருக்குஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே. 1048

விவந்தா டியகழ லெந்தாயென் விண்ணப்ப மேலிலங்கு
தவந்தா னெடுக்கத் தலைபத் திறுத்தனை தாழ்புலித்தோல
சிவந்தா டியபொடி நீறுஞ் சிரமாலை சூடிநின்று
தவந்தா னிருக்குஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே.

திருச்சிற்றம்பலம்

மக்களது வடிவின்வேறுபாடறிக. இம் மூன்றும் திருமாலைக் குறித்து வழங்குதலாலும் அறியப்படும். பெருங்கதையில் குறளர்க்கு ஆமையை உவமித்துளது. தண்டி - சேகரித்து. தண்டல் - சேகரிப்பு. (சிவரகசியம். பாசமோசந. 3.)

1048. வேதித்த - பேதித்த. வெம்மழு ஆளீ - வெய்ய மழுவை ஆள்பவனே. கோத்து - ஒளிசெய்து. சோதித்தல் :- சோதனைஎன்னும் வடசொல்லடியாகத் தோற்றுந் தொழிற் பெயர். சோதித்து - வினையெச்சம். சூளாமணி ஒளிசெய்திருக்கும். சூளா மணியும், சுடலை நீறும், பாதிப்பிறையும், படுதலைத் துண்டமும் பாய் புலித்தோலும் சாதித்திருக்கும் சரக்கறையோ என்நெஞ்சம்? 'சுடர்த்திங்கட் சூளாமணி' (11) என்றதால், திங்களே சூளாமணி எனத் தோன்றும் ஆண்டுத் திங்களும் சூளாமணியும் எனக்கொண்டுரைத்தாம். ஈண்டும் அவ்வாறே கொள்ளல் சிறந்தது. "மேல் இலங்கு சூழிட்டிருக்கும் நற்சூளாமணியும் சுடலை நீறும்" (1044) என்றும் 'நறுங்கொன்றை சுடலைப் சுடலைப் பொடிச்சுண்ணம் மாசுணம் சூளாமணி கிடந்து படரச்சுடர் மகுடா' என்றும் முன் உள்ளன. பின்னதில் திங்கள் வேறு சூளாமணி வேறு என்றதறிக.

1049. விவந்து - மாறுபாடு வந்து. வி - மாறுபாடு. விவர்த்தம் - திரும்பிவருதல். 'விவந்து' என்பது அதனுடைய திரிபாய வினையெச்சமென்று கொண்டு, பெயர்ந்து என்று பொருளுரைத்தலுமாம். (காளியுடன் மாறுபாடு வந்தாடியது.)

கழல் - வலக்காலிலணியும் வீரகண்டை. மேல் இலங்கு தவந்தான் - முற்பிறவிகளிற் செய்துவிளங்கிய தவத்தையுடைய வஞுகிய இராவணன் தான் ; தவம் என்பது பெருந்தவம்புரிந்த இராவணனைக் குறித்ததாகக் கோள்ளலாம். மேல் இலங்கும் தவம் கயிலையை உணாத்தியதாகக்கோண்டு எடுத்தலுக்குச் செயப்படு போருளாக்கலாம். இறுத்தனை - இறச்செய்தனை இற்றன தலைகள். இறுத்தது சிவபிரானது திருக்காற் பெருவிரல் நுனி. 'தாழ்புலித்தோல்' - 'பாய்புலித்தோல்'. சிவந்து ஆடிய - ஆடிச் சிவந்த. 'ஆடியபோடிநீறு' 'தோண்டாடிய தோண்டடிப்போடிநீறு' (1045). 'சுடலைப் போடிச்சுண்ணம்' (1036). சிரமாலை :- 'நகுசிரமாலை நகுவேண்டலை ! (1042). புலித்தோலும் நீறும் சிரமாலையும் சூடிநின்று தவம் இருக்கும் சரக்கறையோ நேஞ்சம் ? 'படுதலைத்துண்டம்' :- படுதலை யேந்துகையா' (1066).

" செஞ்சடையார் புகழ்விதைத்துத் திருஞான நீர்தேக்கி
யஞ்சுகளை யறுத்துடனே யமணர்களை வேரறுத்துப்
பஞ்சநதிக கயிலையினிற் பயன்விளைந்து புகலூரிற்
றஞ்சமுதற் கண்டபிரான் சரணகம லம்போற்றி "

— திருவையாற்றுப் புராணம்

" வேற்று ருக்கோள் விதியறி யாவரன்
கீற்று வெண்பிறைக கேழ்கிளர் செஞ்சடை
யாற்று ணுச்சுமை யேற்று மருந்தமிழ்
மாற்ற ருந்தவத் தோனை வழுத்துவாம் "

— சீகாளத்திப் புராணம்

" புத்தியற் றிருக்கும் போய்யர் புறச்சம யத்தை நீக்கிச்
சத்தியப் போருளை யோர்ந்து தலைவனை யறிந்து சைவ
பத்தியிற் கனிந்த ஞானப் பழத்தினை யோருகற றூணு
லத்தியைக் கடந்த நாவுக் கரசினை வணங்கு வோமே "

— சேவ்வந்திப் புராணம்

"இற்றூணின் மரகதத்தி னொளிபகலு மிருள்காட்ட வேழுந்துகாமன்
விற்றூணி மலரேடுத்து விளையாடுந் திருவாமூர் விளங்க வந்தான்
கற்றூணைப் பிடித்துவளை கடல்கடந்தோ னிருபாத கமல மேன்னும்
போற்றூணைப் பிடித்துநம திடராழி கடந்துகதி புகுத லாமே "

— திருவேண்காட்டுப் புராணம்

# 112 பொது

## திருப்பதிக வரலாறு

திருப்புகலூரிற் பாடி ஆருயிரின் திருவிருத்தம், தசபுராணத் தடைவு, பாவநாசப் பதிகம் முதலியவற்றுள் ஒன்று இத்திருப்பதிகம். (பெரிய புராணம். 413 - 15).

### தனித் திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

வெள்ளிக் குழைத்துணி போலுங் கபாலத்தன் வீழ்ந்திலங்கு
வெள்ளிப் புரியன்ன வெண்புரி நூலன் விரிசடைமேல்
வெள்ளித் தகடன்ன வெண்பிறை சூடிவெள் ளென்பணிந்து
வெள்ளிப் பொடிப்பவ ளப்புறம் பூசிய வேதியனே. 1050

1050. வெள்ளி - வெண்ணிறத்தையுடையதாகிய. குழை- சங்கினது. துணிபோலும் - துண்டுபோலும். கபாலத்தன் - கபாலக்கலனைக் கையிலேந்தியவன். கபாலத்துக்குச் சங்கின் துணி உவமம். குழை - காது ; 'ஊசலுற்றவர் குழைக்குடைந் திடுதலால்' (கந்தபுராணம் திருநாட்டுப். 44) குண்டலம் எனினும் பொருந்தும், கபாலத்துக் குவமமாவன யாவும் பொருந்தும் ஆயினும், அவை 'குழை' என்பதற்குப் பொருளாதல் வேண்டும். வெள்ளிப்புரி ; வெள்ளிக்கம்பி ; வெண்புரிநூல் - பூணு நூல் ; முப்புரிநூல். வெள்ளித்தகடு போன்ற வெண்பிறை. என்பு - எலும்பு. வெள்ளிப்பொடி - திருவெண்ணீறு. கபாலம், புரிநூல், பிறை, என்பு, பூச்சு எல்லாம் வெண்ணிறத்தன. கபாலத்துக்குச் சங்கக் குழைத்துண்டமும், புரிநூற்கு வெள்ளிப்புரியும், வெண் பிறைக்கு வெள்ளித் தகடும் உவமம். 'வெண்பிறை' :- 'வெண் டிங்கள்' :- 'செஞ் ஞாயிறு' போல, இயைபின்மை நீக்கிய அடை கொண்டது. 'வெள்ளிப்பொடிப் பவளப் புறம் :- 'பவளம்போல் மேனியிற் பால் வெண்ணீறு' (783). 'பொன் னொத்த மேனிமேல் வெண்ணீறு' (788) பவளத்தடவரை போலுந் திண்டோள்கள் (1060) 'முழுத்தழல் மேனித்தவளப் பொடியன்' (1053)

உடலைத் துறந்துல கேழுங் கடந்துல வாததுன்பக்
கடலைக் கடந்துய்யப் போயிட லாகுங் கனகவண்ணப்
படலைச் சடைப்பர வைத்திரைக் கங்கைப் பனிப்பிறைவெண்
சுடலைப் பொடிக்கட வுட்கடி மைக்கட் டுணிநெஞ்சமே. 1051

முன்னே யுரைத்தான் முகமனே யொக்குமிம் மூவுலகுக்
கன்னையு மத்தனு மாவா யழல்வணு நீயலையோ
உன்னை நினைந்தே கழியுமென் னுவி கழிந்ததற்பின்
என்னை மறக்கப் பெறுயெம் பிரானுன்னை வேண்டியதே.1052

1051. உடலைத்துறந்து, உலகு ஏழும் கடந்து, உலவாத துன்பக் கடலைக் கடந்து, உய்யப் போயிடல் ஆகும் :- உடலைத் துறத்தல் - பிண்டத்தைக் கடத்தல். (1032, 1066 பார்க்க) உலகு ஏழும் கடத்தல் - அண்டத்தைக் கடத்தல், உலவாத துன்பம் - அழியாத பிறவித்துன்பம். பொதுவாக மும்மலச் சார்பும் சிறப்பாக ஆணவமலப்பிணியும் பற்றிய துன்பம். அத்துன்பக்கடலைக் கடத்தல். உய்யப்போயிடல் :- அவற்றைக் கடத்தலாகிய பாசநீக்கம் உயிர்க்குளதாகப் பெறுதல். கனகம் - ஆடகப்பொன். வண்ணம் - நிறம்; அழகுமாம். படலை - திரட்சி. 'பொன்னனவார்சடை' (1011) சடையிற் கங்கையையும் பிறையையும் சுடலைப் பொடியையும் உடைய கடவுள். சடைமேல் திருவெண்ணீறு வைத்தல் இன்றும் சைவத் திருமடாலயங்களில், சீலத்திரு குருமகா சந்நிதானம் இளைய சந்நிதானங்களுக்கும் தம்பிரான்களுக்கும் உள்ள அருளொழுக்கமாகும். அருச்சுனன் தவம் புரிந்தபோது திருநீற்றைச் சடைப்புறத்தே வைத்திருந்த உண்மையை, 'ஆசினுன் மறைப்படியும் எண்ணில் கோடி ஆகமத்தின் படியும் எழுத்தைந்துங் கூறிப் பூசினுன் வடிவமெலாம் விபூதியாலப் பூதியினைப் புரிந்த சடைப் புறத்தே சேர்த்தான்' (வில்லிபாரதம். அருச்சுனன் தவநிலைச். 37)

1052. முன்னே உரைத்தால் முகமனே ஒக்கும் அழல் வணு ! இம்மூவுலகுக்கு(ம்) அன்னையும் அத்தனும் ஆவாய் நீ அலையோ ? முன் நின்று சொன்னுல் உபசார வார்த்தையைப் போலத் தோன்றும். தோன்றினும் அது சத்திய வார்த்தையே

நின்னையெப் போது நினையவொட் டாய்நீ நினையப்புகில்
பின்னையப் போதே மறப்பித்துப் பேர்த்தொன்று நாடுவித்தி
உன்னையெப் போது மறந்திட் டுனக்கினி தாவிருக்கும்
என்னையொப் பாருள ரோசொல்லு வாழி யிறையவனே. 1053

அன்றி உபசார வார்த்தை அன்று. நெருப்புருவனே, இந்த மூன்றுலகங்கட்கும் தாயும் தந்தையும் ஆவாய் நீ அல்லையோ? உன்னை அல்லாது வேறு அம்மையும் அப்பனும் எவ்வுலகங் கட்கும் உண்டோ? இல்லையே! இன்மையால், இவ்வுரை முகமனுரை ஆகுமோ! ஆகாது. இது வாய்மை யுரையே. என் உடலினின்று, யான் இறக்குங் காலத்தில், உன்னை நினைந்து கொண்டே இறப்பேன். இறந்தால் என்னை மறத்தலைப் பெறுய். 'கழிந்ததற்பின்' :- 'கற்றபின் நிற்க அதற்குத் தக' என்பது போல்வது. எம்பிராளுகிய உன்னை நான் வேண்டிக்கொண்ட வரம் இதுவே (என்னை மறத்தலைப் பெருமையே). மறக்கப் பெருமை - மறக்கப்பெறுதலைச் செய்யாமை. மறவாமை என்றபடி. யான் உன்னை நினைந்தே கழிதலால், அவ்வாறு என்னை நீ நினைக்கச் செய்தலும், அத்திறத்தில் என்னை நீ மறவாதிருத்தலும் உடனமைந்து கிடந்தன என்றவாறு. 'நினையா என் நெஞ்சை நினைவித்தான்' (6. 43. 1).

1053. நின்னை எப்போதும் நினையல் ஒட்டாய் - நினையா என்னெஞ்சை நினைவித்தாலும் காலை, மாலை, நண்பகல், நள்ளிரவு எனச் சிலபொழுதுதாம் நினைவித்தருள்கின்றாய். அந் நினைதற் பயிற்சியால் எப்போதும் நினையும் ஆராவேட்கை அடியேற்குளதாயிற்று. ஆயினும் அவ்வாறே எப்போதும் நினையும் ஆற்றலை அருள் செய்திலாய். விட்டுவிட்டு நினையும் அஃதன்றி எண்ணெயொழுக்கை (தைலதாரையை)ப் போன்று தொடர்ச்சியாக நினையும ஆற்றலைத் தந்தருள்கின்றிலை. நினையலை ஒட்டாய். (எதிர்மறைவினை). 'துஞ்சிருள் காலை மாலை தொடர்ச்சியை மறந்திராதே' நினையும் ஆற்றலெய்தி எப்போதும் நினையும் அளவு என்னுடன் ஒட்டி வாழ்தி என்றவாறு. ஒட்டாமை என்பது ஈண்டுணர்த்தும் பொருளை ஓர்ந்துணர்க. 'உணரப்படுவாரோடு ஒட்டி வாழ்தி' 'ஒட்டிநின்ற உடலுறு நோய்வினை கட்டிநின்ற கழிந்தவை போயறத் தோட்டுநின்றும்

முழுத்தழன் மேனித் தவளப் பொடியன் கனகக்குன் றத்
தெழிற்*பெருஞ் சோதியை யெங்கள் பிரானை யிகழ்திர்கண் டீர்
தொழப்படுந் தேவர் தொழப்படு வானைத் தொழுதபின்னைத்
தொழப்படுந்தேவர்தம்மால்தொழுவிக்குந்தன்றொண்டரையே

அச் சோற்றுத் துறையர்க்கே பட்டியாய்ப் பணிசெய் மட நெஞ்சமே ' (5. 33. 3.) 'நினையலொட்டாய்' நினையலொட்டும் என்னும் இரண்டு நிலையிலும் வைத்து அதன் பொருளை நினைக. எப்போதும் நினையவொட்டாய் - எப்பொழுதிலும் (ஒருவேளை யிலும்) உன்னை நினைதல் எனக்கு ஒட்டுமாறு செய்யாய். ஒரு வேளைகூட உன்னை நினைக்கச் செய்திலாய் என்றலும் பின் னுள்ள பகுதிக்குப் பொருந்தும். நீ நினையலொட்டாய். நினையல் அடியார் (அப்பர்) வினை. ஒட்டாமை கடவுள் செயல். நினையப் புகில் - நினைக்கலுற்றால், பின்னை - (முன்னை நினையவொட்டாது செய்ததன்றிப்) பின்னையும். அப்போதே - நினைக்கலுற்ற அப் பொழுதிலேயே. மறப்பித்து - மறக்கச்செய்து. பேர்த்து - பெயர்த்து ; நினைப்பைப் பிறிதொன்றிற் பெயர்ந்து செல்ல வைத்து. ஒன்று - பிறிதொன்றனை. நாடுவித்தி - நாடுமாறு செய்கின்றாய். உன்னை நினையப்புகில், பிறிதொன்றனை நினையப் பண்ணுவாய் என்றவாறு. இத்திறத்தில், எப்போதும் உன்னை மறந்திட்டு, உனக்கு இனிதாக இருக்கும் என்னை ஒப்பார் (எவரேனும்) உளரோ ? இறையவனே, யாரேனும் உளராயின், சொல்லு. வாழி.

1054. முழுத்தழல் மேனித் தவளப் பொடியன் - முழுத் தீப்போலும் திருமேனிமேல் வெண்ணீறுடையவன். தீ முழுமை யும் ஒரு மேனியாயுற்றுத் திகழ்பவன் என்றவாறு. தவளம் - வெண்மை. பொடி - திருநீறு. ' தவள வெண்ணீறு ' (1041) கனகக் குன்றத்து எழில் பெருஞ்சோதியை - பொன்மலைபோலும் எழுச்சியும் அழகும் உடைய மெய்ப்பேரொளியை. ' பரஞ்சோதி ' என்று பண்டிதர் பதிப்பிலுளது. பழம்பதிப்பில் 'பெருஞ்சோதி' என்றே உளது. எங்கள் பிரானை - எங்களுக்குப் பிரியத்தைச் செய்பவனை, பிரியான் என்றதன் மரூஉவாக் கொண்டுரைத்தல் சிறந்தது. ' அரியானை என்றெடுத்தே அடியவருக்கு எளியானை

* ' பரஞ்சோதி ' என்று பண்டிதர் பதிப்பில் உள்ளது.

விண்ணகத் தான்மிக்க வேதத்து ளான்விரி நீருடுத்த
மண்ணகத் தான்றிரு மாலகத் தான்மரு வற்கினிய
பண்ணகத் தான்பத்தர் சித்தத்து ளான்பழ நாயடியேன்
கண்ணகத் தான்மனத் தான்சென்னி யானெங்கறைக்
கண்டனே. 1055

அவர்தம் சிந்தை பிரியாத பெரிய திருத்தாண்டகச் செந்தமிழ் பாடிப் பிறங்கு சோதி விரியா நின்றெவ்வுலகும் விளங்கிய பொன்னம்பலத்துமேவியாவும் புரியா நின்றவர் தம்மைப் பணிந்து தமிழாற் பின்னும் பாடல் செய்வார்' (திருநா. புராணம் 175). கிழவர் - கிழார், சிறுவர் - சிறார், மகவர் - மகார் என்பனபோல மருவியது. பிரான் என்பதுமாம். இகழ்திர் - இகழ்வீர். தொழுதல்- தேவர்களைப் பணிவோர் செயல். படுதல் :- அத் தேவா வினை. தொழப்படுந் தேவர் தொழுதலும்; அத் தேவர் தொழப்படுதலும். 'தொழப்படுந் தேவர்' என்றது தேவரது ஏற்றத்தைக் குறித்தது. 'தொழப்படுந் தேவர் தொழப்படுவான்' என்றது சிவபரத்துவத்தைக் குறித்தது. 'தொழப்படுந் தேவர் தம்மால் தொழுவிக்கும் தொண்டரை' என்றது திருத்தொண்டர் பெருமையைக் குறித்தது. தொழுத பின்னை - தொழுதால். 'கற்றபின் நிற்க அதற்குத்தக' (குறள்) என்புழிப் பரிமேலழகர் உரைத்த துணர்க. தொழும்போதே உண்டாதலின், பின்னை என்றது காலப் பெயர் அன்று. தொழுவித்தல் - கடவுள் செயல், தொழுதல் - தொழப்படுந் தேவர் வினை, தொழுவிக்கப்பெறுவோர் தொண்டர். தொழப்படுந்தேவர்:- உருத்திரன், திருமால், நான்முகன், இந்திரன் முதலியோர். தொழப்படுவோர் அவராயின், அவரைத் தொழுவார் யார்? மண்ணோரும் விண்ணோரும் பாதலத்தோருமாவர். தொழப் படுவோரால் தொழப்படுவார் சிவபிரானும் சிவத் தொண்டரும்.

1055. விண் அகத்தான் - விண்ணிடத்தவனும்; மிக்க வேதத்துளான் - மேலான மறைப்பொருளானவனும்; விரிநீர் உடுத்த மண்ணகத்தான் - பரந்த கடல் புடைசூழ்ந்த நிலத்தி லுறைபவனும்; திருமால் அகத்தான் - திருமாலின் உள்ளத்திற் குடிகொண்டவனும்; மருவற்கு இனிய பண் அகத்தான் - பொருந்துதற்கு இனியவான பண்ணினிசையானவனும்; பத்தர்- தொண்டர், சித்தத்துளான் - சிந்தையிலுள்ளவனும். பழ அடி யேன்; நாயடியேன். அடியேனது கண், மனம், சென்னி,

பெருங்கடன் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும்போய்
இருங்கடன் மூடி யிறக்கு மிறந்தான் களேபரமும்
கருங்கடல் வண்ணன் களேபர முங்கொண்டு கங்காளராய்
வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே.

வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையும்
தானந் துளங்கித் தலைதடு மாறிலென் தண்கடலும்
மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண்
டுனமொன் றில்லா வொருவனுக் காட்பட்ட வுத்தமர்க்கே.

---

கண்ணிலுள்ளவனும், மனத்திலுள்ளவனும், சென்னியிலுள்ள வனும் ; கறைக்கண்டனே - நஞ்சின் கறுப்பையுடைய (திருநீல) கண்டனே. இங்குக் காட்டத்தக்க ஒப்புமைப் பகுதிகள் அளவிலாதுள்ளன. 'மனத்தகத்தான்...... வாக்கினுள்ளான்' சிரத்தின் மேலான் என்கண்ணுளானே! (6. 8. 5) 'வாயானை மனத்தானை மனத்துள் நின்ற கருத்தானை...... சிந்திக்கப் பெற்றேன் நானே'.

1056. பெருங்கடல் மூடிப் பிரளயம்கொண்டு - பெரிய கடலாற் சூழப்பட்டுப் பிரளயம் உற்று பிரமனும் போய் - படைத்தற்றொழிலானாகிய பிரமனும் சென்று ; இருங்கடன் மூடி - தன் பெரிய கடன்மை முடிந்து ; இறக்கும் - மாள்வான். இறந்தான் களேபரமும் - இறந்த அவனது உடலையும் ; கருங் கடல் வண்ணன் களேபரமும் - கரிய கடலினது நிறம்போலும் நீலநிறமுடைய திருமாலினுடலையும்; கொண்டு - கைக்கொண்டு, கங்காளர் ஆய் - கங்காளத்தினை மேற்கொண்டவராகி. மீளவரும் கடன் நின்று - ஒடுங்கிய உலகம் மீளத் தோன்றும் முறைமை யின் சங்கற்பம் செய்து ; எம் இறை - எம் இறைவன். நல்வீணை வாசிக்கும் - அழகிய வீணையை இயம்பும். வீணைக்கு நலம் - சுருதியியல் கெடாதவாறமைந்து, இன்னிசைத் தோற்றத் துக்குரியதாதல். 'பண்ணொடுயாழ் வீணை பயின்றாய் போற்றி' 6. 57. 7. 'கங்காள வேடக்கருத்தர்' (6-28-7) 'கரியுரித்தாடு கங்காளர்' (3. 93. 6) 'கங்காளன் பூசுங் கவசத்திருநீறு' (திருமந்திரம்) कलेवरम् - உடல். மகரமூர்த்தத் தோன்று.

1057. வேலைநஞ்சு உண்டு ஊனம் ஒன்று இல்லாத ஒருவனுக்கு ஆட்பட்ட உத்தமர்க்கு, வானம் துளங்கில் என்?

சிவனெனு நாமந் தனக்கே யுடையசெம் மேனியெம்மான்
அவனெனை யாட்கொண் டளித்திடு மாகி லவன்றனையான்
பவனெனு நாமம் பிடித்துத் திரிந்துபன் னாளழைத்தால்
இவனெனைப் பன்னா ளழைப்பொழி யானென் றெதிர்ப்படுமே.

---

மண் கம்பம் ஆகில் என்? மால்வரையும் தானம் துளங்கித் தலைதடுமாறில் என்? தண் கடலும் மீனம்படில் என்? விரிசுடர் வீழில் என்? என்று கொள்க. வானம் - விண்ணுலகம். துளங்கில் - அசைந்தால். என் - நமக்குறும் அச்சம் யாது? நமக்கு அதனால் சிறிதும் இடர் இல்லை. மண்ணுலகு, கம்பம் - நடுக்கம்; (பூகம்பம், நிலநடுக்கம்). மால்வரையும் தண்கடலும் முறையே தானம் துளங்கித், தலைதடுமாறிலும் (நீர்வற்றி) மீன்கள் பட்டொழியிலும் நமக்கு யாதும் இடர்ப்பாடு இல்லை. மால்வரை - பெரிய மலைகள். தானம் - இடம். துளங்கி - பெயர்ந்து. தலை தடுமாறல் - நிலை கேடல். தண்கடலா யிருந்து வறுங்கடலாங்கால், அதில் உள்ள மீன் முதலியன எல்லாம் மாயும். படில் - மாய்ந்தால். விரிசுடர் - உலகெலாம் விரிந்த சுடருடைய செங்கதிர் வெண்கதிர் முதலியவை. வீழில் - விழுந்தால், 'தப்பி வானம் தரணி கம்பிக்கில் என்? ஒப்பில் வேந்தர் ஒருங்குடன் சீறில் என்? செப்பம் ஆகும். சேறைச் செந்நெறி மேவிய அப்பனார் உளர் அஞ்சுவ தென்னுக்கே.' (5. 77. 6.)

1058. சிவன் என்னும் திருப்பெயரைத் தன் ஒருவனுக்கே யுரியதாக்கிக்கொண்ட செய்ய திருமேனியையுடைய எம்பெருமானாகிய அவன் என்னை ஆளாகக்கொண்டு, தண்ணளிசெய் தருள்வான். அளித்திடும் ஆகில். அவனை, அடியேன், 'பவன்' என்னும் திருப் பெயர்ப்பொருள் முதலியவற்றை உள்ளத்திலும் உரையிலும்பற்றி, (அவன் இயக்கும் இடந்தோறும்) இயங்கிப் பலநாளும் அத் திருப்பெயரால் அழைத்துவந்தால், இவன் என்னைப் பலநாளும் அழைத்துவருகின்றான். அழைத்தலை ஒழிவதில்லை என்று அடியேற்குக் காட்சிதந்தருள்வான். சிவன் - செய்யன். தமிழ்ச் சொல்லாகக்கொண்டு பொருள்கூறிய இடம் இது. செம்மேனி யெம்மான் என்றது 'சிவன்! என்ற தமிழ்ச் சொல்லின் பொருளாகும். சிவன், மகேசுரன், உருத்திரன், விண்டு, பிதாமகன், சமுசாரவைத்தியன், சருவஞ்ஞன்,

என்னையோப் பாருன்னை யெங்ஙனங் காண்ப ரிகலியுன்னை
நின்னையோப் பார்நின்னைக் காணும் படித்தன்று நின்பெருமை
பொன்னையோப் பாரித் தழலை வளாவிச்சேம் மானஞ்சேற்று
மின்னையோப் பார மிளிருஞ் சடைக்கற்றை வேதியனே.1059

திருச்சிற்றம்பலம்

. . . . . . . . . . . . . . . . . . . . .

பரமாத்துமா என்னும் திருப்பெயர் எட்டுடன் ' பவன் முதலாம் ஆயிரம் பேர் எடுத்துக்கூறிக் குறையாத பேரன்பிற்பதும மலர் கொடு பூசை புரியும். ' (காஞ்சிப் திருமாற்பேற்றுப். 9). ' அகில நாமமும் எமக்குரிப் பெயராம் அவற்றினும் பவன் முதற்பெயர் சிறப்பாத் தகும் ' (ஷை திருவேகம்பப். 43)ஆகில்-அன்புடையேம் ஆகில். அழைத்தால் நம் விடாப்பிடிக்காக எதிர்ப்பட்டருள்வான். (திருவாசகம் திருச்சதகம். 58.) முதலடி பரத்துவம் உணர்த்திய துணர்க.

1059. பொன்னை ஒத்து, நெருப்பைக் கலந்து, சேம் மானத்தை அழித்து, மின்னலை ஒத்தல் பொருந்த மிளிர்கின்ற சடைத்திரளையுடைய வேதமுதல்வனே, உன்னை இகலி என்னை ஒப்பவா எங்கனம் உன்னைக் காண்பர். நின்னை ஒப்பவர் நின்னைக் காணும்படியினது அன்று நின்பெருமை. உன்னை இகலி என்றதை முன் வாக்கியத்திலும், நின்பெருமை என்றதைப் பின்வாக்கியத்திலும் கொண்டுரைக்க. என்னை ஒப்பார் உன்னை இகலி உன்னை எங்கனம் காண்பர்? நின்பெருமை நின்னைக் காணும் படித்து அன்று. படித்து - தன்மைத்து. படி - தன்மை. பெருமை காணும்படித்து அன்று. ' அவரன்ன ஒப்பாரியாம் கண்டதில் (குறள் 1071) என்றது ஒப்பு. ஒப்பாரித்தல் - அழுவித்தல்; வளாவுதல் - கலத்தல், தணித்தலுமாம். வெந்நீர் வளாவுதல் ' என்னும் வழக்கு நோக்கியும் உணர்க. சேம் மானஞ் சேற்று :- 'செம்மான நிறம் போல்வதோர் சிந்தையுள் எம்மானைக்கண்டு கொண்டது என் உள்ளம். ' (5. 98. 4) ' சிந்தையாய் நின்ற சிவனே போற்றி ' (6. 5. 9). செவ்வானம் செம்மானம் எனத் திரியலாம். வவ்வும் மவ்வும் ஒன்றன் நிலைக் களத்து மற்றொன்று நிற்பன. ' வானமாரி ' என்பது ' மான வாரி ' என்றதறிக. ' சடைக்கற்றையினாய் ' (1051). ' நின்னை ' என்றிருமுறையும் ' உன்னை ' என்றொருமுறையும் நிற்றலின் பொருத்தம் ஆராய்தற்குரியது.

# 113 பொது

## திருப்பதிக வரலாறு

பூம்புகலூர் வந்தணைந்தார் போய்ப் பாசம் போக்குவார்; புனிதர் மலர்த்தாள் வணங்கினார். எண்ணிறந்த வண்டமிழ் மாலைகள் பாடினார். அவற்றுள் ஒன்று இத்திருப்பதிகம். (பெரிய புராணம், 412 - 15).

தனித் திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

பவளத் தடவரை போலுந்திண் டோள்களத் தோண்மிசையே
பவளக் குழைதழைத் தாலொக்கும் பல்சடை யச்சடைமேல்
பவளக் கொழுந்தன்ன பைம்முக நாகமந் நாகத்தோடும்
பவளக்கண் வால மதியெந்தை சூடும் பனிமலரே. 1060

1060. திண்தோள்கள் பவளத் தடவரையைப் போலும். பல்சடை அத் தோள்மிசையே பவளக்குழை தழைத்தால் போலும். பைம்முகநாகம் அச்சடைமேல் பவளக்கொழுந்து போலும். பவளக்கண் வாலமதி அந்நாகத்தோடும் எந்தை சூடும் பனிமலர் (போலும்) என்று சொல்வகை செய்துகொள்க. தடவரை - பெரிய மலை. திண்மை - உறுதி ; செறிவு. மிசை - மேல். குழை - குண்டலம். பை - படம். பைம்முகம் - படத்தையுடைய முகம். நாகம் - (ஐந்தலைப்) பாம்பு. வாலமதி - பாலசந்திரன் ; இளம்பிறை. ‘ வால ’ என்றது பால என்றதன் திரிபு. அது வடசொல். ‘ எந்தை ’ - என் அப்பன். இதுதன்மை. ‘ நுந்தை ’ முன்னிலை. ‘ தந்தை ’ படர்க்கை. பனிமலர் - குளிர்பூ. தோளுக்குப் பவளவரையும், சடைக்குத் தழைத்த பவளக்குழையும், நாகத்துக்குப் பவளக்கொழுந்தும், பால சந்திரனுக்குப் பவளத்தின் பூவும் உவமையாகக் கூறப்பட்டன. ‘ கற்பகத்தின் பூங்கொம்போ காமன்றன் பெருவாழ்வோ, பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ, புயல் சுமந்த அற்புதமோ, விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ ...சிவனருளோ அறியேன் என்றதிசயித்தார்.’ (பெரிய புராணம். தடுத்தாட்கொண்ட. 140) என்றதாற் பவளமலர் உண்மை அறியப்படும். பா. 957 பார்க்க.

முருகார் நறுமல ரிண்டை தழுவிவண் டேமுரலும்
பெருகா றடைசடைக் கற்றையி னுய்பிணி மேய்ந்திருந்த
இருகாற் குரம்பை யிதுநா னுடைய திதுபிரிந்தால்
தருவா யெனக்குன் றிருவடிக் கீழோர் தலைமறைவே. 1061

மூவா வுருவத்து முக்கண் முதல்வமீக் கூரிடும்பை
காவா யெனக்கடை தூங்கு மணியைக்கை யாலமரர்
நாவா யசைத்த வொலியொலி மாறிய தில்லையப்பால்
தீவா யெரிந்து பொடியாய்க் கழிந்த திரிபுரமே 1062

1061. முருகு - மணம். ஆர். ஆர்ந்த ; நிறைந்த. நறு மலர்-நறிய பூ. இண்டை - இண்டை என்னும் பெயரிய தலையிற் சூடும் வட்ட மாலை 377. குறிப்பிற் காண்க. தழுவி - பொருந்தி. வண்டே-வண்டுகளே. முரலும் - ஒலிக்கின்ற (சடை). முரல்வன வண்டுகள். முரலும் இளம் சடை. பெருகுவது ஆறு (கங்கை). அவ்வாறு அடைவது சடையை. சடைக்கற்றையினை யுடைய வனே என்று அழைத்து, உன் திருவடிக்கீழ் ஒரு தலைமறைவு எனக்குத் தருவாய் என்றும், அதுவும் இவ்வுடலின் நீங்கும் போது தருவாய் என்றும் வரம் வேண்டுகின்ருர். பிணிமேய்ந் திருந்த குரம்பை. இருகால் குரம்பை. பிணியையே கூரையாக வேயப்பட்டிருந்த குடிசை. இரண்டுகால் நட்டுக் கட்டிய குடிசை. பிணி மேய்ந்திருந்த இருகாற் குரம்பையாகிய இது. நான் உடையது இது. இக்குரம்பை, பிரிந்தால் :- கூடிய நான் நீங்க, இது பிரிந்தால். எனக்கு உன் திருவடிக்கீழ் ஓர்தலை மறைவு தருவாய். தலை மறைவு :- 'மாயவன் முந்நீர்த் துயின்றவன் அன்று மருதிடையே போயவன் காணுத பூங் கழல் நல்ல புலத்தினர் நெஞ் சேயவன் சிற்றம்பலத்துள் நின்ருடுங் கழல் எவர்க்குந் தாயவன்றன் பொற்கழல் என் தலைமறை நன்னிழலே' (நம்பியாண்டார் நம்பி அருளிய கோயிற் றிருப்பண்ணியர் திருவிருத்தம். 9). குடில் செய் - குடிசை. நன்செய் - நஞ்சை. புன்செய் - புஞ்சை முதலியன போன்ற மரூஉ. குற்றில் - குறில் - குடில். குடியில் செய்யுமாம்.

1062. மூவா உருவத்து முக்கண் முதல்வ - மூத்தல் இல்லாத அருளுருவையுடைய முக்கண்ணனுகிய முதல்வனே.

பந்தித்த பாவங்க ளம்மையிற் செய்தன விம்மைவந்து
சந்தித்த பின்னைச் சமழ்ப்பதேன் னேவந் தமரர்முன்னாள்
முந்திச் செழுமல ரிட்டு முடிதாழ்த் தடிவணங்கும்
நந்திக்கு முந்துற வாட்செய்கி லாவிட்ட நன்னெஞ்சமே.1063

முக்கண் - அருளுருவத்தில் ஒரு நிலையில் இச்சாசத்தி, ஞான சத்தி, கிரியாசத்தி மூன்றும் கண்களாகும். மிக்கூர்தல் - மிகப் பெருகுதல். இடும்பை - துன்பம். காவாய் - காத்தருள்வாய்; என - என்று, கடைதூங்கும் மணியை - வாயிற் கடையில் அசையும் (ஆராய்ச்சி) மணியை. அமரர் - தேவர்கள். கையால் நாவாய் அசைத்த ஒலி - தங்கள் கைகளால், அம்மணி நாக்கிடத்தில் அசையச்செய்ததால் உண்டான ஒலியானது, அசைத்த ஒலி :- காரணப்பெயரெச்சம். ஒலி மாறியது இல்லை - ஒலித்தலின் மாறினதில்லை. ஒலி ஒலி (- ஒலித்த ஒலி) என வினைத்தொகையாக்கல் பொருந்தாது. அப்பால் - ஒலித்த அப்பொழுதே; பால் எனக் காலம் இடமாயிற்று. பால் உருபன்று. திரிபுரம் இருந்த அவ்விடத்தில். தீவாய் - தீயின்கண். 'தீயாய்' (பா. பே ) எரிந்து-நெருப்பாகித் தீய்ந்து, பொடியாய் - சாம்பலாகி, (கழிந்தது). நாவாய் - நாவின்கண். நா மணிநா, 'மிகுகூர்' மரூஉ. 'மிக்கூர்' மிக்கு ஊர்கின்ற என்றுமாம். 'மிசைமிசை' என்றதுமீமிசை என மருவிய போல்வது. மிகல்-மேல். மிசைக் கண் - மிக்கண், மிசைத்தோல் - மீத்தோல், மீந்தோல், மிசைப் போர்வை - மீப்போர்வை முதலியனவும் அறியற்பாலன.

1063. அமரர் முன்னாள், முந்திச் செழுமலர் இட்டு முடியைத் தாழ்த்து அடியை வணங்கும் (அத்தகு முதன்மையுடைய) நந்தியாகிய சிவபிரானுக்கு நீயே முந்துறும் வண்ணம்

*அந்திவட் டத்திளங் கண்ணிய றுறமர் செஞ்சடையான்
புந்திவட் டத்திடைப் புக்குநின் றானையும் பொய்யென்பனோ
சந்திவட் டச்சடைக் கற்றை யலம்பச் சிறிதலர்ந்த
நந்திவட் டத்தொடு கொன்றைவ ளாவிய நம்பனையே. (754)

* இது முன்னர்த் திருவையாற்றுத் திருவிருத்தம் இரண்டினுள் ஒன்றாய் முதலில் உளது. 'ஐயாறமர்ந்து வந்தேன்' ஆறமர் செஞ்சடையான்' என்னும் வேறுபாடு மட்டும் கொண்டது. 'சிந்தி' என்பது சந்தி எனப் பிழைபட்டது. அதுவே அன்றி, இது, வேறுபாடல் ஆகாது. 'இளங்கண்ணி' எனல் பொருந்தாது.

உன்மத் தகமலர் சூடி யுலகந் தொழச்சுடலைப்
பன்மத் தகங்கொண்டு பல்கடை தோறும் பலிதிரிவான்
என்மத் தகத்தே யிரவும் பகலும் பிரிவரியான்
தன்மத் தகத்தோ ரிளம்பிறை சூடிய சங்கரனே. 1064

தொண்டு செய்யாது விட்டனை; அக்கெடுற்ற மனமே' முற்பிறவியிற் செய்தனவாய்க் கட்டாயுற்ற தீவினைமறங்கள் இப் பிறவியில் வந்து தாக்கியபின்னர், நாணி வருந்துவதில் யாது பயன்? நன்னெஞ்சம் (நல்+நெஞ்சம்) என்றதில் நன்மை இகழச்சிக் குறிப்பு. அம்மை - முற்பிறப்பு. இம்மை - இப்பிறப்பு. வரும் பிறப்பை 'உம்மை' என்பர். 'தம்மை இகழ்ந்தமை தாம் பொறுப்பதன்றி மற்று எம்மை இகழ்ந்த வினைப்பயத்தால் உம்மை எரிவாய் நிரயத்து வீழ்வர் கொல் என்று பரிவதூஉம் சான்றோர் கடன்' (நாலடியார்.) என்றதில், 'உம்மை' என்றது இனி எய்தும் பிறவியைக் குறித்தல் அறிக. 'அம்மை' என்றது சேய்மைச் சுட்டுச்சொல்லாதலின், அது முற்பிறவிக்கும் பிற்பிறவிக்கும் உரித்தாகும். ஆதலின், 'அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவில்லையே' என்றருளினார் எம்மையும் ஆளுடைய நம்பி. அதில் ஆள்வதற்கு ஆதும் எனக்கொள்ளவும் இடம் உண்டு. யாது என்றது ஆது என்று வந்துளது. 'ஆதும் சுவடுபடாமல் ஐயாறடைகின்றபோது' (21) என்றதன் குறிப்பிற் காண்க.

1064. உன்மத்தக மலர் - ஊமத்தம் பூ. உலகம் - 'எல்லாவுலகமும்'. சுடலைப் பல் மத்தகம். சுடு காட்டிலிருந்த பல்லுடைய தலையையும் பலதலைகளையும் கோத்தமாலைகளையும், கொண்டு - அணிந்துகொண்டு, பல் கடைதோறும் - பலவீட்டுக் கடை வாயில் தோறும். பலிதிரிவான் - பிச்சைக்காகத்திரிபவன். என் மத்தகத்தே - என் தலையில். இரவும் பகலும் பிரியான்:- 'ஏற்றாய் அடிக்கே இரவும் பகலும் பிரியாது வணங்குவன் எப்பொழுதும்' (1), தன் மத்தகத்து - தன் தலைமேல். ஓர் இளம்பிறை சூடிய சங்கரன். ஓர் இளம் பிறையை அணிந்த இன்பச் செயலன். சங்கரன் - இன்பஞ் செய்பவன். உன்மத்தம் என்பதே ஊமத்தம் என்று மருவியது எனல் ஈண்டு விளங்கும். உன் மத்தகம் என்றது ஆராயத்தக்கது. பின் மூன்றடிக் கண்ணும் மத்தகம் தலையைக் குறிப்பதாயினும், கொண்டது

அரைப்பா லுடுப்பன கோவணச் சின்னங்க ளையமுணல்
வரைப்பா வையைக்கொண்ட தெக்குடி வாழ்க்கைக்கு வானிரைக்கும்
இரைப்பா படுதலை யேந்துகை யாமறை தேடுமெந்தாய்
உரைப்பா ருரைப்பன வேசெய்தி யாலெங்க ளுத்தமனே. 1065

பிரம கபாலத்தையும் தலைமாலையையும். இரவும் பகலும் பிரியாதது பிரமரந்திரத்துள்ள சகச்சிரதளபங்கயத்தில்; பிறை சூடியது சடையில் என்றுணர்க. துவாதசாந்தத்தையும் இரவும் பகலும் பிரியாமைக்குரியதாகக் கொள்ளலாம். இரவு - கேவலம். பகல் - சகலம். கிரியாதீபிகை :- दिनं विकल्पज्ञानं रात्रिः अज्ञानं तस्मात्सकलावस्तां केवलाऽवस्थां च त्यक्त्वा निर्मल जाग्रादिना सन्ततं शिवं पूजयेत्। பக்கம் 51 பார்க்க. 'பாவிடையாடு குழல்போற் கரந்து பரந்ததுள்ளம்' என்னும் திருவாசகத்தையும் நினைக.

1065. வான் இரைக்கும் இரைப்பா விண்ணுலகம் எல்லாம் ஒலிக்கும் ஒலிவடிவினனே, படுதலை ஏந்துகையா - இறந்துபட்ட பிரமனது கபாலத்தைத் தாங்கிய கையினனே. மறைதேடும் எந்தாய் - வேதங்கள் தேடுகின்ற எந்தையே. 'வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே' (திருவாசகம்), எங்கள் உத்தமனே; உரைப்பார் உரைப்பன செய்தி - சொல்லுவார் சொல்வனவற்றைச் செய்வாய். அரைப்பால் உடுப்பன :- திருவரையில் உடுப்பன கோவணச் சின்னங்கள்; உண்ணல் ஐயம், ஐயம் - பிச்சையுணவு. கோவண வுடையும் பிச்சை யுண்டியும் உடைய நீ மலைமகளை மணந்து கொண்டது என்ன குடிவாழ்க்கை செய்வதற்கு ? வானிரைக்கும் இரைப்பா :- 'ஓசை யொலியெலாம் ஆனாய் நீயே'. உரைப்பார் உரைப்பன :- 'உரைப்பார் உரைப்பவையெல்லாம் இரப்பார்க்கு ஒன்று ஈவார்மேல் நிற்கும் புகழ்' (திருக்குறள்). சின்னம் - துண்டு. தமிழ்ச்சொல். 'சின்மை. சின்னஞ் சிறுபிள்ளை. 'சின்னஞ் சிறிய. பென்னம்பெரிய' என்பவற்றை அறிக. சின்னம் என்னும் வடசொல் வேறுண்டு. அதன் பொருள் வேறு. ஈண்டு அது பொருந்தாது.

துறக்கப் படாத வுடலைத் துறந்துவெந் தூதுவரோ
டிறப்ப னிறந்தா லிருவிசும் பேறுவ னேறிவந்து
பிறப்பன் பிறந்தாற் பிறையணி வார்சடைப் பிஞ்ஞகன்பேர்
மறப்பன்கொ லோவென்றென் னுள்ளங் கிடந்து மறுகிடுமே.

வேரி வளாய விரைமலர்க் கொன்றை புனைந்தனகன்
சேரி வளாயவென் சிந்தை புகுந்தான் றிருமுடிமேல்
வாரி வளாய வருபுனற் கங்கை சடைமறிவாய்
ஏரி வளாவிக் கிடந்தது போலு மிளம்பிறையே. 1067

1066. துறக்கப்படாத உடல் - பற்றற விட்டொழிக்க எளிதல்லாத உடம்பு. உடலைத் துறந்து - உடம்பை விட்டு; இறந்து. வெம் தூதுவரோடு - கொடிய யம தூதுவருடன். இறப்பன் - இம்மண்ணுலகைக் கடப்பேன். இறந்தால்-கடந்தால். இரு விசும்பு - பெரிய வானுலகம். ஏறுவன் - ஏறிவந்து பிறப்பன்; மீண்டும் மண்ணுலகிற் பிறத்தலை யுணர்த்திற்று. 'பூதனுசரீரம் போனல் புரியட்ட ரூபந்தானே யாதனு சரீரமாகி இன்பத் துன்பங்களெல்லாம் நாதனுர் ஆணை உய்க்க நரகொடு சுவர்க்கம் துய்த்துத் தீதிலா அணுவாய் யோனி சேர்ந்திடும் சீவனெல்லாம்.' (சித்தியார் சூ. 2:-36). பிறந்தால், பிறையைச் சூடிய நீண்ட சடையையுடைய பிஞ்ஞகனது திருப் பெயரை மறந்துவிடுவேனே என்று என் உள்ளம் அதே நினைவாய்க் கிடந்து சுழலுகின்றது. 'ஜீவந் முக்தி' நிலையில் இவ்வையம் உண்டாமெனில், நம்மனோர் கதி என்னையோ? 'நன்றறிவாரிற் கயவர் திருவுடையார் நெஞ்சத் தவல மிலர்' (குறள்) 'இந்தச் சகந்தனில் இரண்டும் இன்றித் தமோமயம் ஆகி எல்லாம் நிகழ்ந்திட மகிழ்ந்து வாழும் நீர்மையார்' (சிவப் பிரகாசம். 95.)

1067. வேரி-தேன். வளாய-கலந்த. விரை-மணம். மலர்க் கொன்றை - மலர்களாலாகிய கொன்றை மாலையை. புனைந்து - அணிந்து. அனகன் (அநகன்) - மறமில்லான்; பாவமில்லான். என் சிந்தை புகுந்தான் - என் சிந்தையிற் புகுந்தனன். அநகன் புகுந்தான். 'சேரிவளாய சிந்தை' என்றதால், அதன் தூய்மை யின்மை உணர்த்தினர். சேர்தல் பொருந்த எனலுமாம் 'புகுந் தான் :- வினையாலணையும் பெயர், புகுந்தானது திருமுடிமேல்;

கன்னெடுங் காலம் வெதும்பிக் கருங்கட னீர்சுருங்கிப்
பன்னெடுங் கால மழைதான் மறுக்கினும் பஞ்சமுண்டேன்
றென்னொடுஞ் சூளறு மஞ்சனெஞ் சேயிமை யாதமுக்கண்
பொன்னெடுங் குன்றமொன் றுண்டுகண் டீர்ப் புகலிடத்தே.

வாரி - வெள்ளம். வளாய - கலந்த. வருபுனல் - விரைந்து வருகின்ற நீர்ப்பெருக்கு, கங்கை சடை இரண்டும் பிறைக்குத் தடையாயிருத்தலின், அவற்றிடை மறிவாகி அக்கங்கையாகிய நீர்நிலையிற் கலந்து கிடந்தது அப்பிறை. மறிவு - மறிதல்; தடைபடுதல். ஏரி - நீர்நிலை. ஏரி - ஏர்க்குப் பயன்படுவது. குளி - குளித்தற்குப் பயனுவது. ஊருணி - ஊரினர் உண்ணப் பயனுவது. இந் நீர்நிலைகளின் பயன் வேறுபாட்டா லுண்டான பெயர் வேறுபா டறியாது, எல்லாவற்றையும் ஒரே பொருளி லாள் வது பொருந்தாது. ' ஏரி நிறைந்தனைய செல்வன் ' ' வண்டுடைக் குளத்தின மிக்கோளமேன்மேல் மகிழ்தலின் நோக்கி ' ' ஊருணி நீர் நிறைந்தற்றே உலகவாம் பேரறிவாளன் திரு. '

1068. கல் - மலை. நெடுங்காலம் - நீண்டகாலம். வெதும்பி-வெயிலால், பசுமையற்று வெயதுற்று. கருங்கடல்- நீர்நிறைவாற் கரிய தோற்றத்தையுடைய கடல். நீர்சுருங்கி - நீர் முழுதும் குறைந்து ; வற்றி. பல்நெடுங்காலம் - நெடிய பலகாலம். மழைதான் மறுக்கினும் - முகில் மழையைப்பெய்ய மறுத்தாலும். பஞ்சம் - கறுப்பு ; வற்கடம். உண்டு - உளது. என்று - என்று சொல்லி. அஞ்சல் - அஞ்சாதே. என்னொடும் சூளறும் நெஞ்சே - என்னுடன் வஞ்சினம் செய்யும் மனமே. இப் புகல் இடத்தே - எல்லா வுயிர்க்கும் புகலிடமான சிவ பூமியிலே. பொன்னெடுங் குன்றம் ஒன்று உளது - பொன்னுரு வான நெடிய மலை ஒன்றிருக்கின்றது. அதனுல், அஞ்சல் நெஞ்சே - பஞ்சம் வரும் என்ற பயமே வேண்டா. ' பற்றுய் நினைந்திடப் போதுநெஞ்சே ' (914) என்றும் ' வானந்துளங்கில் என் ' (1057) என்றும் ' மண் பாதலம்புக்கு மால்கடல் மூடி ' (921) என்றும் தொடங்குந் திருவிருத்தங்களை ஈண்டெண்ணுக. சூளறுதல் சூளுறுதல் இரண்டும் ஒரு பொருளில் ஆளப்படு கின்றன. (கந்தபுராணம் அசமுகி. 29; துணைவரு. 10;

மேலு மறிந்தில னுன்முகன் மேற்சென்று கீழிடந்து
மாலு மறிந்திலன் மாலுற்ற தேவழி பாடுசெய்யும்
பாலன் மிசைச்சென்று பாசம் விசிறி மறிந்தசிந்தைக்
கால னறிந்தா னறிதற் கரியான் கழலடியே. 1069

திருச்சிற்றம்பலம்

கிரவுஞ்ச. 10 ; சேதுபுராணம். விதூமச். 8; 84 ; கந்தமாதன. 89 ; கம்பர். நிகும்ப. 82 ; பரிபாடல். 8 ; 70 ; கலித்தொகை. 41 ; இறையனுரகப். பக்கம். 18. 107. உரை ; மணிமேகலை. 3 :- 102. தொல்காப்பியம். பொ. 147. உரை.)

1069. திருவாசகம் 3 :- 50; 4 :- 1 - 10; நான்முகன் அன்னப் புள்ளுருக்கொண்டு மேற்சென்று பறந்து தேடியலைந்து மேலும் அறிந்திலன். மாலும் பன்றியுருக்கொண்டு கீழிடந்து கீழும் அறிந்திலன். மேலும் என்றதால் கீழும் என வருவித்துரைக்கப்பட்டது. அயன் மேற்சென்று மேலும் அறிந்திலன். மால் கீழிடந்து கீழும் அறிந்திலன். மேல் கீழ் என்றன சிவபிரானுடைய திருமுடியையும் திருவடியையும் குறித்த இடவாகு பெயர். மேல் :- ' போதார் புனை முடியும் எல்லாப் பொருள் முடிவே. ' ' சோதி மணிமுடி சொல்லிற் சொல் இறந்து நின்ற தொன்மை, ' கீழ் :- ' பாதாளம் ஏழினும் கீழ் சொற்கழிவு பாதமலர் '. பாதம் இரண்டும் வினவிற் பாதாளம் ஏழினுக்கு அப்பால் '. (திருவாசகம். 164. 346) இடத்தல் - இடம்படச் செய்தல். தோண்டல் ; ' தங்கண்முன் இடக்குங்கை ' (பெரிய. கண்ணப்ப. 183). இடந்து - இடம் படச்செய்து. மண்ணைத் தோண்டி ; பெயர்த்து. மால் - அன்பு. ' மாலுங்காட்டி வழிகாட்டி வாராவுலக நெறி ஏறக் கோலங்காட்டி ஆண்டான் ' (திருவாசகம். 643). உற்ற - மிக்க. தே - சிவபிரான். ' தேவு - ' சிவமாந்தன்மைப் பெருவாழ்வு ' (சித்தியார் கடவுள் வாழ்த்து, சிவஞானமாமுனிவர் உரை). தேவழிபாடு - சிவபூசை. பாலன் - மார்க்கண்டேய முனிவர். மிசை-மேல். பாசம்-கயிறு. மறிந்த சிந்தைக்காலன்- மடங்கிய சிந்தனையுடைய எமன். மறிதல்:- (திருவடியால் உதை பட்டு ஊக்கம் ஒழிந்து) மடங்குதல், அறிதற்கு அரியான் கழல்

அடியே காலன் அறிந்தான் :- மாலும் அயனும் கீழிடந்தும் மேலுயர்ந்தும் அடியும் முடியும் அறிதற்கரியவனுன சிவ பெருமானது திருவடியால் உதைபட்ட முகத்தால், காலன் அதை அறிந்துய்ந்தான் 967. 1024. 955. பார்க்க. அக் காலனுக்குக் காட்சியளித்தது 'அயன்திருமாற் கரியசிவம்'. அவனைவீட்ட எடுத்தும் அவன் காணக்கிடைத்தது, நாரணனும் நான்முகனும் தேட எடுத்ததும், அன்னம்பாலிக்குந் தில்லைச் சிற்றம்பலத்து நட்டம் ஆட எடுத்ததும் ஆகிய திருப்பாதம். அத் திருவடியே என்றும் எங்கும் எவ்வுயிர்க்கும் துணை. அத் திருவடி வாழ்க.

**திருநாவுக்கரசு நாயனர் அருளிய**

**நாலாந் திருமுறையும் அதன் உரையும்**

**முற்றும்.**



திருநாவுக்கரசு நாயனர் திருவடி வாழ்க.

குருஞானசம்பந்தர் குரைகழல் வாழ்க.

**சுப்பிரமணியதேசிகஞானசம்பந்த பரமாசாரியர் துணைத்தாள்வாழ்க.**

உ

குருபாதம்

தருமையாதீனத்துக் குரு பரம்பரையில் இருபத்தைந்தாவது பீடத்தை அணிசெய்து கொண்டு வீற்றிருந்தருளும் குருமகாசந்நிதானம் சீலத்திரு. **சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** அவர்களது அருளாணையைப்போற்றி, வணங்கி, ஆதீனப் புலவர், சித்தாந்த சிரோமணி, சித்தாந்த ரத்நாகரம், மதுரகவி, முதுபெரும் புலவர் வித்துவான், முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் (நாலாந் திருமுறைக்கு) எழுதிய உரை முகிழ்ந்தது. குருமணி வாழ்க. இனிது வாழ்க. நீடூழி வாழ்க.

உ

குருபாதம்

## நாலாந் திருமுறை

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

எண் - பாட்டெண்

கா

உ

குருபாதம்

# நாலாந் திருமுறைச்

# சொல்லகராதிச் சுருக்கம்

## எண் பாட்டெண்

உ

குருபாதம்

# ஆதீன வெளியீடுகள்

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 1 | குருஞானசம்பந்த சுவாமிகள் தாலாட்டு சமூகமாலை முதலியன | 1924 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1944 |
| 2 | நித்திய கன்மநெறி (மூலம்) | 1927 |
| 3 | திருமுல்லைவாயிற்புராணம் | ,, |
| 4 | திரிபதார்த்தரூபாதி தசகாரிய அகவல் | ,, |
| 5 | சித்தாந்தநிச்சயம் | 1928 |
| 6 | சம்பிரதாயதீபம் | ,, |
| 7 | வருணாச்சிரம சந்திரிகை (வடமொழி) | 1930 |
| 8 | சிகாரத்தினமாலை | ,, |
| 9 | திருப்பதிகமும் பஞ்சரத்தினமும் | ,, |
| 10 | தசமணிமாலை | ,, |
| 11 | ஞானசம்பந்த குருராயவட்டகமும் சந்திரகலாமாலையும் | ,, |
| 12 | திருவையாற்றுப் புராணம் | ,, |
| 13 | சிவானந்தபோதசாரம் | 1931 |
| 14 | சோடசகலாப் பிராசாத ஷட்கம் | ,, |
| 15 | சைவசந்யாச பத்ததி (வடமொழி) | 1932 |
| 16 | சிவயோகசாரமும், சொக்கநாத வெண்பாவும் ஆங்கிலத்துடன் | ,, |
| | (இரண்டாம் பதிப்பு) | 1936 |
| | ,, (மூன்றும் பதிப்பு) | 1950 |
| | ,, (நான்காம் பதிப்பு) | 1953 |
| | ,, (ஐந்தாம் பதிப்பு) | ,, |
| 17 | சிவப்பிரகாசக்கட்டளை ஆங்கிலத்துடன் | 1932 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1939 |
| 18 | 23-வது மகாசந்நிதானத்தின்மீது பலர் பாடிய தோத்திரப் பாடல்கள் | 1933 |
| 19 | திருத்துருத்திப் புராணம் மூலமும் வசனமும் | ,, |
| 20 | ஞானசரிதை | 1934 |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 21 | முத்திநிச்சயம் சிற்றுரையுடன் | 1934 |
| 22 | அறிவானந்த சமுத்திரம் | 1935 |
| 23 | பண்டார மும்மணிக்கோவை குறிப்புரையுடன் | 1937 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 24 | இந்துமத பாலபாடம் | 1937 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1949 |
| | ,, (மூன்றாம் பதிப்பு) | 1953 |
| 25 | சிதம்பரச் செய்யுட்கோவை உரையுடன் | 1937 |
| 26 | திருவையாற்றுத் தலமகிமைச் சுருக்கம் | ,, |
| 27 | கிளிவிடுதூது | 1938 |
| 28 | திருமுலைப்பால் சிறப்பு | 1939 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1941 |
| 29 | பதிபசு பாசத்தொகை | 1940 |
| 30 | ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிகர் நான்மணிமாலை | ,, |
| 31 | திருபுவனத் தலமகிமைச் சுருக்கம் | ,, |
| 32 | கீர்த்தித் திருவகவல் | 1941 |
| 33 | ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள் வரலாறும் பாசுரங்களும் | ,, |
| 34 | வைத்தீசுவரன்கோயில் தேவாரம் திருப்புகழ் | ,, |
| 35 | திருத்தொண்டத் தொகையும் அசபாநடனப் பதிகமும் | ,, |
| 36 | குங்கிலியக்கலய நாயனூர் அன்பின்திறம் | ,, |
| 37 | திருக்கடவூர்த் தேவாரம் திருப்புகழ் | ,, |
| 38 | திருவையாற்றுத் தேவாரம் திருப்புகழ் | ,, |
| 39 | புள்ளிருக்குவேளூர்ப் புராணம் | ,, |
| 40 | சித்தாந்த சைவ வினாவிடை | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 41 | நால்வர் சரித்திரமும் அற்புதத் தேவாரத் திரட்டும் | 1941 |
| 42 | ஆச்சாள்புரத் தலவரலாறு | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1943 |
| | ,, (மூன்றாம் பதிப்பு) | 1955 |
| 43 | திருவையாற்றுத் தலவரலாறு | 1941 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1943 |
| | ,, (மூன்றாம் பதிப்பு) | 1948 |
| 44 | சுப்பிரமணியர்திருவவதாரமும் கந்தர்கலிவெண்பாவும் | 1941 |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 45 | தருமபுர ஆதீனம் மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு | 1941 |
| 46 | சிவபூஜாவிதி | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 47 | சைவாநுட்டானவிதி | 1941 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 48 | திருக்கடவூர் உலா குறிப்புரையுடன் | 1941 |
| 49 | திருப்பாடல்கள் | 1942 |
| 50 | விநாயகர் அகவல்கள் | ,, |
| 51 | சீகாழித் தலவரலாறு | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1950 |
| 52 | மெய்கண்ட சாத்திரம் மூலம் | 1942 |
| 53 | திருக்கற்குடித் தலவரலாறு | 1943 |
| 54 | நீதிநெறிவிளக்கம் உரைவளத்துடன் | , |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1949 |
| 55 | திருவாரூர் நான்மணிமாலை மூலமும் வசனமும் | 1943 |
| 56 | சகலகலாவல்லிமாலை உரையுடன் | ,, |
| 57 | கந்தரனுபூதி | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1945 |
| 58 | குத்தாலத் தலவரலாறு | 1943 |
| 59 | திருக்குறுக்கைத் தலவரலாறு | ,, |
| 60 | திருபுவனம் தலவரலாறு | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1948 |
| 61 | திருக்கடவூர்த் தலவரலாறு | 1943 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1954 |
| 62 | புள்ளிருக்குவேளூர்த் தலவரலாறு | 1943 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1949 |
| 63 | திருப்பனந்தாள் தலவரலாறு | 1943 |
| 64 | 24-வது மகாசந்நிதானம் பத்தாண்டு ஆட்சிமலர் | ,, |
| 65 | அப்பர் சுவாமிகள் புராணம் C.K.S. விரிவுரையுடன் | 1944 |
| 66 | மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு திருமுறைத் திருநாள் நிகழ்ச்சிகள் | ,, |
| 67 | சிவஞானபோதச் சூத்திரக் கட்டுரை | ,, |
| 68 | ஞானசம்பந்தர் வழங்கிய ஞானவுரை | 1945 |
| 69 | சிவப்பிரகாசம் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 70 | தருமபுர ஆதீன நூல்நிலையப் புத்தகப்பட்டி | ,, |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 71 | புள்ளிருக்குவேளூர்த் திருப்பதிகங்கள் | 1945 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1946 |
| 72 | பஞ்சாவரணத்தோத்திரங்கள் | 1945 |
| 73 | சிதம்பரத்துத் திருப்பதிகங்கள் | ,, |
| 74 | தக்ஷிணாமூர்த்தி திருவருட்பா | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | ,, |
| 75 | திருவேட்களத் திருப்பதிகங்கள் | ,, |
| 76 | திருநெல்வாயில் திருப்பதிகம் | ,, |
| 77 | திருக்கழிப்பாலைத் திருப்பதிகங்கள் | ,, |
| 78 | திருநாரையூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 79 | தருமபுர ஆதீன ஆவணிமூலத் திருநாள் | ,, |
| 80 | ஆச்சாள்புரத் திருப்பதிகம் | 1945 |
| 81 | திருமயேந்திரப்பள்ளித் திருப்பதிகம் | ,, |
| 82 | திருத்துருத்தித் திருப்பதிகங்கள் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1946 |
| 83 | திருமங்கலக்குடித் திருப்பதிகங்கள் | 1945 |
| 84 | திருக்கோளிலித் திருப்பதிகங்கள் | ,, |
| 85 | திருக்கடவூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1946 |
| 86 | சிவஞானபோதம் ஆங்கிலமொழிபெயர்ப்புடன் | 1945 |
| 87 | சோமவார விரதம் | |
| 88 | திருநீறு — முதற்பதிப்பு | ,, |
| 89 | உருத்திராக்கம் — இரண்டாம் பதிப்பு | 1949 |
| 90 | ஐந்தெழுத்து — மூன்றும் பதிப்பு | 1953 |
| 91 | கந்தர்சட்டிவிரதச்சிறப்பு திருமுருகாற்றுப்படையுடன் | 1946 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1949 |
| 92 | திருவருட்பயன் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | 1946 |
| 93 | தென்திருமுல்லைவாயில் திருப்பதிகம் | ,, |
| 94 | ஸ்ரீ ஆண்டாள் திருப்பாவை | 1946 |
| 95 | திருக்கலிக்காமூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 96 | தருமபுர ஆதீனப் பாடசாலைகளின் நிர்ணயவிதிகள் | ,, |
| 97 | திருநெல்வேலித் திருப்பதிகம் | ,, |
| 98 | திலகவதியார் (உரைநடை) | ,, |
| 99 | சீகாழித் திருப்பதிகங்கள் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1948 |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 100 | திருக்கோலக்காத் திருப்பதிகம் | 1946 |
| 101 | திருக்குருகாவூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 102 | திருச்சாய்க்காட்டுத் திருப்பதிகம் | ,, |
| 103 | திருப்பல்லவனீச்சரத் திருப்பதிகம் | ,, |
| 104 | திருவெண்காட்டுத் திருப்பதிகங்கள் | ,, |
| 105 | கீழைத்திருக்காட்டுப்பள்ளித் திருப்பதிகம் | ,, |
| 106 | சித்தாந்தத்திரயம் - ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 107 | ஸ்ரீகண்டன் ' ஓர் சிறு நாடகம் ' | ,, |
| 108 | திருமுலைப்பால் திருவிழாச் சிறப்பு | ,, |
| 109 | முத்திநிச்சயப் பேருரை என்னும் வெள்ளியம்பலவாண மாபாடியம் | 1947 |
| 110 | மிருகேந்திரம் - தமிழ் மொழி பெயர்ப்புடன் | 1946 |
| 111 | நடராஜ சதகம் | ,, |
| 112 | உண்மை விளக்கம் (ஆங்கில மொழிபெயர்ப்புடன்) | ,, |
| 113 | திருக்கண்ணூர்கோயில் திருப்பதிகம் | ,, |
| 114 | சுவாமிநாதசுவாமி தோத்திரங்கள் | ,, |
| 115 | திருநள்ளாற்றுத் திருப்பதிகங்கள் | ,, |
| 116 | திருக்கடைமுடித் திருப்பதிகம் | ,, |
| 117 | திருப்பறியலூர்த் திருப்பதிகம் | ,, |
| 118 | திருவிளநகர் திருப்பதிகங்கள் | ,, |
| 119 | திருநின்றியூர்த் திருப்பதிகம் | ,, |
| 120 | திருஆக்கூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 121 | திருக்கடவூர் மயானத் திருப்பதிகங்கள் | ,, |
| 122 | மாயூரத் திருப்பதிகங்கள் | ,, |
| 123 | திருநீடூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 124 | திருப்புன்கூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 125 | திருஅன்னியூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 126 | திருத்தருமபுரத் திருப்பதிகம் | ,, |
| 127 | ஆலயவழிபாடு (தோத்திரங்களுடன்) | ,, |
| 128 | திருவேள்விக்குடித் திருப்பதிகங்கள் | 1947 |
| 129 | திருஎதிர்கோள்பாடித் திருப்பதிகம் | ,, |
| 130 | திருமயிலாப்பூர்த் திருப்பதிகம் | ,, |
| 131 | திருஒற்றியூர்த் திருப்பதிகம் | ,, |
| 132 | திருஞானசம்பந்தர் புராணம் முதல் நூறு பாடல்கள் C. K. S. விரிவுரையுடன் | ,, |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 133 | திருமணஞ்சேரித் திருப்பதிகங்கள் | 1947 |
| 134 | இருபா இருபஃது ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 135 | திருக்குறுக்கைத் திருப்பதிகம் | ,, |
| 136 | தருமபுர ஆதீனப் பாடசாலை 6-வது ஆண்டு அறிக்கை | ,, |
| 137 | திருக்கருப்பறியலூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 138 | 25-வது மகாசந்நிதானம் முதலாண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 139 | திருக்குரக்குக்காத் திருப்பதிகம் | ,, |
| 140 | திருஅஞ்சைக்களத் திருப்பதிகம் | ,, |
| 141 | திருப்பழமண்ணிப்படிக்கரைத் திருப்பதிகம் | ,, |
| 142 | திருவாழ்கொளிப்புத்தூர்த் திருப்பதிகம் | ,, |
| 143 | திருஓமாம்புலியூர்த் திருப்பதிகம் | ,, |
| 144 | சிவபோகசாரம் விரிவுரையுடன் ஆங்கில மொழிபெயர்ப்புடனும் | ,, |
| 145 | திருக்கானாட்டுமுள்ளூர்த் திருப்பதிகம் | ,, |
| 146 | துள்ளிவருகுதுவேல் | ,, |
| 147 | திருக்கடம்பூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 148 | திருஅவிநாசித் திருப்பதிகங்கள் | ,, |
| 149 | திருமுருகன்பூண்டித் திருப்பதிகம் | ,, |
| 150 | திருவெம்பாவை திருப்பதிகம் விளக்கத்துடன் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1951 |
| 151 | திருவலஞ்சுழித் திருப்பதிகங்கள் | ,, |
| 152 | 25-வது மகாசந்நிதானம் இரண்டாவதாண்டு ஆட்சி அறிக்கை | 1948 |
| 153 | திருப்பந்தணைநல்லூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 154 | திருக்கஞ்சனூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 155 | திருக்கோடிக்காத் திருப்பதிகங்கள் | ,, |
| 156 | திருவாப்பாடித் திருப்பதிகம் | ,, |
| 157 | சிவஞான சித்தியார் சுபக்கம் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 158 | அபிராமி அந்தாதி - விரிவுரையுடன் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 159 | திருச்சேய்ஞலூர்த் திருப்பதிகம் | 1948 |
| 160 | தருமபுர ஆதீனப் பண்டாரசாத்திரம் முதல் தொகுதி | ,, |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 161 | நல்வழி | 1948 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| | ,, (மூன்றும் பதிப்பு) | 1957 |
| 162 | சுவாமிநாதன் பிரபாவம் | 1948 |
| 163 | திருந்துதேவன்குடித் திருப்பதிகம் | ,, |
| 164 | இன்பம் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | ,, |
| | ,, (மூன்றும் பதிப்பு) | 1953 |
| | ,, (நான்காம் பதிப்பு) | 1957 |
| 165 | அறுபத்துமூவர் | 1948 |
| 166 | திருவியலூர்த் திருப்பதிகம் | ,, |
| 167 | மெய்கண்ட நூற்பொருட் சிறப்பு | ,, |
| 168 | திருக்கோட்டையூர்த் திருப்பதிகம் | ,, |
| 169 | திருஇன்னம்பர் திருப்பதிகம் | ,, |
| 170 | பழநி ஸ்ரீ தண்டாயுதபாணி தோத்திரங்கள் | ,, |
| 171 | 25-வது மகாசந்நிதானம் மூன்றுவதாண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 172 | திருப்பாதிரிப்புலியூர் திருப்பதிகம் | ,, |
| 173 | திருப்புறம்பயத் திருப்பதிகம் | ,, |
| 174 | திருவிசயமங்கைத் திருப்பதிகம் | ,, |
| 175 | சைவத் திருமுறைகள் - உரைநடைநூல் | ,, |
| 176 | அமைதி | ,, |
| 177 | திருவைகாவூர்த் திருப்பதிகம் | ,, |
| 178 | திருச்சிவபுரத் திருப்பதிகம் | ,, |
| 179 | மதுரைத் திருப்பதிகம் - தலவரலாற்றுடன் | ,, |
| 180 | திருப்பரங்குன்றத் திருப்பதிகம் | ,, |
| 181 | திருவடகுரங்காடுதுறைத் திருப்பதிகம் | ,, |
| 182 | திருப்பழனத் திருப்பதிகம் | 1949 |
| 183 | திருக்குறள் கதைகள் எண்பது | ,, |
| 184 | சிதம்பரம் - பதிகங்களுடன் | ,, |
| 185 | திருப்பெரும்புலியூர்த் திருப்பதிகம் | ,, |
| 186 | 24-வது மகாசந்நிதானம் பத்தாண்டு விழா நிகழ்ச்சி | ,, |
| 187 | திருநெய்தானத் திருப்பதிகம் | ,, |
| 188 | திருக்கண்டியூர்த் திருப்பதிகம் | ,, |
| 189 | திருவாரூர் (பதிகங்களுடன் ஆராய்ச்சி நூல்) | ,, |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 190 | திருவாலம்பொழில் திருப்பதிகம் | 1949 |
| 191 | தாயுமானவர் மடல் குறிப்புரையுடன் | ,, |
| 192 | ஆதீனக் கோயில்கள் கல்வெட்டுக்களுடன் | ,, |
| 193 | திருத்தொண்டர் கீதம் | ,, |
| 194 | திருமழபாடித் திருப்பதிகங்கள் | ,, |
| 195 | திருமுருகாற்றுப்படையும் கோளறு திருப்பதிகமும் | ,, |
| 196 | ஆபதுத்தாரணர்மாலை அஷ்டோத்திர சதநாமங்களுடன் | ,, |
| 197 | திருப்பழுவூர்த் திருப்பதிகம் | ,, |
| 198 | அபிராமி அந்தாதி மூலம் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1950 |
| | ,, (மூன்றும் பதிப்பு) | 1953 |
| 199 | திருக்கானூர்த் திருப்பதிகங்கள் | 1949 |
| 200 | திருஅன்பிலாலந்துறைத் திருப்பதிகம் | ,, |
| 201 | திருத்தினைநகர்த் திருப்பதிகம் | ,, |
| 202 | திருவாசகம் நூலாராய்ச்சிக் குறிப்புரைகளுடன் | ,, |
| 203 | தருமபுர ஆதீனப் பல்கலைக் கல்லூரி 3 ஆவது ஆண்டு அறிக்கை | ,, |
| 204 | சிவாலய தத்துவமும் கும்பாபிஷேக மகத்துவமும் | ,, |
| 205 | திருமாந்துறைத் திருப்பதிகம் | ,, |
| 206 | தருமபுர ஆதீனப் பிரசார அறிக்கை | ,, |
| 207 | வார வழிபாடு | ,, |
| 208 | திருவானைக்காத் திருப்பதிகங்கள் | ,, |
| 209 | சைவம் : ஆங்கிலக் கட்டுரைகள் | ,, |
| 210 | திருவிடைமருதூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 211 | தமிழ் இசை | ,, |
| 212 | திருவாடுதுறைத் திருப்பதிகங்கள் | ,, |
| 213 | திருவீழிமிழலைத் திருப்பதிகங்கள் | 1950 |
| 214 | சிவராஜ்யா : ஆங்கிலக்கட்டுரைகள் | ,, |
| 215 | திருச்செம்பொன்பள்ளித் திருப்பதிகம் | ,, |
| 216 | கும்பகோணம் திருப்பதிகங்களுடன் | ,, |
| 217 | திருவாரூர் மும்மணிக்கோவை C. K. S. விரிவுரையுடன் | ,, |
| 218 | திருக்கருகாவூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 219 | திருப்பாற்றுறைத் திருப்பதிகம் | ,, |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 220 | முத்தமிழ் முழக்கம் : தமிழ்க்கட்டுரைகள் | 1950 |
| 221 | திருப்பைஞ்ஞீலித் திருப்பதிகங்கள் | ,, |
| 222 | திருப்பாச்சிலாச்சிராமத் திருப்பதிகங்கள் | ,, |
| 223 | காசியாத்திரை | ,, |
| 224 | திருச்சிராப்பள்ளித் திருப்பதிகங்கள் | ,, |
| 225 | திருமுக்கீச்சரத் திருப்பதிகம் | ,, |
| 226 | திருஈங்கோய்மலைத் திருப்பதிகங்கள் | ,, |
| 227 | திருவாட்போக்கித் திருப்பதிகம் | ,, |
| 228 | சைவத்தின் மறுமலர்ச்சி | ,, |
| 229 | திருக்கடம்பந்துறைத் திருப்பதிகம் | ,, |
| 230 | செந்தமிழ் முருகன் | ,, |
| 231 | திருப்பராய்த்துறைத் திருப்பதிகம் | ,, |
| 232 | 25 ஆவது மகாசந்நிதானம் 4 ஆவது ஆண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 233 | திருக்கற்குடித் திருபபதிகங்கள் | ,, |
| 234 | திருக்குறள் - அறத்துப்பால் உரைவளம் | ,, |
| 235 | திருஎறும்பியூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 236 | 25 ஆவது மகாசந்நிதானம் 5 ஆவது ஆண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 237 | திருவெம்பாவையும் திருப்பள்ளியெழுச்சியும் | ,, |
| 238 | திருநெடுங்களத் திருப்பதிகம் | ,, |
| 239 | மேலைத்திருக்காட்டுப்பள்ளித் திருப்பதிகம் | 1951 |
| 240 | திருஇரும்பூளைத் திருப்பதிகம் | ,, |
| 241 | திருவேதிகுடித் திருப்பதிகங்கள் | ,, |
| 242 | திருத்தென்குடித் திட்டைத் திருப்பதிகம் | ,, |
| 243 | திருப்புள்ளமங்கைத் திருப்பதிகம் | ,, |
| 244 | திருக்கேதீச்சரம் திருக்கோணமாமலைத் திருப்பதிகங்கள் | ,, |
| 245 | சச்சபுடவெண்பா (தாளசாத்திரம்) | ,, |
| 246 | திருச்சக்கரப்பள்ளித் திருப்பதிகம் | ,, |
| 247 | திருக்கோட்டூரத் திருப்பதிகம் | ,, |
| 248 | திருப்பாலைத்துறைத் திருப்பதிகம் | ,, |
| 249 | தருமபுர ஆதீனம் 24 ஆவது மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக சுவாமிகள் மருத்துவ நிலையத் திறப்பு விழா நிகழ்ச்சி | ,, |
| 250 | அசபாநடனப் பதிகம் | ,, |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 251 | திருச்சத்திமுற்றத் திருப்பதிகம் | 1951 |
| 252 | திருப்பட்டீசரத் திருப்பதிகம் | ,, |
| 253 | திருச்சோற்றுத்துறைத் திருப்பதிகங்கள் | ,, |
| 254 | திருக்குறள் - பொருட்பால், உரைவளம் | ,, |
| 255 | திருஇராமேச்சரத் திருப்பதிகங்கள் | 1951 |
| 256 | திருப்பூந்துருத்தித் திருப்பதிகங்கள் | ,, |
| 257 | திருநாகேச்சரத் திருப்பதிகங்கள் | ,, |
| 258 | 25 ஆவது மகாசந்நிதானம் 6 ஆவது ஆண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 259 | திருநல்லூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 260 | நித்தியபூஜாலக்ஷண சங்கிரகம் | ,, |
| 261 | திருஆவூர்ப் பசுபதீச்சரத் திருப்பதிகம் | ,, |
| 262 | திருபழையாறைவடதளித் திருப்பதிகம் | 1952 |
| 263 | திருத்தென்குரங்காடுதுறைத் திருப்பதிகங்கள் | ,, |
| 264 | திருநீலக்குடித் திருப்பதிகம் | ,, |
| 265 | திருஞானசம்பந்தர் அற்புதங்கள் அஷ்டதோத்திரங்களுடன் | ,, |
| 266 | திருவைகன்மாடக்கோயில் திருப்பதிகம் | ,, |
| 267 | திருநல்லம் திருப்பதிகம் | ,, |
| 268 | திருக்குறள் - காமத்துப்பால் உரைவளம் | ,, |
| 269 | திருவழுந்தூர் திருப்பதிகம் | ,, |
| 270 | திருக்கோழம்பத் திருப்பதிகம் | ,, |
| 271 | இராமேசுவர யாத்திரை | ,, |
| 272 | திருநனிபள்ளித் திருப்பதிகம் | ,, |
| 273 | தேவிமான்மியம் | ,, |
| 274 | ஆதீனப் பிரசார அறிக்கை | ,, |
| 275 | திருவலம்புரத் திருப்பதிகம் | ,, |
| 276 | சிவஞானசித்தியார் சுபக்கம் (மூலம்) | ,, |
| 277 | திருத்தலைச்செங்காட்டுத் திருப்பதிகம் | ,, |
| 278 | திருவேட்டக்குடித் திருப்பதிகம் | ,, |
| 279 | திருக்கோட்டாற்றுத் திருப்பதிகம் | ,, |
| 280 | திருஅம்பர்ப்பெருந்திருக்கோயில் திருப்பதிகம் | ,, |
| 281 | திருஅம்பர்மாகாளத் திருப்பதிகம் | 1953 |
| 282 | திருமீயச்சூர்த் திருப்பதிகம் | ,, |
| 283 | திருமீயச்சூர் இளங்கோயில் திருப்பதிகங்கள் | ,, |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 284 | 25 ஆவது மகாசந்நிதானம் 7 ஆவது ஆண்டு ஆட்சி அறிக்கை | 1953 |
| 285 | திருத்திலதைப்பதித் திருப்பதிகம் | ,, |
| 286 | திருக்கருப்பறியலூர்த் தலபுராணச் சுருக்கம் | ,, |
| 287 | திருத்தெளிச்சேரித் திருப்பதிகம் | ,, |
| 288 | வேளூர் தேவஸ்தான அறிக்கை | ,, |
| 289 | திருப்பாம்புரத் திருப்பதிகம் | ,, |
| 290 | திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம் (முதல் திருமுறை) குறிப்புரையுடன் | ,, |
| 291 | திருச்சிறுகுடித் திருப்பதிகம் | ,, |
| 292 | சிவபுராணம் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | ,, |
| 293 | திருவன்னியூர்த் திருப்பதிகம் | ,, |
| 294 | திருக்கருவிலித் திருப்பதிகம் | ,, |
| 295 | திருப்பேணுபெருந்துறைத் திருப்பதிகம் | ,, |
| 296 | பரமாணுப் புராணம் | ,, |
| 297 | திருநறையூர்ச்சித்தீச்சரத் திருப்பதிகங்கள் | ,, |
| 298 | குருஞானசம்பந்த சுவாமிகள் வரலாறு தமிழிலும் ஆங்கிலத்திலும் | ,, |
| 299 | திருஅரிசிற்கரைப்புத்தூர் திருப்பதிகம் | ,, |
| 300 | ஆதீன மடாலய தேவாலயங்கள் | ,, |
| 301 | திருக்கலயநல்லூர்த் திருப்பதிகம் | ,, |
| 302 | திரிசிராமலை அந்தாதி | ,, |
| 303 | திருக்கருக்குடித் திருப்பதிகம் | 1954 |
| 304 | திருவெம்பாவை (மூலம்) | ,, |
| 305 | சென்னைப் பிரசாரநிலையத் திறப்புவிழா | ,, |
| 306 | திருவாஞ்சியத் திருப்பதிகங்கள் | ,, |
| 307 | திருப்பாவை | ,, |
| 308 | திருநன்னிலத்துப் பெருங்கோயில் திருப்பதிகம் | ,, |
| 309 | திருவையாறு (ஆங்கிலம்) | ,, |
| 310 | திருமந்திர மாநாடு | ,, |
| 311 | திருபுவனம் (ஆங்கிலம்) | ,, |
| 312 | திருக்கோணடிச்சரத் திருப்பதிகங்கள் | ,, |
| 313 | பண்ணிசைப் பதிவுத் தட்டுப் பாராயணத் திருமுறைப் பாடல்கள் | ,, |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 314 | திருப்பனையூர்த் திருப்பதிகங்கள் | 1954 |
| 315 | திருவிற்குடித் திருவீரட்டானத் திருப்பதிகங்கள் | ,, |
| 316 | திருப்பயற்றூர்த் திருப்பதிகம் | ,, |
| 317 | சம்பந்தர் தேவாரம் இரண்டாந்திருமுறை | ,, |
| 318 | அறுவகைச்சமயம் | ,, |
| 319 | திருஇராமனதீச்சரத் திருப்பதிகம் | ,, |
| 320 | குருஞானசம்பந்தர் வரலாறு | ,, |
| 321 | திருப்புகலூர் வர்த்தமானீச்சரத் திருப்பதிகம் | ,, |
| 322 | தில்லையில் தருமபுர ஆதீனக் கல்வெட்டு | ,, |
| 323 | திருச்செங்காட்டங்குடி திருப்பதிகம் | ,, |
| 324 | திருமருகல் திருப்பதிகம் | ,, |
| 325 | சமயபோதச் சொற்பொழிவுகள் | ,, |
| 326 | திருச்சாத்தமங்கைத் திருப்பதிகம் | ,, |
| 327 | நவராத்திரி | ,, |
| 328 | சகலகலாவல்லி மாலை | ,, |
| 329 | திருப்பள்ளியின் முக்கூடல் திருப்பதிகம் | ,, |
| 330 | ஞான சாத்திரமும் தோத்திரமும் | ,, |
| 331 | சென்னைப் பிரசாரநிலைய ஆண்டறிக்கை | ,, |
| 332 | திருநாகைக்காரோணத் திருப்பதிகம் | ,, |
| 333 | திருச்சிக்கல் திருப்பதிகம் | ,, |
| 334 | திருவெம்பாவை - தெளிவுரை | ,, |
| 335 | திருக்கீழ்வேளூர்த் திருப்பதிகம் | ,, |
| 336 | சைவசித்தாந்தம் (ஆங்கிலம்) | ,, |
| 337 | திரு அவளிவணல்லூர்த் திருப்பதிகம் | ,, |
| 338 | திருத்தேவூர்த் திருப்பதிகம் | ,, |
| 339 | ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் எட்டாவது ஆண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 340 | திருவிளமர்த் திருப்பதிகம் | ,, |
| 341 | திருநின்றியூர்த் திருப்பதிகம் | ,, |
| 342 | திருக்கேதாரத் திருப்பதிகம் | ,, |
| 343 | திருமுல்லைவாயில் திருப்பதிகம் | ,, |
| 344 | திருக்கரவீரத் திருப்பதிகம் | ,, |
| 345 | நால்வர் நான்மணிமாலை | ,, |
| 346 | திருப்பெருவேளூர்த் திருப்பதிகம் | ,, |
| 347 | திருக்கேதார யாத்திரை | ,, |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 348 | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூன்றும் திருமுறை) | 1954 |
| 349 | திருத்தலையாலங்காடு திருப்பதிகம் | ,, |
| 350 | திருக்குடவாயில் திருப்பதிகம் | ,, |
| 351 | திருச்சேறைத் திருப்பதிகம் | ,, |
| 352 | சேக்கிழாரும் திருக்கண்ணப்பரும் | ,, |
| 353 | திருநாலூர்மயானத் திருப்பதிகம் | ,, |
| 354 | திருக்கடுவாய்க்கரைத்தென்புத்தூர் திருப்பதிகம் | ,, |
| 355 | திருஅரதைப்பெரும்பாழித் திருப்பதிகம் | ,, |
| 356 | திருப்பரிதிநியமத் திருப்பதிகம் | 1955 |
| 357 | திருவெண்ணியூர்த் திருப்பதிகங்கள் | 1956 |
| 358 | திருவெம்பாவையும் - திருப்பள்ளியெழுச்சியும் | 1955 |
| 359 | திருப்பனந்தாள் தல வரலாறு | 1956 |
| 360 | திருப்பூவனூர்த் திருப்பதிகம் | ,, |
| 361 | திருப்பாதாளீச்சரத் திருப்பதிகம் | ,, |
| 362 | திருக்களர்த் திருப்பதிகம் | ,, |
| 363 | துன்முகி ஸ்ரீ பஞ்சாங்கம் | ,, |
| 364 | திருச்சிற்றேமத் திருப்பதிகம் | ,, |
| 365 | செந்தமிழ்ப் பூம்பொழில் | ,, |
| 366 | திருவுசாத்தானத் திருப்பதிகம் | ,, |
| 367 | ஞானுவரண விளக்கம் | ,, |
| 368 | திருஇடும்பாவனத் திருப்பதிகம் | ,, |
| 369 | திருக்கடிக்குளத் திருப்பதிகம் | ,, |
| 370 | அபிராமி அந்தாதி | ,, |
| 371 | திருத்தண்டலைநீணெறித் திருப்பதிகம் | ,, |
| 372 | திருவெண்டுறைத் திருப்பதிகம் | ,, |
| 373 | சிவபோகசாரம் ஹிந்தி, ஆங்கிலம்படவிளக்கத்துடன் | ,, |
| 374 | திருக்கோளம்புதூர்த் திருப்பதிகம் | ,, |
| 375 | ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் ஒன்பதாவது ஆண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 376 | திருநெல்லிக்காத் திருப்பதிகம் | ,, |
| 377 | மெய்கண்ட சாத்திரம் (இரண்டாம் பதிப்பு) | ,, |
| 378 | திருப்பேரெயில் திருப்பதிகம் | ,, |
| 379 | சம்பிரதாய தீபம் (இரண்டாம் பதிப்பு) | ,, |
| 380 | திருக்கோளிக்காடு திருப்பதிகம் | ,, |
| 381 | ஹேவிளம்பி ஸ்ரீ பஞ்சாங்கம் | ,, |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 382 | திருத்தெங்கூர்த் திருப்பதிகம் | 1957 |
| 383 | திருநாட்டியத்தான்குடித் திருப்பதிகம் | |
| 384 | திருக்காராயில் திருப்பதிகம் | ,, |
| 385 | திருக்கற்குடித் தல வரலாறு | ,, |
| 386 | திருக்கன்றுப்பூர்த் திருப்பதிகம் | ,, |
| 387 | கடவூர்மூர்த்திகள் பட விளக்கம் | ,, |
| 388 | திருக்கடவூர் கும்பாபிஷேக மலர் | ,, |
| 389 | வேண்டுகோள் திருமுறை | ,, |
| 390 | திருவலிவலத் திருப்பதிகங்கள் | ,, |
| 391 | திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் (நான்காம் திருமுறை) | ,, |
| 392 | கிளிவிடுதூது (இரண்டாம் பதிப்பு) | ,, |
| 393 | திருகச்சினத் திருப்பதிகம் | ,, |
| 394 | திருநீலகண்டர்த் திருப்பதிகம் | ,, |
| 395 | ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி திருவருட்பா உரை | ,, |
| 396 | திருவாய்மூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 397 | திருப்பறியலூர்த் தல வரலாறு | ,, |
| 398 | திருஅகத்தியன்பள்ளித் திருப்பதிகம் | ,, |
| 399 | சச்சிதானந்த மாலை | ,, |
| 400 | திருக்கோடிக்குழகர்கோயில் திருப்பதிகம் | ,, |
| 401 | திருமறைக்காட்டுத் திருப்பதிகங்கள் | ,, |
| 402 | அஷ்டலக்ஷ்மி | ,, |
| 403 | தோத்திரப்பாடல் திரட்டு | ,, |
| 404 | திருஆப்பனூர்த் திருப்பதிகம் | ,, |
| 405 | திருஏடகத் திருப்பதிகம் | ,, |
| 406 | திருக்கொடுங்குன்றத் திருப்பதிகம் | ,, |
| 407 | ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி தோத்திரம் | 1958 |
| 408 | திருப்புத்தூர்த் திருப்பதிகம் | ,, |
| 409 | திருப்புனவாயில் திருப்பதிகங்கள் | ,, |
| 410 | திருவாடானைத் திருப்பதிகம் | ,, |



உ

குருபாதம்

# தருமபுர ஆதீனம் இயற்றிவரும் பணிகள்

1. தேவாரப்பாடசாலை நிறுவித் தெய்வத்தமிழ் வளர்ப்பது.
2. சிவாகமபாடசாலை வைத்துத் திருக்கோயில் பூஜை முறைகளைப் பயிற்றுவிப்பது.
3. சிவஞான நூல்களைத் தெளிவுற அச்சிட்டு வழங்குவது.
4. தலங்கள்தோறும் திருப்பதிகங்கள் உரையுடன் வெளியிடுவது.
5. அறிஞரைக் கொண்டு ஆலயம்தோறும் அறிவுரை வழங்குவது.
6. பிரசார வாகனத்தின் மூலம் தமிழ்நாடெங்கும் சமயம் வளர்ப்பது.
7. ஆங்கிலக் கலாசாலையில் தமிழ்ப் பரிசு அளிப்பது.
8. ஆதீனக் கோயில்தோறும் பண்ணிசைத் தமிழ் வளர்ப்பது.
9. தமிழ்க் கல்லூரி நிறுவி, வித்துவான் தேர்விற்கு அனுப்புவது.
10. வடமொழிக் கல்லூரி நிறுவி சிரோமணித் தேர்விற்கு அனுப்புவது.
11. சமய நுணுக்கங்களைத் தெளிவுற அச்சிட்டு வழங்குவது.
12. நூல் ஆராய்ச்சிகள் எழுதுவித்து வழங்குவது.
13. விஞ்ஞான மெய்ஞான நூல்களை வெளியிட்டு வழங்குவது.
14. சமய நூல்களைத் தக்கமுறையில் வெளியிடுவது.

15. "ஞானசம்பந்தம்" என்னும் மாதப்பத்திரிகை வாயிலாகச் சமய உண்மைகளை அறிவுறுத்துவது.

16. சமயக் கூட்டங்களுக்குத் தக்கன செய்வது.

17. தமிழ்ப்பணி சமயப்பணி செய்பவர்க்கு உதவுவது.

18. தமிழ்நாட்டுத் தல வரலாறுகளை எழுதுவித்து வழங்குவது.

19. புத்தகசாலை அமைத்துப் பழந்தமிழ் நூல்களைப் பாது காப்பது.

20. பொருளும் புத்தகமும் அளித்து ஏழை மாணவர்களுக்கு உதவுவது.

21. மாயூரத்தில் பிரசவ ஆஸ்பத்திரி கட்டி உதவியது.

22. குடிமக்கட்கு அடிக்கடி எண்ணெய் முழுக்கும் அன்னமும் அளித்துவருவது.

23. காந்திநிதி, ஹரிஜனநிதி, அகதிகள் நிவாரணநிதி, மருத்துவ நிலயம், காசநோய் முதலிய மருத்துவ நிலயங்கட்குப் பெருந்தொகை அளிப்பது.

24. ஆதீனத்தில் அமைந்துள்ள கூட்டுறவுப் பண்டகசாலை மூலம் தேவையான பொருள்களை எளிதில் பெறச் செய்வது.

25. ஸ்ரீ குருஞான சம்பந்தர் உயர்நிலைத் தொடக்கப்பள்ளி அமைத்து அறிவுப்பணி செய்தல்.

26. அரசாங்கத்தாரின் புதிய கல்வித் திட்டத்தின்படி ஓரியண்டல் ஹைஸ்கூல் அமைத்தது.

27. இடங்கள்தோறும் திருநெறிய தெய்வத் தமிழ் மாநாட்டை நடத்திவருவது.

28. ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள் திருவிழாவில எல்லாச் சமயத் தத்துவங்களையும் எல்லோரும் எளிதில் உணரச் சமய மாநாடு (Religious Congress) நடத்துவது.

29. சேரிகளிலும், கிராமங்களிலும் சமயப் பிரசாரம் (Intensive Programme) செய்வது.

30. அனாதைச் சிறுவர்களுக்கு விடுதி அமைத்துப் பாதுகாத்து வருதல்.

31. சென்னையில் சமயப் பிரசாரநிலயம் நிறுவி, பிரசாரப்பணி செய்து வருதல்.

32. திருமுறைகளையும் மெய்கண்ட சாத்திரங்களையும் பண்டார சாத்திரங்களையும் கல்வெட்டின் வழியாக ஆங்காங்கு நிலை பெறச் செய்தல்.

33. கோடைவகுப்பு நடத்திப் பலர்க்குப் பல்வேறு சமயங்களின் பொதுஞானம் பெறுவித்தல்.

34. சமயாசாரியர்கள் திருவிழாக்களைக் கொண்டாடும் வாயிலாகச் சமயப்பற்று வளர்த்தல்.

35. அடியார்கள் தோன்றிய ஊர்களிலும், வழிபட்ட கோவில்களிலும், அவர்கள் திருவுருவகதை நிறுவி வழிபாடு செய்வித்தல்.

36. அறுபத்துமூவர் திருவிழாக் கொண்டாடுதல்.

37. சென்னை சமயப் பிரசார நிலயத்தில் வித்துவான் வகுப்பு நிறுவி பாடங்களைக் கற்பித்தல்.

உ

குருபாதம்

ஆசையறுய் பாசம்விடாய் ஆனசிவ பூசைபண்ணுய்
நேசமுடன் ஐந்தெழுத்தை நீநினையாய்—சீசீ
சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய்
மனமே உனக்கென்ன வாய்.

(ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருளிய சிவபோகசாரம்)

குருபாதம்

# ஆட்சி நலங்கள்

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர்,
வித்துவான், திரு. சொ. சிங்காரவேலனர்

தருமையாதீனத்தில இருபத்தைந்தாவது குருமணியாக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள், இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து அதனை அவன் கண் விடும் ஆட்சித் திறமும், எதனையும் முறைப்படச் சூழ்ந்து இயற்றும் நலமும், அவரவர் பண்பறிந்து நன்றாற்றும் வன்மையும், அன்பு நாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மை வழுவாத உரமும் வாய்ந்து, திருவருளை நம்பி அருளரசு ஓச்சி வருகின்றார்கள். இவர்கள் அருளாட்சி ஏற்ற ஆண்டு முதல் அறச் செயல்கள் பலவற்றை அருளோடு குழைத்துப் புரிந்துள்ளார்கள். இருபத்துநாலாவது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் விட்டுச்சென்ற பணிகளை முற்றுவிப்பதில் முதல் கவனம் செலுத்தியருளி னார்கள். இவர்களது ஆட்சிக் காலம் ஆதீன வரலாற்றில் ஒரு பொற்காலம் என்றே புகலத் தக்கது. அதற்குக் காரணமாகும் நலங்கள் பலப்பல. அவற்றின் விளக்கம் ஆட்சி ஆண்டறிக்கை வாயிலாக அனைவரும் அறிந்ததொன்றே.

ஆரியமும் செந்தமிழும் ஆனவன் செந்தமிழ்ச் சொக்கன் என்ற திருவுளத்தோடு அவ்விரு மொழிகளையும் காப்பதற்கென வடமொழி, தமிழ்மொழிக் கல்லூரிகளை நிறுவித் தமிழ்ப் புலவர்களையும், சிரோமணிகளையும் தமிழகத்திற்கு வழங்கி வருதல் தனிப்பெருஞ் சிறப்பாகும். கல்லூரியைத் துவக்கியது. மட்டுமின்றி, கீழைக்கலை உயர்நிலைப்பள்ளி (Oriental High School) ஒன்றையும் புதிய திட்டப்படி (New Scheme) நிறுவி யுள்ளார்கள்.

இருபத்துநாலாவது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் துவக்கிச்சென்ற தொடக்கப்பள்ளி, தேவாரபாடசாலை, ஆகம பாடசாலைகளைப் பொன்னேபோற் போற்றிப் புரந்துவருகிறார்கள்.

கல்வித் தொண்டில் இவர்கள் செய்துவரும் செயல்கள் எண்ணில் அடங்காதன. கல்விப் பணியோடு சமுதாய, சமூகப் பணிகளையும் இயற்றி வந்துள்ளார்கள். சிங்கிப்பட்டி என் புருக்கி நோய் மருத்துவச் சாலையில் ஒரு சட்டடமும், மாயூரம் மகப்பேறு மருத்துவச் சாலையும் கட்டி முடிப்பித்து உதவியிருத்தல் கருதிக் களி கூரத் தக்கது. தருமையாதீனத் திலேயே ' சண்முக விலாசம் ' என்ற திருமாளிகையைப் பெரும் பொருட் செலவில் கட்டுவித்தருளினார்கள். தம்முடைய வழி முதலின்பால் தாம் வைத்தருளிய பேரன்பினை இத் திருமாளி கையின் பெயராலும் புலப்படுத்தியிருத்தல் அறிந்து மகிழத் தக்கது. ஆட்சியேற்ற ஆண்டு முதல் ஆதீனத் திருக்கோவில் களைக் குடமுழுக்குச் செய்து திருத்தம் செய்வித்திருக்கிறார்கள். குறிப்பாகச் சீகாழி, வேளூர், மணக்குடி, கருங்குயில் நாதன்பேட்டை, திருப்பறியலூர், திருக்கடவூர் முதலியவற்றைச் சொல்லலாம். வரலாற்றுப் புகழ் பெற்றதும், காலகாலன் புகழ் பரப்பும் திருப்பணியானதும் ஆகிய திருக்கடவூர்க் குடமுழுக்கு விழாவினை எல்லாரும் புகழும் வண்ணம் எல்லா வசதி களோடும், சாஸ்திர அடிப்படை அணுவளவும் வழுவாது, நான்மறை அறங்களோங்கவும், நற்றவ வேள்வி மல்கவும். மேன்மைகொள் சைவ நீதி உலகமெலாம் விளங்கவும் இயற்றி முடிப்பித்த இவர்களின் திருவடிகளுக்கு உலகு இயற்றும் கைம்மாறும் உண்டோ ?

வேளூர் அனாதை விடுதியும், சென்னைச் சமயப் பிரசார நிலையமும், ஒவ்வொரு திருக்கோவில்களிலும் உள்ள திருமுறை வகுப்பும் ஒலிபெருக்கியும், திருமுறைக்கோயிலும் மின் விளக் குப் பணியும் தமிழர்தம் சிந்தைவிட்டு என்றும் அகலாதவை.

திருநட்சத்திரந்தோறும் பாடல் பெற்ற பதிகளில் தலப் பதிகத்தை அச்சிட்டு வழங்குதலோடு, சிறப்பு வழிபாடுகள் நிகழ்த்தித் திருவருள் பெருக்கி வருதலைத் தமிழுலகு நன்கறியும். குருவாரந்தோறும் மௌனம் மேற்கொண்டு ஆத்மீக வளர்ச்சி யைப் பெருக்கிவரும் இக் குருநாதரின் ஹஸ்த விசேஷத்தால் (இவர்கள் திருவவதாரம் செய்ததும் ஹஸ்த விண்மீன் என்பது இங்கே நினைக்கத்தக்கது) வளர்ந்து வாழும் கழகங்கள், திருக் கூட்டங்கள், கல்லூரிகள் பெயர்களைக் குறிப்பதென்றாலும் மிக விரியும்.

ஸ்ரீ மகாலக்ஷ்மி துர்க்காபரமேசுவரியைத் தருமையாதீனத்தில் பிரதிஷ்டை செய்து, ஏகதின லட்சார்ச்சனைகளால் லட்சக்கணக்கான மக்களை ஆற்றுப்படுத்தி வழிபடச்செய்து திருவருள் பரப்புதலே, உள்ளுந்தோறும் உவகை பெருகும் அல்லவா? இதுவும் இவர்கள் ஆட்சியில் புதிதாய் விளைந்த திருவருள் நலமாகும். சொக்கநாதா பூசைமடத்தைப் புனருத்தாரணம் செய்து குடமுழுக்குச் செய்வித்ததுடன், வண்ணக்கல் முதலியவற்றால் அழகுறத் திருத்தி நாற்புறச் சுவர்களில் இனிய எழில் ஓவியங்களால் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்தர் வரலாற்றை வரையச்செய்தருளியிருக்கும் திறம் மிகமிகப் போற்றற்குரிய ஒன்றாகும்.

திருநெறிய தெய்வத்தமிழ் மன்றத்தை ஏராளமான பொருட்செலவில் கண்கவரும் ஒளியமைப்புக்களோடு அமைத்துப் பல்லாயிரக்கணக்கான மக்கள் இருந்து நல்லுரை கேட்க வாய்ப்பு அருளியிருத்தல் பரவிப் பரவி இறைஞ்சுதற்குரியது.

சைவசித்தாந்த நூல்களையும், தமிழ் இலக்கியங்களையும் குருபூசை விழா, ஆவணிமூலவிழா, திருநட்சத்திர விழா முதலியவற்றின் மலர்களாக வெளியிட்டு வருகின்ற விழுப்பத்தை அறியாதார் யாரே? திருக்குறளை உரைவளத்தோடு வெளியிட்டுத் தமிழுலகுத்தந்த அடிப்படையிலேயே திருமுறைகளையும் தக்க விரிவுரைகளோடு தரதத்க விசுவருபமான பணியை மேற்கொண்டு அருளிப்பாடுபுரிதல் அறிந்து இன்புறத்தக்கது. நாலாயிரத் திவ்ய பிரபந்தத்துக்கு அமைந்த வியாக்யானங்களைப் போலப் பன்னிரு திருமுறைக்கும் ஒரு விரிந்த பேருரை வெளியிட வேண்டுமென்று இவர்கள் திருவுளம் பற்றியமைக்குச் சைவ உலகு பெரிதும் போற்றி வாழ்த்தக் கடமைப்பட்டிருக்கிறது.

ஆட்சியேற்றது முதலாக இவர்கள் எண்ணற்ற திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடுகளை நடத்திவருதலும், ஆவணி மூல விழாவை அரிய முறையில் நிகழ்த்துதலும், அக்கால் உணர்வு நலமும் அறிவு நலமும் சிறந்த தக்கோர் பலர்க்கும் பட்டமளிப்பு விழா நிகழ்த்துதலும் எல்லோரும் அறிந்தவையே. பல்கலைச் செல்வரை - சொல்லின் செல்வரை - செந்தமிழ்ச் செல்வரை - சித்தாந்தச் செல்வரை - செந்தமிழ்க் காவலரை - வீறுஞானச் செல்வியை - முத்தமிழ் வித்தகரைத் தமிழகத்துக்கு அறிமுகம்

செய்வித்தருளினார்கள். இன்னும் எவ்வளவோ அறிஞர்களைப் பட்டம் அளித்துப் பாராட்டவும் திருவுளம் கொண்டுள்ளார்கள். அறிவைமதித்துச்சிறப்பீந்து அருளரசுபுரிந்துவரும் இவ்அருமை நலங்களை யாரே புகழாதார் ?

'ஞானசம்பந்தம்' இதழை உலகியலோடு ஒட்டிக் கண்ணைக் கவரும் வண்ணத்தில் அச்சிடவும், பிரசார நோக்கத்தோடு மிகக் குறைந்த விலையில் வழங்கவும் திருவுளம்கொண்டு, மாதந் தோறும் உலகில் உயர்ந்தோர் படிக்கச்செய்தருளிவருகிறார்கள்.

காலால் நடந்து செல்லற்கும் அரிய கடுங்குளிரிலும் பனியிலும் அன்பர் புடைசூழத் திருமேனி வருந்தி நடந்து திருக்கேதார யாத்திரை சென்றருளிய திறம் மிகப் பெரிதும் போற்றத்தக்கது. மெய்யன்பர் பலரையும் உடனமைத்துச் சென்று காசியாத்திரை, கேதார யாத்திரை, நேப்பாள யாத்திரை முதலியன புரிந்தருளும் இவர்களது அருட் பெருந்தன்மை ஆட்சி நலங்களுக்குற்ற மாட்சிகளுள ஒன்றாகும்.

சமயப் பிரசார வாகனங்களைப் புதிதாக வாங்கித் தமிழ் நாட்டின் பட்டி தொட்டிகளிலெல்லாம் சென்று சமயப் பிரசாரம் செய்யக் கட்டளையிட்டுச் சிற்றூரிலும் சமய வாழ்வு வளரக் கருணைபுரிந்துவருகிறார்கள். தலைநகரிலும் சென்னைத் தியாகராய நகரில் சமய வாழ்வு வளரச் சமயப் பிரசார நிலையம் சிறந்த பல தொண்டுகளை இயற்றிவருதல் குறிப்பிடத்தகுந்தது.

இன்னோரன்ன எண்ணற்கு அரிய நலங்களைப் புரிந்தருளும் குருமணி நீடூழி வாழ்க. அவர்களது அருளாட்சி மேன்மேல் ஓங்கித் திகழ்க. வாழ்க தருமைத் திருமடாலயம். வாழ்க சைவம். வளர்க சிவ பக்தி.

---

குருபாதம்

# திருத்தமும் பொருத்தமும்

ஒன்றுமுதல் 87 முடிய உள்ள பக்கங்களில் தலைப்பில், அவ் வப் பதிகத்தெண்ணை இட்டுக்கொள்க.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 13 | திருவதிகை | திருவதிகையில் |
| 7 | 31 32 | ஈற்றுப்பதிகத்தின் | ஆருவது திருமுறையின் ஈற்றுப்பதிகத்தின் |
| 13 | 21 | உய்ங்தேன் | உய்ங்தேன் ஙன்றே |
| | 23 | புலப்படும் | புலப்படுத்தும் |
| 15 | 18 | வாழும் போருள் | வரும்போருள் |
| 20 | 2 | போர்த்தாயங்கோர் | போர்த்தாயங்கோர் |
| 24 | 33 | கதித்து | மதித்து |
| 29 | 15 | சேர்க்கும் | சேரத் தோடுக்கும் |

பாட்டு 31 உரை முடிவில் பா. 292 பார்க்க என்று குறித்துக்கோள்க.

பாட்டு 41 உரையில் 'பையஞ்சுடர்...கோள்வான்' என்றதன் உரையில் திருவாரூருலா 61 குறிப்பு நோக்குக. 'ஐயஞ்சி னப்புறத்தான்' என்றதன் உரையில், சங்கற்ப ஙிராகரணம் உரையும் திருக்குறள் 27. பரி. உரையும் பார்க்க என்று குறித்துக்கோள்க.

44, 48 — பழமோழிக்கு, கோபப்ரசாதம் 76, 77, 78, 79, 80 பார்க்க. 'கூழைமை' சூளாமணி துறவு 18. (சேர்க்க).

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 47 | 31 | அஙக ஙந்தியர் | அனகாஙந்தியர் |
| 53 | 6 | தோன்றுவதோர் | தோன்றுவதோர் |
| 60 | 29 | மனத்தர் | மனத்தராகி |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 61 | 9 | அரவு | அறவு |
| 62 | 3 | (ஓர் ஏட்டில் ‘ அப்போடு ’ என்றுளது.) | |
| 64 | 6 | மறையோடு | மலையோடு |
| 67 | 29 | என்பதற்குப் | என்பதற்கு |
| ,, | ,, | உணர்பாற்று | உணர்தற்பாற்று |
| 71 | | (முடிவில், கருதுவிப்பதால் என்றதன்பின்(அகம். 2. திருக்கோவையார். 262) என்று குறித்துக் கொள்க.) | |
| 74 | 17 | பளையே | பரையே |
| 76 | 32 | அரசகங்கையின் | அரசதிகையின் |
| 80 | 17 | பேணுதல் | பேணுதல்வேண்டும் |
| ,, | 30 | நிற்றல் | நிற்றல் பற்றியது |
| ,, | 31 | (வாக்கே நோக்கிய மங்கை - கணவன் யாது கூறுவனோ என்று அவன் (வாக்கிலிருந்து வருஞ்) சொல்லையே நோக்கியிருக்கும் மங்கை. சொன்னபடி செய்யத் தவறாத பாவை எனலு மாம் என்று குறித்துக்கொள்க.) | |
| 83 | 14 | நாக்கைக்கே | காக்கைக்கே |
| 85 | 12 | இனியனாக | இனியனா |
| 91 | 4 | சென்றங் | சென்றங்கு |
| 92 | | (உரையின் முதலில் ‘ சிறுமானையும் காத்தவன் எம்மையும் காப்பான் ’ என்பார் ‘சிறுமான்ஏந்தி’ என்னார் என்றும் 92. பா. உரை முடிவில், சித்தியார் ' 290. மறைஞானசம்பந்தர் மேற் கோள் என்றும் குறித்துக்கொள்க.) | |
| 95 | 18 | அழுகு | அழகு |
| 101 | 20 | பிறவீற் | பிறவியிற் |
| 118 | 6 | பணித்தருவினார் | பணித்தருளினார் |
| ,, | 30 | பாடலிரண்டும் | பாடலிரண்டுளும் |
| ,, | 33 | பா 207, நம்பானே ... அம்மானே எனக் குறித்துக் கொள்க. | |
| 120 | 23 | 2043 | 2098 |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 123 | 19 | மின்னுருவும் | மின்னுருமும் |
| ,, | 23 | உருவமோடு | உருமோடு |
| | | (புலவர், திரு. க. வெள்ளைவாரணனுர் அவர்களது ஏட்டில் 'உருமானுய்' என்றேயுளது. இது 9-7-57 இல் கண்டது) 139, 141, 143 ஆம் பக்கங்களில் 15 போது என்று கொள்க. | |
| 156 | 30 | (ஒல்லை) | (எல்லை) |
| 157 | 16 | காணுராய்த் | காணுராய் |
| 158 | 180 | ஆம் பாட்டுரையில் 'நம்பனே நான் முகத்தாய்' (4, 62 2) என்று குறித்துக்கொள்க. | |
| 160 | 23 | நியாயம் | நியாய |
| 161, 163, 165 ஆம் பக்கங்களில் 18 போது என்று கொள்க. | | | |
| 167 | 13 | (நான்மணிக்கடிகை 39, பெருங். இலா 10:- 126 என்று சேர்த்துக்கொள்க.) | |
| | | பா. 190 ('எண்கணம்' (7. 63. 8) சிவகணம் உருத்திரகணம், நந்திகணம், பூதகணம், பேய்க் கணம், தேவகணம், முனிகணம், அடியார் கணம் என்றலும் உண்டாம்) | |
| 171 | 18 | தலைப்பட்டாள் | தலைப்பட்டாள் என்றுர். |
| 173 | 29 | 4. வெ. | பு. வெ. |
| 174 | 11 | காழலகர் | காலழகர் |
| | | (ஷை புலவரது ஏட்டில், இப் பாட்டில் 'கோடால' என்றுளது) | |
| 189 | 33 | ஓருரும் | ஒருரும் |
| 193 | 16 | மதத்தை | மதத்தையுடைய |
| ,, | 20 | என்க. ன் | என்க. |
| ,, | 31 | நா | நான் |
| 201 | 21 | சொள்க | கொள்க |

